# பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும்

[ முதல் இருநூறு பாசுரங்கள் ]

தமிழாக்கம்

டாக்டர் தெ. ஞானசுந்தரம்

இணைப் பேராசிரியர்

அரிய கையெழுத்துச் சுவடித் துறை

தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்



தமிழ்ப் பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்

# அணிந்துரை

**வ. அய். சுப்பிரமணியம்**
துணை வேந்தர்
*தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்*

பெரிய திருமொழி முதல் இரு பத்துக்குச் செய்துள்ள மரபுரையை டாக்டர் தெ. ஞானசுந்தரம் தமிழாக்கம் செய்துள்ளதை இன்று தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிடுகிறது.

காலஞ்சென்ற திரு. புருஷோத்தம நாயடு சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாக ஈட்டின் தமிழாக்கத்தை வெளியிட்டுத் தத்துவ உலகத்தின் நன் மதிப்பைப் பெற்றார். அது போலப் பெரிய திருமொழியின் தமிழாக்கம் பெரிய வாச்சான் பிள்ளை உரையோடு இப்போது வெளிவருகின்றது.

டாக்டர் தெ. ஞானசுந்தரம் வைணவரல்லர். ஆனால் அத்துறையில் அகன்ற ஆய்வு செய்தவர். தாமே விரும்பி இந்தப் பணியை மேற்கொண்டு சம்பிரதாயம் அறிந்த பல வைணவ அறிஞர்களை உசாவி நுணுக்கமாகச் சீர்தூக்கி அதன்பின் அச்சேற்ற நூலை ஆயத்தம் செய்தார். அதற்குரிய எல்லா வாய்ப்புகளையும் தமிழ்ப் பல்கலைக் கழகம் அளித்துதவியது.

நாலாயிரத்தின் மணிப்பிரவாள உரை பிற மொழியாளர், குறிப்பாக ஆந்திர கர்நாடக நாட்டில் வாழும் வைணவர்கள், ஆழ்வார்களின் அருளிச் செயல்களின் ஆழத்தை அறிய உதவியது. தமிழ்ப் பாசுரங்களின் பெருமையைப் பிறமொழியாளரிடம் பரவச் செய்த முதல் முயற்சி இது.

வடமொழிச் சொற்களும் சிலபோது தொடர்களும் கலந்த நடையை மரபு உரையாசிரியர்கள் கையாண்டனர். அவற்றில் சில தமிழ்ச் சாயல் உடையன. தமிழ்மொழி அடிப்படையிலும் சொற்றொடர்கள் படைக்கப்பட்டுள்ளன. வைணவ உரையில் வடமொழி ஆட்சி எவ்வாறு தமிழால் மாறியுள்ளது என்ற சிக்கல் இனி மேல்தான் தீர்க்கப்படவேண்டும்.

வைணவ உரையில் தமிழ் இலக்கியச் சொற்களும், வழக்குச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. அடிக்குறிப்பில் அவற்றுள் சில குறிக்கப்பட்டுள்ளன. அவற்றிற்கு மரபு வழியாக்கத்தால் பொருளறிய இயலும். 'இறே' என்ற குறைசொல் என்ன பொருளைத் தருகிறது என்று திட்டமாகக் குறிப்பிட இயல வில்லை. இதைப்போன்று பல சொற்கள் அன்று நிலவிய வழக்கு அல்லது சம்பிரதாய

வழிச்சொற்களாக ஆட்சி பெற்றிருக்கவேண்டும். அவற்றை முழுதும் சொல்லடைவு செய்தால் தமிழ்மொழியின் சொல்வளப்பத்திற்குப் பெருந்துணை செய்யும்.

புனித மொழியாகத் தமிழ் கருதப்படுதற்கு நாலாயிரமும் அதன் ஈடு முதலிய உரைகளும் குறிப்பிடத்தக்க காரணங்களாகும். தேவாரத்தையும் பெரிய புராணத்தையும் கன்னடநாட்டு வீர சைவர்கள் தெய்வப் படைப்பாகப் போற்றுவது போன்று, வைணவர்கள் எங்கெங்கிருக்கின்றனரோ அங்கெல்லாம் நாலாயிரத்திற்கும் ஈடு முதலிய உரைகளுக்கும் சிறப்பிடம் தருகின்றனர். சமயத் துறையில் தமிழுக்குப் பெருமையும், பரப்பும் தேடித்தந்த நூல்கள் இவை.

எனவே இந்தத் தமிழாக்கம், வடமொழி அறிவின்மையால் முழுப்பொருள் அறிய இயலாது வருந்திய தமிழன்பர்களுக்குப் பெரிதும் பயன்படும்.

வைணவ தத்துவத்தை விளக்கவும் விரிவாக்கவும் இந்த நூல் துணை செய்யும்.

அறிஞர் உலகம் இதனைச் சீர்தூக்குமாறு கரங்கூப்பி வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்,
29-5-1984.

வ. அய். சுப்பிரமணியம்.

# முன்னுரை

## 1. திருமங்கையாழ்வார்

தமிழ் மண்ணில் வைணவத்தை வளர்த்த பெருமைக்குரிய ஆழ்வார் பன்னிருவருள் ஒருவர் திருமங்கைமன்னன். இவர் இருந்தமிழ்ப் புலவர் வடமொழியில் கரைகண்டவர்; நாலு கவிப் பெருமாள்; சொல்லுடைமை (சொல்வளம்) மிக்கவர். இவரைச் சொற்பெருக்கருள் ஒருவராகத் தம் உரையில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் கொண்டாடியுள்ளார். "உதார வாக்குக்கள் ஆகிறார் திருமங்கையாழ்வாரும், ஆளவந்தாரும், ஆழ்வானும், பட்டரும்" (பாவை, 20 நாயனார் உரை) என்பது அவரது கூற்று.

இத் திருமங்கைமன்னன் திருவாலித்திருநகரியில் திருக்குறையலூரில் ஒரு கார்த்திகைத் திங்களில் கார்த்திகைத் திருநாளில் தோன்றியவர். இவரது பிள்ளைத் திருப்பெயர் நீலன்.

இவர் சோழநாட்டில் குறுநில மன்னராய் விளங்கினார். இவருக்கு நீர் மேல் நடப்பான், நிழல் ஒதுங்குவான், தாள் ஊதுவான், தோலா வழக்கன் என்னும் நால்வர் அமைச்சர்களாய் இருந்தனர். இவர், 'ஆடல்மா' என்னும் குதிரையினையும், 'அமரிற் கடமா களியானை' என்னும் யானையினையும் உடையவராய் இருந்தார்.

இவர் ஐந்தீக்கைகள் பெற்று, ஓர் ஆண்டு முழுவதும் ஆயிரத்தெட்டு வைணவ அடியார்களுக்கு அமுதூட்டித் தாம் விழைந்த குமுதவல்லி என்னும் அழகியை மணந்தார். தம்மிடம் இருந்த பொருள் தீர்ந்த நிலையில் வழிபறித்துப் பொருளீட்டத் தொடங்கினார். அவ்வாறு வழிபறிக்கத் திருமணங்கொல்லையில் திருவரசின் மேலே பதுங்கி இருந்தபோது வயலாளி மணவாளன் பிராட்டியோடு மணவாளக் கோலத்தில் திரளோடு வர, அவனை வளைத்துத் துணிமணிகளைக் கவர்ந்து அறுகாழியையும் தம் பற்களாலே கடித்து வாங்கினார். பின்பு தாம் கொள்ளை கொண்டவற்றைச் சுமையாகக் கட்டி எடுக்கப் பார்த்தார்; இவரால் பேர்க்கவும் முடியவில்லை. உடனே பெருமானை நோக்கி, "நீ ஏதோ மந்திரம் பண்ணியுள்ளாய்; யாது அம்மந்திரம்?" என்று கேட்டு நெருக்கினார். பெருமான் இவர்தம் செவியில் திருஎட்டெழுத்தாகிய திருமந்திரத்தைச் சொல்லித் தன் வடிவழகைக் காட்டி இவரை ஆட்கொண்டான்.

இறைநுகர்ச்சியால் விளைந்த இன்பம் இவர்தம் உள்ளத்தில் அடங்கி நிற்காமல் சொற்களாகப் பெருவெள்ளமிட்டது. அவ்இன்பம் பொங்கிவழிந்த பனுவல்களே பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம்,

திருஎழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்பவை ஆகும். இவ்ஆறு நூல்களையும் வடமொழி மறைகள் நான்கனுக்கு நிகரான நம்மாழ்வாரின் நான்கு நூல்களையும் உணர்ந்துகொள்ளத் துணைபுரியும் கருவி நூல்களாகக் (அங்கங்களாக) கூறுவர்.

ஆழ்வார்கள் பன்னிருவருள் கடைக்குட்டி திருமங்கைமன்னன் என்பது மரபு.

" பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
அய்யன் அருள்மாறன் சேரலர்கோன் - துய்யபட்ட
நாதனன்பர் தாள்தூளி நற்பாணன் நற்கலியன்
ஈதிவர்தோற் றத்தடைவாம் இங்கு "

என்பது உபதேச ரத்தின மாலை (4).

இவரது பெரிய திருமொழி 1084 பாசுரங்களைக் கொண்டது. இதனை, "அறிவுதரும் பெரிய திருமொழி" (தேசிக மாலை, பிரபந்த சாரம், 13) என்று போற்றுகிறார் வேதாந்த தேசிகர். இதில் உகந்தருளின நிலங்களில் காட்சிதரும் பெருமானது திருமேனியழகில் தோய்ந்து பெற்ற இன்பக்களிப்பே கரைபுரளு கிறது. இவர் இறைவனுடைய மேன்மை, நீர்மை முதலான பண்புகளை எல்லாம் உகந்தருளின நிலங்களில் உள்ள பெருமானிடத்தில் கண்டு களித்தவர். இஃது இவர்க்குரிய தனிச்சிறப்பு.

" அல்லாத ஆழ்வார்களுக்கும் இவர்க்கும் உண்டான வாசி இதுவிறே. அவர்கள் மேன்மையை அநுபவிக்கும்போது பராவஸ்த்தையைப் (திரு நாட்டில் பெருமான் இருக்கும் நிலையை) பேசுவர்கள்; நீர்மையை அநுபவிக் கும் போது அவதாரங்களைப் பேசுவர்கள்; அந்நீர்மையை ஸாக்ஷாத் கரிக்கைக்காகத் (கண்கூடாகக் காண்கைக்காக) திருப்பதிகளிலே இழிவர் கள்; இவர், மேன்மையை அநுபவிப்பதும் திருப்பதிகளிலே, நீர்மையை அநுபவிப்பதும் திருப்பதிகளிலே, அத்தை ஸாக்ஷாத்கரிப்பதும் திருப்பதி களிலே "

என்று திருநெடுந்தாண்டகம் 13ஆம் பாசுர உரையில் இவரைப் பற்றிக் குறிக்கப்பட்டிருத்தல் கருதத்தக்கது.

பெரிய திருமொழியில் திருநறையூர், திருக்கண்ணபுரம் என்னும் இரு திருக் கோயில்களையும் தொடர்ச்சியாக நூறு நூறு பாசுரங்களில் கொண்டாடியுள்ளார். இப்பாசுரங்கள் அவ்வத் திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள பெருமான்மீது இவருககுள்ள ஆரா அன்பினையும் தீரா ஈடுபாட்டினையும் தெரிவிக்கின்றன.

இவர் அகத்துறைப் போக்கில் பாடியுள்ள பாசுரங்கள் ஏனைய ஆழ்வார்கள் அவ்வகையில் பாடியுள்ள பாசுரங்களினும் மேலானவையாக அமைந்துள்ளன. இவர் பாசுரங்களில் வரும் தலைமகள் பிற ஆழ்வார்கள் பாசுரங்களில் வருபவளினும் மென்மை நலம் மிக்கவள். பெண்ணுடை உடுத்துப் பரகாலநாயகியாகிப் பெருமான்மீது பிச்சுக் கொண்டு சோரும் திருமங்கை யாழ்வாரின் மென்மை குறித்து,

" அல்லாத ஆழ்வார்களைப் போலன்றியே ஸுகுமாரராயிறே (மென்மையுடையவராய் அன்றோ) திருமங்கையாழ்வார் இருப்பது. மலையாளர் ஒரு மாஸத்துக்கு ஒருகாலே உண்ணவும் வல்லர்களாய் ஒரு மாஸம் பட்டினி விடவும் வல்லர்களாய் இருக்குமாபோலே, ஸம்ஶ்லேஷ தசையில் (கலவிக் காலத்தில்) நெடுநாள் தரித்திருந்து அநுபவிக்கவும் வல்லர்களாய் விஶ்லேஷத்தில் (பிரிவில்) நெடுநாள் தரிக்கவும் வல்லர்களாயிறே மற்றை ஆழ்வார்கள் இருப்பது; ஸம்ஶ்லேஷிக்கவும் (கூடவும்) மாட்டாதே விஶ்லேஷிக்கவும் (பிரியவும்) மாட்டாதபடியாய் ஆயிற்று இவருடைய ஸௌகுமார்யம் (மென்மை) இருப்பது. இவர் உண்ணவும் மாட்டார், பட்டினி விடவும் மாட்டார் "

என்று பெரியவாச்சான் பிள்ளை திருநெடுந்தாண்டகம் பாசுரம் 13இன் உரையில் ஆய்ந்து எழுதியுள்ளமை எண்ணத்தக்கது.

திருமங்கையாழ்வார் மற்றைய ஆழ்வார்களைக்காட்டிலும் பலவகை யாப்புகளைக் கையாண்டுள்ளார். பெரிய திருமொழியில், அரக்கர்கள் இராமபிரானைப் போற்றுவது போல (10:12:, 10:3) அமைந்துள்ள திருமொழிகளும், பெண்கள் பேச்சாலே பெருமான் மேன்மை எளிமைகளைப் பாடும் 'சாழலே' என்று முடியும் திருமொழியும் (11:5) இவர்தம் புதுமைப் போக்கினைத் தெரிவிப்பன. இவர் மடல் நூல்களில் தலைமகள் மடலூரத் துணிந்ததாகக் கூறி ஒரு புரட்சியினைச் செய்துள்ளார்.

## 2. பெரியவாச்சான் பிள்ளை

பெரியவாச்சான் பிள்ளை திவ்வியப் பிரபந்தம் எல்லாவற்றுக்கும் உரைகண்ட பெருமகனார் ஆவர். வைணவ உலகம் இவரை உரைவேந்தர்—வியாக்கியான சக்கரவர்த்தி—என்று போற்றும். இவர் உரை வரைந்தமையாலேயே நாலாயிரத்தின் அரும்பொருள்கள் இன்று விளங்குகின்றன என்பது வைணவப் பெருமக்கள் துணிபு.

" பெரியவாச் சான்பிள்ளை பின்புள்ள வைக்கும்
தெரிய வியாக்கியைகள் செய்வால் - அரிய
அருளிச் செயற்பொருளை ஆரியர்கட் கிப்போது
அருளிச் செயலாய்த் தறிந்து "

என்பது உபதேச ரத்தின மாலை (46).

இவர் சோழ நாட்டில் திருவெள்ளியங்குடிக்கு அணித்தான சங்கநல்லூரில் யாமுன தேசிகருக்கும், நாச்சியாருக்கும் திருமகனாய்த் தோன்றினார். கிருட்டிணர் என்பது இயற்பெயர். 'அபய ப்ரத ராசர்' என்னும் பெயரும் இவருக்கு உண்டு. வைணவ உலகம் ஒருமிடறாக இவருக்குச் சூட்டிய பெயர்கள் 'பரமகாருணிகர்', 'அபார கருணாம்ருத சாகரர்' என்பன.

இவர் நம்பிள்ளையின் நெஞ்சுகந்த மாணாக்கர். இப்பெருமகனார் சமய மறைகள் (ரகசியங்கள்), திவ்வியப் பிரபந்தங்கள், இராமாயணம் ஆகிய

வைணவக் கொள்கை விளக்கத்திற்கு இன்றியமையாதனவாய் விளங்கும் மூன்றின் நுண்பொருள்களையும் பலர்க்கும் விளக்கினார். அவற்றிற்கு உரையும் வகுத்தார். சங்க நல்லூரில் இவரைப்பற்றி வழங்கும் செய்திகளாக உயர்திரு. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் கூறுவன வருமாறு :

" சங்கநல்லூரில் இவரைப் பற்றிய சரித்திரம் அதிகமாக வழங்கவில்லை. குடும்பத்தோடு திருமலையாத்ரை எழுந்தருளினார் என்றும், அங்குத் திருமலை ஸ்ரீநிவாஸனிடம் திருவேங்கடமுடையான் விக்ரஹம் ஒன்றைப் பெற்றார் என்றும், அவ் விக்ரஹத்தைச் சங்க நல்லூரில் ப்ரதிஷ்டை செய்தார் என்றும் அவ்ஊரில் வரலாறு வழங்குகிறது. பெருமாளைக் கைப்பிடித்த பின்பு மிதிலைக்குச் சென்றறியாத ஸீதாப்பிராட்டியைப் போலே தம்முடைய தாய்தந்தையார்க்குச் சரம கைங்கரியம் (இறுதிக் கடன்) செய்துவிட்டுத் திருவரங்கத்துக்கு வந்து, நம்பிள்ளை திருவடிகளை ஆச்ரயித்த (பற்றிய) பின்பு, "தெரிந்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்று திருமழிசைப்பிரான் அருளிச்செய்த ரீதியிலே, நம்பிள்ளை திருவடிகளிலே ஸகலார்த்தங்களையும் கேட்பதிலும், அவருடைய நியமனம் பெற்று அவைகளை வ்யாக்யானங்களாக வடித்து எழுதுவதிலும் அவர் பரமபதித்த பின்பு வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான ஸப்ரஹ்ம சாரிகளையும் (ஒருசாலை மாணாக்கர்களையும்). கூட்டிக் கொண்டு ஸ்ரீரங்கத்தில் தரிசநம் நிர்வஹிப்பதிலுமே (சமயத்தைக் காத்தல்) இவருடைய காலம் எல்லாம் கழிந்து வந்தபடியால், இவர் சங்கநல்லூருக்குத் திரும்பினதே இல்லை என்று கொள்ளலாம் "[1]

இவர்தம் மாணாக்கருள் குறிப்பிடத்தக்கவர் திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படி உரை எழுதிய வாதிகேசரி அழகிய மணவாள சீயர் ஆவர். பின்பழகிய பெருமாள் சீயரும் நம்பிள்ளை காலத்திற்குப் பின் இவரைச் சார்ந்து வாழ்ந்தார்.

இவர் நாலாயிரத்துக்கும் விளக்கவுரை எழுதியதோடு நவரத்நமாலை, சகல ப்ரமாண தாத்பர்யம், உபகார ரத்நம், கத்ய த்ரய வ்யாக்யாநம், ஆளவந்தார் ஸ்தோத்ர வ்யாக்யாநம், அபய ப்ரதாந வ்யாக்யாநம், அநுஸந்தாந ரஹஸ்யம், நியமனப்படி முதலிய நூல்களையும் எழுதியுள்ளார்.

இவரது காலம் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு.

இவர்தம் உரைகள் சோழர் காலத்திய தமிழக அரசியல் சமுதாய சமய நிலைகளைக் காட்டும் ஆனைத்தாள்கள் (வாயில்கள்) ஆகும்.

இவரது பெரிய திருமொழி உரை மூன்று தொகுதிகளாக "அப்பு அரும்பதத்துடனும் உரையுடனும் ஸ்ரீமான் சிங்கப்பெருமாள் கோயில் - மாடபூசி - ராமாநுஜாசார்யராலும், ஸ்ரீமான் புதுப்பட்டு - திருவேங்கடாசார்யராலும், நாநாதேசாந்த அநேக ஸ்ரீகோசங்களின் ஸஹாயத்தினால் பரிசோதிப்பிக்கப்பட்டு, ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முக்ராபக ஸபையாரால் காஞ்சீபுரம் ஸ்ரீகீதாசார்ய அச்சுக்

1. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (பதி), ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிகை ஸ்ரீவைஷ்ணவ ஸபையின் பொன் விழா மலர், திருச்சி 1978, ப. 247.

கூடத்தில்'' முதல் தொகுதி 1908ஆம் ஆண்டிலும் இரண்டாம் தொகுதி 1909ஆம் ஆண்டிலும் மூன்றாம் தொகுதி 1911ஆம் ஆண்டிலும் வெளியிடப்பட்டுள்ளன. அவை இன்று கிடைப்பது அரிதாக உள்ளது. கிடைக்கும் ஓரிரு படிகளும் முற்றமுத்துப் பழுப்படைந்து தொட்டார் மேலே பழியாம்படி துகளாகிப்போகும் நிலையில் உள்ளன.

இத்தகைய நிலையில் இருக்கும் பெரிய திருமொழி உரையினை அங்காந்த வாயோடு காத்திருக்கும் அழிவரக்கனது வயிற்றுக்குள் செல்வதினின்றும் காக்கத் தமிழ்ப் பல்கலைக் கழகம் கருதியது.

இதுபோது முதல் இருநூறு பாசுரங்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை வரைந்த உரை தமிழாக்கத்தோடு வெளிவருகிறது.

## 3. புதிய பதிப்பு

இந்தப் புதிய பதிப்பில் 1. பாசுரம் 2. பதவுரை 3. சிறப்புக் குறிப்பு 4. வியாக்கியானம் 5. தமிழாக்கம் 6. ஒப்புமைப் பகுதிகள் ஆகியன அடங்கி யுள்ளன.

1. பாசுரங்கள் யாப்புக் கெடாத வகையில் பிரிக்கப்பட்டுப் பதிப்பிக்கப் பட்டுள்ளன. பாட வேறுபாடுகள் அடிக்குறிப்பில் பாட்டு, அடி, சீர் எண்களோடு தரப்பட்டுள்ளன. 'மர்ரே அண்டு கம்பெனி' வெளியிட்டுள்ள பெரிய திருமொழி நூலின் இறுதியில் பாட வேறுபாடுகள் தரப்பட்டுள்ளன. அப்பகுதி யாப்புக்குப் பொருந்தும் பாடங்களும் பொருந்தாத பாடங்களும் கொண்ட 'கலந்த கட்டி'யாக உள்ளது. உரைச் சுவடிகளில் சில பாடவேறுபாடுகள் காணப்படு கின்றன. மேலும், பேராசிரியர் மு. இராகவையங்கார் அருளிச்செயல்களில் காணப்படும் பாடவேறுபாடுகளைக் குறித்து ஆய்ந்து சில முடிபுகளைக் கண்டு செந்தமிழ்த் தொகுதி 40இல் வெளியிட்டுள்ளார். அக்கட்டுரை 'ஆழ்வார்கள் கால நிலை' என்னும் நூலின் இறுதியில் இடம் பெற்றுள்ளது. இம்மூன்றின் துணையோடு யாப்பினை அடிப்படையாகக் கொண்டு நல்ல பாடங்கள் தேர்ந் தெடுக்கப்பட்டுள்ளன. அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளவற்றுள் ஓரிரு நல்ல பாடங்கள் உண்டு. ஆனால் உரைச் சுவடிகளில் அவற்றிற்கு மாறான வேறு பாடங்கள் இருத்தலின் அவற்றை முதன்மையாகக் கொள்ளமுடியவில்லை. சான்றாக, ''இற்பிறப் பறியீர் இவரவர் என்னீர்'' (பாசுரம் 7) என்பதில் 'என்னீர்' என்பதற்கு மாறாக,'என்றீர்' என்று ஒரு பாடம் காணப்படுகிறது. வைணவர் றகரத்தை னகரமாக ஒலிப்பர். ''கன்று மேய்த்து'' என்பதனைக் ''கன்னு மேய்த்து'' என்று ஒலிப்பது அவர்தம் தனி இயல்பு. அம்முறையினை ஒட்டி, 'என்றீர்' என்பதனை என்னீர்' என்று ஒலித்துள்ளனர். இதனை எழுதி வைத்தவர்களும் அப்படியே எழுதி வைத்துள்ளனர். 'என்னீர்' என்பதற்கு எழுதப்பட்டுள்ள உரை 'என்றீர்' என்பதற்குப் பொருத்தமாக இருந்தபோதிலும் உரைச்சுவடியில் 'என்னீர்' என்றே காணப்படுவதால் அவ்வாறே பதிப்பிக்கப்பட்டுள்ளது. திருநீர்மலை பற்றிய திருமொழியில் ஈற்றடியினைப் பிரித்துப் பதிப்பித்தோர் எல்லாரும், ''இடம் மாமலை ஆவது நீர்மலையே'' என்று பதிப்பித்துள்ளனர். இதற்கு உரை சொல்லும்போது, ''இடம் ஆவது மாமலை நீர்மலை'' என்று

பிரித்துக் கூட்டவேண்டியுள்ளது. "இடமா மலையா வதுநீர் மலையே" என்பதனை, "இடம் ஆம் மலையாவது நீர்மலையே" என்றும் இலக்கணத்துக்கு மாறுபாடின்றிப் பிரிக்கலாம். இப்படிப் பிரிக்கும்போது பிரித்துக்கூட்ட வேண்டாது ஆற்றொழுக்காகப் பொருள்கொள்ளத் தக்கவாறு அமைகிறது. ஆதலின் இடம் ஆம் மலை ஆவது நீர்மலை என்றே பிரித்துப் பொருள் செய்யப்பட்டுள்ளது.

2. பதவுரை, பெரியவாச்சான்பிள்ளை உரைப் போக்கினை ஒட்டி எளிய தமிழில் வியாக்கியானப் பகுதியினை உணர்ந்துகொள்வதற்கு வாய்ப்பாக வரையப்பட்டுள்ளது. அவர்தம் உரைக்கு வேறாகப் பொருள்கொள்ள இடமளிக்கும் பகுதிகளும் உண்டு. அப்பகுதிகளில் வேறான பொருள் பதவுரையில் காட்டப்படாமல் சிறப்புக் குறிப்பிலேயே தரப்பட்டுள்ளது. "செழுநீர் மலர்க் கமலம்" என்று தொடங்கும் திருக்கடல்மல்லைத் திருமொழிப் பாசுரச் சிறப்புக் குறிப்பு (பக்கம், 453) இவ்வாறு அமைந்துள்ளமை காணலாம்.

3. சிறப்புக் குறிப்பில் சில அருஞ்சொற்களுக்குப் பொருளும் இலக்கணக் குறிப்பும், உயர்திரு அண்ணங்கராசாரிய சுவாமிகள் போன்றோர் தெரிவித்துள்ள அரிய கருத்துகள் சிலவும், பிறவும் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு திருமொழியின் முதற்பாட்டுச் சிறப்புக் குறிப்பிலும் அத்திருமொழியில் பாடப்பெறும் உகந்தருளின நிலத்தைப் பற்றிய குறிப்பும் அங்குள்ள பெருமான், பிராட்டி திருப்பெயர்களும், அத்திருமொழியின் யாப்பும் தரப்பட்டுள்ளன.

4. வியாக்கியானப் பகுதி, சென்னை அரசு கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகத்தினின்றும் பெறப்பட்ட இரு சுவடிகளோடு எண். 3456 (ஆர். 730) எண். 1637 (டி. 2518) ஒப்பு நோக்கப்பட்டுப் பாட வேறுபாடுகளோடு பதிப்பிக்கப்பட்டுள்ளது. நல்ல பாடத்தை வியாக்கியானப் பகுதிகளிலும், மற்றவற்றை அடிக்குறிப்பிலும் காணலாம். வியாக்கியானத் தொடர்கள் எளிதில் விளங்கும்வண்ணம் சந்திகள் பிரிக்கப்பட்டுள்ளன. ஆயினும், 'அதடைய' (அது அடைய) 'இதடைய' (இது அடைய) என வரும் இடங்கள் இலக்கணப் புதுமை உடையன; முற்றியலுகரங்கள், குற்றியலுகரங்கள் போலே உயிர் ஏற இடங்கொடுத்து நிற்பன. இத்தகைய இடங்கள் அப்படியே பதிப்பிக்கப் பட்டுள்ளன. ஒருகால் என்பது 'ஒருக்கால்' என்றும், என்னுமாபோலே என்பது 'என்னுமாப்போலே' என்றும் இரு சுவடிகளிலும் எல்லா இடங்களிலும் காணப்படுவதால் அவ்வாறே இந்நூலிலும் கொடுக்கப்பட்டுள்ளன. ஏட்டுச் சுவடிகளிலும், அச்சுப்படியிலும் ஒற்று மிக வேண்டும் இடங்கள் மிகாமல் காணப்படுகின்றன. அதனை இவ்உரையின் இயல்புகளுள் ஒன்றாகக் கொண்டு அவற்றில் உள்ளவாறே அவ்இடங்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு திருமொழியின் தோற்றுவாயும் அத்திருமொழியின் தொடக்கத்தில் பதிப்பிக்கப் பட்டுள்ளது. 151, 152 ஆகிய பாசுரங்களுக்கு இருமுறை பெரியவாச்சான்பிள்ளை விளக்கம் செய்துள்ளார். முன்னைய பதிப்பில் முதல் உரையினை அடுத்து அவ் இரு பாசுரங்களின் இரண்டாம் உரை தொடர்ந்து பதிப்பிக்கப்பட்டுள்ளது. இப்பதிப்பில் ஒப்புநோக்கிப் படித்தற்கு வாய்ப்பாக ஒவ்வொரு பாசுரத்தின் முதல் உரைக்குப் பின்னர் இரண்டாம் உரை தரப்பட்டுள்ளது.

5. தமிழாக்கப் பகுதி வைணவர் வழங்கும் அருந்தமிழ்ச் சொற்களையும், வெளிப்பாடுகளையும் கொண்டு பின்னப்பட்டுள்ளது. வடமொழி மேற்கோள்களும்

தொடர் அமைப்புகளும், சொற்களும், பேச்சுத் தமிழ் வழக்குகளும், தமிழ் இலக்கணத்திற்கு மாறான சொல்லமைப்புகளும் விரவிய வைணவ உரைகளின் கலவையிசைக்கிடையே, "தேமதுரத் தமிழோசை" காற்றில் தவழ்ந்துவரும் மெல்லிய குழலிசைபோல் இழைகிறது. வைணவ உரைகளிலேயே பல வடசொற்களுக்கு நிகரான "சீரிய கூரிய தீந்தமிழ்ச்" சொற்கள் பயின்று வருகின்றன. அங்கங்கே நடையாடும் அழகிய தமிழ்ச் சொற்களும், மரபு வழக்குகளும் ஒருவகைப் புதிய மணத்தைப் பரப்புகின்றன. அவை "தென்றலும் சிறு துளியும் போலே" அயர்வகற்றிக் கிளர்ச்சியூட்டுவன. அவற்றை எளிமைப்படுத்தி நீர்ராளமாக்கின் உரையின் செறிவு நெகிழ்ந்து தளர்ந்துபோகும். ஆதலின் அவற்றை விரவி எழுதும் விரகினைப் பின்பற்றி வடசொற்களும், தொடர்களும் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. எனினும் அவற்றின் விளக்கம் எல்லாரும் அறிந்துகொள்வதற்குப் பாங்காக அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளது.

ஒரு சில வடசொற்களுக்கு நிகரான தமிழ்ச் சொற்கள் கண்டறியப்பட்டு இந்நூலில் பயன்படுத்தப்பட்டுள்ளன. சான்றாகத் தாரகம் என்பதற்கு, "என் வாழ்முதலாகிய பொருளே" என்னும் திருவாசகத் தொடரை ஒட்டி 'வாழ்முதல்' என்றும், ப்ரகாரி என்பதற்கு இவ்உரைகளில் ப்ரகாரம் என்பதற்கு நிகராகப் படி என்னும் தமிழ்ச் சொல் வழங்கப்படுவதனை ஒட்டி, 'படிகொளி' என்றும், சுகுமாரர் என்பதற்கு, "இவர், பெரிது அளவுஇல் ஆற்றலைப் பொருந்தினர் ஆயினும், பூவின் மெல்லியர்; வருந்துவர் சிறிது என மனத்தின் நோக்கினான்" (பாலகாண்டம், தாடகை வதைப் படலம், 17) என்னும் கம்பன் தமிழ் கொண்டு 'பூப்போலும் மெல்லியர்' என்றும் சொற்கள் அமைத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாறு புதிய சொற்கள் ஆக்கிக் கொள்ளப்பட்டுள்ள இடங்களில் சிலவற்றிற்குரிய அடிப்படை, அடிக்குறிப்பில் எழுதப்பட்டுள்ளது.

தமிழாக்கத்தில் தமிழ், வடமொழி மேற்கோள்கள் எந்த எந்த நூல்களிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன என்பது பெரும்பாலும் கண்டறிந்து சுட்டப்பட்டுள்ளது. முன்னைய பதிப்பில் நூலின் பெயர் தெரியாமல் விடுபட்டிருந்த மேற்கோள்கள் சிலவற்றிற்கு இடம் கண்டு குறிக்கப்பட்டுள்ளது. உயர்திரு புத்தூர்க் கிருட்டிணசாமி ஐயங்கார் அவர்கள் பதிப்பித்துள்ள பல்வேறு நூல்களில் காணப்பெறும் பிரமாணத் திரட்டுகளே மேற்கோள்களின் இடம் பொருள்கள் அறிய விழுத்துணையாயின. பெரும்புலவர் புருடோத்தம நாயடு அவர்கள் எழுதிய ஈட்டின் தமிழாக்கம், திருக்குடந்தை, திருப்புறம்பயம் டி. டீ. இராமஸ்வாமி இராமானுஜதாஸரால் இயற்றப்பட்ட திருவாய்மொழி ஈட்டின் பிரமாணத்திரட்டு, ஸ்ரீவசனபூஷண பிரமாணத்திரட்டு ஆகியவற்றின் துணைகொண்டு சிலவற்றின் இடமும் பொருளும் அறியப்பெற்றன. வான்மீகி ராமாயணச் செய்யுள்கள் சிலவற்றிற்கு இடமும் பொருளும் வான்மீக ராமாயணப் பதிப்பினைப் பார்த்துக் கண்டறிந்து குறிக்கப்பெற்றன. இந்நூல்களின் துணையால் மேற்கோள்களின் பொருள் அறியப்பட்டது எனினும் அஃது அப்படியே தரப்படாமல் செப்பமான தமிழ் நடையில் அமைத்துத் தரப்பட்டுள்ளது.

இத் தமிழாக்கத்தில் பெரும்பாலான இடங்களில் தெளிவும் விளக்கமும் முன்னைய பதிப்பில் உள்ள அப்பு என்பார் எழுதிய அரும்பதக் குறிப்பினைத் தழுவியே செய்யப்பட்டுள்ளன. எனினும், சில இடங்களில் அவரது விளக்கம்

உரையாசிரியரின் கருத்துக்கு வேறாகத் திசைமாறிச் செல்கிறது. அத்தகைய இடங்களில் அரும்பத உரையினைத் தழுவாமல் வேறு விளக்கம் வரையப் பட்டுள்ளது. சான்றாக, "கொள் கொம்பு மூடிற்று என்றால்" (பக்கம் 89, 90) "மாவலியை ஏயான் இரப்ப" (பக்கம் 200) ஆகியனவற்றைக் கூறலாம். அத்தகைய இடங்களில் வேறாக அமைந்துள்ள விளக்கத்திற்கான அடிப்படையினை அடிக் குறிப்பில் காணலாம்.

6. பெரும்பாலான பாசுரங்களின் இறுதியில் ஒப்புமைப் பகுதி தரப்பட்டுள்ளது. இப் பகுதி சில சிக்கலான பகுதிகளை விளங்கிக் கொள்ளவும் ஒரே தொடருக்குப் பல்வேறு இடங்களில் வரையப்பட்டுள்ள பல்வேறு அழகிய விளக்கங்களை ஒருசேர அறிவதற்கும் துணைபுரியும். இப்பகுதி வைணவ உரை களின் பல்வண்ணக் காட்சிகளைக் காணும் பலகணியாக விளங்கும் என்னும் எண்ணமே இதனை அமைக்க அடியாய் அமைந்தது.

'பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும்' (முதல் இருநூறு பாசுரங்கள்) என்னும் இந்நூல் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் எட்டாவது வெளியீடாக வருகிறது. முதல்தரமான வெளியீடாக அமைதல் வேண்டும் என்னும் நோக்கில் அனைத்து முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அறியாமையும் (ஜ்ஞாந அநுதயம்) அயன்மை அறிவும் (அந்யதா ஜ்ஞாநம்) ஐயமும் (சந்தேகம்) திரிபும் (விபர்யயம்) மனிதன் உடன்பிறந்தவை. யான் மனிதன். எனவே எங்கேனும் பிழைகள் இருக்கலாம். அறிஞர்கள் அவற்றைச் சுட்டிக்காட்டின் நன்றியுடையேன். அஃது அடுத்த பதிப்பில் திருத்திக்கொள்ள வாய்ப்பாகவும் அமையும்.

வைணவத் தொடர்பான பணியினை மேற்கொள்ளுமாறு பணித்தும் இப் பணியினைத் தெரிவித்தபோது மேலெழுத்திட்டும், அவ்வப்பொழுது அறிவுரை நல்கியும் வேண்டும் உதவிகள் செய்தும் விளைநீரடைத்தவர் துணை வேந்தர் மாண்புமிகு டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் அவர்கள் ஆவர். மேலும் தம் அரிய அணிந்துரையினால் இந்நூலுக்குச் சிறப்புச் சேர்த்துள்ளார்கள்.

சென்னையினின்றும் ஓலைச்சுவடிகளைப் பெறுவதில் உறுதுணை புரிந்தவர் முன்னாள் பதிவாளர் (பொறுப்பு) திரு. சிலம்பொலி சு. செல்லப்பன் ஆவர். அச்சகத் தொடர்பான வேலைகளுக்கு விரைந்து தம் இசைவினைத் தந்து உதவியவர் இந்நாள் பதிவாளர் (பொறுப்பு) திரு. வ. கிருட்டிணமூர்த்தி ஆவர்.

தம் பட்டறிவாலும் பழுத்த தமிழ்ப் புலமையாலும் நெறிகாட்டி யவர்கள், புலத் தலைவர் பேராசிரியர் கா. ம. வேங்கடராமையா, ஓலைச்சுவடித் துறைத் தலைவர் பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை, இணைப் பேராசிரியர் திரு. அடிகளாசிரியர் ஆகியோர் ஆவர். மலர்ந்த முகத்தோடு இந்நூலினைத் தட்டச்சு செய்தவர் திரு. கு. ச. மகாலிங்கம்.

இந்நூலினைச் சீர்தூக்கிப் பார்த்துச் சில திருத்தங்கள் சொல்லி இதற்கு மெருகு ஊட்டியவர்கள் உயர்திரு புத்தூர்க் கே. கிருட்டிணசாமி ஐயங்கார் சுவாமிகள், புலவர் திரு. தி. வே. கோபாலய்யர், புலவர் திரு. எஸ். கே. இராமராசன், நாவல்பாக்கம் ஸ்ரீதேவநாதாச்சாரிய சுவாமிகள் ஆகியோர் ஆவர். உயர்திரு வேளுக்குடி வரதாச்சாரிய சுவாமிகளும், தஞ்சை என். எஸ். தாத்தாசாரிய சுவாமி களும் இந்நூல் பற்றிய சில ஐயங்களைக் களைந்து உதவினர்.

இந்நூலினை அழகுற அச்சிட்டுத் தந்தவர் மாருதி அச்சக உரிமையாளர் திரு. வி. பார்த்திபன், பல்வகை எழுத்துகளைக் கொண்ட இந்நூற்படியைப் பொறுமையுடன் அச்சுக் கோத்தவர்கள் அவ் அச்சகப் பணியாளர்கள். கடைசி நேரத்தில் திருத்தங்கள் செய்தாலும் கனிவுடன் உடனே செய்தவர் அச்சக முன்னவர் திரு: மு. இராதாகிருட்டிணன். அச்சுப்படியினைத் திருத்துவதில் உதவியவர் புலவர் திரு. வே. கோபாலகிருட்டிணன்.

இவர்களுக்கெல்லாம் யாது கைம்மாறு செய்யவல்லேன்? உள்ளத்தில் வெள்ளமிடும் உணர்ச்சிகளை நன்றி என்னும் சிறு சொல் சுமக்க முடியாமல் தரை தேய்க்கிறது. இந்நிலையில் சூடிக்கொடுத்த நாச்சியாரின் பாடல் தொடர் ஒன்று நெஞ்சில் ஒளிர்கின்றது. "தலையல்லால் கைம்மாறிலேனே" என்பதே அத்தொடர். ஆதலின் வணங்கி மகிழ்கிறேன்.

இத்தகைய தமிழ்ப் பணிகளுக்கு இடமளிக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகம் தழைத்துச் சிறக்க அரங்கம் மேய அண்ணல் திருவடிகளைப் பராவிப் போற்றுகிறேன்.

இராமானுசர் இணையடி போற்றி.

அன்பன்,

தெ. ஞானசுந்தரம்.

## குறுக்க விளக்கம்

### தமிழ் நூல்கள்

அம. — அமலனாதிப்பிரான்
இ.தி. — இரண்டாம் திருவந்தாதி
இரா. நூ. அ. — இராமானுச நூற்றந்தாதி
க. நு. சி. — கண்ணிநுண் சிறுத்தாம்பு
சி. ம. — சிறிய திருமடல்
தி. எ. கூ. இ. — திருஎழுகூற்றிருக்கை
தி. கு. தா. — திருக்குறுந்தாண்டகம்
தி. ச. வி. — திருச்சந்தவிருத்தம்
தி. நெ. தா. — திருநெடுந்தாண்டகம்
தி. பல் / திருப்பல் — திருப்பல்லாண்டு
தி. மா. — திருமாலை
திருவா. — திருவாசிரியம்
தி. வா . மொ. — திருவாய்மொழி
தி. வி. — திருவிருத்தம்
நாச். தி. — நாச்சியார் திருமொழி
நான். தி. — நான்முகன் திருவந்தாதி
பாவை. — திருப்பாவை
பெ. தி. — பெரிய திருமொழி
பெ. திருவந். — பெரிய திருவந்தாதி
பெ. ம. / பெ. மடல். — பெரிய திருமடல்
பெரி. தி. — பெரியாழ்வார் திருமொழி
பெரு. தி. — பெருமாள் திருமொழி
மு. தி. — முதல் திருவந்தாதி
மூ. தி. — மூன்றாம் திருவந்தாதி

### உரைகள்

நாயனார் உரை: — அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் உரை
பெ. உரை. — பெரியவாச்சான் பிள்ளை உரை
ம. மா. மு. உரை — மணவாள மாமுனிகள் உரை

## வடமொழி நூல்கள்

அஹி. ஸம். — அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை
ஆப. ஸூ. — ஆபஸ்தம்ப ஸூத்ரம்
க. பு. — கருட புராணம்
கீதை. — பகவத் கீதை
சாண். — சாண்டில்ய ஸ்ம்ருதி
சாந். — சாந்தோக்யோபநிஷத்
ஜி. ஸ்தோ. — ஜிதந்தே ஸ்தோத்ரம்
தைத். ஆந. — தைத்ரியோபநிஷத் ஆநந்தவல்லி
தைத். ப்ரு. — தைத்ரியோபநிஷத் ப்ருகுவல்லி
பர. ஸம். — பரம ஸம்ஹிதை
பார. உத். — பாரதம் உத்யோக பர்வம்
பார. மோ. — பாரதம் மோக்ஷ தர்மம்
பார. ஸா. — பாரதம் ஸாந்தி பர்வம்
பு. ஸூ. — புருஷ ஸூக்தம்
ப்ரு. — ப்ருஹதாரண்யகோபநிஷத்
மநு. — மநுஸ்ம்ருதி
மா. பு. —மாத்ஸ்ய புராணம்
முண். — முண்டகோபநிஷத்
யஜு. காட. — யஜுர் வேதம் காடகம்
ரா. பா. — ராமாயணம் பாலகாண்டம்
ரா. அ. — ராமாயணம் அயோத்யா காண்டம்
ரா .ஆ. — ராமாயணம் ஆரண்ய காண்டம்
ரா. கி. — ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம்
ரா ஸு. —ராமாயணம் ஸுந்தர காண்டம்
ரா. யு. — ராமாயணம் யுத்த காண்டம்
வரா. பு. — வராக புராணம்
வி. த. — விஷ்ணு தத்வம்
வி. தர். — விஷ்ணு தர்மம்
வி. பு. — விஷ்ணு புராணம்
ஸ்தோ. ர — ஸ்தோத்ர ரத்நம்
ஸுபா. — ஸுபாலோபநிஷத்

# பொருளடக்கம்

# பெரிய திருமொழித் தனியன்கள்

*1. திருக்கோளூர் நம்பி அருளிச்செய்தது*

**கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம் ।**
**யஸ்ய கோபிஃப்ரகாசாபி ராவித்யம் நிஹதம் தமஃ ॥**

**பதவுரை :** **யஸ்ய ப்ரகாசாபிஃ கோபிஃ** - *எவருடைய விளங்குகின்ற ஒளிக் கதிர்களினாலே - சொற்களினாலே,* **ஆவித்யம் தமஃ** - *அறியாமை ஆகிய இருளானது,* **நிஹதம்** - *அழிக்கப்பட்டதோ,* **தம்** - *அந்த,* **கலித்வம்ஸம்** - *தீவினை ஆகிய குற்றத்தை அழிப்பவரும்,* **லோக திவாகரம்** - *உலகின் ஞாயிறாக - அறிவு விளக்கம் நல்குபவராக - இலங்குபவருமான,* **கவிம்** - *திருமங்கையாழ்வார் என்னும் பாவலரை,* **கலயாமி** - *பராவுகிறேன்.*

**சிறப்புக் குறிப்பு :** *நூலுள் அடங்காது புறம்பே தனித்து நிற்றலின், தனியன் என்னும் பெயர் பெற்றது. இதனைப் 'பாயிரம்' என்றும் வழங்கலாம்.*

**பிள்ளைலோகம் சீயர் வியாக்கியானம்**

அவதாரிகை : **கலயாமி கலித்வம்ஸம்** - திருமொழி முதலான திவ்ய ப்ரபந்தோபகாரத்துக்குத் திருமங்கையாழ்வாரைத் திருவடி தொழும்படி சொல்லு கிறது.

வியாக்கியானம் : **கலயாமி கலித்வம்ஸம்** - 'கலிகன்றி' என்று நிரு பகத்தை உடையரான பரகால கவியை, கலயாமி - ப்ரணமாமி என்கிறது. **லோக திவாகரம்** - ஆதித்யன் பாஹ்யாந்தகாரத்தைப் போக்கும்; இவர் நாட்டார்க்கு பாஹ்யாப்யந்தராந்தகாரங்கள் இரண்டையும் போக்குவர். **யஸ்ய கோபிஃ** யாதொருத்தருடைய "**யத் கோஸஹஸ்ரம்**" என்கிற மறை ஆயிரங் களினாலே. அவைதான், **ப்ரகாசாபிஃ** என்று "**நடைவிளங்கு தமிழ் மாலை யாய்**" "**நெஞ்சுக்கு இருள்கடிதீபமாய்**" இருக்கும். இப்படி ப்ரகாசகங்களான

---

**பிள்ளைலோகம் சீயர் விளக்கவுரை - தமிழாக்கம்**

**தோற்றுவாய் :** *திருமொழி முதலான அருள்நூல்களை நல்கியமைக்குத் திருமங்கையாழ்வாருடைய திருவடிகளில் தொழுதலைச் சொல்லுகிறது.*

**விளக்கவுரை :** தீவினையாகிய குற்றம் அழிப்பவரைப் பராவுகிறேன் - *'கலிகன்றி' என்னும் சிறப்புப் பெயரினை உடையவரான பரகாலன் என்னும் பாவலரைப் பராவுகிறேன். அஃதாவது தொழுகிறேன் என்கிறார்.* **உலகின் ஞாயிறு** - *ஞாயிறு புறஇருளைப் போக்கும்; இவர் நாட்டார்க்குப் புறஇருள், அக இருள் ஆகிய இரண்டையும் போக்குவர்.* எவர் ஒருவருடைய விளங்குகின்ற ஒளிக் கதிர்களினாலே - *எவர் ஒருவருடைய* "ஒளிக்கதிர் ஆயிரம்" *(பராங்குசாஷ்டகம். 4) என்னும் மறை ஆயிரங்களினாலே.* விளங்குகின்ற - *அவைதாம்* "நடை விளங்கு தமிழ் மாலையாய்", (பெரு. *தி.1: 11)* "நெஞ்சுக்கு இருள் கடி தீபமாய்" *(தனியன். 3)*

ஸ்ரீஸூக்திகளினாலே, அறிவிலா மனிசருடைய ஆவித்யதமஸ்ஸு நிஹதமாயிற்று என்பது யாதொன்று, அத்தாலே அவரை 'கலயாமி' என்கிறது.

---

இருக்கும். இப்படி விளங்குகின்ற அருள்மொழிகளாலே அறிவிலா மனிசருடைய அறியாமை இருள் அழிக்கப்பட்டது. பராவுகிறேன் - அதனாலே அவரைத் தொழு கிறேன் என்கிறார். *(1)*

2. எம்பெருமானார் அருளிச்செய்தது

**வாழி, பரகாலன்! வாழி, கலிகன்றி!**
**வாழி, குறையலூர் வாழ்வேந்தன்! - வாழியரோ,**
**மாயோனை வாள்வலியால் மந்திரம்கொள் மங்கையர்கோன்,**
**தூயோன், சுடர்மான வேல்!**

ப. ரை : பரகாலன் வாழி - பகைவர்களுக்குக் கூற்றுவனாய் இருப்பவர் வாழ்ந்தருள வேண்டும்; **கலிகன்றி** - கலியினால் வரும் குற்றத்தைப் போக்குபவர், **வாழி** - ; **குறையலூர்வாழ்வேந்தன்** - திருக்குறையலூரில் வாழும் அரசர், **வாழி** - ; **மாயோனை** - வியத்தகு பண்புகளும் செயல்களும் உடைய இறைவனை, **வாள்வலி யால்** - தம் வாளின் ஆற்றலைக் காட்டி, **மந்திரம்கொள் மங்கையர் கோன்** - அதனால் திருமந்திரத்தை அறிவுறுத்தப் பெற்ற திருமங்கையில் உள்ளார்க்குத் தலைவரும், **தூயோன்** - உள்ளும் புறம்பும் ஒக்கத் தூய்மை உடையவருமான ஆழ்வாருடைய, **சுடர் மான வேல்** - ஒளி பொருந்திய பெரிய வேற்படை, **வாழி**—.

சி. கு : இது நேரிசை வெண்பா.

அவ : **வாழி பரகாலன்** - எம்பெருமானுக்குத் திருமதிள் போலே அரணாய் இருப்பதான ஆறு ப்ரபந்தங்கள் செய்தருளின ஆழ்வாருடைய திரு நாமங்கள் பலவற்றையும் சொல்லி அவரை வாழ்த்துகிறது, இதில். **''ப்ரத்யக்ஷ குரவஸ் ஸ்துத்யா:''** என்னக் கடவதிறே. ஆழ்வார்கள் அர்ச்சாவதாரமாய் எப்போதும் எல்லார்க்கும் ப்ரத்யக்ஷராயிறே இருப்பது.

---

**தோ :** இப்பாட்டு எம்பெருமானுக்குத் திருமதிள் போலே அரணாய் இருக்கும் ஆறு நூல்களை இயற்றிய ஆழ்வாரின் திருப்பெயர்கள் பலவற்றையும் சொல்லி அவரை வாழ்த்துகிறது. **''அருளாசிரியர்கள் நேரிலேயே பரவப்படுதற்கு உரியவர்கள்''** என்பது ஆன்றோர் மொழி.[1] ஆழ்வார்களை நேரில் காண்பது எங்ஙனம்? அவர்கள்தாம் இப்பொழுது இல்லையே? என்றால் ஆழ்வார்கள் வழி படுவதற்கேற்ற உருவத்தோடு தோன்றி எப்போதும் எல்லார்க்கும் காட்சி தருப வராய் அன்றோ இருக்கின்றனர்!

---

1. ''நேசனைக்கா ணாவிடத்தில் நெஞ்சார வேதுதித்தல்
ஆசானை எவ்விடத்தும் அப்படியே - வாச
மனையாளைப் பஞ்சணையில் மைந்தர் தமைநெஞ்சில்
வினையாளை வேலைமுடி வில்'' என்பது ஔவையார் பாட்டு.

வியா : **வாழி பரகாலன்** - பகவத் த்விட்டுக்களான ப்ரதிகூலர்க்குக் காலனானவர் வாழி. **வாழி கலிகன்றி** - கலிதோஷ நிவாரகர் வாழி. **குறையலூர் வாழ் வேந்தன் வாழி** - திருக்குறையலூரை அவதார ஸ்தலமாக உடையராய் அது வாழும்படிக்கு அத்தை நோக்குகிற ராஜா என்னுதல்; அங்கே வாழுகிறவர் என்னுதல். **மாயோனை வாள் வலியால் மந்திரம் கொள் மங்கையர்கோன், தூயோன் சுடர் மான வேல் வாழியரோ** - என்று ஆழ்வாரையும், அவர் திருக்கையில் வேலையும் ஒருகாலே ஆசாஸித்தபடி. **மாயோனை** - அரங்கத்து அரவணையில் பள்ளி கொள்ளும் மாயோனையிறே வாள்வலியால் மந்திரம் கொண்டது. தென் அரங்கன்தன்னை வழிபறித்த வாளனிறே. கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டவர் இடத்திலேயிறே மந்திரப் பொருள் கைக்கொண்டது. மந்திரத்தைப் பற்றியிறே மந்திரம் கொண்டது. **மங்கையர் கோன்** - திருமங்கை மன்னனிறே. **தூயோன்** - தூய்மை என்னும் பாஹ்யாப்யந்தர சுத்தியை உடையவர். **''அங்கமலத் தட வயல் சூழ் ஆலி நாடன் அருள் மாரி அரட்டமுக்கி அடையார் சீயம் கொங்கு மலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன் கொற்ற வேல் பரகாலன் கலியன்''** என்று தாமே தம் திருநாமங்களைக் கூறினாரிறே. **சுடர் மான வேல்** - தேஜோரூபமான, மான வேல் - பெரிய வேல். திருமங்கை மன்னன் எடுக்கும்படியான வேல். **வாழியரோ** - இத்தால் ஆழ்வாரோ பாதி ஆயுதமும் ஆசாஸ்யம் என்றபடி. **''நின் கையில் வேல் போற்றி''**

---

வி : வாழி பரகாலன் - *இறைவனை இழித்துரைக்கும் தீயவர்களுக்குக் காலனானவர் வாழி.* வாழி கலிகன்றி - *கலியினால் வரும் குற்றத்தைப் போக்குபவர் வாழி.* குறையலூர் வாழ்வேந்தன் வாழி - *திருக்குறையலூரைப் பிறப்பிடமாக உடையவராய், அது வாழுமாறு நோக்குகிற அரசர் என்க; அல்லது, அங்கே வாழுகிறவர் என்க.* மாயோனை வாள் வலியால் மந்திரம் கொள் மங்கையர் கோன் தூயோன் சுடர் மான வேல் வாழியரோ - *இதனால் எம்பெருமானார் ஆழ்வாரையும் அவர் திருக்கையில் உள்ள வேலையும் ஒரே சமயத்தில் போற்றி நிற்கிறார்.* மாயோனை - *அரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும் மாயோனையன்றோ வாள்வலியால் மந்திரம் கொண்டது. தென் அரங்கனை வழிபறித்த வாளன் அன்றோ திருமங்கை மன்னன்! கைப்பொருள்கள் முன்னர்க் கைக்கொண்டவரிடத்திலேயன்றோ மந்திரப் பொருள் கைக்கொண்டது. மந்திரத்தைப் பற்றியல்லவா மந்திரம் கொண்டது.*[1] மங்கையர் கோன் - *திருமங்கைமன்னன் அன்றோ!* **"அங்கமலத் தடவயல் சூழ் ஆலி நாடன், அருள்மாரி, அரட்டமுக்கி, அடையார் சீயம், கொங்குமலர்க் குழலியர் வேள், மங்கை வேந்தன், கொற்ற வேல் பரகாலன் கலியன்"** *(பெ. தி. 3 : 4 : 10) என்று தாமே தம் திருப் பெயர்களைக் கூறினார்அன்றோ!* **தூயோன்**-*புறத் தூய்மையும் அகத் தூய்மையும் உடையவர்.* **சுடர் மான வேல்**-*ஒளி மயமான பெரிய வேல்; மான வேல் - பெரிய வேல்; அஃதாவது திருமங்கைமன்னன் எடுக்கத் தக்க வேல்.* **வாழியரோ** - *இதனால் ஆழ்வாரைப்போல அவரது படைக் கலமும் கொண்டாடத்தக்கது என்று கூறப்பட்டது. சூடிக்கொடுத்த நாச்சியாரும்* **"நின்கையில் வேல் போற்றி"** *(பாவை. 24) என்றே பாடியுள்ளார்.* **இதுதான்**

---

1. மந்திரம் - முன்னது கருவியாகுபெயராய்ப் பெருமானையும் பின்னது திருவெட்டெழுத்தாகிய திருமந்திரத்தையும் குறித்தன.

**என்னக் கடவதிறே. இதுதான் கொற்ற வேலாகையாலே வெற்றி வேலாய் இருக்கும். அத்தாலே இதின் விஜயத்தை வேண்டுகிறது.**

---

*கொற்ற வேலாகையாலே வெற்றிவேலாய் இருக்கும்; அதனாலே இதன் வெற்றியை வேண்டுகிறார்.*

ஒப்புமைப் பகுதி

1. *இத்தனியன் திருவெழுகூற்றிருக்கைக்கு அருளிச்செய்ததாக அந்நூலில் காட்டப்பட்டுள்ளது. இதற்குப் பிள்ளைலோகம்சீயர் அருளிய விளக்கவுரையும் அங்கு இடம்பெற்றுள்ளது. அதற்கும் இதற்கும் வேறுபாடு இல்லை. மங்கையர்கோன் என்பதற்கு 'மங்கை மன்னனிறே' என்று அங்கும் 'திருமங்கை மன்னனிறே' என்று இங்கும் உரை எழுதப்பட்டுள்ளது.*
2. *'' மானவேல் - காபுருஷன் எடுக்கிலும் திருமங்கை மன்னனாக்க வல்ல வேல்''* *தி. நெ. தா. 30 பெ. உரை.*
   *[காபுருஷன் - இழிந்தவன்]*
   *'' மானவேல் - பெருந்தன்மையுடைய வேல்''* *தி. கு. தா. 20 பெ. உரை.*

**(2)**

3. கூரத்தாழ்வான் அருளிச்செய்தது

**நெஞ்சுக் கிருள்கடி தீபம்; அடங்கா நெடும்பிறவி**
**நஞ்சுக்கு நல்ல அமுதம்; தமிழநன் னூல்துறைகள்**
**அஞ்சுக் கிலக்கியம்; ஆரண சாரம்; பரசமயப்**
**பஞ்சுக் கனலின் பொறிபர காலன் பனுவல்களே.**

**ப. ரை :** **பரகாலன் பனுவல்கள்** - *பகைவர்களுக்குக் காலனான ஆழ்வார் அருளிச்செய்த நூல்கள்,* **நெஞ்சுக்கு இருள் கடி தீபம்** - *நெஞ்சில் உண்டாகும் அறியாமையை அகற்றும் விளக்காகவும்,* **அடங்கா நெடும் பிறவி நஞ்சுக்கு** - *அடங்காத நெடிய பிறப்பாகிய நஞ்சினை மாற்றுவதற்கு,* **நல்ல அமுதம்** - *மேலான அமுதமாகவும்,* **நல் தமிழ நூல் துறைகள் அஞ்சுக்கு** - *சிறப்புப் பொருந்திய தமிழ் இலக்கணத் துறைகளான எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்தனுக்கும்,* **இலக்கியம்** - *இலக்கியமாகவும்,* **ஆரண சாரம்** - *மறையின் பிழிவாகவும்,* **பரசமயப் பஞ்சுக்கு** - *பிற சமயங்களாகிய பருத்திக்கு,* **அனலின் பொறி** - *நெருப்புப் பொறியாகவும் இருக்கும்.*

**சி. கு :** *இது கட்டளைக் கலித்துறை. 'தமிழ் நன்னூல் துறைகள்' என்னும் பாடம் யாப்புக்குச் சேராது. எனவே 'தமிழ நன்னூல் துறைகள்' என்னும் பாடமே பொருந்துவதாம். தமிழ் என்னும் சொல் வேற்றுமைப் புணர்ச்சிக்கண் அகரச் சாரியை பெற்று வந்தது. ''தமிழ் அவ் வுறவும் பெறும் வேற்றுமைக்கே'' என்பது நன்னூல் (225).*

அவ : **இதில் ஆழ்வார் திவ்ய ப்ரபந்த வைபவம் சொல்லுகிறது.**

---

**தோ :** *இதில் ஆழ்வார் அருள்நூல்களின் ஏற்றம் சொல்லப்படுகிறது.*

வியா : **நெஞ்சுக்கு இருள்கடி தீபம்** என்று - நெஞ்சுக்கு இருளாவது மனோமாலிந்யமான அஜ்ஞாநம். **''மனன் அக மல''**மிறே. ஞானக்கலையாகை யாலே அத்தை நிராகரிக்கும் ஞானச்சுடர் விளக்காய் இருக்கும். **அடங்கா நெடும் பிறவி நஞ்சுக்கு நல்ல அமுதம்** - ப்ரதிக்ரியை ஒன்றாலும் அடங்காதே நெடுகிப் போருகிற ஜந்மமாகிற நஞ்சுக்கு, **நல்ல அமுதம்** - அந்த விஷத்தை மாற்றுகைக்கு நிர்விஷமான அம்ருதம். ஸம்ஸார விஷத்துக்கு அம்ருதமாயிறே திருமால் திருநாமம் இருப்பது. திருமங்கையாழ்வார் திவ்ய ப்ரபந்தம், ஸம்ஸார நிவர்த்தகமான திருமந்த் ரார்த்தத்தை ப்ரதிபாதிக்குமதாயிறே இருப்பது.

**தமிழ நன்னூல் துறைகள் அஞ்சுக்கு இலக்கியம்** - த்ராவிட சாஸ்த்ரம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என்கிற விலக்ஷணமான பஞ்ச லக்ஷணத்தோடே கூடியிறே இருப்பது. அன்றிக்கே, தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சு லக்ஷணத்தையும் அறுதியிடுவதான நன்னூல் என்று ஒரு சாஸ்த்ரம் உண்டு; அத்தை சொல்லிற்றாதல். ஏவம் விதமான த்ராவிட சாஸ்த்ர மார்க்க பஞ்சகத்துக்கு. **இலக்கியம்** - 'இலக்கண இலக்கியம்' என்றிறே அவர்கள் சொல்லுவது. அதுக்கு லக்ஷ்யமாய்ப் படிமாவாய் இருக்கும். இத்தைப் பார்த்து லக்ஷணம் கட்டலாய் இருக்கை.

கேவலம் தமிழுக்கு லக்ஷ்யமாய் இருக்கை அன்றிக்கே, **ஆரண சாரமுமாய் இருக்கும்;** வேத ஸாரமுமாய் இருக்கும் என்றபடி. திருமந்த்ரார்த்தமிறே இதில் ப்ரதி

---

**வி : நெஞ்சுக்கு இருள் கடி தீபம்** - *நெஞ்சுக்கு இருளாவது மனத்தின் மாசாகிய அறியாமை.* **''மனன் அக மலம்''** *என்று திருவாய்மொழி (1: 1: 2) குறித்தல் காண்க. திருமங்கையாழ்வார் பனுவல் ஞானக்கலையாகையாலே அறியாமையைப்போக்கும் ஞானச் சுடர்* **விளக்காய்** *இருக்கும்.* **அடங்கா நெடும் பிறவி நஞ்சுக்கு நல்ல அமுதம்** - *மாற்றுச் செயல் ஒன்றாலும் அடங்காமல் நெடுகிச் செல்லும் பிறவியாம் நஞ்சுக்கு நல்ல அமுதம். அந்த நஞ்சை மாற்றுகைக்குரிய நச்சுத்தன்மை அற்ற அமுதம். உலக வாழ்வு என்னும் நஞ்சுக்கு மாற்றாய் அமையும் அமுதமன்றோ திருமால் திருநாமம். திருமங்கையாழ்வா ருடைய அருள் நூல்கள் உலக வாழ்க்கையினைக் கழிக்க வல்ல திருமந்திரப் பொருளை நுவல்வனவாகும்.*

**தமிழ நன்னூல் துறைகள் அஞ்சுக்கு இலக்கியம்** - *தமிழ் இலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் செம்மையான ஐவகைப் பகுதிகளோடே கூடியது. அல்லது, தமிழுக்கு எழுத்து முதலான ஐந்து இலக்கணத்தையும் அறுதி யிடும் நன்னூல் என்று ஓர் இலக்கண நூல் உண்டு; அதனைச் சொல்லிற்று என லாம். இவ்வகைத் தமிழ் இலக்கண நெறி ஐந்துக்கு.* **இலக்கியம்** - *'இலக்கண இலக்கியம்' என்றன்றோ அவர்கள் சொல்வர். அவ் இலக்கணத்திற்கு இலக்கியங் களாய் எடுத்துக்காட்டுகளாய் இருக்கும். அஃதாவது இவற்றைப் பார்த்து இலக் கணம் வகுக்கலாமாறு இருக்கும்.*

**ஆரண சாரம்** - *தமிழுக்கு இலக்கியமாய் மட்டும் இருப்பதோடு அல்லாமல் ஆரண சாரமுமாய் இருக்கும்; அஃதாவது வேதத்தின் பிழிவாய் இருக்கும்.*

பாதிப்பது. **''நாராயணா என்னும் நாமம்''** என்று உபக்ரமித்து, **''பேசுமின் திருநாமம் எட்டெழுத்தும்''** என்றும், நின்திருவெட்டெழுத்தும் **கற்று - நான் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை''** என்றும், **''இமையோர் தலைவருடைய திருநாமம் நங்கள் வினைகள் தவிர உரைமின் நமோ நாராயணம்''** என்றும், **''நர நாரணனாய் உலகத்து அறநூல் சிங்காமை விரித்தவன்''** என்றும், **''நாட்டினாய் - என்னை - காட்டினாய்''** என்றும், **''மந்திரத்தை மந்திரத்தால் மறவாது''** என்றும், **''பேராளன் பேரோதும்''** என்றும், **''நாராயணாவோ மணிவண்ணா''** என்றும் திருமந்த்ரார்த்த விசாரமேயிறே முடிய நடந்து போருகிறது. ஆகையால் 'ஆரண சாரம்' என்கிறது. ஸகல வேத ஸங்க்ரஹதயா தத்ஸாரமாயிறே திருமந்த்ரந்தான் இருப்பது.

**பரசமயப் பஞ்சுக்கு அனலின்பொறி** - பரஸமயமாகிற தூலராசிக்குக் காலாநல கணமாய் இருக்கை. வெள்ளியார் பிண்டியார் போதியார் என்றிவர் ஓதுகின்ற கள்ள நூல்களைச் செம்மைப் பனுவல் நூலாலேயிறே இவர் கழித்துத் தள்ளுவது. பரசமயக் குறும்பு அறுத்தவரிறே.

இதெல்லாம் ஆவது எதுதான் என்ன, **பரகாலன் பனுவல்களே** - மருவலர் தம் உடல் துணிய வாள் வீசும் பரகாலன் பனுவல்களே இவற்றைச் செய்து முடிக்கும். அவரும் வேண்டா; அவர் ஸ்ரீஸூக்திகளே அமையும் இந்தக் கார்யங்களைச்

---

*ஏனெனில், திருமந்திரத்தின் பொருளே இவற்றில் பேசப்படுகிறது.* **''நாராயணா என்னும் நாமம்''** *(பெ. தி. 1: 1: 1) என்று தொடங்கி,* **''பேசுமின் திருநாமம் எட்டெழுத்தும்''** *(பெ. தி. 1: 8: 9) என்றும்,* **''நின் திருவெட்டெழுத்தும் கற்று - நான் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை''** *(பெ. தி. 8 : 10 : 3) என்றும்,* **''இமையோர் தலைவருடைய திருநாமம் நங்கள் வினைகள் தவிர உரைமின் நமோ நாராயணம்''** *(பெ. தி. 6 : 10 : 9) என்றும்,* **''நர நாரணனாய் உலகத்து அறநூல் சிங்காமை விரித்தவன்''** *(பெ. தி. 10: 6 : 1) என்றும்,* **''நாட்டினாய் என்னை-காட்டினாய்''** *(பெ. தி. 8: 10 : 9) என்றும்,* **''மந்திரத்தை மந்திரத்தால் மறவாது''** *(தி. நெ. தா. 4) என்றும்,* **''பேராளன் பேர் ஓதும்''** *(பெ. தி. 7 : 4 : 4) என்றும்* **''நாராயணாவோ மணிவண்ணா''** *(சி. ம. 50) என்றும் திருமந்திரப் பொருள் பற்றிய ஆராய்ச்சியே கடைசிவரை நடந்து செல்கிறது. ஆகையால் ஆரண சாரம் என்று சொல்லப்படுகின்றன. திருமந்திரம் வேதத்தின் பிழிவாகுமோ என்றால் வேதங்கள் எல்லாவற்றின் சுருக்கம் திருமந்திரம் ஆகும். அவ்வகையால், வேதங்களின் பிழிவு அது.*

**பரசமயப் பஞ்சுக்கு அனலின் பொறி** - *பிற சமயம் ஆகிய பஞ்சுப் பொதிக்கு ஊழித் தீயாய் இருத்தல். வெள்ளியார் பிண்டியார் போதியார் என்போர் ஓதுகின்ற கள்ள நூல்களைச் செம்மைப் பனுவல் நூலாலேயன்றோ இவர் கழித்துத் தள்ளுவது. இவர் பிற சமயக் குறும்பு அறுத்தவர் அன்றோ!*

*இவ்வாறெல்லாம் திகழ்வன யாவை என்ன, 'பரகாலன் நூல்கள்' என்கிறார்.* **பரகாலன் பனுவல்களே** - *மருவலர்தம் உடல் துணிய வாள் வீசும் பரகாலன் நூல்களே இவற்றைச் செய்து முடிக்கும். அவரும் வேண்டா; அவர் அருள்மொழி*

**செய்கைக்கு என்கை. இவர் அதிகரித்த கார்யத்துக்குக் கையும் வாயும் ஒத்து இருக்கிறபடி இது ஆயிற்று.**

---

*களே அமையும் இச்செயல்களைச் செய்கைக்கு என்கிறார். இவர் மேற்கொண்ட செயலுக்குக் கையும் வாயும் ஒத்து இருக்கும் பான்மை இதுவாகும்.*[1] (3)

### 4. எம்பார் அருளிச்செய்தது

**எங்கள் கதியே! இராமா நுசமுனியே!**
**சங்கைகெடுத் தாண்ட தவராசா! - பொங்குபுகழ்**
**மங்கையர்கோன் ஈந்த மறையா யிரம்அனைத்தும்**
**தங்குமனம் நீஎனக்குத் தா.**

**ப. ரை :** **எங்கள் கதியே** - *எங்களுக்குப் புகலிடமாய் இருப்பவனே!* **இராமாநுசமுனியே** - *இராமாநுசன் என்னும் திருப்பெயரையுடைய முனிவனே!* **சங்கைகெடுத்து ஆண்ட தவராசா** - *மறை நூல்களில் எழும் ஐயங்களைப் போக்கி எல்லாரையும் அடிமைகொண்ட தவத்திலே மிக்க முனிவர்களுக்கு அரசனாய் இருப்பவனே!* **பொங்கு புகழ் மங்கையர் கோன் ஈந்த** - *மிகுந்த புகழையுடைய திருமங்கைமன்னன் அருளிச்செய்த,* **மறை ஆயிரம் அனைத்தும்** - *வேத வடிவாய் ஆயிரம் பாட்டாய் இருக்கும் பெரிய திருமொழி தொடக்கமான நூல்கள் எல்லாம்,* **தங்கும் மனம்** - *நிலைத்து நிற்கும் மனத்தை,* **எனக்கு நீ தா** - *அடியேனுக்கு நீ தருவாய்.*

**சி. கு :** *இது நேரிசை வெண்பா.*

**அவ :** **இனி, இவ்ஆழ்வாரைப் போலே பாஹ்ய குத்ருஷ்டிகளை நிரஸித்து வைதிக மார்க்கத்தை நடத்தியும், உகந்தருளின நிலங்களை உத்தரித்தும், தத்ப்ரதிபாதகமான இவர் ஸ்ரீஸூக்தியை வர்த்திப்பித்தும் போருமவரிறே உடையவர். அத்தைப் பற்ற இவ்ஆழ்வார் திவ்ய ஸூக்தியான திருமொழி ஆயிரமும் என் ஹ்ருதயத்திலே நிலை நிற்கும்படி உபகரித்து அருள வேணும் என்று எம்பெருமானாரை அர்த்திக்கிறது இதில்.**

---

**தோ :** *இனி, இவ்ஆழ்வாரைப் போலே இராமாநுசர் வேதத்திற்குப் புறம்பானவர்களையும், அதனைத் தவறாக விளக்குபவர்களையும் அழிப்பவர்; வேத நெறியை நடத்துபவர். உகந்தருளின நிலங்களைக்*[2] *காப்பவர். மேலும், இறைவனைப் பற்றிப் பேசும் திருமங்கையாழ்வார் திருமொழியை வளர்த்து வருபவர். இவற்றைக் கருத்திற் கொண்டு இவ்வெண்பாவில் எம்பார் இவ்ஆழ்வார் அருள்மொழியான திருமொழி ஆயிரமும் என் நெஞ்சிலே நிலை நிற்குமாறு உதவியருளவேண்டும் என்று இராமாநுசரை வேண்டுகிறார்.*

---

1. கை செயலையும் வாய் சொல்லையும் சுட்டும். அஃதாவது வேலாலும் நூலாலும் பகைவர்களை அட்க்குகிறவர் என்றவாறு.
2. உகந்தருளின நிலங்கள் - திருமால் எழுந்தருளியுள்ள திருக்கோயில்கள்.

வியா : **எங்கள் கதியே** - அகதிகளான எங்களுக்குக் கதியாய் இருக்கிற வரே! **இராமாநுச முனியே** - **''சதுரக்ஷரியாய்''** மோக்ஷைக ஹேதுவான திருநாமத்தை உடையருமாய், ஆத்ம ரக்ஷணத்திலே மநநம் பண்ணுமவரே! **சங்கை கெடுத்து ஆண்ட** - **''த்வதந்யஸ்ஸம்சயஸ் யாஸ்ய ச்சேத்தா நஹ்யுபபத்யதே''** என்றும் **''தத்துவ நூல் கூழ் அற்றது''** என்னும்படி வேதாந்த சாஸ்த்ரத்தை நிஸ்ஸம்சயமாகப் பண்ணி மநஸ்ஸில் ஸம்சயங்களைப் போக்கி எல்லாரையும் அடிமையாக ஆண்ட. **தவராசா** - யதிராஜா! என்றபடி. அன்றிக்கே, தவம் என்று சரணாகதி தர்மமாய், அத்தை வர்த்திப்பிக்கிற ராஜா என்றும் ஆம். ''தவ நெறி'' யிறே. **பொங்கு புகழ் இத்யாதி** - அதிஸம்ருத்தமான யசஸ்ஸை யுடைய திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வாருடைய வேத ரூபமாய் ஆயிரம் பாட்டாய் இருக்கிற பெரிய திருமொழி ப்ரபந்தம் எல்லாவற்றையும். அன்றிக்கே, **ஆயிரம் அனைத்தும்** என்று ஆயிரத்தையும் மற்றும் அவர் அனைத்து ப்ரபந்தத் தையும் என்றும் ஆம். **''தங்கும் மனம் நீ எனக்குத்தா''** - ''கண்ண நின்தனக்கும் குறிப்பாகில் கற்கலாம்'' என்கிற திவ்ய ஸூக்தியைத் தரிக்கும்படியான மநஸ்ஸைத் தந்தருள வேணும். **''குறையல் பிரான் அடிக் கீழ் விள்ளாத அன்பன் இராமாநுசன்''** என்றும், **''நீலன், தனக்கு உலகில் இனியான்''** என்றும், **''கலி மிக்க செந்நெல் கழனிக் குறையல் கலைப் பெருமான் ஒலிமிக்க**

---

வி : **எங்கள் கதியே** - *புகல்இல்லா எங்களுக்குப் புகலிடமாய் இருப்பவரே!* **இராமாநுச முனியே** - **''நான்கு எழுத்துகளாய்''** *(ஆழ்வான் முக்தகம்) வீடு பேற்றிற்கு ஒப்பற்ற வழியாய் இலங்கும் திருப்பெயரை உடையவரும்,* உயிர்களின் *ஈடேற்றத்தில் கருத்து ஊன்றியவருமாக இருப்பவரே!* **''உம்மைத் தவிர இவ் ஐயத்தை அகற்றுபவர் வேறு எவரும் இலர்''** *(கீதை 6 : 39)* என்னும் கூற்றுக்கு *ஏற்பத்* **''தத்துவ நூல் கூழ் அற்றது''**[1] *(இரா. நூ. அ. 65)* என்னுமாறு *மறை முடிபினைத் தெளிவாக விளக்கி, மனத்தில் எழும் ஐயங்களைப் போக்கி எல்லாரை யும் அடிமையாக ஆண்ட.* **தவராசா** - *துறவியர் வேந்தே! என்கிறார். அல்லது, தவம் என்பது அடைக்கல நெறியைச் சுட்டுவதாய்க் கொண்டு அதனை வளரச் செய்யும் அரசே! என்றும் பொருள் கொள்ளலாம். திருமங்கை மன்னனும் அடைக் கல நெறியினைத் தவ நெறி என்றே குறித்துள்ளார்.* **''தவநெறிக்கு ஓர் பெரு நெறியை''** *என்பது பெரிய திருமொழி (2: 5: 3).* **பொங்கு புகழ் மங்கையர் கோன் ஈந்த மறை ஆயிரம் அனைத்தும்** - *பெரிதும் தழைத்த புகழை உடையது திருமங்கை. அதற்குக் காவலராய்த் திகழ்பவர் ஆழ்வார். அவரது நூல் பெரிய திருமொழி. அது மறை வடிவாய் ஆயிரம் பாட்டாய் இருப்பது. அந்நூல் முழுவதையும் எனக் கொள்க. அல்லது,* **ஆயிரம் அனைத்தும்** *என்று கொண்டு ஆயிரத்தையும் மற்றும் அவர் அனைத்து நூல்களையும் என்றும் பொருள் கூறலாம்.* **தங்கும் மனம் நீ எனக்குத் தா** - **''கண்ண நின்தனக்கும் குறிப்பாகில் கற்கலாம்''** *(பெ. தி. 7: 10: 10) என்னும் திருமொழியைப் போற்றி வைத்துக்கொள்ள வல்ல மனத்தை நீ எனக்குத் தரவேண்டும்.* **''குறையல் பிரான் அடிக் கீழ் விள்ளாத அன்பன் இராமாநுசன்''** *(இரா. நூ. அ. 2) என்றும்,* **''நீலன் தனக்கு உலகில் இனியானை''** *(இரா. நூ அ. 17) என்றும்,* **''கலி மிக்க செந்நெல் கழனிக் குறையல் கலைப் பெருமான் ஒலிமிக்க பாடலை உண்டு தன் உள்ளம் தடித்து''** *(இரா. நூ. அ. 88) என்றும்*

---

1. தத்துவநூல் - வேதம். கூழ் - ஐயம்.

**பாடலை உண்டு தன் உள்ளம் தடித்து''** என்றும், எம்பெருமானாரைச் சொல்லக் கடவதிறே. அத்தாலே அவரை அபேக்ஷிக்கிறது.

---

*எம்பெருமானாரைப் போற்றிக் கூறுவார் அன்றோ? அதனாலே அவரை வேண்டுகிறார்.* **(4)**

5. *சோமாசியாண்டான் அருளிச்செய்ததாகச் சொல்லுவர்*

**மாலைத் தனியே வழிபறிக்க வேணுமென்று**
**கோலிப் பதிவிருந்த கொற்றவனே! - வேலை**
**அணைத்தருளும் கையால் அடியேன் வினையைத்**
**துணித்தருள வேணும் துணிந்து.**

**ப. ரை :** மாலை - *திருமாலை,* **தனி வழியே பறிக்க வேணும் என்று** - *தனி வழியிலே கொள்ளை கொள்ளவேண்டும் என்று,* **கோலி** - *திட்டம் வகுத்து,* **பதிவு இருந்த கொற்றவனே** - *அரச மரத்தின் அடியிலே பதுங்கிக் கொண்டிருந்த அரசனாகிய திருமங்கை மன்னனே!* **வேலை அணைத்து அருளும் கையால்** - *வேற் படையை அணைத்துக்கொள்ளும் திருக்கையாலே,* **அடியேன் வினையை** - *அடியவனாகிய என்னுடைய தீவினைகளை,* **துணிந்து துணித்து அருளவேணும்**- *மனவுறுதி கொண்டு வெட்டிக் களைந்தருள வேண்டும்.*

**சி. கு :** *இது நேரிசை வெண்பா.*

**அவ :** இதில், ப்ரபந்தாந்வய ப்ரதிபந்தகங்களை ப்ரபந்த கர்த்தாவே சேதிக்க வேணும் என்கிறது.

**வியா :** **மாலைத் தனியே வழி பறிக்க வேணும் என்று கோலி** - ஸர்வாதிகனைத் தனிவழியிலே வழி பறிக்க வேணும் என்று உத்யோகித்து. தத்அநுகுணமாகத் திருவரசின் அடியிலே. **பதிவு இருந்த** - மேலே கோடி வைத்துப் பார்ப்பித்த. **கொற்றவனே** - ராஜாவே! பறிகொடுக்குமவன் தெய்வத்துக்கு அரசு; பறிக்குமவர் ஆலி நாட்டரசு; பறிக்கும் இடம் மரங்களுக்கு அரசு இடம்.

---

**தோ :** *இதில் நூல் கற்றற்கு இடைச்சுவராய்*[1] *இருப்பவற்றை நூலாசிரியரே கழித்துத் தரவேண்டும் என்று வேண்டப்படுகிறது.*

**வி :** மாலைத் தனியே வழிபறிக்க வேணும் என்று கோலி - *எல்லார்க்கும் மேலானவனைத் தனிவழியிலே வழி பறிக்க வேண்டும் என்று அடியிட்டு.*[2] *அதற்குத் தக்கவாறு அரசமரத்தின் அடியிலே.* **பதிவு இருந்த** - *மேலே கோடி வைத்துப் பார்க்கும்படி செய்த.* **கொற்றவனே** - *அரசே! பறி கொடுப்பவன் தெய்வத்துக்கு அரசு; பறிப்பவர் ஆலிநாட்டு அரசு; பறிக்கும் இடம் மரங்களுக்கு*

---

1. இடைச்சுவர் - தடை. 2. அடியிடுதல் - முயற்சி மேற்கொள்ளுதல்.

இப்படி ஆயிற்றுப் பறிக்கப் பதிவு இருந்தபடி. **வேலை அணைத்தருளும் கையால்** - வெட்டிப் பறிக்க எடுத்து அணைத்த வேலாலே. **அடியேன் வினையை** - "அடியேன் நான்" என்று அவனுக்கு அடிமையான உமக்கு அடியேனான அடியேன் வினையை. உமக்கு அடியோமாகைக்கும் வினைக்கும் என்ன சேர்த்தி உண்டு? "என் பெருவினையைக் கிட்டிக் கிழங்கொடு தன் அருள் என்னும் ஒள்வாள் உருவி வெட்டிக் களைந்த இராமாநுசன்" என்கிற படியே. **அடியேன் வினையை - துணிந்து - துணித்தருள வேணும்** - வழிபறிக்கத் துணிந்தாற் போலே வினையைத் துணிக்கத் துணிய வேணும். என் வினையைப் போக்க வேணும் என்று நீர் துணிந்தால் ஆயிற்றுப் போவது. "பண்டை வல்வினை பாற்றி அருளினான்" என்னும்படி பண்ண வேணும்.

தனியன் வியாக்கியானம் ஸம்பூர்ணம்.

---

*அரசு இருக்கும் இடம். இப்படி அமைந்தது பறிக்கப் பதுங்கி இருந்தபடி.* **வேலை அணைத்தருளும் கையால்**-*வெட்டிப் பறிக்க எடுத்து அணைத்த வேலாலே.* **அடியேன் வினையை - "அடியேன் நான்"** *(பெ. தி.11: 8: 7) என்று இறைவனுக்கு அடிமையான உமக்கு அடியவனாய் இருக்கும் அடியேனுடைய வினையை. "ஆழ்வாராகிய உமக்கு நான் அடியேனாகைக்கும் என் வினைக்கும் என்ன சேர்த்தி[1] உண்டு?" என்று நீர் வினவில் "நீர் என் வினையைப் போக்க வேண்டும்" என்கிறார்.* **"என் பெருவினையைக் கிட்டிக் கிழங்கொடு தன் அருள் என்னும் ஒள்வாள் உருவி வெட்டிக் களைந்த இராமாநுசன்"** *(இரா. நூ. அ. 93) என்பர். அது போல நீவிரும் அடியேன் வினையையும் துணிந்து துணித்தருளவேண்டும் என்கிறார்.* **அடியேன் வினையை - துணிந்து - துணித்தருள வேணும்** - *வழி பறிக்கத் துணிந்தாற் போலே வினையைத் துணிக்கத் துணிய வேண்டும். என் வினையைப் போக்க வேண்டும் என்று நீர் துணிந்தால்தான் அது போகும். நம் மாழ்வாரைக் குறித்து மதுரகவியாழ்வார்* **"பண்டை வல்வினை பாற்றி அருளி னான்"** *(க. நு. சி. 7) என்று சொல்லுவது போலே யானும் உம்மைக் குறித்துச் சொல்லுமாறு பண்ண வேண்டும்.* (5)

*தனியன் விளக்கவுரை நிறைவு.*

---

1. சேர்த்தி - தொடர்பு.

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# பெரிய திருமொழி வியாக்கியானம்

## பிரவேசம்

இவ்ஆழ்வாராகிறார், ஆத்மாவை வெய்யிலிலே வைத்து உடம்பை நிழலிலே வைத்துப் போந்தார் ஒருவர் ஆய்த்து. ஆத்மாவை வெய்யிலிலே வைக்கையாவது, பகவத் விஷயத்தில் முதலில் இழியாமை. உடம்பை நிழலிலே வைக்கையாவது, அநாதி காலம் விஷய ப்ரவணராய் அதுவே யாத்ரையாய்ப் போருகை. நிழலாவது தான் பகவத் விஷயமிறே.

**வாஸுதேவ தருச் சாயா** - பார்த்த பார்த்த இடம் எல்லாம் நிழலாய் இருக்கை. எங்கும் ஒக்க நிழல் செய்து,[1] இந்நிழலில் அல்லது புறம்பு ஒதுங்க நிழல் இன்றிக்கே இருக்கை. **நாதிசீதா நகர்மதா** - அற வவ்வல் இடுதல், வேர்த்தல் செய்யாது இருக்கை. **நரகாங்காரசமநீ** - தானே

---

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# பெரிய திருமொழி விளக்கவுரை

## உரைப்பாயிரம்

*இவ்ஆழ்வார் உயிரை வெயிலிலேயும் உடம்பை நிழலிலேயும் வைத்துச் சென்றவர் ஆவர். உயிரை வெயிலிலே வைத்தலாவது இறைவனிடம் முதலிலே ஈடுபடாமல் இருப்பது. உடம்பை நிழலிலே வைத்தலாவது நெடுங்காலம் சிற்றின் பத்தில் இழிந்தவராய் அதுவே பணியாய்ச் செல்வது.[2] உண்மையான நிழல் இறை வனே ஆவான்.* **"வாசுதேவன் என்னும் மரத்தின் நிழல் அதிகக் குளிரும் அற்றது; மிகுந்த வெப்பமும் அற்றது; நரகத் தீக்கொழுந்தின் வெம்மையை ஆற்றுவது. அஃது எக்காரணத்தினால் எல்லா மனிதர்களாலும் அடையப்படுவது இல்லை?"** *என்கிறது கருடபுராணம் (222).*

**வாசுதேவன் என்னும் மரத்தின் நிழல்** - *பார்த்த பார்த்த இடமெல் லாம் நிழலாய் இருக்கிறது. இம்மரம் எங்கும் ஒக்க நிழலை உண்டாக்கி யுள்ளது. இந்நிழலில் அன்றிப் புறம்பு ஒதுங்க நிழல் இல்லை.* **அதிகக் குளிரும் அற்றது; மிகுந்த வெப்பமும் அற்றது** - *குளிரால் பெருநடுக்கம் செய்தலும் வெப்பத்தால் வேர்த்தலும் செய்யாமல் இருப்பது.* **நரகத் தீக் கொழுந்தின் வெம்மையை ஆற்றுவது** - *மனிதன் தானே தேடிக்கொண்ட*

---

1. நிழல்செய்த. 2. பணியாய்ச் செல்லுதல் - தொழிலாய் இருத்தல்.

ஏறட்டுக்கொண்ட நரகமாகிற பெருநெருப்பையும் அவிக்கவற்று. ஸா கிமர்த்தம் ந ஸேவ்யதே - ப்ராப்தம் அன்று என்ன ஒண்ணாது; துஃக்க நிவர்த்தகம் அன்று என்ன ஒண்ணாது; "வயிறு நோவாநின்றது, சவி" என்பாரைப் போலே அநிச்சை சொல்லிக் கைவாங்கும் இத்தனையிறே உள்ளது. அர்த்தத்தில் மாறாட்டம் இல்லை; ப்ரதிபத்தியில் மாறாட்டமே உள்ளது. இந்நிழலிலே இருந்துவைத்து,[1] "ஒதுங்கிற்றிலேன்" என்பாரைச் செய்யலாவது இல்லையே.

"இவர் கண்ணால் காண்கிற விஷயங்களுக்கு அவ்வருகு அறியாது இருக்கிறாராகில், நம்மையும் அவ்விஷயங்களோபாதி இவர் கண்ணுக்கு இலக்கு ஆக்கினால் விரும்பாது ஒழியாரிறே[2] என்று பார்த்து, உகந்தருளின நிலங்களிலே வந்து ஸந்நிதி பண்ணி, இவரை விஷயீகரித்து, தன் படிகளை அடையக் காட்டிக்கொடுத்து, தன்னால் அல்லது செல்லாதபடி பண்ணி, இவரை அநுபவிப்பித்து, இங்கே இருந்தே பரமபதத்தில் உள்ளார்படி ஆம்படி பண்ணி, அத்தேச ப்ராப்தியையும் இவர்க்குப் பண்ணிக்கொடுத்தான் என்கிறது - இப் ப்ரபந்தங்கள் எல்லாவற்றாலும்.[3]

---

நரகப் பெருநெருப்பையும் அணைக்க வல்லது. அஃது எக்காரணத்தினால் மனிதர்களால் அடையப்படுவது இல்லை? - இறைவனாகிய இந்நிழல் அடைவதற்கு உரியது அன்று என்று சொல்ல முடியாது; இடர் களைவது அன்று என்று கூற ஒண்ணாது. எனினும், "எனக்கு வயிறு வலிக்கிறது, நீ எவ்வளவு வேண்டுமானாலும் வைதுகொள்" என்று பிடிவாதமாக உண்ண மறுக்கும் குழந்தை போலே, தங்கள் விருப்பமின்மையைச் சொல்லி விலகிச் செல்வதே மக்களிடம் உள்ளது. பொருளில் யாதும் மாறுபாடு இல்லை. ஆனால் அதனை உணர்ந்து கொள்வதிலேயே மயக்கம் அனைத்தும் உள்ளது. இந்நிழலில் 'ஒதுங்கமாட்டேன்' என்று இருப்பவர்களை யாது செய்ய ஒல்லும்?[4]

இவ்ஆழ்வார் கண்ணால் காணும் பொருள்களைத் தவிரப் பிற பொருள்களை அறியாதவராக இருக்கிறார். இவரது நிலை இதுவானால், "நம்மையும் அப்பொருள்களே போல இவர் கண்ணுக்கு இலக்கு ஆக்குவோம்; அப்போது இவரால் விரும்பாமல் ஒழிய ஒண்ணாது அன்றோ!" என்று இறைவன் கருதினான். இம்மண்ணுலகில் உகந்தருளின நிலங்களிலே வந்து தங்கினான்; இவரைக் கடைக்கணித்துத் தன் படிகளை அடையக் காட்டிக்கொடுத்தான். இவருக்குத் தன்னை விடுத்து வாழ இயலாதபடி செய்து, தன் பெருமைகளை ஊட்டுவித்தான்; இந்நிலவுலகில் இருக்கும்போதே திருநாட்டிலுள்ளார் படி[5] இவருக்கு ஆகும்படி பண்ணினான்; அந்நாட்டினைச் சேர்தலையும் இவர்க்குச் செய்து கொடுத்தான். இவையே இவர்தம் நூல்கள் எல்லாவற்றின் உள்ளீடும் ஆகும்.[6]

---

1. இந்நிழலிலே ஒதுங்கி. 2. ஒழியவொண்ணாதிறே. 3. எல்லாவத்தாலும்.

4. 'பொருளில் யாதும்........ஒல்லும்' என்பதில் ஆழ்வாரின் முன்னைய நிலை குறிக்கப்படுகிறது.

5. படி - இயல்பு; தன்மை. 6. "இவ் ஆழ்வார்.......உள்ளீடாகும்" என்பதில் இறைவன் ஆழ்வாரைத் திருத்திய முறை கூறப்படுகிறது.

## ஒப்புமைப் பகுதி

**வாசுதேவனாகிய மரம்**

*'' காதம் பலவும் திரிந்துழன் றேற்கங்கோர் நிழலில்லை நீரில்லைஉன் பாத நீழலல்லால்''*

*'' உன்பாதநிழல் இத்யாதி'' - 'அவனடி நிழல் தடம்' (தி.வா. மொ. 10:1:2) என்னக் கடவதிறே. வாசுதேவதரூச்சாயை ஒழிய வேறு நிழல் உண்டோ; மூச்சு விடுகைக்கு ஓர் இடம் காண்கிறிலேன், உன் திருவடிகளை ஒழிய''.*

*பெரி. தி. 5:3:4 பெ. உரை.*

*[வாஸுதேவ தருச்சாயை - வாசுதேவனாகிய மரத்தின் நிழல்]*

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமொழி

## முதல்பத்து - முதல்திருமொழி - வாடினேன்

### 1

**வாடினேன்; வாடி வருந்தினேன் மனத்தால்;**
**பெருந்துயர் இடும்பையில் பிறந்து**
**கூடினேன்; கூடி இளையவர் தம்மோடு**
**அவர்தரும் கலவியே கருதி**
**ஓடினேன்; ஓடி உய்வதோர் பொருளால்**
**உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து,**
**நாடினேன்; நாடி நான்கண்டு கொண்டேன்**
**நாராய ணாஎன்னும் நாமம்.**

ப. ரை : பெருந்துயர் இடும்பையில் பிறந்து - *மிகுந்த துன்பத்துக்கு இடமாய், துன்பங்களுக்கு எல்லாம் காரணமாய் இருக்கும் உடலில் உண்டாகி,* **கூடினேன்** - *உடல் என்றும் உயிர் என்றும் பகுத்து அறிய முடியாதவாறு ஒன்றாய்ப் பொருந்தினேன்;* **கூடி** - *இப்படி நெடுங்காலம் பொருந்தியிருந்து,* **இளையவர் தரும் கலவியே கருதி** - *இளம் பெண்டிர் தருகின்ற கூட்டத்தையே நினைந்து,* **அவர் தம்மோடு ஓடினேன்** - *அவர்கள் போன அடிவழியே பின்தொடர்ந்து ஓடினேன்;* **ஓடி** - *இப்படி ஓர் இடத்திலும் தங்காமல் பொருள்தோறும் இன்பத்தைத் தேடி ஓடி,* **மன தால் வருந்தினேன்** - *சிற்றின்ப நாட்டம் கொண்ட மனத்தால் துன்பப்பட்டேன்;* **வாடினேன்** - *வாட்டங் கொண்டேன்;* **வாடி** - *அவ்வாட்டத்தை உடையனாய் இருந்து,* **உய்வது ஓர் பொருளால்** - *உய்வதற்குக் காரணமான ஒப்பற்ற இறைவன் அருளால்,* **உணர்வெனும் பெரும் பதம் தெரிந்து** - *அறிவாகிய பெரிய இடத்தை இருந்தபடியே அறிந்து,* **நாடினேன்** - *நன்மை தீமைகளை ஓர்ந்தேன்;* **நாடி** - *ஓர்ந்து,* **நான்** - *திருப்பெயர் சொல்வதற்கும் தகுதியற்ற நான்,* **நாராயணா என்னும் நாமம்** - *நாராயணா என்னும் திருப்பெயரை,* **கண்டுகொண்டேன்** - *காணப்பெற்றேன்.*

**சி. கு :** *இத்திருமொழி விளம் மா விளம் மா விளம் விளம் மா என்னும் வாய்பாட்டில் அமைந்த எழுசீர் ஆசிரிய விருத்தம்.*

**வியா : முதற்பாட்டு :** இவர்பக்கல் அத்வேஷமும் விஷயங்களினுடைய லாகவமுமே இவரை மீட்கைக்குப் பரிகரமாகவும், இவருடைய ரஸிகத்வமே தன்

---

வி : முதற்பாட்டு : *பெருமான் இவரிடத்தில் கண்ட வெறுப்பின்மையை யும் பொருள்களிடத்தில் உள்ள இழிவையும் இவரைச் சிற்றின்ப வாழ்க்கையிலிருந்து மீட்பதற்குக் கருவியாகக் கொண்டான்; இவரது சுவையுணர்வைத் தன்*

---

1. 3 : 7 திரிந்து.

வாசி அறிகைக்குப் பற்றாசாகவும், ''அநாதி காலம் பண்ணின பாபாம்சத்தை நம் க்ருபைக்கு விஷயம் ஆக்குவோம்'' என்று பார்த்து, இவர் விஷயங்களின் வாசி அறிந்து தன்னை அறிகைக்குக் கிழிச்சீரையோடே தநத்தைக் கொடுப்பாரைப் போலே தனக்கு வாசகமான திருமந்த்ரம் முன்னாகத் தன் ஸ்வரூப ரூப குண விபூதிகளை அடங்கக் காட்டிக்கொடுக்கக்[1] கண்டு அநுபவித்து, ''அயோக்யனான என்னை அதுதானே ஹேதுவாக விஷயீகரித்தான்'' என்று க்ருதஜ்ஞராகையாலே ஒருக்கால் சொன்னத்தை ஒன்பதின்கால் சொல்லிக் கூப்பிடுகிறார். பகவத் விஷயத்தில் நேர் கொடு நேர் செய்யலாவது ஒன்று இல்லை; செய்ய வேண்டுவதும் ஒன்று இல்லை; பண்ணின உபகாரத்துக்குக் க்ருதஜ்ஞராம் இத்தனையே வேண்டுவது, அசித் வ்யாவ்ருத்தி தோற்ற. நம்மாழ்வார், ஸர்வேஶ்வரனை ஸாக்ஷாத்கரித்த அநந்தரம் தாம் பெற்ற பேறு அறியாதே, ''**இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை**'' என்று கீழ்நின்ற நிலையை அநுஸந்தித்தாப் போலே, இவரும் பகவத் விஷயீகாரம் பிறந்த பின்பு தாம் கீழ் நின்ற நிலையை எல்லாம் அநுஸந்தித்து 'வாடினேன்' என்கிறார்.

**வாடினேன்** - கொம்பை இழந்த தளிர் போலே; ஆஶ்ரயத்துக்கு அழிவில்லாமையாலே. இன்னம்[2] நோக்குவோம் என்னில் நோக்குகைக்கு யோக்யதை உண்டு

---

வேறுபட்ட தன்மையை அறிவதற்குப் பற்றாசாகக்[3] கண்டான். ''நெடுங்காலமாக இவர் இழைத்த தீவினைகளை நம் அருளுக்கு இலக்கு ஆக்குவோம்'' என்று கோலினான். இவர் பொருள்களின் உயர்வு தாழ்வு அறிந்து தன்னை அறிவதற்காகக் கிழிச்சீரையோடே[4] பொன்னைக் கொடுப்பாரைப் போலே தன்னைக் குறிப்பதான திருமந்திரத்தை முதலில் தந்து, தன் இயல்பு, உருவம், பண்பு, உடைமை ஆகியவற்றை எல்லாம் காணும்படியாகச் செய்தான். அவற்றைக் கண்டு இன்புற்றுத் ''தகுதியற்றவனான என்னை அத்தகுதியின்மையே பற்றாசாக ஆட்கொண்டான்'' என்று நன்றி பாராட்டுகிறார். ஆகையால் ஒருகால் சொன்னதை ஒன்பதின்கால் சொல்லிக்[5] கூப்பிடுகிறார். ஏனெனில், இறைவன் திறத்தில் நாம் நேருக்குநேர் செய்யக்கூடிய கைம்மாறு ஒன்று இல்லை; செய்ய வேண்டுவதும் ஒன்று இல்லை. ஆதலின், நாம் அறிவற்ற பொருளினின்றும் வேறுபட்டவர் என்பது புலப்பட அவன் பண்ணின உதவிக்கு நன்றியுடையராய் இருத்தலே வேண்டுவது. நம்மாழ்வார் இறைவனைத் தம் கண்ணெதிரில் கண்டவுடன், தாம் பெற்ற பேறு அறியாமல் ''**இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை**'' (தி. வி. 1) என்று தம் முந்தைய வாழ்க்கையை நினைவு கூர்ந்தார். அதுபோல, இவரும் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற பின்பு தாம் முன்பு இருந்த நிலைகளை எல்லாம் நினைந்து 'வாடினேன்' என்கிறார்.

**வாடினேன்** - கொம்பை இழந்த தளிர்போலே துவண்டேன். உயிர் ஆகிய பற்றுக்கோட்டுக்கு[6] அழிவில்லாமையாலே 'உலர்ந்தேன்' என்று சொல்லாமல் 'வாடினேன்' என்கிறார். முற்றும் அழியாமையால், இனியும் காப்போம் என்று

---

1. காட்டிக்குடுக்க. 2. இன்னும்.
3. பற்றாசு - காரணம்; கருவி. 4. கிழிச்சீரை - பொன்னை முடித்துவைக்கும் பட்டுத்துணி
5. ஒருகால் சொன்னதை ஒன்பதின்கால்; சொல்வது - ஒருமுறை சொன்னதையே மீட்டும் பலமுறை சொல்வது. 6. பற்றுக்கோடு - சார்பு.

என்கை. "அநந்யா ராகவேணாஹம்" என்கிற பிராட்டியோடு ஒத்த ப்ராப்தி ஸகல ஆத்மாக்களுக்கும் உண்டான பின்பு இப் ப்ராப்தியை உணர்ந்தால் அநாதி காலம் இழந்தவர்க்கு 'வாடினேன்' என்னத் தட்டு இல்லையிறே.

**யஶ்ச ராமம் ந பஶ்யேத்து** - ராமம் என்கிறது, கண்ணுக்கு வகுத்த விஷயத்தை; காணாது இருக்கிறான் யாவன் ஒருவன். **யஃ**-எத்தனையேனும் உயர்ந்தவனாகவும் ஆம். **து** - இது தப்பினாலும், தப்பாதது தப்பினால் வருமது இவ்வளவு அன்று என்கைக்காக விசேஷிக்கிறது. **யஞ்ச ராமோ ந பஶ்யதி** எத்தனையேனும் சிறியாரும் இவர் கண்பார்வைக்கு இலக்காகாதார் இல்லை. **யம்** - எத்தனையேனும் சிறியன் என்கிறது, எத்தனையேனும் சிறியாரிறே இவர் கண்ணிற் பார்வைக்கு இலக்காவார்.

"யாரும்ஓர் நிலைமையன் எனஅறிவு அரியஎம் பெருமான்,
யாரும்ஓர் நிலைமையன் எனஅறிவு எளியஎம் பெருமான்."

---

*கருதினால் அதற்குத் தகுதி உண்டு என்கிறார்.* "இராமனோடு பிரிக்க ஒண்ணாதவாறு ஒன்றியவள் யான்" *(ரா. ஸு. 21:16) என்கிறாள் சீதாபிராட்டி. பெருமாளிடத்தில் அப்பெருமாட்டிக்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவு உரிமை எல்லா உயிர்க்கும் உண்டு. அப்படி இருத்தலின் அவ்உரிமையை உணர்ந்தால் நெடுங்காலம் இழந்தவர்களுக்கு 'வாடினேன்' என்று கூறத் தடையில்லை அன்றோ!*

*இவர்தாம் இப்படித் தம்மைத் தாமே 'வாடினேன்' என்று* இகழ்ந்து கொள்ளுதல் *தகுமோ? எனில், தகும்.* "எவன் இராமனைக் காணாமல், இருக்கிறானோ அவனும் மற்றும் எவனை இராமன் காணாமல் இருக்கிறானோ அவனும் உலகில் இகழப்பட்டவராய் இருக்கின்றனர். அவர்கள் தம்மையே தாம் இகழ்ந்து கொள்வர். *(ரா. அ. 17:24) என்பது வால்மீகி கூற்று.*

எவன் இராமனைக் காணாமல் இருக்கிறானோ அவன் - *கண்ணுக்கு வகுத்த பொருளைக் காணாது இருப்பவன் எவன் ஒருவன்.* எவன் - *அந்த ஒருவன் எவ்வளவு உயர்ந்தவனாகவும் இருக்கலாம்.* மற்று - *இப்படி ஒருவன் தான் பெருமானைப் பார்ப்பது தப்பினாலும், தப்பாத அப்பெருமானுடைய அருள்நோக்கம் தப்பினால் வரும் துயரம் இம்மட்டன்று; மிக்கது என்பதனைக் காட்ட வந்தது.* எவனை இராமன் காணாமல் இருக்கிறானோ - *எவ்வளவுதான் சிறியராயினும் இராமன் பார்வைக்கு இலக்கு ஆகாமல் இருப்பார் இல்லை.* எவனை - *எவ்வளவுதான் சிறியராயினும் என்பதற்குக் கருத்து மிகவும் சிறியவர்களே இராமன் கண் பார்வைக்கு இலக்கு ஆவர் என்பதாம்.*

"யாரும்ஓர் நிலைமையன் எனஅறிவு அரியஎம் பெருமான்
யாரும்ஓர் நிலைமையன் எனஅறிவு எளியஎம் பெருமான்"
(*தி. வா. மொ. 1: 3: 4*)

*என்பர் நம்மாழ்வாரும்.*

ப்ரஹ்மாதிகளுடைய ஜ்ஞாநத்துக்கும் அவிஷயமாய் இருக்கும். ஓர் இடைச் சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்து இருக்கும். எத்தனையேனும் உயர்ந்த வனாகிலும் பெருமாளுடைய ஒருநாளைப் புறப்பாடு காணான் ஆகில் அவன் பெரியன் அல்லன்; எத்தனையேனும் சிறியனானவன் பக்கலிலும் தப்பாது அவருடைய பார்வை; தப்புகிறான் யாவன்ஒருவன், அவன் அவஸ்துக்களோ டும் எண்ணப்படான்; எண்ணப்படாமையிலே எண்ணப்படும். எல்லாரும் நிந்தித்து, ''சீ! சீ!'' என்னப்படும். இவனை நிந்திப்பார் வஸிஷ்டாதிகள் துடக்கமானார் நால்வர் இருவரோ என்னில், **நிந்திதஸ் ஸவஸேல் லோகே** - லோகே - நிந்திதः இவனை நிந்திக்கைக்கு உரியரல்லாதார் இல்லை. விஷய ப்ரவணனானவன், இப்போது பழியாய் மேல் நரகமாய் இருக்கச்செய்தே, தான் ''நல்லது செய்கிறோம்'' என்று இருக்குமிறே. அப்படி தான் ''நல்லது செய்கிறோம்'' என்று இருக்குமோ என்னில், **ஸ்வாத்மாப் யேநம் விகர்ஹதே** - தானும் தன்னை நிந்தித்துக்கொள்ளும். திருக்கைத் தலம் இழந்தவன் ''இற்றைப் புறப்பாடு காணப்பெறாத நாம் கர்ப்பூரமும் எலுமிச்சங்காயும்[1] பெற்றோமாகில் முடிந்து பிழைக்கலாய்த்து என்று இருக்குமிறே.

---

பெருமான் பிரமன் முதலானோர் அறிவுக்கும் புலப்படாதவனாய்க் கைகழிந்திருப்பான்;[2] ஆனால் ஓர் இடைச்சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்திருப்பான்.[3] எவ்வளவுதான் உயர்ந்தவனாகிலும் பெருமா ளுடைய ஒருநாளைப் புறப்பாடு காணானாகில் அவன் பெரியன் அல்லன்; எவ்வளவுதான் சிறியவனிடத்தும் தப்பாதது அவனுடைய பார்வை. எவன் ஒருவன் அவன் பார்வைக்குத் தப்புகிறானோ அவன் பொருளல்ல வற்றோடும் சேர்த்து எண்ணப்படமாட்டான்; எண்ணப்படாமையிலே எண்ணப்படுவான். எல்லாராலும் இகழ்ந்து ''சீ! சீ!'' என்று தள்ளப்படு வான். அவனை இகழ்வார் வசிட்டர் தொடக்கமான உயர்ந்தார் சிலரோ என்னில், அன்று; எல்லாராலும் இகழப்படுகிறான் என்கிறார். **அவன் உலகில் இகழப்பட்டவனாய் இருக்கிறான்** - அவனை இகழ்வதற்கு உரியர் அல்லாதார் இல்லை. சிற்றின்பத்தில் திளைப்பவன் தன் செயல் இம்மையில் பழியாய், மறுமையில் நரகம் புகுதற்கு உடலாய் இருந்த போதிலும், தான் ''நல்லது செய்கிறோம்'' என்று இருப்பான். அப்படி அவனும் ''நல்லது செய்கிறோம்'' என்று இருப்பானோ என்னில், இருக்க மாட்டான். **அவனும் தன்னை இகழ்ந்துகொள்வான்** - அஃதாவது, தானும் தன்னை இகழ்ந்துகொள்வான். பெருமாளைத் திருக்கைத்தலத்தில் எழுந்தருளச் செய்யும் காட்சியினைக்[4] காணாமல் இழந்தவன், ''இன்றைய புறப்பாடு காணப்பெறாத நாம் கருப்பூரமும் எலுமிச்சங்கா யும் கிடைத்தால் தின்று இறந்து உய்வு அடையலாம் என்றன்றோ இருப்பான்.

---

1. எலும்பிச்சம் பழமும்.
2. கைகழிந்திருத்தல் - தொலைவில் இருத்தல். 3. கைபுகுந்திருத்தல் - அண்மையில் இருத்தல்.
4. திருக்கைத்தலக் காட்சியாவது அருச்சகர்கள் அரங்கநாதனை ஆடை அணிகலன்கள் நிரம்ப இல்லாமல் கையிலே ஏந்திவந்து எல்லோருக்கும் காட்சிதருதல்.

ஒருநாளைப் புறப்பாடு இழந்தார் வார்த்தை இதுவானால், அநாதி காலம் இழந்தவர்க்கு 'வாடினேன்' என்று அல்லது வார்த்தை இல்லையிறே. 'வாடினேன்' என்கிற இதுதான் எவ்அவஸ்தையைப் பற்றிச் சொல்லுகிற வார்த்தை? விஷய ப்ரவணராய்ப் போந்த போது அவற்றை[1] அநுபவித்துக் களித்துப்போருகையாலே வாட்டம் இல்லை. ஸ்வரூப ஜ்ஞாநம் பிறந்து பூர்வ வ்ருத்தத்தை அநுஸந்தித்த போதை வார்த்தை. ப்ராப்தி ஸமயத்திலிறே பூர்வ வ்ருத்தத்தை ஸ்மரியாது ஒழிவது. "நோபஜநம் ஸ்மரந்" என்னும் அளவும்[2] வந்தது இல்லையிறே. ஜ்ஞாந லாப வேளையாகையாலே பூர்வ வ்ருத்தம்தான் இவர்க்கு ப்ரத்யக்ஷம் போலேயிறே தோற்றுகிறது.

**வாடி** - என்கிற இவ்அநுபாஷணம், இரண்டு இடத்திலும் பொருள் பெற்றுக் கிடக்கிறது. அநாதி காலம் இவ்இழவு ப்ரவ்ருத்தமாய்ப் போந்தது என்றும் மேலே ஓர் அநர்த்தத்தை விளைத்தது என்றும் தோற்றுகிறது. விஷய ப்ராவண்யம் காதாசித்கமாய் அநுதாபம் பிறந்து மீளுகை அன்றிக்கே அநாதி காலம் இதுவே யாத்ரையாய்ப் போந்தது என்றும் இவ்வளவு அன்றிக்கே இதுக்குமேலே விளைந்தது ஓர் அநர்த்தத்தைச் சொல்ல ஒருப்பட்டமையும் தோற்று

---

*பெருமாளின் ஒருநாளைய புறப்பாட்டினைக் காணாது இழந்தவன் பேச்சு இதுவாயின், நெடுங்காலமாக இழந்தவர்க்கு 'வாடினேன்' என்பதல்லது வார்த்தை இல்லையல்லவா! 'வாடினேன்' என்னும் இதுதான் ஆழ்வாரின் எந்நிலையைக் குறித்துச் சொல்லுகிறது? சிற்றின்பத்தில் மூழ்கியவராய் இருந்தபோது அவ் இன்பப் பொருள்களைத் துய்த்துக் களித்துச் சென்றார். ஆகையாலே அப்போது வாட்டம் இல்லை. இறைவனிடத்தில் அண்டிய பின்பு இயல்பாகவே வாட்டம் இல்லையாகிறது. எனவே, தம்மைப் பற்றிய மெய்யறிவு பிறந்து தம் முன்னைய செயல்களை எண்ணிய நிலையைக் குறிப்பது இவ்வாக்கு. "தம்மைப் பற்றிய தெளிவு பிறந்த பின்னும் தம் கடந்த கால வாழ்க்கையைப் பற்றிய எண்ணம் இவர்க்கு ஏன் எழுகிறது?" என்று வினவினால் ஒருவன் பேற்றை அடையும் காலத்தில்தான் தன் முன்னைய வாழ்க்கையை நினையாது போகிறான். "மக்களுக்கு அருகிலிருக்கும் தன் பழைய உடலை முத்தன் நினைப்பதும் இல்லை" (சாந். 8: 12: 3) என்னும் நிலையும் இப்பொழுது ஆழ்வார்க்கு வந்து சேரவில்லை. இது மெய்யறிவு கிட்டும் வேளை. ஆகையாலே அவருக்குத் தம் பழைய வாழ்க்கை கண் எதிரே காண்பது போலே தோற்றுகிறது.*

*வாடி - 'வாடினேன்' என்று கூறிப் பின்னும் வாடி என்கிறார். 'வாடி' என்பது இரண்டு இடங்களிலும் பொருளுடையதாய் அமைகிறது. நெடுங்காலம் இவ்இழவு தொடர்ந்து வந்தது என்றும், பின்னும் ஒரு கேட்டினை விளைத்தது என்றும் புலப்படுத்துகிறது. அஃதாவது, சிலகாலம் சிற்றின்ப நுகர்ச்சியாய்ப் பின்பு அதுகுறித்துக் கழிவிரக்கம் பிறந்து மீளுவதாய் ஆகாமல் நெடுங்காலம் இதுவே தமக்குப் பணியாய்த் தொடர்ந்தது என்பதனையும், இவ்வளவோடு அமையாமல் இதற்குமேல் தமக்கு விளைந்ததொரு கேட்டினை வெளிப்படுத்த*

---

1. அவைத்தை. 2. அளவில்.

கிறது. மேல் விளைந்த அநர்த்தம்தான் ஏது என்னில், **வருந்தினேன் மனத்தால்** - மாநஸமான க்லேசத்தை அநுபவித்துப் போந்தேன். இந்த்ரியங்கள் விஷயங்களிலே ப்ரவணமாய், அவற்றை[1] அநுபவிக்கக் கோலி அவற்றை லபியாமையாலும், லபித்தாலும் அவற்றில்[2] அநுபவிக்கலாவது ஒன்று இல்லாமையாலும் மாநஸமான க்லேசத்தை அநுபவித்துப் போந்தேன். ஸர்வேந்த்ரியங்களுக்கும் கந்தமான மநஸ்ஸை ப்ரத்யகர்த்த ப்ரவணம் ஆக்கமாட்டாமையாலே மாநஸமான க்லேசத்தை அநுபவித்தேன். இத்தால் சொல்லிற்றாய்த்து சப்தாதி விஷயங்களிலே ப்ரவணனாய்த் திருவடிகளை ஒருநாளும் நினைக்கப் பெற்றிலேன் என்றபடி. **பெருந் துயர் இடும்பையில் பிறந்து** - விஷயங்களிலே ருசியைப் பிறப்பித்து வாஸநையை உண்டாக்கி, ராக த்வேஷங்களை மிகுத்து இதில் உண்டான அவித்யா கர்மங்களும் சரீர ஆரம்ப ஹேதுவாக வந்து பிறந்தேன். துயர் என்று து:க்கம்; இடும்பை என்றும் துஃக்கம்; இத்தால், சரீரம்தான் துஃக்காயதநமுமாய் துஃக்கஹேதுவுமாய் இருக்கும் என்கை. துஃக்காயதநமுமாய் மேலே அநேக துஃக்கங்களை விளைக்கவும் வற்றாய் இருக்கை.

''பெருந்துயர் இடும்பையில் பிறந்து கூடி, வாடினேன்'' என்னாதே, முதலிலே 'வாடினேன்' என்பான் என் என்னில், கர்ம ஸம்பந்தம் அநாதியாய், அசித்

---

*முற்படுவதனையும் காட்டுகிறது. மேல் விளைந்த கேடுதான் யாது என்னில், மனத்தால் உற்ற துன்பம் என்கிறார்.*

வருந்தினேன் மனத்தால் - *மனத்தால் அடையும் துன்பத்தை நுகர்ந்து போந்தேன். பொறிகள் தமக்கு உரிய இன்பப் பொருள்களில் தோய்ந்து, அவற்றைத் துய்க்கக் கருதியபோது அவை கிட்டாது போயின; கிட்டினாலும் அவற்றில் துய்ப்பதற்கு எதுவும் இல்லாமல் இருந்தது. இப்படி மனத்தால் அடையும் துன்பங்களை நுகர்ந்தேன். எல்லாப் பொருள்களுக்கும் வேர்ப்பற்றான[3] மனத்தை அகவழியில் செலுத்த முடியாமையால் மனத்தால் அடையும் துன்பங்களை உற்றேன். இதனால், ஐம்புல இன்பப் பொருள்களில் தோய்ந்தவனாய் இறைவன் திருவடிகளை ஒருநாளும் நினைக்கப் பெற்றிலேன் என்கிறார்.*

பெருந்துயர் இடும்பையில் பிறந்து - *இவ்உடல் ஐம்புல இன்பப் பொருள்களிலே நசையைப் பிறப்பித்தது; பயிற்சியை உண்டாக்கியது. விருப்பு வெறுப்புகளை மிகுத்தது; இதில் உண்டான அறிவின்மையும் இருவினைகளும் பிறிதோர் உடலெடுக்க வித்தாக அமைந்தன; இவ்வாறு அமைந்தமையால் பிறப்பு எடுத்தேன். துயர் - துன்பம்; இடும்பை என்பதும் துன்பத்தைக் குறிக்கும். இவ் ஒருபொருட் பன்மொழியால் உடல் துன்பத்திற்கு இடமாகவும் துன்பத்திற்கு வித்தாகவும் இருக்கும் என்பது போதரும். துன்பத்திற்கு இடனாகவும் மேலே பல துன்பங்களை விளைக்கவும் வல்லதாய் அமைந்துள்ளது.*

*''பெருந்துயர் இடும்பையில் பிறந்து கூடி வாடினேன்'' என்று பாடாமல், முதலிலே 'வாடினேன்' என்று தொடங்கியது ஏன்? உயிராகிய தமக்கு வினைத்*

---

1. அவைத்தை. 2. அவைத்தில்.
3. வேர்ப்பற்று - மூலம்; அடிப்படை.

ஸம்ஸர்க்கமும் ப்ரவாஹ ரூபேண நித்யமாய் இருக்கையாலே, நடுவே ஒன்றைப் பிடித்துச்[1] சொல்லுகிறார். **பிறந்து** - ஜந்ம மரணங்கள் இல்லாத ஆத்மா "செத்தான், பிழைத்தான்" என்று வ்யவஹாராஸ்பதமாகையாலே. **கூடினேன்** - நித்யமாய், ஏக ரூபமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் பகவச்சேஷமான ஆத்மாவை "தேவோஹம்" "மநுஷ்யோஹம்" என்னலாம்படி ஆனபடி. **கூடினேன்** - அசித் ஸம்ஸர்க்கந் தான் ஸத்தா ப்ரயுக்தம் எனலாம்படி பொருந்தினபடி. கூடினேன் என்கையாலே இதுதான் ஆத்மாவுக்கு ஸ்வரூபம் அன்று, ஔபாதிகம், வந்தேறி என்னும் இடம் தோற்றுகிறது. ராஜபுத்ரன் வழி போகாநிற்க வேடர் கையிலே அகப்பட்டாப் போலேயிறே ஆத்மாவுக்கு அசித் ஸம்ஸர்க்கந்தான் வந்தபடி. அயஃபிண்டத்தை அக்நியின் அருகே வைத்தால் அக்நி பரமாணுக்கள் ஸூக்ஷ்ம ரூபேண அதிலே ஸங்க்ரமித்தாதல் வாஸநையாலேயாதல் அதினுடைய ஔஷ்ண்ய ஸ்வபாவத்தையும் நிறத்தையும் பஜித்து அதுதான் என்னலாம்படி அசித் கல்பமானபடி. பரமாணு பற்றுச்[2] சிவப்பு மாறினாலும் வாஸநையாலே சுடும்.

**கூடி** - சரீர விஶ்லேஷம் அஸஹ்யமாம்படி பொருந்தினபடி. ஜ்ஞாநம் பிறந் தால் சரீர விஶ்லேஷந்தான் ப்ரார்த்தித்துப் பெற வேண்டும்படி ஆனபடி. 'கூடி'

---

தொடர்பு நெடுங்காலமாய் இருப்பது; அறிவற்ற உடல் தொடர்பும் ஆற்றில் பெருகுவெள்ளம் போலே எந்நாளும் இருப்பது. ஆதலின், நடுவே ஒன்றைப் பிடித்துச்[3] சொல்லுகிறார். **பிறந்து** - பிறப்பு இறப்புகள் இல்லாத உயிர் "செத்தான், பிறந்தான்" என்று குறிக்கும் வழக்கிற்கு இடமாய் இருக்கையாலே **'பிறந்து'** என்கிறார். **கூடினேன்** - என்றும் உளதாய், ஒரே வடிவினதாய், அறிவு, இன்பம் ஆகிய தன்மையினதாய் இறைவனுக்கு அடிமைப்பட்டதாய் இருக்கும் உயிரை **"யான் தேவன்", "யான் மனிதன்"** என்று பேசத்தக்க நிலை அமைந்தது. **கூடினேன்** - அறிவற்ற உடலோடு கொண்ட இயைபுதான் உயிரோடு உடன் வந்தது என்று சொல்லுமாறு பொருந்தி உள்ளது. 'கூடினேன்' என்று சொல்லு வதாலே இவ்அறிவற்ற உடலோடு கொண்ட தொடர்பு உயிர்க்கு இயற்கையன்று செயற்கை, வந்தேறி என்பது வெளிப்படுகிறது. மன்னன்மகன் வழியே போகும் போது வேடர் கையிலே அகப்பட்டாற் போலேயன்றோ உயிர்க்கு அறிவற்ற பொருளின் உறவு உண்டாயிற்று. இருப்புத் துண்டை நெருப்பு அருகே வைத் தால், தீயின் அணுக்கள் நுண்ணிய வடிவில் அதிலே படர்வதாலோ, நெடும் பொழுது சார்ந்திருப்பதாலோ அதனுடைய வெம்மையையும், நிறத்தையும் தான் பெற்று நெருப்பே என்று சொல்லலாமாறு இருக்கிறது. அதுபோலே இவ்உயிரும் அறிவற்ற உடலோடு கொண்ட தொடர்பாலே அவ்உடலே என்னலாம்படி அறிவற்றதாய் ஆயிற்று. இருப்புத்துண்டில் நெருப்புப் பற்றியதால் உண்டான சிவப்புமாறினாலும் நெடும்பொழுது நெருப்போடு கொண்ட பயிற்சியாலே சுடுகிற தன்றோ? அதுபோன்றே உயிர் அறிவற்ற பொருளோடு கொண்ட தொடர்பு மாறினாலும் அப்பொருளின் தன்மை உயிரிடத்தில் பயிற்சியாலே தொடர்கிறது.

**கூடி** - உடலைப் பிரிதல் ஆற்ற ஒண்ணாதபடி பொருந்தி. அறிவு பிறந்தால் உடலினது நீக்கம் வேண்டிப் பெறவேண்டுவதாய் இருக்கும். **'கூடி'** என்கையாலே

---

1. ஒன்றை இட்டுச். 2. பரமாணுப் பற்றிச்.
3. ஒன்றைப் பிடித்து - ஒன்றைத் தொடக்கமாகக் கொண்டு.

என்கையாலே அநாதிகாலம் இத்தோடே பொருந்திப் போந்தமையும் இதுக்கு மேலே ஓர் அநர்த்தம் விளைந்தது என்றும் தோற்றுகிறது.

மேல் விளைந்த அநர்த்தம்தான் என் என்னில், **இளையவர் தம்மோடு அவர் தரும் கலவியே கருதி ஓடினேன்** - இளையவர் - "சப்தாதி விஷய ப்ராவண்யம் அநர்த்தம்" என்று ஆராயவும் ஒட்டாதே, பகவத் விஷயத்தில் நன்மை அறிந்து அதிலே மூளவும்[1] ஒட்டாதே பருவத்தை இட்டுப் பகட்டித் துவக்குமவர்கள். **தம்மோடு** - "சாயா வா ஸத்வம் அநுகச்சேத்" என்கிறதுவும் எல்லாம் இங்கே. நல்லது ஒரு பூமாலை கண்டால் தன் தலையிலே வைத்தல், தன்னை ஒருவனாக நினைத்திருத்தல் செய்யாதே அவர்கள் போன அடிவழியே[2] போம் இத்தனை. "யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸ கச்சதி" என்கிறதுவும் எல்லாம் இங்கே. **அவர் தரும் கலவி** - கிட்டினபோது சிரித்து வார்த்தை சொல்லி இருந்து, இனி இவன் அகப்பட்டான்[3] என்று அறிந்தால் தங்களைக் கொண்டு எழ வாங்கி இருப்பர்கள். **கலவியே கருதி** - 'அநுபவித்து' என்பது அநுபாவ்யம்தான் உண்டாகிலிறே; இவனுடைய மநோரதமேயாகையாலே 'கருதி' என்கிறது. மநோரதம் தான் மாறாதிறே, அதுக்கு அடியான பாபம் கிடக்கையாலே. அநுபவிக்கலாவது ஒன்று இல்லாவிட்டால் மீளவிறே அடுப்பது. அவர்கள் இறாய்க்க இறாய்க்க,

---

நெடுங்காலம் இதனோடு பொருந்திப் போந்தமையும், இதற்கு மேலே ஒரு கேடு விளைந்தமையும் குறிக்கப்படுகின்றன.

மேல் விளைந்த கேடுதான் யாது என்னில், **இளையவர் தம்மோடு அவர் தரும் கலவியே கருதி ஓடினேன்** என்கிறார். **இளையவர்** - ஓசை முதலிய புலனின் பங்களில் தோய்தல் கேடு என்று ஆராய்ந்து அறியவும் விடாமல், இறைவன் திறத்து உள்ள நன்மை அறிந்து அதிலே மூளவும் ஒட்டாமல் பருவத்தை இட்டுப் பகட்டித் துவக்குபவர்கள்.[4] **தம்மோடு** - "எப்படி இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று தாய்ப்பசுவையும் நிழல் விலங்கினையும் பின்தொடர்கின் றனவோ அப்படி முத்தன் பரம்பொருளைப் பின்தொடர்கிறான்" (பர. ஸம்.) என்பர். இது போன்ற செயல்கள் எல்லாம் இப்பெண்டிரைக் குறித்துச் செய்யப்பட லாயின. நல்லதொரு பூமாலை கண்டால் தன் தலையிலே வைத்தல், தன்னை ஒருவனாக நினைத்திருத்தல் செய்யாமல் அவர்களைத் தேடி அவர்கள் போன வழியே போவான். "எப்படி எப்படிப் பரமபுருடன் செல்கிறானோ அப்படி அப்படியே முத்தனும் கூடப் போகிறான்" (பர. ஸம்.) என்பர். இதுபோன்ற செயல் கள் எல்லாம் இப்பெண்டிரிடத்தே நிகழ்த்தப்படலாயின. **அவர் தரும் கலவி** - கிட்டினபோது சிரித்துப் பேசிக்கொண்டிருந்து, "இனி இவன் அகப்பட்டான்" என்று அறிந்தால் எழவாங்கி இருப்பர்கள்; அஃதாவது எழுந்து சென்று விலகி நிற்பர்கள். **கலவியே கருதி** - நுகர்ச்சி உண்டானாலன்றோ 'கலந்து' என்று சொல்லக்கூடும். அஃது இவனுடைய மனத்து எழும் விருப்பமாகையாலே **'கருதி'** எனப்பட்டது. இவ்ஆசைதான் மாறாது செல்லும், அதற்கு அடியான தீவினை இவர்பால் கிடக்கையாலே. நுகரலாவது ஒன்று இல்லாவிட்டால் மீள்வதன்றோ

---

1. பொருந்தவும். 2. படிவழியே. 3. கைப்பட்டான்.
4. துவக்குபவர்கள் - மயக்குபவர்கள்.

''நன்மை உண்டு'' என்று மேன்மேலென மநோரதம் செல்லாநிற்கும்ஆயிற்று, அதுக்கு அடியான பாவம் கிடக்கையாலே. ஒரு விஷயத்தில் அநுபவிக்கலாவது ஒன்று இல்லாவிட்டால் மீளலாமிறே. அத்தை விட்டு மற்றொன்று அறியப் போய் அதிலும் ஒன்றும் காணாவிட்டால் பின்னையும் அவ்வருகு போகாநிற்கும் இத்தனையிறே. **ஓடினேன்** - விஷயங்கள்தன்னில் அரைக்ஷணம்தான் கால்தாழப் பண்ண வல்லது ஒரு விஷயம்தான் இல்லையிறே. போகோபகரணம் கொண்டு புக்கு, ஸ்நாநத்துக்கு ஈடாகப் புறப்படும் விஷயமிறே. இவற்றின்[1] தோஷத்தைத் தானும் அறிந்து, அத்தை மறைக்கைக்கு ஈடான போகோபகரணங்களைக் கூட்டிக்கொடுத்திறேதானும் அநுபவிக் கப்புகுவது. ப்ரத்யக்ஷம் அகிஞ்சித்கரமாகிற விஷயமிறே. இவற்றினுடைய[2] தோஷம் தான் சாஸ்த்ரம் கொண்டு அறிய வேண்டாதே கண்ணாலே காணலாம்படி இருக்கச் செய்தே கண்டு மீள ஒண்ணாதபடி இருக்கிறதிறே! விஷய ப்ராவண்யமாவது பாம்பு படத்தை விரித்துக்கொடு நின்றால் அது அள்ளிக்கொள்ளப் புகுகிறது என்று அறியாதே அதின் நிழலிலே ஒதுங்கத் தேடுமாப் போலே இருப்பது ஒன்றிறே[3]. உயிர் கழுவிலே இருந்தவன் பிபாஸையும் வர்த்தித்துத் தண்ணீரும் குடித்துப் பிறக்கும் ஸுகம் போலேயிறே விஷயாநுபவத்தால் பிறக்கும் ஸுகம். துஃக்கங்களிலே ஒன்றை ஸுகம் என்று நினைத்துக்கொள்ளுகிறான்[4] இத்தனையிறே. ''ஸுகபாவைகலக்ஷணா'' என்கிற அதுவிறே ஸுகம். **ஓடி** - முன்பு எல்லாம்

---

செய்யத்தக்கது. அவர்கள் இறாய்க்க, இறாய்க்க,[5] அங்கு நன்மை உண்டு என்று மேன்மேலும் எண்ணம் செல்வதாயிற்று, அதற்கு அடியான[6] தீவினை இவர்பால் கிடக்கையாலே. ஒருத்தியிடத்து நுகரலாவது ஒன்று இல்லாவிட்டால் மீளலா மல்லவா? அது செய்யாமல், அவளைக் கைவிட்டு மற்றொருத்தியிடம் அதனை அறியப்போய் அவளிடத்தும் ஒன்றும் காணாவிட்டால் பின்னையும் பிறிதொருத்தி யிடம் அறியப் போவான். **ஓடினேன்** - இவர் நாடிச் சென்ற மடவாருள் தன்னிடம் அரைக்கணம் தங்குமாறு செய்யக்கூடியவள் ஒருத்தியும் இல்லை. இன்ப நுகர்ச்சிக்குக் கருவியாகும் பூ, சாந்தம் முதலிய பொருள்களைக்கொண்டு புக்கு, குளிக்க வேண்டும் பொருள்களைக் கொண்டு வெளியேறும் இடமன்றோ அது. இவற்றின் குற்றங்களைத் தானும் அறிந்து, அவற்றை மறைப்பதற்குத் தேவையான இன்பப் பொருள்களைத் திரட்டிக் கொண்டன்றோ தானும் நுகரப் புகுகிறான். கண்ணெதிரே தெரியும் பயனற்ற பொருள் அல்லவோ இது! அந்தோ! இவற்றின் குற்றங்கள் நூல்கொண்டு அறியவேண்டா; கண்ணாலே காணலாம்படி இருக்கின்றன. எனினும் கண்டு மீளமுடியாமல் இருக்கிறானே! பெண்ணாசை யாவது பாம்பு படத்தை விரித்துக்கொடு நின்றால் அது தீண்டப் போவது அறியாமல் அதன் நிழலிலே ஒதுங்க இடந் தேடுவது போலே இருப்பதொன்று அல்லவா? கழுமரத்திலே உயிர்விட இருந்தவன் விடாயும் உண்டாகித் தண்ணீரும் குடிக்கப் பிறக்கும் இன்பம்போலே இருப்பதன்றோ? துன்பங்களில் ஒன்றை இன்பம் என்று கருதிக்கொள்கிறான். அவ்வளவுதான்! **''இன்பமாக இருத்தலையே இலக்கணமாக உடையது, இறை இன்பம்''** என்கிறது விட்டுணு புராணம் (*6: 5: 57*).

---

1. இவைத்தின். 2. இவைத்தினுடைய. 3. இத் தொடர், ''விஷய ப்ராவண்யந்தரன் ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்கி விடாய்தீர நினைத்திருக்குமோபாதியிறே'' என்று காணப்படுகிறது.
4. நிர்வசித்துக்கொள்ளுகிறான்.
5. இறாய்க்க இறாய்க்க - விலக விலக. 6. அடி - காரணம்.

இப்படியேயாய்ப் போரச் செய்தே செயலற்ற தன்மையாகிய ஒரு நன்மை உண்டா யிற்று[1] என்று தோற்றுகிறது. ஸர்வசக்தி 'ரக்ஷிப்போம்' என்று கைநீட்டி எடுக்கப் பார்த்தாலும் எட்டாதபடி கைகழியப் போனேன்.

**உய்வதோர் பொருளால்** - விஷயங்களிலே கைகழியப் போய் ஓடி இளைத்து விழுந்த இடத்திலே "இனி இவன் தானாக மீளமாட்டான்" என்று,[2] அது தானே ஹேதுவாக ரக்ஷிக்க ஒருப்பட்ட ஸர்வேச்வரன் க்ருபையாலே; உஜ்ஜீவநோ பாயமாய் இருபபதொரு நல்ல அர்த்தத்தாலே. நல்ல அர்த்தம் என்கிறது - பகவத் க்ருபையை; கௌரவத்தாலே "உய்வதோர் பொருள்" என்று மறைத்துச் சொல்லு கிறார்; நாலாம் பாட்டிலே, "**ஆழியான் அருளே**" என்று அதுதன்னைத் தெரிய அருளிச்செய்வர். நம்மாழ்வார் அவ்வளவு போகப் பொறாமை[3] நடுவே "**மயர்வற மதிநலம் அருளினன்**" என்றாரிறே. "**நானே நாநா வித நரகம் புகும் பாவம் செய்தேன்**" என்றும் "**பாவியேனைப் பல நீ காட்டிப் படுப் பாயோ**" என்றும் நானே விநாசத்துக்கு ஈடான பரிகரம் தேடிக்கொள்ள எனக்கு உஜ்ஜீவிக்கலாவது ஒரு உபாயம் உண்டாயிற்று. '**அஸந்நேவ**'வான என்னை '**ஸந்தமேநம்**' என்னப் பண்ணிற்று ஒரு நல்ல அர்த்தம் உண்டாயிற்று. **உணர்வு எனும் பெரும்பதம்** - "**விஜ்ஞாநம் யதிதம் ப்ராப்தம்.**" கிடக்கைப் பாயிலே

---

அப்படி இருப்பதுவே இன்பம். **ஓடி** - முன்பெல்லாம் இப்படியேயாய் வாழ்க்கை நடந்தபோது இடையே ஒரு நன்மை உண்டாயிற்று என்பதனைக் காட்டுகிறது இது. பேராற்றல் வடிவாய்த் திகழும் பெருமான் 'காப்போம்' என்று கைநீட்டி எடுக்கப் பார்த்தாலும், எட்டாதபடி விலகிப் போனேன்.

**உய்வதோர் பொருளால்** - பெண்டிரிடத்தில் எல்லை கடந்து போய் ஓடி இளைத்து விழுந்தேன்; அப்படி விழுந்த இடத்திலே "இனி இவன் தானாக மீள மாட்டான்" என்று கண்டான் இறைவன்; அதுவே பற்றாசாகக் காக்க ஒருப் பட்டான்; ஒருப்பட்ட அப்பெருமான்தன் அருளாலே என்க. அஃதாவது உய்வுக்கு வழியாக இருப்பது ஒரு நற்பொருளாலே. நற்பொருள் என்பது இறைவன் திருவருளை. அதன் சிறப்புநோக்கி "உய்வதோர் பொருள்" என்று மறைத்துச் சொல்லுகிறார்; நாலாம் பாட்டிலே, "**ஆழியான் அருளே**" என்று அதனை வெளிப்படையாக அருளிச்செய்வர். நம்மாழ்வாரோ அவ்வளவு தொலைவு ஆற்றி இருக்க இயலாமல் "**உயர்வற உயர்நலம் உடையவன் யவன் அவன்**" (தி. வா. மொ. *1 : 1 : 1*) என்பதனை அடுத்தே "**மயர்வற மதிநலம் அருளினன்**" (தி. வா. மொ. *1 : 1 : 1*) என்றார்! "**நானே நாநாவித நரகம் புகும் பாவம் செய்தேன்**" (பெ. தி. *1 : 9 : 2*) என்றும், பாவியேனைப் பல நீ காட்டிப் படுப் பாயோ" (தி. வா. மொ. *6 : 9 : 9*) என்றும்சொல்லுமாறு நானே அழிவுக்குரிய தீமைகளைத் தேடிக் கொண்டேன். அத்தகையோனாகிய எனக்கு உய்யலாம் வழி ஒன்று உண்டாயிற்று. **உயிரோடு இருந்தும் இல்லாதவன் போன்றவனான என்னை என்றும் இருப்பவனாகச்** (தைத். ஆந. *6*) செய்தது ஒரு நற்பொருள் உண்டா யிற்று. **உணர்வு எனும் பெரும்பதம்** - "**அடியேனுக்கு நீயே ஆறும் பேறும் என்னும்**

---

1. உண்டாய்த்து. 2. என்ன. 3. பெறாமை.

வெள்ளம் கோத்தாப் போலே. **பெரும்பதம்** - "அவன்தான் வேண்டா; தத் விஷய ஜ்ஞானமே அமையும்'' என்னும்படி இதினுடைய பெருமை. **திரிந்து** - விஷயங்கள் தான் ஸாவதியாகையாலே அவற்றில்[1] அநுபவிக்கலாவது ஒன்று இல்லாமை முட்டி மீண்டேன். **'தெரிந்து'** என்று பாடமாகில், ஜ்ஞாநம் பிறந்தவாறே எல்லாம் இருந்தபடியே தெரிந்தது. ஆகையாலே, முன்பு எல்லாம் இருட்சியாய்ப் போந்தமை தோற்றுகிறது. **நாடினேன்** - ஜ்ஞாநம் பிறந்தவாறே ''நாம் கீழ்ப் பட்டது[2] என்? மேல் படப் புகுகிறது என்?'' என்னும் ஆராய்ச்சி[3] பிறந்தது.

**நாடி** - இதர விஷயங்களைப் பெற வேணும் என்று புத்தி பூர்வமே ப்ரவர்த்தித்தாலும், அநர்த்தாவஹமாம் அத்தனை போக்கிப் பலிப்பது ஒன்று இல்லை; பகவத் விஷயத்தில் ஆராய என்று இழிந்த மாத்ரத்திலே பல வ்யாப்தி உண்டு. **நான்** - **'ஓடினேன்'** என்ற நான். ராவண பவநத்திலே நெடுநாள் அவன் எச்சில் தின்று வளர்ந்தவன் ஒரு முழுக்கிடாதே ராம கோஷ்டிக்கு அர்ஹன் ஆனாப் போலே.[4]

வேல்வெட்டி நம்பியார், பிள்ளை கிழக்கே முக்காதம் ஆற்றிலே எழுந்தருளி இருக்கச் செய்தே, ஒரு திருக்கார்த்திகையிலே ''புறம்பே சிலரைக் கேட்டால்

---

உணர்வு வந்துற்றது. இந்த உணர்வுக்குரிய உறுதி என்னும் பதமும் அடியேனால் ஈட்டப்பட்டது. *பெருமானே! இவற்றிற்கு எப்பிறப்பிலும் குறைவு ஏற்பட வேண்டா'' (ஜி. ஸ்தோ. 1 : 11)* என வரும் வாக்கினால் இவ்உணர்வினைப் பதம் என்று அறியலாம். அதுவும் உறங்கும் பாயிலே வந்து வெள்ளம் கோத்தாற்[5] போலே தானே வந்துற்றது. **பெரும்பதம்** - "அவனும் வேண்டா; அவனைப் பற்றிய அறிவே அமையும்'' என்னும்படி இருக்கிறது இதன் பெருமை. **திரிந்து** - சிற்றின்பப் பொருள்கள் ஒரு வரம்புக்குட்பட்டனவாகையாலே அவற்றில் துய்த்தற்குரியது ஒன்று இன்மையை இறுதியாகக் கண்டு மீண்டேன். **'தெரிந்து'** என்பது பாடமாயின், வெளிச்செறிப்புப்[6] பிறந்தவாறே எல்லாம் இருந்தபடியே தெரிந்தன. ஆகையாலே முன்பெல்லாம் இருட்சியாய்க் கழிந்தமை புலப்படுகிறது. **நாடினேன்** - தெளிவு பிறந்தவாறே "நாம் முன்பு பட்டது யாது? இனிப் படப் போவது யாது?'' என்னும் ஆராய்ச்சி பிறந்தது.

**நாடி** - இறைவன் நீங்கலான பிற இன்பப் பொருள்களைப் பெற வேண்டும் என்று நினைந்து முயன்றாலும், கேடு விளைவதன்றிப் பயனொன்றும் கிட்டுவது இல்லை; ஆனால் இறைவன் திறத்தில், **'ஆராய்வோம்'** என்று இறங்கிய அளவிலேயே பயன் தப்பாதது ஆயிற்று. **நான்** - **'ஓடினேன்'** என்ற நான். இராவணன் வளமனையில் நெடுநாள் அவன் எச்சில் தின்று வளர்ந்த வீடணன் ஒரு முழுக்கிடாதே இராமபிரான் திரளில் சேரத் தகுந்தவன் ஆனான். அது போலே நெடுங்காலம் சிற்றின்பத்தில் இழிந்து சென்ற யானும் இன்று இறைவனைக் காண்பதற்குத் தகுதியுடையவன் ஆனேன்.

ஒருமுறை நம்பிள்ளை திருவரங்கத்துக்குக் கிழக்கே மூன்று காதத் தொலைவில் தங்கியிருந்தார். அது திருக்கார்த்திகைத் திருவிழாக் காலம்.

---

1. இவைத்தில் 2. கீட்பட்டது 3. ஆராட்சி 4. ஆள் ஆனாப் போலே.
5. கோர்த்தல் - பாய்தல். 6. வெளிச்செறிப்பு - தெளிவு; விளக்கம்.

'எளியன்' என்று இருப்பர்கள்; இது பரிஹரிக்க வல்லாரும் இல்லை; இத்தைச் சொல்லி வரக்காட்ட வேணும்'' என்று ஓர் ஆள் கொடுத்து[1] வரக்காட்டினார். அது என்என்புது[2] என்னில், ''பெருமாள் கடலைச் சரணம் புகுகிற இடத்தில் ப்ராங்முகத் வாதி நியமோபேதராய்க் கொண்டு சரணம் புக்கார். இதர உபாயங்களோபாதி ப்ரபத்தியும் ஸஹாயாந்தர ஸாபேக்ஷமோ?'' என்று கேட்டு வரக்காட்ட;[3] ''அந்த உபாயத்துக்கு உடன்வந்தியாய் இருப்பது ஒன்று அன்று; உபாய பரிக்ரஹம் பண்ணினவருடைய ஸ்வபாவத்தாலே வந்தது. ராக்ஷஸ ஜாதீயராவார் தண்ணிய ராய் அநதிகாரிகளாய் இருக்க, அவர்களிலே ஒருவனான ஸ்ரீவிபீஷணாழ்வானிறே **''ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்தும் அர்ஹதி''** என்று இவர்க்கு உபதேசித்தான். அவன்பக்கல் நியதி கண்டிலோம்; அவர்பக்கலே கண்டோம்''. இத்தால் சொல்லிற்றாயிற்று[4] என் என்றால், அநதிகாரியானவனுக்கு அதிகாரம் ஸம்பாதிக்க வேண்டா; அதிகாரியானவனுக்கு அநதிகாரம் ஸம்பாதிக்க வேண்டா; நின்ற நிலையிலே அதிகாரிகளாம் அத்தனை. ஸர்வாதிகாரம் என்றபடி.

**கண்டுகொண்டேன்** - தநம் இழந்தவனுக்கு தநலாபம் போலே இருக்கை யாலும் தாய ப்ராப்தமாய் இருக்கையாலும். **நான் கண்டுகொண்டேன்** - கெடுத்தவன்தானே கண்டாப் போலே இருக்கை.

---

*அதுபோது வேல்வெட்டிப் பிள்ளை தமக்கு எழுந்த ஓர் ஐயத்தைக் களைய வேண்டும் என்று வேண்டி, ஓலை எழுதி ஓர் ஆள் வழி நம்பிள்ளைக்கு அனுப்பி வைத்தார். அதில், ''பெருமாள் கடலைத் தஞ்சம் புகுந்தபோது கிழக்கு நோக்கி இருத்தல் முதலிய விதிகளைக் கடைப்பிடித்துத் தஞ்சம் புகுந்தார். பிற நெறி களைப்போல அடைக்கல நெறியும் சில விதிமுறைகளோடு சேர்ந்து செய்தற்குரிய தொன்றோ? என்பதனைத் தெரிவிக்க வேண்டும். இதனை வேறு யாரிடமாவது வினவினால் இதுகூடத் தெரியாதவனாக உள்ளானே என்று தாழ்வாக நினைப் பார்கள். இவ்ஐயத்தைப் போக்கவல்லார் யாரும் இல்லை. தாங்களே களைய வேண்டும்'' என்று எழுதியிருந்தார். ''இராமபிரான் செய்தது அந்நெறிக்கு உடன் வந்தியாய் இருப்பது ஒன்று அன்று. அந்நெறியைக் கைக்கொண்டவருடைய இயல்பாலே வந்தது. அரக்கர் குலத்தில் பிறந்தார் தாழ்ந்தவராய் இந்நெறி நிற்றற்கு உரியர் அல்லராய் இருப்பர். அவர்களிலே ஒருவனான திருவாளன் வீடண ஆழ்வானன்றோ **'அரசராகிய இராகவன் கடலைத் தஞ்சம் புகுவதற்கு உரியவர்'** (ரா.யு. 19 : 30) என்று அவருக்கு அறிவுரை புகன்றான். அப்படிப் புகன்ற அவனிடம் முறைமை கண்டிலோம்; பெருமாளிடம் முறைமை கண்டோம்'' என்று விடையிறுத்தார். இதன் கருத்து : தகுதி இல்லாதவன் தகுதியை ஈட்ட வேண்டா; தகுதி உடையவன் தகுதி இன்மையை ஈட்ட வேண்டா; அவரவர் நின்ற நிலையிலேயே செய்தற்கு உரியவர் என்பதாம். இந்நெறி எல்லார்க்கும் கோடற் குரியதாம் என்றபடி.*

**கண்டுகொண்டேன்** - *இது பொருள் இழந்தானுக்குப் பொருள் கிட்டியது போலே இருக்கிறது; மேலும் பிறப்புரிமையால் பெறத்தக்கதாகவும் அமைந் துள்ளது. ஆகையால் கண்டு கொண்டேன் என்கிறார்.* **நான் கண்டுகொண்டேன்** - *பொருளைத் தவறவிட்டவனே கண்டாற் போலே இருக்கை.*

---

1. குடுத்து. 2. என்னம்புது. 3. என்று வரக்காட்ட. 4. சொல்லுத்தாயது.

**நாராயணா** - ப்ரணவமாதல், நமஸ்ஸாதல், சதுர்த்தியாதல் கூட்டாமையாலே,[1] திருவிடையாட்டத்திலே இழிய அமையும்; பல பர்யந்தமாகைக்கு ஸாங்கமாகவும் வேண்டா என்கிறது. **என்னும் நாமம்** - 'என்னும்' என்கிறது பலகால் ஆதரித்துச் சொல்லுகிற அநந்யபரமான நாராயண அநுவாக ப்ரஸித்தி.[2] நாமம் என்கையாலே இருந்த படியே[3] உத்தேஶ்யம்; இச்சை பிறந்த போதே காலம்; சொல்லுவோம் என்றவன் அதிகாரி என்கிறது.

''திருமந்த்ரம் சொல்லும்போது ப்ரயதராய்க் கொண்டு சொல்ல வேணுமோ வேண்டாவோ?'' என்று ஜீயர் பட்டரைக் கேட்க, ''வேண்டா'' என்று அருளிச்செய்தார். கங்கையாடப்[4] போமவனுக்கு நடுவே ஒரு உவர்க் குழியிலே[5] முழுகிப்போக வேணுமோ? இந்நன்மை எல்லாம் உண்டாக்கப் புகுகிறது, கீழ் அயோக்யதை இத்தனையும் போக்க மாட்டாதோ?[6]'' என்று அருளிச் செய்தார்.

---

நாராயணா - 'ஓம்' என்பதோ, 'நம:' என்பதோ, நான்காம் வேற்றுமை உருபோ கூட்டாமையாலே திருவிடையாட்டத்திலே[7] இறங்கினால் போதும்; அஃதாவது நாராயணா என்று சொன்னால் போதும். நாராயணா என்னும் சொல்லின் பொருளான விண்ணாடு, மண்ணாடு ஆகிய அவன் ஈருடைமையிலே நானும் ஒருவன் என்று அறிந்தால் போதும். பேற்றினை அடைவதற்கு, உற்ற கருவிகளோடு கூடியிருக்கவும் வேண்டா என்கிறது. என்னும் நாமம் - நாராயண அநுவாகம் என்பது தைத்திரீய உபநிடதத்தின் ஒரு பகுதி. அது 'நாராயணா' என்னும் திருப்பெயரைப் பலகால் விழைந்து சொல்லி, அவனே பரம்பொருள் என்பதனை நிலைநிறுத்துகிறது. அவ்வுபநிடதப் பகுதி இப்பெருமையைப் பிறிதொரு தெய்வத்திற்குத் தரவில்லை. அந்த உலகறிந்த உண்மையை 'என்னும்' என்பது தெரிவிக்கிறது. 'மந்திரம்' என்னாமல், 'நாமம்' என்கையாலே இருந்த நிலையே அமைந்த நிலை; விருப்பம் பிறந்த காலமே உரிய காலம்; நாராயணா என்று சொல்வோம் என்று கருதியவனே கைக்கொள்ளத் தக்கவன் என்கிறது.

''திருமந்திரம் சொல்லும்போது, தூயராய் இருத்தல் வேண்டுமோ? வேண்டாவோ?'' என்று நஞ்சீயர் பட்டரை வினவினார். அதற்கு அவர் ''வேண்டா, கங்கையில் நீராடச் செல்வோன் நடுவில் ஓர் உவர்க்குழியில்[8] முழுகிப் போக வேண்டுமோ? இந்நன்மைகள் எல்லாம் கொடுக்கவல்ல அது கீழ்ச் சொன்ன தகுதியின்மையையும் போக்க மாட்டாதோ? என்று கூறினார்.

**ஒப்புமைப் பகுதி**

1. **திருமந்திரத்தை முன்னாகத் தருதல்**

   *'' ஒருபே ருந்தி இருமலர்த் தவிசில்*
   *ஒருமுறை அயனை ஈன்றனை''*

---

1. கூடாமையாலே. 2. நாராயணாநுவாகத்திலே சென்று கேட்டுக்கொள்ளுங்கோள் என்கை. 3. இடமே. 4. கெங்கையாடப். 5. உவட்குழியிலே. 6. கீழ் யோக்யதை இத்தனையும் உண்டாக்கமாட்டாதோ?

7. திருவிடையாட்டம் - பெருமான் உடைமை. பெருமாள் கோயிலுக்கு உரிய நிலங்களை திருவிடையாட்டம் என்று கல்வெட்டுகள் குறிக்கும். 8. உவர்க்குழி - சாக்கடை.

ஒருபேர் இத்யாதி - ஆழ்வார்க்கு முதலிலே செப்பேட்டைக் கையிலே கொடுத்து நிதியைக் காட்டிக் கொடுப்பாரைப் போலே திருமந்த்ரத்தையும் அதில் அர்த்தத்துக்கு எல்லை நிலமாகக் கோயில்களையும் காட்டிக்கொடுக்கக் கொண்டு க்ருதக்ருத்யராய் ஸம்ஸாரத்தையும் பரமபதத்தையும் ஒக்க மறந்தார்''

*தி. எ. கூ. 1-2 பெ. உரை.*

*[க்ருதக்ருத்யர் - செய்ய வேண்டுவன செய்தவர்]*

**2. கொம்பை இழந்த தளிர்போல வாடுதல்**

*'' நாடி நாடி நரசிங்கா என்று*
*வாடி வாடும் இவ்வா ணுதலே''*

*'' வாடி வாடும் - கொம்பை இழந்த தளிர் போலே வாடும்''*

*தி. வா. மொ. 2:4:1-36*

**3. சீதையை நிகர்த்த உரிமையுடையன உயிர்கள்**

*'' புள்வல்லாய் உன்னை எஞ்ஞான்று பொருந்துவனே''*

*'' உன்னை எஞ்ஞான்று பொருந்துவனே - அநந்யா ராகவேணாஹம் என்கிற பிராட்டி அசோகவநிகையில் பிரிந்திருந்தாப்போலே இருக்கிறது காணும், ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவாறே உடம்புடன் இருக்கும் இருப்பு. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவாறே அநாதிகாலம் ஸம்ஸாரியாய் நின்ற நிலை வந்தேறியாய்த் தோற்றிற்று......'அநந்யா' என்கிற பிராட்டியினுடைய வார்த்தை எல்லார்க்கும் சொல்லலாம்படியிறே ஸ்வரூபத்தை உணர்ந்தால் இருப்பது''*

*தி. வா. மொ. 3:8:9-36*

*'' இலங்கை செற்ற அம்மானே''*

*'' அம்மானே - ஸர்வஸாதாரணன் ஒரு வ்யக்தியில் செய்தது எல்லார்க்கும் பொதுவன்றோ? பிராட்டியோடு ஸம்ஸாரியோடு வாசி உண்டோ ப்ராப்தியில். 'த்வயிகிஞ்சித்ஸமாபந்நே' என்று ஆச்ரயித்தவன்பக்கல் பக்ஷபாதம் மிக்கன்றோ இருப்பது''*

*தி. வா. மொ. 5:7:2-24*

*[வ்யக்தி - ஒருவர். ப்ராப்தி - உரிமை. பக்ஷபர்தம் - ஒருபக்கம் சார்ந்த அன்பு; ஒரம்.]*

**உயிரின் இலக்கணம்**

*'' உதவிக்கைம் மாறென் னுயிரென்ன வுற்றெண்ணில்*
*அதுவுமற் றாங்கவன் றன்னது''*

*'' என்னுயிர் என்ன - நித்யமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் ச்லாக்யமாய் இருப்பது ஒன்று உண்டிறே, ஆத்ம வஸ்து''*

*தி. வா. மொ. 7:9:10-36*

*'' நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு''*

*'' நின்ற ஒன்றை - தேஹேந்த்ரிய மநःப்ராணாதிகளிற் காட்டில் அந்யமாய், இவை அழியுமன்றும் அழியாதே ஏகரூபமாய், இவற்றுக்கு நியந்தாவுமாய், விலக்ஷணமுமான ஆத்மாவை''*

*தி. வா. மொ. 8:8:5-36*

*[நியந்தா-நடத்துபவன்]*

**5. வேடர் கைப்பட்ட மன்னன்மகனை நிகர்க்கும் உயிர்**

'' நடுவேயோர் உடம்பிலிட்டுத்
திண்ண மழுந்தக்கட் டிப்பல செய்வினை வன்கயிற்றால்
புண்ணை மறைய வரிந்தென்னைப் போரவைத் தாய்புறமே''

'' நடுவேயோர் உடம்பில் இட்டு - ஆத்மாவுக்கு அசித் ஸம்ஸர்க்கம் அநாதியாய் இருக்கச்செய்தேயும், நடுவே ஓர் உடம்பு என்கிறார், அது ஔபாதிகமாய்த் தோற்றுகையாலே. சலகில் கிடந்த முத்துக்கும் பொன்னுக்கும் அழுக்கேறின நாள் அறிவார் இல்லை. பின்பு கழியக் காண்கையாலே ''இது வந்தேறி'' என்று தோற்றாநின்றதிறே; அப்படியே பகவத் ஸமாச்ரயணத்தாலே கழியக் காண்கையாலே இதுவந்தேறி'' என்று தோற்றுமிறே. ராஜபுத்ரன் வழிபோகாநிற்கச் செய்தே வேடர் கையிலே அகப்பட்டுத் தன்னை வேடனாகப் ப்ரதிபத்தி பண்ணுமாப் போலே இருப்பது ஒன்றிறே, சேதநன் தேஹத்திலே அஹம்புத்தி பண்ணி தேவோ அஹம் என்று இருக்கும் இருப்பு.''

தி. வா. மொ. 5:1:5-36.

[ஔபாதிகம் - வந்தேறி. பகவத் ஸமாச்ரயணம்-இறைவனைச் சார்தல்.]

**6. நெருப்பில் வைத்த இருப்புத் துண்டம்**

'' ஒருமுறை இருசுடர் மீதினில் இயங்கா
மும்மதிள் இலங்கை இருகால் வளைய
ஒருசிலை ஒன்றிய ஈரெயிற் றழல்வாய்
வாளியின் அட்டனை''

இத்திருவெழுகூற்றிருக்கை உரையில் 'அடைந்த அருவினையோடு' என்னும் முதல் திருவந்தாதி 59-ஆம் பாடல் மேற்கோளாகக் காட்டி விளக்கப்படுகிறது. அவ்விளக்கம்:

'' அடைந்த இத்யாதி - இவ் ஆத்மாவுக்கு ஸ்தவஸ்ஸித்தம் அல்ல; அயஃ பிண்டத்தையும் அக்நியையும் சேர்த்துவைத்தால்அந்யோந்ய ஸம்யோகத் தாலே அதினுடைய பரமாணுக்கள் ஸூக்ஷ்மரூபேண அசித்திலே வந்து ஸங்க்ரமிக்கையினாலேயாதல், அன்றிக்கே அதினுடைய குணத்தை பஜிக்கையினாலேயாதல், அதினுடைய ஔஜ்வல்யத்தையும் வர்ணத் தையும் உடைத்தாய் இருக்குமாபோலே, நித்யமான ஆத்மவஸ்து அநாதியாய் உள்ள அசித்ஸம்யோகத்தாலே அந்த அசித்திலே அஹம் அபிமாநத்தைப் பண்ணும்படி பலிக்கிற அவித்யா கர்ம வாஸநா ருசிகள்.''

பெ. உரை.

[ஸ்வதஸ்ஸித்தம் - இயற்கையாய் அமைந்தது. ஸம்யோகம் - சேர்த்தி; கூட்டம். ஔஜ்வல்யம்-ஒளி.]

**7. சிற்றின்பத்தின் தன்மை**

'' இல்லை கண்டீர் இன்பமே - துஃக்கங்களிலே சிலவற்றை ஸுகமென்று பிரம்மிக்கிற இத்தனை போக்கி இதொழிய ஸுகரூபமாய் இருப்பது ஒன்று இல்லை. உயிர்க்கழுவிலே இருக்கிறவனுக்கு பிபாஸையும் வர்த்தித்து, தண்ணீருங் குடித்து தாகமும் சமித்தால் பிறக்கும் ஸுகம்

போலே இருப்பது ஒன்றிறே ஸம்ஸாரிகளுக்கு போகத்தால் பிறக்கும் ஸுகமாகிறது. ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்கி, 'அது அள்ளிக் கொள்ளும்' என்று அறியாதே 'வெய்யிலைத் தப்பப்பெற்றோம்' என்று த்ருஷ்டராய் இருப்பாரைப் போலேயிறே, விஷயாநுபவங்களாலே களித்திருக்கிற இருப்பு இவனுக்கு."

திருவாய்மொழி. 9:1:5-36

"பெண்டிரால் சுகங்கள் உய்ப்பான்"

"அக்னியை அணைத்து விடாய் தீர நினைப்பாரைப் போலேயும், ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்கி க்லேசம் தீர நினைப்பாரைப்போலேயும், விஷ பக்ஷணத்தைப் பண்ணி தரிக்க நினைப்பாரைப்போலேயும் துஃக்க ஸாதநத்தையிறே ஸுகஸாதநமாக நீ ப்ரமித்தது"

தி. மா. 5. பெ. உரை.

"அக்நி ஜ்வாலையை விழுங்கி விடாய் கெட நினைக்குமா போலேயும், ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்க நினைக்குமாபோலேயும் விஷயப்ப்ரவணனாய்ச் சுகிக்க நினைக்கை" - ஸ்ரீவசனபூஷணம் சூ. 188.

8. கண்டுகொண்டேன்

"'அறப் பறித்து' என்றும் 'கண்டுகொண்டேன்' என்றும் தாம் செய்தாராகைக்கு அடி பிதா தேடின அர்த்தத்தை, 'தன்னது' என்னும் புத்ரனைப் போலே."

பெரி. தி. 5:3.1 பெ. உரை.

9. நாராயணா என்னும் நாமம்

"நாரணன் - நித்யரான த்ரிவித சேதநரையும், நித்யமான கல்யாண குணங்களையும் உடையனாய் இருக்கையாயிற்று நாராயணனாகையாவது"

தி. வா. மொ. 1:2:10-36

"நாரணன்-ஜீவஸமூஹத்தினுடைய ஸ்வரூப ஸ்த்தித்யாதிகள் ஸ்வாதீநமாய், இவை ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய், இவற்றிலே ஒன்று குறையிலும் தம் இழவாம்படி இருக்கையாலே நாராயணன்..."

தி. வா. மொ, 1:4:5-36

"நாரணன்-நித்யபரிசர்யை பண்ணவேண்டும்படி ஸர்வஸ்வாமியானவன்"

தி. வா. மொ. 1:4:9-36

"நாரணன்-'தன்னுடைமை' என்றால் வத்ஸலனாய் இருக்குமவன்..."

தி, வா. மொ, 2:1:7-36

"நாரணன்-தன்னுடைமை இழக்கவிடாத வத்ஸலன்"

தி. வா. மொ. 5:7:1-36

"நாரணன் - தன்னை இல்லை செய்கிறார்க்கும் அந்தர்யாமியாய் ஸத்தையே நோக்கிக் கொடுக்குமவன்." தி, வா. மொ. 7:5:2-24

"நாரணன் - ஆச்ரிதர்பக்கல் குணாகுண நிரூபணம் பண்ணாத வாத்ஸல்யத்தை உடையவன்" தி. வா. மொ. 8:2:7-24

"நாரணமே-அவதாரணத்தாலே ப்ரணவத்தை ஒழியவும் நமஸ்ஸை ஒழியவும் சதுர்த்தியை ஒழியவும் இவ்வளவே பூர்ணம் என்கை. நாரணம்

என்று இல்லாத மகாரத்தையும் கூட்டி உள்ளவற்றைக் குறைத்துச் சொல்லுகையாலே அளத்திற்பட்டது எல்லாம் உப்பாமாபோலே இத்தோடே கூடினது எல்லாம் உத்தேச்யம் என்றும், குறைந்தாலும் 'அங்கம் தப்பிற்று, ஸ்வரம் தப்பிற்று' என்று ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸாய்ப் போக வேண்டுமவற்றிற்காட்டில் இதுக்கு உண்டான வாசி சொல்லு கிறது ஆய்த்து'' தி. வா. மொ. 10:5:1-36

'' நாரணர் - தம் உடம்பில் அழுக்கு போக்யமாய் இருக்குமவர்.''
நாச். தி. 8:6 பெ. உரை.

10. நாமம்

'' மந்த்ரமென்னாதே, திருநாமம் என்கிறது அதிகாரி நியதியாதல் அங்கநியதியாதல் வேண்டா என்கைக்காக. மாத்ரு நாம க்ரஹணத் துக்கு அதிகாரமும் வேண்டாதே ஸரஸமுமாய் இருப்பது''
தி. வா. மொ. 10:5:1-24

'' நாமம் என்கிறது இதுக்கு ஓர் அதிகாரி நியதி, அங்க நியதி வேண்டா; ப்ரஜை தாய் பேரைச் சொல்லுமோபாதி அமையும் என்கைக்காக''
தி. வா. மொ. 10:5:1-36

[ப்ரஜை-பிள்ளை] (1)

## 2

**ஆவியே! அமுதே! எனநினைந் துருகி,**
**அவரவர் பணைமுலை துணையாப்**
**பாவியேன் உணரா தெத்தனை பகலும்**
**பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்;**
**தூவிசேர் அன்னம் துணையொடும் புணரும்**
**சூழ்புனல் குடந்தையே தொழுதென்**
**நாவினால் உய்ய நான்கண்டு கொண்டேன்**
**நாராய ணாவென்னும் நாமம்.**

ப. ரை : **ஆவியே** - எனக்கு உயிர் போன்றவளே! **அமுதே** - எனக்கு அமுதம் போன்று இனியவளே! **என நினைந்து** - என்று இப்படிப் பலவற்றைச் சொல்லி அவர் தரும் சிற்றின்பத்தை நினைத்து, **உருகி** - நீர்ப்பண்டம் போலே கரைந்து, **அவரவர் பணைமுலை துணையா** - அவ்வப் பெண்களுடைய பெருத்த மார்பகங் களைத் துணையாகக் கொண்டு, **பாவியேன்** - தீவினையேனாகிய நான், **உணராது** - இறைவனே நமக்குக் காப்பு என்று அறியாமல், **எத்தனை பகலும் நாள்களும்** - எத்தனையோ பகல் வேளைகளும் நாள்களும், **பழுதுபோய் ஒழிந்தன** - வீணாய்க் கழிந்து போயின; **தூவிசேர் அன்னம்** - சிறகால் வந்த அழகைக் கொண்ட அன்னம், **துணையொடும் புணரும்** - தன் பேடையோடு சேர்ந்து உறையும், **புனல் சூழ் குடந்தை தொழுது** - நீர்சூழ்ந்த திருக்குடந்தை ஆராவமுதத்தாழ்வாரை வணங்கி, **நான் உய்ய** - சிற்றின்பத்தில் திளைத்த நான் ஈடேற, **நாராயணா**

2. 3:3 துணையொடு

**என்னும் நாமம்** - நாராயணா என்னும் திருப்பெயரை, **என் நாவினால்** - என்னுடைய நாவாலே, **கண்டுகொண்டேன்** - புகழ்ந்து காணப்பெற்றேன்.

சி. கு : ஆவி, அமுது என்பன உவம ஆகுபெயர்கள், ஆவி போலவும் அமுது போலவும் இருப்பவளை அப்பொருள்களாகவே கூறுதலின். குடந்தை என்பது இடவாகு பெயராய் அங்குறையும் ஆராவமுத ஆழ்வாரைச் சுட்டியது.

வியா : **இரண்டாம் பாட்டு** : அநாதிகாலம் ''பகவத் தத்வம் என்று ஒன்று உண்டு'' என்றும் அறியாதே விஷய ப்ரவணராய்ப் போருகையாலே, **"வாடினேன்"** என்றும், **''இளையவர் கலவியே கருதி ஓடினேன்''** என்று மிறே, கீழ்ச்சொல்லி நின்றது. அதில் அநுபவித்த வகைகளையும், காலம் அடங்க வ்யர்த்தமே போயிற்று[1] என்றும் சொல்லி, இப்படிப் போன காலமும் வ்யர்த்தமாகாத படியான திருநாமத்தைக் காணப்பெற்றேன் என்கிறார்.

**ஆவியே அமுதே** - **''ஆவியே அமுதே அலைகடல் கடைந்த அப்பனே''** என்றும், **''ஆவியே ஆரமுதே[2] என்னை ஆளுடைத் தூவியம் புள்ளுடையாய்''** என்றும், பகவத் விஷயத்திலே சொல்லக்கடவ வார்த்தையை ஆயிற்று இங்கே சொல்லிற்று. வகுத்த விஷயத்திலே சொல்லக்கடவ வார்த்தையை அப்ராப்த விஷயத்திலே சொன்னேன். தாரகத்வமும் கண்ணழிவு அற்று போக்யதை யும் கண்ணழிவு அற்று இருப்பது பகவத்விஷயமேயிறே. தாரகமன்றிக்கே பாதகமுமாய், போக்யதையின்றிக்கே பீபத்ஸ்யமுமாய் இருக்கிற விஷயங்களிலே ஆயிற்று வார்த்தை

---

வி : **இரண்டாம்பாட்டு** : நெடுங்காலம் ''இறைவன் ஒருவன் உளன்'' என்றும் அறியாமல் புலனின்பத்தில் தோய்ந்து நின்றார். ஆகையாலே **"வாடினேன்"** என்றும், **''இளையவர் கலவியே கருதி ஓடினேன்''** என்றும் கீழே முதற்பாட்டில் சொன்னார். அவ்இன்பத்தில் தாம் துய்த்த வகைகளையும், காலம் முழுவதும் வறிதே கழிந்தது என்பதனையும் சொல்லி, இப்படிச் சென்ற காலத்தையும் வீணாகாதவாறு செய்யவல்ல திருமந்திரத்தைக் காணப்பெற்றேன் என்கிறார் இப்பாட்டில்.

**ஆவியே அமுதே** - **"ஆவியே! அமுதே! அலைகடல் கடந்த அப்பனே! காணுமாறு அருளாய்"** (தி. வா. மொ. *8 : 1 : 1*) என்றும், **"ஆவியே! ஆரமுதே! என்னை ஆளுடைத் தூவிஅம் புள்ளுடையாய்"** (தி. வா. மொ. *3 : 8 : 7*) என்றும் இறைவனைப்பற்றிப் பேசுதற்குரிய சொற்களை இப்பெண்களைக் குறித்துச் சொன்னேன். வகுத்த பொருளிடத்திலே[3] சொல்ல வேண்டிய சொற் களைத் தகுதியற்ற பொருளிடத்திலே[4] சொன்னேன். உயிர்களைத் தாங்கும் தன்மையும் இனிமையும் குறைவு அற்று இருப்பது இறைவனிடத்திலேயே ஆகும். பெண்கள் மனிதர்களுக்கு வாழ்முதற் பொருள் அல்லர்; மாறாகக் கேட்டினை விளைப்போர். நுகர்ச்சிக்கு இனியர் அல்லர்; மாறாக, அருவருப்பாய் இருப்போர். அத்தன்மையர் இடத்திலன்றோ இத்தகை மொழிகளைச்

---

1. போய்த்து. 2. அமுதே.
3. வகுத்த பொருள் - இறைவன். 4. தகுதியற்ற பொருள் - பெண்கள்.

சொல்லிப் போந்தது. "த்வம் ஜீவிதம் த்வமஸி மே ஹ்ருதயம் மதீயம்'' என்றிறே சொல்லிப் போந்தது. **என நினைந்து** - என்று இப்புடைகளிலே நினைப்பது அநேகத்தையிறே'' என்று ஆயிற்று ஜீயர் அருளிச்செய்வது. பிள்ளை "இங்ஙன் நினைந்து வாய்விடமாட்டாதே 'நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்து உகும்' என்று இங்ஙனே[1] சொல்லல் ஆகாதோ?''[2] என்று ஜீயர்க்கு விண்ணப்பம் செய்ய, ''நீர் இவரினும் பக்தராய் இருந்தீர்'' என்று அருளிச் செய்தார். **என நினைந்து உருகி** - இங்ஙனே[3] அநுஸந்தித்து நீர்ப்பண்டம் போலே மயங்கிக்கிடப்பர்.

எத்தனை விஷயங்களிலே இப்படி கால்தாழ்ந்து போந்தது என்னில், **அவரவர்** - காலம் அநாதி; ஆத்மா நித்யன்; பரிக்ரஹித்த சரீரங்களுக்கு எல்லை இல்லை; அவ்வோ சரீரங்கள்தோறும் விஷயங்களுக்கும் எண் இல்லை; அவ் விஷயங்கள்தோறும் கால்தாழ்ந்திறே போந்தது. ஆகையாலே 'அவரவர்' என்னுமித் தனை. **பணைமுலை துணையா** - ஒருத்தன் நோவுபட்டான் என்றால், "பிற்பாடரானோம், உதவப் பெற்றிலோம்.'' "ஹ்ரீரேஷாஹி மமாதுலா'' ''நத்யஜேயம்'' என்னுமவனன்றே. "இளிம்பனாய் இருந்தான்; அகப்பட்டான்; இனி இவன் கையில் உள்ளது அடங்க நம்மது''[4] என்று அதுவே எருவாகப் பணைக்

---

*சொல்லிப் போந்தேன்!* "நீயே எனக்கு உயிர்; என் இதயம்; என் செல்வம்'' *இப்படியன்றோ சொல்லிப் போந்தேன்.*

**என நினைந்து** - "*ஆவியே, அமுதே போன்ற இப்படிப்பட்ட சொற்கள் பலவற்றை* நினைந்து'' *என்றார் நஞ்சீயர். அதனைக் கேட்ட நம்பிள்ளை,* "இப்படி *'ஆவியே, அமுதே'* என்று சொல்ல நினைந்து, *நினைந்தவற்றைச் சொல்ல முடியாமல்* 'நினைதொறும் சொல்லும்தொறும் நெஞ்சு இடிந்து உகும்' *(தி. வா. மொ. 9 : 6 : 2)* என்று *பொருள் சொல்லக் கூடாதோ?''* என்று *சீயரிடம் தெரிவித்தார். அது கேட்ட சீயர் "நீர் இவ்ஆழ்வாரைக்காட்டிலும் மிக்க சுவைஞராய் இருந்தீர்'' என்று கூறினார்.* **என நினைந்து உருகி** - *இப்படி எண்ணி நீரில் இடப்பட்ட கரையும் பண்டம் போலே மயங்கிக் கிடப்பர்.*

*"இப்படி எத்தனை பெண்களிடம் நீர் மயங்கிக் கிடந்தீர்?'' என்றால் 'பலரிடம்' என்கிறார்.* **அவரவர்** - *காலம், தொடக்கம் இல்லாத நெடுங்காலம்; உயிர், நிலையானது; எடுத்த பிறவிகளுக்கோ எல்லை இல்லை. அவ்வப் பிறவிகள்தோறும் பார்த்த பெண்களுக்கும் எண்ணிக்கை இல்லை. அப்பெண்கள் ஒவ்வொருவரிடத்திலும் மயங்கினார். கணக்கிட்டுச் சொல்ல முடியவில்லை. ஆகையாலே 'அவரவர்' என்று கூறுகிறார்.* **பணைமுலை** - *ஒருவன் துன்புற்றான் என்றால், ''பிற்பாடரானோம்; நம்மால் உதவமுடியவில்லையே'' என்றும்,* "உடன் உதவாத இஃது எனக்கு எல்லையற்ற நாணத்தைத் தருவதாக உள்ளது'' *(ரா. ஆ. 10: 9) என்றும்,* ''நட்புள்ளத்தோடு வந்தடைந்தவனை யான் ஒருபோதும் விடமாட் டேன்'' *(ரா. யு. 18: 3) என்றும் சொல்லும் அவ்இறைவனைப் போன்றவர்கள் அல்லரே இவர்கள்.* "இளிம்பன்; நம்மிடம் சிக்கினான்; இனி இவன் கைப்பொருள்

---

1. இங்கனே. 2. சொல்லலாமோ. 3. இங்கன். 4. நம்முது.

கும் ஆயிற்று; "நம்மைப் பெற வேணும் என்று உருகினான்" என்றால் இரங்கி உடம்பு கொடுக்கும் இத்தனை நீர்மை இல்லையே! **பணைமுலை துணையா** - த்வங்மாம்ஸ மேதோஸ்த்தி மயமான க்ரந்தியைப் பற்றி, "**தயரதற்கு மகன்தன்னை அன்றி மற்றிலேன் தஞ்சமாகவே**" என்று இருக்குமாப்போலேயிறே இருப்பது. "இப்போது சாபலத்தாலே விரும்புகிறோம்" என்று இருக்கை அன்றிக்கே அத்ருஷ்டத்தையும் இதுதானே தருவது போலே ஆயிற்று ஆதரிப்பது. அத்ருஷ்டத்தை மறந்தபடி. "**துன்னு குழல் கருநிறத்துஎன் துணையே**" என்று இருக்குமத்தையிறே இங்கே இருப்பது.[1]

**பாவியேன்** - நித்யமாய் ஏகரூபமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் ஈச்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துபத்தோபாதியாய் இருக்கிற ஆத்மவஸ்து படும் எளிவரவே இது! **உணராது** - இவ்விஷயத்துக்கு நம்மை வகுத்தது என்று உணரமாட்டாதே. **எத்தனை பகலும் பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்** - எத்தனை காலம் உண்டு இப்படி வ்யர்த்தமே போகிறது. காலம் அடங்க வ்யர்த்தமே போயிற்று[2]; அணைக்கு அவ்வருகு பட்ட நீரோபாதியிறே. "**வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே.**"

---

*முழுதும் நம்முடையது" என்று நினைப்பர். அந்நினைப்பே எருவாகப் பெருப்பன இவர்தம் முலைகள். இப்பெண்கள் "நம்மைப் பெற வேண்டும் என்று உருகினான்" என்று அறிந்தால் இரங்கித் தங்கள் உடம்பினை இவனுக்குக் கொடுக்கும் சிறிதளவு நீர்மையும் உடையவர்கள் அல்லர்!* **பணைமுலை துணையா** - *தோல், தசை, கொழுப்பு, எலும்புகளால் அமைந்த புடைப்பினைப் பற்றிப் பிறிதோர் நினைவில்லாமலன்றோ இவன் கிடப்பது.* "**தயரதற்கு மகன்தன்னை அன்றி மற்றிலேன் தஞ்சமாகவே**" *(தி. வா. மொ. 3: 6: 8) என்று இருக்குமாறு போலேயன்றோ இருப்பது! இவன் "இப்போது ஆசையாலே விரும்புகிறோம்" என்று கருதினான் அல்லன்; அரம்பையர் முயக்கம் உள்ளிட்ட துறக்க இன்பத்தையும் இதுவே தரும் என்பது போலே விழையலானான். இதனால் மறுமை இன்பத்தையும் மறக்கலானான்.* "**துன்னு குழல் கருநிறத்துஎன் துணையே**" *(தி. நெ. தா. 16) என்று குழலையுடைய இறைவனைத் துணையாகக் கருதி இருப்பதுபோலே இவ் உறுப்பினையுடைய பெண்களைத் துணையாகக் கருதி இருக்கலானான்.*

**பாவியேன்** - *உயிர் நிலைத்தது; ஒருபடிப்பட்ட வடிவினது; உணர்வையும் உகப்பையும் தனக்குரிய இலக்கணமாகக் கொண்டது; இறைவனுக்குக் கௌத்துவ மணிபோலே இருப்பது. இத்தகைய உயிர் படக்கூடிய துன்பமோ இது!*[3] **உணராது** - *இப்பொருளுக்கு உரியவனாக "நாம் படைக்கப்பட்டுள்ளோம்" என்று உணரமாட்டாமல்.* **எத்தனை பகலும் பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்** - *எவ்வளவு காலம் இப்படிப் பயனின்றிக் கழிந்தது. காலம் எல்லாம் வீணாயிற்று; அணையைக் கடந்து சென்ற நீர்போலன்றோ காலம் முழுதும் வறிதே கழிந்தது.* "**இனிய சீதை தொலைவில் இருக்கிறாள் என்று எனக்குத் துன்பம் இல்லை; இராவணனால் கவரப்பட்டாள் என்றும் துன்பம் இல்லை; இவளுடைய வயது கழிகிறதே. என்றே துன்பப்படுகிறேன்**" *(ரா. யு. 5 : 5) என்று இராமபிரானும்*

---

1. நினைப்பது. 2. போய்த்து.

3. தன்னைப் பற்றிய மெய்யறிவு தோன்றி இரங்கும் காலத்தில் 'பாவியேன்' என்று சொல்வது இயலாது என்பதனால் துயரத்தைச் சுட்டுவதாக உரை வகுத்துள்ளார்.

**பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்** - இளையபெருமாளைப் போலே கண்ணுறங்கவும் அவஸரம் இன்றிக்கே போகக்கடவ காலம் அநர்த்தத்தோடே போய் இற்றது.[1] கைங்கர்யத்தோடே அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லக்கடவ காலம் பழுதே போய் இற்றது.[2]

**தூவிசேர் அன்னம் துணையொடும் புணரும் சூழ்புனல் குடந்தையே தொழுது** - இப்படி கைகழிந்தது உகந்தருளின நிலங்கள் இங்கேயாகையாலே ஸ்வரூபம் பெற்று மீண்டது. தூவி - சிறகு. சிறகால் வந்த அழகை உடைத்தாய் அன்னம் ஸஹசரத்தோடே புணர்ந்து வர்த்திக்கிற தேசம். ஸர்வபூத சரண்யமான தேசம்; அன்னத்தோடு ஸர்வதா ஸாம்யம் சொல்லலாய் இருக்கையாலே, பெரியபிராட்டியாரோடே ஆராவமுதாழ்வார் ரமித்து வர்த்திக்கிற தேசம். சரண்ய வஸ்து குறைவற வர்த்திக்கிற தேசம். பொறுப்பாரும் உண்டாய்ப் பொறுப்பிப்பாரும் உண்டாகையாலே குறைவற்ற தேசம். **சூழ்புனல்** - அசேதநமான ஜலமும் அங்கே வந்தால் ஒருக்கால் சூழ ஆயிற்றுப்[3] போவது. தாபார்த்தர்க்கு ச்ரமஹரமான தேசம். **குடந்தையே தொழுது** - "அவஶா: ப்ரதிபேதிரே" என்கிறபடியே தம்பக்கல் ஒருநினைவு இன்றிக்கே இருக்கத் தொழுதுகொடு நிற்கக் கண்டார்.

---

*காலம் வீணாய்க் கழிவதற்கே வருந்தினார்.* **பழுதேபோய் ஒழிந்தன நாள்கள்** - *இளையபெருமாளைப் போலே கண்ணுறங்கவும் பொழுது இல்லாமல் செல்வதற்கு உரிய காலம் பயனில்லாது கழிந்தது. இறைவனுக்கு அடிமைத்தொண்டு ஆற்றுவதிலே அடிக்கழஞ்சு பெற்றுச்[4] செல்ல வேண்டிய காலம் பழுதே போய் அழிந்தது.*

**தூவிசேர் அன்னம் துணையொடும் புணரும் சூழ்புனல் குடந்தையே தொழுது**- *இப்படிக் கழிந்த காலம், இறைவன் உகந்தருளின நிலங்கள் இங்கே இருத்தலினாலே தன் இயல்பு பெற்று மீண்டது. அஃதாவது வீழ்நாளாகாமல் வாழ்நாளாயிற்று.* **தூவி** - *சிறகு. சிறகால் வந்த அழகை உடையதாய்,*[5] *அன்னம் தன் துணையாகிய பேடையோடே புணர்ந்து உறையும் இடம். எல்லார்க்கும் தஞ்சமாகத் திகழும் இடம். அன்னத்தோடு எல்லா வகையாலும் ஒப்புமை சொல்லக் கூடியவாறு இருப்பவர் பெரியபிராட்டியார்.*[6] *ஆகையாலே அப்பெரியபிராட்டியாரோடு ஆராவமுதாழ்வார் களித்து உறையும் இடம். புகலிடமாய் இருப்பவன் குறைவற இருக்கும் இடம். அங்குப் பொறுப்பாரும் உள்ளார்; பொறுப்பிப்பாரும் உள்ளார். ஆகையாலே குறைவற்ற இடம்.* **சூழ்புனல்** - *அறிவற்ற நீரும் அங்கே வந்தால் ஒருமுறை சூழ்ந்தன்றோ செல்லும். வெயிலில் வாடியோர்க்குத் துயர் தீர்க்கும் இடம்.* **குடந்தையே தொழுது** - *கண்ணன் துரியோதனன் அவைக்குள் நுழைந்தபோது அனைவரும்* "**தம் வசமிழந்தவராய் அவனை வரவேற்கும் நிலையை அடைந்தனர்**" *என்கிறது பாரதம். அது போலே இவ்ஆழ்வார் தம்மிடம் ஒருநினைவு இல்லாமலே இருக்கத் தொழுதுகொண்டு நிற்கக் கண்டார்.*

---

1, 2. போய்த்தது. 3. ஆய்த்துப்.

4. அடிக்கழஞ்சு பெறுதல் - மதிப்புப் பெறுதல். 5. 'சேர்' என்பதனை வினைப்பகுதியாகக் கொண்டு சேர்ந்த என்று பொருள் கூறாது சேர்த்தி என்னும் பெயர்ப்பகுதியாகக்கொண்டு அழகு என்று பொருள் காண்கிறார். தூவிசேர் - சிறகால் வந்த சேர்த்தி (அழகு); மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. 6. பெரியபிராட்டியார் - திருமகள்.

**என் நாவினால்** - "ஆவியே அமுதே" என்ற என் நாவினால். "இப் ப்ரஜையைப் பெற்று வாழ்ந்தேன்" என்பாரைப்போலே. கரணம் இன்று பெற்ற பேற்றுக்குப் பாங்காய் இருக்கையாலே வேறு ஒரு சரீர பரிக்ரஹம் பண்ணினா லும், 'என் நா' என்னலாமிறே. இதரரை ஸ்தோத்ரம் பண்ணித் திரிந்த இவ்உடம் போடே, **உய்ய நான் கண்டுகொண்டேன்** - "மறந்த மதியின் மனத்தால் இறந்தேன் எத்தனையும்" என்ற நான் உஜ்ஜீவிக்கும்படி கண்டுகொண்டேன். **கண்டுகொண்டேன்** - திருமந்த்ரத்தினுடைய அர்த்தத்தை அநுஸந்தித்தால் அது ஸ்வரூபமாய் இருக்குமாப் போலே, சப்தத்தைச் சொல்லுகையும் ஸ்வரூபமாய் இருக்குமிறே. இப்படி ப்ராப்தமாய் இழந்தத்தைக் காணப்பெற்றேன் என்கை.

**நாராயணா என்னும் நாமம்** - "நா வாயில் உண்டே" என்னுமத்தை. நா வாயில் உண்டானால் ஓவாது உரைக்கும் உரையிறே.[1]

---

**என் நாவினால்** - "ஆவியே அமுதே" என்ற என் நாவினால்.[2] தம் பேற்றுக்கு நாக்குக் காரணமாய் இருந்ததால், "இப்பிள்ளையைப் பெற்று வாழ்ந்தேன்" என்பாரைப் போலே என் நாவினால் உயர்ந்தேன் என்று கொண்டாடுகிறார்.[3] அவர் இன்று பெற்ற பேற்றுக்கு நாவாகிய உறுப்புப் பாங்காக இருத்தலினாலே பிறிது ஒரு பிறவி எடுத்தாலும் 'என் நா' என்று உறவு பாராட்டலாம் அன்றோ! **உய்ய நான் கண்டுகொண்டேன்** - மற்றவர்களைப் புகழ்ந்து திரிந்த இவ்உடம்போடு இருந்துகொண்டே உய்ய நான் கண்டுகொண் டேன். "மறந்த மதியின் மனத்தால் இறந்தேன் எத்தனையும்" (பெ. தி. 6: 2: 2) என்ற நான் வாழும்படி கண்டுகொண்டேன். **கண்டுகொண்டேன்** - இப்படித் தெளிந்தவர் திருமந்திரத்தின் பொருளைச் சிந்திக்காமல் அதனைச் சொல்லுவது தகுமோ எனில்? தகும். திருமந்திரத்தினுடைய பொருளைச் சிந்தித்தால் அது மனிதன் இயல்புக்குத் தக்கதாக இருப்பது போலே அதனைச் சொல்லு தலும் அவன் இயல்புக்குத் தக்கதாக இருக்கும். இப்படி அடைவதற்கு உரியதாய், என்னால் இழக்கப்பட்டதாய் இருந்ததனைக் காணப்பெற்றேன் என்கை.

**நாராயணா என்னும் நாமம்** -

> "நாவாயில் உண்டே; நமோநார ணாஎன்று
> ஓவா துரைக்கும் உரையுண்டே - மூவாத
> மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர்
> தீக்கதிக்கண் செல்லும் திறம்?"
>
> (மு. தி. 95)

என்பதில் குறிக்கப்பெறும் 'நமோ நாரணா' என்னும் திருப்பெயரை. நா வாயில் உண்டானால் ஓவாது உரைக்கும் உரையன்றோ அத்திருப்பெயர்.

---

1. உரையாவது.
2. 'என்' என்பது தாழ்வைக் குறிப்பதாகக் கொண்டு இவ்வாறு உரைகூறுகிறார். 3. கொண் டாடுகிறார் - போற்றுகிறார்.

**நா வாயில் உண்டே** - இது முந்துற முன்னம் தேடிப் போக வேண்டாவே. **நமோ நாரணா என்று ஓவாது உரைக்கும் உரை உண்டே** - ஓவாது உரைக்கும் உரையாகிறது உச்சிவீடு விடாதே சொல்ல வேணும் என்கிறது அன்று; எட்டு அக்ஷரமாகையாலே நடுவே இளைக்க வேண்டாதே சொல்லி இளைப்பாறலாம் என்கை. ஸஹஸ்ராக்ஷரீ மாலா மந்த்ரமாய் "இது கற்பதில் நரகத்தே புக்குப் போக அமையும்" என்னும்படி இராது ஒழிகை.

**என்னும் நாமம்** - முன்பு இழந்த காலமும் வ்யர்த்தம் ஆகாதபடியான திருநாமத்தைக் காணப்பெற்றேன்.

"சென்றநாள் செல்லாத;[1] செங்கண்மால் எங்கள்மால்
என்றநாள், எந்நாளும் நாளாகும்"

செங்கண்மால் எங்கள்மால் என்பது ஒருநாள் உண்டாகில், சென்ற நாள் செல்லாத[2] - எந்நாளும் நாளாகும். திருமந்த்ரத்தைச் சொல்லுகைக்கு உறுப்பாகையாலே போன காலம் நல்ல காலமாய், செல்லுகிற காலமும் தானே நல்ல காலம். திருமந்த்ரம் சொன்னால் மேல் தானே ஓர் அநர்த்தம் விளையாதிறே.

---

**நாவாயில் உண்டே** - இது முதற்கண், இருப்பதால் தேடிப்போக வேண்டாவே. **நமோ நாரணா என்று ஓவாது உரைக்கும் உரைஉண்டே** - ஓவாது உரைக்கும் உரை என்பது உச்சிவீடு விடாதே[3] சொல்ல வேண்டும் உரை என்பது அன்று. எட்டெழுத்தாகையாலே நடுவே இளைப்பாற வேண்டாமல் முழுதும் சொல்லி இளைப்பாறலாம் என்பது கருத்து. ஆயிரஎழுத்து மாலை என்னும் மந்திரமாய் "இதனைக் கற்பதைக் காட்டிலும் நரகத்தைச் சேர்தல் அமையும்" என்று சொல்ல வேண்டாதவாறு இருக்கிறது.

**என்னும் நாமம்** - முன்பு இழந்த காலமும் வீணாகாதபடியான திருப்பெயரைக் காணப்பெற்றேன்.

" சென்றநாள் செல்லாத, செங்கண்மால் எங்கள்மால்
என்றநாள் எந்நாளும் நாளாகும்"

என்பது மூன்றாம் திருவந்தாதி (17). செங்கண்மால் எங்கள்மால் என்பது ஒருநாள் உண்டாகில், சென்ற நாள், செல்லாத நாள் ஆகிய எந்நாளும் நாளாகும். திருமந்திரத்தைச் சொல்லுவதற்கு உறுப்பாகையாலே கடந்த காலமும் நல்ல காலம் ஆகும். செல்லுகிற காலமும் தானே நல்ல காலம் ஆகும். திருமந்திரம் சொன்னால் பிறகு ஒரு கேடு விளையாதன்றோ!

---

1, 2. செல்லாது.

3. உச்சிவீடு விடாமல் - இடைவிடாமல். உச்சிப்போதில் வேலை செய்வோர் வேலையை விடுத்துச் சிறிதுபோது ஓய்வுகொள்வர்; அதற்கு உச்சிவீடு என்பது பெயர். அவ்ஓய்வு இல்லாமல் என்பது நேரான பொருள்.

**ஒப்புமைப் பகுதி**

1. **நெஞ்சம் உருகுதல்**

'' *உருகுமால் நெஞ்சம் - அனுபவத்துக்கு ப்ரதமோபகரணமான நெஞ்சு சிதிலமாகாநின்றது. அநுபவிக்கைக்கும் அநுபவித்து நிர்வ்ருதர் ஆகைக்கும் நெஞ்சு வேணுமிறே. நீஞ்சப்புக்கவனுக்கு வாய்கரையிலே தெப்பம் ஒழுகுமாபோலே பரிகரமான நெஞ்சு சிதிலமாகா நின்றது.''*

*தி. வா. மொ. 9:6:1-36*

*[ப்ரதமோபகரணம் - முதன்மைக் கருவி. நிர்வ்ருதர் - இன்பம் துய்த்தவர்.]*

2. **காலம் வீணாதல்**

'' *பழுதே புல காலம் போயின''*

'' *பழுதே - பழுதும் பழுதல்லாததும் கூடப் பெற்றேனோ. பலகாலம் - இழந்த அநாதி காலம் பலவாய் அதுக்கு அநந்தரம் அநந்த காலம் ஆனபடி. போயின - போன நீர்களைக் கோலவோ.''*

*மு. தி. 16. பெ. உரை.*

*[அநந்தரம் - பிறகு. அநந்த காலம் - எல்லையற்ற காலம்.]*

3. **கண்டுகொண்டேன்**

'' *கள்ள மனந்தவிர்ந் தேயுன்னைக் கண்டுகொண் டுய்ந்தொழிந்தேன்''*

'' *கண்டு கொண்டு - 'ஒருபடி காணவல்லோமே' என்ற நான், நிதி எடுத்தாப் போலே லபித்து.''*

*தி. வா. பொ. 5:1:3:-36.*

*[லபித்து - அடைந்து]* (2)

### 3

**சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்**
**தெரிவைமார் உருவமே மருவி,**
**ஊமனார் கண்ட கனவினும் பழுதாய்**
**ஒழிந்தன கழிந்தஅந் நாள்கள்;**
**காமனார் தாதை, நம்முடை அடிகள்,**
**தம்அடைந் தார்மனத் திருப்பார்**
**நாமம்நான் உய்ய நான்கண்டு கொண்டேன்**
**நாராய ணாஎன்னும் நாமம்.**

**ப. ரை:** **சேமமே வேண்டி** - நலமே விளைதல் வேண்டும் என்று நெஞ்சால் நினைத்து, **தீவினை பெருக்கி** - அதற்கு ஏற்ப நல்வினைகளைச் செய்யாமல் தீய செயல்களையே நிறைத்துவைத்து, **தெரிவைமார் உருவமே மருவி** - பெண்களது வடிவழகையே நன்மையின் உறைவிடமாகக் கருதி, **கழிந்த அந் நாள்கள்** - வீணாய்ச் சென்ற அப்பொழுதுகள், **ஊமனார் கண்ட கனவினும் பழுதாய் ஒழிந்தன** - ஊமைகள் கண்ட கனவைக்காட்டிலும் பயனற்றவையாய்ப்

போயின; **காமனார் தாதை** - இன்று மன்மதனுக்குத் தகப்பனாய், **நம்முடை அடிகள்** - நம்போல்வார்க்குத் தலைவனாய், **தம் அடைந்தார் மனத்து இருப்பார் நாமம்** - புகலாகப் பற்றியோரது நெஞ்சில் நீங்காது இருப்பவருக்குரிய பெயரான, **நாராயணா என்னும் நாமம்** - நாராயணா என்னும் திருப்பெயரினை, **நான் உய்ய** - ஐம்புல இன்பங்களில் விருப்பினனாய்த் திரிந்த நான் தேறும்படி, **நான் கண்டு கொண்டேன்** - உய்தியினின்றும் நெடுந்தொலைவு விலகிநின்ற நான் காணப் பெற்றேன்.

**சி.கு :** சேமம் - க்ஷேமம் என்னும் வடசொல்லின் திரிபு. தெரிவைமார் என்பது இருபத்தாறு முதல் முப்பத்திரண்டு வயது வரையில் உள்ள பெண்களைச் சுட்டாமல் பொதுநிலையில் பெண்களைச் சுட்டி நின்றது.

வியா : **மூன்றாம் பாட்டு : சேமமே வேண்டி** - ஶத்ருக்களால் ராஜாக்கள் உள்ளிட்டாரால் நமக்கு ஒரு நலிவு வாராது ஒழிய வேணும், எல்லாராலும் ரக்ஷை பெற்றுச் செல்ல வேணும்'' என்று ஆயிற்று[1] நெஞ்சால் நினைத் திருப்பது. **தீவினை பெருக்கி** - ரக்ஷையே பெற்றுச் செல்ல வேணும் என்று இருந் தால், அது ஸபலம் ஆம்படியான ஸத்கிரியையைப் பண்ணாதே பாபத்தை யாயிற்றுக் கூடு பூரிப்பது. **தெரிவைமார் உருவமே மருவி** - நல்லத்தை வேண்டி யிருக்குங்காட்டில் அது வாராதே, செய்ததின் பலமிறே வருவது. பண்ணி வைத்த பாபங்கள் கொடு போய் விஷயங்களிலே மூட்டும். **உருவமே மருவி** - அகவாயில் இழியில் த்யஜிக்கலாமிறே. அகவாய் நஞ்சாய் ஸ்வகார்யபரராயிறே இருப்பது. அகவாயிலே இழியில், அநாத்ம குணம் கண்டு மீளலாய் இருக்குமிறே. வடிவில் தோஷங்களை மறைத்திறே வைப்பது. **மருவி** - அத்தையே சுபாஶ்ரயமாக மநநம் பண்ணியாயிற்று[2] இருப்பது.

---

வி : **மூன்றாம் பாட்டு : சேமமே வேண்டி** - ''பகைவராலும், அரசர் உள்ளிட்டாராலும் நமக்கு ஒரு நலிவு வாராது ஒழிய வேண்டும்; எல்லாராலும் நலம் பெற்று வாழ வேண்டும்'' என்றே நெஞ்சால் நினைத்திருக்கும். **தீவினை பெருக்கி** - நலம் பெற்றுச் செல்ல வேண்டும் என்று நினைத்தால் அது கிட்டும்படியான அறச்செயல்களைச் செய்தல் வேண்டும். அவற்றைச் செய்யாமல் மறச்செயல்களையே மிகுத்துவைக்கும். **தெரிவைமார் உருவமே மருவி** - நல்லது வேண்டியிருந்தபோதிலும் அது வாராமல் நிறைத்துவைத்த மறச்செயல்களின் பயனே வரும். செய்த மறச்செயல்கள் கொண்டு போய்ப் பெண்களிடம் சேர்க்கும். **உருவமே மருவி** - அவர்கள் அகவாய்[3] கண்டா லன்றோ வெறுக்கலாம். அவர்களோ அகவாய் நஞ்சாய்த் தாங்கள் கருதியதனை நிறைவேற்றிக்கொள்வதிலே கருத்து உடையவராய் இருப்பர்! அவர்கள் மனத்தை ஆழ்ந்து கண்டால் இழிதகவுகள் இருத்தல் கண்டு மீள முடியும். அவர் களது புறத்தோற்றத்தில் குற்றம் புலப்படாதோ என்னில், புலப்படாது. அவர்கள் தங்கள் தோற்றத்தில் குற்றங்கள் புலப்படாதவாறு மறைத்தன்றோ வைக்கிறார்கள்! **மருவி** - அவ்வடிவத்தையே இடையறாது நினைத்தற்குப் பற்றுக் கோடாக மனத்தில் பதித்து இருப்பான்.

---

1. ஆய்த்து. 2. பண்ணியாய்த்திருப்பது.
3. அகவாய் - உள்ளம்.

**ஊமனார் கண்ட கனவினும் பழுதாய்** - ஊமனார் - ஊமைகள்; ஊமை கண்ட கனவினும் பழுதாய்; ஊமை கண்ட கனா வாய்விடமாட்டானித்தனை, நினைத்திருக்கும். அங்ஙனுமன்றியே, நெடுநாள் அநுபவித்துப் போந்த விஷயங்களில், போய் இருந்து அநந்தரம் நினைத்திருக்கைக்கும் ஒன்றும் இன்றிக்கே இருக்கை. அங்ஙனன்றிக்கே ஊமை கண்ட கனா வாய்விடமாட்டிற்றிலனாகிலும்[1] நினைத்திருக்கலாம். இவை நினைத்திருக்கில் பயாவஹமாகையாலே நினைக்கவும் ஒண்ணாது என்கை. ஸ்ம்ருதி விஷயம் ஆவது ஒன்று இல்லை. ஸ்ம்ருதி விஷயமாயிற்றது[3] உண்டாகில் பயாவஹமாய் இருக்கும். **ஒழிந்தன கழிந்த அந்நாள்கள்** - **"நமே துஃக்கம் ப்ரியா தூரே நமே துஃக்கம் ஹ்ருதேதி வா ஏததேவாநுஶோசாமி வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே".**

ப்ரியையானவள் தூர இருந்தாள் என்று வெறுத்திருக்கிறோம் அல்லோம்; அது நாலு பயணம் எடுத்துவிடத் தீரும்; வலிய ரக்ஷஸ்ஸாலே அபஹ்ருதை என்று வெறுத்திருக்கிறோம் அல்லோம்; அது அவன் தலையை அறுக்கத் தீரும். நமக்குச் சோக நிமித்தம் இதுவே. "வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே". போன காலத்தை அம்பாலே மீட்க ஒண்ணாதே!

---

**ஊமனார் கண்ட கனவினும் பழுதாய்** - *ஊமனார் - ஊமைகள்; ஊமை கண்ட கனவைக் காட்டிலும் பழுதாய்; ஊமை தான் கண்ட கனவை வாய்விட்டுச் சொல்ல முடியாவிட்டாலும் நினைத்திருப்பான். அத்தன்மையும் இல்லாததாய் இருக்கிறது பெண்களிடம் துய்க்கும் இன்பம். நெடுநாள் கூடிக் களித்த பெண்களிடத்தில், அவர்களை விடுத்துச் சென்ற பின்னர் நினைத்து மகிழ்வதற்குக்கூட ஒரு சிறப்பும் இல்லாமல் இருக்கிறது. அவ்வாறு இருத்தலே அல்லாமல், ஊமை தான் கண்ட கனாவை வாய்விட்டுச் சொல்ல முடியாதவனாய் இருந்தபோதிலும் நினைத்திருக்கலாம். இச்செயல்களை நினைக்கில் அச்சம் உண்டாகும். எனவே இவற்றை நினைக்கவும் ஒண்ணாது. இவற்றில் நினைத்தற்கு உரியது ஒன்று இல்லை; நினைக்கப் புகில் அச்சம் தோற்றுவிப்பனவாய் இருக்கும்.* **ஒழிந்தன கழிந்த அந்நாள்கள் - "இனிய சீதை தொலைவில் இருக்கிறாள் என்று எனக்குத் துன்பம் இல்லை; இராவணனால் கவரப்பட்டாள் என்றும் துன்பம் இல்லை; இவளுடைய வயது கழிகிறதே என்றே துன்பப்படுகிறேன்"** *(ரா. யு. 5:5) என்கிறார் இராமபிரான்.*

*நெஞ்சுக்கு இனியளானவள் தொலைவில் இருந்தாள் என்று வெறுத்திருக்கிறோம் அல்லோம்; அது நாலு பயணம் எடுத்துவிடத்[3] தீரும். வலிய அரக்கனாலே கவர்ந்து செல்லப்பட்டாள் என்று வெறுத்திருக்கிறோம் அல்லோம்; அஃது அவன் தலையை அறுக்கத் தீரும். நமக்கு உண்டாகும் வருத்தத்துக்குக் காரணம் இதுவே—போன காலத்தை அம்பாலே மீட்க முடியாதே!*

---

1. வாய்விடமாட்டுத்திலனாகிலும். 2. விஷயமாய்த்தது.
3. நாலு பயணம் எடுத்துவிடல் - சிலநாள் பயணம் மேற்கொள்ளல்.

நீர் பற்றிச்[1] சொல்லுகிற விஷயத்துக்கு இந்த தோஷங்கள் இல்லையோ என்ன, **காமனார் தாதை** - உருவமே மருவிலும் பசை போரும்; உடம்பைப் பற்றிலும் ஊதியம் போரும். தன் வடிவாலே நாட்டை அடையப்[2] பகட்டித் திரியுமவனுக்கும் உத்பத்தி ஸ்தாநம். தன் கையில் நாட்டார் படுவது அடங்க அவன்தான் இவன் கையிலே படும். "ஸாக்ஷாந் மந்மத மந்மத:" **நம்முடைய அடிகள்** - கீழில் விஷயங்களுக்குச் சொன்ன குற்றம் இல்லாததுவேயன்று இதுக்கு வாசி. அவை அப்ராப்த விஷயம்; இது ப்ராப்த விஷயம். **நம்முடை அடிகள்** - ஸர்வ ஸ்வாமி. **தம் அடைந்தார் மனத்து இருப்பார்** - வடிவைக் காட்டித் துவக்கிக் கையில் உள்ளதுஅடங்க அபஹரித்து உடம்பு கொடாதே[3] எழவாங்கி யிருக்கையன்றிக்கே, ஆசாலேசம் உடையார் நெஞ்சு விட்டுப் போய் இருக்க மாட்டாதவன். கலவிருக்கையான பரமபதத்தையும் விட்டு நெஞ்சே கலவிருக்கையாகக் கொள்ளும். **தம் அடைந்தார் மனத்து இருப்பார் நாமம்** - இவ்அர்த்தம் இத்தனைக்கும் வாசகமான திருநாமம். தேஹ குணமும், ஸர்வ ஸ்வாமித்வமும், ஸௌலப்யமும், வாத்ஸல்யமுமிறே இதுக்கு அர்த்தமாயிற்று.

**நான் உய்ய நான் கண்டுகொண்டேன்** - "அஸந்நேவ" என்று முடியும்படியான நான் உஜ்ஜீவிக்கும்படி கண்டுகொண்டேன். **நான் கண்டு**

---

*நீர் பற்றிச் சொல்லுகிற பொருளுக்கு இக்குற்றங்கள் இல்லையோ என்று வினவினால் 'இல்லை' என்கிறார்.* **காமனார் தாதை** - *உருவத்தில் மருவினாலும் பசை உண்டாகும்; உடம்பைப் பற்றினாலும் ஊதியம் உண்டாகும். தன் வடிவாலே நாட்டை எல்லாம் பகட்டித் திரியும் மன்மதனுக்கும் பிறப்பிடமாய் இருப்பவன். மன்மதன்தான் தன்கையில் நாட்டார் படும் துன்பம் எல்லாம் இவன் கையிலே படும். பெருமான்* **"மன்மதனுக்கு மன்மதனாவான்"** *(பாகவதம் 10: 32: 2)* **நம்முடைய அடிகள்** - *கீழே பொருள்களுக்கு அஃதாவது பெண்களுக்கு உரியனவாகச் சொன்ன குற்றம் இல்லாமல் இருத்தல் மட்டுமன்று இதற்கு ஏற்றம். அவை நமக்கு உரியனவாக வரையறுக்கப்படாத பொருள்கள்; இது வகுத்த பொருள்.* **நம்முடை அடிகள்** - *எல்லார்க்கும் உடையவன்.* **தம் அடைந்தார் மனத்து இருப்பார்** - *வடிவைக் காட்டி மயக்கிக் கையில் உள்ளது அடங்கப் பறித்து, உடம்பு கொடாமல் எழுந்து அப்பாற் செல்லாது, பற்றுச் சிறிது உடையார் நெஞ்சுவிட்டு விலகி இருக்க ஒண்ணாதவன். கலவிருக்கையான[4] விண்ணாட்டையும் விட்டு நெஞ்சே கலவிருக்கையாகக் கொள்பவன்.* **தம் அடைந்தார் மனத்து இருப்பார் நாமம்** - *இங்குப் பேசப்பட்ட காமனார் தாதை தொடக்கமான கருத்துகள் எல்லாவற்றையும் குறிப்பதான திருப்பெயர். பெருமாளுடைய திருமேனி இயல்பும், எல்லார்க்கும் உடையவனாம் தன்மையும், எளிமையும், தாயன்பும்[5] அல்லவா இதற்குப் பொருளாகும்.*

**நான் உய்ய நான் கண்டுகொண்டேன்** - **"உளனாய் இருந்தும் இலன்"** *(தைத். ஆந. 6) என்று முடியும்படியான நான் கரையேறும்படி கண்டுகொண்*

---

1. பற்றச். 2. அடங்க. 3. குடாதே.
4. கலவிருக்கை - நிலையாக ஓலக்கம் இருக்கும் இடம். 5. வத்ஸம் - கன்று; தாய்ப்பசு கன்றின் பால் காட்டுவது வாத்ஸல்யம். அதனையொட்டித் தாயன்பு என்று தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது.

கொண்டேன் - இனிக் காட்சி இல்லையோ என்னும்படி கைகழிந்த நான். உத்தேஶ்ய ஸித்தி உண்டாகப் பெற்றேன். "இனி ஸத்தை உண்டாகமாட்டாது, காட்சி உண்டாகமாட்டாது" என்னும்படியான நான் உஜ்ஜீவிக்கவும் பெற்றுக் காணவும் பெற்றேன் என்கிறார். "நான் உய்ய நான்" என்று இருக்கால் சொல்லுகிறது - லாபத்தால் வந்த ப்ரீதிக்குப் போக்குவிட்டுச் சொல்லுகிறார். **நாராயணா என்னும் நாமம் - "ஶாந்தோ தாந்த உபரத ஸ்திதிக்ஷுஃஸ் ஸமாஹிதோ பூத்வாத்மந்யே வாத்மாநம் பச்யேத்"** என்று[1] சமதமாத்யுபேதர் சொல்லக் கடவ திருநாமத்தைச் சொல்லப்பெற்றேன். "சேமமே வேண்டித் தீவினை பெருக்கித் தெரிவைமார் உருவமே மருவி" என்று அநாத்ம குணோபேதனாய்ப் போந்த நான் ஆத்ம குணோபேதர் பெறும் பேற்றைப் பெற்றேன்.

---

டேன். நான் கண்டுகொண்டேன் - *இனிக் காட்சி இல்லையோ என்னும்படி கைகழிந்த*[2] *நான் கருதிய பேறு கிட்டப் பெற்றேன். "இனி உளனாம்தன்மையும் இல்லை, இறைக்காட்சியும் இல்லை" என்னும்படியான நான் உய்வும் பெற்றுக் காணவும் பெற்றேன் என்கிறார். "நான் உய்ய நான்" என்று இருகால் சொல்கிறார், கிட்டிய பேற்றால் வந்த உவகைக்குப் போக்குவிட்டுச்*[3] *சொல்கிறார் ஆதலின்.* **நாராயணா என்னும் நாமம் - "உள்ளும் புறமும் இருக்கும் பொறிகளை அடக்கியவனாகவும், பயன் கருதிச் செய்யும் கடன்களில் விருப்பம் அற்றவனாகவும், பொறுமையுடன் கூடியவனாகவும், கலங்காத மனத்தை உடையவனாகவும், இருந்து தன் உயிரில் உள்ளுறைபவனாய் இருக்கும் பரம்பொருளைப் பார்க்கக் கடவன்"** *(ப்ருஹ. 6: 4: 23) என்று அக புற அடக்கங்களோடு*[4] *கூடியவர் சொல்லுவதற்கு உரிய திருப்பெயரைச் சொல்லப்பெற்றேன். "சேமமே வேண்டித் தீவினை பெருக்கித் தெரிவைமார் உருவமே மருவி" என்று இழிதகவுகளோடு கூடியவனாய்க் கழிந்த நான் பெருந்தகவுகளோடு கூடியவர் பெறும் பேற்றைப் பெற்றேன்.*

**ஒப்புமைப் பகுதி**

**1. காமனார் தாதை**

*"காமனைப் பயந்தாய்"*

*"லோகத்தை எல்லாம் தன்னழகாலே பிச்சேற்றும் காமனுடைய அழகுக்கு உத்பாதகனானவனே"*

*தி. வா. மொ. 2:7:8-24*

*[உத்பாதகன் - தோற்றுவித்தவன்]*

*"வடிவழகாலே நாட்டை வெருட்டித் திரிகிற காமனுக்கு உத்பாதகன் ஆனவனே!"*

*தி. வா. மொ. 2:7:8-36*

---

1. என்றும்.

2. கைகழிந்த - விலகிச் சென்ற. 3. போக்கு விடுதல் - வழி அமைத்தல். 4. அக அடக்கம் - மனம் அறிவு, நினைவு, முனைப்பு ஆகிய அகக்கருவிகளை ஒறுத்தல்; இது 'சமம்' எனப்படும். புற அடக்கம் - கை, கால், வாய், எருவாய், கருவாய் ஆகிய தொழில் உறுப்புகளில் மனம் போகாது காத்தல்; இது 'தமம்' எனப்படும்.

"காமனைப் பயந்த காளை"

"நாட்டை அடங்கத் தன்னழகாலே பிச்சேற்றித் திரியும் காமனுக்கும் உத்பாதகனானவன்"

திவா. மொ. 10:2:8-24

"நாட்டைத் தன்னழகாலே வெருட்டித் திரிகிற காமனுக்கும் உத்பாதகனாய் இருக்கும். இருவரையும் கூடக்கண்டால் 'முறைகெடச் சொன்னார்களே' என்று இருக்கும்"

திவா. மொ. 10:2:8-36

"காமர் தாதை"

"அழகாலே நாட்டை வெருட்டித் திரிகிற காமனுக்கு உத்பாதகமானவன்" காமனைப் பயந்த காளையிறே. 'ப்ரஸவாந்தம் ச யௌவநம்' என்னும் படியன்றிக்கே, காமனைப் பயந்த பின்பு கீழ்நோக்கி ப்ராயம் புகு மாய்த்து"

பெரி. தி. 1:7:6 ம. மா. மு. உரை.

[ப்ராயம் - பருவம்]

"காமர் தாதை"

"இவர் அகப்பட்ட துறை இருக்கிறபடி. தெரிவைமார் உருவமே மருவிப் போந்த இவரை மீட்டது 'காமனார் தாதை' என்கிற வடிவிறே"

பெரி. தி. 5:1:10 பெ. உரை.

"காமவேள் தாதை"

"அழகாலே எல்லாரையும் அகப்படுத்தும் காமனுக்கும் உத்பாதகன் ஆனவன்"

நான். தி. 82 பெ. உரை.

"கோல ஐங்கணை வேள் தாதை"

"'அழகுக்கு எனக்கு மேலில்லை' என்று இருக்கும் காமனுக்கும் அழகுக்கு உற்பத்திஸ்த்தாநம் என்கை"

திவா. மொ. 8:10:9-24

## 2. மனத்து இருப்பார்

"மாசற்றார் மனத்துளானை"

"இவர்கள் நெஞ்சுக்குப் புறம்பு, காட்டுத்தீயோபாதியாக ஆய்த்து நினைத் திருப்பது. ஜலசரபதார்த்தங்கள் ஜலத்தை ஒழிய தரிக்க மாட்டாதாப் போலே இவர்கள் நெஞ்சு ஒழிந்த இடத்தில் தரிக்கமாட்டான் ஆயிற்று. திருப்பதிகளில் நித்யவாஸம் பண்ணுகிறதும் ஒரு ஸுத்த ஸ்வபாவனான வனுடைய ஹ்ருதயத்தைக் கணிசித்திறே. 'என்னிலாத முன்னெலாம்' என்னக்கடவதிறே"

தி. மா. 22 பெ. உரை.

[ஜலசர பதார்த்தங்கள் - நீர்வாழ் உயிரினங்கள்]

3. **நான் உய்யக் கண்டுகொண்டேன்**

*" உய்ந்தொழிந்தேன்"*

*" 'அஸந்நேவ' என்னும்படி இருக்கிற நான் உஜ்ஜீவிக்கப் பெற்றேன்"*

*தி. வா. மொ. 5:1:3-36*

4. **சம தம குணங்கள்**

*" குணம் பெருக்கி - ஶமதமாத்யாத்ம குணங்களை மேன்மேலும் அபிவ்ருத்தமாக்கி. ஆத்மகுணங்கள் எல்லாவற்றுக்கும் ப்ரதாநம் ஶமதமங்களிறே"*

*பெரி. தி. 4:4:2 ம. மா. மு. உரை.*

*"ஆத்ம குணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்" - ஸ்ரீவசன பூஷணம் சூ.96*

*(3)*

## 4

**வென்றியே வேண்டி, வீழ்பொருட் கிரங்கி,**
**வேல்கணார் கலவியே கருதி,**
**நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன்**
**என்செய்கேன் நெடுவிசும் பணவும்**
**பன்றியாய் அன்று பாரகம் கீண்ட**
**பாழியான் ஆழியான் அருளே**
**நன்றுநான் உய்ய நான்கண்டு கொண்டேன்**
**நாராய ணாஎன்னும் நாமம்**

**ப. ரை :** **வென்றியே வேண்டி** - *வெற்றியையே விரும்பியும்,* **வீழ் பொருட்கு இரங்கி** - *அழிதல் தன்மையவாய பொருள்களுக்கு வருந்தியும்,* **வேல்கணார் கலவியே கருதி** - *வேலினைப்போலும் கண்ணை உடைய பெண்டிரது கூட்டத்தையே நினைந்தும்,* **நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன்** - *ஒன்றிலும் நிலையாகத் தங்காத நெஞ்சினை உடைய நான்,* **என் செய்கேன்** - *யாது செய்வேன்? உன்னைப் பெறுதற்கு உரிய வழி ஒன்றனையும் செய்ய வல்லேன் அல்லேன்;* **அன்று நெடு விசும்பு அணவும் பன்றியாய்** - *மண்ணுலகைப் பெருவெள்ளம் கோத்த அந்நாளில் நெடிய வானத்தைத் தொடும்படி வளர்ந்த பன்றி வடிவம்கொண்டு,* **பாரகம் கீண்ட** - *பூமியை அண்டச்சுவரினின்றும் பிரித்து எடுத்த,* **பாழியான்** - *மிடுக்கு உடையனான,* **ஆழியான்** - *சக்கரப் படையினைக் கைக்கொண்டிருக்கும் பெருமான்,* **அருளே** - *அருளாலே,* **நான் நன்று உய்ய** - *புலன் இன்பங்களில் தோய்ந்தவனாகிய நான் செவ்வையாக வாழுமாறு,* **நாராயணா என்னும் நாமம்** - *நாராயணா என்னும் திருப்பெயரை,* **நான் கண்டுகொண்டேன்** - *செருக்கனாய் இருந்த நான் அறிந்துகொண்டேன்.*

**சி. கு :** *நின்றவாறு என்பது நின்றவா என ஈறுகெட்டு வந்தது.* **அருளே** - *மூன்றன் உருபு தொக்கது; அருளால் என விரித்துக்கொள்க.* வேண்டி, இரங்கி, கருதி என்பவற்றுள் உம்மை தொக்கது.

---

4. 1 : 5 வேற்கண்ணார்.

வியா : **நாலாம் பாட்டு : வென்றியே வேண்டி** - பிதாவாகவும் ஆம்; ஆசார்யனாகவும் ஆம்; வெற்றியே ஆயிற்று[1] இவன் வேண்டிஇருப்பது. தன்னை ஒழிந்தாரைக் கீழ்ப்படுத்தித் தான் மேலாக ஆயிற்று வேண்டிஇருப்பது. தோல்வி குணமாம் விஷயத்திலே ஆயிற்று[3] வெல்ல நினைத்துஇருப்பது. **வீழ்பொருட்கு இரங்கி** - கையில் சிறிது அர்த்தம் உண்டாய் அத்தாலேயிறே இவன் ஒருவனையும் மதியாது இருப்பது. அது அஸ்திரம் ஆனபடியாலே அபஹ்ருதமாய் இருக்குமிறே. அத்தை இழந்து கூப்பிடாநிற்கும். கௌரவ்யராய் இருப்பார்பக்கல் அபிமாநம் பண்ணக் கடவது அன்றிக்கே இருக்க அபிமாநம் பண்ணி வர்த்தித்து, அதுக்கு மேலே இரங்கக் கடவது அல்லாததுக்கு இருந்து கண்ணனீர்[3] பாச்சாநிற்கும்[4] அங்ஙன் அன்றிக்கே தேஹாத்மாபிநத்தைப் பண்ணித் தன்னை எல்லார்க்கும் மேலாக நினைத்துப் போந்ததுவே அன்றியே, அஸ்திரமான உடம்பை, ''நித்யமாக வேணும்'' என்று சோகியாநிற்கும்[5] என்னவும் ஆம். **வேல்கணார் கலவியே கருதி** - கையில் அர்த்தம் உண்டான காலம் பார்யையைச் செங்கற்சீரை கட்டிக் கூப்பிட்டுத் திரிய விடும். அவன் அர்த்தம் இழந்து கூப்பிடாநின்றால், அல்லாதாரோடு ஒக்க அவளும் வினவப் புகுருமே. இவளைக் கண்டவாறே "அவ்அர்த்தத்தை எல்லாம் இட்டு ஒரு பணியாகப் பூட்டிக் காணப்பெற்றிலோம்'' என்று மநோரதியாநிற்கும். கெடுத்த பொன்னை இப்போது பூட்டத் தேடும். **நின்றவா நில்லா நெஞ்சினை**

---

வி: நாலாம் பாட்டு : **வென்றியே வேண்டி** - அவர் தந்தையாகவும் இருக்கலாம்; அருளாசிரியனாகவும் இருக்கலாம். எவராக இருந்தாலும் அவரிடத்தில் தன் வெற்றியையே இவன் வேண்டியிருப்பான்; தன்னைத் தவிரப் பிறரை எல்லாம் கீழ்ப்படுத்தித் தான் மேலாக இருப்பதனையே விரும்புவான்; எந்த இடத்தில் வீழ்ச்சி வாழ்ச்சியாகுமோ அந்த இடத்திலே வெற்றிகொள்ள நினைத்திருப்பான். **வீழ்பொருட்கு இரங்கி** - கையில் சிறிது பொருள் உண்டாக அதனாலேயன்றோ இவன் ஒருவனையும் மதியாமல் இருப்பது? அப்பொருள் நிலையற்றதாகையாலே இவனிடமிருந்து பறிக்கப்படும். அதனை இழந்து புலம்பிக் கொண்டிருப்பான். பெரியவர்களிடம் ஒருவன் செல்வச் செருக்கால் தன்னை மதிப்புடையவனாய்க் கருதி நடத்தல் கூடாது என்பதனை எண்ணாமல் செருக்குடன் நடந்தான். அதற்கு மேலே இரங்குதற்கு உரியதல்லாத பொருள் இழவுக்கு இரங்கி அதனை எண்ணி இருந்து இப்பொழுது கண்ணீர் பெருக்கிக் கொண்டிருக்கிறான். அவ்வாறு அன்றி, உடலையே உயிராகக் கருதித் தன்னை எல்லார்க்கும் மேலாக நினைத்துச் சென்றான்; அத்துடன் நிலைநில்லாத் தன் உடம்பு நிலையாக இருக்க வேண்டும் என்று எண்ணி வருந்திக் கொண்டிருக்கிறான் எனலும் அமையும். **வேல்கணார் கலவியே கருதி** - கையில் பொருள் சேர்ந்தபோது மனைவியைச் செங்கற்சீரை[6] கட்டிப் பிச்சைகேட்டுத் திரிய விடுவான். இதுபோழ்து அவன் பொருள் இழந்து புலம்பிக் கொண்டிருந்தால் மற்றவர்களோடு சேர்ந்து அவளும் அது குறித்து வினவப் புகுவாள் அன்றோ? இவளைக் கண்டவாறே ''அப்பொருள்களை எல்லாம் இட்டு ஓர் அணிகலன் செய்து இவளுக்குப் பூட்டிக் காணப் பெற்றிலோம்'' என்று எண்ணுவான். கெடுத்த பொன்னை இப்போது பூட்டத் தேடுவான். **நின்றவா நில்லா**

---

1, 2. ஆய்த்து. 3. கண்ணீர். 4. பாய நிற்கும். 5. மோகியாநிற்கும்.
6. செங்கற்சீரை - காவிபுடை.

**உடையேன் என் செய்கேன்** - ஊர்வசீ ஸாலோக்யத்துக்கு நாடு அடங்க ஸாத நாநுஷ்ட்டாநம் பண்ணாநிற்க, நேர் கொடு நேர் அவள்தான் வந்து உபஸ்தாநம் பண்ணி முன்னே நிற்க அர்ஜுநன் நமஸ்கரித்துக் கடக்க நின்றானிறே விரக்தியாலே. இப்படிப் பட்டவன், "**தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்**" என்று ப்ரதிகூல வாயுவைப் பிடித்துக் கூடு கட்டிலும் என் நெஞ்சைப்பிடிக்கப் போகாது என்றானிறே. ஒரு விஷயங்களிலே அரைக்ஷணம் கால்தாழாத நெஞ்சை உடையேனான நான், இந்நெஞ்சைப் பரிகரமாகக் கொண்டு உன்னைப் பெறுகைக்கு ஈடான உபாயாநுஷ்டாநம் பண்ணல்[1] என்பது ஒன்று உண்டோ? உன்னை இழக்கைக்கு உறுப்பாம் இத்தனை[2]. **என் செய்கேன்** - அர்ஜுநனுக்குப் பதினெட்டு ஓத்திலும் சோகத்தை உத்பாதித்தாப்போலே[3], கண்டது எல்லாம் இவர்க்கு பயாவஹமாய் இருக்கிறபடி.

நீர் இப்படி இருந்தீராகில் உமக்குப் பேற்றுக்கு அடி எத்தாலே என்று இருந்தீர்? என்ன, ப்ரளயம் கொண்ட பூமி தன்னுடைய ரக்ஷணத்தில்[4] அஸமர்த்தமாய் அத்தை ரக்ஷித்தான் யாவன் ஒருவன் அவனாலே என்கிறார். **நெடு விசும்பு அணவும் பன்றியாய் அன்று பாரகம் கீண்ட பாழியான் ஆழியான் அருளே** - ப்ரளயம் கொண்ட பூமிக்கு ஸ்வரக்ஷணத்தில் அந்வயம் உண்டாம் அன்றிறே விஷயம்

---

**நெஞ்சினை உடையேன் என் செய்கேன்** - *ஊர்வசியோடு சேர்ந்திருக்க மக்கள் எல்லாம் முயன்று கொண்டிருக்கத் தன் கண் எதிரில் அவளே வந்து அணுகி நிற்க, அருச்சுனன் வணங்கி ஒதுங்கி நின்றான் பற்றின்மையாலே. இப்படிப்பட்டவன்,* **"மனத்தை அடக்குவது காற்றை அடக்குவதுபோலே அரியது என்றே கருதுகிறேன்" (கீதை 6:34)** *என்று கண்ணனைப் பார்த்துக் கூறினான். அஃதாவது கட்டுக் கடங்காக் காற்றைப் பிடித்துக் கூடுகட்டினாலும்*[5] *என் நெஞ்சைப் பிடித்து அடக்க முடியாது என்றான். அருச்சுனன் நிலையே அதுவானால் ஒரு பொருளிடத்தில் அரைக்கணம் கால்தாழாத*[6] *நெஞ்சை உடையேனான நான், இந்நெஞ்சைத் துணையாகக் கொண்டு உன்னைப் பெறுதற்குத் தகுந்த வழிகளில் நிற்றல் என்பது இயலுமோ? இந்நெஞ்சு உன்னை இழப்பதற்கே உறுப்பாகும்.* **என் செய்கேன்** - *அருச்சுனனுக்குக் கீதையில் பதினெட்டு ஓத்திலும்*[7] *கண்ணன் உரைத்த மொழிகள் துயரத்தைத் தோற்றுவித்தாற்போலே, இவர்க்குத் தாம் கண்ட பொருள்கள் எல்லாம் அச்சம் ஊட்டுவனவாய் இருக்கின்றன.*

*நீர் இப்படி இருந்தீராகில், உமக்குப் பேறு எக்காரணத்தாலே கிட்டும் என்று இருக்கிறீர்? என்ன, "நில உலகை பெருவெள்ளம் கோத்தது; அது தன்னைத் தானே காத்துக்கொள்ளும் திறன் இல்லாதது; அதனைக் காப்பாற்றியவன் எந்த ஒருவனோ அந்த ஒருவன் அருளாலே கிட்டும்" என்கிறார்.* **நெடு விசும்பு அணவும் பன்றியாய் அன்று பாரகம் கீண்ட பாழியான், ஆழியான் அருளே** - *பெரு வெள்ளம் கொண்ட நிலஉலகுக்குத் தன்னைத் தானே காத்துக்கொள்ளும் நிலை உண்டாகும் நாளன்றோ ஐம்புல ஆசை கொண்ட நெஞ்சினேனான நான்*

---

1. பண்ண. 2. இத்தனை அன்றோ. 3. உபபாதித்தாப்போலே. 4. ஸ்வரக்ஷணத்தில்.
5. கூடு கட்டல் - உள்ளே அடைத்து வைத்தல். 6. கால்தாழ்தல் - தங்குதல். 7. ஓத்து - நூலின் உட்பிரிவு; ஈண்டு அத்தியாயம்.

கொண்ட நெஞ்சை உடையேனான நான் எனக்கு ஹிதசிந்தை பண்ணுவது. ஆகாசாவகாசம் வெளிஅடையும்படி விம்ம வளர்ந்தவன். ரக்ஷ்யத்தின் அளவு அல்லாதபடி ஆயிற்று ரக்ஷகனானவன் வடிவைப் பாரித்தபடி. பூமி ப்ரளயத்திலே புக்கு முடிந்து போகப் புக்கவாறே நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத மஹா வராகம் ஆனான். ஜல ஸம்ருத்தி காணப் பணைக்கும் வடிவைக் கொண்டான்.

**மாசு உடம்பில் நீர் வாரா மானம் இலாப் பன்றியாம்** - "மஹிஷி உடம்பு பேணாதே பாசி தூர்ந்தது"[1] என்றவாறே, காந்தனான தானும் உடம்பு பேணாதே, மாசு ஏறின உடம்பை உடையன் ஆனான். **மானம் இலா** - ஈஶ்வரத்வாபிமாநம் பின் நாட்டாதபடி இருக்கை. மாயா ம்ருகத்தைக் கண்டபோது இனத்தில் மான்கள் வந்து மோந்துபார்த்து, "விஸஜாதீயம்" என்று கடக்கப் போயிற்றினவிறே,[2] அங்ஙன் அன்றியே "**ஆத்மாநம் மாநுஷம் மந்யே**" என்கிறது இங்கும் அநுவர்த்தித்தபடி.

**பாரகம் கீண்ட** - பூமிப் பரப்பு அடங்க அண்டபித்தியோடே புக்குச் சேர்ந்தத்தை ஒட்டு விடுவித்து எடுத்த. **பாழியான்** - மிடுக்கை உடையவன்.

---

*எனக்கு நன்மையைப்பற்றிச் சிந்திக்கும் நாளாகவும் அமையும். நீண்ட வானப் பரப்பு வெளிஅடையும்படி[3] விம்ம[4] வளர்ந்தவன். அஃதாவது பாதுகாக்கப் படும் பொருளுக்குரிய அளவில் அல்லாமல் பாதுகாப்பவன் தன் வடிவைப் பெரிதாக்கி நின்றான். மண்ணுலகு பெருவெள்ளத்தில் புக்கு முடிந்துபோகத் தொடங்கியவாறே நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத[5] பெரும் பன்றி ஆனான். நீர் வளம் காணப் பணைக்கும்[6] வடிவைக் கொண்டான்.*

"பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டு ஒருநாள் மாசு உடம்பில் நீர்வாரா மானம்இலாப் பன்றியாம்" *(நாச். தி. 11: 8)*. **மாசு உடம்பில் நீர் வாரா மானம் இலாப் பன்றியாம்** - "*மனைவி உடம்பு பேணப்படாமல் பாசியால் தூர்ந்தது*" *என்றவுடனே கொழுநனான தானும் உடம்பு பேணாது மாசு ஏறின உடம்பை உடையவன் ஆனான்.* **மானம் இலா** - *தான் இறைவன் என்னும் எண்ணம் தொடராத வண்ணம் இருத்தல். பொய்ம்மானைக் கண்டபோது பிற மான்கள் வந்து மோந்து பார்த்துத் தம் இனம் அன்று என்று விடுத்துச் சென்றன. அது போலே இல்லாமல் இராமனாகத் தோன்றியபோது* "**என்னை மனிதனாக நினைக்கிறேன்**" *(ரா. யு. 120:11) என்று பெருமான் தன்னை மனிதருள் ஒருவனாகவே கருதினான். அவ்இயல்பு இங்கும் பின் நாட்டியது[7]. அஃதாவது இராமனாக வந்தபோது தன்னை மனிதருள் ஒருவனாகக் கருதியது'போலவே பன்றியாக வந்தபோது தன்னைப் பன்றிகளுள் ஒன்றாகக் கருதினான் என்பதாம்.*

**பாரகம் கீண்ட** - *மண்ணுலகப் பரப்பு முழுவதும் கோளச்சுவரோடு புக்குச் சேர்ந்ததனை ஒட்டு விடுவித்து[8] எடுத்த.* **பாழியான்** - *மிடுக்கை உடையவன்.*

---

1. தூர்த்தது. 2. போய்த்தினவிறே.
3 வெளியடைதல் - இடம் முற்றும் நிறைதல். 4. விம்ம - பெரிதாக. 5. இறாய்த்தல் - பின்வாங்குதல், அஞ்சுதல். 6. பணைத்தல் - பெருத்தல். 7. பின் நாட்டியது - தொடர்ந்தது. 8. ஒட்டு விடுவித்தல் - பிரித்துஎடுத்தல்.

**ஆழியான்** - ரக்ஷிக்கும் இடத்து ஒரு பரிகராபேக்ஷை இல்லை; ஒரு பரிகரம் கொண்டு ரக்ஷிக்கப் பார்த்தானாகில், அதுக்கு ஈடான பரிகரம் உடையவன். **அருளே** - அபிமாநம் பண்ணக் கடவது அல்லாத விஷயங்களிலே அபிமாநம் பண்ணியும், சோகிக்கக்[1] கடவது அல்லாததுக்கு சோகித்தும்,[2] நரகாவஹமான விஷயங்களை அநுபவிக்க மநோரதித்தும், "நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன்" என்று இப்படி கைகழிந்த என்னை, "இனி இவன் தானாக மீள மாட்டான்" என்று அதுவே ஹேதுவாக எடுக்க ஒருப்பட்ட ஸர்வேஸ்வரன் க்ருபையாலே. அருளே என்னவும் ஆம்; அருளாலே என்னவும் ஆம்.

**நன்று நான் உய்ய** - "வென்றியே வேண்டி வீழ்பொருட்கு இரங்கிவேற்கணார் கலவியே கருதி" என்று போந்தவன் சுத்தன் ஆனேன் என்று தெரியாதபடி, அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தனாம்படி ஆனேன். **நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்** - "வென்றியே வேண்டி வீழ்பொருட்கு இரங்கி" என்று அபிமாநமும் லோபமுமிறே சொல்லிற்று[3] இப்படி போந்த நான் அமாநித்வாத்யாத்ம குணோபேதர் பெறும் பேற்றைப் பெற்றேன்.

---

**ஆழியான்** - *உயிர்களைக் காக்கும்போது அதனைச் செய்ய அவனுக்கு ஒரு படைக்கலம் தேட வேண்டுவது இல்லை. ஒரு கருவி கொண்டு காக்கக் கருதினால் அதற்கு ஏற்ற படைக்கலம் உடையவன்.* **அருளே** - *'எனது' எனத் தகாத இடங்களிலே அவ்எண்ணம் கொண்டு திரிந்தும், துயர் கொள்ள வேண்டாததற்குத் துயர் உற்றும், நரகத்தில் புகுவிக்கும் பெண்களோடு கூடிக் களிக்கப் பாரித்தும், "நின்றவா நில்லா நெஞ்சினை உடையே"னாக இறை நெறியிலிருந்து விலகிச் சென்றேன்; இப்படிக் கைகழிந்த என்னை, "இனி இவன் தானாக மீளமாட்டான்" என்று அதுவே காரணமாக எடுக்க ஒருப்பட்ட[4] முதல்வன் அருளாலே. அருளே என்றும் கொள்ளலாம்; அருளாலே என்றும் கொள்ளலாம்.*

**நன்று நான் உய்ய** - *"வென்றியே வேண்டி வீழ்பொருட்கு இரங்கி வேல்கணார் கலவியே கருதி"ப் போந்தவன் தூயன் ஆனான் என்று தெரியாதவாறு, உலகியல் வெக்காயம்[5] தட்டாத அயர்வறும் அமரர்களோடு ஒரு கோவை ஆனேன்[6].* **நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்** - *"வென்றியே வேண்டி வீழ்பொருட்கு இரங்கி" என்று எனது என்னும் எண்ணமும், கடும் பற்றுள்ளமும் அல்லவா சொல்லப்பட்டன; இப்படிப் போந்த நான் பற்றின்மை தொடக்கமான பெருந்தகவுகளோடு கூடியவர் பெறும் பேற்றைப் பெற்றேன்.*

## ஒப்புமைப் பகுதி

1. வீழ்பொருள்

*" வீமவை - நச்வர பதார்த்தங்கள்"*

*தி. வா. மொ. 1:1:4-36*

---

1. மோகிக்கக். 2. மோகித்தும். 3. சொல்லுத்து.
4. ஒருப்பட்ட - உறுதிகொண்ட. 5. வெக்காயம் - வெம்மை. 6. மண்ணுலக வாழ்வின் சேறுபடியாதவனாய்த் திருநாட்டில் இருக்கும் அமரன் என்று சொல்லுமாறு ஆனேன்.

2. வேல்கணார்

"வேலின் நேர் தடங்கண்ணினார் - ஓர் ஆளும் ஒரு நோக்கும் நேரான கண்ணழகை உடையவர்கள்" தி. வா. மொ. 6:2:4-24

3. பன்றியாய்ப் பாரகம் கீண்ட பாழியான்

"பன்றியாய வென்றி வீர - நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத மஹா வராக மாய் பாதாளகதையான பூமியை எடுத்து ஹிரண்யாக்ஷனை வென்ற வீரத்தை உடையவனே" தி. ச. வி. 102. பெ. உரை.

"கேழல் ஒன்றாகி - தன் மேன்மையோடு அணைந்திருப்பது ஒரு வடிவைத் தான் கொள்ளப்பெற்றதோ? ஒன்றாகி - பின்பு ஸர்வசக்தியான தானே 'இவ்வடிவைக் கொள்ள' என்னினும் ஒண்ணாதபடி அத்விதீயமாய் இருக்கிறபடி. பூமி, ப்ரளயத்திலே அகப்பட்டவாறே, நீருக்கும் சேற்றுக் கும் இறாயாத வடிவைக்கொண்ட இத்தனை அவன்தான்; அது அவன் கொண்ட வடிவாகையாலே அழிவுக்கு இட்ட வடிவுதனக்கே ஆலத்தி வழிக்க வேண்டி இருக்கும்; பன்றியாம் தேசிறே"

தி. வா. மொ. 1:9:2-36

[அத்விதீயம் - தன்னைப்போலும் பிறிதொன்று இல்லாதது]

"வல்லெயிற்றுக் கேழலுமாய்"

"வலிதான எயிறுகளை உடைய வராஹமுமாய். எயிற்றுக்கு வன்மை யாவது 'ஊன்றிடந்து எயிற்றிற்கொண்ட' என்கிறபடியே அண்டபித்தி யிலே ஒட்டின பூமியை மறுபாடு உருவக்குத்தி இடந்து எடுத்து, தன் பக்கலிலே தரிக்கத் தக்க பலம். கேழலாக வேண்டிற்று, ப்ரளயங்கதை யான பூமியை எடுக்கும்போது நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத வடிவு கொண்டு எடுக்க வேண்டுமாகையாலே. நீரும் சேறும் காணப் பணைக் கும்படியிறே வராஹஜாதி இருப்பது"

"'ஆய்' என்றது - அவ் அவதாரத்தில் புரையற்று இருக்கை. மாயா ம்ருகத்தை மோந்துபார்த்து 'ராக்ஷஸகந்தம் உண்டு' என்று வெருவி யோடிப் போயிற்றினவிறே மற்றுண்டான ம்ருகங்கள். அப்படியன்றிக்கே, ஸஜாதீயங்கள் மோந்துபார்த்து 'தன்னினம்' என்று விஶ்வஸிக்கும்படி இருக்கை. மநுஷ்ய யோநியிலே அவதரித்த இடத்தில் ஈஶ்வரத்வாபிமாந கந்தம் அற்று 'ஆத்மாநம் மாநுஷம மந்யே' என்றிருந்தாப்போலேயாய்த்து திர்யக்யோநியிலே அவதரித்தாலும் இருக்கும்படி. 'மானமிலாப் பன்றியாம்' என்றாரிறே இவர் திருமகளார். மானமிலாமையாவது ஈஶ்வரத்வாபிமாநம் மறந்தும் இல்லாதபடியிருக்கை. 'வராஹகல்பம் வாராநிற்கச் செய்தே, ஸ்ரீ வராஹ நாயனார்க்கு முத்தக்காசை அமுது செய்விப்பது என்று கிடந்ததாய், 'இதென்ன மெய்ப்பாடுதான்!' என்று நஞ்சீயர் வித்தராய் அருளுவர்' என்று ப்ரஸித்தமிறே."

பெரி. தி. 4:8:8. ம. மா. மு. உரை.

"கேழல் திருவுருவாயிற்று"

"அழிவுக்கு இட்ட வடிவுதனக்கே ஆலத்தி வழிக்க வேண்டி இருந்தபடி. ஆஶ்ரித ரக்ஷணத்துக்காக வந்து தன்னைப் பேணாதே ஒழிய ஒழிய

அதுதானே நிறம்பெறும்படியாய்க் காணும் இருப்பது. 'மானமிலாப் பன்றியாம் தேசு' என்னும்படியே 'மாசுடம்பில் நீர்வாரா' எங்கேனும் உண்டான அழுக்கும் வந்துசேரும்படி இருப்பது ஒரு வடிவைக்கொண்டு. 'மானமிலாப் பன்றியாம்' ஈச்வரத்வம் பின்னாட்டாது இருக்கை. ஸஜாதீயங்கள் மோந்துபார்த்து 'தன்னினம்' என்று விச்வஸிக்கும்படி அகவாயில் புரையற்று இருக்கை. மாயாம்ருகத்தை மோந்து பார்த்து, 'ராக்ஷஸ கந்தம் உண்டு' என்று போயிற்றினவிறே ம்ருகங்கள். 'பன்றியாம் தேசுடைய தேவர்' இவ்வடிவு கொண்டிலனாகில் அருமந்த தேஜஸை யெல்லாம் இழக்கும் அத்தனையாகாதே. நித்யஸூரிகளுக்கு ஓலக்கம் கொடுத்து அங்கே இருப்பதிற்காட்டிலும் தாழவிட்டத்தால் வந்த ஏற்றம். திவா. மொ. 7:5:5-36

4. பாழியான்

" பாழி - இடமுடைமை என்னுதல்; வலியென்னுதல் " பாவை. 4 நாயனார் உரை.

5. ஆழியான்

" ஆழியான் - க்ருத்ரிமத்தில் மிகவும் அவகாஹநம் உடையவன் என்னுதல்; கையிலே திருவாழியை உடையவன் என்னுதல் "

பெரி. தி. 1:9:7 ம. மா. மூ. உரை.

[அவகாஹநம் - தோய்தல்]

" ஆழிவல்லான் - பிராட்டியை எனக்கு என்ன இட்டுப்பிறத்தல், திருவடி தோளிலே நல்தரிக்க இருத்தல், கை பேராமல் திருவாழியைப் பிடித்தல் செய்யுமதாய்த்து ஸர்வாதிகத்வத்துக்கு லக்ஷணம்"

தி. பல். 7. பெ. உரை.

6. அருளே

" சேமம் செங்கோன் அருளே "

" அருளே - அவன் க்ருபை அல்லது இல்லை. 'அவ்அருள் அல்லன அருளும் அல்ல. இடையீடான பக்த்யாதிகளும் வேண்டா "

தி. வி. 27 பெ. உரை.

" நக்கபிரானும் அன்று உய்யக் கொண்டது நாராயணன் அருளே "

" ஸர்வ ஸ்வாமியான அவன் ப்ரஸாதத்தாலே என்று த்ருதியையாதல். இவன் புருஷகாரமாக அவன் ப்ரஸாதத்தைப் பண்ணிக் கொடுத்து என்று த்விதீயையாதல் " தி. வா. மொ. 4:10:8-24

" உனதருளே, பிரியா அடிமை என்னைக் கொண்டாய்"

" உனது அருள் இத்யாதி - அருளாலே என்னுதல்; அருள் ஏய்ந்த - அருளோடே கூடின என்னுதல். நிர்ஹேதுக க்ருபையாலே என்னை ஆத்மாந்த தாஸ்யத்திலே ஸ்வீகரித்தாய் "

தி. வா. மொ. 5:8:7-24

(4)

5

**கள்வனேன் ஆனேன்; படிறுசெய் திருப்பேன்;**
**கண்டவா திரிதந்தே னேலும்,**
**தெள்ளியேன் ஆனேன்; செல்கதிக் கமைந்தேன்;**
**சிக்கெனத் திருவருள் பெற்றேன்;**
**உள்எலாம் உருகிக் குரல்தழுத் தொழிந்தேன்;**
**உடம்பெலாம் கண்ணநீர் சோர,**
**நள்இருள் அளவும் பகலுநான் அழைப்பன்**
**நாராய ணாஎன்னும் நாமம்.**

ப. ரை : **கள்வனேன் ஆனேன்** - *அவன் உடைமையான உயிரைக் களவாடியவன் ஆயினேன்;* **படிறு செய்து இருப்பேன்** - *அறியாமையால் மிக்க தீம்புகளை நிறுத்தாமல் செய்து கொண்டிருப்பவன் ஆயினேன்.* **கண்டவா திரிதந்தேனேலும்** - *நூல்களால் தவறு என்று அறிந்த பின்னும் கண்டவாறு தீமைகளில் உழன்று வந்தேன் என்றாலும்,* **தெள்ளியேன் ஆனேன்** - *"அவன் உடையவன், நான் உடைமை" என்னும் தெளிவு உடையேன் ஆயினேன்;* **செல்கதிக்கு அமைந்தேன்** - *திருநாட்டுக்குச் செல்வதற்கு உரிய தகுதி நிறைந்தவன் ஆயினேன்;* **சிக்கெனத் திருவருள் பெற்றேன்** - *இனி மீளாதவாறு அவன் அருளைப் பெற்றேன்;* **உள் எலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன்** - *உடம்பின் உட்பகுதி எல்லாம் நீராய்க் கரைந்து குரல் தழுதழுக்கும்படி ஆயினேன்;* **உடம்பு எலாம் கண்ணநீர் சோர** - *உடம்பு எங்கும் மகிழ்ச்சிக் கண்ணீர் பெருகுமாறு,* **நள் இருள் அளவும் பகலும்** - *இன்பம் துய்க்கும் இரவிலும் அதற்கு உரிய பொருள் தேடும் பகலிலும்,* **நான் அழைப்பன் நாராயணா என்னும் நாமம்** - *நாராயணா என்னும் திருப்பெயரைச் சொல்லி வந்தேன்.*

சி. கு : *தெள்ளியேன் - தெளிந்த அறிவுடையேன். செல்கதி - வீடுபேறு. 'உள் எலாம் உருகி' என்பதற்கு நெஞ்சம் முழுதும் என்றும் உரைப்பர். 'எல்லாம்' என்பது எஞ்சாமைப்பொருட்டாய் வருவதோர் உரிச்சொல் என்பாரும் உளர்.*

வியா : **அஞ்சாம் பாட்டு : கள்வனேன் ஆனேன்** - விறகு களவு கண்டவனிற்காட்டில் ரத்நாபஹாரம் பண்ணினவனுக்குப் பாபம் ப்ரசுரமாய் இருக்கும்; சூத்ரன் தநத்தை[1] அபஹரித்தவனிற்காட்டில் ப்ராஹ்மணன் தநத்தை[2] அபஹரித்த வனுக்குப் பாபம் விஞ்சி இருக்கும்; த்ரவ்யங்களில் தலையான ஆத்ம வஸ்துவை

---

வி : ஐந்தாம் பாட்டு : **கள்வனேன் ஆனேன்** - *விறகு களவு கண்டவனைக் காட்டிலும் மணி களவு கண்டவனுக்குத் தீவினைப்பயன் மிகுந்து இருக்கும். வேளாளன் பொருளைக் கவர்ந்தவனைக்காட்டிலும் வேதியன் பொருளைக் கவர்ந்தவனுக்குத் தீவினைப்பயன் விஞ்சி இருக்கும். இவர் களவாடியதோ*

---

**5.** 3 : 5 உடம்பெல்லாம்.

1. சூத்ர தநத்தை. 2. ப்ராஹ்மண தநத்தை.

யாயிற்று[1] அபஹரித்தது. ஸர்வேஶ்வரன் உடைமையை ஆயிற்று[2] 'என்னது' என்று போந்தது. **படிறு செய்து இருப்பேன்** - மிடறு தின்றால் சொறிய ஒண்ணாதாப் போலே, பரத்யதோஹரனானேன். நான் தேஹாத்மாபிமாநம் பண்ணிப் போந்ததுவே அன்றிக்கே, "ஈஶ்வர சேஷம் இவ்ஆத்ம வஸ்து" என்று இருப்பான் ஒரு ஆஸ்திகன் உண்டாகில், "தேஹாதிரிக்தமாய் இருப்பது ஒரு வஸ்துவாவது என்? ஈஶ்வரனாவது என்?" என்று காணக் காணப் பறித்தேன். **கண்டவா திரிதந்தேனேலும்** - முன்னடி தோற்றாமையாலே கைவந்தபடி பரிமாறினேன் இத்தனை போக்கி, சாஸ்த்ரங்கள் 'ஆகாது' என்றத்தை அறிந்தும் மீண்டிலேன். "ந்ருபசு:". அல்லாதவற்றோடு[3] பரிமாறும் அத்தை ஜநநி பக்கலிலேயும் பரிமாறத் தேடும்.

**தெள்ளியேன் ஆனேன்** - இப்படி இருக்கச் செய்தே, ஸாராஸார விவேகம் பண்ணிச் செய்யக் கடவது செய்து, அல்லாதது தவிர்ந்து போருவாரைப் போலே விவேகம் உடையேன் ஆனேன். **செல்கதிக்கு அமைந்தேன்** - நித்ய ஸம்ஸாரியாகைக்கு உறுப்பானவற்றைச்[4] செய்து போந்த நான், "இனி இவன்[5] ஸம்ஸாரத்துக்கு ஆளாகமாட்டான், பரமபதத்துக்கு ஆளாம் அத்தனை" என்னும்படி சமைந்தேன். செல்லக்கடவ கதி உண்டு - பரமபதம், அங்குத்தைக்கு ஆளாம்படி பூர்ணன் ஆனேன். "கண்டவா திரிதந்தேன்" என்றீர், தெள்ளியேன் ஆனேன்

---

*செல்வத்துள் செல்வமான உயிர்! இவர் 'எனது' என்று போந்ததோ பெருமானது உடைமை!* **படிறு செய்து இருப்பேன்** - *மிடறு தின்றால்[6] சொறிந்து போக்க ஒண்ணாதாற் போலே தொடர்ந்து தீம்புகளைச் செய்து வந்தேன். கண் முகப்பே களவு செய்பவன் ஆயினேன். நான் உடலையே உயிராகக் கருதி வாழ்ந்தேன்; அத்தோடு அமையாமல் 'இறைவன் அடிமை இவ்உயிர்' என்று கருதும் ஒருவனைக் கண்டால், 'உடலைக் கடந்து நிற்கும் பொருள் ஒன்று உண்டோ? இறைவன் என்பவன் யார்?' என்று காணக் காணப் பறித்தேன்.* **கண்டவா திரிதந்தேனேலும்** - *முன்பு[7] அறியாமையாலே முறையின்றிப் பெண்களோடு பரிமாறினேன்; அதுவேயன்றி, நூல்கள் அதனை ஆகாது என்று கூறுவது அறிந்தும் மீண்டிலேன். யான் "மனிதவிலங்கு" (ஸ்தோ. ர. 58). இவ்விலங்கு பிற பெண்களோடு கூடிப் பெறும் பரிமாற்றத்தைத்[8] தாயினிடத்திலேயும் பரிமாறத் தேடலாயிற்று.*

**தெள்ளியேன் ஆனேன்** - *இப்படி இருக்கும்போது, தக்கது தகாதது பகுத்தறிந்து, செய்தற்கு உரியது செய்து, அல்லாதது தவிர்ந்து ஒழுகுவாரைப் போலே தெளிவுடையேன் ஆயினேன்.* **செல்கதிக்கு அமைந்தேன்** - *எக்காலத்திலும் உலக வாழ்க்கையில் உழல்வதற்கு உறுப்பானவற்றைச் செய்து வந்த நான், "இனி இவன் உலக வாழ்க்கைக்கு ஆளாக மாட்டான், திருநாட்டுக்கே ஆளாவான்" என்று சொல்லும்வண்ணம் சமைந்தேன். செல்வதற்கு உரிய கதி - திருநாடு, அவ்இடத்திற்கு ஆளாகும் வகையில் சான்றோன் ஆயினேன். "கண்டவா திரிதந்தேன்" என்றீர்; தெள்ளியேன் ஆயினேன்" என்றீர். இவை ஒன்றுக்கு*

---

1, 2. ஆய்த்து. 3. அல்லாதவைத்தோடு. 4. உறுப்பானவத்தைச். 5. அவன்.
6. மிடறு தின்னல் - கழுத்தில் அரிப்பு உண்டாதல். 7. இது வியாக்கியானத்தில் முன்னடி என்று வருகிறது. முன்னாடி என்னும் பேச்சு வழக்கினை ஒட்டியது அச்சொல். 8. பரிமாற்றம் - கலவி; உடலுறவு.

**என்றீர், வ்யாஹத பாஷணமாய் இருந்ததீ! என்ன, சிக்கெனத் திருவருள் பெற்றேன் - இனி மீளாதபடி அருளைப் பெற்றேன்.**

**நீர் பெற்ற பேறுதான் என் என்ன, உள் எல்லாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன் - உள் எலும்பும் நரம்பும் அற உருகி அதுதான் த்வநியில் தழுதழுப்பிலே தெரியும்படி ஆனேன். உடம்பு எல்லாம் கண்ண நீர் சோர - "ஆஹ்லாத சீத்நேத்ராம்புः புலகீக்ருத காத்ரவாந்"; உடம்பு அடங்க பஞ்சஸரமும் த்ரி ஸரமும் இட்டாப் போலே கண்ண நீர் வெள்ளமிட்டபடி. நள் இருள் அளவும் பகலும் நான் அழைப்பன் நாராயணா என்னும் நாமம் - விஷயாநுபவம் பண்ணிக் களித்திருக்கும் போதொடு, விஷயாநுபவம் பண்ணுகைக்கு அர்த்தார்ஜநம் பண்ணும் போதொடு வாசி அற எனக்குத் திருநாமம் சொல்லுகையே யாத்ரையாகப் பெற்றேன்.**

---

*ஒன்று மாறுபட்ட பேச்சாக உள்ளனவே என்று சொல்லச் 'சிக்கென திருவருள் பெற்றேன்'' என்கிறார்.* **சிக்கெனத் திருவருள் பெற்றேன்** - *இனி மீளாதபடி அருளைப் பெற்றேன்.*

*''நீர் பெற்ற பேறுதான் யாது?'' என்று வினவ, ''உருகினேன்'' என்கிறார்.* **உள் எலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன் - உள்** *எலும்பும் நரம்பும் அற[1] உருகி, அதுதான் குரல் தழுதழுப்பிலே* **தெரியும்படி** *ஆயினேன்.* **உடம்பு எலாம் கண்ண நீர் சோர - மகிழ்ச்சியாலே ஏற்படும் குளிர்ந்த கண்ணீரையும் மயிர்க் கூச்செறியும் உடம்பையும் உடையவன்''** (வி. த.) என்னும் நிலையினன் ஆயினேன். *உடம்பு எல்லாம் ஐந்து வட முத்துமாலையும், மூன்று வட முத்துமாலையும் இட்டதுபோலே கண்ணீர் வெள்ளம் பெருகலாயிற்று.* **நள் இருள் அளவும் பகலும் நான் அழைப்பன் நாராயணா என்னும் நாமம்** - *இன்பம் துய்த்துக் களித்திருக்கும் இரவுப்பொழுதோடு அவ்இன்ப நுகர்ச்சிக்குப் பொருள் தேடும் பகற்பொழுதோடு வேறுபாடு இல்லாமல் எனக்குத் திருப்பெயர் சொல்லுவதே வேலையாக அமையப் பெற்றேன்.*

**ஒப்புமைப் பகுதி**

1. **கள்வனேன்**

*'' சூதனாய்க் கள்வனாகி - தம்முடைய பூர்வ வ்ருத்தம் அருளிச்செய்கிறார். சூதாவது : பஶ்யதோஹரத்வம். களவாவது பர த்ரவ்யத்தை என்னது என்றிருக்கை; ப்ரமாண விஷயமான அர்த்தத்தை இல்லையென்கை. இனி காஷ்டாபஹாரம் பண்ணினவனுக்கும் ரத்நாபஹாரம் பண்ணின வனுக்கும் அபஹாரம் ஒத்திருக்க, த்ரவ்ய வைஷம்யத்தாலே தோஷமும் நெடுவாசிபட்டிருக்கும்; சண்டாள த்ரவ்யத்தை அபஹரித்தார்க்கும் வஸிஷ்ட த்ரவ்யத்தை அபஹரித்தார்க்கும் த்ரவ்யம் ஒன்றானாலும் ஸ்வவான்களுடைய வைஷம்யத்தாலே தோஷம் நெடுவாசிபட்டிருக்கும். இத் த்ரவ்யம் ஸ்ரீகௌஸ்துபம்போலே ஈச்ரவனுக்கு ஸ்ப்ருஹணீயமான*

---

1. அற - மிகவும்.

ஆத்ம த்ரவ்யம். உடையவனும் ஸர்வேச்வரனாகையாலே தோஷத்துக்கு அவதியில்லை என்கை. ஆக, களவாகிறது ஈச்வர ஶேஷமான 'ஆத்ம வஸ்துவை' என்னது என்றிருக்கை. சூதாவது பச்யதோஹரத்வம். அதாவது ஸத்வ்ருத்தனாய் இருப்பான் ஒருவன் பரஶேஷமாய்க்கொண்டு ஆத்மஸ்வரூபம் உண்டு, ஶேஷியான ஈச்வரனும் உண்டு, தர்மாதர்மங்களும் உண்டு என்று இருந்தால், இவை எல்லாம் பொய்காண் என்று அவனை விப்ரலம்பித்து தன்படியாக்கிக் கொள்ளுகை.

திவ. மா. 16 பெ. உரை.

[பூர்வ வ்ருத்தம் - முன்னைய ஒழுக்கம். பஶ்யதோஹரத்வம் - கண் முன்னே கவர்தல். பர த்ரவ்யம் - மற்றவர் செல்வம். ப்ரமாண விஷயம் - மேற்கோளால் நிறுவப்பட்ட கருத்து. காஷ்டாபஹாரம் - குச்சித்திருட்டு; சிறிய விறகு கட்டையைத் திருடுதல். வைஷம்யம் - சிறப்பு. நெடுவாசி - மிக்க வேறுபாடு. ஸ்வவான் - அவரவர். ஸ்ப்ருஹணீயம் ஆசைப்படத் தகுந்தது. விப்ரலம்பித்தல் - மனம் மாற்றுதல்]

" வன் கள்வனேன் - களவாவது பரத்ரவ்யாபஹாரம். வலிய களவாவது 'சோரேணாத்மாபஹாரிணா' என்கிறபடியே, பகவத் சேஷமான ஆத்மவஸ்துவை அபஹரிக்கை. த்ரவ்யங்களில் தலையான வஸ்து ஆத்ம வஸ்து, உடையவன் ஸர்வாதிகன் " திவ. வா. மொ. 5 : 1 : 4-24

" நம்பினேன் பிறர் பொருள் தன்னையும் "

" பிறர் என்று - ஒரு விஷயத்தை விவக்ஷிக்கிறது - த்ரவ்யத்தினுடைய ச்லாக்யதைக்கும் உடையவனுடைய சலாக்யதைக்கும் தக்கபடி கனத்திறே ப்ராயச்சித்தம் இருப்பது. ப்ராஹ்மணனுடைய த்ரவ்யத்தை அபஹரித்தாப் போல் அன்றிறே சண்டாளனுடைய த்ரவ்யத்தை அபஹரித்தால் ப்ராயச்சித்தம் இருப்பது. த்ரவ்யங்களிலும் இப்படியே குரு லகு ஸ்வபாவமிருக்கும்படி. ஆத்மவஸ்து கௌஸ்துவ ஸ்தாநீயமாய், இத்தை உடையவன் ஸர்வேச்வரனாயிறே இருப்பது "

—க. நு. சி. 5 ஈடு.

[விவக்ஷிக்கிறது - விளக்குகிறது. ச்லாக்யதை - உயர்வு. ப்ராயச்சித்தம் - கழுவாய். குரு லகு - கனமும் கனமின்மையும். கௌஸ்துபஸ்தாநீயம் - கௌத்துபமணி இருக்கும் இடத்தில் அதற்கு இணையாக இருப்பது.]

## 2. தெளிவுடைமை

" தெள்ளியார் - தந்தாமுக்கும் சிலவுண்டேயாகிலும், அவற்றைப் பொகட்டு அவன் கைபார்த்திருக்குமவர்கள் "

திவ. வா. மொ. 5:7:10-36

## 3. சிக்கெனப் பெறுதல்

" சிக்கென - இது எல்லாக் குளிக்கும் நிற்கும். யாவதாத்மபாவி "

திவ. மா. 35 பெ. உரை.

[யாவதாத்மபாவி - ஆத்மா இருக்கும்வரை இருப்பது]

4. இரவும் பகலும்

*"இராப் பகல் - உறங்கக்கண்ட இராவோடு, விழித்திருக்கக் கண்ட பகலோடு வாசியற......"* *தி. வா. மொ. 2:1:3-24*

*"காலை வெய்யோற்கு முன்னோட்டுக் கொடுத்த கங்குல் குறும்பர் மாலை வெய்யோன்படி வையகம் பாவுவர்"*

*"'நந்தந்த்யுதித ஆதித்யே' விடிந்தவாறே அபிமதவிஷயத்தை ஸாதிக்கைக்கு த்ரவ்யார்ஜநம் பண்ணுகைக்கு ஈடான காலம் வந்தது என்று உகவா நிற்பர்கள். 'நந்தந்த்யஸ்தமிதேரவௌ' அஸ்தமித்தவாறே இவற்றைக் கொண்டு பிறரறியாதபடி அவ்விஷயங்களை புஜிக்கக் காலம் வந்தது என்று உகவாநிற்பர்கள்!"* *தி. வி. 93. பெ. உரை*

(5)

## 6

**எம்பிரான் எந்தை என்னுடைச் சுற்றம்**
**எனக்கர சென்னுடை வாணாள்**
**அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி,**
**அவர்உயிர் செகுத்தஎம் அண்ணல்;**
**வம்புலாம் சோலை மாமதிள் தஞ்சை**
**மாமணிக் கோயிலே வணங்கி,**
**நம்பிகாள்! உய்ய நான்கண்டு கொண்டேன்**
**நாராய ணாஎன்னும் நாமம்.**

**ப. ரை :** **நம்பிகாள்** - இறை இன்பம் சான்றவர்களே! **எம்பிரான்** - எனக்கு உதவுபவனும், **எந்தை** - எனக்குத் தகப்பனும், **என்னுடைச் சுற்றம்** - எனக்கு எல்லா உறவுமுறையும், **எனக்கு அரசு** - என்னைக் குறும்பு அறுத்து ஆண்டவனும், **என்னுடை வாணாள்** - எனது வாழ்நாளும், **அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி அவர் உயிர் செகுத்த எம் அண்ணல்** - அம்பினால் அரக்கர் அஞ்சுமாறு அவர்கள் உயிரை முடித்த எங்கள் தலைவனும் ஆகிய பெருமான் எந்நாளும் உறையும், **வம்பு உலாம் சோலை மா மதிள் தஞ்சை மா மணிக்கோயிலே வணங்கி** - மணம் வீசும் சோலையையும் பெரிய மதிளையும் உடைய தஞ்சை மா மணிக் கோயிலை வணங்கி, **நாராயணா என்னும் நாமம்** - நாராயணா என்னும் திருப்பெயரை, **உய்ய நான் கண்டுகொண்டேன்** - நான் உய்யும்வண்ணம் கண்டு கொண்டேன்.

**சி. கு :** **எந்தை** - எம் தந்தை, என் தந்தை என இருவாறும் பொருள் படும் கிளைப்பெயர். **அண்ணல்** - பெருமை உடையவன். **தஞ்சை மாமணிக் கோயில்** - தஞ்சாவூரிலிருந்து திருவையாறு செல்லும் சாலையில் வெண்ணாற்றங் கரையில் அடுத்து அடுத்து அமைந்துள்ள மூன்று திருமால் கோயில்களுள் ஒன்று.

வியா : **ஆறாம் பாட்டு** : "இத்தை நீர் போர ஆதரியாநின்றீர், இது தனக்கு அர்த்தம் என்?'' என்னச் சொல்லுகிறார். இதினுடைய பாடத்தை ஜபித்து அத்தாலே பலம் பெற இருத்தல், இத்தாலே பாபத்தைப் போக்கிக் கர்ம யோகத்துக்கு உடலாக்குதல் செய்கை அன்றிக்கே அர்த்தாநுஸந்தாநத்தாலே பேறு என்று தமக்கு பக்ஷமாகையாலே அர்த்தத்தைச் சொல்லுகிறார். நம்மாழ்வாரும், திருமந்த்ரம் ஓர் இடத்திலே ப்ரஸ்துதமானால் முன்னேயாதல் பின்னேயாதல் அர்த்தத்தைச் சொல்லிப் போருவர், அர்த்த ப்ராதாந்யம் தோற்ற; ஜ்ஞாநாந் மோக்ஷமாக வேண்டுகையாலே.

**எம்பிரான்** - எனக்கு உபகாரகன். **எந்தை** - எனக்கு ஜநகன். **என்னுடைச் சுற்றம்** - என் குடல் துடக்கான எல்லா உறவு முறையும் ஆனவன். **எனக்கு அரசு** - என்னை வன்னியம் அறுத்து ஆண்டவன். **என்னுடை வாணாள்** - என்னுடைய ஆயுஸ்ஸு. **அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி அவர் உயிர் செகுத்த எம் அண்ணல்** - ஸங்கல்பத்தால் அன்றிக்கே, அம்பாலே ராக்ஷஸர் அஞ்சும்படி நெருக்கி அவர்கள் உயிரை முடித்த என் ஸ்வாமி. ஸ்வாமித்வத்தோடே தலைக்கட்டிற்றாய்[1] நின்றது. இத்தால் சொல்லிற்று ஆயிற்று[2] - **''மாதா பிதா ப்ராதா நிவாஸஶ் ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:''** என்கிறபடியே.

---

**வி: ஆறாம் பாட்டு** : இத்திருப்பெயரை நீர் மிகவும் போற்றிக் கொண்டிருக்கிறீர்; இதற்குப் பொருள் யாது?'' என்று வினவ, அதனைச் சொல்லுகிறார். இதன் பாடத்தை உருவேற்றிப் பயன் பெறுதலோ இது கொண்டு தீவினையைப் போக்கி இதனைக் கன்ம யோகத்துக்கு உடலாக்குதலோ[3] செய்யாமல் இதன் பொருளைச் சிந்தித்தாலே பேறு கிட்டும் என்பது இவர்தம் துணிபு. ஆகையாலே மந்திரத்தின் பொருளைச் சொல்லுகிறார். நம்மாழ்வாரும் திருமந்திரம் ஓர் இடத்தில் பேசப் பெறுமானால் அவ்விடத்திற்கு முன்போ பின்போ அதனைப் பொருட்சிறப்புத் தோற்ற விளக்கிச் செல்வர். இதற்குக் காரணம் திருமந்திரத்தின் பொருளை உணர்வதனாலேயே வீடுபேறு உண்டாகும் என்பதாம்.

**எம்பிரான்** - எனக்கு உதவி புரிபவன். **எந்தை** - எனக்குத் தந்தை. **என்னுடைச் சுற்றம்** - எனக்குக் குடல்துடக்கான[4] எல்லா உறவு முறையும் ஆனவன். **எனக்கு அரசு** - என்னை வன்னியம்[5] அறுத்து ஆண்டவன். **என்னுடை வாணாள்** - என்னுடைய வாழ்நாள். **அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி அவர் உயிர் செகுத்த எம் அண்ணல்** - அகவாய்த் துணிபால் அன்றி அம்பாலே அரக்கர் அஞ்சுமாறு நெருக்கி அவர்கள் உயிரை முடித்த என் உடையவன். இறைவனைக் குறித்த இப்பாராட்டுரை அவன் தலைமைத்தன்மையோடு தலைக்கட்டி[6] நின்றது. **"தாயும், தந்தையும், உடன் பிறந்தவனும், தங்கும் இடமும், வீடு பேற்றுக்கு வழியும், நண்பனும், பேறும் நாராயணனே''** (ஸுபா. 16) என்கிறது உபநிடதம். அது போலே இவரும் தனக்கு எல்லாம் இறைவனே என்கிறார்.

---

1. தலைக்கட்டுத்தாய். 2. சொல்லுத்தாய்த்து.
3. உடலாக்குதல் - முதலாக ஆக்குதல்; அடிப்படையாக அமைத்தல். 4. குடல்துடக்கு - உடல் தொடர்பு. 5. வன்னியம் - குறும்பு. 6. தலைக்கட்டுதல் - முடிதல்; நிறைவுபெறுதல்.

"இதுதான் உமக்கு வந்தபடி என்?" என்ன, **வம்புலாம் சோலை மாமதிள் தஞ்சை மாமணிக் கோயிலே வணங்கி** - நித்ய வஸந்தமான சோலையையும் மாமதிளையும் உடைத்தான தஞ்சை மாமணிக் கோயிலே வணங்கி வந்தது. "எல்லா உறவு முறையும் தானே" என்று தோற்றும்படி அவன் வந்து நிற்கிற ஸௌலப்யத்தை அநுஸந்திக்கையாலே வந்தது. **நம்பிகாள்** - பகவத் அதிரித்த[1] விஷயங்களைப் பற்றி தேஹ போஷணபரராய் இருக்கிற அவர்களைச் சொல்லிற்றாதல்;[2] பகவத் குணாநுபவம் பண்ணி அத்தாலே பூர்ணராய் இருக்கிற அவர்களைச் சொல்லிற்றாதல். **உய்ய நான் கண்டுகொண்டேன்** - நீங்கள் எல்லாம் புறம்பே போய் க்லேசப்படாநிற்க நான் உஜ்ஜீவிக்கும்படி காணப்பெற்றேன் என்னுதல்; நீங்கள் உஜ்ஜீவிக்கும்[3] விரகு அறிந்து கரையேறினாப் போலே நானும் கரையேறப் பெற்றேன் என்னுதல். **நாராயணா என்னும் நாமம்** - ஸர்வ வித பந்துவும் அவனே என்கிற அர்த்தத்துக்கு வாசகமான திருநாமத்தைக் காணப் பெற்றேன்.

---

*"இதுதான் உமக்கு எவ்வாறு உண்டாயிற்று?" என்று வினவ, "தஞ்சை மாமணிக் கோயிலை வணங்கியதால்" என்கிறார்.* **"வம்பு உலாம் சோலை மாமதிள் தஞ்சை மாமணிக் கோயிலே வணங்கி** - *எக்காலத்தும் செழிப்பு மாறாச் சோலையினையும், மாமதிளினையும் உடைய தஞ்சை மாமணிக் கோயிலை வணங்கியதால் வந்தது. "எல்லா உறவு முறையும்தானே" என்று தோற்றும்படி அவன் வந்து நிற்கும் எளிமையினை எண்ணுவதாலே வந்தது.* **நம்பிகாள்!** - *இஃது இறைவன் நீங்கலான பிற பொருள்களைக் கைக்கொண்டு உடல் வளர்ப்பவர்களைச் சொல்லிற்று எனலாம். அன்று எனில், இறைவன் குணத்தில் படிந்து அதனாலே சால்புடையராய் இருப்பவர்களைச் சொல்லிற்று எனலாம்.* **உய்ய நான் கண்டு கொண்டேன்** - *நீங்கள் எல்லாம் புறம்பே போய் வருந்திக் கொண்டிருக்க, நான் உய்யும் விரகு[4] காணப்பெற்றேன் என்னுதல்; நீங்கள் உய்யும் விரகு அறிந்து கரையேறினாற் போலே நானும் கரையேறப் பெற்றேன் என்னுதல்;* **நாராயணா என்னும் நாமம்** - *எவ்வகை உறவும் அவனே என்னும் கருத்தைச் சுட்டும் திருப் பெயரைக் காணப்பெற்றேன்.*

## ஒப்புமைப் பகுதி

1. எம்பிரான்

*" எம்பிரான் - என்னை எழுதிக்கொண்டவன் "*

*தி.ச.வி. 73 பெ.உரை.*

*" எம்பிரானார் - எனக்கு உபகாரகரானவர் "*

*தி.மா. 37 பெ.உரை.*

2. எந்தை

*" எந்தை - விட ஒண்ணாத ப்ராப்தி; ஸௌலப்யத்தாலும் அழகாலும் தோற்பித்தபடி சொல்லிற்று என்றுமாம் "*

*தி.வா.மொ. 3:10:1 - 24*

*[ஸௌலப்யம் - எளிதில் அடையக்கூடிய நிலை]*

---

1. பகவத் வ்யதிரிக்த. 2. சொல்லித்தாதல். 3. உஜ்ஜீவிக்கும்படி.
4. விரகு - வழி.

'' *முந்தைத் தாய் தந்தையே! - 'தாய்', 'தமப்பன்' என்று தோற்றி மணற் கொட்டகம் போலே அழிந்து போகாதே அழியாத தாயும் தகப்பனும்''*

*தி. வா. மொ. 5:7:7-24*

'' *மாதாவினைப் பிதுவை - சரீரத்துக்கு உத்பாதகராய் ஸம்ஸார வர்த்தக ராயிறே அல்லாத மாதாபிதாக்கள் இருப்பது. இவன் இதில்நின்றும் விடுவித்து ரக்ஷிக்குமவன் ஆயிற்று''*

*தி. வி. 95*

*[உத்பாதகர் - தோற்றுவித்தவர். ஸம்ஸார வர்த்தகர்- உலக வாழ்வை வளர்ப்பவர்.]*

3. அம்பினால் நெருக்குதல்

'' *அம்பு எரிஉய்த்தவர் - சராக்நியை ப்ரவேசிப்பித்தவர். சக்ரவர்த்தி திருமகன் இத்தைக் கைதொட்டு சிக்ஷித்து குணவானாக்கிப் பின்பிறே போகவிட்டது; ஆகையாலே கேவலாக்நி ப்ரவேசிக்கக் கூசும், ஊரிலே தன் வாய் வலியாலே புக்கது ஆயிற்று. இப்படி தான் முதுகிட்டாரையும் கூட குணவான்களாக்கும்படி ஏக்கற்றவர்''*

*தி. வா. மொ. 4:2:8-36*

*[சராக்நி - எரியும் அம்பு. ப்ரவேசிப்பித்தல் - ஊடுருவிச் செல்லவிடுதல். சிக்ஷித்து - திருத்தி. குணவானாக்கி - வில் நாணில் பொருந்தியவனாக்கி; பண்புடையவனாக்கி. கேவலாக்நி - சாதாரண நெருப்பு.]*

'' *தன்னுடைய வரிசிலை வாயில் பெய்து - தனக்கு அஸாதாரணமாய் அழகுக்கு உடலான வரியை உடைத்தாய் இருந்துள்ள ஸ்ரீசார்ங்கத் தினுடைய வாயிலே புகுவித்து. வில்லுக்கு வாய் அம்பிறே. வாயான அம்பிலே புகும்படி ப்ரவேசிப்பித்து. ஸர்ப்பம் நாவாலே விழுங்குமா போலே ஆய்த்து வில்லும் அம்பாலே க்ரஸிக்கும்படி. இத்தால், ஈஶ்வரத்வப் பிடாரால் அன்றிக்கே 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்கிற அவதாரத்தில் மெய்ப்பாடு தோன்ற நின்று அம்புகளாலே அழியச் செய்தபடி சொல்லுகிறது''*

*பெரி. தி. 4:3:8 ம. மா. மு. உரை.*

*[அஸாதாரணம் - சிறப்பானது. க்ரஸித்தல் - விழுங்குதல். பிடார் - பெருமை.]*

4. அண்ணல்

'' *அண்ணல் - குறிஞ்சி நிலத்தில் தலைமகன் என்னுதல். ஸர்வஸ்வாமி என்னுதல்''*

*தி. வா. மொ. 3:3:3-36*

'' *அண்ணல் - ...ஈச்வரத்வ உறைப்பை உடையவன்''*

*தி. வா. மொ. 3:6:3-36*

(6)

## 7

இற்பிறப் பறியீர், இவர்அவர் என்னீர்,
இன்னதோர் தன்மைஎன் றுணரீர்,
கற்பகம் புலவர் களைகணென் றுலகில்
கண்டவா தொண்டரைப் பாடும்
சொற்பொருள் ஆளீர்! சொல்லுகேன், வம்மின்;
சூழ்புனல் குடந்தையே தொழுமின்;
நற்பொருள் காண்மின்; பாடிநீர் உய்ம்மின்
நாராய ணாஎன்னும் நாமம்.

ப. ரை: **உலகில் தொண்டரை** - இவ்உலகின்கண்ணே பிறர்க்கு அடிமை செய்து பிழைக்கும் தாழ்ந்தவர்களை, **இல் பிறப்பு அறியீர்** - அவர்களுடைய இல்லத்தின் நிலையும் பிறப்பின் நிலையும் அறியாதவராய், **இவர் அவர் என்னீர்** - இப்பொழுது செல்வரான இவர் பண்டு வறியவராய் இருந்த அவர் என்று அறிய மாட்டாதவராய், **இன்னதோர் தன்மை என்று உணரீர்** - இவனது இயல்பு இப்படிப்பட்டது என்று உணரமாட்டாதவராய், **கற்பகம்** - வேண்டுவன எல்லாம் தரும் கற்பக மரத்தை நிகர்க்கும் வள்ளன்மை உடையவரே! **என்று கண்டவா பாடும்** - என்று நெஞ்சில் தோன்றியவாறு எல்லாம் பாக்கள் புனையும், **சொல் பொருள் ஆளீர்** - சொல்லையும் பொருளையும் ஆள்பவராய் இருப்பீர்! **வம்மின்** - வாருங்கள், **சொல்லுகேன்** - உங்கள் புலமையால் பாடி ஏற்றம் பெறுவதற்குத் தகுந்தவனைச் சொல்லுகிறேன்; **நீர்** - நீவிர், **சூழ் புனல் குடந்தையே தொழுமின்** - நீரால் சூழப்பட்ட திருக்குடந்தையை வணங்குங்கள்; **நற் பொருள் காண்மின்** - நன்றான ஆராவமுதனைக் காணுங்கள்; **நாராயணா என்னும் நாமம் பாடி உய்ம்மின்** - நாராயணா என்னும் பெயரைப் பாடிக் கரைசேருங்கள்.

சி. கு: இற் பிறப்பு - இல்லும் பிறப்பும்; உம்மைத்தொகை. இதனை இல்லின்கண் பிறப்பு என்னும் பொருளில் வந்த ஏழன் தொகையாகக்கொள் வதும் தகும். "இற்பிறப்பு என்ப தொன்றும், இரும்பொறை என்ப தொன்றும்" (கம்பராமாயணம் சுந்தர காண்டம், திருவடி தொழுத படலம் 29) என வருதல் காண்க.

வியா : ஏழாம் பாட்டு : "அல்லாதார்தான் இழக்கிறார் அவிசேஷஜ்ஞ ராகையாலே. விசேஷஜ்ஞராய் என்னோடு ஸஜாதீயராய்க் கவி பாடித் திரிகிற நீங்கள் இழக்கிறது என்?'' என்கிறார்.

---

வி : ஏழாம் பாட்டு : இது புலவர்களை நோக்கிக் கூறுவது. "பிறர் எல்லாம் பகுத்தறிவு இல்லாதவர்கள். அதனாலே நாராயணா என்னும் திருப் பெயரைப் பாடும் பேற்றினை இழக்கிறார்கள். நீங்களோ புலவர்கள்; என் இனத்தவர்கள்; பாப் புனைந்து திரிபவர்கள்; நீங்கள் இழக்கிறது எதனால்?" என்கிறார்.

---

**7.** 1 : 1 இப்பிறப் பறியீர். 1 : 3 இவரிவர் என்னீர்; இவரவர் என்றீர்; இவர் எவர் என்னீர்.

**இற் பிறப்பு அறியீர்** - அவர்கள் கார்ஹஸ்த்யத்தில் நின்ற நிலை அறியிகோள்; அவர்கள் ஜந்மம் அறியிகோள். **இவர் அவர் என்னீர்** - பண்டு தரித்ரனாய் க்லேசப்பட்டுப் போந்தான் ஒருத்தன் இப்போது ஜீவிக்கப் புக்கால், "இது இவன் அளவு அன்றிக்கே இருந்தது; இது வேறே ஒருவன் அடியாக வேணும்" என்று அறியமாட்டாதே ஸ்ரீய:பதியைப் போலே பிறப்பே பிடித்து ஸ்ரீமாநாய்ப் போந்தானாக நினைத்து இருப்புதிகோள். அன்றிக்கே 'இவரவரென்னீர்' என்று ஒரு சொல்லாய், ஒருவர் வாசியும் அறியீர் என்னவும் ஆம். **இன்னது ஓர் தன்மை என்று உணரீர்** - இவனுக்கு உள்ள அளவு இது என்று அறியமாட்டீர்.

**கற்பகம்** - "நினையாதே கொடுக்கும்"[1] என்புதிகோள். **புலவர் களைகண் என்று** - விசேஷஜ்ஞராய் இருப்பார் சிலர் அர்த்தித்து வந்தால் ஒளித்துப் போமவனை, "எங்களுக்கு நிர்வாஹகன்" என்பீர்கள். **உலகில் கண்டவா தொண்டரைப் பாடும்** - லோகத்தில் நீச வ்ருத்திகளாய்த்[2] திரிவாரை, **கண்டவா பாடும்** - ப்ரதிபந்நங்களைச் சொல்லித் திரிகிற. **சொல் பொருள் ஆளீர்** - சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் நிலவரான நீங்கள். சொல்லுடைமைக்கு உங்களிற்காட்டில் இல்லை; ப்ரமேயஜ்ஞாநம் உடையார் உங்கள்அத்தனை இல்லை.

---

**இற் பிறப்பு அறியீர்** - *அவர்கள் இல்வாழ்க்கையில் நின்ற நிலை அறிய மாட்டீர்கள்; அவர்கள் பிறப்பு அறிய மாட்டீர்கள்*[3] **இவர் அவர் என்னீர்** - *பண்டு வறியனாய்த் துன்பப்பட்டு வந்த ஒருவன் வாழத் தொடங்கினால், "இஃது இவன் தகுதிக்கு மேலாக இருந்தது; இது வேறு ஒருவனால் உண்டாகி இருத்தல் வேண்டும்" என்று அறியமாட்டீர்கள்; அவனைத் திருமகள் கேள்வனைப் போலப் பிறந்தது முதல் திருவொடு*[4] *திகழ்ந்தவனாக நினைத்திருப்பீர்கள். 'இவரவரென்னீர்' என்பதனை ஒரு சொல்லாகக் கொண்டு ஒருவர் உயர்வுதாழ்வுகளும் அறியீர் என்றும் பொருள்கொள்ளலாம்.* **இன்னது ஓர் தன்மை என்று உணரீர்** - *இவனுக்குள்ள ஆற்றல் இதுவாகும் என்று அறியமாட்டீர்கள்.*

**கற்பகம்** - *"இவன் நினையாதே கொடுப்பான்"*[5] *என்பீர்கள்.* **புலவர் களைகண் என்று** - *புலமையுடையார் சிலர் பரிசில் வேண்டி வந்தால் ஒளித்துக் கொள்பவனை, "எங்களுக்குத் தலைவன்" என்பீர்கள்.* **உலகில் கண்டவா தொண்டரைப் பாடும்** - *உலகத்தில் இழிதொழில் செய்து திரிவாரைக் குறித்துக் கற்றவற்றை எல்லாம் சொல்லித் திரியும்.* **சொல் பொருள் ஆளீர்** - *சொல்லுக்கும் பொருளுக்கும் நிலவர்*[6] *நீங்கள். சொல்லுடைமையில்*[7] *உங்களைக்காட்டிலும் உயர்ந்தவர் இல்லை; பொருள் அறிவில் உங்கள் அளவு அறிந்தவர் இல்லை.*

---

1. குடுக்கும். 2. நீசவர்த்திகளாய்.
3. இற்பிறப்பு என்பதனை வேற்றுமைத்தொகையாகக் கொள்ளாது உம்மைத்தொகையாக இல்லும் பிறப்பும் என்று கொள்கிறார் என்பது உரையால் விளங்குகிறது. 4. திரு - செல்வம். 5. கொடுக்கும் பொருளின் உயர்வை நினையாமல் கொடுப்பான்; தனக்குப் பயன் கருதாது கொடுப்பான்; ஏற்போனது குறையை நினையாதே கொடுப்பான் என்று மூன்று பொருள்படும். 6. நிலவர் - உரிமையுடையவர்; அதிகாரி. 7. சொல்லுடைமை - சொற்செல்வம்; ஈண்டுப் பல சொற்களைப் பயன்படுத்தும் ஆற்றலைக் குறிக்கும்.

**சொல்லுகேன் வம்மின்** - உங்கள் ப்ரமேய ஜ்ஞாநத்துக்கும் சொல்லுடைமைக்கும் பாத்தம் போரும்படியான விஷயத்தை நான் காட்டித்தர வாருங்கோள். **சூழ்புனல் குடந்தையே தொழுமின்** - ஓர் ஆறும் மலையும் படைவீடும் வேணுமே! உங்களுக்குக் கவிபாடும் போது ஆறும், மலையும், படைவீடும் உள்ளிட்ட பரிகரங்களும்[1] வேணுமே! **நற்பொருள் காண்மின்** - நன்றான அர்த்தத்தைக் கண்டு கொள்ளுங்கோள். பேறும் தானேயாய்த் தன்னைத் தருவதும் தானேயாய் இருக்கை. **பாடி நீர் உய்ம்மின் நாராயணா என்னும் நாமம்** - வாச்யங்களில் தலையானத்தைக் காட்டித்தந்தேன்; அதுக்கு வாசகமான திருநாமத்தைப் பாடி உஜ்ஜீவியுங்கோள் என்கிறார். "யஃ பரஸ் ஸ மஹேஶ்வர ஃ" என்றதிறே இதினுடைய ஸங்க்ரஹத்தை. வாசகங்களில் தலை அகாரம்; வாச்யங்களில் தலை கீழ் நான் சொன்னது.

---

**சொல்லுகேன் வம்மின்** - *உங்களுடைய பொருள் அறிவுக்கும் சொல்லுடைமைக்கும் தகுதி வாய்ந்த பொருளை நான் காட்டித்தருகிறேன், வாருங்கள்.* **சூழ்புனல் குடந்தையே தொழுமின்** - *பாட்டுடைத் தலைவனுக்கு ஓர் ஆறும், மலையும், படைவீடும்[2] வேண்டும். உங்களுக்கும் கவிதை புனையும்போது ஆறும், மலையும், படைவீடும் உள்ளிட்ட உறுப்புகள் வேண்டும். இங்கு ஆறும் படைவீடும் உண்டு என்கிறார்.* **நற்பொருள் காண்மின்** - *நன்றான பொருளைக் கண்டு கொள்ளுங்கள். இப்பொருளுக்கு நன்மையாவது பேறும் தானேயாய்த் தன்னைத் தருவதும் தானேயாய் இருத்தல்.* **பாடி நீர் உய்ம்மின் நாராயணா என்னும் நாமம்** - *சொல்லால் சுட்டப்படும் பொருள்களில் சிறந்ததனைக் காட்டித் தந்தேன்; அப்பொருளைக் குறிக்கும் திருப்பெயரைப் பாடி உய்யுங்கள் என்கிறார்.* "**தனக்குக் காரணமான அகாரத்தில் ஒடுங்கிய அந்த ஓங்காரமாகிய ஒலிக்குப் பொருளாய் இருப்பவன் எவனோ அவனே பரம்பொருள்**" *(தைத். நாரா. 10:24) என்று நாராயண பதத்தின் சுருக்கமாக அகரத்தைக்[3] குறித்துப் பேசுகிறது உபநிடதம். சொற்களில் முதன்மையானது அகாரம்; பொருள்களில் முதன்மையானது கீழ் நான் சொன்னது.[4]*

## ஒப்புமைப் பகுதி

1. புலவர்களின் புகழ்ச்சி

*"வள்ளல் புகழ்ந்து - நன்றாகப் புகழ்ந்து. மஹாவம்சப்ரஸூதன், உதாரன் என்றிறே கவிபாடுவது"*

*தி. வா. மொ. 3:8:5-24*

*[மஹாவம்சப்ரஸூதன் - பெருங்குடியில் பிறந்தவன். உதாரன்-வள்ளல்.]*

---

1. பரிஸரங்களும்.

2. படைவீடு - நகரம். 3. "ஓம் நமோ நாராயணாய" என்பது திருமந்திரம். இதில் 'ஓம்' என்பது 'நமோ நாராயணாய' என்பதன் சுருக்கம்; இதனைப் பிரணவம் என்பர். இவ் 'ஓம்' என்பதில் அ, உ, ம என்னும் மூன்று எழுத்துகள் உள்ளன. இவற்றில் 'அ' என்பது நாராயணனைக் குறிக்கும். இதனையே "நாராயணபதத்தின் சுருக்கமான அகரம்" என்கிறார். 4. கீழ் நான் சொன்னது - கீழ் யான் நற்பொருள் என்று குறித்தது.

2. சொற்பொருள் ஆளும் புலவர்

*" புலவர்கள் - கவிக்கும் விஷயத்துக்கும் வாசியறியும் விசேஷஜ்ஞரான நீங்கள்"*

*தி. வா. மொ. 3:6:3-24*

*" புலவீர் - நல்லதும் தீயதும் அறியும் நீங்கள்"*

*தி. வா. மொ. 3:9:6-24*

3. தொழுமின்

*" தொழுது எழு என் மனனே"*

*" தொழுது - நித்ய ஸம்ஸாரியாய்ப்போந்த இழவெல்லாம் தீரும்படி ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே அந்வயித்து. எழு - அஸந்நேவ ஸபவதி' என்னும் நிலை கழிந்து, 'ஸந்தமேநம் ததோ விது :' என்கிறவர்கள் கோடியிலே எண்ணலாம்படியாக உஜ்ஜீவிக்கப் பார். அடியிலே தொழாமையால் வந்த ஸங்கோசம் தீரும்படி அடியிலே தொழுது உஜ்ஜீவி என்கிறார்"*

*தி. வா. மொ. 1:1:1-36*

*[ஸங்கோசம் - சுருக்கம். உஜ்ஜீவி - பிழைப்பாய்.]*

(7)

## 8

**கற்றிலேன் கலைகள்; ஐம்புலன் கருதும்**
**கருத்துளே திருத்தினேன் மனத்தை;**
**பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை;**
**பெருநிலத் தாருயிர்க் கெல்லாம்**
**செற்றமே வேண்டித் திரிதர்வேன்; தவிர்ந்தேன்;**
**செல்கதிக் குய்யுமா றெண்ணி,**
**நற்றுணை யாகப் பற்றினேன், அடியேன்**
**நாராய ணாஎன்னும் நாமம்.**

**ப. ரை : கலைகள் கற்றிலேன்** - நூல்களை ஓர் ஆசிரியனிடத்துப் பயின்றேன் அல்லேன்; **ஐம்புலன் கருதும் கருத்துளே** - ஐம்பொறிகள் நினைக்கின்ற பொருள்களிடத்தே, **மனத்தைத் திருத்தினேன்** - மனத்தை வலியச் செலுத்திப் போந்தேன்; **அதனால் பேதையேன் நன்மை பெற்றிலேன்** - அப்படிச் செல்லுகையாலே அறிவிலியான யான் நல்ல நினைவினைப் பெறாதவன் ஆயினேன்; **பெரு நிலத்து ஆர் உயிர்க்கு எல்லாம் செற்றமே வேண்டித் திரிதர்வேன்** - பெரிய நில உலகில் நிறைந்திருக்கும் உயிர்களுக்கு எல்லாம் தீங்கு செய்யும் வழியை நினைத்துத் திரிந்தேன்; **தவிர்ந்தேன்** - இவை எல்லாம் நீங்கப் பெற்றேன்; **செல்**

**8.** 1 : 4 கருதிக்; கருது. 1 : 5 கருத்துள்ளே. 3 : 3 திரிதருவேன்; திரிகுவேன். 3 : 6 கமையுமா றெண்ணி.

**கதிக்கு உய்யும் ஆறு எண்ணி** - *திருநாட்டிற் புக்கு ஈடேறும் படியைச் சிந்தித்து,* **நாராயணா என்னும் நாமம்** - *நாராயணா என்னும் திருப்பெயரை,* **அடியேன் நல் துணையாகப் பற்றினேன்** - *அடியவனாகிய நான் நல்ல துணையாகப் பற்றிக் கொண்டேன்.*

**சி. கு :** திரிதர்வேன் - *திரிதருவேன்; குறுக்கல் விகாரம்; திரிதா - பகுதி.*

வியா : **எட்டாம் பாட்டு** : "எங்கள் பூர்வ வ்ருத்தத்தைப் பார்த்தால், நீர் சொல்லுகிற அர்த்தத்துக்கு நாங்கள் தேசிகர் ஆக வல்லோமோ?" என்ன, "கெடுவிகாள்! நானன்றோ இவ்விஷயத்துக்கு யோக்யனாய் உங்களுக்கு உபதேசிக்கும்படி ஆனேன். ஆன பின்பு இவ்விஷயத்துக்கு ஆளாகாதார் உண்டோ?" என்கிறார்.

**கற்றிலேன் கலைகள்** - ஓர் ஆசார்யனைப் பின்சென்று அவன் உச்சரிக்க அநூச்சாரணம் பண்ணிப் போராமையாலே, சாஸ்த்ரீய ஜ்ஞானம் உண்டாயிற்றது[1] இல்லை. **ஐம்புலன் கருதும் கருத்துளே திருத்தினேன் மனத்தை** - மநஸ்ஸைப் பர விஷயமாக்கி, விஷயங்களிலே ப்ரவணமாகிற பாஹ்யேந்த்ரியங்களைக் காதாசித்கமாகவாகிலும் விஷயங்களில்நின்றும் மாற்றி ப்ரத்யக் விஷயமாக்கினால் நல்வழி போக்குகைக்கு[2] உறுப்பாமிறே; ச்ரோத்ராதீந்த்ரியங்கள் விஷயங்களிலே இழிந்து தான் நினைத்த வழியே கொடுபோக, மநஸ்ஸையும் அதுக்கு உறுப்பாக்கிப் போந்தேன். **திருத்தினேன் மனத்தை** - விஷய ப்ரவணரானவர்கள் "விஷய ப்ராவண்யம் போராது" என்று ஔஷத ஸேவை பண்ணி இருப்பார்களிறே;

---

**வி : எட்டாம் பாட்டு;** இவர் *அறிவுரை கேட்ட மக்கள்,* "எங்கள் *கடந்த கால ஒழுகலாற்றைப் பார்த்தால், நீர் சொல்லும் பொருளுக்கு நாங்கள் தகுந்தவராக வல்லமோ? என்னும் ஐயம் எழுகிறது*" என்றனர். இவர் *அவர்களை நோக்கி,* "*கெடுவீர்காள்! யானன்றோ இப்பொருளுக்குத் தக்கவனாகி உங்களுக்கு அறிவுரை கூறும் தன்மையை* எய்தினேன். அவ்வாறு ஆகிய பின்னர் *இப்பொருளுக்கு உரியர் அல்லாதார் உண்டோ? என்கிறார்.*[3]

**கற்றிலேன் கலைகள்** - *ஓர் ஆசிரியனை அடுத்து அவன் முன் ஓதிக்காட்டப் பின் ஓதாமையினால், அஃதாவது சந்தை இட்டுக் கற்காமையால், நூலறிவு உண்டாகப் பெற்றேன் இல்லை.* **ஐம்புலன் கருதும் கருத்துளே திருத்தினேன் மனத்தை** - *மனத்தைப் புறம்பே போக்கினேன். ஐம்புலன்களில் ஓடும் புறப் பொறிகளை ஒரு காலத்திலேனும் அவற்றினின்றும் மாற்றி உள்முகமாகச் செலுத்தியிருந்தால் அவற்றை நல்வழியில் செலுத்துதற்கு உறுப்பாக அமைந்திருக்கும். யானோ செவி முதலிய ஐம்பொறிகளையும் புலன்களிலே பட்டி போகும்படி*[4] *விடுத்தேன்; அம்மட்டோ, அவை நினைத்த வழியே செல்ல, மனத்தையும் அவ்வாறு செல்லுவதற்கு உறுப்பாக்கினேன்.* **திருத்தினேன் மனத்தை** - *சிற்றின்பத்தில் மூழ்கிக் கிடப்பவர்கள், "இன்ப நுகர்ச்சி குறைவு"*

---

1. உண்டாய்த்து. 2. போகைக்கு.

3. 'வாடினேன்' என்று தொடங்கித் தம் பண்டை ஒழுகலாற்றைச் சிந்தித்துச் சென்றவர் கீழ் இருபாட்டுகளில் அதனை விடுத்து மீளவும் இப்பாட்டில் அதனைச் சிந்திக்கிறார். அதற்கு இங்கு இயைபு காட்டுகிறார். செய்த இழிசெயல்களுக்கு இரங்காதவனாகிய எனக்கு அருளியவன், "நாங்கள் தகுந்தவராக வல்லமோ?" என்னும் நினைவுடைய உங்களுக்கு அருளக் குறையில்லை என்கிறார்.

4. பட்டி போதல் - கண்டபடி மேய்தல்.

அப்படியே, விஷயங்களிலே மநஸ்ஸை வலிய மூட்டிப் போந்தேன். பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை - சாஸ்த்ரீய ஜ்ஞாநமும் இன்றிக்கே விஷய ப்ரவணனாய்ப் போருகையாலே அறிவுகேடனாய் ஹிதசிந்தை பண்ணப் பெற்றிலேன்.

பெருநிலத்து ஆருயிர்க்கு எல்லாம் செற்றமே வேண்டித் திரிதர் வேன் - எனக்கு ஒரு நன்மை ஸம்பாதியாமையே அன்றிக்கே, பரஹிம்ஸை பண்ணும் விரகே சிந்தித்துப் போந்தேன். எல்லாரையும் ஹிம்ஸித்து நான் ஜீவிக்கும் விரகே பார்த்துப் போந்தேன். "ஒருவனுக்கு பகவத் ஸம்பந்தம் உண்டு இல்லை என்று தனக்கே அறியலாம்'' என்று பலகாலும் அருளிச்செய் வர் ஜீயர். ஒருவன் நோவுபடக் கண்டால் ''ஐயோ''[1] என்று இரக்கம் பிறந்திருக்கில், "நமக்கு பகவத் ஸம்பந்தம் உண்டு'' என்று அறியலாம்; "அத்தனையும் வேணும்" என்று இருந்தானாகில், ''நமக்கு பகவத் ஸம்பந்தம் இல்லை'' என்று இருக்கலாம். பெருநிலத்து ஆர் உயிர்க்கு எல்லாம் என்னுதல்; பெருநிலத்தார் உயிர்க்கு எல்லாம் என்னுதல்.

தவிர்ந்தேன் - ஹேது அறிந்திலேன்; தவிர்ந்துகொடு நிற்கக் கண்டேன். "உய்வது ஓர் பொருள்'' என்றும்,[2] "சிக்கெனத் திருவருள் பெற்றேன் என்றும் கீழ்ச் சொன்னாரிறே.

---

*என்று அதனைப் பெருக்குவதற்காக ஊட்ட மருந்து உண்டு தங்களை வலுவாக்கிக் கொண்டிருப்பார்கள். அதுபோல யானும் மனத்தை ஐம்புல இன்பத்தில் வலிய மூட்டிப்*[3] *போந்தேன்.* **பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை -** *நூலறிவும் இன்றி, ஐம்புல இன்பம் துய்ப்பவனாய்ச் செல்லுகையாலே அறிவு கேடன் ஆயினேன்; அதனால் நன்மையானவற்றைச் சிந்திக்கப் பெற்றிலேன்.*

**பெருநிலத்து ஆருயிர்க்கு எல்லாம் செற்றமே வேண்டித் திரிதர்வேன் -** *எனக்கு ஒரு நன்மை ஈட்டினேன் அல்லேன்; மாறாகப் பிறர்க்கு இன்னா செய்யும் விரகே*[4] *சிந்தித்துப் போந்தேன். ''ஒருவனுக்கு இறைவனோடு தொடர்பு உண்டா, இல்லையா என்பதனைத் தானே தெரிந்துகொள்ளலாம்'' என்று பலகாலும் இப்படிச் சொல்லுவார் நஞ்சீயர்: அது வருமாறு:* **ஒருவன் நோவுபடக் கண்டால் 'ஐயோ' என்று இரக்கம் நெஞ்சில் பிறக்குமானால் "நமக்கு இறைவனோடு தொடர்பு உண்டு'' என்று அறியலாம்; "இவனுக்கு இத்துன்பங்கள் எல்லாம் வேண்டும்", என்று இருந்தால் ''நமக்கு இறைவனோடு தொடர்பு இல்லை''** *என்று அறியலாம். பெருநிலத்து ஆர் உயிர்க்கு எல்லாம் என்றோ பெருநிலத்தார் உயிர்க்கு எல்லாம் என்றோ கொள்ளலாம்.*

**தவிர்ந்தேன் -** *எதன் அடியாக*[5] *நிகழ்ந்தது என்பது அறியேன். ஆனால் இப்புல்லிய வாழ்க்கையை விட்டு விலகி நிற்கக் கண்டேன்.* **"உய்வது ஓர் பொருள்''** *(பெ. தி. 1: 1: 1) என்றும்,* **''சிக்கெனத் திருவருள் பெற்றேன்''** *(பெ. தி: 1: 1: 5) என்றும், கீழ்ச் சொன்னார் அல்லவா? ஆகவே இவரது முயற்சி காரணமாய் அமையாது இறையருளே காரணமாய் அமைந்தது என்பது விளங்கும்.*

---

1. அய்யோ. 2. இதன் பின்னர், '' 'ஆழியானருள்' என்றும்'' என்பது மிகையாக உள்ளது.
3. மூட்டி - செலுத்தி. 4. விரகு - வழி. 5. அடி - காரணம்.

**செல்கதிக்கு உய்யும் ஆறு எண்ணி**-செல்லக்கடவ கதியுண்டு, பரமபதம்; அங்கே புக்கு உஜ்ஜீவிக்கும்படியை மநோரதித்து. **நல் துணையாகப் பற்றினேன் அடியேன்** - அம்மியைக் கட்டிக்கொண்டு ஆற்றில்[1] இழிவாரைப்போலே அன்றிக்கே, "பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்" என்னுமத்தைப் பற்றினேன். அக்கரைப்படுத்திவிடுமத்தைப் பற்றினேன். **நாராயணா என்னும் நாமம்** - அக்கரைப்படுத்தும் வஸ்துவுக்கு வாசகமான திருநாமம். "நயாமி பரமாம் கதிம்" என்னக் கடவதிறே.

---

**செல்கதிக்கு உய்யும் ஆறு எண்ணி** - செல்லுவதற்குரிய இடம் கலங்காப் பெருநகரம்[2]. அங்கே புகுந்து கரைமரம் சேரும் வழியைச்[3] சிந்தித்து. **நல் துணையாகப் பற்றினேன் அடியேன்** - அம்மியைக் கட்டிக்கொண்டு ஆற்றில் இழிவாரைப்போல் அல்லாமல், "**செந்தாமரைக் கண்ணனது திருப்பெயர் இசைத்தலாகிய அமுதம் வழிநடைக்கு அமைந்த கட்டுச்சோறு**" (க. பு. 220:16) என்று போற்றப்பெறும் திருப்பெயரைப் பற்றினேன். வீடுபேறாகிய அக்கரையில் சேர்க்கக்கூடியதனைப் பற்றினேன். **நாராயணா என்னும் நாமம்** - அக்கரையில் சேர்ப்பிப்பவனைச் சுட்டும் திருப்பெயர். "**மேலான நிலைக்கு அழைத்துச் செல்கிறேன்**" (வராஹ சரமம்) என்று சொல்பவன் அன்றோ அவன்.

## ஒப்புமைப் பகுதி

1. கற்றல்

*"பழுதின்றி, மந்திரங்கள் கற்பனவும் மாலடியே கை தொழுவான்"*

*"கற்பனவும் - கிடந்தானை கண்டு ஏறாதே சந்தை இட்டுக் கற்கை"*

*மு. தி. 58*

*[கிடந்தானை - கிடந்த ஆனை]*

*"'கீழே கற்பரோ' என்றது. அதாவது முதல் நடுவு இறுதி தன் நெஞ்சிலே ஊற்றிருக்கும்படி வாஸநை பண்ணுகை ஆயிற்று."*

*தி. வா. மொ. 7:5:3-36*

*[வாஸநை பண்ணுகை - பயிற்சி பண்ணுகை]*

*"கற்கையாகிறது சாஸ்த்ரத்திலே அர்த்தத்தை வ்யுத்பத்தி பண்ணுகை"*

*தி. வா. மொ. 7:5:3-24*

*[வ்யுத்பத்தி பண்ணுகை - கண்டறிகை]*

*"திருமாலவன் கவி யாது கற்றேன்"*

*"கற்றேன் - 'என்முன் சொல்லும்' என்கிறபடியே அவன் முன்னே சந்தையிட நான் பின்னே சொன்னேன் இத்தனை"*

*தி. வி. 48. பெ. உரை.*

---

1 ஆறில்.

2. கலங்காப் பெருநகரம் - வைகுந்தம். 3. கரை மரம் சேரும் வழி - உய்யும் வழி.

2. கலைகள்

"கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோதாம்" கலையறக் கற்ற மாந்தர் - ஶ்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளில் நிலைநின்றவர்களாய் வேத தாத்பர்யம் கைப்பட்டவர்கள்; அவர்களாகிறார் கூரத்தாழ்வான் போல்வாரிறே"

திருமாலை. வி. 7 பெ. உரை.

[வேத தாத்பர்யம் - வேதத்தின் உட்பொருள்]

"நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்"

"நலங்களாய கலைகளாவது 'த்ரைகுண்ய விஷயா வேதா:' என்கிற படியே சேதநருடைய குணாநுகூலமாக நின்ற நின்ற நிலைகளிலே நல்வழி போக்கும்படி மாதா பித்ரு ஶதங்களிற்காட்டிலும் வத்ஸலதரங்களாகை. நற்கலைகளாவது மோக்ஷ தத்ஸாதநங்களிலே நோக்கை உடைத்தாகை. இப்படிப்பட்ட நாலு வேதத்திலும் ஶீலிக்கப் பெற்றிலேன். நவிலுதல் - பயிலுதல். கலை - வேதம்"

தி. ச. வி. 90 பெ. உரை.

[ஶதம் - நூறு. வத்ஸலதரம் - சிறந்த பரிவுடையது. ஶீலிக்கப் பெறுதல் - ஆராய்ச்சி செய்தல்.]

3. புலன் வழிச் செல்லல்

"இடகிலேன் ஒன்று அட்டகில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன்"

"ஐம்புலன் வெல்ல கில்லேன்" - ச்ரோத்ராதிகள் விஷயங்களிலே பட்டி போகாதபடி பரிஹரித்திலேன்"

தி. வா. மொ. 4:7:9-36

[ச்ரோத்ராதிகள் - செவி தொடக்கமானவைகள்]

4. இறைத்தொடர்புக்கு அடையாளம்

"அநுகூலரிலே ஒருவனுக்கு ஒரு நன்மை உண்டானால் அது தன்னதாக நினைத்திருக்கையும், அநர்த்தம் வந்தால் அது தனக்கு வந்ததாக நினைத்திருக்கையும் ஆகிற இவ் இரண்டும் உண்டானாலிறே வைஷ்ணவத்வம் உண்டாயிற்றாவது"

தி. வா. மொ. 7:10:8-36

(8)

## 9

குலம்தரும்; செல்வம் தந்திடும்; அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலம்தரம் செய்யும்; நீள்விசும் பருளும்;
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலம்தரும்; மற்றும் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்;
நலம்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாஎன்னும் நாமம்.

ப. ரை : **நாராயணா என்னும் நாமம் - குலம் தரும்** - *தன்னைச் சிந்தித்தவர்க்கு உயர்ந்த குலத்தைக் கொடுக்கும்;* **செல்வம் தந்திடும்** - *செல்வத்தைக் கொடுக்கும்;* **அடியார் படுதுயர் ஆயின எல்லாம்** - *அடியார் துய்த்தே கழித்தற்கு உரிய துன்பங்களை எல்லாம்,* **நிலம் தரம் செய்யும்** - *தரை மட்டமாக்கி விடும்;* **நீள் விசும்பு அருளும்** - *திருநாட்டைக் கொடுக்கும்;* **அருளொடு பெருநிலம் அளிக்கும்** - *அருளோடுகூடத் தொண்டாகிய பெரிய நிலையினையும் நல்கும்;* **வலம் தரும்** - *தன்னைத் துய்ப்பதற்கு ஈடான ஆற்றலைக் கொடுக்கும்;* **மற்றும் தந்திடும்** - *மற்றும் உள்ள எல்லா நன்மைகளையும் செய்து கொடுக்கும்;* **பெற்ற தாயினும் ஆயின செய்யும்** - *ஈன்றெடுத்த தாயாரைவிட நன்மையானவற்றைச் செய்யும்;* **நலம் தரும் சொல்லை** - *தொண்டாகிய செல்வத்தைக் கொடுக்கும் திருப்பெயரை,* **நான் கண்டு கொண்டேன்** - *இப்படி இருப்பது ஒன்று உண்டு என்பது அறியாத நான் காணப் பெற்றேன்.*

**சி. கு :** *படுதுயர் - நுகர்ந்தே கழிக்கவேண்டும் துன்பம்; படுதல் - நுகர்தல். நீள் விசும்பு - வீடுபேறு. "இனி, பெருநிலம் அளிக்கையாவது என்? கீழே சொல்லப்பட்ட நீள் விசும்பு என்ற பரமபதத்திற் காட்டிலும் வேறுபட்டது ஒரு பெருநிலம் உண்டோ? என்னில்; பரமபதம் சென்ற பின்பும் அங்கே குணாநுபவம் பண்ணுகை என்றும் கைங்கர்யம் செய்கை என்றும் இரண்டு படிகள் உண்டே; அவற்றுள் கைங்கர்யம் செய்யப் பெறுகையைப் பெருநிலம் என்கிறது இங்கு" என்பது திவ்யார்த்த தீபிகை உரைக்குறிப்பு.*

வியா : ஒன்பதாம் பாட்டு : அநாதிகாலம் விஷய ப்ரவணனாய் பகவத் விஷயத்தில் விமுகனாய்ப் போந்த நான், விஷயங்கள்தான் ஸாவதியாய், மீண்ட அளவிலே, ஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே கைக்கொண்டான் என்கிற

---

**வி :** ஒன்பதாம் பாட்டு : *நெடுங்காலம் சிற்றின்பத்தில் கால்தாழ்ந்தவனாய்,*[1] *இறைவன்திறத்து முகங்கொடுக்காமல் போந்த நான், ஐம்புல இன்பத்தைப் புல்லியதாய்க் கண்டு மீண்டேன்; அவ்அளவிலே பெருமான் என்னைத் தன்*

---

**9.** 2 : 1 நிலம்தரும். 3 : 5 தாயிலும். 4 : 2 சொல்லு.

1. கால் தாழ்தல் - இறங்குதல்.

அர்த்தத்தை, "உய்வதோர் பொருளால்" என்கிறத்தாலே சொன்னார் முதற்பாட்டில்; காலம் அடங்க வ்யர்த்தமே புறம்பே போக்கினேன் என்றார்[1] இரண்டாம் பாட்டில்; ரக்ஷையே வேண்டி அதுக்கு விருத்தமான துஷ்கர்மங்களைப் பண்ணி விஷய ப்ரவண னாய்க் காலத்தை அடங்க நிஷ்ப்ரயோஜனமாகப் போக்கின நான் போக்யனுமாய் ப்ராப்தனுமான ஸர்வேஶ்வரனையும் அவனுக்கு வாசகமான திருநாமத்தையும் காணப் பெற்றேன் என்றார் மூன்றாம் பாட்டில்; துர்மாநியாய், சோகிக்கக் கடவது அல்லாத விஷயங்களுக்கு சோகித்து விஷய ப்ரவணனாய் அநாத்ம குணங்களால் குறைவற்ற நான், அமாநித்வாத்யாத்மகுணோபேதர் பெறும் பேற்றைப் பெற்றேன் என்றார் நாலாம் பாட்டில்; ஆத்மாபஹாரத்தைப் பண்ணி பஶ்யதோஹரனாய், ஸர்வேஶ்வரன் ஒருவன் உளன் என்று இருப்பார் உண்டாகில் உக்த்யாபாஸங்களாலே இல்லை செய்து போந்த நான் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணி, என்றும் இதுவே யாத்ரையாகப் போருவார் பெறும் பேற்றைப் பெற்றேன் என்றார் அஞ்சாம் பாட்டில்; "இதுக்கு அர்த்தம் என்? இது வந்தபடி என்?" என்ன, அர்த்தத்தையும் சொல்லி, ஸம்ஸாரிகள் எல்லாம் இங்ஙனே க்லேசப்படாநிற்க நான் இப்பேற்றைப் பெற்றேன் என்றார் ஆறாம் பாட்டில்; "அல்லாதார்[2] இழக்கிறார்கள் அவிசேஷஜ்ஞராகையாலே; என்னோடு ஸஜாதீயராய் விஶேஷஜ்ஞராய்க் கவிபாடித் திரிகிற நீங்கள் இழவாதே கொள்ளுங்கோள்" என்றார் ஏழாம் பாட்டில்; "நீர் சொல்லுகிற அர்த்தத்துக்கு நாங்கள் தேசிகராக வல்லோமோ" என்ன, "கெடுவிகாள்! நான் அன்றோ இவ்

---

அருளாலே கைக்கொண்டான் என்னும் கருத்தினை "உய்வதோர் பொருளால்" என்பதனாலே சொன்னார் முதற் பாட்டில்; காலத்தை எல்லாம் வீணாகப் புறம்பே போக்கினேன் என்றார் இரண்டாம் பாட்டில்; நலமே நாடியபோதிலும், அதற்கு எதிரான தீவினைகளைச் செய்து, சிற்றின்பத்தில் ஆழ்ந்தவனாய்க் காலத்தை முற்றிலும் பயனின்றிக் கழித்த நான் இனியவனும் உரியவனுமான முதல்வனையும், அவனைக் குறிக்கும் திருப்பெயரையும் காணப்பெற்றேன் என்றார் மூன்றாம் பாட்டில்; செருக்கனாய், இரங்கற்கு உரியன அல்லாத வற்றுக்கு இரங்கி, ஐம்புல இன்பத்தில் இழிந்தவனாய் இழிகுணங்களால் குறைவற்ற நான், பற்றின்மை முதலான பெருந்தகவுகளோடு கூடியவர் பெறும் பேற்றைப் பெற்றேன் என்றார் நாலாம் பாட்டில்; உயிர்க்களவு செய்து, கண்முகப்பே திருடும் திருடனாய், இறைவன் ஒருவன் உளன் என்று இருப்பார் உண்டாகில் போலி மொழிகளாலே கடவுள் இல்லை என்று அழித்துச் சொல்லிப் போந்த நான், உயிரை இறைவனிடம் வைத்து எந்நாளும் இதுவே பணியாய் இருப்பார் பெறும் பேற்றைப் பெற்றேன் என்றார் அஞ்சாம் பாட்டில்; "இதற்குப் பொருள் யாது? இது வந்தவாறு எங்ஙனம்?" என்று வினவ, பொருளையும் சொல்லி, மக்கள் எல்லாம் இங்ஙனே வருந்திக் கொண்டிருக்க, நான் இப்பேற்றைப் பெற்றேன் என்றார் ஆறாம் பாட்டில்; "பிறர் எல்லாம் பகுத்தறி வின்மையாலே இழக்கிறார்கள்; என் இனத்தவராய்ச் சிறந்த புலமையாளராய்ப் பாப் புனைந்து திரியும் நீங்கள் இழவாமல் கொள்ளுங்கள்" என்றார் ஏழாம் பாட்டில்; "நீர் சொல்லும் பொருளுக்கு நாங்கள் உரியவராக வல்லமோ?" என்ன, "கெடுவீர்காள்! நானன்றோ இப்பொருளுக்கு நிலவனாய்[3] உங்களுக்கும்கூட

---

1. என்குறார்; இப் பத்தி முழுவதிலும் 'என்றார்' என்று வருமிடங்கள்தோறும் இப்படியே வருகிறது.
2. அல்லாதார் எல்லாம்.
3. நிலவன் - உரியவன்; அறிந்தவன்.

விஷயத்துக்கு நிலவனாய் உங்களுக்குங்கூட உபதேசிக்கிறேன், ஆன பின்பு பகவத் விஷயத்துக்கு ஆளாகாதார் இல்லை என்றார் எட்டாம் பாட்டில்; நீர் திருநாமத்தைப் போர ஆதரியாநின்றீர், இதென்ன பலத்தைத் தரவற்று[1]'' என்ன, திருநாம பலத்தைச் சொல்லுகிறார் இப்பாட்டில்.

**குலம்தரும்** - ஜந்ம வ்ருத்தங்களால் குறைய நின்றான் ஒருத்தனுக்கு பகவத் ஸம்பந்தம் உண்டானால், இவற்றால்[2] உயர்ந்தான் ஒருத்தன், இவை இரண்டிலும் இவனுக்குத் தாழ்வு உண்டாகவும், தான் உயர்ந்தானாகவும் நினைத் திருக்கவுங்கூடக் கூச வேண்டும்படி ஆயிற்று[3] பகவத் ப்ரபாவம் இருப்பது. ஆகிலும், பெண் கொடுத்தல்[4] கொள்ளுதல் செய்கிறார் இல்லை. அதுக்கு அடி, ஜாதி நிபந்தந மாகை. ச்லாக்யதை குண நிபந்தநம். **''ஸ ச்லாக்யஸ் ஸ குணீ தந்யஸ் ஸ குலீநః''** என்னக் கடவதிறே. கண்டது எல்லாம் தர்ம ஸந்தேஹம் பண்ணக் கடவ தர்மபுத்ரன், பகவத் ப்ரத்யாஸத்தியாலும் அசரீரி வாக்யத்தாலும் விதுரரை ப்ரஹ்மமேத[5] ஸம்ஸ்காரம் பண்ணினானிறே; ருஷிகள், தர்மவ்யாதன் மாம்ஸ விக்ரயம் பண்ணிக் கையொழியுந்தனையும் பார்த்துநின்று, தர்ம ஸங்கடங்கள்

---

*அறிவுறுத்துகிறேன். அவ்வாறு அமைந்த பின்னர் இறைவனுக்கு உரியர் அல்லாதார் இல்லை'' என்றார் எட்டாம் பாட்டில்; ''நீர் திருப்பெயரை மிகவும் போற்றிக் கொண்டிருக்கிறீர், இஃது எப்பேற்றினைத் தர வல்லது?'' என்ன, திருப்பெயர் வழங்கும் பேற்றினைச் சொல்லுகிறார், இப்பாட்டில்.*

*குலம் தரும் - பிறப்பு ஒழுக்கங்களால் குறைந்தவன் ஒருவனுக்கு இறைத் தொடர்பு உண்டானால் அத்தொடர்பு, பிறப்பு ஒழுக்கங்களில் உயர்ந்தவனாய் இருக்கும் ஒருவன் இவை இரண்டிலும் இவனுக்குத் தாழ்வும், தனக்கு உயர்வும் உண்டு என்று நினைக்கவும்கூடக் கூச வேண்டுமாறு செய்யும். இத்தன்மைத்து இறைப் பெருமை! இப்படி உயர்ந்தவனாயினும் உயர் சாதியினர் அவனிடம் பெண் கொடுத்தலும், கொள்ளுதலும் செய்யார். அதற்குக் காரணம் மறையவர் குலத்திலே பிறந்தவன் அக்குலத்திலேயே பெண்ணைக் கொடுத்தும் கொண்டும் வாழ்தற்கு உரியவன் என்று குடல்தொடக்கிற்குச்[6] சொன்ன நூற்கோட்பாடு ஆகும். அவ்வாறாயின், பெருமை எப்படி உண்டாகும் எனில், குணத்தால் உண்டாகும்.* **எவனிடம் குணம் உண்டோ அவனே புகழ்க்குரியவன்; அவனே பண்பாளன்; அவனே பேறு பெற்றவன்; அவனே நற்குலத்தில் பிறந்தவன்; அவனே அறிவில் சிறந்தவன்''** *(வி. பு. 1:9:31) என்பரன்றோ! எதனைக் குறித்தும் ''இஃது அறத்திற்குச் சேருமோ? சேராதோ?'' என்று சிந்தனை செய்பவன் தருமபுத்திரன். அத்தகையவன் இறைவன் தன்அருகில் இருந்தமையாலும், விண்ணில் எழுந்த பேச்சாலும் வேதியரல்லாத விதுரர்க்கு வேதியர்க்குரிய விதிப்படி தீயிட்டு இறுதிக்கடன் செய்தான் அன்றோ? இருடிகள், தருமவியாதன் இறைச்சியைக் கூறு போட்டு விற்றுக் கையொழியும்வரை பார்த்துநின்று அறங்குறித்து எழுந்த சிக்கல்களுக்கு அவனிடம் விளக்கம் கேட்டுப் போனார்கள் அன்றோ? இவற்றால் இறைத் தொடர்புடையான் தாழ்ந்த குலத்தவனாயினும் உயர்ந்தவனாக மதிக்கப்படு*

---

1. தரவத்து. 2. இவையித்தால்; இவைற்றால். 3. ஆய்த்து. 4. குடுத்தல்.
5. ப்ரஹ்மமேதத்தாலே.
6. குடல் தொடக்கு - உடல் தொடர்பு.

கேட்டுப் போனாரகளிறே. இங்ஙன் அன்றாகில், பஞ்சம வேதமான மஹா பாரதத்திலே எழுதக் கூடாதிறே. கைசிக கதையிலே வந்தவாறே, விலக்ஷணனாய் இருப்பான் ஒரு ப்ராஹ்மணன் ஆசார வைகல்யத்துக்கு பகவத் ஜ்ஞானமுடையான் ஒரு பாடுவானாலே பரிஹாரம் இருந்ததிறே. ஸ்ரீவிபீஷணாழ்வான் ராவணனைப் பார்த்து, ''பெருமாளைச் சரணம் புகு'' என்று சொல்ல, **''த்வாந் து திக் குலபாம்ஸநம்''** என்று நீ இக்குடிக்கு உடல் அல்லை[1] என்றானிறே. ராவணனுக்கு வார்த்தை சொல்லுகிற இடத்திலே, **'நிசாசர'** என்று அவனை ராக்ஷஸனாகவும், தான் அல்லனாகவும் சொன்னான். இவனேயன்றிக்கே, **''ராக்ஷஸாநாம் பலாபலம்''** என்று பெருமாள்தாமும் அருளிச்செய்தாரிறே. ஆகையால் பகவத் ஸம்பந்தம் ஸ்பர்ச வேதியாய் இருந்தது.

செல்வம் தந்திடும் - ராவண ஸம்பந்தம் அற்றவாறே **''அந்தரிக்ஷகத ஸ்ரீமாந்''** என்று ராம ஸம்பந்தத்தாலே வந்த ஸ்ரீ குடிபுகுந்தது. அன்றிக்கே, அது தன்னையே சொல்லிற்றாகவும்[2] ஆம். **''பரித்யக்தா மயா லங்கா''** என்று இவன் தானே கைவிடச்செய்தே, ராவண ஸம்பந்தம் அற்றவாறே, ராம ஸம்பந்தத்தாலே லங்கைஶ்வர்யமும் முடியும் அவன் தலையிலே வந்து இருந்ததிறே. **''நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்தன்னையே தான்வேண்டும்**

---

*வான் என்பது விளங்கும். இவ்வாறு கொள்ளப்படாவிடின், ஐந்தாம் வேதமாகிய மாபாரதத்தில் இதுபோலும் நிகழ்ச்சியினை எழுத முடியாது அன்றோ! சிறப்புடை மறையவன் ஒருவனது ஒழுக்கக் குறைபாட்டிற்கு இறையறிவு வாய்ந்த தாழ்ந்த குலத்தவனான பாடுவான் ஒருவனாலே போக்கடி[3] உண்டா யிற்று அன்றோ! வீடணன் இராவணனைப் பார்த்து, ''பெருமாளைத்[4] தஞ்சம் புகுவாய்'' என்று சொல்ல, அவன், ''நீ குலத்தைக் கெடுக்கும் கோடரிக்காம்பு;* **ஒழிந்து போ''** *(ரா. யு. 16:151) என்றான். அஃதாவது, ''நீ இக்குடிக்கு உடல் அல்லை''[5] என்றான். இராவணனுக்கு அறிவுரை புகலும் இடத்தில் வீடணன்* **'அரக்கனே'** *(ரா. யு. 16:28) என்று அவனை அரக்கனாகவும், தன்னை அல்லனாகவும் சொன்னான். இவன் மட்டுமன்றி,* **''அரக்கர்களின் வலியையும் வலியின்மையையும் எனக்கு உள்ளவாறு உரைப்பாய்''** *(ரா. யு. 19:7) என்று பெருமாளும் இவ்வீடணன் ஒழிந்த பிறரையே அரக்கராக அருளிச்செய்தார். ஆகையாலே, இறைத்தொடர்பானது, செம்பைப் பொன்னாக்கும் குளிகையை நிகர்த்தது எனலாம்.*

**செல்வம் தந்திடும்** - *இராவணனோடு தொற்று[6] அற்றவாறே வீடணன்* **''விண்வெளியை அடைந்த செல்வன்''** *(ரா. யு. 16:17) என்று குறிக்கப் பெற்றான்; அவனிடம் இராமனோடு கொண்ட உறவினால் செல்வம் குடி புகுந்தது. இவ்வாறு அல்லாமல், அவ்இராமபிரான் தொடர்பே செல்வம் என்று சொல்லியதாகவும் கொள்ளலாம்.* **''என்னால் இலங்கை கைவிடப்பட்டது''** *(ரா. யு. 19:5) என்று இவன் கைவிட்டபோதிலும், இராவணன் உறவு அற்றவாறே இராமனது தொடர்பாலே இலங்கைச் செல்வமும் அதற்குரிய திருமுடியும் அவன்பால் வந்தன அல்லவா!*

---

1. அல்ல. 2. சொல்லுத்தாகவும்; சொல்லித்தாகவும்.
3. போக்கடி - கழுவாய். 4. பெருமாள் - இராமபிரான். 5. உடல் அல்லை - உரியவன் அல்லன். 6. தொற்று - தொடர்பு.

செல்வம்'' என்னக் கடவதிறே. உன்னையே உகந்து நிலைநில்லாத ஸம்பத்தை வேண்டேன் என்று இருப்பாரை அது கைவிடாதாப் போலே என்கிறார், தாம் விடச் செய்தே தம்மை அது கைவிடாதபடியாலே. அங்ஙன்[1] அன்றியே, உன்னையே உகந்து நிலைநின்ற ஐஶ்வர்யத்தைக் காற்கடைகொண்டு நீயே அமையும் என்று இருக்குமவனை மோக்ஷஶ்ரீ கைவிடாதாப் போலே என்றும் ஆம்.

**அடியார் படுதுயர் ஆயின எல்லாம் நிலந்தரம் செய்யும்** - அடியார் உண்டு தனக்கு அஸாதாரணரானவர்கள்; படுதுயர் உண்டு **''அவச்ய மநுபோக்தவ்யம்''** என்று அநுபவ விநாஶ்யமான கர்மங்கள்; அவற்றை[2] எல்லாம், **நிலந்தரம் செய்யும்** - நிலத்தோடு ஒக்கப் பண்ணும் - வெறுந்தரையாக்கும் - கேவல பூதலம் ஆக்கும். அங்ஙன் அன்றியே, நிலம் என்று - அவன் வர்த்திக்கிற இடமாய், தரமென்று - தரணமாய், இடைக்குறைத்தலாய்,[3] இவன்பக்கல் நின்றும் கர்மங்கள் தானே நமக்கு இருப்பிடம் அன்று என்று போம்படி பண்ணும் என்றும் ஆம். **''யத்ராஷ்டாக்ஷர ஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்ப்பிக்ஷ தஸ்கரா:''** (நாரதீயம் 1:20). **''சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே''. ''கோலாடு**

---

"நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டும் செல்வம்'' (பெரு. தி. 5 : 9)

*என்று சொல்வர் அன்றோ!*

*உன்னையே உகந்து, நிலைநில்லாத செல்வம் வேண்டேன் என்று இருப்பாரை அச்செல்வம் கைவிடாதது போலே என்கிறார், தாம்[4] விட்ட போதிலும் தம்மை அது கைவிடாது இருத்தலின். இல்லையெனில், உன்னை உகந்து நிலைநின்ற செல்வத்தைக்[5] காற்கடை கொண்டு[6] நீயே அமையும் என்று இருப்பவனை வீடாகிய செல்வம் கைவிடாது இருப்பது போல என்றும் கொள்ளலாம்.*

அடியார் படுதுயர் ஆயின எல்லாம் நிலம்தரம் செய்யும் - *அடியார்* - *தனக்குத் தனியுரிமையானவர்.* படுதுயர் - ''துய்த்தே கழித்தற்கு உரியன'' *(ப்ரஹ்ம வைவர்த்தம் ப்ரக்ருதி கண்டம் 26:70) என்று சொல்லப்படும், துய்ப்பதால் அழியும் தீவினைகள். அவற்றை எல்லாம்,* நிலம் தரம் செய்யும் - *நிலத்தோடு ஒக்கப்பண்ணும்; வெறுந்தரை ஆக்கும். அவ்வாறு அன்றி, நிலம் என்பது அவன் இருக்கும் இடமாய், தரம் என்பது தாண்டுவித்தல் என்று பொருள்படும் தரணம் என்பதன் இடைக்குறையாய் அவனிடமிருந்து வினைகள் ''நமக்கு இஃது இருப்பிடம் அன்று'' என்று தாமே போகும்படி செய்யும் என்றும் கொள்ளலாம்.* ''எங்குத் திருவெட்டெழுத்துக் கைபுகுந்த பெரியவர் கொண்டாடப்பெறுகின்றாரோ அங்கு நோயும் பஞ்சமும் திருடர்களும் இருப்பது இல்லை'' *(நாரதீயம்-1:20) என்றும்,*

---

1. அங்கன் (இவ்வாறே ஒரு சுவடியில் பல இடங்களில் காணப்படுகிறது). 2. அவைத்தை. 3. இடைக் குறைச்சலாய்.
4. தாம் என்பது ஈண்டுக் குலசேகரரைக் குறிக்கும். 5. நிலைநின்ற செல்வம் - வீடுபேறு. 6. காற்கடை கொள்ளல் - தாழ்ந்தது என்று உதறி விடுதல்.

**குறுகப்பெறா."** அங்ஙன் அன்றியே, நிலமென்று - ப்ருதிவ்யாதி பூதங்களாலே ஆரப்தமான சரீரமாய், இவன் பண்ணின கர்மங்களைச் சரீரத்து அளவு ஆக்கும். பக்திமானுக்கு ப்ராரப்த கர்மாவதியாய் இருக்கும். இவ்அர்த்தாநுஸந்தாநத்தைப் பண்ணி ப்ரபந்நனானவனுக்கு இச்சரீராவதியாய் இருக்கும். **நீள் விசும்பு அருளும்** - விரோதி நிவ்ருத்தியாகிறது சரீராவதியிறே; அவ்வளவு அன்றியே, பரமபதத்தையும் கொடுக்கும்.[1]

**அருளொடு பெருநிலம் அளிக்கும்** - அருளோடேகூட பெரிய நிலமுண்டு பெரிய ஸ்தாநம் - கைங்கர்யமாகிற பெரியபதம், அத்தைத்தரும்.

**வலம் தரும்** - **"ஒழிவில்காலம்"** என்று இவனுக்கு ப்ரார்த்தநீயமான கைங்கர்யத்தைக் கொடுக்கும்.[2] 'வலந்தரும்' என்றாலும் அது தன்னையே

---

" நம்மன்போலே வீழ்ந்தமுக்கும்
நாட்டிலுள்ள பாவமெல்லாம்
சும்மெனாதே கைவிட்டோடித்
தூறுகள் பாய்ந்தனவே" (பெரி. தி. 5: 4: 3)

*என்றும்,*

" கொடுமை செய்யும் கூற்றமும் என்
கோலாடு குறுகப்பெறா" (பெரி. தி. 5: 4: 4)

*என்றும் கூறுவர்.*

*அவ்வாறு அல்லாமல்,* நிலம் *என்பது மண் முதலிய பருப்பொருள் களான் அமைந்த யாக்கையைக் குறிப்பதாய்,* இவன் பண்ணின *வினைகளை இவ்யாக்கையோடு கழிவனவாய் ஆக்கும் எனலும் அமையும். பத்தனுக்கு அவனுடைய துய்வினை முடியும்வரை யாக்கைகள் தொடரும். திருமந்திரத்தின் பொருளை நெஞ்சிற் கொண்டு புகல்நெறி கைக்கொள்வானுக்கு இவ்யாக்கை அழியும்போது அவ்வினையும் கழிவதாய் இருக்கும்.* **நீள் விசும்பு அருளும்** - *தடை கழிவது என்பது உடல் அழியும்போது நிகழ்கிறது; அவ்வளவோடு அமையாது, கலங்காப் பெருநகரினையும் கொடுக்கும்.*

அருளொடு பெருநிலம் அளிக்கும் - *அருளோடு கூடப் பெரிய நிலத்தினை அளிக்கும். அஃதாவது, தொண்டாகிய பெரிய நிலையைத் தரும், பெரிய நிலம் - பெரிய நிலை.*

வலம் தரும் -

" ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்நாம்" (தி. வா. மொ. 3: 3: 1)

*என்று இவன் வேண்டிநிற்கும் தொண்டினைக் கொடுக்கும். 'வலம் தரும்'*

---

1, 2. குடுக்கும்.

காட்டும். அங்ஙனன்றிக்கே, வலந்தரும் என்று "ய ஆத்மதா பலதா :" என்று தன்னையும் கொடுத்துத்[1] தன்னை அநுபவிக்கைக்கு ஈடான சக்தியையும் கொடுக்கும்.[2] நித்ய ஸம்ஸாரியாய் இன்று சென்றவனுக்கும், நித்யாநுபவம் பண்ணுகிற நித்ய ஸூரிகளோடு ஒக்க அநுபவிக்கைக்கீடான சக்தியையும் கொடுக்கும்.[3]

**அங்ஙன் அன்றிக்கே, அருளொடு பெருநிலம் அளிக்கும் வலம் தரும்** - தன்னை ஆச்ரயித்தவர்கள் தங்கள் அளவன்றிக்கே, தங்களொடு ஸம்பந்தித்தார்க்கும், தங்கள் அருளோடேகூட, பெரிய நிலம் உண்டு - பரமபதம், அத்தைக் கொடுக்க வல்லராம்படியான ப்ரஸாதத்தைப் பண்ணும்.

**மற்றும் தந்திடும்** - இவனுக்கு ஹிதமாய் இவன் அறியாதவற்றையும்[4] தானே கொடுக்கும்;[5] "இவன் கார்யம் தான் அறிந்தானோ, நாம் அன்றோ கடவோம்" என்று தானே கொடுக்கும்[6]. கோவிந்தஸ்வாமி தன்னைக் கண்ட அநந்தரம் "நான்கூடப் போருவேன்" என்ன, அவனுடைய முன்புத்தை நினைவு அறிந்து, "நீ இங்கே இருந்து சிறிது நாள் அநுபவித்து வா" என்று போனானிறே.

---

*என்னும் இதுவும், முன்னர்ச் சொன்ன அதனையே குறிக்கும்; அஃதாவது அத் தொண்டினைத் தருவதனையே குறிக்கும். அவ்வாறு அல்லாமல், வலம் தரும் என்பது "பெருமான் தன்னையும் தந்து, தன்னைத் துய்ப்பதற்கு ஈடான ஆற்றலையும் தருகிறான்" (கி. யஜு. 7: 5: 36) என்பதற்கு ஏற்பத் தன்னையும் கொடுத்துத் தன்னைத் துய்த்தற்கு உரிய ஆற்றலையும் கொடுக்கும் என்றும் கொள்ளலாம். நெடுங்காலம் மண்ணுலகில் வாழ்க்கை நடத்தி இன்று திருநாடு சென்றவனுக்கும், எந்நாளும் இறை இன்பத்தில் திளைக்கும் அமரர்களோடு ஒன்றாய்ச் சேர்ந்து துய்ப்பதற்கு ஏற்ற ஆற்றலையும் கொடுக்கும்.*

*அவ்வாறு அல்லாமல், "அருளொடு பெருநிலம் அளிக்கும் வலம் தரும்" என்று ஒரு தொடராகவும் கொள்ளலாம். அப்பொழுது இறைவன் திருப்பெயர் தன்னைப் பற்றியவர்கள் அளவில் நிற்காமல், அவர்களொடு தொடர்பு கொண்டார்க்கும் தங்கள் அருளைத் தந்து, திருநாட்டையும் கொடுக்க வல்லவராகுமாறு அருளைச் செய்யும் என்று பொருள் தரும். பெருநிலம் - திருநாடு.*

*மற்றும் தந்திடும் - இவனுக்கு நன்மை செய்வதாய், இவன் அறியாதவற்றையும் தானே கொடுக்கும். "இவன் தனக்குச் செய்துகொள்ள வேண்டுவன யாவை என்று அறிவானோ? மாட்டான்; ஆகையால் நாமன்றோ செய்தல் வேண்டும்" என்று தானே கொடுக்கும். கோவிந்தசாமி தன்னைக் கண்ட பின்னர், "நானும் உடன் வருவேன்" என்று சொல்ல, அவனது முன்னைய நினைவை அறிந்து, "நீ இங்கே இருந்து சில நாள் இன்பம் நுகர்ந்து வா" என்று போனான் அன்றோ!*

---

1, 2, 3. குடுக்கும். 4. அறியாதவைத்தையும். 5, 6. குடுக்கும்.

**பெற்ற தாயினும் ஆயின செய்யும்** - மாதாவானவள், சரீரத்துக்கு உத்பாதிகையாம் அளவிறே; ஆத்மாவுக்கு ஸ்வரூபமான ஜ்ஞாந விகாஸத்தைப் பிறப்பிப்பான் அவனேயிறே. **"சரீரமேவ மாதா பிதரௌ ஜநயத:"** என்று விரோதியான சரீரத்தை உத்பாதித்துவிடும் அளவிறே இவர்கள் செய்வது; **"ஸஹி வித்யாதஸ்தம் ஜநயதி தச் ச்ரேஷ்ட்டம் ஜந்ம"** என்று ஜ்ஞாந ப்ரதனாவான் அவனேயிறே.

**நலம் தரும் சொல்லை** - அர்த்தாநுஸந்தாநம் ஒழியவே பாடத்தைச் சொன்ன மாத்ரத்திலே பக்தியைப் பிறப்பிக்கும் என்னுதல்; நலம் என்று வ்ருத்தமாய், கைங்கர்யத்தைத் தரும் என்னுதல். ஆகையாலே கைங்கர்யத்துக்கு அடியான ருசியைப் பிறப்பிக்கும் என்னுதல்; கைங்கர்யம் தரும் என்னுதல். **நான் கண்டு கொண்டேன்** - இப்படி இருப்பது ஒன்று உண்டு என்று அறியாத நான் காணப் பெற்றேன். **நாராயணா என்னும் நாமம்** - **"நமோநாராயணா யேதி மந்த்ரஸ் ஸர்வார்த்த ஸாதக:"** என்னுமத்தை.

---

**பெற்ற தாயினும் ஆயின செய்யும்** - *தாய் உடல் தோன்றுவதற்கு மட்டுமே இடமாய் இருக்கிறாள். உயிர்க்கு இயல்பான அறிவுமலர்ச்சியைப் பிறப்பிப்பவன் இறைவனே.* "தாய் தந்தையர் உடம்பை உண்டுபண்ணுகிறவர்கள்" *(ஆப. ஸூ. 1: 1: 6) என்பதற்கு ஏற்பப் பகையான உடலை உண்டாக்குவதுவே அவர்கள் செய்வது.* "அவனே (இறைவனே) ஒருவனைக் கல்வியறிவுடையவனாகத் தோற்றுவிக்கிறான். அதுவே மேலான பிறவி" *(ஆப. ஸூ. 1: 1: 6)என்பதற்கு ஏற்ப அறிவு கொடுப்பவன் இறைவனே ஆவான்.*

**நலம் தரும் சொல்லை** - *பொருளை விடுத்துச் சொல்லைச் சொன்ன அளவில் பத்தியைப் பிறப்பிக்கும்* என்னுதல்; *நலம் என்பது செயலைச் சொல்லுவதாய்த் தொண்டினைத் தரும்* என்னுதல். *ஆகையால் தொண்டினுக்கு அடியான சுவையைப் பிறப்பிக்கும்* என்னுதல்; *தொண்டினைத் தரும்* என்னுதல். **நான் கண்டுகொண்டேன்** - *இப்படி இருப்பது ஒன்று உண்டு என்று அறியாத நான் காணப்பெற்றேன்.* **நாராயணா என்னும் நாமம்** - "நமோ நாராயணாய என்னும் மந்திரம் எல்லாப் பேறுகளையும் கொடுக்க வல்லது" என்பர். *அத்தகைய திருப்பெயரைக் காணப்பெற்றேன்.*

### ஒப்புமைப் பகுதி

1. குலம் தரும்

*" தரும புத்திரர் அசரீரி வாக்கியத்தையும் ஞானாதிக்கியத்தையும் கொண்டு ஸ்ரீவிதுரரைப் பிரம்ம மேதத்தாலே ஸம்ஸ்கரித்தார்" (சூ. 233)*

*" ருஷிகள் தர்ம வியாதன் வாசலிலே துவண்டு, தரும சந்தேகங்களைச் சமிப்பித்துக் கொண்டார்கள்" (சூ. 234)*

*" ஸ்ரீவிபீஷணனை இராவணன் 'குலபாம்ஸநம்' என்றான்; பெருமாள் இக்ஷ்வாகு வம்சியராக நினைத்து வார்த்தை அருளிச்செய்தார்"*

(சூ. 231) என்னும் ஸ்ரீவசனபூஷண சூத்திரங்கள் ஒப்புநோக்கத் தக்கன.

[சமிப்பித்தல் - தீர்த்துக் கொள்ளுதல்]

**2. செல்வம் தந்திடும்**

"செல்வர் வாழும் திருக்கடித் தானமே"

"செல்வர்கள் - பகவத் அநுபவமாகிற நிரவதிக ஸம்பத்தை உடையவர்கள். 'லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:'" தி. வா. மொ. 8:6:1-24

[நிரவதிக ஸம்பத் - எல்லையற்ற செல்வம்]

**3. வினைகளை வெறுந்தரையாக்கிடும்**

"சார்ந்த இருவல்வினைகளும் சரித்து......வீடு திருத்துவான்" "சார்ந்த இரு வல்வினைகளும் சரித்து - 'திலதைலவத்தாருவஹ்நிவத்' என்கிற படியே பிரிக்க ஒண்ணாதபடி பொருந்திக் கிடக்கிற புண்யபாபரூப கர்மங்களையும் சரித்து, ஸர்வசக்தியான தான் போக்கும் அன்றும் போக்க ஒண்ணாதபடி சத சாகமாகப் பணைத்த வினைகளை, விரகர் நெடுஞ்சுவர் தள்ளுமாபோலே போக்கி" தி. வா. மொ. 1:5:10-36

[சத சாகம் - நூறு கிளைகளை உடையது]

"செடியார் வினைகள் தீர் மருந்தே"

செடி - பாபம். பாபத்தோடே பொருந்தின அஸத்கர்மங்களால் உண்டான து:க்கத்தைப் போக்குகைக்கு மருந்தானவனே! அது புஜிப்பிக்கைக்கு விரோதிகளைப் போக்கும்படி. அன்றிக்கே தூறு மண்டின கர்மங்களைப் போக்குகைக்கு மருந்தானவனே!" தி. வா. மொ. 6:10:7-36

[அஸத்கர்மங்கள் - தீவினைகள்]

**4. கோவிந்தசாமிக்கு அருள் புரிந்த நிகழ்ச்சி**

இந்நிகழ்ச்சி "மாக மா நிலம்" (பெ. தி. 5:8:5) உரையில் விரிவாக வரையப்பட்டுள்ளது. அது வருமாறு :

"மாக மித்யாதி - கோவிந்தஸ்வாமி என்பான் ஒரு ப்ராஹ்மணன், இதிஹாஸ புராண ஶ்ரவணத்தாலே, க்ருஷ்ணனுடைய பால்ய சேஷ்டிதங்களையும் ராஸக்ரீடாதிகளையும் ஸாக்ஷாத்கர்த்துகாமனாய், முன்பு 'காண வாராய்' என்று எண்ணியிருப்பார்க்கு 'பரித்ராணாய ஸாதூநாம்' என்கிறபடியே காட்டிக்கொடுத்துப் போருமவன் அன்றோ, நமக்கும் அவ்வாசை உண்டானால் ஸித்தியாமையில்லை, ததர்த்தமாக அர்த்திப்போம் என்று சரீரத்தை ஒறுத்து தபஸ்ஸு பண்ண; இவன் நினைவின் படியே க்ருஷ்ணாவதாரத்திற் படிகளை அடைய ஸ்ருஷ்டித்துக்காட்டி அநுபவிப்பித்து, 'உனக்கு வேண்டுவது என்?' என்று கேட்டருள,

'கூடப்போந்து இப்படி தேவரை அநுபவிக்கும் இத்தனை' என்ன; 'நீ தபஸ்ஸு பண்ணுகிறபோது விஷயவிதுரனாய் அந்நபாநாதிகளையும் கழித்து உடம்பையும் நாரும் நரம்புமாக்கிக் கொடுபோந்தாய், இங்கே இருந்து நெகிழ்ந்த போகங்களையும் கழித்து வா' என்று அவன் கருத்தறிந்து அருளிச்செய்தாப்போலே, என் கருத்தறிந்து கார்யம் செய்ய வேணும் என்கிறார்."

*[ராஸக்ரீடை - குரவைக் கூத்து. ஸாக்ஷாத்கர்த்துகாமன் - காண வேண்டும் என்னும் விருப்புடையவன். அர்த்தித்தல் - இரத்தல். விஷயவிதுரன் - இன்பங்களில் பற்றற்றவன்.]* (9)

## 10

**மஞ்சுலாம் சோலை வண்டறை மாநீர்**
**மங்கையார் வாள்கலி கன்றி**
**செஞ்சொலால் எடுத்த தெய்வநன் மாலை**
**இவைகொண்டு சிக்கெனத் தொண்டீர்!**
**துஞ்சும்போ தழைமின்; துயர்வரில், நினைமின்;**
**துயரிலீர் சொல்லிலும் நன்றாம்;**
**நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு**
**நாராய ணாஎன்னும் நாமம்.**

**ப. ரை :** **தொண்டீர்** - தொண்டர்காள்! **மஞ்சு உலாம் சோலை** - மேகங்கள் திரியும் சோலையினையும், **வண்டு அறை மாநீர்** - வண்டுகள் ஒலிக்கும் மிகுந்த நீரினையும் உடைய, **மங்கையார் வாள் கலிகன்றி** - திருமங்கையில் உள்ளார்க்குப் பாதுகாவலாக உள்ள வாளை உடையராய்க் கலியின் குற்றத்தைப் போக்கிய வரான ஆழ்வார், **செஞ் சொலால் எடுத்த** - செவ்விய சொல்லால் எல்லார்க்கும் விளங்கும்படியாகச் செய்த, **தெய்வ நன் மாலை இவை** - தெய்வத் தன்மை பொருந்திய அழகிய சொன்மாலையான இவற்றை, **சிக்கெனக் கொண்டு** - உறுதி யாகப் பற்றி, **துஞ்சும் போது அழைமின்** - உடலை விடுத்து உயிர் நீங்கும் காலத்தில் அழையுங்கள்; **துயர் வரில் நினைமின்** - துன்பங்கள் உண்டாகுமானால் இதனையே நினையுங்கள்; **துயர் இலீர் சொல்லிலும் நன்று ஆம்** - துயரம் இல்லாத நீங்கள் சொன்னாலும் நன்மையைத் தரும்; **நாராயணா என்னும் நாமம் -, நம்முடை வினைக்கு நஞ்சுதான் கண்டீர்** - நம்முடை தீவினைகளுக்கு விடமாகும் அறிந்துகொள்ளுங்கள்.

**சி. கு :** மாநீர் - மிகுந்த நீர்; மா - பெருமை; ஈண்டு மிகுதியை உணர்த் திற்று. கண்டீர் - காண்பீர், உறுதிபற்றி இறந்த காலத்தில் கூறினார்; அசை என்றும் கொள்ளலாம்.

வியா : **பத்தாம் பாட்டு: மஞ்சு உலாம் சோலை**-மேகங்கள் உலாவும் படியான ஒக்கத்தை உடைத்தான சோலை. **வண்டு அறை** என்கிறது சோலைக்கு விசேஷணமாகவும் ஆம்; மாநீர்க்கு விசேஷணமாகவும் ஆம். ஜலத்தினுடைய ரஸ்யதையாலே, "ஈக்கள் வண்டொடு மொய்ப்ப" என்று ஆற்றுவரவுகளிலே சொல்லுவர்கள் ஆயிற்றுத்[1] தமிழர். **மங்கையார் வாள் கலிகன்றி** - பகவத் ஸம்பந்தத்தை உணர்ந்தவர்கள் பகவத் பலமே பலமாய் இருக்குமாப் போலே, திருமங்கையில் உள்ளார் இவர் கையில் வாளே தங்களுக்கு பலமாக ஆயிற்று[2] நினைத்திருப்பது.

**செஞ்சொலால் எடுத்த** - அதிக்ருதாதிகாரமாய், ஸம்ஸ்க்ருதமாய், தெரியாத சப்தங்களாலே சொன்ன அர்த்தங்களை வ்யக்தமாக எல்லார்க்கும் தெரியும்படி செவ்விய சொல்லாலே சொன்ன. **தெய்வ நன் மாலை** - அப்ராக்ருதமாய், "கேட்டுஆரார் வானவர்கள்" என்று நித்யஸூரிகள் கேட்டு அநுபவிக்கலாம்படி இருக்கிற, மாலை - தொடை. **இவை கொண்டு சிக்கெனத் தொண்டீர் துஞ்சும்போது அழைமின்** - சரீராவஸாநத்தில் யமவஸ்யதைக்கு அஞ்சாதே இத் திருநாமங்களைச் சொல்லுங்கோள். **துயர்வரில் நினைமின்** - இவ்வருகுண்டான வ்யஸநங்கள் வந்த போதும் இத்தையே சொல்லுங்கோள். **துயர் இலீர் சொல்லிலும் நன்று ஆம்** - "சரீரத்தோடே இருந்தால் இவை எல்லாம் வருகை ப்ராப்தம் அன்றோ" என்று இத்தை மதியாதே அநந்யப்ரயோஜநராய் இருப்பார்க்கு ஸ்வயம்

---

வி: **பத்தாம் பாட்டு : மஞ்சு உலாம் சோலை** - மேகங்கள் உலாவும் படியான ஒக்கத்தை[3] உடைய சோலை. **வண்டு அறை** - இதனைச் சோலைக்கு அடைமொழியாகவோ மாநீர்க்கு அடைமொழியாகவோ கொள்ளலாம். நீரின் சுவை மிகுதியாலே, "ஈக்கள் வண்டொடு மொய்ப்ப" (கம்பராமாயணம், ஆற்றுப்படலம் 10) ஆறு வருவதாக ஆற்றுவரவு கூறும் படலங்களில் சொல்லுவார்கள் தமிழ்ப் புலவர்கள். **மங்கையார் வாள் கலிகன்றி** - இறைவனைச் சார்ந்தோர் இறைவனது ஆற்றலையே தங்களுக்கு அரணாகக் கருதி இருப்பர். அதுபோலத் திருமங்கையில் உள்ளார் இவர் கையில் உள்ள வாளினையே தங்களுக்குக் காப்பாக நினைத் திருப்பர்.

**செஞ்சொலால் எடுத்த** - சிலர்க்கே கோடற்கு உரியதாய், வடமொழியாய், தெரியாத சொற்களாலே தெரிவித்த கருத்துகளாய் இருந்தவற்றைத் தெளிவாக எல்லார்க்கும் தெரியுமாறு செவ்விய சொல்லாலே சொன்ன. **தெய்வ நன் மாலை** - உலகியல் கடந்த அருள் நலத்ததாய், "கேட்டு ஆரார் வானவர்கள்" (தி. வா. மொ. 10 : 5 : 11) என்று அமரர்கள் கேட்டுத் திளைக்கத் தக்கதாய் இருக்கும் மாலை. மாலை - தொடை. **இவை கொண்டு சிக்கெனத் தொண்டீர் துஞ்சும்போது அழைமின்** - உடம்பு அழியுங் காலத்தில் காலன் கவர வருவதற்கு அஞ்சாது, திருப் பெயரினைச் சொல்லுங்கள். **துயர் வரில் நினைமின்** - இவ்உலகில் விளையும் துன்பங்கள் வந்த போதிலும் இத்திருப்பெயர்களையே சொல்லுங்கள். **துயர்இலீர் சொல்லிலும் நன்று ஆம்** - "உடலோடு கூடி இருக்கும்வரை இத்துன்பங்கள் எல்லாம் வருதல் இயற்கையன்றோ" என்று இவற்றை மதிக்காமல் திருப்பெயர் சொல்வது ஒழியப் பிறிது ஒரு பயனும் வேண்டாதே இருப்பார்க்குத் தானே

---

1, 2. ஆய்த்து.

3. ஒக்கம் - உயரம்.

ப்ரயோஜநம். நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு - நம்முடைய பாபங்களுக்குக் காற்ற[1] ஒண்ணாத நஞ்சு.

நாராயணா என்னும் நாமம் -
" எனக்கு என்றும்,
தேனும் பாலும் அமுதும் ஆய திருமால் திருநாமம்
நானும் சொன்னேன்; நமரும் உரைமின் நமோ நாராயணம்."

என்று நமக்கு இனிய திருநாமமே பாபத்துக்கு நஞ்சு; அல்லாதான எல்லாம் ஸம்ஸாரத்திலே வேர் பற்றுகைக்கு உறுப்பாய் இருக்கும். இதினுடைய அர்த்தாநுஸந்தாநமே ஸம்ஸாரத்தை வேர் அறுப்பது என்னும் இவ்அர்த்தத்தை எல்லாரும் புத்திபண்ணி இருக்கலா காதோ?

---

*பயனாய் இருக்கும். நஞ்சுதான் கண்டீர் நம்முடைய வினைக்கு - நம்முடைய தீவினைகளுக்குக் காற்ற[2] ஒண்ணாத நஞ்சு.*

நாராயணா என்னும் நாமம் -
" எனக்கு என்றும்,
தேனும் பாலும் அமுதும் ஆய திருமால் திருநாமம்
நானும் சொன்னேன்; நமரும் உரைமின் நமோநா ராயணமே."
(பெ. தி. 6: 10: 6)

*என்று நமக்கு இனிதாய் இருக்கும் திருப்பெயரே தீவினைக்கு நஞ்சாய் இருக்கும். இதுவன்றிப் பிறவெல்லாம் உலக வாழ்க்கையில் வேர் பற்றுகைக்கு[3] உறுப்பாய் இருக்கும். இத்திருப்பெயரின் பொருளைச் சிந்திப்பது உலகவாழ்க்கையை வேர் அறுப்பதாய் இருக்கும் என்னும் இக்கருத்தினை எல்லாரும் கருதி இருக்கலாகாதோ?*

### ஒப்புமைப் பகுதி

**மஞ்சுலாம் சோலை**

*" கொண்டல்மீது அணவும் சோலை - இவற்றினுடைய ஆலிப்பையும் சோலைப் பரப்பையும் பசுமையையும் கண்டு மேகங்களானவை ஸமுத்ரமாகக் கொண்டு படியாநிற்கும். அன்றிக்கே மேக பதத்தளவும் செல்லத் திருச்சோலைதான் ஓங்கியிருந்தபடியைச் சொல்லிற்றாகவுமாம்"*
*தி. மா. 14. பெ. உரை.*
*(10)*

---

1. பாபங்களுக்கு ஆற்ற.
2. காற்ற - தணிக்க. 3. வேர் பற்றுகை - ஊன்றி நிற்றல்.

## முதல்பத்து - இரண்டாம்திருமொழி - வாலி

பிர : ஸம்ஸார ஸ்வபாவத்தையும், தம்முடைய இதர விஷய ப்ராவண்யத்தையும் அநுஸந்தித்தருளின இவர், அந்நோவுபாடே ஹேதுவாகத் தன் நிர்ஹேதுக க்ருபையாலே என்னை விஷயீகரித்துத் தன் ஸ்வாமித்வத்தையும் எனக்குக் காட்டித் தந்தான் என்றார் கீழில் திருமொழியில்; "அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி" என்று ராமாவதாரம் ப்ரஸ்துதம் ஆயிற்று; திருமந்த்ரமும் ப்ரஸ்துதம் ஆயிற்று. இத்திருமந்த்ரத்துக்கு அர்த்தமாகிறதுதான் ஸ்வாமித்வ ஸௌலப்யமிறே. கர்ஷகனானவன் பயிர்த்தலையிலே குடில் கட்டி நோக்குமாப் போலே, ரக்ஷ்யம் இருந்த இடத்தே[1] வந்து ரக்ஷிக்கையிறே ஸௌலப்யம்; உகந்தருளின நிலங்களிலே வந்து ஸந்நிதிபண்ணி இத்தை நோக்குகையாலே உடையவன் என்று ஸ்வாமித்வ ப்ரகாசகமுமாய் இருக்கிறது. எதிர்த்தலை பாராதே வந்து அவஸர ப்ரதீக்ஷனாய் அந்தர்யாமி ரூபத்தாலே இருக்கிற இருப்பு, ஸ்வாமித்வ கார்யமிறே. அவ்வளவு அன்றிக்கே, கண்ணாலே கண்டு அநுபவிக்க வேணும் என்று அபேக்ஷை பிறந்த அன்று அப்போதே அநுபவிக்கலாம்படி கோயில்களிலே வந்து நிற்கிற இதுக்கு மேற்பட இல்லையிறே ஸௌலப்யத்துக்கு. ஸம்பந்த ஜ்ஞாநம் பிறந்த அநந்தரம் அநுபவாபேக்ஷை பிறந்தால், அப்போதே இவ்வுடம்போடே அடிமை செய்யலாம்படி இராதிறே பரமபதத்தில்; "அநுபவிக்க வேணும்" என்று அபேக்ஷை பிறந்தபோதே அவ்வுடம்போடே அநுபவிக்கலாம்படி இருக்குமிறே உகந்தருளின நிலங்களிலே.

---

தோ : *கீழ்த் திருமொழியில், உலக இயற்கையையும், தம்முடைய சிற்றின்ப ஈடுபாட்டையும் எண்ணிய இவர், அந்நோவுபாடே பற்றாசாக, இறைவன் தன் அடியற்ற[2] அருளாலே தம்மை ஆட்கொண்டான் என்றும், தன் தலைமைத்தன்மையைக் காட்டித்தந்தான் என்றும் தெரிவித்தார். முதல் திருமொழியிலேயே,* "அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி" (பெ. தி. *1 : 1 : 6)* *என்று இராமாவதாரம் பேசப்பெற்றது; திருமந்திரமும் பேசப்பெற்றது. இத்திருமந்திரத்திற்கு இறைவனுடைய தலைமையும் எளிமையும் அன்றோ பொருள்! உழவன் பயிர்த்தலையிலே குடில் கட்டி நோக்குவது போலே, தான் நோக்குதற்குரிய பொருள் இருக்கும் இடம் நாடி வந்து காப்பது அன்றோ எளிமைத்தன்மை! உகந்தருளின நிலங்களிலே வந்து தங்கி இவ்உயிர்களை நோக்குகையாலே அவனே இவற்றிற்கு உடையவன் என்பதும் போதரும். இறைவனுக்கு எதிர்த்தலையாய் இருப்பவை உயிர்கள். அவ்எதிர்த்தலை காணாதவாறு வந்து, அருள் புரியக காலம் கருதிக் கரந்து உறைகிறான், இறைவன். இவ்இருப்பு அவன் உடையவனாய் இருக்கும் தன்மையின் விளைவு அன்றோ! அவ்வளவோடு அமையாமல், கண்ணாலே கண்டு இன்பம் துய்க்க வேண்டும் என்று வேட்கை பிறந்த அன்று, அப்போதே கண்டு மகிழக்கூடியவாறு கோயில்களிலே வந்து நிற்கிறான். அவன் எளிமையை விளக்குவதற்கு இதனினும் மேலான செயல் பிறிது ஒன்று இல்லை. ஒருவன் இறைவனுக்கும் தனக்கும் உள்ள உறவு பற்றிய அறிவினைப் பெற்று அவனைத் துய்த்து அடிமை செய்ய வேண்டும் என்று விரும்பினால் அப்போதே திருநாட்டில் அதனைச் செய்ய இயலாது. ஆனால்,* "இறை இன்பத்தில் திளைக்க வேண்டும்" *என்று வேட்கை பிறந்தால் அப்பொழுதே இவ்உடம்போடு*

---

1. இருந்தடத்திலே.
2. அடியற்ற - காரணம் இல்லாத.

இப்படி ஸௌலப்யத்துக்கு எல்லையான உகந்தருளின நிலங்கள் எங்கும் புக்கு அநுபவிக்கக் கோலி, அதில் இப்பாஷை நடையாடும் இடத்துக்கு எல்லையாய் இருக்குமிறே திருமலை. அவ்வளவிலே நில்லாதிறே இவருடைய ஆசையானது. ஆகையாலே உகந்தருளின நிலங்களுக்கு எல்லையான ஹிமவானில் திருப்பிரிதி அளவும் சென்று அவ்இடத்தை அநுபவிப்பதாகத் திருவுள்ளத்தோடே கூட்டுகிறார்.

கீழில் திருமொழியிலே, "அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி" என்று ராமாவதார முகத்தாலே விரோதி நிரஸநம் ப்ரஸ்துதமிறே; அவ் வழியாலே, மஹாராஜர் வெறுவியருமாய், தனியருமாய் ஜ்யேஷ்ட்டனாலே நெருக் குண்டு நோவுபட்டிருக்க, அவர் அபேக்ஷியாது இருக்கச்செய்தேயும் "ஸ ராமோ வாநரேந்த்ரஸ்ய" என்கிறபடியே தாமே அவர் இருந்த இடத்தே[1] சென்று அவர் விரோதியைப் போக்கி உபகரித்தாப்போலே, அவன் தானே, நம்முடைய குறைகளை யும் எல்லாம் தீர்த்து உபகரிக்கைக்காக இங்கே திருப்பிரிதியிலே வந்து எழுந்தருளி இருந்தான். நெஞ்சே! அங்கே சென்று கிட்டப் பாராய் என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். முன்பு எல்லாம் கண்ணுக்கு இலக்கான விஷயங்களிலே ப்ரவணராய்ப் போந்தார்; பகவத் ஜ்ஞாநம் பிறந்த பின்பும் அவ்வாஸநை அநுவர்த்தித்து கண்ணுக்கு

---

*துய்க்கலாம்படி அவன் உகந்தருளின நிலங்களிலே[2] காட்சி தருகிறான். இவ்வாறு, இறைவனது எளிமைக்கு எல்லையாக இருக்கும் உகந்தருளின நிலங்கள் எங்கும் புக்குத் திளைக்கக் கருதினார். அவற்றில் தமிழ் நடையாடும்[3] இடத்திற்கு எல்லை யாக இருப்பது திருமலை.[4] இவரது ஆசை அதனை வணங்குவதோடு நிற்பது அன்று. ஆகையாலே உகந்தருளின நிலங்களுக்கு எல்லையாக இமயமலையில் உள்ள திருப்பிரிதிவரை சென்று அவ்இடத்தை வணங்கி மகிழவேண்டும் என்று தம் உள்ளத்திற்குத் தெரிவிக்கிறார்.*

*முதல் திருமொழியிலே,* "அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி" *(பெ. தி. 1 : 1 : 6) என்று இராமாவதாரத்தின் வாயிலாகப் பகைவரை அழித்தல் எடுத்துச் சொல்லப்பட்டது. அங்கு மாமன்னர் சுக்கிரீவன் வெறுவியராய்த்[5] தனியராய்த் தமையனாலே நெருக்குண்டு நோவுபட்டிருந்தார். அவர் இராம பிரானை உதவுமாறு வேண்டினார் அல்லர். எனினும்,* "அந்த இராமன் குரங்குத் தலைவனாகிய சுக்கிரீவனது அருளை எதிர்நோக்குகிறான்" *(ரா. கி. 4 : 21) என்பதற்கு ஏற்பத் தானே அவர் இருந்த இடத்திற்குச் சென்றார். அவரது பகையை அழித்து உதவினார். அது போலே, அவனே நம்முடைய குறைகளை எல்லாம் தீர்த்து உதவிட இங்கே திருப்பிரிதியிலே வந்து எழுந்தருளி இருந்தான். நெஞ்சே! அங்கே சென்று அடைவாய் என்று திருவுள்ளத்திற்கு அறிவுறுத்துகிறார். முன்பு எல்லாம் கண்ணுக்கு இலக்கான பொருள்களிலே தோய்ந்து போந்தார். இறைஉணர்வு பிறந்த பின்பும் அப்பழைய பயிற்சி பின்தொடர்ந்தது; கண்ணுக்கு*

---

1. இருந்தடத்தே.
2. உகந்தருளின நிலங்கள் - திருக்கோயில்கள். 3. நடையாடும் - வழங்கும்.
4. திருமலை - திருவேங்கடமலை. 5. வெறுவியர் - வறியவர்; ஒன்றும் இல்லாதவர்.

விஷயமான உகந்தருளின நிலங்களிலே புக்கு அநுபவிக்கிறார்; "தான் உகந்த ஊரெல்லாம்" என்னக் கடவதிறே.

---

இலக்கான பொருள்களிலே புக்குத் திளைக்கிறார்.[1] "தான் உகந்த ஊர் எல்லாம் தன் தாள் பாடி" (தி. நெ. தா. 6) மகிழுமாறு நெஞ்சை வேண்டியவர் அன்றோ இவர்!

**ஒப்புமைப் பகுதி**

**ஸௌலப்யம் - விளக்கம்**

> *" ஸௌலப்யமாவது உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடு வாசியற ஸர்வ ஸுலபமான அர்ச்சக பராதீநத்வம்."*
>
> *தி. வா. மொ. 1:9:0-36*

*[ஸர்வஸுலபம் - எல்லார்க்கும் எளிதில் அடையத்தக்கது. அர்ச்சக பராதீநத்வம் - வழிபடுவோன் இட்ட வழக்காய் இருக்கும் தன்மை]*

## 11

**வாலி மாவலத் தொருவன துடல்கெட**
**வரிசிலை வளைவித்தன்று,**
**ஏலம் நாறுதண் தடம்பொழில் இடம்பெற**
**இருந்தநல் இமயத்துள்,**
**ஆலி மாமுகில் அதிர்தர, அருவரை**
**அகடுற, முகடேறிப்**
**பீலி மாமயில் நடம்செயும் தடம்சுனைப்**
**பிரிதிசென் றடைநெஞ்சே!**

ப. ரை: **நெஞ்சே** - மனமே! **அன்று** - சுக்கிரீவன் தஞ்சம் புகுந்த அன்று, **வாலி மா வலத்து ஒருவனது உடல் கெட** - வாலி என்னும் பெயரை உடையவனாய் மிக்க ஆற்றல் பொருந்தியவனாய் ஒப்பற்றவனாய் இருந்த ஒருவனுடைய உடல் அழிய, **வரிசிலை வளைவித்து** - அழகிய வில்லை அம்புகள் பாயுமாறு வளைவித்து, **ஏலம் நாறு** - இன்று மணம் வீசும், **தண் தடம் பொழில்** - குளிர்ந்து பரந்த சோலையில், **இடம் பெற** - வசதியாக, **இருந்த நல் இமயத்துள்** - இறைவன் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கும் சிறந்த பனிமலையில், **ஆலி மா முகில் அதிர்தர** - சிறிய துளிகளைக் கொண்ட பெரிய மேகங்கள் முழங்கிட, **பீலி மா முகில் அருவரை**

---

1. இது சுவைக்கூற்று; ரசோக்தி. முன்பும் கண்ணுக்கு இலக்கானவற்றில் ஈடுபட்டார். பின்பும் கண்ணுக்கு இலக்கானவற்றிலேயே ஈடுபடுகிறார் என்று முறையே பெண்கள்பால் கொண்ட ஈடுபாட்டையும் திருக்கோயில்களில் கொண்ட ஈடுபாட்டையும் நயமாகக் கூறலின் சுவைக் கூற்று ஆயிற்று.

11. 2: 6 இமயத்து; இமையத்துள். 4:3 நடம்செய்யும். 4:5 பிருதிசென்.

**அகடு உற முகடு ஏறி நடம் செயும்** - *தோகையையுடைய பெரிய மயில்களானவை ஏறுதற்கு அரிய மலைகளிலே கீழ்வயிறு தழுவும்படியாக அவற்றின் உச்சியில் ஏறி ஆடுகின்ற,* **தடம் சுனைப் பிரிதி சென்று அடை** - *பரந்த சுனைகளையுடைய திருப் பிரிதி என்னும் இடத்தைச் சென்று அடைவாய்.*

**சி. கு:** *ஒருவன் - ஒப்பற்றவன். வரிசிலை - கட்டமைந்த வில் என்றலும் ஆம். திருப்பிரிதி - இத்தலம் இமயமலையில் உள்ளது. பெருமான் பரமபுருடன்; பிராட்டி பரிமளவல்லி.*

*இஃது அடிதோறும் ஒரு மாவும், நான்கு விளமும், ஒரு காயும் பெற்று வரும் அறுசீர் ஆசிரிய விருத்தம்.*

**வியா : முதற் பாட்டு : வாலி இத்யாதி** - வாலி என்று பேராய், மஹாபலத்திலே வந்தால் தன்னை எண்ணினால் இரண்டாம் விரலுக்கு ஆள் இல்லாதபடி அத்விதீயனாய் இருக்கிறவனுடைய உடலானது சிந்தும்படியாக தர்சநீயமான வில்லை வளைத்து. வாலியும் அழிகையும் கிடக்கச்செய்தே, அக் கையும் வில்லும் சேர்ந்த சேர்த்தியும்[1] தர்சநீயதையும் அநுபவிக்கிறார் ஆயிற்று இவர்.

> "சத்ருநாசநே" என்கிறது[2] கிடக்க, "சக்ர சாப நிபே" என்கிறத்தை அநுபவிக்கிறார். உகப்பாரோடு உகவாதாரோடு வாசியற இரண்டு திறத்தாரையும் அழிக்கும் ஆயிற்று. **சக்ரசாபநிபே இத்யாதி** - இந்த்ர தநுஸ்ஸு போலே அநுகூலர்க்கு வைத்த கண் மாறாதே கண்டுகொண்டிருக்க வேண்டும்படி தர்சநீயமாய் இருக்கும்.

---

**வி : முதற் பாட்டு : வாலி மா வலத்து ஒருவனது உடல் கெட வரி சிலை வளைவித்து** - *வாலி என்பது அவன் பெயர்; பேராற்றலில் தன்னை எண்ணினால் இரண்டாம் விரலுக்கு ஆள் இல்லாதபடி இணையற்றவன்; அவனது உடல் சிந்து மாறு காட்சிக்கு இனிய வில்லை வளைத்தான். வாலியும் அவன் அழிவும் இருக்க, அக் கையும் வில்லும் சேர்ந்த சேர்த்தியையும்[3] அழகையும் எண்ணி இன்புறுகிறார் இவர்.*

> "இந்திர வில்லை நிகர்க்கும் இரு விற்களைப் பிடித்துக்கொண்டு, யாவர் மனத்தையும் கவர்ந்துகொண்டு, அழகு வாய்ந்து, ஒளியுடன் விளங்கும் ஆண்தகைகளாய் மரவுரி அணிந்தவர்களாய், பகைவர்களை அழிப்பவர்களாய் இருக்கும் நீங்கள் இருவரும் யார்?" *(ரா. கி. 3 : 9) என்பது அனுமன் கூற்று.* இதில், "பகைவர்களை அழிப்பவர்கள்" *என்பதனை விடுத்து,* "இந்திர வில்லை நிகர்க்கும் இரு விற்கள்" *என் பதனைப் போற்றி மகிழ்கிறார். உகப்பார், உகவாதார் என்னும் இரு திறத்தாரையும் ஒருசேர அழித்தது அவ்வில்!* **இந்திரவில்லை நிகர்க்கும்** - *வான வில்லைப் போலே உகப்பார்க்கு வைத்த கண் வாங்காதே கண்டு கொண்டிருக்க வேண்டும்படி காட்சிக்கு இனிதாய் இருக்கும்.*

---

1. சேற்றியும். 2. என்கிற இது.
3. சேர்த்தி - பொருத்தம்.

**க்ருஹீத்வா** - விற் பிடித்த பிடியிலே ப்ரதிகூலர் முடிந்துபோம்படியுமாய் இருக்கும். அநுகூலரை அழகாலே அழியச்செய்யும்; ப்ரதிகூலரை அம்பாலே அழியச்செய்யும்.

**எரி சிதறும் சரத்தால் - தீப்த பாவக ஸங்காசை:"** என்கிற படியே தொடுத்துவிடும் போதாயிற்று அம்பு என்று அறியலாவது; தைக்கும் போது உடம்பிலே நெருப்பைச் சொரிந்துகொண்டாயிற்றுத் தைப்பது. **இலங்கையினை** - அந்தகனுங்கூட ப்ரவேசிக்க அஞ்சும்படியான ஊரை. **தன்னுடைய வரிசிலை வாயில் பெய்து** - ஸர்ப்பம் நாவாலே விழுங்கு மாப் போலே ஆயிற்று அம்பாலே[1] க்ரஸிக்கும்படி. வில்லுக்கு வாய் அம்பிறே. வாயான அம்பிலே புகும்படி ப்ரவேசிப்பித்து. **வாய்க்கோட்டம் தவிர்த்து** - வாயில் கோடுதல் உண்டு - விலங்குதல், அத்தைத் தவிர்த் தான் ஆயிற்று. **"நநமேயம்"** என்று இருந்த இருப்பைத் தவிர்த்தான் ஆயிற்று. **கஸ்யசித்** - இவர் தம்மை இதர ஸஜாதீயர் ஆக்கி வைக்கை யாலே மநுஷ்யர் என்றே இருந்தான். இவரேயன்றிக்கே ஈஶ்வரன் என்று சொல்லுகிற அவன்தான் வந்தால்தான் வணங்குவனோ? ஸ்வரூபம் கை

---

பிடித்துக்கொண்டு - *வில்லைப் பிடித்த பிடியிலே பகைவர் முடிந்துபோம் படியாய் இருக்கும். அடியாரை அழகாலே அழியச்செய்யும்; அடையாரை அம்பாலே அழியச் செய்யும்.*

> " எரிசித றும்சரத்தால் இலங்கையினைத் தன்னுடைய
> வரிசிலை வாயிற்பெய்து வாய்க்கோட்டம் தவிர்த்துகந்த
> அரையன்" (*பெரி. தி. 4 : 3 : 8*)

*என்றார் பெரியாழ்வாரும்.*

**எரி சிதறும் சரத்தால்** - "கொழுந்துவிட்டு எரியும் நெருப்புப் போன்ற வையும் கூர்மையானவையும், பொன்னால் ஒப்பனை செய்யப்பட்டவையு மான அம்புகளைக்கொண்டு இராமனாலே நீ கொல்லப்படுவதை யான் காண விரும்பவில்லை" என்பது இராமாயணம் (*யு. 16:32*). *அக்கூற்றுக்கு ஏற்பத் தொடுத்துவிடும் போதில்தான் அம்பு என்று தோன்றும்; தைக்கும் போது உடம்பிலே நெருப்பைச் சொரிந்துகொண்டு தைக்கும்.* **இலங்கையினை** - *காலனும் கால்வைக்க அஞ்சும் ஊரினை.* **தன்னுடைய வரிசிலை வாயில் பெய்து** - *பாம்பு நாவாலே விழுங்குவது போலே வில்லானது அம்பாலே விழுங்கும். வில்லுக்கு அம்புதானே வாய்! வாயான அம்பிலே புகும்படி பெய்வித்து.* **வாய்க்கோட்டம் தவிர்த்து** - *வாயில் கோடுதலாவது விலங்குதல்; அஃதாவது முறைபிறழ்ந்து பேசுதல்; அதனைத் தவிர்த்தான்.* **"நான் ஒருவருக்கும் வணங்கேன்"** (*ரா. யு. 36 : 11*) *என்று இருந்த இருப்பைத் தவிர்த்தான்.* **ஒருவருக்கும்** - *இவ்இராமபிரான் தம்மை மனிதர்களுள் ஒருவராக்கி வைத்திருப்பதால் இவரை மனிதர் என்றே இராவணன் கருதி இருந்தான். இவரேயன்றி இறைவன் என்று சொல்லப்பெறும் அவனே வந்தாலும் வணங்கு*

---

1. அது அம்பாலே.

புகுந்தால் "நம இத்யேவ வாதிநః" என்று ஆயிற்று இருப்பது; 'மம' என்றிருக்கை ஆயிற்று ஸ்வரூப விரோதி. அநுகூல பாஷணம் பண்ணுகை ப்ராப்தமாய் இருக்க, 'எனக்கு'[1] என்ற பேச்சில் விலங்குதலைத் தவிர்த்தான் ஆயிற்று. **உகந்த அரையன்** - ஈரரசு தவிர்த்த பின்பு உகந்தபடி. "இவன்தான், 'எனக்கு'[2] என்று இருக்கும் அத்தைத் தவிர்த்தோமாகில் இனி நம்மதே[3] அன்றோ!" என்று இனியன் ஆனான். இவன் 'என்னது'[4] என்று இருக்கும் அது தவிர்ந்தால், பின்பு உள்ளது அடையத் திருவிடையாட்டமாய் இருக்குமிறே. **அரையன்** - இவன்பக்கல் அல்பாநுகூல்யம் அமைகிறது, உடையவனாகையிறே; இவன் ப்ராதிகூல்யத்தில்நின்றும் நிவ்ருத்தன் ஆன அளவுகொண்டு உகக்கும்படி ஆயிற்று ஸ்வாபாவிக ஸம்பந்தம் இருப்பது.

**அன்று** - அன்று அங்ஙனே செய்தான்; இன்று இங்கே வந்திருந்தான்.

**ஏலம் இத்யாதி** - வினை உள்ள போதாயிற்றுத் தன்னைப் பேணாதே மேல்விழுந்து வ்யாபரிப்பது. அது போனவாறே ராஜபுத்ரனாய்ச் செல்லப் பிள்ளையாய்[5] வளர்ந்த ஸௌகுமார்யம் வந்து முகம்காட்டுமிறே; அதுக்கு ஈடாக

---

*வேனோ என்றான். தன் இயல்பு தெரிந்தால்,* "**எனக்கு உரியேன் அல்லேன் என்று சொல்பவன்**" *(பார. ஸா. 344 : 45) ஆவான். அஃதாவது,* "**இறைவனுக்கு உரியவன் யான்**" *என்பான். 'எனக்கு' என்று இருப்பதே உயிரியல்புக்குப் பகை. நல்லது பேசுவதற்கு அமைந்திருக்க, 'எனக்கு' என்று பேசி, இராவணன் பிறழ்ந்து சென்றான்; அதனைத் தவிர்த்தான்.* **உகந்த அரையன்** - *ஈரரசு தவிர்த்த*[6] *பின்பு உகந்தான் என்றவாறு. "இம்மனிதன், 'எனக்கு' என்று இருத்தலைத் தவிர்த்தோமாகில் பின்பு நம் உடைமை ஆவான் அன்றோ!" என்று இனியன் ஆனான். இவன் 'எனது' என்று இருப்பது தவிர்ந்தால், பின்பு உள்ளவை எல்லாம் திருவிடையாட்டமாக இருக்கும்; அஃதாவது பெருமான் உடைமையாக இருக்கும்.* **அரையன்** - *இவனிடம் சிறிது நன்மை இருந்தால் போதும்; அவன் இவனை ஏற்றுக்கொள்வான். ஏனெனில், அவன் உடையவன். இவன் பொல்லாங்கு செய்தலினின்றும் கைவாங்கினால் அதுகொண்டு அவன் உகப்பான். உயிர்க்கும் அவனுக்கும் இடையே அமைந்த இயற்கையான உறவு அத்தகையது.*

**அன்று** - *அன்று அங்ஙனே செய்தான்;*[7] *இன்று இங்கே வந்திருந்தான்.*

**ஏலம் நாறு தண் தடம் பொழில்** - *பெருமாள் வினை*[8] *உள்ள போதன்றோ தன்னைப் பேணாமல் மேல்விழுந்து செயற்படுவான். அது கழிந்தவாறே மன்னன் மகனாய்ச் செல்லப் பிள்ளையாய் வளர்ந்த மென்மை வந்து முகங்காட்டும்*[9]

---

1, 2. இனக்கு. 3. நம்முதே. 4. என்னுது. 5. செல்வப் பிள்ளையாய்.

6. ஈரரசு தவிர்த்தல் - ஒருவன் இறைவனுக்கும் தனக்கும் உரியவனாய் இருக்கும் இரட்டையாட்சி நீக்குதல். 7. அங்ஙனே செய்தான் - அப்படிக் கொன்றான். 8. வினை - போர். 9. முகங்காட்டல் - தோன்றுதல்.

இருக்கிற இடம் ஆயிற்று. அன்றிக்கே, "அம்புக்குச் செல்லாத இடத்தை[1] ஆஸநத்தாலே திருத்துவோம்" என்று பார்த்து வந்திருந்தபடியாகவும் ஆம்; சத்ருக்களை அழிக்க ஒண்ணாவிட்டால், "அவர்களோடே எதிரிட்டுக் கொள்வோம் அல்லோம்" என்று பார்த்து, எடுத்துவிட்டு ஆஸநத்தாலே பக்நாபிமாநர் ஆக்குமாப் போலே. **ஏலம்நாறு** - விட்டுப் போந்த[2] இடத்தை விஸ்மரிக்கும்படி பண்ணும் தேசம் ஆயிற்று. "அதிகம் புரவாஸாச்ச". "ஜஹெள ஸ துஃக்கம் புர விப்ரவாஸாத்". படைவீட்டில் விசேஷேண உண்டான ப்ரக்ருஷ்ட வாஸத்தால் வந்த துஃக்கம் அடையப் போம்படி ஆயிற்று இங்குத்தை வாஸம். பரிமளத்தை உடைத்தாய் ஶ்ரம ஹரமாய்ப் பரப்பை உடைத்தாய் இருந்துள்ள பொழில். **இடம்பெற** - இடம்பெற இருக்கை ஆவது - எல்லார்க்கும் காட்சி கொடுக்கைக்கு[3] ஈடாக ஓலக்கம் இருக்கை. நித்ய ஸூரிகளுக்கு ஓலக்கம் கொடுக்கை[4] அன்றிக்கே, நித்ய ஸம்ஸாரிகளுக்கும் ஓலக்கம் கொடுத்துக்[5] கொண்டிருக்கை. அவதார காலத்தில் காணப்பெறாதார் எல்லார்க்கும் காட்சி கொடுத்துக்[6] கொண்டிருக்கிற இடம் ஆயிற்று. நல்

---

*அன்றோ? அம்மென்மைக்குத் தகுந்த இடம் இது. "அம்புக்குச் செல்லாத இடத்தை அங்குச் சென்று இருந்து திருத்துவோம்" என்று கருதி வந்திருந்தபடியாகவும் கொள்ளலாம்; அரசர்கள் பகைவர்களை அழிக்க ஒண்ணாது என்றால், அவர்களோடு "போர் புரிய வேண்டா" என்று கருதி அவ்இடத்துக்குப் புறப்பட்டுச் சென்று தங்குவதால் அவர்களைச் செருக்கழிந்தவர்களாய் ஆக்குவது போலே இங்கு வந்து இருந்தான் என்பதாம்.* **ஏலம் நாறு** - *பெருமானை அவன் விட்டு வந்த இடமாகிய அயோத்தியைக்கூட மறக்குமாறு செய்யும் இடம். இராமபிரான் சீதையை நோக்கி, "புண்ணியம் நிறைந்தவளே! சித்திரகூடம், கங்கையாறு ஆகியவற்றைக் காணும் இன்பம், நீயும் உடனிருந்து காண்பதனால் சிறக்கிறது. ஆதலின்,* **கானக வாழ்க்கையை நகர வாழ்க்கையைக்காட்டிலும் சிறந்ததாகக் கருதுகிறேன்"** *(ரா. அ. 95 : 13) என்றார் எனவும், "இராமபிரான் மிகவும் மனத்தைக் கவரும் சித்திரகூடத்தையும், நல்ல நீர், விலங்குகள், பறவைகள் ஆகியவற்றால் சூழப்பட்டதுமான அந்த மந்தாகினி ஆற்றையும் கண்டு மனநிறைவு அடைந்தார். அவர்பால்* **நகரை விட்டுக் காட்டிற்கு வந்ததால் நேரும் மனக்குறை என்பதே அணுகவில்லை"** *(ரா. அ. 56 : 38) எனவும் வரும் வான்மீகி இராமாயணப் பகுதிகள் கருதத் தக்கன. படைவீட்டில்[7] அடிக்கடி சீதையை விடுத்துப் புறம்பே செல்ல நேர்ந்த பிரிவால் வந்த துன்பம் முற்றும் போகும்படியாக இருந்தது இங்கு அமைந்த வாசம்[8]. மணம் உடையதாய்க் களைப்புப் போக்குவதாய்ப் பரப்புடையதாய் இருக்கும் பொழில்.* **இடம் பெற** - *இடம்பெற இருக்கையாவது எல்லார்க்கும் காட்சி கொடுப்பதற்கு ஏற்ப ஓலக்கம் இருத்தல். அயர்வறும் அமரர்களுக்கு ஓலக்கம் கொடுப்பதோடு என்றும் உலக வாழ்வில் உழல்வார்க்கும் ஓலக்கம் கொடுத்துக்கொண்டிருத்தல். அவதார காலத்தில் காணப்பெறாதார் எல்லார்க்கும் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கும்*

---

1. செல்லாதடத்தை. 2. போன. 3. குடுக்கைக்கு. 4. குடுக்கை. 5, 6. குடுத்துக்.
7. படைவீடு - தலைநகரம்; ஈண்டு அயோத்தியைக் குறிக்கும். 8. இது சுவைக்கூற்று. இத்தொடரில் 'வாசம்' என்னும் சொல் மணம், இருப்பு என்னும் இருபொருளில் பயன்படுத்தப் பட்டுள்ளது. நகரின் பல வகை மணத்தால் உண்டான சலிப்புணர்ச்சி இங்கு வந்த மணத்தால் நீங்கியது என்றும், நகரில் நெடும்பொழுது தங்கியிருந்த இருப்பினால் தன் காதலியோடு தனித்து, நெடுநேரம் அளவளாவ முடியாமையால் வந்த துன்பம் நீங்கியது என்றும் இருவகைப் பொருள் தந்தது.

**இமயத்துள்** - ஒரு காரியப்பாடு ஒழியவேயும் வர்த்திக்க வேண்டும்படியான தேசம் ஆயிற்று. தன் அநுக்ரகத்தாலே வர்த்தித்தானாக வேண்டாதே, தேச வாஸந்தானே உத்தேஶ்யமாகப் போரும்படி இருக்கை.

**ஆலி இத்யாதி** - ஸ்ரீவைகுண்டத்தில் வாத்ய கோஷங்களோடும் நித்ய ஸூரிகள் "அஹம் அந்நம் அஹம் அந்நம்" என்று களிக்குமத்தோடும் போது போக்கி இருக்குமவன், அவ்இழவு தீர, அவைதன்னையும்கூட மறக்கும்படி மேகங்கள் கோஷிக்க, மயில்கள் ஆட, அது கண்டு போதுபோக்கிக் கொண்டிருக்கிற இடம் ஆயிற்று. வினையற்றுப் பிராட்டியோடேகூட எழுந்தருளியிருக்கையாலே மேக த்வநிதான் அநுகூலமாய் இருக்குமிறே. **ஆலி இத்யாதி** - சிறு துளியை உடைத்தான மஹா மேகங்களானவை நீர்க்கநத்தாலே முழங்க. ஆலி மாமுகில் அதிர்தரப் பீலி மாமயில் நடஞ்செய்யும் ஆயிற்று; வாத்யங்கள்[1] வாய்த்தால் கூத்தாடுவார் உடம்பு பேசாது இராதிறே; காலுக்கு ஈடாக வாய்த்தவாறே ஆடுவாரைப்போலே, அவை முழங்க இவை ஆடாநிற்கும் ஆயிற்று. **அரு வரை இத்யாதி** - ஒருவரால் தாவி ஏற அரிதான மலைகளிலே; ப்ரீதியாலே ஏறில் ஏறும் அத்தனை ஆயிற்று. அவற்றிலே[2] கீழ்வயிறானது தழுவும்படியாக சிகரத்திலே போய் ஏறி, சிகரத்தின் பரப்பு அடங்கலும் தன் தோகையாலே பரப்பி, மயிலானது ஆடாநிற்கும் ஆயிற்று. ராமாவதாரத்தில் விஜயங் கண்டு வாநர[3] ஜாதியாக ஆடினத்தை இவ்இருப்பைக்

---

இடம். **நல் இமயத்துள்** - *ஆக வேண்டும் செயல் ஒன்றும் இல்லையெனினும் தங்கியிருக்க வேண்டும்படியான இடம். தன் அருளாலே வந்து உறைகிறான் என்று சொல்ல வேண்டாதவாறு, இவ்இடத்தில் உறைவதுவே நோக்கமாக இருக்கிறான் என்று சொல்லுமாறு இருத்தல்.*

**ஆலி மா முகில் அதிர்தர** - *திருநாட்டில் இசைக்கருவிகள் முழங்குகின்றன; அயர்வறும் அமரர்கள்,* **"யான் இறைவனுக்குச் சோறு போலச் சுவையாய் இருப்பவன்; யான் இறைவனுக்குச் சோறு"** *(தைத். ப்ரு. 10 : 6)* என்று *களிக்கின்றனர்.* இவற்றினிடையே *போதுபோக்கி இருப்பவன் பெருமான். அவன் இவற்றை எல்லாம் விடுத்து இங்கு எழுந்தருளியுள்ளான். அவ்இழவு தீர, அவ்இன்பங்களையும்கூட மறக்கும்வண்ணம் இங்கு மேகங்கள் முழங்குகின்றன; மயில்கள் ஆடுகின்றன; அக்காட்சியினைக் கண்டு போதுபோக்கிக் கொண்டிருக்கிறான். போர் முடிந்து பிராட்டியோடேகூட எழுந்தருளியிருத்தலின் முகிலின் முழக்கம் இனிதாய் அமைவது ஆயிற்று.* **ஆலி மா முகில் அதிர்தர** - *சிறு துளியையுடைய பெருமுகில்கள் நீர்ச்சுமையாலே முழங்க. ஆலி மா முகில் அதிர்தரப் பீலி மா மயில் நடம்செய்வது ஆயிற்று. இசைக்கருவிகள் பொருத்தமாக இணைந்தால் கூத்தாடுவார் உடம்பு பேசாமல் இருக்காது; அவர்கள் காலுக்கு ஏற்ப இசை வாய்த்தவுடன் ஆடுவார் அன்றோ! அதுபோல, அவை முழங்க இவை ஆடுகின்றன.* **அரு வரை அகடு உற முகடு ஏறிப் பீலி மாமயில் நடம்செயும்** - *ஒருவரால் தாவி ஏற அரிதான மலைகளிலே; ஆசையால் ஏறினால் ஏறலாம். அவற்றிலே கீழ் வயிறு தழுவும்படியாக உச்சியிலே ஏறி, உச்சிப்பரப்பு முழுவதையும் தன் தோகையாலே பரப்பி மயில் ஆடும். இராமாவதாரத்தில் வெற்றி கண்டு குரங்குகள்*

---

1. வாத்ய கோஷங்கள். 2. அவைத்திலே; அவைற்றிலே. 3. ஸ்ரீவாநர.

கண்டு மயில்கள் ஆடாநிற்கும் ஆயிற்று. பிரிதி சென்று அடை நெஞ்சே - சைதந்யத்தில் குறைய நின்றாரும் அத்தேசத்தை ப்ராபித்து ப்ரீதிக்குப் போக்கு விட்டுச் சில வ்யாபாரங்களைப் பண்ணுகிற தேசம் ஆன பின்பு, சைதந்யத்தில் குறையற்று இருந்த நீ அத்தேசத்தைச் சென்று ப்ராபிக்கப் பாராய் என்கிறார். சைதந்யத்தில் குறைய நின்றாரோடு குறைவு அற்றாரோடு வாசியற நிலவராய் அடிமை செய்யும்படி ஆயிற்று. விஷய ஸ்வபாவம் துரும்பெழுந்தாடும் ஆயிற்று.

---

கூட்டமாக ஆடியது போல, இவ்இருப்புக் கண்டு மயில்கள் ஆடுகின்றன. தடஞ்சுனைப் பிரிதி சென்று அடை நெஞ்சே - அறிவில் குறைந்த மயிலும் அவ் இடத்தை அடைந்து தன் மகிழ்ச்சிக்குப் போக்குவிட்டு ஆடுதல் முதலான செயல் களைச் செய்யும் இடம் என்று அறிந்த பின்னர் அறிவில் குறையற்ற நீ அவ் இடத்தைச் சென்று கிட்டப் பாராய் என்கிறார். இறைவனது இயல்பு அறிவில் குறைய நின்றார், குறைவு அற்றார் என்னும் வேறுபாடு இன்றி எல்லாரும் நிலவராய்[1] அடிமை செய்யும்படி அமைந்தது. அஃதாவது, அறிவற்ற துரும்பும் எழுந்தாடுமாறு அமைந்தது.[2]

ஒப்புமைப் பகுதி

1. வாலியை அழித்தல்

*" வாலி வீழ முன்னொர் நாள் உரம் பொதச் சரந் துரந்த - ராவணனை வாலிலே கட்டிக் கொண்டு திரியும் பெருமிடுக்கனான வாலியை முன்பு போன சதுர்யுகங்களில் ஒரு த்ரேதாயுகத்திலே இவன் தரைப்படும்படி யாக மராமரங்களிலும் திண்ணிய அவன் மார்வு மறுபாடு உருவும்படி அம்பைவிட்டு"*

*தி. ச. வி. 73. பெ. உரை.*

*[சதுர்யுகங்கள் - நான்கு ஊழிகள். த்ரேதாயுகம் - இரண்டாம் ஊழி.]*

2. அடியாரையும் (அநுகூலர்) அடையாரையும் (ப்ரதிகூலர்) அழிக்கும் முறை

*" அசுரர் வன்கையர் கூற்றமே - கண்பாராதே நலியும் அசுரர்களுக்கு அந்தகனானவனே! அநுகூலரை குணங்களாலே அழிக்கும்; ப்ரதிகூலரை ஆயுதத்தாலே அழிக்கும்"*

*தி. வா. மொ. 8 : 1 :8-24*

**(11)**

---

1. நிலவர் - உரியவர்; அதிகாரி. 2. துரும்பு எழுந்து ஆடுதல் - அறிவற்ற பொருளும் எழுந்து ஆடும் நிலையினை அடைதல்.

## 12

**கலங்க மாக்கடல் அரிகுலம் பணிசெய,**
**அருவரை அணைகட்டி,**
**இலங்கை மாநகர் பொடிசெய்த அடிகள்தாம்**
**இருந்தநல் இமயத்து,**
**விலங்கல் போல்வன விறல்இரும் சினத்தன**
**வேழங்கள் துயர்கூரப்**
**பிலம்கொள் வாள்எயிற் றரியவை திரிதரு**
**பிரிதிசென் றடைநெஞ்சே!**

**ப. ரை :** நெஞ்சே - *ஏ, மனமே!* **மாக் கடல் கலங்க** - *அளவிட முடியாத கடல் கலங்குமாறு,* **அரி குலம் பணி செய** - *குரக்குக் கூட்டம் தொண்டு செய்ய,* **அரு வரை அணை கட்டி** - *பெரிய மலைகளைக்கொண்டு அணைகட்டி,* **இலங்கை மாநகர் பொடி செய்த அடிகள்தாம்** - *இலங்கை என்னும் பெரிய நகரத்தைத் துகளாக்கிய தலைவரானவர்,* **இருந்த நல் இமயத்து** - *எஞ்ஞான்றும் உறைகின்ற சிறந்த பனிமலையிலே,* **விலங்கல் போல்வன விறல் இரும் சினத்தன வேழங்கள்** - *வடிவில் மலை போன்றனவாய், மிடுக்கோடு பொருந்திய மிக்க கோபத்தையுடையனவாய் இருக்கும் யானைகள்,* **துயர்கூர** - *துன்பம் உறும்படியாக,* **பிலம் கொள் வாள் எயிற்று அரி அவை** - *முழைஞ்சுகளை இருப்பிடமாகக் கொண்ட வாள் போலும் பற்களையுடைய சிங்கங்களானவை,* **திரிதரு பிரிதி** - *திரியும் திருப்பிரிதியை,* **சென்று அடை** - *சென்று சேர்வாய்.*

**சி. கு :** *அரிகுலம் - வடமொழிப் புணர்ச்சி; ஆதலின் ஒற்று மிகாமல் வந்தது. அருவரை - பெரிய வரை; அருமை பெருமை மேற்று. பிலம் - முழைஞ்சு; குகை. 'இமயத்து' என்பதற்கு மாறாக 'இமயத்துள்' என்று வருதலே பொருத்தமாகவும் எல்லாப்பாட்டிலும் ஒன்றுபோல் அமைந்து முத்திரையாகவும் அமையும் என்பர் திரு புத்தூர் கிருட்டிணசுவாமி ஐயங்கார் அவர்கள்.*

**வியா :** தம் இழவைப் பரிஹரித்த ப்ரஸங்கத்தாலே மஹாராஜர் இழவைப் பரிஹரித்த படியைப் பேசினார் முதற் பாட்டில்; மஹாராஜர் இழவைப் பரிஹரித்த பின்பிறே பெருமாள் தம் இழவைப் பரிஹரித்துக் கொண்டது; அந்த க்ரமத்திலே ராவணவதம் பண்ணின படியைப் பேசுகிறார்.

---

**வி :** இரண்டாம் பாட்டு : *ஆழ்வார் தம் இழவை இராமபிரான் களைந்தது குறித்துப் பேசும் இடத்து மாமன்னராகிய சுக்கிரீவனது இழவைக் களைந்த வாற்றைப் பேசினார் முதற் பாட்டில்; சுக்கிரீவன் துயரைத் துடைத்த பின் பன்றோ பெருமாள் தம் இழவைத் துடைத்துக் கொண்டது; அந்த அடைவிலே இப்பாட்டில் இராவணனை முடித்த முறையினைப் பேசுகிறார்.*

---

**12.** 1 : 3 அரிக்குலம். 1 : 4 பணிசெய்ய. 2 : 6 இமையத்து. 4 : 4 திகழ்தரு. 4 : 5 பிருதிசென்.

**கலங்க இத்யாதி** - ஈஶ்வரன் தன் ஸங்கல்பத்தை நெகிழநின்றால் பதார்த்த ஸ்வபாவங்கள் மாறாடுமாப் போலே ஆயிற்று, சக்ரவர்த்தித் திருமகன்[1] முனிந்தால் இருக்கும்படியும். ஒருவரால் கலக்க ஒண்ணாத கடல் கலங்கும்படியாகவும், நித்ய ஸூரிகள் செய்யும் அடிமையை இடக்கை வலக்கை வாசி அறியாத குரங்குகள் செய்யும்படியாகவும், நீரில் ஆழக்கடவ மலைகள் மிதந்து அணையாய் நிற்கும்படியாகவும் பண்ணினான் ஆயிற்று. **மாக் கடல் கலங்க** - "அப்ரமேயோ மஹோததி:" என்கிற கடல் கலங்கிக் கீழ்மண் கொண்டு மேல்மண் எறியும்படியாக. **அரிகுலம் பணி செய்ய** - அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான திருவடி, திருவநந்தாழ்வான், ஸ்ரீஸேநாபதியாழ்வான் துடக்கமானார் செய்யக்கடவ கைங்கர்யத்தை ஸம்ஸாரிகளுக்கும் பின்னே எண்ண வேண்டும்படியாக இடக்கை வலக்கை வாசி அறியாத வாநர ஜாதி செய்யும்படியாக. சரீர ஸம்பந்தம் அற்று ஒரு தேச விசேஷத்திலே போனால் செய்யும் அடிமையைத் தாழ்ந்த ஜந்மத்திலே பிறந்து இந்த சரீரத்தோடே செய்யும்படியாக. **அரு வரை அணை கட்டி** - ஒருவரால் எல்லை காண ஒண்ணாத மலைகளைக்கொண்டு அணைகட்டி. **இலங்கை** - ப்ரஹ்மாதிகளும் நெஞ்சுளுக்கி இருக்கும் ஊரை மனிச்சுக் குலையாதபடி நின்று துகளாம்படி பண்ணின ஸ்வாமிகள். ராவணன் பட்டுக்கிடக்க அவன் பார்யை "ஆதித்ய கிரணங்கள் இங்குப் புகுந்து ஸஞ்சரியாநின்றன கிடாய்" என்றாளிறே,

---

கலங்க மாக் கடல் அரிகுலம் பணி செய அருவரை அணை கட்டி - இறைவன் தன் திருவுள்ளம் நெகிழநின்றால்[2] பொருள்களின் இயல்புகள் நிலைகுலைந்திடும். சக்கரவர்த்தித் திருமகன்[3] சீற்றம் கொண்டபோதும் அது போன்ற கலக்கமே நிகழ்ந்தது. ஒருவரால் கலக்க ஒண்ணாத கடல் கலங்குமாறும், அயர்வறும் அமரர்கள் செய்யும் அடிமையை இடக்கை வலக்கை வேறுபாடு அறியாத குரங்குகள் செய்யுமாறும், நீரில் ஆழக்கூடிய மலைகள் மிதந்து அணையாய் நிற்குமாறும் செய்தான். **மாக் கடல் கலங்க** - "அளவிட ஒண்ணாததான இக்கடல் சகரனால் வெட்டுவிக்கப்பட்டது" *(ரா. யு. 19 : 31)* என்பது வான்மீகி வாக்கு. இத்தகைய பெருங்கடல் கலங்கிக் கீழ்மண் கொண்டு மேல்மண் எறியுமாறு. **அரிகுலம் பணி செய்ய** - உலகியல் வாடை தட்டாதவராகிய திருவடி,[4] திருவநந்தாழ்வான்,[5] சேனைமுதலியார் தொடக்கமானார் செய்வதற்கு உரிய அடிமையை மக்களினும் கீழாக எண்ண வேண்டுமாறு உள்ள இடக்கை வலக்கை வேற்றுமை அறியாத குரக்குக் கூட்டம் செய்யுமாறு. உடல் தொடர்பு அற்று வைகுந்தம் போனால் செய்யும் அடிமையைத் தாழ்ந்த பிறவியிலே பிறந்து இந்த உடலோடு செய்யுமாறு. **அருவரை அணை கட்டி** - ஒருவரால் எல்லை காண ஒண்ணாத மலைகளைக் கொண்டு அணை கட்டி. **இலங்கை மாநகர் பொடி செய்த அடிகள்தாம்** - நான்முகன் முதலானோரும் நினைத்தற்கு அஞ்சும் ஊரை மனிச்சுக் குலையாதவண்ணம்[6] நின்று துகளாகுமாறு செய்த தலைவர். இராவணன் வீழ்ந்து கிடக்க அவன் மனைவி மண்டோதரி, "பகலவன் கதிர்கள் இங்குப் புகுந்து திரிதல் காணாய்" என்றாள் அன்றோ! இதற்குக் காரணம் அந்தத் தாழ்வு பொறுக்காமல்

---

1. சக்ரவர்த்தி திருமகன்.

2. திருவுள்ளம் நெகிழ நிற்றல் - உள்ளக் குறிப்புக் குலைந்து நிற்பது. 3. சக்கரவர்த்தித் திருமகன் - இராமபிரான். 4. திருவடி - அனுமன். 5. திருவநந்தாழ்வான் - ஆதிசேடன். 6. மனிச்சுக் குலையாத வண்ணம் - தான் மேற்கொண்ட மானிட இயல்பு கெடாதபடி.

அப்பரிபவம் பொறாமைப் பிணம் எழுந்திருக்கும் என்று. **"ப்ராப்தே பரிபவே நவே அத்ய வை நிர்ப்பயா லங்காம்".**

இதுக்கு முன்பு இல்லாதது ஒன்று இப்போது உண்டாயிற்று கிடாய். முன்பு நெல் உலர்த்த வேண்டுவது ஸஞ்சரித்துப் போம் இத்தனை ஆயிற்று ராவண பயத்தாலே; இப்போது நிர்ப்பயமாய்க் கொண்டு உலாவாநின்றன.

**இலங்கை மாநகர் - "லங்காம் ராவண பாலிதாம்"**

பெண்பெண்டுகளுக்கும் நோக்கலாம்படி ஆயிற்று ஊர் அரண். வெளி நிலத்திலும் சிலர் புகுராதபடி பண்ணவல்லவன்[1] ஆயிற்று உணர்ந்து நோக்குகிறான்.

விரோதி நிரஸந ஸ்வபாவனான தான் வந்திருக்கப்பெற்ற படியாலே ஸர்வ ஸ்வாமி என்னும் இடம் தோற்றி இருக்கும் ஆயிற்று. இருந்த என்று வேறு ஓர் இடத்திலே இருப்பாய் இங்கே வருவது போவதாகை அன்றிக்கே ஆயிற்று இருப்பது. இப்படி

---

*பிணமாய்க் கிடக்கும் இராவணன் எழுந்திருப்பான் என்று கருதியதே ஆகும்.* "புதிய தாழ்வு வந்துற்றது; இன்று பகலவன் கதிர்கள் அச்சம் அற்று இலங்கையில் நுழைந்தன" *(ரா. யு. 114 : 82) என்பது அவள் கூற்று.*

*இதற்கு முன்பு இல்லாதது ஒன்று இப்பொழுது உண்டாயிற்றுக் காண். முன்பு நெல் உலர்த்துவதற்குத் தேவையான அளவே பகலவனுடைய கதிர்கள் உலவும். அவ்வாறு அளவாக உலவுவதற்குக் காரணம் இராவணனிடம் கொண்ட அச்சமே. அவை இப்பொழுது அச்சமின்றி உலவுகின்றன.*

இலங்கை மாநகர் - "இராவணனால் காக்கப்படும் இலங்கை" *(ரா. ஸு 1 : 39).*

*எளிய பெண்களுக்கும் பாதுகாக்கக் கூடியவகையில் இருந்தது ஊர் அரண். அதற்கு மேல் இராவணன் அரண் இன்றி வெளியாய் உள்ள நிலத்திலும்[2] சிலர் நுழையாதவாறு செய்ய வல்லனாய் மிகுந்த விழிப்புடன் பாதுகாக்கிறான்.*

பொடிசெய்த அடிகள்தாம் இருந்த - *பகைவரை முடிக்கும் தன்மையனான தான் வந்திருத்தலினாலே எல்லார்க்கும் அண்ணல் என்பது விளங்குவது ஆயிற்று.* இருந்த - *வேறு ஓர் இடத்திலே நிலையான இருப்பாய், இங்கே அவ்வப்போது வந்து செல்லுவதாய் ஆகாமல் இங்கேயே நிலையாக இருப்பது ஆயினான். இலங்கையைப்போலே கொள்கொம்பு மூடியிருந்தது*[3] என்றால், தான் வந்து *தங்கி இருப்பதால் வெல்லக் கருதி இவ்இடத்தையே இருப்பாக்கிக் கொண்டான். அஃதாவது, கொடியானது படர்வதற்காக ஊன்றப்படும் கொம்பு தெரியாதவாறு மிகவும் தழைத்து மூடி நிற்பது போலே, அரண்கள் மிகுந்து இடம் தெரிய முடியாத*

---

1. பண்ணவல்லன்.
2. வெளியாய் உள்ள நிலம் - அரண் இன்றிக் கிடக்கும் இடம்.
3. கொள் கொம்பு மூடுதல் - கொடியைச் சுற்றி அது படர்வதற்கு ஊன்றப்படும் கொம்பு மறையுமாறு கொடி தழைத்து மறைத்தல். கொள்கொம்பு - சுள்ளிக்கால்; பற்றுக் கொம்பு. மூடுதல் - சூழ்ந்து மறைத்து நிற்றல்.

கொள் கொம்பு மூடிற்று[1] என்றால் ஆஸநத்தாலே வெல்வதாகப் பார்த்து இவ்இடந் தன்னையே இருப்பாக்கினான் ஆயிற்று. விரோதி நிரஸநம் பண்ணின ஶ்ரமம் மாறுகைக்கு இருந்த இடந்தானே[2] நம் கார்யம் செய்கைக்கு உடலாய் விட்டது.

**விலங்கல் இத்யாதி** - அங்குத்தை யானைகள் இருக்கும்படி. மலை கால் கொண்டு நடந்தாப் போலே வடிவைக் காணவே பயாவஹமாய் இருப்பனவாய். அப் பரப்பில் அச்சம் ஒன்றும் இல்லை ஆயிற்று. ஒருவரால் தகைய ஒண்ணாத மிடுக்கையும் மிக்க சினத்தையுமுடைய ஆனைகளானவை. **துயர்கூர** - நித்ய துঃக்கிகளாய்க் கொண்டு பயத்தை வ்யுத்பத்தி பண்ணும்படியாக. கூர-மிக. பயமில்லாமை லோக விஸஜாதீயமாய் இருக்குமாப் போலே, பயம் உண்டானாலும் இதர விஸஜாதீயமாய் இருக்கும்படி. இவை துயர்கூர, இவற்றுக்கு[3] எதிரிகளானவை பண்ணும் வ்யாபாரம் என் என்னில், **பிலங்கொள் இத்யாதி** - பிலங்களிலே வர்த்திப்பனவாய், வாள் போலே இருக்கிற எயிற்றையுடைய ஸிம்ஹங்களானவை ஸஞ்சரியாநிற்கும் ஆயிற்று. யஜ்ஞ சத்ரு, இந்த்ர சத்ரு, ப்ரஹ்ம சத்ரு என்றாப் போலே சொல்லுகிற பையல்களைப் போலே இருந்துள்ள மிடுக்கையுடையவை மிக்க பயத்தையுடையவாம்படி அவை ஸ்வைர ஸஞ்சாரம் பண்ணாநிற்கும் ஆயிற்று.

---

*வாறு மூடி இருந்தால் அங்குப் படைநடத்திச் செல்லாமல் தான் அதற்கு அருகே தங்கி வெற்றிகொள்ளக் கருதி, அவ்வாறு தங்குவதற்கு ஏற்ற இடமாக இதனைக் கொண்டான் என்பதாம். பகைவனாகிய இராவணனை அழித்ததால் விளைந்த களைப்பு மாறுவதற்காக வந்து தங்கிய இடம் நம்மைத் திருத்தி ஆட்கொள்வதற்கும் உடலாய் அமைந்தது.*

**விலங்கல் போல்வன விறல் இரும் சினத்தன வேழங்கள்** - *அங்குள்ள யானைகள் இருக்கும் நிலை. மலை கால் பெற்று நடந்தாற் போலே வடிவைக் கண்டாலே அச்சம் உண்டாகுமாறு இருப்பனவாய். இவ்வாறு யானைகள் மலைகள் போலே வளர்ந்து மதித்திருப்பதற்குக் காரணம் அப்பரப்பில்[4] அவற்றிற்கு அச்சம் தரக் கூடிய விலங்கு யாதும் இல்லாமையே ஆகும். ஒருவரால் தகைய ஒண்ணாத மிடுக்கையும் மிக்க சினத்தையுமுடைய ஆனைகளானவை.* **துயர்கூர** - *மாறாமல் துயர் உறுவனவாய் ஆகி அச்சத்தைப் புதிதுண்ணுமாறு.[5] கூர - மிக. இவை அச்சமற்ற நிலையில், உலகில் இருந்த பிற யானைகளினின்றும் வேறுபட்டுத் தனித்து நின்றன; அதுபோல அச்சமுற்ற நிலையிலும் அவற்றினின்றும் வேறுபட்டுத் தனித்து நின்றன. அஃதாவது மிகுந்த அச்சத்தோடு இருந்தன. இவை துயர் கூர, இவற்றிற்கு எதிரிகளானவை செய்வது என் என்றால், சிங்கங்கள் திரிகின்றன என்கிறார்.* **பிலம் கொள் வாள் எயிற்று அரி அவை திரிதரு பிரிதி** - *முழைஞ்சுகளிலே இருப்பனவும் வாள் போன்ற பற்களையுடையனவும் ஆகிய சிங்கங்கள் திரிகின்றன. வேள்விப் பகைவன், இந்திரப் பகைவன், பிரமப் பகைவன் என்று சொல்லப்படும் பையல்களைப்[6] போலே மிடுக்கையுடையனவாய் இருந்த யானைகள் மிக்க அச்சத்தை உடையனவாய் ஆகுமாறு சிங்கங்கள் தம் போக்கில் திரிந்து*

---

1. முடித்து. 2. இருந்தடந்தானே. 3. இவைத்துக்கு.
4. பரப்பு - பகுதி. 5. புதிதுண்ணல் - புதிதாகச் சுவைத்தறிதல்.
6. பையல்கள் - சிறுவர்கள்; ஈண்டு அரக்கர்களை வெறுப்புத் தோன்ற அப்படிக் குறிக்கிறார்.

**பெருமாள் கடலை அணைசெய்து அவ்அணையின்மேலே கையும் வில்லுமாய்க் கொண்டு தெற்கு வடக்காக உலாவ லங்கை முழுக்காயாகச் செத்துக்கிடந்தாப் போலே ஆயிற்று, ஸிம்ஹங்கள் ஸ்வைர ஸஞ்சாரம் பண்ண ஆனைகள் முழுக் காயாக அவிந்து[1] கிடக்கும்படி. ஜ்ஞாந அஜ்ஞாநங்கள் கொண்டு கார்யம்[2] இல்லை. அங்கு வர்த்திக்குமவை அடைய வீரரஸோத்தரமாய் ஆயிற்று இருப்பது.**

---

கொண்டிருந்தன. பெருமாள் கடலை அணை செய்து அவ்அணையின் மேலே கையும் வில்லுமாய்க்கொண்டு தெற்கு வடக்காக உலாவினான்; அக் காட்சியினைக் கண்டு இலங்கை முழுக்காயாகச்[3] செத்துக் கிடந்தது. அது போல, அரிமாக்கள், தம் போக்கில் திரிய ஆனைகள் முழுக்காயாக அவிந்து கிடந்தன. குகையினின்றும் புறப்பட்ட சிங்கங்கள் யானைகளின் மேல் பாயாமல் அவற்றை அச்சுறுத்தித் திரியக் கூடுமோ என்னில், கூடும். அச்சிங்கங்களின் செயற்பாட்டிற்கு அவற்றின் அறிவோ அறியாமையோ காரணமாய் அமையவில்லை. இராமனோடு உடனுறைவதே அவற்றை அவ்வாறு செயற்படுமாறு செய்கிறது. அங்கு வீற்றிருக்கும் சக்கரவர்த்தித் திருமகனோடு உடனுறையும் அவை அனைத்தும் அவன் அரக்கர்கள் அஞ்சித் தன்னைத் தஞ்சம் புகவேண்டும் என்னும் நினைவோடு அணை மேலே வீரச்சுவை தோன்றத் திரிந்தாற்போலத் தாமும் வீரச்சுவை தோன்ற யானைகளை மருட்டித் திரியலாயின. அங்கு உறைவன எல்லாம் மிக்க நல்வீரமுடையனவாய் இருப்பன அன்றோ!

**ஒப்புமைப் பகுதி**

1. **குரங்குகளின் பணி**

*" குரங்குகள் மலையை நூக்க"*

*" மலைகளாலே கடலைத் தூர்க்கிற இடத்தில் மலைகளுக்குத் தொகை யுண்டாய்க்கொண்டு ஸ்ரீவாநர வீரர்களுக்குத் தொகையில்லாமையாலே ஒரு மலையை அநேகர் கூடித் தொட்டுக்கொண்டு வருவார்கள் ஆய்த்து. ஒரு மலை ஒருத்தர்க்குப் பாத்தம் போராதபடி பெருமிடுக்கராய் இருக்கச் செய்தேயும் உபாத்யாயன் கசைபோலே எல்லாரும் கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் பெறவேணும் என்று இருக்குமவர்களாகையாலே இப்படிச் செய்கிறார்கள் ஆய்த்து. ஸ்வரூபஜ்ஞாநம் உடையாரோடு இல்லாதா ரோடு வாசியறத் துரும்பு எழுந்து ஆடும்படியிறே, அடிமை கொள்ளு கிறவர் கையும் வில்லுமாய் நின்ற நிலைதான்"* திரு. மா. 27 பெ. உரை.

*[கிஞ்சித்கரித்து - சிறிது பங்கேற்று; ஈண்டுத் தொட்டுக்கொண்டுவந்து.]*

*" குரக்கினத்தாலே - நீருக்கு அஞ்சி உயர்ந்த நிலங்களிலே வர்த்திக்கும் குரங்குகளினுடைய திரளாலே"* பெரி. தி. 1:6:8 ம. மா. மு. உரை.

2. **அணை கட்டி இலங்கை சென்று அரக்கரை அழித்தமை**

*" கடலை அடைத்து அரக்கர் குலங்களை முற்றவும்,*
*செற்று இலங்கையைப் பூசலாக்கிய சேவகா."*

---

1. அவிஞ்சு. 2. காரியம்.
3. முழுக்காயாக - முற்றுமாக.

" இதுக்கு முன்பு ஒருவர் தலையழித்து அறியாக் கடலை அடைத்து, இதுக்கு முன்பு ஒருவர் மேலிட்டு அறியாத ராக்ஷஸ ஜாதியைப் பக்க வேரோடே கிழங்கெடுத்து, சிலர் எடுத்துவிட்டு வந்து பொரக் கணிசியாத ஊரைப் பூசலாம்படி பண்ணி, அத்தால் வந்த ஆண்பிள்ளைத்தனத்தை உடையையாய் இருக்கிறவனே" நாச். தி. 2:6 பெ. உரை.

## 3. இலங்கை மாநகர்

" இலங்கை புக்கு - 'லங்காம் ராவண பாலிதாம்' என்கிறபடியே மண்பாடு தானே ஒருவர்க்கும் ப்ரவேசிக்க அரிதாய், அதுக்கு மேலே உள்ளுநின்று நோக்குகிறவனுடைய பலத்தையும் உடைத்தாகையாலே துஷ்ப்ராபமாய் இருக்கிற லங்கையிலே, எழுபது வெள்ளம் வாநர ஸேனையையும் கொண்டு சென்று புக்கு"

பெரி. தி. 3:9:10 ம. மா. மு. உரை.

[ துஷ்ப்ராபம் - நுழைய முடியாதது ]

" இலங்கையினை - அந்தகனும்கூட ப்ரவேசிக்க அஞ்சும்படியான ஊரை. வரங்கொடுத்த ப்ரஹ்மாதிகளும் இவ்வூரின் பேர் கேட்டால் குடல் கரிந்து கிடக்கும்படியாயிறே இருப்பது. ஆதித்யனும் இவ்வூருள் புழுங்கல் உலர்த்துகை முதலானவற்றிற்கு வேண்டுமளவு தன் கிரணங்களை ப்ரகாசிப்பித்து, நடுங்கி ஒடுங்கிக் கொண்டிறே போருவது; ஆகையாலிறே, ராவணன் பட்டுக்கிடக்கிறபோது மண்டோதரி, 'உத்திஷ்ட்டோத் திஷ்ட்ட கிம் சேஷே ப்ராப்தே பரிபவேநவே அத்யைவ நிர்பயம் லங்காம் ப்ரவிஷ்டாஸ் ஸூர்யரஶ்மய :' என்றது. இப்படி இருக்கிற ஊரையாய்த்து மநுஷ்யரூபமாய் நின்று சரங்களாலே அழியச் செய்தது"

பெரி. தி. 4:3:8 ம. மா. மு. உரை.

" முந்நீர பெரும் பதிவாய் நீள்நகர்"

" அஞ்சினான் புகலிடமாய், துர்வர்க்கம் அடங்கலும் புக்கு ஒதுங்கும் இடமாயிற்று. கடலை அகழாக உடைத்தாய் இருக்கையாலே சிலரால் ப்ரவேசிக்க அரிதாய் இருக்கை. கடல் சூழ்ந்த மஹாத்வீபத்திலே உண்டான. நீள்நகர் - தேவர்களுடைய வரபலத்தாலே ஒருநாளும் அழியாதபடி பூண்கட்டின இலங்கையிலே" தி. வி. 92

" இலங்கைநகர் - சந்த்ராதித்யர்கள் ஸஞ்சரிக்கப் பயப்படும் ஊர்"

தி. வா. மொ. 4:2:8-36

" மன்னுடை இலங்கை - ராவண பாலிதையான லங்கை. ஆரேனும் ரக்ஷிக்கலாம் அரணுடைய ஊர்; வெளிநிலத்திலும் ரக்ஷிக்கவல்ல ராவணன்"

தி. வா. மொ. 6:2:1-24

## 4. கொள் கொம்பு மூடுதல்

" மிகும் தேவும் - தன்னோடே விகல்பிக்கலாம்படி கொள் கொம்பு மூடப்படர்ந்த தேவ ஜாதியையும்" தி. வா. மொ. 2:2:5-24

(12)

## 13

துடிகொள் நுண்இடைச் சுரிகுழ்ல் துளங்கெயிற்
றிளங்கொடி திறத்தாயர்
இடிகொள் வெம்குரல் இனவிடை அடர்த்தவன்
இருந்தநல் இமயத்துக்
கடிகொள் வேங்கையின் நறுமலர் அமளியின்
மணிஅறை மிசைவேழம்
பிடியி னோடுவண் டிசைசொலத் துயில்கொளும்
பிரிதிசென் றடைநெஞ்சே!

ப. ரை : நெஞ்சே - ஓ, மனமே! துடி கொள் நுண் இடை - உடுக்கை போலும் நுண்ணிய இடையினையும், சுரிகுழல் - சுருண்ட மயிர்முடியினையும், துளங்கு எயிறு - விளங்குகின்ற பல்வரிசையினையும் கொண்ட, இளங்கொடி திறத்து - இளைய கொடி போலும் நப்பின்னைப்பிராட்டிக்காக, ஆயர் இடிகொள் வெம் குரல் இன விடை - இடையர்களுடைய இடி போலும் கொடிய முக்கார ஒலியினையுடைய ஏழு காளைகளையும், அடர்த்தவன் - ஒருசேர அழித்த பெருமான், இருந்த நல் இமயத்து - நிலையாகத் தங்கி இருக்கும் இனிய பனிமலையில், மணி அறைமிசை - நீலமணிப் பாறைகளின்மேலே, கடிகொள் வேங்கையின் நறு மலர் அமளியின் - மணம் பொருந்திய வேங்கை மரத்தினது அழகிய மலர் நிறைந்த படுக்கையின்கண், வேழம் பிடியினோடு - களிற்றுயானைகள், பிடி யானைகளோடு, வண்டு இசை சொலத் துயில் கொளும் - வண்டுகள் பாட உறக்கம் கொள்ளும், பிரிதி சென்று அடை - திருப்பிரிதியைச் சென்று கிட்டுவாய்.

சி. கு : வெம் குரல் - எருதுகளின் சீற்றத்தைக் காட்டும் முக்கார ஒலி; வெம்மை கடுமையைக் குறித்தது. அமளி - இனிய படுக்கை. மணி அறை - மணியை உடைய பாறை; அழகிய பாறை என்றும் ஆம். அறை - பாறை; பொந்தும் ஆம்.

வியா : மூன்றாம் பாட்டு : கீழ்ப்பாட்டில்[1], பிராட்டிக்காக லங்கையை அழியச் செய்தபடி சொல்லிற்று. நப்பின்னைப்பிராட்டிக்காக ருஷபங்களை அடர்த்த படி சொல்லுகிறது, இதில்.

---

வி: மூன்றாம் பாட்டு : கீழ்ப் பாட்டில் பிராட்டியின் பொருட்டு[2] இலங்கையை மூலையடியே போகுமாறு[3] செய்தமை சொல்லப்பட்டது. இதில் நப்பின்னைப் பிராட்டிக்காக எருதுகளை அடர்த்த செயல் எடுத்துரைக்கப் படுகிறது.

---

**13.** 2 : 6 இமையத்து; இமையத்துள். 4 : 5 பிருதிசென்.

1. கீழிற் பாட்டில்.
2. பிராட்டி - சீதை. 3. மூலையடியே போதல் - பாழாதல்.

**துடி இத்யாதி** - ருஷபங்களினுடைய க்ரௌர்யம் பார்த்து மீள ஒண்ணாத படியான நப்பின்னைப்பிராட்டியுடைய அவயவ சோபையையும் பருவத்தையும் சொல்லுகிறது. விஷயம் இதுவானால் கருமாரி பாய வேண்டாவோ. இவற்றுக்கு[1] அநந்தரம் லபிக்கப் புகுகிறது இவளையாகையாலே, இவற்றினுடைய[2] வெம்மை பார்க்க ஒண்ணாது ஆயிற்று. துடி போலே இருக்கிற நேரிய இடையை உடையளாவது; இவளிடையை ஆசைப்பட்டாயிற்றுக் கோட்டிடை ஆடிற்று. ஒரு கொம்புக்காக இரண்டு கொம்பின் நடுவே விழுந்தான். சுருண்ட குழலை உடையளாவது; இருளிலே சந்த்ரன் உதித்தாப் போலே விளங்காநின்றுள்ள, எயிறு உண்டு - தந்த பங்க்தி, அத்தை உடையளாவது. **இளங் கொடி திறத்து** - **"பதி ஸம்யோக ஸுலபம் வய:"** என்கிறபடியே ஒரு கொள்கொம்பு தேட்டமான பருவத்தை உடையளாவது; இப்படி இருக்கிற நப்பின்னைப்பிராட்டி இடையாட்டமாக - அவளுக்காக **ஆயர் இத்யாதி** - இடையருடைய, இடியோடு ஒத்திருப்பதாய் வெவ்விதான த்வநியையுடைய ருஷபங்கள் ஒன்று இரண்டு அன்றிக்கே ஏழையும் நிரஸித்த. லங்கையில் விரோதியைப் போக்கின க்ரமம் போராது ஆயிற்று இங்கு. அவளோடு அணைகைக்கு அவதியாகையாலே ஊட்டியாக நெரித்தான் ஆயிற்று. இருந்த நல்

---

துடி கொள் நுண்இடைச் சுரிகுழல் துளங்கு எயிற்று இளங் கொடி - *காளைகளின் சீற்றம் பார்த்து மீள ஒண்ணாதவாறு அமைந்த நப்பின்னைப் பிராட்டியின் உறுப்பழகினையும் பருவத்தினையும் பகர்கிறது. அடையும் பொருளின் தன்மை இதுவானால் காளையை அடர்ப்பது என்ன, கருமாரி பாய வேண்டாவோ?*[3] *இவ் எருதுகளை அடர்த்த பின்னர், எய்தப் போவது இவளையாகலின் இவற்றின் வெம்மை பார்க்க ஒண்ணாததாய் இருந்தது. இவள் துடி போலே இருக்கும் நேரிய இடையை உடையவளாக இருந்தாள். இவளிடை ஆசைப் பட்டன்றோ 'கோட்டிடையாடி'னான்.*[4] *ஒரு கொம்புக்காக இரு கொம்பின் நடுவே விழுந்தான்.*[5] *சுருண்ட குழலையுடையவளாக இருந்தாள். இருளிலே நிலவு தோன்றியது போலே விளங்கிடும் பல் வரிசைகளை உடையவளாக இருந்தாள்.* **இளங் கொடி திறத்து - ''என் தந்தை சனகர் தலைமகனைச் சேர்தற்குத் தக்க என் இளமையைப் பார்த்துத் துயரம் என்னும் கடலை அடைந்து புணையற்றவன்போலக் கரையேறினாரில்லை''** (*ரா. அ. 118 : 34*) என்பது *பெருமாட்டி சீதையின் கூற்று. அதில் சுட்டப்படுவது போலே, ஒரு கொள்கொம்பு தேட்டமான பருவத்தை உடையவளாக இருந்தாள். இப்படி இருக்கும் நப்பின்னைப்பிராட்டி இடையாட்டமாக; அஃதாவது அவளுக்காக.* **ஆயர் இடிகொள் வெம்குரல் இன விடை அடர்த்தவன்** - *இடையர்தம் இடியைப் போன்று வெவ்விய முக்கார ஒலியையுடைய எருதுகள் ஒன்றிரண்டு அன்றி ஏழையும் அழித்தவன். இலங்கையில் பகைவனை அழித்த முறை இங்கு எருதுகளை அழிப்பதற்கு ஏற்றதாக அமையவில்லை. இங்கு ஒருசேரப் பகையினை முடிக்க வேண்டியிருந்தது. அவளோடு அணைவதற்கு விதிக்கப்பட்ட கட்டுபாடாக இருத்தலினால் அவற்றை*

---

1. இவைத்துக்கு. 2. இவைத்தினுடைய.

3. கருமாரி பாய்தல் - காஞ்சிக் காமாட்சி கோயிற் குளத்தின் நடுவே இரும்புக்குச்சிகள் இரண்டு நடப்பட்டிருந்தனவாம். அவற்றிடைப் பாய்வது அருஞ்செயலாகக் கருதப்பட்டது. அதனால் அருஞ் செயல் புரிதல் என்பதனைக் குறிக்க இத்தொடர் பயன்படுத்தப்படுகிறது. 4. இது சுவைக்கூற்று. இவளிடை - இவளிடத்து; இவள் இடையினை (நுசுப்பினை). 5. இதுவும் சுவைக்கூற்று. ஒரு கொம்பு - நப்பின்னை; இருகொம்பு - காளைகளின் கொம்பு.

**இமயத்து** - ருஷபங்களை நிரஸித்து நப்பின்னைப்பிராட்டியை லபித்து அவளும் தானுமாக வர்த்திக்கிற தேசம் ஆயிற்று. பரம ப்ரணயியானவன் வந்து வர்த்திக்கிற தேசம் ஆயிற்று. நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினாப் போலே ஆஸ்ரிதர்க்கு எல்லாம் உதவுகைக்காக வந்து இருக்கிற தேசம் ஆயிற்று.

**கடி இத்யாதி** - பரிமளத்தை உடைத்தான வேங்கையினுடைய நறுமலர் அமளி உண்டு - செவ்வியிலே உதிர்ந்த பூக்களால் உண்டான படுக்கை; அதிலே. **மணியறைமிசை** - ஸம்போகத்துக்கு ஏகாந்தமான இருண்ட நீலப் பாறைகளை உடைத்தான முழஞ்சுகளிலே, களிற்றானையானது, பிடியோடேகூட. மணியறை - மாணிக்கப்பாறை; அறை-பாறை. அற விலக்ஷணமான பாறை என்றும் ஆம். **வண்டு இத்யாதி** - சில ராஜபுத்ரர் துடைகுத்த விட்டு உறங்குமாப்போலே. விரோதியான ருஷபங்களைப் போக்கி நப்பின்னைப்பிராட்டியோடே பரம ரஸிகன் வர்த்திக்கிற தேசமாகையாலே அங்குத்தை திர்யக்குக்களும் ஸ்ருங்கார ரஸ ப்ரதாநமாய் இருக்கும். இவை போகத்திலே அந்வயித்து பலாநுபவம் பண்ணி வர்த்தியாநிற்கும் ஆயிற்று.

---

*ஊட்டியாக*[1] நெரித்தான். **இருந்த நல் இமயத்து** - *எருதுகளை அழித்து, நப்பின்னைப் பிராட்டியை அடைந்து, அவளும் தானுமாகத் தங்கியுள்ள இடம். ஆராக்காதலன் வந்து அமர்ந்துறையும் இடம். நப்பின்னைப்பிராட்டிக்கு உதவியதுபோலே நச்சினார்க்கு எல்லாம் உதவுவதற்காக வந்திருக்கும் இடம்.*

**கடிகொள் வேங்கையின் நறுமலர் அமளியின்** - *மணத்தையுடைய வேங்கையின் நறுமலர் அமளி; அஃதாவது செவ்வியிலே உதிர்ந்த பூக்களால் உண்டான படுக்கை; அதிலே,* **மணி அறை மிசை** - *கலவிக்கு ஏற்ற தனி இடமான இருண்ட நீலப்பாறைகளைக் கொண்ட முழைஞ்சுகளிலே. மணி அறை - மாணிக்கப்பாறை; அறை - பாறை. அற*[2] *அழகிய பாறை என்றும் கொள்ளலாம்.*[3] **வேழம் பிடியினோடு** - *களிற்றியானை பிடியோடே கூட.* **வண்டு இசை சொலத் துயில் கொளும்** - *அரசகுமரர்கள் துடை குத்தவிட்டு*[4] *உறங்குவது போலே வண்டுகளின் இசை கேட்டு வேழமும் பிடியும் உறங்குகின்றன. எதிரிகளான எருதுகளைப் போக்கி நப்பின்னைப்பிராட்டியோடே பெருஞ் சுவடன்*[5] *தங்கியிருக்கும் இடம். ஆகையாலே அங்குள்ள விலங்குகளும் காதற்சுவையில் கருத்துக் கொண்டனவாய் இருக்கும். இவ்யானைகள் சிற்றின்பத்தில் படிந்து இசையினிமையை நுகர்ந்த வாறு இருக்கும்.*

---

1. ஊட்டியாக - ஊட்டியோடு; மாடுகளின் கழுத்தை ஊட்டி என்று குறிப்பது நாட்டுப்புறப் பேச்சு. ஊட்டியாக - உணவாக; அஃதாவது இன்பமாக என்று பொருள் கூறுவாரும் உண்டு.
2. அற - மிகவும்.
3. மணி அறை என்பதற்கு நீலப்பாறை, மாணிக்கப்பாறை, அழகிய பாறை என்று மூன்று பொருள்கூறுகிறார். மணி - நீலமணி, மாணிக்கம், அழகு.
4. துடைகுத்தல் - தொடையைத் தட்டுதல்; அஃதாவது பிடித்துவிடுதல்.
5. பெருஞ்சுவடன் - பெருஞ்சுவைஞன்.

## ஒப்புமைப் பகுதி

### இனவிடை அடர்த்தவன்

*" வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும்" ஏறு பாய்ந்ததும் - பொய்கையிலே பாய்ந்தாப்போலே இராநின்றது அவனுக்கு. கருமாரிபாய்ந்தால் ஆகாதோ என்னும்படியிறே அவளுடைய போக்யதை"*

*தி. வா. மொ. 5:10:2-36*

*[போக்யதை - இனிமை]*

*" தோளிசேர் பின்னை பொருட்டு*
*எருது ஏழ் தழீஇக் கோளியார்"*

*" எருது ஏழ்தழீஇக் கோளியார்-எருதுகள் ஏழையும் தழுவிக்கொள்ளுமவர். அநந்தரம் அவளைத் தழுவப்பார்க்கிறானாகையாலே, அவளைத் தழுவினாப்போலே இருக்கிறது ஆயிற்று எருதுகளோடு பொருததும். ஆகையாலிறே 'எருதேழ் தழீஇ' என்றது. அவளைப் பெறுகைக்கு ஹேதுவாகையாலே, அவற்றின் கொம்போடே பொருததும் இக்கொம்போடே சேர்ந்தாப்போலே போக ரூபமாய் இருக்கிறபடி"*

*தி. வா. மொ. 4:2:5-36*

*[ஹேது - பற்றாசு; காரணம். போகரூபம் - இன்பவடிவு.]*

*" உருவேழும் தழுவி"*

*" ம்ருத்யு ஸத்ருசமான ருஷபங்கள் ஏழையும் தழுவி. உரு என்று உருமு. இடிபோலே பயங்கரமான ஏறு. 'அந்தரம் ஏழும் அதிரும் இடிகுரல்' என்னக் கடவதிறே"* *தி. வா. மொ. 7:2:9-24*

*[ம்ருத்யு ஸத்ருசம் - கூற்றுவனை நிகர்த்தது]*

*" பொய்சிலைக்குரல் ஏற்று எருத்தம் இறுத்து"*

*" அஸுராவேஶத்தாலே க்ருத்ரிமமாய் கோபத்தையும் உடைத்தாய் இருந்துள்ள ஏறும் இறாயப் பொருது. நப்பின்னைப் பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு விரோதியானவையுமாய், பொருகிறவையுமாய், சிலைபோலே கோரமான த்வநியை உடைத்தாய் இருந்துள்ள ரிஷபங்களின் கழுத்தை முறித்து"* *பெரு. தி. 2:5 பெ. உரை.*

*[க்ருத்ரிமம் - வஞ்சகம். ஸம்ச்லேஷம் - கூட்டம்.]*

*" அடலாயர்தம் கொம்பினுக்கே"*

*" தம் கொம்பினுக்கே - அக்கொம்போடே பொரலாமாகில் இக்கொம்புகளோடே பொருதல் என் தேய வேணும் என்று பொருதான். கருமாரி (றிப்) பாய்ந்தாலும் பேற்றுக்குத் தக்கது போராதாய் இருக்கிறபடி"*

*தி. வி. 21 பெ. உரை.*

*(13)*

# 14

மறங்கொள் ஆளரி உருவென வெருவர,
ஒருவன தகல்மார்வம்
திறந்து வானவர் மணிமுடி பணிதர,
இருந்தநல் இமயத்துள்,
இறங்கி ஏனங்கள் வளைமருப் பிடந்திடக்
கிடந்தரு கெரிவீசும்
பிறங்கு மாமணி அருவியொ டிழிதரு
பிரிதிசென் றடைநெஞ்சே!

**ப: ரை :** *நெஞ்சே - ஏ, மனமே!* **மறம்கொள் ஆள் அரி** - *சீற்றத்தை ஏறிட்டுக்கொண்ட நரசிங்கத்தின்,* **உரு என வெருவர** - *வடிவைச் சொல்லவே அஞ்சும்படியாக,* **ஒருவனது அகல் மார்வம் திறந்து** - *வீரருள் ஒப்பற்றவனாகிய இரணியனது அகன்ற மார்பைப் பிளந்து,* **வானவர் மணிமுடி பணிதர** - *அச் செயலைக் கண்ட தேவர்கள் தம் மணிகள் இழைத்த கிரீடங்கள் அணிந்த தலையாலே திருவடிகளில் வணங்கிட,* **இருந்த நல் இமயத்துள்** - *இறைவன் நிலைத்திருக்கும் நன்றான பனிமலையின்கண்,* **ஏனங்கள் இறங்கி** - *பன்றிகள் தலைதாழ்த்து,* **வளை மருப்பு இடந்திட** - *வளைந்த கொம்புகளாலே மணிமலைகளைப் பிளந்திட,* **அருகு கிடந்து எரி வீசும் பிறங்கு மாமணி** - *பக்கத்தில் கிடந்து ஒளிவீசும் விளங்குகின்ற மாணிக்கங்கள்,* **அருவியொடு இழிதரு பிரிதி** - *மலையிலிருந்து வீழும் வெள்ளத்துடன் உருண்டு விழுகின்ற திருப்பிரிதியை,* **சென்று அடை** - *போய்ச் சேர்வாய்.*

**சி . கு :** *ஒருவன் - ஒப்பற்றவன். முடி என்பது அதனை அணிந்த தலைக்கு ஆகுபெயர் ஆயிற்று.*

**வியா : நாலாம் பாட்டு :** அப் பருவத்தில் பாலனுக்கு உதவினபடி சொல்லுகிறது. ப்ரணயிநிக்கு உதவின க்ரமம் போராது[1] ஆயிற்று ஆஶ்ரித விரோதிகளைப் போக்கும் இடத்தில்.

---

**வி : நான்காம் பாட்டு :** *நப்பின்னை போலே இளம்பருவத்தனான சிறுவனுக்கு உதவிய செயல் சொல்லப்படுகிறது. அன்புடையாளுக்கு உதவிய வகை, அடியார் பகையினை அழிக்குமிடத்தில் போதாது ஆயிற்று. அஃதாவது, நப்பின்னையை அடைய எருதுகளை அழிப்பது போதியதாக இருந்தது; இங்கு அவ்வாறன்றி, அஞ்சத்தக்க அரியின் உருவத்தை மேற்கொண்டு அழிக்க வேண்டுவதாக ஆயிற்று.*

---

**14.** 2 : 6 இமையத்துள். 4 : 1 பிறங்கல். 4 : 5 பிருதிசென்.

1. பற்றாது.

**மறங்கொள் ஆளரி** - நீர்மையேயாய் இருக்கக்கடவ தான் மறமேயோ ப்ரக்ருதி என்னும்படி நரஸிம்ஹத்தினுடைய மறந்தான் ஒரு வடிவுகொண்டாப் போலே இருக்கை. "**பீஷணம்**" என்றும், "**ம்ருத்யும்ருத்யும்**" என்றும் சொல்லு கிறபடியே வடிவுதானே பயாவஹமாய் இருக்கை. **உரு என வெருவர** - கை தொட்டுப் பிளக்க வேண்டாதே நரஸிம்ஹத்தினுடைய பேரைச் சொல்லவே ஆஸுரவர்க்கம் அஞ்சும்படி ஆயிற்று இருப்பது. ஒரு வியாபாரம் பண்ண வேண்டாதே தோற்றரவிலே பிணமாம்படி ஆயிற்று இருப்பது. **உரு என வெருவர** - வடிவு என்கிற உக்தியிலே அஞ்ச.

> "**எங்ஙனே உய்வர் தானவர் நினைந்தால்**" - ஸ்ரீப்ரஹ்லா தாழ்வானைப் போலே அநுகூலராய் "இது நமக்காகக் கொண்ட வடிவு" என்று இருப்பார் பிழைக்கும் அத்தனைபோக்கி, எதிரிகளாய் இருப்பார் சிந்தித்தால் முழுக்காயாய் அவிந்துபோம்[1] அத்தனைபோக்கி உஜ்ஜீவிக்க விரகுண்டோ? "**கொண்ட சீற்றம் ஒன்று உண்டு**" என்கிறபடியே அச் சீற்றத்தைத் தஞ்சமாக நினைத்திருப்பார்களிறே பிழைத்துப் போகலாவது.

**ஒருவனது** - அம்மறத்தில் வந்தால் நரஸிம்ஹத்தின் அளவு அன்றிக்கே தன்னை எண்ணினால் பின்னை இரண்டாம் விரலுக்கு ஆள் இல்லாதபடி அத்விதீ

---

மறம்கொள் ஆள்அரி - *நீர்மையே வடிவாய் இருக்கும் இறைவனுக்கு மறமேயோ இயற்கை என்று சொல்லும்வண்ணம் நரசிங்கம் சீற்றத்தோடு நின்றது; அஃதாவது சீற்றமே ஒரு வடிவு கொண்டது போலே இருந்தது நரசிங்கம்.* "அச்சம் விளைப்பது" என்றும் "காலனுக்குக் காலன்" *(ந்ருஸிம்ஹாநுஷ்டுப்) என்றும் சொல்வதற்கு ஒப்ப, வடிவே அச்சமூட்டுவதாய் அமைந்தது.* உரு என வெருவர - *கைதொட்டுப் பிளக்க வேண்டா; நரசிங்கத்தின் பேரைச் சொன்னாலே போதும்; அசுரக் கூட்டம் அஞ்சிடும். அப்படி இருந்தது அதன் வடிவம். ஒரு முயற்சியும் செய்ய வேண்டுவதின்றித் தோற்றரவிலே*[2] *பகைவர் பிணமாவர்.* உரு என வெருவர - *வடிவு என்று சொன்ன அளவில் அஞ்ச.*

> *"ஒருவர் பெயர் சொன்ன அளவில் அஞ்சுதல் கூடுமோ?" என்னில்,* "எங்ஙனே உய்வர் தானவர் நினைந்தால்" *(பெ. தி. 5 : 7 : 5) என்று சொல்லப்படுவது காண்க. பிரகலாதாழ்வான் போலே உகந்தவராய், "இது நமக்காகக் கொண்ட வடிவு" என்று இருப்பார் பிழைப்பரேயன்றி, எதிரிகளாய் இருப்பார் சிந்தித்தால் முழுக்காயாய்*[3] *அவிந்தே போவர்; அஃதன்றி அவர்கள் பிழைத்திருக்க விரகு*[4] *உண்டோ?* "கொண்ட சீற்றம் ஒன்று உண்டு" *(பெ. தி. 5 : 5 : 3) என்று சொல்வதற்கு ஒப்ப, அச் சீற்றமும் தம்மைக் காப்பதற்காகவே தோன்றியது என்பதை உணர்ந்து அதனையே தஞ்சமாக நினைத்திருப்பவர்களன்றோ பிழைத்துப் போக முடியும்!*

**ஒருவனது** - *சீற்றத்தில் நரசிங்கத்தைப் போல் அல்லாமல் தன்னை எண்ணினால் பின்னை இரண்டாம் விரலுக்கு ஆள் இல்லாமல் இணையற்று*

---

1. அவிஞ்சுபோம்.

2. தோற்றரவு - தோற்றம். 3. முழுக்காயாய் - முற்றுமாய். 4. விரகு - வழி.

யனானவனுடைய. நரஸிம்ஹத்தை எண்ணி அநந்தரம் தன்னை எண்ணலாம்படி ஆயிற்றிறே; அப்படி தன்னை எண்ணினால் அநந்தரம் எண்ணலாவார் இல்லாதபடி இருக்கை. **அகல் மார்வம் திறந்து** - ஈஶ்வரன் ஒருவன் உளன்" என்று அவனுடைய ஸத்பாவத்தை இசையாது ஒழிகைக்கு ஹேது உடம்பு தடித்து ருதிரக்களிப்பாலே ஆயிற்று. காவற்காட்டில் துஷ்ட ம்ருகங்களுக்கு ஊட்டியிட்டு வளர்க்குமாப் போலே, திருவுகிருக்கு இரைபோரும்படி தேவதைகளுடைய வரங்களாலே அகலப் பண்ணின மார்வை. **திறந்து** - களிப்பாலே போக்குக் காணாமைச் சுழிக்கிற ரக்தவெள்ளத்துக்கு ஒரு வழிகண்டு திறந்துவிட்டாப் போலே, திருவுகிரையிட்டுத் திறந்துவிட்டான் ஆயிற்று; வரபலத்தாலே மூலையடியே திரிகையாலே, ருதிரமானது கடல் கிளரச்செய்தே கரையை அதிக்ரமிக்க மாட்டாதாப் போலே இருக்கிறதுக்கு ஒரு வழி கண்டுவிட்டான் ஆயிற்று; வெள்ளத்துக்கு ஒரு பள்ளங்கண்டு விடுவாரைப் போலே. ஒரு சிறுக்கனுக்குத் தமப்பன் பகையாக உதவின அவதாரமிறே. இத்தால் சொல்லிற்று ஆயிற்று விரோதி அணித்தாந்தனையும் தான் அணியனாய் உதவுமவன் என்கை. தமப்பன் பகையாக உதவுமவன் அவனில் அணியனான[1] தான் தனக்குப் பகையானால் உதவச் சொல்ல வேண்டாவிறே.

**வானவர் இத்யாதி** - முன்பு சத்ருவான ஹிரண்யனுக்கு அஞ்சி முடியும் வாங்கிப்பொகட்டு மநுஷ்யராய் வேற்று உருக்கொண்டு திரிந்தவர்கள்,[2] இப்போது

---

இருந்தான். முதலில் நரசிங்கத்தை எண்ணில் பின்னர் அவனை எண்ணலாம்; அதுபோல, முதலில் அவனை எண்ணில் அடுத்து எண்ணுதற்கு உரியார் இல்லாமல் இருந்தான். அத்தகையவனுடைய. **அகல் மார்வம்** - "ஈசன் ஒருவன் உளன்" என்று அவனது உளதாம்தன்மையினை உடன்படாது ஒழிகைக்குக் காரணம், உடம்பு தடித்துப் பெருகிய குருதிக் களிப்பு[3] ஆகும். காவற்காட்டில் கொடிய விலங்குகளுக்கு ஊட்டியிட்டு[4] வளர்ப்பது போலே திருவுகிருக்கு உணவாகுமாறு கடவுளர்தம் வரங்களாலே அகலப் பண்ணிய மார்பை. **திறந்து** - களிப்பாலே[5] போக்குக் காணாமல் சுழிக்கும் குருதி வெள்ளத்துக்கு ஒரு வழிகண்டு திறந்துவிட்டாற் போலே, திருவுகிரை இட்டுத் திறந்துவிட்டான்; இரணியன் பெற்ற வரத்தின் வலிமையாலே மூலையடியே திரிந்தான்;[6] ஆதலின், கடல் கிளர்ந்த போதிலும் கரையைக் கடக்க முடியாதாற் போலே, புறம்பே செல்லாது அவன் மார்பில் கிடந்த குருதி வெள்ளத்திற்கு ஒரு வழி கண்டு விடுவான் ஆயினன்; வெள்ளத்திற்கு ஒரு பள்ளங் கண்டு விடுவாரைப் போலே விட்டான். ஒரு சிறுவனுக்குத் தந்தை பகைவனாக, அச்சிறுவனுக்கு உதவி புரிய எடுத்த பிறப்பன்றோ இது! இதனால், பகைவன் எத்துணை அணியனாய் அமைகின்றானோ அத்துணை அணியனாய்த் தானும் அமைந்து உதவிடுவான் என்பது கூறப்பட்டது. தமப்பன் பகையாக உதவி செய்பவன் அவனைக்காட்டிலும் நெருக்கமான தானே தனக்குப் பகைவனாயின்[7] உதவி புரிவான் என்று சொல்ல வேண்டுமோ?

**வானவர் மணிமுடி பணிதர** - முன்பு பகைவனான இரணியனுக்கு அஞ்சித் தேவர்கள் தம் முடியும் வாங்கிப் பொகட்டு[8] மானிடராய் வேற்றுருக் கொண்டு

---

1. அண்ணியனான. 2. திரிஞ்சவர்கள்.
3. குருதிக்களிப்பு - இரத்தத்தின் மிகுதி. 4. ஊட்டி - இரை. 5. களிப்பு - மிகுதி. 6. மூலையடியே திரிதல் - முறைகெட்டு நடத்தல். 7. ஒருவன் தன்னையே ஈசனாகக் கருதி இருத்தல் தானே தனக்குப் பகைவனாதல் ஆகும். 8. வாங்கிப் பொகடல் - கழற்றி எறிதல்.

தந்தாம் ஸ்வரூபங்களும் பதங்களும் பெறுகையாலே, "எங்களுக்குக் குடியிருப்புப் பண்ணித்தந்தது" என்று, அந்த உபகார ஸ்ம்ருதியாலே, "ஒருவர் காலில் வணங்கோம்'' என்று இறுமாந்து இருக்கக்கடவ அவர்கள், தங்கள் முடிகளானவை திருவடிகளிலே தட்டும்படி விழுந்து எழுதிக்கொடுக்கும்படி[1] இருந்த. **நல் இமயத்துள்** - நன்றான ஹிமவானில். "பூமியில் கால் பாவோம்" என்று இருக்கக்கடவ தேவஜாதி, அம்மேன்மையை அடையப் பொகட்டு பக்நாபிமாநமாய் வந்து ஆஶ்ரயிக்கும்படி இருக்கிற விலக்ஷணமான ஹிமவானில்.

**இறங்கி ஏனங்கள்** - அங்குத்தை வராஹங்கள் நரஸிம்ஹத்தின் போலியாய் ஆயிற்றுச் செருக்கியிருப்பது; மலைகுனிந்தாப் போலே தலைசாய்க்கை அரிதாம் படியாயிற்று வராஹங்களினுடைய இறுமாப்பு இருப்பது; அப்படி இருக்கிற இவை இறங்கி, வளைந்த கொம்புகளாலே தம் செருக்குக்குப் போக்குவீடாக மாணிக்கப் பாறைகளை இடந்துபொகட்டுத் தான் போகாநிற்குமே, அவை அங்கே கிடந்து ஜ்வலியாநிற்கும் ஆயிற்று. **பிறங்கு மாமணி** - அவைதான் ஒரு பாறை மாத்ரமாய் இருக்கையன்றிக்கே ஒரு மலைபோலே ஆயிற்றுக் கிடப்பது. பெருத்து ஶ்லாக்யமாய் இருந்துள்ள மாணிக்கங்களானவை. **அருவி இத்யாதி** - அங்கே வர்ஷித்து வெள்ளம் கோக்குமே, பின்னை அவ்வெள்ளந்தான் மலைகளைப் பேர்த்தாப் போலே அவற்றையும்[2] உருட்டிக் கொண்டுவந்து[3] இழியும் ஆயிற்று.

---

*திரிந்தனர். அத்தகையோர் இப்பொழுது தத்தம் உருவத்தினையும், குடியிருப்பினையும் பெற்றனர். ஆகையினால், "எங்களுக்குக் குடியிருப்புப் பண்ணித் தந்தான்" என்று அவன் செய்த உதவியை நினைத்தனர்; அந்நினைவால், "ஒருவர் காலில் வணங்கோம்" என்று இறுமாந்து இருக்கும் அவர்கள், தங்கள் முடிகள் பெருமான் திருவடிகளிலே தட்டும்படி விழுந்து அவனுக்கு அடிமையாக எழுதிக் கொடுக்கும் வகை இருந்தான்; இத்தகைய சிறப்போடு அவன் இருக்கும்.* **நல் இமயத்துள்** - *நன்றான பனிமலையில். "பூவுலகில் கால் பாவோம்" என்று இருக்கும் தேவர் கூட்டம் அம்மேன்மையை அடையப்[4] பொகட்டுச் செருக்குக் குலைந்து வந்து பற்றும்வண்ணம் இருக்கும் சிறந்த பனிமலையில்.*

**இறங்கி ஏனங்கள்** - *அங்குள்ள பன்றிகள் நரசிங்கத்திற்கு ஒப்பாகவன்றோ செருக்கி இருக்கின்றன! மலை குனிவது போலே தலை சாய்வது அரிய செயலாகும் படி பன்றிகளின் இறுமாப்பு இருக்கிறது.* **வளை மருப்பு இடந்திட** - *அப்படி இருக்கும் அவை இறங்கி, வளைந்த கொம்புகளாலே தம் செருக்குக்குப் போக்கு வீடாக மாணிக்கப் பாறைகளை இடந்துபொகட்டுப் போகும்.* **கிடந்து அருகு எரிவீசும்** - *அம்மணிகள் அங்கே கிடந்து ஒளிரும்.* **பிறங்கு மாமணி** - *அவை ஒரு பாறையின் அளவு அல்லாமல் மலை போலே கிடக்கும். அம்மாணிக்கங்கள் பெருத்தனவாய், மதிப்புடையனவாய் இருக்கும்.* **அருவியொடு இழிதரு பிரிதி** - *அங்கே மழைபொழிந்து வெள்ளங்கோக்கும்.[5] பின்னை அவ்வெள்ளந்தான் மலைகளைப் பெயர்த்து வருவதுபோலே அவற்றையும் உருட்டிக்கொண்டுவந்து இழியும்.*

---

1. எழுதிக்குடுக்கும்படி. 2. அவைத்தையும். 3. கொடுவந்து.
4. அடைய - முழுவதும். 5. கோக்கும் - நிறையும்.

ஆக, இத்தால் நரஸிம்ஹமானது ஹிரண்யனுடைய மார்வைப் பிளந்து குடல் மாலையை ஒப்பித்த[1] அநந்தரம் ருதிரவெள்ளமானது கொழித்துக்கொடு புறப்பட்டாப் போலே ஆயிற்று, நாநாவான தாதுக்களை உடைத்தான ஸ்தலங்களிலே வர்ஷித்த வர்ஷஜலமானது அவ்அவ தாது விசேஷங்களாலே கலங்கி ஒருவரால் சலிப்பிக்கப் போகாத ரத்நப்பாறைகளை உருட்டிக்கொடு வந்து இழிகிறபோது இருந்தபடி.

---

ஆக, நரசிங்கம் இரணியனது மார்பைப் பிளந்து குடல்மாலையை அணிந்து கொண்ட பின்னர்க் குருதிவெள்ளம் கொழித்துக்கொடு புறப்பட்டது போலே, பல் வகைத் தாதுக்களைக் கொண்ட மலைப்பகுதிகளிலே பெய்த மழைநீர் அத்தாதுப் பொருள்களினாலே கலங்கி, ஒருவரால் அசைக்க ஒண்ணாத மணிப்பாறைகளை உருட்டிக்கொண்டு வந்து வீழும்போது இருந்தது. நெஞ்சே! அடை - .

**ஒப்புமைப் பகுதி**

1. மறங்கொள் ஆளரியின் தோற்றரவு

*" இரணியன் தூண்புடைப்ப,*
*அங்கப் பொழுதே அவன்வீயத் தோன்றியஎன்*
*சிங்கப்பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே"*

*" அவன்வீயத் தோன்றிய - தன் தோற்றரவிலே அவன் பிணமாம்படி தோற்றின. அதிர்த்துக்கொண்டு புறப்பட்டபோதை அட்டஹாஸமும், நாமடிக்கொண்ட உதடும், நெற்றியது கண்ணும், உச்சியது புருவமுமாய்க் கொண்டு தோற்றின போது பொசுக்கின பன்றி போலே உருகினான் ஆயிற்றுப் பொன்னனாகையாலே"* தி. வா. மொ. 2:8:9-36

*" அரியுருவாய்க் கிளர்ந்தெழுந்து*
*கிளரொளிய இரணியனது அகல்மார்பங் கிழித்துகந்த*
*வளரொளிய கனலாழி வலம்புரியன்"*

*" கிழித்து - நரஸிம்ஹத்தினுடைய மொறாந்த முகத்தையும், நாமடிக் கொண்ட உதட்டையும், குத்த முறுக்கின கையையும், அதிர்ந்த அட்டஹாஸத்தையும் கண்டவாறே, பொசிக்கின பன்றிபோல உருகினான் ஆயிற்று; பின்னை அநாயாஸேந கிழித்துப் போகட்டான். நெற்றியது கண்ணும் உச்சியது புருவமுமாய்க்கொண்டு தோற்றினபோது, கோடரகதமான அக்நிபோலே பயாக்நி உள்ளே நின்று எரியப்புக்கவாறே பதஞ்செய்யுமிறே"* தி. வா. மொ. 4:8:7-36

*[கோடரகதமான - மரப்பொந்தினுள் இருக்கும்]*

*" வாளெயிற்றுச் சீயமுமாய்"*

*" அங்காந்த வாயும் மோறாந்த முகமும் நாமடிக்கொண்ட உதடும் குத்த முறுக்கின கையும் அதிர்ந்த அட்டஹாஸமுமாய் இருக்கிற இருப்பிறே இவர்க்கு அழகிதாய்த் தோற்றுகிறது"* பெரி. தி. 4:8:8 ம. மா. மு. உரை.

---

1. இட்ட.

" அவுணன் உடல்கீண்ட அமரர்க்கு அரிய ஆதிப்பிரான்"

" உடல்கீண்ட - திருவாழியாழ்வானுக்கும் பிற்காலிக்க வேண்டும்படியிறே ஊண்மல்கி மோடு பருத்திருந்தபடி. அப்படி இருக்கிற ஹிரண்ய சரீரமானது நரஸிம்ஹத்தினுடைய மொறாந்த முகமும் நாமடிக்கொண்ட உதடும், இறுத்து நோக்கின நோக்கும், குத்த முறுக்கின கையும் கண்ட போதே பொசுக்கின(கென) பன்றிபோலே உலர்ந்த தாழைநாரைக் கிழித்தாப் போலே கிழித்தபடி" அம. 8 நாயனார் உரை.

2. இரணியன் அகல் மார்வம்

" ஓர் ஆகம் - அத்விதீயமான முருட்டு உடம்பு" தி. வா. மொ. 9:3:7-36
[அத்விதீயம் - தன்னைப்போன்ற பிறிதொன்று இல்லாதது]

" வன்னெஞ்சம் - பகவத்விஷயம் என்றால் அஸஹ்யமான நெஞ்சு" தி. வா. மொ. 10:6:4-24
[அஸஹ்யம் - பொறுக்க முடியாதது]

" இரணியன் நெஞ்சை - நெஞ்சு என்று மார்வைச் சொல்லுகிறது.

தேவர்கள் கொடுத்த வரபலத்தாலே பூண்கட்டி இருக்கிற ஹிரண்ய னுடைய மார்வை" பெரி. தி. 2:7:7 ம. மா. மு. உரை.
(14)

## 15

**கரைசெய் மாக்கடல் கிடந்தவன் கனைகழல்**
**அமரர்கள் தொழுதேத்த**
**அரைசெய் மேகலை அலர்மகள் அவளொடும்**
**அமர்ந்தநல் இமயத்து**
**வரைசெய் மாக்களி றிளவெதிர் வளர்முளை**
**அளைமிகு தேன்தோய்த்துப்**
**பிரச வாரிதன் இளம்பிடிக் கருள்செயும்**
**பிரிதிசென் றடைநெஞ்சே!**

ப.ரை : நெஞ்சே - ஏ, மனமே! **கனைகழல்** - அணிகள் ஒலிக்கும் தன் திருவடிகளை, **அமரர்கள் தொழுது ஏத்த** - பிரமன் முதலானோர் வணங்கிப் பரவுமாறு, **கரை செய் மாக்கடல் கிடந்தவன்** - தானே கரை வகுத்துக் கொண்டிருக்கும் பெரிய திருப்பாற்கடலிலே சாய்ந்தருளிய எம்பெருமான், **அரைசெய் மேகலை அலர்மகள் அவளொடும்** - இடையிலே சாத்தப்பட்ட மேகலை என்னும்

**15.** 1 : 2 மாகடல். 2 : 6 இமையத்து; இமையத்துள். 4 : 1 பிரசை. 4 : 4 கருள்செய்யும். 4 : 5 பிருதிசென்.

ஆடையையுடைய தாமரைப்பூவில் தோன்றிய பெரியபிராட்டியோடுகூட, **அமர்ந்த நல் இமயத்து** - பொருந்தித் தங்கியிருக்கும் சிறந்த பனிமலையின்கண், **வரை செய் மாக்களிறு** - மலையை வகுத்தாற்போலே இருக்கும் பெரிய வடிவினை யுடைய, **இள வெதிர் வளர் முளை** - இளமையான மூங்கிலின் வளர்ந்த முளை களைப் பிடுங்கி, **அளை மிகு தேன் தோய்த்து** - முழைஞ்சுகளில் நிறைந்திருக்கும் தேனில் தோய்த்து, **பிரசவாரி** - பின் தேன்கூட்டில் உள்ள தேனில் தோய்த்து, **தன் இளம் பிடிக்கு அருள் செயும் பிரிதி** - தன் துணைக்குக் கோது தட்டாதவாறு பிழியும் திருப்பிரிதியை, **சென்று அடை** - போய்க் கிட்டப் பாராய்.

**சி. கு:** வெதிர் - மூங்கில். பிரசவாரி என்பது முழைஞ்சுகளில் உள்ள தேன் வெள்ளத்தைக் குறிப்பதாகக் கொள்வாரும் உண்டு. பிரசம் - தேன்.

**வியா : அஞ்சாம் பாட்டு :** அவ் அவதாரங்களுக்கு அடியாகத் திருப் பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளினபடியை அநுஸந்திக்கிறார்.

**கரைசெய் இத்யாதி** - ஆபரணங்களாலே அலங்க்ருதமான திருவடிகளை "இவ்அழகைக் காண வேணும்" என்று ஆசைப்பட்டுப் பெறாதே இருக்கிற ப்ரஹ்மாதிகள், ஸ்ரீவைகுண்டத்திலே சென்று தங்களுக்குக் கிட்ட ஒண்ணாமை யாலே காணப் பெறார்களிறே; அவர்கள் அவ்இழவு தீரக் கண்டு அநுபவிக்கும் படியாகத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தான் ஆயிற்று. தானே தனக்குக் கரையைச் செய்துகொடு நிற்கிற கடல் என்னுதல்; அதாகிறது கரையை அதிக்ரமிக்க மாட்டாதிறே ஈஶ்வராஜ்ஞையாலே; அன்றிக்கே, ஒரு காலத்திலே கரைகட்டப்பட்ட கடல் என்னுதல்.[1] **கரை செய்கைக்காக** - கரையேற்றுகைக்காக, **மாக்கடல் கிடந்தவன்** - பெரிய கடலிலே கிடந்தவன். அதிலே கண்வளர்ந்தவன்.

---

**வி : ஐந்தாம் பாட்டு :** இம் மண்ணுலகில் வந்து பிறப்பதற்கு அடியாகத் திருப்பாற் கடலிலே வந்து துயின்ற நிலையினைச் சிந்திக்கிறார்.

**கரை செய் மாக்கடல் கிடந்தவன் கனைகழல் அமரர்கள் தொழுது ஏத்த** - அணிகலன்களாலே அழகு செய்யப்பட்ட திருவடிகளை, "இவ்அழகைக் காண வேண்டும்" என்று ஆசைப்பட்டுப் பெறாமல் இருக்கும் பிரமன் முதலானோர் திருவைகுந்தத்திலே சென்று தங்களுக்குக் கிட்ட ஒண்ணாமையினால் காண மாட்டார்கள்; அவர்கள் அவ்இழவு[2] தீரக் கண்டு மகிழும்வண்ணம் திருப்பாற் கடலிலே வந்து சாய்ந்தான். **கரை செய் மாக்கடல்** - தானே தனக்குக் கரையைச் செய்துகொண்டு நிற்கும் கடல். அஃதாவது, இறைவன் ஆணையால் அது கரையைக் கடக்கமாட்டாமல் இருத்தல். அவ்வாறு அன்றி, ஒரு காலத்திலே[3] கரை கட்டப்பட்ட[4] கடல் என்றும் கொள்ளலாம். **கரை செய்கைக்காக** - கரை ஏற்றுகைக்காக, **மாக்கடல் கிடந்தவன்** - பெரிய கடலிலே கிடந்தவன்; அதிலே கண்வளர்ந்தவன். இவ்வாறு அவன் கிடப்பது பாற்கடலில் அன்றோ, அங்குக் கரை கட்டப்படவில்லையே, இராமனாய்த் தோன்றியருளிய காலத்தில்தானே

---

1. இதன் பின் "ஸாம்யத்தைப் பற்றச் சொல்லலாமிறே" என்பது அச்சுப்பிரதியில் காணப்படுகிறது.
2. இழவு - வருத்தம். 3. ஒருகாலம் - இராமனாய்ப் பிறந்து வந்த காலம். 4. கரைகட்டப் பட்ட - அணை கட்டப்பட்ட.

ஸாம்யத்தைப் பற்றச் சொல்லலாமிறே. **கனைகழல்** - ஆபரண த்வநியை உடைத் தான என்னுதல்; செறியப்பட்ட என்னுதல். **அரைசெய் இத்யாதி** - ஓர் இடத்திலே படுக்கையாய் இருக்க வேறோர் இடத்தை போகத்துக்கு ஏகாந்த ஸ்தலமாகக்கொண்டு விரும்பி இருப்பாரைப் போலே, திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவன் இங்கே வந்திருந்தான் ஆயிற்று. மாதா பிதாக்கள் கூட இருந்து ப்ரஜையினுடைய ஹிதசிந்தை பண்ணுமாப் போலே, பிராட்டியும் தானுமாய் வந்திருந்தான் ஆயிற்று. திருவரையிலே செய்யப்பட்ட மேகலை உண்டு - திருப்பரியட்டம், அத்தையுடை யளாய் போக்யதைகவேஷையான பெரியபிராட்டியாரோடே பொருந்தி வர்த்திக்கிற விலக்ஷணமான ஹிமவானில். பரியட்ட வாய்ப்பை அநுபவிக்கும் இதுக்கு மேற்பட மற்றொன்றில் போக ஒட்டாது ஆயிற்று இதில் அழகு. கனைகழல் அமரர்கள் தொழுதேத்த கரைசெய் மாக்கடல் கிடந்தவன் அரைசெய் மேகலை அலர்மகள் அவளொடும் அமர்ந்த நல் இமயத்து.

**வரைசெய் மாக்களிறு** - மலையை வகுத்தாப் போலே இருக்கிற பெரிய வடிவையுடைய ஆனைகளானவை, இள வெதிர் உண்டு - இளைதான[1] மூங்கில்; அது தன்னுடைய பருவத்தின் அளவன்றிக்கே முளைத்த போதே அண்டபித்தியிலே சென்று தட்டும்படி வளர்ந்திருக்கும் ஆயிற்று; அத்தைத் தன் செருக்காலே

---

கடலுக்குக் கரைகட்டப்பட்டது என்றால், இரண்டும் கடல் என்னும் ஒற்றுமை கொண்டு கடலுக்குக் கரை கட்டினான் என்று சொல்லலாம் என்க. **கனைகழல்** - அணிகலன்கள் எழுப்பும் ஒலியையுடைய கழல் என்றோ செறியப்பட்ட கழல் என்றோ கொள்ளலாம். **அரைசெய் மேகலை அலர்மகள் அவளொடும் அமர்ந்த நல் இமயத்து** - சிலர் ஓர் இடத்தைப் படுக்கைக்கு உரியதாய் அமைத்துக்கொண் டிருப்பர்; ஆனால் வேறு ஓர் இடத்தை இன்ப நுகர்ச்சிக்கு உரிய தனி இடமாய்க் கொண்டு விரும்பி இருப்பர். அதுபோலே, திருப்பாற்கடலைப் படுக்கையாய்க் கொண்டு கண்வளர்ந்தருள்பவன் இங்கே வந்திருந்தான். தாயும் தந்தையும் ஒன்றாய் இருந்து பிள்ளையின் நன்மை குறித்துச் சிந்திப்பது போலே, பிராட்டியும் தானுமாய் வந்து இருந்தான். திருவரையில் செய்யப்பட்ட திருப்பரியட்டத்தை உடையவளாய் இன்பமே உருவாகக் கொண்டவளாய் இலங்கும் பெரியபிராட்டி யாரோடே பொருந்தி இருக்கும் சிறந்த பனிமலையின்கண். செய்யப்பட்ட மேகலை - திருப்பரியட்டம். "இப்படி மேகலையைப் போரப் பொலியப் பேசுவது எதற்காக?" என்னில், பரியட்ட வாய்ப்பைக்[2] கண்டு மகிழ்வதற்கு மேற்பட மற்றொன்றில் போக ஒட்டாது இதில் உள்ள அழகு. கனைகழல் அமரர்கள் தொழுது ஏத்த கரை செய் மாக்கடல் கிடந்தவன் அரைசெய் மேகலை அலர்மகள் அவளொடும் அமர்ந்த நல் இமயத்து எனக் கூட்டுக.

**வரை செய் மாக்களிறு** - மலையை வகுத்தாற் போலே இருக்கும் பெரிய வடிவையுடைய ஆனைகள், **இள வெதிர் வளர் முளை** - இளவெதிர் - இளையதான மூங்கில். அம்மூங்கில் தன் பருவத்திற்கு ஏற்ற அளவில் அமையாமல் முளைத்த போதே வான் முகட்டிலே சென்று தட்டும்படி நெடுக ஓங்கி வளர்ந்துள்ளது.

---

1. இளையதான.
2. பரியட்ட வாய்ப்பு - மேகலையின் பொருத்தம்.

அநாயாஸேந வாங்கி. **அளை மிகு தேன் தோய்த்து**-வங்குகளிலே நிறைந்து இருந்துள்ள தேனிலே தோய்த்து. ராஜாக்களுக்கு போக்ய த்ரவ்யங்கள் குறைவற்று இருக்குமாப் போலே, தேன் குறைவற்று இருக்கும் ஆயிற்று. **பிரசம்** என்று தேன் கூட்டுக்கும், மதுகரங்களுக்கும் பேர். **வாரி** என்று அவற்றினுடைய[1] தேன், அதிலே வளர்ந்த மூங்கில் முளைகளைக் கொடுபுக்குத் தோய்த்து, அதில் பருக்கை தட்டாதபடி அதின் வாயிலே பிழியும் ஆயிற்று. பருக்கை தட்டுமாகில் மிடற்றுக்குக் கீழ்[2] இழிச்சமாட்டாது ஆயிற்று; அதுக்கு அடி இளம்பிடியாகை. தேனில் ரஸம் பெறுகைக்காக அதிலே தோய்த்துப், பின்னை அதில் கந்தல் உண்டு - கோது, அது தட்டாதபடி பிழியும். அதில் உண்டான பருக்கையும்கூடப் பொறாதபடி ஆயிற்று இதினுடைய ப்ரக்ருதிமார்த்தவம் இருக்கும்படி. திர்யக்குக்களுக்கும் தன்னுடைய ரக்ஷ்யத்தினுடைய ரக்ஷணமே யாத்ரையாய் இருக்கும் ஆயிற்று.

ப்ரஹ்மாதிகளுடைய ரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலே சாய்ந்து அவர்களை ரக்ஷிக்குமாப் போலே ஆயிற்று, திர்யக்குக்களும் ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணமே யாத்ரையாய் இருக்கும்படி. பெரியபிராட்டியாரும் தானுமாய் ஸம்ச்லேஷித்து வர்த்தியாநிற்குமவன், அந்த ஸம்ச்லேஷாநந்தரமாக மதுபாந போகியாய்ச்[3] செல்லாநிற்குமிறே; அதுக்கு உபலக்ஷணம்.

---

அதனைத் தன் செருக்காலே ஓசழக்காக[4] வாங்கி, **அளை மிகு தேன் தோய்த்து** - வங்குகளிலே[5] நிறைந்துள்ள தேனிலே தோய்த்து. மன்னர்களுக்கு இன்பம் நல்கும் பண்டங்கள் குறைவற்று இருப்பது போலே, தேன் குறைவற்று இருக்கும். **பிரச வாரி தன் இளம்பிடிக்கு அருள்செயும் பிரிதி** - பிரசம் என்று தேன் கூட்டுக்கும், தேனீக்களுக்கும் பெயர். வாரி என்பது அவற்றினுடைய தேன். அதிலே வளர்ந்த மூங்கில் முளைகளைக் கொண்டுசென்று தோய்த்து, அதில் பருக்கை[6] தட்டாதவாறு அப்பிடியின் வாயிலே பிழியும். ஏனெனில், பருக்கை தட்டுமாகில் பிடியால் அதனை மிடற்றுக்குக் கீழ் இறக்க[7] முடியாது; அதற்குக் காரணம் இளம்பிடியாக இருத்தல் ஆகும். தேனிலிருந்து சுவை பெறுவதற்காக அதிலே தோய்த்துப் பின்னர் அதில் கந்தலாக உள்ள கோது தட்டாதவாறு பிழியும். அதில் உள்ள பருக்கையுங்கூடப் பொறாதபடியாக அன்றோ இதற்கு இயற்கையாக அமைந்த மென்மை இருக்கிறது. விலங்குகளுக்கும் தம்மால் காக்கப்படுதற்கு உரியவற்றை காத்தலே பணியாய் இருக்கிறது.

இறைவன், பிரமன் முதலானோரின் பாதுகாப்பிற்காகத் திருப்பாற்கடலிலே சாய்ந்து அவர்களைக் காப்பது போலே, விலங்குகளும் தங்களால் காத்தற்கு உரியனவற்றைக் காப்பதே பணியாய் இருக்கின்றன என்பதாம். யானையின் செயல் பெரியபிராட்டியாரும் தானுமாய்க் கூடிக் களித்திருப்பவன் அக்கூட்டத்தின் பின்னர்க் கட்குடியனாய் மகிழ்ந்து செல்வான் என்பதனைச் சுட்டும் இனக்குறிப்பு ஆகும்.

---

1. அவைத்தினுடைய. 2. மிடற்றுக் கீழ். 3. கோஷ்டியாய்.
4. ஓசழக்காக - எளிதாக; வருத்தமின்றி. 5. வங்கு - முழைஞ்சு. 6. பருக்கை - கோது.
7. மிடற்றுக்குக் கீழ் இறக்குதல் - உட்கொள்ளுதல்; மிடறு - கழுத்து.

## ஒப்புமைப் பகுதி

1. பாற்கடலுள் பள்ளிகொண்டிருக்கும் பரமன்

" பாற்கடலுள், பையத்துயின்ற பரமன்"

" பாற்கடலுள் - .........ஸர்வேச்வரன், திருப்பாற்கடலிலே ப்ரஹ்மாதிகளுடைய கூக்குரல் கேட்கும்படி, குடில்கட்டிப் பயிர்நோக்கும் க்ருஷிகனைப் போலே, தோள்தீண்டியாக வந்து கண்வளர்ந்தருளுகிறான் என்கிறார்கள்" பாவை 2 நாயனார் உரை.
[க்ருஷிகன் - உழவன்]

" நாகம்ஏறி நடுக்கடலுள் துயின்ற நாராயணன்"

" ஸ்ருஷ்டரான ப்ரஹ்மாதிகளுக்கு ஸமாச்ரணீயன் ஆகைக்காகத் திருப்பாற்கடலின் நடுவே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினவன். பயிரைச் செய்து செய்த்தலையிலே குடிகிடக்குமாபோலே, ஸ்ருஷ்டங்களான பதார்த்தங்களினுடைய ரக்ஷணார்த்தமாகக் கண்வளர்ந்தருளினான் என்னவுமாம்" தி. வா. மொ. 4:3:3-36

" தடங்கடல் பள்ளியானை - மதுகைடபர்களை அழியச் செய்கைக்கும், ச்வேத த்வீபவாஸிகளுக்கு ஆச்ரயிக்கைக்கும், ப்ரஹ்மாதிகள் பரிகைக்கும் திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டவனை"
தி. வா. மொ. 8:4:6-24
[ச்வேத த்வீபவாஸிகள் - வெள்ளைத்தீவில் உறைபவர்கள்]

2. கனைகழல்

" கனைகழல் - செறிந்த என்னுதல்; த்வநிக்கிற என்னுதல்"
தி. வா. மொ. 3:6:10-36

[த்வநித்தல் - ஒலித்தல்]

3. அலர் மகள்

" அலர்மேல் மங்கை - அவன் தன்னை 'நஜீவேயம் க்ஷணமபி' என்னப் பண்ணவல்ல போக்யதையையும் பருவத்தையும் உடையவள். பரிமளந் தான் ஒரு வடிவு கொண்டாற்போலே இருக்கை"
தி. வா. மொ. 6:10:10-36

" அலர்மேல்மங்கை - ...தன் வடிவழகாலும் பருவத்தாலும் அவன் தனக்குங்கூட உத்தேச்யமாய் இருக்கிறவள்; அவனை 'நஜீவேயம் க்ஷணமபி' என்னப் பண்ணுமவள்" தி. வா. மொ. 6 :10:10-36
[உத்தேச்யம் - கருதத்தக்கது. நஜீவேயம் க்ஷணமபி - பிரிந்து கணமும் வாழேன்.]

" அலர்மேல் மங்கை - பூவில் ருஜீஷமான தாதுவும் சுண்ணமும் கழிந்த பரிமளமே வடிவானாற்போலே இருந்துள்ள ஸௌகுமார்யமும், நித்யாநுபாவ்யமான பருவமும் உடையவள்" தி. வா. மொ. 6:10:10-36
[ருஜீஷம் - கோது]

4. களிறு பிடிக்கு இளமூங்கிலைத் தேனில் தோய்த்துத் தருதல்

" பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருகண் இளமூங்கில் வாங்கி - அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங்க டம்கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை" இ. தி. 75

(15)

## 16

பணங்கள் ஆயிரம் உடையநல் அரவணைப்
பள்ளிகொள் பரமாஎன்று
இணங்கி வானவர் மணிமுடி பணிதர
இருந்தநல் இமயத்து,
மணங்கொள் மாதவி நெடுங்கொடி விசும்புற
நிமிர்ந்தவை முகில்பற்றிப்
பிணங்கு பூம்பொழில் நுழைந்துவண் டிசைசொலும்
பிரிதிசென் றடைநெஞ்சே!

ப. ரை : நெஞ்சே - ஏ மனமே! வானவர் இணங்கி - தேவர்கள் பிணக்கற்று ஒன்றுகூடி, ஆயிரம் பணங்கள் உடைய நல் அரவு அணைப் பள்ளிகொள் பரமா என்று - ஆயிரம் படங்களையுடைய அடிமைத்தன்மை ஆகிய நன்மை பொருந்திய திருவனந்தாழ்வான் ஆகிய படுக்கையிலே கண்வளர்ந்தருளும் யாவர்க்கும் மேலானவனே என்று, மணிமுடி பணிதர - மணிகள் பதித்த முடியோடு கூடிய தலைகளாலே வணங்க, இருந்த நல் இமயத்து - தங்கி இருக்கும் நன்றான பனிமலையில், மணம் கொள் மாதவி நெடும் கொடி அவை - மணம் வாய்ந்த குறுக்கத்தியின் நீண்ட கொடிகளானவை, முகில்பற்றி - மேகங்களைக் கொள்கொம்பாகப் பற்றி, பிணங்கு பூம் பொழில் - சுற்றி வலிக்கையினாலே பூக்கள் அலரும் சோலைகளிலே, வண்டு நுழைந்து இசை சொலும் பிரிதி - வண்டுகள் உட்புகுந்து முரலும் திருப்பிரிதியை, சென்று அடை - சென்று அடைவாய்.

சி. கு : பரமன் - யாவர்க்கும் மேலானவன். மணிமுடி என்பது ஆகு பெயராய் அதனை அணிந்த தலையினைச் சுட்டியது.

வியா : ஆறாம் பாட்டு : அப்படி திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினவன் இங்கே வந்து எழுந்தருளி இருக்கிறபடியை அநுஸந்திக்கிறார். ஸ்ரீவைகுண்டம்

---

வி : ஆறாம் பாட்டு : அப்படித் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளியவன் இங்கே வந்து எழுந்தருளி இருக்கும் நிலையினை எண்ணுகிறார். திருவைகுந்தம்

---

16. 2 : 6 இமையத்து. 4 : 3 நுழைந்தவண். 4 : 5 பிருதிசென்.

கலவிருக்கையாய் இருக்க அங்குநின்றும் எங்களுடைய கூக்குரல் கேட்கைக்காகத். திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளின தேவரீர்[1] எல்லார்க்கும் ஒக்க அநுபவிக்கலாம் படி இங்ஙனே எழுந்தருளி இருப்பதே! என்பர்கள் ஆயிற்று.

**பணங்கள் ஆயிரமுடைய நல் அரவணைப் பள்ளிகொள் பரமா என்று** - ஆறுகள் குளங்கள் நிரம்பினால் அதிக ஜலத்துக்குப் போக்கு விடுகைக்குப் பல வாய்த்தலைகள் உண்டாமாப் போலே பகவத் அநுபவ ஜநித ஹர்ஷத்துக்குப் போக்குவிடுகைக்குப் பல தலைகளையும் உடையவனாய் இருக்கிற திருவநந்தாழ்வானோட்டை ஸ்பர்சத்தாலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வாதிகனே! என்பர்கள் ஆயிற்று. பிராட்டியை எனக்கு என்னுதல், திருவநந்தாழ்வானைப் படுக்கையாகப் பெறுதல் செய்யும் தத்வம் ஆயிற்று ஸர்வாதிகம் ஆவது[2]. உச்வாஸ நிச்வாஸங்களாலே[3] ஸர்வேஶ்வரனுக்குத் தூங்குமெத்தை போலே அசைந்து வாராநிற்கும் ஆயிற்று. யசோதைப்பிராட்டி க்ருஷ்ணனைத் தன் மடியிலே கொண்டிருந்து தாலாட்டுமாப் போலே, ஸர்வேஶ்வரனைத் தன் மடியிலே சாயவிட்டுக் கொண்டிருந்து ஏத்தாநிற்கும் ஆயிற்று. **"திருவநந்தாழ்வான் மடியிலும், திருவடி சிறகின் கீழும், ஸ்ரீஸேநாபதியாழ்வான் பிரம்பின் உள்ளும்காண் இத்தத்வம் வளருவது"** என்று பட்டர் அருளிச்செய்யும் வார்த்தை. வ்ருத்த மந்த்ரிகள் ராஜ

---

*கலவிருக்கையாய்[4] இருக்க, அங்குநின்றும் எங்கள் கூக்குரல் கேட்கைக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளிய தாங்கள் எல்லார்க்கும் ஒக்கக் கண்டு இன்புறலாமாறு இப்படி எழுந்தருளி இருப்பதே!" என்று வானவர் போற்றுவர் ஆயினர்.*

**பணங்கள் ஆயிரமுடைய நல் அரவணைப் பள்ளிகொள் பரமா என்று** - *ஆறுகளும் குளங்களும் நிரம்பினால் மிகுதியான நீரினைப் போக்குவிடுகைக்குப்[5] பல வாய்த்தலைகள்[6] இருப்பது போலே இறைநுகர்ச்சியால் உண்டான உகப்பினைப் போக்குவிடுகைக்குப் பல தலைகளையும் உடையவனாய் இருக்கும் திருவனந்தாழ்வான் மேனி தீண்டும் இன்பத்தால் கண்வளர்ந்தருளும் மேலோனே! என்பர்கள். பிராட்டியைத் தனக்கு உரியவளாகவும், திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவும் பெற்றுள்ள பொருள் எதுவோ அதுவே பரம்பொருள் ஆகும். அவன் உள்மூச்சு வெளிமூச்சுகளாலே முழுமுதற் பொருளுக்குத் தூங்குமெத்தை போலே அசைந்து கொண்டிருப்பான். அசோதைப்பிராட்டி கிருட்டிணனைத் தன் மடியிலே வைத்துத் தாலாட்டுவது போலே பெருமானைத் தன் மடியிலே சாய்ந்து கிடக்குமாறு விடுத்துக் கொண்டாடிக் கொண்டிருப்பான்.* **"திருவனந்தாழ்வான் மடியிலும், திருவடி சிறகின் கீழும், திருச்சேனைமுதலியாழ்வான் பிரம்பினுள்ளும்காண் இப்பரம்பொருள் வளருவது"** *என்பது பட்டர் திருவாக்கு. முதிய அமைச்சர்கள் அரசர்தம் பிள்ளைகளை அரியாசனத்தில் வைத்து ஆட்சியை அவர்கள் சார்பில் தாங்கள் நடத்துவது போலே அம்மூவரும் பெருமானை*

---

1. தேவரீர். 2. ஸர்வாதிகத்வமாவது. 3. உச்ஸ்வாஸ நிச்ஸ்வாஸ.
4. கலவிருக்கை - நெஞ்சு பொருந்தியிருக்கும் இடம்; தலைமை இடம் என்று கொள்வது பொருந்தும்.
5. போக்கு விடுகை - வெளியே செல்ல விடுகை. 6. வாய்த் தலைகள் - வாய்க்கால் தலைப்புகள்.

புத்ரர்களைவைத்து நடத்துமாப் போலே ஆயிற்று அவர்கள் நடத்தும்படி. அவர்களாலே நியாம்யனாய் ஆயிற்று இருப்பது. "வான் இளவரசிறே."

"ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைகதாமநி." ஸர்வேஶ்வரனும் பிராட்டியுமாய்ச் சாய்ந்தால் அவர்கள் நினைவுக்குப் பாங்காகக் குழைந்து கொடுக்கைக்கு ஈடான ஜ்ஞாநாதிக்யத்தையும், இருவருமாய்த் துகையா நின்றால், "ஒரு சேதநன்" என்று கூசாதே படுக்கை என்று துகைக்கலாம் படியான தாரண ஸாமர்த்யத்தையும் உடையனாய் இருக்கை. சேஷியானவன் ஸர்வாதிகனாய் இருக்கச்செய்தே தன்னை ஆஶ்ரித பரதந்த்ரனாக்கி வைக்குமாப் போலே, சேஷபூதனும் தன்னுடைய ஸர்வ வ்யாபாரங்களையும் சேஷிக்கு உறுப்பாக்கி வைக்கக்கடவனிறே, இளையபெருமாளைப் போலே.

**நல் அரவு அணை** - அத்தலைக்கே உறுப்பாய் இருக்கை. சேஷபூதனுக்கு நன்மையாவது, 'எனக்கு' என்னுமது அன்றிக்கே சேஷிக்கே உறுப்பாய் இருக்கையிறே.

"பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந ச லக்ஷ்மண
த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்தః பிதா மம".

---

*அரியணையில் வைத்துத் தாங்கள் ஆட்சி செய்வர். அவன் அவர்களுக்கு அடங்கியவனாய் இருப்பான். அவன் சிறுவனோ என்னில், "வான் இளவரசு" (பெரி. தி. 3 : 6 : 3) என்று அன்றோ அவனைக் குறிப்பர்.*

*"மேலான அறிவுக்கும் ஆற்றலுக்கும் நிகரற்ற இருப்பிடமானவன்" (ஸ்தோ. ர. 39) என்று தோத்திர ரத்தினம் அரவினைக் கூறுதல் காண்க. பெருமானும் பிராட்டியுமாய்ச் சாய்ந்தால் அவர்கள் நினைவுக்குப் பாங்காகக் குழைந்து கொடுக்கைக்கு ஏற்ற அறிவு மேம்பாட்டினையும், இருவருமாய்த் துகைத்தால், "இவன் ஓர் ஆள்" என்று கருதிப் படுப்பதற்குக் கூசாமல் படுக்கை என்று கருதித் துகைக்கும்வண்ணம் தாங்கிடும் மிடுக்கினையும் உடையவனாய் இருத்தல். ஆண்டவன் எல்லாரினும் மேம்பட்டவனாய் இருந்த போதிலும், தன்னை அடியார்க்கு அடியனாக்கி வைப்பது போலே, அடியவனும் தன் அனைத்துச் செயல்களையும் ஆண்டவனுக்கு உறுப்பாக்கி வைப்பதற்குக் கடன்பட்டவன்; அஃதாவது இளையபெருமாளைப்[1] போலே இருத்தற்கு உரியவன்.*

நல் அரவு அணை - *இறைவனுக்கே உறுப்பாய் இருக்கை. அடியவனுக்கு நன்மையாவது, 'எனக்கு' என்று சொல்லாமல் ஆண்டவனுக்கே உறுப்பாய் இருத்தல்.*

*இராமபிரான் இலக்குவனை நோக்கி,* "இலக்குவ! நினைவு அறிந்து அடிமை செய்பவனாகவும் தசரதமன்னர் எனக்குச் செய்பவற்றை அறிபவனாகவும் அடிமைத்தன்மை என்னும் அறத்தை அறிந்தவனாகவும் தந்தையை நரகத்திலிருந்து காக்கும் புத்திரனாகவும் இருக்கும் உன்னாலே அறவோரான தந்தையார் என்னைப் பொறுத்தவரை இறந்திட வில்லை" *(ரா. ஆ. 16:29) என்கிறார்.*

---

1. இளையபெருமாள் - இலக்குவன்.

**பாவஜ்ஞேந - 'க்ரியதாம்'** என்று சொல்லுகிறவரிறே இளைய பெருமாள். "இப்படிச் செய்யவல்ல நீர் நம்மைக் கேட்டது என்!" என்கிறார். பர்ணசாலையைச் சமைத்த அநந்தரம் சொல்லுகிற வார்த்தையிறே. **பாவஜ்ஞேந** - அல்லாதவை சொன்னாலும், தாமும் பிராட்டியுமாய் ஏகாந்தமாய் இருக்கும் இடங்கள் சமைக்கும்படி இளையபெருமாளுக்குப் பெருமாள் அருளிச்செய்யாரிறே; நெஞ்சாலே நினைக்கும் இத்தனையிறே; இந்நினைவு அறிந்து செய்தார்.

**க்ருதஜ்ஞேந** - அதுவே அன்றிக்கே செய்து போரும்படி அறிந்து செய்தார். அறுபதினாயிரம் ஆண்டு ஜீவித்த சக்ரவர்த்தி நெடுநாள் மலடுநின்று பிள்ளை பெற்றவனாகையாலே, "இவர் என் நினைந்திருக் கிறாரோ'' என்று நினைவை ஆராய்ந்தும், "இவர்க்கு எத்தாலே என்ன குறை வருகிறதோ'' என்று பொருந்தும் இடங்கள் பார்த்தும் அவன் செய்து போரும் அடைவு அறிவர் ஆயிற்று.

**தர்மஜ்ஞேந** - நினைவு அறிந்தாலும், செய்துபோரும் அடைவு அறிந்தாலும், தானும் ராஜபுத்ரனான பின்பு, "எனக்கும் ஓர் இருப்பிடம்

---

நினைவு அறிந்து செய்பவனாக - இப்படி இப்படிச் செய்ய வேண்டும் என்று என்னைப் பணித்திடுக'' (ரா. ஆ. 15 : 7) என்று வேண்டி இராமபிரான் கருத்தினைக் கேட்டறிந்து பணி செய்பவர் இளையபெருமாள். அத்தகைய இளையபெருமாள் குடிசை கட்டியுள்ள அழகினைக் கண்ட இராமபிரான், "இப்படி நினைவு அறிந்து செய்யவல்ல நீர் நம்மைக் கேட்டது எதற்காக!" என்று அவரைக் கொண்டாடுகிறார். இஃது இலக்குவன் குடிசை அமைத்த பிறகு இராமபிரான் நிகழ்த்தும் பேச்சு. பிறவற்றைச் சொன்னாலும், தாமும் பிராட்டியுமாய்த் தனித்து இருக்கும் இடங்கள் சமைக்குமாறு இளையபெருமாளுக்குப் பெருமாள்[1] சொல்லமாட்டாரே; அவர் நெஞ்சினால் மட்டுமே நினைப்பர். இளைய பெருமாள் அந்நினைவினை அறிந்து அவற்றையும் அமைத்தார்.

செய்பவற்றை அறிந்து செய்பவனாக - அதுமட்டும் அல்லாமல், செய்யும் முறையறிந்து செய்தார். அறுபதினாயிரம் ஆண்டு வாழ்ந்த சக்கரவர்த்தி[2] நெடுநாள் மலடுநின்று[3] பிள்ளை பெற்றவர். ஆகையாலே அவர், "இவர் தமக்கு என்ன வேண்டும் என்று கருதுகிறார்'' என்று இராமபிரான் நினைவை ஆராய்ந்தும், "இவருக்கு எதனால் என்ன குறை வருமோ" என்று பொருந்தும் இடங்கள் பார்த்தும் செயற்பட்டு வந்தார். இளையபெருமாள் அவ்அடைவினை[4] அறிந்தவர் ஆவர்.

அறத்தை அறிந்தவனாக - நினைவு அறிந்தாலும், செய்யும் முறைமை அறிந்தாலும் தானும் மன்னர்மகனாக இருத்தலால், "எனக்கும் ஓர் இருப்பிடம் வேண்டாவோ?" என்று கருதி இருப்பின், இது

---

1. பெருமாள் - இராமபிரான். 2. சக்கரவர்த்தி - தயரதன். 3. மலடுநிற்றல் - பிள்ளை இன்றி இருத்தல். 4. அடைவு - முறைமை.

வேண்டாவோ'' என்று இருக்குமவனுக்கு இது செய்ய ஒண்ணாதிறே; அங்ஙன் அன்றிக்கே, "அத்தலையில் தாதர்த்யமே நமக்கு ஸ்வரூபமான பின்பு பின்னை அத்தலைக்கு உறுப்பாகச் செய்து போருமதே நமக்கு வகுத்தது'' என்று அத்தலைக்காகச் செய்யுமத்தையே தமக்குக் கர்த்தவ்யம் என்று இருப்பர்.

**த்வயா இத்யாதி** - தாம் உள்ள அன்று தாம் உளராய், தாம் போன அன்றைக்கும் உம்மை வைத்துப் போனாரே! என்கிறார். **புத்ரேண** - 'புத்' என்று ஒரு நரக விசேஷமாய், அதில் புகாதபடி நோக்கும் என்று ஆயிற்றுப் புத்ரன் என்று பேர் ஆகிறது. அய்யர்க்கு[1] நம்முடைய அபிமத ஸித்தி இன்றிக்கே ஒழிகைதனக்கு மேற்பட நிரயம் இல்லையிறே; அவர்க்கு அது வராதபடி நோக்குகிறீர் நீரிறே. **தர்மாத்மா** - சக்ரவர்த்தி ப்ரஸ்துதனானவாறே, "நம் அய்யரை ஒப்பார் உண்டோ? அவரும் ஒருவரே! தாம் இருந்த நாள் தாம் வேண்டுவன எனக்குச் செய்து, தாம் போன அன்று நமக்கு வேண்டுவன செய்கைக்கு உம்மைப் பெற்றுத் தண்ணீர்ப்பந்தல் வைத்துப் போவதே! **மம** - இருவர்க்கும் பிதாவானமைஒத்திருக்கச்செய்தே, 'மம' என்கிறார் ஆயிற்று. அவர் நமக்குச் செய்யுமவை நீர் இருந்து

---

*செய்ய ஒண்ணாது அன்றோ! அவ்வாறு இல்லாமல், "இராமபிரானுக்காகவே இருப்பது என்பது நமக்கு இயற்கையாக அமைந்த பின்பு அவருக்கு உறுப்பாக வேண்டுவன செய்வதே நமக்கு வகுத்தது'' என்று பெருமாளுக்குத் தொண்டு புரிவதனையே தமக்குக் கடனாகக் கொண்டு இருப்பார்.*

**புத்திரனாக இருக்கும் உன்னாலே அறவோரான தந்தையார் என்னைப் பொறுத்தவரை இறந்திடவில்லை** - *தாம் உயிரோடு இருந்த காலத்தில் எனக்கு வேண்டுவன தாமே செய்தார்; தாம் மறைந்த பிறகும் அவற்றைச் செய்ய உம்மை வைத்துப் போனாரே என் தந்தை; என்னிடத்தில் அவருக்கு எத்துணை அன்பு! என்கிறார்.* **புத்திரன்** - *'புத்' என்னும் ஒருவகை நரகத்தில் புகாதபடி காப்பான் என்பதனாலேயே அப் பெயர் பிள்ளைக்கு ஏற்பட்டிருக்கிறது. அய்யர்க்கு[2] என் விருப்பம் நிறைவேறாமல் போதலைக் காட்டிலும் பிறிதொரு நரகத் துன்பம் இல்லை; அவருக்கு அந்நிலை வாராதபடி காப்பவர் நீரேயாகையால் நீரே அவருக்குப் பிள்ளை ஆவீர்.* **அறவோர்** - *சக்கரவர்த்தியைப் பற்றிப் பேச்சு எழுந்தவாறே, "நம் அய்யரை ஒப்பார் உண்டோ? எவ்வளவு பெரியவர்! தாம் உயிர் வாழ்ந்த காலத்தில் எனக்குத் தேவையானவற்றைத் தாமே செய்து, தாம் மறைந்த பின்பு நமக்குத் தேவையானவற்றைச் செய்கைக்கு உம்மைப் பெற்றுத் தண்ணீர்ப்பந்தல் வைத்துப்[3] போனாரே!'' என்றார்.* **என்னைப் பொறுத்த வரை** - *இருவருக்கும் தசரதன் தந்தையாய் இருந்த போதிலும், "என்னைப் பொறுத்தவரை''*

---

1. ஐயர்க்கு.
2. அய்யர் - தந்தை; ஈண்டுத் தயரதன்.
3. தண்ணீர்ப்பந்தல் வைத்தல் - உதவி செய்தல்.

கையாலே நாம் அவரை இழந்திலோம். நீர் இழந்தீராகில். இத்தனையிறே. "**அஹம் ஸர்வம் கரிஷ்யாமி**" என்கிற இடத்திலே சேஷியுடைய வ்யாபாரமும் புகாதாகில், 'ஸர்வம்' என்ன ஒண்ணாதிறே.

**அரவு அணை** - நாற்றம் குளிர்த்தி[1] துடக்கமானவை ஜாதி ப்ரயுக்தமாகவே உண்டாய் இருக்குமிறே. **பரமா** - இப்படுக்கையிலே சாய்ந்தவன் ஆயிற்று தனக்கு அவ்வருகு ஒருவரை உடையன் அல்லாதவன் ஆகிறான். **இணங்கி** - க்ராமணி களைப் போலே ஆயிற்று தேவர்களும். ப்ரஹ்மஹத்தியைச் சொல்லிப் பழிஇடுவாரும், தலையை அறுப்பாரும், தலையை அறுப்புண்பாருமாயிறே இருப்பது. இப்படி இருக் கிறவர்கள் கிண்ணகத்தில் இழிவாரைப் போலே ஒருமிடறாய் ஆஶ்ரயிப்பர்கள் ஆயிற்று. தேவர்கள் அடங்கலும் திரண்டு இறுமாப்பாலே, 'வணங்கோம்' என்று இருக்குமது தவிர்ந்து பக்நாபிமாநராய்த் திருவடிகளிலே தலைகள்பட வணங்கும்படி ஆயிற்று அங்கு எழுந்தருளியிருக்கிறது. பரத்வத்தில் வணங்காதாரும் எல்லாம் சீலம் கண்டு வணங்கும்படியாக இருக்கிற தேசம் ஆயிற்று.

**மணங்கொள் இத்யாதி** - பரிமள ப்ரசுரமாய் அதுக்கு ஓர் ஆஶ்ரயம் வேணும் என்று கல்பிக்க வேண்டும்படி ஆயிற்றுத் தான் இருப்பது. மணத்தை உடைத்தான

---

*என்கிறார், "அவர் எனக்குச் செய்பவற்றை நீர் இருந்து செய்கையாலே நான் அவரை இழக்கவில்லை. நீர்தான் தந்தையை இழந்தீர்!" என்கிறார். "உடையவனான தந்தை செய்வதை அடியவன் செய்ய முடியுமோ?" என்னில், முடியும். இளையபெருமாள், "யான் எல்லா வற்றையும் செய்வேன்" (ரா. அ. 31 : 25) என்றார். அதில், 'எல்லாம்' என்பதன்கண் ஆண்டவனாகிய தசரதன் செய்யும் செயல்களும் அடங்கும்; இல்லை எனில், 'எல்லாம்' என்று சொல்ல முடியாதே!*

அரவு அணை - *நாற்றம், குளிர்ச்சி தொடக்கமானவை பாம்பு இனத்துக்கு அடைத்த பண்புகள். அவ்இனத்துள் ஒன்றான இதற்கும் அப்பண்புகள் இருக்கு மன்றோ!* பள்ளிகொள் பரமா - *இப்படுக்கையிலே சாய்ந்தவனே, தனக்கு மேலாக ஒருவரை உடையவன் அல்லாதவன் ஆகிறான்.* இணங்கி மணிமுடி பணிதர - *கிராமணிகளை நிகர்த்தவர்கள் தேவர்கள். அத்தேவர்கள் கொலைக்குற்றம் சொல்லிப் பழியிடுவாரும், தலையை அறுப்பாரும், அறுக்கப்படுவாருமாய் இருப்பார். இப்படி இருப்பவர்கள் கிண்ணகத்தில்[2] இழிவாரைப் போலே ஒரு மிடறாய்[3] வணங்கினர். தேவர்கள் அடங்கலும் திரண்டு இறுமாப்பாலே, 'வணங்கோம்' என்று இருப்பது தவிர்ந்து செருக்கு அழிந்தவராய்த் திருவடிகளிலே தலைகள்பட வணங்குமாறு அங்கு எழுந்தருளியிருக்கிறான். மேன்மை கண்டு வணங்காதாரும் நீர்மை கண்டு வணங்கும்படி பெருமான் இருக்கும் இடம்.*

மணம் கொள் மாதவி நெடும் கொடி - *மணமானது மிக்கு அதுதனக்குச் சார் பிடம் வேண்டும் என்று கருதி அமைத்துக்கொண்ட மாதவிக் கொடி. மணத்தைக்*

---

1. குளிற்றி.
2. கிண்ணகம் - பெரு வெள்ளம். 3. ஒரு மிடறாய் - பகையின்றி ஒன்று சேர்ந்து.

மாதவி உண்டு - குறுக்கத்தி. அதினுடைய நெடும் கொடியானது - ப்ரத்தையாலே வளர்ந்த கொடியானது. **விசும்பு உற நிமிர்ந்து** - ஆகாசாவகாசத்தை[1] வெளி யடைத்துக்கொண்டு மேகபதத்தளவும் சென்று அத்தை மூடப் படரும் ஆயிற்று. **அவை இத்யாதி** - ஆகாசத்திலே முகடு உருவ வளர்ந்தால் ஒரு கொள்கொம்பு அபேக்ஷிதமாய் இருக்குமே, அப்போதாகக் கொள்கொம்பு கொடுப்பார் இல்லையே, அவ்வளவிலே மேகங்கள் வந்து கிட்டுமே, அவற்றைச் சென்று பற்றும்; அவை வாயு ப்ரேரிதமாய்ப் போகத் துடங்கும். கொடியானது இங்கே இசிக்கும். இவ்ஆயாஸத் தால் வந்த அலசுதலிலே[2] பூக்கள் அலராநிற்கும். அப்பூவிலே மதுபாநம் பண்ண நினைத்த வண்டுகளானவை அம்மேகத்துக்கும் கொடிக்கும் நடுவே நுழைந்து புக்கு மதுபாநத்தைப் பண்ணிக் களித்து அச்செருக்குக்குப் போக்கு விட்டு ஆளத்தி வைத்து இசை சொல்லாநிற்கும். அச்சோலை அடைய மதுபாநம் பண்ணிக் களித்துப் பாடுகிற வண்டுகளினுடைய இசை ஆரவாரமாய் இருக்கும். பெரியபிராட்டியார் ஆகிற கொடி, "ப்ரஜைகளை ரக்ஷிக்க வேணும்" என்று இசிக்க, 'செய்கிறோமிறே' என்று அவன் இசிக்க, உள் அடைய தேவர்கள் ஸ்தோத்ரம் பண்ணுகிற ஆரவார மாய் இருக்கும்.

---

கொண்ட மாதவி உண்டு; அதற்குக் குறுக்கத்தி என்று பெயர். அதனுடைய நெடும் கொடி - ஊக்கத்தினாலே வளர்ந்த கொடி. **விசும்பு உற நிமிர்ந்து** - வானப் பரப்பை வெளியடைத்துக்கொண்டு, முகிற்கூட்டங்கள் தங்கி இருக்கும் இடம் வரை சென்று அதனை மூடுமாறு படர்ந்தது. **அவை முகில் பற்றிப் பிணங்கு பூம் பொழில் நுழைந்து வண்டு இசை சொலும் பிரிதி** - வானத்திலே முகடு உருவ வளர்ந் தால்[3] ஒரு கொள்கொம்பு தேட்டமாய் இருக்குமன்றோ, அப்போது உடனே கொள்கொம்பு கொடுப்பார் ஒருவரும் இல்லை, அந்த நேரத்திலே மேகங்கள் அங்கு வந்து கிட்டும், உடனே அவற்றைக் கொள்கொம்பாகக் கொண்டு பற்றும்; அவை காற்றினால் தள்ளப்பட்டு அங்கிருந்து நகரத் தொடங்கும். அவற்றைக் கொடி போகவிடாமல் பிடித்து இங்கு இசிக்கும்[4]. இத்துன்பத்தால் வந்த அலசுதலினாலே[5] பூக்கள் அலரும். அப்பூக்களில் தேன் உண்ண நினைத்த வண்டுகள் அம்மேகத்திற்கும் கொடிக்கும் நடுவே நுழைந்து புக்குத் தேன் உண்டு களித்து அச்செருக்குக்குப் போக்குவிட்டு ஆளத்தி வைத்து[6] இசைக்கும். அச் சோலை அடைய[7] மது அருந்திக் களித்துப் பாடும் வண்டுகளின் இசை ஆரவார மாய் இருக்கும். பெரியபிராட்டியார் என்னும் கொடி, "பிள்ளைகளைக் காக்க வேண்டும்" என்று இசிக்க, 'செய்கிறோம்' என்று அவன் இசிக்க, உள் அடையத் தேவர்கள் பரவும் ஆரவாரமாய் இருக்கும்.[8]

## ஒப்புமைப் பகுதி

1. பணங்கள் ஆயிரமுடைய அரவு

*" பணங்கள் ஆயிரமுடைய பைந்நாகப் பள்ளியாய்"*

---

1. ஆகாசத்தை. 2. அலத்தலிலே.
3. முகடு உருவ வளர்தல் - உச்சிவரை வளர்தல். 4. இசிக்கும் - இழுக்கும். 5. அலசுதல் - தளர்ச்சி. 6. ஆளத்தி வைத்தல் - முரலுதல். 7. அடைய - எங்கும். 8. "பெரியபிராட்டியார்... இருக்கும்" என்பதில், பிணங்குதல் என்பதற்கு அங்கும் இங்கும் இழுக்க என்று பொருள் கொண்டு அலர் மகளைக் கொடியாகவும், பெருமானை முகிலாகவும், மலர்களை வழிபாட்டுப் பொருளாகவும், வண்டு களைத் தேவர் கூட்டமாகவும் உருவகப்படுத்திக் கருத்து அருளிச்செய்கிறார் என்பர்.

" ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமான பணங்களை உடையனாய் பகவதநுபவ ஹர்ஷத்துக்குப் போக்குவீடாகப் பல தலைகளையும் உடையனாய், ஸர்வேச்வரனுக்கும் பிராட்டிமார்க்கும் நினைத்தபடி பரிமாறுகைக்கீடான பரப்பை உடையனாய் ஆயிற்றுத் திருவநந்தாழ்வான் இருப்பது; அப்படிப் பட்டிருக்கிறவனைப் படுக்கையாக உடையவனே!"

திவாமொ. 8:1:8-36

[ஸ்வஸ்பர்சத்தால் - தன் மேனி தொடுவதால். பகவதநுபவஹர்ஷம் - இறை நுகர்ச்சியால் விளையும் இன்பம்.]

" வாயோர் ஈரைஞ்ஞூறு துதங்கள் ஆர்ந்த வளையுடம்பின் அழல்நாகம்"

" யசோதைப்பிராட்டி க்ருஷ்ண ஸ்பர்ஶத்தால் வந்த ஸுகத்துக்குப் போக்கு விட்டு ஏத்துமாப்போலே, பகவதநுபவ ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே வந்த ப்ரீதிக்குப் போக்குவிட்டு ஏத்துகைக்காக ஆயிரம் வாயையும்...வெளுத்த நிறத்தை உடையனுமாய், ப்ரதிபக்ஷத்துக்கு வந்து அணுக ஒண்ணாதபடி அநபிபவநீயனாய் இருக்கிற திருவனந்தாழ்வான்"

பெரு. தி. 1:2 பெ. உரை.

[ஹர்ஷ ப்ரகர்ஷம் - மகிழ்ச்சிப்பெருக்கு. ப்ரதிபக்ஷம் - எதிர்த்தலை. அநபிபவநீயன் - கீழ்ப்படுத்த முடியாதவன்.]

## 2. முழுமுதலின் இலக்கணம்

" நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு"

" அநந்த சாயித்வம் ஸர்வாதிக வஸ்துவுக்கு லக்ஷணமாகையாலே, ஸர்வாதிகனே சரண்யன் என்கிறது"

தி. வா. மொ. 5:10:11-36

[அநந்த சாயித்வம் - அரவணைப் பள்ளிகொள்ளுதல். ஸர்வாதிகன் - பரம்பொருள்.]

## 3. அரவணையின் தன்மை

" பாம்பணை - ஆர்த்த ரக்ஷணத்துக்காகத் திருப்பாற்கடலிலே நீர் உறுத்தாமைக்கு, சைத்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யங்களை உடையனான திருவனந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளிற்றும்"

தி. வா. மொ. 2:5:7-36

[ஆர்த்த ரக்ஷணம் - இடருற்றார் பாதுகாப்பு. சைத்யம் - குளிர்ச்சி. ஸௌகந்த்யம் - நாற்றம்; ஸௌகுமார்யம் - மென்மை.]

" பையரவின் அணைப்பள்ளியினானுக்கு - ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமான பணங்களை உடையவனாய், நாற்றம் மென்மை குளிர்த்தி இவற்றை ப்ரக்ருதியாக உடையவனைப் படுக்கையாக உடையவனாய், அதிலே கண்வளர்ந்தருளுகிறவனுக்கு"

தி. வா. மொ. 6:6:7-36

## 17

**கார்கொள் வேங்கைகள் கனவரை தழுவிய**
**கறிவளர் கொடிதுன்னிப்**
**போர்கொள் வேங்கைகள் புனவரை தழுவிய**
**பூம்பொழில் இமயத்துள்,**
**ஏர்கொள் பூஞ்சுனைத் தடம்படிந் தினமலர்**
**எட்டுமிட் டிமையோர்கள்**
**பேர்கள் ஆயிரம் பரவிநின் றடிதொழும்**
**பிரிதிசென் றடைநெஞ்சே!**

ப. ரை : **நெஞ்சே** - *ஏ, மனமே!* **கார்கொள் வேங்கைகள்** - *மேகம் இருக்கும் இடம் வரை வளர்ந்த வேங்கை மரங்கள்,* **தழுவிய கன வரை** - *சுற்றும் அமைந்த தாழ்வரைகளிலே,* **கறி வளர் கொடி துன்னி** - *மிளகின் வளர்ந்த கொடிகள் நெருங்கி இருப்பதும்,* **புனம் வரை தழுவிய போர் கொள் வேங்கைகள்** - *கொல்லை நிலங்களிலே உள்ள சிறுமலைகளில் உறையும் போர் விரும்பிப் புறப் பட்ட வேங்கைப் புலிகளைக் கொண்டதுமான,* **பூம் பொழில் இமயத்துள்** - *பூக்கள் நிறைந்த சோலையைக் கொண்ட பனிமலையில்,* **இமையோர்கள்** - *பிரமன் முதலான தேவர்கள்,* **ஏர் கொள் பூஞ்சுனைத் தடம் படிந்து** - *அழகு நிறைந்த பூக்கள் மலிந்த தடாகங்களிலே நீராடி,* **இன மலர் எட்டும் இட்டு** - *எட்டு வகைப் பூக்களையும் பணிமாறி,* **பேர்கள் ஆயிரம் பரவி நின்று** - *ஆயிரம் திருப்பெயர் களையும் வாயில் வந்தவாறு சொல்லி,* **அடி தொழும் பிரிதி** - *வணங்கும் திருப் பிரிதியை,* **சென்று அடை** - *போய்க் கிட்டுவாய்.*

சி. கு : *வேங்கை - மரத்துக்கும் புலிக்கும் பெயர். அடைமொழிகள் எது என்பதனைக் காட்டின. அடிதொழும் - வணங்கும்; ஒருசொல் நீர்மைத்து.*

வியா : **ஏழாம் பாட்டு :** புஷ்பாஞ்சலி பண்ணித் தேவர்கள் தொழா நிற்பர்கள் ஆயிற்று.

**வி : ஏழாம் பாட்டு :** *தேவர்கள் மலர் வணக்கம் செய்து தொழுகின்றனர். அதனைக் கூறுகிறது.*[1]

---

**17.** 1 : 6 கொடிதுன்றிப். 2 : 6 இமையத்துள். 4 : 5 பிருதிசென்.

1. கீழ் நான்காம் பாட்டில் தேவர்கள் திருத்தோற்றம் எடுத்து வந்த பெருமானைப் பணிந்தார்கள் என்றும், ஐந்தாம் பாட்டில் திருத்தோற்றத்திற்கு நாற்றங்காலான பாற்கடலில் துயிலும் பெருமானைப் பரவினார்கள் என்றும், ஆறாம் பாட்டில், அப் பாற்கடற் பெருமானே இமயத்துள் வழிபடத்தக்க உருவத்தனாய் எழுந்தருளியுள்ளான் என்று வணங்கினார்கள் என்றும், இப்பாட்டில் வழிபடத்தக்கவனாகையால் மலர் தூவிப் போற்றுகிறார்கள் என்றும் இயைபு கொண்டு உரை வகுக்கிறார். இது, 'இனமலர் எட்டும் இட்டு' என்பதனை நோக்கி அமைந்தது.

**கார் கொள் வேங்கைகள்** - கார் என்று மேகமாய், கார் கொள் வேங்கைகள் என்று மேகபதத்தளவும் செல்ல வளர்ந்த வேங்கைகள் என்னுதல். அன்றிக்கே, நாநா வர்ணமாய் ஆயிற்று வேங்கைகள்தான் இருப்பது; அத்தாலே நீலவேங்கை என்னுதல். **கன வரை தழுவிய கறி வளர் கொடி துன்னி** - சுற்றில் உண்டான தாழ்வரைகளிலே உண்டான கறியினுடைய வளர்ந்த கொடியானது - மிளகினுடைய வளர்ந்த கொடியானது, நெருங்கப் படர்ந்துகிடக்கும் ஆயிற்று. **போர் இத்யாதி** - வெளி நிலங்களில் சிறுமலைகள் அடையப் பெரிய சீற்றத்தையுடைய யுத்தோந்முகமான வேங்கைப் புலிகள் நெருங்கிக்கிடக்கும் ஆயிற்று. **பூம் பொழில் இமயத்துள்** - இது ஆயிற்றுச் சோலை இருக்கும்படி.

**ஏர் இத்யாதி** - தர்சநீயமாம்படி பூத்து இருந்துள்ள தடாகங்களின் கரைகளிலே படிந்து. **இனமலர் எட்டும் இட்டு** - அஹிம்ஸாதிகளான புஷ்பங்கள் எட்டையும் இட்டு. அன்றியே, செங்கழுநீர், செண்பகம், இருவாட்சி, பாதிரி, புன்னை, குறுக்கத்தி, கருமுகை, தாமரை என்றாப் போலே ப்ரதாநமாய் இருப்பன எட்டுக் காலபுஷ்பங்கள்; அவையாதல்.[1] அஷ்டாங்க ப்ரணாமத்தைச் சொல்லிற்றாதல். அத்தை மலர் என்னும்படி என் என்னில், பூவோபாதி அவனுக்கு ஸ்ப்ருஹா விஷயமாய் இருக்குமாகில் ஆமிறே. **"சொன் மாலை"** என்னுமாப் போலே

---

**கார் கொள் வேங்கைகள் :** *கார் என்பது மேகமாய், கார் கொள் வேங்கை என்பது மேகங்கள் இருக்கும் இடம் வரை செல்ல வளர்ந்த வேங்கை என்று பொருள்படும். வேங்கைகள் பல வண்ணத்தன; ஆதலின், அவற்றுள் நீல வேங்கையைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.* **கன வரை தழுவிய கறி வளர் கொடி துன்னி**[2] - *சுற்றிலும் உள்ள தாழ்வரைகளிலே இருக்கும் கறியினுடைய வளர்ந்த கொடியானது நெருக்கமாகப் படர்ந்துகிடக்கிறது. கறி வளர் கொடி - மிளகினுடைய வளர்ந்த கொடி.* **போர் கொள் வேங்கைள் புனவரை தழுவிய**[3] - *வெளி நிலங்களில் சிறுமலைகள் எங்கும் பெரிய சீற்றத்தையுடைய போரை எதிர்நோக்கியிருக்கும் வேங்கைப்புலிகள் நெருங்கிக்கிடக்கின்றன.* **பூம் பொழில் இமயத்துள்** *இது சோலை இருக்கும் நிலை. அஃதாவது, எந்நாளும் இளவேனில் மாறாது பூத்திருக்கும் சோலை.*

**ஏர் கொள் பூஞ் சுனைத் தடம் படிந்து** - *காண்பதற்கு அழகியனவாய்ப் பூத்திருக்கும் தடாகங்களின் கரைகளிலே படிந்து.* **இன மலர் எட்டும் இட்டு** - *இன்னா செய்யாமை தொடக்கமான மலர்கள் எட்டும் இட்டு. செங்கழுநீர், செண்பகம், இருவாட்சி, பாதிரி, புன்னை, குறுக்கத்தி, கருமுகை, தாமரை எனப்படும் பருவகாலங்களில் மலரும் சிறந்த எண்வகைப் பூக்களை இட்டு என்றும் சொல்லலாம். அவ்வாறு அன்றி, எட்டு உறுப்புகள் நிலத்தில்பட வீழ்ந்து வணங்கும் வணக்கத்தைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்*[4]. *"உடல் உறுப்புகளை மலர் என்று சொல்லாமோ?" எனில், பூக்களைப் போலே அவையும் அவனுடைய விருப்பத்திற்கு உரியனவாம் என்றால் சொல்லல் தகும் அன்றோ?* **"சொன் மாலை"** *என்று சொற்களை மலர்களாகச் சொல்வது போலே இங்கு உடல் உறுப்பு*

---

1. இருப்பன எட்டுமாதல்.

2. தழுவிய கனவரை என்று மாற்றிக் கூட்டுக. 3. புனம் வரை தழுவிய போர் கொள் வேங்கைகள் என்று இயையும். 4. மோவாய், செவிகள் இரண்டு, தலை, தோள்கள் இரண்டு, கைகள் இரண்டு, என்னும் எட்டு உறுப்புகளும் நிலத்திலே தோய வீழ்ந்து வணங்குவது.

அன்றிக்கே, கீழில் திருமொழியிலே திருமந்த்ரம் ப்ரஸ்துதமாகையாலே திருவஷ்டாக்ஷரத்தைச் சொல்லிற்றாதல். **இமையோர்கள் இத்யாதி** - ப்ரஹ்மாதிகளானவர்கள் திருநாமங்களை அடைவு கெடச் சொல்லி ஆஶ்ரயியாநின்றுள்ள பிரிதி சென்று அடை நெஞ்சே! கீழ் திருமந்த்ரமானபோது, பெயர்களாயிரம் என்னும்படி எங்ஙனே என்னில், "**பேர் ஆயிரம் கொண்டதோர் பீடுடையன்**" என்னா, '**நாராயணன்**' என்றதிறே. இத்தால், நிரூபித வஸ்துவுக்கு விசேஷணங்களாயிறே அல்லாதவை இருப்பது. தர்மிக்கு நிரூபகமிதிறே.[1]

மலைத் தாழ்வரைகள் அடங்க மிளகுகொடிகளாலே நெருங்கிக்கிடக்கும். வெளிநிலத்தில் சிறுமலைகள் அடங்கலும் பாதக வர்க்கங்கள் நெருங்கிக்கிடக்கும். உள் எல்லாம் நாட்டுக்கு ஆஶ்ரயணீயராய் இருக்கிறவர்களுடைய ஸ்தோத்ர கோஷத்தாலே நெருங்கிக்கிடக்கும்.

---

*களை மலர்களாகச் சொல்கிறார். அல்லது, முதல் திருமொழியிலே திருமந்திரம் பேசப்பட்டமையாலே திருவெட்டெழுத்தைச் சொல்கிறது என்று கொள்க.* **இமையோர் பேர்கள் ஆயிரம் பரவி நின்று, அடி தொழும் பிரிதி சென்று அடை நெஞ்சே** - *பிரமன் முதலானோர் திருப்பெயர்களை அடைவு கெடச்[2] சொல்லி* **வணங்கும்** *பிரிதி சென்று அடை நெஞ்சே! கீழே,* **'இனமலர்'** என்பதற்குத் *திருவெட்டெழுத்து* என்று *திருமந்திரம் பொருளாகக் கூறப்பட்டது. "ஓம் நமோ நாராயணாய" என்பது திருமந்திரம். அதில், 'நாராயணன்' என்னும் பெயரால் பெருமான் குறிக்கப்படுகிறான். அப்படிப் பெருமானுக்கு நாராயணன் என்று பெயர் குறித்த பின்பு, பேர்கள் ஆயிரம் என்று குறிப்பது* **எவ்வகையில் என்னில்,** *நம்மாழ்வார் இறைவனைப்* **"பேர் ஆயிரம் கொண்டதோர் பீடுடையன்" (தி. வா.** *மொ. 9 : 3 : 1)* **என்று** *கூறி, அவன், 'நாராயணன்' என்று குறிப்பிடுகிறார்.* **ஆதலால், இந்** *நாராயணன் என்னும் பெயரால் நிறுவப்பட்ட பொருளுக்கு மற்றப் பெயர்கள் அடைமொழிகளாக அமைகின்றன; பொருளுக்குத் தனி அடையாளம்* **இந்** *நாராயணன் என்பது!*

*மலைத் தாழ்வரைகள் எங்கும் மிளகுகொடிகளாலே நெருங்கிக்கிடக்கும். வெளிநிலத்தில் சிறுமலைகள் எங்கும் கொடிய விலங்குகளாலே நெருங்கிக் கிடக்கும். உள் எல்லாம் நாட்டுக்குக் கடவுளராய், வழிபடப்பெறுவோராய் இருப்பவர்களுடைய வழிபாட்டு முழக்கத்தாலே நெருங்கிக்கிடக்கும்.*

**ஒப்புமைப் பகுதி**

**1. எட்டாய உறுப்புகளால் செய்யும் வணக்கம்**

*" எட்டினாய பேதமோடு இறைஞ்சி நின்று - அஷ்டாங்க ப்ரணாமத்தைப் பண்ணி, அம்முகத்தாலே ஆச்ரயித்து நின்று. ப்ரணாமத்துக்கு அஷ்டாங்கதையாவது பக்நாபிமாநனாய் விழுகையும், மநோபுத்திகளுக்கு*

---

1. தர்மிக்கு ஸ்வரூப நிரூபகமிறே.
2. அடைவு கெட - முறை பிறழ்ந்து, வாயில் வந்தபடி.

ஈச்வரனே விஷயமாகையும், பதத்வய கரத்வயங்களும் ஶிரஸ்ஸும் கூர்மவத் பூமியிலே பொருந்துகையும்''

திருச. வி. 79 பெ. உரை.

[பக்நாபிமாநன் - செருக்கழிந்தவன். பதத்வயம் - கால்கள் இரண்டு. கரத்வயம் - கைகள் இரண்டு. ஶிரஸ் - தலை. கூர்மவத் - ஆமைபோல.]

2. ஆயிரம் பெயர்கள்

''ஆயிரநாமம் - ...பகவத்குண சேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்கள்''

திருப்பல். 5 பெ. உரை.

[சேஷ்டிதம் - செயல். வாசகம் - குறிப்பது.]

(17)

## 18

இரவு கூர்ந்திருள் பெருகிய வரைமுழை
இரும்பசி யதுகூர
அரவம் ஆவிக்கும் அகன்பொழில் தழுவிய
அருவரை இமயத்துப்
பரமன் ஆதிஎம் பனிமுகில் வண்ணனென்று
எண்ணிநின் றிமையோர்கள்
பிரம னோடுசென் றடிதொழும் பெருந்தகைப்
பிரிதிசென் றடைநெஞ்சே!

ப. ரை : நெஞ்சே - ஏ மனமே! இரவு கூர்ந்து இருள் பெருகிய வரை முழை - இரவுப் பொழுதே விஞ்சி இருளே நிறைந்திருக்கும் முழைஞ்சுகளிலே, இரும் பசியது கூர - பெரிய பசியானது மிக, அரவம் ஆவிக்கும் - பாம்பு பசியாலே பெருமூச்சு விடும், அகன் பொழில் தழுவிய அருவரை இமயத்து - உட்சோலையோடு கூடிய ஏறுதற்கு அரிய தாழ்வரைகளையுடைய பனிமலையிலே, பரமன் ஆதி எம் பனிமுகில் வண்ணன் - யாவர்க்கும் மேம்பட்டவனே! உலகத் தோற்றத்திற்கு முதலானவனே! குளிர்ந்த மேகம் போன்ற வடிவை உடையவனே! என்று எண்ணி நின்று - என்று இப்படிச் சொல்லிநின்று, இமையோர்கள் பிரமனோடு சென்று - தேவர்கள் பிரமனோடு போய், அடி தொழும் பெருந்தகை பிரிதி - வணங்கிடும் பெருமையையுடைய திருப்பிரிதியிலே, சென்று அடை - சென்று கிட்டப் பாராய்.

சி. கு : பசியது - 'அது' பகுதிப் பொருள் விகுதி. கூர - மிக; ''கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்'' என்பது தொல்காப்பியம் (உரியியல் 16).

---

18. 2 : 3 அகம்பொழில். 2 : 6 இமையத்து. 4 : 5 பிருதிசென்.

வியா : **எட்டாம் பாட்டு : இரவு இத்யாதி** - சோலைச்செறிவாலே பகற்போது காண ஒண்ணாமையாலே ராத்ரியே விஞ்சி இருக்கும். பகல் விரவாத ராத்ரியாய் இருக்கும். ஹேது மாறாமையாலே கார்யமும் மாறாதிறே. ஆதித்ய கிரணங்கள் புகுந்து பரம்பாது[1] பகலாயே இருக்கிற அதுவும். **இருள் பெருகிய வரை முழை** - இருளேயாய் இருக்கிற மலைமுழைஞ்சுகளிலே. வயிரம் பற்றின இருளேயாய் இருக்கை. நெடுநாள் ராஜ்யம் பண்ணினாரைப் போலே அடிப்பட்டிருக்கும் ஆயிற்று இருளும். ஆக, ராத்ரியாய் அத்தாலே இருள் மிக்கு இருந்துள்ள மலைமுழைஞ்சுகளிலே. **இரும் பசியது கூர** - வெளி கண்டு புறப்பட்டு வ்யாபரிக்கப் பெறாமையாலே பெரிய பசியானது மிக. நித்ய ஸூரிகள் அந்நபாநாதிகள் ஒழியத் தரிக்குமதுவும் உத்தேஶ்யமாய் அவர்கள்தாங்களும் உத்தேஶ்யராய் இருக்குமாப் போலே, அந்த ஸர்ப்பங்களினுடைய பசியும் திர்யக் ஜாதிக்கும் அவ்வருகாய் இருக்கிற ஸர்ப்பங்கள்தானும் உத்தேஶ்யமாய் இருக்கிறது ஆயிற்று இவர்க்கு. ஏதேனுமாக அந்நிலத்தில் உள்ளதாம் இத்தனையே வேண்டுவது இவர்க்கு ஆதரிக்க. **அரவம் ஆவிக்கும்** - ஆவிக்கையாவது பசியாலே கொட்டாவி கொள்ளுகையாகவும் ஆம்; அன்றிக்கே, ப்ராணிக்கையாய் - மூச்சுவிடுகையாய், அதாவது சோலையின் பரிமளத்தோடே கூடின காற்றை ஆஶ்வாஸித்துத் தரியாநிற்கும். வாயுவையிறே அவை பக்ஷிப்பது. முக்தர் ஸத்யகாமாதிகளை உடையராய் இருக்குமாப் போலே

---

வி : **எட்டாம் பாட்டு : இரவு கூர்ந்து இருள் பெருகிய வரை முழை** - சோலைச்செறிவாலே பகற்பொழுது காண முடியாது. ஆகையாலே இரவுப் பொழுதே விஞ்சி இருக்கும். பகல் விரவாத இரவாய் இருக்கும். சோலைச் செறிவு ஆகிய காரணம் மாறாமையாலே இருளாகிய காரியமும் மாறாது. **இருள் பெருகிய வரை முழை** - கதிரவன் ஒளிக்கற்றைகள் புகுந்து பரம்பாது[2], பகலாய் இருக்கும் வேளையும் இருளாகவே இருக்கும் மலைமுழைஞ்சுகளிலே. எங்கும் வயிரம் பற்றிய இருளாகவே[3] இருக்கை. நெடுநாள் அரசாட்சி செய்தாரைப் போலே இருளும் அடிப்பட்டிருக்கிறது.[4] ஆக, இரவுப்பொழுதாய் அதனால் இருள் மிக்கதாய் உள்ள மலைமுழைஞ்சுகளிலே. **இரும் பசியது கூர** - அயர்வறும் அமரர்கள் சோறும் நீரும் ஒழிந்து உயிர்தாங்கி இருப்பதும் கொள்ளத் தக்கதாய் அவர்களும் கொள்ளத்தக்கவராய் இருப்பது போலே, அந்தப் பாம்பு களின் பசியும் விலங்கினத்தினும் கீழ்ப்பட்டவாய் இருக்கும் அப்பாம்புகளும் இவர்க்குக் கொள்ளத்தக்கன ஆயின. இவர் விரும்புவதற்கு எப்பொருளாயினும் அமையும்; அஃது அந்நிலத்தில் உள்ளதாக இருத்தல் மட்டுமே வேண்டுவதாம். **அரவம் ஆவிக்கும்** - ஆவிக்கையாவது பசியாலே கொட்டாவி கொள்வது என்றும் சொல்லலாம்; அவ்வாறு அன்றி, மூச்சு விடுகையைக் குறிப்பதாய்ச் சோலையின் மணத்தோடு கூடிய காற்றை உண்டு இளைப்பாறி உயிரைத் தாங்கிநிற்கும் என்றும் கொள்ளலாம். அவை காற்றையன்றோ உண்ணுகின்றன. வீடு பேறு கிட்டியவர்கள் விழைந்தன வாய்க்கப்பெறுதல்[5] தொடக்கமானவற்றை உடையவ

---

1. பரம்பாத.

2. பரம்பாது - பரவாமல். 3. வைரம் பற்றிய இருள் - அடர்ந்த இருள். 4. அடிப்பட்டிருத்தல் - வேர் வீழ்த்திருத்தல். 5. இறைவனுக்கும் வீடு பேறு உற்றார்க்கும் உள்ள பண்புகள் (அ) இருவினை தட்டாமை (ஆ) மூப்பின்மை (இ) இறப்பின்மை (ஈ) வருத்தமின்மை (உ) பசியின்மை (ஊ) விடாயின்மை (எ) விழைவு தப்பாது நிறைவுறுகை (ஏ) மனவுறுதி தப்பாது நிறைவுறுகை ஆகியன ஆகும்.

அங்குத்தை ஸர்ப்பங்கள் ஸஞ்சார யோக்யதை இல்லாமையாலே கிடந்த இடத்தே கிடந்து மணத்தை ஆக்ராணம் பண்ணித் தரியாநிற்கும். **அகன் பொழில் தழுவிய** - அகவாயில் பொழில்; உட்சோலை. அது அணைந்திருந்துள்ள. **அரு வரை இமயத்து**.

**பரமன் இத்யாதி** - ஸர்வ ஸமாஶ்ரயணீயன் வந்து வர்த்திக்கிற தேச மாகையாலே நமக்கு ஆஶ்ரயணீய ஸ்தலமான பின்பு, நெஞ்சே! அங்கே சென்று கிட்டப் பாராய் என்கிறார். ஸர்ப்பங்களோடு ப்ரஹ்மாதிகளோடு வாசி அற எல்லார்க்கும் ஆஶ்ரயணீயமான தேசம் ஆயிற்று. **பரமன் இத்யாதி** - ஆஶ்ரயிக்கிற ப்ரஹ்மாதிகளுடைய பாசுரம் இருக்கிறபடி. ஸர்வாதிகனாய், தனக்கு அவ்வருகு ஒருவரும் இல்லாதபடி இருக்கிற ஸர்வேஶ்வரன். ஸர்வாதிகனாகிலும் பெற்ற தாயால் விட ஒண்ணாதாப் போலே விட ஒண்ணாதபடியான ப்ராப்தியை உடையவன். விஷயங்களை விரும்புகிறது ஒரு ப்ராப்தி கொண்டன்றே![1] கீழ்ச் சொன்னவை இரண்டும் இல்லையானாலும், விட ஒண்ணாதபடி ஶ்ரமஹரமான வடிவை உடையவன். ஆக, ஸர்வாதிகன், ஜகத் காரணபூதன், தர்சநீயமான வடிவை உடையவன். **என்று எண்ணி இத்யாதி** - இப்படி சொல்லாநின்றுகொண்டு

---

*ராய் இருப்பது போலே, அங்குத்தைப்[2] பாம்புகள் நகர்ந்து செல்ல மாட்டாமை யாலே கிடந்த இடத்தே கிடந்து விழைந்த மனத்தை உயிர்த்து உயிர் தாங்கி நிற்கும்.* **அகன் பொழில் தழுவிய அரு வரை இமயத்து** - *அகன் பொழில் - அக வாயில் உள்ள சோலை; அஃதாவது உட்சோலை. அது சார்ந்திருக்கும் அருவரை இமயத்து.*

**பரமன் ஆதி எம் பனிமுகில் வண்ணன் என்று எண்ணிநின்று இமையோர்கள் பிரமனோடு சென்று அடி தொழும் பெருந்தகைப் பிரிதி சென்று அடை நெஞ்சே** - *எல்லார்க்கும் சார்பிடமாய் இருப்பவன் வந்து தங்கியுள்ள இடமாகையாலே நமக்கும் அதுவே சாரத்தக்க இடமாகும். அவ்வாறு அமைந்த பின்பு, நெஞ்சே! அங்கே சென்று கிட்டப் பாராய் என்கிறார். அது பாம்புகள் என்றும், பிரமன் தொடக்கமான தேவர்கள் என்றும், வேற்றுமை இன்றி எல்லார்க்கும் அடையத் தக்க இடமாக இருக்கிறது.* **பரமன் ஆதி எம் பனிமுகில் வண்ணன்** - *அடிதொழும் நான்முகன் முதலானோருடைய பாசுரம்[3] இருந்தவாறு இது. யாவர்க்கும் மேம் பட்டவனாய்த் தனக்கு மேல் ஒருவரும் இல்லாமல் இருக்கும் முழுமுதல்வன். அவன் யாவர்க்கும் மேம்பட்டவனாயினும், பெற்ற தாயால் பிள்ளையை விட ஒண்ணாதாற் போலே உயிர்களை விட முடியாத உரிமையினை உடையவன். உரிமை பற்றி அன்றோ பொருள்களை விரும்புவது! அவனிடம் கீழ்ச்சொன்ன மேன்மையும் உரிமையும் ஆகிய இரண்டும் இல்லையானாலும், விட ஒண்ணாதபடி வருத்தம் அகற்றும் வடிவினன். ஆக, யாவர்க்கும் மேம்பட்டவன், உலகத் தோற்றத்திற்குக் காரணன், காட்சிக்கு இனிய வடிவினன் என்பது விளக்கப் பட்டது.* **என்று எண்ணிநின்று இமையோர்கள் பிரமனோடு சென்று அடி தொழும்**

---

1. கொண்டன்றிறே.
2. அங்குத்தை - அங்கு உள்ள.
3. பாசுரம் - பேச்சு.

தேவர்கள் தங்களுக்குக் கண்காட்டியான ப்ரஹ்மாவோடே சென்று ஆஶ்ரயிக்கும்படி மஹா ப்ரபாவமான பிரிதி சென்று அடை நெஞ்சே! சிறியார் பெரியார் என்று வாசி இன்றிக்கே எல்லார்க்கும் உத்தேஶ்யமான தேசம். சிறியார்க்கு வாசியுண்டு; ஸர்ப்பங்கள் கிடந்த இடத்தே[1] கிடந்து அபிமதம் பெற்று புஜியாநிற்கும்; ப்ரஹ்மாதிகள் தங்கள் அதிகாரார்த்தமாக ஆஶ்ரயித்துத் தட்டித் திரிவர்கள். புறம்பு அடையச் சோலைச்செறிவாலே வந்த இருட்சி மிக்கு இருக்குமாப் போலே உள் அடைய ஆஶ்ரயிக்கிற தேவதைகளுடைய நெருக்கு மிக்கு இருக்கும்; ஆன பின்பு, நீயும் அத்தேசத்தை ஆஶ்ரயிக்கப் பாராய் என்கிறார். இத்தால், அங்கு உண்டான ஸர்ப்பங்கள் அச்சோலையில் பரிமளத்தைக் காற்றுவழியாலே பருகித் தரியாநிற்கும்; ப்ரஹ்மாதிகளானவர்கள், "ஸர்வகந்தஃ" என்கிற வஸ்துவை அநுபவித்துத் தரிப்பர்கள்.

---

**பிரிதி சென்று அடை நெஞ்சே** - இப்படிச் சொல்லிக்கொண்டு, தேவர்கள் தங்களுக்குக் கண்காட்டியான[2] பிரமனோடு சென்று வணங்கிடும் சீர்த்தி மிக்க பிரிதி சென்று அடை நெஞ்சே! சிறியார், பெரியார் என்னும் வேறுபாடு இல்லாமல் எல்லார்க்கும் கருதத்தக்க இடம். சிறியார்க்கு வேறுபாடு உண்டு; பாம்புகளுக்கு இருந்த இடத்திலே விரும்புவது வந்து சேர நுகர்ந்து கொண்டிருக்கும்; நான்முகன் முதலானோர் தங்கள் பதவியைக் காத்துக்கொள்வதன்பொருட்டு அவனை அண்டித் தட்டித் திரிவர்[3]. புறம்பு அடையச்[4] சோலைச் செறிவாலே வந்த இருட்சி மிக்கு இருப்பது போலே, உள் அடைய[5] வணங்கும் கடவுளர்தம் நெருக்கு மிக்கு இருக்கும். இவ்வாறாக இருப்பது என்றால், நீயும் அவ்இடத்தைச் சார்ந்து வணங்கப் பாராய் என்கிறார். இதனால், அங்கு உள்ள பாம்புகள் அச்சோலையில் இருக்கும் மணத்தைக் காற்று வழியாலே பருகி உயிர்தாங்கி இருக்கும்; நான்முகன் முதலானோர், "எல்லா மணங்களையும் உடையவன்" (*சாந். 3 : 14 : 2*) என்னும் இறைவனைத் துய்த்து உயிர் தாங்கியிருப்பர்.

## ஒப்புமைப் பகுதி

1. பரமன்

*" பயில இனிய நம்பாற்கடல் சேர்ந்த பரமனை"*

*" பரமனை – ரூப குணத்தாலும் ஆத்ம குணத்தாலும் குறைவற்றிருக்கையே அன்றிக்கே இவனுக்கு மேற்பட்டார் இல்லை என்னும்படி இருக்கை"*
*தி. வா. மொ. 3:7:1-24*

*" பரமன் - ஸர்வத்தாலும் அதிகன் என்றபடி"* *பாவை 2 பெ. உரை.*

*" பரமா - குணங்களுக்கும் ரக்ஷணத்துக்கும் உன்னை எண்ணினால் பின்னை எண்ணலாவார் இல்லாதபடி ஸர்வாதிகனாய் இருக்குமவனே!"*
*தி. வா. மொ. 2:7:10-36*

---

1. கிடந்தடத்தே.
2. கண்காட்டி - வழிகாட்டி.
3. தட்டித் திரிதல் - இரந்து செல்வது.
4. புறம்பு அடைய - வெளிப்பகுதி எங்கும்.
5. உள் அடைய - உட்பகுதி எங்கும்.

" *பரமாத்மனை - தனக்கு மேல் இன்றிக்கே, தன்னை ஒழிந்தார் அடங்க ஸ்வாதீநமாம்படி இருக்கிறவனை"* திருப்பல். 12 பெ. உரை.

[*ஸ்வாதீநம் - தான் இட்ட வழக்கு*]

2. **ஆதி**

" *ஆதியை - லீலாவிபூதியில் உள்ளார்க்குப் புருஷார்த்தோபயோகியான கரணகளேபரங்களைக் கொடுக்குமவன்"* தி. வா. மொ. 1:7:10-36

[*லீலாவிபூதி - மண்ணுலகு. புருஷார்த்த உபயோகியான - பேறு பெறுவதற்கு உறுப்பான. கரணகளேபரங்கள் - உறுப்புகளும் உடம்பும்.*]

" *ஆதி - ஜகத்காரணபூதன்"* தி. வா. மொ. 8:2:5-36
[*ஜகத்காரணபூதன் - உலகின் தோற்றத்திற்கு முதலாய் இருப்பவன்*]

" *ஆதியான் - ஸர்வகாரணமானவன் என்னுதல், எனக்கு ஸத்தாஹேது வானவன் என்னுதல். ப்ரஜைக்கு ப்ரத்யாஸந்நமாக வர்த்திக்கும் தாயைப் போலே, என் ஸத்தையை நோக்கிக்கொண்டு இருக்கிறவன்"*
தி. வா. மொ. 8:4:2-36

[*ஸத்தாஹேது - உளதாம்தன்மைக்குக் காரணம். ப்ரஜை - குழந்தை. ப்ரத்யாஸந்நம் - அருகில் இருப்பது. வர்த்திக்கும் - வாழும்.*]

3. **பனிமுகில் வண்ணன்**

" *முகில்வண்ணன் - ...விட ஒண்ணாத வடிவு; தன் பேறாகக் கொடுக்குமவன் என்றுமாம்"* தி. வா. மொ. 6:8:1-36

(18)

## 19

**ஓதி ஆயிரம் நாமங்கள் உணர்ந்தவர்க்கு
உறுதுயர் அடையாமல்
ஏதம் இன்றிநின் றருளும்நம் பெருந்தகை
இருந்தநல் இமயத்துத்
தாது மல்கிய பிண்டிவிண் டலர்கின்ற
தழல்புரை எழில்நோக்கிப்
பேதை வண்டுகள் எரிஎன வெருவரு
பிரிதிசென் றடைநெஞ்சே!**

---

**19.** 2 : 6 இமையத்து. 4 : 5 பிருதிசென்.

**ப. ரை:** **நெஞ்சே** - *ஏ, மனமே!* **ஓதி ஆயிரம் நாமங்கள் உணர்ந்தவர்க்கு** - *தன்னுடைய ஆயிரம் திருப்பெயர்களையும். சொல்லி அதனால் அவனை மனத்தில் கொண்டவர்களுக்கு,* **உறுதுயர் அடையாமல்** - *உறக் கூடிய தீவினைகள் தம் பயனை ஊட்டுவதற்கு அவர்களைச் சாராதவாறு,* **ஏதம் இன்றி நின்று அருளும் நம் பெருந்தகை** - *அவர்களுக்கு ஒரு வருத்தமும் வாராதவாறு அருள்புரியும் நம்முடைய தலைவன்,* **இருந்த நல் இமயத்து** - *வந்து தங்கியிருக்கும் சிறப்புப் பொருந்திய பனிமலையில்,* **தாது மல்கிய பிண்டி விண்டு** - *தாதுகள் மிக்கு இருக்கும் அசோக மலர்கள் விரிந்து,* **அலர்கின்ற தழல் புரை எழில் நோக்கி** - *மலர்கின்ற நெருப்புப் போன்ற அழகைப் பார்த்து,* **பேதை வண்டுகள் எரி என வெருவரு பிரிதி** - *அறிவு இல்லாத வண்டுகள் நெருப்பு என்று நினைத்து அஞ்சுகின்ற திருப்பிரிதியை,* **சென்று அடை** - *சென்று கிட்டப் பாராய்.*

**சி. கு:** *உறு துயர் - உறும் துயர்; வினைத் தொகை. மிக்க துயர் எனலும் ஆம். உறு மிகுதிப் பொருள் உணர்த்துவதோர் உரிச்சொல். "உறுதவ நனியென வரூஉம் மூன்றும், மிகுதி செய்யும் பொருள என்ப"* என்பது தொல்காப்பியம் *(உரியியல் 3). இவ்இரண்டில் முன்னதே பொருட் சிறப்புடையது.* **பிண்டி** - *அசோகமரம்.*

---

**வியா :** **ஒன்பதாம் பாட்டு :** **ஓதி ஆயிரம் நாமங்கள் உணர்ந்தவர்க்கு** - ஆயிரம் திருநாமங்களையும் வாயாலே சொல்லி அவற்றினுடைய[1] அர்த்தாநுஸந்தாநம் பண்ணாநின்றுள்ளவர்களுக்கு ஒரு திருநாமத்தைச் சொல்லி, அவ்வளவில் பர்யவஸிக்க மாட்டாதே ஆயிரம் திருநாமங்களையும் அடைவுபடச் சொல்லி, அந்நாமத்வாரா நாமியானவனை மநநம் பண்ணாநின்றுள்ளவர்களுக்கு. **உறுதுயர் அடையாமல்** - உறக்கடவதாயே நிற்கிற பாபங்கள் பலாநுபவத்துக்கு இவனைத் துடராதபடியாக. **"அவஶ்யம் அநுபோக்தவ்யம்"** என்றும் **"நாபுக்தம் க்ஷீயதே"** என்றும் சொல்லுகிறபடியே அநுபவித்தால்அல்லது நசியாத பாபங்கள் பலாநுபவத்துக்கு வந்து கிட்டாதபடியாக. ஒரு பிசாசம் ஶவங்களை பக்ஷியாநிற்க நடுவு வாய் ஒழிந்த அளவிலே, **"நரகாரே ஜகந்நாத நாராயண பராயண"**

**வி :** **ஒன்பதாம் பாட்டு :** **ஓதி ஆயிரம் நாமங்கள் உணர்ந்தவர்க்கு** - *ஆயிரம் திருப்பெயர்களையும் வாயாலே சொல்லி அவற்றின் பொருளைச் சிந்தித்து நின்றவர்களுக்கு. ஒரு திருப்பெயரைச் சொல்லி, அவ் அளவில் நிறுத்தமாட்டாமல் ஆயிரம் திருப்பெயர்களையும் அசைவுபடச் சொல்லி[2], அப்பெயர் வழியாகப் பெயருக்கு உரியவனை இடையறாது நினைத்துக்கொண்டு இருப்பவர்களுக்கு.* **உறுதுயர் அடையாமல்** - *இவன் நுகர்ந்தே கழிக்க வேண்டுவனவாய் நிற்கும் தீவினைகள் தம் பயனை ஊட்டுவதற்கு இவனைத் தொடராதவாறு.* **"கட்டாயம் நுகர்ந்தே கழிக்கப்பட வேண்டும்"** *என்றும்* **"நுகர்ந்தன்றிக் கழியாது"** *(ப்ரஹ்மவைவர்த்தம் ப்ரக்ருதி கண்டம் 26 : 70) என்றும், சொல்வதற்கு ஏற்பத் துய்த்தால் அன்றித் தொலையாத தீவினைகள் தம் பயனைத் தருவதற்கு வந்து கிட்டாதவாறு. ஒரு பிணந்தின்னி, பிணங்களைத் தின்றுகொண்டிருக்கும்போது நடுவே வாய் ஒழிந்த அளவிலே[3]* **"நிரயத்துப் பகைவனே! உலகிற்குத் தலைவனே! நாராயணனே!**

---

1. அவைத்தினுடைய.
2. அடைவுபடச் சொல்லல் - முறையாகக் கூறுதல். 3. வாய் ஒழிந்த அளவு - உண்ணாது இருந்த நேரம்.

எனறு சொல்ல, "ஆத்மாநம் வாஸுதேவாக்யம் சிந்தயந்" என்று ஸ்வாநுபவம் பண்ணி அந்யபரதை அற்று இருக்கிற அளவிலே, இத்தைக் கேட்டு, "கஸ்ய முக்திः கரேஸ்திதா" என்று நம் பேரைச் சொல்லி நம்மை எழுதிக்கொண்டவன் ஆர்தான்? என்றானிறே. ஏதம் என்று துஃக்கமாய் வருத்தத்தை நினைக்கிறது. இத்திருநாமத்தைச் சொன்னால் இத்தை உடையவன் செவிப்படும்படி அணியனாய்[1] நிற்கை ஆஶ்ரயிப்பார்க்கு வருத்தம் இன்றிக்கே ஒழிகைக்கு உடலாய் இருக்குமிறே; இவர்களுக்கு வருத்தம் இல்லாதபடி இருக்கும். உறுதுயர் இத்யாதி -

" வாக்குத் தூய்மை இலாமையி னாலே
மாத வா! உன்னை வாய்க்கொள்ள மாட்டேன்"

என்று அசித் ஸம்ஸர்க்கத்தை அநுஸந்தித்து, "நாம் அங்குத்தைக்கு யோக்யராய்ப் பரிமாறுகையாவது என்?" என்று தன் அயோக்யதையை அநுஸந்திக்கைக்கு அவகாஶம் இல்லாதபடி ஆஶ்ரயணீயனான தான் ஸந்நிஹிதனாகையாலே ஆஶ்ரயிப்பார்க்கு ஒரு வருத்தமும் வாராதபடி இருக்கிற மஹா ப்ரபாவன் வந்து வர்த்திக்கிற விலக்ஷணமான ஹிமவானில்.

---

எல்லாவற்றிற்கும் முடிவான இடமாக இருப்பவனே!" என்று சொல்லிற்று. "வாசுதேவன் என்னும் தன் இயல்பை நினைத்துக்கொண்டு" *(வி. பு. 6 : 4 : 6)* பராக்கடிக்கை[2] அற்று இருந்த பெருமான் இதனைக் கேட்டான்; கேட்டு, "வீடுபேறு யார் கையில் உள்ளது என்று தெரிந்து இப்படி நம் பெயர் சொல்லி நம்மைத் தனக்கு உரியவனாக்கிக் கொண்டது யார்?" என்று வியந்தான். இப்படித் திருநாமம் சொன்னதனால் பிணந்தின்னி உறுதற்கு உரிய துயர் அதனை அடையாமல் போயிற்று. ஏதம் இன்றி நின்று அருளும் நம் பெருந்தகை - ஏதம் - துன்பம்; ஈண்டு வருத்தத்தைக் குறிக்கிறது. இத்திருப்பெயரைச் சொன்னால் இதனைப் பெயராக உடையவன் செவிமடுக்கும்வண்ணம் அணியனாய் நிற்பான்; அவ்வாறு நிற்பது, வணங்குவார்க்கு வருத்தம் இன்றி ஒழிதற்கு உடலாய் அமையும். இவர்களுக்கு வருத்தம் இல்லாதபடி இருக்கும். உறுதுயர் அடையாமல் ஏதம் இன்றி நின்று அருளும் நம் பெருந்தகை இருந்த நல் இமயத்துள் -

" வாக்குத் தூய்மை இலாமையி னாலே
மாத வா! உன்னை வாய்க்கொள்ள மாட்டேன்" *(பெரி. தி. 5 : 1 : 1)*

என்று ஒருவன் அறிவற்ற பொருளோடு தனக்கு உள்ள தொடர்பினைச் சிந்தித்து, "நாம் அவ்இடத்துக்குத் தகுதி உடையவராய்ப் பரிமாறுவது ஒல்லுமோ?" என்று தன் தகுதியின்மையைக் கருதுவதற்கு இடமின்றிப் பற்றப்படுபவனாகிய தான் அணியனாய் வந்து நிற்கிறான். ஆகையினால், வணங்குவார்க்கு ஒரு வருத்தமும் வாராமல் போகிறது. இத்தகு சீர்மையுடையவன் வந்து தங்கியிருக்கும் சிறப்புப் பொருந்திய பனிமலையில்.

---

1. அண்ணியனாய்.
2. பராக்கடிக்கை - கருத்தின்றி இருத்தல்.

**தாது இத்யாதி** - தாது மிக்கு இருந்துள்ள அசோக புஷ்பமானது விட்டு அலருகிற போதை அக்நிகல்பமான எழிலைப் பார்த்து. **பேதை வண்டுகள்** - அசோக புஷ்பங்களை நித்யாநுபவம் பண்ணாநிற்கச்செய்தேயும் நித்யமாக ப்ரமிக்க வல்ல மௌக்த்யத்தையுடைய வண்டுகள் ஆயிற்று. தானும் நித்யவாஸம் பண்ணா நிற்கச்செய்தே, அதுவும் நாள்தோறும் அலராநிற்கச்செய்தே, எப்போதும் ஒக்க, "இது நெருப்பு, நெருப்பு" என்று ப்ரமிக்கும்படியாய் இருக்கும். முன்னாள், "இது அக்நி" என்று ஶங்கித்து விசாரித்து, 'அன்று' என்று நிர்ணயித்துப் பிற்றை நாள், "அதன்று" என்று இருக்க மாட்டாதே, 'நெருப்பு' என்று அஞ்சி இராநிற்கும்; அதுக்கு அடி பய நிவ்ருத்தியும் நித்யமாய், பயமும் நித்யமாய் இருக்கையாலே.

இதுக்கு த்ருஷ்டாந்தமாகத் திருவெள்ளறைத் திருமொழியிலே ஒரு பாட்டு அருளிச்செய்வர். **ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று** - மஹாபலியினுடைய யஜ்ஞ வாடத்திலே தன்னை அர்த்தி ஆக்கிச் சென்று. **அகல் இத்யாதி** - பூமிப்பரப்பு அடைய வாங்குகிற

---

**தாது மல்கிய பிண்டி விண்டு அலர்கின்ற தழல் புரை எழில் நோக்கி** - *தாது மிகுதியாக உள்ள அசோகமலர் கட்டுவிட்டு அலரும்போது தீப்போலத் திகழும்; அத்தீப் போலும் எழிலைப் பார்த்து.* **பேதை வண்டுகள்** - *அசோக மலர்களோடு நாள்தோறும் பழகிய போதிலும், எந்நாளும் மயங்கும் அறியாமையையுடைய வண்டுகள். தானும் அங்கே நிலையாக உறைய, அப்பூவும் நாள்தோறும் மலர்ந்து கொண்டிருக்க, எப்போதும் ஒக்க, "இது நெருப்பு, இது நெருப்பு" என்று வண்டுகள் மயங்குமாறு இருக்கும். முன்னாள், "இது நெருப்பு" என்று ஐயங்கொண்டு ஆராய்ந்து, 'அன்று' என்று அறுதியிட்டுப் பிற்றை நாள், "அது நெருப்பு அன்று" என்று இருக்க முடியாமல், 'நெருப்பு' என்று அஞ்சிநிற்கும்; அதற்குக் காரணம் அச்சம் அகலுவதும் நிலையாய், அச்சம் அடைவதும் நிலையாய் இருத்தலே.*

*இதற்குச் சான்றாகத் திருவெள்ளறைத் திருமொழியிலே ஒரு பாட்டினை அருளிச்செய்வர்:*

" ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று
அகல்இடம் முழுதினையும்
பாங்கி னாற்கொண்ட பரமநிற் பணிந்தெழு
வேன்எனக் கருள்புரியே
ஓங்கு பிண்டியின் செம்மலர் ஏறிவண்டு
உழிதர மாஏறித்
தீங்கு யில்மிழற் றும்படப் பைத்திரு
வெள்ளறை நின்றானே" *(பெ. தி. 5: 3 :9)*

**ஆங்கு மாவலி வேள்வியில் சென்று இரந்து** - *மாவலியின் வேள்விச் சாலையில் தன்னை இரவலனாக்கிச் சென்று.* **அகல் இடம் முழுதினையும் பாங்கினால் கொண்ட பரம!** - *மாவலியிடம் இருந்து புவிப்பரப்பு முற்றும்*

அன்று. அவனை எதிரிட்டுக்கொண்டு வாங்குகை அன்றிக்கே அவன் ஏறிட்டுக்[1] கொண்டிருக்கிற ஔதார்யத்துக்கு அநுரூபமாக வாங்கினான்; ராவணாதிகளைப் போலே தலை அறுக்க வேண்டிற்றில்லை ஔதார்யம் என்று ஒரு குணலேசம் கிடக்கையாலே; "இவன் கொடுக்க[2] உகந்திருந்தான்" என்று தன்னை இரப்பாளனாக்கி அவனோடு இசையக் கொண்டான்; தன்னதான பூமியையிறே அவன் தந்தானாகக் கொண்டது. ஆக, நம்முடைய ஆத்ம ஸமர்ப்பணம் போலே இருப்பது ஒன்றிறே அவனுடைய தானமும். "அதவா கிந்நு ஸமர்ப்பயாமி" அநந்தரம் அநுசயிக்க வேண்டும்படியிறே இதுதான் இருப்பது. விமுக்காட்டில் ஆத்ம ஸமர்ப்பணத்தோடு ஆத்மாபஹாரத்தோடு வாசியற்றிறே இருப்பது. ஆகையிறே உபாய நைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. **பரம நிற்பணிந்து எழுவேன் எனக்கு அருள் புரியே** - ஸர்வாதிகனே! உன்னை வணங்கி உஜ்ஜீவிக்கிற எனக்கு ப்ரஸாதத்தைப் பண்ணியருள வேணும். ஆஃ்ரயணத்துக்கு

---

வாங்கும் அந்நாளில் அவனை எதிரிட்டுக் கொண்டு[3] வாங்கினான் அல்லன்; அவன் ஏறிட்டுக் கொண்டிருக்கும் கொடைத்தன்மைக்கு ஏற்ற வாறு வாங்கினான்; அவன்பால் ஈகைத்தன்மை சிறிது இருத்தலின் இராவணன் முதலானோரைச் செய்தது போலத் தலையை அறுக்க வேண்டுவது இல்லை. "இவன் கொடுப்பதற்கு உகந்திருந்தான்" என்று தன்னை இரவலனாக்கி அவனோடு இசைந்து கொண்டான்; தனதாகிய உலகை அன்றோ மாவலி தந்தான் என்று சொல்லுமாறு கொண்டது. ஆக, அவனது கொடையும் நாம் உயிரை அவனுக்குப் படைப்பது போலே இருப்பது ஒன்றே; ஏனெனில், ஆழ்ந்து பார்த்தால் இவ்உயிர் அவனுடையது என்பது விளங்கும். "தலைவனே! மலர்மகளுக்குக் கணவனே! எனக்கு யாதொன்று சொந்தமாய் இருக்கிறதோ அஃது உன்னுடையது. யானும் உனக்கே எப்பொழுதும் சொந்தமானவன். இதனைத் தெரிந்து கொண்ட அறிவினை உடைய அடியேன் எதைத்தான் உனக்குப் படையலாக்க ஒல்லும்?" என்பது தோத்திர ரத்தினம் (53). நினைந்து பார்த்தால், பின்பு கழிவிரக்கம் கொள்ள வேண்டுமாறு அன்றோ இதுதான் இருப்பது. விளைவைக் கருதினால், உயிரை இறைவனுக்குப் படைத்தற்கும் அதனைக் களவாடுவதற்கும் இடையே வேற்றுமை இல்லை.[4] இவ்வாறு இறைவனுக்கு உயிரைக் கொடுத்தலும் களவினை நிகர்க்கும். ஆதலின், அது வீடு பேற்றுக்குக் கருவி ஆகாது. அது கருவி ஆகாமையினாலே இறைவன் அடியாரிடம் எதனையும் விழையாத இயல்பினன் என்பது பெறப்படும்.

**பரம! நிற்பணிந்து எழுவேன் எனக்கு அருள் புரியே** - யாவர்க்கும் மேம்பட்டவனே! உன்னை வணங்கிப் பிழைத்துக்கொண்டிருக்கும் எனக்குத் திருவருள் புரிய வேண்டும். வணங்கினால் திருவருள் புரிய வேண்டுமோ எனின், கும்பிட்டதற்குப் பயன் தப்பாது அன்றோ! ஓங்கு

---

1. ஏறட்டுக். 2. குடுக்க.

3. எதிரிட்டுக்கொண்டு - பகைத்துக்கொண்டு. 4. இறைவன் உடைமையாகிய உயிரை நாம் அவனுக்குப் படைக்கும்போது அது நம்முடையதாக நம்மால் கருதப்படுதலின் அச்செயல் இறைவனுக்குரிய உயிரை நமக்குரியதாகக் கருதும் உயிர்க்களவோடு வேறுபாடு இல்லாததாக அமைகிறது.

பல வ்யாப்தி உண்டிறே. **ஓங்கு இத்யாதி** - ஆகாசம் இடம் அறும்படி வளர்ந்து பரப்பு மாறப் பூத்த அசோகத்தினுடைய சிவந்த பூக்களிலே மதுபா நார்த்தமாக வண்டுகள் ஸஞ்சரிக்க, தர்சநீயமான குயில்களானவை, "இவை நெருப்பிலே புக்கன" என்றே நிச்சயித்து, அது தன்னைத்தட்டாத படி மாவிலே போய் ஏறிக் கூப்பிடாநிற்கும் ஆயிற்று. சிவந்த பூப் பூவாத மரம் தேடி[1] ஏறிநின்று. **மிழற்றும்** - எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி கூப்பிடாநிற்கும். இவற்றினுடைய[2]தயநீய தசையைக் கண்டு இன்னது என்று பாசுரமிட்டுச் சொல்ல மாட்டாதே கடக்க நின்று, "தர்ம ஹாநி கிடிகோள்!" என்பாரைப் போல அவ்யக்தமாகக் கூப்பிடாநிற்கும். **படப்பை** - இதாயிற்று ஊரில்[3] கொடித் தோட்டங்கள் இருக்கும்படி.

இத்தால், அவனுடைய ஸர்வாதிகத்வத்தையும், அவனை அநுபவிப்பதாகச் சொல்லுகிற தங்களுடைய ஸம்ஸாரித்வத்தையும் அநுஸந்தித்து, "நாம் சென்று கிட்டுகை ஆவது என்!" என்று துணுக்குத் துணுக்கு என்னாநிற்பர்கள் ப்ரஹ்மாதிகள்; இவ்வண்டுகளானவை புஷ்ப ஸாமாந்யத்தைக் கொண்டு மதுபாநார்த்தமாக மேல்விழாநிற்பது, அக்நி என்று கிட்ட மாட்டாதே இறாய்த்து வெருவுவது ஆகாநிற்கும் ஆயிற்று. அன்றிக்கே, ஆஶ்ரயிப்பார்க்கு, **"அதஸோபயங்கதோ பவதி"** என்னும் இதுவும் உண்டாய், போக்யதையால் வந்த பயம் என்றும் உண்டாய் இருக்-

---

**பிண்டியின் செம்மலர் ஏறி** - வானத்தில் சிறிதும் இடம் இல்லாதவாறு வளர்ந்து, பரப்பு மாறப் பூத்த அசோக மரத்தின் சிவந்த பூக்களிலே மது உண்பதற்காக வண்டுகள் சுற்றிக்கொண்டிருந்தன; காட்சிக்கு இனிய குயில்கள், "இவை நெருப்பிலே புக்கன" என்றே அறுதியிட்டன. அந் நெருப்புத் தம்மைத் தட்டாதவாறு மாமரத்திலே போய் ஏறிக் கூவிக் கொண்டிருந்தன. சிவந்த பூப் பூவாத மரம் தேடி ஏறிநின்று. **மிழற்றும்** - எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதவண்ணம் கூப்பிட்டு நிற்கும். இவற்றின் இரக்கத்திற்கு உரிய நிலையைக் கண்டு இன்னது என்று பாசுர மிட்டுச்[4] சொல்ல முடியாமல் ஒதுங்கி நின்று, "அறம் அழிந்தது காணீர்" என்பாரைப் போலே தெளிவு இல்லாமல் கூப்பிட்டுநிற்கும். **படப்பை** - இஃதன்றோ ஊரில் கொடித்தோட்டங்கள் இருக்கும் நிலை.

இதனால், அவனது யாவர்க்கும் மேம்பட்ட தன்மையையும், அவனைத் துய்ப்பதாகச் சொல்லிக்கொள்ளும் தங்களது வாழ்க்கைத்தன்மையையும் சிந்தித்து, "நாம் அவனைச் சென்று அடைவது என்பது இயலுமோ! என்று துணுக்கு துணுக்கு என்று[5] நிற்பர்கள், பிரமன் முதலான தேவர்கள். இவ்வண்டுகள் மலர் என்று கருதி மது உண்பதற்காக மேல்விழுவது, நெருப்பு என்று கிட்ட மாட்டாதே இறாய்த்து[6] வெருவுவதுமாய் நிற்கும். அவ்வாறு அல்லாமல் பெருமானைச் சார்ந்தவர்க்கு, **"அதற்குப் பின் (இறைவனை இடையறாது நினைக்கத் தலைப்பட்ட பின்) அவன் அச்சமற்றவன் ஆகிறான்"** (தைத். ஆந. 6) என்று சொல்லப்பெறும் இந்நிலை உண்டாய், இவ்இன்ப நிலைக்கு என்ன இடையூறு வருமோ என்னும்

---

1. மாத்தேடி. 2. இவைத்தினுடைய. 3. உள்ளில்.
4. பாசுரமிடல் - சொற்களில் அமைத்தல். 5. துணுக்கு துணுக்கு எனல் - அஞ்சுதல்.
6. இறாய்த்தல் - பின் வாங்குதல்.

கும் என்னுதல். ஆஶ்ரயணீய வஸ்து ஸுலபமாகையாலே ஆஶ்ரயிப்பார்க்குத் தந்தாமுடைய அநுபவ விநாஶ்யமான பாபங்களை அநுஸந்தித்து பயப்படவும் வேண்டா; அசோக புஷ்பத்தை அக்நியாகக் கொண்டு வண்டுகள் அஞ்சுகிற அச்சம் நித்யமாய்ச் செல்லாநிற்கும்.

---

*எண்ணத்தால் வந்த அச்சமும் என்றும் உளதாய் இருக்கும் என்றும் சொல்லலாம். அஃதாவது, பற்றப்படும் இறைவன் எளிதில் அடையப்படுபவனாக இருத்தலினாலே பற்றுவார்க்குத் தங்களுடைய நுகர்ந்தே கழித்தற்கு உரிய தீவினைகளை எண்ணி அஞ்சவும் வேண்டா. அவர்கள் தீவினை குறித்து அஞ்ச வேண்டாமையினால் அச்சம் அற்றவர்கள் ஆகின்றனர். ஆனால், இறை இன்பத்தின் தன்மையை நோக்கும்பொழுது அதற்கு என் வருமோ என்று அஞ்சுகின்றனர். அதனால், அச்சம் உடையவர் ஆகின்றனர். இவ்வாறு ஒருவகையில் அச்சம் அற்றவராகவும், பிறிதொரு வகையில் அச்சம் உற்றவராகவும் உள்ளனர். ஆனால், அங்கு அசோக மலர்களை நெருப்பாகக் கருதிக்கொண்டு வண்டுகள் அஞ்சும் அச்சம் மட்டும் என்றும் மாறாமல் சென்றுகொண்டிருக்கும். (19)*

## 20

கரிய மாமுகில் படலங்கள் கிடந்தவை
முழங்கிடக் களிறென்று
பெரிய மாசுணம் வரைஎனப் பெயர்தரு
பிரிதிஎம் பெருமானை
வரிகொள் வண்டறை பைம்பொழில் மங்கையர்
கலியன தொலிமாலை
அரிய இன்னிசை பாடுநல் அடியவர்க்கு
அருவினை அடையாவே.

**ப. ரை :** கரிய மாமுகில் படலங்கள் அவை - *கறுத்த பெரிய மேகங்களின் திரள்களானவை,* கிடந்து முழங்கிட - *நீர்ப்பாரத்தாலே கிடந்த இடத்தே கிடந்து முழங்கிட,* பெரிய மாசுணம் - *பெருத்த மலைப் பாம்புகள்,* **களிறு என்று** - *தங்களுக்கு இரையான யானைகள் வருகின்றன என்று கருதி,* **வரை எனப் பெயர்தரு பிரிதி எம் பெருமானை** - *மலைபோலே அசைந்து வரும் திருப்பிரிதியில் தங்கி இருக்கும் இறைவனைக் குறித்து,* **வரிகொள் வண்டு அறை பைம் பொழில்** - *வரியையுடைய வண்டுகளானவை முரலும் பரந்த சோலையைக் கொண்ட,* **மங்கையர் கலியனது ஒலிமாலை** - *திருமங்கையில் உள்ளார்க்குத் தலைவர் ஆகிய ஆழ்வாரது ஒலி பொருந்திய இப்பத்துப் பாக்களாகிய மாலையினுடைய,* **அரிய இன் இசை** - *அருமையான இனிய இசையை,* **பாடும் நல் அடியவர்க்கு** - *பாட வல்ல சிறந்த தொண்டர்களை,* **அருவினை அடையா** - *அரிய தீவினைகள் வந்து கிட்டமாட்டா.*

**சி. கு :** *அடியவர்க்கு - உருபுமயக்கம்; நான்காம் வேற்றுமை இரண்டாம் வேற்றுமைப் பொருளில் வந்தது.*

---

**20.** 2 : 5 பிருதிஎம்.

வியா : **பத்தாம் பாட்டு : கரிய இத்யாதி** - கழுத்தே கட்டளையாக நீரைப் பருகுகையாலே கறுத்த நிறத்தை உடைத்தான மஹாமேகங்களுடைய ஸமூகங்களானவை, முகந்த நீர்க்கநத்தாலே பேர்ந்து போக மாட்டாதே கிடந்த இடத்தே[1] கிடந்து முழங்க. நீர் குறையும்படி வர்ஷித்து வெளுத்ததுவும் அன்றிக்கே கறுத்து, அதுதான் மேகசகலமுமாய் இருக்கை அன்றிக்கே மாமுகிலாய், அவைதான் ஒன்று இரண்டு அன்றிக்கே ஸமூகங்களுமானவை, முகந்த நீர்க்கநத்தாலே கால் வாங்கிப் போக மாட்டாதே வாயுவாலும் பிரேரிக்க ஒண்ணாதபடி கநத்து அவை கிடந்த இடத்தே[2] கிடந்து, கர்ப்பகேதத்தாலே முக்குவாரைப் போலே முழங்கும் ஆயிற்று. **களிறு என்று** - நிறத்தினுடையவும் அதிருகிற த்வநியினுடையவும் ஸர்வதா ஸாம்யத்தாலே யானை[3] என்று. **பெரிய மாசுணம்** - பெரிய வடிவை உடைத்தாய் இருக்கிற மலைப்பாம்புகளானவை ஆனையை விழுங்கும்படிஆயிற்று பெருமை இருப்பது. **வரை எனப் பெயர்தரு** - அம்மலைப் பாம்புகளானவை அவற்றுக்கு[4] அஞ்சி மலை போலே பேர்ந்து போய்ப் புற்றிலே புகாநிற்கும் என்று, "**காருடைய மின் என்று புற்று அடையும்**'' என்றும் ''பரந்த தலையுடைய நாகம் வாரணத்தை அஞ்சி ஒளிக்கும்'' என்கிற ப்ரஸித்தியாலும், இப்படி, ''புற்றிலே அடையும்'' என்று அருளிச்செய்வர் ஜீயர். "இதுவோ இதுக்கு அருளிச்செய்யும் படி?'' என்று பிள்ளை கேட்டருள, ''நீர் இப்படி கேட்கும்போது ஒன்றை நினைத்

---

வி : பத்தாம் பாட்டு : கரிய மாமுகில் படலங்கள் கிடந்தவை முழங்கிட - *மேகங்கள் கழுத்தே கட்டளையாக*[5] *நீரைப் பருகின; அதனாலே, கறுத்த நிறத்தைப் பெற்றன; அக்கருமேகங்களின் திரள்கள் முகந்த நீரின் பாரத்தாலே பெயர்ந்து செல்ல முடியாதன ஆயின. ஆதலின், கிடந்த இடத்தே கிடந்து முழங்கின. அவை நீர் குறையுமாறு பொழிந்து வெளுத்துப் போகாமல் கறுத்தும், சிறிய மேகப் பிசிராக இல்லாமல் மாமுகிலாகவும், ஒன்று இரண்டாக அன்றித் திரள்களாகவும் இருந்தன. முகந்த நீர்ப்பாரத்தாலே கால்வாங்கிப்*[6] *போக மாட்டாமல் காற்றாலும் நகர்த்த முடியாமல் கனத்து, கிடந்த இடத்திலே கிடந்து, கருவின் சுமை தாங்க ஒண்ணாமல் முக்குகின்ற சூல் உற்ற பெண்டிரைப் போலே முழங்கின.* **களிறு என்று** - *முகிலின் நிறமும் முழக்கமும் யானையின் நிறத்தோடும் முழக்கத்தோடும் முற்றும் ஒத்திருப்பதனாலே யானைகள் என்று கருதி.* **பெரிய மாசுணம்** - *பெரிய வடிவினை உடையனவாய் இருக்கும் மலைப்பாம்புகள். ஆனையை விழுங்கு மாறு அன்றோ அவற்றின் பெருமை இருப்பது!* **வரை எனப் பெயர்தரு** - *அம்மலைப் பாம்புகளானவை மேகக் கூட்டங்களுக்கு அஞ்சி மலை போலே பெயர்ந்து போய்ப் புற்றிலே புகுந்திடும்.*

> "காருடைய,
> மின் என்று புற்றடையும்'' (மு. தி. *38*) என்றும்,

*"பரந்த தலையுடைய நாகம் வாரணத்தை அஞ்சி ஒளிக்கும்''* என்றும் பேசப்படுவதால் அதுகொண்டு, *"புற்றிலே அடையும்''* என்று நஞ்சீயர் உரை கூறினார். நஞ்சீயர் இப்படி உரை சொன்ன பொழுது, "இப்பொருளோ இதற்குச் சொல்வது?'' என்றார் நம்பிள்ளை. அது கேட்ட சீயர் அவரை நோக்கி, ''நீர் இப்படிக் கேட்கும் போது நும் மனத்தில் வேறு ஒரு கருத்தைக் கொண்டிருக்கிறீர்

---

1, 2. கிடந்தடத்தே. 3. ஆனை. 4. அவைத்துக்கு.
5. கட்டளை - எல்லை. 6. கால் வாங்குதல் - பெயர்தல்.

தல்லது கேளீர், அத்தைச் சொல்லும்''[1], என்ன, "பெயருகை ஆகிறதுதான் போக்கு வரத்து இரண்டுக்கும் ஸாதாரணமாய் ஆயிற்று இருப்பது; இனித்தான் மலைக்குச் சிறப்புச் சொல்லுமவர்கள், ''மலைப் பாம்புகள் ஆனையை விழுங்கும்'' என்னக் கடவர்கள்; ஆகையாலே, கரிய மாமுகில் படலங்கள் கிடந்து முழங்குகிறவற்றைப் பெரிய மாசுணமானது ஆனையாகப் புத்திபண்ணி ஆமிஷார்த்தமாக மலை பேர்ந்தாப் போலே கால்வாங்கி வந்து கிட்டாநிற்கும் ஆயிற்று என்றாமே'' என்ன, ''அதுவேயிறே பொருள்'' என்று போரக் கொண்டாடியருளினார் என்று அருளிச் செய்வர். ஆகையிறே, பெரிய மாசுணம் என்றது. ஆனையை விழுங்கும்படி ஆயிற்று இதினுடைய பெருமை இருப்பது.

**வரிகொள் இத்யாதி** - வரியை உடைத்தாய் தர்சநீயமாய் இருந்துள்ள வண்டுகளானவை மதுபானம் பண்ணிக் களித்து த்வநியாநின்றுள்ள பரந்த பொழிலை உடைத்தான திருமங்கையில் உள்ளார்க்கு நியாமகரான ஆழ்வார் ஒலியுடைத்தாம் படி சொன்ன தொடை ஆயிற்று. **அரிய இன்னிசை** - ''திருமங்கையாழ்வார் தம் திருவாயாலே அரிய இன்னிசை என்பதே!'' என்று அருளிச்செய்வர். ஆழ்வார் திருவரங்கப்பெருமாள்அரையர் சிலரோடே பிணங்கி, கையில் தாளத்தைப் பொகட்டு, '''வாலிமாவலத்'தை என்னோடே இசைசொல்லிப் போ'' என்றாராம். வாது பாட்டாகப் பாடுமது என்று ப்ரஸித்தமிறே. இயலிலும் இழியலாம்; பொருளிலும்

---

*என்பது தெரிகிறது; இல்லையென்றால் நீர் கேட்க மாட்டீர்; நும் கருத்து யாது? சொல்லும்'' என்றார். உடனே நம்பிள்ளை, ''பெயர்தல் என்னும் சொல் போவது வருவது என்னும் இரு செயல்களையும் சுட்டும் வகையில் பொதுவாக உள்ளது. இனி, மலைக்குச் சிறப்புச் சொல்வோர், ''மலைப் பாம்புகள் யானையை விழுங்கும்'' என்று கூறுவர். ஆகையாலே, அங்கே கிடந்து முழங்கும் கரிய மாமுகில் படலங்களைப் பெரிய மாசுணமானது யானையாகக் கருதி உண்ப தற்காக மலைபேர்ந்தாற் போலே நகர்ந்து வந்து கிட்டும் என்று சொல்லலாம் அன்றோ?'' என்றார். அதனைக் கேட்ட நஞ்சீயர், "அதுவே பொருள்" என்று கூறிப் பெரிதும் கொண்டாடினார்[2]. என்பர். இக்காரணத்தினாலேயே பெரிய மாசுணம் என்று அடை கொடுத்துச் சொல்லப்பட்டுள்ளது. யானையை விழுங்கு மாறு அன்றோ இதன் பெருமை இருக்கிறது!*

**வரிகொள் வண்டு அறை பைம்பொழில் மங்கையர் கலியனது ஒலி மாலை** - *வண்டுகள் வரியை உடையனவாய், காட்சிக்கு இனியனவாய் உள்ளன. அவ் வண்டுகள் மலர்களிலே தேன் உண்டு களித்து முரலும் பரந்த பொழிலை உடையது திருமங்கை. அங்குள்ளார்க்கு மன்னராய்த் திகழ்பவர் ஆழ்வார். அவரது ஒலியை உடைத்தாம்படி சொன்ன தொடை.* **அரிய இன்னிசை** - *"திருமங்கையாழ்வார் தம் திருவாயாலே அரிய இன்னிசை என்று கூறியது அன்றோ இத்திருமொழி!" என்று வியந்து கூறுவர். இத்திருமொழியின் இசைச் சிறப்புப் பிறிதொரு நிகழ்ச்சியாலும் புலனாம். ஆழ்வார் திருவரங்கப்பெருமாள் அரையருக்கும் வேறு சிலர்க்கும் இடையே கருத்து வேற்றுமை உண்டாயிற்று. அதுபோது, திருவரங்கப்பெருமாள்அரையர் அவர்களோடு பிணங்கித் தம் கையில் இருந்த தாளத்தைத் தட்டியவாறு, '''வாலி மாவலத்து' என்னும் திருமொழியை என்னோடு பாட முடியுமானால் பாடுங்கள் பார்க்கலாம்'' என்று*

---

1. அருளிச்செய்யும். 2. கொண்டாடுதல் - பாராட்டுதல்.

இழியலாம்; இசையில் ஒருவர்க்கும் இழிய ஒண்ணாது. அருமையால் நினைக்கிறது பெருமையை; இனிமையால் நினைக்கிறது சுவைப்பாட்டை. **அரிய** - அருமை பெருமைகளையும் சுவைப்பாட்டையும் உடைத்தாய் இருக்கை. **நல் அடியவர்க்கு** - இத்தைப் பாடுமவர்கள்ஆயிற்று, ஸர்வேஶ்வரனுக்கு அந்தரங்கர் ஆகிறார். **அருவினை** - அவர்களைப் பாபங்கள் வந்து கிட்டாது. ஸர்ப்பங்களானவை மேகங்களை ஆமிஷமாக புத்தி பண்ணி மேல்விழுமாப் போலே, இத்தை அப்யஸித்தவர்கள்பக்கலிலே ஸர்வேஶ்வரன் போக்யதா புத்தி பண்ணி அவர்களுடைய விரோதிகளைப் போக்கி விஷயீகரிக்க, அவனாலே விஷயீக்ருதராகப் பெறுவர்கள். இப்பாசுரத்தைச் சொன்னவர்களை அச்சொல்வழியே ஸர்வேஶ்வரன் அவர்களையே எல்லா போக்யமுமாக வந்து கிட்டும்; நடுவு பாபங்களுக்கு ஒதுங்க நிழல் இல்லாமையால் ஓடிப் போம்.

---

*சூள் உரைத்தாராம். இஃது இசைப் போட்டி நிகழுங்கால் பாடுவதற்கு முன் வைக்கப்படும் திருமொழி. அஃதாவது பலராலும் இசையூட்டிப் பாடுவதற்கு அரிய திருமொழி என்பது பலரும் அறிந்த உண்மை. ஒருவர் இத்திருமொழியின் சொற்சிறப்பினைக் காணலாம்; பொருட்சிறப்பினை அறியலாம்; ஆனால் இசைச் சிறப்பினை இழிந்து அறிய இயலாது.* **அரிய இன்னிசை** *- அருமையால் பெருமை சுட்டப்படுகிறது; இனிமையால் சுவைப்பாடு குறிக்கப்படுகிறது.* **அரிய** *- அருமை பெருமைகளையும் சுவைப்பாட்டையும் கொண்டிருத்தல்.* **பாடும் நல் அடியவர்க்கு** *- இதனைப் பாடுவோர் பெருமானுக்கு உற்றவர் ஆவர்.* **அருவினை அடையாவே** *- அவர்களைத் தீவினைகள் வந்து அண்டா. பாம்புகள் மேகங்களை இரையாகக் கருதி மேல்விழுவது போல இதனைப் பயில்வோர்பக்கலிலே முழுமுதல்வன் இன்பம் துய்க்கக் கருதுவான்; அதன்பொருட்டுப் பகையினை நீக்கி ஆட்கொள்வான்; அவர்கள் அவனாலே ஆட்கொள்ளப்பட்டவராகப் பெறுவர். முழுமுதல்வன் இப்பாசுரத்தைச் சொன்னவர்களை இன்பப் பொருளாகவும் கருதி அவர்கள் கூறும் பாசுரச் சொல் வழியே வந்து கிட்டுவான்; நடுவில் தீவினைகளுக்கு ஒதுங்க நிழல் இல்லாமையாலே ஓடிப் போகும்.*

## ஒப்புமைப் பகுதி

1. **யானையும் அரவும்**

*" மழைப்பேர்,*
*அருவி மணிவரன்றி வந்திழிய யானை*
*வெருவி அரவொடுங்கும் வெற்பு"*

*" மழையிலே பெரிய அருவிகள் ரத்நங்களைக் கொண்டுவந்து இழிய, ரத்நதீப்தியை ஆனை அக்னி என்றும், ஸர்ப்பம் மின் என்றும் பயப்பட்டு ஒதுங்கும் திருமலை. அன்றிக்கே, நெருப்புக்கு பயப்பட்டு ஆனை மலைப் பாம்பின் வாயிலே புக்கு ஒடுங்கும் என்றும் ஆம்"*
*[ரத்நதீப்தி - மணியின் ஒளி]* நான். தி. 39 பெ. உரை.

2. **கலியன்**

*" கலி - மிடுக்கு. அங்ஙனன்றியே, கலி காலத்தைக் கடிந்தவர் என்னுதல்"*
*தி. நெ. தா. 30 பெ. உரை.*

## முதற் பத்து - மூன்றாம் திருமொழி முற்ற மூத்து

பிர : தம் திருவுள்ளத்தைக் குறித்து, ''திருப்பிரிதியை ஆஶ்ரயி'' என்று உபதேசித்தார்; அது தம் த்வரைக்கு ஈடாக த்வரித்தது இல்லை; கெடுவாய்! நாம் இருக்கிற இருப்பில் பொல்லாங்கு கண்டாயே, கடுக ஒரு க்ஷணம் முற்பட்டது உடலாக ஆஶ்ரயிக்கப் பாராய் என்கிறார்.

கீழே திருமந்த்ரத்தை அநுஸந்தித்தார்; அநந்தரம் மந்த்ர ப்ரதிபாத்யமான அர்த்தத்தை அநுஸந்தித்தார்; மந்த்ரத்ரஷ்டாவானவன் இருந்த தேசத்தை ஆஶ்ரயிப்போம் என்கிறார். திருமந்த்ரம்தன்னை அநுஸந்திப்பார்க்கு ப்ரதிபாத்ய மான வஸ்துவோபாதி, ருஷி சந்தோ தேவதைகளென்ன, பீஜசக்திகளென்ன, சோஷண தாஹநாதிகளென்ன, இவை எல்லாம் அநுஸந்தேயம் ஆகக்கடவது. அது வேண்டுவான் என் என்னில்,

> **''நமோ நாராய ணாயஎன்று,**
> **பல்லாண் டும்பர மாத்மனைச் சூழ்ந்திருந் தேத்துவர் பல்லாண்டே''**

என்று இம்மந்த்ராநுஸந்தாநம் பண்ணுவார் நித்ய ஸூரிகளாய், அவர்களுடைய யாத்ரை ஆயிற்று இது. அத்தையிறே குண த்ரயாத்மிகையான ப்ரக்ருதிவஶ்யனான இவன் அநுஸந்திக்கப் பார்க்கிறது. ஆகையாலே, ஒரு பாவனையாலே அவர்களோ

**தோ :** *தம் திருவுள்ளத்தைக் குறித்து, ''திருப்பிரிதியைச் சென்று அடை வாய்'' என்று அறிவுறுத்தினார். அஃது அவரது துடிப்புக்கு நிகராக விரைந்து எழுமாறு இல்லை. ''கெடுவாய்! நமது வாழ்க்கையின் பொல்லாங்கு அறிவாயோ! ஒரு நொடிப்பொழுது முற்பட்டதாகவே விரைந்து சென்று கிட்டப் பாராய்'' என்கிறார்.*

*கிழே திருமந்திரத்தை நினைந்தார்; பின்னர் அம்மந்திரத்தால் விளக்கப் படும் பொருள் ஆகிய இறைவனைப்பற்றி எண்ணினார்; இங்கு மந்திரத்தைக் கண்டவன் இருந்த இடத்தைச் சார்வோம் என்கிறார். திருமந்திரம் பேசப் புகின் அதனையொட்டி அதனைக் கண்டவனைப் பற்றியும் நினைத்தல் வேண்டுமோ என்னில், வேண்டும். திருமந்திரத்தைச் சிந்திப்பார்க்கு அதனால் விளக்கப்படும் பொருளைப் போன்றே அதற்கு உரிய இருடி, யாப்பு, தெய்வம் ஆகியனவும் வித்தெழுத்து, ஆற்றல் என்பனவும் வரளச்செய்தல், எரித்தல் முதலியனவும் ஆகிய இவை எல்லாம் நினைத்தற்கு உரியன. அவ்வாறு செய்ய வேண்டுவது ஏன் எனில்,*

> ''நமோ நாராய ணாயஎன்று,
> பல்லாண் டும்பர மாத்மனைச் சூழ்ந்திருந் தேத்துவர் பல்லாண்டே
> (தி. பல். 12)

*என்று சொல்லப்படுவதற்கு ஏற்ப, இம்மந்திரத்தை எப்பொழுதும் எண்ணிக் கொண்டிருப்பவர்கள் அயர்வறும் அமரர்களே. அவர்களுக்கு இதனை எண்ணு வதே பணி. அவ்அமரர்கள் சிந்திக்கும் மந்திரத்தை அன்றோ முக்குண வயத் தனாய் உலக வயப்பட்டிருக்கும் இவன் சிந்தித்திடக் கருதுகிறான். ஆகையாலே*

பாதியாகத் தன்னுடைய சரீரத்தையும் பாவித்து அநுஸந்திக்கைக்காக சோஷணாதிகள் வேண்டுகிறது. இனி, ருஷி சந்தோ தேவதைகளை அநுஸந்திக்கிறது இம் மந்த்ரத்தில் உண்டான ஆதராதிசயத்தாலே. பீஜசக்திகளை அநுஸந்திக்கிறது மோக்ஷப்ரதம் என்று அவ்வழியாலே இவனுக்கு இதில் விஶ்வாஸம் பிறக்கைக்காக.

கீழே, "**பிரிதி சென்று அடை நெஞ்சே**" என்றார்; "க்ரமத்திலே செய்கிறோம்" என்று ஆறி இருந்தது நெஞ்சு; "கெடுவாய்! ப்ரக்ருதி ஸம்ஸ்ருஷ்டராய் இருப்பார்க்கு, அப்படிச் செய்கிறோம் என்று ஆறி இருக்கப்போமோ? அப்ராக்ருத சரீர பரிக்ரஹம் பண்ணினார்க்கு அன்றோ, "பின்னைச் செய்கிறோம்" என்று இருக்கலாவது?"[1] என்று இங்ஙனே ப்ரக்ருதியினுடைய அஸ்த்திரதையையும், விஷயங்களினுடைய தன்மையையும்[2], பற்றப்படுகிற விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தையும் சொல்லி, இருந்த படி இதுவான பின்பு ஒரு கைகால் முறியவாகிலும் ஒரு க்ஷணம் முற்பட்டது உடலாக ஆஶ்ரயிக்கப் பாராய்! என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்[3].

**முற்ற மூத்து**[4] - ஹிமவானில் திருப்பிரிதியை ஆஶ்ரயி என்று திருவுள்ளத்தைக் குறித்து உபதேசித்தார்; அது தம் த்வரைக்கு அநுரூபமாக மேல்விழாதே திமிர்த்திருந்தது; "**மநஏவ மநுஷ்யாணாம்**" என்று பந்தமோக்ஷங்கள் இரண்டுக்

---

*இவற்றுள் வரளச் செய்தல் தொடக்கமானவை இன்றியமையாதன ஆகின்றன, ஒருநினைப்பாலே அமரர்கள் உடலைப் போன்றதாகத் தனது உடலையும் கருதி ஏத்துவதற்காக. இம்மந்திரத்துக்கு உரிய இருடியையும் யாப்பையும் தெய்வத்தையும் எண்ணுகிறான், இதன்மேல் கொண்ட ஆர்வ மிகுதியாலே. வித்தெழுத்து ஆற்றல் ஆகியவற்றைக் கருதுகிறான், வீடுபேற்றை வழங்கும் என்று உணர்ந்து அவ்வழியால் நம்பிக்கை பிறத்தற்காக.*

*முன் திருமொழியில், "**பிரிதி சென்று அடைநெஞ்சே**" என்றார்; "காலப் போக்கில் செய்வோம்" என்று ஆறி இருந்தது நெஞ்சு. "கெடுவாய்! இவ்உலகில் பிறந்தார்க்கு அப்படிப் பொறுத்துச் செய்வோம் என்று ஆறி இருத்தல் தகுதி ஆகுமோ? அழிவு இல் யாக்கை உடையார்க்கு அன்றோ, "பின்னைச் செய்கிறோம்" என்று ஆறியிருத்தல் ஆகும் என்கிறார். உலகின் நிலையாமையினையும், இங்கு நுகரும் ஐம்புல இன்பங்களின் தாழ்வினையும், பற்றப்படும் இறைவன் தன்னேற்றத்தையும் சொல்லி உண்மை நிலை உணர்த்துகிறார். உணர்த்தி, நிலை இப்படி இருத்தல் கண்ட பின்பு ஒரு கையோ காலோ முறியும்படியாகிலும் ஓடி, ஒரு கணம் முன்னதாக அடையப் பாராய் என்று திருவுள்ளத்தைக் குறித்துப் பேசுகிறார்.*

*இமயமலையில் உள்ள திருப்பிரிதியைச் சென்று அடைவாய் என்று திருவுள்ளத்திற்கு அறிவுறுத்தினார். அது தம் துடிப்புக்கு ஈடாக மேல் விழாமல் திமிர்த்திருந்திருந்தது.*[5] *விட்டுணுபுராணம்,* "**மனிதர்களின் உலக வாழ்க்கைக்கும் வீடுபேற்றுக்கும் மனமே காரணம்**" *(6 : 7 : 28) என்கிறது. எனவே, மனிதன்*

---

1. ஆறி இருக்கலாவது. 2. தண்ணிமையையும். 3. அநுஸாஸிக்கிறார். 4. இது முதல் இரண்டாவது முறை ஒரு தோற்றுவாய் அருளிச்செய்வதாகத் தோற்றுகிறது.
5. திமிர்த்திருந்தது - அக்கறையின்றி இருந்தது.

கும் ஹேது மநஸ்ஸிறே. இது பகவத் விஷயத்தில் மேல்விழுகிறது இல்லை, இனி பழையதுவேயிறே நமக்கு நிலை. இனி, அவன்தான் விரோதியான இவ்வுடம் போடே தன்னை ஆஶ்ரயித்துப் பெறலாம்படிக்கு ஈடாக இங்கே வந்து ஸந்நிஹிதன் ஆனான்.

இனி, இந்த விரோதியான ப்ரக்ருதிதான் தேஹமாயும் இந்த்ரியங்களாயும் சப்தாதி விஷயங்களாயுமிறே விரோதியாவது. அநுபாவ்ய விஷயங்களில் ப்ரதாந போக்யங்கள் ஆவன ஸ்த்ரீகளிறே. அவர்கள் தாங்களாகிறார் தங்களைக்கொண்டு அருமைப்படுத்தி, இவன் ஸர்வ ஸ்வத்தையும் அபஹரிக்கும் அத்தனைபோக்கி, இவனுக்குத் தங்களுடைய உடம்பு கொடுக்கக்கடவர்கள்[1] இன்றிக்கே, கொடுத்தார் களாகில்[2] அதுதன்னில் அநுபாவ்யம் ஒன்று இல்லாதபடி அல்பமாய் அஸ்த்திரமாய் அநர்த்தாவஹமாய் துராராதமாயிறே இருப்பது. இனி, தேஹமாகிறதுதான் ஏகரூப மாய் இருப்பது ஒன்று அல்லாமையாலே, அவைதன்னுடைய[3] அநுபவயோக்யம் உள்ளது சிறிது நாளாய், பின்பு அதுவுங்கூட இல்லாதபடியிறே இருப்பது. இந்த்ரியங் கள் ஆகிற இவை, "ஆநந்தயாதி" என்கிறபடியே இவனுக்கு நிரதிசயாநந்தத் தைப் பண்ணிக்கொடுக்கும் பகவத் விஷயத்துக்கு உடலாகை அன்றிக்கே ஸந்நிஹித மான க்ஷுத்ர விஷயங்களிலே மூட்டி துஃக்கத்தை விளைக்கக் கடவதாய், பின்பு தான் உண்டாய் இருக்கச்செய்தேயும் இக்கார்யந்தன்னையும்[4] செய்ய மாட்டாதபடி யாயிறே இருப்பது.

---

*மண்ணில் உழல்வதற்கும் விண்ணில் உறைவதற்கும் வித்தாய் இருப்பது மனமே என்பது தேற்றம். இம்மனம் இறைவனிடத்து ஈடுபடுவதாக இல்லை. ஆதலால், பழைய நிலையே இனியும் நமக்கு உரிய நிலை ஆகும். இனி, அப்பெருமானோ நாம் தடையான இவ்வுடம்போடே தன்னை வணங்கிப் பேறு பெறுவதற்கு ஏற்ற வாறு இங்கே வந்து அணியன் ஆனான்.*

*இனி, இத்தடையான பகுதிதான் உடலாகவும், ஐம்பொறிகளாகவும், ஓசை முதலிய ஐம்புலன்களாகவும் அமைந்து தடையாய் இருத்தல் வெளிப்படை. நுகர்வனவற்றுள் முதன்மையான இன்பப் பொருள்கள் பெண்களே. அவர்களோ தங்களை அடைதற்கு அருமைப்படுத்தி இவன் செல்வம் அடங்கலும் பறித்துக் கொள்வார்களே அன்றி, இவனுக்குத் தங்கள் உடம்பு கொடுக்க மாட்டார்கள். ஒருகால் அப்படியே கொடுத்தார்கள் எனினும் அதில் பெறும் இன்பம் துய்த்துக் களிக்க ஒன்றும் இல்லாமல் புல்லியதாய், நிலையற்றதாய், கேடு விளைப்பதாய், மனநிறைவு தாராததாய் இருக்கிறது. இனி, இவ்வுடலை நோக்கின், அஃது என்றும் ஒருபடிப்பட்டிருப்பது அன்று. அஃது இன்பம் துய்த்துக் களித்தற்கு ஏற்றவாறு இருப்பது சில நாளுக்கே ஆகும். கால ஓட்டத்தில் அத்தகுதியும் இல்லாமல் போகிறது. ஐம்பொறிகளை எடுத்துக்கொள்ளின், அவையும் இவ் வாறே உள்ளன. "இறைவனே மகிழ்ச்சி உண்டாக்குகிறான்" (தைத். ஆந. 2 : 7 : 1) என்கிறது உபநிடதம். அவை இப்படி இவனுக்கு எல்லையில் இன்பம் நல்கும் இறைவனிடத்தில் ஈடுபடுவதற்குக் கருவியாய் இருத்தலன்றிக் கிட்டிய தண்ணிய பொருள்களிலே மூட்டித் துயர் விளைவிப்பனவாய் உள்ளன. பின்பு தாம் இருந்த போதிலும் இதனையும் கூடச் செய்யமாட்டாதனவாய் இருக்கின்றன.*

---

1. குடுக்கக்கடவர்கள். 2. குடுத்தார்களாகில். 3. அவைத்தினுடைய. 4. காரியம் தன்னையும்.

இப்படி இருக்கையாலே, இவ்அசித்து தனக்கே பாங்காய் இருக்கிற நாளிலே அவனை ஆஶ்ரயித்துத் தன்னைக் கழித்துக்கொள்கைக்கு உடலாய் இருப்பதும் ஓர் ஆகாரம் உண்டு. அவன்தானும் இது பாங்கான போதே தன்னை ஆஶ்ரயிக்கலாம்படி இங்கே ஸ்ரீபதரியிலே வந்து ஸந்நிஹிதன் ஆனான். ஆன பின்பு, இது அநுகூலமான போதே அவனை ஆஶ்ரயித்து இத்தைக் கழிப்பித்துக் கொள்வோம்[1] என்று பார்த்து அதிலே ஒருப்படுகிறார்.

பட்டரை ஒரு வ்யாபாரி, "இது அல்பம் அஸ்த்திரம்" என்று இத்தை த்யாஜ்யமாக நினைத்து இராநின்றார்கள் சிலர்; "காண்கிற உடம்புக்கு அவ்வருகு இல்லை" என்று இதுதன்னிலே போக்யதாபுத்தி பண்ணி இராநின்றார்கள் சிலர். ஒன்றைப் பற்றி இவை இரண்டும் நடக்கிறபடி எங்ஙனே?" என்று கேட்க, "பாக்யாதிகர்க்கு இதினுடைய தோஷத்தைக் கண்டு[2] கைவிடுகைக்கும் உடலாய், பாக்யஹீநர்க்கு இதிலே போக்யதாபுத்தி பண்ணி அநர்த்தப்படுகைக்கும் உடலாம்படி அவ்அவருடைய புண்யபாபங்களை இட்டு அதுக்கு அநுரூபமாகக் காணும் இத்தைப் பண்ணிற்று" என்று அருளிச்செய்தார்.

**"பால்யேக்ரீடநகாஸக்தா:"** என்கிறபடியே பால்யத்தில் லீலோபகரணங்கொண்டு போதுபோக்கித் திரியும்; அல்பம் வெளிச்செறிப்புப் பிறந்தவாறே

---

*இப்படி இருத்தலால், இவ்அறிவற்ற உடம்பு தனக்குப் பாங்காக இருக்கும் நாளிலே அவ்இறைவனைப் பற்றித் தன் பிறவியைக் கழித்துக் கொள்வதற்கு உடலாய் இருக்கும் ஒரு தன்மை உண்டு. அப்பெருமானும் இவனுக்கு இவ் உடம்பு பாங்காய் உள்ள போதே தன்னைப் பற்றுவதற்கு ஏற்றவாறு இங்கே திருவதரியிலே வந்து அணியன் ஆனான். ஆன பின்பு, இவ்உடம்பு பாங்காக உள்ள போதே அவனைச் சார்ந்து இப்பிறவியைக் கழிப்பித்துக் கொள்வோம் என்று கருதி அதிலே ஒருப்படுகிறார்[3].*

*ஒரு வணிகன், "இவ்உடம்பு புன்மையானது என்றும், நிலையற்றது என்றும் சொல்லி, இதனைத் தள்ளத்தக்கதாகக் கருதுகின்றனர் சிலர்; "காண்கின்ற இவ் உடம்புக்கு மேற்பட ஒன்று இல்லை" என்று கூறி, இதில் இன்பம் இருப்பதாக எண்ணிக் கொள்ளத்தக்கதாகக் கருதுகின்றனர் சிலர். "ஒரு பொருளைக் குறித்து இவ்வாறு இருவகைக் கருத்துகள் இருத்தல் எங்ஙனம் இயலும்? என்று பட்டரை வினவினான். அதற்கு அவர், பேறு உடையார்க்கு இதன் குற்றம் கண்டு கைவிடுதற்குக் கருவியாகவும், அஃது இல்லார்க்கு இதில் இன்பம் இருப்பதாகக் கருதித் துன்பப்படுதற்குக் கருவியாகவும் அவரவர் நல்வினை தீவினைகளைக் கணக்கிட்டு அவற்றிற்குத் தகுந்தவாறு இவ்உடம்பை இறைவன் அமைக்கிறான்" என்று விடையிறுத்தார்.*

"மனிதர்கள் பிள்ளைப் பருவத்தில் விளையாட்டுப் பொருள்களிலும் இளமைப் பருவத்தில் ஐம்புல இன்பங்களிலும் ஈடுபடுகிறார்கள். மூப்பு வந்தவாறே அறிவு மழுங்கியவர்களாய் வலுவற்றவர்களாய்க் காலம் கழிக்கின்றனர் *என்கிறது விட்டுணு புராணம் (1 : 17 : 75). இக்கூற்றுக்கு ஏற்ப, பிள்ளைப் பருவத்தில் விளையாட்டுப் பொருள்களைக்கொண்டு போதுபோக்கித் திரிவான்; சிறிது வெளிச்செறிப்புப்*[4]

---

1. கொள்ளவேணும். 2. தோஷ தர்சநத்தைக் கொண்டு.
3. ஒருப்படுதல் - முனைதல். 4. வெளிச்செறிப்பு - விளக்கம்.

விஷயங்கள் வந்து கைக்கொள்ளும்; பின்னை அவைதன்னையும் அநுபவிக்க ஒண்ணாதபடி மூப்பு வரும். ஆன பின்பு, இது பாங்கான நாளிலே ஒரு க்ஷணம் முற்பட்டது உடலாக பகவத் ஸமாஶ்ரயணம் பண்ண அடுக்கும் என்னா நின்றதிறே.

---

*பிறந்தவுடன் ஐம்புல இன்பங்கள் வந்து இவனைக் கைக்கொள்ளும்; அதன் பின்னர் அவற்றையும் துய்க்க முடியாதவாறு மூப்பு வரும். இவ்வாறு இருத்தலால், இவ்உடம்பு பாங்காக இருக்கும் நாளிலே ஒருகணம் முற்படும்படி இறைவனைக் கிட்டி வணங்குவது அடுக்கும் என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

1. உலகில் கட்டுண்டிருப்பதற்கும் வீடு பேற்றிற்கும் மனமே காரணம்

*" பயனல்ல செய்து பயனில்லை நெஞ்சே"*

*" நெஞ்சே - பந்தமோக்ஷங்கள் இரண்டுக்கும் பொதுவாயிறே நெஞ்சுதான் இருப்பது"* திரு. வா. மொ. 2:10:3-36

2. வறிதே கழியும் மனித வாழ்வு

*" 'பால்யே க்ரீடநகா ஸக்தா:' என்று லீலையோடே காலத்தைப் போக்கி யௌவநாவஸ்த்தையிலே நரகஹேதுவான விஷயாந்தரங்களோடே போதுபோக்கி ஜரையிலே வந்து அகப்பட்டு அஶக்தியோடே காலக்ஷேபத்தைப் பண்ணி, நினைவின்றியே இருக்கச் செய்தே மரணம் ப்ராப்தமாக, 'க்லேஶாதுத்க்ராந்திமாப்நோதி யாம்யகிங்கரபீடித:' என்கிறபடியே உத்க்ரமண தசையிலே க்லேசத்தை அநுபவித்து அநந்தரம் ம்ருத்யுபரவஶனாம்"* தி. மா. அவதாரிகை.

*[லீலை - விளையாட்டு. யௌவநாவஸ்தை - இளமைப்பருவம். ஹேது - அடி; காரணம். விஷயாந்தரங்கள் - இறைவனைத் தவிர்ந்த பிற பொருள்கள். ஜரை - முதுமை. காலக்ஷேபம் - போதுபோக்குதல். உத்க்ரமண தசை - உயிர் பிரியும் காலம். ம்ருத்யு - கூற்றுவன்.]*

## 21

**முற்ற மூத்துக் கோல்து ணையா,**
**முன்னடி நோக்கிவளைந்து,**
**இற்ற கால்போல் தள்ளி, மெள்ள**
**இருந்தங் கிளையாமுன்,**
**பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி**
**பெருமுலை யூடுயிரை**
**வற்ற வாங்கி உண்ட வாயான்**
**வதரி வணங்குதுமே.**

---

21. 1 : 6 நோக்கி வளர்ந்து.

**ப. ரை :** **முற்ற மூத்து** - முழுதும் மூப்பு அடைந்து, **கோல் துணையா** - ஊன்றுகோலை உதவியாகக்கொண்டு, **முன்னடி வளைந்து நோக்கி** - முன்னே வைக்க வேண்டும் அடியைத் தலைகவிழ்ந்து பார்த்து, **இற்ற கால் போல் தள்ளி** - முறிந்த கால் போலே தடுமாறி, **அங்கு மெள்ள இருந்து** - ஓர் இடத்தில் மெதுவாக முயன்று அமர்ந்து, **இளையா முன்** - இளைப்பு வந்து மேலிடும் காலம் வருவதற்கு முன்னே, **பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி** - பெற்ற தாயின் வடிவு கொண்டு வந்த பூதனை என்னும் பேய்ச்சியினது, **பெரு முலை ஊடு உயிரை** - பெரிய முலை வழியே அவள் உயிரை, **வற்ற வாங்கி உண்ட வாயான்** - வறண்டு போகுமாறு உறிஞ்சிக் குடித்த வாயினையுடைய பெருமான், **வதரி வணங்குதுமே** - எழுந்தருளி யிருக்கும் திருவதரியை வணங்குவோம்.

**சி. கு :** **துணையா** - துணையாக; ஈறு குறைந்து நின்றது. **முன்னடி** - முன்னே வைக்க வேண்டும் அடி; முன் பக்கம் எனலும் ஆம். **வதரி** - பதரி என்னும் வடசொல் திரிபு. பதரி என்பது இலந்தைமரம் என்று பொருள்படும் வட சொல். அம்மரங்கள் மிகுந்த இடமாதலானும், அம்மரத்தின்கீழ் இருந்து நாராயணன் அறிவுரை புகன்றமையானும் அத்திருப்பதிக்கு அப்பெயர் அமைந்தது. வதரி - இமயமலையில் உள்ள தலங்களுள் ஒன்று. பெருமான் பதரிநாராயணன்; பெருமாட்டி அரவிந்தநாயகி. வதரியும் வதரியாச்சிராமமும் ஒன்றே; வதரி என்பது மலை முழுவதையும், வதரியாச்சிராமம் என்பது அம்மலையில் பெருமான் எழுந் தருளியுள்ள இடத்தையும் குறிக்கும் என்பர் திரு அண்ணங்கராசாரிய சுவாமிகள் (திவ்யார்த்த தீபிகை பக்கம் 25). ஆனால், அடுத்த திருமொழியின் தோற்றுவாயில் பெரியவாச்சான்பிள்ளை ஈரிடங்கள் என்று சொல்வதையொட்டி, ஒன்றை நரனுக்கு உரிய இடமாகவும், பிறிதொன்றை நாராயணனுக்கு உரிய இடமாகவும் கொள்ள வேண்டும் என்றும், ஈரிடங்களை இணைத்து ஒரு தலமாகக் கொள்வதும் உண்டு என்றும் கருதுவர், திரு புத்தூர்க் கிருட்டிணசுவாமி ஐயங்கார்.

இத்திருமொழி ஐந்து மாவும் ஒரு காயுமாகப் பெரும்பாலும் அமைந்த அறு சீர் ஆசிரிய விருத்தம்.

**வியா :** **முதற் பாட்டு :** **முற்ற மூத்து** - பரிணாமி த்ரவ்யத்துக்குப் பரிணாம பரம்பரைகள் வரத் தவிராதிறே; இனி ஒரு அவஸ்த்தைக்கு அவகாசம் இல்லாதபடி கழிய மூத்து. **கோல் துணையா** - முன்பு தன்னை எல்லார்க்கும் அபாஶ்ரயமாகவிறே நினைத்திருப்பது; ஒரு பரம சேதநனைப் பற்றுகிறானும் அன்றே. ஜீயர் ஸங்யஸித்தருளுகிற அன்று, தண்ட தாரணம் பண்ணுகிற மந்த்ரம், "நீ எனக்கு மித்ரமாய் எல்லா ரக்ஷணங்களும் பண்ணவேணும்" என்றுஆயிற்று இருப்பது.

---

**வி: முதற் பாட்டு :** **முற்ற மூத்து** - உருமாறும் பொருளான உடலுக்கு மாற்றங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் வருவது தவிராது. இஃது இயற்கை. ஆனால், இங்கோ இனி ஒரு நிலை உண்டாவதற்கு இடமின்றிக் கழிய மூத்து. **கோல் துணையா** - முன்பு தன்னை எல்லார்க்கும் உறுதுணையாக நினைத்திருந்தான்; அப்படிப்பட்டவன் இன்று ஒரு வாலறிவனைப் பற்றுகிறான் அல்லன்; ஒரு கோலினைப் பற்றுகிறான். நஞ்சீயர் துறவு மேற்கொண்ட காலை, "நீ எனக்குத் தோழனாய் என்னை எவ்வகையிலும் காத்தல் வேண்டும்" என்னும் பொருள் அமைந்த மந்திரத்தைச் சொல்லிக் கோலினை ஏற்க வேண்டுவதாய் இருந்தது.

அத்தைக் கேட்டு, "ஒரு ஸர்வஜ்ஞன் ஸர்வசக்தி பரம சேதநனை ஓர் ஆசார்யன் முன்னாக இவ்வார்த்தையைச் சொல்லிவைத்து இத்தையும் இவ்வார்த்தை சொல்லும்படியான இவ்ஆஶ்ரம ப்ராப்திதான் என்! என்று இருந்தேன் காண்" என்று அருளிச்செய்வர். **முன்னடிநோக்கி வளைந்து** - முன்பு இறுமாப்பாலே தரை பாராதேயிறே திரிவது. சோழர்கள் வெற்றிலை[1] சிலர் இட அன்றிக்கே தாங்களே எடுத்திறே தின்பது, "தலைகவிழ்ந்து வாங்கில் சிலரை வணங்கிற்று"[2] என்னும் துர்மாநத்தாலே. "**த்விதாபஜ்யேயம்**" என்பது இயற்றி[3] உண்டான நாளிறே; செயல் அற்றால் செய்யலாவது இல்லையிறே. **இற்ற கால் போல் தள்ளி** - முறிந்த கால் போலே தடுமாறி. **மெள்ள இருந்து** - ஸ்திதியில் உண்டான அருமையாலே இருக்க ஒருப்படும். ஒரு மஹாபாரதத்துக்கு வேண்டும் நேர்த்தி போரும் ஆயிற்று ஒருக்கால் இருந்தானாய்த் தலைக்கட்ட. **அங்கு இளையா முன்** - இருந்த ஆயாஸந்தான் பொறாமை இளைக்கும் ஆயிற்று. அக்லேசம் வருவதுக்கு முன்னே.

**பெற்ற தாய் இத்யாதி** - தாய்வடிவு கொடுவந்த[4] பூதனையுடைய பெரிய முலைவழியே ப்ராணனும் பாலோடு ஒக்க வற்றும்படியாக புஜிக்குமவனுடைய.

---

*அம்மந்திரத்தைக் கேட்ட அவர், "முற்றறிவினனும், வரம்பில் ஆற்றல் உடையவனும் வாலறிவனும் ஆகிய இறைவனைக் குறித்து ஓர் அருளாசிரியன் முன்னே இச்சொற்களை முன்பு சொல்லிவைத்து, இப்பொழுது இக்கோலினைக் குறித்தும் இச்சொற்களைச் சொல்லுமாறு அமைந்த இத்துறவு நிலை ஏற்புத்தான் என்னே! என்று நினைத்தேன் காண்" என்றாராம். சீயர் துறவொழுக்க முறைமை கருதிக் கோல் கைக்கொண்டார். இவன் அங்ஙன் அன்றி முதுமையால் வந்த மாட்டாமை கருதிக் கோல் கைக்கொண்டான்.* **முன்னடி நோக்கி வளைந்து** - *முன்பு இறுமாப்பாலே தரை பாராதே திரிந்தான். சோழர்கள் வெற்றிலையைச் சிலர் தந்தால் கை நீட்டி வாங்கிக் கொள்ளார். தலை கவிழ்ந்து வாங்கினால், "சிலரை வணங்கினோம் ஆவோம்" என்னும் இறுமாப்பாலே தாங்களே எடுத்துத் தின்பர். அதுபோன்ற செருக்கு உடையவனாய் இருந்தான் முன்பு.* "இரண்டாகப் பிளக்கப்பட்டாலும் படுவேனே ஒழிய ஒருவனுக்கு வணங்க மாட்டேன்" *(ரா. யு. 36 : 11) என்பது இராவணன் பேச்சு. இப்பேச்சு எல்லாம் இயற்றி[5] இருக்கும் நாளிலேதான்! செயலற்றால் செய்யலாவது இல்லையே!* **இற்ற கால்போல் தள்ளி** - *முறிந்த கால்போலே தடுமாறி.* **மெள்ள இருந்து** - *நிற்பதில் உள்ள அருமையாலே[6] இருக்க ஒருப்படும்[7]. ஒரு முறை இருக்க ஒருப்பட்டு அதனைத் தலைக்கட்ட ஒரு மாபாரதப் போருக்கு வேண்டும் நேர்த்தி[8] தேவைப் படுவது ஆயிற்று.* **அங்கு இளையா முன்** - *இருப்பதற்கு மேற்கொண்ட உடல் வருத்தம் பொறுக்க மாட்டாமல் இளைப்பு உண்டாகும். அத்துன்பம் வருவதற்கு முன்னே.*

**பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி பெரு முலை ஊடு உயிரை வற்ற வாங்கி உண்ட வாயான் வதரி வணங்குதுமே** - *தாய் வடிவு கொண்டு வந்த பூதனையின் பெரிய முலை வழியே உயிரும் பாலோடு ஒருசேர வற்றுமாறு உண்டவனுடைய*

---

1. வெத்திலை. 2. வணங்குத்து. 3. இயத்தி. 4. கொண்ட.
5. இயற்றி - ஆற்றல். 6. அருமை - தொல்லை. 7. ஒருப்படுதல் - முயலுதல்.
8. நேர்த்தி - முயற்சி.

அன்றிக்கே, பேய் வற்றும்படி முலையூடு உயிரை உண்ட வாயான் என்னவும் ஆம். பால் நேரானவாறே ப்ராணனும் நேர் ஆயிற்று.

இத்தால், அநுகூலம் போலே தோற்றி ப்ரதிகூலமான ப்ரக்ருதியைக் கழித்துக் கொள்ளப் பார்க்கில், தாய் வடிவைக்கொண்டு அநுகூலரைப் போலே வந்து ப்ரதிகூலமான பூதனையை நிரஸித்தவன் திருவடிகளைப் பற்ற அடுக்கும் என்கிறார்.

---

*அவ்வாறு அல்லாமல், பேய் வற்றுமாறு முலையூடு உயிரை உண்ட வாயான் என்றும் உரைக்கலாம். "முலை வழியாகப் பாலை உண்ணக் கூடும்; உயிரை எங்ஙனம் உண்ணுதல் முடியும்?" எனின், பால் நேரானவாறே உயிரும் நேர் ஆயிற்று. அஃதாவது, பூதனை தந்த நச்சுப்பால் இவன் குடிப்பதற்குக் தக்க தானாற் போலே அவளது உயிரும் குடிப்பதற்குத் தக்கது ஆயிற்று.*

*இதனால், நன்மை போலத் தோற்றித் தீமையான யாக்கையைக் கழித்துக் கொள்ளக் கருதினால், தாய் வடிவு கொண்டு உற்றார் போலே வந்து தீம்பு செய்த பூதனையை அழித்தவன் திருவடிகளைப் பற்றுவது அடுக்கும் என்கிறார்.*

## ஒப்புமைப் பகுதி

### தாய் போல் வந்த பேய்

*"தீய அலவலைப் பெருமாவஞ்சப் பேய்வீய"*

*"......ஜகத்துக்கு வேர்ப்பற்றானவனை முடிக்கப்பார்த்த நெஞ்சில் தீமையை யுடையளாய், யசோதைப் பிராட்டியைப் போலே பரிவுதோற்ற ஜல்பித்துக் கொண்டு வருவாளாய், ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனானவனும் 'தாய்' என்று ப்ரமிக்கும்படி தோற்றின மஹாவஞ்சகையான பூதநை முடியும்படியாக"*

*தி. வா. மொ. 1:5:9-36*

*[ஜல்பித்து - பிதற்றி. ஸ்வதஸ் ஸர்வஜ்ஞன் - இயற்கையிலேயே முற்றறிவினன்.]*

*" மாயப் பேய் உயிர் மாய்த்த ஆய மாயனே!"*

*" உயிர்மாய்த்த - அவள் கோலி வந்ததுதன்னை அவ்ள் தன்னோடே போக்கினபடி"* *தி. வா. மொ. 4:3:4-36*

*" வஞ்சப்பெண்ணைச் சாவப் பாலுண்டதும்"*

*" பாலுண்டதும் - யசோதைப்பிராட்டி முலையுண்ணும்போதும் தான் உயிர் பெற உண்ணுமாபோலே காணும் இவள் முலையுண்கிறபோதும் தான் உயிர்பெற முலையுண்டபடி. 'பெருமுலையூடுயிரை வற்ற வாங்கி உண்ட வாயா'னிறே. இவன் பிள்ளையாயே முலையுண்டான் அத்தனை; வஸ்து ஸ்வபாவத்தால் ப்ரதிகூலர் முடிந்தது இத்தனையிறே"*

*தி. வா. மொ. 6:4:4-36*

*[ஸ்வபாவம் - தன்மை. ப்ரதிகூலர் - தீங்கு இழைப்பவர்.]*

**முதுகு பற்றிக் கைத்த லத்தால்,**
**முன்ஒரு கோல்ஊன்றி;**
**விதிர்வி திர்த்துக் கண்சு ழன்று,**
**மேற்கிளை கொண்டிருமி,**
**இதுஎன் அப்பர் மூத்த வாறென்று**
**இளையவர் ஏசாமுன்,**
**மதுஉண் வண்டு பண்கள் பாடும்**
**வதரி வணங்குதுமே.**

ப. ரை : **கைத்தலத்தால் முதுகு பற்றி** - கையாலே முதுகைப் பிடித்துக் கொண்டு, **முன் ஒரு கோல் ஊன்றி** - முன் இடத்தில் ஒரு கொம்பை விழாது இருப்பதற்காக ஊன்றிக்கொண்டு, **விதிர் விதிர்த்து** - உடம்பு நடுங்கி, **கண் சுழன்று** - கண்கள் சுழலப்பெற்று, **மேல் கிளை கொண்டு இருமி** - மேல் இளைப்புக் கொண்டு இரும, **இளையவர் அப்பர் மூத்த ஆறு இது என்! என்று ஏசா முன்** - சிறுவர்கள் பெரியவர் மூப்பு அடைந்த தன்மை ஆகிய இது என்னே! என்று சொல்லி இகழ்வதற்கு முன்னே, **மது உண் வண்டு பண்கள் பாடும்** - பூவில் உள்ள மதுவினைக் குடிக்கும் வண்டுகள் இசைக்கும், **வதரி வணங்குதுமே** - திருவதரியை வணங்குவோம்.

சி. கு : இருமி - இரும. 'செய்து' என்னும் எச்சம் 'செய' என்னும் எச்ச மாகத் திரிந்தது. காரணப் பொருட்டாய் வந்த செய்து என்னும் எச்சமாகவும் கொள்ளலாம். இளையவர் - "இளையவர் கலவியே கருதி" என்பதில் ஆண் ஒழித்துப் பெண்பாலரை மட்டும் குறித்ததுபோல் அன்றி ஈண்டு இருபால் சிறியவர் களையும் குறித்தது.

வியா : இரண்டாம் பாட்டு: **முதுகு பற்றிக் கைத்தலத்தால்** - தௌர்ப்பல்யத்தாலே முதுகு நோமே, ஒரு கையாலே அத்தைப் பற்றும். **முன் ஒரு கோல் ஊன்றி** - முன்பு விழாமைக்காக ஒரு கோலை ஊன்றும் ஆயிற்று. இரண்டு அருகும் கப்புக்கால் கொடுக்க[1] வேண்டும்படியிறே இருப்பது. **விதிர் விதிர்த்து** - சரீரம் எங்கும் ஒக்க நடுங்கும் ஆயிற்று. **கண் சுழன்று** - ஒரோ அவயவங்களுக்குப் பிறக்கும் விகாரங்கள் சொல்லுகிறது. **மேற்கிளை** - மேற்கு என்று மேலாய்,

---

வி : இரண்டாம் பாட்டு : **முதுகு பற்றிக் கைத்தலத்தால்** - மிடுக்கு இன்மை யால் முதுகு நோகுமே, அதனால் ஒரு கையாலே முதுகினைப் பற்றுவான். **முன் ஒரு கோல் ஊன்றி** - முன் பக்கத்தில் விழாது இருப்பதற்காக ஒரு கோலை ஊன்று வான். பின்பக்கம் முன்பக்கம் ஆகிய இருபக்கமும் கப்புக்கால்[2] கொடுக்க வேண்டு மாறு இருக்கும் அவன் நிலை. **விதிர்விதிர்த்து** - உடம்பு எங்கும் ஒக்க நடுங்கும். **கண் சுழன்று** - ஒவ்வோர் உறுப்புக்கும் பிறக்கும் வேறுபாடு சொல்லப்படுகிறது. கண்கள் சுழற்சி அடைந்து. **மேற்கிளை கொண்டு இருமி** - மேற்கிளை என்பதனை

---

1. குடுக்க.
2. கப்புக்கால் - பக்க பலமாகத் தரப்படும் ஊன்றுகோல்.

மேல் இளைப்புக்கொண்டு என்னுதல்; அன்றிக்கே, மேலான கிளையை - உச்சமான த்வநியைக்கொண்டு இருமி. **இது என் அப்பர் மூத்த ஆறு** - இதுதான் எல்லாரும் மூக்கக்கடவதிறே, இத்தனை கழிய மூக்கல் ஆகாது என்பர்கள் ஆயிற்று. அப்பர் என்று ப்ரக்ருதி. அதின் மேலே மூப்பு. **இளையவர் ஏசா முன்** - அவர்களுக்கும் அது வ்யவஸ்திதமாய்த் தங்களுக்கும் இவை வ்யவஸ்திதமானாப் போலே இருக்க ஏசாநிற்பர்கள்.

**மது உண் இத்யாதி** - ஒரு பண்ணைப் பாடுகை அன்றிக்கே வண்டுகள் மதுபாந மத்தமாய் எல்லாப் பண்களையும் பாடாநிற்கும். **வதரி** - ஆக, இக்லேசத்தைத் தவிர்க்கும் அளவே அன்றிக்கே, நிரதிசயாநந்தத்தைப் பெற்றுக் களிக்கலாம்படியான தேசம் ஆயிற்று.

---

மேற்கு, இளை என்று பிரித்து, மேல் இளைப்புக் கொண்டு இருமி என்று பொருள் கொள்ளலாம். மேற்கு - மேல் என்று பொருள்படும். அவ்வாறு அல்லாமல், மேல் கிளை கொண்டு இருமி என்று பிரித்து, மேலான கிளையை அஃதாவது உரத்த குரலைக்கொண்டு இருமி என்றும் கொள்ளலாம். **இது என் அப்பர் மூத்த ஆறு** - "எல்லாரும் மூப்பு அடைதற்கு உரியவரே. எனினும், இத்துணைக் கழிய[1] மூப்பு அடைதல் கூடாது" என்று கூறுவார் ஆயினர். அப்பர் என்னும் சொல் ஒருவர்க்குத் தன்னடையே வரும் மூப்பைக் காட்டும். அம் மூப்பு முதலாய் அதன் மேலே வந்த மூப்பு. என்று **இளையவர் ஏசா முன்** - அவருக்கு மூப்பே நிலையாக வரையறுக்கப்பட்டதாகவும், தங்களுக்கு இளமையும் ஏசுகையுமே நிலையாக வரையறுக்கப்பட்டனவாகவும் கருதிக்கொண்டு ஏசுவார்கள். இப்படி ஏசுவதற்கு முன்னே.

**மது உண் வண்டு பண்கள் பாடும்** - ஒரு பண்ணை மட்டும் பாடாமல் வண்டுகள் மது உண்ட களிப்பால் எல்லாப் பண்களையும் பாடிக்கொண்டிருக்கும். **வதரி வணங்குதுமே** - ஆக, இவ்வருத்தத்தைத் தவிர்ப்பது மட்டும் அல்லாமல், வரம்பற்ற இன்பத்தைப் பெற்றுக் களிக்கலாமாறு இருக்கும் இடம் ஆயிற்று வதரி. அதனை வணங்குவோம்.

## 23

**உறிகள் போல்மெய்ந் நரம்பெ ழுந்தூன்**
**தளர்ந்துள் ளமெள்கி**
**நெறியை நோக்கிக் கண்சு ழன்று**
**நின்று நடுங்காமுன்**
**அறிதி யாகில் நெஞ்சம்! அன்பாய்**
**ஆயிரம் நாமம்சொல்லி**
**வெறிகொள் வண்டு பண்கள் பாடும்**
**வதரி வணங்குதுமே.**

---

1. கழிய - அதிகமாக.

**23.** 1 : 6 ளம்வெள்கி. 3 : 4 அன்பால்.

**ப. ரை :** **மெய் நரம்பு உறிகள் போல் எழுந்து** - உடம்பின்கண் உள்ள நரம்புகள் உறிக்கயிறுகளைப் போலே மேலே கிளம்பி, **ஊன் தளர்ந்து** - தசை கட்டுக் குலைந்து, **உள்ளம் எள்கி** - அதனாலே நெஞ்சம் வருந்தி, **நெறியை நோக்கி**- தொலைவில் செல்ல வழியைப் பார்த்து, **கண் சுழன்று** - அந்தக் களைப்பாலே கண்கள் சுழலையிட்டு, **நின்று நடுங்கா முன்** - போக மாட்டாதே நின்று நடுங்கும் காலம் வருவதற்கு முன்னே, **நெஞ்சம்** - மனமே! **அறிதியாகில்** - அறிவு உடையை யானால், **அன்பாய் ஆயிரம் நாமம் சொல்லி** - இறைவன்மாட்டு அன்புடையையாய் அவனுடைய ஆயிரம் திருப்பெயர்களையும் சொல்லி, **வெறி கொள் வண்டு பண்கள் பாடும்** - மணம் மிக்க வண்டுகள் இசைப்பாட்டுகளைப் பாடும், **வதரி வணங்குதுமே** - திருவதரியை வணங்குவோம்.

**சி. கு :** உறிகள் - ஈண்டு ஆகுபெயராய் அவற்றின் கயிறுகளை உணர்த்தின. நெஞ்சம் - அண்மை விளி.

வியா : **மூன்றாம் பாட்டு : உறிகள் இத்யாதி** - மெய்யில் - சரீரத்தில். நரம்புகளானவை பால்யத்தில் மறைந்து கிடந்தவை சரீரம் பசையற உலர்ந்த படியினாலே உறி போலே மேலே புடைக்கும் ஆயிற்று. அதுக்கு உறுப்பாக, **ஊன் தளர்ந்து** - மாம்ஸம் க்ஷயித்து. **உள்ளம் எள்கி** - அத்தாலே ஹ்ருதயம் ஈடுபட்டு. **நெறியை இத்யாதி** - போக்கை நினைக்குமே, தூரப் போக நினைக் கிறானாகையாலே வழியைப் பார்க்குமே, நெடுகப் பார்த்த ஆயாஸம் பொறாமை கண் சுழலும், பின்பு அடிபேர்ந்து இடமாட்டாதே நின்று நடுங்கும் ஆயிற்று.

**அறிதியாகில் நெஞ்சம்** - ஜ்ஞாந ப்ரஸர த்வாரமாகில், அவன்பக்கலிலே அன்பை உடையையாய், சிலவற்றைச்[1] சொல்லி மீள வேண்டாதபடி பாங்கான அளவிலே ஆயிரம் திருநாமங்களையும் சொல்லி. **வெறி இத்யாதி** - பரிமளத்தை

---

வி : மூன்றாம் பாட்டு : **உறிகள் போல் மெய் நரம்பு எழுந்து** - மெய்யில் - உடம்பில். உடம்பில் இருக்கும் நரம்புகளானவை இளம்பருவத்தில் மறைந்து கிடந்தன ; அவை உடம்பு பசையற உலர்ந்தபடியாலே உறி போலே மேலே புடைத்துத் தோன்றும். **ஊன் தளர்ந்து** - அதற்கு உறுப்பாகத் தசை சுருங்கி. **உள்ளம் மெள்கி** - அதனாலே நெஞ்சம் ஈடுபட்டு[2].

**நெறியை நோக்கிக் கண் சுழன்று நின்று நடுங்கா முன்** - வெளிச்செல்ல நினைப்பான்! தொலைவில் செல்ல நினைப்பதனால் நெடுவழியைப் பார்ப்பான். நெடுந்தொலைவு பார்த்த வருத்தம் பொறுக்கமாட்டாமல் கண்கள் சுழலும்; பின்பு அடிபேர்ந்திட மாட்டாமல் நின்று நடுங்குவான். **அறுதியாகில் நெஞ்சம்** - நெஞ்சே! நீ அறிவுக்கு ஆனைத்தாளாய்[3] இருப்பாயானால். **அன்பாய் ஆயிரம் நாமம் சொல்லி** - அவன்பக்கலிலே அன்புடையையாய்ச் சிலவற்றைச் சொல்லி மீளக் கருதாமல் பாங்கான இளமைக்காலத்திலேயே ஆயிரம் திருப்பெயர்களையும் சொல்லி. **வெறி கொள் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே** - மணத்தை

---

1. சிலவைத்தைச்.
2. ஈடுபடுதல் - வருந்துதல். 3. ஆனைத்தாள் - பெரிய வாயில்.

வகுத்தாப் போலே இருக்கிற வண்டுகள் முக்தர் ஸாமகாநம் பண்ணுமாப் போலே அநுபவத்துக்குப் போக்குவிட்டுப் பாடுகிறன ஆயிற்று.

---

வகுத்தாற் போலே இருக்கும் வண்டுகள் வீடு பெற்றார் சாமவேதத்தைப் பாடுவது போலே தங்கள் இன்ப நுகர்ச்சிக்குப் போக்குவிட்டுப் பாடுகின்றன. அத்திரு வதரியை வணங்குவோம்.

## ஒப்புமைப் பகுதி

1. நெஞ்சம் அறிவுக்கு வாயில்

*"என்னுடைய நெஞ்சும் அறிவும் இனவளையும்*
*பொன்னியலும் மேகலையும் ஆங்கொழியப் போந்தேற்கு"*

*"நெஞ்சும் அறிவும் - நெஞ்சாவது அறிவு இட்டு வைக்கும் கலம்"*
*பெ. மடல். 80 பெ. உரை.*

2. ஆயிர நாமம்

*"பேராயிரங் கொண்டதோர் பீடுடையன்"*

*"பேர் - ரக்ஷிக்கைக்கு ஒரு பேர் காணும் வேண்டுவது. அப்படிப்பட்ட திருநாமங்களைத்தான் எத்தனை உடையன் என்னில்? ஆயிரங்கொண்டதோர் பீடு உடையன் - 'தேவோ நாம ஸஹஸ்ரவாந்' என்னுமா போலே. பல பசுக்களை உடையவன் என்னுமாபோலே. ஸர்வாதித்யம் பண்ண நினைத்தவர்கள் சோறும் தண்ணீரும் குறையறுத்துக் கொண்டிருக்குமா போலே, ஜகத்ரக்ஷண சிந்தை பண்ணின ஈச்வரனுக்கு, அதுக்கு உபாயமாக ஆயிரம் திருநாமங்கள் உண்டாய் இருக்கும் ஆயிற்று"*
*தி. வா. மொ. 9:3:1-36*

*[ஸர்வாதித்யம் - எல்லாரையும் விருந்தோம்புதல். ஜகத்ரக்ஷணம் - உலகைக் காத்தல்.]*

*"ஆயிரம் பேர்த் தேவன் திறம் பிதற்றும்"*

*"'தேவோ நாம ஸஹஸ்ரவாந்' என்கிறபடியே தன் குண சேஷ்டிதங்களுக்கு வாசகமான ஆயிரம் திருநாமங்களை உடையன்......"*
*பெரி. தி. 3:7:8 ம. மா. மு. உரை.*

## 24

**பீளை சோரக் கண்இ டுங்கிப்**
**பித்தெழ மூத்திருமித்**
**தாள்கள் நோவத் தம்மில் முட்டித்**
**தள்ளி நடவாமுன்**
**காளை யாகிக் கன்று மேய்த்துக்**
**குன்றெடுத் தன்றுநின்றான்**
**வாளை பாயும் தண்த டஞ்சூழ்**
**வதரி வணங்குதுமே.**

ப. ரை : **கண் இடுங்கிப் பீளை சோர** - *கண்கள் குறுகி அழுக்குப் பொங்க* **பித்து எழ மூத்து இருமி** - *பித்தம் மேலிடுமாறு மூப்பு அடைந்து இருமி*, **தாள்கள் தம்மில் முட்டி நோவ** - *கால்கள் ஒன்றோடு ஒன்று தாக்கித் துன்புற*, **தள்ளி நடவா முன்** - *தடுமாறி நடப்பதற்கு முன்னே*, **காளை ஆகி** - *காளை போலும் இளைஞனாகி*, **கன்று மேய்த்து** - *கன்றுகளை மேய்த்து*, **அன்று குன்று எடுத்து நின்றான்** - *இந்திரன் கல்மழை பொழிந்த அந்நாள் கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்துத் தாங்கி நின்றவன் எழுந்தருளியுள்ள*, **வாளை பாயும் தண் தடம் சூழ்** - *வாளை மீன்கள் குதித்துப் பாயும் குளிர்ந்த தடாகங்கள் சூழ்ந்த*, **வதரி வணங்குதுமே** - *திருவதரியை வணங்குவோம்.*

சி. கு : *காளை - உவம ஆகுபெயராய்க் காளை போலும் இளைஞனான கண்ணனைச் சுட்டிற்று.*

வியா : **நாலாம் பாட்டு : பீளை சோரக் கண் இடுங்கி** - கண்ணானது ஸங்கோசத்தை பஜித்து; பசையற்றபடியாலே பீளை பாய்ந்து. **பித்து எழ** - கழிய மூத்து. ஸ்காலித்யம் பிறக்கும்படி மூத்து **தாள்கள் இத்யாதி** - ஒரு சஸ்த்ராதி களாலாதல் மற்றொன்றிலே இடறியாதல் அன்றிக்கே, காலோடு கால் அறைந்து[1] நோவ. தாள்கள் தம்மில் முட்டி நோவ என்றபடி. பின்னையும் சாபலத்தாலே போகத் துடங்குமே! தடுமாறி நடப்பதுக்கு முன்னே.

---

வி : நாலாம் பாட்டு : **பீளை சோரக் கண் இடுங்கி** - *கண்ணானது சுருங்கப் பெற்று; பசையற்றபடியாலே பீளை பாய்ந்து.* **பித்து எழ மூத்து இருமி** - *கழிய மூத்து. சிறுநீர், மலம் முதலியன தனது நினைவில்லாமலே வெளிநழுவும்படி மூத்து.* **இருமித் தாள்கள் நோவத் தம்மில் முட்டி** - *கைப்பிடித்த வாள் முதலிய படைக்கருவிகளாலோ மற்றொன்றில் இடறியோ அன்றிக் காலோடு கால் அறைந்து[2] நோவ. தாள்கள் தம்மில் முட்டி நோவ என்று கூட்டி உரைக்கப் பட்டது. இப்படி நோவுற்ற பின்னும் ஆசையாலே போகத் தொடங்குவான் அன்றோ! அதுபோது கால்கள் தடுமாறும். அப்படித் தடுமாறி நடப்பதற்கு முன்னே.*

---

1. அறைஞ்சு.
2. அறைந்து - மோதி.

**காளையாகி** - தன்னை ஆஶ்ரயித்தார்க்குத் தன்னோடு ஸாம்யாபத்தியைக் கொடுக்குமவன். நித்ய யுவா ஆகலாம். **கன்று மேய்த்து** - ரக்ஷ்ய வர்க்கத்தில் வரையாதே ரக்ஷிக்குமவன். **குன்று எடுத்து அன்று நின்றான்** - அரியன செய்து நோக்குமவன் ஆயிற்று. **வாளை இத்யாதி** - தனக்கு என்ன[1] ஒரு யோக்யதை இல்லாத பதார்த்தங்களும் களித்து வர்த்திக்கும் தேசம் ஆயிற்று.

---

**காளை ஆகி** - *தன்னைப் பற்றினார்க்குத் தன்னோடு ஒத்தநிலை அடைவிப்பவன். அவனைக் கிட்டினால் எஞ்ஞான்றும் இளைஞனாக இருக்கலாம்.* **கன்று மேய்த்து** - *காக்கப்படுவனவற்றுள் இவ்இவற்றைக் காத்தல் வேண்டும் என்று வரையறை செய்யாமல் எல்லாவற்றையும் காப்பவன்.* **குன்று எடுத்து அன்று நின்றான்** - *அரியன செய்து நோக்குபவன்[2].* **வாளை பாயும் தண் தடம் சூழ் வதரி** - *தனக்கு என்று ஓர் இயற்றியும்[3] இல்லாத மீன்களும் களித்து இருக்கும் இடம்.* **வணங்குதும்** - *அதனை வணங்குவோம்.*

### ஒப்புமைப் பகுதி

1. **கன்று மேய்த்தவன்**

*"கன்று மேய்த்து இனிது உகந்த காளாய்"*

*"நித்ய ஸூரிகளை ரக்ஷிக்கை தட்டியில் இருப்பாய், கன்று மேய்த்த பின்பு காணும் ஸார்வபௌமன் ஆயிற்று. ஸர்வரக்ஷகத்வம் புஷ்கலமாயிற்றது கன்று மேய்த்த பின்பிறே"* திரு. நெ. தா. 16 பெ. உரை.

*[தட்டியில் இருத்தல் - சிறையில் இருத்தல். ஸார்வபௌமன் - அரசர்க்கரசன். ஸர்வரக்ஷகத்வம் - எல்லாவற்றையும் காக்கும்தன்மை. புஷ்கலம் - ஒளி; புகர்.]*

2. **குன்று எடுத்தவன்**

*"பெருமலை எடுத்தான்"*

*"அரியன செய்தும் ஆச்ரித ரக்ஷணம் பண்ணுமவன். 'கோ கோபீஜந ஸங்குலம் அதீவார்த்தம்' என்று இடையரும் இடைச்சிகளும் நோவுபட ஒரு மலையை எடுத்து நோக்கினவன்"* திரு. வா. மொ. 2:10:4-36

*[ஆச்ரித ரக்ஷணம் - அடியாரைக் காத்தல்]*

*"குன்றம் ஏந்திக் குளிர்மழை காத்தவன்"*

*"என்றும் துஃக்க நிவ்ருத்திக்கு பரிகரம் மலையே ஆயிற்று. 'கோ கோபீஜந ஸங்குலம் அதீவார்த்தம்' என்கிறபடியே, பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே தொலையப்புக, கண்ணுக்குத் தோற்றிற்று ஒரு மலையைப் பிடுங்கி ஏழு நாள் ஒரு படிப்படத் தரித்துக்கொண்டு நின்று அவற்றை ரக்ஷித்தவன்"* திரு. வா. மொ. 3: 3: 8-36

---

1. என.
2. நோக்குபவன் - காப்பவன்.
3. இயற்றி - தகுதி.

" குன்று ஒன்று ஏந்தியதும்"

" இப்படி ஏழு வயஸ்ஸிலே ஏழுநாள் தரித்ததுக்கு என் செய்வோம் நாம் என்று ஒருவர் நெஞ்சாறல் படாதபடி ஸகோத்ரியாய் நின்றிறே இவன் இவற்றை ரக்ஷித்தது"

[ஸகோத்ரி - ஒரு குடியில் பிறத்தவன்; ஈண்டு இடையருள் ஒருவன்.]

திவாமொ. 6:4:1-36

" காத்த எங் கூத்தாவோ! மலைஏந்திக் கன்மாரி தன்னை"

" மலை ஏந்திக் கல்மாரி தன்னை - கல்லாலே வர்ஷிக்கையாலே மலையை எடுத்துப் பரிஹரித்தான்; நீராலே வர்ஷித்தானாகில் கடலை எடுத்து நோக்கும் காணும்" திவாமொ. 7:6:3-36

[பரிஹரித்தல் - (இடர்) களைதல். வர்ஷித்தல் - பொழிதல்.]

" குன்றம் ஒன்றால் புயல்வாய்இன நிரை காத்த புள்ளூர்தி"

" குன்றம் ஒன்றால் - ரக்ஷிக்குமிடத்தில் எடுத்தது பரிகரமாய் இருந்தபடி"

தி. வி. 24 பெ. உரை.

[பரிகரம் - கருவி]

" கல்லெடுத்துக் கன்மாரி காத்தாய் என்னும்"

" 'கன்மாரியாகையாலே கல்லை எடுத்து ரக்ஷித்தான்; நீர் மாரியாகில் கடலை எடுத்து ரக்ஷிக்கும்காண்' என்று பட்டர் அருளிச்செய்வர். இத்தால் இன்னத்தைக்கொண்டு இன்ன கார்யம் செய்யக்கடவோம் என்னும் நியதி இல்லை; ஸர்வசக்தன் என்கை"

தி. நெ. தா. 13 பெ. உரை

## 25

**பண்டு காமர் ஆன வாறும்**
**பாவையர் வாய்அமுதம்**
**உண்ட வாறும் வாழ்ந்த வாறும்**
**ஒக்க உரைத்திருமித்**
**தண்டு காலா ஊன்றி ஊன்றித்**
**தள்ளி நடவாமுன்**
**வண்டு பாடும் தண்டு ழாயான்**
**வதரி வணங்குதுமே.**

**ப. ரை : பண்டு காமர் ஆன ஆறும்** - இளமைக் காலத்தில் பெண்கள் தன்னை விரும்பியிருந்த தன்மையினையும், **பாவையர் வாய் அமுதம் உண்ட ஆறும்** - தான் அப்பெண்களது எயிறு ஊறிய நீர் மாந்திய தன்மையினையும், **வாழ்ந்த ஆறும்** - அவர்களோடு சிற்றின்பத்தில் திளைத்த தன்மையினையும், **ஒக்க உரைத்து இருமி** - ஒருபடிப்பட விரித்துச் சொல்லி அதனால் வந்த

களைப்பால் நடுநடுவே இருமி, **தண்டு காலா** - தடியையே காலாகக்கொண்டு, **ஊன்றி ஊன்றி** - வலிவின்மையாலே ஓர் இடத்திலேயே பல முறையும் ஊன்றி, **தள்ளி நடவா முன்** - தடுமாறி நடப்பதற்கு முன்னே, **வண்டு பாடும் தண் துழாயான் வதரி** - வண்டுகள் பாடுகின்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையினை அணிந்த பெருமான் எழுந்தருளியுள்ள திருவதரியை, **வணங்குதுமே** - வணங்குவோம்.

**சி. கு :** பாவையர் - பாவை போலும் அழகியவர்.

வியா : **அஞ்சாம் பாட்டு : பண்டு காமர் இத்யாதி** - தனக்கு என்ன யோக்யதை உள்ள நாள் நிஷித்தங்களையே முன்னடி தோற்றாதே அநுஷ்டித்துப் போரும்; பின்பு பகவத் ஸமாச்ரயணம் பண்ணுமாகிலும், **"வணக்கொடு மாள்வது வலம்"** என்கிறபடியே நன்மைக்கு உடலாய்த் தலைக்கட்டுமிறே, அதுவும் செய்யாதே, சேஷித்த நாள் வ்ருத்த கீர்த்தநத்தைப் பண்ணிச் செத்துப்போம் ஆயிற்று. **பண்டு இத்யாதி** - முன்பு தான் ஸ்த்ரீகளுக்கு ஸ்ப்ருஹா விஷயமாய்ப் போந்த படியையும், அவர்களுடைய வாகம்ருதத்தை புஜித்தபடியையும். அன்றிக்கே, அவர்கள் தாங்கள் ஆதரித்து மேல்விழத் தான் இருந்தபடியாகவும் ஆம். **வாழ்ந்த ஆறும் - "இன்னம் கெடுப்பாயோ"** என்கிறபடியே இப்போது கேடாகவிறே தாம் நினைத்திருக்கிறது.[1] **ஒக்க உரைத்து இருமி** - இவற்றைச்[2] சொல்லத் துடங்குமே, அநந்தரம் இருமல் வருமே, பின்னையும் சாபலத்தாலே விட்ட குறையிலே

---

வி : ஐந்தாம் பாட்டு : **பண்டு காமர் ஆன ஆறும் பாவையர் வாய் அமுதம் உண்ட ஆறும்** - தனக்கு என்று சில இயற்றி[3] பெற்றிருந்த பண்டை நாளில் விலக்கடிகளையே[4] அடுத்து வருவது அறியாமல் கடைப்பிடித்து ஒழுகுவான். தன் ஆற்றல் அழியும் பிற்காலத்தில் இறைவனைப் பற்றுவான் என்றாலும்,

"மாளுமோர் இடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே"
(தி. வா. மொ. 1 : 3 : 8)

என்பதற்கு ஏற்ப நன்மை உண்டாவதற்கு உடலாய்த் தலைக்கட்டும். அதனையும் செய்யாமல், எஞ்சிய நாள்களிலும் கழிந்த நாளில் நடந்தவற்றைச் சொல்லிச் செத்துப் போவான். **பண்டு காமர் ஆன ஆறும் பாவையர் வாய் அமுதம் உண்ட ஆறும்** - முன்பு தான் பெண்களுக்கு விரும்பத்தக்கவனாய் இருந்த தன்மையினையும், அவர்களுடைய வாய் அமுதம் பருகியபடியையும். அல்லது, அப்பெண்கள் தன்னை ஆதரித்து மேல்விழத் தான் இருந்த தன்மையைச் சொல்லியதாகவும் கொள்ளலாம். **வாழ்ந்த ஆறும் - "இன்னம் கெடுப்பாயோ"** (தி. வா. மொ. 6 : 9 : 8) என்று கூறுவது போல இப்போது அவ்வாழ்க்கையைக் கேடாக அன்றோ தான் நினைக்கிறான். ஆதலின், சிற்றின்பத்தில் திளைத்து அழிந்த தன்மையினையும் என்று பொருள் கொள்க. **ஒக்க உரைத்து இருமி** - இவற்றைச் சொல்லத் தொடங்க, தொடங்கிய உடனே இருமல் வரும்; அதனால்

---

1. நினைக்கிறது. 2. இவைத்தை.
3. இயற்றி - ஆற்றல். 4. விலக்கடிகள் - தள்ளற்குரியன.

சொல்லத் துடங்குமே, ஆக இருமுவது சொல்வது ஆகாநிற்கும். **தண்டு காலா** - காலால் கொள்ளும் கார்யத்தை ஒரு தண்டாலே ஆயிற்றுக் கொள்வது. **ஊன்றி ஊன்றி** - பிள்ளை அழகியமணவாள அரையர் இதுக்கு பட்டர் அருளிச்செய்தா ராகச் சொன்னபடி: "ஒருக்கால் சரீரம் ஸ்திதிக்கவேண்டும் அளவும் ஊன்ற மாட்டானே, தன் கையில் மிடுக்கு இல்லாமையாலே, பலகால் இத்தை எடுத்து எடுத்து[1] இடாநிற்கும்" என்று. **தள்ளி இத்யாதி** - தடுமாறி நடப்பதுக்கு முன்னே.

**வண்டு இத்யாதி** - "அன்று, இன்று" என்ன வேண்டாதே என்றும் ஒக்க அநுபவமே யாத்ரையாகச் செல்லும் தேசம். சில நாள் அநுபவித்துப் பின்பு இருந்து வ்ருத்த கீர்த்தநம் பண்ண வேண்டா.

---

பேச்சு இடையில் தடைப்படும்; எனினும், தொடர்ந்து ஆசையாலே விட்ட குறையினைச் சொல்லத் தொடங்குவான்; மீண்டும் இருமல் வரும். ஆக, இருமுவதும் சொல்வதும் ஆக இருக்கும். **தண்டு காலா** - காலால் செய்து கொள்ளும் செயலை ஒரு தண்டாலே செய்துகொள்வான். **ஊன்றி ஊன்றி** - பிள்ளை அழகியமணவாள அரையர் இதற்குப் பட்டர் சொன்னதாக ஒரு விளக்கம் கூறுவர். அது வருமாறு : "ஒரு முறை உடம்பு நிற்பதற்கு வேண்டிய அளவுகூடக் கோலை நிலையாக ஊன்ற மிடுக்கு[2] இல்லாதவனாய் இருக்கிறான்; இப்படித் தன் கையில் மிடுக்கு இல்லாமையாலே, பலகாலும் கோலினை எடுத்து எடுத்து இடா நிற்கும்". **தள்ளி நடவா முன்** - தடுமாறி நடப்பதற்கு முன்னே.

**வண்டு பாடும் தண் துழாய் வதரி** - "அன்று, இன்று" என்று கூற வேண்டாமல் என்றும் ஒக்க இறைநுகர்ச்சியே பணியாய்ச் செல்லும் இடம். சில நாள் துய்த்துப் பின்பு இருந்து பண்டைப் பெருமை பாராட்ட வேண்டா. **வணங்குதுமே** - அவ்இடத்திற்குச் சென்று வணங்குவோம்.

### ஒப்புமைப் பகுதி

**முதுமையில் இளமைக் காலத்துச் செய்த செயல்களைப் பேசுதல்**

> *" பேதைபா லகன்அ தாகும் பிணிபசி மூப்புத் துன்பம்*
> *ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகரு ளானே"*

> *" ஜரையாகிறது சாலப் பொல்லாதது ஒன்றிறே. போக யோக்யதை யன்றிக்கே இருக்கச் செய்தே சாபல்யம் அநுவர்த்திக்குமிறே. 'பண்டு காம ரான வாறும்' என்று வ்ருத்த கீர்த்தநம் பண்ணியாகிலும் தரிப்போம் என்று பார்க்கும். இவ்வளவில் இடிவிழுந்தாற்போலே மரணம் வந்து உபஸ்த்திதமாம்"*

*தி. மா. 3 பெ. உரை.*

*[ஜரை - முதுமை. போக யோக்யதை - நுகரும் தகுதி. சாபல்யம் - நசை. அநுவர்த்தித்தல் - பின்தொடர்தல். வ்ருத்த கீர்த்தநம் பண்ணல் - நடந்தவற்றைப் பேசுவது. உபஸ்த்திதம் - நெருங்கி நிற்பது.]*

---

1. எடுத்து என்பது ஒரு முறையே உள்ளது.
2. மிடுக்கு - வலிமை.

# 26

**எய்த்த சொல்லோ டீளை ஏங்கி,**
**இருமி, இளைத்துடலம்,**
**பித்தர் போலச் சித்தம் வேறாய்ப்**
**பேசி அயராமுன்,**
**அத்தன், எந்தை, ஆதி மூர்த்தி,**
**ஆழ்கட லைக்கடைந்த**
**மைத்த சோதி எம்பெ ருமான்**
**வதரி வணங்குதுமே.**

ப. ரை : **எய்த்த சொல்லோடு ஈளை ஏங்கி** - *நலிந்த பேச்சாலும் கோழையாலும் இளைத்து,* **இருமி உடலம் இளைத்து** - *இருமலாலே வருந்தி உடம்பு மிகவும் மெலிந்து,* **பித்தர் போலச் சித்தம் வேறாய்ப் பேசி** - *பைத்தியம் பிடித்தவர்களைப்போல ஒன்றை நினைத்துப் பிறிது ஒன்றைப் பேசி,* **அயரா முன்** - *தளருவதற்கு முன்பே,* **அத்தன் எந்தை ஆதிமூர்த்தி** - *எல்லார்க்கும் தலைவனாய், எனக்குத் தந்தையாய், உலகத்தோற்றத்திற்குக் காரணனாய்,* **ஆழ்கடலைக் கடைந்த** - *ஆழ்ந்த கடலைக் கடைந்தவனாய்,* **மைத்த சோதி எம்பெருமான்** - *கறுத்த ஒளிபடைத்தவனான எங்கள் இறைவன் எழுந்தருளியிருக்கும்,* **வதரி வணங்குதுமே** - *திருவதரியை வணங்குவோம்.*

**சி. கு :** *சொல்லோடு - சொல்லால்; 'ஓடு' என்னும்* **உ**ருபு *கருவிப்பொருளில் வந்தது. அத்தன் - எல்லார்க்கும் தலைவன். எந்தை - எனக்குத் தலைவன்.*

வியா : **ஆறாம் பாட்டு : எய்த்த சொல்லோடு** - துடங்கி எய்க்கை அன்றிக்கே முந்துறவே எய்த்து ஆயிற்றுச் சொல்லுவது; அதுதான் அநந்தரம் ஈளையோடே கொடுபோய்ச் சேர்க்கும். **ஏங்கி** - அதின் அநந்தரமாக இளைப்பு வந்து கைக்கொள்ளும் ஆயிற்று. **இருமி இளைத்து உடலம்** - அதுதான் இருமலுக்குப் பூர்வ க்ஷணவர்த்தியாய் இருக்குமிறே. இருமி, அத்தாலே சரீரம் போர இளைக்கும் ஆயிற்று. **பித்தர் போலச் சித்தம் வேறாய்ப் பேசி** - நினைவு ஒன்றும் சொல்

---

**வி : ஆறாம் பாட்டு : எய்த்த சொல்லோடு** - *சொல்லத் தொடங்கி எய்க்கையன்றி[1] முதலிலேயே எய்த்து ஆயிற்றுச் சொல்லுவது; அவ்வாறு எய்த்துச் சொல்லும் அச்செயல்தான் அடுத்து ஈளையோடே[2] கொடுபோய்ச் சேர்க்கும்.* **ஏங்கி** - *அதன் பின்னர் இளைப்பு வந்து கைக்கொள்ளும்.* **இருமி இளைத்து உடலம்** - *அவ்இளைப்புத்தான் இருமலுக்கு முந்தைய கணத்தின் நிலையாக இருக்கும். இருமி, அதனாலே உடம்பு மிகவும் இளைக்கும்.* **பித்தர் போலச் சித்தம் வேறாய்ப் பேசி** - *நினைவு ஒன்றும் சொல் ஒன்றுமாய் இருக்கும்.*

---

1. எய்க்கை - இளைத்தல். 2. ஈளை - கோழை.

ஒன்றுமாய் இருக்கும் ஆயிற்று. பித்தேறினாரைப் போலே நெஞ்சால் நினைப்பது ஒன்றாய் வாயால் சொல்லுவது ஒன்றாய் இருக்கும் ஆயிற்று. **சித்தம் வேறாய்ப் பேசி அயரா முன்** - இப்படி பேசுகையும்கூட அரிதாம்படி அயர்வோடே தலைக் கட்டும்; இப்படி மோஹிப்பதற்கு முன்பே.

**அத்தன் இத்யாதி** - வகுத்த ஸ்வாமியானவன், எனக்கு ஹித காமனானவன், ஜகத் காரணபூதனான ஸர்வேஶ்வரன். **ஆழ்கடலைக் கடைந்த** - அரியன செய்தும் அபேக்ஷிதம் செய்து கொடுக்குமவன்[1]. **மைத்த சோதி** - அபேக்ஷிதம் செய்யாவிடினும் விட ஒண்ணாத வடிவழகை உடையவன்; வெளுத்தல் சிவத்தல் செய்கை அன்றிக்கே, கண்ணுக்குக் குளிர்ந்த[2] தேஜஸை உடையவன். **எம்பெருமான்** - அவ்வடிவழகைக் காட்டி என்னை அடிமை கொண்டவனுடைய வதரியை ஆஶ்ரயிப்போம்.

---

*பித்தேறினாரைப் போலே நெஞ்சால் நினைப்பது ஒன்றாய் வாயால் சொல்லுவது ஒன்றாய் இருக்கும்.* **அயரா முன்** - *இப்படிப் பேசுவதும்கூட அரிதாகுமாறு அயர்வோடே தலைக்கட்டும்[3]; இப்படி மயங்குவதற்கு முன்பே.*

**அத்தன் எந்தை ஆதிமூர்த்தி** - *வகுத்த தலைவன், எனக்கு நன்மையை விரும்புபவன், உலகிற்கு வேர்ப்பற்றான[4] முழுமுதல்வன்.* **ஆழ்கடலைக் கடைந்த** - *அரியன செய்தும் அடியார் விருப்பத்தை நிறைவேற்றிக் கொடுப்பவன்.* **மைத்த சோதி** - *நம் விருப்பத்தை நிறைவேற்றாவிடினும் விட ஒண்ணாத வடிவழகை உடையவன்; வெளுத்தல் சிவத்தல் செய்கை அல்லாமல், கண்ணுக்குக் குளிர்ந்த புகரை[5] உடையவன்.* **எம்பெருமான் வதரி வணங்குதுமே** - *அவ்வடிவழகைக் காட்டி என்னை அடிமை கொண்டவனது திருவதரியைப் பற்றுவோம்.*

**ஒப்புமைப் பகுதி**

1. **அத்தன்**

*"அறியாதன அறிவித்த அத்தா!"*

*"அத்தா-ஸ்வாமீ! இவ் உபகாரங்களை, உடையனாகையாலே செய்தாய் என்கிறார்"*

*தி. வா. மொ. 2: 3: 2-36*

*[ஸ்வாமி - உடையவன்]*

2. **எந்தை**

*"எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே"*

*"எந்தை-...விட ஒண்ணாத ப்ராப்தி"*

*தி. வா. மொ. 3:3:1-24*

*[ப்ராப்தி - உரிமை]*

---

1. குடுக்குமவன், 2. குளுந்த.
3. தலைக்கட்டும் - முடியும். 4. வேர்ப்பற்று - அடி; காரணம். 5. புகர் - ஒளி.

3. **ஆதிமூர்த்தி**

"அழைக்கின்றேன் ஆதிமூர்த்தி! அரங்கமா நகருளானே!"

"ஆதிமூர்த்தி - இது உருமாய்ந்து கிடந்த காலத்திலே அபேக்ஷாநிரபேக்ஷமாக 'பஹுஸ்யாம்' என்கிற ஸங்கல்பத்தாலே இவற்றை உண்டாக்கின உனக்கு இதினுடைய ரக்ஷணம் பண்ணுகை பரமன்றோ?

தி. மா. 36 பெ. உரை.

[அபேக்ஷாநிரபேக்ஷமாக - விருப்பத்தை வேண்டாமல். ஸங்கல்பம் - நினைப்பு; திருவுள்ளம்.]

4. **ஆழ்கடல் கடைந்தவன்**

"ஆழ்கடல் கடைந்த துப்பனே"

"'உன்னை உகவாதே ப்ரயோஜநாந்தரமே அமையும்' என்னுமவர்களுக்கும் 'அப்ரமேயோ மஹோததி' என்று ஒருவரால் அளவிட ஒண்ணாதபடியான, கடலைக் கடைந்து கொடுத்த ஸாமர்த்யத்தை உடையவனே!"

தி. வா. மொ. 4:7:5-36

[ப்ரயோஜநாந்தரம் - (இறைவனை ஒழிந்த) வேறு பயன்]

"அலைகடல் கடைந்த அப்பனே"

"நிரதிசய போக்யனாய் இருந்த உன்னை அநாதரித்து, புறம்பே ஓர் உப்புச்சாறு அமையும் என்று இருப்பார்க்கு, உடம்பு நோவக் கடலைக் கடைந்து கொடுக்கும் உபகாரகனே"

தி. வா. மொ. 8:1:1-24

[நிரதிசய போக்யன் - எல்லையற்ற இன்பன். உப்புச்சாறு - கடலில் தோன்றிய அமுதம்.]

"கடல் கடைந்தாய்"

"துர்வாஸச் சாபத்தாலே வந்த அநர்த்தத்தைத் தப்புகைக்கு ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அரியன செய்து உதவினவன் அன்றோ"

தி. வா. மொ. 4:9:1-24

[அநர்த்தம் - கேடு]

## 27

பப்ப அப்பர் மூத்த வாறு
பாழ்ப்பது சீத்திரளை
ஒப்ப ஐக்கள் போத உந்த;
உன்தமர் காண்மினென்று
செப்பு நேர்மென் கொங்கை நல்லார்
தாம்சிரி யாதமுன்னம்,
வைப்பும் நங்கள் வாழ்வும் ஆனான்
வதரி வணங்குதுமே.

**ப. ரை :** **சீத்திரளை ஒப்ப ஐக்கள் போத உந்த** - *சீயின் திரட்சி போலே கோழையானது மிகவும் வெளித்தள்ள,* **செப்பு நேர் மென் கொங்கை நல்லார்** - *அதனைக் கண்டு செப்புப் போலும் மென்மையான முலைகளையுடைய பெண்கள்,* **பப்ப அப்பர் மூத்த ஆறு பாழ்ப்பது** - *பப்ப, கிழவர் மூப்பு அடைந்த தன்மை மிகவும் பொல்லாதது என்று சொல்லி,* **தாம்** - *முன்பு ஆதரித்த தாங்களே இதுபோது அருகில் இருப்பவர்களைப் பார்த்து,* **உன் தமர் காண்மின் என்று** - *உன்னோடு உறவுள்ளவர் இவர் படியைப் பாருங்கள் என்று சொல்லி,* **சிரியாத முன்னம்** - *எள்ளி நகையாடுதற்கு முன்னே,* **நங்கள் வைப்பும் வாழ்வும் ஆனான்** - *நமக்கு நிதி போன்றவனும் நம்மை வாழ்விப்பவனுமான பெருமானது,* **வதரி வணங்குதும்** - *திருவதரியை வணங்குவோம்.*

**சி. கு :** *ஐ - கோழை. காண்மின் - முன்னிலை ஏவல் பன்மை.*

**வியா :** **ஏழாம் பாட்டு :** **பப்ப** - க்ஷேபோக்தியில் இவருடைய அநுகாரம் இருக்கிறபடி, பப்ப என்கிறபடி. **அப்பர் மூத்த ஆறு** - எல்லார்க்கும் மூப்பு வருகை தவிராதிறே. இத்தனை கழிய மூக்கலாம் ஆகாதே! என்பர்கள் ஆயிற்று. மூப்பை ப்ரக்ருதியாக்கி அதிலே மூத்தபடியாக ஆயிற்றுச் சொல்லுவது. **பாழ்ப்பது** - இது சாலப் பொல்லாது; அறப் பொல்லாதாய்[1] இருந்ததீ, இவ்அசித் ஸம்ஸர்க்கம்! என்று வெறுப்புக்கு உடல் ஆயிற்று. **சீ இத்யாதி** - பூய பிண்டம் போலே ம்லேஷ்மா

---

**வி : ஏழாம் பாட்டு :** பப்ப - *மதிப்பின்றிப் பெண்கள் பேசும் பேச்சை எடுத்துக் காட்டுவது* 'பப்ப' *என்னும் இச்சொல். இஃது இகழ்ச்சியைத் தெரி விக்கும் சொல்.* **அப்பர் மூத்த ஆறு** - *எல்லார்க்கும் மூப்பு வருதல் தவிர்க்க இயலாத ஒன்றே. எனினும், இத்துணை மிகுதியாக மூப்பு அடைதல் கூடாது! என்பர்கள். மூப்பை முதலாக்கி அதிலே மூப்பு வந்ததாகச் சொல்கிறார்கள்.*[2] **பாழ்ப்பது** - *இது மிகவும் பொல்லாதது; "ஓ! அறப்பொல்லாதது இவ்அறிவற்ற*

---

**27.** 1 : 5 பாழ்ப்பொழி. 2 : 4 உந்தி. 3 : 6 யாதமுனம்.

1. அறப்பொல்லாததாய்.
2. மூப்பு என்பதே ஒரு வடிவமாகி அதற்கு மூப்பு வந்ததுபோலே சொல்கிறார்கள்.

வானது போரத் தள்ள. சீத்திரளை ஒப்ப ஐக்கள் போத உந்த, "பப்ப! அப்பர் மூத்த வாறு! பாழ்ப்பது!" என்பர்கள். **உன் தமர் காண்மின் என்று** - இவன்பக்கல் யௌவநமும் கையில் வீசமும் உள்ள அன்று, எல்லாரும் ஒக்க, "என் தமர், என் தமர்" என்பர்கள்; கையில் வீசமும் போய் இவனோட்டை ஸம்பந்தம் நமக்கு அவத்யாவஹம் என்று தோற்றும்படி யௌவநமும் போனவாறே, "உன்னுடையவன்" என்றும், மற்றையவளும், "உன்னோடே அன்றோ[1] அவனுக்கு உறவு" என்றும் தங்களோடே தொற்று[2] அறச் சொல்லிப் பிணங்காநிற்பர்கள். **செப்பு இத்யாதி** - இவனைக் கொண்டு போதுபோக்குகைக்காக முலைக்கச்சை நெகிழ்த்தி முலையினுடைய ஸந்நிவேசத்தைக் காட்டுவர்கள். இவன் கண்ணை விடுத்து எழப்பார்க்கும்; அத்தைக் கண்டு, "பிள்ளாய்! இவன் இவற்றோடு[3] என்ன உறவு உண்டாய்ப் பார்க்கிறான்!" என்று சிரிப்பர்கள் ஆயிற்று. செப்பு நேர் மென் கொங்கை நல்லார் அப்பர் என்று சிரியாத முன்னம் என்னுதல். பண்டு தன் ஸர்வ ஸ்வத்தையும் நேர்ந்திறே ஒரு ஸ்மிதம் பெறுவது; இப்போது இவர் இருப்புக் கண்டுவிட்டுச் சிரிப்பர்கள் ஆயிற்று.

**வைப்பும் நங்கள் வாழ்வும் ஆனான்** - பரிக்ரஹித்த அன்றே ஸாதநமுமாய், பின்னை ப்ராப்யனுமானவன் வர்த்திக்கிற வதரி வணங்குதும். ஒருநாள்

---

*யாக்கையின் தொடர்பு!" என்று வெறுப்பதற்கு உடலாய் அமைந்தது.* **சீத்திரளை ஒப்ப ஐக்கள் போத உந்த** - *சிழ்க்கட்டி போலக் கோழையானது மிகவும் வெளியில் தள்ள. சீத்திரளை ஒப்ப ஐக்கள் போத உந்த, "பப்ப, அப்பர் மூத்தவாறு! பாழ்ப்பது!" என்பர்கள்.* **உன் தமர் காண்மின் என்று** - இவனிடத்தில் இளமையும் *கையில் வீசமும்*[4] *உள்ள நாளில், எல்லாரும் ஒன்றுபோல, "என் தமர், என் தமர்" என்பர்; கையில் இருந்த காசும் போய் இவனது தொடர்பு நமக்குக் கொத்தை*[5] *தரும் என்று நினைக்குமாறு இளமையும் போனவாறே இவனோடு உறவு இல்லை என்பர். அவர்களுள் ஒருத்தி, 'உன்னுடையவன்' என்பாள்; அதனைக் கேட்ட மற்றொருத்தி, "உன்னோடு அன்றோ அவனுக்கு உறவு" என்பாள். இவ்வாறு அவர்கள் எல்லாரும் தங்களோடு தொற்று*[6] *அறச்சொல்லித் தமக்குள் பிணங்குவர்.* **செப்பு நேர் மென் கொங்கை நல்லார் தாம் சிரியாத முன்னம்** - *இவனைக் கொண்டு பொழுதுபோக்குவதற்காக முலைக்கச்சை நெகிழ்த்தி முலையின் அமைப்பினைக் காட்டுவர். இவன் அதில் பார்வையைச் செலுத்தி நிமிர்ந்து பார்ப்பான். அதனைக் கண்டு, "அடியே, இவனுக்கு இவற்றோடு என்ன உறவு! இப்படிப் பார்க்கிறான்!" என்று சிரிப்பர். செப்பு நேர் மென் கொங்கை நல்லார் அப்பர் என்று சிரியாத முன்னர் என்று கூட்டிப் பொருள் கொள்க. பண்டு தன் செல்வம் அடங்கலும் தருவதாக உறுதி கூறி அவர்கள் புன்னகையைப் பெற்றான்; இன்றோ இவன் இருப்புக் கண்டு, அவர்கள் தாங்களே சிரிப்பார்கள். அப்படிப் பெண்கள் சிரிப்பதற்கு முன்னே.*

**வைப்பும் நங்கள் வாழ்வும் ஆனான் வதரி வணங்குதுமே** - *பற்றிக் கொண்ட அன்றே ஆறாகவும் பின்பு பேறாகவும் இருப்பவன் உறையும் வதரியை வணங்கு*

---

1. அல்லோ. 2. தொத்து. 3. இவைத்தோடு.
4. வீசம் - குறைந்த மதிப்புள்ள நாணயம்; ஈண்டுச் 'சிறிது பொருள்' என்னும் பொருளில் வந்துள்ளது. 5. கொத்தை - இழிவு; குறைவு. 6. தொற்று - தொடர்பு.

**ஆதரித்து ஒருநாள் சிரியாதவன் ஆயிற்று. "அம்ருதம் ஸாதநம் ஸாத்யம்" என்னக்கடவதிறே.**

---

வோம். அவன் ஒருநாள் நம்மைக் கொண்டாடிப் பின்பு ஒருநாள் நம் இழிநிலை பார்த்துச் சிரிப்பவன் அல்லன். அவன், "அழியாத ஆறாகவும் பேறாகவும் இருப்பவன்" ஆவான்.

(27)

## 28

**ஈசி போமின்; ஈங்கி ரேன்மின்;**
**இருமி இளைத்தீர்உள்ளம்**
**கூசி இட்டீர் என்று பேசும்**
**குவளைஅம் கண்ணியர்பால்**
**நாச மான பாசம் விட்டு,**
**நன்னெறி நோக்கலுறில்**
**வாசம் மல்கு தண்து ழாயான்**
**வதரி வணங்குதுமே.**

**ப. ரை :** **போமின்** - வெளியேறுங்கள், **ஈசி இங்கு இரேன்மின்** - 'சீ, சீ' இவ்விடத்தில் இருக்காதீர்கள், **இருமி இளைத்தீர்** - இருமலாலே உடல் மெலிந்தீர், **உள்ளம் கூசியிட்டீர்** - இப்படி நாங்கள் சொல்வதைக் கேட்டு நெஞ்சம் கூசினீர், **என்று பேசும் குவளை அம் கண்ணியர்பால்** - என்று பேசும் குவளை மலர் போலும் அழகிய கண்களையுடைய பெண்களிடத்தில், **நாசம் ஆன பாசம் விட்டு** - கேடு விளைக்கும் பற்றினைத் தவிர்ந்து, **நல் நெறி நோக்கல் உறில்** - நல்ல வழியில் செல்லக் கருதின், **வாசம் மல்கு தண் துழாயான்** - மணம் நிறைந்த குளிர்ந்த திருத்துழாயையுடைய இறைவன் உறைகின்ற, **வதரி வணங்குதுமே** - திருவதரியை வணங்குவோம்.

**சி. கு :** போமின், இரேன்மின் இரண்டும் ஏவற் பன்மைகள். குவளை - கருநெய்தல் மலர்.

**வியா : எட்டாம் பாட்டு : ஈசி போமின்** - நடவும்; 'சீ, சீ' என்றபடி. **போமின்** - போகீர் என்பர்கள்; என்றவாறே இருக்கச் சொல்லிற்றாகக் கொண்டு இருக்குமிறே பழைய வாஸனையாலே. **ஈங்கு இரேல்மின்** - "நீர் இருக்கிற இடம்

---

**வி: எட்டாம் பாட்டு : ஈசி போமின்** - "நடந்து செல்லும்" என்பர். இவன் புறப்படாமல் அங்கேயே இருப்பான். 'சீ! சீ!' என்று வெறுத்துப் பேசுவர். **போமின்** - 'செல்லுவீர்' என்பர்; அப்படிச் சொன்னவுடனே அங்கேயே இருக்கச் சொல்லியதாகக் கருதி இருப்பான். அதற்குக் காரணம், முன்பு எல்லாம் கலவிச் சுவையால் புலவி கொண்டு 'போவீர்' என்பர். அதற்கு 'இருப்பீர்' என்பது குறிப்பு. அதனை அறிந்தவன் இவன். அந்தப் பழைய பயிற்சியாலே இதுபோதும் அங்கே இருக்கலானான். **ஈங்கு இரேல்மின்** - "நீர் எங்கே இருக்கிறீர் என்பதனை

தன்னை அறிந்திலீரோ? உமக்கு இங்குத்தை இருப்பில் ஓர் அந்வயம் இல்லை காணும், போம்'' என்பர்கள். "என்தான்? எனக்குப் போக வேண்டுகிற ஹேது என்?'' என்னுமே; இருமி இளைத்தீர் உள்ளம் கூசியிட்டீர் - என்பர்கள். இருமலாலே போர இளைத்தீர், உம்மை அறிவீரே, "இவர்கள் முன்னே இப்படி படுவோமே!'' என்று எங்கள் ஸந்நிதியை அநுஸந்தித்து ஹ்ருதயம் கூசினீர் என்று சொல்லுகிற. குவளை அம் கண்ணியர்பால் - இவனுடைய எளிவரவு காண்கைக்காக ஸாதர மாகப் பார்ப்பர்கள் ஆயிற்று. அருநஞ்சு ஆகிலும் ஆகிறது, ஆரமுது ஆகிலும் ஆகிறது, இவர்கள்தான் பார்க்கப் பெற்றோமிறே! என்று இவனுடைய பாவபந்தத்துக்கு உடலாய் இருக்கும் ஆயிற்று. நாசம் ஆன பாசம் விட்டு - ஏதேனும் தசையிலும்[1] இவனை விடாதே விநாசத்தைப் பலிப்பிக்கும்படியான ஸங்கம் ஆயிற்று. ஹேய விஷயத்தில் ஸங்கம் விநாசத்தைப் பலிப்பிக்குமிறே! அத்தைத் தவிர்ந்து, நல்வழிபோகப் பார்க்கில், தன்னை ஆஸ்ரயித்தார்க்குக் கொடுத்து ஆதரிக்கைக்காக மாலை இட்டிருக்கிறவனது ஆன வதரியை வணங்குதுமே.

---

அறிய மாட்டீரோ? உமக்கு இங்கு இருப்பதற்கு ஓர் இயைபும் இல்லை, செல்லும்'' என்பர். இருமி இளைத்தீர் உள்ளம் கூசி இட்டீர் - "ஏன்? நான் எதற்காகப் போக வேண்டும்?'' என்பான். அதற்கு, "இருமி இளைத்தீர் உள்ளம் கூசி இட்டீர்'' என்று காரணம் காட்டுவர். இருமலாலே மிகவும் இளைத்தீர், உமக்கு உம்நிலை தான் தெரியுமே. "இவர்கள் முன்னே நாம் இப்படித் தொல்லைப்படலாமோ!'' என்று எங்கள் முன்னிலையில் தொல்லைப்படுவது எண்ணி நெஞ்சம் கூசினீர் என்று சொல்லுவர். குவளை அம் கண்ணியர்பால் - அப்படிச் சொல்லும் குவளை அம் கண்ணியர்பால். இவனுடைய எளிவரவு காண்பதற்காக ஆதரத்தோடு பார்த்தனர். "அப்பார்வை, அரிய நஞ்சு போலக் கொடியதாக அமைந்தாலும் அமையட்டும், ஆரமுதம் போல இனியதாக அமைந்தாலும் அமையட்டும், இவர்களால் நாம் பார்க்கப் பெற்றோமே!'' என்று மகிழ்ந்தான். இவனுக்கு அவர்களது பார்வை அவர்கள்மேல் ஈடுபாடு கொள்வதற்குக் கருவி ஆயிற்று. நாசம் ஆன பாசம் விட்டு - எந்த நிலையிலும் இவனை விடாமல் அழிவினை விளைவிக்கும் பற்றாக அமைந்தது இது. இழிந்தவற்றில் கொள்ளும் பற்று அழிவினை விளைவிக்கும் அன்றோ! நல் நெறி நோக்கலுறில் - அதனைத் தவிர்ந்து, நல்வழியில் செல்லக் கருதினால். வாசம் மல்கு தண் துழாயான் வதரி வணங்குதுமே - தன்னைப் பற்றியவர்க்குத் தன்னையே கொடுத்துக் கொண்டாடுகைக்காக மாலையிட்டிருப்பவனது இடமாகிய வதரியை வணங்குவோம்.

### ஒப்புமைப் பகுதி

#### பரத்தையர் செய்யும் இழிவு

> "சதிரமென்று தம்மைத்தாமே சம்மதித்து இன்மொழியார்
> மதுரபோகம் துற்றவரே வைகிமற்றொன் றுறுவர்''

---

1. தெசையிலும்.

"இன்மொழியார் - இனிய பேச்சையுடையராய் இருந்துள்ளவர்களுடைய அகவாய் மயிர்க்கத்தியாய் இருக்கச்செய்தேயும், ப்ரணயஸரஸமான பேச்சாலே வசீகரிக்கவல்லவர்கள். மதுரபோகம் துற்றவரே - மதுரமான போகத்தை, அவர்களுடனே நெருங்க புஜித்தவர்களே, வைகி மற்றொன்று உறுவர் - போகத்துக்குப் பாங்கான யௌவநமும், அதுக்குக் கைம்முதலான த்ரவ்யமும் போமே; பின்னையும் ஆசை மாறாதே; அவ்வோ இடங்களிலே போயிருக்கும், வருவார்க்கும் விரோதியாய். முற்பட, மனிச்சிலே நாலிரண்டு பண்ணை "போகலாகாதோ" என்பர்களே; "போகிறோம், போகிறோம்" என்று இருக்குமே; போகாதே; பின்னை வெள்ளாட்டியை இட்டுப் பரிபவிப்பர்கள்; அதுக்கும் போகானே: பின்னை ஆணையிட்டு எழுப்பிப் பார்ப்பார்கள்; அதுக்கும் எழுந்திரான்; பின்னைக் காலைப்பற்றி இழுப்பார்கள்; இவன் தூணைக் கட்டிக்கொள்ளும். இப்படியால் அவர்களாலே பரிபூதராவர்கள்; விபாகத்தில் பிறக்கும் பரிபவத்தை அநுஸந்தித்து வெறுத்து, அது தம் வாயால் அருளிச்செய்ய மாட்டாமையாலே 'மற்றொன்று' என்கிறார்"

திருவா. மொ. 9:1:5-36

[ப்ரணயஸரஸமான - காதற்சுவை ததும்பும். யௌவநம் - இளமை. நாலிரண்டு பண்ணை - நாலிரண்டு முறை. வெள்ளாட்டி - வேலைக்காரி. பரிபூதர் - இகழப்பட்டவர். விபாகத்தில் - முடிவில்.] (28)

## 29

**புலன்கள் நைய மெய்யில் மூத்துப்**
**போந்திருந் துள்ளமெள்கிக்**
**கலங்க ஐக்கள் போத உந்திக்**
**கண்ட பிதற்றாமுன்,**
**அலங்கல் ஆய தண்டு ழாய்கொண்டு**
**ஆயிர நாமஞ்சொல்லி,**
**வலங்கொள் தொண்டர் பாடி ஆடும்**
**வதரி வணங்குதுமே.**

**ப. ரை :** **மெய்யில் புலன்கள் நைய** - உடம்பில் உள்ள பொறிகள் பழுதுறு மாறு மூப்பு அடைந்து, **போந்து இருந்து** - தனியான இடம் தேடிப்போய் அங்கே இருந்து, **உள்ளம் மெள்கி** - நெஞ்சம் கலங்கி, **கலங்க ஐக்கள் போத உந்தி** - வாதம், பித்தம், கோழை என்னும் மூன்று பகுதிகளும் வேறுபட்டதனால் கோழையானது மிகவும் வெளித்தள்ள, **கண்ட பிதற்றா முன்** - கண்டவற்றை எல்லாம் வாயில் வந்தவாறு சொல்லுவதற்கு முன்னே, **வலம் கொள் தொண்டர்** - வலமாகச் சுற்றிவரும் அடியார்கள், **அலங்கல் ஆய தண் துழாய் கொண்டு** - மாலையாகத் தொடுக்கப்பட்ட குளிர்ந்த திருத்துழாயைக் கையிற்கொண்டு,

---

**29.** 3 : 6 நாமம்சொலி.

**ஆயிரம் நாமம் சொல்லி** - *அவனுடைய ஆயிரம் திருப்பெயர்களையும் சொல்லி,* **பாடி ஆடும் வதரி வணங்குதுமே** - *இசைத்துக் கூத்தாடும் திருவதரியில் உறையும் இறைவனை வணங்குவோம்.*

**சி. கு :** *புலன்கள் - பொறிகள்; புலன்கள் தமக்குக் கருவி ஆகிய பொறிகளை ஆகுபெயரான் உணர்த்தின. உந்தி - 'செய்து' என்னும் எச்சத்தைச் 'செய' என்னும் எச்சமாகத் திரித்துக்கொள்க.*

**வியா : ஒன்பதாம் பாட்டு : புலன் இத்யாதி** - சரீரத்தில் இந்த்ரியங்களானவை ஸந்நிவேசமும் கிடக்கச்செய்தே தந்தாமுடைய விஷயங்களைப் பரிக்ரஹிக்கவும் மாட்டாதே, சிதிலமாம்படி மூத்து. **போந்து இருந்து** - அல்லாதாரோபாதி காண்பன காணவும் கேட்பன கேட்கவும் பெறாமையாலே ஆள் நடையாடாத இடம் தேடிப் போந்து இருந்து. **உள்ளம் எள்கி** - "நாம் பட்டதோ"[1] என்று ஹ்ருதயமானது ஈடுபட்டு. **கலங்க இத்யாதி** - தோஷ த்ரயமும் தலையெடுத்தவாறே ஶ்லேஷ்மாவானது போரத் தள்ளாநிற்கும்[2] ஆயிற்று. **கண்ட பிதற்றா முன்** - பின்னை ப்ரதிபந்நங்களைப் பிதற்றுவதற்கு முன்னே.

**அலங்கல் ஆய** - அங்குத்தைக்குச் சாத்தியருளுகைக்கு ஈடான மாலையான திருத்துழாயைக் கொண்டு. **ஆயிர நாமம் சொல்லி** - கண்ட பிதற்றாமே அவ்வழியே இந்த்ரியத்துக்கு அடைத்த திருநாமம் சொல்லி. **"நாவாயில் உண்டே"** இத்யாதிப்படியே. **வலம் கொள் இத்யாதி** - அநுகூல வ்ருத்திகளைப் பண்ணா

---

**வி : ஒன்பதாம் பாட்டு : புலன்கள் நைய மெய்யில் மூத்து** - *உடம்பில் பொறிகளானவை உரிய இடத்தில் பொருந்தி இருந்தபோதிலும் தத்தம் புலன்களைக் கொள்ளமாட்டாமல் பழுதாகும்படி மூத்து.* **போந்து இருந்து** - *மற்றவர்களைப்போலக் காண்பன காணவும், கேட்பன கேட்கவும் பெறாமையாலே ஆள் நடையாடாத இடம் தேடிப் போந்து இருந்து.* **உள்ளம் மெள்கி** - *"என்னே, நமக்கு உண்டான நிலை!" என்று நெஞ்சம் ஈடுபட்டு*[3]. **கலங்க ஐக்கள் போத உந்தி** - *வாதப் பகுதி, பித்தப்பகுதி, ஐப்பகுதி என்னும் மூன்றின் தீங்குகளும் தலையெடுத்தவாறே கோழையானது மிகுதியாகத் தள்ளியது.* **கண்ட பிதற்றா முன்** - *பின்னர் வாயில் வந்தவற்றைப் பிதற்றுவதற்கு முன்னே.*

**அலங்கல் ஆய தண் துழாய் கொண்டு** - *இறைவனுக்குச் சாத்துவதற்குத் தக்க மாலையாகிய திருத்துழாயைக்கொண்டு.* **ஆயிரம் நாமம் சொல்லி** - *கண்டவற்றைப் பிதற்றாமல் அதனைச் செய்த நாவாலேயே பொறிகளுக்கு அடைத்த*[4] *திருப்பெயரைச் சொல்லி.*

" நாவாயில் உண்டே நமோநார ணாவென்று
ஓவா துரைக்கும் உரையுண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர்
தீக்கதிக்கட் செல்லும் திறம்" (மு. தி. 95)

*என்பதால் நாவுக்கு உரியது திருப்பெயர் சொல்வது என்பது போதரும். அதற்கு ஏற்பத் திருப்பெயர் சொல்லி.* **வலம்கொள் தொண்டர் பாடி ஆடும் வதரி**

---

1 "நாம் பட்டுது, ஓம்!". 2. தள்ளும்.
3. ஈடுபட்டு - வருந்தி. 4. அடைத்த - உரியதாகிய.

நின்றுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள், சாத்துகைக்கு ஈடான மாலைகளையும் ஏந்தி, திருநாமங்களையும் சொல்லி, பாடுவது ஆடுவது ஆகாநிற்பார்கள்; அத்திரளிலே புக்கு அவர்களிலே ஒருவராய் ஆஶ்ரயிப்போம்.

---

**வணங்குதுமே** - *உகந்த செயல்களைப் புரியும் வைணவர்கள், பெருமானுக்குச் சாத்துவதற்கு ஏற்ற மாலைகளை ஏந்திச் செல்வர்; திருப்பெயர்களைச் சொல்லிப் பாடுவதும் ஆடுவதுமாக நிற்பர்; அத்திரளிலே புக்கு அவர்களிலே ஒருவராய்த் திருவதரியில் எழுந்தருளியுள்ள இறைவனை வணங்குவோம்.*

**ஒப்புமைப் பகுதி**

**ஐயார் கண்டம் அடைத்தல்**

*" ஐயார் கண்டம் அடைக்கிலும் நின்கழல்*
*எய்யா தேத்த அருள்செய் எனக்கே"*

*" உத்க்ரமணதசை பார்த்திருப்பர்காணும் கோழைப் பையலார் வந்து மிடறு பிடிக்க"*

*தி. வா. மொ. 2: 9: 3-36*

*[உத்க்ரமணதசை - உயிர் பிரியும் காலம்]*

*(29)*

## 30

**வண்டு தண்டேன் உண்டு வாழும்**
**வதரி நெடுமாலைக்**
**கண்டல் வேலி மங்கை வேந்தன்**
**கலியன் ஒலிமாலை**
**கொண்டு தொண்டர் பாடி ஆடக்**
**கூடிடில், நீள்விசும்பில்**
**அண்டம் அல்லால், மற்ற வர்க்கோர்**
**ஆட்சி அறியோமே.**

**ப. ரை : வண்டு தண் தேன் உண்டு வாழும் வதரி நெடுமாலை** - *வண்டுகள் குளிர்ந்த தேனைக் குடித்து வாழும் திருவதரியில் எழுந்தருளியுள்ள பரமனை,* **கண்டல் வேலி** - *தாழைகளை வேலியாக உடைய,* **மங்கை வேந்தன் கலியன் ஒலிமாலை** - *திருமங்கைக்குத் தலைவரான ஆழ்வார் பாடியுள்ள ஓசைச் சிறப்புப் பொருந்திய இப்பத்துப் பாக்களை,* **தொண்டர் கொண்டு பாடி ஆடக் கூடிடில்** - *அடியார்கள் கொண்டு இசைத்துக் கூத்தாடினால்,* **நீள் விசும்பில் அல்லால்** - *திருநாட்டை அன்றி,* **மற்று ஓர் அண்டம்** - *வேறோர் உலகத்தில்,* **அவர்க்கு ஆட்சி அறியோம்** - *அவர்களுக்கு ஆட்சி உரியதாதல் அறியமாட்டோம்.*

**சி. கு :** கண்டல் - தாழை; நெய்தல் நிலத்தின் ஒருமரம் என்றும் கூறுவர். நீள் விசும்பு - வைகுந்தம்; மேல் உலகங்கள் எனலும் ஆம்.

**வியா : பத்தாம் பாட்டு : வண்டு தண் தேன் இத்யாதி**-ஸர்வ பதார்த்தங்களும் உத்தேஶ்ய லாபத்தாலே களித்து வர்த்திக்கும் தேசம் ஆயிற்று. இப்படி இருக்கிற ஸ்ரீவதரியிலே வந்திருக்கிற ஸர்வாதிகனைக் கவிபாடிற்று. **கண்டல் வேலி** - கண்டல் என்று தாழை. கடல் அணித்தாகையாலே தாழைகள் உண்டாய் இருக்குமிறே. பூத்த தாழைகளை வேலியாக உடைத்தான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த மாலை. **கொண்டு தொண்டர் பாடி ஆடக் கூடிடில்** - இவற்றைக்[1] கொண்டு, "வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" என்று இருக்கிறவர்கள் பாடுவது ஆடுவதாகக் கூடிடில். **நீள்விசும்பு** என்கிறது உபரிதந லோகங்களினுடைய ஸமுதாயத்தை. அதில், **அண்டம் அல்லால்** - பரமபதம் அல்லது மற்று அவர்க்கு ஓர் ஆட்சி[2] அறியோம் என்னுதல். அன்றிக்கே, நீள்விசும்பு என்கிறது பரமபதமாய், அதில் அல்லாமல் மற்றோர் அண்டம் அவர்க்கு ஆட்சியாக அறியோம் என்னுதல். ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் இவர் அருளிச்செய்த தோஷம் ப்ரத்யக்ஷித்து அநுபவியாநின்றோம். அவ்வோபாதி பகவத் விஷயமாக இவர் அருளிச்செய்ததும் மெய்யாய் இருக்குமிறே! ஆன பின்பு, இவர் விடச் சொன்னவற்றை[3] விட்டு, இவர் பற்றச் சொன்னவற்றைப் பற்றுகையிறே சேதநராய் இருப்பார்க்குச் செய்ய அடுப்பது.

---

**வி: பத்தாம் பாட்டு : வண்டு தண் தேன் உண்டு வாழும் வதரி நெடு மாலை** – உயிர்கள் எல்லாம் தாம் கருதிய பேற்றினைப் பெற்றுக் களித்து உறையும் இடம். இப்படி இருக்கும் திருவதரியிலே வந்து இருக்கிற பரமனைக் குறித்துப் பாக்கள் புனையப்பட்டன. **கண்டல் வேலி** - கண்டல் என்பது தாழை. கடல் அணித்து இருத்தலின் தாழைகள் உண்டாகி இருக்கும். **மங்கை வேந்தன் கலியன் ஒலி மாலை** - பூத்த தாழைகளை வேலியாக உடைய திருமங்கைக்கு மன்னவரான ஆழ்வார் அருளிச்செய்த மாலை. **கொண்டு தொண்டர் பாடி ஆடக் கூடிடில்** - இவற்றைக் கொண்டு "வழுவிலா அடிமை செய்ய வேண்டும்" (தி. வா. மொ. *3: 3: 1*) என்று இருக்கிறவர்கள் பாடுவது ஆடுவதாகக் கூடிடில். **நீள்விசும்பில்** - நீள்விசும்பு என்பது மேல் உலகங்களின் தொகுதியைக் குறிக்கும். அத் தொகுதியிலே, **அண்டம் அல்லால் மற்று அவர்க்கு ஓர் ஆட்சி அறியோமே** - திருநாடு அல்லாமல் மற்றோர் இடம் அவர்க்கு ஆட்சியாக அறியோம். அல்லது, நீள்விசும்பு என்பது திருநாட்டைக் குறிப்பதாய், அதில் அல்லாமல் மற்றோர் அண்டம் அவர்க்கு ஆட்சியாக அறியோம் என்றும் சொல்லலாம். உலகத்தும், உலகில் தோன்றிய பொருள்களிடத்தும் இவர் கூறிய குற்றங்களைக் கண்கூடாகக் கண்டு அறிகின்றோம். அது போல, இறைவனைக் குறித்து இவர் கூறியதும் மெய்யாய் இருக்கும் அன்றோ! ஆன பின்பு, இவர் விடச் சொன்னவற்றை விட்டு, இவர் பற்றச் சொன்னவற்றைப் பற்றுவது அன்றோ அறிவுடையராய் இருப்பார்க்குச் செய்வதற்குத் தக்கது.

*(30)*

---

1. இவைத்தை. 2. காட்சி. 3. சொன்னவைத்தை.

## முதற்பத்து - நான்காம் திருமொழி - ஏனமுன்னாகி

பிர : ஸ்ரீபதரி என்றும் பதரிகாஶ்ரமம் என்றும் இரண்டு திருப்பதியாய், அதில் இங்குத்தை இருப்பாகிறது ப்ரஜையினுடைய ரக்ஷணத்துக்கு உறுப்பாகத் தாய் குடிநீர் குடிக்குமோபாதி இவை தன்னை வழிபடுகைக்கு[1] உறுப்பாகத் தான் தபஸ்ஸுபண்ணி ஹித காமனாய் இருக்கிற இடமாய், சென்று ஆஶ்ரயிக்கும் நம் குறையே குறையாக, ஆஶ்ரயணீயனானவன் தன் குறை அறுத்துக்கொடு[2] இருக்கிற இடமாய் இருந்தது. ஆன பின்பு, நாம் அங்கே போய் ஆஶ்ரயிப்போம் என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார்.

இங்குத் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிற இடம் உண்டோ என்னில், கீழே, "**வதரி வணங்குதும்**" என்றும், "**அறிதியாகில் நெஞ்சம்**" என்றும் சொல்லிக்கொடு போந்து, இதிலும், "**துணிவு இனி உனக்குச் சொல்லுவன் மனமே**" என்று முடியத் திருவுள்ளத்தைக் குறித்துச் சொல்லிற்றாயிறே இருக்கிறது.

கீழ் தாம் பெற்றதாகச் சொல்லி அர்த்தாநுஸந்தாநம் பண்ணிப் போந்த மந்த்ர ப்ரதனான நாராயணன் வந்து இருக்கிற தேசமாய் இருக்குமிறே!

---

**தோ :** திருவதரி என்றும், திருவதரிகாச்சிராமம் என்றும் இரு திருத் தலங்கள் உண்டு. அவற்றுள் இங்கு இருக்கும் இருப்பு, குழந்தையின் நலத்திற் காகத் தாய் குடிநீர்[3] குடிப்பது போன்று இவ்வுயிர்கள் தன்னை வழிபடுவதற்கு உறுப்பாகத் தான் தவம் இயற்றி நலம் இழைப்பதில் நாட்டமுடையவனாய் இருக்கும் இருப்பாகும். மேலும் அங்குச் சென்று வணங்க வேண்டுவது நம் கடமையாய் எஞ்சி நிற்கப் பற்றப்படுபவனாகிய தன்னிடம் குறையொன்றும் இன்றி இருக்கும் இடமும் ஆகும். அவ்வாறு அமைந்த பின்னர், நாம் அங்கே போய் அவனை வணங்குவோம் என்று தம் நெஞ்சு நோக்கிக் கூறுகிறார்.

இத்திருமொழியை ஆழ்வார் தம் நெஞ்சு நோக்கிச் சொல்வதாகக் கூறுவ தற்கு இடம் இல்லாதவாறு தோன்றுகிறதே என்னில், அவ்வாறு அன்று; கீழ்த் திருமொழியில், "வதரி வணங்குதும்" (பெ. தி. 1: 3: 1) என்றும், "அறிதியாகில் நெஞ்சம்" (பெ. தி. 1: 3: 3) என்றும் சொல்லிக்கொண்டு வந்து, இதிலும், "துணிவு இனி உனக்குச் சொல்லுவன் மனமே" (பெ. தி. 1: 4: 4) என்று கூறுவ தால், இவை முழுவதும் அவர் தம் திருவுள்ளத்தைக் குறித்துப் பேசுவதாக அன்றோ அமைந்துள்ளன.

கீழ்த் திருமொழிகளில் ஆழ்வார் தாம் பெற்றதாகச் சொல்லி, பொருளைச் சிந்தித்துப் போந்த மறைமொழியினைத் தந்த நாராயணன் வந்திருக்கும் இடமன்றோ இது! இத்திருமொழியில் அவன் உறைகின்ற இடத்தைச் சொல்லு கிறார்.

---

1. இவைதன்னை வழிப்படுத்துகைக்கு. 2. அறுத்துக்கொண்டு.
3. குடிநீர் - மூலிகைகள் இட்டுக் காய்ச்சப்பட்ட நீர்; 'கஷாயம்' என்பர்.

## 31

ஏனமுன் ஆகி இருநிலம் இடந்தன்று
இணையடி இமையவர் வணங்கத்
தானவன் ஆகம் தரணியிற் புரளத்
தடஞ்சிலை குனித்தஎன் தலைவன்
தேனமர் சோலைக் கற்பகம் பயந்த
தெய்வநன் நறுமலர் கொணர்ந்து
வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல்
வதரியாச் சிராமத்துள் ளானே.

ப. ரை : **முன் ஏனம் ஆகி இரு நிலம் இடந்து** - முற்காலத்தில் பன்றி வடிவம் கொண்டு பெரிய மண்ணுலகைக் குத்தி எடுத்து, **தன் இணை அடி இமையவர் வணங்க** - அதுகண்டு, தன்னுடைய ஒன்றுபோல் அமைந்த இரண்டு திருவடிகளையும் பிரமன் முதலான வானவர்கள் வணங்க இருந்தவனும், **தானவன் ஆகம் தரணியில் புரள** - இராவணனுடைய உடம்பு மண்ணில் புரளும் படியாக, **தடம் சிலை குனித்த** - பெரிய வில்லை வளைத்தவனும் ஆகிய, **என் தலைவன்** - எனக்கு நாயகன் ஆகிய பெருமான், **தேன் அமர் சோலைக் கற்பகம் பயந்த** - தேன் மிக்குச் சோலையாக உள்ள கற்பகமரம் பூத்த, **தெய்வ நன் நறு மலர் கொணர்ந்து** - தெய்வத்தன்மை பொருந்திய நல்ல மணம் மிக்க பூக்களைக் கொண்டு வந்து, **வானவர் வணங்கும்** - தேவர்கள் வணங்குகின்ற, **கங்கையின் கரைமேல்** - கங்கையின் கரைப்பகுதியில் உள்ள, **வதரியாச்சிராமத்து உள்ளான்** - திருவதரியாச்சிராமம் என்னும் இடத்தில் வந்து எழுந்தருளியிருக்கிறான்.

சி. கு : இமையவர் வணங்க என்பது நடுநிலைத் தீவகம்; "இமையவர் வணங்க ஏனமாகி" என்றும், "இமையவர் வணங்கத் தடஞ்சிலை குனித்த" என்றும் இயையும். தானவன் - அவுணன்; ஈண்டு இராவணனைக் குறித்தது. வணங்கும் என்பதனைக் கங்கையோடோ வதரியாச்சிராமத் தோடோ கூட்டலாம். வதரியாச்சிராமம் - இத்தலம் இமயமலையில் உள்ளது. பெருமான் பதரி நாராயணன்; பிராட்டி அரவிந்தநாயகி.

இத்திருமொழி விளம் மா விளம் மா விளம் விளம் மா என்னும் வாய்பாட்டில் அமைந்த எழுசீர் ஆசிரிய விருத்தம்.

வியா : **முதற் பாட்டு : ஏனம் முன் ஆகி இத்யாதி - முன் ஏனம் ஆகி** - வராஹ கல்பத்தினுடைய **ஆதியிலே, அண்டபித்தியிலே புக்குச் சேர்ந்து**

---

வி : முதற் பாட்டு : ஏனம் முன் ஆகி இரு நிலம் இடந்து - முன் ஏனமாகி - வராக ஊழியினுடைய தொடக்கத்திலே அண்டத்தின் சுவரோடு புக்குச் சேர்ந்து

---

**31.** 4 : 6 சிரமத்துள்.

பரப்புடைத்தான பூமியை, அத்தை எடுக்கைக்கு ஈடான செருக்கையுடைய மஹாவரா ஹமாய் எடுத்துக்கொண்டு. **அன்று இணை அடி இமையவர் வணங்க** - அப்போது அந்த உளைமயிர்களிலே ஒதுங்கிக் கிடந்த ப்ரஹ்மாதிகள், சேர்த்தி[1] அழகை உடைத்தான திருவடிகளை ஆஶ்ரயிக்க. **"ஸுகவிகடஸடாஸங்கடை:** என்னக்கடவதிறே. **தானவன் இத்யாதி** - இப்போது தானவன் என்கிறது ராவணனை. **"தையலாள்மேல் காதல் செய்த தானவன் வாளரக்கன்"** என்னக்கடவதிறே. தநுவினுடைய வம்சஜன் என்று தானவன் என்கிறதாதல். ஆஸுரமான வ்யாபாரங்களை உடையவன் என்றாதல். ராவணனுடைய வராதி களாலே பூண்கட்டி இருக்கிற சரீரமானது அம்பு தைச்சு பூமியிலே புரளும்படியாக. **தடம் சிலை இத்யாதி** - **"மஹத் தநு:"** என்கிறபடியே அளவுடைத்தான வில்லை வளைத்த. **என் தலைவன்** - வீர ரஸத்தில் ப்ரதாநனான என் நாயன்.

**தேன் அமர் இத்யாதி** - ராவணனுடைய மிடுக்காலே கல்பக வ்ருக்ஷத் தினுடைய பூவைப் பணிப்பூ இட்டுத் திரிவர்கள் ஆயிற்று, தேவர்கள் முன்பு; அவன்

---

*கிடந்த பரப்புடைத்தான மண்ணுலகை, அதனை எடுப்பதற்குத் தக்க செருக் குடைய பெரும் பன்றியாய் வடிவு கொண்டு அதனை எடுத்துக்கொண்டு.* **அன்று இணை அடி இமையவர் வணங்க** - *அப்போது அந்த உளைமயிர்களிலே*[2] *ஒதுங்கிக் கிடந்த பிரமன் முதலிய தேவர்கள் பெருமானது சேர்த்தியழகையுடைய திருவடி களை வணங்க.* **"நற்புலவர்க்குப் புனைந்துரைத்தற்கு உரியதாய் அமைந்த உளை மயிர்களிலே நெருங்கி இருக்கிறவர்கள்"** *என்பது கொண்டு தேவர்கள் உளை மயிரில் ஒதுங்கி இருந்தனர் என்பதனை உணரலாம்.* **தானவன் ஆகம் தரணியில் புரள** - *ஈண்டுத் தானவன் என்பது இராவணனை.* **"தையலாள்மேல் காதல் செய்த தானவன் வாளரக்கன்"** *(பெ. தி. 2: 2: 2) என்று வருவது கொண்டு இராவணனையும் தானவனாகச் சொல்வது உண்டு என்பது போதரும். தனு என்பானது மரபில் வந்தவன் என்பதால் தானவன் என்று குறிக்கப்படுகிறான் என்க. அல்லது, அசுரத்தன்மை பொருந்திய செயல்களை உடையவன் என்பதால் அசுரனைக் குறிக்கும் தானவன் என்னும் சொல்லால் கூறப்படுகிறான் என்க. இராவணனது வரம் முதலியவற்றாலே பூண்கட்டி இருக்கும்*[3] *உடம்பானது அம்பு தைத்து மண்ணில் புரளும்படியாக.* **தடம் சிலை குனித்த** - **"பெரிய சிலை"** *(ரா. யு. 100 : 12) என்பதற்கு ஏற்ப அளவுடைய*[4] *வில்லை வளைத்த.* **என் தலைவன்** - *வீரச்சுவையில் முதன்மையாக இருக்கும் என் நாயன்*[5].

**தேன் அமர் சோலைக் கற்பகம் பயந்த தெய்வ நன் நறு மலர் கொணர்ந்து, வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளானே** - *முன்பு தேவர்கள் இராவணனது மிடுக்குக் கருதிக் கற்பக மரத்தின் பூக்களை அவன்பால் பணிப்பூ இட்டுத்*[6] *திரிந்தனர். அவன் தலை அறுக்கப்பட்ட பின்பு, அதனை*

---

1. சேற்றி.

2. உளைமயிர் - பிடரிமயிர். 3. பூண் கட்டி இருத்தல் - பாதுகாக்கப்பட்டிருத்தல். தடிக்குப் பூண்கட்டினால் அது பாதுகாப்பாக அமைவது போல வரங்களால் இரணியனுக்குப் பாதுகாப்பு அமைந் திருந்தது. 4. அளவு - பெருமை. 5. நாயன் - தலைவன்; நாயகன். 6. பணிப்பூ இடுதல்- அருச்சனை செய்தல்.

தலை அறுப்புண்டவாறே, அத்தை ப்ராப்த விஷயத்திலே ஆக்கினார்கள் ஆயிற்று. தேன் மிக்குச் சோலை செய்திருந்துள்ள கல்பகமானது உண்டாக்கின, திவ்யமாய், விலக்ஷணமாய், செவ்வியை உடைத்தான பூக்களைக்கொண்டு, தேவர்கள் ஆஶ்ர யிக்கும்படியாக, கங்காதீரத்திலே ஸ்ரீபதரிகாச்ரமத்திலே வந்து ஸந்நிஹிதன் ஆனான்.

---

வகுத்த இடமாகிய இறைவனிடத்திலே செய்தனர். தேன் மிக்குச் சோலையாகத் தழைத்திருக்கும் கற்பக மரம் தந்தனவாய், தெய்வத்தன்மையுடையனவாய், தனியழகுடையனவாய், செவ்வி உடையனவாய் இருக்கும் பூக்களைக்கொண்டு தேவர்கள் வணங்குமாறு கங்கையின் கரையோரத்தில் திருவதரியாச்சிராமத்திலே வந்து அருகில் இருப்பவன் ஆனான்.

**ஒப்புமைப் பகுதி**

1. **இருநிலம் இடந்தவன்**

*" பொருகோட்டோர் ஏனமாய்ப் புக்கிடந்தாய்க்கு"*

*" இத்தால் சொல்லிற்றாயிற்று : உதாரனாய் இருப்பான் ஒருவன் நாலு பேருக்குச் சோறிட நினைத்தால் நாற்பது பேருக்கு இட்டு மிகும்படி சோறுண்டாக்குமாப்போலே, ரக்ஷ்யத்தின் அளவு அன்றிறே ரக்ஷகன் பாரிப்பு"* மு. தி. 9 பெ. உரை.

*[உதாரன் - வள்ளல். ரக்ஷகன் - காப்பவன்.]*

*" தன்பால் ஒரு கோட்டிடைத் தான் கொண்ட,*
*கேழல் திருவுரு"*

*" மஹாப்ருதிவியைத் தன் எயிற்றிலே நீலமணிபோலே கொண்ட; தன் திருவெயிற்றில் ஏகதேசத்திலே கொண்ட. உதாரராய் இருப்பார் நாற்பது பேருக்குச் சோறிட நினைத்து நூறு பேருக்குச் சோறு சமைக்குமாப் போலே ரக்ஷ்யத்தின் அளவு அல்ல காணும் கொண்ட எயிற்றின் பெருமை. முகாந்தரத்தாலே ரக்ஷிக்கையன்றியே, தன் முகேந எடுத்து ரக்ஷித்த படியீறே"* தி. வா. மொ. 7: 5: 5-36

*[ஏக தேசம் - ஒரு பகுதி. ரக்ஷித்தல் - காத்தல்.]*

2. **இராவணன் தேவர்களிடம் பெற்ற பேறு**

*" மாறுசெய்த வாள் அரக்கன்"*

*" ருத்ரன்பக்கல் பெற்ற வாளையும், ப்ரஹ்மா தனக்குக் கொடுத்த ஆயுஸ்ஸை யும் தனக்கு பலமாக விச்வஸித்திருக்கையாலே தன் கையில் வாளிருக்க ஒருவராலும் ஜயிக்க ஒண்ணாது, வரத்தால் வந்த ஆயுஸ்ஸுண்டாய் இருக்க ஒருவரால் கொல்ல ஒண்ணாது என்று இருந்தான் ஆய்த்து"*
தி. ச. வி. 116 பெ. உரை.

3. **தலைவன்**

*" இராவணன்மேல் சரமாரி,*
*தாய்தலை அற்றற்று வீழத் தொடுத்த தலைவன்"*

*" தலைவன் - தீரோதாத்த நாயகன்"* நாச். தி. 5: 3 பெ. உரை.

*[தீரோதாத்தன் - நான்குவகை நாயகர்களுள் முதன்மையானவன், பேருள்ளம் - படைத்தவனாகவும், பெருமிதம் உடையவனாகவும்; அருளாளனாகவும், தற்புகழ்ச்சி அற்றவனாகவும், உறுதிகொண்ட நெஞ்சினனாகவும் இருக்கும் தலைவன்.]*

**4. கங்கையின் பெருமை**

*"கங்கை கங்கை என்ற வாசகத்தாலே கடுவினை களைந்திடகிற்கும் கங்கையின் கரைமேல்........"*

*"ஏதேனும் ஓர் இடத்திலே ஸ்நாநம் பண்ணுமவர்கள் அவகாஹிக்கிற ஜலத்தை கங்கையாக நினைத்து, கங்கையினுடைய 'கங்கை' என்கிற ஶப்தத்தைச் சொல்ல, இந்த வாசகத்தாலே அவர்களுடைய அவஶ்யம் அநுபோக்தவ்யமான பாபத்தை போக்கவல்ல - கங்கை"*

*பெரி. தி. 4:7:1 ம. மா. மு. உரை.*

*[அவகாஹித்தல் - இழிதல்; இறங்குதல்.]*

*(31)*

## 32

**கானிடை உருவைச் சுடுசரம் துரந்து,**
**கண்டுமுன், கொடுந்தொழில் உரவோன்**
**ஊனுடை அகலத் தடுகணை குளிப்ப,**
**உயிர்கவர்ந் துகந்தஎம் ஒருவன்**
**தேனுடைக் கமலத் தயனொடு தேவர்**
**சென்றுசென் றிறைஞ்சிடப் பெருகு**
**வானிடை முதுநீர்க் கங்கையின் கரைமேல்**
**வதரியாச் சிராமத்துள் ளானே.**

ப. ரை : **கானிடை உருவைக் கண்டு** - காட்டில் பொய்ம்மானைக் கண்டு, **சுடுசரம் துறந்து** - சுடும் அம்பை அதன்மேலே ஏவி, **முன்** - முன்பு, **கொடும் தொழில் உரவோன்** - கொடுமையான செயல்களையும் மிடுக்கினையும் உடைய வாலியினது, **ஊனுடை அகலத்து** - தசை நிறைந்த மார்பிலே, **அடுகணை குளிப்ப**- கொலை அம்பானது அழுந்துமாறு செய்து, **உயிர் கவர்ந்து உகந்த எம் ஒருவன்** - அவனது உயிரைக் கவர்ந்து மகிழ்ந்த ஒப்பற்றவனாகிய எம் தலைவன், **தேனுடைக் கமலத்து அயனொடு** - தேனையுடைய திருவுந்தியாகிய தாமரையில் பிறந்த நான்முகனோடு, **தேவர் சென்று சென்று இறைஞ்சிட** - தேவர்கள் ஒருவரை ஒருவர் முந்திக்கொண்டு சென்று வணங்குவதற்கு உறுப்பாக நீராடுவதன்பொருட்டு இறங்கிட, **வானிடை முதுநீர் பெருகு** - வானத்தில் உள்ள பழையதான நீர் மிக்கு வருகின்ற, **கங்கையின் கரைமேல்** - கங்கையின் கரைப்பகுதியில் உள்ள,

---

**32.** 1 : 6 கடுந்தொழில். 2 : 1 ஊனிடை. 3 : 7 பெருகும். 4 : 6 சிரமத்துள்.

**வதரியாச்சிராமத்து உள்ளான்** - திருவதரியாச்சிராமம் என்னும் இடத்தில் எழுந்தருளியிருக்கிறான்.

**சி. கு :** உரு - மான்; ஈண்டு மாயமானாகிய மாரீசனைக் குறித்தது. உரவோன் - வாலி; மாரீசனைச் சுட்டுவதாக உரை கூறுவாரும் உளர். கானிடை, வானிடை - இடை ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வரும் இடைச் சொல். ஊனுடை, தேனுடை - உடைய என்பது உடை எனக்குறைந்து நின்றது.

வியா : **இரண்டாம் பாட்டு : கான் இத்யாதி** - தன்நிலமான காட்டிலே ஸஞ்சரிக்கிற, உரு உண்டு - மான் - மாயாம்ருகம், அத்தைக் கண்டு. **சுடுசரம் துரந்து** - ஒருவர்க்கும் தோற்றாதபடி மறைவது தோற்றுவதாய்த் திரிகிற அத்தைக் கண்டு, பொறுக்க ஒண்ணாதபடியான அம்பைவிட்டு, முன்பு. **கொடும் தொழில் இத்யாதி** - க்ரூரமான செயலை உடையவனான வாலியுடைய தசைந்து[1] அகன்று இருந்துள்ள மார்விலே கொலை அம்பானது அழுந்தும்படி பண்ணி, அவ் வழியாலே அவனுடைய ப்ராணனை அபஹரித்து, "மஹாராஜர் விரோதி போகப் பெற்றோம்" என்று உகந்த அத்விதீயமான பலத்தை உடையவன்.

**தேன் இத்யாதி** - திருநாபிகமலத்தை உத்பத்தி ஸ்த்தாநமாகவுடைய ப்ரஹ்மாவோடே தேவர்களானவர்கள், அஹம் அஹமிகயா விழுந்து[2] ஆச்ரயணத்துக்கு உறுப்பாக ஸ்நாநம் பண்ணப் புக்கவாறே ஒன்றால் குறைதல் நிறைதல் செய்யாதே ஏகரூபமாய் இருக்கக்கடவ ஜலம் பெருகும் ஆயிற்று, திருவடிகள்

---

வி : **இரண்டாம் பாட்டு : கானிடை உருவைச் சுடுசரம் துரந்து கண்டு முன்** - தனக்கு உரிய நிலமான காட்டிலே திரியும் உரு உண்டு. உரு - மான், ஈண்டுப் பொய்ம்மான்; அதனைக் கண்டு. சுடுசரம் துறந்து - ஒருவர்க்கும் தோற்றாதபடி மறைவதும் தோற்றுவதுமாய்த் திரியும் அதனைக் கண்டு பொறுக்க ஒண்ணாதபடி அமைந்த அம்பை விட்டு, முன் - முன்பு. **கொடும் தொழில் உரவோன் ஊனுடை அகலத்து அடுகணை குளிப்ப, உயிர் கவர்ந்து உகந்த எம் ஒருவன்** - கொடுமையான செயலையுடைய வாலியினது தசைந்து அகன்று இருந்த மார்விலே கொலை அம்பானது அழுந்தும்படி பண்ணி, அவ்வழியாலே அவனது உயிரைக் கவர்ந்து, "பேரரசர்க்கு[3] இருந்த பகை நீங்கப் பெற்றோம்" என்று உகந்த ஒப்பற்ற மிடுக்கினை உடையவன்.

**தேனுடைக் கமலத்து அயனொடு தேவர் சென்று சென்று இறைஞ்சிடப் பெருகு வானிடை முதுநீர்** - பெருமானது திருஉந்தியாகிய தாமரையினைத் தனக்கு பிறப்பிடமாகக் கொண்ட பிரமனோடு தேவர்களானவர்கள், 'நான் முந்துற' 'நான் முந்துற' என்று முந்திக்கொண்டு வந்து விழுந்து, வணங்குவதற்கு உறுப்பாக நீராடப் புக்கனர்; புக்கவாறே, ஒன்றால் குறைதல் நிறைதல் செய்யாது ஒருபடிப்பட்டிருக்கும் நீர் பெருகியது, அதற்கு அடி காவிரிக்கு மேற்கு

---

1. தசைஞ்சு. 2. இழிந்து.
3. பேரரசர் - சுக்கிரீவனை, 'மஹாராஜர்' என்று குறிப்பது வைணவ மரபு.

**ஸஹ்யமாகையாலே. வானிடை முதுநீர் - ஆகாசத்திலேயாய்ப் பழைதான நீர் என்றபடி.**

---

*மலை (சைய மலை) போலே கங்கைக்குப் பெருமான் திருவடிகள் தோன்றுமிடமாய் இருத்தல் ஆகும்.* **வானிடை முதுநீர்** *- வானத்தில் உள்ள பழையதான நீர்.* **இத்தகு, கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளான்.**

**ஒப்புமைப் பகுதி**

**மாய மான்**

*" பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாட"*

*" மாயாவியான மாரீசன் இதுக்கு முன்பு லோகத்தில் கண்டறியாதது ஒரு வடிவை எடுத்துக்கொண்டு வந்தானாகையாலே, பொன்போல் இருக்கிற நிறத்தையும் நாநா ரத்நங்கள் போல் இருக்கிற புள்ளிகளையும் மற்றும் அநேகம் வைசித்ரியையும் உடைத்தாய் இருப்பது ஒரு மானானது, எழுந்தருளியிருக்கிற ஆஶ்ரமத்தின் முன்னே வந்து மநோஹரமாம்படி நின்று துள்ளித் துள்ளி விளையாட"*

*[வைசித்ரி - புதுமை]* *பெரி. தி. 3:10:7 ம. மா. மு. உரை.*

*(32)*

## 33

**இலங்கையும் கடலும் அடல்அருந் துப்பின்**
**இருநிதிக் கிறைவனும் அரக்கர்**
**குலங்களும் கெடமுன் கொடுந்தொழில் புரிந்த**
**கொற்றவன் கொழுஞ்சுடர் சுழன்ற**
**விலங்கலில் உரிஞ்சி மேல்நின்ற விசும்பில்**
**வெண்துகில் கொடியென விரிந்து**
**வலந்தரு மணிநீர்க் கங்கையின் கரைமேல்**
**வதரியாச் சிராமத்துள் ளானே.**

**ப. ரை : இலங்கையும் கடலும்** - *இலங்கையும் கடலும்,* **அடல் அருந் துப்பின்-** *ஒருவராலும் வெல்ல ஒண்ணாத மிடுக்கை உடையவனாய்,* **இருநிதிக்கு இறைவனும்** *- பெரும் செல்வக் கிடப்புக்குத் தலைவனாய் இருந்த இராவணனும்,* **அரக்கர் குலங்களும் கெட** *- அரக்கர் கூட்டமும் அழியும்படியாக,* **முன் கொடுந் தொழில் புரிந்த கொற்றவன்** *- இராமாவதாரத்தில் கொடிய செயல்களைச் செய்த அரசனாகிய பெருமான்,* **கொழுஞ் சுடர் சுழன்ற** *- ஞாயிறு வலம் வருகின்ற,* **விலங்கலில் உரிஞ்சி** *- மேருமலையிலே விழுந்து மோதி,* **மேல் நின்ற விசும்பில்** *- மேலே உள்ள வானத்தில்,* **வெண்கொடித் துகிலென விரிந்து** *- வெண்மையான கொடியாடையைப்போலப் பரந்து,* **வலம் தரு மணி நீர்** *- வேகத்தாலே மிடுக்குடைத்தாய்த்*

---

**33.** 2 : 7 சுழன்று. 3 : 3 மேல்நின்று. 4 : 6 சிரமத்துள்.

தெளிந்திருக்கிற நீர் நிறைந்த, **கங்கையின் கரை மேல்** - கங்கையின் கரைப் பகுதியில் உள்ள, **வதரியாச்சிராமத்து உள்ளான்** - திருவதரியாச்சிராமம் என்னும் இடத்தில் எழுந்தருளியிருக்கிறான்.

**சி. கு :** துப்பு - வலிமை. இருநிதிக்கு இறைவன் - இராவணன்; குபேரனை வென்று சங்கநிதி பதுமநிதிகளைப் பெற்றான் ஆதலின், பெருஞ்செல்வன் ஆனான்.

**வியா : மூன்றாம் பாட்டு : இலங்கையும் இத்யாதி** - ஒருவரால் அழிக்க ஒண்ணாதபடியான லங்கையும், அதுக்கும் அகழாம்படி இருக்கிற கடலும், ஒருவரால் அடர்க்க அரிய ஸாமர்த்யத்தை உடையனாய், ஜ்யேஷ்டனான வைஶ்ரவணனை வென்று வாங்கின சங்கநிதி பதுமநிதிகளை உடையனாய் இருக்கிற ராவணனும், அவனுக்கு பலமான ராக்ஷஸ ஜாதி அடையவும்[1] மண்ணுண்ணும்படியாக, பண்டு க்ரூரமான வ்யாபாரங்களைப் பண்ணின ராஜாவானவன். **"இக்ஷ்வாகூணாம் இயம் பூமிஸ் ஸசைல வந காநநா"** என்னக் கடவதிறே.

**கொழுஞ் சுடர் இத்யாதி** - ஆதித்யனானவன் சுழல வாராநின்று இருந்துள்ள மேருவிலே தாக்கி, மேல்நின்ற, விசும்பிலே - ஆகாசத்திலே, வெளுத்த நிறத்தை உடைத்தான கொடியாடையை விரித்தாப் போலே இது வந்து விழும் போதை நீர்த்தெளிவு இருக்கும்படி. **வலம் தரு மணி நீர்** - வேகத்தாலே மிடுக்கை உடைத்தாய்த் தெளிவை உடைத்தாய் இருக்கும் ஆயிற்று.

---

**வி : மூன்றாம் பாட்டு : இலங்கையும் கடலும் அடல் அருந் துப்பின் இரு நிதிக்கு இறைவனும் அரக்கர் குலங்களும் கெட முன் கொடும் தொழில் புரிந்த கொற்றவன்** - ஒருவரால் அழிக்க ஒண்ணாத வகையில் அமைந்தது இலங்கை; அதற்கு அகழாக இருப்பது கடல்; இவற்றோடு ஒருவரால் அடர்க்க அரிய வலிமையையும், அண்ணனான குபேரனை வென்று வாங்கிய சங்கநிதி பதும நிதிகளையும் உடையனாய் இருப்பவன் இராவணன். அவனையும் அவனுக்கு வலிமையாய் அமைந்த அரக்கர் கூட்டத்தையும் மண்ணுண்ணும்படியாகப்[2] பண்டு கொடுமையான செயல்களை இயற்றிய அரசனானவன். **"மலைகள், சிறுகாடுகள், பெருங்காடுகள் ஆகிய இவற்றுடன் கூடிய இந்நாடு இட்சுவாகு குலத்தவருடையது"** *(ரா. கி. 18:6)* என்பதால் இராமன் கொற்றவனாய் விளங்கியமை போதரும்.

**கொழுஞ் சுடர் சுழன்ற விலங்கலில் உரிஞ்சி மேல் நின்ற விசும்பில் வெண் துகில் கொடியென விரிந்து வலம்தரு மணிநீர்க் கங்கையின் கரைமேல் வதரியாச் சிராமத்துள்ளானே. கொழும் சுடர் சுழன்ற விலங்கலில் உரிஞ்சி** - ஞாயிறு வலம் வரும்படி நின்ற மேருவிலே தாக்கி. **மேல் நின்ற விசும்பில் வெண் துகில் கொடி என** - விசும்பு - வானம். மேல் நின்ற வானத்திலே வெளுத்த நிறத்தை உடைத்தான கொடியாடையை விரித்தாற்போலே. இஃது அக்கங்கையாறு விழும்போது நீர்த்தெளிவு இருக்கும் தன்மையைக் கூறுகிறது. **வலம் தரு மணி நீர்** - வேகத்தாலே மிடுக்கை உடைத்தாய்த் தெளிவை உடைத்தாய் இருக்கும் நீர். இத்தகைய **கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளான்.**

---

1. ஜாதியாக.
2. மண்ணுண்ணும்படி - அழியும்படி.

**ஒப்புமைப் பகுதி**

**அரக்கர் குலம் அழிந்தமை**

*" அலம்பா வெருட்டாக் கொன்றுதிரியும் அரக்கரைக்*
*குலம்பாழ் படுத்துக் குலவிளக்காய் நின்ற கோன்மலை"*

*" குலம்பாழ்படுத்து - அவர்களை நிரஸிக்கிற இடத்தில் அவர்கள் தங்கள் "அளவன்றிக்கே மறுகிளையறும்படி குட்டிக்கொலையாக அறுத்துப் பொகடுகையாலே, குலமாகப் பாழ்பட்டுப் போம்படி பண்ணி, ஸ்ரீவிபீஷணனும் அவனோடே சேர்ந்தவர்களும் அவர்களுக்குக் கூட்டு அல்லர்களிறே. 'பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானை' என்றது 'நல்லஅரக்கரும் உண்டு' என்றுதிருவுள்ளம்பற்றியிறே. 'இலங்கை அரக்கர் குலம் முருடு தீர்த்தபிரான்' என்றாரிறே ஆழ்வாரும். ஜந்மம் அதுவானாலும் அதுக்கு ஈடான வ்யாபாரம் இல்லாதபோதே அவர்களில் வ்யாவ்ருத்தனாய் விடுமிறே. 'விபீஷணஸ்து தர்மாத்மா நதுராக்ஷஸ சேஷ்டித:' என்றார்களிறே அவர்கள் தாங்களே. 'ஆக்யாஹி மமதத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்' என்று இக்ஷ்வாகுவம்ஶ்யனாக நினைத்து, பெருமாள் கைக்கொண்டருளினபோதே அந்த ஜந்மந்தானும் மாறிப்போய்த்திறே. ஆகையால், இவ்விடத்தில் சொன்ன அரக்கர் ராவணாதிகளும் அவர்களோடு சேர்ந்தவர்களும். ஆதலால் 'குலம் பாழ்படுத்து' என்னக் குறையில்லை"*

*பெரி. தி. 4:2:1 ம. மா. மு. உரை.*

*[நிரஸிக்கிற - அழிக்கிற. வ்யாபாரம் - செயல். வ்யாவ்ருத்தன் - வேறு பட்டவன். ஜந்மம் - பிறப்பு.]*

*(33)*

## 34

**துணிவினி உனக்குச் சொல்லுவன் மனமே**
**தொழுதெழு தொண்டர்கள் தமக்குப்**
**பிணியொழித் தமரர் பெருவிசும் பருளும்**
**பேரரு ளாளன்எம் பெருமான்**
**அணிமலர்க் குழலார் அரம்பையர் துகிலும்**
**ஆரமும் வாரிவந் தணிநீர்**
**மணிகொழித் திழிந்த கங்கையின் கரைமேல்**
**வதரியாச் சிராமத்துள் ளானே.**

**ப. ரை :** மனமே - ஏ, மனமே! **இனி உனக்குத் துணிவு சொல்லுவன்** - இப்போது உனக்கு உறுதியான நன்மொழி சொல்லுவேன், கேள்; **தொண்டர்கள் தமக்கு** - அடியார்களுக்கு, **பிணி ஒழித்து** - பகையினைப் போக்கி, **அமரர் பெரு**

34. 1: 7 தமக்கும். 4 : 6 சிரமத்துள்.

**விசும்பு அருளும் பேர் அருளாளன் எம்பெருமான்** - *திருநாட்டைத் தரும் பெரிய அருள் நிறைந்தவனாகிய பெருமான்,* **அணி நீர்** - *அழகிய நீரானது,* **மலர் அணி குழலார்** - *மலர்களைப் புனைந்த மயிர்முடியை உடையரான,* **அரம்பையர் துகிலும் ஆரமும் வாரி வந்து** - *விண்ணக மகளிர் ஆடைகளையும் மாலைகளையும் அடித்துக் கொண்டு வந்தும்,* **மணி கொழித்து இழிந்த** - *ஒளி மணிகளைத் தள்ளிக்கொண்டு வந்தும் இழிகின்ற,* **கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளான்** - *கங்கையின் கரைப்பகுதியில் உள்ள திருவதரியாச்சிராமம் என்னும் இடத்தில் எழுந்தருளி இருக்கிறான்.* **தொழுது எழு** - *அவனை வணங்கி உய்யப் பாராய்.*

**சி. கு :** *சொல்லுவன் - தன்மை ஒருமை வினைமுற்று. அரம்பையர் - தெய்வப் பெண்கள். சரயு ஆற்றினைக் குறித்துக் கூறும்போது, "மறிவிழி ஆயர் மாதர் வனைதுகில் வாரும் நீரால், பொறிவரி அரவின் ஆடும் புனிதனும் போலும் அன்றே" (கம்ப ராமாயணம் பாலகாண்டம், ஆற்றுப்படலம் 15) எனக் கம்பநாடர் கூறுவது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.*

**வியா : நாலாம் பாட்டு : துணிவு இனி உனக்குச் சொல்லுவன் மனமே தொழுது எழு** - இப்போது உனக்கு உறுதியாக ஒரு நல்வார்த்தை சொல்லுகிறேன் நெஞ்சே! கேள்; சொல்லச்செய்தே பின்னையும் சொல்லாததின் பலமே ஆகாமே, நீ அவனைத் தொழுது உஜ்ஜீவிக்கப் பாராய். "நீர் உறுதியாகச் சொல்லுங்காட்டில், அவன் நம் விரோதியைப் போக்கி நன்மையைத் தருமோ?" என்ன, **பிணி இத்யாதி** - நம் விரோதியையும் போக்கி பரமபதத்தையும் நமக்குத் தரும். ஒருக்கால் ஆஶ்ரயித்தமாத்ரத்திலே, நம் விரோதியைப் போக்கி நித்ய ஸூரிகள் இருப்பை நமக்குப் பண்ணித் தரும் பெரிய க்ருபாவானான ஸர்வேஶ்வரன்.

**அணி இத்யாதி** - க்ருஷ்ணன்படி ஆயிற்று ஜலத்தினுடைய செருக்கு இருப்பது. மலராலே அணியப்பட்ட குழலை உடையரான அப்ஸரஸ்ஸுக்களுடைய பரியட்டத்தையும் ஹாரத்தையும் வாரி அணிகிற நீர் என்னுதல்; அழகிய நீர்

---

**வி : நான்காம் பாட்டு : துணிவு இனி உனக்குச் சொல்லுவன் மனமே தொழுது எழு** - *இப்போது உனக்கு உறுதியாக ஒரு நன்மொழி சொல்லுகிறேன் நெஞ்சே! கேள்; சொல்லிவைத்தும் பின்பு சொல்லி வைக்காததனால் ஏற்படும் விளைவு உண்டாகாதவாறு, நீ அவனைத் தொழுது உய்வடையப் பாராய். "நீர் உறுதியாகச் சொல்லிவிட்டால், அவன் நம் பகையைப் போக்கி நன்மையைத் தருவானோ?" என்று வினவின், 'தருவான்' என்கிறார்.* **தொண்டர்கள்தமக்குப் பிணி ஒழித்து அமரர் பெரு விசும்பு அருளும் பேர் அருளாளன் எம்பெருமான்** - *நம் பகையையும் போக்கித் திருநாட்டையும் நமக்குத் தரும். ஒருமுறை வணங்கிய அளவிலே, நம் பகையைப் போக்கி அயர்வறும் அமரர்கள் இருப்பை நமக்குப் பண்ணித் தரும் பெருங் கருணையாளனான முதலாய முதல்வன்.*

**அணி மலர்க் குழலார் அரம்பையர் துகிலும் ஆரமும் வாரி வந்து அணி நீர்** - *கிருட்டிணனின் செருக்குப் போன்று நீரின் செருக்கும் இருக்கிறது. மலராலே அணியப்பட்ட குழலையுடைய விண்ணக மகளிர்தம் ஆடையினையும், மாலை*

என்னுதல். இவற்றைத்[1] திரட்டிக்கொண்டு தர்சநீயமான நீரானது ரத்நங்களைக் கொழித்துக்கொண்டு வந்து இழியாநின்றுள்ள வதரியாச்சிராமத்து உள்ளானை. தொழுது எழு என்கிற இது இத்திருமொழிக்கு எல்லாம் க்ரியை.

---

யினையும் வாரிக் கரையை அணி செய்யும் நீர் என்னலாம்; அல்லது, அழகிய நீர் என்றும் கூறலாம். மணி கொழித்து இழிந்த கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளானே - இவற்றைத் திரட்டிக்கொண்டு கண்ணுக்கு இனிய நீரானது ஒளிமணிகளைக் கொழித்துக்கொண்டு வந்து இழிகின்ற வதரியாச்சிராமத்து உள்ளானை. தொழுது எழு - இஃது இத்திருமொழிக்கு எல்லாம் வினைமுடிபு.

(34)

## 35

பேயிடைக் கிருந்து வந்தமற் றவள்தன்
பெருமுலை சுவைத்திடப் பெற்ற
தாயிடைக் கிருத்தல் அஞ்சுவன் என்று
தளர்ந்திட வளர்ந்தஎன் தலைவன்
சேய்முகட் டுச்சி அண்டமும் சுமந்த
செம்பொன்செய் விலங்கலில் இலங்கு
வாய்முகட் டிழிந்த கங்கையின் கரைமேல்
வதரியாச் சிராமத்துள் ளானே.

ப. ரை: வந்த பேய் இடைக்கு இருந்து - அசோதை போல ஒப்பித்து வந்த பூதனையினுடைய மடியிலிருந்து, மற்று அவள் தன் பெரு முலை சுவைத்திட - அதற்கு மேலே அவளுடைய பெரிய முலையை உண்ண, பெற்ற தாய் - அதனைக் காணப்பெற்ற வளர்ப்புத் தாயான அசோதை, இடைக்கு இருத்தல் அஞ்சுவன் என்று - பூதனையின் மடியிலே பொருந்தியிருக்கும் இருப்பைக் கண்டு அஞ்சினேன் என்று சொல்லி, தளர்ந்திட வளர்ந்த என் தலைவன் - கூசி வளர்க்க வளர்ந்த என் தலைவன், சேய் முகட்டு உச்சி - உயர்ந்த சிகரத்தின் உச்சியிலே, அண்டம் சுமந்த - அண்டத்தைத் தாங்குகிற, செம் பொன் செய் விலங்கலில் - சிவந்த பொன்னாலே செய்யப்பட்ட மேரு மலையிலே, இலங்கு வாய் முகட்டு இழிந்த - விளங்குகின்ற இடம் உடைத்தான உச்சியிலிருந்து விழுகிற, கங்கையின் கரைமேல் - கங்கையின் கரைப்பகுதியில் உள்ள, வதரியாச்சிராமத்து உள்ளான் - திருவதரியாச்சிராமம் என்னும் இடத்தில் வந்து எழுந்தருளி இருக்கிறான்.

சி. கு: அஞ்சுவன் - தன்மை ஒருமை வினைமுற்று. அசோதை, பெற்ற தாயாகாவிடினும் அப்படி நினைக்கப்பட்டவள் ஆதலின் பெற்ற தாய் என்றார். விலங்கல் - மலை; ஈண்டு மேருமலையைக் குறித்தது.

---

1. இவைத்தை.

**35.** 1 : 3 வந்துமற். 3 : 4 சுமந்து. 4 : 6 சிரமத்துள்.

**வியா : அஞ்சாம் பாட்டு : பேய் இத்யாதி** - வந்த பேய் இடைக்கு இருந்து - யசோதைப் பிராட்டியுடைய வடிவைக்கொண்டு வந்த பூதனையுடைய மடியிலே இருந்து அதுக்கு மேலே அவளுடைய பெரிய முலையை உண்டிட. **பெற்ற தாய் இத்யாதி** - இத்தைக் கண்ட யசோதைப்பிராட்டியானவள், நாம் மடியிலே வைத்து முலைகொடுத்துப் போந்த வாஸனைகொண்டு[1] இவன், கண்ட பாதகராய் நம்மை அநுகரித்து வந்தார் மடியிலே பொருந்தி அவர்கள் முலை உண்கிறது என்று கூசி அவள் பரிந்து வளர்க்க வளர்ந்த என் தலைவன்.

**சேய் இத்யாதி** - ஓங்கி இருந்துள்ள சிகரத்தினுடைய உச்சியிலே அண்டத்தைத் தரிக்கிற சிவந்த பொன்னாலே செய்யப்பட்ட மேருவிலே விளங்காநின்றுள்ள இடம் உடைத்தான சிகரத்தில்நின்றும் இழிந்த கங்கையின் கரைமேலே வதரியாச்சிராமத்திலே வந்து ஸந்நிஹிதன் ஆனான்.

---

வி : அஞ்சாம் பாட்டு : பேய் இடைக்கு இருந்து வந்த மற்று அவள் தன் பெரு முலை சுவைத்திட - *வந்த பேய் இடைக்கு இருந்து - அசோதைப்பிராட்டியின் வடிவைக்கொண்டு வந்த பூதனையின் மடியில் இருந்து, அப்படி இருந்ததோடு அல்லாமல் அவளுடைய பெரிய முலையை உண்டிட.* பெற்ற தாய் இடைக்கு இருத்தல் அஞ்சுவன் என்று தளர்ந்திட வளர்ந்த என் தலைவன் - *இதனைக் கண்ட அசோதைப்பிராட்டி, நாம் மடியிலே வைத்து முலை கொடுத்துப் போந்தோம்; அந்தப் பயிற்சியாலே இவன் நம்மைப் போன்று வடிவு புனைந்து வந்த கண்ட கொடியவர் மடியிலும் பொருந்தி அவர் முலை உண்ணலானான் என்று கூசிப் பரிந்து வளர்த்தாள்; அப்படி அவள் வளர்க்க வளர்ந்த என் தலைவன்.*

சேய் முகட்டு உச்சி அண்டமும் சுமந்த பொன் செய் விலங்கலில் இலங்கு வாய் முகட்டு இழிந்த கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளானே - *ஓங்கிய முகட்டின் உச்சியிலே அண்டத்தைத் தாங்கி நிற்கிறது சிவந்த பொன்னாலே செய்யப்பட்ட மேருமலை; அதில் விளங்குகின்ற இடம் உடைத்தான[2] உச்சியினின்றும் இழிகிறது கங்கை; அதன் கரைமேலே வதரியாச்சிராமத்திலே வந்து அருகில் இருப்பவன் ஆனான்.*

*(35)*

## 36

**தேரணங் கல்குல் செழுங்கயற் கண்ணி**
**திறத்தொரு மறத்தொழில் புரிந்து**
**பாரணங் கிமிலே றேழுமுன் அடர்த்த**
**பனிமுகில் வண்ணன்எம் பெருமான்**
**காரணம் தன்னால் கடும்புனல் தகைத்த**
**கருவரை பிளவெழக் குத்தி**
**வாரணம் கொணர்ந்த கங்கையின் கரைமேல்**
**வதரியாச் சிராமத்துள் ளானே.**

---

1. வாஸனையாலே.
2. இடம் உடைத்தாதல் - அகன்று இருத்தல்.

**36.** 3 : 4 கயத்த. 4 : 6 சிரமத்துள்.

**ப. ரை :** முன் - *முற்காலத்தில்,* **தேர் அணங்கு அல்குல்** - *தேர்த் தட்டானது வருந்தி ஒப்பாகும் இடைப்பகுதியினையும்,* **செழும் கயல் கண்ணி திறத்து** - *அழகிய கயல் போலும் கண்களையும் உடையவளான நப்பின்னையைப் பெறுதற்காக,* **ஒரு மறத்தொழில் புரிந்து** - *ஒரு வீரச்செயல் செய்து,* **பார் அணங்கு இமில் ஏறு ஏழு அடர்த்த** - *உலகில் உள்ளார் எல்லாம் அஞ்சும் திமில்களைக் கொண்ட ஏறுகள் ஏழினை அழித்த,* **பனி முகில் வண்ணன்** - *குளிர்ந்த மேகம் போலும் நிறத்தை உடையவனும்,* **எம்பெருமான்** - *எங்களுக்குத் தலைவனுமானவன்,* **காரணம் தன்னால் கடும்புனல் தகைத்த கருவரை** - *பகீரதன் தவம் இயற்றிய காரணத்தால் வந்த கடும்புனலைத் தடுத்த கரிய மலையினை,* **பிளவு எழக் குத்தி** - *அது பிளவுபடும்படியாகக் குத்தி,* **வாரணம் கொணர்ந்த** - *யானைகளைத் தள்ளிக்கொண்டு வந்து இழியும்,* **கங்கையின் கரைமேல்** - *கங்கையின் கரைப்பகுதியில் உள்ள,* **வதரியாச்சிராமத்து உள்ளான்** - *திருவதரியாச்சிராமம் என்னும் இடத்தில் எழுந்தருளி உள்ளான்.*

**சி. கு :** *அணங்குதல் - வருத்துதல்; அணங்கு என்பதற்கு அழகு என்றும் பொருள் கொள்ளலாம். இமில் - முசுப்பு. கடும்புனல் கயத்த என்பது அச்சிடப் பட்ட நூல்களில் காணும் பாடம். ஆனால்,* **'தகைத்த'** *- என்பது திரு மு. ராகவையங்கார் கூறியுள்ள திருத்தம். இஃது ஏற்புடைத்து. தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடியில், (சுவடி வரிசை எண் 654) 'புயறகயதத' என்று காணப்படுகிறது. இதனை, புயல் தகய்த்த - புயல் தகைத்த என்று படித்தல் வேண்டும். இது திரு இராகவையங்கார் திருத்தத்தை உறுதிப்படுத்துகிறது.*

வியா : **ஆறாம் பாட்டு : தேர்** இத்யாதி - தேரானது வருந்தி ஒப்பாகாநின்றுள்ள அல்குலை உடையவளாய் - நிதம்ப ப்ரதேசத்தை உடையவளாய்; அணங்கு என்று நோவுபடுகைக்குப் பேர். தேர்த்தட்டை நிதம்பத்துக்கு ஒப்பாகச் சொல்லக்கடவர்கள். அழகிய கயலோடு ஒத்த கண்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக மறத்தை உடைத்தாய் இருப்பது ஒரு செயலைச் செய்து, பூமியாக நோவுபடும்படியான கருத்துக்களையுடைய ருஷபங்கள் ஏழையும் நிரஸித்து, அநந்தரம் விரோதி போகப்பெற்ற ஹர்ஷத்தாலே, குளிர்ந்த[1] மேகம் போலே இருந்துள்ள வடிவை உடையனாய், அவ்வடிவாலே என்னை அநந்யார்ஹன் ஆக்கினவன்.

---

வி: **ஆறாம் பாட்டு : தேர் அணங்கு அல்குல் செழும் கயல் கண்ணி திறத்து ஒரு மறத்தொழில் புரிந்து, பார் அணங்கு இமில் ஏறு ஏழும் முன் அடர்த்த பனிமுகில் வண்ணன் எம்பெருமான்** - *தேரானது வருந்தி ஒப்பு ஆகும் அல்குலை உடையவள் நப்பின்னை. அல்குலை உடையவள் - இடைப்பகுதியை உடையவள்.* **அணங்கு-** *நோவுபடுவதற்குப் பேர். தேர்த்தட்டை இடைக்கு ஒப்பாகச் சொல்வர். அழகிய கயலோடு ஒத்த கண்களைக் கொண்டவள். அந்த நப்பின்னைப் பிராட்டிக்காக வீரம் மிக்க செயல் ஒன்றைச் செய்தான்; புவியனைத்தும் நோவு படுமாறு இருந்த திமில்களையுடைய எருதுகள் ஏழையும் அழித்தான்; அதன் பின்னர்ப் பகை நீக்கப்பெற்ற மகிழ்ச்சியாலே குளிர்ந்த முகில் போலும் வடிவை உடையவன் ஆனான்; அவ்வடிவாலே என்னைத் தனக்கே உரியவனாய் ஒடிவித்துக் கொண்டான்.*

---

1. குளுந்த.

**காரணம் இத்யாதி** - பகீரதன் கங்கையை அவதரிப்பிக்கிற போது நடுவழியிலே ஒரு மலை தகைந்துகொடு நின்றதாய் அத்தை இரண்டு[1] பிளவாம்படி குத்தி யானைகளையும் உருட்டிக்கொடு இவ்வருகே போந்து இழிந்ததாகச் சொல்லக் கடவது[2]. அதுக்கு அடி என் என்றால், **காரணம் தன்னால்** - தன்னுடைய தபோபலத்தாலே, பஸ்மமாய்க் கிடந்த தன்னுடைய பாட்டன்மாருடைய சுத்யர்த்த மாகக் கங்கையைப் பெற வேணும் என்று தபஸ்ஸு பண்ணினானிறே; அந்தப் பழமையாலே வந்த மிடுக்கையுடைய ஜலத்தை உடைத்தான, கருவரையானது இரண்டு பிளப்பாம்படி குத்தி அங்கு உண்டான ஆனைகளைத் தள்ளிக்கொண்டு வந்து இழிகிற. அன்றிக்கே, அம்மலை தகைந்த அளவிலே இந்த்ரனை நோக்கி தபஸ்ஸு பண்ணினானாய், பின்னை அவன் தன் சதுர்த்தந்தியை இடுவித்து அம் மலை இரு பிளவாம்படி[3] குத்துவித்து, பின்னை அவ்ஆனை கொண்டுவந்ததாக ஒரு ப்ரமாண ப்ரஸித்தி உண்டு. அத்தைச் சொல்லிற்றாகவும் ஆம்.

---

**காரணம் தன்னால் கடும்புனல் தகைத்த கருவரை பிளவு எழக் குத்தி, வாரணம் கொணர்ந்த கங்கை** - *பகீரதன் கங்கையை உண்டாக்கிய போது நடுவழியிலே ஒரு மலை தகைந்துகொண்டு நின்றது; அதனை இரண்டு பிளவாகும்படி குத்தி யானைகளையும் உருட்டிக்கொண்டு இங்கே போந்து இழிந்தது என்பர். அதற்கு அடி[4] என் என்னில், பகீரதன் செய்த தவம் என்கிறார். பகீரதன் தன்னுடைய தவவலிமையாலே, நீறாய்க் கிடந்த தன்னுடைய பாட்டன்மார் நன்னிலை அடைவதற்காகக் கங்கையைப் பெற வேண்டும் என்று தவம் இயற்றினான்; அந்தப் பழமையாலே[5] வந்த மிடுக்கையுடைய நீர் நிறைந்த கங்கை கருவரை யானது இரண்டு பிளவாகுமாறு குத்தியும், அங்கு உள்ள ஆனைகளைத் தள்ளிக் கொண்டும் வந்து இழிகிறது. அல்லது, அம்மலை தகைந்த போது, பகீரதன் இந்திரனை நோக்கித் தவம் புரிந்தான்; பின்னர் இந்திரன் தன் நாற்கொம் பனைக்[6] கொண்டு அம்மலை இரு பிளவாகுமாறு குத்துவித்தான். அதனால் அவ்ஆனை கங்கையைக் கொண்டு வந்ததாகச் சொல்லும் பெருவழக்கும் உண்டு. அதனைச் சொல்லியதாகவும் கொள்ளலாம்.* இத்தகைய, **கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளான்.**

## ஒப்புமைப் பகுதி

1. நப்பின்னையின் கண்ணழகு

*"கெண்டை ஒண்கண் வாசப் பூங்குழல் பின்னை"*

*"கெண்டை ஒண்கண் - கெண்டைபோலே அதிமுக்தமாய் அம்ருதத்தை வர்ஷித்தாப்போலே குளிர நோக்குகிற கண்கள்"*

*தி. வா. மொ. 6:4:2-36*

*"வடிவேல் தடங்கண் மடப்பின்னை"*

*"வேல்போலே ஓராளும் ஒருநோக்கும் நேராய் போக்தாவின் அளவு அல்லாத போக்யதையை உடைத்தான கண்ணை உடையளாய் ஆத்ம குணோபேதையான நப்பின்னைப்பிராட்டி" தி. வா. மொ. 9:8:2-36*

---

1. ரெண்டு. 2. இழிந்ததாக ஒரு ப்ரமாண ப்ரஸித்தி உண்டு. 3. பிளப்பாம்படி.

4. அடி - காரணம். 5. பழமை - பழைய பெருமை. 6. நாற்கொம்பன் - நான்கு கோடுகளை யுடைய ஐராவதம் என்னும் இந்திரனது யானை.

"வென்றி வேற்கண் மாதரார்"

"'ஜிதந்தே புண்டரீகாக்ஷ' என்றும் 'தூது செய்கண்கள்' என்றும் சொல்லுகிறபடியே ஸர்வரையும் கண்களாலே தோற்பிக்கும் தேவரீரையும் தோற்பிக்கவல்ல நோக்கையுடைய நப்பின்னைப் பிராட்டி........"

தி. ச. வி. 92 பெ. உரை.

(36)

## 37

**வெந்திறல் களிறும் வேலைவாய் அமுதும்**
**விண்ணொடு விண்ணவர்க் கரசும்**
**இந்திரற் கருளி எமக்குமீந் தருளும்**
**எந்தைஎம் அடிகள்எம் பெருமான்**
**அந்தரத் தமரர் அடியிணை வணங்க**
**ஆயிர முகத்தினால் அருளி**
**மந்தரத் திழிந்த கங்கையின் கரைமேல்**
**வதரியாச் சிராமத்துள் ளானே.**

ப. ரை : **வேலைவாய் வெந்திறல் களிறும்** - *பாற்கடலில் தோன்றிய மிகுந்த மிடுக்கையுடைய ஐராவதம் என்னும் யானையையும்,* **அமுதும்** - *அமுதத்தையும்,* **விண்ணொடு விண்ணவர்க்கு அரசும்** - *துறக்கத்துடனே தேவர்களுக்கு அரசராய் இருக்கும் இருப்பினையும்,* **இந்திரற்கு அருளி** - *இந்திரனுக்குக் கொடுத்து,* **எமக்கும் ஈந்தருளும்** - *எங்களுக்கும் தன்னைக் கொடுத்து அருள் புரியும்,* **எந்தை** - *எனக்குத் தந்தையாய்,* **எம் அடிகள்** - *எமக்குத் தலைவனாய்,* **எம்பெருமான்** - *எனக்கு இறைவனாய் இருப்பவன்,* **அந்தரத்து அமரர் அடி இணை வணங்க** - *துறக்க உலகத்தில் உள்ள தேவர்கள் திருவடிகளை வணங்கிட,* **ஆயிரம் முகத்தினால் அருளி** - *ஆயிரம் முகங்களால் புகவேண்டும் என்று திருவுள்ளத்தில் கருதிச் சொல்ல,* **மந்தரத்து இழிந்த** - *மந்தரமலையினின்றும் வந்து இழிந்த,* **கங்கையின் கரைமேல்** - *கங்கையின் கரைப்பகுதியில் உள்ள,* **வதரியாச் சிராமத்து உள்ளான்** - *திருவதரியாச்சிராமம் என்னும் இடத்தில் எழுந்தருளி உள்ளான்.*

சி. கு : *எமக்கும் - இறந்தது தழீஇய எச்ச உம்மை. "ஆயிரம் முகத்தினால் அருளி" என்பதில் வரும் அருளி என்னும் 'செய்து' என் எச்சத்தைச் 'செய' என்னும் எச்சமாகத் திரித்துக்கொள்க.*

வியா : **ஏழாம் பாட்டு : வெம் திறல் இத்யாதி** - ஐராவதத்தையும் கடலில் அம்ருதத்தையும் ஸ்வர்க்கத்தையும் அத்தோடேகூட தேவர்களுக்கு ராஜா

---

வி: ஏழாம் பாட்டு : வெம் திறல் களிறும் வேலை வாய் அமுதும் விண்ணொடு விண்ணவர்க்கு அரசும் இந்திரற்கு அருளி - *ஐராவதம் என்னும் யானையையும், கடலில் தோன்றிய அமுதத்தையும், துறக்கஉலகையும், அவற்றோடு தேவர்களுக்கு*

---

**37.** 4 : 6 சிரமத்துள்.

வாய் இருக்கும் இருப்பையும் இந்த்ரனுக்குக் கொடுத்தருளி, எனக்குத் தன்னைத் தந்தருளின. எந்தை - எனக்கு ஜநகன்; எனக்கு ஸ்வாமி; இவற்றாலே[1] என்னை அநந்யார்ஹன் ஆக்கினவன்.

**அந்தரத்து அமரர் இத்யாதி** - ஸ்வர்க்கத்தில் தேவர்கள் திருவடிகளை ஆஶ்ரயிக்க[2], ஒருமுகஞ்செய்து வந்து புகில் கடல் பொறாது என்று பார்த்து, "ஆயிரம் முகத்தாலே போய்ப் புகு" என்று ஸர்வேஶ்வரன் திருவுள்ளமாய் அருள, அப்படி மந்த்ரபர்வதத்தினின்றும் வந்து இழிந்தது ஆயிற்று. அன்றிக்கே, கங்கைதன்னை ஆஶ்ரயிக்க அதுதான் அருளுகையாகவும் ஆம். **ஆயிரம் முகத்தினால்** - மேருவிலே இழிந்து, மந்தரத்திலே இழிந்து, ஹிமவானிலே இழிந்து, இங்ஙனே பல வகைகளாலே வரும் படியைச் சொல்லக் கடவதிறே.

---

*அரசராக இருக்கும் இருப்பையும் இந்திரனுக்குக் கொடுத்தருளினான்;* **கொடுத்து, எமக்கும் ஈந்தருளும்** - *எனக்குத் தன்னைத் தந்தருளிய,* **எந்தை எம் அடிகள் எம் பெருமான்** - *எனக்குத் தந்தை; எனக்குத் தலைவன்; இவற்றாலே என்னைத் தனக்கேயாக ஒடிவித்துக் கொண்டவன்*[3].

**அந்தரத்து அமரர் அடி இணை வணங்க ஆயிரம் முகத்தினால் அருளி மந்தரத்து இழிந்த கங்கை** - *துறக்கத்தில் தேவர்கள் பெருமானுடைய திருவடிகளை வணங்க, ஒருமுகஞ்செய்து வந்து புகில் கடல் பொறாது என்று பார்த்து, "ஆயிரம் முகத்தினாலே*[4] *போய்ப் புகு" என்று பெருமான் திருவுள்ளத்தில் கருதி அதனைக் கங்கையினிடம் தெரிவித்தான்; தெரிவிக்க, அஃது அப்படியே மந்தர மலையினின்றும் வந்து இழிந்தது. அல்லது, கங்கையினை அமரர்கள் வேண்ட அதுதான் அருள் புரிந்தது என்றும் கூறலாம். அப்பொழுது ஆயிர முகத்தினால் என்பது, மேருவிலே இழிந்து, மந்தரத்திலே இழிந்து, பனிமலையிலே இழிந்து, இங்ஙனே பல வகைகளாலே வருவதனைச் சொல்வதாகக் கொள்ளல் வேண்டும். அதன்,* **கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளான்.** *(37)*

## 38

மான்முனிந் தொருகால் வரிசிலை வளைத்த
மன்னவன் பொன்நிறத் துரவோன்
ஊன்முனிந் தவன துடல்இரு பிளவா
உகிர்நுதி மடுத்தயன் அரனைத்
தான்முனிந் திட்ட வெந்திறல் சாபம்
தவிர்த்தவன் தவம்புரிந் துயர்ந்த
மாமுனி கொணர்ந்த கங்கையின் கரைமேல்
வதரியாச் சிராமத்துள் ளானே.

---

1. இவைத்தாலே. 2. ஆச்ரயிக்க அதுக்கு.
3. ஒடிவித்துக் கொள்ளல் - உரிமையாக்கிக் கொள்ளல். 4. ஆயிரம் முகம் - ஆயிரம் பிரிவு.

**38.** 2 : 4 பிளவாய். 4 : 6 சிரமத்துள்.

**ப. ரை :** **ஒருகால் மான் முனிந்து** - *பஞ்சவடியில் இருக்கும்போது மானாக வந்த மாரீசன் மீது சீற்றங்கொண்டு*, **வரிசிலை வளைத்த மன்னவன்** - *கட்டமைந்த வில்லை அதன்மேலே அம்பு செலுத்த வளைத்த அரசனானவனும்*, **பொன் நிற உரவோன் ஊன் முனிந்து** - *பொன் போலும் நிறத்தையுடைய வலி படைத்தவனாகிய இரணியன் உடம்பானது இரு பிளவாகுமாறு*, **உகிர் நுதி மடுத்து** - *நகங்களின் நுனியை மாட்டியவனும்*, **அயன் தான் அரனை முனிந்து இட்ட** - *நான்முகன் தானே உருத்திரன்மீது சீற்றங்கொண்டு கொடுத்த*, **வெந் திறல் சாபம் தவிர்த்தவன்** - *மிகவும் கொடுமையான வசைமொழியைப் போக்கியவனும் ஆகிய பெருமான்*, **தவம் புரிந்து உயர்ந்த மாமுனி** - *தவம் செய்து அதனாலே பிரம இருடியாக உயர்ந்த பெரிய முனிவனாகிய விசுவாமித்திரன்*, **கொணர்ந்த** - *இராமனையும் இலக்குவனையும் அழைத்துக் கொண்டுசென்ற*, **கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளான்** - *கங்கையின் கரைப்பகுதியில் உள்ள வதரியாச்சிராமம் என்னும் இடத்தில் எழுந்தருளி இருக்கிறான்.*

**சி. கு :** *பொன் நிறத்து உரவோன் - இரணியன் என்பதன் தமிழாக்கம். மாமுனி கொணர்ந்த என்பதற்குப் பகீரதமுனி கொணர்ந்த என்று பொருள் கொள்வாரும் உளர்.*

**வியா :** **எட்டாம் பாட்டு : மான் முனிந்து இத்யாதி** - பெருமாளை, "இம்மானைப் பிடித்துத் தர வேணும்'' என்று பிராட்டி அருளிச்செய்ய, இவரும் அதின் பின்னே துடர்ந்து போன இடத்து[1] மாயாம்ருகம் ஆகையாலே அது பிடிதராதே ஒழிய அத்தைச் சீறி, அதின்மேலே தர்சநீயமான வில்லை வளைத்த செருக்கன். **பொன் நிறத்து உரவோன் இத்யாதி** - பொன் போலே இருந்துள்ள நிறத்தையும் மிடுக்கையும் உடையவன் ஆனவன்; ஹிரண்யன் என்றபடி; அவனுடைய துர்மாநத்தாலே வளர்ந்த மாம்ஸத்தைச் சீறி, அதுக்கு ஆஶ்ரயமான உடலானது இரு பிளவாம்படி திருவுகிரினுடைய நுனியை மாட்டி.

**அயன் இத்யாதி :** பிராட்டிதிறத்தில் செய்யுமத்தை ஒரு சிறுக்கன் விஷயத்திலே செய்தான்; அவன் விஷயத்தில் செய்தத்தை[2] துர்மாநியான ருத்ரன்

---

**வி :** *எட்டாம் பாட்டு :* **மான் முனிந்து ஒருகால் வரிசிலை வளைத்த மன்னவன்** - *பெருமாளை,[3] "இம்மானைப் பிடித்துத தர வேண்டும்'' என்று பிராட்டி[4] சொன்னாள்; அவரும் அதன் பின்னே தொடர்ந்து போனார்; அப்படிச் சென்ற இடத்து, அது பொய்ம்மானாகையாலே பிடி தாராமல் ஒழிந்தது; அதனைச் சீறி அதன்மீது அழகிய வில்லை வளைத்து அம்பைச் செலுத்திய செருக்கன்.* **பொன் நிறத்து உரவோன் ஊன் முனிந்து அவனது உடல் இரு பிளவா உகிர் நுதி மடுத்து** - *பொன் போலே இருக்கும் நிறத்தையும் மிடுக்கையும் உடையவன்; இரணியன்; அவனது இறுமாப்பாலே வளர்ந்த தசையைச் சீறி, அதற்கு இடமான உடல் இரு பிளவாகுமாறு திருவுகிரினுடைய நுனியை மாட்டி.*

**அயன் அரனைத் தான் முனிந்திட்ட வெந் திறல் சாபம் தவிர்த்தவன்** - *பிராட்டி திறத்துச் செய்யும் அதனை ஒரு சிறுவன்திறத்துச்[5] செய்தான்; அவன்திறத்துச் செய்ததனைச் செருக்குடையவனான உருத்திரன் பக்கலிலே செய்தான். அஃதாவது,*

---

1. போனடத்து. 2. செய்ததை.
3. பெருமாள் - இராமபிரான். 4. பிராட்டி - சீதை. 5. சிறுவன் - பிரகலாதன்.

விஷயத்திலே செய்தான் ஆயிற்று. முற்பட இவன் செருக்கித் திரிகிறது பொறுக்க மாட்டாமை, 'செய்திடுவானுக்கு' என்று "என் தலையை அறு" என்று அநுமதி பண்ணிப் பின்னையும் தானே, "இப்படிச் செய்தான்" என்று **கபாலீத்வம் பவிஷ்யஸி**" என்று பழியிட்டான் ஆயிற்று. பெற்ற தமப்பன் பகையாக, அவனில் அணிய[1] உறவாய் உதவுமவன் ஆயிற்று.

**தவம் இத்யாதி** - தவம் புரிந்து உயர்ந்த மாமுனி கொணர்ந்த என்கிறது விஶ்வாமித்திரனை. அவன் க்ஷத்ரியனாய் இருக்கச்செய்தேயும் தபோபலத்தாலே ப்ரஹ்ம ரிஷியானானிறே! அவன் பெருமாளையும் இளைய பெருமாளையும் நடத்திக் கொண்டு வந்தது அக்கரையே ஆகையாலே அத்தைச் சொல்லிற்றாகவும் ஆம். தபஸ்ஸைச் செய்து உயர்ந்த என்றபடி. இதுக்கு ஸ்ரீபராங்குசதாசர், "ஜீயா! 'மாமுனி புகன்ற' என்று பாடபேதத்தைப் பண்ணி அதினுடைய ப்ரபாவத்தை பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடு போந்தானிறே! அத்தைச் சொல்லிற்றாகவும் ஆமே?" என்ன, "அதுக்கு நமக்கு பலம் போராது" என்று அருளிச்செய்வர். அன்றிக்கே, பகீரதன் தன்னையே சொல்லுகிறதாய், அவன் கொடுவந்த கங்கை என்னுதல்.

---

*பிரமன் முற்பட உருத்திரன் செருக்கித் திரிவது கண்டு பொறுக்க மாட்டாது அவனை ஒறுத்திட நினைத்தான்; அவனை நோக்கித் "தவறு செய்தவனுக்கு உரிய தண்டனையை அளித்திடல் முறைமை" என்று கூறி, "என் தலையை அறு" என்று இசைவு அளித்தான். இப்படிச் சிவன் தன் தலையை அறுத்த பின்னர்ப் பிரமன் அவனை நோக்கி,* "**தலைஓடு கைகளினின்றும் அகலாத் தன்மையன் ஆவாய்**" *(மா. பு. என்று பழியிட்டான். பெற்ற தகப்பனான பிரமன் பகையாக, அவனைக் காட்டிலும் நெருங்கிய உறவாய் உதவுபவன் ஆனான்.*

தவம் புரிந்து உயர்ந்த மாமுனி கொணர்ந்த கங்கை - *தவம் புரிந்து உயர்ந்த மாமுனி கொணர்ந்த என்பது விசுவாமித்திரனைக் குறிக்கும். அவன் அரசர் குலத்தவனாய் இருந்தபோதிலும் தவப் பயனால் அந்தண இருடியானான் அன்றோ! அவன் இராமனையும் இலக்குவனையும் நடத்திக்கொண்டு வந்தது கங்கைக்கரையிலே ஆகையாலே அதனைச் சொன்னதாகவும் கொள்ளலாம். தவத்தைச் செய்து உயர்ந்த என்றபடி. இதற்குத் திருபராங்குசதாசர் என்பவர் நம்பிள்ளையை நோக்கி, "சீயா! 'மாமுனி புகன்ற' என்று பாடத்தை வேறாகச் சொல்லிக் கங்கையினுடைய பெருமையைப் பிள்ளைகளுக்கு விசுவாமித்திரன் சொல்லிக்கொண்டு போந்தான் அன்றோ! அதனைக் குறித்ததாகக் கொள்ளலாம் அல்லவா?" என்று வினவினார். அதற்கு நம்பிள்ளை, "அப்படிப் பாடத்தைத் திருத்துவதற்கு நமக்கு ஆற்றல் போதாது" என்று விடை இறுத்தார். அல்லாவிடின், பகீரதன் தன்னையே சொல்வதாய், அவன் கொண்டுவந்த கங்கை என்றும் சொல்லலாம்.*

**ஒப்புமைப் பகுதி**

**அரன் சாபம் தீர்த்த பெருமாள்**

*" மாபாவம்விட அரற்குப் பிச்சைபெய்*
*கோபால கோளரி"*

---

1. அண்ணிய.

"மாபாவம் விட - ஆனைக்கும் தனக்குத் தக்க வாதமிறே. அல்லாதாரில் ஜ்ஞாநசக்த்யாதிகளாலே ஓர் ஆதிக்யம் உண்டிறே அவனுக்கு; அவற்றைக் கொண்டு லோககுருவுமாய்த் தனக்குப் பிதாவுமாய் இருக்கிறவன் தலையை அறுத்துப் பாதகியாய் நின்றான்; 'வாமாங்குஷ்ட நகாக்ரேணச் சிந்நம் தஸ்ய சிரோ மயா' என்கிறபடியே. மஹாபாபமானது விடும்படியாக. அரற்குப் பிச்சைபெய் கோபால கோளரி ஏறு - அவன்தான் ஸம்ஹர்த்தாவான வேஷத்தோடே அதிகாரங் குலையாதே நின்று பாபத்தை விளைத்துக்கொள்ள, இவன் அவனுக்கு து:க்க நிவர்த்தகனாய் ஆயிற்று அங்கே இங்கே ஆவிர்ப்பவித்துத் திரிகிற இடத்திலே ஆயிற்று: இவர்கள் எத்தனையேனும் உயரநின்றாலும் அநர்த்தத்தையே சூழ்த்துக் கொள்ளும் இத்தனை; அவன் எத்தனையேனும் தன்னைத் தாழ விட்டாலும் ரக்ஷகனாம் என்கையும் சொல்லுகிறது. கோபாலருடைய மிடுக்கை உடைத்தான ஸிம்ஹபுங்கவம் என்றபடி"

திருவாய்மொழி... 

தி. வா. மொ. 2:2:2-36

[ஆதிக்யம் - பெருமை; ஏற்றம். பாதகி - கொடுஞ்செயல் புரிந்து வீழ்ந்தவன். ஸம்ஹர்த்தா - அழிப்பவன். து:க்க நிவர்த்தகன் - துயரத்தைக் களைபவன். ஆவிர்ப்பவித்து - தோன்றி. அநர்த்தம் - கேடு. ஸிம்ஹபுங்கவம் - ஆண் சிங்கம்.]

"பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும்
நாயகன் அவனே கபால நன்மோக்கத்துக் கண்டு கொண்மின்"

"இவ்அர்த்தத்தைக் (திருமாலே பரம்பொருள் என்னும் உண்மையை) கபால மோக்ஷத்திலே கண்டு கொள்ளுங்கோள். நன்மோக்கம் - எதிரிகளுக்கும் ஸம்ப்ரதிபந்நமான அநீச்வரத்வஹேது என்னுதல்; ஈச்வரன் அவன் துரிதத்தை ஸவாஸநமாகப் போக்கினபடியாதல். கண்டு கொண்மின் - உங்கள் ஆபந்நிவ்ருத்திக்கு ஆபந்நரையோ பற்றுவது, ஆபத்ஸகனை யன்றோ? நீங்கள் பரத்வசங்கை பண்ணுகிற இருவரும் நின்ற நிலையைப் பாரீகோள். தலையறுப்புண்டு நிற்பான் ஒருவனும், தலையை அறுத்துப் பாதகியாய் நிற்பான் ஒருவனுமாயிறே இருக்கிறது. 'பிக்ஷை புக்கான்' என்பது அவனுக்கே பரத்வத்தைச் சொல்லுவதாகில், நீங்கள் எழுதிவைத்த க்ரந்தங்களைப் பார்த்துக் கொள்ளுங்கோள் என்கிறார். 'தத்ர நாராயண ச்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித: ததஸ்தேந ஸ்வகம் பார்ச்வம் நகாக்ரேண விதாரிதம்'. 'விஷ்ணு ப்ரஸாதாத் ஸுச்ரோணி கபாலம் தத் ஸஹஸ்ரதா ஸ்புடிதம் பஹுதா யாதம் ஸ்வப்ந லப்தம் தநம் யதா."

தி. வா. மொ. 4:10:4-36

[ஸம்ப்ரதிபந்நமான - ஒத்துக் கொள்ளப்பட்ட. அநீச்வரத்வஹேது - ஆண்டவன் அல்லனாம் தன்மைக்குக் காரணம். துரிதம் - துன்பம். ஸவாஸநமாக - வேர்ப்பற்றோடே; முற்றுமாக. ஆபந்நிவ்ருத்தி - இடர் நீக்கம். ஆபந்நர் - இடர் உற்றார். ஆபத்ஸகன் - இடரில் துணையாக இருப்பவன். பரத்வ சங்கை - முழுமுதலோ என்னும் ஐயம்.]

"அடைக்கலத் தோங்கு கமலத் தலரயன் சென்னியென்னும்
முடைக்கலத் தூண்முன் அரனுக்கு நீக்கியை"

*" சென்னி இத்யாதி - லோக குருவுமாய், பிதாவுமானவன் தலையை அறுத்துப் பாதகியாய் நின்றான் ஒருவன். தலை அறுப்புண்டு எளிவரவுபட்டு நின்றான் ஒருவன்; இருவருடைய து:க்கத்தையும் போக்கி னான் ஆயிற்று இவன். அயன் சென்னி என்னும் முடைக்கலம் - ப்ரஹ்ம சிரஸ்ஸென்று ஒரு நாம மாத்ரமேயாய் தான் முடைக்கலம் ஆயிற்று. பூதிகந்த பஹுளமாகையாலே கழுகும் பருந்துமாய்த் தொடர்ந்து திரியும் படியாயிற்று ஸஞ்சரிப்பது. முடைக்கலத்தூண் முன் அரனுக்கு நீக்கியை - அதிலே உண்டு திரிகிற இத்தை முன் அரனுக்கு நீக்கினவனை. ஸம்ஹர்த்தாவாய்த் தன் அதிகாரத்தோடே இருக்கச் செய்தே, இவ் எளிவரவுவர, 'நாம் ஒருவனாக்கிக் கார்யம் கொள்வான் ஒருவன், நோவுபட விட்டிருக்க ஒண்ணாது' என்று அவனுடைய து:க்கத்தைப் போக்கினவனை. இத்தால், ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வ க்ஷேத்ரஜ்ஞத்வங் கள் இருவர்க்கும் அவிசிஷ்டம் என்றபடி; ஒருவன் தலை அறுப்புண்டு நின்றான்; ஒருவன் பாதகியாய் நின்றான். இவன் அவர்கள் இருவர்க்கும் வந்த து:க்கத்தைப் போக்கிக் கொண்டு நின்றான்"*

*தி. வி. 86 பெ. உரை.*

*(38)*

## 39

**கொண்டல்மா ருதங்கள் குலவரை தொகுநீர்க்**
**குரைகடல் உலகுடன் அனைத்தும்**
**உண்டமா வயிற்றோன் ஒண்சுடர் ஏய்ந்த**
**உம்பரும் ஊழியும் ஆனான்**
**அண்டமூ டறுத்தன் றந்தரத் திழிந்தங்கு**
**அவனியாள் அலமரப் பெருகும்**
**மண்டுமா மணிநீர்க் கங்கையின் கரைமேல்**
**வதரியாச் சிராமத்துள் ளானே.**

**ப. ரை :** **கொண்டல் மாருதங்கள் குலவரை** - மேகங்கள், **காற்று** வகைகள், **குலமலைகள், தொகுநீர்க் குரைகடல்** - ஒன்றுகூடிய மிகுந்த நீரை உடைத்தாய் ஒலிக்கும் கடல் ஆகிய இவற்றையும், **உலகுடன் அனைத்தும் உண்ட** - புவியோடு மற்றப் பொருள்களையும் உண்ட, **மா வயிற்றோன்** - பெரிய திருவயிற்றை உடைய வனாய், **ஒண் சுடர் ஏய்ந்த உம்பரும் ஊழியும் ஆனான்** - ஒளி வீசும் சந்திரனையும் சூரியனையும் உடைய மேலுலகத்தையும், ஊழிக்காலத்தையும் தனக்கு உறுப்பாக உடையவனாய் இருக்கும் பெருமான், **அன்று** - பகீரதன் கங்கையைத் தோற்றுவிக் கும்போது, **அண்டம் ஊடு அறுத்து** - பிரமனுலகின் இடையே வழி கண்டு, **அந்தரத்து இழிந்து** - விண்ணிலிருந்து கீழ் இறங்கி, **அவனியாள் அலமரப் பெருகும்** - நிலமடந்தையானவள் பொறுக்க ஒண்ணாமல் வருந்தும்படி பெருகுகின்ற, **மண்டு மா மணி நீர்** - நெருங்கி நிறைந்து தெளிந்த நீரையுடைய, **கங்கையின் கரைமேல்** -

*கங்கையின்* கரைப்பகுதியில், வதரியாச் சிராமத்து உள்ளானே - *திருவதரியாச் சிராமம் என்னும் இடத்தில் எழுந்தருளியிருக்கிறான்.*

**சி. கு :** *அண்டம் - உலகம்; ஈண்டுப் பிரமனுலகைச் சுட்டிற்று.*

**வியா : ஒன்பதாம் பாட்டு : கொண்டல் மாருதங்கள்** - மேகங்கள், வாயு ஸ்கந்தம், குலபர்வதங்கள், ஜலராசியை உடைத்தாய் கோஷியாநின்றுள்ள கடல், லோகங்களோடே ஸர்வ பதார்த்தங்களையும் வைக்கப்பட்ட. **மா வயிற்றோன்** - இவற்றை[1] வயிற்றிலே வைத்த இடத்திலும் இவைதான் அளவுபட்டு வயிறே பெருத்து இருக்கை. **"வல் வயிற்றுப் பெருமான்"** என்னக்கடவதிறே. **ஒண் சுடர் இத்யாதி** - சந்த்ர ஸூர்யர்களை உடைத்தான உபரிதந லோகத்தையும், கால விசேஷமான ப்ரளய காலத்தையும், தான் என்று சொல்லலாம்படி ஆனான். இவை ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய் நின்றான்.

**அண்டம் இத்யாதி** - அண்டம் உண்டு, ப்ரஹ்மலோகம்; அதின் நடுவே வழி கண்டு போந்து, அதுக்கு இவ்வருகில் அந்தரிக்ஷத்திலே போந்து இழிந்து, எல்லாவற்றையும்[2] பொறுக்கக்கடவ அவனியாள் உண்டு, பூமி; அவள் பொறுக்க மாட்டாதே தடுமாறும்படி பெருகும் ஆயிற்று. **மண்டு மா மணி நீர்** - எங்கும் ஒக்கப் பரந்து பெருநீராய் அதடையத் தெளிந்து இருப்பதான கங்கையின் கரையிலே.

---

வி : ஒன்பதாம் பாட்டு : கொண்டல் மாருதங்கள் குலவரை தொகுநீர்க் குரைகடல் உலகுடன் அனைத்தும் உண்ட - *மேகங்கள், எழுவகைக் காற்றுத் தொகுதிகள், குலமலைகள், நீர்த்தொகுதியினையுடைய ஒலிக்கும் கடல், உலகங்கள் ஆகியவற்றோடு எல்லாப் பொருள்களும் இட்டு வைத்த.* மா வயிற்றோன் - *இவற்றையெல்லாம் வயிற்றிலே வைத்த போதிலும் இவைதாம் அளவுபட்டு[3] வயிறே பெருத்து இருக்கை.* "வல் வயிற்றுப் பெருமான்" *(தி. வா. மொ. 2:2:7) என்று குறித்தல் காண்க.* **ஒண் சுடர் ஏய்ந்த உம்பரும் ஊழியும் ஆனான்** - *திங்களையும் ஞாயிற்றையும் உடைய வானுலகத்தையும் காலங்களுள் ஒன்றான பெருவெள்ளம் கோக்கும் காலத்தையும், தான் என்று சொல்லும்வண்ணம் ஆயினான். இவற்றைத் தனக்குப் படியாய்த் தான் படிகொளியாய்[4] நின்றான்.*

அண்டம் ஊடு அறுத்து அன்று அந்தரத்து இழிந்து அங்கு அவனியாள் அலமரப் பெருகும் - *அண்டம் - பிரமனுலகு; அதன் நடுவே வழி கண்டு போந்து, அதற்குக் கீழே மண்ணுலகுக்கு அணித்தான விண்ணில் இழிந்து, எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளும் அவனியாள் எனப்பெறும் நிலமடத்தை பொறுக்கமாட்டாமல் தடுமாறும்படி பெருகும்.* மண்டு மா மணி நீர்க் கங்கையின் கரைமேல் - *எங்கும் ஒக்கப் பரந்து பெருநீராய் அது முழுதும் தெளிந்திருப்பதான கங்கையின் கரையிலே.* வதரியாச் சிராமத்துஉள்ளான்—.

---

1. இவையித்தை. 2. எல்லாத்தையும்.
3. அளவுபட்டு - சிறுத்து. 4. 'ப்ரகாரம்' என்பதற்குத் தக்க தமிழ்ச்சொல்லாக இவ்வுரைகளில் 'படி' என்னும் சொல் வருவதுகொண்டு 'ப்ரகாரி' என்பதற்கு, 'படிகொளி' (படியைக் கொள்பவன்; தன்மையை உடையவன்) என்னும் சொல் படைத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இஃது அடைகொளி போன்ற அமைப்புடையது.

**ஒப்புமைப் பகுதி**

**உலகனைத்தும் உண்டவன்**

" காரேழ் கடலேழ் மலையேழ் உலகுண்டும்
ஆரா வயிற்றானை"

" கார் இத்யாதி - புஷ்கலாவர்த்தகாதி மேகங்கள் ஏழும், கடல் ஏழும், மலைகள் ஏழுமான ஜகத்தை எல்லாம் திருவயிற்றிலே வைத்து, பின்னையும், தன்னை விச்வஸித்து உடன்கிடந்தவனை மடிதடவினவனைப் போலே 'நாம் என் செய்தோம் ஆனோம்' என்று இருக்குமவனை"
திருவா. மொ. 10:8:2-36

[விச்வஸித்து - நம்பி]

" ஏழ் உலகும் கொள்ளும், வள்ளல் வல்வயிற்றுப் பெருமான்"
வள்ளல் - புக்க லோகங்களுக்கு அவ்வருகே 'இன்னங் கொண்டுவா' என்னும்படி, இடமுடைத்தாய் இருக்கை. வல்வயிற்றுப் பெருமாள் - உட்புக்க பதார்த்தங்களுக்குப் பய ப்ரஸங்கம் இன்றியே ஒழியும்படி மிடுக்கையுடைத்தாய் இருக்கை" திருவா. மொ. 2:2:7-36

[பய ப்ரஸங்கம் - அச்சம் உண்டாகும் வாய்ப்பு]

" இஞ்ஞாலம் உண்ட நம்பிரான்"

" இஞ்ஞாலம் உண்ட - மேன்மை பாராதே தளர்ந்தார் தாவளமாய் இருக்கும். ஆபத்தே செப்பேடாக வயிற்றிலே வைத்து நோக்கும்"
திருவா. மொ. 5:9:7-36

(39)

## 40

வருந்திரை மணிநீர்க் கங்கையின் கரைமேல்
வதரியாச் சிராமத்துள் ளானைக்
கருங்கடல் முந்நீர் வண்ணனை எண்ணிக்
கலியன்வாய் ஒலிசெய்த பனுவல்
வரஞ்செய்த ஐந்தும் ஐந்தும்வல் லார்கள்
வானவர் உலகுடன் மருவி
இருங்கடல் உலகம் ஆண்டுவெண் குடைக்கீழ்
இமையவர் ஆகுவர் தாமே.

**ப. ரை :** **வரும் திரை மணி நீர்க் கங்கையின் கரைமேல்** - பெரிய மிடுக்கோடு வருகிற அலைகளை உடைத்தாய்த் தெளிந்த கங்கையினது கரையின்கண் உள்ள, **வதரியாச்சிராமத்து உள்ளானை** - திருவதரியாச்சிராமத்திலே எழுந்தருளி உள்ளவனை, **முந்நீர்க் கருங் கடல் வண்ணனை எண்ணி** - மூன்றுவகை நீரைக்

---

**40.** 1 : 6 சிரமத்துள்.

கொண்ட கரிய கடல் போலும் நிறத்தவன் ஆகிய பெருமானைக் கருதி, **கலியன் வாய் ஒலி செய்த பனுவல்** - ஆழ்வார் திருவாக்காலே இயற்றிய பாக்களான, **வரம் செய்த ஐந்தும் ஐந்தும் வல்லார்கள்** - இறையருளாலே கிட்டிய இப்பத்துப் பாக்களையும் பொருளோடு பயின்றவர்கள், **இருங் கடல் உலகம் வெண் குடைக் கீழ் ஆண்டு** - பெரிய கடலாலே சூழப்பட்ட இவ்உலகினை வெண்கொற்றக் குடையின் கீழே இருந்து ஆட்சிபுரிந்து, **வானவர் உலகுடன் மருவி** - பிரமன் உலகினைக் கிட்டி அதனை ஆட்சி புரிந்து, **இமையவர் ஆகுவர்** - திருநாட்டில் உள்ள அமரர்களோடு ஒன்றாக இருக்கப்பெறுவர்.

**சி. கு :** பனுவல் - இது நூலினைக் குறிக்காமல் அதில் அடங்கிய இப் பத்துப் பாக்களை ஆகுபெயரான் உணர்த்திற்று.

**வியா : பத்தாம் பாட்டு : வரும் இத்யாதி** - பெரிய வேகத்தோடே வருகிற திரைகளை உடைத்தாய்த் தெளிந்த ஜலத்தை உடைத்தான கங்கையின் கரைமேலே ஸ்ரீபதரிகாச்ரமத்திலே இருக்கிற ஸர்வேச்வரனைக் கவிபாடிற்று. **கருங் கடல் முந்நீர்** - முந்நீர் ஆன கருங்கடல். ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலமான மூன்றுவகை நீரை உடைத்தாய்க் கறுத்த நிறத்தையுடைய கடல் போலே இருக்கிற நிறத்தை உடையவனை அநுஸந்தித்து ஆழ்வார் அருளிச்செய்த பாட்டுக்கள் இவை தான். **வரம் செய்த** - பகவத் ப்ரஸாத லப்தமான பத்துப் பாட்டையும் வல்லவர்கள்; அன்றியே, வரிஷ்ட்டமான பத்துப் பாட்டையும் என்னுதல். **வானவர் இத்யாதி** - பெரிய கடல் சூழ்ந்த பூமியை ஏகாதபத்ரமாக நடத்திப் பின்பு ப்ரஹ்ம பதத்தை நிர்வஹித்து அநந்தரம் நித்யஸூரிகளோடு ஒருகோவையாகப்[1] பெறுவர். இத்தால் சொல்லிற்று ஆயிற்று, இவன் அபிஸந்திபண்ணிவற்றை[2] எல்லாம் தரும் என்றபடி.

---

**வி : பத்தாம் பாட்டு : வரும் திரை மணிநீர்க் கங்கையின் கரைமேல் வதரியாச்சிராமத்து உள்ளான்** - பெரிய மிடுக்கோடே வரும் திரைகளையும் தெளிந்த நீரையும் உடைய கங்கையின் கரைமேலே திருவதரியாச்சிராமத்திலே இருக்கும் பெருமானைப் பாடினார். **கருங் கடல் முந்நீர் வண்ணனை எண்ணிக் கலியன் வாயொலி செய்த பனுவல்** - கருங்கடல் முந்நீர் - முந்நீரான கருங்கடல். ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் ஆகிய மூவகை நீரையும் கறுத்த நிறத்தையும் உடைய கடல் போலே இருக்கும் நிறத்தை உடையவனைக் கருதி ஆழ்வார் அருளிச்செய்த பாக்களாகிய இவைதாம். **வரம் செய்த ஐந்தும் ஐந்தும் வல்லார்கள்** - வரம் செய்த இறையருளாற் பெறப்பட்ட பத்துப்பாட்டையும் வல்லவர்கள்; அல்லது, சிறந்த பத்துப்பாட்டையும் என்றும் சொல்லலாம். **வானவர் உலகுடன் மருவி இருங்கடல் உலகம் ஆண்டு வெண்குடைக் கீழ் இமையவர் ஆகுவர்தாமே** - பெரிய கடல் சூழ்ந்த உலகைப் பொதுமை இன்றி வெண்குடைக் கீழ் நடத்திப் பின்பு பிரமனுலகை ஆண்டு அதன் பிறகு அயர்வறும் அமரர்களோடு ஒரு கோவையாகப்[3] பெறுவர். இவன் விழைந்தவற்றை எல்லாம் தரும் என்பது இதனால் சொல்லப்பட்டது.

---

1. ஒரு கோர்வையாகப். 2. அபிஸந்தி பண்ணினவைத்தை.
3. ஒரு கோவையாதல் - சேர்ந்து ஒன்றாதல்.

"அறிவுடையார் அபுருஷார்த்தம் என்று காற்கடை கொண்ட ஐஶ்வர்யத்தை, 'வேண்டேன் மனைவாழ்க்கை' என்றும், 'போந்தேன்' என்றும், வீதராக ராய்ப் போந்த இவர், இப்போது ஐஶ்வர்யத்தைப் பலமாகச் சொல்லுவான் என்?" என்று ஜீயர் பட்டரைக் கேட்க, "திருமங்கையாழ்வார் அவதரித்த பின்பு, த்யாஜ்ய மான ஐஶ்வர்யமும் பரம புருஷார்த்தத்துக்கு உள்ளே புக்குப் போயிற்றுக் காணும். 'ஈஶ்வரனே ஆகவுமாம், நித்ய ஸூரிகளாகவுமாம், ராஜாவாகவுமாம்; பறித்து பாகவத சேஷமாக்கலாம் ஆகில்' என்றாம் இவர் இருப்பது" என்று அருளிச்செய்தாராம்.

---

*"அறிவுடையார் உறுதிப்பொருள் அன்று என்று காற்கடை கொண்டது பொருட்செல்வம். இவர், 'வேண்டேன் மனைவாழ்க்கை' (பெ. தி. 6: 1: 1) என்றும், 'போந்தேன்' (பெ. தி. 6: 3: 4) என்றும் பற்றற்றவராய்ப் போந்தார். இப்படிப்பட்டவர், இப்போது அதனைப் பயனாகச் சொல்வது எதனால்?" என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்டார். அதற்கு அவர், "திருமங்கையாழ்வார் தோன்றிய பின்பு தள்ளத்தக்க பொருட்செல்வமும் மேலான பேறுகளுள் ஒன்றாய்ப் புக்குக் கொள்ளத்தக்கது ஆயிற்றுக் கண்டீர். 'ஆண்டவனாயினும், அயர்வறும் அமர ராயினும், அரசராயினும் அவர்தம் செல்வத்தை அடித்துப் பறித்து அடியார்க்கு அடியுறை ஆக்கலாமாகில் அமையும்' என்று இருப்பவர் அன்றோ இவ்ஆழ்வார்!" என்று அருளிச்செய்தாராம்.*

### ஒப்புமைப் பகுதி

1. முந்நீர்

*" முந்நீர் ஞாலம்"*

*" முந்நீர் – ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம் என்று சொல்லுகிறவற்றை..."*
*தி. வா. மொ. 3:2:1-36*

*[வர்ஷ ஜலம் - மழை நீர்]*

*" பொங்கு முந்நீர் ஞாலப்பிரான்"*

*" பொங்காநின்று மூன்று வகைப்பட்ட நீரை உடைத்தான கடல் சூழ்ந்த பூமிக்கு எல்லாம் உபகாரகன்"* *தி. வி. 39 பெ. உரை.*

*[உபகாரகன் - உதவிபுரிபவன்]*

2. முந்நீர் வண்ணன்

*" கடல்வண்ணன் கண்ணன்"*

*" அபரிச்சேத்ய மஹிமனான க்ருஷ்ணன் என்னுதல்; ச்ரமஹரமான வடிவையுடைய க்ருஷ்ணன் என்னுதல்"* *தி. வா. மொ. 3:6:10-24*

*[அபரிச்சேத்ய மஹிமன் - அளக்கலாகாப் பெருமையுடையவன். ச்ரமஹரம் - களைப்பினை அழிப்பது.]*

## முதற் பத்து - ஐந்தாம் திருமொழி - கலையும்

பிர : ஸௌபரி போகத்துக்கு உறுப்பாக அநேகம் வடிவு கொண்டாப் போலே, ஆஶ்ரிதரை அநுபவிக்கைக்கு உறுப்பான உகந்தருளின நிலங்கள் எங்கும் புகுந்து ஸந்நிதி பண்ணினான் ஆயிற்று அவன். இனி, இவர்தாமும், "**தான் உகந்த ஊர் எல்லாம் தன் தாள்பாடி**" எங்கும் புக்கு அநுபவிக்கையிலே ஆயிற்று, அபேக்ஷை பண்ணியிருப்பது. ஒரு விஷயத்தை அநுபவிக்கப் புக்கால், அவ்விஷயத்தில் அவயவங்கள்தோறும் ஸ்ப்ருஹை பண்ணுமாப் போலே ஆயிற்று இவர் எங்கும் புக்கு அநுபவிப்பதாகப் பாரிக்கிறதும். ஆக, விரோதி நிரஸநசீலனுமாய், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைக ஸ்வபாவனுமாய், ப்ரஹ்மாதிகள் ஆபந்நராம் அன்று அவ்ஆபத்துக் களைப் போக்கி அவர்களுக்கு துஃக்க நிவர்த்தகனாய் இருக்கிறவன், நித்ய ஸூரிகளோடு தன்பக்கல் ருசி உடையாரோடு கேவல ப்ராஹ்மணரோடு வாசியற ஸர்வ ஸமாஶ்ரயணீயனாய்க்கொண்டு ஶ்ரீஸாளக்ராமத்திலே வந்து ஸந்நிஹிதன் ஆனான். அங்கே போய் அவனை ஆஶ்ரயிப்போம் என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறார். கௌஸல[1] ஜநபதமாகப் பெருமாளதாய் இருக்குமாப் போலே, ஒரு மண்டலமாகத் தனக்கு விஷயமாகக் கொண்டு ஸந்நிஹிதனாய்க் குறைவற வர்த்திக் கிற தேசம் ஆயிற்று.

---

**தோ:** *சௌபரி என்னும் முனிவன் இன்பம் துய்ப்பதற்கு உறுப்பாகப் பல வடிவு கொண்டது போலே, பெருமான் தன்னடைந்தார்க்கு இன்பம் நுகர்வித் தற்கு உறுப்பாக உகந்தருளின நிலங்கள் எங்கும் புகுந்து பலபடியாகக் காட்சி நல்கினான். இனி, இவ் ஆழ்வார்தாமும்,* "**தான் உகந்த ஊர் எல்லாம் தன் தாள் பாடி**" *(தி. நெ. தா. 6) எங்கும் புக்கு இறைவனைத் துய்ப்பதிலேயே விருப்பம் கொண்டு இருப்பவர் ஆவார். ஒருத்தியோடு இன்பம் துய்க்கப்புகுந்தால், அவள் உறுப்புகள்தோறும் ஆசைகொள்ளுவது போல இவரும் இறைவன் தங்கி இருக்கும் இடங்கள்தோறும் சென்று இன்புற வேண்டும் என்று பாரிக்கிறார்[2]. ஆகையாலே, பகையினைப் பக்க வேரோடே கிழங்கு எடுக்கும்[3] பண்பினனாய், அடியாரோடு கலத்தலையே இயற்கையாகக் கொண்டவனாய், பிரமன் தொடக்கத்தார் இடர்ப்பட்ட அன்று அவ்இடர்களைப் போக்கி அவர்கள் இன்னல் தீர்ப்பவனாய் இருக்கும் பெருமான், இமையோர் என்றும் தன்பால் விருப்புடைய தொண்டர் என்றும் துணை நூல் மார்பின் அந்தணர் என்றும் வேற்றுமையின்றி எல்லாரும் வணங்குதற்கு உரியவனாய்த் திருச்சாளக்கிராமத்தில் வந்து அடுத்து நிற்பவன் ஆனான். அங்கே போய் அவனைப் பற்றுவோம் என்று நெஞ்சினை ஆற்றுப் படுத்துகிறார். கோசலநாடு முழுவதும் இராமபிரானுக்கு இடமாய் இருப்பது போலே, ஒரு மண்டலப்பரப்புடைய மலை முழுதும் தனக்கு இடமாகக்கொண்டு வந்து தங்கி இருப்பவனாய்க் குறைவறப் பெருமான் வீற்றிருக்கும் இடம் இது ஆகும்.*

---

1. கோசல.
2. பாரித்தல் - மிகவும் விரும்புதல். 3. பக்க வேரோடே கிழங்கு எடுத்தல் - முற்றிலும் அழித்தல்.

## 41

கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்துபோய்ச்
சிலையும் கணையும் துணையாகச்
சென்றான் வென்றிச் செருக்களத்து;
மலைகொண் டலைநீர் அணைகட்டி
மதிள்நீர் இலங்கை வாளரக்கர்
தலைவன் தலைபத் தறுத்துகந்தான்
சாளக் கிராமம் அடைநெஞ்சே!

**ப. ரை :** **நெஞ்சே** - ஏ, மனமே! **கலையும் கரியும் பரிமாவும்** - மான்களும் யானைகளும் குதிரைகளும், **திரியும் கானம் கடந்து போய்** - திரிகின்ற காட்டைத் தாண்டிச் சென்று, **சிலையும் கணையும் துணையாக** - வில்லையும் அம்பையும் உதவியாகக்கொண்டு, **வென்றிச் செருக்களத்துச் சென்றான்** - வெற்றியைத் தரும் போர்க்களத்திலே புகுந்தவனாய், **அலைநீர் மலைகொண்டு அணை கட்டி** - அலைகின்ற கடலில் மலைகளைக்கொண்டு கரையினை எடுத்து, **மதிள் நீர் இலங்கை வாள் அரக்கர் தலைவன்** - மதிளையும், கடலாகிய அகழையும் உடைய இலங்கையைத் தனக்கு உடையதாகப் பெற்றிருந்த கொடிய அரக்கர்க்குத் தலைவனாகிய இராவணனுடைய, **தலை பத்து அறுத்து உகந்தான்** - பத்துத் தலைகளையும் வெட்டி வீழ்த்தி உகந்த பெருமான் தங்கி இருக்கிற, **சாளக்கிராமம் அடை** - திருச்சாளக்கிராமத்தை அடைவாய்.

**சி. கு :** கலையும் கரியும் பரியும் - உம்மைகள் எண்ணுப்பொருளில் வந்தன. "உம்மை எண்ணும் என என் எண்ணும் தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே" (இடையியல் 39) என்னும் தொல்காப்பிய நூற்பாவையொட்டித் தொகைச்சொல் பெறாது வந்தது. சாளக்கிராமம் - இக்கோயில் நேபாளத்தில் உள்ளது. பெருமான் ஸ்ரீமூர்த்திப்பெருமாள்; பெருமாட்டி ஸ்ரீதேவிநாச்சியார்.

இது, மா மா காய் மா மா காய் என்னும் வாய்பாட்டில் அமைந்த அறுசீர் ஆசிரிய விருத்தம்.

**வியா :** **முதற் பாட்டு : கலை இத்யாதி** - கலை முதலானவை[1] வர்த்திக்கடவதான காட்டைக் கடந்து போய். **சிலையும் கணையும் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து**—"தே வநேந வநம் கத்வா" என்கிற

---

**வி :** முதற்பாட்டு : **கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்து போய், சிலையும் கணையும் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து** - "அவர்கள் (அந்தச் சீதையும் இராமனும் இலக்குவனும்) ஒரு காட்டிலிருந்து

---

1. முதலானவைகளே.

படியே, படைவீட்டில்நின்றும் காட்டிலே புகுகை அன்றிக்கே, காட்டில்நின்றும் ஆயிற்றுக் காட்டிலே வந்து புகுந்தது. அப்படியே இங்கும், துஷ்ட ஸத்வ ப்ரசுரமான காட்டைக் கழிந்து பின்னை யுத்த பூமியிலே ஆயிற்று வந்து புகுந்தது. கலைகளையும் ஆனைகளையும் குதிரைகளையும் உடைத்தாய் இருக்கிற காட்டைக் கடந்து போய் வென்றிச் செருக்களத்திலே வந்து புகுந்தான். "அங்கு போய்ப் புகுகிற இடத்துத் துணை யார்?" என்னில், **சிலையும் கணையும் துணையாக** - வில்லும் அம்பும் துணையாக ஆயிற்றுப் போயிற்று. லக்ஷ்மணாதிகளோ என்னில், அவர்களையும் ஓர் அவயவ விசேஷங்களாக நினைத்திருந்தார் இத்தனைபோக்கி, தனித்து ஒரு துணையாக நினைத்திருந்திலர்[1] ஆயிற்று இவர். முதலிகள் அடங்கலும் பெருமாளுக்குக் குழைச்சரக்கு ஆனார்களாம் இத்தனையிறே. "**ராம லக்ஷ்மண குப்தா ஸா**". **வென்றிச் செருக்களத்து** - நலிய வேணும் என்னும் அபிஸந்தி உண்டாய் நலியாத ம்ருகங்களைத் தப்பிப்போனால் பின்னையும் போய்ப் புகும் இடம் யுத்தபூமி ஆயிற்று. வென்றியை உடைத்தான போரை விளைக்கக்கடவ யுத்த பூமியிலே.

அங்குப் போய்ப் புக்க பின்பு செய்த சேஷ்டிதங்களைச்[2] சொல்லுகிறது மேல். **மலை இத்யாதி** - பெரிய க்ஷேபத்தை உடைத்தான கடலை, நீரிலே ஆழக்கடவ

---

மற்றொரு காட்டிற்கு நடந்துபோய், நீர் நிறைந்த ஆறுகளைக் கடந்துபோய், **சித்திரகூடத்தை அடைந்தனர்**". *(ரா. பா. 1 : 30)* *எனவரும் இராமாயணத்துக்கு ஏற்பப் படைவீட்டில்நின்றும்[3] காட்டிலே புகுவது அல்லாமல், ஒரு காட்டிலிருந்து பிறிதொரு காட்டிலே அன்றோ வந்து புகுந்தது. அப்படியே இங்கும் கொடிய விலங்குகள் மிகுந்த காட்டைக் கடந்துபோய்ப் பின்னர் வென்றிச் செருக் களத்திலே வந்து புகுந்தான். "அங்கு போய்ப் புகுமிடத்துத் துணை யார்?"* **"சிலையும் கணையும்"** *என்கிறார்.* **சிலையும் கணையும் துணையாக** *- வில்லும் அம்பும் துணையாகப் போனான். "இலக்குவன், சுக்கிரீவன், மாருதி, வீடணன் ஆகியோர் துணையாக இருந்தார்களே அவர்களைத் துணையாகச் சொல்ல வில்லையே?" என்று வினவின், அவர்களை எல்லாம் தன் உடலுறுப்புகளாக நினைத்திருப்பானே ஒழியத் தனித்து ஒரு துணையாகக் கருதினான் அல்லன் என்க; முதலிகள்[4] அடங்கலும் பெருமாளுக்குக் குழைச்சரக்குகளாகவே[5] இருந் தனர்.* **"அந்தக் குரக்குப்படை இராம இலக்குவர்களால் காப்பாற்றப்பட்டது"** *(ரா. யு. 25 : 33) என்று சொல்லப்படுவதுபோலே பிறர் எல்லாம் இராமனால் காக்கப்படுவதற்கு உரியவர்களாகவே இருந்தனர்.* **வென்றிச் செருக்களத்து** *- பிறரைத் துன்புறுத்த வேண்டும் என்னும் விருப்பம் அமைந்தனவாய் இருந்த போதிலும், துன்புறுத்தாத விலங்குகளைத் தப்பிப் போனால் பின்னையும் போய்ச் சேரும் இடம் போர்க்களமாய் அமைந்தது. வென்றியை உடைத்தான போரை விளைக்கும் வினைத் தலையிலே[6].*

*அங்குப் போய்ப் புக்க பின்பு செய்த செயல்களைச் சொல்லுகிறது மேல்.* **மலை கொண்டு அலை நீர் அணை கட்டி மதிள் நீர் இலங்கை வாள் அரக்கர்**

---

1. இருக்கிறிலார். 2. வ்யாபாரங்களைச்.

3. படைவீடு - தலைநகரம்; ஈண்டு அயோத்தி. 4. முதலிகள் - வீரர்கள். 5. குழைச்சரக்கு - வலிமையற்ற பொருள். பிறரால் காக்கப்படவேண்டுவதாக உள்ள பொருள். 6. வினைத்தலை -- போர்க்களம்.

மலைகளைக்கொண்டு அணையாகக் கட்டி, மதிளையும், அதுக்கு அகழான கடலை யுமுடைய லங்கையைக் கலவிருக்கையாக உடையனுமாய், ஒரு தேவதையை ஆச்ரயித்து அதின்பக்கலிலே ஒரு வாளைப் பெற்று அது தனக்கு அரணாக நினைத் திருப்பானாய், துர்வர்க்கத்துக்கு எல்லாம் நியாமகனாய் இருக்கிற ராவணனுடைய தலைகள் பத்தையும் அறுத்து, "தேவர்களும் தந்தாமுடைய குடியிருப்புப் பெற்றார் கள், ருஷிகளும் தந்தாமுடைய ஆச்ரமங்களிலே இருந்து தபஸ்ஸு பண்ணப் பெற்றார்கள்" என்று உகந்தவன், அப்படி ஆச்ரித விரோதியைப் போக்கிப் பிற்பட்டார்க்கும் உதவுகைக்காக வந்து வர்த்திக்கிற ஸ்ரீஸாளக்ராமத்தை ஆச்ரயிக்கப் பாராய் நெஞ்சே! என்கிறார்.

---

**தலைவன் தலை பத்து அறுத்து உகந்தான் சாளக்கிராமம் அடை நெஞ்சே** - *பெரிய திரைக்கிளர்த்தியை[1] உடைய கடலை, நீரிலே ஆழக்கூடிய மலைகளைக்கொண்டு அணையாகக் கட்டினான். மதிளையும் அதற்கு அகழான கடலையும் உடைய இலங்கையைக் கலவிருக்கையாக[2] உடையவனாய், ஒரு தெய்வத்தை வணங்கி அதன் பக்கலிலே ஒரு வாளைப் பெற்று அதனைத் தனக்கு அரணாக நினைத் திருப்பானாய்த் தீயார் கூட்டத்துக்கு எல்லாம் தலைவனாய் இருக்கும் இராவணன் தலைகள் பத்தையும் அறுத்தான். தன்னுடைய அச்செயலால், "தேவர்கள் தத்தம் குடியிருப்புப் பெற்றார்கள்; இருடிகள் தத்தம் தவச்சாலை களிலே இருந்து தவம் புரியப் பெற்றார்கள்" என்று உகந்தான். அப்பெருமான் தன் அடியார்க்கு உற்ற பகையினைப் போக்கிப் பிற்பட்டார்க்கும் உதவுதற்காக வந்து உறையும் திருச்சாளக்கிராமத்தை அடையப் பாராய் நெஞ்சே! என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

**1. மலை கொண்டு அணை கட்டியவன்**

*" தடங்கடலைக் கற்கொண்டு தூர்த்த கடல்வண்ணன்"*

*" அரியது செய்யுமவன். ஆழக்கடவ கல்லைக்கொண்டு நீரிலே அணை கட்டியவன்"* நான். தி. 77 பெ. உரை.

**2. மதிள்நீர் இலங்கை**

*" சதுர மாமதிள் சூழ் இலங்கைக் கிறைவன்"*

*" மாமதிள் - துர்க்க த்ரயம். 'ஈச்வரன்' என்று அறியச் செய்தே எதிர்க்கப் பண்ணின மதிள்"* அம. 4 பெ. உரை.

*[ துர்க்க த்ரயம் - மூவகை அரண் ]*

**3. இலங்கை**

*" இலங்கை - குளவிக்கூடுபோலே பிறரை நலிந்து புக்கு ஒதுங்கும் இடம்"* அம. 4 நாயனார் உரை.

*" தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி"*

---

1. திரைக் கிளர்த்தி - அலைகளின் ஆரவாரம். 2. கலவிருக்கை - தனக்கு உரிய கலன்களோடு (கருவிகளோடு) இருக்கும் தலைமை இடம். நெஞ்சு கலந்து இருக்கும் இடம் என்பாரும் உண்டு.

" தென்னிலங்கை - அழகியதான கோட்டையையும் அரணையும் உடைத் தாய்க் குளவிக்கூடு கொண்டாற்போலே ஹிம்ஸகர் சேர்ந்த தேசம்."
பாவை. 24 பெ.உரை.

[ஹிம்ஸகர் - துன்புறுத்துவோர்]

" இராக்கதர் வாழ் இலங்கை - துர்வர்க்கம் களித்து வர்த்திக்கும் தேசம். புறம்பே போய் பரஹிம்ஸை பண்ணி, குளவிக்கூடுபோலே திரண்டு கடலையும் மதிளையும் அரணாக்கி, அமணக்கூத்தடிக்கும் தேசம் என்கை"
தி. பல். 3 பெ. உரை.

[துர்வர்க்கம் - தீயோர் கூட்டம். வர்த்திக்கும் - உறையும்.]

" முந்நீர பெரும்பதிவாய் நீள்நகர் - அஞ்சினான் புகலிடமாய் துர்வர்க்கம் அடங்கலும் புக்கு ஒதுங்கும் இடமாயிற்று"
தி. வி. 92 பெ. உரை.

**4. வாள் அரக்கன்**

" வாள் அரக்கன் - ருத்ரன் பக்கலிலே பெற்ற வாளையும் உடையவன். இத்தால் இந்தத் தோள்வலியும் வாள்வலியும் உடையனாகையாலே ஒருவராலும் ஜயிக்க ஒண்ணாதவன் என்கை"
பெரி. தி. 4:2:2 ம. மா. மு. உரை.

" வாளரக்கன் - சதுரங்க பலமும் அழகுக்கு உறுப்பாகக் கட்டினான் இத்தனை என்னும்படியான தனிவீரன். கையிலே வாளைக்கொண்டு எழுந்திருந்தால் இந்த்ராதிகளை முதுகு புறங்காணும்படியிறே அவனுடைய தனிவீரம் இருப்பது"
தி. நெ. தா. 20 பெ. உரை.

[சதுரங்க பலம் - நாற்படை]

**5. தலைபத்து அறுத்துகந்தான்**

" குலைகொண்ட ஈர்ஐந்து தலையான்"

" 'கொத்துத் தலைவன்' என்னும்படி பத்துத் தலையையுடைய இராவணன்..."
நான். தி. 8 பெ. உரை.

" இலங்கைக் கிறைவன் தலைபத்து உதிரவோட்டி"

" தலைபத்துதிர - பனங்குலை உதிர்ந்தாப்போலே உதிர. அறுக்க அறுக்க முளைத்த சடக்கு"
அம. 4 பெ. உரை.

" மாறில் போர் அரக்கன் மதிள் நீறெழச் செற்று உகந்த ஏறு சேவகனார்"

" உகந்த - ருஷிகள் குடியிருப்புப் பெற்றோம், பிராட்டியோடே கூடப் பெற்றோம், லங்கை விபீஷண விஷயமாகப் பெற்றோம் என்று உகந்த"
தி. வா. மொ. 6:1:10-24

## 42

**கடம்சூழ் கரியும் பரிமாவும்**
**ஒலிமாந் தேரும் காலாளும்**
**உடன்சூழ்ந் தெழுந்த கடிஇலங்கை**
**பொடியா வடிவாய்ச் சரம்துரந்தான்;**
**இடம்சூழ்ந் தெங்கும் இருவிசும்பில்**
**இமையோர் வணங்க மணங்கமழும்**
**தடம்சூழ்ந் தெங்கும் அழகாய**
**சாளக் கிராமம் அடைநெஞ்சே!**

**ப. ரை :** **நெஞ்சே** - *ஏ, மனமே!* **கடம் சூழ் கரியும் பரியும் ஒலிமாந் தேரும் காலாளும்** - *மதநீரையுடைய யானையும் குதிரையும் ஒலிக்கின்ற பெரிய தேரும் காலாட்களும்,* **உடன் சூழ்ந்து எழுந்த** - *ஒன்றாகத் திரண்டு கிளர்ந்து எழுந்த,* **கடி இலங்கை பொடியா** - *பாதுகாப்பு நிறைந்த இலங்கை துகளாகும்படி,* **வடிவாய்ச் சரம் துரந்தான்** - *கூரிய வாயையுடைய அம்புகளைச் செலுத்தியவனான இராம பிரான்,* **இரு விசும்பில் இமையோர்** - *பரப்பை உடைத்தான துறக்கத்தில் வாழ் கின்ற தேவர்கள்,* **இடம் எங்கும் சூழ்ந்து வணங்க** - *மண்ணுலகு எங்கும் பரவி நின்று வழிபட,* **மணம் கமழும் தடம் சூழ்ந்து** - *நீர்ப்பூக்களின் நாற்றம் வீசுகின்ற தடாகங்களாலே சூழப்பட்டு,* **எங்கும் அழகாய** - *எல்லாப் பக்கங்களிலும் அழகை உடைத்தாய் இருக்கும்,* **சாளக்கிராமம் அடை** - *திருச்சாளக்கிராமத்தை அடை வாய்.*

**சி. கு :** *உம்மைகள் எண்ணுப்பொருளில் வந்தன. கடி - உரிச்சொல்; பாதுகாப்பு என்னும் பொருள் உடையது. மாந் தேர் என்பது மாத் தேர் என்பதன் மெலித்தல் என்பர். மான் தேர் எனவும் பிரிக்கலாம்; குதிரை பூண்ட தேர் என்பது பொருள்.*

**வியா :** **இரண்டாம் பாட்டு :** ராவணனை நிரஸித்த படியைச் சொல் லிற்று, முதற் பாட்டில்; அதுக்கு உறுப்பாக அவனுடைய முதல்நாளைப் படை யெழுச்சி சொல்லுகிறது இதில்.

**கடம் சூழ் இத்யாதி** - ருஷிதான் படையெழுச்சியைச் சொன்ன க்ரமத்திலே சொன்னார் இவரும். மதஜலத்தை உடைத்தாய் மலை வடிவுகொண்டு நடந்தாப்

---

**வி: இரண்டாம் பாட்டு :** *இராவணனை அழித்த முறையினைச் சொன் னார், முதற் பாட்டில்; அதற்கு உறுப்பாக அவனது முதல்நாளைப் படையெழுச்சி சொல்கிறார், இதில்.*

**கடம் சூழ் கரியும் பரிமாவும் ஒலி மாந் தேரும் காலாளும் உடன் சூழ்ந்து எழுந்த கடி இலங்கை பொடியா வடிவாய்ச் சரம் துரந்தான்** - *வான்மீகிமுனிவர் படையெழுச்சி யைச் சொன்ன அடைவில் சொல்கிறார் இவரும். மதநீரை உடைத்தாய், மலை*

---

**42.** 1 : 4 ஒலிமாத்; ஒலிமான். 2 : 4 பொடியாய்.

போலே இருக்கிற ஆனைத்திரளும், அதுக்கு அநந்தரம் குதிரைத்திரளும், கோஷத்தை உடைத்தாய் இருந்துள்ள பெரிய தேர்களும், காலாளும், இவை அடைய ஒன்றாகத் திரண்டு பெரிய கிளர்த்தியோடே[1] தோற்றின அரண் உடைத்தான லங்கை, "ஶ்மசாந ஸத்ருஶீ பவேத்" என்கிறபடியாய்ப் போம்படிக்கு ஈடாக, வடித்த வாயை உடைத்தான சரத்தை நடத்தினான் ஆயிற்று.

**இடம் இத்யாதி** - பூமியில் அவகாசம் உள்ள இடம் எங்கும் பரந்து கொண்டு பரப்பு உடைத்தான ஸ்வர்க்கத்தில் தேவர்கள் ஆஶ்ரயிக்க பரிமள ப்ரசுரமான தடாகங்களை உடைத்தாய் எங்கும் ஒக்க தர்சநீயமாய் இருக்கிற ஸ்ரீஸாளக்ராமத்தை ஆஶ்ரயிக்கப் பார்.

---

*வடிவுகொண்டு நடந்தது போலே இருக்கும் ஆனைத்திரளும், அதன் பின்னே குதிரைத்திரளும், ஆரவாரம் உடைத்தாய் இருக்கும் பெரிய தேர்களும், காலாளும் இவை அடைய[2] ஒன்றாகத் திரண்டு வந்த பெரிய கிளர்ச்சியோடு தோன்றிய அரண் உடைத்தான இலங்கை, "சுடுகாட்டைப் போன்று ஆகும்" (ரா. ஸு. 26 : 14) என்று சொன்னவாறு ஆவதற்கு ஈடாக, வடித்த வாயை உடைத்தான அம்பை நடத்தினான்.*

இடம் சூழ்ந்து எங்கும் இரு விசும்பில் இமையோர் வணங்க மணம் கமழும் தடம் சூழ்ந்து எங்கும் அழகு ஆய சாளக்கிராமம் அடை நெஞ்சே - *மண்ணுலகில் வாய்த்த இடம் எங்கும் பரவி நின்று, பரப்பு உடைத்தான துறக்கத்தில் இருக்கும் தேவர்கள் வழிபடும்வண்ணம் மணம் மிகுந்த தடாகங்களை உடையதாய், எங்கும் ஒக்க அழகிதாய் இருப்பது திருச்சாளக்கிராமம்; அதனை அடையப் பார்.*

**ஒப்புமைப் பகுதி**

**இலங்கையைப் பொடியாக்குதல்**

*" தென்னிலங்கை அரண் சிதறி"*

*" சிதறி - ஓர் அரணை மணற்கொட்டகத்தைச் சிதறினாற்போலே அநாயாஸேந அழித்து"* *தி. நெ. தா. 28 பெ. உரை.*

*(42)*

## 43

**உலவு திரையும் குலவரையும்**
**ஊழி முதலா எண்திக்கும்**
**நிலவும் சுடரும் இருளுமாய்**
**நின்றான்; வென்றி விறல்ஆழி**
**வலவன்; வானோர் தம்பெருமான்**
**மருவா அரக்கர்க் கெஞ்ஞான்றும்**
**சலவன்; சலம்சூழ்ந் தழகாய**
**சாளக் கிராமம் அடைநெஞ்சே!**

---

1. கிளத்தி.
2. அடைய - முற்றிலுமாக.

**ப. ரை :** **நெஞ்சே** - *ஏ, மனமே!* **உலவு திரையும் குலவரையும்** - *அலைகின்ற கடலும், குலமலைகளும்,* **ஊழி முதலா எண் திக்கும்** - *காலம் முதலாக எட்டுத் திக்குகளில் உள்ள பொருள்களும்,* **நிலவும் சுடரும் இருளுமாய் நின்றான்** - *திங்களும் ஞாயிறும் அவற்றிற்கு எதிரான இருளும் ஆகியவற்றைத் தனக்குப் படியாகக் கொண்டு நின்றவனாய்,* **வென்றி விறல் ஆழி வலவன்** - *வெற்றியையும் மிடுக்கையு முடைய திருவாழியை வலத் திருக்கையில் உடையவனாய்,* **வானோர்தம் பெருமான்** *பிரமன் முதலானோர்க்குத் தலைவனாய்,* **எஞ்ஞான்றும் மருவா அரக்கர்க்குச் சலவன்** - *எக்காலத்திலும் தன்னைச் சாராத அரக்கர்களுக்குப் பகைவனாய் இருக்கும் பெருமான் தங்கியிருப்பதும்,* **சலம் சூழ்ந்து அழகாய** - *நீரால் சூழப்பட்டு அழகாய் விளங்குவதும் ஆகிய,* **சாளக்கிராமம் அடை** - *திருச்சாளக்கிராமத்தை அடைவாய்.*

**சி. கு :** *வலவன் - வலக்கையில் கொண்டவன். சலவன் - சலத்தை உடையவன். சலம் - தீராச் சீற்றம், வஞ்சம், பொய். 'சலம் சூழ்ந்து' என்பதில் வரும் சலம் என்பது ஜலம் என்னும் வடசொல்; நீர் என்பது பொருள்.*

**வியா :** **மூன்றாம் பாட்டு : உலவு இத்யாதி** - ஸஞ்சரியாநின்றுள்ள திரையை உடைத்தாய்ப் பெரிய கோஷத்தை உடைத்தான கடலும் மலையும் துடக்கமாக. **ஊழி முதலா எண் திக்கும்** - காலோபலக்ஷிதமான ஸகல பதார்த்தங்களுமான எட்டுத் திக்கும், சில நாள் வர்த்திக்கக்கடவராய் இருக்கிற சந்த்ர ஸூர்யர்களும், அதுக்கு எதிரான இருளுமாய், அதடைய 'தான்' என்கிற சொல்லாலே சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரமாக உடையனாய் நின்றான். இத்தால், ஜகதாகாரனாய் நிற்கும் நிலை சொல்லிற்று. மேல் அஸாதாரண திவ்ய விக்ரஹ யுக்தனான நிலையைச் சொல்லுகிறது. **வென்றி இத்யாதி** - ஆ்ரித ரக்ஷணத்துக்குப் பரிகரமான திருவாழியை வலவருகே உடையவன். **வானோர்தம் பெருமான்** - ப்ரஹ்மாதி

---

**வி :** மூன்றாம் பாட்டு : **உலவு திரையும் குலவரையும்** - *அலைகின்ற திரையை உடைத்தாய்ப் பெரிய ஆரவாரத்தை உடைத்தாய் இருக்கும் கடலும் மலையும் தொடக்கமான பெரிய பெரிய பொருள்களும்,* **ஊழி முதலா எண் திக்கும் நிலவும் சுடரும் இருளுமாய் நின்றான்** - *ஊழி என்னும் சொல்கொண்டு அதன் சார்பாக உணரப்படும் எல்லாப் பொருள்களையும் தன்னகத்தே கொண்ட எட்டுத் திக்கும், சில நாள் இருக்கக்கூடிய திங்கள் ஞாயிறு ஆகியனவும், அவற்றிற்கு எதிரான இருளும் ஆகிய எல்லாப் பொருள்களுமாய், அவை முற்றும் 'தான்' என்னும் சொல்லாலே சொல்லுமாறு அவற்றைத் தனக்குப் படியாக உடையனாய் நின்றான். இதனால், உலகமே தனக்கு வடிவமாகக்கொண்டு நிற்கும் நிலை சொல்லப்பட்டது. இனி, தனக்கே உரிய திருமேனியோடு கூடியவனாய் நிற்கும் நிலை சொல்லப்படுகிறது.* **வென்றி விறல் ஆழி வலவன்** - *வழிபடுவாரைக் காத்தற்கு உறுப்பான திருவாழியை வலவருகே[1] உடையவன்.* **வானோர்தம் பெருமான்** - *பிரமன் முதலான தேவர்களுக்குப் பற்றப்படுபவனாய்*

---

1. வலவருகு - வலப்பக்கம்; அருகு - பக்கம்.

களுக்கு ஆப்ரயணீயனானவன். மருவா - கண்வளர்ந்தருளும் போதும் தன்னோடு பொருந்தாத அஸுரவர்க்கத்துக்கு, "அவுணர்க்கு என்றும் சலம் புரிந்து" என்கிறபடியே சாத்ரவத்தை உடையனாய் இருக்குமவன். ஏவம்விதனானவன் வந்து ஸந்நிதி பண்ணுகிற ஜலஸம்ருத்தியை உடைத்தாய் தர்சநீயமாய் இருக்கிற.

---

அமைந்தவன். மருவா அரக்கர்க்கு எஞ்ஞான்றும் சலவன் - கண்வளர்ந்தருளும்[1] போது தன்னோடு பொருந்தாத அவுணர்கூட்டத்திற்கு, "அவுணர்க்கு என்றும் சலம்புரிந்து" (தி. நெ. தா. 6) என்று சொல்லும்வண்ணம் பகைமை உடையவனாய் இருப்பவன். சலம் சூழ்ந்து அழகாய - இத்தகையவன் வந்து தங்கியுள்ள நீர்வளம் மிக்கதாய், அழகியதாய் இருக்கும், சாளக்கிராமம் அடை நெஞ்சே—.

**ஒப்புமைப்பகுதி**

1. பெருமான் உலகே வடிவாய் நிற்றல்

(அ) உலவும் திரையாய் இருத்தல்

*"கடல் எரியுந்தீயோடு......முற்றுமாய் - பகவதாஜ்ஞையாலே கரையேற மாட்டாதே கிடக்கிற கடல்"* *தி. வா. மொ. 3:6:5-36*

*[பகவதாஜ்ஞை - இறைவன் கட்டளை]*

(ஆ) குலவரையாய் நிற்றல்

*"எரிசுடரும் மால்வரையும் எண்டிசையும் அண்டத்*
*திருசுடரு மாய இறை"*

*"ஸகல பதார்த்தங்களும் அவனுக்கு ப்ரகாரமாய், தான் ப்ரகாரியாய், ப்ரகார்யந்தரம் இன்றிக்கே இருக்கை"* *மு. தி. 38 பெ. உரை.*

*[ப்ரகாரம் - படி; தன்மை. ப்ரகாரி - படிகொளி; தன்மையை உடையவன்.]*

(இ) நிலவும் சுடரும் இருளுமாய் நிற்றல்

*இருசுடர் - ப்ரகாசகரான சந்த்ர ஸூர்யர்கள்.*
*தி. வா. மொ. 3:6:5-36*

*[ப்ரகாசகர் - ஒளியைச் செய்பவர்]*

*"சீரார் சுடர்கள் - ப்ரகாசகராயும் போஷகராயும் இருக்கை"*
*தி. வா. மொ. 6:9:1-24*

*[போஷகர் - வளர்ப்பவர்]*

*"நீர்க்களிப்பு அறுகைக்கும் ஆப்யாயநத்துக்குமாக இருவரையும் உண்டாக்கினபடி"* *தி. வா. மொ. 6:9:1-36*

*[ஆப்யாயநம் - ஈடுசெய்கை; குறைவை நிறைவு செய்தல்.]*

*"நிகரில் சூழ் சுடராய் இருளாய் - உபமாந ரஹிதமாய்க் கொண்டு எங்கும் வ்யாபித்து நிற்கிற தேஜஸ்ஸாய், அதுக்கு எதிர்த்தட்டான அந்தகாரமாய்"*
*தி. வா. மொ. 6:3:3-36*

*[உபமாந ரஹிதம் - ஒப்பு அற்றது. வ்யாபித்து - நிறைந்து. தேஜஸ் - ஒளி. அந்தகாரம் - இருட்டு.]*

*(43)*

---

1. கண்வளர்ந்தருளல் - உறங்குதல்.

**ஊரான்; குடந்தை உத்தமன்;**
**ஒருகால் இருகால் சிலைவளையத்**
**தேரா அரக்கர் தேர்வெள்ளம்**
**செற்றான்; வற்றா வருபுனல்சூழ்**
**பேரான்; பேரா யிரமுடையான்;**
**பிறங்கு சிறைவண் டறைகின்ற**
**தாரான்; தாரா வயல்சூழ்ந்த**
**சாளக் கிராமம் அடைநெஞ்சே!**

ப. ரை : நெஞ்சே - ஏ, மனமே! **ஊரான்** - திருவூரகத்தில் உறைபவனும், **குடந்தை உத்தமன்** - திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கும் உயர்ந்தவனும், **ஒருகால் சிலை இருகால் வளைய** - பகைவர் எதிர்த்த காலத்தில் வில்லின் இரு கோடியும் வளையுமாறு செய்து, **தேரா அரக்கர் தேர் வெள்ளம் செற்றான்** - பரம் பொருள் ஆகிய இராமன் பகைவனாய் எதிர்நிற்கிறான் என்னும் ஆராய்ச்சி இல்லாத அரக்கர்களின் தேர்க்கூட்டத்தை அழித்தவனும், **வற்றா வருபுனல் சூழ் பேரான்** - இடையறாமல் தொடர்ந்து வரும் வெள்ளத்தால் சூழப்பட்ட திருப்பேர் நகரில் இருப்பவனும், **ஆயிரம் பேர் உடையான்** - பல திருப்பெயர்களை உடையவனும், **பிறங்கு சிறை வண்டு அறைகின்ற தாரான்** - நெருங்கி இருக்கும் சிறகுகளையுடைய வண்டுகள் முரலுகிற திருத்துழாய்மாலையை உடையவனுமாய் இருப்பவன் எழுந்தருளியுள்ள, **தாரா வயல் சூழ்ந்த** - தாரா என்னும் நீர்ப்பறவைகள் நிறைந்த வயல்களால் சூழப்பட்ட, **சாளக்கிராமம் அடை** - திருச்சாளக்கிராமம் என்னும் இடத்தை அடைவாய்.

சி. கு : **ஊரான்** - திருவூரகத்தில் உறைபவன்; ஊரகம் என்பது ஊர் என வந்தது. கச்சி உலகளந்த பெருமாள் திருமுற்றத்திற்குத் திருவூரகம் என்பது பெயர். குடந்தை ஊரான் என்று இயைத்துப் பொருள் கூறலும் உண்டு. **பேரான்** - திருப்பேர் நகரத்தில் இருப்பவன்; இவ்விண்ணகரம் தஞ்சை மாவட்டத்தில் திருக்காட்டுப்பள்ளிக்கு அருகில் உள்ளது. **தாரா** - ஒருவகை நீர்ப்பறவை.

வியா : **நாலாம் பாட்டு : அதுக்கு முன்னே உண்டான கரவத வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறது.**

---

வி : நாலாம் பாட்டு : இராவணனை அழிப்பதற்கு முன்னே நடந்த கரனை வீழ்த்திய செயல்தனைச் சொல்லுகிறார்.

**ஊரான்** - திருவூரகத்தைத் தனக்கு இருப்பிடமாக உடையவன். **குடந்தை உத்தமன்** - அவர்கள்[1] அபேக்ஷை இன்றிக்கே இருக்க ஆஶ்ரித ரக்ஷணத்துக்காகத் தானே திருக்குடந்தையிலே வந்து சாய்ந்தருளின நீர்மையில் ஏற்றத்தை உடையவன். அன்றிக்கே, திருக்குடந்தை ஊரான் உத்தமன் என்றும் சொல்லவும் ஆம். **ஒருகால்** - ஒருக்கால். **இருகால் சிலை வளைய** - வில் இரண்டு கோடியும் வளையும்படியாக. ராவணன் வளையாமையாலே வில்லை வளைத்தான். **தேரா அரக்கர் இத்யாதி** - "சக்ரவர்த்தித்திருமகனிறே நமக்கு எதிரியாய் வருகிறான்" என்று மதிக்க அறியாத ராக்ஷஸருடைய தேர்வெள்ளத்தை அழியச் செய்தான் ஆயிற்று. **வற்றா இத்யாதி** - நின்ற நீர் வற்றக் கடவது அன்றிக்கே, மேன்மேலும் வாராநின்றுள்ள புனலை உடைத்தாய் இருக்கிற திருப்பேர்நகரைத் தனக்கு வாஸஸ்தாநமாக உடையவன். **பேர்ஆயிரம் உடையான்** - தன் குண சேஷ்டிதங்களுக்கு வாசகமான அநேகம் திருநாமங்களை உடையவன். அந்நாம த்வாரா அநுபவிக்கும் வடிவைச் சொல்லுகிறது : **பிறங்கு இத்யாதி** - நெருங்கி இருந்துள்ள சிறகை உடைத்தான வண்டுகளானவை மதுபாநம் பண்ணி அறையா நின்றுள்ள மாலையை உடையவன். **தாரா இத்யாதி** - ஊர் அடங்கலும் மநுஷ்யர்களும் குடியிருப்பும் நெருங்கி இருக்குமாப் போலே, தாரா ஆகிய பக்ஷிகளாலே நெருங்கி இருந்துள்ள வயலாலே சூழப்பட்டு இருந்துள்ள சாளக் கிராமம் அடை நெஞ்சே!

---

**ஊரான்** - *திருவூரகத்தைத் தனக்கு இருப்பிடமாக உடையவன்.* **குடந்தை உத்தமன்** - *திருக்குடந்தையில் இருப்பவர்கள் வேண்டாதே இருந்தபோதிலும், அடியாரைப் பாதுகாத்தற்பொருட்டுத் தானே திருக்குடந்தையிலே வந்து சாய்ந்தருளிய நீர்மையால் வந்த ஏற்றத்தை உடையவன். அல்லது, திருக்குடந்தை ஊரான் உத்தமன் என்றும் சொல்லவும் ஆம்.* **ஒருகால் இருகால் சிலை வளைய**[2] - *ஒருகால் வில்லின் இரண்டுகோடியும் வளையும்படியாக. இராவணன் வளையாமையாலே வில்லை வளைத்தான்.* **தேரா அரக்கர் தேர் வெள்ளம் செற்றான்** - *"சக்கரவர்த்தித் திருமகன்[3] அன்றோ நமக்குப் பகைவனாய் வருகிறான்" என்று மதிக்க[4] அறியாத அரக்கர்களின் தேர்வெள்ளத்தை அழியச் செய்தான்.* **வற்றா வருபுனல் சூழ் பேரான்** - *நின்ற நீர் வற்றாது இருத்தலோடு அன்றி, மேன்மேலே வருகின்ற புனலை உடைத்தாய் இருக்கும் திருப்பேர் நகரைத் தனக்கு உறைவிடமாக உடையவன்.* **பேர் ஆயிரம் உடையான்** - *தன் பண்பையும் செயல்களையும் பகரும் பெயர்கள் பலவற்றை உடையவன்.* **பிறங்கு சிறை வண்டு அறைகின்ற தாரான்** - *இதனால் அத்திருப்பெயர் வாயிலாக அறிந்து திளைக்கும் வடிவு சொல்லப்படுகிறது. நெருங்கி இருக்கும் சிறகை உடைய வண்டுகள் மது அருந்தி அறைகின்ற மாலையை உடையவன்.* **தாரா வயல் சூழ்ந்த சாளக்கிராமம் அடை நெஞ்சே** - *ஊர் அடங்கலும் மக்களும் குடியிருப்பும் நெருங்கி இருப்பது போலே தாரா என்னும் பறவைகளாலே நெருங்கியிருக்கும் வயலாலே சூழப்பட்டிருக்கும் சாளக்கிராமம் அடை நெஞ்சே!*

---

1. அவர்கள்பக்கல்.

2. இதற்கு ஓரிரு முறை வில்லை வளைத்து என்று பொருள் கொள்வது பொருந்தும், அரக்கர்களை அழிக்கச் சில முறை இராமபிரான் வில்லை வளைத்தான் ஆதலின். 3. சக்கரவர்த்தித்திருமகன் - இராமன். 4. மதித்தல் - ஆராய்ந்து போற்றுதல்.

**ஒப்புமைப் பகுதி**

**உத்தமன்**

*" உத்தமன் - பிறரை ஹிம்ஸித்துத் தன்வயிற்றை வளர்க்க வேணும் என்று இருக்குமவன் அதமன்; பிறரும் ஜீவிக்க வேணும், நாமும் ஜீவிக்க வேணும் என்று இருக்குமவன் மத்யமன்; தன்னை அழிய மாறியாகிலும் பிறர் ஜீவிக்கவேணும் என்னுமவன் உத்தமன். 'பக்தாநாம்', 'அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்' என்று இருக்கை"* பாவை. 3 பெ. உரை.

*[ஹிம்ஸித்தல் - வருத்துதல். அதமன் - தாழ்ந்தவன். ஜீவிக்க - வாழ. மத்யமன் - இடைப்பட்டவன். உத்தமன் - உயர்ந்தவன்.]* (44)

## 45

**அடுத்தார்த் தெழுந்தாள் பிலவாய்விட்டு**
**அலற அவள்மூக் கயில்வாளால்**
**விடுத்தான்; விளங்கு சுடர்ஆழி**
**விண்ணோர் பெருமான்; நண்ணார்முன்**
**கடுத்தார்த் தெழுந்த பெருமழையைக்**
**கல்லொன் றேந்தி இனநிரைக்காத்**
**தடுத்தான்; தடம்சூழ்ந் தழகாய**
**சாளக் கிராமம் அடைநெஞ்சே!**

**ப. ரை :** **நெஞ்சே** - ஏ, மனமே! **அடுத்து ஆர்த்து எழுந்தாள்** - கிட்டி ஆரவாரித்துக் கிளர்ந்த சூர்ப்பணகையானவள், **பிலவாய் விட்டு அலற** - குகை போலும் வாயைத் திறந்து ஓலமிடும்படி, **அவள் மூக்கு அயில் வாளால் விடுத்தான்** - அவளது மூக்கைக் கூர்மை பொருந்திய வாளாலே இலக்குவனைக் கொண்டு அறுத்தவனும், **விளங்கு சுடர் ஆழி விண்ணோர் பெருமான்** - விளங்குகின்ற ஒளியை உடைய சக்கரப்படையினை ஏந்திய அமரர்களுக்குத் தலைவனும், **நண்ணார் முன்** - பகைவர்கள் ஆகிய இந்திரன் தொடக்கமானவர் முன்னர், **கடுத்து ஆர்த்து எழுந்த பெரு மழையை** - விரைந்து முழக்கமிட்டுத் தோற்றிய பெரிய மேகக்கூட்டத்தை, **இன நிரைக்கா** - ஆனிரைகளைக் காத்தற்காக, **கல் ஒன்று ஏந்தித் தடுத்தான்** - கோவர்த்தனம் என்னும் ஒரு குன்றினை மேலே எடுத்து நிறுத்தி மழையைத் தடுத்தவனுமாய் இருக்கும் பெருமான் எழுந்தருளி யுள்ள, **தடம் சூழ்ந்து அழகாய** - தடாகங்களாலே சூழப்பட்டு அழகாய் விளங்கும், **சாளக்கிராமம் அடை** - திருச்சாளக்கிராமம் என்னும் இடத்தை அடைவாய்.

**சி. கு :** இராமன் கருத்துவழி நடப்பவன் இலக்குவன் ஆகலானும் அவனைத் தன்னின் வேறாக இராமன் கருதுவதில்லை ஆகலானும் இலக்குவன் சூர்ப்பணகை மூக்கினை அரிந்த போதிலும், அதனை இராமன் செய்ததாகவே சொல்லப்பட்டது என்க. இனநிரைக்கா - இனநிரைக்காக என்பதன் தொகுத்தல் விகாரம்; ஈறு தொக்கது.

---

**45.** 2 : 2 விளங்கும். 3 : 6 இனநிரைக்காய்த்.

வியா : **அஞ்சாம் பாட்டு** : அதுக்கு முன்னானசூர்ப்பணகை[1] நிரஸநத்தை அருளிச்செய்கிறார்.

**அடுத்து** - மேல்விழுந்து வந்து கிட்டி. **ஆர்த்து எழுந்தாள்** - ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டு கிளர்ந்து வந்து தோற்றினவள். பிலம் போலே இருக்கிற வாயைத் திறந்து கூப்பிட, அவளுடைய மூக்கை, அயில் - கூர்மை - கூரிய திருக்குற்றுடைவாளை வாங்கிப் போக்கினான். **விளங்கு இத்யாதி** - கையும் திருவாழியுமான சேர்த்தியழகைக்[2] காட்டி, நித்ய ஸூரிகள் கார்யத்தை நிர்வஹித்துக்கொண்டு போருகிறவன். **நண்ணார் இத்யாதி** - சத்ருக்கள் முன்பே; இந்த்ரனுடைய அபிஸந்தி பூர்வகமாக வருகிறது ஆகையாலே பெரிய வேகத்தோடே கோஷித்துக் கொண்டு தோற்றின மஹா வர்ஷத்தைக் கோவர்த்தநகிரியைத் தரித்துப் பண்ணின உபகாரத்தையும் அறியாதே ஸ்வரக்ஷணத்துக்குப் பரிகாரமும் இல்லாத பசுக்களை நோக்குகைக்காகத் தடுத்தான் ஆயிற்று. தடாகங்களாலே சூழப்பட்டு[3] தர்சநீயமான.

---

**வி. அஞ்சாம்பாட்டு** : *அரக்கர்களை வீழ்த்துவதற்கு முன்பு நடந்த சூர்ப்பணகையின் மூக்கறுப்பு நிகழ்ச்சியினைக் கூறுகிறார்.*

**அடுத்து** - *மேல்விழுந்து வந்து கிட்டி.* **ஆர்த்து எழுந்தாள்** - *ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டு கிளர்ந்து வந்து தோற்றினவள்.* **பிலவாய் விட்டு அலற அவள் மூக்கு அயில் வாளால் விடுத்தான்** - *பிலம் போலே இருக்கும் வாயைத் திறந்து கூப்பிட, அவளுடைய மூக்கைக் கூரிய திருக்குற்றுடைவாளை[4] வாங்கிப் போக்கினான். அயில் - கூர்மை.* **விளங்கு சுடர் ஆழி விண்ணோர் பெருமான்** - *கையும் திருவாழியுமான சேர்த்தியழகைக் காட்டி, அயர்வறும் அமரர்களுக்குப் படிவிட்டுச்[5] செல்பவன்.* **நண்ணார் முன் கடுத்து ஆர்த்து எழுந்த பெரு மழையைக் கல் ஒன்று ஏந்தி இனநிரைக்காத் தடுத்தான் தடம் சூழ்ந்து அழகாய சாளக்கிராமம் அடை நெஞ்சே** - *இந்திரன் கோலியபடி[6] வருவதாகையாலே பெரிய வேகத்தோடே முழக்கமிட்டுக்கொண்டு தோற்றியது பெருமேகம்; பகைவர் கண்முன்னரே கோவர்த்தனமலையைத் தூக்கிப்பிடித்துத் தடுத்தான்; தான் பண்ணின உதவியை அறியமாட்டாதனவாகவும், தம்மைக் காத்துக் கொள்ளத் தக்க கருவிகள் தம்மிடம் இல்லாதனவாகவும் உள்ள ஆநிரைகளை நோக்குகைக்காக அவ்வாறு செய்தான். அவன் எழுந்தருளியிருக்கும் இடம் தடாகங்களாலே சூழப்பட்டுக் காட்சிக்கினியதாய் இருக்கும் சாளக்கிராமம். அதனை நெஞ்சே! அடைவாய்.*

### ஒப்புமைப் பகுதி

**1. சூர்ப்பணகை மூக்கினை அறுத்தமை**

> *" சுடு சினத்துச் சூர்ப்பணகா - அவளை ஒப்பாரில்லை. ஸௌந்தர்யத்தால் குறைவற்றவள்"*
>
> *பெ. மடல். 144*

---

1. சூர்ப்பநகா; சூர்ப்பநகி. 2. சேற்றியழகைக். 3. சூழப்பட்ட.
4. திருக்குற்றுடை வாள் - அரையில் வைத்திருக்கும் சிறிய கத்தி. 5. படிவிடுதல் - பாதுகாத்தல்.
6. கோலுதல் - திட்டமிடுதல்.

" கள்ள அரக்கியை மூக்கொடு காவலனைத் தலைகொண்டாய்"

" 'சீதைக்கு நேராவன்' என்று க்ருத்ரிம வேஷங்கொண்டு வந்த சூர்ப்பணகியாகிற ராக்ஷஸி மூக்கோடே, அவளுக்கு ரக்ஷகனான ராவணன் தலையையும் அறுத்துப் பொகட்டவனே!"
பெரி. தி. 2:7:5 பெ. உரை.

[க்ருத்ரிம வேஷம் - வஞ்சகக் கோலம்]

" நுடங்கிடைச்,
சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கவள்
ஆர்க்க அரிந்தானை"

" காம ரூபிணியாகையாலே ஸ்வவேஷத்தை மறைத்து அத்யந்தாபிமத மானது ஒரு ஸ்த்ரீ வேஷத்தைக் கொண்டு வருகையாலே, நுடங்கின இடையை உடையளான சூர்ப்பணகையை. தன் அழகைக் காட்டி 'என்னை விஷயீகரிக்க வேணும்' என்று வந்த அளவில், பிராட்டியைக் காட்டி 'நமக்கு இவள் ஒரு ஸ்த்ரீயுண்டு, அங்கே போ' என்று இளைய பெருமாளைக் காட்ட அங்கே சென்ற அளவிலே, 'நான் அவர்க்கு ஶேஷ பூதனாய் இருப்பான் ஒருத்தன்; நீ இன்னம் அவர்தம் பக்கலிலே போ' என்ன; இப்படி உபாலம்பிக்கையாலே அவள் அதிக்ருத்தையாய், பழைய வேஷத்தைக் கொண்டு, எடுத்துக் கொண்டு புக்க அளவிலே செவியோடே கூட மூக்கையும், அவள் கதறக் கதற அறுத்தவனை. 'ராமஸ்ய தக்ஷிணோபாஹு:' என்கிறபடியே இளைய பெருமாள் கரண பூதராகையாலே அறுத்ததில் கர்த்ருத்வம் பெருமாளதாகச் சொல்லு கிறது.
பெரி. தி. 3:8:8 பெ. உரை

[அத்யந்தாபிமதம் - மிகவும் கவர்ச்சியை உண்டாக்குவது. விஷயீகரித் தல் - ஆட்கொள்ளல். ஶேஷபூதன் - அடியவன். உபாலம்பிக்கை - இகழ்தல். கரணபூதர் - கருவியாய் இருப்பவர். கர்த்ருத்வம் - செய் பவனாய் இருக்கும் தன்மை.]

" தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்த எம்தாசரதி"

" த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி : பிதா' என்று ஸர்வலோகத்துக்கும் மாதாவும் பிதாவுமாய்க் கொண்டிருக்கும் மிதுநத்தை முறையிலே விரும்பாமல் முறைகெட விரும்புவார் பெறும் பேறு இது என்னும் இடம் தோற்றவிரே தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்தது."
பெரி. தி. 4:7:1 பெ.உரை.

[மிதுனம் - ஆணும் பெண்ணுமான இணை]

## 2. கோவர்த்தனம் ஏந்தி இனநிரை காத்தவன்

" உண்ண வானவர்கோனுக்கு ஆயர் ஒருப்படுத்த அடிசில் உண்டதும்"

" உண்ண இத்யாதி - வானவர்கோனுக்கு - உண்ண - ஆயர் ஒருப்படுத்த அடிசில் உண்டதும். தான் பிறந்து வளருகிற ஊரிலே சிலர் வர்ஷார்த்த

மாக இந்த்ரனுக்குச் சமைத்த அடிசிலைத் தான் புகுந்து புஜித்தவதுவும். 'நாம் பிறந்து வளருகிற ஊரிலே வேறேயும் ஓர் ஆச்ரயணீய வஸ்து உண்டாகையாவது என்? என்று பொறாமையாலே, 'வாரிகோள்' இந்த்ர னாகிறான் எவன்? கண்டறியாத்தான் ஒருவனோ நமக்கு உபகரிக்கப் புகுகிறான்? ஆனபின்பு, மேகங்களும் வந்து பணியும்படிக்கு ஈடாய், புல்லும் தண்ணீரும் உடைத்தாய், 'பசுக்களுக்கும் இடங்கொடுத்து நிற்கிற மலையன்றோ நமக்கெல்லாம் கடவது' என்று சொல்ல, இடையரா கையாலே, சொல்லிற்றைக் கேட்பார் சிலரே. இனி இவன்தானே சொன்னவை மறுக்க ஒண்ணாதபடியாய் இருக்குமே; 'இம் மலையின் முன்னே இடுங்கோள்' என்ன, அங்கே கொடுவந்து குவித்தார்கள்; அத்தைத் தான் புக்கு இருந்து அமுதுசெய்தான். தனக்கு அசாதாரணராய் இருப்பாருடைய த்ரவ்யத்தை வேறே சிலர்க்குக் கொடுக்கையாவது, மகிஷீஸ்வேதத்தைப் பிறர்க்குக் கொடுத்தமாத்திரமிறே. அவன் தன் பரிகரத்தோடும்கூட இதுகொண்டு த்ருப்தனாக இருக்க, இத்தைத்தான் கைக்கொண்டான் ஆயிற்று. அவன் க்ரோதத்தாலே வர்ஷிப்பிக்கத் தொடங்கினான். வண்ண மால்வரை இத்யாதி - அடைகொண்டு பாழ் போக்குவான் ஒருவன் அன்றே. 'நம் அபிமதம் பெற்றோமாகில் என் செய்தால் நல்லது' என்று பொகட்டுப் போகாதே, நாநாவான தாதுக்களையுடைத்தாய் ஒருவரால் கணிசிக்க வொண்ணாத பெரிய மலையை, ஸுகுமாரமான கையைக் கொண்டு ஏழுநாள் ஒருபடியே தரித்து, ஒரு பசுவின்மேலேயாதல் ஓர் இடையன்மேலேயாதல் ஒரு துளி விழாதபடி காத்ததும், அவனை நிரஸிக்கலாயிருக்கச் செய்தேயும், "தேவ ப்ரக்ருதியான இவனை நலிகிறது என், பசிக்ராஹத்தாலே செய்தானா கில் தானே கை ஒய்ந்து விடுகிறான், அவ்வளவும் நம் ரக்ஷ்யவர்க்கத்தை நாம் கடகிட்டு நோக்குவோம்' என்று ஆந்ருசம்ஸ்யம் கொண்டாடி விட்டான். 'நம் விபூதியை இவன் நோக்கவல்லன், இவன் கண்ணுடையன் என்றிறே இவனைத் தான் இங்குத்தைக்கு இட்டது''

திருவாய்மொழி — தி. வா. மொ. 5:10:5-36

[மகிஷீஸ்வேதம் - மனைவியின் வியர்வை. ஆந்ருசம்ஸ்யம் - கொடுமை யற்ற தன்மை.]

''தீமழை காத்து - விநாசத்தை விளைக்க வந்த மழையாகையாலே தீமழை என்கிறார்'' தி. வா. மொ. 7:4:10-36

[விநாசம் - அழிவு]

(45)

## 46

தாயாய் வந்த பேய்உயிரும்
தயிரும் விழுதும் உடன்உண்ட
வாயான்; தூய வரிஉருவின்
குறளாய்ச் சென்று மாவலியை
ஏயான் இரப்ப மூவடிமண்
இன்றே தாவென் றுலகேழும்
தாயான்; காயா மலர்வண்ணன்
சாளக் கிராமம் அடைநெஞ்சே!

**ப. ரை :** நெஞ்சே - *ஏ மனமே!* தாயாய் வந்த பேய் உயிரும் - *தாய் வடிவு கொண்ட பூதனையுடைய உயிரையும்,* தயிரும் விழுதும் - *அசோதையினுடைய தயிரையும், வெண்ணெயையும்,* உடன் உண்ட வாயான் - *ஒருசேர விழுங்கிய வாயினை உடையவனும்,* ஏயான் - *இரக்கத்தகாதவனும்,* தூய வரி உருவின் குறளாய் - *தூய்மையான அழகு பொருந்திய வடிவத்தையுடைய குறியவனாகி,* மாவலியைச் சென்று - *மாவலியினிடத்துச் சென்று,* இன்றே மூவடி மண் தா என்று இரப்ப - *இப்போதே மூன்று அடி நிலம் தரவேண்டும் என்று ஏற்று நிற்க,* உலகு ஏழும் தாயான் - *ஏழு உலகங்களையும் தாவி அளந்துகொண்டவனும்,* காயா மலர் வண்ணன் - *காயாம்பூப் போலும் நிறத்தை உடையவனுமான பெருமான் எழுந்தருளியுள்ள,* சாளக்கிராமம் அடை - *திருச்சாளக்கிராமத்தை அடைவாய்.*

**சி. கு :** *பெருமான் குறுகிய வடிவத்தனாய் வந்த போதிலும் அழகு மிக்கானாய்த் திகழ்ந்தான் என்பது, ''தூய வரி உருவின் குறளாய்'' என்னும் தொடரால் விளங்குகிறது. வரி - அழகு. ஏயான் - தகுதியற்றவன்; ஈண்டு இரத்தற்குத் தகுதியற்றவன் என்றவாறு.*

**வியா : ஆறாம் பாட்டு : தாயாய் இத்யாதி :** தாய்வடிவைக் கொண்டு வந்த பூதனையுடைய உயிரையும், யசோதைப்பிராட்டியுடைய தயிரையும், வெண்ணெயையும்[1] ஒக்க அமுதுசெய்த திருப்பவளத்தை உடையவன். அநுகூல ஸ்பர்சமுடைய த்ரவ்யமும் ப்ரதிகூலருடைய ப்ராணனும் ஒக்க தாரகமாக வளர்ந்தவன். **தூய இத்யாதி** - கண்ணழிவு அற்ற வாமந வேஷத்தை உடையனாய், அம்புக்குச்

---

**வி : ஆறாம்பாட்டு :** தாயாய் வந்த பேய் உயிரும் தயிரும் விழுதும் உடன் உண்ட வாயான் - *தாய்வடிவைக் கொண்டு வந்த பூதனையின் உயிரையும், அசோதைப்பிராட்டியின் தயிரையும், வெண்ணெயையும் ஒக்க அமுதுசெய்த[2] திருப்பவளத்தை[3] உடையவன். பாங்குடையார் கைப்பட்ட பொருளும், பகையுடையார் உயிரும் ஒக்க வாழ்முதலாக வளர்ந்தவன்.* தூயவரி உருவின் குறளாய்ச்

---

**46.** 1 : 5 இழுதும். 2 : 3 வலி உருவில்; வலி உருவின்.

1. வெண்ணையையும்.
2. அமுது செய்தல் - உண்ணுதல். 3. திருப்பவளம் - சிவந்த வாய்.

செல்லாத இடத்தை[1] அழகாலே வசீகரிக்கும்படியான வாமந வேஷத்தை உடையனாய்க்கொண்டு சென்று. **ஏயான் இரப்ப** - **"கோ ஸஹஸ்ர ப்ரதாதாரம்" "தத்யாந்நப்ரதி க்ருஹ்ணீயாத்"** என்று இரப்புத் தகாத தான் சென்று இரக்க. **மாவலியை ஏயான் இரப்ப** - 'கொடேன்'[2] என்றே அபிஸந்தி பண்ணி இருந்த அவன் பக்கலிலே இரப்பன் என்னவும் ஆம். "மூவடி[3] மண் இப்போதே தர வேணும்" என்று வேண்டிக்கொண்டு, அவன் அநுமதி பண்ணின அநந்தரம் மறுமநஸ்ஸூப் படுவதுக்கு முன்னே வளர்ந்து லோகங்கள் ஏழையும் அளந்து கொண்டவன். **தாயான்** - தாவினவன். **காயா மலர்வண்ணன்** - அவ்வடிவைக் கொண்டு ஆயிற்று பூமியை அளந்தது.

---

சென்று - *கண்ணழிவற்ற[4] குறுகிய வடிவத்தை உடையவனாய்ச் சென்று. அஃதாவது, அம்புக்குச் செல்லாத இடத்தை அழகாலே ஈர்க்கும் குறள் வடிவத்தை உடையனாய்க்கொண்டு சென்று.* ஏயான் இரப்ப - **"ஆயிரக் கணக்கான பசுக்களைக் கொடுத்த கை"** *(ரா. யு. 21: 8)* **என்றும், "இராமபிரான் கொடுப்பவரே; ஏற்பவர் அல்லர்"** *(ரா. ஸு. 33 : 26)* **என்றும்** *கூறுவர். இப்படி இரத்தற்கு உரியவன் அல்லாத தான் சென்று இரக்க. அல்லது, மாவலியை ஏயான் இரப்ப என்று* கொண்டு, *'கொடேன்' என்றே உறுதி கொண்டிருந்த அவன் பக்கலிலே இரப்பான் என்றும் சொல்லலாம்.*[5] *"மூவடி மண் இப்போதே தர வேண்டும்"* என்று வேண்டிக்கொண்டு, அவன் *இசைந்தவாறே மறுமனப்படுவதற்கு[6] முன்னே வளர்ந்து உலகங்கள் ஏழையும் அளந்துகொண்டவன்.* தாயான் - தாவினவன். காயா மலர்வண்ணன் - *அவ்வடிவைக் கொண்டு அன்றோ அவன் மண்ணை அளந்தது. அத்தகையோன் உறையும்,* சாளக் கிராமம் அடை நெஞ்சே—.

### ஒப்புமைப் பகுதி

1. தாயாய் வந்த பேய் உயிர் உண்டவன்

*" வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட*
*அஞ்சன வண்ணனை"*

*" 'தாயாய் வந்த பேய்' என்கிறபடியே பேயான தன்வடிவை மறைத்துத் தாய்வடிவைக் கொண்டு வஞ்சித்து வந்த பூதனையுடைய முலையை, அவள் தாயாய் வந்தாப்போலே தானும் பிள்ளையாய்க் கொண்டு, தாய் முலை உண்ணுமாபோலே உண்ணாநிற்கச்செய்தே அவள் முடியும்படி யாக உண்ட"* பெரி. தி. 1:3:10 பெ. உரை

*"மாயப்பேய் உயிர்*
*மாய்த்த ஆய மாயனே"*

---

1. செல்லாதடத்தை. 2. குடேன். 3. மூன்றடி.

4. கண்ணழிவு - குறை. 5. "மாவலியை ஏயான் இரப்ப" என்பதற்கு 'ஏயான்' என்பதற்கு முதன்மை தந்து முதலிலும், 'மாவலி' என்பதற்கு முதன்மை தந்து பின்னும் அழகுற விளக்கம் தரப் பட்டுள்ளது. 6. மறுமனப்படுதல் - மறு முறை மாறாகச் சிந்தித்தல்.

" மாயப் பேய் - ஜந்மத்தால் வந்த அறிவுகேட்டுக்கு மேலே வஞ்சநபரையா யும் வந்தாள். அதாவது பேயாய் வருகையன்றிக்கே, தாயாய் வருகை. 'தாயாய் வந்த பேய்' என்னக்கடவதிறே" தி. வா. மொ. 4:3:4-36

2. தூய வரி உருவின் குறளன்

" குறள் - பால் செல்லச்செல்ல ரஸிக்குமாபோலே சிறுகின வடிவு ஆகர்ஷகமானபடி" தி. வா. மொ. 1:4:3-24

" குறளாகி - சேர்ப்பால்போலே சுருங்கினதனையும் போக்யமாய் இருக்கை" தி. வா. மொ. 1:10:1-24

" குறளாய் - சேர்ப்பால்போலே போக்யதை மிக்கிருக்கிறபடி" தி. வா. மொ. 2:3:3-24

" குறளாய் - கோடியைக் காணியாக்கினாப்போலே முகந்து கொள்ளலாய் இருக்கை" தி. வா. மொ. 6:9:2-36

" மாண் குறள் கோலவடிவு காட்டி"

" கோல வடிவு - இப்படி அழிவுக்கிட்ட வடிவுக்கு ஆலத்தி வழிக்க வேண்டியிருக்கை" தி. வா. மொ. 8:2:9-36

" மன்னுங் குறள் உரு - வைத்த கண் வாங்க ஒண்ணாத அழகு" பெ. ம. 107 பெ. உரை.

" கொண்ட கோலக் குறளுருவாய் - யஜ்ஞோபவீதமும், க்ருஷ்ணாஜிநமும் முஞ்சியும், பவித்ரமும், தண்டும் பரமபதத்தில் ஒப்பனையிலும் அழகிதாய் இருந்தபடி" நாச். தி. 4:8 பெ. உரை

[யஜ்ஞோபவீதம் - பூணூல். க்ருஷ்ணாஜிநம் - மான்தோல். பவித்ரம் - குசைப்புல்லால் ஆகிய ஒருவகை விரல் வளையம்.]

" சத்திரம் ஏந்தித் தனியொரு மாணியாய் - சத்ரத்தையும் கையிலே தரித்துக்கொண்டு. அஸஹாயனாய், க்ருஷ்ணாஜிநமும், யஜ்ஞோப வீதமும், மௌஞ்சியுமான விநீத வேஷத்தாலும், வடிவழகாலும்அத்விதீய மான வாமநனாய்க் கொண்டு..." பெரி. தி. 1:9:6 ம; மா. மு. உரை.

[சத்ரம் - குடை. அஸஹாயன் - துணையற்றவன். க்ருஷ்ணாஜிநம் - மான் தோல். யஜ்ஞோபவீதம் - பூண நூல். மௌஞ்சி - ஒரு புல்; அப்புல்லால் ஆகிய அரைநாண் கயிற்றை இங்குக் குறித்தது. விநீத வேஷம் - பணி வார்ந்த கோலம். அத்விதீயம் - ஒப்பற்றது.]

" இருங்குறளாகி - பெரிய குறளாகி. அதாகிறது லோகத்தில் வாமநர்கள் அடைய வளர்ந்தருளின இடத்துக்கு ஒப்பாம்படியாயிற்று இவனுடைய சிறுமை" தி. வி. 91 பெ. உரை.

3. மூவடி மண் வேண்டல்

" ஓர் மூவடி மண் வேண்டிச் சென்ற - இரண்டடியை இரந்து இரண்டடியை யும் அளந்து விடாதே ஓரடிக்குச் சிறையிடும்படி மூன்றடியை இரந்தவன்" தி வி 91 பெ. உரை.

" அடியை மூன்றை இரந்தவாறும் - நேராய்ப் போகாமே மூன்றை இரந்தபடி. இரண்டடி இரந்தானாகில் அவனைச் சிறை செய்ய விரகில்லையே"
திவா. மொ. 5:10:9-36

" மூவடி மண் தாராய் - 'மஹாபலீ! எனக்கு மூவடி மண் தரவேணும்' என்றான். அவனும் 'தருகிறோம்' என்றான்; அங்ஙனாக ஒண்ணாது தாராய் என்றான் வளைப்பாரைப் போலே" சி. ம. 45 பெ. உரை.

**4. உலகம் தாயான்**

" திசைகள் எல்லாம் திருவடியால் தாயோன்"

" லோகங்களை எல்லாம் திருவடிகளாலே அளந்து கொண்டவன்; நாச்சிமாரும் தொடும்போது கூச வேண்டும்படியான திருவடிகளைக் கொண்டு கிடீர் காடும் ஓடையும் அளந்தது!"
தி. வா. மொ. 1:5:7-24

" ஞாலங்கொள் பாதன் - வஸிஷ்ட சண்டாள விபாக ரஹிதமாக எல்லார் தலைகளிலும் திருவடிகளைப் பரப்பினவன்"
தி. வா. மொ. 1:8:10-24, 36

[விபாகம் - பாகுபாடு. ரஹிதம் - இல்லாதது.]

" தாள் பரப்பி மண் தாவிய ஈசன் - கடிநஸ்தலத்திலே பூவைப் பரப்பினாப் போலே ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு காடும் மலையுமான பூமியை அநாயாஸேந அளந்து கொண்ட ஸர்வேச்வரன்"
தி. வா. மொ. 3:3:11-36

[கடிநஸ்தலம் -வன்நிலம். அநாயாஸேந - எளிதாக.]

" உலகளத்தான்"

" குணாகுண நிரூபணம் பண்ணாதே வஸிஷ்ட சண்டாள விபாகமற எல்லாரோடும் பொருந்துமவன்..."
நாச். தி. 5:5 பெ. உரை.

" உலகம் தாயவனை - தொழாதார் தலையிலும் இருந்து தொழுவித்துக் கொள்ளும் திருவடிகளை உடையவனை..."
மு. தி. 11 பெ. உரை.

" மண்ணளந்த பாதமும் மற்றவையே"

" காடும் மேடுமான பூமியை அளந்ததுவும் பூவைக் கொண்டே"
மூ. தி. 9 பெ. உரை.

" ஞாலம் தத்தும் பாதனை - புழுக்குறித்தது எழுத்தாமாபோலே ஒருகால் ரக்ஷித்து விடுகையன்றிக்கே ஜகத்தையடைய வளைந்து கொண்ட திருவடிகளை உடையவனை" தி. வி. 79 பெ. உரை

" ஞாலம் அளந்தானை"

" சிறியார் பெரியார் என்று வாசி வையாதே எல்லார் (திருவடிகளிலும்?) தலைகளிலும் ஒக்கத் திருவடிகளை வரையாதே வைத்து..."
நான். தி. 17 பெ. உரை.

" தாளால் உலகம் அளந்த அசைவே கொல் - 'வடிவிணை இல்லா மலர் மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி' என்று பிராட்டிகளும் கூசித் தொட வேண்டும் திருவடிகளைக் கொண்டு காடு மேடையும் அளந்து திருமேனி அலற்றதோ?"
நான். தி. 35 பெ. உரை.

[குறிப்பு : பல இடங்களிலும் காடு மோடை என்றோ காடு மேடை என்றோ வந்துள்ளதாலும், மோடை என்பதற்கு மாறாக மலை என்பது காணப்படுவதாலும், காடும் ஓடையும் (தி. வா. மொ. 1:5:7-24) என்று பிரித்துப் பதிப்பித்துள்ளது பொருத்தமாக இல்லை.]

5. காயா மலர்வண்ணன்

''காயா மலர்வண்ணன் - துரும்பும் எழுந்தாடி அடிமையிலே மூண்டல்லது நிற்க ஒண்ணாதபடியான வடிவு படைத்தவன்.''
தி. வா. மொ. 10:5:6-36

'' காயா மலர்வண்ணன் - ஆத்ம குணங்கள் மிகையாம்படி அப்போது அலர்ந்த செவ்விக் காயாம்பூப் போலே அநுகூலரை எழுத்திடுவித்துக் கொள்ளும் வடிவழகு படைத்தவன்''
பெரி. தி. 2:5:3 ம. மா. மு. உரை.

[ஆத்ம குணங்கள் - உயிர்ப்பண்புகள்; பெருந்தகவுகள். அநுகூலர்- உகந்தவர்.]

" காயா மலர் நிறவா - 'காயா' என்கிற இத்தை, 'காய' என்று குறுக்கிக் கிடக்கிறது. நெய்ப்பாலும் நைல்யத்தாலும் காயாம்பூப் போலே இருக்கிற நிறத்தையுடையவனே!"
:பெரி. தி. 1:5:6 ம. மா. மு. உரை.

[நைல்யம் -நீல நிறம்]

(46)

## 47

ஏனோர் அஞ்ச வெஞ்சமத்துள்
அரியாய்ப் பரிய இரணியனை
ஊனார் அகலம் பிளவெடுத்த
ஒருவன்; தானே இருசுடராய்
வானாய்த் தீயாய் மாருதமாய்
மலையாய் அலைநீர் உலகனைத்தும்
தானாய்த் தானும் ஆனான்தன்
சாளக் கிராமம் அடைநெஞ்சே!

**ப. ரை :** **நெஞ்சே** - *ஏ மனமே!* **ஏனோர் அஞ்ச வெஞ் சமத்துள் அரியாய்** - *பகைவர்களான அவுணர்கள் அஞ்சுமாறு கொடிய போரில் நரசிங்கமூர்த்தியாய் வடிவுகொண்டு,* **பரிய இரணியனை** - *தடித்த யாக்கையினை உடையவன் ஆகிய இரணியனுடைய,* **ஊன் ஆர் அகலம் பிளவு எடுத்த ஒருவன்** - *தசை நிறைந்த மார்பினைக் கிழித்தெடுத்த ஒப்பற்றவன் ஆகிய பெருமான்,* **தானே** - *அத்தகைய வனான தானே,* **இருசுடராய்** - *திங்களும் ஞாயிறுமாய்,* **வானாய்த் தீயாய் மாருத மாய்** - *விண்ணாய் நெருப்பாய் காற்றாய்,* **மலையாய்** - *உருப்பெற்ற பொருள்களுள் மலையாய்,* **அலைநீர் உலகு அனைத்தும் தானாய்** - *அலைகளையுடைய நீரால் சூழப்பட்ட எல்லா உலகங்களும் தானாய்,* **தானும் ஆனான்** - *தனிச்சிறப்புடைய வடிவுகொண்ட தானுமாய் இருப்பவன்,* **தன்** - *அப்பெருமான் எழுந்தருளியுள்ள* **சாளக்கிராமம் அடை** - *திருச்சாளக்கிராமத்தை அடைவாய்.*

**சி. கு :** *ஏனோர் - ஏனையோர். சமம் - போர். பரிய - பருமை என்னும் பண்படியாகப் பிறந்த பெயரெச்சம். ஒருவன் - ஒப்பற்றவன்.*

**வியா : ஏழாம் பாட்டு : ஏனோர் இத்யாதி** - சத்ருக்களான ஆஸுர ப்ரக்ருதிகள் அஞ்சும்படியாக யுத்தத்திலே நரஸிம்ஹமாய். **பரிய இரணியனை** - துர்மாம்ஸத்தாலே தடித்த ஹிரண்யனை. "உடம்பை ஒழிய ஆத்மாவும் ஒன்று உண்டு, அத்தை உடையான் ஒருவன் உண்டு, அவனைப் பெற வேணும்" என்னும் மென்மையும் கலந்து வளர்ந்த உடல் அன்றே. மாம்ஸ ப்ரசுரமாய் இருக்கிற மார்வைப் பிளவு செய்த அத்விதீயன். அப்படிப்பட்டவன்தானே, சந்த்ர ஸூர்யர்களுக்கு அந்த ராத்மதயா புக்கு இவர்கள் தான் என்னலாம்படியாய், ஆகாசமாய் தேஜஃபதார்த்த மாய்,வாயுதத்வமாய், கார்யகோடியில் மலையாய், கடல்சூழ்ந்த பூமி அடையத் 'தான்' என்னலாம்படி ஜகதாகாரனாய் நின்ற நிலையைச் சொல்லுகிறது. **தானும் ஆனான்** - அஸாதாரண திவ்ய விக்ரஹயுக்தனாய் இருக்கிறவன்.

---

**வி : ஏழாம் பாட்டு :** **ஏனோர் அஞ்ச வெஞ் சமத்துள் அரியாய்** - *பகைவர் களான அவுணர்கள் அஞ்சுமாறு பூசலில் நரசிங்கமாய்,* **பரிய இரணியனை ஊனார் அகலம் பிளவு எடுத்த ஒருவன்** - *தாழ்ந்த தசையாலே தடித்த இரணியனை. "உடம்பைத் தவிர உயிர் ஒன்றும் உண்டு; அதனைத் தனக்கு இடமாக உடையவன் ஒருவன் உண்டு; அவனைப் பெறவேண்டும்" என்னும் மென்மையும் கலந்து வளர்ந்தது அன்று அவனது உடல். அவனது தசை நிறைந்திருக்கும் மார்பைப் பிளவு செய்த இணையற்றவன்.* **தானே இரு சுடராய் வானாய்த் தீயாய் மாருதமாய் மலையாய் அலைநீர் உலகனைத்தும் தானாய்** - *அத்தகையவன், திங்கட்செல்வன் கதிரவன் ஆகியவர்தம் உயிர்க்கு உயிராய்ப் புக்கு இவர்கள் 'தான்' என்று சொல்லலாம்படியாய், விண்ணாய் நெருப்பாய் காற்றாய், இவற்றால் உருப் பெற்ற பொருள்திரளில் மலையாய், கடல் சூழ்ந்த நிலப்பரப்பு அடையத் 'தான்' என்று சொல்லும் வண்ணம் உலகினையே வடிவாகக் கொண்டவனாய் நின்ற நிலையைச் சொல்லுகிறது.* **தானும் ஆனான்** - *தனிச்சிறப்புடைய திருமேனி யோடு கூடியவனாய் இருப்பவன். அத்தகு பெருமான் உறையும்,* **சாளக்கிராமம் அடை நெஞ்சே!**

**ஒப்புமைப் பகுதி**

**1. பரிய இரணியன்**

*"பரியனாகி வந்த - பகவத் குணங்களை அநுஸந்தித்து நைந்திராமே, சேஷத்வத்தையறிந்து மெலிந்திராமே, ஸர்வேச்வரனை ஆசைப்பட்டுத் தளர்ந்த உடம்பாய் ஒசிந்திராமே. பரிய - நரஸிம்ஹத்துக்கும் பிற்காலிக்க வேண்டும்படி இருக்கை. ஊட்டியிட்டு வளர்ந்த பன்றிபோலே உடம்பை வளர்த்தான் இத்தனை"* அம. 8 பெ. உரை.

*பாசுரம் 14இன் ஒப்புமைப்பகுதி பார்க்க.*

**2. பெருமான் உலகே வடிவாய் நிற்றல்**

*பாசுரம் 43 இன் ஒப்புமைப்பகுதி பார்க்க.*

(47)

## 48

**வெந்தார் என்பும் சுடுநீறும்**
**மெய்யில் பூசிக் கையகத்தோர்**
**சந்தார் தலைகொண் டுலகேழும்**
**திரியும் பெரியோன் தான்சென்றென்**
**எந்தாய்! சாபம் தீர்என்ன**
**இலங்க முதுநீர் திருமார்வில்**
**தந்தான் சந்தார் பொழில்சூழ்ந்த**
**சாளக் கிராமம் அடைநெஞ்சே!**

**ப. ரை :** **நெஞ்சே** - *ஏ, மனமே!* **வெந்தார் என்பும் சுடுநீறும்** - *எரிக்கப்பட்டவர்களின் எலும்பையும், சுட்ட சாம்பலையும்,* **மெய்யில் பூசி** - *உடம்பிலே பூசி,* **கையகத்து, சந்து ஆர் ஓர் தலை கொண்டு** - *கையின்கண்ணே துளைகள் நிறைந்த ஒரு தலையினை ஏந்திக்கொண்டு,* **உலகு ஏழும் திரியும் பெரியோன் சென்று** - *உலகங்கள் ஏழினையும் சுற்றித்திரியும் தன்னைப் பெரியவனாக நினைத்துக் கொண்டிருக்கும் சிவன் சென்று,* **என் எந்தாய் சாபம் தீர் என்ன** - *எனக்கு நன்மை புரியும் தந்தையே! இந்த வசைக்கேட்டினைப் போக்கியருள வேண்டும் என்று வேண்டிநிற்க,* **இலங்கு திருமார்வில் அமுதுநீர் தந்தான்** - *விளங்குகின்ற திருமார்வில் உள்ள அமுதமயமான நீரைத் தெளித்துப் போக்கியவன் எழுந்தருளியுள்ள,* **சந்து ஆர் பொழில் சூழ்ந்த** - *சந்தன மரங்கள் நிறைந்த சோலைகளாலே சூழப்பட்ட,* **சாளக்கிராமம் அடை** - *திருச்சாளக்கிராமத்தை அடைவாய்.*

**சி. கு :** *எந்தாய் - என் தந்தையாய் இருப்பவனே! எந்தை - என் தந்தை என்பதன் மரூஉ; அது விளியேற்று எந்தாய் என வந்தது.*

---

**48.** 3 : 4 இலங்கு. 3 : 5 மதுநீர்.

வியா : **எட்டாம் பாட்டு : வெந்தார் என்பும்** - வெந்தவர்களுடைய எலும்பும் அது சுட்ட சாம்பலும் உடம்பிலே பூசி, கையிலே, சந்துகள் ஆர்ந்து இருந்துள்ள தலையைக்கொண்டு. எல்லா நரம்புகளும் வந்து கூடின இடத்திலேயிறே சேதித்தது. **உலகு இத்யாதி** - கூறுசெய்த ஊரிலே கையும் கைத்தளையுமாய்த் திரிவாரைப் போலே, ஈஶ்வராபிமாநியாய்த் தன் ஆஜ்ஞை நடத்திப் போந்த இடத்திலே கையும் ஓடுமாய்த் திரிந்த துர்மாநியானவன் சென்று, "என் ஸ்வாமி! என்னுடைய சாபத்தைப் போக்க வேணும்" என்ன. **திருமார்வில் இலங்கு அமுது நீர் தந்தான்** - விளங்கா நின்றுள்ள திருமார்வில் அம்ருதரூபமான ஜலத்தைக் கொடுத்து[1] அவனுடைய சாப மோக்ஷத்தைப் பண்ணினவன். **சந்தார் பொழில்** - சந்தநத்தாலே நிறைந்த பொழிலாலே சூழப்பட்ட.

---

வி : எட்டாம் பாட்டு : **வெந்தார் என்பும் சுடுநீறும் மெய்யில் பூசி** - *வெந்தவர்களுடைய எலும்பும் அது சுட்ட சாம்பலும் உடம்பிலே பூசி,* **கையகத்து ஓர் சந்து ஆர் தலை கொண்டு** - *கையிலே சந்துகள் ஆர்ந்திருக்கும் தலையைக் கொண்டு. எல்லா நரம்புகளும் வந்து கூடின இடத்திலே அன்றோ துண்டித்தது.* **உலகு ஏழும் திரியும் பெரியோன் தான் சென்று என் எந்தாய் சாபம் தீர் என்ன** - *கூறு செய்த ஊரிலே[2] கையும் கைத்தளையுமாய்[3] திரிவாரைப் போலே, தானே இறைவன் என்னும் நினைப்பிட்டுத் தன் ஆணை நடத்திப் போந்த இடத்திலே கையும் ஓடுமாய்த் திரிந்தான், செருக்கனான சிவன். அத்தகையவன் சென்று, "என் தலைவனே! எனது சாபத்தைப் போக்க வேண்டும்" என்று வேண்டினான். அவ்வாறு வேண்ட,* **திருமார்வில் இலங்கு அமுதுநீர் தந்தான்** - *விளங்கும் திருமார் வில் உள்ள அமுதமயமான நீரைக்கொடுத்து அவனுடைய வசைக்கேட்டினைப் போக்கினான்.* **சந்தார் பொழில் சூழ்ந்த சாளக்கிராமம் அடை நெஞ்சே** - *அத்தகையவன் சந்தனத்தாலே நிறைந்த பொழிலாலே சூழப்பட்ட சாளக் கிராமத்தில் உள்ளான்; நெஞ்சே! அங்குச் செல்வாய்.* (48)

## 49

**தொண்டாம் இனமும் இமையோரும்**
**துணைநூல் மார்வின் அந்தணரும்**
**அண்டா! எமக்கே அருளாய்என்று**
**அணையும் கோயில் அருகெல்லாம்**
**வண்டார் பொழிலின் பழனத்து**
**வயலின் அயலே கயல்பாயத்**
**தண்டா மரைகள் முகமலர்த்தும்**
**சாளக் கிராமம் அடைநெஞ்சே!**

---

1. குடுத்து.
2. கூறு செய்த ஊர் - தனக்கு உரிய பங்காகப் பிரித்துக் கொடுக்கப்பட்ட ஊர். 3. கையும் கைத்தளையுமாய்த் திரிதல் - கையில் விலங்கைக் கொண்டு திரிதல்; கைத்தளை - விலங்கு.

**49.** 1 : 5 மார்வில்.

**ப. ரை :** **நெஞ்சே** - *ஏ, மனமே!* **தொண்டு ஆம் இனமும்** - *அவனுக்கே எல்லாத் தொண்டுகளையும் செய்யும் வைணவர்களுடைய திரளும்,* **இமையோரும்**- *அமரர்களும்,* **துணை நூல் மார்வின் அந்தணரும்** - *இரண்டு பூணூல் அணிந்த மார்பினையுடைய அந்தணரும்,* **அண்டா எமக்கே அருளாய் என்று** - *அண்டங்களுக்கு எல்லாம் தலைவனே! எங்களுக்கு அருள்புரிதல் வேண்டும் என்று,* **அணையும் கோயில் அருகு எல்லாம்** - *சார்கின்ற கோயிலின் பக்கம் எங்கும் இருக்கும்,* **வண்டு ஆர் பொழிலின் பழனத்து அயலே** - *வண்டுகள் மொய்த்த சோலையில் உள்ள நீர்நிலங்களிலே,* **வயலின் கயல் பாய** - *வயலில் வாழும் மீன்கள் துள்ளிக் குதிக்க,* **தண் தாமரைகள் முகம் அலர்த்தும்** - *குளிர்ந்த தாமரை மொட்டுகளானவை முகமலர்ச்சியைச் செய்யும்,* **சாளக்கிராமம் அடை** - *திருச்சாளக்கிராமத்தை அடைவாய்.*

**சி. கு :** *தொண்டாம் இனம் - அடியவர் திரள். துணைநூல் மார்பின் அந்தணர் - சாதி அந்தணர்; பிறப்பால் வேதியர் குலத்தவராய் இருப்பவர்கள்.*

**வியா :** **ஒன்பதாம் பாட்டு :** **தொண்டு ஆம் இனமும்** - **"வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்"** என்று இருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திரளும், நித்ய ஸூரிகளும், கேவல ப்ராஹ்மணரும். **வித்யா விநய ஸம்பந்நே - ப்ராஹ்மணே"** என்று பிரித்தாரிறே பாஷ்யகாரர். **அண்டா** - தேவனே! எங்களுக்கு ஆச்ரயணீயனானவனே! எங்களுக்கு அருளவேணும் என்று தனித் தனியே சொல்லாநின்றுகொண்டு சேருகிற கோயில் அருகு எல்லாம். **வண்டார் இத்யாதி** - வண்டுகளாலே மிடையப்பட்டுள்ள பொழிலில் உண்டான பழனம் உண்டு - நீர் நிலங்கள், அதினுடைய பர்யந்தங்களில் உண்டான வயலிலேநின்றும்

---

**வி :** ஒன்பதாம் பாட்டு : **தொண்டு ஆம் இனமும் இமையோரும் துணை நூல் மார்வின் அந்தணரும்** - "வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" (*தி. வா. மொ. 3:3:1*) *என்று இருக்கும் வைணவர்களுடைய திரளும், அயர்வறும் அமரர்களும், வடிவத்தால் அந்தணராய் இருப்பவர்களும். "தொண்டாம் இனம் என்று கூறிப் பின்னும் துணைநூல் மார்வின் அந்தணர் என்று வேறு பிரித்து எதற்காகக் கூறல் வேண்டும்? அப்பிரிவினுள்ளே அந்தணர் அடங்காரோ?" என்னும் ஐயம் எழும். அதற்கு அடங்கார் என்க.* "கல்வி, அடக்கம் முதலிய வற்றோடு கூடியவன் ஆகிய மறையவனிடமும், பசுவிடமும், யானையிடமும், நாயிடமும், புலையனிடமும் மெய்யறிவு பெற்றவர்கள் ஒரே வகையான நோக்குடையவர்களாக இருப்பார்கள்" *என்பது கீதை (5 : 18).* இதில் வரும் கல்வி *அடக்கம் இவற்றை மறையவனுக்கு அடைமொழியாக்காமல் இவற்றை உடையவனை வேறாகவும் மறையவனை வேறாகவும் வகுத்துக் கூறினார் இராமாநுசர். அதுபோல, இங்கும் தொண்டாம் இனம் வேறாகவும் அந்தணர் வேறாகவும் கூறப்பட்டனர் என்பதாம்.* **அண்டா** - *தேவனே! எங்களுக்குப் பற்றுக் கோடாய் இருப்பவனே!* **எமக்கே அருளாய் என்று அணையும் கோயில் அருகு எல்லாம்** - *எங்களுக்கு அருள வேண்டும் என்று தனித்தனியே சொல்லியவாறு சேரும் கோயில் அருகு எல்லாம்.* **வண்டு ஆர் பொழிலின் பழனத்து வயலின் அயலே கயல் பாய** - *வண்டுகளாலே மிடையப்பட்ட பொழிலில் உண்டான பழனம் உண்டு; அஃதாவது நீர் நிலங்கள் உண்டு. அவற்றின் பக்கங்களில் உண்டான*

கயலானது நீர்நிலங்களிலே வந்து பாய. **தண் தாமரைகள் முகம் அலர்த்தும்** - கூத்தாடுமவர்கள் வாய்க்கு அடியிட்டால் ஸதஸ்யராய் இருப்பார் தம் முகவிகாஸத்தாலே கொண்டாடுமாப் போலே, தாமரைகள் முகம் அலர்த்தும் ஆயிற்று.

---

*வயலிலேநின்றும் கயலானது நீர் நிலங்களிலே வந்து பாய.* **தண் தாமரைகள் முகம் அலர்த்தும்** - *கூத்தாடுபவர்கள் வாய்க்க அடியிட்டால்*[1] *அவையினர் தம் முக மலர்ச்சியாலே கொண்டாடுவது போலே*[2] *தாமரைகள் முகம் அலர்த்தும்.* **அத்தகைய, சாளக் கிராமம் அடை நெஞ்சே—.**

(49)

## 50

**தாரா ஆரும் வயல்சூழ்ந்த**
**சாளக் கிராமத் தடிகளைக்**
**காரார் புறவின் மங்கைவேந்தன்**
**கலியன் ஒலிசெய் தமிழ்மாலை**
**ஆரார் உலகத் தறிவுடையார்**
**அமரர் நன்னாட் டரசாளப்**
**பேரா யிரமும் ஓதுமின்கள்;**
**அன்றி இவையே பிதற்றுமினே.**

**ப. ரை :** **உலகத்து அறிவுடையார் ஆர் ஆர்** - *இவ் உலகத்தில் அறிவுடையராய் இருப்பவர் எல்லாரும்,* **அமரர் நல் நாட்டு அரசு ஆள** - *இமையவர்களுடையதாய் தனிச் சிறப்புடையதாய் இருக்கும் திருநாட்டினை ஆட்சிபுரிந்திட,* **பேர் ஆயிரமும் ஓதுமின்கள்** - *அவனுடைய ஆயிரம் திருப்பெயர்களையும் சொல்லப் பாருங்கள்.* **அன்றி** - *அப்படிச் சொல்ல முடியாதவராகில்,* **தாரா ஆரும் வயல் சூழ்ந்த** - *தாரா என்னும் பறவைகள் நிறைந்த வயல்களாலே சூழப்பட்ட,* **சாளக் கிராமத்து அடிகளை** - *திருச்சாளக்கிராமத்தில் வந்து கிட்டி நிற்கும் தலைவனைக் குறித்து,* **கார் ஆர் புறவின் மங்கை வேந்தன்** - *மேகங்கள் படிந்துள்ள குழலையுடைய திருமங்கை நாட்டுக்கு அரசனான,* **கலியன் ஒலி செய் தமிழ் மாலை இவையே** - *ஆழ்வார் இசையுடைத்தாக இயற்றிய தமிழ்ப் பாமாலையாகிய இவற்றையே,* **பிதற்றுமின்** - *அடைவுகெடச் சொல்லப்பாருங்கள்.*

**சி. கு :** *அடிகள் - தலைவன், உடையவன்.* **ஓதுமின்கள் - விகுதிமேல் விகுதி** *பெற்ற ஏவற் பன்மை. 'பேராயிரமும் ஓதுமின்கள் அன்றி இவையே பிதற்றுமினே' என்பதற்குப் பெரியவாச்சான்பிள்ளை* வேறு இடங்களில் எழுதி*யுள்ள உரைப்பகுதிகளை ஒட்டி, "ஸஹஸ்ரநாமங்களை* ஓதினீர்களாகில் *உங்களுடைய விருப்பம்,* நிறைவேறும்; *முரட்டு* ஸம்ஸ்க்ருத பாஷையிலே அமைந்

---

1. வாய்க்க அடியிடுதல் - பொருத்தமாக ஆடுதல். 2. கொண்டாடுதல் - பாராட்டுதல்.

துள்ள அவற்றை உருச்சொல்லித் தரித்து ஓதவல்லமை இல்லையேல் எளிதான செந்தமிழில் அமைந்த இந்தப் பாசுரங்களை ஓதுங்கள்; பேற்றில் குறையில்லை என்றார் ஆயிற்று'' என்று திவ்யார்த்த தீபிகை எழுதியுள்ள விளக்கம் கருதத்தக்கது.

வியா : பத்தாம் பாட்டு : **தாரா இத்யாதி** - தாராக்களாலே நிறைந்து இருந்துள்ள வயல்சூழ்ந்த ஸ்ரீஸாளக்ராமத்திலே வந்து ஸந்நிஹிதனான ஸர்வ ஸ்வாமியைக் கவிபாடிற்று. **காரார் இத்யாதி** - மேகங்களினுடைய நிரந்தர ஸஞ்சாரத்தை உடைத்தான பர்யந்தத்தையுடைய திருமங்கைக்கு ராஜாவான ஆழ்வார். ஒலியுடைத் தாம்படியாகச் சொன்ன தொடை. **ஆர் ஆர் உலகத்து அறிவுடையார்** - லோகத்தில் அறிவுடையராய் இருப்பார் ஆர் ஆர். நித்யஸூரிகளுடைய நல்நாடு உண்டு பரமபதம். அத்தை, ''**ஆள்மின்கள் வானகம்**'' என்கிறபடியே தாங்கள் இட்ட வழக்காம்படி நடத்த. ஆயிரம் திருநாமங்களையும் வாயாலே சொல்லப் பாருங் கோள்; அங்ஙன் அன்றிக்கே, **இவையே பிதற்றுமினே** – அது மாட்டீர்கோளாகில்,[1] இவற்றையே[2] அடைவு கெடச் சொல்லப் பாருங்கோள்'' **ஸங்கீர்த்தயேஜ் ஜகந் நாதம் வேதம் வாபி ஸமீரயேத்''.

---

வி : பத்தாம் பாட்டு : **தாரா ஆரும் வயல் சூழ்ந்த சாளக்கிராமத்து அடிகளை** - *தாராக்களாலே நிறைந்துள்ள வயல்சூழ்ந்த திருச்சாளக்கிராமத்திலே வந்து கிட்டி நிற்பவனான அடிகளைக் குறித்துப் பாக்கள் புனைந்தார்.* **கார் ஆர் புறவின் மங்கைவேந்தன் கலியன்** - *மேகங்கள் எக்காலத்தும் உலவும் சுற்றுப் பகுதிகளையுடைய திருமங்கைக்கு அரசரான ஆழ்வார்.* **ஒலி செய் தமிழ் மாலை** - *ஒலியுடைத்தாகச் சொன்ன தொடை.* **ஆர் ஆர் உலகத்து அறிடையார்** - *உலகத்தில் அறிவுடையராய் இருப்பார் எல்லாரும்.* **அமரர் நன் நாட்டு அரசு ஆள** - *அமரர்களது நல்நாடு உண்டு. அதற்குப் பெருவிசும்பு என்பது பெயர். அதனை,* **''ஆள்மின்கள் வானகம்''** (*தி. வா. மொ. 10: 9: 6*) *என்பதற்கேற்பத் தாங்கள் இட்ட வழக்காகுமாறு நடத்த.* **பேர் ஆயிரமும் ஓதுமின்கள்** - *ஆயிரம் திருப் பெயர்களையும் வாயாலே சொல்லப் பாருங்கள்.* **அன்றி இவையே பிதற்றுமினே** - *அது கூடாவிடில், இவற்றையே அடைவு கெடச் சொல்லப் பாருங்கள்.* இவ்வாறு ஒன்றைச் சொல்லி அது முடியாவிட்டால் பிறிதொன்றை மேற்கொள்ளுங்கள் என்று சொன்ன இடம் உண்டோ என்னில், உண்டு. **''ஒன்று உலகிற்குத் தலைவனாய் இருப்பவனைப் புகழ்க; அன்றேல் வேதத்தையாயினும் ஓதுக''** என்பது முன்னோர் மொழி.

### ஒப்புமைப் பகுதி

**பிதற்றல்**

*'' பெருந் தேவர் குழாங்கள் பிதற்றும்பிரான் ''*

*'' பிதற்றும் - ஜ்வரஸந்நிபதிதரைப் போலே அக்ரமமாகக் கூப்பிடா நின்றார்கள் ''* தி. வா. மொ. 9:3:4-36

*[ஜ்வரஸந்நிபதிதர் - கடுங்காய்ச்சல் உற்றார். அக்ரமம் - அடைவுகேடு.]*

*'' சமயிகள் பேதங்கள் சொல்லிப் பிதற்றும் பிரான் ''*

*'' பிதற்றும் - அக் குணங்களிலே ஈடுபட்டு ஜ்வரஸந்நிபதிதரைப் போலே அடைவுகெடக் கூப்பிடாநிற்பர்கள் ''* தி. வா. மொ. 4:2:4-36

---

1. 'அது மாட்டீர் கோளாகில்' என்பது இல்லை. 2. இவைற்றை; இவைத்தையே.

பிர : திருவுள்ளத்தைக் குறித்து, "உகந்தருளின நிலங்களை ஆஶ்ரயி" என்று பலகாலும் சொல்லிக்கொண்டு போந்தார் கீழ்; அதுவும் அப்படியே செய்வதாக ஒருப்பட்டது; அநந்தரம், தாம் தம்முடைய நிகர்ஷத்தை அநுஸந்தித்துத் தம்முடைய பூர்வ வ்ருத்தத்தையும், விஷய ப்ராவண்யத்தையும், ஆர்த்த விஷயத்தில், 'ஐயோ'[1] என்னாதே போந்த படியையும், பரஹிம்ஸையே யாத்ரையாய்ப் போந்த படியையும் இவற்றை[2] அடைய முன்னிட்டு, "ராவணோ நாம துர்வ்ருத்த:" என்று ஸ்ரீவிபீஷணாழ்வான் ஆகாசத்திலே நின்று ஸ்வநிகர்ஷத்தைச் சொல்லி சரணம் புக்காப் போலே, இவரும் தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பம் செய்து திருநைமிசாரண்யத்திலே நிற்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே பெரியபிராட்டியார் முன்னிலையாகச் சரணம் புகுகிறார்.

---

தோ : *ஆழ்வார் தம் திருவுள்ளத்தைக் குறித்து, "உகந்தருளின நிலங்களைக் கிட்டப் பாராய்" என்று பலகாலும் சொல்லிக்கொண்டு போந்தார் கீழ்; அதுவும் அப்படியே செய்வதாக ஒருப்பட்டது[3]; பின்பு, தாம் தம்முடைய தாழ்வை நினைந்து பார்த்தார். தம்முடைய பண்டை நாள் ஒழுகலாற்றையும், ஐம்புலத் தோய்வினையும், துன்பங் கண்டுழி, 'ஐயோ' என்று இரங்காமல் இருந்த தன்மையினையும், பிறர்க்குத் துன்பம் இழைத்தலையே தொழிலாய்க்கொண்டு வாழ்ந்ததனையும் எண்ணினார். இவற்றை எல்லாம் முன்வைத்து,* **"தீயொழுக்கம் உடையவனும் அரக்கனும் அரக்கர்களுக்கு அரசனுமான இராவணனுக்குத் தம்பியும் வீடணன் என்னும் பெயரை உடையவனும் ஆவேன்"** *(ரா. யு. 17: 12) என்று வீடண ஆழ்வான் விண்ணில் நின்று தன்தாழ்வு சொல்லி இராமன்பால் தஞ்சம் புகுந்தது போல, இவரும் தம்முடைய புகல் ஒன்றின்மையை எடுத்துச்சொல்லித் திருநைமிசாரணியத்திலே நிற்கும் பெருமான் திருவடிகளிலே பெரியபிராட்டியார்[4] முன்னிலையாகத் தஞ்சம் புகுகிறார்.*

## 51

**வாணிலா முறுவல் சிறுநுதல் பெருந்தோள்**
**மாதரார் வனமுலைப் பயனே**
**பேணினேன் அதனைப் பிழையெனக் கருதிப்**
**பேதையேன் பிறவிநோய் அறுப்பான்**
**ஏணிலேன் இருந்தேன் எண்ணினேன் எண்ணி**
**இளையவர் கலவியின் திறத்தை**
**நாணினேன் வந்துன் திருவடி அடைந்தேன்**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்.**

---

1. அய்யோ. 2. இவைத்தை.
3. ஒருப்படுதல் - இணங்குதல். 4. பெரியபிராட்டியார் - திருமகள்.

51. 3 : 7 திறத்து.

**ப. ரை :** **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *திருநைமிசாரணியத்தில் எழுந் தருளியுள்ள என் தலைவனே!* **வாள் நிலா முறுவல் சிறு நுதல் பெருந் தோள்** - *ஒளி படைத்த புன்னகையினையும் சிறிய நெற்றியினையும் பெருத்த தோள்களினையும் உடையரான,* **மாதரார் வன முலையே பயன் பேணினேன்** - *பெண்களின் அழகிய நகில்களையே மேலான பயனாகப் போற்றினேன்.* **அதனைப் பிழை எனக் கருதி**- *அதனைத் தவறு என்று நினைத்து,* **பிறவி நோய் அறுப்பான்** - *பிறப்பாகிய துன்பத்தை அறுத்துக்கொள்வதற்கு,* **ஏண் இலேன் இருந்தேன்** - *எண்ணம் இல்லாது இருந்தேன்;* **எண்ணினேன்** - *எனது பண்டைநாள் வாழ்க்கை நிலை யினைச் சிந்தித்தேன்;* **எண்ணி** - *சிந்தித்து,* **இளையவர் கலவியின் திறத்தை நாணி னேன்** - *இளமை பொருந்திய பெண்கள்பால் பெற்ற உடல்உறவைக் குறித்து, வெட்கம் உற்றேன்;* **நாணி** - *வெட்கி,* **உன் திருவடி வந்து அடைந்தேன்** - *உன்னுடைய திருவடிகளைக் கிட்டித் தஞ்சம் புகுந்தேன்.*

**சி. கு :** *ஏண் இலேன் - முற்றெச்சம்.* **இளையவர்** - *பெண்கள்; ஈண்டு ஆண்களை ஒழித்து நின்றது.* **நைமிசாரணியம்** - *வடநாட்டுத் திருவிண்ணகரம். இங்குப் பெருமான் காடே தன் உருவமாகக் காட்சி தருகிறான் என்பர்.* **நைமிசம்** - *நேமி விழுந்த இடம்; அரணியம் - காடு.*

*இது விளம் மா விளம் மா விளம் விளம் மா என்னும் வாய்பாட்டில் அமைந்த எழுசீர் ஆசிரிய விருத்தம்.*

வியா : முதற் பாட்டு : **வாள் நிலா முறுவல் சிறு நுதல் பெருந் தோள் மாதரார் வன முலைப் பயனே பேணினேன்** - இது என்னுடைய பூர்வ வ்ருத்தம் இருந்தபடி என்கிறார். விஹிதங்களை அநுஷ்ட்டித்து சம தமாத்யாத்ம குணோபேதராய் இருப்பாரிறே இதுக்கு அதிகாரிகள். அதில் நான் செய்துநின்ற நிலை இது என்கிறார்.

**வாள் நிலா முறுவல்** - ஒளியானது நிலாவாநின்றுள்ள - வர்த்தியா நின்றுள்ள முறுவல் என்னுதல்; அன்றிக்கே, ஒளியானது இதுக்கு இலக்கானாருடைய நெஞ்சுவிட்டுப் போகாதே வர்த்தியாநின்றுள்ள முறுவல் என்னுதல். நுதல் - நெற்றி; அதுவும் சிறுத்து இருக்கை; இல்லை ஆகில் பும்ஸ்த்வ கந்தியாய் இருக்குமிறே!

---

வி : முதற் பாட்டு : **வாள் நிலா முறுவல் சிறு நுதல் பெருந் தோள் மாதரார் வன முலைப் பயனே பேணினேன்** - *இஃது என் பண்டை நாள் ஒழுகலாறு இருந்த நிலை என்கிறார். விதித்தன செய்து, அகபுற உறுப்புகளின் அடக்கம் தொடக்க மான பெருந்தகவுகளோடு பொருந்தி இருப்பவர்களே இறைவனிடத்தில் இழிவ தற்குத் தகுதியுடையவர்கள். அப்படி இருத்தற்கு உரிய இடத்தில் நான் செய்து நின்ற நிலை இது என்கிறார்.*

**வாள் நிலா முறுவல்** - *ஒளியானது நிலவுகின்ற முறுவல், அஃதாவது ஒளி உறைகின்ற முறுவல் என்னலாம்; அவ்வாறு அன்றி, ஒளியானது இதற்கு இலக்கானாரது நெஞ்சினை விட்டுப் போகாமல் தங்கிநிற்கும் முறுவல் என்னலும் ஆம்.* **சிறு நுதல்** - *நுதல் என்பது நெற்றி; அதுவும் சிறுத்திருக்கை; அது சிறியதாக இல்லையெனில் ஆண்மை வாடை வீசுமல்லவா!* **பெருந் தோள்** - *இன்பம் துய்ப்*

**பெருந் தோள்** - போக்தாவின் அளவு அல்லாதபடி போக்யதை கரைபுரண்ட தோள். **மாதரார் இத்யாதி** - ஒளி நிலாவாநின்றுள்ள முறுவலையும் அளவுபட்ட நுதலையும் போக்யதா ப்ரகர்ஷத்தை உடைத்தான தோள்களையும் உடையரான ஸ்த்ரீகளுடைய ஸந்நிவேசத்து அழகை உடைத்தாய் இருக்கிற மாம்ஸ க்ரந்தியையே ப்ரயோஜநமாக ஆதரித்துக்கொடு போந்தேன்[1]. **பயனே பேணினேன்** - அவ்வருகில் அத்ருஷ்டமாகவும் நினைத்திருப்பது இது தன்னையே ஆயிற்று. தங்களுடைய அவயவசோபையாலே இவனை அகப்படுத்தி, இவன் கையில் உள்ள ஸர்வ ஸ்வத்தையும் அபஹரித்து, "இவன் அகப்பட்டான்" என்று அறிந்தவாறே பின்னை இவன் நினைத்தபடி தங்களைக் கொடுக்கக் கடவர் அல்லாத ஸ்த்ரீகளுடைய மாம்ஸ க்ரந்தியையே ப்ரயோஜநம் என்று ப்ரமித்து ஆதரித்துப் போரப் பேணினேன். அதுதன்னில் அநுபாவ்யமொன்று[2] இல்லையே; அதிலே குவால் உண்டாக நினைத்து ஆதரிக்கிற இவன் ப்ரமமேயிறே உள்ளது. **அதனைப் பிழை எனக் கருதி** - இப்படி நெடுநாள் ஆதரத்துக்கு விஷயமாய்ப் போந்தது இன்றாகப் பிழை என்று நெஞ்சிலே பட்டது; விஷய ப்ரவணனாவன், "நீ அவற்றை[3] விடு" என்றால் விடானிறே; இவர்க்கு இப்போது இவைதன்னை விடுகைக்கு உவாத்து[4] இவைதானே ஆயிற்று; அதாகிறது, அவர்களுடைய அநாத்மகுணங்களை அநுஸந்தித்தவாறே கடுக விட்டுக்கொடு நிற்கலாமிறே. இன்று தப்பு என்று விட்டுக்கொடு நிற்க வேண்டும் இவற்றையாயிற்று[5] நெடுநாள் ப்ரயோஜநமாக புத்திபண்ணிப்

---

*பான் உண்டறுக்க முடியாதபடி மிகுதியான இன்பச்சுவை கரை புரண்ட தோள்.* **மாதரார் வன முலைப் பயனே பேணினேன்** - *ஒளி நிலவுகின்ற முறுவலையும், அளவுபட்ட நுதலையும், இன்பத்தைக் குவாலாக[6] உடைய தோள்களையும் உடையரான பெண்களின் அமைப்பு அழகினை உடைய தசை முடிப்பாகிய கொங்கைகளையே பயனாகக் கொண்டாடிப் போந்தேன்.* **பயனே பேணினேன்** - *அதற்கும் மேலே, மறுமைப் பயனாகவும் நினைத்திருப்பது இவை தம்மையே ஆகும். தங்களுடைய உறுப்பழகாலே இவனை அகப்படுத்தி, இவன் கையில் உள்ள எல்லாச் செல்வத்தையும் கவர்ந்து, "இவன் தங்களிடம் சிக்கினான்" என்று அறிந்தவாறே இவன் நினைத்தவண்ணம் தங்களைக் கொடாத பெண்டிரின் தசைத் திரட்சியையே பயன் என்று மயங்கி விழைந்து போரப்[7] பேணினேன். அது தன்னில் நுகரத்தக்கது ஒன்றும் இல்லை. அதிலே குவால் உண்டாக நினைத்துப் போற்றும் இவன் மயக்கம் மட்டுமே உள்ளது.* **அதனைப் பிழை எனக் கருதி** - *இப்படி நெடுநாள் விழைதற்கு உரியதாகப் போந்தது இன்று பிழையாக நெஞ்சிலே பட்டது; ஐம்புலத் தேட்டம் உடையவனை நோக்கி, "நீ அவற்றை விடு" என்றால் விடுவானோ? இவர் இப்போது இவற்றை விடுவதற்குக் காரணம் என் எனில், இவர்க்கு இவற்றின் புன்மையைச் சொல்லித் தெளிவிக்கும் ஆசிரியனாய் இவையே அமைந்தன; அதனாலேயே விடுத்தார். அஃதாவது, அப்பெண்களின் இழிதகவுகளை எண்ணியவாறே விரைந்து விடுத்து வரலாம் அல்லவா? இன்று தப்பு என்று விடுத்து நிற்க வேண்டுவனவற்றை அன்றோ நெடுநாள் பயனாகக்*

---

1. ப்ரயோஜநமாக ப்ரமித்து ஆதரித்துப் போரப் பேணினேன். 2. அநுபாவ்யமாவது ஒன்று. 3. அவைத்தை. 4. உவாத்தி. 5. இவைத்தையாய்த்து.
6. குவால் - மிகுதி. 7. போர - மிகவும்.

போந்தது! பேதையேன் - "இன்று பிழை என்று கைவிட வேணடும்படியான இத்தை அநாதி காலம் ஆதரித்துப் போர வேண்டின ஹேது என்?" என்ன, பேதையேன் - அறிவுகேடு எத்தைப் பண்ணாதுதான்?

பிறவி இத்யாதி - இப்படி அறிவுகேடன் ஆகையாலே, "ஸம்ஸாரமாகிறது அல்பம், அஸ்திரம், துஃக்காவஹம், ஆன பின்பு இத்தைத் தவிர்த்துக் கொள்ள வேணும்" என்னும் மநோரதத்தை உடையேன் அன்றிக்கே இருந்தேன். ஏண் இலேன் - இத்தைத் தவிர்த்துக் கொள்ளுகைக்கு ஈடான உயர்த்தியை உடையேன் அல்லேன் என்னுதல். இருந்தேன் - 'நன்று' என்று அநுஸந்தித்துப் போந்த இத்தைத் 'தண்ணிது' என்று விட்டாரே, அநந்தரம் உத்தேஸ்ய பூமியிலே போய்ப் புகப் பெற்றிலரே, நடுவில் நிலையை ஆயிற்று இருந்தேன் என்கிறது. 'ஓடினேன்' என்ற இவர் இருக்கைக்கு அவகாசம் இல்லை. "கஸ்த்த ஏவ வ்யதிஷ்ட்டத" என்னுமாப் போலே. எண்ணினேன் - "நாம் முன்பு செய்து போந்தது என்? நாம் தாம் ஆர்? இனிச் செய்து வர்த்திக்க அடுப்பது என்?" என்று ஆராயத் துடங்கினேன்.

எண்ணி - இப்படி அநுஸந்தித்து. இளையவர் கலவியின் திறத்தை நாணினேன் - தங்கள் பருவத்தாலே இதினுடைய தண்மை நெஞ்சில் படாதபடி

---

கருதிப் போந்தது! பேதையேன் - "இன்று பிழை என்று கைவிட வேண்டும்படி இருக்கும் இதனை நெடுங்காலம் மிகவும் விழைந்த காரணம் என்?" என்ன, தன்னை அறிவுகேடன் என்கிறார். பேதையேன் - அறிவுகேடுதான் எதனைச் செய்யாது?

பிறவி நோய் அறுப்பான் ஏண் இலேன் இருந்தேன் - இப்படி அறிவு கேடனாய் இருப்பதனால், "உலக வாழ்க்கை இழிந்தது, நிலையற்றது, இடும்பை தருவது என்று கண்ட பின்பு, இதனைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும்" என்னும் எண்ணம் இல்லாதவனாய் இருந்தேன். ஏண் இலேன் - இதனைத் தவிர்த்துக்கொள்ளுதற்குத் தக்க உயர்த்தியை[1] உடையேன் அல்லேன் என்கிறார். இருந்தேன் - 'நன்று' என்று கருதிப் போந்த இதனைத் 'தண்ணிது'[2] என்று விட்டார் அல்லவா! அதன்பின்பு கருதும் இடமான திருநாட்டிலே போய்ப் புக வேண்டும் அன்றோ! ஆனால், அங்குப் புகப் பெற்றிலர். இவ்இரண்டிற்கும் நடுவு பட்ட நிலையிலேயே உள்ளார். அதனையே, 'இருந்தேன்' என்பதனால் குறிக் கிறார். 'ஓடினேன்' (பெ. தி. 1: 1: 1) என்று கூறிய இவர் இருத்தற்கு இட மில்லை; "வீடணன் வானத்திலேயே நின்றான்" (ரா. யு. 17: 8) என்று சொல்வது போலே இவரும் நில்லாமல் ஓடினார்; ஆதலின் இருத்தற்கு இடம் இல்லாமல் போயிற்று. எண்ணினேன் - "நாம் முன்பு, செய்து போந்தது யாது? நாம் யார்? இனிச் செய்ய வேண்டுவது யாது?" என்று ஆராயத் தொடங்கினேன்.

எண்ணி - இப்படி நினைத்து. இளையவர் கலவியின் திறத்தை நாணினேன்- தங்கள் பருவத்தாலே இதன் தண்மை நெஞ்சில் படாதவகையில் மறைத்துக்

---

1. உயர்த்தி - உயர்வு; 'ஏண்' என்பதற்கு எண்ணம் என்று பொருள் உரைத்துப் பின்னர் உயர்வு என்று பிறிதொரு பொருளும் உரைக்கிறார். 2. தண்ணிது - தாழ்ந்தது.

யாக மறைத்துக்கொடு போருகிறவர்களுடைய கலவி இடையாட்டத்தை இப்போது லஜ்ஜித்தேன். ஆண்பிள்ளைச் சோறாள்வியை ஸ்த்ரீ என்று பின்துடருமாப் போலே இருப்பது ஒன்றிறே சப்தாதி விஷயங்களிலே போக்யதா புத்திபண்ணிப் பின்துடருகை யாகிற இது. வெளிச்செறிப்புப் பிறந்த அநந்தரம் லஜ்ஜித்துக் கைவாங்க வேண்டு மத்தையிறே நெடுநாள் ஆதரித்துப் போந்தது. **வந்து உன் திருவடி அடைந்தேன்** - நெடுநாள் ப்ரயோஜநம் என்று ஆதரித்து ஒருநாளாக லஜ்ஜித்துக் கைவாங்க வேண்டும்படி அன்றிக்கே என்றும் ஒக்க ப்ரயோஜந ரூபமான திருவடி களிலே வந்து சரணம் புகுந்தேன். **நைமிசாரணியத்துள் எந்தாய்** - அவன் பக்கல் ப்ரயோஜநம் உள்ளன வாங்கிப் பின்னைக் கைவிடுமாகில் இவனுக்கு அல்லா தாரில் வாசி இல்லையிறே. அங்ஙன் அன்றிக்கே நிருபாதிக பந்துவாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் வகுத்த ஸ்வாமியாய் இவன்தான் நெடுநாளை இழவை அநுஸந்தித்து வெறுத்தால், ''பிழை புகுந்ததாகில் அதுக்குப் பரிஹரிக்கைக்கு நான் இருந்தேன், செய்யலாவது உண்டோ?'' என்று எடுத்து முகத்தைத் துடைத்துக் குளிர முகம் தருமவனாய் இருந்தான்.

---

கொண்டு செல்வாரது கலவி இடையாட்டத்தை[1] இப்போது நினைத்து நாணினேன். ஆண்பிள்ளைச் சோறாள்வியைப்[2] பெண் என்று கருதிப் பின் தொடருவது போலே இருப்பது அன்றோ கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் புலன்களில் இன்பம் இருப்பதாகக் கருதிப் பின்தொடரும் இது. வெளிச் செறிப்புப்[3] பிறந்தவாறே வெட்கிக் கைவாங்க வேண்டுவதனை அன்றோ நெடு நாள் விரும்பிப் போந்தது. **வந்து உன் திருவடி அடைந்தேன்** - நெடுநாள் பயனாகக்கொண்டு விரும்பிப் பின்னொரு நாள் இதனைப் பயனாக எண்ணினோமே என்று நாணிக் கைவாங்க வேண்டுமாறு அன்றி என்றும் ஒக்கப் பயனாய் இலங்கும் திருவடிகளிலே வந்து தஞ்சம் புகுந்தேன். **நைமிசாரணியத்துள் எந்தாய்** - அண்டியவன்பக்கல் உள்ள பயன்களை எல்லாம் வாங்கிப் பின்னைக் கைவிடுவான் எனில் இவனுக்கும் பொருட்பெண்டிர்க்கும் வேறுபாடு யாது? அவ்வாறு இல்லாமல் இயற்கையான உறவாய், எல்லா நற்பண்புகளுக்கும் உறை விடமாய், வகுத்த தலைவனாய், திருவடியினைப் பற்றுபவன் தன் நெடுநாளைய இழவினை[4] எண்ணித் தன்னையே தான் வெறுத்துக் கொண்டால், ''பிழை புகுந்ததாகில் அதனைப் போக்குவதற்கு நான் இருந்தேன், யாது செய்ய வேண்டும்?'' என்று எடுத்து முகத்தைத் துடைத்துக் குளிர முகம் தருபவனாய்[5] இருந்தான்.

**ஒப்புமைப் பகுதி**

**சம தம குணங்கள்**

*பாட்டு 3இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

(51)

---

1. கலவி இடையாட்டம் - கலவியின் கூறுபாடு.
2. ஆண்பிள்ளைச் சோறாள்வி - சமையற்காரன். 3. வெளிச்செறிப்பு - தெளிவு; விளக்கம்.
4. இழவு - இழப்பு. 5. குளிர முகம்தருதல் - கனிவோடு நோக்குதல்.

## 52

**சிலம்படி உருவின் கருநெடுங் கண்ணார்**
**திறத்தனாய் அறத்தையே மறந்து,**
**புலன்படிந் துண்ணும் போகமே பெருக்கிப்**
**போக்கினேன் பொழுதினை வாளா;**
**அலம்புரி தடக்கை ஆயனே! மாயா!**
**வானவர்க் கரசனே! வானோர்**
**நலம்புரிந் திறைஞ்சும் திருவடி யுடைந்தேன்,**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்.**

**ப. ரை :** **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *திருநைமிசாரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனே!* **சிலம்பு உருவின் அடி** - *சிலம்பு அணிந்த அழகிய பாதங்களையும்,* **கரு நெடுங் கண்ணார் திறத்தனாய்** - *கருமையும் நெடுமையும் உடைய கண்களையும் பெற்ற பெண்களிடம் பற்றுக் கொண்டவனாய்,* **அறத்தையே மறந்து** - *உய்வுக்கு வழியான அறத்தினை நினையாமல்,* **புலன் படிந்து உண்ணும் போகமே பெருக்கி** - *ஐம்பொறிகள் பொருந்தித் துய்க்கும் இன்பங்களையே மிகுத்து,* **பொழுதினை வாளா போக்கினேன்** - *காலத்தை வறிதே கழித்து விட்டேன்;* **அலம் புரி தடக் கை ஆயனே** - *'போதும்' என்னும்படி அடியார்க்கு வேண்டுவன கொடுக்கும் பரந்த திருக்கைகளையுடைய இடைக்குலத்தில் பிறந்தவனே!* **மாயா** - *வியத்தகு பண்பும் செயலும் உடையவனே!* **வானவர்க்கு அரசனே** - *அமரர்களுக்குத் தலைவனே!* **வானோர் நலம் புரிந்து இறைஞ்சும்** - *அமரர்கள் அன்புகொண்டு வழிபடும்,* **திருவடி அடைந்தேன்** - *உன் திருவடிகளைக் கிட்டித் தஞ்சம் புகுந்தேன்.*

**சி. கு :** *உரு - வண்ணம்; ஈண்டு அதனால் உண்டாகும் அழகினைக் குறித்தது. புலன் என்பது ஆகுபெயராய்ப் பொறிகளை உணர்த்திற்று. 'அலம்புரி தடக்கை' என்பதற்குக் கலப்பையைத் தாங்கிய திருக்கையை உடையவன் என்று பொருள் கூறலும் ஆம். அலம் - போதும்; கலப்பை. அது கலப்பையை உணர்த்தும்போது ஹலம் என்னும் வடசொல்லின் திரிபு.*

**வியா :** **இரண்டாம் பாட்டு :** திருவடிகளிலே விழுந்து சரணம் புக்கவாறே, முன்பு தாம் செய்துபோந்த படிகள் அடங்கலும் தோன்றிற்று. அத்தாலே, "போக்கினேன் பொழுதினை வாளா" என்கிறார்.

---

**வி :** **இரண்டாம் பாட்டு :** இறைவன் திருவடிகளிலே விழுந்து தஞ்சம் புக்கவாறே, *முன்பு தாம் செய்த செயல்களின் தன்மைகள் அடங்கலும் இவர்க்கு நெஞ்சில் வந்து தோற்றின. அதனாலே,* "போக்கினேன் பொழுதினை வாளா" *என்கிறார்.*

---

**52.** 2 : 1 புலம்படிந். 3 : 1 வலம்புரி.

**சிலம்பு அடி** - சிலம்பையுடைய அடி ஆயிற்று. **உருவில்** - அதுதன்னிலே செம்பஞ்சையும் இட்டுவைப்பர்கள் ஆயிற்று இவனைத் துவக்குகைக்காக. **கரு நெடுங் கண்ணார்** - கறுத்துப் பரப்பை உடைத்தாய் இருந்துள்ள கண்களாலே நோக்குவர்கள் இவனை; இவன் இதிலே துவக்குண்டு காலிலே விழுந்து பின்னை அவர்கள் தங்களைவிட்டு, அவர்களுடைய கதா கந்தம் உள்ள தேசத்திலே அணாவாய்த்துத் திரியும் ஆயிற்று. **அறத்தையே மறந்து** - ஸ்த்ரீகளுக்கு வழி பறித்திடுமது மறக்க ஒண்ணாதே, தன்னுடைய உஜ்ஜீவநத்துக்கு உபாய மானத்தையே ஆயிற்று வருந்தி மறப்பது. **புலன் இத்யாதி** - கொண்டி திரியும் பசுப் போலே இந்த்ரியங்கள்தான் விஷயங்களிலே மண்டி ஆயிற்று இருப்பது முதல் தன்னிலே; அதுக்கு மேலே விஷய ஸந்நிதியுள்ள இடத்திலே[1] வர்த்தித்து, இந்த்ரியங் களுக்கு விஷயங்களிலே போக்யதா புத்தியைப் பிறப்பித்து, அவை அவற்றிலே[2] மேல் விழுந்து புஜிக்கும்படி அத்தால் வந்த போகத்தையே பெருக்கி. **போக்கினேன்** - பகவத் விஷயத்திலே அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லக்கடவ காலத்தை வ்யர்த்தமே போக்கினேன்.

**அலம் புரி தடக் கை ஆயனே** - இவன் கையில் உள்ளத்தை அபஹரிக்கை அன்றிக்கே, இவனுக்கு 'அமையும்' என்னும்படி ஸர்வ ஸ்வத்தையும் கொடுக்குமவன்[3]

---

**சிலம்பு அடி** - சிலம்பையுடைய அடி. **உருவில்** - அவ்அடியிலே செம் பஞ்சுக்குழம்பையும் இட்டுவைப்பர்கள் இவனைத் துவக்குகைக்காக[4]. **கரு நெருங் கண்ணார்** - கறுத்துப் பரப்பை உடைத்தாய் இருக்கும் கண்களாலே நோக்குவர் கள் இவனை; இவன் இதிலே துவக்குண்டு காலிலே விழுந்து பின்னை அவர்களை விட்டு, அவர்களைப் பற்றி ஓரிரு பேச்சு உள்ள இடத்திலே அணாவாய்த்துத்[5] திரிவான். **அறத்தையே மறந்து** - பெண்களுக்காக வழிப்பறித்து அவர்களிடம் கொண்டு சென்று இடுவதனை எங்ஙனம் மறக்க ஒல்லும்? அதனை மறவான். ஆனால் தான் கரை சேர்வதற்குக் கருவியாய் இருப்பதனையே முயன்று மறப்பான். **புலன் படிந்து உண்ணும் போகமே பெருக்கி** - கொண்டி திரியும்[6] ஆவினைப்போலே, ஐம்பொறிகள் புலன் இன்பங்களில் மண்டிச் செல்லும்படி இருந்தேன் முதலில்; அதற்கு மேலே அவ்இன்பப் பொருள்கள் இருக்கும் இடத்திலே தங்கிப் பொறி களுக்கு அவற்றில் இன்பநுகர்ச்சி உள்ளது என்னும் எண்ணத்தைப் பிறப்பித்தேன்; அதன் பின்னர் அவை, அவற்றில் மேல்விழுந்து துய்க்கும்படி செய்தேன். இப்படி வந்த இன்பத்தையே பெருக்கி. **போக்கினேன் பொழுதினை வாளா** - இறைவனைக் குறித்த முயற்சிகளில் அடிக்கழஞ்சு பெற்றுச் செல்வதற்கு[7] உரிய காலத்தை வறிதே போக்கினேன்.

**அலம் புரி தடக் கை ஆயனே** - இவன் கையில் உள்ளதைக் கவர்ந்து கொள்ளாமல் இருப்பதோடு, 'போதும்' என்று இவன் சொல்லும் அளவுக்கு எல்லாச் செல்வங்களையும் கொடுப்பவன். அலம் - அமையும்; அஃதாவது

---

1. ஸந்நிதியுள்ளடத்திலே. 2. அவைத்திலே. 3. குடுக்குமவன்.
4. துவக்குதல் - மயக்குதல்; கட்டுண்ணப்பண்ணுதல். 5. அணாவாய்த்து - பொருந்தி. இஃது, அணவியாயிற்று (பொருந்தியாயிற்று) என்பதன் சிதைவாகத் தோன்றுகிறது. 6. கொண்டி திரிதல் - பச்சை கண்ட இடமெல்லாம் திருட்டுத்தனமாக மேய்தல். 7. அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லுதல் - மேன்மை பெற்றுச் செல்லுதல்.

ஆயிற்று. அலம் என்னக் கொடுக்கும்[1] தடக்கையை உடையவன் என்னுதல். அலம் என்றது ஹலம் என்றபடியாய், கலப்பையைத் தரித்த திருக்கையை உடையவன் என்னுதல். **மாயா** - இவன் ஒருநாள் திருவடிகளிலே விழுந்தால் பின்னை இவனுடைய நெடுநாளை இழவு மறக்கும்படி முகங்கொடுக்கும்படிக்கு அடியான ஆஶ்சர்ய குணசேஷ்டிதங்களை உடையவனே! **வானவர்க்கு அரசனே** - ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனாய் உள்ளவனே! **வானோர் இத்யாதி** - நித்யாநுபவம் பண்ணுகிற நித்ய ஸூரிகள், இதுக்கு முன்பு ஒரு நாளும் கண்டறியாதாப்போலே இருக்க ஸ்நேஹத்தைச் செய்து ஆஶ்ரயியாநின்றுள்ள திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தேன். **நைமிசாரணியத்துள் எந்தாய்** - பரமபதத்திலே நித்ய ஸூரிகளுக்கு அநுபாவ்யனாய்க் கொண்டு அவர்களுக்கு ஓலக்கம் கொடுத்துக் கொண்டிருக்கக் கடவ நீ எனக்கு உன் திருவடிகளிலே வந்து சரணம் புகலாம்படி ஸந்நிஹிதனாகையாலே சரணம் புகுந்தேன்.

---

*போதும். அலம் என்னக் கொடுக்கும் தடக்கையை உடையவன். அவ்வாறு அன்றி, அலம் என்பது ஹலத்தைக் குறிப்பதாய்க்கொண்டு கலப்பையைத் தாங்கிய திருக்கையை உடையவன் என்பதாகவும் கொள்ளலாம்.* **மாயா** - *இவன் ஒருநாள் திருவடிகளிலே விழுந்தால் போதும்; பின்னர் இவனது நெடுநாளை இழவு மறக்கும்படி முகங்கொடுப்பான்; அப்படி முகங்கொடுத்தற்கு அடியான வியத்தகு பண்புகளையும் செயல்களையும் உடையவனே!* **வானவர்க்கு அரசனே** - *பிரமன் முதலான இமையவர்களுக்குப் பற்றுக்கோடாய் உள்ளவனே!* **வானோர் நலம் புரிந்து இறைஞ்சும் திருவடி அடைந்தேன்** - *எஞ்ஞான்றும் இறைவனோடு இன்பநுகர்ச்சி பண்ணுகின்றவர்கள், அமரர்கள். அவர்கள் இதற்கு முன்பு ஒரு நாளும் இப்படிக் கண்டறிந்ததில்லை என்று கருதும்வண்ணம் திருவடிகள் இருத்தல் கண்டு அவற்றின்மீது அன்பு பூண்டு இறைஞ்சுவர்; அத்தகைய திருவடிகளிலே வந்து அடைக்கலம் புகுந்தேன்.* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *திருநாட்டில் அமரர்களுக்கு நுகரத்தக்கவனாய் அமைந்து, அவர்களுக்கு ஓலக்கம் கொடுத்துக் கொண்டிருத்தற்கு உரிய நீ எனக்கு உன் திருவடிகளிலே வந்து தஞ்சம் புகலாம்படி அணியனாய் அமைந்தமையாலே தஞ்சம் புகுந்தேன்.*

### ஒப்புமைப் பகுதி

1. **புலன் படிந்து உண்ணும் போகம்**

   *" ஐங்கருவி கண்ட இன்பம் - உழக்காலே அளக்குமாபோலே பரிச்சிந்ந வஸ்து க்ராஹமான இந்த்ரியங்களாலே அநுபவிக்கப்பட்ட ஐஹிக ஸுகம் "* திி. வா. மொ. 4:9:10-36

   *[பரிச்சிந்ந வஸ்து க்ராஹகம் - அளவுபட்ட பொருளை நுகர்ந்துணரக் கூடியது. ஐஹிக ஸுகம் - இம்மை இன்பம்.]*

2. **காலத்தை வறிதே போக்குதல்**

   *" தீவினையேன் வாளா,*
   *இருந்தொழிந்தேன் கீழ்நாள்கள் எல்லாம் "*

---

1. குடுக்கும்.

" வாளா இத்யாதி - குனியக் குறுணி பற்றும் காலம் எல்லாம் வ்யர்த்தமே இருந்தேன் " பெ. திருவந். 82 பெ.உரை.

[வ்யர்த்தம் - வீண்]

3. **அலம் புரி தடக் கை ஆயன்**

" அலம்புரிந்த நெடுந் தடக் கை அமரர் வேந்தன் "

" அலம் புரிந்த நெடுந்தடக்கை - இட்டு நீண்ட கை என்கிறார். அர்த்திகள் 'அலம்' என்னும்படியாகக் கொடுக்கை. பின்னைப் புறம்பு ஒருவர் வாசலிலே செல்லாத்படி பர்யாப்தமாகக் கொடுக்கை...அதவா, அலம் புரிந்த - ஔதார்யம் பண்ண உத்யோகித்தால் அவன் 'அமையும்' என்றவாறே மீளும் இத்தனை போக்கித் தன்கொடைக்கு அவதியின்றி யிலே யிருக்கை. உழக்கிலே பதக்கைப் பொகட ஒண்ணாதாகையாலே மீளும் இத்தனை. இவனுடைய ஔதார்யத்தைப் பார்த்தால் அவனுடைய மநோரதம் கடலில் குளப்படிபோலேயிறே இருப்பது. புரிகை - கொடுக் கையும் மீளுகையும். அலம் என்னக் கொடுக்கையாவது பின்னை ஒருத்தன் பக்கலிலும் ஸாபேக்ஷனாகாதபடியாகக் கொடுக்கை. அநந்ய ப்ரயோஜநனுக்குத் தன்னையும் தன்னுடைமையையும் கொடுத்தால் பின்னைத் தனக்குக் கொடுக்க விரகு இல்லை, அவனும் அபேக்ஷிக்க வேண்டுவது இல்லை, அவனும் அநுபவத்திலே இழியும் இத்தனை, இவனும் என் செய்வன் என்றே இருந்துபோம் இத்தனை"

" தடக்கை - ஸர்வாதிகாரமுமாய் ஆஶ்ரயணீயமுமாய்த் தானே ப்ரயோஜந முமாய் இருக்கும் கை. தடக்கை - பரந்த கை " தி. நெ. தா. 6 பெ. உரை.

[பர்யாப்தம் - நிறைந்தது; போதிய அளவினது. அதவா - அல்லது. ஔதார்யம் - கொடை. உத்யோகித்தல் - முனைதல். அவதி - எல்லை. மநோரதம் - எண்ணம். ஸாபேக்ஷனாகாதபடி - வேண்டி நிற்க வேண்டாத வனாகும்படி. அநந்ய ப்ரயோஜநன் - இறைவனை ஒழிந்த பிற பயன் வேண்டாதவன்.]

(52)

## 53

**சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து**
**சுரிகுழல் மடந்தையர் திறத்துக்**
**காதலே மிகுத்துக் கண்டவா திரிந்த**
**தொண்டனேன் நமன்தமர் செய்யும்**
**வேதனைக் கொடுங்கி நடுங்கினேன் வேலை**
**வெண்திரை அலமரக் கடைந்த**
**நாதனே! வந்துன் திருவடி அடைந்தேன்**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்!**

**ப. ரை :** **வெண் திரை வேலை அலமரக் கடைந்த நாதனே** - *வெளுத்த அலைகளையுடைய திருப்பாற்கடலானது கலங்கும்படி கடைந்த தலைவனே!* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *திருநைமிசாரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனே!* **சூதினைப் பெருக்கி** - *சூதாட்டத்தினை மிகுதியாக வளர்த்தும்,* **களவினைத் துணிந்து** - *திருடுவதற்குத் துணிந்தும்,* **சுரி குழல் மடந்தையர் திறத்து காதலே மிகுத்து** - *சுருண்ட கூந்தலையுடைய பெண்டிரிடத்து ஆசையையே பெருக்கியும்,* **கண்டவா திரிந்த தொண்டனேன்** - *கண்ணுக்குத் தோற்றிய இன்பப் பொருள்களிலே மனம் போன போக்கின்படி திரிந்த யான்,* **நமன் தமர் செய்யும்** - *கூற்றுவனுடைய வேலைக்காரர்கள் செய்யும்,* **வேதனைக்கு ஒடுங்கி நடுங்கினேன்** - *துன்பங்களை நினைத்து உடல் உறுப்புகள் எல்லாம் நிலைகுலையத் தளர்ந்தேன்.* **உன் திருவடி வந்து அடைந்தேன்** - *ஆதலால் உன்னுடைய திருவடிகளையே தஞ்சமாக நாடி வந்து சேர்ந்தேன்.*

**சி. கு :** *கண்டவாறு என்பது கடைக்குறைந்து நின்றது; தொகுத்தல் விகாரம். பெருக்கி, துணிந்து, மிகுத்து என்னும் வினையெச்சங்கள் திரிந்த என்னும் பெயரெச்சங்கொண்டு முடிந்தன.*

**வியா :** **மூன்றாம் பாட்டு :** "போக்கினேன் பொழுதினை வாளா" என்றார்; "சிலவற்றைச்[1] செய்திறே போது போக்குவது, செய்தபடிதான் எங்ஙனே?" என்ன, அதுதன்னைச் சொல்லுகிறார்.

**சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து** - பகல் எல்லாம் சூது பொருது, தோற்றவன் குறைவு அறக் கொடுக்கக்[2] கண்டவாறே, "இவன்பக்கலிலே கனக்க உண்டாகையிறே இவன் தருகிறது" என்று ராத்ரியில் களவு காண அத்யவஸிப்பது இவன் க்ருஹத்திலே ஆயிற்று. ஆக, காணவும் கொண்டு காணாதபடியும் கொள்ளும் ஆயிற்று. இவைதான் நிஷித்தாநுஷ்ட்டாநம் ஆகையாலே, இவை தன்னையே சொல்லிற்றாகவும் ஆம். அன்றிக்கே, ஆஸ்திக்யம் உடையனாய்

---

**வி :** **மூன்றாம் பாட்டு :** *போக்கினேன் பொழுதினை வாளா" என்றார்; "எவனும் சிலவற்றைச் செய்தே பொழுதினைப் போக்குவான்; நீர் வறிதே காலத்தைப் போக்கியதாகக் கூறுகிறீர்; அஃது எவ்வாறு?" என்ன, தாம் வறிதே காலம் கழித்த முறையினைச் சொல்கிறார்.*

**சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து** - *பகல் எல்லாம் சூது பொருது, தோற்றவன் குறைவறக் கொடுக்கக் கண்டவாறே, "இவன்பக்கலிலே நிரம்ப இருப்பதால் அன்றோ இவன் இப்படித் தருகிறான்" என்று முடிவுசெய்து, இரவில் அவன் இல்லத்திலே களவு காணத் துணிந்தார். இவ்வாறு, மாற்றான் கண் காணவும் கொண்டு காணாதவாறும் கொள்ளுவார் ஆயினார். இவைதாம் விலக்கடிகளாகையாலே[3] இவற்றையே சொல்லியதாகக் கொள்ளவும் கூடும். அன்றி, இறை நம்பிக்கையுடையவன் ஒருவன், "கெடுவாய்! இறைவன் என்பான்*

---

1. சிலவைத்தைச். 2. குடுக்கக்.
3. விலக்கடி - விலக்கத்தக்கது.

இருப்பான் ஒருவன், "கெடுவாய், ஈஶ்வரன் என்பான் ஒருவன் உண்டு காண்" என்றால், நாஸ்திக்யத்தாலே பர்யதோ ஹரனாய், "ஈஶ்வரன் ஆகிறவன் ஆர்?" என்றும் ஆத்மாபஹாரம் பண்ணியும் ஆயிற்றுப் போந்தது. **சுரி குழல் இத்யாதி** - இப்படி த்ரவ்யார்ஜநம் பண்ணினால் அதுகொண்டு கொள்ளும் கார்யத்தைச் சொல்லு கிறது. **"விரி குழலாரிற்பட்டு"** என்கிறபடியே மயிர் பேணாதே இருக்கில் அதிலே ஈடுபடுவர், மயிர் சுழன்று முடித்திருக்கில் அதிலே ஈடுபடுவர், ஏதேனுமாக அவர்கள் இருந்தபடி அமையும் ஆயிற்று இவர்க்கு ஈடுபடுகைக்கு. **"என்னை உன் செய்கை நைவிக்கும்"** என்னுமாப் போலே. **"கண்டவா திரிந்த** - "ந்ருபசு:" என்னுமாப்போலே, கண்ணுக்குத் தோற்றின விஷயங்களில், இவை சாஸ்த்ரங்கள் நிஷேதித்த இடம் என்று மீண்டு அறிவது இல்லை. தோற்றினபடி மூலையடியே திரிந்த இத்தனை. **தொண்டனேன்** - தொண்டன் ஆகிறான் பரதந்த்ரன். அது அப்ராப்த விஷயங்களிலே ஆன போது அபகர்ஷ ஹேதுவாகக் கடவது[1]; ப்ராப்த விஷயங்களிலே ஆன போது, உத்கர்ஷ ஹேதுவாகச் சொல்லக் கடவது.

**நமன் தமர் இத்யாதி** - இப்படி முறைகெட வர்த்திக்கையாலே, யமபடர் பண்ணும் வேதனையை அநுஸந்தித்து அஞ்சி, ஸர்வ அவயவங்களும் ஒடுங்கி சரீரந்

---

*ஒருவன் உண்டு; இதனை நீ அறிவாய்", என்றால், இறை மறுப்புக் கொள்கை யினாலே கண்ணெதிரே திருடுபவனாய், "இறைவன் ஆவான் யார்?" என்று வினவியும், இறைவனுக்கு உரிமையான உயிரைத் தனக்குரியதாகக் கொண்டு களவு செய்தும் போந்தேன் என்று சொல்லியதாகவும் கொள்ளலாம்.* **சுரி குழல் மடந்தையர் திறத்துக் காதலே மிகுத்து** - *இப்படிப் பொருள் ஈட்டினால் அது கொண்டு செய்துகொள்ளும் பயன் சொல்கிறது.* **"விரி குழலாரிற்பட்டு" (தி. மா. 33)** *என்பதற்கேற்ப மயிர் பேணாமல் விரித்து விட்டிருக்கில் அதிலே ஈடுபடுவர். மயிர் சுழன்று முடித்திருக்கில்[2] அதிலே ஈடுபடுவர். எப்படியேனும் அவர்கள் இருக்கலாம். அவர்கள் இருந்த தன்மை போதும் இவர் ஈடுபடுவதற்கு. நம்மாழ்வார் இறைவனை நோக்கி,* **"என்னை உன் செய்கை நைவிக்கும்"** *(தி. வா. மொ. 5:10:2) என்று சொல்லி ஈடுபடுவது போல இவர் பெண்களிடத்தில் ஈடுபடுகிறார்.* **கண்டவா திரிந்த** - *ஆளவந்தார் தம்மை, "மனித விலங்கு" (ஸ்தோ. ர. 58) என்று தாழ்த்திச் சொல்லிக் கொள்கிறார். இப்படி மனிதனை விலங்காகச் சொல்வதற்கு ஏற்பக் கண்ணுக்குத் தோற்றிய பெண்களிடத்தில் இப் பெண்டிரால் பெறும் இன்பங்கள் நூல்களால் விலக்கப்பட்டவை என்று கருதி மீண்டேன் அல்லேன்; தோற்றியபடி மூலையடியே திரிந்தேன்[3].* **தொண்டனேன்** - *தொண்டன் என்பவன் பிறர்க்குக் கையாளாய் இருப்பவன்; அத்தன்மையனாய் இருத்தல் அடையத் தகுதியற்ற இடங்களில் அமைந்தபோது வசைக்கும் அடையத் தகுதியுடைய இடங்களில் அமைந்தபோது இசைக்கும் உடலாகச்[4] சொல்வதற்கு உரியது.*

**நமன் தமர் செய்யும் வேதனைக்கு ஒடுங்கி நடுங்கினேன்** - *இப்படி முறை கெட நடப்பதாலே நமன்தமர் பண்ணும் துன்பத்தை எண்ணி அஞ்சி உறுப்பு*

---

1. சிறுமைக்கு உடலாகச் சொல்லக் கடவது.
2. சுழன்று முடித்தல் - சீவிச் சுற்றிக் கொண்டையிட்டிருத்தல். 3. மூலையடியே திரிதல் - முறை யின்றித் திரிதல். 4. உடல் - காரணம்.

**தான் எடுத்து எடுத்து அறையத் துடங்கும். வேலை இத்யாதி - ப்ரயோஜநாந்தர பரர்க்காகக் கடலை நெருங்கக் கடைந்து அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணும்படியன்றோ இவ்ஆத்மாவோடு தேவர்க்கு உண்டான ஸம்பந்தம். வந்து இத்யாதி - ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனாய்க் கொண்டு அவர்களுடைய கூக்குரல் கேட்கைக்காக அங்கே திருப்பாற்கடலிலே சாய்ந்தாப் போலே எனக்கு வந்து சரணம் புகலாம்படி இங்கே வந்து ஸந்நிதி பண்ணியருளிற்றிறே.**

---

களெல்லாம் ஒடுங்கி உடலானது எடுத்தெடுத்து அறையத்[1] தொடங்கும். **வேலை வெண் திரை அலமரக் கடைந்த நாதனே** - அயற் பயன் அவாவுவார் பொருட்டுக் கடலை நெருங்கக் கடைந்து அவர் நாடியது கொடுக்கும்படியன்றோ இவ் உயிரோடு தேவர்க்குத்[2] தொடர்பு அமைந்துள்ளது. **வந்து உன் திருவடி அடைந்தேன்** - பிரமன் முதலிய வானோர்க்குப் பற்றற்கு உரியவனாய் அமைந்து அவர்களுடைய கூக்குரல் கேட்கைக்காக அங்கே திருப்பாற்கடலிலே சாய்ந்தாற் போலே, எனக்குத் தஞ்சம் புகலாம்படி இங்கே வந்து கிட்டிநின்று அருளினான். யானும் தஞ்சம் புகுந்தேன் என்கிறார்.

## ஒப்புமைப் பகுதி

### 1. சூது களவு விளக்கங்கள்

*" சூதென்று களவும் சூதும் செய்யாதே "*

*" நமக்கு நல்ல வாய்ப்பாய் இருந்தது என்று சூதும் களவும் செய்யாதே. சாஸ்த்ரங்கள் இவற்றை நிஷேதிக்கையாலே அவற்றையும் சொல்லவுமாம். அன்றிக்கே, களவாவது 'சோரேணாத்மாபஹாரிணா' என்கிற ஆத்மாபஹாரமாய், சூதாவது ஸாத்விகனாய் ப்ராமாணிகனாய் இருப்பான் ஒருவன், 'ஸர்வேச்வரன் ரக்ஷகன்' என்று விச்வஸித்திருந்தால், 'காண்கிற தேஹத்துக்கு அவ்வருகே ஓர் ஈச்வரன் ஆவது என்? ஆத்மா ஆவது என்?' என்று காணக் காண அபஹரிக்கை "*

*தி. வா. மொ. 2:10:10-36*

*[நிஷேதிக்கை - விலக்குதல். சாஸ்த்ரங்கள் - சான்றாக அமைந்த நூல்கள். ஆத்மாபஹாரம் - உயிரைக் களவாடுதல். ஸாத்விகன் - நல்லவன். ப்ராமாணிகன் - மேற்கோள்களை அறிந்து ஒழுகுபவன். விச்வஸித்தல் - நம்புதல்.]*

*" சூதனாய்க் கள்வனாகி "*

*" சூதாவது : பஶ்யதோஹரத்வம். களவாவது பரத்ரவ்யத்தை என்னது என்று இருக்கை; ப்ரமாண விஷயமான அர்த்தத்தை இல்லை என்கை... களவாகிறது ஈச்வர ஶேஷமான 'ஆத்ம வஸ்துவை' என்னது என்று இருக்கை. சூதாவது பச்யதோஹரத்வம். அதாவது ஸத்வ்ருத்தனாய் இருப்பான் ஒருவன் பரஶேஷமாய்க் கொண்டு ஆத்மஸ்வரூபம் உண்டு, ஶேஷியான ஈச்வரனும் உண்டு, தர்மாதர்மங்களும் உண்டு*

---

1. எடுத்தெடுத்து அறைதல் - குலுங்கிக் குலுங்கி நடுங்குதல். 2. தேவர்க்கு - தங்களுக்கு; முன்னிலையில் இருப்போரை மரியாதையைப் புலப்படுத்தும்வண்ணம் இப்படி அழைத்தல் மரபு.

என்று இருந்தால், இவை எல்லாம் பொய்காண் என்று அவனை விப்ரலம்பித்து தன்படியாக்கிக் கொள்ளுகை ” தி. மா. 16 பெ. உரை.

[பச்யதோஹரத்வம் - கண்முன்னே கவர்தல். பரத்ரவ்யம் - பிறர் செல்வம். ப்ரமாண விஷயமான அர்த்தம் - சான்றுகளால் நிறுவப்பட்ட பொருள். ஈச்வர ஶேஷம் - இறைவனுக்கு அடிமைப்பட்டது. பரஶேஷம் - இறைவனுக்கு அடிமைப்பட்டது. தர்மாதர்மங்கள் - அறமும் அறமற்றவையும். ஶேஷி - உடையவன்; தலைவன். விப்ரலம்பித்து - மனம் மாற்றி.]

2. நமன் தமர் செய்யும் வேதனை

“ தென்னவன் தமர் செப்பம் இலாதார் சேவதக்குவார் போலப்புகுந்து பின்னும் வன்கயிற்றால் பிணித்து எற்றிப் பின் முன்னாக இழுப்பதன்முன் ”

“ எற்றி - ‘நமன்தமர் செய்யும் வேதனை’ என்கிறபடியே எற்றி ”

பெரி. தி. 4:5:7 ம. மா. மு. உரை.

(53)

## 54

**வம்புலாம் கூந்தல் மனைவியைத் துறந்து**
**பிறர்பொருள் தாரமென் றிவற்றை**
**நம்பினார் இறந்தால் நமன்தமர் பற்றி**
**எற்றிவைத் தெரிஎழு கின்ற**
**செம்பினால் இயன்ற பாவையைப் பாவீ!**
**தழுவென மொழிவதற் கஞ்சி**
**நம்பனே! வந்துன் திருவடி அடைந்தேன்**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்!**

**ப. ரை :** **நைமிசாரணியத்துள் எந்தாய்** - திருநைமிசாரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனே! **நம்பனே** - விரும்பப்படுபவனே! **வம்பு உலாம் கூந்தல் மனைவியைத் துறந்து** - மணம் வீசும் குழலையுடைய தம் மனைவியை விடுத்து, **பிறர் பொருள் தாரம் என்று இவற்றை நம்பினார் இறந்தால்** - பிறருடைய பொருள் மனைவி என்னும் இவற்றை விரும்பியவர்கள் இறந்துபோனால், **நமன் தமர் பற்றி எற்றி வைத்து** - காலனுடைய ஏவலர் பிடித்துப் புடைத்து ஓரிடத்திலே போட்டு, **செம்பினால் இயன்ற** - செம்பாலே செய்யப்பட்ட, **எரி எழுகின்ற பாவையை** - நெருப்புப் பொறி வீசுகின்ற ஒரு பெண்ணின் உருவத்தை, **பாவீ தழுவு என மொழிவதற்கு அஞ்சி** - ‘தீவினையாளனே! தழுவுவாய்’ என்று சொல்லும் சொற்களுக்கு அஞ்சி, **உன் திருவடி வந்து அடைந்தேன்** - உன்னுடைய திருவடிகளைக் கிட்டித் தஞ்சம் புகுந்தேன்.

**சி. கு :** நம்பினார் - விரும்பியவர். ‘நம்பும் மேவும் நசையா கும்மே’ என்பது தொல்காப்பிய உரியியல் நூற்பா (31).

---

54. 4 : 1 நம்பினேன்.

**வியா : நாலாம் பாட்டு :** "அத்தனையோ, இன்னம் ஏதேனும் செய்தது உண்டோ?" என்ன, "இன்னமும் செய்தது குவால்" என்கிறார்.

**வம்பு இத்யாதி** - நித்யாபூர்வமான குழலையுடைய மனைவியை என்னுதல்; பரிமளத்தை உடைத்தான குழல் என்னுதல். அக்நி ஸாக்ஷியாகக் கைப்பிடித்த ஸ்த்ரீயை ஆயிற்று த்யஜிப்பது. விஷயாந்தரங்களிலே ஸ்ப்ருஹையைப் பண்ணுமே; அவற்றில்[1] வந்தால் வம்புலாம் கூந்தலாகவும் வேண்டா ஆயிற்று. பிறரது[2] ஆம் இத்தையே ஆயிற்று ஆதரிக்கைக்கு வேண்டுவது. பரதார பர த்ரவ்யங்களை விரும்பினவர்கள் இறந்தால்.

**நமன் இத்யாதி** - ஸர்வேஶ்வரன் தன்னோடு ஒக்க ஸமமாக ஆராய்ந்து கேட்பான் ஒருவனாக விட்டவன் ஆயிற்று யமன் ஆகிறான்; அவன்தான் தன்னோடு ஒப்பார் சிலரை ஆயிற்று வர விட்டது; அவர்கள் தாங்கள் ஒரு கைக்கு ஆயிரம் பேராக வந்து பற்றுவர்கள் ஆயிற்று; பின்னை இவன் உடம்பு தன்னோடே எற்றுவர் கள்; அநந்தரம் தங்கள் கை சலித்தவாறே பொகட்டு இட்டு வைப்பர்கள்; "இவர் இத்தனைபோது ஸ்த்ரீகளை ஒழிய இருக்கவல்லரோ! அவளை அழையும்[3]" என்பர் கள். இவனும், "நம்மை நலிவது எல்லாம் நலிந்தார்களாகில் இனி அவளை அழைக்

---

**வி : நாலாம் பாட்டு :** *"அவ்வளவுதானா, இன்னும் ஏதேனும் செய்தது உண்டோ?" என்று வினவ, "இன்னும் செய்தது குவால்[4]" என்கிறார்.*

**வம்பு உலாம் கூந்தல் மனைவியைத் துறந்து பிறர் பொருள் தாரம் என்று இவற்றை நம்பினார் இறந்தால்** - *என்றும் புதுமை மிளிரும் குழலையுடைய மனைவி என்றோ, நறுமணத்தையுடைய குழலைக் கொண்டுள்ள மனைவி என்றோ கொள்க. அங்கியங் கடவுள் சான்றாகக் கைப்பிடித்த பெண்ணையன்றோ துறந்து செல்கிறான். இப்படிப்பட்ட மனைவியைத் துறந்து வேறு பெண் களிடத்து விருப்பம் கொள்கிறானே, அவர்கள் அழகியவர்களோ என்னில், அதுபற்றிக் கருத்து இல்லை. அவர்கள் வம்புலாம் கூந்தல் உடையவர்களாக இருத்தல் வேண்டா; பிறர் மனைவி என்பது ஒன்றே இவன் விருப்பம் கொள் வதற்கு அமையும். பிறன் மனைவியையும் உடைமைகளையும் விரும்பியவர்கள் இறந்தால்.*

**நமன் தமர் பற்றி எற்றி வைத்து** - *பெருமான் தனக்கு நிகராக நடுவு நிலையில் நின்று ஆராய்ந்து கேட்பான் ஒருவனாக விட்டவன் இயமன் ஆவான். அவன்தான் தன்னோடு ஒப்பார் சிலரையே வரவிட்டான். அவர்கள் ஒரு கைக்கு ஆயிரம் பேராக வந்து பற்றுவர்கள்; பின்னை இவனுடம்பு தன்னோடே எற்று வர்கள்; அதன்பின்னர்த் தங்கள் கை சலித்தவாறே பொகட்டு இட்டு வைப்பர்கள். "இவர் இவ்வளவு நேரம் பெண்களைப் பிரிந்து இருக்க மாட்டாரே, அவளை அழைத்து வாரும்" என்பர்கள். இவனும், "இவ்வளவுநேரம் வேண்டியமட்டும் நம்மைத் துன்புறுத்தியபோதிலும் இனி ஒருத்தியை அழைக்கிறார்களன்றோ அது*

---

1. அவைத்திலே. 2. பிறருது. 3. அவர்களை அழைப்பியும்.
4. குவால் - மிகுதி; ஈண்டுப் பல என்னும் பொருளில் வந்தது.

கிறார்கள் இத்தனையிறே'' என்று குறுவிழி கொண்டு கிடக்கும்; **எரி இத்யாதி** - எரி எழாநிற்பதாய், செம்பாலே செய்யப்பட்ட பாவையை, "பாவீ! தழுவு'' என்பர்கள் ஆயிற்று. "கெடுவாய்! அவர்கள் ஒழிச்சின அன்றாகிலும் அநுதாபம் பிறந்து உகந் தருளிற்று ஒரு திருவாசலிலே ஒதுங்கினாயாகில் இன்று எங்களுக்குக் கை சலியாது ஒழியல் ஆயிற்று'' என்பர்கள் ஆயிற்று. **மொழிவதற்கு அஞ்சி** - அவர்கள் பண்ணும் நலிவைப் பொறுக்கலாம் ஆகாதே; க்ரூரமான பேச்சு ஆயிற்று பொறுக்கப் போகாதது.

**நம்பனே வந்து உன் திருவடி அடைந்தேன்** - ஏதேனும் தோற்றிற்றுச் செய்து திரிந்தார்க்கும் வந்து பற்றலாம்படி சரண்யனான நீ வந்து ஸந்நிஹிதனா கையாலே திருவடிகளிலே சரணம் புகுந்தேன்; **நைமிசாரணியத்துள் எந்தாய்** - இவன் விஷயங்களில் ப்ரவணனாகிறது கண்ணுக்கு இலக்காகையிறே! அவ்வோ பாதி நம்மையும் கண்ணுக்கு இலக்காக்கவே இவன் நம் பக்கலிலே ப்ரவணன் ஆம் என்று உன்னைக் கண்ணுக்கு இலக்காக்கிக் கொடுவந்து நின்றாய். நிஷேதவிதியும் கிடக்கச்செய்தே அப்ராப்த விஷயங்களிலே[1] ப்ரவணனாகிறது அவை கண்ணுக்கு இலக்காகை சுட்டியிறே! விதி விஷயமுமாய் உத்தேஶ்யமான இது ஸந்நிஹிதமானால் இவன் விரும்பானோ என்று உன்னைக் கண்ணுக்கு இலக்காக்கி வைத்தாய்.

---

*போதும்'' என்று குறுவிழி கொண்டு[2] கிடப்பான்.* **எரி எழுகின்ற செம்பினால் இயன்ற பாவையைப் பாவீ நீ தழுவு என** - *எரி எழுகின்ற செம்பாலே செய்யப் பட்ட பாவையை, "பாவீ! தழுவு'' என்பர்கள். "கெடுவாய்! அப் பெண்கள் ஒதுக்கித் தள்ளிய அன்றாகிலும் கழிந்தவற்றிற்கு இரங்கிப் பெருமான் உகந்தருளிய திருக்கோயில் ஒன்றின் திருவாசலிலே ஒதுங்கி இருப்பாயேயாயின் இன்று எங்களுக்குக் கை சலியாது ஒழிந்திருக்கும்''[3] என்பர்கள்.* **மொழி வதற்கு அஞ்சி** - *அவர்கள் பண்ணும் நலிவைப் பொறுத்துக் கொண்டாலும் பொறுத்துக் கொள்ளலாம். பேசும் கடும் பேச்சைப் பொறுத்துக்கொள்ளப் போகாது.*[4]

**நம்பனே வந்து உன் திருவடி அடைந்தேன்** - *ஏதேனும் தமக்குத் தோன்றிய வற்றைச் செய்து திரிந்தார்க்கும் வந்து பற்றலாம்படி புகலிடமாய் நீ வந்து கிட்டி நிற்கையாலே திருவடிகளிலே தஞ்சம் புகுந்தேன்.* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *இவன் பெண்கள்பால் அன்பு கொள்வது அவர்கள் இவன் கண்ணுக்கு இலக்காகையால் அன்றோ! அதுபோல நம்மையும் கண்ணுக்கு இலக்காக்கினால் இவன் நம் பக்கலிலே அன்புகொள்வான் என்று உன்னைக் கண்ணுக்கு இலக்காக்கிக் கொண்டுவந்து நின்றாய். விலக்குதற்குரியது என்னும் விதி இருந்தபோதிலும் தனக்குத் தகுதியல்லாதவற்றில் இவன் இழிவது அவை கண்ணுக்கு இலக்காக அமைவதனால் அன்றோ! விதிக்கப்பட்ட பொருளாகவும் கொள்ளத்தக்கதாகவும் இருப்பது கண்ணெதிரே கிட்டுமானால் இவன் விரும்பானோ என்று உன்னைக் கண்ணுக்கு இலக்காக்கி வைத்தாய்.*

---

1. அப்ராப்தங்களில்.

2. குறுவிழிகொள்ளல் - கண்ணைச் சிறிது திறந்து பார்த்தல். 3. கைசலியாது ஒழிந்திருக்கும் - உன்னைத் துன்புறுத்துவதால் கைக்கு உண்டாகும் வலி இல்லாமல் போயிருக்கும். 4. போகாது - முடியாது.

**ஒப்புமைப் பகுதி**

**நமன் தமர் துன்புறுத்தல்**

*" எற்றி நமன்தமர் பற்றும்போது,*
*நில்லுமின் என்னும் உபாயம் இல்லை "*

*" எற்றிநமன்தமர் பற்றும் போது - யமபட ரானவர்கள் பிடிப்பதற்கு முன்னே தியங்க எற்றிவந்து பிடிக்கும்போது. பிடித்தல்ல அடிப்பது, அடித்தாய்த்துப் பிடிப்பது. இப்படி யமபடர் வந்து கொடுபோவதாகப் பிடிக்கும் காலத்தில் "* *பெரி. தி. 4:10:3 ம. மா. மு. உரை.*

*[யமபடர் - கூற்றுவனுடைய ஏவலர்கள்]* (54)

## 55

**இடும்பையால் அடர்ப்புண் டிடுமினோ துற்றென்று**
**இரந்தவர்க் கில்லையே என்று**
**நெடுஞ்சொலால் மறுத்த நீசனேன் அந்தோ!**
**நினைக்கிலேன் வினைப்பயன் தன்னைக்**
**கடுஞ்சொலார் கடியார் காலனார் தமரால்**
**படுவதோர் கொடுமிறைக் கஞ்சி**
**நடுங்கிநான் வந்துன் திருவடி அடைந்தேன்**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்!**

**ப. ரை :** நைமிசாரணியத்துள் எந்தாய் - *திருநைமிசாரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனே!* இடும்பையால் அடர்ப்புண்டு - *வறுமையால் வருத்த முற்று,* துற்று இடுமினோ என்று இரந்தவர்க்கு - *"ஒரு கவளம் சோறு தருவீர், ஐயா!" என்று கதறிப் பிச்சை கேட்டவர்களுக்கு,* இல்லையே என்று - *இல்லவே இல்லை என்று சொல்லி,* நெடுஞ் சொலால் மறுத்த - *கடுஞ்சொற்களாலே வெறுத்துச் சொன்ன,* நீசனேன் நான் - *மிகத் தாழ்ந்தவனாகிய யான்,* அந்தோ! வினைப்பயன் தன்னை நினைக்கிலேன் - *ஐயோ! தீவினைக்கு உரிய பயனை நினைக்க இயலாதவனாய் இருந்தேன்;* கடுஞ் சொலார் கடியார் காலனார் தமரால் - *கொடிய சொற்களை உடையராய்க் கொடுமையான செய்கைகளையும் உடையராய் இருக்கும் கூற்றவனுடைய ஆள்களாலே,* படுவது ஓர் கொடு மிறைக்கு அஞ்சி நடுங்கி - *உண்டாகக் கூடிய கொடுமையான துன்பச் செயல்களுக்கு அஞ்சி நடுக்க முற்று,* உன் திருவடி வந்து அடைந்தேன் - *உன் திருவடிகளையே தஞ்சமாக நாடி வந்து சேர்ந்தேன்.*

**சி. கு :** *இடும்பை - துன்பம்; ஈண்டு வறுமையால் வந்த துன்பத்தைச் சுட்டியது. துற்று - ஒரு வாயளவு சோறு; கவளம். நெடுஞ் சொல் - நெடிது நினைந்து வருந்துவதற்குக் காரணமாய் அமைந்த சொல்.*

---

**55.** 1:6 இல்லையேம். 3:6 கொடுமுறைக்.

**வியா : அஞ்சாம் பாட்டு :** "அத்தனையோ, இன்னும் ஏதேனும் உண்டோ?" என்ன, "திருவுள்ளத்துக்குப் பொறுக்க ஒண்ணாதவையும் எல்லாம் செய்து போந்தேன்" என்கிறார்.

**இடும்பையால் அடர்ப்புண்டு** - தாரித்ர்யத்தாலே நெருக்குண்டு. **இடுமினோ துற்று என்று இரந்தவர்க்கு** - ஆரேனும் ஆகிலும் எல்லாரும் கூட எனக்கு ஒருக்கால் வாயிலே இடுகைக்கு வேண்டுவது தர வேணும் என்று, 'முனியே' என்பாரைப் போலே கூப்பிடும் ஆயிற்று. துற்று ஆகிறது ஒருக்கால் வாயிலே அள்ளி இடுமது ஆயிற்று. **துற்று என்று இரந்தவர்க்கு** - இப்படியே தயநீயமாம்படி சொல்லிக் காலைக் கட்டினவர்களுக்கு. **இல்லையே இத்யாதி** - அவர்களுக்கு இல்லையே என்னும்போது சொல்லும் வார்த்தையின் கொடுமையை அநுஸந்தித்து, "நாம் இவனை ஒன்று அபேக்ஷித்து வர இவன் இல்லை என்ற பாசுரத்தைக் கேட்டு இன்னமும் ஜீவிக்க இருக்குமதில் இத்தனை நஞ்சு பெற்றோம் ஆகில் முடிந்து போக ஆயிற்று" என்று கால தத்வம் உள்ளதனையும் அவன் நெஞ்சு புண்பட்டுக் கிடக்கும்படி சொன்ன கொடுமையைச் சொல்லுகிறது ஆயிற்று. **அந்தோ** என்கிறார் ஆயிற்று மேல்வருகிற நலிவை அநுஸந்தித்து. **நினைக்கிலேன் வினைப்பயன் தன்னை** - கீழ்ச்செய்த[1] செயல்தானே அநுஸந்திக்க அரிதாய் இருந்த பின்பு, அதின் பலமாய் வருமதுதானே அநுஸந்திக்கப் போகாதிறே.

---

**வி : அஞ்சாம் பாட்டு :** *"அவ்வளவுதானா, இன்னும் ஏதேனும் உண்டா?" என்று வினவ, "உன் திருவுள்ளத்துக்குப் பொறுக்க ஒண்ணாதவை எல்லாவற்றையும் செய்து போந்தேன்" என்கிறார்.*

**இடும்பையால் அடர்ப்புண்டு** - *நல்குரவாலே நெருக்குண்டு.* **இடுமினோ துற்று என்று இரந்தவர்க்கு** - *யாரேனும் ஒருவரோ அன்றி எல்லீருமோ எனக்கு ஒருகால் வாயிலே இடுவதற்கு வேண்டுவது தர வேண்டும் என்று, நம்மாழ்வார்* "முனியே! நான்முகனே!" *(தி. வா. மொ. 10: 10: 1) என்று பெருமிடறு செய்து கூப்பிடுவதுபோலே கூப்பிடுவான்.* **துற்று** - *ஒருகால் வாயிலே அள்ளி இடுவது. இதுபோல இரக்கம் உண்டாகுமாறு சொல்லிக் காலைக் கட்டியவர்களுக்கு.* **இல்லையே என்று நெடும் சொலால் மறுத்த நீசனேன்** - *அவர்களுக்கு இல்லையே என்னும்போது சொல்லும் சொல்லின் கொடுமையை நினைந்து, "நாம் இவனை ஒன்று கேட்டுவர, இவன் 'இல்லை' என்று கூறிய பாசுரத்தைக்[2] கேட்டு இன்னமும் வாழ்வதனைக் காட்டிலும் இத்தனை நஞ்சு[3] பெற்றோமாகில் முடிந்து போகலாம்" என்று காலம் உள்ள அளவும் அவன் நெஞ்சு புண்பட்டுக் கிடக்கும்படி சொன்ன கொடுமையைச் சொல்லுகிறது.* **அந்தோ** - *அந்தோ என்கிறார் மேல் வரும் நலிவை நினைந்து.* **நினைக்கிலேன் வினைப்பயன் தன்னை** - *கீழ்ச்செய்த செயலே நினைத்தற்கு அரியதாய் இருந்ததென்றால் அதன் பயனாய் வருவதனைப் பற்றி எண்ண முடியாது அன்றோ?*

---

1. கீட் செய்த.
2. பாசுரம் - வார்த்தை; பேச்சு. 3. இத்தனை நஞ்சு - சிறிது நஞ்சு.

**கடுஞ் சொலார் இத்யாதி** - வெட்டிய சொல்லை உடையராய் க்ரூரமான செயலை உடையராய் இருந்த[1] யமபடராலே படக்கடவதான கொடிய மிறுக்கை அநுஸந்தித்து. **நடுங்கி நான் வந்து உன் திருவடி அடைந்தேன்** - தேவர் திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தேன். **நைமிசாரணியத்துள் எந்தாய்** - இரந்தார்க்கு இல்லை என்று மறுத்துப் போந்த எனக்கு நான் இரவாது இருக்க நீ வந்து ஸந்நிஹிதன் ஆயிற்றது எனக்கு உபகரிக்கைக்காக அன்றோ! இவற்றால் சொல்லிற்று ஆயிற்று: முன்பெல்லாம் தோற்றினபடி[2] செய்து திரிந்து அவற்றுக்கு வரும் பலத்தைக் கேட்டு பயப்பட்டுப் போக்கடி தேடிப் புறம்பு ஒரு புகல் காணாமை யாலே தேவர் திருவடிகளிலே சரணம் புகுந்தேன் என்கிறார்.

---

**கடுஞ் சொலார் கடியார் காலனார் தமரால் படுவது ஓர் கொடு மிறைக்கு அஞ்சி** - *வெட்டிய சொல்லை உடையராய், கொடுமையான செயலை உடையராய் இருந்த காலனுடைய ஏவலர்களாலே படக்கூடிய கொடிய மிறுக்கை[3] எண்ணி.* **நடுங்கி நான் வந்து உன் திருவடி அடைந்தேன்** - *தேவர்[4] திருவடிகளிலே வந்து தஞ்சம் புகுந்தேன்.* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *இரந்தார்க்கு இல்லை என்று மறுத்துப் போந்த எனக்கு, நான் இரவாது இருக்க நீ வந்து கிட்டியவனாய் இருப்பது எனக்கு உதவுதற்காக அன்றோ! இவற்றால் சொல்லப்பட்டது: முன் பெல்லாம் தோன்றியபடி செய்து திரிந்து அவற்றிற்குரிய பயனைக் கேட்டு அச்சங் கொண்டு போக்கடி[5] தேடினேன்; புறம்பு ஒரு புகல் காணாமையாலே தேவர் திருவடிகளிலே தஞ்சம் புகுந்தேன் என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

**1. நீசனேன்**

*" நீசனேன் நிறை வொன்றுமிலேன் - அநாத்ம குணங்களுக்கு ஆகரமாய் ஆத்மகுணகந்தம் இல்லாதவன் " தி. வா. மொ. 3:3:3-36*

*[அநாத்ம குணங்கள் - இழிதகவுகள். ஆகரம் - உண்டாகும் இடம். ஆத்ம குண கந்தம் - சிறிது நற்குணம்.]*

*" நீசனேன் நிறை ஒன்றுமிலேன் " என்னும் இத்திருவாய்மொழித்தொடர் பெரி. தி. 5:4:1 இல் மேற்கோளாக எடுக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளது. அங்குக் காணப்படும் உரை வருமாறு :*

*" நீசனேன் நிறை ஒன்றுமிலேன் - நீசனேன் - அநாத்ம குண பரிபூர்ணன். நிறைவொன்றுமிலேன் - ஆத்மகுணகந்த ரஹிதன் "*

*பெரி. தி. 5:4:1 பெ. உரை.*

*[ரஹிதன் - இல்லாதவன்]*

**2. கடுஞ்சொலார் கடியார் காலன் தமர்**

*" தண்ணன இல்லை நமன்தமர்கள் சாலக் கொடுமைகள் செய்யாநிற்பர் "*

*" தண்ணன இல்லை - மெத்தன இல்லை. உக்தி வ்ருத்திகள் எல்லாம் கடிநமாயாய்த்து இருப்பது. 'கடுஞ்சொலார் கடியார்' என்னக் கடவதிறே.*

---

1. இருந்துள்ள. 2. தோன்றினபடி; தோத்தினபடி.
3. மிறுக்கு - துன்பம். 4. தேவர் - தங்கள். 5. போக்கடி - கழுவாய்.

...நமன்தமர்கள் - ப்ரதாநனான யமன்தானாகில் கண்குழிவு கண்டவாறே ஒருகாலாக விட்டிருக்கவும் கூடும்; இவர்கள் அவனுடைய படராகையாலே ‘அவன் சொன்னதில் ஒன்றும் தப்பாதே செய்ய வேணும்’ என்னும் நினைவாலே கண்பாராதே க்ரூரமாக நலியா நிற்பர்கள் ஆய்த்து ”

பெரி. தி. 4:10:6 ம. மா. மு. உரை.

“ நமன்தமர் பற்றி நலிந்திட்டு - கர்மங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டு நலியக்கடவ யமபடரானவர்கள், வந்து பிடிக்கிறபோதே எல்லா து:க்கங்களும் விளையும்படி வந்து பிடித்து, வாசாமகோசரமாம்படி, இந்த ஶரீரத்தோடே நலியத்தக்கது எல்லாம் நலிந்து ”

பெரி. தி. 4:10:8 ம. மா. மு. உரை.
(55)

## 56

**கோடிய மனத்தால் சினத்தொழில் புரிந்து**
**திரிந்துநாய் இனத்தொடும் திளைத்திட்டு**
**ஓடியும் உழன்றும் உயிர்களே கொன்றேன்**
**உணர்விலேன் ஆதலால் நமனார்**
**பாடியைப் பெரிதும் பரிசழித் திட்டேன்**
**பரமனே! பாற்கடல் கிடந்தாய்!**
**நாடிநான் வந்துன் திருவடி அடைந்தேன்**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்!**

**ப. ரை :** **பரமனே** - எல்லாரிலும் உயர்ந்தவனே! **பாற்கடல் கிடந்தாய்** - திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளியவனே! **நைமிசாரணியத்துள் எந்தாய்** - திருநைமிசாரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனே! **கோடிய மனத்தால்** - நற்பொருள்களில் செல்லாத மனத்தினால், **சினத் தொழில் புரிந்து** - பிறர்க்குப் பகையான செயல்களைச் செய்து, **நாய் இனத்தொடும் திரிந்து திளைத்திட்டு** - நாய் முதலான விலங்குகளோடு கூடித் திரிந்து வேட்டையாடிக் களித்து, **ஓடியும் உழன்றும்** - பிறரைத் துன்புறுத்துவதற்காக நெடுந்தொலைவு ஓடியும் வருந்தியும், **உயிர்களே கொன்றேன்** - உயிர்களை அழித்தேன், **உணர்வு இலேன்** - அறிவற்றவனாய் இருந்தேன், **நாடி உன் திருவடி வந்து அடைந்தேன்** - அத்தகைய யான் ஆராய்ந்து உன் திருவடிகளையே தஞ்சமாக நாடி வந்து சேர்ந்தேன். **ஆதலால் நமனார் பாடியைப் பெரிதும் பரிசு அழித்திட்டேன்** - அதனாலே காலனுக்குச் சொந்தமான நிரயத்தின் நிலைமையை மிகவும் அழித்துவிட்டேன்.

**சி. கு :** உயிரைக் கொல்வதாவது உயிரை உடம்பினின்றும் பிரித்தல். ஏனெனில் உயிர் அழியாதது என்பது வைணவர் துணிபு. உயிர் என்பது உடலைக்

---

56. 1:7 திளைந்திட்டு. 2:3 உயிர்களைக். 2:5 உணர்கிலேன். 4:1 நாடினேன்.

*குறிப்பதாகவும் கொள்ளலாம். "ஆவிசேர் உயிரின் உள்ளால்" (தி. வா. மொ. 3:4: 10) என்புழிப்போல. பரிசு - தன்மை; இயற்கை.*

**வியா : ஆறாம் பாட்டு :** "அத்தனையோ, இன்னும் செய்தது உண்டோ?" என்ன, " கைதொடனாய்க் கொண்டு கொன்றே போந்தேன் " என்கிறார்.

**கோடிய மனத்தால்** - அநுகூல விஷயத்திலும் நெஞ்சு விலங்கியாயிற்று[1] இருப்பது. **சினத் தொழில் புரிந்து** - மறச் செயல் செய்து. **திரிந்து நாய் இனத்தொடும்** - ஹிம்ஸ்ர பதார்த்தங்களோடே வேட்டையாடித் திரிந்தபடியைச் சொல்லுதல்; தண்ணியவர்களோடே கூடி விளையாடிக் களித்துத் திரிந்தபடியாதல். **ஓடியும்** - "ஒருவனை ஹிம்ஸிக்கலாம். பதின்காதம் ஆறு போகலாமோ?'' என்றால், தட்டுப் பாராதே அவ்வளவும் ஓடியும். **உழன்றும்** - "ஹிம்ஸித்ததாம்போது[2] சால வருந்த வேணும்'' என்றால் அப்படி வருந்தி வ்யாபரித்தும்; **உயிர்களே கொன்றேன்** - ப்ராண விஶ்லேஷபர்யந்தமாக்கிப் போந்தேன். புடைவை[3] உரிந்து விட்டிலேன். **உணர்விலேன்** - ஸர்வேஶ்வரன் ஒருவன் உளன் என்னும் இச்சாண் சந்தையும் நெஞ்சில் படாதபோது[4] செய்யாதது உண்டோ?

**ஆதலால் நமனார் பாடியைப் பெரிதும் பரிசு அழித்திட்டேன்** - என்று வக்ஷ்யமாணத்தை உத்தேசித்துச் சொல்லுகிறதாகவும் ஆம்; அன்றிக்கே,

---

**வி :** ஆறாம் பாட்டு : *"அவ்வளவுதானா, இன்னும் செய்தது உண்டோ?" என்று வினவ, "கைதொடானாய்க்[5] கொன்றே போந்தேன்" என்கிறார்.*

**கோடிய மனத்தால்** - *நற்பொருள்களினின்றும் நெஞ்சு விலகியன்றோ இருக்கும்.* **சினத் தொழில் புரிந்து** - *மறச் செயல் செய்து.* **திரிந்து நாய் இனத் தொடும் திளைத்திட்டு** – *துன்புறுத்தும் விலங்குகளோடே வேட்டையாடித் திரிந்த படியைச் சொல்வதாகவோ தண்ணியவர்களோடே[6] கூடி விளையாடிக் களித்துத் திரிந்தபடியைச் சொல்வதாகவோ கொள்ளலாம்[7].* **ஓடியும்** - *"ஒருவனைத் துன்புறுத்த வேண்டும்; அவன் இங்கு இல்லை; தொலைவில் உள்ளான். அவனைத் தேடிப் பத்துக்காத வழி போக வேண்டும். நீ வருகிறாயா?" என்றால், தட்டுப்[8] பாராமல் அவ்வளவும் ஓடியும்.* **உழன்றும்** - *"அப்படித் துன்புறுத்தும்போது நீயும் மிகவும் துன்பப்பட வேண்டி வரும்" என்றால் அதற்கும் இணங்கி வருந்திச் செயற் பட்டும்.* **உயிர்களே கொன்றேன்** - *உயிர் பிரியும்வரை துன்புறுத்திப் போந்தேன்; புடைவை உரிந்து[9] விட்டிலேன்.* **உணர்விலேன்** - *பெருமான் ஒருவன் உளன் என்னும் இச்சாண் சந்தையும்[10] நெஞ்சிற்படாதபோது செய்யாதது உண்டோ?*

**ஆதலால் நமனார் பாடியைப் பெரிதும் பரிசு அழித்திட்டேன்** - *இத் தொடரினை அடுத்துத் 'திருவடியடைந்தேன்' என்று சொல்ல இருப்பதோடு சேர்த்து ஒருவகையாகவும், கீழே ஆழ்வார்தாம் செய்ததாகச் சொல்லும் கொடுமைகளைக் குறிக்கும் தொடர்களோடு சேர்த்து மற்றொரு வகையாகவும்*

---

1. விலகியாய்த்து. 2. ஹிம்ஸிக்கும்போது. 3. புடவை. 4. கிடவாதபோது.
5. கைதொடன் - பிறரைக் கொண்டு அல்லது தன் கையாலேயே செய்பவன். 6. தண்ணியவர்கள் - தாழ்ந்தவர்கள். 7. முதலில் சொல்லப்படும் பொருளில் நாய் இனம் என்பது நாயினது இனம் என்னும் பொருளில் ஆறன் தொகையாகவும் இரண்டாவதாகச் சொல்லப்படும் பொருளில் நாய் போல இழிந்தவர்கள் என்னும் பொருளில் உவமத் தொகையாகவும் அமைகிறது. 8. தட்டு - தடை; தொல்லை. 9. புடைவை உரிதல் - ஆடையைப் பறித்துக்கொள்ளல். 10: சாண் சந்தை - சிறு சொற்றொடரை நெஞ்சில் இருத்திக் கொள்ளுதல்; சந்தை - நினைப்பு.

கீழோடே சேரவும் அருளிச்செய்வர். யமனுடைய ஆஜ்ஞை நடவாதபடி அத்தை வென்றேன். யமபுரத்தை வென்றேன் என்றபடி. அன்றிக்கே கீழோடே ஆனபோது, ''இவனை நலிய இவன் மாட்டான், வேறே ஒரு படைவீடும் ஒரு புதுக்கோமுற்றவனும்[1] இட வேணும்'' என்னும்படி பாபங்களையே பண்ணிப்போந்தேன் 'என்னுதல். **பரமனே** - ஒரு ஹேது இன்றிக்கே இருக்கச்செய்தே ஔதார்யம் பண்ணும் இடத்தில் உனக்கு அவ்வருகு ஒருவர் இல்லாதபடி இருக்கிறவனே! **பாற்கடல் கிடந்தாய்** - அதுக்கு உறுப்பாக அடுத்து அணித்தாகத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தருளினவனே! **நாடி நான் வந்து உன் திருவடி அடைந்தேன்** - பரஹிம்ஸையே பண்ணித் தோற்றினபடி திரிந்து அதுக்கு வரும் பலத்தைக் கேட்டு அஞ்சி அநந்தரம், ''நமக்குப் புகல் எது?'' என்று ஆராய்ந்து திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தேன். **நைமிசாரணியத்துள் எந்தாய்** - நான் நாடிக் கிட்டினேனாக நினைந்திருந்தேன்; நீ 'எனக்கு முன்பே நாடி 'பூர்வஜ'னாய் திருநைமிசாரண்யத்திலே வந்து ஸந்நிஹிதன் ஆனாய்.

---

*பொருள் கூறலாம். முதல்வகையாகக் கொண்டு பொருள் கூறுமிடத்துக் காலனுடைய ஆணை நடவாதபடி அதனை வென்றேன். காலனது ஊரை வென்றேன் என்கிறார். கீழே உள்ள தொடர்களோடு சேர்த்துப் பொருள் கூறுமிடத்து, ''இப் பெருந் தீவினையாளனை ஒறுப்பதற்கு இந்தக் காலன் தகுந்தவன் ஆகான்; வேறே ஒரு படைவீடும்[2] ஒரு புதுக்கோமுற்றவனும்[3] அமைத்தல் வேண்டும்'' என்னும்படி தீவினைகளையே பண்ணிப்போந்தேன் என்கிறார்.* **பரமனே** - *கொடுப்பதற்கு ஒரு காரணம் இல்லாத போதிலும், கொடை அளிக்குமிடத்தில் உனக்கு அவ்வருகு[4] ஒருவர் இல்லாதபடி இருக்கிறவனே!* **பாற்கடல் கிடந்தாய்** - *அதற்கு உறுப்பாக அடுத்து அணித்தாகத் திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தருளினவனே!* **நாடி நான் வந்து உன் திருவடி அடைந்தேன்** - *பிறர்க்குக் கொடுமையே பண்ணித் தோற்றியபடி திரிந்து அதனால் வரும் நிரயத் துன்பமாகிய விளைவுகளைப்பற்றிக் கேட்டு அஞ்சினேன்; அதன்பின்னர், ''நமக்குப் புகல் யாது?'' என்று ஆராய்ந்து திருவடிகளிலே வந்து தஞ்சம் புகுந்தேன்.* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *நான் நாடிக் கிட்டினேன் என்று நினைத்திருந்தேன்; நீ எனக்கு முன்பே நாடி 'முற்பாடனாய்'[5] (ஜி. ஸ்தோ. 1: 1) வந்து திருநைமிசாரணியத்திலே கிட்டிநிற்பவன் ஆனாய்.*

**ஒப்புமைப் பகுதி**

1. **கோடிய மனத்தால் சினத்தொழில் புரிதல்**

*'' ஒருவனுக்கு 'ஸுதுராசார: ' என்கிறபடியே நன்மை கலசாத பொல்லாங்காவது : 'மநஸாநிஷ்ட சிந்தநம்' என்றும், 'கோடிய மனத்தால் சினத்தொழில்புரிந்து' என்றும், 'சினத்தினால் செற்றம் நோக்கி வாளா தீவிளிவிளிவன்' என்றும் சொல்லுகிறபடியே நிர்நிபந்தநமாக பகவத் விபூதி பூதரோடே சிறுபாறு என்று போருகை '' க. நு. சி. 4 நாயனார் உரை.*

---

1. புதுக்கோமுத்துவமும்.
2. படை வீடு - நகரம்; ஈண்டுக் காலனுக்குரிய நரகத்தைக் குறிக்கிறது. 3. புதுக்கோமுற்றவன் - புதிய தலைவன்; ஈண்டுப் புதிய காலனைக் குறிக்கிறது. 4. அவ்வருகு - அப்பால்; மேல்.
5. முற்பாடன் - முதலில் வருபவன்.

*[நிர்நிபந்தநம் - காரணம் இன்றி. பகவத்விபூதிபூதர் - இறைவன் உடைமையான உலகில் உள்ளவர்.]*

2. **ஓடியும் உழன்றும் உயிர்களைக் கொல்லல்**

*" கடுங்கால் இளைஞர் - பரஹிம்ஸை பண்ணவென்றால் பத்துப் புக்கு பத்து மீள வல்லராய் இருக்கை "* திவி. 37 பெ. உரை.

3. **பரமன்**

*" பரமா - குணங்களுக்கும் ரக்ஷணத்துக்கும் உன்னை எண்ணினால் பின்னை எண்ணலாவார் இல்லாதபடி ஸர்வாதிகனாய் இருக்குமவனே! "* தி. வா. மொ. 2:6:10-36

*" பரமனை - ரூப குணத்தாலும் ஆத்ம குணத்தாலும் குறைவற்றிருக்கையே அன்றிக்கே இவனுக்கு மேற்பட்டார் இல்லை என்னும்படி இருக்கை "* தி. வா. மொ. 3:7:1-24

(56)

## 57

**நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும்**
**நீதியல் லாதன செய்தும்**
**துஞ்சினார் செல்லும் தொன்னெறி கேட்டே**
**துளங்கினேன்; விளங்கனி முனிந்தாய்!**
**வஞ்சனேன் அடியேன் நெஞ்சினிற் பிரியா**
**வானவா! தானவர்க் கென்றும்**
**நஞ்சனே! வந்துன் திருவடி அடைந்தேன்**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்!**

**ப. ரை :** **விளங்கனி முனிந்தாய்** - *விளாவின் பழமாய் வந்த அசுரனைச் சீறித் தொலைத்தவனே!* **வஞ்சனேன் அடியேன் நெஞ்சினில் பிரியா வானவா** - *வஞ்சகனான எனது நெஞ்சகத்தில் புகுந்து பிரியாமல் உறையும் தேவனே!* **தானவர்க்கு என்றும் நஞ்சனே** - *அசுரர்களுக்கு எக்காலத்திலும் நஞ்சுபோல அழிவினைச் செய்பவனே!* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *திருநைமிசாரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனே!* **நீதி அல்லாதன** - *அறநூல்களால் விலக்கப் பட்டனவற்றை,* **நெஞ்சினால் நினைந்தும்** - *மனத்தாலே கருதியும்,* **வாயினால் மொழிந்தும்** - *வாயாலே சொல்லியும்,* **செய்தும்** - *உடலாலே செய்தும் போந்து,* **துஞ்சினார் செல்லும் தொல் நெறி கேட்டே** - *இறந்தவர்கள் போகக்கூடிய பழைய தான நிரயப் பாதையினைப் பற்றிக் கேட்ட அளவிலே,* **துளங்கினேன்** - *நடுக்கங் கொண்டவனாய்,* **உன் திருவடி அடைந்தேன்** - *உன்னுடைய திருவடிகளைத் தஞ்சமாக அடைந்தேன்.*

---

**57.** 2:4 கேட்டேன்.

**சி. கு :** *நெஞ்சினால் என்பதால் மனத்தாலும், வாயினால் என்பதால் மொழியாலும், செய்தும் என்னும் வினையினால் செயல்புரிதற்கு இடனாய மெய்யாலும் தீவினையே செய்தமை சுட்டப்பட்டது. அவை முறையே தீயன சிந்தித்தலும், தீயன மொழிதலும், தீயன செய்தலும் ஆம்.*

**வியா : ஏழாம் பாட்டு : நெஞ்சினால் இத்யாதி** - நீதியல்லாதன நெஞ்சினால் நினைந்தும், வாயினால் மொழிந்தும் செய்தும் கீழ் எல்லாம் தாம் செய்த தப்புக்களைச் சொல்லிக்கொண்டு போந்தார்; அவற்றை[1] எல்லாம் திரளச் சொல்லுகிறார் ஆயிற்று.

**நீதி அல்லாதன** - என்று மநோ வாக்கு காயங்கள் மூன்றாலும் நிஷித்தங்களையே அநுஷ்டித்துப் போந்தவர்கள் முடிந்தால் போம் வழி உண்டு; நரகத்துக்குப் போம் வழி. அத்தைக் கேட்டுத் துளங்கினேன். **தொல் நெறி** - ஜகதஶ்ஶாஶ்வதே மதே" என்று பரமபதத்துக்குப் போம் வழியோபாதி இதுவும் பழையதிறே. இனி அதில் இதுக்கு வாசி, ஆள் ஒழுக்கு அறாமையிறே. **கேட்டே துளங்கினேன்** - அநுபவித்து அன்றிக்கே, ஸ்ரவண வேளையிலே நடுங்கினேன்.

"அதின் பலத்தையும் புஜிக்கும் அத்தனை அன்றோ?" என்ன, **விளங்கனி இத்யாதி** - பலத்தை உதிர்த்தது, பக்வபலாநுபவம் பண்ணவேண்டா என்று கருத்து. **விளங்கனி முனிந்தாய்** - கனியாகிற அஸுரனை நிரஸித்தவனே! விரோதி

---

வி: **ஏழாம்பாட்டு :** *கீழ்ப் பாசுரங்களில் எல்லாம் தாம் செய்த தப்புகளைச் சொல்லிக்கொண்டு போந்தார்; அவற்றை எல்லாம் திரளச் சொல்லுகிறார் இதில்.*

**நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும் நீதி அல்லாதன செய்தும் துஞ்சினார் செல்லும் தொல் நெறி கேட்டே துளங்கினேன்** - *நீதி அல்லாதன நெஞ்சினால் நினைந்தும், வாயினால் மொழிந்தும், செய்தும் என்று கூட்டுக. மனம் மொழி மெய்கள் ஆகிய மூன்றாலும் விலக்கடிகளையே[2] மேற்கொண்டு ஒழுகிப் போந்தவர்கள் முடிந்தால் போகும் வழி உண்டு; அது நிரயத்திற்குப் போகும் வழி. அதனைக் கேட்டுத் துளங்கினேன்.* **தொல் நெறி** - "உலகத்திற்கு ஒளியும் இருளுமாகிய இவ்இரு வழிகளும் எஞ்ஞான்றும் நிலையானவை என்று கருதப்படுகின்றன" *என்பது கீதை (8 : 26).* இதனால் *திருநாட்டுக்குச் செல்லும் வழியைப் போன்று இதுவும் பழமையானது என்பது போதரும்.* இனி *அதைக் காட்டிலும் இதற்கு வேறுபாடு, இதில் ஆள் ஒழுக்கு அறாமையே.* **கேட்டே துளங்கினேன்** - *தீவினைப் பயனைத் துய்த்தல் அல்லாமல் கேட்கும் வேளையிலே நடுங்கினேன்.*

*"நீதியல்லாதனவற்றை முக்கருவிகளாலும் இழைத்தால் அதன் விளைவையும், துய்த்தல் வேண்டாவோ?" என்று பெருமான் வினவ, "நீ விளங்கனி முனிந்தவன் ஆதலின் வேண்டா" என்கிறார்.* **விளங்கனி முனிந்தாய்** - *பழத்தை உதிர்த்தது, முதிர்ந்த பழவினைப் பயனைத் துய்த்தல் வேண்டா என்னும் கருத்தினைக் காட்டுவது. அதனை நீ எனக்குக் காட்டினாய்.* **கனியாகிய** *அசுரனை*

---

1. அவைத்தை.
2. விலக்கடிகள் - தள்ளத்தக்கவை.

நிரஸந ஸ்வபாவனான நீ என் விரோதியையும் போக்க வேணும் என்கிறார். **வஞ்சனேன் அடியேன் நெஞ்சினில் பிரியா வானவா** - 'அடியேன்' என்று அஹ்ருதயமாக நான் ஒரு உக்தி மாத்ரத்தைச் சொல்ல, அத்தை ஸஹ்ருதயமாக்கி, நித்ய ஸூரிகளுக்கே உன்னை அநுபவிக்கக் கொடுத்துக்[1] கொண்டு இருக்கக் கடவ நீ என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து, விடாதே இருந்தாய். **தானவர்க்கு இத்யாதி** - அஸுரவர்க்கத்துக்கு என்றும் ஒக்க நஞ்சானவனே! உன் திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தேன். **நைமிசாரணியத்துள் எந்தாய்** - நன்னெறி காட்டுகைக்கு அணித்தாக நீ வந்து இருந்தாய். தொன்னெறிக்கு எதிர்த் தட்டானத்தை ஆயிற்று நினைக்கிறது.

---

*அழித்தவனே! பகையினைக் கிழங்கெடுக்கும்[2], பண்பினனான நீ என் பகையையும் போக்க வேண்டும் என்கிறார்.* **வஞ்சனேன் அடியேன் நெஞ்சினில் பிரியா வானவா** - *'அடியேன்' என்று நெஞ்சு ஒட்டாமல் நான் ஒரு சொல்லை மட்டும் சொல்ல, அதனை நெஞ்சு பொருந்தக் கூறியதாகக் கொண்டு அயர்வறும் அமரர்களுக்கே உன்னைத் துய்க்கக் கொடுத்துக் கொண்டிருக்கக் கூடிய நீ என்னுடைய நெஞ்சகம் புகுந்து, விடாதே இருந்தாய்.* **தானவர்க்கு என்றும் நஞ்சனே வந்து உன் திருவடி அடைந்தேன்** - *அசுரர் கூட்டத்திற்கு என்றும் ஒக்க நஞ்சானவனே! உன் திருவடிகளிலே வந்து தஞ்சம் புகுந்தேன்.* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *நன்னெறி காட்டுவதன்பொருட்டு அணித்தாக நீ வந்து இருந்தாய். தொன்னெறிக்கு எதிர்த்தட்டான திருநாட்டுக்குச்[3] செல்லும் நெறியை அன்றோ நீ எனக்கு அருள நினைக்கிறாய்.*

**ஒப்புமைப் பகுதி**

1. **விளங்கனி முனிந்தவன்**

*" விளங்கனி வீழ எறிந்த பிரானே - ஆகர்ஷமாம்படி பழுத்து நின்ற விளாவினுடைய பழங்கள் சிதறி விழும்படி எறிந்த உபகாரகனே! ஓர் அஸுரன் கன்றாய் வந்து நிற்க, ஓர் அஸுரன் விளாவாய் வந்து நிற்க, இத்தை அறிந்து, ஒன்றையிட்டு ஒன்றை எறிந்து இரண்டையும் நிரஸித்துப் பொகட்ட உபகாரத்தைச் சொல்லுகிறது "*

*பெரி. தி. 3:1:6 ம. மா. மு. உரை.*

*[ஆகர்ஷகம் - கவர்ச்சியைச் செய்வது. உபகாரகன் - உதவி செய்பவன். நிரஸித்து - அழித்து.]*

2. **வஞ்சனேன்**

*" வஞ்சனேன் - அகவாயில் நினைவு ஒன்றாய் இருக்க 'இவன்அத்தனை பகவத் ப்ரேமம் உடையார் இல்லை' என்று ப்ரமிக்கும்படி மறைத்து வர்த்திப்பன் "* *தி. மா. 27 பெ. உரை.*

*[பகவத் ப்ரேமம் - இறையன்பு. வர்த்திப்பன் - வாழ்வன்.]*

---

1. குடுத்துக்.
2. கிழங்கெடுத்தல் - முற்றும் அழித்தல். 3. திருநாடு - வைகுந்தம்.

**ஏவினார் கலியார் நலிகஎன் றென்மேல்**
**எங்ஙனே வாழுமா றைவர்**
**கோவினார் செய்யும் கொடுமையை மடித்தேன்**
**குறுங்குடி நெடுங்கடல் வண்ணா!**
**பாவினார் இன்சொல் பன்மலர் கொண்டுன்**
**பாதமே பரவிநான் பணிங்தென்**
**நாவினால் வந்துன் திருவடி அடைந்தேன்**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்!**

ப. ரை : **குறுங்குடி நெடுங் கடல் வண்ணா!** - *திருக்குறுங்குடியிலே எழுந்தருளியுள்ள பரந்த ஆழ்ந்த கடல் போலும் நிறத்தை உடையவனே!* **நைமிசாரணியத்துள் எந்தாய்!** - *திருநைமிசாரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனே!* **கலியார் நலிக என்று** - *கலிகாலமானது "இவனை வருத்துவீராக" என்று சொல்லி,* **என் மேல் ஐவர் ஏவினார்** - *என் மேலே ஐம்பொறிகளையும் ஏவி விட்டார்;* **வாழும் ஆறு எங்ஙனே** - *அவ் ஐம்பொறிகளும் இனி வாழும் விரகு யாதோ?* **கோவினார் செய்யும் கொடுமையை மடித்தேன்** - *அந்தப் பெரிய மனிதர்கள் ஐவரும் பண்ணத்தக்க கொடுமைகளை வந்தவழியே போகச்செய்து தொலைத்தேன்.* **என் நாவினால்** - *அதுதான் எப்படிச் செய்தீர் என்னில், எனது நாவினாலே;* **பா ஆர் இன் சொல் பன் மலர் கொண்டு பரவி** - *நல்ல ஓசை நயம் செறிந்த இனிய சொற்களாகிய பல மலர்களைக் கொண்டு வாழ்த்தி,* **உன் பாதமே பணிந்து** - *உன்னுடைய திருவடிகளையே வணங்கி,* **உன் திருவடி வந்து அடைந்தேன்** - *உன் திருவடிகளையே தஞ்சமாகக் கொண்டு வந்து சேர்ந்தேன்.*

**சி. கு :** *கலியார், ஐவர், கோவினார் ஆகியவற்றில் 'ஆர்' விகுதி உயர்வு கருதி அல்லாமல் அச்சமும் சீற்றமும் இழிவும் தோன்ற அமைந்தது. பா - பரந்து பட்ட ஓசை. திருக்குறுங்குடி - பாண்டிய நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. நம்மாழ்வார் பிறந்த இடம். திருமங்கையாழ்வார் திருநாட்டுக்கு எழுந்தருளின தலமும் ஆகும். இங்குள்ள பெருமானுக்கு வைணவ நம்பி என்பது பெயர்.*

வியா : எட்டாம் பாட்டு : **ஏவினார் கலியார்** - கலியார் என்கிறார் ஆயிற்று கலிகாலத்துக்கு அஞ்சினபடியாலே. கலியாரானவர், 'நலியும்கோள்' என்று என் மேலே அஞ்சு இந்த்ரியங்களையும் ஏவினார். **எங்ஙனே வாழுமாறு** - அவர்

---

வி : எட்டாம் பாட்டு : **ஏவினார் கலியார் நலிக என்று என் மேல்** - *கலியார் என்று 'ஆர்' விகுதியிட்டுக் கூறுகிறார், கலிகாலத்துக்கு அஞ்சியபடியாலே. கலியார், 'நலியுங்கோள்' என்று என் மேலே அஞ்சு பொறிகளை ஏவினார்.*

---

**58.** 2:4 மடுத்தேன். 3:7 பணிங்தேன்.

எங்ஙனே இனி ஜீவிக்கும்படி. "என்தான்? ஏவிற்றாகில்[1] வந்தது என்?" என்னில், **ஐவர் இத்யாதி** - மநஸ்ஸுக்கு சேஷமாய் இந்த்ரியங்கள், அது போன வழியே இவை போகக் கடவதாய் இருக்க அது தவிர்ந்து, இவைதான் இப்போது மநஸ்ஸைச் சுமையெடுக்கத் தொடங்கிற்று[2] ஆய்த்து; இவை தான் நினைத்தபடி செய்யும் க்ரூரமான செயல்களைத் திரிய விடுவித்தேன்.

"ஆரைப் பற்றித்தான் நீர் இவற்றைத்[3] திரிய விடுவித்தது?" என்ன, **குறுங்குடி நெடுங் கடல் வண்ணா** - திருக்குறுங்குடியிலே ப்ரமஹரமான வடிவைக் கொடுவந்து நீ ஸந்நிஹிதனாகையாலே. **பாவினார் இத்யாதி** - நல்ல சந்தஸ்ஸுக்கள் ஆர்ந்து இருந்துள்ள இனிய சொற்களாகிற பல மலர்களையும் கொண்டு அடைவு கெட ஸ்தோத்ரம் பண்ணித் திருவடிகளிலே விழுந்து. **என் நாவினால்** - அநர்த்தங்களை விளைக்கைக்கு உறுப்பானவற்றையே[4] சொல்லிப் போந்த என் நாவாலே. **நைமிசாரணியத்துள் எந்தாய்** - ஸ்துத்யனான நீ என்னுடைய ஸ்துதிக்கு விஷயபூதனாய்க்கொண்டு திருநைமிசாரண்யத்திலே வந்து ஸந்நிஹிதன் ஆனாய்.

---

**எங்ஙனே வாழும் ஆறு** - *அக் கலியார் எங்ஙன் இனி வாழ்வது? "ஏன்? ஏவிய பின் என்ன நடந்தது?" என்று வினவின், அவற்றின் கொடுமைகளை அழித்தேன் என்கிறார்.* **ஐவர் கோவினார் செய்யும் கொடுமையை மடித்தேன்** - *மனத்திற்குப் பொறிகள் கட்டுப்பட்டனவாய் அம்மனம் போன வழியே தாம் போக வேண்டு வனவாய் இருக்க அது தவிர்ந்து, இவைதாம் இப்போது மனத்தைச் சுமை யெடுக்கத்[5] தொடங்கின. இவை தாம் நினைத்தவாறு செய்யும் கொடுஞ்செயல் களைத் திரிய விடுவித்தேன்.[6]*

*"யாரைப் பற்றியதனால் நீர் இவற்றைத் திரும்பிச் செல்ல விடுத்தீர்?" என்று பெருமான் வினவ, குறுங்குடியில் உறையும் பெருமானைப் பற்றி என்கிறார்.* **குறுங்குடி நெடுங் கடல் வண்ணா** - *திருக்குறுங்குடியிலே அயர்வு அகற்றும் வடிவைக் கொடுவந்து நீ கிட்டி நிற்பவனாய் இருக்கிறாய். அதனாலே அவ்வாறு செய்ய முடிந்தது என்கிறார்.* **என் நாவினால்** - *கேட்டினுக்கு உறுப்பானவற்றையே சொல்லிப் போந்த என் நாவாலே.* **பாவினார் இன் சொல் பன் மலர் கொண்டு பரவி உன் பாதமே நான் பணிந்து** - *நல்ல ஓசை நயங்கள் ஆர்ந்திருக்கும் இனிய சொற்கள் ஆகிய பல மலர்களையுங்கொண்டு அடைவு கெடப் போற்றித் திருவடி களிலே விழுந்து.* **வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்** - *பராவப்படுபவனான நீ என்னுடைய பராவுதலுக்குப் பொருளாய்த் திருநைமி சாரணியத்திலே வந்து கிட்டி நிற்பவன் ஆனாய்.*

### ஒப்புமைப் பகுதி

**ஐவர் கோவினார் செய்யும் கொடுமை மடித்தேன்**

> *" ஐவர் குமைக்கும் - பஞ்சேந்த்ரியங்களும் விஷயங்களிலே மூட்டி நலியும் படியான. 'ஐவர்' என்று சேதநஸமாதியாலே சொல்லுகிறது, நலிவின் மிகுதியாலே "* — *தி. வா. மொ. 6:9:9-24*

---

1. ஏவித்தாகில்; ஏவுத்தாகில். 2. துடங்கித்து. 3. இவைத்தைத். 4. உறுப்பானவத்தையே.
5. சுமையெடுத்தல் - வருத்துதல். 6. திரிய விடுவித்தல் - வந்தவழியே திரும்பிச் செல்ல விடுதல்.

*" ஐவரால் - இவர்களிலே நால்வர் ஒருமுகமாய் நின்று நலிய, ஒருவர் உடலாந்தமாய் இருக்கும். ரக்ஷகன் ஒருவனாய் இருக்க பாதகர் ஐவராய் இருக்கிறபடி. அஞ்சால் என்னாதே, 'ஐவரால்' என்கிறது அசேதநங்களாய் இருக்கச் செய்தேயும் சேதந ஸமாதியாலே சொல்லு கிறார் ஆயிற்று பாதகத்வத்தில் ஊற்றங்கொண்டு. ஆத்மா என்று ஒன்று உண்டாய், அதினுடைய ஜ்ஞாந ப்ரஸர த்வார மாத்ரம் மநஸ்ஸாய், அதுக்கு இவை சேஷம் என்று அறிகிறிலர் "*
*தி. வா. மொ. 7:1:1-36*

*[உடலாந்தம் - உடல் முழுதும் பரவியது. ரக்ஷகன் - காப்பவன். பாதகர் - தீங்கிழைப்போர். அசேதநங்கள் - அஃறிணைப் பொருள்கள். சேதந ஸமாதி - உயர் திணையாக. ஜ்ஞாந ப்ரஸர த்வாரம் - அறிவுக்கு வாயில். மனஸ் - மனம்.]*

*" ஓர் ஐவர் - ஒருவர் நினைத்தத்தை ஒருவர் நினையாதே தனித்தனியே ப்ரதாநராய் இருக்கை "* *தி. வா. மொ. 7:1:7-24*
*[ப்ரதாநர் - முதன்மையானவர்; முதலி.]*

*" ஓர் ஐவரை - இப்படிப் பண்ணுகைக்கு இன்னம் ஓர் ஐவர் இல்லை. இவற்றால் பட்ட நலிவின் மிகுதியாலே சேதந ஸமாதியாலே சொல்லு கிறார் "* *தி. வா. மொ. 8:7:2-24*

*" மனம் ஆளும் ஓர் ஐவர் வன்குறும்பர் "*

*" மனம் ஆளும் - பள்ளிக்கலகங்கள் போலே. ஈச்வரனுக்கு ஆத்மா சேஷ மாய், ஆத்மாவுக்கு மநஸ்ஸு சேஷமாய் மநஸ்ஸு போனவழியே போகக் கடவவான இந்த்ரியங்களிருக்கும் முறையன்றிக்கே, மநஸ்ஸை இந்த்ரி யங்கள் ஆளும்படி இருக்கை "* *பெ. திருவந். 51 பெ. உரை.*
*(58)*

## 59

**ஊனிடைச் சுவர்வைத் தென்புதூண் நாட்டி**
**உரோமம்வேய்ந் தொன்பது வாசல்**
**தானுடைக் குரம்பை பிரியும்போ துன்றன்**
**சரணமே சரணமென் றிருந்தேன்;**
**தேனுடைக் கமலத் திருவினுக் கரசே!**
**திரைகொள்மா நெடுங்கடல் கிடந்தாய்!**
**நானுடைத் தவத்தால் திருவடி அடைந்தேன்**
**நைமிசா ரணியத்துள் எந்தாய்!**

ப. ரை : **தேனுடைக் கமலத் திருவினுக்கு அரசே!** - தேன் நிறைந்த தாமரைப் பூவில் பிறந்த பெரிய பிராட்டியார்க்குத் தலைவனே! **திரை கொள் மா**

---

**59.** 1 : 1 ஊனுடைச். 1 : 5 உரோமமேய்ந்.

**நெடுங் கடல் கிடந்தாய்** - *அலைகளைக் கொண்டுள்ள பெரிய ஆழ்ந்த திருப்பாற் கடலில் கண்வளர்ந்தருளியவனே!* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *திருநைமிசா ரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனே!* **ஊன் இடைச் சுவர் வைத்து** - *தசையை நடுநடுவே சுவராக வைத்து,* **என்பு தூண்நாட்டி** - *எலும்புகளைத் தூணாக நிறுத்தி,* **உரோமம் வேய்ந்து** - *மயிர்களை மேலே வைத்து மூடி,* **ஒன்பது வாசலுடை** - *ஒன்பது வாயில்களை உடையதாக இருக்கும்,* **குரம்பை பிரியும் போது** - *குடிசையாகிய இவ் உடலை விட்டு உயிர் பிரியும் காலத்தில்,* **உன்தன் சரணமே சரணம் என்று இருந்தேன்** - *உன்னுடைய திருவடிகளே தஞ்சம் என்று நினைத் திருந்தேன்;* **நானுடைத் தவத்தால் திருவடி அடைந்தேன்** - *இதுபோது என்னுடைய தவமாக இலங்கும் உன் அருளால் உன் திருவடிகளைக் கிட்டப் பெற்றேன்.*

**சி. கு :** *நானுடைத் தவத்தால் - என்னுடைத் தவத்தால். வேற்றுமை உருபு ஏற்குங்கால் திரிந்து என்னுடை என வருதற்குரிய தன்மை ஒருமை இடப் பெயர் திரியாது, இயல்பாய் நின்றது, ''யாமுடைச் சிலம்பு முத்துடை அரியே'' (சிலம்பு வழக்குரைகாதை 69) என்புழிப்போலே.*

வியா : ஒன்பதாம் பாட்டு : **ஊனிடைச் சுவர் வைத்து** - மாம்ஸத்தை இடையிடையே சுவராக வைத்து; அன்றிக்கே, மாம்ஸ ப்ரசுரமான சரீரத்தைச் சுவராக வைத்து; எலும்பைத் தூணாக நாட்டி ரோமத்தாலே மேய்ந்து. **ஒன்பது வாசல் தானுடைக் குரம்பை** - **''நவ த்வாரே புரே''** என்று எங்கேனும் புறப்படலாம் படியிறே இச்சரீரந்தான் இருப்பது. ராஜபுத்ரன் ஒரு குடிலிலே ஒதுங்கினாப் போலே, நித்யமாய் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் ஏகரூபமாய் இருக்கிற ஆத்மவஸ்து கர்மத்தாலே ஜ்ஞாந ஸங்கோசத்தைப் பிறப்பிப்பதான சரீரத்திலே அகப்பட்டது ஆயிற்று. **பிரியும் போது** - அதிலே புகுகைக்கு ஒரு கர்மம் பண்ணி வைத்தவோ பாதி அத்தை[1] விடுகைக்கும் ஒரு கர்மம் பண்ணி வைக்குமே; அப்போதைக்கு உன் திருவடிகளே புகல் என்று அத்யவஸித்தேன்.

---

வி : ஒன்பதாம் பாட்டு : **ஊனிடைச் சுவர் வைத்து என்பு தூண் நாட்டி உரோமம் வேய்ந்து** - *தசையினை இடையிடையே சுவராக வைத்து; அல்லது, தசை நிறைந்த உடம்பினைச் சுவராக வைத்து; எலும்பைத் தூணாக நாட்டி மயிராலே மேய்ந்து.* **ஒன்பது வாசல் தானுடைக் குரம்பை** - **''ஒன்பது வாயில்களை உடைய உடலின் கண்ணே''** *என்று சொல்லப்படுவதற்கு ஏற்ப. எங்கேனும் புக்கு எங்கேனும் புறப்படலாம்படியன்றோ இவ்உடம்புதான் இருப்பது. மன்னன் மகன் ஒரு குடிலிலே ஒதுங்கினாற்போலே, எஞ்ஞான்றும் இருப்பதாய், அறிவு உகப்பு ஆகிய இயல்பினதாய், ஒருபடிப்பட்டதாய் இருக்கும் உயிர் வினையின் காரணமாக அறிவினைக் கூம்பச்செய்யும் உடம்பிலே அகப்பட்டுக் கொண்டது.* **பிரியும் போது உன்றன் சரணமே சரணம் என்று இருந்தேன்** - *உடம்பிலே புகுவதற்கு ஒரு வினை பண்ணிவைத்தது போன்று அதனை விடுவதற்கும் ஒரு வினை பண்ணி வைப்பானன்றோ; அப்போதைக்கு உன் திருவடிகளே புகல் என்று துணிந்தேன்.*

---

1. அவைத்தை.

"நீர் இப்படி நினைத்திருந்தது என்ன பற்றாசு கொண்டுதான்?" என்னில், **தேனுடைக் கமலத் திருவினுக்கு அரசே** - புருஷகாரபூதையான பிராட்டியோடு அணைந்தவனாகையாலே மறமான செயல் செய்யமாட்டாய் என்னும் அத்தாலே. புருஷகார பலத்தாலே. **திரை இத்யாதி** - ஶ்ரமஹரமான திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருளினவனே! **மா நெடுங் கடல்** - பரப்பிலும் ஆழத்திலும் ஆயிற்று. **நானுடை இத்யாதி** - தம்முடைய வ்ருத்தி இருந்தபடி அடையக் கீர்த்தித்தாரிறே முன்பே; இனி நானுடைத் தவம் என்கிறது அவன்தன்னை. நான் பண்ணின தபஸ்ஸாலே திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தேன். **நைமிசாரணியத்துள் இத்யாதி** - ஜகத் ஸ்ருஷ்டி பண்ணியும் அவதரித்தும் உகந்தருளின நிலங்களிலே வந்து ஸந்நிஹிதனாயுமிறே ஸுக்ருதத்தை உத்பாதிப்பது.

---

**தேனுடைக் கமலத் திருவினுக்கு அரசே** - *'நீர் இப்படி நினைத்திருந்தது என்ன பற்றாசு*[1] *கொண்டுதான்?' என்னில், பேற்றினைக் கூட்டுவிப்பவளான பிராட்டியோடு அணைந்தவனாகையாலே மறமான செயல்*[2] *செய்யமாட்டாய் என்பதனாலே. அஃதாவது பரிந்துரையின் வலிமையாலே.* **திரை கொள் மா நெடுங் கடல் கிடந்தாய்** - *அயர்வு அகற்றும் திருப்பாற்கடலிலே வந்து கண் வளர்ந் தருளியவனே!* **மா நெடுங் கடல்** *'மா', 'நெடு' என்னும் அடைமொழிகள் நிரலே கடலின் பரப்பினையும் ஆழத்தினையும் குறித்து நின்றன.* **நானுடைத் தவத்தால் திருவடி அடைந்தேன்** - *தம்முடைய வாழ்க்கைநடை இருந்தபடி அடையக் கீர்த்தித் தாரன்றோ*[3] *முன்பே; இனி நானுடைத் தவம் என்பது அவன்தன்னைக் குறித்தது. அஃதாவது ஆழ்வார் தாம் பண்ணிய தவமாக இறைவனைச் சுட்டுகிறார். இறைவனது திருவருளாகிய தவம் என்க. நான் பண்ணின தவமாக இறைவன் இருத்தலாலே திருவடிகளிலே வந்து தஞ்சம் புகுந்தேன்.* **நைமிசாரணியத்துள் எந்தாய்** - *உலகம் யாவையும் தாமுளவாக்கியும் பிறந்தும் உகந்தருளின நிலங் களிலே வந்து அணியனாகியும் அன்றோ நன்மையை உண்டாக்குகிறாய்.*[4]

**ஒப்புமைப் பகுதி**

**நானுடைத் தவத்தால்**

*இதில் தன்மைப்பெயர் உருபு ஏற்குங்கால் திரியாமல் வந்துள்ளது. இது போல வரும் இடங்கள் :*

*" எங்கள் செல்சார்வு யாமுடை அமுதம் இமையவர் அப்பன் "*

*தி. வா. மொ. 8:4:2*

*" நானுடை நாரணன் தம்மனை நரகம்புகாள் "*

*" நானுடை நாரணன் - என்னுடைய நாராயணன். 'மானிட சாதி' என்று எடுத்த அதுக்கு நாலாம் அடியாகையாலே 'என்னுடை' என்கிற ஸ்த்தாநத்திலே, 'நானுடை' என்கிறது 'ஊனுடைச் சுவர்வைத்து' என்கிற பாட்டிலே, 'நானுடை என்னுமா போலே. "*

*பெரி. தி. 4:6:4 ம. மா. மு. உரை.*

---

1. பற்றாசு - காரணம். 2. மறமான செயல் - கொடுமையான செயல்; தண்டனை. 3. கீர்த்தித்தல் - பரக்கச் செல்லுதல். 4. எந்தாய் என்பதனைக் கருத்திற் கொண்டு இவ்வாறு உரை வரைகிறார்.

60

ஏதம்வந் தணுகா வண்ணம்நாம் எண்ணி
எழுமினோ தொழுதுமென் றிமையோர்
நாதன்வந் திறைஞ்சும் நைமிசா ரணியத்
தெந்தையைச் சிந்தையுள் வைத்துக்
காதலே மிகுந்த கலியன்வாய் ஒலிசெய்
மாலைதான் கற்றுவல் லார்கள்
ஓதநீர் வையம் ஆண்டுவெண் குடைக்கீழ்
உம்பரும் ஆகுவர் தாமே.

**ப. ரை :** **ஏதம் வந்து அணுகாவண்ணம்** - துன்பங்கள் நம்பால் வந்து சேராதவாறு, **நாம் எண்ணி** - நாம் சிந்தித்து, **தொழுதும் எழுமின் என்று** - "அவனைத் திருநைமிசாரணியத்திற்குப் போய்த் தொழுவோம் புறப்படுங்கள்" என்று சொல்லித் தேவர்களை எல்லாம் கூட்டிக்கொண்டு, **இமையோர் நாதன் வந்து இறைஞ்சும்** - தேவர்களுக்குத் தலைவன் ஆகிய இந்திரன் வந்து வழிபடுகின்ற, **நைமிசாரணியத்து எந்தையை** - திருநைமிசாரணியத்துள் எழுந்தருளியுள்ள என் தலைவனை, **சிந்தையுள் வைத்து** - நெஞ்சகத்தில் வைத்து, **காதல் மிகுந்த கலியன்** - இறைவனிடத்தில் அன்பு பெருகிய திருமங்கைமன்னன், **வாய் ஒலி செய் மாலைதான்** - தன் வாயால் அருளிய இச்சொல் மாலையை, **கற்று வல்லார்கள்தாம்** - பயின்று தேறியவர்கள், **ஓத நீர் வையம்** - கடல் நீரால் சூழப்பட்ட இவ் உலகத்தை, **வெண் குடைக் கீழ் ஆண்டு** - வெண்மையான குடைநிழலின் கீழே இருந்து ஆட்சிபுரிந்து, **உம்பரும் ஆகுவர்** - தேவர்களோடும் ஒரு கோவையாகப் பெறுவர்.

**சி. கு :** ஏதம் - பால்பகா அஃறிணைப் பெயர். இமையோர் நாதன் - நான்கன் தொகை. **'வைத்து'** என்னும் வினையெச்சம் **'மிகுந்த'** என்னும் பெயரெச்சம் கொண்டு முடிந்தது. உம்பரும் - உயர்வு சிறப்பு உம்மை.

வியா : பத்தாம் பாட்டு : **ஏதம் இத்யாதி** - துஃக்கங்கள் வந்து கிட்டாத படியை மநோரதித்து, அவனைத் தொழுது உஜ்ஜீவிப்போம், ஒருப்படுங்கோள் என்று தேவர்களோடேகூட அவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரன் வந்து ஆஶ்ரயிக்கிற திருநைமிசாரண்யத்திலே வந்து ஸந்நிஹிதனான ஸ்வாமியை ஹ்ருதயத்திலே

---

வி : பத்தாம் பாட்டு : ஏதம் வந்து அணுகாவண்ணம் நாம் எண்ணி எழுமினோ தொழுதும் என்று இமையோர் நாதன் வந்து இறைஞ்சும் நைமிசா ரணியத்து எந்தையைச் சிந்தையுள் வைத்து - துன்பங்கள் வந்து கிட்டாத வகையினை எண்ணி, அவனைத் தொழுது பிழைப்போம், ஒருப்படுங்கள்[1] என்று தேவர்களோடு அவர்களுக்குத் தலைவனான இந்திரன் வந்து வணங்குகின்ற திருநைமிசாரணியத்திலே வந்து கிட்டி நிற்பவனான பெருமானை நெஞ்சகத்திலே

---

**60.** 3:2 மிகுத்து.

1. ஒருப்படுதல் - இசைதல்.

**வைத்து. அன்றிக்கே நித்ய ஸூரிகளோடே ஸ்ரீஸேநாபதியாழ்வார் வந்து ஆப்ரயிக்கிற என்னுதல். காதலே மிகுந்த - பகவத் விஷயத்தில் ஆசை மிகுந்து வருகிற ஆழ்வார் அருளிச்செய்த சப்த ஸந்தர்ப்பத்தை அர்த்த ஸஹிதமாகக் கற்க வல்லவர்கள். இருந்தவனுக்கு ஒதுங்க நிழல் பண்ணிக் கொடுத்தபடி ஆயிற்று. ஓத நீர் வையம் ஆண்டு - நித்ய ஸூரிகளோடு ஒருகோவையாமது தானே ஸித்த மிறே. அபேக்ஷை உண்டாகில், ஐஸ்வர்யத்தையும் நிர்வஹித்துப் பின்னை நித்ய ஸூரிகள் பதத்தைப் பெறுவர்கள்.**

---

*வைத்து. அல்லது, அயர்வறும் அமரர்களோடு சேனைமுதலியார் வந்து வணங்கு கிற என்றும் கொள்ளலாம்.* **காதலே மிகுந்த கலியன் வாய் ஒலி செய் மாலை தான் கற்று வல்லார்கள் -** *இறைவனிடத்தில் விருப்பம் மிகுந்து வருகின்ற ஆழ்வார் அருளிச்செய்த சொல்மாலையாகிய பாசுரங்களைப் பொருளோடு கற்க வல்லவர் கள். தன் நெஞ்சில் இருந்தவனுக்கு ஒதுங்கக் காதலாகிய நிழல் பண்ணிக் கொடுத்தபடி ஆயிற்று.* **ஓதநீர் வையம் ஆண்டு வெண் குடைக் கீழ் உம்பரும் ஆகுவர் தாமே -** *அயர்வறும் அமரர்களோடு ஒரு கோவையாக அவர்கள் ஆவது தன்னடையே கிட்டும். விருப்பம் உண்டாகில் இவ்வுலகினை ஆட்சிபுரிந்து பின்னை அமரர்கள் உலகினையும் பெறுவார்கள்.*

## ஒப்புமைப் பகுதி

### ஏதம்

> *" ஏதங்கள் - ஏதம் - குற்றம். ஏதங்களானவை எல்லாம், தேஹாத் மாபிமாநமும், ஸ்வாதந்தர்யமும், அந்யஶேஷத்வமும், ஸ்வரக்ஷணமும், ஸ்வப்ரயோஜநமும். பூர்வாகமும், உத்தராகமும், ப்ராரப்தமும் என்னவும் ஆம். நிஷ்க்ருதியில்லாதவையும் நிஷ்க்ருதியுள்ளவையும் என்றுமாம் "*
> *பெரி. தி. 5: 2:8 பெ. உரை.*

*[தேஹாத்மாபிமாநம் - உடம்பையே உயிராகக் கருதுதல். ஸ்வாதந்தர்யம் - தானே தனக்குக் கடவன் என்று இருத்தல். அந்யஶேஷத்வம் - பிறர்க்கு அடிமையாய் இருத்தல். ஸ்வரக்ஷணம் - தன்னைத் தானே காத்துக் கொள்ளல். ஸ்வப்ரயோஜநம் - தனக்குப் பயனாகக் கருதுதல். பூர்வாகம் - பழையவினை. உத்தராகம் - மேல் செய்யும் வினை. ப்ராரப்தம் - நுகர் வினை. நிஷ்க்ருதி - கழுவாய்.]*

(60)

பிர : **"ஒன்பது வாசல் தானுடைக் குரம்பை பிரியும் போது உன்றன் சரணமே சரணம் என்று இருந்தேன்"** என்றாரே; நீர் இப்படி ஒரு தலையில் அத்யவஸாயமாகச் சொல்லுகிறது என்தான்? இத்தலையில் செயல் அற்ற அளவிலே ப்ரஹ்லாதனுடைய ப்ரதிஜ்ஞா ஸமகாலத்திலே ப்ரதிஜ்ஞை பண்ணின இடத்திலே வந்து ஸந்நிதிபண்ணி அவனுடைய விரோதியைப் போக்கி உபகரித்திலோமோ? அதுதான் அக்காலம் ஒன்றிலுமேயாய்ப் பிற்பட்ட காலத்தில் உள்ளார்க்கும் இழக்க வேண்டாதபடி, **"உன்னைப் பிரமாணித்தார் பெற்ற பேறு"** என்கிறபடியே ஆஸ்ரிதரானார் எல்லார்க்குமாகச் செய்த செயல் அன்றோ? ஆன பின்பு, "உம்முடைய போல்வார்க்கு இழக்க வேண்டாதபடி சிங்கவேள் குன்றிலே வந்து நீர் கிட்டி அநுபவிக்கும் அதுவே குறையாக நாம் வந்திருந்தோமே? இப்படி இருக்க, ஒருதலை அத்யவஸாயமேயாக நீர் சொல்லுவான் என்?" என்று தான் சிங்கவேள் குன்றிலே வந்து ஸந்நிதி பண்ணினபடியைக் காட்டிக்

---

**தோ :** ஆழ்வார், **"ஒன்பது வாசல் தானுடைக் குரம்பை பிரியும் போது உன்றன் சரணமே சரணம் என்று இருந்தேன்"** *(பெ. தி. 1:6:9)* என்று ஒரு *காலைப் போலே ஒன்பதின் காலும் சொன்னார். அது கேட்ட பெருமான் அவரை நோக்கி, "நீர் இப்படி ஒருதலையில்மட்டும்*[1] *உறுதிப்பாடு தோற்றச் சொல்வது என்? இத்தலையில்*[2] *செயலற்ற அளவிலே பிரகலாதன் சூள் உரைத்த காலத்திலே அவன் இருப்பதாகக் கூறிய இடத்திலே வந்து தோற்றி அவனுடைய பகைவனை அழித்து யாம் உதவி புரியவில்லையா? அதுதான் அக் காலத்தில் மட்டுமே நிகழ்ந்ததாய், பிற்பட்ட காலத்தில் உள்ளார்க்கும் இழக்க வேண்டாதபடி,*

> *"நின்றதோர் பாதம் நிலம் புதைப்ப நீண்டதோள்*
> *சென்றளந்த தென்பர் திசையெல்லாம் - அன்று*
> *கருமாணி யாய்இரந்த கள்வனே! உன்னைப்*
> பிரமாணித் தார்பெற்ற பேறு"[3]. *(இ. தி. 61)*

*என்னும்படியே அடியாரானார் எல்லார்க்குமாக அமையும்வண்ணம் செய்த செயலன்றோ? ஆன பின்பு, உம்மைப் போல்வார்க்கு இழக்க வேண்டாதபடி சிங்கவேள் குன்றிலே வந்து நீர் கிட்டி மகிழ்வதுவே குறையாக*[4] *நாம் வந்திருந் தோம் அல்லோமோ? இப்படி யாமும் அடியார்க்காக முயற்சி செய்துகொண் டிருக்க, நீர் ஒருதலையில் மட்டும் உறுதிப்பாடு இருப்பதாகச் சொல்லுவது என்?" என்று தான் சிங்கவேள் குன்றிலே வந்து தங்கியிருத்தலைக் காட்டிக்*

---

1. ஒருதலை - ஒரு பக்கம்; ஈண்டு உம்மிடம். 2. இத்தலை - இப்பக்கம்; ஈண்டு அடியாரிடத்து.
3. இப்பாசுரம் இந்திரனுக்குப் பெருமான் செய்த உதவியைக் குறிக்கிறது. பெருமான் இந்திரனுக்குச் செய்த உதவி, இந்திரனுக்கு மட்டுமன்றி அடியார் எல்லார்க்கும் அவன் உதவி புரிபவன் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு. அவனுக்கு மட்டும் உதவியதாகக் கொண்டிருந்தால், "பிரமாணித்தான் பெற்ற பேறு" என்று கூறியிருப்பார். அவ்வாறு அன்றி அனைவர்க்கும் உதவுபவன் என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டாகக் கருதியதனாலேயே, "பிரமாணித்தார் பெற்ற பேறு" என்று கூறியுள்ளார். இந்திரனுக்கு உதவியது பிறர்க்கும் உதவுபவன் என்பதனைக் காட்டி எல்லார்க்கும் உரியதானாற்போலே, பிரகலாதனுக்கு உதவியது மற்றவர்க்கும் உதவுபவன் என்பதனைக்காட்டி எல்லார்க்கும் உரியதாக அமைகின்றது.
4. குறையாக - செய்ய வேண்டுவதாக.

கொடுக்க, அங்கே புருஷகார பூதையான பெரிய பிராட்டியாரோடேகூட எழுந்தருளி இருக்கிற இருப்பை அநுஸந்தித்து ஹ்ருஷ்டராய், உத்தேஶ்யனாய் இருக்கிறவன் வந்திருக்கிற தேசமாகையாலே அங்கு உள்ளது அடைய உத்தேஶ்யமாய்ச் சிலரால் வந்து அணுக ஒண்ணாதபடி[1] ஸுரக்ஷிதமாக எழுந்தருளியிருக்கப் பெற்றது[2] என்று திருவுள்ளத்தோடே கூடிப் போய் அநுபவிக்கையிலே ஒருப்படுகிறார்.

---

*கொடுத்தான்; அங்கே சந்தி செய்பவளான[3] பிராட்டியோடேகூடப் பெருமான் எழுந்தருளி இருக்கும் இருப்பை நினைந்து இனியர் ஆனார்; மேலும், தாம் அடையக் கருதுபவனே வந்திருக்கும் இடமாகையால் அங்குள்ளவை அடையத் தமக்குக் கருதத்தக்கனவாய்க் கொண்டார்; அத்துடன் சிலரால்[4] அணுக ஒண்ணாதபடி நல்லரண் வாய்ந்ததாய் இறைவன் எழுந்தருளியிருப்ப தாய்த் திகழும் இடம் என்று உணர்ந்தார்; எனவே, தம் திருவுள்ளத்தோடே கூடிப் போய் வணங்கி மகிழ்வதற்கு ஒருப்படுகிறார்.*

## 61

**அங்கண் ஞாலம் அஞ்ச அங்கோர்**
**ஆளரி யாய்அவுணன்**
**பொங்க ஆகம் வள்ளு கிரால்**
**போழ்ந்த புனிதனிடம்**
**பைங்கண் ஆனைக் கொம்பு கொண்டு**
**பத்திமை யால்அடிக்கீழ்ச்**
**செங்கண் ஆளி இட்டி றைஞ்சும்**
**சிங்கவேள் குன்றமே.**

**ப. ரை :** **அங்கு** - *பிரகலாதன் இறைவன் இருப்பதாகச் சொன்ன அவ் இடத்திலேயே,* **அங்கண் ஞாலம் அஞ்ச** - *அழகிய இடமுடைய உலகத்தில் உள்ளார் எல்லாம் நடுங்கும்படி,* **ஓர் ஆளரியாய்** - *ஒப்பற்ற நரசிங்க மூர்த்தியாய்,* **அவுணன் பொங்க** - *இரணியன் கிளர்ந்த அளவிலே,* **ஆகம் வள் உகிரால்** - *அவன் உடலைக் கூர்மையான நகங்களினாலே,* **போழ்ந்த புனிதன் இடம்** - *பிளந்த தூயவனான பெருமான் எழுந்தருளியிருக்கும் இடமாவது,* **செங் கண் ஆளி பைங் கண் ஆனைக் கொம்பு கொண்டு** - *சிவந்த கண்களையுடைய சிங்கங்கள் பசுமை யான கண்களையுடைய யானைகளினுடைய கொம்புகளைக் கொண்டு,* **பத்திமை யால் அடிக் கீழ் இட்டு** - *இறையன்பினாலே திருவடிகளிலே படைத்து,* **இறைஞ்சும் சிங்கவேள் குன்றம்** - *வணங்கும் சிங்கவேள் குன்றம் ஆகும்.*

---

1. உண்ணாதபடி. 2. பெற்றுது.
3. சந்தி செய்விப்பவள் - கூட்டுவிப்பவள். மாறுபட்டு நின்றார் இருவரை வேற்றுமை மறந்து ஒன்றாகுமாறு செய்தலைச் சந்தி செய்வித்தல் என்பர் புறநானூற்று உரைகாரர். 4. சிலர் - ஈண்டு அசுரர்கள்.

**61.** 4 : 5 சிங்கவேழ். 4 : 6 தன்குன்றமே.

**சி. கு :** ஆகம் - உடம்பு. சிங்கவேள்குன்றம் - அஹோபிலம். வடநாட்டில் உள்ள திருப்பதிகளுள் ஒன்று. இங்குள்ள பெருமானுக்கு நரசிங்கன் என்பதும் பிராட்டிக்கு இலக்குமி நாச்சியார் என்பதும் திருப்பெயர் ஆகும். இங்கு ஒன்பது நரசிங்கத் திருமுற்றங்கள் உண்டு.

இத் திருமொழி மா மா மா மா விளம் காய் என்னும் வாய்பாட்டில் அமைந்த அறுசீர் ஆசிரிய விருத்தம்.

வியா : முதற் பாட்டு : **அங்கண் ஞாலம் அஞ்ச** - அழகிதான இடத்தை உடைத்தாய் இருந்துள்ள பூமியாக அஞ்ச. நரஸிம்ஹம் ஆயிற்றுத்தான் ஜகத் ரக்ஷணத்துக்காகவிறே; அங்ஙனே இருக்கச்செய்தேயும், இதினுடைய விளைவது அறியாமையாலே ஜகத்தாக நடுங்கிற்று ஆயிற்று. இதெவ்வளவாய்த் தலைக் கட்டுகிறதோ என்று இருந்தது ஆயிற்று. **அங்கு** - அவன் ப்ரதிஜ்ஞை பண்ணின அவ்இடந்தன்னிலே. **ஓர் ஆளரியாய்** - இதுக்கு முன்பு ஓர் இடத்திலும் கண்டறி யாத நரஸிம்ஹமாய். **அவுணன் பொங்க** - ஆஸுர ப்ரகிருதியான ஹிரண்யன் கிளர்ந்தான் ஆயிற்று, நரஸிம்ஹத்தைக் கண்ட காட்சியிலே. இதுக்கு முன்பு ஒருவன், "நான் எதிரி" என்று தோற்றக் கண்டறியானே, இவனுடைய தோற்றரவிலே கிளர்ந்தான் ஆயிற்று. அவனுடைய சரீரத்தைக் கூரிய திருவுகிராலே இரு பிளவாம் படி பண்ணின. சில அசித் பதார்த்தங்களை வகிர்செய்யுமாப் போலே ஆயிற்றுப் போழ்ந்தபடி. **போழ்ந்த புனிதன் இடம்** - ஜகத் ஸ்ருஷ்ட்யாதிகளில் வந்தால் ப்ரஹ்மாதிகளை ஏவித் தான் கடக்க இருக்கும்; அங்ஙன் அன்றியே,[1] தானே கை தொட்டு வ்யாபரிக்கையாலே பிறந்த சுத்தியைச் சொல்லுகிறது. அவன் அப்படி பின்பு உள்ளார்க்கு உதவுகைக்காக வர்த்திக்கிற ஸ்தாநம்.

---

வி : முதற் பாட்டு : **அங்கண் ஞாலம் அஞ்ச** - அழகிய இடத்தை உடைத்தாய் இருக்கும் உலகம் எல்லாம் அஞ்ச. நரசிங்கத்தின் வடிவினைக் கொண்டதே உலகினைக் காத்தற்காகத்தான்; அங்ஙனே இருந்தபோதிலும், இச் சீற்றத்தினுடைய விளைவு அறியாமையாலே உலகம் முழுதும் நடுங்கியது. இஃது எங்கே சென்று தலைக்கட்டுமோ[2] என்று இருந்தது. **அங்கு** - பிரகலாதன் 'உண்டு' என்று சூளுரைத்த அவ்இடம் தன்னிலே. **ஓர் ஆளரியாய்** - இதற்கு முன்பு ஓர் இடத்திலும் கண்டறியாத நரசிங்கமாய். **அவுணன் பொங்க** - அசுரனான இரணியன் கிளர்ந்து நின்றான், நரசிங்கத்தைக் கண்ட காட்சியிலே. அவன் இதற்கு முன்பு ஒருவன், "நான் பகைவன்" என்று கூறிக்கொண்டு தன் முன்னே வந்து தோற்றக் கண்டறியாதவன் ஆகையாலே இவனுடைய தோற்றரவிலே கிளர்ந்தான். **ஆகம் வள் உகிரால்** - அவனுடைய உடலைக் கூரிய திருவுகிராலே இரு பிளவாம்படி பண்ணின. சில உணர்வு அற்ற பொருள் களை வகிர்செய்வது போலே அமைந்தது போழ்ந்தபடி. **போழ்ந்த புனிதன் இடம்** - உலகினை உளவாக்கல் முதலிய தொழில்களில் வந்தால் நான்முகன் முதலானவர் களை ஏவித் தான் கடக்க இருப்பான்,[3] அங்ஙன் அன்றியே, தானே கைதொட்டுச் செய்கையாலே பிறந்த தூய்மையைச் சொல்லுகிறது. அவன் அப்படிப் பின்பு உள்ளார்க்கு உதவுகைக்காக எழுந்தருளியிருக்கும் இடம்.

---

1. அங்ஙனே அன்றிக்கே.
2. தலைக்கட்டுதல் - முடிதல். 3. கடக்க இருத்தல் - விலகி இருத்தல்.

**பைங் கண் இத்யாதி** - ஹிரண்யனைக் கண்ட நரஸிம்ஹத்துக்குச் சீற்றம் மாறாதாப் போலே, ஆனைகளைக் கண்ட ஸிம்ஹங்களுக்கும் சீற்றம் மாறாதே இருக்கும்படி. **பைங் கண்** - ஜாத்யுசிதமான பசுமையை உடைத்தாய் இருக்கும் ஆயிற்று. **கொம்பு கொண்டு** - ஆனையினுடைய மஸ்தகத்தைக் கிழித்து அதினுடைய கொம்பைப் பறித்து பகவத் பக்தியாலே திருவடிகளிலே இட்டு ஆஶ்ரயியாநிற்கும் ஆயிற்று ஸிம்ஹங்களானவை. "**யதந்நঃ புருஷோபவதி**" இறே. செங்கண் ஆளி பைங்கண் ஆனைக்கொம்பு கொண்டு பத்திமையால் அடிக் கீழ் இட்டு இறைஞ்சும். **செங் கண் ஆளி** - இவற்றுக்கு[1] ஆனைகளின் மேலே சீற்றம் மாறாதே இருக்கச்செய்தேயும், பகவத் பக்தி ஒருபடிப்பட்டுச் செல்லும் ஆயிற்று. சீற்றம் விக்ருதியாய், பகவத் பக்தி ப்ரக்ருதியாய் இருக்கும் ஆயிற்று.

---

**பைங் கண் ஆனைக் கொம்பு கொண்டு பத்திமையால் அடிக் கீழ்ச் செங் கண் ஆளி இட்டு இறைஞ்சும் சிங்கவேள் குன்றமே** - இரணியனைக் கண்ட நரசிங்கத்திற்குச் சீற்றம் மாறாதவாறு போலே, ஆனைகளைக் கண்ட சிங்கங்களுக்கும் சீற்றம் மாறாதே இருக்கும். **பைங் கண்** - கண்கள் யானைச் சாதிக்குத் தகுதியான பசுமையை உடையனவாய் இருக்கும். **கொம்பு கொண்டு** - ஆனையினுடைய தலையைக் கிழித்து அதனுடைய கொம்பைப் பறித்து இறையன்பாலே திருவடிகளிலே இட்டு வணங்கிநிற்கும் சிங்கங்களானவை. "**எந்த எந்த உயிர்களுக்கு எது எது உணவோ, அது அதனைக் கொண்டு அந்த அந்த உயிர்கள் தம் தெய்வங்களை வழிபாடு செய்யும்**" (ரா. அ. 103: 30) என்பர். அதற்குத் தகச் **செங்கண் ஆளி பைங்கண் ஆனைக்கொம்பு கொண்டு பத்திமையால் அடிக்கீழ் இட்டு இறைஞ்சும். செங் கண் ஆளி** - இவற்றுக்கு ஆனைகளின்மேலே சீற்றம் மாறாதே இருக்கச்செய்தேயும், இறையன்பு ஒருபடிப்பட்டுச் செல்வது ஆயிற்று. சீற்றம் செயற்கையாய், இறையன்பு இயற்கையாய் அமைந்தன.

## ஒப்புமைப் பகுதி

### 1. ஓர் ஆளரியாய்

*" ஓர் அரியாய் - நாட்டில் நடையாடும் ஸிம்ஹம் அன்று. தன்னுடைய இச்சையாலே பிறந்த ஸிம்ஹம் என்றுமாம். ஓரப்படும் அரியாய் - எல்லாரும் த்யாநம் பண்ணும் ஸிம்ஹம் என்றுமாம்"*

*மு. தி. 90 பெ. உரை.*

*[த்யாநம் - இடையறாது நினைக்கை]*

*" ஓர் அரி - தன்னாலும் இவ்வடிவு கொள்ள ஒண்ணாது. ஆகி - வர பலத்தாலே மிகைத்த ஹிரண்யனை அழிக்கைக்காகச் சேராத நரத்வஸிம்ஹத்வங்களைச் சேர்த்தபடி"* *பெ. ம. 100 பெ. உரை.*

*[நரத்வம் - மனிதத்தன்மை. ஸிம்ஹத்வம் - சிங்கத்தின் தன்மை.]*

### 2. வள்ளுகிரால் போழ்ந்த புனிதன்

*" உகிர் நுதியால் - 'அஸ்த்ர ஶஸ்த்ரங்களில் ஒன்றாலும் படக் கடவேன் அல்லேன்' என்று வரங் கொள்ளுகையாலே, அவற்றால் நிரஸிக்க போகா*

---

1. இவைத்துக்கு.

மையால் திருவாழி தொடக்கமானவையும் அழகுக்கு உடலாய் இருந்துவிட, திருவுகிரை ஆயுதமாகக் கொண்டு அதினுடைய கூர்மையாலே"

பெரி. தி. 4:9:8 ம. மா. மு. உரை.

[அஸ்த்ரம் - அம்பு. ஶஸ்த்ரம் - வாள். நிரஸிக்க - அழிக்க.]

" வள்ளுகிரால் - கூரிய உகிர்; வளைந்த உகிர் என்றுமாம் "

தி. வா. மொ. 9:3:7 - 36

" கூரார்ந்த வள்ளுகிரால் - கூர்மை மிக்குச் செறிந்த உகிர் "

சி. ம. 43 பெ. உரை.

**3. போழ்தல்**

" அவுணனுடல் கீண்ட - ......மங்கு நாரைக் கிழிக்குமா போலே கிழித்தபடி "

அம. 8 பெ. உரை.

" உடல் கீண்ட -......உலர்ந்த தாழைநாரைக் கிழித்தாப்போலே கிழித்தபடி "

அம். 8 நாயனார் உரை.

" கீண்டு -......அநாயாஸேந கிழித்தபடி " சி. ம. 43 பெ. உரை.

[அநாயாஸேந - எளிதாக]

பாட்டு 14 இன் ஒப்புமைப்பகுதி பார்க்க.

**4. செங்கண் ஆளி ஆனையைக் கொல்லுதல்**

" களிறு முகில்குத்த கையெடுத்தோடி
ஒளிறு மறுப்பொசிகை யாளி - பிளிறி
விழக்கொன்று நின்றதிரும் வேங்கடமே மேனாள்
குழக்கன்று கொண்டெறிந்தான் குன்று" மூ. தி. 71

" திருமலையில் பின்னை ஒன்றுக்கு ஒன்று பாதகமாகுமோ? என்னில் அக்நீஷோமீய ஹிம்ஸையோபாதியிறே அவற்றுக்கும்" என்னும் இதன் உரைப்பகுதி கருதத்தக்கது.

[திருமலையில் இருக்கும் உயிரினங்கள் ஒன்றை ஒன்று நலியுமோ எனில், அக்நீஷோமீய வேள்வியில் பலியிடப்படும் ஆட்டிற்குத் துறக்கமாகிய உயர் நிலை கிடைத்தலால் அது நலிவு ஆகாது. அதுபோலே இந்த இடத்தின் சிறப்பாலே இங்குக் கொல்லப்பட்ட யானையும் வீடு பேற்றினை அடைவதாலே இதுவும் கொலையாகாது என்றவாறு] (61)

## 62

அலைத்த பேழ்வாய் வாள்எ யிற்றோர்
கோளரி யாய்அவுணன்
கொலைக்கை யாளன் நெஞ்சி டந்த
கூர்உகிர் ஆளன்இடம்
மலைத்த செல்சாத் தெறிந்த பூசல்
வன்துடி வாய்கடுப்பச்
சிலைக்கை வேடர் தெழிப்ப றாத
சிங்கவேள் குன்றமே.

ப. ரை : அலைத்த பேழ் வாய் வாள் எயிற்று - *சீற்றத்தாலே நாக்கு அலைகின்ற பெரிய வாயையும், ஒளியை வீசுகின்ற பற்களையும் கொண்ட*, ஓர் கோள் அரியாய் - *ஒப்பற்ற மிடுக்கையுடைய சிங்கமாய் வடிவு தாங்கி*, கொலைக் கையாளன் அவுணன் நெஞ்சு இடந்த - *கொலையில் வல்லனான இரணியனது மார்பைக் கிழித்தெறிந்த*, கூர் உகிராளன் இடம் - *கூர்மையான நகங்களை யுடைய பெருமான் உறையும் இடம்*, மலைத்த செல் சாத்து - வேடரால் வழிமறிக் *கப்பட்ட வழிப்போக்கர் கூட்டம்*, எறிந்த பூசல் - எதிர்ந்து மோதிய போரின் கண்ணே, வல்வாய் துடி கடுப்ப - *வலிய வாயையுடைய பறையானது முழங்க*, சிலைக்கை வேடர் தெழிப்பு - *வில்லைக் கையிலே ஏந்திய வேடர் எழுப்பிய ஆரவாரமானது*, அறாத - *எப்போதும் மாறாத*, சிங்கவேள் குன்றம் - .

சி. கு : வாள் எயிறு - *ஒளியையுடைய எயிறு; இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை. வாள் போலும் எயிறு எனக் கொள்ளலும் ஆம்; அப்பொழுது உவமத்தொகை. மலைத்த என்பது செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த செய்வினை.*

வியா : இரண்டாம் பாட்டு : அலைத்த - சீற்றத்தாலே கடைவாய் களோடே நாக்கை எற்றிக்கொள்ளாநின்றுள்ள பெரிய வாயையும், ஒளியையுடைத் தான எயிற்றையுமுடைய அத்விதீயமான மிடுக்கை உடைத்தான ஸிம்ஹமாய். **அவுணன் கொலைக் கையாளன்** - நாட்டார் பரஹிம்ஸை பண்ணுவது தந்தா முடைய ப்ரஜைகளுடைய ரக்ஷணத்துக்காகவிறே. இவனுக்கு அதுபோய் ப்ரஜையை

---

வி : இரண்டாம் பாட்டு : அலைத்த பேழ்வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய் - *சீற்றத்தாலே கடைவாய்களோடே நாக்கை எற்றிக்கொள்ளும் பெரிய வாயையும், ஒளியைக் கொண்ட எயிற்றையும் பெற்ற இணையற்ற மிடுக்கையுடைய சிங்கமாய்.* அவுணன் கொலைக் கையாளன் நெஞ்சு இடந்த கூர் உகிராளன் இடம் - *நாட்டு மக்கள் மற்றவர்க்குத் துன்பம் இழைப்பது தத்தம் பிள்ளைகளைக் காப்பாற்றுவதற்காகவே. இவனுக்கு அது நீங்கிப் பெற்ற*

---

62. 4 : 5 சிங்கவேழ்.

ஹிம்ஸிக்குமது பலித்தது ஆயிற்று. பரஹிம்ஸை[1] பண்ணுகைக்கு தேவதைகள் பக்கலிலே வரம்பெற்று அதுதானே யாத்ரையாய்த் திரிகிற அஸுரனுடைய நெஞ்சை இடந்த கூரிய திருவுகிரை உடையவன் வர்த்திக்கிற ஸ்தாநம்.

**மலைத்த இத்யாதி** - திரள் திரளாகத் தீர்த்த யாத்ரை போகாநிற்பர்கள்; அவர்களைப் பறிக்கைக்காக அங்கு உள்ள[2] வேடர் வந்து மலைத்து மேல்விழுவர்கள்; இவர்களும் அவர்களோடே எதிர்ப்பர்கள். **எறிந்த பூசல்** - எறிதல் - இடுதல்; இட்ட பூசல். அவர்கள் இவர்களைச் சூறை கொள்ளுகிற பூசலிலே. **வன் துடி வாய் கடுப்ப** - கேட்ட போதே முடியும்படியான த்வநியை உடைத்தாய் இருக்கிற துடியானது கடுப்ப. **சிலைக் கை** - கையில் வில்லையுடையராய் இருந்துள்ள வேடருடைய ஆர்ப்பரவம்[3] மாறாத தேசம் ஆயிற்று; அவர்கள் கையில் பயாவஹமான துடியோசையும் பறிக்கிற ஆர்ப்பரவமுமேயாய்ச் செல்லாநிற்கும் ஆயிற்று. உகந்தருளின நிலங்களிலே உள்ளது ஆகையாலே அவர்கள் கையில் துடியோசையோடு அவர்களைப் பறிக்கிற த்வநியோடு வாசியற உத்தேஸ்யமாய் இருக்கிறது ஆயிற்று. நரஸிம்ஹத்தினுடைய சீற்றத்தோடு அங்கு உள்ளாருடைய சீற்றத்தோடு அவர்கள் வ்யாபாரத்தோடு வாசியற்று இருக்கிறது ஆயிற்று இவர்க்கு.

---

*பிள்ளையைத் துன்புறுத்துவதே நேர்ந்தது. பிறரைத் துன்புறுத்துவதற்குக் கடவுளர் பக்கலிலே வரம் பெற்று அதுவே பணியாய்த் திரியும் அவுணன் நெஞ்சை இடந்த கூரிய திருவுகிரை உடையவன் உறையும் இடம்.*

**மலைத்த செல் சாத்து** - *திரள் திரளாகப் புண்ணியத் துறைகள் ஆடப் பயணம் போவர்கள். அவர்களைப் பறிக்கைக்காக அங்குள்ள வேடர் வந்து மலைத்து மேல் விழுவர்கள்; இவர்களும் அவர்களோடே எதிர்ப்பர்கள்.* **எறிந்த பூசல்** - *எறிதல் - இடுதல்; இட்ட பூசல். அவர்கள் இவர்களைச் சூறை கொள்ளும் பூசலிலே.* **வன் துடி வாய் கடுப்ப** - *கேட்ட போதே முடியத்தக்க*[4] *ஒலியை உடைத்தாய் இருக்கும் துடியானது கடுப்ப*[5]. **சிலைக் கை வேடர் தெழிப்பு அறாத சிங்கவேள் குன்றமே** - *கையில் வில்லையுடையராய் இருக்கும் வேடரது ஆர்ப்பரவம் மாறாத இடம்; அவர்கள் கையில் உள்ள அச்சத்தை மூள்விக்கும் துடியின் ஓசையும் பறிக்கும் ஆர்ப்பரவமுமேயாய்ச் செல்லும். உகந்தருளிய நிலங்களிலே உள்ளன ஆகையாலே அவர்கள் கையில் துடியோசையோடு அவர்கள் பறிக்கும் ஆரவாரத்தோடு வேற்றுமையின்றி இவரால் பாடத்தக்கனவாய் இருக்கின்றன. ஆளரியின் சீற்றத்தோடு அங்குள்ளாருடைய சீற்றத்தோடு அவர்கள் செயல்களோடு அனைத்தும் வேற்றுமையின்றிக் கருதத்தக்கனவாய் இருக்கின்றன இவர்க்கு.*

### ஒப்புமைப் பகுதி

**சிலைக் கை வேடர் தெழிப்பு**

> *" தெழிகுரல் அருவித் திருவேங்கடத்து*
> *எழில்கொள்சோதி எந்தைதந்தை தந்தைக்கே "*

---

1. ப்ரஜையை ஹிம்ஸை. 2. உண்டான. 3. ஆரவாரம்.
4. முடியத்தக்க - உயிர் போகத்தக்க. 5. கடுப்ப - முழங்க.

*"தெழிகுரல் இத்யாதி - கம்பீரமான த்வநியை உடைத்தான அருவியை உடைய திரு அருவியின் த்வநியும்கூட உபாதேயமாய் இருக்கிறது ஆயிற்று இவர்க்கு. அந்நிலத்திலே உள்ளது ஒன்றாகையாலே. 'கைங்கர்ய ருசி யுடையார் அடிமைசெய்ய வாருங்கோள்' என்றாப்போலே இருக்கிறது ஆயிற்று. இவர்க்கு இத் த்வநி. இவர்க்கு இந்த திருஅருவியின் த்வநியும் கூட உத்தேச்யமாகச் சொல்லவேணுமோ? 'சிலைக்கைவேடர் தெழிப் பறாத' என்று அங்குத்தைத் திருவேடர் பறிக்கிறபோதை ஆரவாரமும் அகப்பட உத்தேச்யமாயிருக்கச் செய்தே. திருவேங்கடயாத்ரை போகிறவர்களைப் பறிக்கிற வேடருடைய ஆரவாரமும் உத்தேச்யமாய் இருக்கிறதிறே. அந்நிலத்திலுள்ளதாகையாலே"*

*தி. வா. மொ. 3:3:1- 36*

(62)

## 63

**ஏய்ந்த பேழ்வாய் வாள்எ யிற்றோர்**
**கோளரி யாய்அவுணன்**
**வாய்ந்த ஆகம் வள்ளு கிரால்**
**வகிர்ந்தஅம் மானதிடம்**
**ஓய்ந்த மாவும் உடைந்த குன்றும்**
**அன்றியும் நின்றழலால்**
**தேய்ந்த வேயும் அல்ல தில்லாச்**
**சிங்கவேள் குன்றமே.**

**ப. ரை :** **ஏய்ந்த பேழ் வாய் வாள் எயிற்று** - வடிவுக்குப் பொருத்தமாகப் பெருத்த வாயையும் ஒளியையும் உடைய, **ஓர் கோளரியாய்** - ஒப்பற்ற மிடுக்குப் பொருந்திய சிங்கமாய் வடிவுதாங்கி, **அவுணன் வாய்ந்த ஆகம்** - இரணியனுடைய வளர்ந்த உடலை, **வள் உகிரால் வகிர்ந்த** - கூர்மையான நகங்களால் கிழித்தெறிந்த, **அம்மானது இடம்** - பெருமானது இடம், **ஓய்ந்த மாவும்** - நீர்க்களிப்பற்ற நிலத்திலே திரிதலால் களைப்படைந்த விலங்குகளும், **உடைந்த குன்றும்** - உடைந்துபோன சிறுமலைகளும், **அன்றியும்** - இன்னமும், **நின்று அழலால் தேய்ந்த வேயும் அல்லது** - அங்குத் தோன்றித் தன்னிலே உண்டான நெருப்பாலே குறைக்கொள்ளியாய்க் கிடக்கும் மூங்கிலும் அன்றி, **இல்லா** - பிறிதொன்றும் இல்லாத, **சிங்கவேள் குன்றம்** - .

**சி. கு :** ஓய்ந்த மாவும் என்பதற்கு நில்த்தின் வெப்பத்தினால் பட்டுப் போன மாமரங்களும் என்று பொருள் கொள்ளலாம் என்பாரும் உண்டு.

---

63. 4 : 5 சிங்கவேழ்.

வியா : மூன்றாம் பாட்டு : **ஏய்ந்த இத்யாதி** - வடிவிற் பெருமைக்குத் தகுதியான பெரிய வாயையும். வாள்போலே இருந்துள்ள எயிறு என்னுதல்; ஒளியை யுடைத்தான எயிறு என்னுதல். **ஓர் கோளரியாய்** - மிடுக்கையுடைய அத்விதீய நரஸிம்ஹமாய், அவுணனுடைய - ஆஸுர ப்ரக்ருதியானவனுடைய, வாய்ந்த ஆகம் உண்டு நரஸிம்ஹத்துக்குத் தகுதி ஆம்படி வளர்ந்த சரீரம், அத்தைக் கூரிய உகிராலே வகிர்ந்த ஸர்வேச்வரனுடைய ஸ்தாநம்.

**ஒய்ந்த மாவும்** - தளர்ந்த, பசையற்ற நிலத்தின் ஸஞ்சாரத்தாலே அந் நிலத்துக்கு அடைத்த திர்யக்குக்களும் ஓய்ந்திருக்குமதாயிற்று. **உடைந்த குன்றும்**- தொட்டாரோடே தோஷமாம்படி தீக்கதுவி உடைந்த குன்றும், அதுக்கு மேலே, தன்னிலே உண்டான அழலாலே தேய்ந்த மூங்கிலும் அல்லது இல்லாத சிங்கவேள் குன்றமே. தன்னிலே உண்டான நெருப்பாலே தேய்ந்த வேய்களும் "**வண்டினம் முரலும் சோலை**"யோபாதியாகத் தோற்றுகிறது ஆயிற்று இவர்க்கு. "**அது இது உது என்னல் ஆவன அல்ல**" என்னக் கடவதிறே. பிறர்க்குக் குற்றமாய்த் தோற்றுமவையும் உபாதேயமாய்த் தோற்றுகையிறே ஒரு விஷயத்தை உகக்கையாகிறது.

---

வி : மூன்றாம் பாட்டு : **ஏய்ந்த பேழ் வாய் வாள் எயிற்று** - வடிவின் பெருமைக்குத் தகுதியான பெரிய வாயையும். வாள் எயிறு என்பதற்கு வாள் போலே இருக்கும் எயிறு என்றாதல், ஒளியையுடைத்தான எயிறு என்றாதல் பொருள் கொள்க. **ஓர் கோளரியாய்** - மிடுக்கையுடைய இணையற்ற ஆளரியாய். **அவுணன் வாய்ந்த ஆகம் வள் உகிரால் வகிர்ந்த அம்மானது இடம்** - ஆளரிக்குத் தகுதியாக வளர்ந்த அசுரனது உடம்பைக் கூரிய உகிராலே வகிர்ந்த பெருமானு டைய இடம்.

**ஓய்ந்த மாவும்** - தளர்ந்த, பசையற்ற நிலத்தின்கண் திரிதலாலே அந் நிலத்துக்கு அடைத்த[1] விலங்குகளும் ஓய்ந்திருக்கும். **உடைந்த குன்றும்** - தொட்டா ரோடே பழிசேரும்படி[2] தீக்கதுவி உடைந்த குன்றும். **அன்றியும் நின்று அழலால் தேய்ந்த வேயும் அல்லது இல்லாச் சிங்கவேள் குன்றமே** - அதற்கு மேலே, தன்னிலே[3] உண்டான அழலாலே தேய்ந்த மூங்கிலும் அல்லது இல்லாத சிங்கவேள் குன்றமே. தன்னிலே உண்டான நெருப்பாலே தேய்ந்த வேய்களும், "**வண்டினம் முரலும் சோலை**" (தி. மா. 14) போலத் தோற்றுகின்றன இவர்க்கு.

> "அது இது உது என்னல் ஆவன அல்ல;
> என்னை உன் செய்கை நைவிக்கும்" (தி. வா. மொ. 5:10:2)

என்பர் நம்மாழ்வார். பெருமானுடைய வரலாறு எதுவாயினும் அது நம்மாழ்வா ருடைய நெஞ்சினை நைவித்தல் போலே, அவன் உறையும் இடங்களில் உள்ள எப் பொருளும் இவர்க்குக்கொள்ளத் தக்கதாய் இருக்கிறது. பிறர்க்குக் குற்றமாய்த் தோற்றுவதும் கொள்ளத் தகும் நற்றமாய்த் தோற்றுவது அன்றோ ஒன்றினை உகக்கை ஆகும். (63)

---

1. அடைத்த - உரிய. 2. தொட்டாரோடே பழி சேருதல் - முன்பே உடைந்த நிலையில் யாரேனும் தொட்டால் உடனே உடைந்து தொட்டதனால் உடைந்துபோயிற்று என்று தொட்டார்க்குப் பழி வந்து அடைதல். 3. தன்னில் - தன்னிடத்தில்.

## 64

எவ்வும் வெவ்வேல் பொன்பெ யரோன்
ஏதலன் இன்உயிரை
வவ்வி ஆகம் வள்ளு கிரால்
வகிர்ந்தஅம் மானதிடம்
கவ்வும் நாயும் கழுகும் உச்சிப்
போதொடு கால்சுழன்று
தெய்வம் அல்லால் செல்ல ஒண்ணாச்
சிங்கவேள் குன்றமே.

ப. ரை : எவ்வும் வெவ் வேல் - *துன்பத்தைச் செய்யும் கொடுமையான வேலையுடைய*, பொன் பெயரோன் ஏதலன் - *இரணியன் ஆகிய பகைவனுடைய*, இன் உயிரை வவ்வி - *இனிமையான உயிரைக் கவர்ந்து*, ஆகம் வள் உகிரால் வகிர்ந்த - *அவனுடைய உடலைக் கூர்மை பொருந்திய நகங்களால் கிழித்தெறிந்த*, அம்மானது இடம் - *பெருமானுடைய உறைவிடம்*, கவ்வும் நாயும் கழுகும் - *கண்டவர்களை எல்லாம் கடிக்கும் நாய்களும் கொத்தும் கழுகுகளும்*, உச்சிப் போதொடு- *கதிரவனோடு கூட*, கால் சுழன்று - *கால்கள் தடுமாறித் திண்டாட*, தெய்வம் அல்லால் செல்ல ஒண்ணா - *கடவுளர் தவிர மற்றையோர் சென்று கிட்ட முடியாததான* சிங்கவேள் குன்றம்-.

சி. கு : எவ்வும் வெவ் வேல் - *வருத்தும் கொடிய வேல்; பெயரெச்சத் தொடர். பொன் பெயரோன் என்பது இரணியன் என்பதன் தமிழாக்கம். உச்சிப்போது என்பது அதனைச் செய்யும் ஞாயிற்றுக்கு ஆகி வந்தது. ஏதலன் - பகைவன்.*

வியா : நாலாம் பாட்டு : **எவ்வும் வெவ் வேல் பொன் பெயரோன்** - கையும் வேலுமாய் இருக்கிற இருப்பைக் கண்ட காட்சியிலே, அது உடம்பிலே தைத்தால் பிறக்கும் துஃக்கம் எல்லாம் பிறக்கும்படி இருக்கை. எவ்வத்தைப் பண்ணா நின்றுள்ள வெவ்விய வேலையுடைய, பொன் பெயரோன் உண்டு ஹிரண்யன். எவ்வம் - துஃக்கம். ஏதலன் - சத்ரு. சிறுக்கனுக்கு சத்ருவானபோதே தனக்கும் சத்ருவாய் இருக்கிறான் ஆயிற்று. "சத்ரு க்ருஹத்தில் புஜிக்கவும் ஆகாது" என்றா

---

வி : நாலாம் பாட்டு : எவ்வும் வெவ் வேல் பொன் பெயரோன் - *கையும் வேலுமாய் இருக்கும் இருப்பைக் கண்ட காட்சியிலே, அது உடம்பிலே தைத்தால் பிறக்கும் வருத்தம் எல்லாம் பிறக்கும்படி இருக்கை. எவ்வத்தைப் பண்ணும் வெவ்விய வேலையுடைய பொன் பெயரோன் என்பான் இரணியன் ஆவான். எவ்வம் - வருத்தம். ஏதலன் - பகைவன். சிறுக்கனுக்குப்*[1] *பகைவனானபோதே தனக்கும் பகைவனானான். "பகைவன் இல்லத்தில் உணவு கொள்ளல் ஆகாது"*

---

**64.** 1 : 1 எவ்வம். 3 : 1 கவ்வு. 4 : 5 சிங்கவேழ்.

1. சிறுக்கன் - சிறுவன்; ஈண்டுப் பிரகலாதன்.

ணிறே. பாண்டவர்களுக்கு சத்ருவான போதே தனக்கும் சத்ருவானபடி. அவனுடைய **இன் உயிரை** - அவன் விரும்பின உயிரை. **வவ்வி** - பரிக்ரஹித்து. **"பபௌ ஜநார்தநஃ க்ருத்தஃ"** என்கிறபடியே.

**கவ்வு நாயும்** - ஆரேனுமாகக்[1] கண்டபோதே கவ்வியல்லது நில்லாத நாயும் அப்படி கவ்வும் கழுகும். **உச்சிப் போதொடு கால் சுழன்று** - ஆதித்யனும் அந் நிலத்திலே வந்தவாறே கால்தடுமாறிச் சுழன்று வாராநிற்கும் ஆயிற்று. உச்சிப்போது உண்டு ஆதித்யன்; அவனோடே கூடக் கவ்வு நாயும் கழுகுமாகக் கால்சுழன்று வாராநிற்கும் என்னுதல். அன்றிக்கே, உச்சிப்போதோடே, கால் உண்டு காற்று, அது சுழன்று வாராநிற்கும். நிலவெம்மையைச் சொன்னபடி. அத்தேசத்தைச் சென்று ப்ராபிக்க ஆசைப்படுகிறவர், "தெய்வம் அல்லால் செல்ல ஒண்ணா" என்கிறார் ஆயிற்று, நரஸிம்ஹத்தினுடைய அழகைக்கண்டு கண்ணெச்சில் படுவார் இல்லை என்னுமத்தைப் பற்ற. **"அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்தவனைப் பல்லாண்டு"** என்னுமவர்களிறே. அநாஶ்ரிதர்க்குச் சென்று

---

*என்று சொன்னான் அன்றோ. கண்ணபிரான் துரியோதனன் பாண்டவர்களுக்குப் பகைவனானபோதே தனக்கும் பகைவனானான் என்று கருதியது போல இங்கும் இரணியன் பிரகலாதனுக்குப் பகைவனானபோதே தனக்கும் பகைவனானான் என்று கருதினான்.* **இன் உயிரை வவ்வி ஆகம் வள் உகிரால் கவர்ந்த அம்மானது இடம்** - *அவனுடைய இன்னுயிரை; அவன் விரும்பிய உயிரை.* **வவ்வி** - *கவர்ந்து.* **"இறைவன் சீற்றமுடையவனாய்ச் சூறை என்னும் அந்தக் காற்றினை விழுங்கி விட்டான்; அந்தக் காற்று அழிவுற்றது"** (வி. பு. 1: 19: 24) *என்பர். இறைவன் அக்காற்றினை விழுங்கியதுபோல ஈண்டு உயிரினைக் கவர்ந்தான் என்க.*

**கவ்வு நாயும் கழுகும்** - *யாராக இருந்தாலும் கண்டபோதே கவ்வி அல்லது நில்லாத நாயும், அப்படிக் கவ்வும் கழுகும்.* **உச்சிப் போதொடு கால் சுழன்று** - *கதிரவனும் அந்நிலத்திலே வந்தவாறே கால்தடுமாறிச் சுழன்று வருவான். உச்சிப் போது - கதிரவன்; அவனோடே கூடக் கவ்வு நாயும் கழுகுமாகக் கால் சுழன்று வரும். அல்லது உச்சிப்போதோடே காற்றுச் சுழன்று வரும் என்றுமாம்[2]. கால் - காற்று. நிலத்தின் வெம்மையைச் சொன்னபடி.* **தெய்வம் அல்லால் செல்ல ஒண்ணாச் சிங்கவேள் குன்றமே** - *அவ்இடத்தைச் சென்று அடைவதற்கு விரும்பும் ஆழ்வார், ஆளரியினுடைய அழகைக் கண்டு கண் எச்சில் படுவார்[3] அங்கு இல்லை என்னும் அதனைக் கருதித் "தெய்வம் அல்லால் செல்ல ஒண்ணா" என்று அதன் அருமை தோற்ற அருளிச்செய்கிறார். இவ்வாறு பாடக் காரணம்,* **"அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்தவனைப் பல்லாண்டு"** (தி. பல். 6) *என்று பல்லாண்டு பாடுபவர்கள் அன்றோ இவ் ஆழ்வார்கள்! ஆதலின் தீயவர் அங்கு*

---

1. ஆரேனையுமாகக்.
2. முதற் பொருளில் கால் என்பது காலடியினையும் இரண்டாவது பொருளில் காற்றினையும் குறித்தது. 3. கண் எச்சில் படுவார் - பொறாமைப்படுவார்; ஈண்டு அசுரர்கள்.

**கிட்ட ஒண்ணாது[1] ஆயிற்று. ஹிரண்யன் போல்வார்க்குச் சென்று ப்ரவேசிக்கப் போகாது ஆயிற்று.**

---

*இல்லை என்று மகிழ்கிறார். அவ்இடம் அடியார் அல்லார்க்குச் சென்று கிட்ட ஒண்ணாதது. இரணியன் போல்வார்க்குப் புக முடியாதது.* (64)

## 65

**மென்ற பேழ்வாய் வாள்எ யிற்றோர்**
**கோளரி யாய்அவுணன்**
**பொன்ற ஆகம் வள்ளு கிரால்**
**போழ்ந்த புனிதனிடம்**
**நின்ற செந்தீ மொண்டு சூறை**
**நீள்விசும் பூடிரியச்**
**சென்று காண்டற் கரிய கோயில்**
**சிங்கவேள் குன்றமே.**

**ப. ரை :** மென்ற பேழ்வாய் வாள் எயிற்று - *சீற்றத்தாலே மெல்லுகின்ற பெரிய வாயையும், வாள்போலே இருக்கின்ற பற்களையும் உடைய,* **ஓர் கோள் அரியாய்** - *ஒப்பற்ற மிடுக்கையுடைய சிங்கமாய் வடிவு கொண்டு,* **பொன்ற அவுணன் ஆகம்** - *தன்னைக் கண்ட அளவிலேயே மாண்டொழிந்த இரணியனுடைய உடலை,* **வள் உகிரால்** - *கூர்மையான நகங்களாலே,* **போழ்ந்த புனிதன் இடம்** - *இரு பிளவாம்படி செய்த தூயவன் உறையும் இடம்,* **நின்ற செந் தீ** - *குறைவற்றுக் கிடக்கும் சிவந்த நெருப்பை,* **சூறை மொண்டு** - *சுழற்காற்றானது வாரிக் கொண்டு,* **நீள் விசும்பு ஊடு இரிய** - *பரந்த வானத்தின்கண்ணே சிதறி ஓடுவதால்,* **சென்று காண்டற்கு** - *கிட்டிச் சென்று வணங்குவதற்கு,* **அரிய கோயில்** - *அரிதாக இருக்கும் கோயிலாகிய,* **சிங்கவேள் குன்றம்** - .

**சி. கு :** *பொன்ற - முடிந்து போக. சூறை - சூறாவளிக்காற்று.*

**வியா :** **ஐந்தாம் பாட்டு : மென்ற இத்யாதி - சீற்றத்தாலே மடித்த பெரிய வாயையும், வாள் போலே இருந்துள்ள எயிற்றையும் மிடுக்கையும் உடைய அத்விதீய நரஸிம்ஹமாய். அவுணன் பொன்ற - நரஸிம்ஹத்தினுடைய தோற்றரவிலே**

---

**வி : அஞ்சாம் பாட்டு :** மென்ற பேழ் வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய் - *சீற்றத்தாலே மடித்த பெரிய வாயையும், வாள்போலே இருக்கும் எயிற்றையும் மிடுக்கையும் உடைய இணையற்ற நரசிங்கமாய்.* **அவுணன் பொன்ற** - *ஆளரி*

---

1. உண்ணாது.

65 3 : 6 பூடெரியச். 4 : 5 சிங்கவேழ்.

பிணமானான் ஆயிற்று. **ஆகும் இத்யாதி** - பின்னையும் சீற்றம் மாறாமையாலே பிணத்திலே வ்யாபரித்தான் இத்தனை ஆயிற்று. **புனிதன் இடம்** - பிறர்க்கு உப கரித்தானாய் இருக்கை அன்றிக்கே தன் விரோதியைப் போக்கின சுத்தியோகத்தை நினைக்கிறது ஆயிற்று.

**நின்ற இத்யாதி** - குறைவற்றுக் கிடக்கும் ஆயிற்று அக்நி. அத்தை முகந்து கொண்டு, சுழல்காற்று பரப்பை உடைத்தான ஆகாசத்திலே, **இரிய** - அங்கே சிதறவோடி ஆர்ப்பரவத்தைப் பண்ண[1] என்னுதல்; **'எரிய'** என்றது ஆகில் ஆகாசந்தானே இந்தளமாக[2] எளிய என்றபடி. **சென்று** - இப்படி இருக்கையாலே ஒருவர்க்கும் சென்று காண்கைக்கு அரிதாய் இருக்கும் ஆயிற்று, பரமபதத்தோபாதி இந்நிலத்துக்கும் நமக்கு பயப்பட வேண்டா என்று ஹ்ருஷ்டர் ஆகிறார்.

---

*யினுடைய தோற்றரவிலே[3] பிணமானான்.* **ஆகம் வள் உகிரால் போழ்ந்த** - *பின்னையும் சீற்றம் மாறாமையாலே பிணத்தையே போழ்ந்தான் என்கிறார்.* **புனிதன் இடம்** - *பிறர்க்கு உதவியவனாக இருக்கை அன்றிக்கே தன் பகையைப் போக்கின தூய்மையோடு இருப்பவன் என்பதனை நினைவு கூர்கிறார்.*

**நின்ற செந் தீ மொண்டு சூறை நீள் விசும்பு ஊடு இரிய** - *குறைவற்றுக் கிடக்கிறது தீ. அதனைச் சுழற்காற்று முகந்துகொண்டு, பரப்பையுடைய வானத்திலே சிதறி ஓடி, ஆர்ப்பரவத்தைப் பண்ண. இரிய - சிதறி ஓடி. 'எரிய' என்று பாடமாகில் வானமே இந்தளமாக[4] எரிய என்றபடி.* **சென்று காண்டற்கு அரிய கோயில்** - *இப்படி இருக்கையாலே ஒருவர்க்கும் சென்று காண்கைக்கு அரிதாய் இருக்கும். திருநாட்டைக் குறித்து அதற்கு என்ன தீங்கு நேருமோ என்று அஞ்சவேண்டாத வாறு போலே இந்நிலத்தைக் குறித்தும் நாம் அஞ்ச வேண்டா. என்று மனமகிழ் கிறார்.*

(65)

## 66

எரிந்த பைங்கண் இலங்கு பேழ்வாய்
எயிற்றொடி தெவ்வுருஎன்று
இரிந்து வானோர் கலங்கி ஓட
இருந்தஅம் மானதிடம்
நெரிந்த வேயின் முழையுள் நின்று
நீள்நெறி வாய்உழுவை
திரிந்த ஆனைச் சுவடு பார்க்கும்
சிங்கவேள் குன்றமே.

---

1. பண்ணி. 2. இந்தநமாக.
3. தோற்றரவு - வெளிப்பாடு; தோற்றம். 4. இந்தளம் - எரியும் இடம்.

**66.** 4 : 5 சிங்கவேழ்.

**ப. உரை :** **எரிந்த பைங் கண்** - சீற்றத்தாலே எரிகின்ற பசுமையான கண்களோடும், **இலங்கு பேழ் வாய்** - விளங்குகின்ற பெரிய வாயோடும், **எயிற்றொடு** - பற்களோடும் கூடியிருக்கும் வடிவைக் கண்டு, **இது எவ் உரு என்று** - "இது, என்ன வடிவு" என்று நடுங்கி, **வானோர் இரிந்து கலங்கி ஓட** - தேவர்கள் அங்குமிங்கும் சிதறிக் கால்தடுமாறி ஓடும்படியாக, **இருந்த அம்மானது இடம்** - எழுந்தருளியிருந்த பெருமானுடைய இடம், **நெரிந்த வேயின் முழையுள் நின்று** - ஒன்றோடு ஒன்று சேர்ந்திருக்கும் மூங்கிலின் துளை வழியாக, **உழுவை** - புலி களானவை, **நீள் நெறிவாய் திரிந்த** - பெரிய வழியிலே திரிகின்ற, **ஆனைச் சுவடு பார்க்கும்** - ஆனைகள் போன தடத்தினை ஆராய்ந்து பார்க்கும், **சிங்கவேள் குன்றம்** -.

**சி. கு :** வேய் - மூங்கில். உழுவை - புலி. ஆனை - யானை என்பதன் மரூஉ.

**வியா :** **ஆறாம் பாட்டு :** **எரிந்த இத்யாதி** - சீற்றத்தாலே எரியா நிற்பதாய் ஜாதி ப்ரயுக்தமான பசுமையை உடைத்தான கண்ணையும், உஜ்ஜ்வலம் ஆகாநின்றுள்ள பெரிய வாயையும், எயிற்றையும் உடைய வடிவைக் கண்டு. **இது எவ் உரு என்று** - "இற்றைக்கு முன்பு கண்டறியாதது ஒன்றாய் இராநின்றது; இதென்ன வடிவு" என்று அஞ்சி, தேவர்களானவர்கள் ஆர்ப்பரவத்தைப் பண்ணி, அங்கே இங்கே சிதறிக் கால் தடுமாறி ஒருவர் புக்க இடத்திலே ஒருவர் புகாதே ஓடும்படியாய் இருந்த ஸர்வேஶ்வரனுடைய ஸ்தாநம்.

**நெரிந்த இத்யாதி** - நெருக்கத்தாலே ஒன்றோடு ஒன்று இழைந்து நெரிந்து உள்ள[1] மூங்கில் துளைவழியே; அந்த த்வாரத்தாலே. உழுவை உண்டு புலி; அது நீள் நெறிவாயிலே - பெருவழியிலே, ஸஞ்சரியாநின்றுள்ள. **ஆனைச் சுவடு பார்க்கும்** - ஆனையினுடைய மஸ்தகத்தைப் பிளந்து அத்தைப் பாநம் பண்ணுகைக்

---

**வி :** **ஆறாம் பாட்டு :** **எரிந்த பைங் கண் இலங்கு பேழ் வாய் எயிற்றொடு** - சீற்றத்தாலே எரிவதாய் அரி இனத்திற்கு அடைத்த பசுமையை உடைத்தாய் இருக்கும் கண்ணையும், ஒளி உமிழும் பெரிய வாயையும், எயிற்றையுமுடைய வடிவைக் கண்டு. **இது எவ் உரு என்று இரிந்து வானோர் கலங்கி ஓட இருந்த அம்மானது இடம்** - "இற்றைக்கு முன்பு[2] கண்டறியாதது ஒன்றாய் இருக்கிறது; இது என்ன வடிவு!" என்று அஞ்சித் தேவர்கள் ஆர்ப்பரவத்தைப் பண்ணி அங்கே இங்கே சிதறிக் கால்தடுமாறி ஒருவர் புக்க இடத்திலே ஒருவர் புகாதே ஓடும்படியாய் இருந்த பெருமானுடைய இடம்.

**நெரிந்த வேயின் முழையுள் நின்று நீள் நெறிவாய் உழுவை திரிந்த** - நெருக் கத்தாலே ஒன்றோடு ஒன்று இழைந்து நெரிந்து உள்ள மூங்கில் துளை வழியே; அஃதாவது அதன் இடுக்கு வழியாக. உழுவை - புலி; அது பெருவழியிலே திரிகின்ற. **ஆனைச் சுவடு பார்க்கும்** - ஆனைகளின் தலையைப் பிளந்து அவற்றின் குருதியைக்

---

1. இருந்துள்ள.
2. இற்றைக்கு முன்பு - இந்த நாள் வரை; இதற்கு முன்னர்.

காக அவை போகிற பெரு வழியிலே அவற்றைச்[1] சுவடு ஒற்றி[2] நிற்கும் ஆயிற்று, ஆஸுர ப்ரக்ருதிகளாய் இருப்பாரை அழியச் செய்கைக்கு நரஸிம்ஹம் அடிச்சுவடு ஒற்றுமாப் போலே[3].

---

*குடித்தற்காக அவை போகும் பெருவழியிலே அவற்றைச் சுவடு ஒற்றி நிற்கும்[4], அவுணராய் இருப்பாரை அழியச் செய்கைக்கு ஆளரி அடிச்சுவடு ஒற்றுமாறு போலே. பெருமான் உறையும் இடம் அத்தகைய சிங்கவேள் குன்றம் ஆகும்.*

*(66)*

## 67

**முனைத்த சீற்றம் விண்சு டப்போய்**
**மூவுல கும்பிறவும்**
**அனைத்தும் அஞ்ச ஆள ரியாய்**
**இருந்தஅம் மானதிடம்**
**கனைத்த தீயும் கல்லும் அல்லா**
**வில்லுடை வேடருமாய்த்**
**தினைத்த னையும் செல்ல ஒண்ணாச்**
**சிங்கவேள் குன்றமே.**

ப. ரை : முனைத்த சீற்றம் போய் விண் சுட - *மிக்க சினமானது பெருகிச் சென்று வானத்தைக் கொளுத்தவும்,* மூவுலகும் பிறவும் அனைத்தும் அஞ்ச - *மூன்று உலகத்தவர்களும் பிற உலகத்தவர்களும் நடுங்கவும்,* **ஆள் அரியாய் இருந்த அம்மானது இடம்** - *நரசிங்கமூர்த்தியாய் இருந்த பெருமானது இடம்,* **கனைத்த தீயும் கல்லும்** - *எரியும்போது ஒலிக்கின்ற நெருப்பும், அந்நெருப்பினால் வேகின்ற கற்களும்,* அல்லா வில்லுடை வேடருமாய் - *இவற்றைக் காட்டிலும் கொடுமையான வில்லைக் கையில் கொண்டுள்ள வேடர்களும் நிறைந்து இருப்பதனாலே,* **தினைத்தனையும் செல்ல ஒண்ணா** - *அடியார் அல்லாதார் ஒரு நொடிப் பொழுதும் கிட்ட முடியாத,* சிங்கவேள் குன்றம் -.

சி. கு : *கனைத்தல் - ஒலித்தல். தினைத்தனை - தினையளவு; தினை - அளவுப் பெயர்.*

வியா : ஏழாம் பாட்டு : **முனைத்த இத்யாதி** - மிக்க சீற்றமானது போய் அந்தரிக்ஷத்தைச் சுட. **மூவுலகும் இத்யாதி** - த்ரைலோக்யமும் ப்ரஹ்மாதி

---

வி : ஏழாம் பாட்டு : முனைத்த சீற்றம் விண் சுடப் போய் - *மிக்க சீற்றமானது போய் வானத்தைச் சுட.* மூவுலகும் பிறவும் அனைத்தும் அஞ்ச ஆளரியாய்

---

1. அவைத்தைச். 2. சுவடொத்தி. 3. அடிச்சுவடொத்துமா போலே.
4. சுவடு ஒற்றி நிற்றல் - சென்றவழியை ஆராய்ந்துகொண்டு நிற்றல்.

67 2 : 3 வாள. 4 : 5 சிங்கவேழ்.

களுடைய குடியிருப்பும் எங்கும் ஒக்க அஞ்சும்படியாக. ஆண்மையுடைய என்னுதல், மநுஷ்யத்வமும் ஸிம்ஹத்வமும் கலந்திருக்கையைச் சொல்லிற்றாதல்.

**கனைத்த** - த்வநியாநின்றுள்ள **அக்நியும்** - எரிகிற போதை வெடுவெடு என்கிற த்வநியை உடைத்தான அக்நியும், அதிலே வைக்கோல்போர் போலே[1] வேகிற கல்லும். **அல்லா இத்யாதி** - இங்ஙன் எரிகிற நெருப்பிலும் கல்லிலும் அடியிடலாம்; அங்குத்தை வேடர் முகத்தில் விழிக்க ஒண்ணாது[2] ஆயிற்று. அவர்களுடைய க்ரௌர்யம் இருந்தபடி. **தினைத்தனையும்** - உகவாதார்க்குக் கண்ணாலே காணலாம்படி சென்று கிட்டிக் கண்ணெச்சில்பட ஒண்ணாதபடி இருந்த தேசம் ஆயிற்று.

---

**இருந்த அம்மானது இடம்** - *மூன்று உலகங்களும், பிரமன் முதலானோர் குடியிருப்பும் எங்கும் ஒக்க அஞ்சும்படியாக. ஆள் அரி என்பதனால் ஆண்மையையுடையது என்றாதல், மானிட இயல்பும் சிங்கத்தின் இயல்பும் கலந்திருத்தலைச் சொல்லிற்று என்றாதல் கொள்க.*

**கனைத்த தீயும் கல்லும்** - *ஒலிக்கின்ற நெருப்பும், அஃதாவது எரியும் போது வெடுவெடு என்னும் ஒலியையுடைய நெருப்பும், அதிலே வைக்கோல் போர்போலே வேகும் கல்லும்.* **அல்லா வில்லுடை வேடருமாய்** - *இங்ஙன் எரியும் நெருப்பிலும் கல்லிலும் அடியிடலாம்; ஆனால் அங்குள்ள வேடர் முகத்தில் விழிக்க ஒண்ணாது. அவர்களுடைய இரக்கமற்ற தன்மை அத்தன்மைத்து.* **தினைத்தனையும் செல்ல ஒண்ணாச் சிங்கவேள் குன்றம்** - *உகவாதார்க்குக் கண்ணாலே காணலாம்படி சென்று கிட்டிக் கண்ணெச்சில்பட[3] ஒண்ணாதபடி இருக்கும் இடம்.* (67)

## 68

**நாத்த ழும்ப நான்மு கனும்**
**ஈசனு மாய்முறையால்**
**ஏத்த அங்கோர் ஆள ரியாய்**
**இருந்தஅம் மானதிடம்**
**காய்த்த வாகை நெற்றொ லிப்பக்**
**கல்லதர் வேய்ங்கழைபோய்த்**
**தேய்த்த தீயால் விண்சி வக்கும்**
**சிங்கவேள் குன்றமே.**

**ப. ரை : நாத் தழும்ப** - *நாக்குத் தழும்பேறும்படி,* **நான்முகனும் ஈசனுமாய்** - *நான்முகத்தவன் ஆகிய பிரமனும், சிவனும் ஒன்று கூடி,* **முறையால்**

---

1. அவ் அக்நியாலே திருணம் போலே. 2. உண்ணாது.
3. கண்ணெச்சில் படுதல் - தீய பார்வை படுதல்.

68 1 : 3 - 4 நாஅன் முகனும். 4 : 5 சிங்கவேழ்.

**ஏத்த** - *தமக்குரிய முறைமைப்படி வணங்க*, **அங்கு ஓர் ஆளரியாய் நின்ற அம்மானது இடம்** - *அவ் இடத்தில் ஒப்பற்ற நரசிங்கமூர்த்தியாய் எழிந்தருளியிருந்த பெருமானது இடம்*, **காய்த்த வாகை நெற்று ஒலிப்ப** - *காய்கள் நிறைந்த வாகை மரங்களின் நெற்றுகள் ஓசை எழுப்ப*, **கல் அதர் வேய்ங்கழை போய்** - *பாறை வழிகளிலே முளைத்த குழல் மூங்கில் மரங்கள் விண்ணை அளாவி வளர்ந்து சென்று*, **தேய்த்த தீயால் விண் சிவக்கும்** - *ஒன்றோடு ஒன்று உராய்வதனால் எழுந்த நெருப்பினால் வானம் சிவந்து கிடக்கின்ற*, **சிங்கவேள் குன்றம் –**.

**சி. கு :** *நாத்தழும்ப என்பதனால் இடையறாது பராவிநின்றமை போதரும்.*

**வியா : எட்டாம் பாட்டு : நா இத்யாதி** - நாவானது தழும்பேறும்படியாக சதுர்முகனும், தேவர்களில் தலையான[1] ருத்ரனும், முன்பு ஹிரண்யனுக்கு அஞ்சி மநுஷ்ய வேஷங்கொண்டு திரிந்தவர்கள், அவன் பட்ட பின்பு தந்தாமுடைய தரம் குலையாதபடி முறையாலே வந்து சேஷித்வ[2] ப்ராப்தியாலே ஸ்தோத்ரம் பண்ண; அவர்களுக்கு ஸ்துத்யனாய்க்கொண்டு அவ்இடத்திலே இதுக்கு முன்பு அநுபவித்து அறியாத நரஸிம்ஹமாய்க்கொண்டு இருக்கிற ஸர்வேஶ்வரனுடைய ஸ்தாநம்.

**காய்த்த இத்யாதி** - காய்த்த வாகைகளிலே நெற்றானது த்வநிப்ப. பாலை நிலத்துக்கு அடைத்த வ்ருக்ஷங்களில் இவையும் சொல்லக்கடவதிறே. **கல் அதர் வேய்ங்கழை போய்** - கழை என்று மூங்கிலாய், அதர் என்று வழிக்குப் பேர். கல்வழியிலே எழுந்த வேய்ங்கழை உண்டு குழல் மூங்கில். அது அந்தரிக்ஷத்தளவும் வளர்ந்து தன்னிலே இழைந்து அத்தாலே உண்டான அக்நியானது, மேகத்தாலே

---

**வி : எட்டாம் பாட்டு : நாத் தழும்ப நான்முகனும் ஈசனுமாய் முறையால் ஏத்த அங்கு ஓர் ஆளரியாய் இருந்த அம்மானது இடம்** - *நாவானது தழும்பேறும் படியாக முன்பு இரணியனுக்கு அஞ்சி மனித உருக்கொண்டு திரிந்தவர்களான நான்முகனும், தேவர்களில் தலையான உருத்திரனும், அவன் பட்ட பின்பு தத்தம் தரம் குலையாதபடி முறையாலே வந்து பெருமான் ஆண்டவனாக இருத்தலினால் தாம் வணங்கவேண்டும் என்னும் உரிமைபற்றிப் போற்றி செய்கிறார்கள்; அவர் களுக்குப் பரவப்படுபவனாய்த் தன்னை அமைத்துக்கொண்டு அவ்இடத்திலே இதற்கு முன்பு பார்த்து அறியாத ஆளரியாய் உருவங்கொண்டு இருக்கிறான் பெருமான்.*

*அப்பெருமானுடைய இடம் யாது எனில்,* **காய்த்த வாகை நெற்று ஒலிப்ப** - *காய்த்த வாகைகளில் நெற்று ஒலிக்க. பாலை நிலத்துக்கு அடைத்த[3] மரங்களில் இவற்றையும் சொல்வர்.* **கல் அதர் வேய்ங்கழை போய் தேய்த்த தீயால் விண் சிவக்கும் சிங்கவேள் குன்றம்** - *கழை என்பது மூங்கிலாய், அதர் என்பது வழிக்குப் பெயராய்க் கல்வழியிலே எழுந்த வேய்ங்கழை என்பது குழல் மூங்கிலைக் குறிக்கும். அது வானத்தளவும் வளர்ந்து தன்னிலே இழைந்து, அதனாலே நெருப்பு உண்டாயிற்று. அந்நெருப்பினாலே*

---

1. தேவர்களுக்குத் தலைவனான. 2. சேஷத்வ.
3. அடைத்த - உரிமையான.

**ஆகாசம் கறுத்திருக்குமாப் போலே இந்த நெருப்பாலே சிவந்து கிடக்கும் ஆயிற்று. இத்தால், அகவாய் அடங்க ப்ரஹ்மாதிகளுடைய ஸ்தோத்ரமாய்க் கிடக்கும்; புறவாய் அடங்கலும் வாகை நெற்றினுடைய த்வநியாய்க் கிடக்கும்.**

---

மேகத்தாலே வானம் கறுத்திருப்பது போலே சிவந்து கிடக்கும் சிங்கவேள் குன்றம் ஆகும். இதனால், அகவாய் அடங்கப் பிரமன் முதலானோர் வாழ்த்தொலியாய்க் கிடக்கும்; புறவாய்[1] அடங்கலும் வாகை நெற்றின் ஒலியாய்க் கிடக்கும் என்பது குறிக்கப்பட்டது.

**ஒப்புமைப் பகுதி**

**நான்முகனும் சிவனும் ஏத்துதல்**

> *" வெள்ளேறன் நான்முகன் இந்திரன் வானவர்*
> *புள்ளூர்தி கழல் பணிந்து ஏத்துவரே "*

> *" ராஜஸேவை பண்ணுவார் தந்தாம் அடையாளங்களோடே சட்டையும் பிரம்புமாய் ஸேவிக்குமாபோலே, இவர்களும் தந்தாம் அடையாளங்களோடேயாயிற்று வந்து ஸேவிப்பது. 'இரவியர் மணிநெடுந் தேரொடும்' இத்யாதி"* — *தி. வா. மொ. 2:2:10-36*

(68)

## 69

**நல்லை நெஞ்சே! நாம்தொ ழுதும்**
**நம்முடை நம்பெருமான்**
**அல்லி மாதர் புல்க நின்ற**
**ஆயிரம் தோளன்இடம்**
**நெல்லி மல்கிக் கல்லு டைப்பப்**
**புல்இலை ஆர்த்ததர்வாய்ச்**
**சில்லி சில்லென் றொல்ல றாத**
**சிங்கவேள் குன்றமே.**

ப. ரை : **நல்லை நெஞ்சே** - *எனக்குப் பாங்கான நெஞ்சே!* **நம்முடை நம்பெருமான்** - *நமக்குத் தலைவனாய்,* **அல்லி மாதர் புல்க நின்ற** - *தாமரைப் பூவைப் பிறப்பிடமாகக் கொண்ட பெரியபிராட்டியார் தழுவும்படி எழுந்தருளியிருக்கிற,* **ஆயிரம் தோளன் இடம்** - *ஆயிரம் திருத்தோள்களையுடைய பெருமானது இடம்,* **நெல்லி மல்கி** - *நெல்லி மரங்கள் நிறைந்து,* **கல் உடைப்ப** - *பாறைகளை உடைக்கவும்,* **புல் இலை ஆர்த்து** - *பனையோலைகள் ஒலிசெய்யவும்,* **அதர்வாய்**-*வழி இடங்களிலே,* **சில்லி சில் என்று ஒல் அறாத** - *சுவர்க்கோழிகளின் சில் என்னும் ஒலி*

---

1. புறவாய் - வெளிப்பகுதி.

69 1 : 1 நல்ல. 4 : 1 சில்லு.

*நீங்கப்பெறாத,* **சிங்கவேள் குன்றம்** - *சிங்கவேள் குன்றத்தை,* **நாம் தொழுதும்** - *நாம் சென்று வணங்குவோம்.*

**சி. கு :** *ஆர்த்து - செய்து என்னும் வினையெச்சத்தைச் செயவென் எச்சமாகத் திரித்துக்கொள்க. அன்றேல், ஆர்த்த அதர் என்பதன் தொகுத்தலாகக் கொள்க.*

வியா : ஒன்பதாம் பாட்டு : **நல்லை நெஞ்சே** - எனக்குப் பாங்கான நெஞ்சே! ஸம்போதித்து, "நெஞ்சே! நீ எனக்குப் பாங்காயிறே இப்பேறு பெற்றது." **நாம் தொழுதும்** - நாம் தொழுது உஜ்ஜீவிப்போம். இது இத்திருமொழியின் பாட்டுக்கு எல்லாம் க்ரியாபதம். **நம்முடைய நம்பெருமான்** - நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யனாய் இருக்குமாப் போலே நமக்கும் ஆஶ்ரயணீயனாய்க் கொண்டு வந்து ஸந்நிதி பண்ணின ஸர்வேஶ்வரன். **அல்லி இத்யாதி** - ப்ரஹ்மாதிகள் ஆஶ்ரயிக்க தேவர்கள் கலங்கி ஓடப்புக்கவாறே, "ப்ரதிகூல நிரஸநத்துக்காக இவ்வடிவு கொண்டது போய் அநுகூலர் பக்கலிலேயும் வந்து பலிக்கும் அளவு ஆயிற்று!" என்று அந்தச் சீற்றத்தை ஆற்றுகைக்காகப் பெரியபிராட்டியார் வந்து கட்டிக்கொள்ளும் ஆயிற்று. **ஆயிரம் தோளன்** - இவள் அணைத்தால் இவளைக் கட்டிக்கொள்ள ஆயிரம் தோள் உண்டாம் ஆயிற்று.

**நெல்லி இத்யாதி** - நெல்லிகளானவை மிக்குக் கற்களை உடையப் பண்ணும் ஆயிற்று. நெல்லி மரங்கள் வேரோடிக் கற்களை உடையப் பண்ணும். **புல் இலை ஆர்த்து** - மூங்கில் இலைகளானவை த்வநிக்க என்னுதல்,

---

**வி :** ஒன்பதாம் பாட்டு : **நல்லை நெஞ்சே** - *எனக்குப் பாங்கான நெஞ்சே! நெஞ்சினை விளித்து, "நெஞ்சே! நீ எனக்குப் பாங்காய் அமைந்ததனால்தான் யான் இப்பேறு பெற்றேன்" என்கிறார்.* **நாம் தொழுதும்** - *நாம் தொழுது உய்வடைவோம். 'தொழுதும்' என்பது இத்திருமொழியில் உள்ள பாசுரங்களுக்கு எல்லாம் வினைப்பயனிலை.* **நம்முடை நம்பெருமான்** - *இமையவர்களுக்குத் துய்த்தற்குரியவனாய் இருப்பது போலே நமக்கும் பற்றத்தக்கவனாய்த் தன்னை அமைத்துக்கொண்டு வந்து கிட்டிநின்ற பெருமான்.* **அல்லி மாதர் புல்க நின்ற ஆயிரம் தோளன் இடம்** - *பிரமன் முதலானோர் வணங்கத் தேவர்கள் கலங்கி ஓடப் புக்கவாறே[1], "செற்றாரை அழிப்பதற்காக இவ்வடிவு கொண்டது நீங்கி, உற்றார் பக்கலிலேயும் வந்து துன்பம் செய்வது ஆயிற்று!" என்று அந்தச் சீற்றத்தை ஆற்றுகைக்காகப் பெரியபிராட்டியார்[2] வந்து கட்டிக்கொண்டாள்.* **ஆயிரம் தோளன்** - *இவள் அணைத்தால் இவளைக் கட்டிக்கொள்ள அவனுக்கு ஆயிரம் தோள்கள் உண்டாயின.*

*அவன் உறையும் இடம் யாது என்னில்,* **நெல்லி மல்கிக் கல் உடைப்ப** - *நெல்லிகள் மிக்குக் கற்களை உடைந்து போகுமாறு செய்யும். அஃதாவது நெல்லி மரங்கள் வேரோடிக் கற்களை உடையப் பண்ணும்.* **புல் இலை ஆர்த்து அதர்வாய் சில்லி சில் என்று ஒல் அறாத** - *புல் இலை ஆர்த்து - மூங்கில் இலைகள் ஒலிக்க என்பதாம். அன்றேல், பனையோலை ஓசைப்பட என்னலாம்[3].*

---

1. ஓடப்புகுதல் - ஓடத்தொடங்குதல். 2. பெரியபிராட்டியார் - திருமகள். 3. புல் என்பது மூங்கில் பனை இரண்டனையும் குறிக்கும்; இரண்டும் புறக்காழ் உடையன.

பனையோலை ஓசைப்பட என்னுதல். அதர்வாயிலே - வழியிடத்திலே: சில்லி உண்டு சில்வீடு. அது 'சில்' என்னாநிற்கும் ஆயிற்று. ஒரு சப்தாநுகாரத்தைப் பண்ணாநிற்கும் ஆயிற்று. ஒல் அறாத - த்வநி மாறாத.

---

அதர்வாயிலே - வழியிடத்திலே. சில்லி - சில்வீடு என்னும் வண்டு. அது சில் என்று ஒலிக்கும். அஃதாவது சில் என்னும் ஓர் ஒலிக்குறிப்பைப் பண்ணும். ஒல் அறாத - ஒலி மாறாத, சிங்கவேள் குன்றம். (69)

## 70

செங்கண் ஆளி இட்டி றைஞ்சும்
சிங்கவேள் குன்றுடைய
எங்கள் ஈசன் எம்பி ரானை
இருந்தமிழ் நூற்புலவன்
மங்கை யாளன் மன்னு தொல்சீர்
வண்டறை தார்க்கலியன்
செங்கை யாளன் செஞ்சொல் மாலை
வல்லவர் தீதிலரே.

ப. ரை : செங் கண் ஆளி இட்டு இறைஞ்சும் - சிவந்த கண்களையுடைய சிங்கங்கள் தமக்குக் கிடைத்தவற்றைத் திருவடிகளிலே படையலாக வைத்து வணங்குகின்ற, சிங்கவேள் குன்றுடைய - சிங்கவேள் குன்றத்தை உறையும் இடமாக உடைய, எங்கள் ஈசன் எம்பிரானை - நமக்குத் தலைவனும், அருள்புரிபவனுமான பெருமானைக்குறித்து, இருந் தமிழ் நூல் புலவன் - பெரிய தமிழ் நூல்களில் வல்லவனாய், மங்கையாளன் - திருமங்கைக்கு அரசனாய், மன்னு தொல் சீர் வண்டு அறை தார் செங்கையாளன் - நிலைத்த தொன்மையான புகழையுடையவனாய் வண்டுகள் ஒலிக்கின்ற மாலையை அணிந்த வள்ளலாய் இருக்கும், கலியன் செஞ் சொல் மாலை வல்லவர் - கலியனது செவ்விய இச்சொல்லால் ஆகிய மாலையைக் கற்க வல்லவர்கள், தீது இலர் - தீமை இல்லாதவர்கள் ஆவர்.

சி. கு : இருந்தமிழ் - இலக்கண இலக்கிய சமயநூல்கள் நிறைந்திருத்தலால் பரந்து கிடக்கும் தமிழ்.

வியா : பத்தாம் பாட்டு : செங் கண் இத்யாதி - வீரஸ்ரீயாலே சிவந்த கண்களையுடைய ஆளிகளானவை தங்களுக்கு ப்ரதிகூலமான ம்ருகங்களை அழியச்

---

வி : பத்தாம் பாட்டு : செங் கண் ஆளி இட்டு இறைஞ்சும் சிங்கவேள் குன்றுடைய எங்கள் ஈசன் எம்பிரானை - வீரத்திருவாலே சிவந்த கண்களையுடைய ஆளிகள் தங்களுக்குப் பகையான விலங்குகளை அழியச்செய்து அவற்றைத்

---

70 1 : 5 சிங்கவேழ்.

செய்து அவற்றைத்[1] திருவடிகளிலே ஸமாராதந உபகரணமாகக் கொண்டுவந்து பொகட்டு ஆஶ்ரயியாநிற்கும் ஆயிற்று. ஸ்ரீகண்டாகர்ணாழ்வான், "இது ப்ராஹ்மண ஶவம்[2] உத்தமம்" என்று, "இது புதிசு" என்றானிறே. சிங்கவேள் குன்றம்[3] தனக்கு வாஸஸ்தாநமாக உடையவன்; ஸம்ஸாரிகளான நம்போல்வார்க்கும் சென்று ஆஶ்ரயிக்கலாம்படி இருக்கிற உபகாரகனை. **இருந் தமிழ் நூற் புலவன்** - ஒருவரால் கரைகாண ஒண்ணாதபடி இருக்கிற தமிழ் சாஸ்த்ரோக்தமான படியைக் கரைகண்ட ஜ்ஞாந ஆதிக்யத்தை உடையவர். **மங்கையாளன்** - திருமங்கைக்கு நிர்வாஹகரானவர். **மன்னு தொல் சீர்** - நிலைநின்ற பாரதந்த்ர்ய ஸ்ரீயை உடையவர் ஆயிற்று, "லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்நः" என்று. வண்டு களானவை மதுபாநம் பண்ணி அறையாநின்றுள்ள மாலையையுடைய ஆழ்வார். **செங்கையாளன்** - மஹோதாரன். இப்பிரபந்தத்தைப் பிறர்க்கு அநுபாவ்யமாம் படி பண்ணித் தந்தவரிறே. **செஞ் சொல் மாலை வல்லவர்** - அரிய அர்த்தத்தை உள்ளபடி காட்டவற்றான செவ்விய சொல் தொடை வல்லவர். **தீது இலரே** - நரஸிம்ஹம் விரோதியைப் போக்குகையாலே அவர்களுக்குப் பொல்லாங்கு வாராதிறே!

---

திருவடிகளிலே படையலாகக் கொண்டுவந்து போகட்டு[4] வணங்கும். அச் சிங்கவேள் குன்றத்தைத் தனக்கு உறைவிடமாகக்கொண்டவன். சீகண்டாகர்ணாழ் வான் தனக்கு உணவாகிய பிணத்தைப் பெருமானுக்கு இட்டு, "இது பார்ப்பனப் பிணம்" என்று கூறிப் பின்னும், "இது புதியது" என்றானன்றோ? உலகத்தவரான நம்போல்வார்க்கும் சென்று வணங்கலாம்படி இருக்கும் வள்ளல். அவனைப் பாடினார். பாடியவர் யார் என்னில், **இருந் தமிழ் நூற் புலவன்** - ஒருவரால் கரை காண ஒண்ணாதபடி இருக்கும் தமிழ் நூல்களில் சொல்லப்பட்ட கருத்துகளைக் கரை கண்ட புலமை வீறு உடையவர். **மங்கையாளன்** - திருமங்கைக்கு அரசர். **மன்னு தொல் சீர்** - இறைவனுக்கு அடங்கி நிற்றலாகிய திருவினை நிலையாக உடையவர். "இலக்குவன் அடிமையாய் இருத்தலாகிய செல்வம் நிறைந்தவன்" (ரா. பா. 18:29) என்கிறார் வான்மீகி முனிவர். இதனால் இறைவனுக்கு அடிமைத்தொண்டு புரிதல் செல்வமாகும் என்பது விளங்கும். **வண்டு அறை தார்க் கலியன்** - வண்டுகள் தேன் உண்டு அறையும் மாலையையுடைய ஆழ்வார். **செங்கையாளன்** - பெருவள்ளல். இந்நூலினைப் பிறர்க்குக் கற்றுக் களிக்கும்படி பண்ணித் தந்தவர் அன்றோ. **செஞ் சொல் மாலை வல்லவர்** - அரிய பொருளை உள்ளவாறு காட்ட வல்லதான செவ்விய சொல்தொடை வல்லவர். **தீது இலரே** - நரசிங்கம் பகையைப் போக்குவதனாலே அவர்களுக்குப் பொல்லாங்கு வாராதன்றோ!

(70)

---

1. அவைத்தைத். 2. ப்ரஹ்மண வம்சம். 3. சிங்கவேழ் குன்றம்.
4. போகட்டு - போட்டு; வைத்து.

## முதற்பத்து - எட்டாம் திருமொழி - கொங்கு

பிர : விரோதி நிரஸந சீலனாய், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷ ஸ்வபாவனாய், ஸர்வாந்தராத்மாவாய் இருக்கிற ஹரியானவன், வாயாலே திருநாமம் சொன்னான்[1] ஒரு சிறுக்கனுக்குத் தமப்பன் பகையாக உதவிற்று ஒரு வடிவைக்கொண்டு வந்து தோற்றி அவனுடைய விரோதியைப் போக்கி உபகரித்தவன், அவன் ஒருவன் அளவிலேயும் பர்யவஸிக்கையன்றிக்கே திருநாமம் சொன்னார் எல்லாருடைய ஸம்ஸார துரிதத்தைப் போக்குகைக்காகத் திருமலையிலே வந்து ஸந்நிஹிதன் ஆனான். நாம் அங்கே போய் அனுபவிப்போம் என்று திருவுள்ளத்தோடே கூட்டு கிறார். தமிழ்பாழை[2] நடையாடுகிறதுக்கு எல்லையான நிலமுமாய் இருக்குமிறே!

---

தோ : *பகை துடைக்கும் பண்பினனாய், அடியாரொடு கலக்கும் இயற்கை யனாய், எல்லா உயிர்க்கும் உயிராய் இருப்பவன் பெருமான். அவன், தன் வாயாலே திருப்பெயர் சொன்னான் என்று ஒரு சிறுக்கனுக்குத்[3] தமப்பன்[4] பகை யாக, அதனைப் போக்குதற்கு உதவியாக அமைந்தது ஒரு வடிவைக்கொண்டு வந்து தோற்றி அவனது பகையைப் போக்கினான். அப்படிப்பட்டவன் அப் பிரகலாதன் ஒருவன் அளவிலேயும் முடிவதன்றிக்கே திருப்பெயர் சொன்னார் எல்லாருடைய பிறவித் துன்பங்களையும் போக்குகைக்காகத் திருமலையிலே வந்து அணியனாய் உறைபவன் ஆனான். நாம் அங்கே போய் வணங்கி மகிழ் வோம் என்று திருவுள்ளத்தோடு கூட்டுகிறார்[5]. அது தமிழ்மொழி நடையாடு வதற்கு[6] எல்லை நிலமாகவும் இருப்பது அன்றோ!*

### 71

கொங்க லர்ந்தம லர்க்கு ருந்தமொ
 சித்த கோவலன் எம்பிரான்
சங்கு தங்குத டங்க டல்துயில்
 கொண்ட தாமரைக் கண்ணினன்
பொங்கு புள்ளினை வாய்பி ளந்தபு
 ராணர் தம்மிடம் பொங்குநீர்ச்
செங்க யல்திளைக் கும்சு னைத்திரு
 வேங்க டம்மடை நெஞ்சமே!

ப. ரை : கொங்கு அலர்ந்த மலர்க் குருந்தம் ஒசித்த - *மணம் வீசுகின்ற பூக்கள் நிறைந்த குருந்த மரத்தை முறித்து அழித்த*, கோவலன் - *கிருட்டிணனும்*, எம்பிரான் - *எமக்கு அருள்புரியும் தலைவனும்*, சங்கு தங்கு தடம் கடல் துயில்

---

1. சொன்னான் என்று. 2. தமிழ்பாஷை.
3. சிறுக்கன் - சிறுவன்; ஈண்டுப் பிரகலாதன். 4. தமப்பன் - தந்தை; ஈண்டு இரணியன்.
5. திருவுள்ளத்தோடு கூட்டல் - மனத்திற்கு அறிவுறுத்தல். 6. நடையாடுதல் - வழங்குதல்.

**கொண்ட** - சங்குகள் தங்கியுள்ள பெரிய கடலில் உறைகின்ற, **தாமரைக் கண்ணினன்** - தாமரை மலர் போலும் கண்களை உடையவனும், **பொங்கு புள்ளினை வாய் பிளந்த** - கிளர்ந்து வந்த பகாசுரன் வாயைப் பிளந்தெறிந்த, **புராணர் தம் இடம்** - பழையவனும் ஆகிய பெருமான் எழுந்தருளியிருக்கும் இடம் ஆகிய, **பொங்கு நீர்ச் செங்கயல் திளைக்கும்** - மிகுந்த நீரின்கண் சிவந்த கயல்மீன்கள் களித்து வாழும், **சுனைத் திருவேங்கடம்** - சுனைகளையுடைய திருமலையை, **நெஞ்சமே அடை** - மனமே! கிட்டப் பாராய்.

**சி. கு :** புராணர் - ஒருமை பன்மை மயக்கம், கோவலன் எம்பிரான் கண்ணினன் என்று 'அன்' விகுதியிட்டு முன்னர்க் கூறி வருதலின். கோவலன் - கோபாலன் என்னும் வடசொல் திரிபு. வேங்கடம்மடை - விரித்தல் விகாரம்.

வேங்கடம் - வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று; புகழ்வாய்ந்தது. திருமலை என்றும் கூறுவர். இங்குள்ள பெருமான் திருவேங்கடமுடையான்; பிராட்டி அலர்மேல்மங்கை; இத்தாயார் கோயில் திருவேங்கடமலை அடிவாரத்தினின்றும் இரு கல் தொலைவில் இருக்கும் திருச்சானூரில் உள்ளது.

இத்திருமொழி மா விளம் மா விளம் மா விளம் விளம் என்னும் வாய்பாட்டில் அமைந்த எழுசீர்க் கழிநெடில் அடி ஆசிரிய விருத்தம். இதனை முதல் மூன்று சீர்களும் விளங்கனியாகவும், நான்காம் சீர் கூவிளமாகவும் வரும் கலிவிருத்தம் எனவும் கூறலாம். நேரசையில் தொடங்கும் ஒவ்வோர் அடியும் பதினெட்டு எழுத்துகள் பெற்ற கட்டளையாக அமையும். இத்தகைய யாப்பில் 'கரமுனம் மல' 'வினவினேன் அறி' 'மானினேர் விழி' ஆகிய திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்கள் அமைந்துள்ளமை கருதத்தக்கது.

**வியா : முதற் பாட்டு : கொங்கு அலர்ந்த** - பரிமளத்தை ப்ரவஹியா நின்றுள்ள[1] மலரை உடைத்தான. **குருந்தம் ஒசித்த** - அடியே பிடித்துத் தலையளவும் பூத்து தர்சநீயமாய் அஸுராவேசத்தாலே நலிவதாகத் தேடி நிற்க, "இதழகிதாய் இருந்தது, முறித்துக் காரியம் கொள்ளுவோம்" என்று ஒசித்தான் ஆயிற்று. **கோவலன் எம்பிரான்** - க்ருஷ்ணனாய் வந்து அவதரித்துக் குருந்தை முறித்தாப் போலே என் விரோதியைப் போக்கி எனக்கு உபகரித்தவன். அதின் நினைவின்படி கார்யம் செய்கை அன்றிக்கே என்னுடைய கார்யம் செய்த உபகாரகன். சங்கு

---

**வி : முதற் பாட்டு : கொங்கு அலர்ந்த மலர்** - மணத்தை வெள்ளமிடும் மலரையுடைய. **குருந்தம் ஒசித்த** - குருந்த மரம் அடியே பிடித்துத் தலையளவும் பூத்து அழகியதாய், அவுணன் ஏறியிருத்தலாலே கிருட்டிணனை நலிவதற்கு வாய்ப்புத் தேடியதாய் நின்றது; "இஃது அழகிதாய் இருந்தது, முறித்துப் பயன் கொள்வோம்" என்று ஒசித்தான். **கோவலன் எம்பிரான்** - கிருட்டிணனாய் வந்து பிறந்து குருந்தை முறித்தாற் போலே என் பகையினைப் போக்கி எனக்கு உதவியவன். அதன் நினைவின்படி[2] தொழிற்படாமல் எனக்கு வேண்டுவது செய்து உதவி செய்தவன். **சங்கு தங்கு தடம் கடல் துயில் கொண்ட தாமரைக்**

---

1. ப்ரவஹியாநிற்பதான.
2. அதன் நினைவின்படி - அவுணன் ஏறியிருந்த குருந்த மரத்தின் நினைவின்படி.

**இத்யாதி** - இவ்அவதாரத்துக்கு அடியாகத் திருப்பாற்கடலிலே வந்து ஸந்நிதி பண்ணினபடியைச் சொல்லுகிறது. சங்கு என்று பேர் பெற்றவை அடையச் சேரா நிற்பதாய், கண்வளர்ந்தருளுகைக்கு ஈடான பரப்பை உடைத்தான திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளினவன். **பொங்கு இத்யாதி** - பெரிய கிளர்த்தியோடே[1] மிகைத்து வந்து தோற்றின பகாஸுரனை வாயைக் கிழித்து, இப்படி விரோதியைப் போக்குகை பழையதாகச் செய்து போருகிறவர் வந்து வர்த்திக்கிற ஸ்தானம். **பொங்கு இத்யாதி** - ஜலத்தினுடைய ஸம்ருத்தி கயலினுடைய களிப்புக்கு ஈடாய் இருக்கு மிறே! இளமையாலே சிவந்த நிறத்தையுடைய கயல்களானவை களித்து வர்த்திக்கிற சுனைகளையுடைய திருமலையை அடை நெஞ்சே! என்கிறார்.

---

**கண்ணினன்** - *இப்பிறப்புக்கு அடியாகத்*[2] *திருபாற்கடலிலே வந்து தங்கியதனைச் சொல்லுகிறது. சங்கு என்று பெயர் பெற்றவை அடையச் சேர்ந்திருப்பதாய்க் கண்வளர்ந்தருளுகைக்கு ஈடான*[3] *பரப்பை உடையதாய் அமைந்த திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளினவன்.* **பொங்கு புள்ளினை வாய் பிளந்த புராணர் தம் இடம்** - *பெரிய கிளர்த்தியோடே*[4] *மிகைத்து வந்து தோற்றிய கொக்குவடிவ அவுணன் வாயைக் கிழித்தான்; இப்படிப் பகைவர்களைப் போக்குவதனைப் பழையதாகச் செய்து வருபவன் வந்து உறையும் இடம்.* **பொங்கு நீர்ச் செங்கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடம் அடை நெஞ்சமே** - *நீர்ப்பெருக்குக் கயலின் களிப்புக்கு ஏற்புடைத்தாய் இருக்கும் அன்றோ! இளமையாலே சிவந்த நிறத்தை யுடைய கயல்களானவை களித்திருக்கும் சுனைகளையுடைய திருமலையை அடை நெஞ்சே! என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

1. **குருந்தம் ஒசித்தது**

   *" உயர்கொள் சோலைக் குருந்து ஒசித்ததும் - ஒக்கத்தை உடைத்தாய்ச் சோலை செய்துநின்ற குருந்தை முறித்ததும். 'முக்தராய் இருப்பார்க்கு ஆகர்ஷகமாய் இருக்கும்' என்று தழைத்துநின்றது; 'இனி இத்தை முறித்துக் கார்யம் கொள்வோம்' என்று பொடிப்படுத்தினான் "*
   
   *தி. வா. மொ. 6:4:6-36*

   *[முக்தர் - அறியாப்பிள்ளை. ஆகர்ஷகம் - கவர்ச்சியைப் பண்ணுவது.]*

   *" சாயக் குருந்தம் ஒசித்த தமியற்கு - அஸுராவேசத்தாலே தழைத்துப் பூத்து நின்ற குருந்தத்தை வேரோடே சாய்ந்து விழும்படி முறித்த தனியற்கு "*
   
   *தி. வா. மொ. 6:6:8-36*

2. **புள்ளின் வாய் பிளந்தது**

   *" பள்ளத்தில் மேயும் பறவை உருக்கொண்டு*
   *கள்ள அசுரன் வருவானைத் தான்கண்டு*

---

1. கிளற்றி.
2. அடியாக - முன்னேற்பாடாக. 3. ஈடான - தகுதியான. 4. கிளர்த்தி - கிளர்ச்சி; துடிப்பு.

*புள்ளிது என்று பொதுக்கோ வாய்கீண்டிட்ட*
*பிள்ளையை வந்து குழல் வாராய் அக்காக்காய்*
*பேய்முலை உண்டான் குழல் வாராய் அக்காக்காய் "*
*பெரி. தி. 2:5:4*

*" புள்ளின்வாய் கீண்டானை -'பள்ளத்தில் மேயும்' இத்யாதி. பகாஸுரனைப் பிளந்தபடி "*
*பாவை. 13 பெ. உரை.*

*" புள்ளின் வாய் பிளந்திட்டாய் - கன்றுகள் மேய்க்கிற இடத்தில் பள்ளத்தில் மேயும் பறவை உருக்கொண்டு உன்னை நலிவதாக வந்த பகாஸுரனை வாயைக் கிழித்துப் பொகட்டவனே! "*
*பெரி. தி. 2:7:5 ம. மா. மு. உரை.*

3. **வேங்கடம்**

*" தண்ணார் வேங்கடம் - குளிர்மிக்கு இருந்துள்ள திருமலை. ரக்ஷகனுக்கு ரக்ஷ்யவர்க்கம் பெறாமையால் வரும் தாபத்தையும், இங்குள்ளார்க்கு ரக்ஷகனைப் பெறாமையால் வரும் தாபத்தையும் தீர்க்கவற்றாய் இருக்கை "*
*தி. வா. மொ. 1:8:3-24*

*" வட திருவேங்கடம் - ...உபயவிபூதிக்கும் நடுவான மன்று "*
*தி. நெ. தா. 16 பெ. உரை.*

*[உபயவிபூதி - விண், மண் ஆகிய இரு நாடுகள்]*

*" சீரார் திருவேங்கடமே - நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்கும் ஒக்க முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிற நிலையாய் உள்ள ஏற்றம் உண்டிறே திருமலைக்கு "*
*சி. ம. 69 பெ. உரை.*

*" வேங்கடவன் - அர்ச்சாவதாரத்துக்குப் பொற்கால் பொலிய விட்ட இடம் "*
*அம. 1 நாயனார் உரை.*

*[அர்ச்சாவதாரம் - மண்ணுலகில் கோயில்களில் வழிபடத்தக்கவாறு உருவங்கொண்டு தோன்றுதல்]*

(71)

## 72

**பள்ளி யாவது பாற்க டல்லரங்**
**கம்மி ரங்கவன் பேய்முலை**
**பிள்ளை யாய்உயிர் உண்ட எந்தைபி**
**ரான வன்பெரு கும்மிடம்**
**வெள்ளி யான்கரி யான்ம ணிநிற**
**வண்ணன் என்றெண்ணி நாடொறும்**
**தெள்ளி யார்வணங் கும்ம லைத்திரு**
**வேங்க டம்மடை நெஞ்சமே!**

**ப. ரை :** **வன் பேய் முலை இரங்க** - வலிய மனத்தளாகிய பூதனையின் முலைகள் தாமே சுரக்கும்படி, **பிள்ளையாய்** - குழந்தை வடிவு கொண்டு, **உயிர் உண்ட எந்தை பிரானவன்** - அவளது உயிரை அமுதுசெய்த என் குல முதல்வனான பெருமான், **பள்ளி ஆவது பாற்கடல் அரங்கம்** - கண்வளர்ந்தருளும் இடம் திருப்பாற்கடலும் திருவரங்கமும் ஆகும். **பெருகும் இடம்** - அவன் வளரும் இடம், **தெள்ளியார்** - தெளிந்த அறிவுடையோர், **வெள்ளியான் கரியான் மணி நிற வண்ணன் என்று எண்ணி** - முதல் ஊழியில் வெளுத்த நிறத்தனாயும், நான்காம் ஊழியில் கறுத்த நிறத்தனாயும், மூன்றாம் ஊழியில் நீலமணி போலும் நிறத்தனாயும் இருப்பவன் என்று பலகாலும் இவ்வடிவுகளை இடையறாது நினைந்து, **நாள் தொறும் வணங்கும் மலை** - ஒவ்வொரு நாளும் வழிபடும் மலையான, **திருவேங்கடம்** - திருமலையை, **நெஞ்சமே அடை** - மனமே கிட்டப் பாராய்.

**சி. கு :** முதல் ஊழி, இரண்டாம் ஊழி, மூன்றாம் ஊழி, நான்காம் ஊழி என்பன முறையே கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் எனப்படும். பாற்கடல்லரங்கம் மிரங்க, பெருகும்மிடம், வணங்கும்மலை - விரித்தல் விகாரங்கள்.

வியா : **இரண்டாம் பாட்டு : பள்ளி ஆவது பாற்கடல் அரங்கம்** - ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனாய்க் கொண்டு கண்வளர்ந்தருளுகிறது திருப்பாற்கடல் படுக்கை. அவ்வளவும் சென்று கிட்ட மாட்டாத ஸம்ஸாரிகளுக்காகக் கோயில். **இரங்க இத்யாதி** - முலையை ஸ்பர்சித்த அளவிலே நெகிழ்ந்து முலை சுரக்கும்படியாக என்னுதல்; அன்றிக்கே, அவள் கதற என்னுதல். வன்மையை உடைத்தான நெஞ்சையுடைய பூதனையுடைய முலையைப் பிள்ளையாயே உண்டான் ஆயிற்று. மௌக்த்யத்தாலே உயிருக்கும் முலைக்கும் வாசி அறியாதே அமுதுசெய்தான் ஆயிற்று. **எந்தை பிரானவன் பெருகும் இடம்** - எனக்குக் குல நாதனான உபகாரகன் வர்த்திக்கிற தேசம். பெருகுகை - வளருகை; அத்தால் வர்த்திக்கையைச் சொன்னபடி. **வெள்ளியான் இத்யாதி** - கொண்ட கொண்ட வடிவு எல்லாம் இவர்க்கு உத்தேஶ்யமாய் இருக்கிறது ஆயிற்று, அவன்

---

வி : **இரண்டாம் பாட்டு : பள்ளி ஆவது பாற்கடல் அரங்கம்** - பிரமன் முதலானோர்களுக்குச் சாரத் தகுந்தவனாய் இருப்பவன் கண்வளர்ந்தருளும் இடம் திருப்பாற்கடல் படுக்கை. அவ்வளவும் சென்று கிட்ட மாட்டாத மக்களுக்காக இருக்கும் இடம் கோயில்[1]. **இரங்க வன் பேய் முலை பிள்ளையாய் உயிர் உண்ட** - 'இரங்க' என்பது முலையைத் தொட்ட அளவிலே நெகிழ்ந்து முலை சுரக்கும்படியாக என்றாதல், அவள் கதற என்றாதல் பொருள்படும். வன்மை பொருந்திய நெஞ்சையுடைய பூதனையின் முலையைப் பிள்ளையாய் வடிவு கொண்டே உண்டான். பசலைத்தனத்தாலே[2] உயிருக்கும் முலைக்கும் வேற்றுமை அறியாமல் அமுதுசெய்தான். **எந்தை பிரானவன் பெருகும் இடம்** - எனக்குக் குல முதல்வனான வள்ளல் வளரும் இடம். பெருகுகை - வளருகை; அதனால் உறைவது சொல்லப்பட்டது. **வெள்ளியான் கரியான் மணி நிற வண்ணன் என்று எண்ணி நாடொறும் தெள்ளியார் வணங்கும்** - கொண்ட கொண்ட வடிவு எல்லாம் இவர்க்குப் போற்றத் தக்கனவாய் அமைந்தன, அவன் கொண்ட வடிவாகை

---

1. திருவரங்கம்; இதனைக் 'கோயில்' என்றும் 'பெரிய கோயில்' என்றும் குறித்தல் வைணவ மரபு.
2. பசலைத்தனம் - சிறுபிள்ளைத்தனம்.

**கொண்ட வடிவு ஆகையாலே. க்ருதயுகத்தில் வெளுத்த நிறத்தை உடையனாய், கலியுகத்தில் கறுத்த நிறத்தை உடையனாய், த்வாபரயுகத்தில் வந்தவாறே ஶ்யாமமான நிறத்தை உடையனாய் இருக்கும் என்று இவ்வடிவுகளை அநுஸந்தித்து, தெள்ளியார் உண்டு அநந்ய ப்ரயோஜநரானவர்கள், நாடோறும் வணங்குவர்கள் ஆயிற்று. நித்யஸூரிகளைப் போலே நித்யாநுபவம் பண்ணும் மலையான.**

---

*யாலே. முதல் ஊழியில் வெளுத்த நிறத்தை உடையனாய், நான்காம் ஊழியில் கறுத்த நிறத்தை உடையனாய், இரண்டாம் ஊழியில் நீல நிறத்தை உடையனாய் இருக்கும் என்று இவ்வடிவுகளைச் சிந்தித்து, இறைவனைத் தவிர மற்றொன்றும் வேண்டா மனத்தரான அடியார்கள் நாடோறும் வணங்குவர்கள். தெள்ளியார்- இறைவனை ஒழிந்த பிற பயன் வேண்டாதவர்கள். அவர்கள் அயர்வறும் அமரர் களைப்போலே எஞ்ஞான்றும் இறைவனைப் போற்றி மகிழும் மலையான.* **திருவேங்கடம் அடை நெஞ்சே-.**

**ஒப்புமைப் பகுதி**

**1. பாற்கடற் பள்ளி**

*" பாற்கடலுள் பையத் துயின்ற பரமன் "*

*" பாற்கடலுள் - ...ஸர்வேச்வரன், திருப்பாற் கடலிலே ப்ரஹ்மாதிகளுடைய கூக்குரல் கேட்கும்படி குடில்கட்டிப் பயிர்நோக்கும் க்ருஷிகனைப் போலே தோள்தீண்டியாக வந்து கண்வளர்ந்தருளுகிறான் என்கிறார்கள் "*

*பாவை. 2 நாயனார் உரை.*

*" பாற்கடல் சேர்ப்பா - ஆச்ரிதர் கூக்குரல் கேட்கைக்காகத் திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தவனே "*

*தி. வா. மொ. 8:1:8-36*

*பாட்டு 15இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

**2. திருவரங்கத்து இருப்பு**

*" நம் அரங்கனாய - அகிஞ்சநரான நமக்காகவிறே கோயிலில் வந்து கண் வளர்ந்தருளுகிறது. பரமபதம் நித்யருக்கும் முக்தருக்கும்; திருப்பாற்கடல் முக்தப்ராயரான ஸநகாதிகளுக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும்; அவதாரங்கள் தத்காலீநரான பாக்யாதிகருக்கு; கோயிலில் நிலை தேசகாலங்களுக்கு பிற்பாடரான நிர்ப்பாக்யருக்கு முகங்கொடுக்கவிறே "*

*தி. மா. 4 பெ. உரை.*

*[அகிஞ்சநர் - கைம்முதல் இல்லாதவர். முக்தப்ராயர் - வீடு பெறும் நிலையை அடைந்தவர். தத்காலீநர் - அக் காலத்தவர். பாக்யாதிகர் - பேறுமிக்கார். நிர்ப்பாக்யர் - பேறு இல்லாதவர்.]*

**3. பிள்ளையாய்ப் பூதனை முலை உண்டது**

*" மிகு ஞானச் சிறுகுழவி - மௌக்த்யத்தில் கண்ணழிவு அற்று இருக்கச் செய்தேயும், ரஸஜ்ஞாநத்தாலே 'இது தாய் முலை அல்ல, வேற்று முலை' என்று அமுதுசெய்தான். அவள் தாயாய் வந்தாலும், இவன் 'தாய்'*

*என்றே முலையுண்டாலும் வஸ்துஸ்வபாவத்தாலே வருமது தப்பாதிறே அத்தாலே தப்பிற்று இத்தனை "* *தி. வா. மொ. 4:8:3-36*

*[ரஸஜ்ஞாநம் - சுவைபற்றிய அறிவு. வஸ்துஸ்வபாவம் - பொருளின் இயற்கை; ஈண்டுப் பகைவர் கிட்டினால் அழியக்கூடிய இறைவன் தன்மையைக் குறித்தது.]*

*" பேய்முலை உண்ட பிள்ளைத் தேற்றமும் "*

*" பிள்ளைத் தேற்றமும் - ஐச்வரமான ஜ்ஞாநமின்றிக்கே, 'தாய்முலை அன்று, வேற்றுமுலை' என்று அறியும் அறிவு. அத்யந்த சைசவத்திலும் பிள்ளைகள் முலைவாசி அறிவர்களிறே. பிள்ளைத்தனத்தின் மெய்ப்பாட்டினாலே வரும் ரஸஜ்ஞாநமும். 'பாதகர்' என்று அறியவுமாம், அறியாதொழியவுமாம், சத்ருக்கள் கிட்டினால் முடியக்கடவதான வஸ்துஸ்வபாவத்தாலே முடிந்தாள் இத்தனை "* *தி. வா. மொ. 5:10:3-24*

*[ஐச்வரமான - இறைவனுக்குரிய; அத்யந்த சைசவம் - சின்னஞ்சிறு குழந்தைப் பருவம். பாதகர் - தீங்கு இழைப்பவர்.]*

**4. தெள்ளியார்**

*" தெள்ளியார் - தந்தாமுக்கும் சில உண்டேயாகிலும், அவற்றைப் பொகட்டு அவன் கைபார்த்திருக்குமவர்கள்....அசோகவநிகையில் தனியிருப்பில் பிராட்டி தெளிவு போலேயும் ஆச்ரயண வேளையில் ஸ்ரீவிபீஷணாழ்வான் தெளிவுபோலேயும் தெளிந்திருக்குமவர்கள்"*

*தி. வா. மொ. 5:7:9-36*

*(72)*

## 73

**நின்ற மாமரு திற்று வீழந**
**டந்த நின்மலன் நேமியான்**
**என்றும் வானவர் கைதொ ழும்மிணைத்**
**தாம ரையடி எம்பிரான்**
**கன்றி மாரிபொ ழிந்தி டக்கடி**
**தாநி ரைக்கிடர் நீக்குவான்**
**சென்று குன்றமெ டுத்த வன்திரு**
**வேங்க டம்மடை நெஞ்சமே!**

**ப. ரை :** **நின்ற மா மருது இற்று வீழ** - *அசுரர் ஏறியிருந்தமையால் பெயராது நின்ற பெரிய மருத மரம் முறிந்து வீழுமாறு,* **நடந்த நின்மலன்** - *நடுவே சென்ற குற்றம் அற்றவனும்,* **நேமியான்** - *திருவாழியை உடையவனும்,* **என்றும் வானவர் கைதொழும்** - *எப்போதும் அமரர்கள் வணங்கும்,* **தாமரை இணை அடி எம்பிரான்** - *தாமரை மலர் போலும் இரண்டு திருவடிகளையுடைய எங்கள் தலைவனும்,* **கன்றி மாரி பொழிந்திட** - *இந்திரன் சீற்றங்கொண்டு மழையைப்*

பெய்த அளவிலே, **கடிது ஆநிரைக்கு இடர் நீக்குவான்** - விரைந்து பசுக்கூட்டங்களுக்குத் துன்பம் நீக்குவதற்காக, **சென்று குன்றம் எடுத்தவன் திருவேங்கடம்** - சென்று கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தவனும் ஆகிய பெருமான் எழுந்தருளியுள்ள திருவேங்கடத்தை, **நெஞ்சமே அடை** - மனமே சென்று அடைவாய்.

**சி. கு :** தொழும்மிணை - விரித்தல் விகாரம். நீக்குவான் - வான் ஈற்று எதிர்கால வினையெச்சம்.

**வியா : மூன்றாம் பாட்டு : நின்ற** - அஸுராவேசத்தாலே பேராதே நின்ற மாமருது உண்டு, பெரிய மருது; அவ்வருகே விழுந்த இது இவ்வருகேயாய் இற்றதாகில் செய்வது என்! என்று பயப்பட வேண்டும்படியாய் இருக்கிறது ஆயிற்று. அது முறிந்து விழும்படியாக. நெஞ்சில் நினைவு இன்றிக்கே அது முறியும்படி நடந்த சுத்தியை உடையவன். **நேமியான்** - தான் கைதொட்டு வ்யாபரிக்க வேண்டா; தன்னை ஒழிய விரோதியைப் போக்குகைக்கு ஈடான பரிகரம் உண்டாய் இருக்கச் செய்தே கிடீர் தான் வந்து அகப்பட்டது. **என்றும் இத்யாதி** - நித்ய ஸூரிகள் ஒரு நாடாகப் பரிய இருக்குமவன் கிடீர் தனியே புகுந்து[1] அகப்பட்டான். **கன்றி இத்யாதி** - பெரிய சீற்றத்தை உடையனாய்க் கொண்டு இந்த்ரனானவன் மேகங்களை ஏவ அவையும் அவன் கருத்தை அநுவர்த்தித்து மாரி பொழிந்திட. **ஆநிரைக்கு இடர் நீக்குவான் கடிது சென்று குன்றம் எடுத்தவன்** - ஸ்வரக்ஷணத்துக்குப் பரிகரம் இல்லாதவற்றின்மேலே[2] ஒரு துளி விழுவதற்கு முன்பே அவற்றுக்கு[3] இடர் வாராதபடியாகக் கடுநடையிட்டுச் சென்று கோவர்த்தநத்தை எடுத்தவன். **திருவேங்கடம் அடை நெஞ்சமே** - ஒரு மலையை எடுத்துப்

---

**வி : மூன்றாம் பாட்டு : நின்ற மா மருது இற்று வீழ நடந்த நின்மலன்** - அசுரர் ஏறியிருந்தமையாலே பேராமல் நின்ற பெரிய மருது; **மாமருது** - பெரிய மருது. அப்பக்கம் வீழ்ந்த இம்மரம் இப்பக்கம் வீழ்ந்திருக்குமானால் செய்வது என்! என்று வயிறு பிடிக்க[4] வேண்டும்படியாய் இருக்கிறது. அத்தகைய பெரிய மரம் முறிந்து விழும்படியாக. நெஞ்சில், "அம்மரம் அசுரர்கள் ஏறியிருப்பது; அதனை வீழ்த்த வேண்டும்" என்னும் நினைவு இல்லாமல் இருக்கும்போதே அது முறியும்படி நடந்த தூயவன். **நேமியான்** - தான் கைதொட்டு முறிக்க வேண்டா; தான் செல்லாமலேயே பகைவரைப் போக்குவதற்குத்தக்க படைக்கலத்தினைத் தன்னிடம் கொண்டிருந்தான். அப்படி இருந்தும் தானே வந்து மரத்தினிடையே அகப்பட்டான். **என்றும் வானவர் கைதொழும் இணை அடித் தாமரை எம்பிரான்** - திருநாட்டில் அயர்வறும் அமரர்கள் எல்லோருமாகப் பரிவு காட்ட இருப்பவன் அன்றோ தனியே புகுந்து அகப்பட்டான். **கன்றி மாரி பொழிந்திட** - பெரிய சீற்றத்தை உடையவனாய்க் கொண்டு இந்திரன் மேகங்களை ஏவ, அவையும் அவன் கருத்து வழிநின்று மாரி பொழிந்திட. **ஆநிரைக்கு இடர் நீக்குவான் கடிது சென்று குன்றம் எடுத்தவன்** - தங்களைக் காத்துக் கொள்வதற்கு வகையறியாத அவற்றின்மேலே ஒரு துளி விழுவதற்கு முன்பே அவற்றுக்கு இடர் வாராதவாறு கடுநடையிட்டுச் சென்று[5] கோவர்த்தநத்தை எடுத்தவன். **திருவேங்கடம் அடை**

---

1. வந்து. 2. இல்லாதவைத்தின்மேலே. 3. அவைத்துக்கு.
4. வயிறு பிடித்தல் - அஞ்சுதல். 5. கடுநடை இட்டுச் செல்லுதல் - விரைந்து செல்லுதல்.

**பரிஹரித்தவன் ஒரு மலையிலே நின்று ரக்ஷிக்கப் பார்த்தான். அவனை ஆஶ்ரயிக்கப் பார் நெஞ்சே என்கிறார்.**

---

**நெஞ்சமே - ஒரு மலையை எடுத்து இடர் களைந்தவன் ஒரு மலையிலே நின்று காக்கக் கருதினான். அவனைச் சென்று அடையப் பாராய் நெஞ்சே என்கிறார்.**

**ஒப்புமைப் பகுதி**

1. **மாமருதிடை நடந்தவன்**

" *பொருந்திய மாமருதிடைபோய எம்*
*பெருந்தகாய்* "

" *பொருந்திய மாமருது - மருது, மாமருது, பொருந்திய மாமருது. மருது என்கையாலே மரத்தைச் சொல்லி; 'மரங்கள்போல் வலிய நெஞ்சம்' என்று வன்மைக்கு மரத்தையிறே சொல்லுவது; அத்தாலே நெஞ்சின் வன்மையைச் சொன்னபடி. மாமருது என்கையாலே மாவென்று கறுப்பாய், இத்தால் சீற்றத்தைச் சொன்னபடி. அன்றியே, மஹத்தையாய், வேறு வினை செய்யாதே மேலேவிழ அமைந்திருக்கை. நினைத்த காரியத்துக்குப் பொருந்திய மாமருது, இவற்றின் நெஞ்சில் பொருத்தம். ஆக, இப்படி க்ருதஸங்கேதராய், சீற்றத்தையுடையராய், க்ருஷ்ண தர்சநத்தாலும் நெஞ்சு நெகிழாத வன்மையை உடையவை. இடைபோய - இப்படி நிற்கிறவற்றின் அருகே போகையுங்கூட பயங்கரமாய் இருக்க, இவற்றின் நடுவே ஒன்றிலே வெளிகண்டு போவாரைப் போலே போனான் ஆயிற்று* " திருவாய்மொழி. வா. மொ. 3:8:10-36
*(மஹத் - பெருமை. க்ருதஸங்கேதர் - முன்னமேயே ஏற்பாடு செய்து கொண்டவர்கள்.)*

" *மருதிற நடந்து - அடல் சேர் இணை மருது அற்று வீழ நடை கற்றவனிறே. தளர் நடை இடுகிற போதே ஒன்னார் தளர அடியிட்டபடி* "
தி. கு. தா. 16 பெ. உரை.

2. **நேமியான்**

" *மன்னின்ற சக்கரம் - 'எப்போதும் கை கழலா நேமியான்' என்கிறபடியே ஆச்ரிதர்க்கு விரோதிகள் உண்டானபோதாக ஆயுதம் எடுக்கப் பார்த்திராதே, எப்போதும் ஒக்கக் கையிலே விடாதே கொண்டிருக்கும் ஆயிற்று* " தி. வா. மொ. 5:4:6-36

" *கூரார் ஆழி - ப்ரதிபக்ஷத்தின் மேலே ஏவச் சாணையிலிட்டாப்போலே கூர்மை மிக்கு இருக்கிற திருவாழி* " தி. வா. மொ. 6:9:1-36

" *சக்கரக்கையன் - 'கருதுமிடம் பொருதும்' திருவாழியைக் கையிலே உடையவன்* " பெரி. தி. 1:4:4 ம. மா. மு. உரை.

" *கை கலந்த ஆழியான் - திருக்கையிலே வேர்விழுந்த திருவாழியை உடையவன்* " பெ. திருவந். 86 பெ. உரை.

3. **கோவர்த்தனம் எடுத்து ஆநிரைகளைக் காத்தவன்**

*பாட்டு 24, 45 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி காண்க.*

(73)

பார்த்தற் காய்அன்று பார தங்கைசெய்
திட்டு வென்றப ரஞ்சுடர்
கோத்தங் காயர்தம் பாடி யிற்குர
வைபி ணைந்தஎம் கோவலன்
ஏத்து வார்தம்ம னத்து ளான்இட
வெந்தை மேவிய எம்பிரான்
தீர்த்த நீர்த்தடஞ் சோலை சூழ்திரு
வேங்க டம்மடை நெஞ்சமே!

ப. ரை : அன்று பார்த்தற்காய் - *முற்காலத்தில் அருச்சுனனுக்காக*, பாரதம் கைசெய்திட்டு - *பாரதப் போரிலே கையும் அணியும் வகுத்து*, வென்ற பரஞ் சுடர் - *வெற்றி பெற்ற மிக்க ஒளியை உடையவனும்*, அங்கு ஆயர்தம் பாடியில் - *அங்கே திருவாய்ப்பாடியிலே*, குரவை கோத்துப் பிணைந்த - *குரவைக்கூத்தில் கைகோத்து ஆடிய*, எம் கோவலன் - *எங்கள் கோபாலனும்*, ஏத்துவார் தம் மனத்து உளான் - *தன்னை வணங்குபவர்களுடைய நெஞ்சிலே இருப்பவனும்*, இடவெந்தை மேவிய எம்பிரான் - *திருஇடவெந்தையில் பொருந்திய எங்கள் தலைவனும் ஆனவன் எழுந் தருளியிருக்கும்*, தீர்த்த நீர்த் தடஞ் சோலை சூழ் - *தூய்மையான நீராலும் பெரிய பொழில்களாலும் சூழப்பட்ட*, திருவேங்கடம் - *திருவேங்கடத்தை*, நெஞ்சமே அடை -.

சி. கு : *குரவைக்கூத்து - ராஸக்ரீடை என்பதன் தமிழாக்கம். இஃது ஒவ்வோர் ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணபிரானாகப் பல உருவெடுத்துக் கை கோத்தாடும் கூத்து. இடவெந்தை - தொண்டை நாட்டில் கடல்மல்லைக்கு அருகே உள்ளது.*

வியா : நான்காம் பாட்டு : **பார்த்தற்காய்** - பார்த்தனுக்காக. **அன்று பாரதம் கைசெய்திட்டு** - பாரத ஸமரத்திலே கையும் அணியுமாக வகுத்துப் படை பொருத்தி. **வென்ற பரஞ்சுடர்** - தோல்வி துர்யோதநாதிகள் தலையிலேயாய் வெற்றி தன் தலையிலே ஆம்படியாகவாயிற்று அவர்கள் விஷயத்தில் பண்ணின ஓரம். **பரஞ்சுடர்** - தர்மபுத்ரன் தலையிலே அபிஷேகத்தை வைத்து த்ரௌபதி குழல்

---

வி : நாலாம் பாட்டு : பார்த்தற்காய் - *பார்த்தனுக்காக*. அன்று பாரதம் கைசெய்திட்டு - *பாரதப் போரிலே கையும் அணியுமாக வகுத்துப் படை பொருத்தி*. வென்ற பரஞ்சுடர் - *தோல்வி நூற்றுவர் தலையிலேயும்*[1] *வெற்றி தன் தலையிலேயும் ஆகுமாறு அன்றோ பாண்டவர் திறத்தில் இவன் பண்ணின ஓரம்*[2] *அமைந்தது*. பரஞ்சுடர் - *தருமன் தலையிலே முடி கவித்துத் திரௌபதி குழல்*

---

2. தலை - பக்கம். 2. ஓரம் - ஒருபக்கம் சாய்ந்த அன்பு.

முடித்த பின்பு திருமேனியில் பிறந்த ஔஜ்வல்யம். "ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் க்ருதக்ருத்ய:". **கோத்து இத்யாதி** - திருவாய்ப்பாடியிலே அங்கே குரவைக் கூத்திலே தன்னையும் ஒருவனாக இடையிலே தொடுத்து. **குரவை பிணைந்த எம் கோவலன்** - குரவைக்கூத்தை மன்றிலே ஆடி ஆஶ்ரிதர்க்கு அத்தைப் பின்னிக் கொடுத்தவன்[1]. **ஏத்துவார் தம் மனத்துளான்** - குரவைக்கூத்தை அநுஸந்தித்து அதிலே ஈடுபட்டு ஏத்துமவர்களுடைய ஹ்ருதயத்தை விடாதே வர்த்திக்குமவன். **இடவெந்தை** - பெரியபிராட்டியார்க்காகத் திருஇடவெந்தை யிலே வந்து ஸந்நிஹிதன் ஆனாப் போலே ஆயிற்று ஏத்துமவர்கள் நெஞ்சுவிட்டுப் போகமாட்டாதபடி. **தீர்த்த நீர் இத்யாதி** - எல்லா ஸம்ருத்தியையும் பண்ணிக் கொடுக்க வற்றான ஜல ஸம்ருத்தியை உடைத்தாய் ஶ்ரம ஹரமாய் இருந்துள்ள சோலையாலே சூழப்பட்ட.

---

*முடித்த பின்பு திருமேனியில் பிறந்த புகர்*[2]. "வீடணனை இலங்கைக்கு அரசனாக முடிசூட்டித் தான் செய்ய வேண்டுவதைச் செய்தவனாக இராமன் நெஞ்சாறல் நீங்கிக் களிப்புற்றான்" *(ரா. யு. 1:85) என்பது வான்மீகி கூற்று. இதனால் தன்னைச் சார்ந்தார்க்கு நன்மை கிட்டச் செய்வதனால் பெருமான் தான் மகிழ்கிறான் என்பது விளங்கும்.* **கோத்து அங்கு ஆயர்தம் பாடியில் குரவை பிணைந்த எம் கோவலன்** - *திருவாய்ப்பாடியின்கண் குரவைக்கூத்திலே தன்னையும் ஒருவனாக இடையிலே தொடுத்துக் குரவைக்கூத்தை மன்றிலே ஆடி, அடியார்க்கு அதனைப் பின்னிக் கொடுத்தவன்*[3]. **ஏத்துவார் தம் மனத்துளான்** - *குரவைக்கூத்தை நினைந்து அதிலே ஈடுபட்டு ஏத்துபவர்களுடைய நெஞ்சத்தை விடாமல் உறைபவன்.* **இடவெந்தை மேவிய எம்பிரான்** - *பெரியபிராட்டியார்க்காகத் திருஇடவெந்தை யிலே வந்து அணியன் ஆனாற் போலே ஏத்துபவர்கள் நெஞ்சுவிட்டுப் போக மாட்டாதவன் ஆயினான்.* **தீர்த்த நீர்த் தடம் சோலை சூழ்** - *எல்லா வளத்தையும் பண்ணிக் கொடுக்க வல்ல நீர் வளத்தை உடையதாய் அயர்வு அகற்றும் சோலை யாலே சூழப்பட்டதாய் உள்ள,* **திருவேங்கடம் அடை நெஞ்சமே -.**

**ஒப்புமைப் பகுதி**

**1. பாரதப் போர்க்கு வேண்டுவன செய்தவன்**

*" பெரிய பாரதம் கைசெய்து "*

*" பெரிய பாரதம் - மஹாபாரதம் என்கிறார். கைசெய்து - அபரிச்சேத்ய மான பாரத ஸேனையைக் கையும் அணியும் வகுத்து யுத்தம் பண்ணு வித்தபடி "* *தி. வா. மொ. 5:10:1-24*

*[அபரிச்சேத்யம் - அளவிட முடியாதது]*

**2. பரஞ்சுடர்**

*" பார்மல்கு சேனை அவித்த பரஞ்சுடரை "*

*" பரஞ்சுடரை - 'ஆயுதம் எடுக்க ஒண்ணாது' என்றார்களே. அதுக்காக ஸேநாதூளியும் முட்கோலும் சிறுவாய்க் கயிறும் தேருக்குக் கீழே*

---

1. பின்றிக் குடுத்தவன்.
2. புகர் - ஒளி. 3. பின்னிக் கொடுத்தல் - அமைத்துத் தருதல்.

நாற்றின திருவடிகளும் சிறுசதங்கையுமாய் ஸாரத்ய வேஷத்தோடே நின்றநிலை சொல்லுகிறது" தி. வா. மொ. 3:5:7-36

3. **குரவைக்கூத்து**

" குரவையாச்சியரோடு கோத்ததும் "

" கோக்கை - தொடுக்கை. கைகோத்துக்கொண்டு ஆடும் கூத்திறே குரவைக் கூத்தாகிறது " தி. வா. மொ. 6:4:1-36

" குரவை பிணைந்தவர் - பெண்கள் கோவையிலே தன்னைத் தொடுத்தான் " தி. வா. மொ. 4:2:2-24

4. **கோவலன்**

" கோவலன் - ஆச்ரயித்தாரை ரக்ஷிக்குமிடத்துத் தாழவந்து அவதரித்து ரக்ஷிக்குமவன். பிசாசத்துக்கு மோக்ஷ ப்ரதனாய் வழிநடத்தினவனிறே. ஆச்ரிதர் சிறுமை பாராதவனிறே " தி. வா. மொ. 10:1:6-24

[மோக்ஷ ப்ரதன் - வீடு தருமவன்]

"கோவலன் - ஆபிஜாத்யம்" அம. 10. பெ. உரை.

[ஆபிஜாத்யம் - குடிப்பிறப்பு]

(74)

## 75

**வண்கை யான்அவு ணர்க்கு நாயகன்**
**வேள்வி யில்சென்று மாணியாய்**
**மண்கை யால்இரந் தான்ம ராமரம்**
**ஏழும் எய்தவ லத்தினான்**
**எண்கை யான்இம யத்து ளான்இருஞ்**
**சோலை மேவிய எம்பிரான்**
**திண்கை மாதுயர் தீர்த்த வன்திரு**
**வேங்க டம்மடை நெஞ்சமே!**

**ப. ரை :** **வண் கையான் அவுணர்க்கு நாயகன்** - வள்ளன்மை பொருந்திய கையை உடையவனாகவும் அவுணர்க்குத் தலைவனாகவும் இருந்த மாவலியினது, **வேள்வியில் மாணியாய்ச் சென்று** - வேள்விச் சாலையில் திருமணமாகாத கோலத்தனாய்ச் சென்று, **கையால் மண் இரந்தான்** - தன்னுடைய திருக்கைகளாலே மண்ணை வேண்டி நின்றவனும், **மராமரம் ஏழும் எய்த வலத்தினான்** - ஏழு மராமரங்களைத் துளைத்த ஆற்றல் உடையவனும், **எண் கையான்** - எண்ணற்ற தோள்களை உடையவனும், **இமயத்து உளான்** - இமயமலையின்கண் திருப்பிரிதியிலே எழுந்தருளியிருப்பவனும், **திண் கை மா துயர் தீர்த்தவன்** - வலிய துதிக்கை

---

**75.** 3 : 3 யத்துள். 4 : 1 திண்கைம்.

*யையுடைய யானையினது துன்பத்தைப் போக்கியவனுமான எம்பெருமான் எழுந் தருளியிருக்கும்,* **திருவேங்கடம் நெஞ்சமே அடை** –.

**சி. கு :** *எண் கரத்தான் - காஞ்சிமாநகரில் உள்ள அட்டபுயகரம் என்னும் திருக்கோயிலில் எட்டுக் கையனாய்க் காட்சி தருபவன் என்றும் பொருள் கொள்ள லாம். கை மா - துதிக்கையுடைய யானை.*

வியா : அஞ்சாம் பாட்டு : **வண் கையான் இத்யாதி** - உதாரனாய் இருந்தான் ஆயிற்று. ஆஸுர ப்ரக்ருதிகளுக்குத் தலைவனாய் இருந்தானே ஆகிலும் ஔதார்யம் என்று ஒரு குணம் கிடக்கையாலே அம்பாலே அழிக்கலாய் இருந்தது இல்லை. இவன்தான் கொடுக்க[1] உகந்திருந்தான்; அவன் உகந்த வழியே வாங்கு வோம் என்று தன்னை இரப்பாளன் ஆக்கி வாங்கினான் ஆயிற்று. **மாணியாய் மண் கையால் இரந்தான்** - அவனுடைய யஜ்ஞ வாடத்திலே இரப்பிலே தகண் ஏறின வடிவைக் கொண்டு சென்று, தன் கையிலே பருத்தி பட்ட பன்னிரண்டும் பட்ட பூமியை இரந்தான் ஆயிற்று. **மராமரம்** - ஆஶ்ரிதரை விஶ்வஸிப்பித்தும் கார்யம் செய்து கொடுக்குமவன்[2]. **வலத்தினான்** - மிடுக்கை உடையவன். **எண் கையான்** - ஆஶ்ரித விரோதி நிரஸநத்துக்கு உறுப்பான திவ்யாயுதங்களைத் தரிக்கைக்கும் பல திருக்கைகளை உடையவன் என்னுதல். அன்றிக்கே, திருவட்ட புயகரத்தைச் சொல்லிற்று ஆகவும் ஆம். **இமயத்து உளான்** - ஹிமவானில் திருப்பிரிதியிலே வந்து ஸந்நிஹிதன் ஆனவன். **இருஞ் சோலை இத்யாதி** -

---

வி : அஞ்சாம் பாட்டு : **வண் கையான் அவுணர்க்கு நாயகன் வேள்வியில் சென்று** - *மாவலி வள்ளலாய் இருந்தான். அசுரர்களுக்குத் தலைவனாய் இருந்த போதிலும், வண்மை என்னும் ஒரு பண்பு கிடக்கையாலே, அம்பாலே அழித்தற்கு உரியவனாய் அமைந்தான் அல்லன். "இம் மாவலிதான் கொடுப்பதில் உகந்திருந் தான்; அவன் உகந்த வழியே வாங்குவோம்" என்று தன்னை இரப்பாளனாக்கி வாங்கினான்.* **மாணியாய் மண் கையால் இரந்தான்** - *அவனுடைய வேள்விச் சாலையிலே இரப்பிலே தகண் ஏறின*[3] *வடிவைக் கொண்டு சென்று, தன் கையிலே பருத்தி பட்ட பன்னிரண்டும் பட்ட*[4] *மண்ணை இரந்தான்.* **மராமரம் ஏழும் எய்த வலத்தினான்** - *அடியாரை நம்புமாறு செய்வித்தும் அவர்க்கு வேண்டுவன செய்து கொடுப்பவன். வலத்தினான் - மிடுக்கை உடையவன்.* **எண் கையான்** - *அடியார் பகையினை அழித்தற்கு உறுப்பு ஆகிய திருப்படைகளைத் தாங்குவதற்கும் பல திருக்கைகளை உடையவன். ஆல்லது, திருவட்டபுயகரத்தைச் சொல்லியதாகவும் கொள்ளலாம்.* **இமயத்து உளான்** - *பனிமலையில் திருப்பிரிதியிலே வந்து கிட்டி நிற்பவன்.* **இருஞ் சோலை மேவிய எம்பிரான்** - *மிலேச்சர் உறையும் இடமான*

---

1. குடுக்க. 2. குடுக்குமவன்.

3. தகண் ஏறல் - தழும்பு ஏறுதல். 4. பருத்தி பட்ட பன்னிரண்டும் படுகை - கொட்டை வாங்கி, பஞ்சு சுருட்டி, நூலாக்கியும்; பாவோடி, நெய்து, மடித்து, விற்கும்படியும்; தோய்த்து, உலர்த்தி, உடுத்து, கிழித்து, விடும்படியும் மக்களுக்குப் பயன்படுகிறது பருத்தி. அதுபோல, மண்ணை இறைவன் தன்னிடமிருந்து பிரித்து, ஐந்து பருப்பொருள்களையும் பகுத்துக்கூட்டி, உலகங்களாக்கி, தேவர் முதலியோரைப் படைத்து, உலக நடைமுறையினை உண்டாக்கி, இடையில் நிகழும் படைப்பினைச் செய்து, காத்து, நான்முகன் முதலானோர்க்கு உலகங்களை உரித்தாக்கி, ஊழி வெள்ளத்திலே எடுத்து, எயிற்றிலே வைத்து, வயிற்றிலே வைத்து, உமிழ்ந்து, பின்பு சேர்த்துப் பலவாறாகச் செய்கிறான். இப்படிப் பருத்திபோலப் பல்வேறு மாற்றங்களுக்கு ஆளாதல்.

ம்லேச்ச பூமியான தெற்கில் திருமலையிலே வந்து ஸந்நிஹிதன் ஆனவன். **திண் கை மா துயர் தீர்த்தவன்** - ஸ்ரீகஜேந்த்ராழ்வான் முதலையாலே இடர் பட்டு[1] ப்ரதிக்ரியை பண்ண மாட்டாத அளவிலே வந்து அவனுடைய துஃக்கத்தைப் போக்கி ரக்ஷித்தவன். **திண் கை** - தன்னை ஒழிந்தவற்றை[2] அடைய இடர் படுத்துமவன் தான் இடர்பட அத்தைப் பரிஹரித்தான் என்கை. **திருவேங்கடம்** - ஸ்ரீகஜேந்த்ராழ்வான் வ்யாபாரம் ஒவுந்தனையும் பார்த்திருந்து, பிற்பாடனான குறை தீர ஆஶ்ரிதர்க்கு முற்பாடனாய் உதவுகைக்காக வந்திருக்கிற தேசம் ஆயிற்று.

---

*தெற்கின்கண் உள்ள திருமலையிலே வந்து பொருந்தி இருப்பவன்.* **திண் கை மா துயர் தீர்த்தவன்** - *கயேந்திராழ்வான் முதலையாலே ஈடுபட்டு*[3] *அதற்கு எதிராக யாதும் செய்யமாட்டாத அளவிலே வந்து அவனுடைய துன்பத்தைப் போக்கிக் காத்தவன்.* **திண் கை** - *தன்னை ஒழிந்த பிறவற்றை எல்லாம் இடர்ப்படுத்துபவன் தான் இடர்ப்பட அதனைப் போக்கினான் என்கிறார்.* **திருவேங்கடம்** - *கயேந்திராழ்வான் செயல் ஒவுந்தனையும்*[4] *பார்த்திருந்து பிற்பாடனான குறை*[5] *தீர அடியார்க்கு முற்பாடனாய் உதவுவதற்காக வந்திருக்கும் இடம்.* **அடை நெஞ்சமே -.**

## ஒப்புமைப் பகுதி

1. வள்ளன்மையுடைய மாவலி

*" மண்ணும் விண்ணும் மகிழக் குறளாய் வலம்காட்டி "*

*" வலங்காட்டி - ஔதார்யம் என்று ஒரு குணலேசம் கிடக்கையாலே ராவணாதிகளைப்போலே அம்பாலே அழிக்கப்போகாதே; அழகாகிற பலத்தைக் காட்டி வாய்மாளப் பண்ணும்படி "*
*தி. வா. மொ- 6:9:2-36*

*" அன்றியும் இத்யாதி - இப்படி அழியச் செய்யவேண்டும் ப்ராதிகூல்யமேயன்றியே, ஆநுகூல்யலவம் உடையவனாய் இருக்குமிறே மஹாபலி; அதாவது ஔதார்யகுணம் என்பது ஒன்று உடையவனாகையால் அவனைச் சடக்கென அழிய ஒண்ணாமையாலும்... 'அவன் கொடுக்க உகப்பன்' என்னுமத்தை நினைத்துத் தன்னை இரப்பாளனாக்கி அவன் பக்கலிலே சென்று நீர் ஏற்று பூமியை வாங்கி இந்த்ரனுக்குக் கொடுத்தபடி சொல்லுகிறது "* *சி. ம. 45. பெ. உரை.*

*[ப்ராதிகூல்யம் - தீமை. ஆநுகூல்யம் - நன்மை. லவம் - இம்மியளவு. ஔதார்யம் - வள்ளன்மை.]*

2. மாணி

*" மாணாய் - 'உண்டு' என்று இட்டபோதொடு, 'இல்லை' என்று தள்ளிக் கதவடைத்தபோதொடு வாசியற முகம் மலர்ந்துபோம்படி இரப்பிலே தழும்பேறின வடிவையுடையனானபடி "* *தி. வா. மொ.1:4:3-36*

---

1. ஈடுபட்டு. 2. ஒழிந்தவத்தை.
3. ஈடுபட்டு - வருந்தி. 4. ஒவுந்தனை - தளர்ந்து ஓயும்வரை. 5. பிற்பாடனான குறை - காலம் கழிந்து உதவிய குறை.

" மாணி - அர்த்தித்வத்திலே தகணேறினபடி "
திருவா. மொ. 1:10:1-24

[அர்த்தித்வம் - இரப்பு]
பாட்டு 46இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

3. மராமரம் எய்த வலத்தினான்

" சிலையேய் தழைய மராமரங்கள் ஏழும் எய்தாய் - மஹாராஜரை விச்வஸிப்பித்துக் கார்யஞ் செய்தபடி. சினை என்று பணை, ஏய்கை நெருங்குகையாய், பணைகளோடு பணைகள் நெருங்கித் தழைத்து, நினைத்தபடி இலக்குக் குறிக்க ஒண்ணாதபடி நின்ற மராமரங்கள் ஏழையும் எய்தவனே! இத்தால் ஆச்ரிதர் தன்னுடைய ரக்ஷணத்திலே சங்கித்தால், சங்காநிராகரணம் பண்ணி ரக்ஷிக்குமவன் என்றபடி "
தி. வா. மொ. 1:5:6-36

[விச்வஸிப்பித்து - நம்பச்செய்து. சங்கித்தால் - ஐயுற்றால். சங்காநிராகரணம் - ஐயம் அறுத்தல்.]

" கணையொன்றாலே ஏழ்மரமும் எய்த - 'ஏகேந மஹேஷுணா' என்று கைக்கு எட்டிற்றோர் அம்பாலே. மஹாராஜர் தனியருமாய், வெறுவியருமாய், தமையன் பகையுமாய், மநுஷ்ய ஸஞ்சாரம் இல்லாத தனிக் காட்டிலே இருக்க, பெருமாளையும் இளையபெருமாளையும் தூரத்திலே கண்டு 'வாலி வரவிட்டவர்கள்' என்று அஞ்சிஓடித் திருவடியை வரவிட்டு அறிவித்த பின்பு, 'நாம் உம்முடைய கார்யம் செய்ய வல்லோம்' என்று மழுவேந்திக்கொடுத்தும் அவர் கார்யம் செய்தாரிறே. ஏழ்மரமும் எய்த - ஒன்றிரண்டாலே மஹாராஜர் அதிசங்கை தீர்தலாய் இருக்க ஏழு மராமரத்தையும் எய்த "
தி. வா. மொ. 9:1:2-36

[மநுஷ்ய ஸஞ்சாரம் - ஆள் இயக்கம். அதிசங்கை - ஐயம்.]

4. யானையின் துயர் தீர்த்தவன்

" பூந்தண் புனற்பொய்கை யானை இடர்கடிந்த - பரப்பு மாறப் பூத்துக் குளிர்ந்த புனலை உடைத்தான பொய்கையிலே போய்ப்புக்கு முதலையாலே இடர்பட்ட ஆனையினுடைய து:க்கத்தை வாஸநையோடே போக்கினவன். 'பூவிற் செவ்வியழியாமே திருவடிகளிலே இட வேணும்' என்று நினைத்து அது பெறாமையால் வந்த இடரைப் போக்கின! "
தி. வா. மொ. 2:8:2-36

" ஆனையின் நெஞ்சிடர் தீர்த்த பிரான் - 'இப் பூவிற்செவ்வி மாறுவதற்கு முன்னே திருவடிகளிலே சாத்தப்பெறுகிறிலோம்!' என்கிற இடரைப் போக்கினான் ஆயிற்று. அன்றிக்கே, 'நாம் அடியாக ஸர்வேச்வரனுக்கு அவத்யம் வருகிறதோ?' என்னும் இடராதல். அதாவது - 'இவன் இப்படி க்லேசிக்க அவன் ரக்ஷித்தபடி அழகிதாய் இருந்தது! இவனையோ நாம் இப்படி ரக்ஷகன் என்று நினைத்திருந்தது? என்று நாட்டார் இவனை இப்படி நினைக்கிற் செய்வது என்?' என்று இடர்பட்டது "
தி. வா. மொ. 7:10:8-36

[அவத்யம் - குறை: கண்ணழிவு. க்லேசிக்க-வருந்த.]

" அதனை இடர்கடிந்தான் - அப்படி நோவுபட்டிருக்கிற ஸ்ரீகஜேந்த்ராழ்வானை, அம்முதலை பிடித்த ஸ்ரீபாதத்தை தன் திருக்கைகளாலே ஒத்துவது, திருப்பவளத்தாலே ஊதுவது, திருப்பரிவட்டத் தலையாலே ஒத்துவது ஆனான் " சி. ம. 51. பெ. உரை.

[குறிப்பு : யானைக்குப் பூவை உரியகாலத்தில் பெருமானுக்கு இடமுடியவில்லையே என்பதும் இறைவன் சிறப்புக்கு நம்மால் இழுக்கு வருகிறதோ என்பதும் இடர். பெருமான் நினைப்பில் இடராவது முதலையால் யானைக்கு உடம்பளவில் நேர்ந்த வருத்தம்]

" கைம்மா துன்பொழித்தாய் - ஜந்மவ்ருத்த ஜ்ஞாநங்கள் ஒன்றும் இன்றிக்கே இருக்கிற ஆனையானது பூர்வ ஜந்ம வாஸனையாலே, முட் பாய்ந்தவாறே 'அம்மே' என்பாரைப்போலே, நோவுபட்டவாறே திருவடிகளை ஸ்மரிக்க, ஸர்வாதிகனான தன் மேன்மை பாராதே மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்து உபகார ஸ்ம்ருதியாலே ஸ்நேஹிகள் சொல்லும் பாசுரத்தை பாவபந்தம் இல்லாத நான் சொன்னேன் "
திரு. வா. மொ. 5:1:7-36

[ஜந்மம் - பிறப்பு. வ்ருத்தம் - ஒழுக்கம். ஜ்ஞாநம் - அறிவு. பூர்வஜந்ம வாஸனை - முற்பிறப்புப் பழக்கம். ஸர்வாதிகன் - எல்லாருக்கும் மேம்பட்டவன். உபகார ஸ்ம்ருதி - உதவியை நினைவுகூர்தல். பாவபந்தம் - ஈடுபாடு.]

(75)

## 76

**எண்டி சைகளும் ஏழு லகமும்**
**வாங்கிப் பொன்வயிற் றில்பெய்து**
**பண்டொ ராலிலைப் பள்ளி கொண்டவன்**
**பான்ம திக்கிடர் தீர்த்தவன்**
**ஒண்டி றல்லவு ணன்னு ரத்துகிர்**
**வைத்த வன்னொள்ளெ யிற்றொடு**
**திண்டி றல்லரி யாய வன்திரு**
**வேங்க டம்மடை நெஞ்சமே!**

**ப. ரை :** **பண்டு எண் திசைகளும் ஏழ் உலகமும் வாங்கி** - முற்காலத்தில் எட்டுத் திசைகளையும், ஏழு உலகங்களையும் வெள்ளம் கொள்ளாமல் எடுத்து, **பொன் வயிற்றில் பெய்து** - அழகிய திருவயிற்றிலே வைத்து, **ஓர் ஆல் இலைப் பள்ளி கொண்டவன்** - ஓர் ஆலந்தளிரிலே படுத்திருந்தவனும், **பால் மதிக்கு இடர் தீர்த்தவன்** - பால் போலும் வெள்ளிய சந்திரனுக்கு நேர்ந்த துன்பத்தைக் களைந்தவனும், **ஒள் எயிற்றொடு திண் திறல் அரி ஆயவன்** - ஒளி பொருந்திய பற்களோடு சலியாத மிடுக்கையுடைய நரசிங்கத்தின் வடிவு கொண்டவனாய், **ஒண் திறல் அவுணன் உரத்து உகிர் வைத்தவன்** - மிக்க மிடுக்கையுடைய அசுரன் ஆகிய

*இரணியன் மார்பில் நகங்களை வைத்துக் கிழித்தவனும் ஆகிய பெருமான் எழுந் தருளியுள்ள, திருவேங்கடம் நெஞ்சமே! அடை-.*

**சி. கு :** *ஒண்டிறல்லவுணன், அவுணன்னுரத்து - விரித்தல் விகாரங்கள்.*

வியா : **ஆறாம் பாட்டு : எண் திசை இத்யாதி** - எட்டுத் திக்குக் களோடே கூடி இருந்துள்ள லோகங்கள் ஏழையும் வாங்கி ஶ்லாக்யமான திருவயிற்றிலே வைத்துப் பண்டு பவனாய் இருப்பது ஒரு ஆலந்தளிரிலே கண்வளர்ந் தருளின அகடிதகடநா ஸாமர்த்யத்தை உடையவன். **பால்மதிக்கு இடர் தீர்த் தவன்** - பால்மதி உண்டு சந்த்ரன், அவனுக்கு தர்மிலோப பர்யந்தமாக ஓர் இடர் வர, அது அவ்வளவு ஆகாதபடி பரிஹரித்து அவன் இடரைப் போக்கினவன். **ஒண் திறல் இத்யாதி** - மிக்க மிடுக்கை உடையனாய் இருந்துள்ள ஹிரண்யனுடைய உரஸ்ஸிலே திருவுகிரை வைத்தவன்; அதுக்கு உறுப்பாக அழகிய திருவெயிற் றோடே கூடச் சலியாத மிடுக்கையுடைய நரஸிம்ஹமானவன். திருமந்த்ரம் சொன்ன சிறுக்கனுக்கு உதவினவன், திருநாமம் சொன்னார் எல்லாருடையவும் ஸம்ஸார துரிதத்தைப் போக்குகைக்காக வர்த்திக்கிற திருமலையை அடையப் பாராய்.

---

வி : ஆறாம் பாட்டு : எண் திசைகளும் ஏழ் உலகமும் வாங்கிப் பொன் வயிற்றில் பெய்து பண்டு ஓர் ஆல் இலைப் பள்ளி கொண்டவன் - *எட்டுத் திக்கு களோடு கூடிய உலகங்கள் ஏழையும் வாங்கி மேலான திருவயிற்றிலே வைத்துப் பண்டு முகிழ் விரிந்த அளவான ஓர் ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின செயற் கருஞ்செயல் செய்யும் திறமையினை உடையவன்.* பால்மதிக்கு இடர் தீர்த்தவன் - *பால்மதி - சந்திரன். அவனுக்கு உடல் தேய்ந்து அழியும்படியான ஓர் இடர்வர, அஃது அவ்வளவு ஆகாதவாறு தீர்த்து அவன் இடரைப் போக்கியவன்.* **ஒண் திறல் அவுணன் உரத்து உகிர் வைத்தவன் ஒள் எயிற்றொடு திண் திறல் அரி ஆயவன் திருவேங்கடம் அடை நெஞ்சமே** - *மிக்க மிடுக்கை உடையவனாய் இருந்த இரணியனுடைய மார்பிலே திருவுகிரை வைத்தவன்; அதற்கு உறுப்பாக அழகிய திருவெயிற்றோடு கூடச் சலியாத மிடுக்கையுடைய ஆளரியானவன். திருமந்திரம் சொன்ன சிறுக்கனுக்கு உதவியவன், திருப்பெயர் சொன்னார் எல்லாருடைய பிறவித்துன்பத்தையும் போக்குவதற்காக உறையும் திருமலையை அடையப் பாராய்.*

### ஒப்புமைப் பகுதி

1. உலகங்கள் அனைத்தையும் வயிற்றில் பெய்தவன்

> " *ஞாலம் எல்லாம் உண்ட - தளர்ந்தார் தாவளம். குணாகுண நிரூபணம் பண்ணாதே ஆபத்தே கைம்முதலாக வயிற்றிலே வைக்கை* "
>
> *தி. வா. மொ. 6:1:2-24*

> *[தளர்ந்தார் தாவளம் - இடர் உற்றவர்க்குத் தங்குமிடம். குணாகுண நிரூபணம் - குணங்களையும் குற்றங்களையும் ஆராய்தல்.]*

> " *உலகு ஏழும் முற்றும் விழுங்கும் முகில் வண்ணன் - லோகம் ஒன்றும் பிரிகதிர்ப்படாதபடி தன் வயிற்றிலே வைத்து ரக்ஷித்து, ப்ரஜை பால்*

குடித்தால் தாயுடம்பு நிறம் பெறுமாப்போலே ஸ்ரமஹரமான வடிவை யுடையவன் ''
இ: தி. 94 பெ. உரை.

[ரக்ஷித்து - காத்து. ப்ரஜை - பிள்ளை.]

" ஞாலம் ஏழும் உண்டான் - சிறு ப்ரஜைகள் புரோவர்த்தி பதார்த்தங்களை எடுத்து வாயில் இடுமாபோலே பூமிப்பரப்படைய வாயிலே வைத்தான் ஆய்த்து''
அம. 9 பெ. உரை.

[புரோவர்த்தி - முன்னால் இருப்பது. பதார்த்தங்கள் - பொருள்கள்.]
பாட்டு 39இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

2. **ஆலிலைப் பள்ளி கொண்டவன்**

" ஆலின் நீள் இலை ஏழ் உலகும் உண்டு அன்று நீ கிடந்தாய் - ஓராலிலை யாவது, அதுதான் முகிழ்விரியாத அளவாய் இருப்பது, அதிலே, ஏழுலகங்களையும் வயிற்றிலே வைத்து, ஒரு யசோதாதிகளும்கூட உதவாத தசையிலே கண்வளர்ந்தருளினாய் ''
தி. வா. மொ. 6:2:4-36

[யாசோதாதிகள் - யசோதை முதலானவர்கள்]

(76)

## 77

**பாரு நீரெரி காற்றி னோடா**
**காய மும்மிவை யாயினான்**
**பேரு மாயிரம் பேச நின்றபி**
**றப்பி லிபெரு கும்மிடம்**
**காரும் வார்பனி நீள்வி சும்பிடைச்**
**சோரு மாமுகில் தோய்தரச்**
**சேரு வார்பொழில் சூழ்எ ழில்திரு**
**வேங்க டம்மடை நெஞ்சமே!**

ப. ரை : **பாரும் நீர் எரி காற்றினோடு ஆகாயமும் இவை ஆயினான்** - மண் நீர், நெருப்பு, காற்று, விண் என்னும் ஐந்து பருப்பொருளுமாக இருப்பவனும், **ஆயிரம் பேரும் பேச நின்ற பிறப்பு இலி** -'ஆயிரம் திருப்பெயர்களாலும் சொல்லப் படுகின்ற வினையடியாக வரும் பிறப்பு இல்லாதவனும் ஆகிய பெருமான், **பெருகும் இடம்** - வளர்கின்ற இடம், **நீள் விசும்பிடை காரும் வார் பனி சோரும்** - பெரிய வானத்தினின்றும், மழைநீரும் மிக்க பனித்துளியும் சொரியும்படி இருப்பதும், **மாமுகில் தோய்தரச் சேரு வார்பொழில் சூழ் எழில்** - பெரிய மேகங்கள் படியுமாறு சேர்ந்த உயர்ந்த சோலைகளாலே சூழப்பட்டு அழகை உடைத்தாக இருப்பதுமான, **திருவேங்கடம் நெஞ்சமே அடை -.**

---

**77.** 1 : 5 காச. 3 : 5 சேரும். 3 : 7 தேய்தரச். 4 : 1 சேரும். 4 : 4 யில்திரு.

சி. கு : ஆகாயமும் என வேறு பிரித்துக் கூறினார், அஃது இல்லை என்பாரை மறுத்தற் பொருட்டு. நம்மாழ்வாரும் இக்கருத்தே பற்றித் 'திட விசும்பு' என அடைகொடுத்து வழங்குவதும் கருதத்தக்கது.

வியா : ஏழாம் பாட்டு : **பாரும் இத்யாதி** - பூத பஞ்சகத்தையும் சொல்லுகையாலே ஜகதாகாரனாய் நிற்கும்படியைச் சொல்லிற்று. தான் கொடுத்த[1] உடம்பைக் கொண்டு தன்னுடைய திருநாமத்தைச் சொல்லி ஆஶ்ரயிக்கலாம்படி நிற்கிறவன்[2]. **பிறப்பிலி பெருகும் இடம்** - அகர்மவஶ்யனாய் இதர விஸஜாதீய னாய் ஜகத்தின் படியன்றிக்கே இருக்கிறவன் வர்த்திக்கிற இடம். **காரும் இத்யாதி** - மேகங்களும், மிக்க பனியும் பெரிய ஆகாசத்தினிடையிலே சொரிவதாய், பெரிய மேகங்கள் படியும்படி நீண்ட சோலை சூழப்பட்ட திருவேங்கடம்; பெருகின மிக்க ஜலத்தை உடைத்தாய், ஆகாசத்திலே வர்ஷிக்கிற மேகங்களானவை. **'சேரும்'** என்று பாடமானபோது சேருகிற - ஸ்பர்சிக்கும்படி சேருகிற; கிட்டுகிற. பரந்த பொழிலாலே சூழப்பட்டு எழிலை உடைத்தான திருமலையை. காரும் - பெருகுகை. வார் - மிகுகை. பனி - நீர்[3].

---

வி : ஏழாம் பாட்டு : பாரும் நீர் எரி காற்றினோடு ஆகாயமும் இவை **ஆயினான் பேரும் ஆயிரம் பேச நின்ற** - பருப்பொருள் ஐந்தனையும் சொல்லுகை யாலே உலகமே திருமேனியாய் நிற்பது சொல்லப்பட்டது. தான் கொடுத்த உடம்பைக் கொண்டு தன்னுடைய திருப்பெயரைச் சொல்லி வணங்கலாம் வண்ணம் நிற்கிறவன். **பிறப்பிலி பெருகும் இடம்** - வினை வயப்படாதவனாய்ப் பிற இனத்தினின்றும் வேறுபட்டவனாய் உலக இயல்புக்கு அப்பாற்பட்டவனாய் இருப்பவன் வளரும் இடம். **காரும் வார் பனி நீள் விசும்பிடைச் சோரும் மாமுகில் தோய்தரச் சேரு வார் பொழில் சூழ் எழில் திருவேங்கடம்** - மேகங்களும் மிக்க பனியும் பெரிய வானத்தினின்றும் சொரிவதாய்ப் பெரிய மேகங்கள் படியுமாறு நீண்ட சோலையினால் சூழப்பட்டதாய் உள்ள திருவேங்கடம். அல்லது, பெருகிய மிக்க நீரை உடைத்தாய் வானத்திலே பொழிகின்ற மேகங் களானவை தோய்தரச் சேரு வார் பொழில் சூழ் எழில் திருவேங்கடம் என்றும் கூறலாம். காரும் - பெருகுகை. வார் - மிகுகை. பனி - நீர். **'சேரும்'** என்று பாடமான போது, சேர்ந்துள்ள பரந்த பொழிலாலே சூழப்பட்டு எழிலை உடைத் தான திருமலையை என்று பொருள்படும். சேருகிற - தொடும்படி சேருகிற; கிட்டுகிற. **நெஞ்சமே அடை** -.

## ஒப்புமைப் பகுதி

பிறப்பிலி

> *" பிறப்பில் பல்பிறவிப் பெருமானை - பிறக்கைக்கு ஹேதுவான கர்ம மின்றிக்கே இருக்கச்செய்தே, கர்மவச்யரும் பிறவாத ஜன்மங்களிலே பிறக்கவல்ல ஸர்வாதிகனை. 'அஜாயமாநோ பஹுதா விஜாயதே' "*
>
> *தி. வா. மொ. 2:9:5-36*
>
> *[ஹேது - காரணம். கர்மம் - வினை. கர்ம வச்யர்-வினை வயப்பட்டவர்.]*

(77)

---

1. குடுத்த. 2. இருக்கிறவன். 3. அச்சுப் பிரதியில் இல்லை.

# 78

அம்ப ரம்மனல் கால்நி லம்சலம்
ஆகி நின்றஅ மரர்கோன்
வம்பு லாமலர் மேல்ம லிமட
மங்கை தன்கொழு நன்னவன்
கொம்பின் அன்னஇ டைம டக்குற
மாதர் நீள்இத ணந்தொறும்
செம்பு னம்மவை காவல் கொள்திரு
வேங்க டம்மடை நெஞ்சமே!

ப. ரை : அம்பரம் அனல் கால் நிலம் சலம் ஆகி நின்ற - விண், நெருப்பு, காற்று, மண், நீர் ஆகிய ஐந்து பருப்பொருள்களும் தானேயாய் இருக்கின்ற, அமரர் கோன் - தேவர்களுக்குத் தலைவனும், வம்பு உலாம் மலர்மேல் மலி மட மங்கைதன் - மணம் வீசுகின்ற தாமரை மலரின்மேலே பொருந்திய மடப்பம் நிறைந்த திருமகளுக்கு, கொழுநன் அவன் - கணவனுமாக இருக்கும் பெருமான் எழுந்தருளியுள்ள, நீள் இதணம்தொறும் - உயர்ந்த பரண்கள்தோறும் இருந்து, கொம்பின் அன்ன இடை மடக் குற மாதர் - வஞ்சிக் கொம்பு போலும் இடுப்பையும், மடப்பத்தையும் உடைய குறப்பெண்கள், செம் புனம் அவை காவல் கொள் - செவ்விய கொல்லை நிலங்களைக் காவல் செய்துகொண்டிருக்கும், திருவேங்கடம் நெஞ்சமே அடை -.

சி. கு : அம்பரம்மனல், செம்புனம்மவை ஆகியன விரித்தல் விகாரம். கொம்பின் அன்ன என்பதில் இன் அல்வழிக்கண் வந்த சாரியை.

வியா : எட்டாம் பாட்டு : அம்பரம் இத்யாதி - ஜகதாகாரனாய் நிற்கும் படியைச் சொல்லுகிறது. அமரர் கோன் - இத்தால், அஸாதாரணமான திவ்ய விக்ரஹயுக்தனாய் அயர்வறும் அமரர்கள் அதிபதியாய் இருக்கும்படியைச் சொல்லுகிறது. வம்பு உலாம் - நித்யஸூரிகள் ஓலக்கம் கொடுக்கப்[1] பிராட்டியும் தானுமாய் பரமபதத்திலே இருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. செவ்வி மாறாத

---

வி : எட்டாம் பாட்டு : அம்பரம் அனல் கால் நிலம் சலமாகி நின்ற - உலகமே வடிவாய் நிற்றலைச் சொல்கிறது இது. அமரர் கோன் - இதனால் சிறப்புப் பொருந்திய திருமேனியோடு கூடியவனாய், அயர்வறும் அமரர்கள் அதிபதியாய் இருத்தல் சொல்லப்படுகிறது. வம்பு உலாம் மலர்மேல் மலி மட மங்கை தன் கொழுநன் அவன் - இஃது அயர்வுறும் அமரர்கள் ஓலக்கம் கொடுக்கப்[2] பிராட்டியும் தானுமாய்த் திருநாட்டிலே இருக்கும் இருப்பைச் சொல்லுகிறது.

---

**78.** 1 : 6 நின்றவன். 1 : 7 அமர்கோன்.

1. குடுக்க.
2. ஓலக்கம் கொடுத்தல் - அவையாக இருத்தல்.

மலரை வாஸஸ்தானமாக உடைய பெரியபிராட்டியார்க்கு வல்லபனானவன். **கொம்பு இத்யாதி** - வஞ்சிக் கொம்போடு ஒத்த இடையையும் ஆத்ம குணங்களையும் உடைய குறமாதர் உண்டு குறப்பெண்கள், ஒக்கத்தை உடைத்தான பரண்கள் தோறும். **செம் புனம்** - பாலைநிலமாகையாலே நில ப்ரயுத்தமான சிவப்பைச் சொல்லுதல்; தினை முற்றி நுனி பழுத்த அளவிலே சிவந்தவை என்னுதல். கிளிகள் புறாக்கள்[1] கடியாதபடி[2] நோக்குகிற திருமலையை.

---

*செவ்வி மாறாத மலரை உறையுளாக உடைய பெரியபிராட்டியார்க்குக் கேள்வனானவன்.* **கொம்பின் அன்ன இடை மடக் குற மாதர் நீள் இதணம்தொறும்-** *வஞ்சிக் கொம்போடு ஒத்த இடையையும் பெண்களுக்குரிய நற்பண்புகளையுமுடைய குறப்பெண்கள் ஒக்கத்தையுடைய[3] பரண்கள்தோறும்.* **செம் புனம் அவை காவல் கொள் திருவேங்கடம்** - *செம்புனம் என்று பாலை நிலமாகையாலே நிலத்தினது சிவப்பைச் சொல்லுகிறது; தினை முற்றி நுனி பழுத்த அளவிலே கிளிகள் புறாக்கள் கடியாமல் நோக்குகின்ற திருமலையை என்று தினை முற்றியதால் வந்த சிவப்பைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். அத்திருமலையை,* **நெஞ்சமே அடை - .**

## ஒப்புமைப் பகுதி

1. உலகமே வடிவாய் நிற்றல்

*" மண்ணொடு நீரும் எரியும் காலும் மற்றும் ஆகாசமும் ஆகி நின்றாய் - பூமியோடே ஜலமும் அக்நியும் வாயுவும் ஆகாசமும் ஆகிற ஜகத்காரணமாகிய பூதபஞ்சகமும், மற்றும் கார்யரூபமான ஜகத்துத்தானும் 'நீ' என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி உனக்கு ப்ரகாரமாக இவற்றுக்கு ப்ரகாரியாய்க் கொண்டு நின்றவனே "*

பெரி. தி. 4:10:6 ம. மா. மு. உரை.

*[பூத பஞ்சகம் - பருப்பொருள் ஐந்து. ப்ரகாரம் - தன்மை. ப்ரகாரி - தன்மையை உடையவன்.]*

2. அமரர்கோன்

*" அமரர்கோவை - அநுபவம் மாறில் முடியும்படியான நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியானவனை "* பெரி. தி. 5:4:11 பெ. உரை.

3. திருமகள் கொழுநன்

*" பூமகளார் தனிக்கேள்வன் - புஷ்பத்தில் பரிமளம் வடிவு கொண்டாற்போலே இருப்பாளாய் போக்யதைகவேஷையான பெரியபிராட்டியார்க்கு வல்லபன் என்றாதல். இப்படிப்பட்ட ஐச்வர்யத்துக்கு இரண்டாம் விரலுக்கு ஆளில்லாதபடி இருக்கிறவன் "* தி. வா. மொ. 1:9:3-36

*[போக்யதைகவேஷை - இனிமையே வடிவாகக் கொண்டவள்]*

---

1. பிறாக்கள். 2. படியாதபடி.
3. ஒக்கம் - உயரம்.

" மலராள் மணவாளனை - நிரதிசய போக்யையாய் இருக்கிற பிராட்டி செவ்வி கொள்ள இட்டுப் பிறந்தவனை " தி. வா. மொ. 1:10:4-24
[நிரதிசய போக்யை - எல்லையற்ற நுகர்ச்சி இனிமையுடையவள்]

4. **கொம்பன்ன இடையினார்**

" கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தே "

" கொம்பனார் - கொம்பு - வஞ்சிக்கொம்பு. அனார் - அத்தை அனையவர்கள் - அத்தை உடையவர்கள் "

பாவை. 17 பெ. உரை.
(78)

## 79

**பேசு மின்திரு நாமம் எட்டெழுத்**
**துஞ்சொல் லிநின்று பின்னரும்**
**பேசு வார்தமை உய்ய வாங்கிப்பி**
**றப்ப றுக்கும்பி ரானிடம்**
**வாச மாமலர் நாறு வார்பொழில்**
**சூழ்த ரும்முல குக்கெலாம்**
**தேச மாய்த்திகழ் மும்ம லைத்திரு**
**வேங்க டம்மடை நெஞ்சமே!**

**ப. ரை :** **பேசும் இன் திருநாமம் எட்டு எழுத்தும் சொல்லிநின்று** - எல்லோராலும் சொல்லத் தகுந்ததும் நாவுக்கு இனியதுமான திருப்பெயராகிய எட்டுத் திருஎழுத்துகளையும் ஒரு முறை கூறி, **பின்னரும் பேசுவார் தம்மை** - பின்னையும் அதனையே சொல்லுபவர்களை, **உய்ய வாங்கி** - ஈடேறும்படி ஏற்று, **பிறப்பு அறுக்கும் பிரான் இடம்** - அவர்களது பிறவித் தொடர்பினைப் போக்கித் தந்தருளும் பெருமான் உறையும் இடம், **வாசம் மாமலர் நாறும்** - மணம் நிறைந்த சிறந்த பூக்கள் கமழ்கின்ற, **வார் பொழில் சூழ்தரும்** - பரந்த சோலைகளாலே சூழப்பட்டதும், **உலகுக்கு எல்லாம் தேசமாய்த் திகழும்** - எல்லா உலகங்களுக்கும் ஒளியாய் விளங்குவதும் ஆகிய, **மலைத் திருவேங்கடம்** - திருமலையை, **நெஞ்சமே அடை**-.

**சி. கு :** திகழும் மலை - விரித்தல் விகாரம். தேசம் - ஒளி; 'தேஜஸ்' என்பதன் திரிபு. இப்பாசுரம் முழுவதும் நெஞ்சை நோக்கிக் கூறியதாகக் கொள்வது கீழ்ச் சொல்லி வரும் முறைமைக்குச் சேரும். அவ்வாறு அன்றிப் 'பேசுமின்' என்பதனை ஏவற் பன்மையாகக் கொண்டு முதல் இரண்டு அடிகள் பிறரை நோக்கியும், பின் இரண்டு அடிகள் ஆழ்வார் தம் நெஞ்சை நோக்கியும் கூறியனவாகவும் கொள்ளலாம்.

---

**79.** 1 : 5 துஞ்சொ. 2 : 2 வார்தம்மை. 3 : 7 குக்கெல்லாம். 4 : 4 லைதிரு.

**வியா : ஒன்பதாம் பாட்டு : பேசுமின் இத்யாதி** - "பேசுவார் தம்மை உய்ய வாங்கிப் பிறப்பு அறுக்கும் பிரான் இடம் பேசுமின் திருநாமம் எட்டெழுத்தும் சொல்லிநின்று" என்று இத்தனையும் பரோபதேசமாய், "வாச மாமலர்" என்று மேல் இத்தனையும் ஸ்வகதமாக அருளிச்செய்கிறார் என்றும் ஆம். அன்றிக்கே, திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறாராகவும் ஆம். **பேசு இத்யாதி** - ஓர் அதிகாரி ஸம்பத்தி[1] வேண்டாவிறே பெற்ற தாய் பேர் சொல்லுவார்க்கு. அப்படியே இடர் வந்த போது எல்லாரும் ஒக்கச் சொல்லிக்கொடு போரக் கடவதான இனிய திருநாமமான எட்டெழுத்தையும் சொல்லிநின்று. ஒருக்கால் சொன்னோமிறே என்று கைவாங்கி இருக்கை அன்றிக்கே, **பின்னரும்** - பின்னையும் என்றபடி, வாயாலே திருநாமத்தைச் சொல்லுமவர்களுக்கு ஸத்தாஹாநி வாராமே அவர்கள் உஜ்ஜீவிக்கும்படி அங்கீகரித்துப் பின்னையும் அவர்களுக்கு விரோதியான ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுத்துக்கொடுக்கும் உபகாரகன் வர்த்திக்கிற ஸ்தாநம்.

> " ஆக்கை புகாமை உய்யக் கொள்வான்
> நின்ற வேங்கடம் "

என்னக் கடவதிறே. **வாசம் இத்யாதி** - பரிமளத்தை உடைத்தாய் இருந்துள்ள மலராலே கமழாநின்றுள்ள பொழிலாலே சூழப்பட்டிருப்பதுமாய். உலகுக்கு

---

**வி : ஒன்பதாம் பாட்டு : பேசுமின் திருநாமம் எட்டு எழுத்தும் சொல்லி நின்று பின்னரும் பேசுவார் தம்மை உய்ய வாங்கிப் பிறப்பு அறுக்கும் பிரான் இடம்** - "திருநாமம் எட்டெழுத்தும் சொல்லிநின்று, பின்னரும் பேசுவார் தம்மை உய்ய வாங்கிப் பிறப்பு அறுக்கும் பிரான் இடம் பேசுமின்" என்று கூட்டி இப்பகுதிவரை பிறர்க்கு அறிவுரை கூறுவதாகவும், "வாச மாமலர்" என்பது முதலாக வருவதனைத் தமக்குத் தாமே கூறிக் கொள்ளுவதாகவும் அருளிச்செய்கிறார் என்று கொள்ளலாம். அல்லது, தம் திருவுள்ளத்தைக் குறித்தே பாசுரம் முழுவதனையும் அருளிச்செய்கிறார் என்றும் கொள்ளலாம். **பேசும் இன் திருநாமம் எட்டு எழுத்தும் சொல்லிநின்று** - பெற்ற தாய் பெயர் சொல்லுகைக்கு ஒரு தனித்தகுதி தேட வேண்டுமோ? அப்படியே இடர் வந்தபோது எல்லாரும் ஒக்கச் சொல்லிக்கொண்டு போதற்கு உரிய இனிய திருப்பெயரான எட்டெழுத்தையும் சொல்லிநின்று. **பின்னரும்** - ஒருகால் சொல்லிவிட்டோம் என்று கைவாங்கி இருந்திடாமல்[2] பின்னையும். **பின்னரும்** - பின்னையும். **பேசுவார் தம்மை உய்ய வாங்கிப் பிறப்பு அறுக்கும் பிரான் இடம்** - வாயாலே திருப்பெயரைச் சொல்லுபவர்களின் உளதாம் தன்மைக்குக் கேடு வாராமல் கரைமரம் சேருமாறு[3] அவர்களைத் தான் ஏற்றுக்கொண்டு பின்னையும் அவர்களுக்குப் பகையான பிறவித்தளையினை அறுத்துக் கொடுக்கும் வள்ளல் உறையும் இடம்.

> " ஆக்கை புகாமை உய்யக் கொள்வான்
> நின்ற வேங்கடம் " (தி. வா. மொ. 6 : 10 : 1)

என்று சொல்லுவரன்றோ! **வாச மாமலர் நாறு வார் பொழில் சூழ்தரும்** - மணத்தை உடைத்தாய் இருக்கும் மலராலே கமழ்கின்ற பரந்த பொழிலாலே சூழப்பட்டிருப்

---

1. அதிகார ஸம்பத்தி என்று இருத்தல் தகும்.
2. கைவாங்கி இருத்தல் - பின்வாங்கி இருத்தல்.
3. கரை மரம் சேருதல் - உய்வடைதல்.

**எல்லாம் தேசமாய்த் திகழும் மலை - "நீள் நிலத்து உள்ளது" என்கிற படியே பரமபதத்துக்கு உண்டான ஏற்றம் போலே திருமலை இங்கேயாகையாலே ஸம்ஸாரம் உத்தேஶ்யமாம்படி இருக்கிறது ஆயிற்று. "திலதம் உலகுக்காய்" என்னக் கடவதிறே. "நிலமகள்தன் நெற்றிக்குத் திலதமாய் நின்ற" என்று இட்டுவைத்தான்.**

---

*பதாய். உலகுக்கு எல்லாம் தேசமாய்த் திகழும் மலை -* **"நீள் நிலத்து உள்ளது"** *(தி. வா. மொ. 9:3:8) என்று சொல்வதற்கு ஒப்பத் திருநாட்டுக்கு இருக்கும் ஏற்றம்*[1] *போலே மண்ணுலகில் உள்ள திருமலைக்கு ஏற்றம் இருத்தலாலே இவ் உலக வாழ்வு விரும்பத்தக்கதாக ஆயிற்று.* **"திலதம் உலகுக்காய்"** *(தி. வா. மொ. 6:10:1) என்பர் நம்மாழ்வார். மேலும்,* **"நிலமகள்தன் நெற்றிக்குத் திலதமாய் நின்ற"**[2] *என்று ஒரு தமிழ்ப் புலவனும் இட்டு வைத்தான்.*

**ஒப்புமைப் பகுதி**

**இன் திருநாமம்**

> *" நின்னாமம் - 'மந்த்ரம்' என்னாது ஒழிந்தது :- காலநியமமென்ன, அதிகாரி நியமமென்ன, இவை தொடக்கமானவை வாராமைக்காக. இடறினவன் 'அம்மே' என்னும்போது ஒரு சடங்கு வேண்டாவிறே "*
>
> *தி. மா. 1 பெ. உரை.*

*[நியமம் - கட்டுப்பாடு]*

> *" எண்ணும் திருநாமம் - ...எண்ணும் திருமந்த்ரம் என்னாதே, நாமம் என்கிறது - இதுக்கு ஓர் அதிகாரி நியதி, அங்கநியதி வேண்டா; ப்ரஜை தாய்பேரைச் சொல்லுமோபாதி அமையும் என்கைக்காக "*
>
> *தி. வா. மொ. 10:5:2-36*

*[அங்கநியதி - துணை உறுப்புகளோடு செய்தல்வேண்டும் என்னும் கட்டுப்பாடு]* *(79)*

## 80

**செங்க யல்திளைக் குஞ்சு னைத்திரு**
**வேங்க டத்துறை செல்வனை**
**மங்கை யர்தலை வன்க லிகன்றி**
**வண்ட மிழ்ச்செஞ்சொல் மாலைகள்**
**சங்கை யின்றித்த ரித்து ரைக்கவல்**
**லார்கள் தஞ்சம தாகவே**
**வங்க மாகடல் வையங் காவலர்**
**ஆகி வானுல காள்வரே.**

---

1. ஏற்றம் - உயர்வு; பெருமை. 2. இம்மேற்கோள் கம்பராமாயணத்தில் வரும், "நிலமகள் முகமோ! திலதமோ! கண்ணோ!" (நகரப் படலம். 2) என்னும் தொடரின் திரிபு போலத் தெரிகிறது.

**ப. ரை :** **செங் கயல் திளைக்கும்** - இளமையாலே சிவந்த மீன்கள் களித்துத் திரிகின்ற, **சுனைத் திருவேங்கடத்து** - நீர்நிலைகளையுடைய திருமலையில், **உறை செல்வனை** - எழுந்தருளியுள்ள திருமாலைக் குறித்து, **மங்கையர் தலைவன் கலிகன்றி** - திருமங்கை நாட்டினர்க்குத் தலைவனான கலியன் பாடியுள்ள, **வண் தமிழ்ச் செஞ் சொல் மாலைகள்** - அழகிய தமிழில் அமைந்த சிறந்த சொல்மாலைகளை, **சங்கை இன்றித் தரித்து உரைக்க வல்லார்கள்** - ஐயமின்றிக் கற்றுச் சொல்ல வல்லவர்கள், **தஞ்சமதாக** - உறுதியாக, **வங்கம் மாகடல் வையம்** - மரக்கலங்கள் நிறைந்த பெரிய கடலால் சூழப்பட்ட உலகத்திற்கு, **காவலராகி** - அரசராகி, **வானுலகு ஆள்வர்** - திருநாட்டை ஆளப்பெறுவர்.

**சி. கு:** சங்கை - ஐயம். வங்கம் - மரக்கலம். "வங்கக் கடல் கடைந்த மாதவனை" (பாவை. 30) என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார் பாடுமிடத்தும் இப்பொருட்டாதல் கருதுக.

---

வியா : **பத்தாம் பாட்டு :** **செங் கயல் இத்யாதி** - முக்தர் என்றும் ஒக்க பஞ்சவிம்சதி வார்ஷிகராய் பகவத் அநுபவமே யாத்ரையாய்க் களிக்குமாப் போலே, யௌவநப் புகராலே சிவந்த நிறத்தையுடைய கயல்களானவை ஒன்றோடு ஒன்று களித்து வர்த்தியாநின்றுள்ள சுனைகளை உடைத்தான திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிற ஸ்ரீயஃபதியை. **மங்கையர் தலைவன்** - திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார், அழகிய தமிழில் செவ்விய சொல்லாலே செய்த தொடையைத் தரித்துச் சொல்ல வல்லவர்கள். **தஞ்சமதாகவே** - தஞ்சம் - எளிமை[1]; நிச்சிதமாகவே. கடல் சூழ்ந்த பூமிக்கு ரக்ஷகராய்ப் பின்பு நித்யவிபூதியும் தாங்கள் இட்ட வழக்காம்படி ஆகப் பெறுவர்கள். இது கூடுவது ஒன்றோ என்னில், **சங்கை இன்றி** - இதில் சங்கை பண்ண வேண்டா.

வி : பத்தாம் பாட்டு : **செங் கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடத்து உறை செல்வனை** - திருநாடு சேர்ந்தார் என்றும் ஒக்க இருபத்தைந்து ஆண்டு நிறைந்தவராய் இறை இன்ப நுகர்ச்சியே பணியாய்க் களிப்பது போலே இளமைப் புகராலே சிவந்த நிறத்தையுடைய கயல்களானவை ஒன்றோடு ஒன்று களித்துத் திரியும் சுனைகளையுடைய திருமலையிலே நிலைத்து உறையும் திருமகள் கேள்வனை. **மங்கையர் தலைவன் கலிகன்றி வண் தமிழ்ச் செஞ் சொல் மாலைகள் தரித்து உரைக்க வல்லார்கள் தஞ்சமதாகவே வங்க மாகடல் வையம் காவலராகி வானுலகு ஆள்வரே** - திருமங்கைக்கு அரசரான ஆழ்வார், அழகிய தமிழில் செவ்விய சொல்லாலே செய்த தொடையை[2] மனத்தில் இருத்திச் சொல்ல வல்லவர்கள், திண்ணமாகவே கடல்சூழ்ந்த பூமிக்கு அரசராய்ப் பின்பு விண்ணுலகையும் தாங்கள் இட்ட வழக்காம்படி ஆள்வார்கள். **தஞ்சம்** - எளிமை; ஒருதலை. **சங்கை இன்றி** - இது நடக்கக்கூடியதா என்னில், இதில் ஐயம் வேண்டா என்கிறார்.

(80)

---

1. தஞ்சம் - எளிமை என்பது அச்சுப்பிரதியில் இல்லை.
2. தொடை - மாலை; ஈண்டுப் பாசுரங்கள்.

## முதற்பத்து - ஒன்பதாம் திருமொழி - தாயே

பிர : திருமலையை ஆஶ்ரயி என்று திருவுள்ளத்தைக் குறித்து உபதேசித்தார் கீழ். அப்படியே அதுவும் பாங்காய், தாமும் அநுபவிப்பாராய் திருமலையிலே வந்து புகுந்தார். ஸர்வ ஸ்வாமியாய் நிருபாதிக பந்துவுமானவன் இங்கே வந்து ஸந்நிஹிதனாகையாலே, தம்முடைய அபேக்ஷிதங்கள் எல்லாம் பெறலாம் என்று அக்ரூரன், **"மாம் அக்ரூரேதி வக்ஷ்யதி"** என்று மநோரதித்துக்கொண்டு வந்தாப் போலேயும், ஸ்ரீபுண்டரீகன் மநோரதம் போலேயும், இவரும் மநோரதித்துக்கொடு வந்த இடத்தில், அப்படி எதிரே வருதல், அணைத்தல், ஓர் இன்சொல்[1] சொல்லுதல், **"க்ரியதாம்"** என்று கைங்கர்யத்திலே ஏவுதல் செய்தருளக் காணாமையாலே மிகவும் நொந்து, நித்ய ஸந்நிதியும் உண்டாய், நினைந்து செய்து தலைக்கட்டுகைக்கு ஈடான சக்தியும் உண்டாய் ப்ராப்தியும் உண்டாய் இருக்க, அபேக்ஷிதம் செய்யாது ஒழிகிறது செய்தருள நினையாமைக்கு ஈடாய் இருப்பது ஒரு ஹேது இத்தலையிலே உண்டாகையிறே என்று கைவாங்கினவர் பின்னையும் கைங்கர்யத்தில் உண்டான சாபலாதிஶயத்தாலே தவிர மாட்டாமை மீண்டு, என்னுடைய பாபங்களைப் பார்த்தால், அபந்துக்களை பந்துக்களாக நினைத்தும் போக்யம் இல்லாத[2] இடத்திலே போக்ய புத்தியைப் பண்ணியும், பரஹிம்ஸையைப் பண்ணியும், ஆர்த்த விஷயங்

---

**தோ :** *திருமலையை அடைவாய் என்று திருவுள்ளத்தைக் குறித்து அறிவுரை கூறினார் கீழ். அப்படியே அதுவும் பாங்காய் அமையத் தாமும் இன்பம் நுகர்வாராய்த் திருமலையிலே வந்து புகுந்தார். எப்பொருட்கும் உடையவனாய் இயற்கையாய் அமைந்த உறவினனாய் இருப்பவன் இங்கே வந்து உறைவதனால் தம்முடைய விருப்பங்களைப் பெறலாம் என்று கருதினார். அக்ரூரன்,* **"என்னை அக்ரூரா! என்று விளிப்பார்"** *(வி. பு. 5:17:12) என்று கருதிக்கொண்டு வந்தாற் போலேயும், திருக்கடன்மல்லையிலே புண்டரீகமுனிவன் கடலை வற்ற இறைத்துப் பாற்கடலிற் பையத் துயிலும் பரமனுக்குப் பணிவிடை செய்யப் பாரித்தாற் போலேயும் இவரும் இலையகலப்படுத்திக் கொண்டு[3] திருமலைக்கு வந்தார். அங்ஙனம் வந்த இடத்தில் அப்படி எதிரே வருதல், அணைத்தல், ஓர் இன்சொல் கூறுதல்,* **"செய்வாய்"** *(ரா. ஆ. 15:7) என்று தொண்டு செய்ய ஏவுதல், முதலியன செய்தருளக் காணாமையாலே மிகவும் நொந்தார். பெருமான் இங்கு எஞ்ஞான்றும் உறைகிறான்; தான் நினைத்தது செய்து தலைக்கட்டுகைக்கு ஈடான இயற்றியும்[4] அவன்பால் உண்டு; நம்மை ஏற்றருளுதற்கு உரிமையும் உள்ளவன்; எனினும் நம் விருப்பத்தை நிறைவேற்றியருள நினையாமல் இருக்கிறான்; அப்படி அவன் நிறைவேற்ற விழையாமைக்கு ஏற்ற காரணம் நம்மிடம் இருத்தல் வேண்டும் அன்றோ என்று தம் முயற்சியினின்றும் கைவாங்கினார். அப்படி விலகியவர் பின்னையும் திருத்தொண்டின்பால் உள்ள உறைப்பினாலே தவிர மாட்டாமல்,* **"என்னுடைய தீவினைகளைப் பார்த்தால் உறவு அல்லாதவர்களை உறவாக நினைத்தும், நுகர்தற்கு உரிய இன்பம் இல்லாத இடத்திலே இன்பம் இருப்பதாகக் கருதியும், பிறரை வருத்தியும், பிறர் துன்பம் கண்டுழி, 'ஐயோ!' என்று இரங்கா**

---

1. இன்சொல்லுச். 2. அல்லாத.
3. இலையகலப்படுத்திக் கொண்டு - பாரித்துக் கொண்டு. 4. இயற்றி - ஆற்றல்.

களிலே, 'ஐயோ!'[1] என்னாதேயும், உன்னை ஒழியப் புறம்பே காலத்தைப் போக்கியும் போந்தேன். இங்ஙனே போந்தேனேயாகிலும் இப்போது தேவரை ஒழியச் செல்லாமை உண்டாய் வந்தேன். இத்தலை சேஷமாய் தேவர் சேஷியாய், விட ஒண்ணாத படியான ஸம்பந்தம் உண்டாய், என் குற்றங்களைப் பொறுப்பிக்கைக்கு பிராட்டி ஸந்நிதியும் உண்டான பின்பு, என் அபராதங்களைப் பொறுத்தருளி என்னுடைய ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைக் கொண்டருள வேணும் என்று பெரியபிராட்டியார் புருஷகாரமாகத் திருவடிகளிலே விழுந்து சரணம் புகுகிறார்.

இதுதான் வாணிலா முறுவலிலே செய்தது அன்றோ என்னில், ஸுகுமாரராய் இருக்குமவர்கள் விடாய்த்தால் பலகாலும் முகத்திலே நீரை அள்ளி ஏறட்டுக்[2] கொள்ளுமாப் போலே பலகாலும் ப்ரபத்தி பண்ணும்படி ஆயிற்று இவருடைய மார்த்தவம் இருப்பது. ஒருக்கால் பெற்றிலோம் என்று கைவாங்கும் அளவு அன்றிக்கே பேற்று அளவும் ப்ரபத்தி பண்ணுவர் ஆயிற்று. "நிபபாத விபீஷண:" என்று அவன் திருவடிகளிலே விழுந்து சரணம் புக்காப் போலே ஆயிற்று.

---

*மலும் உம்மை ஒழியப் புறம்பே காலத்தைப் போக்கியும் போந்தேன். இங்ஙனே போந்தேனாகிலும் இப்போது தங்களை ஒழியச் செல்லாமை[3] உண்டாய் வந்தேன். யானோ தங்கள் அடிமை; தாங்களோ என் ஆண்டான். என்னை விட ஒண்ணாத உறவும் தங்கள்பால் உண்டு. மேலும் என் குற்றங்களைப் பொறுப்பிக்கைக்குப் பிராட்டியும் உடன் இருக்கிறார். இத்தனையும் அமைந்த பின்பு, என் குற்றங்களைப் பொறுத்தருளி என்னுடைய அடிமைத் தன்மைக்குத் தகுந்த பணி தந்து கைக்கொண்டருள வேண்டும் என்று பெரியபிராட்டியாரை முன்னிட்டுக்கொண்டு திருவடிகளிலே விழுந்து தஞ்சம் புகுகிறார்.*

*இதுதான் முன்னர் வாணிலா முறுவல் என்னும் திருமொழியிலே ஆழ்வார் செய்தது அன்றோ என்னில், பூவின் மெல்லியராய் இருப்பார் விடாய்த்தால் பலகாலும் முகத்திலே நீரை அள்ளி ஏறட்டுக்கொள்வது போலே பலகாலும் தஞ்சம் புகும்படி அன்றோ இவரது மென்மை இருப்பது. ஒருகால் பெற்றிலோம் என்று தவிர்ந்து செல்லாமல் பேறு கிட்டும்வரை தஞ்சம் புகுகிறார். "அறவழிப் பட்ட நெஞ்சினனாகிய வீடணன் புகல் இடத்தைத் தேடியவனாய், துணைவரான நான்கு அரக்கர்களோடு கூட இராமபிரானுடைய திருவடிகளில் விழுந்தான்" என்பது இராமாயணம் (யு. 19:2). அவ்வீடணன் திருவடிகளிலே விழுந்து தஞ்சம் புக்காற் போலே இவர் செயலும் அமைந்தது.*

## 81

**தாயே தந்தைஎன்றும் தார மேகிளை மக்கள்என்றும்**
**நோயே பட்டொழிந்தேன் நுன்னைக் காண்பதோர் ஆசையினால்**
**வேயேய் பூம்பொழில்சூழ் விரை யார்திரு வேங்கடவா!**
**நாயேன் வந்தடைந்தேன் நல்கி ஆள்என்னைக் கொண்டருளே.**

---

1. அய்யோ. 2. ஏறிட்டு.
3. செல்லாமை - வாழமாட்டாமை.

**81.** 2 : 3 உன்னைக்.

**ப. ரை :** **வேய் ஏய் பூம்பொழில் சூழ்** - *மூங்கில்கள் நிறைந்துள்ளதும் பூஞ்சோலைகளால் சூழப்பட்டதுமான,* **விரை ஆர் திருவேங்கடவா** - *மணம் நிறைந்த திருமலையில் எழுந்தருளியுள்ள பெருமானே!* **தாயே என்றும் தந்தையே என்றும் தாரமே என்றும் கிளையே என்றும் மக்களே என்றும்** - *தாய், தந்தை, மனைவி, சுற்றம், பிள்ளைகள் என்று உறவல்லாதவர்களை உறவாக நினைத்து,* **நோயே பட்டு ஒழிந்தேன்** - *துன்பமே பட்டுப் போந்தவனும்,* **நாயேன்** - *நாய் போலும் இழிந்தவனுமாகிய அடியேன்,* **உன்னைக் காண்பது ஓர் ஆசையினால்** - *மெய்யான உறவாகிய உன்னை வணங்க வேண்டும் என்னும் ஆசையினால்,* **வந்து அடைந்தேன்** - *உன்பால் வந்து தஞ்சம் புகுந்தேன்;* **என்னை நல்கி ஆட்கொண்டு அருள்** - *அடியவனாகிய என்னைக் குளிரநோக்கி அடிமைகொண்டு அருள்வாய்.*

**சி. கு:** *என்றும் என்பதனைத் தாய் முதலான பிறவற்றோடும் கூட்டுக. நீ என்னும் முன்னிலை ஒருமைப் பெயர் வேற்றுமை ஏற்குங்கால் நுன் என்று திரிந்தது. இதனைத் திசைச்சொல் என்பாரும் உண்டு.*

*இத்திருமொழி இசைப்பா. மூன்றாம் சீர் பெரும்பாலும் முதற்சீருக்கு மோனையாய் ஓரசையோ ஈரசையோ உள்ளதாய் அமைந்துள்ளது. அடிதோறும் நேரசையில் தொடங்கின் பதினைந்தும் நிரையசையில் தொடங்கின் பதினாறுமாக எழுத்துகள் வருகின்றன. இதனைக் கலிநிலைத் துறையாகவும் கூறுவர். 'பொன்னார் மேனியனே' என்னும் சுந்தரர் தேவாரப்பதிகம் இதே யாப்பில் அமைந்திருத்தல் காணலாம். இது போலும் பாடல்களைப் பிற்காலச் சிந்துகளுக்கு முன்னோடியாகக் கருதலாம்.*

வியா : **முதற் பாட்டு : தாயே இத்யாதி** - **"மாதா பிதா ப்ராதா", "ப்ராதா பர்த்தா ச", "ஏகைக பல லாபாய"** என்கிறபடியே தேவரே ஸர்வ வித பந்துவுமாய் இருக்க, ஸோபாதிக பந்துக்களாய் இத்தலையில் ப்ரயோஜநம் உள்ள நாள் கொண்டு, இவனுக்கு உதவ வேண்டும் அன்று தங்களைக் கொண்டு அகல நின்று அபகாரத்தையே பண்ணுமவர்களையே பந்துக்கள் என்று நினைந்து அநர்த்தப் பட்டேன் என்கிறார். தாயே என்றும் தந்தையே என்றும் தாரமே என்றும் கிளையே என்றும் மக்களே என்றும் புத்ர மித்ராதிகளை ஆசைப்பட்டு. **நோயே பட்டு**

---

வி : முதற் பாட்டு : **"தாய், தந்தை, உடன்பிறந்தவன், இருப்பிடம், பாது காப்பு, நண்பன், புகல் என்னும் எல்லாம் நாராயணனே ஆவான்"** *என்பது சுபா லோபநிடதம் (6).* **"எனக்கு இராகவனே அண்ணனும், ஆண்டவனும், உறவி னரும், தந்தையும் ஆவார்"** *என்பது இராமாயணம் (அ. 58 : 31).* **"தந்தை, தாய், மகன், உடன்பிறந்தவன், மனைவி, நண்பன் ஆகிய இத்தொடக்கத்தாரும் ஒவ்வொரு பயனையே தருகிறார்கள். கேசவன் ஒருவனே எல்லாப் பயன்களையும் தருகிறான்"** *என்பது அஹிர்புத்ந்யஸம்ஹிதை.* **இப்படித்** *தாங்களே* **எவ்வகை** *உறவுமாய் இருக்கிறீர்கள்.* **இதனை** *உணராமல்,* சில *காரணங்களால் உறவாக அமைந்து, என்னிடம் பொருள்* இருந்த *காலத்தில் என்னை உறவாகக் கொண்டு எனக்கு உதவ வேண்டுங் காலம் வந்துழி என்னிடமிருந்து தங்களைப் பிரித்துக்கொண்டு விடுத்து விலகிநின்று தீங்குகளே செய்பவர்கள்* **உறவினர்கள் என்று** *கொண்டு இடர்ப்பட்டேன் என்கிறார்.* **தாயே** *என்றும்* **தந்தையே** *என்றும்* **தாரமே** *என்றும்* **கிளையே** *என்றும்* **மக்களே** *என்றும் பிள்ளைகளிடத்தும் தோழர்*

இவன்பக்கல் உபகாரம் கொள்ளலாம் அன்று கொண்டு அகல நினைக்குமவர்களை பந்துக்கள் என்று நினைத்தால், அவர்கள் பந்து க்ருத்யம் பண்ணக் காணாமையாலே க்லேசமேயிறே[1] ஸித்திப்பது. இவன் பந்துக்கள் என்று நினைத்திருக்கும் அத்தனை யிறே. அவர்கள்பக்கல் அதில்லையே. வேறு ஒரு வ்ருத்தாதிகளால் வேண்டாதே அவர்கள் தாங்களே க்லேசத்துக்கு உடலாய் இருப்பது. **பட்டொழிந்தேன்** - பட்டேன் என்றபடியாகவும் ஆம். அன்றிக்கே, நோயே பட்டு ஒழிந்தேன் - விட்டேன் என்னவும் ஆம். பகவத் குணங்களை உத்தேஶ்யம் என்று அறியும் போது ஸதாசார் யோபதேசமும் சாஸ்த்ரமும் வேணும். ஸம்ஸாரத்தில் த்யாஜ்யதையில் ப்ரத்யக்ஷமே அமையுமிறே. இவைதானே உபாத்யாயர்களாக ஆயிற்று விட்டது. **உன்னைக் காண்பது ஓர் ஆசையினால்** - ஸோபாதிக பந்துக்களை பந்துக்கள் என்று ப்ரமித்து அவர்கள் உதவ வேண்டும் அன்று உதவக் காணாமையாலே நிருபாதிக பந்துவான உன்னைக் காண ஒண்ணாதோ என்னும்படியாய் உன்பக்கலிலே அவை தானே ஆசையைப் பிறப்பித்தன.

**வேய் இத்யாதி** - ப்ரயோஜநம் உள்ள நாள் கொண்டு உதவ வேண்டும் அன்றாக அகலநிற்கை அன்றிக்கே, முன்பு எல்லாம் அகலநின்று கார்யவேளையிலே

*களிடத்தும் ஆசைகொண்டு.* **நோயே பட்டு** - *இவன்பக்கல் உதவி பெறக்கூடிய நாளில் உதவியினைப் பெற்று, இவனுக்கு உதவ வேண்டிய நாள் வந்துழித் தீங்கு புரிந்து, தங்களை இவனிடமிருந்து வேறு பிரித்துக்கொண்டு விலகிச் செல்ல நினைப்பவர்களை உறவினர்கள் என்று நினைத்தால் அவர்கள் உறவினர்க்குரிய கடன்களைச் செய்ய மாட்டார்கள். அதனைக் கண்டு வருத்தமே நேரிடும். ஏனெனில், இவன் மட்டுமே அவர்களை உறவினர்கள் என்று கருதிக்கொண்டிருக் கிறான். அவர்கள்பக்கல், தாங்கள் இவனுக்கு உறவினர்கள் என்னும் நினைப்பு இல்லை. வேறு ஒரு செயல் முதலியவற்றின் காரணமாகத் துன்பப்பட வேண்டாமல் அவர்களே இவனுடைய துன்பத்திற்குக் காரணமாய் இருப்பர்.* **பட்டொழிந்தேன்** - *இதனை ஒரு சொல் நீர்மைத்தாகக்கொண்டு பட்டேன் என்று கூறுவதாகவும் கொள்ளலாம். அவ்வாறன்றி, நோயேபட்டு ஒழிந்தேன் என்று இரு சொற்களாகக் கொண்டு அவர்களால் துன்பப்பட்டு அவர்களை விட்டேன் என்று கூறுவதாகவும் கொள்ளலாம். இறைப்பண்புகள் கைக்கொள்ளத் தக்கன என்று அறியும்போது நல்லாசிரியர்தம் அறிவுரையும், நூலறிவும் வேண்டும். உலக வாழ்வின் இழிவினை அறிந்து தள்ளுவதற்கு அவை வேண்டா; கண்ணெதிரே காண்பனவே போதும். ஆகையால், தாம் வாழ்வில் கண்ட இவையே உலக வாழ்வின் தண்மையைப்[2] புகட்டும் ஆசிரியர்களாய் அமையச் செயற்கையான சுற்றங்களை விட்டார்.* **உன்னைக் காண்பது ஓர் ஆசையினால்** - *உறவல்லாதவர் களை உறவினர்கள் என்று மயங்கி அவர்கள் உதவ வேண்டுங் காலத்தில் உதவக் காணாமையால் இயற்கையான உறவினனாகிய உன்னைக் காண ஒண்ணாதோ என்று எண்ணும்படியான ஆசையினை உன்பக்கலிலே அவைதாமே பிறப்பித்தன.*

**வேய் ஏய் பூம் பொழில் சூழ் விரை ஆர் திருவேங்கடவா** - *கொள்ளும் பயன் உள்ள போது உறவாகக் கொண்டு, உதவ வேண்டுங்காலத்து உதவாது அகல நில்லாதே, முன்பு எல்லாம் அகலநின்று உதவுதற்கு உரிய இதுபோழ்து வந்து*

1. க்லேசமாயிறே; க்லேசமிறே.
2. தண்மை - தாழ்வு.

வந்து முகங்காட்டி உபகரிக்குமவனாய் இருந்தாய் நீ. வேய்கள் ஏய்ந்திருப்பதாய். **பூம் பொழில் இத்யாதி** - "ஸர்வ கந்தః" என்கிற வஸ்து உள்ளே நிற்கிறது என்று தோற்றும்படியாயிற்று இருக்கிறது. அப்பரிமளம் வழிகாட்ட வந்தேன். **வேங்கடவா** - அவனுடைய பாந்தவமும் சாபலமும் ப்ரத்யக்ஷிக்கலாய் ஆயிற்று இருக்கிறது. அகர்மவச்யனாய் பரமபதத்திலே நித்ய ஸூரிகளுக்கு ஓலக்கம் கொடுத்திருக்குமவன்[1] இவை நோவுபடுகிற ஸம்ஸாரத்திலே, ப்ரஜை விழுந்த கிணற்றிலே ஒக்க விழுந்து எடுக்கும்[2] தாயைப் போலே இங்கு வந்திருக்கிறது ரக்ஷிக்கைக்காகவிறே. **நாயேன்** - நான் செய்துகொண்டபடியைப் பார்த்தால் புறம்புத்தைக்கும் ஆகேன்; தேவர்க்கும் ஆகேன். புறம்பே போகில் கல்லையிட்டு எறிவர்கள்; உள்ளே புகுரில் தொட்டனவும் தீண்டினவும் பொகட வேண்டி வரும். **வந்து அடைந்தேன்** - அநந்ய கதித்வத் தாலே திருவடிகளிலே வந்து சரணம் புகுந்தேன். "நீரே இப்படி செய்து கொண்டீராகில் இப்போது நம்மைச் செய்யச் சொல்லுகிறது என்?" என்ன, **நல்கி** - அந்த க்ஷுத்ர பதார்த்தத்தையே ராஜபுத்ரன் செருக்காலே மேல்விழுமிறே. **ஆள் என்னைக் கொண்டருளே** - நீயே ஸர்வவித பந்துவும் என்று நினைத்து **"அஹம் ஸர்வம் கரிஷ்யாமி"** என்று நித்யஸூரிகளைக் கொள்ளும் அடிமை என்னைக் கொண்டருள வேணும்.

---

*முகங்காட்டி உதவிபுரிபவனாய் இருந்தாய் நீ.* **வேய் ஏய்** - *வேய்கள் ஏய்ந்திருப்ப தாய்.* **பூம் பொழில் சூழ்** - **"எல்லா நறுமணங்களையும் உடையவன்"** *(சாந். 3:14:2) என்று புகலப்படும் பொருள் உள்ளே நிற்கிறது என்று தோற்றும்படியாகவன்றோ இருக்கிறது அங்கு வீசும் நறுமணம். அது வழிகாட்ட வந்தேன்.* **வேங்கடவா** - *அவனுடைய உறவும் நசையும் கண்ணெதிரே காணத்தக்கனவாய் அமைந்தன. அவன் வினை வயப்படாதவனாய்த் திருநாட்டிலே அயர்வறும் அமரர்களுக்கு ஓலக்கம் கொடுப்பவனாய் இருப்பவன்; அத்தகையவன், குழந்தை விழுந்த கிணற்றிலே ஒக்க விழுந்து எடுக்கும் தாயைப் போலே உயிர்கள் நோவுபடும் மண்ணுலகத்தில் வேங்கடமாகிய இவ்இடத்தில் வந்திருக்கிறான். இதுதான் உயிர்களைக் காத்தற்காகவே ஆகும்.* **நாயேன்** - *நான் செய்துகொண்டதனைப் பார்த்தால் புறம்புத்தைக்கும்[3] தகுதியுடையவன் ஆகேன்; தங்கட்கும் தகுதி யுடையவன் ஆகேன். புறம்பே போகில் கல்லை விட்டெறிவர்கள்; உள்ளே புகுந்தால் தொட்டனவும் தீண்டினவும் போகட[4] வேண்டி வரும்.* **வந்து அடைந் தேன்** - *வேறு ஒரு புகலின்மையாலே திருவடிகளிலே வந்து தஞ்சம் புகுந்தேன்.* **நல்கி** - *"நீரே இப்படிச் செய்துகொண்டீராகில் இப்போது செய்யச் சொல்கிறது என்?" என்ன, அந்தக் கடைப்பட்ட நாயினையே மன்னன்மகன் செருக்காலே வேட்டைக்குப் பயன்படும் என்று மேல்விழுந்து விரும்புவான்[5] அன்றோ! அது போலே என்னை விரும்பி அருள்செய்து.* **ஆள் என்னைக் கொண்டருளே** - *அயர்வறும் அமரர்கள் நீயே எவ்வகை உறவும் என்று நினைத்து இருக்கிறார்கள்; மேலும்,* **"எல்லாத் திருத்தொண்டினையும் செய்வேன்"** *(ரா. அ. 31:25) என்று தொண்டு செய்கிறார்கள்; அத்தகைய அடிமை என்னைக் கொண்டருள வேண்டும்.*

---

1. குடுத்திருக்குமவன். 2. ஒக்க விழும்.
3. புறம்புத்தை - புறம்பே உள்ளது; வேறொன்று. 4. போகட - போட. 5. மேல் விழுந்து விரும்புதல் - ஆர்வத்தோடு விரும்புதல்.

**ஒப்புமைப் பகுதி**

1. **தாயே தந்தை என்றும் தாரமே கிளை மக்கள் என்றும் நோயே பட்டொழிந்தேன்**

*" துக்கச் சுழலையை - தாயே - நோயே, தந்தையே - நோயே, தாரமே - நோயே, கிளையே - நோயே, மக்களே - நோயே என்னக் கடவதிறே "*
*பெரி. தி. 5:3:1 பெ. உரை.*

2. **நாயேன்**

*" நாயேன் - திறந்த வாசல் எல்லாம் நுழைந்து திரிகையும், நுழைந்த வாசல் எல்லாம் பரிபூதமாய்ப் புறப்படுகையும், உடையவனே உகந்து தொடிலும் ஸ்நாநம் பண்ண வேண்டும்படியான ஜந்மத்தில் பிறந்தவன் "*
*தி. நெ. தா. 30 பெ. உரை.*

*[பரிபூதம் - இகழப்பட்டது]*

*" ஓரன்பிலா அறிவிலாத நாயினேன் "*

*" 'நாயினேன்' என்கிறது - திறந்து கிடந்த வாசல்கள்தோறும் நுழைந்து திரிகையும், எல்லாராலும் பரிபூதனாகையும், உகந்து தொட்டார்க்கும் ஸ்நாநம் பண்ணவேண்டும்படி அமேத்ய பதார்த்தமாகையும் "*
*தி. ச. வி. 84 பெ. உரை.*

*[அமேத்ய பதார்த்தம் - தூய்மையற்ற பொருள்]*

*" நாயினேன் - உன்னுடைய உத்கர்ஷத்துக்கு அவதியில்லாதாப்போலே என்னுடைய நிகர்ஷத்துக்கும் அவதி இல்லை என்கிறார் "*
*தி. ச. வி. 110 பெ. உரை.*

*[உத்கர்ஷம் - உயர்வு. அவதி - எல்லை. நிகர்ஷம் - தாழ்வு.]*

(81)

## 82

**மானேய் கண்மடவார் மயக் கிற்பட்டு மாநிலத்தில்**
**நானே நானாவித நர கம்புகும் பாவஞ்செய்தேன்**
**தேனேய் பூம்பொழில்சூழ் திரு வேங்கட மாமலைஎன்**
**ஆனாய்! வந்தடைந்தேன் அடி யேனையாட் கொண்டருளே.**

**ப. ரை :** **தேன் ஏய் பூம்பொழில் சூழ்** - வண்டுகள் நிறைந்த பூக்களையுடைய சோலைகளாலே சூழப்பட்ட, **திருவேங்கட மாமலை** - திருவேங்கடம் என்னும் சிறந்த மலையிலே எழுந்தருளியுள்ள, **என் ஆனாய்** - என்னுடைய ஆனை போலும் பெருமானே! **மான் ஏய் கண் மடவார் மயக்கில் பட்டு** - மானைப் போன்ற கண்களையுடைய மடப்பம் பொருந்திய மாதர்களின் கண்மயக்கிலே அகப்பட்டு, **மாநிலத்தில்** - இப்பெரிய மண்ணுலகில், **நானாவித நரகம் புகும் பாவம்** - பல்வகை நரகத்தில் புகும்படியான தீவினைகளை, **நானே செய்தேன்** - நான் ஒருவனே செய்தவனாய், **வந்து அடைந்தேன்** - உன்னைக் கிட்டித் திருவடிகளைப் புகலாகப்

---

**82.** 1 : 5 மாநிலத்தில்; நாநிலத்து (உரைச்சுவடியில் உள்ளது). 2 : 2 நாநாவித.

பற்றினேன். அடியேனை ஆட்கொண்டருள் - அடியவனாகிய என்னை அடிமை கொண்டருள வேண்டும்.

சி. கு : ஏய் - ஏய்தல் என்பதன் முதல்நிலை; ஒத்திருத்தல் என்பது பொருள். என் ஆனாய் என்பதற்கு எனக்கு உரியவனாய் இருப்பவனே என்றும் பொருள் கொள்ளலாம்.

வியா : இரண்டாம் பாட்டு : பந்துக்கள் அல்லாதாரை பந்துக்கள் என்று நினைத்திருந்தேன்; அக்குற்றத்தைப் பொறுத்தருள வேணும் என்று சரணம் புகுந்தார் முதற் பாட்டில். போக்யம் அல்லாதவற்றிலே[1] போக்யதா புத்தி பண்ணிப் போந்தேன்; அக்குற்றத்தைப் பொறுத்தருள வேணும் என்று சரணம் புகுகிறார் இதில்.

மான் ஏய் இத்யாதி - மான் ஏய்ந்து இருக்கிற நோக்கையுடைய; அகவாய் நஞ்சாய் இருக்கச்செய்தேயும் இவனை ஒழியச் செல்லாதாரைப் போலே இருக்க நோக்குமவர்கள் ஆயிற்று. அகவாய் ஆராய்கைக்கு ஈடான அளவு இல்லையே இவனுக்கு; கார்யபுத்யா ஆராயாநிற்கச் செய்தேயும் அநந்ய ப்ரயோஜநைகளாக நோக்குகிறார்களாகக் கொண்டு அதிலே துவக்குண்ணும் ஆயிற்று. மடவார் - நாண், மடம், அச்சம், என்கிற இவற்றில்[2] மடப்பத்தை உடையராய் இருப்பர்களிறே. அத்தாலே சொல்லுகிறது ஸமஸ்த கல்யாண குணாத்மகமான விஷயத்துக்கு உள்ளது எல்லாம் தங்களுக்கு உண்டாக நினைத்திருப்பது. மா நிலத்தில் நானே

---

வி: இரண்டாம் பாட்டு : கேளிர் அல்லாதாரைக் கேளிர் என்று நினைத்திருந்தேன்; அக்குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும் என்று தஞ்சம் புகுந்தார் முதற் பாட்டில். துய்த்து மகிழத் தகுதியற்ற பொருள்களிலே இன்பம் உள்ளதாகக் கருதிப் போந்தேன்; அக்குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும் என்று தஞ்சம் புகுகிறார் இதில்.

மான் ஏய் கண் மடவார் மயக்கில் பட்டு - மான் ஏய்ந்து இருக்கும் நோக்கையுடைய. அகவாய்[3] நஞ்சாய் இருக்கச்செய்தேயும் இவனை ஒழியச் செல்லாதாரைப் போலே தோற்றுமாறு நோக்குபவர்கள். அகவாய் ஆராய்வதற்குத் தக்க அறிவு இல்லையே இவனுக்கு; அவர்கள் இவனிடம் பெறக்கூடிய பொருட்பயன் பற்றிய சிந்தனையோடு இவனை ஆராய்ந்து கொண்டிருக்கவும், தன்னைத் தவிர எதனையும் வேண்டாதவர்களாகத் தன்னையே நோக்குகிறார்கள் என்று கருதி அவர்கள் நோக்கிலே துவக்குண்பான்[4]. மடவார் - நாணம், மடம், அச்சம் என்னும் இவற்றில் மடப்பத்தை உடையராய் இருப்பர். அம்மடப்பமாகிய ஓர் அழகினைப் பெற்றிருத்தலினாலேயே எல்லா நற்பண்புகளுக்கும் உறைவிடமான இறைவனுக்கு உள்ள தகுதிகள் எல்லாம் தங்களுக்கு உள்ளனவாக நினைத்திருப்பர் என்பது சொல்லப்படுகிறது. அஃதாவது பணிவு இன்றிச் செருக்குடன் இருப்பர் என்க. மாநிலத்தில் நானாவித நரகம் நானே புகும்

---

1. அல்லாதவைத்திலே. 2. இவைத்தில்.
3. அகவாய் - உள்ளம். 4. துவக்குண்ணல் - மயங்கிச் சிக்கிக் கொள்ளுதல்.

**நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்** - மாநிலத்தில் நாநாவித நரகம் நானே புகும் பாவம் செய்தேன் - சேதநபேதத்துக்கு எல்லை இல்லையிறே; அவர் களைக் கர்மாநுகுணமாக அநுபவிப்பிக்கைக்கு லோகங்கள்தோறும் பண்ணிவைக்கும் நரகங்களுக்கும் ஓர் அவதி இல்லையிறே. அவை எல்லாவற்றுக்கும்[1], நான் ஒருவனுமே தேவையறுக்கும் படியான பாபத்தைப் பண்ணினேன். ஈஶ்வரனுக்கு ஜகந் நிர்வாஹம் நடக்க வேண்டில் வேறே சில நரகங்கள் ஸ்ருஷ்டிக்க வேண்டும்[2]. ஸ்ரீராமாயணத்திலே கைகேயியை, "நீ என்ன நரகத்திலே புகக் கடவை" என்று உண்டு. அவ்விடத்தை வாசியாநிற்க, நம்பிள்ளை, "முன்பே ஸ்ருஷ்டமான நரகங் கள் போராது என்கிறதோ?" என்ன, "அழகிதாகச் சொல்லிற்று" என்று ஜீயர் அருளிச்செய்தார்.

**தேன் இத்யாதி** - தேன் என்று வண்டு என்னவும் ஆம். **என் ஆனாய்** - அவ் ஆனை வர்த்திக்கிற மலையில் உள்ளதுதன்னையே காட்சியாகக் கொடுக்க அமையும்[3]. ஆனை பெரிய குற்றங்களைக் காணாக் கண்ணிட்டு, பொறுக்க அரியன

---

**பாவம் செய்தேன்** - *உணர்வு உடைய உயிர்த்தொகுதி பலவகை; அதற்கு எல்லை இல்லை. அவ்உயிர்கள் தாம் செய்த வினைக்கு ஏற்பப் பயன் நுகர்வதற்காக ஒவ்வோர் உலகத்திலும் அமைக்கப்பட்டுள்ள நரகங்களுக்கும் ஓர் எல்லை இல்லை. அவை எல்லாவற்றுக்கும் தேவையறுக்கும்படியான*[4] *தீவினையை நான் ஒருவனுமே செய்துவைத்தேன். இனி இறைவனது ஆட்சி, உலகில் தொடர்ந்து நடக்க வேண்டுமானால் வேறு சில நரகங்களை அவன் படைக்க வேண்டும். சீரார் இராமாயணத்திலே கைகேயியை நோக்கி, "நீ எந்த நிரயத்தில் புகுதற்கு உரியை" என்று சொல்லும் ஓர் இடம் வருகிறது. அப்பகுதியினைப் படிக்குங்கால் நம்பிள்ளை, "முன்பே படைக்கப்பட்டுள்ள நரகங்கள் போதா என்று கூறப்படுகிறதோ?" என்றார். அதனைக் கேட்டு, "அழகாகச் சொன்னாய்" என்று நஞ்சீயர் பாராட்டினார். இதனால் இருக்கும் நரகங்களேயன்றி, இனியும் சில நரகங்களைப் படைத்து அவற்றிலும் இட்டு ஒறுக்க வேண்டும்படி தீவினை புரிந்தேன் என்கிறார்.*

**தேன் ஏய் பூம் பொழில் சூழ் திருவேங்கட மாமலை** - *தேன் என்பது உண்ணும் தேனை மட்டும் அல்லாமல் வண்டினையும் குறிக்கும்; ஈண்டு வண்டினைக் குறித்தது.* **என் ஆனாய்** - *திருவேங்கடமுடையானை, 'அடிகள்' என்றாதல் 'தலைவன்' என்றாதல் குறிக்காமல் 'ஆனை' என்கிறார். இதற்குக் கருத்து யாது எனில் யானையானது மலையிலே வாழ்வது; ஆகையால் அம்மலையில் உள்ளது எதனையேனும் தனக்குக் காணக் கொடுத்தாலும் போதும் என்பதாம். மேலும் யானைக்கும் பெருமானுக்கும் சில பொதுத்தன்மைகளும் உண்டு. பெருமானைப்போல யானையும் குற்றங்களைக் காணாக் கண்ணிட்டுப்*[5] *பின்பு பொறுத்தற்கு அரியனவற்றைச் செய்யவல்லதாய் இருக்கும். மேலும்*

---

1. எல்லாத்துக்கும். 2. வேணும். 3. இதன்பின், "அம்மலையில் உள்ளத்தைக் குடுக்கை யாவது என்ஆனாய் என் ஆனாய் என்கையிறே" என்பது மிகையாக உள்ளது.

4. தேவை அறுத்தல் - ஆள் வேண்டும் நிலை நீக்குதல். 5. காணாக் கண்ணிடுதல் - கண்டும் காணாதது போல இருத்தல்.

செய்யவற்றாய் இருக்கையும், ஸதா தர்சநீயமாய் இருக்கையும். **வந்து இத்யாதி** - "நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்" என்ற நானே வந்து அடைந்தேன். அந்நரகாநுபவம் பண்ணும்போதை க்லேசத்துக்கு எதிர்த்தட்டான ஸுகைகதாந மாய் இருக்கும் கைங்கர்யத்தை என்னைக் கொண்டருள வேணும். காமுகனுக்கு அங்கநா பரிஷ்வங்கம் போலே ரஸிக்குமிறே சேஷபூதனுக்குக் கைங்கர்யம். "ரமமாணா:".

---

*எப்பொழுதும் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும்படி அமைந்த அழகினை உடையதாய் இருக்கும்.* **வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டு அருளே** - *"நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்" என்று சொன்ன நானே வந்தடைந் தேன். அந்நரகத்தில் தீவினைப் பயன் நுகரும்போது உண்டாகும் துன்பத்திற்கு எதிர்த்தட்டான*[1] *இன்பத்திற்கே இடமாய் இருக்கும் திருத்தொண்டினைச் செய்ய என்னைக் கொண்டருள வேண்டும். காமுகனுக்கு அழகியின் அணைப்புப் போலே அடியவனுக்குத் திருத்தொண்டு சுவையுடையதாகும். தொண்டு சுவை பயக்குமோ எனின், பயக்கும்.* "பரத்துவாசரது கட்டளைப்படி சித்திர கூடத்தை அடைந்து அங்கு அழகிய பர்ணசாலையைக் கட்டிக்கொண்டு இராமபிரான், சீதா பிராட்டி, இலக்குவன் மூவரும் காட்டில் களித்தார்கள்" *(ரா. பா. 1:32) என்கிறார் வால்மீகி. சாலை அமைத்த இலக்குவனும் களித்தான் என்பதுகொண்டு தொண்டு மகிழ்வைத் தரும் என்பது விளங்கும்.*

## ஒப்புமைப் பகுதி

### 1. மடவார் மயக்கிற்படுதல்

*" மாதரார் கயற்கண் என்னும் வலையுள் பட்டழுந்துவேனை - ......அகவாய் மயிர்க்கத்தியாய் இருக்க இவனை ஒழியத் தங்களுக்குச் செல்லாமை தோற்றும்படி ஆய்த்துப் பார்ப்பது...புறம்பு கால்வாங்க ஒண்ணாதபடி கண்ணைக் காட்டி, தான் கிட்டாதே அகல நிற்கும்; அதுக்கு அடி, கிட்டின அன்று அபிநிவேசத்தோடே போகோபகரணங்களைக் கொண்டு இழிந்த இவன் தனக்கு ஸ்நாநீயம் கொண்டு புறப்பட வேண்டும்படியாயிறே அதின் தன்மை இருப்பது. இவன்தான் அவிவேகி யாகையாலே அகவாய் ஆராயமாட்டாதே வாய்கரையிலே அழுந்தி நோவுபடாநிற்கும் " திி. மா. 16 பெ. உரை.*

*[அபிநிவேசம் - ஆசை. போகோபகரணம் - இன்பநுகர்ச்சிக்குத் துணை யான பொருள்கள். ஸ்நாநீயம் - குளிக்க வேண்டுவது. அவிவேகி - பகுத்தறியும் திறன் இல்லாதவன்.]*

### 2 என் ஆனாய்

*" என் ஆனாய் என் ஆனாய் என்னல் அல்லால் - ஆனையினுடைய ஸ்வபாவங்கள் ஈச்வரனுக்கு உண்டாகையாலே அந்த ஸ்வபாவங்களைப் பற்ற 'என் ஆனாய்' என்கிறார். ஆனையானது 'ஒருநாள் கண்டோம்' என்று இருக்க ஒண்ணாதபடி நித்யஸ்ப்ருஹணீயமாய் இருக்கையும்*

---

1. எதிர்த்தட்டு - எதிரானது; மாறானது.

பெரிய செருக்கை உடைத்தாய் இருக்கையும் தான் நினைத்தபோது கைக்கு எட்டினாரை எடுத்துக் கழுத்திலே வைத்துக் கொள்ளக் 'கடவதாய் இருக்கையும், தாம்தாமே ஏற வேண்டியிருப்பார்க்குப் படிந்து கொடுக்கக் கடவதாய் இருக்கையும், தான் உகவாதாரைக் கீண்டு பொகட்டால் ஆராய்ச்சியின்றிக்கே இருக்கையும், தன்னைக் கட்டக் கயிறு தானே கொடுக்கக் கடவதுமாயிறே இருப்பது; அப்படியே நித்யஸ்ப்ருஹணீயமாய் இருக்கிற வடிவழகும், செருக்கால் பலித்த ஸமாதிகரஹிதத்வமும், ராஜா பாணிச்சியைத் தனக்கு மஹிஷியாக்கி வைத்தால் நிவாரகர் இல்லாதாற்போலே, ஒரு நித்யஸம்ஸாரிக்கும் தன்பக்கல் ந்யஸ்தபரதையே ஹேதுவாகத் தன்னைக் கொடுத்தால் நிவாரகர் இன்றியிலே இருக்கும்படியான ஸ்வாதந்த்ர்யமும், ஆனை தன்மேலே ஏறப் படிந்து கொடுக்குமா போலே ஸாதநாந்தர நிஷ்ட்டருக்கு நேதாவாய் இருக்கிற சீலமும், ஆச்ரித விரோதிகளை ஸம்பந்தங் கிடக்கச் செய்தே அழியச் செய்தாலும் நிவாரகர் இல்லாதபடியான விரோதி நிரஸநசீலமும் போகோபகரண பக்தியைத் தானே கொடுக்க கடவதான ருசிஜநகத்வமுமாகிற இஸ்ஸ்வபாவங்கள் ஆயிற்று இவர்க்குக் காலக்ஷேபத்துக்கு விஷயம் "

தி. நெ. தா. 10 பெ. உரை.

[ஸ்வபாவம் - தன்மை. நித்ய ஸ்ப்ருஹணீயம் - என்றும் விரும்பத்தக்கது. பலித்த - விளைந்த. ஸமாதிகரஹிதத்வம் - ஒப்பற்ற தன்மை. மஹிஷி- தேவி. நிவாரகர் - தடுப்பவர். ந்யஸ்தபரதை - பொறுப்பை (சுமையை) ஒப்படைத்தல். ஹேது - காரணம். ஸ்வாதந்த்ர்யம் - தன்வயத்தனாய் இருக்கும் தன்மை. ஸாதநாந்தர நிஷ்ட்டர் - (இறைவனைத் தவிர்ந்த) வேறு நெறியில் நிற்போர். நேதா - நடத்துபவன்; வழிகாட்டுபவன். விரோதி நிரஸநசீலம் - பகை துடைக்கும் பண்பு. போகோபகரணம் - இன்பத்துக்குக் கருவி. ருசிஜநகத்வம் - விருப்பத்தை உண்டாக்கும் தன்மை.]

(82)

## 83

**கொன்றேன் பல்உயிரைக் குறிக் கோள்ஒன் றிலாமையினால்**
**என்றே னும்மிரந்தார்க் கினி தாக உரைத்தறியேன்**
**குன்றேய் மேகமதிர் குளிர் மாமலை வேங்கடவா!**
**அன்றே வந்தடைந்தேன் அடி யேனை ஆட்கொண்டருளே.**

ப. ரை : குன்று ஏய் மேகம் அதிர் - மலைகளிலே பொருந்திய முகிற் கூட்டங்கள் முழங்கும், குளிர் மாமலை வேங்கடவா - குளிர்ச்சியும் பெருமையும் உடைய மலையான திருவேங்கடத்தில் எழுந்தருளியிருப்பவனே! குறிக்கோள் ஒன்று இலாமையினால் - குறிக்கோள் என்பது சிறிதும் இல்லாமையினால்,

---

**83.** 2 : 1 என்றே னும்இரந்தார்க்.

**பல் உயிரைக் கொன்றேன்** - *பலரைக் கொலை செய்தேன்;* **இரந்தார்க்கு இனிதாக** - *பிச்சை கேட்டு வந்தார்க்கு இனிய முறையில்,* **என்றேனும் உரைத்து அறியேன்** - *ஒரு காலத்திலும் பதில் சொல்லி அறியேன்;* **அன்றே வந்து அடைந்தேன்** - *அக் கணத்திலேயே உன்னைக் கிட்டிப் பற்றினேன்.* அடியேனை ஆட்கொண்டு அருள்-.

**சி. கு :** *ஏய் மேகம் - வினைத்தொகை.*

**வியா : மூன்றாம் பாட்டு :** பந்துக்கள் அல்லாதாரை பந்துக்கள் என்றும் போக்யம் அல்லாதார்பக்கலிலே போக்யதாபுத்தி பண்ணியும் போந்த அளவேயோ, தேவர் திருவுள்ளத்துக்கு அஸஹ்யமாம்படி பரஹிம்ஸையே பண்ணிப் போந்தேன் என்கிறார்.

**கொன்றேன்** - மடிதடவி விட்டிலேன்; அர்த்தம் கொண்டு[1] வந்தானாகில், பின்துடர்த்தி[2] அறக் கொன்று பறிக்கும்; வெறும் கையனாகில், நான் அவள்பக்கல் என்கொடு போகக் கடவேனாக நீ வெறுங்கையே வந்தது என்று கொல்லுவன். **பல் உயிரை** - அநுதாபம் பிறந்தது இல்லை; ப்ராயச்சித்தாதிகாரமும் இல்லை. அநுதாபம் உண்டாகில் ஒன்று இரண்டு அளவிலே மீளுமிறே; அப்போதிறே ப்ராயச்சித்தாதி காரமும் உள்ளது. "இப்போது இத்தைக் குற்றமாகச் சொல்லுகிற நீர் அன்று அது செய்வான் என்?" என்ன, **குறிக்கோள் ஒன்று இலாமையினால்** - தேஹாதிரிக்தமாய் இருப்பதோர் ஆத்ம வஸ்து உண்டு. இது செய்யில் நரகாநுபவம் தப்பாது என்றாதல், அன்றிக்கே, இத்தை உடையான் ஒருவன் உளன்; அவன் ஸர்வ பூத ஸுஹ்ருத்தாய் இருப்பான் ஒருத்தன்; அவனுக்கு இது அஸஹ்யமாய் இருக்கும் என்று புத்தியிற் படாமையாலே செய்தேன். அவனைப் பார்த்தல், நாம் நின்ற நிலை

---

**வி : மூன்றாம் பாட்டு :** *உறவல்லாதாரை உறவினராகக் கொண்டும் இன்ப நுகர்ச்சிக்கு உரியர் அல்லாதார்பக்கலிலே இன்ப நுகர்ச்சி உள்ளதாகக் கருதியும் போந்ததோடு அன்றித் தங்கள் திருவுள்ளத்துக்கு ஒவ்வாதபடி பிறர்க்கு இன்னா இழைத்துப் போந்தேன் என்கிறார்.*

**கொன்றேன்** - *மடியில் உள்ளது கொண்டு விட்டிலேன்; பொருள் கொண்டு வந்தானாகில், கவர்ந்த பின்னர் என் பின்னே தொடர்ந்து வாராத வண்ணம் கொன்று பறித்தேன்; வெறுங்கையனாக வந்தானாகில், "நான் அவள் பக்கம் எதைக் கொண்டுபோவேன் என்று எண்ணி நீ வெறுங்கையனாக வந்தாய்?" என்று கொல்லுவேன்.* **பல் உயிரை** - *கழிவிரக்கம் பிறந்தது இல்லை; கழுவாய் தேடும் தகுதியும் இல்லை. இரக்கம் தோன்றினால் ஒன்று இரண்டு கொலையோடு மீள்வான்; அப்பொழுதன்றோ கழுவாய் செய்யும் தகுதியும் உண்டாகும்.* **குறிக்கோள் ஒன்று இல்லாமையால்** - *"இப்போது இதனைக் குற்றமாகச் சொல்லும் நீர் அன்று அவ்வாறு ஏன் செய்தீர்?" என்ன, "குறிக்கோள் ஒன்று இல்லாமையால்" என்கிறார். உடம்பினும் வேறுபட்டதாய் இருப்பதோர் உயிர் உண்டு; இது செய்யில் நரகத்தில் துன்பம் நுகர்தல் தப்பாது என்று அறிந்தேன் இல்லை. இஃதன்றி, இவ்உயிரை உடையான் ஒருவன் உளன்; அவன் எல்லார்க்கும் நண்பனாய் இருப்பான் ஒருவன்; அவனுக்கு இது தாங்க ஒண்ணாததாய் இருக்கும் என்று அறிவுக்கு எட்டாமையாலே செய்தேன்.*

---

1. கொடு. 2. பின் துடற்றி.

இது என்று ஆராய்தல் செய்யாமையாலே ஒருதலை அறியிலும் பரஹிம்ஸையில் ப்ரவ்ருத்தியானிறே. விஷயார்த்தமாக த்ரவ்யார்ஜநம் பண்ணுகிற நாளில் முன்னடி தோற்றாமையாலே பரஹிம்ஸையைப் பண்ணிப் போந்தீராகில் பின்பு த்ரவ்யங்களும் பெற்று அபிமத விஷயங்களும் கைபுகுந்து நீரும் அவளுமாய் ரஸித்து இருக்கிற அளவில்தான் ஆர்த்த விஷயத்தில், 'ஐயோ'[1] என்றீரோ என்ன, **என்றேனும் இத்யாதி** - கார்த்திகைப் புதியதுக்கும் நாம் இட வேணும் என்னுதல், இவன் ஜீவிக்க வேணும் என்னுதல், செருக்காலேயாதல் இட்டு அறியேன். இட்டு அறியேன் என்பது அதுக்கு ப்ரஸங்கம் உண்டாகிலிறே. **இனிதாக** - ஒருவன் அர்த்தித்து வந்தால், "இரப்பாளனாய் வந்தவனுக்குக் குறைவறத் தரப் பெற்றிலேன்" என்று ஆறி வார்த்தை சொன்னான் ஆகில், "இவன்தான் செய்வது[2] என், தன் வெறுமை யாலேயன்றோ தாராவிட்டது" என்று அவனும் ஆறிப் போமிறே; அங்ஙன் அன்றிக்கே "நாமும் நம் தாரித்ர்யமுமாய்ப் பட்டது படாதே இவன் வாயில் வார்த்தை கேட்கைக்கு என் செய்ய அபேக்ஷித்தோம்" என்று உள்ளதனையும் நெஞ்சு புண்படும்படியாயிற்று இல்லை என்பது.

**குன்று ஏய் மேகம் அதிர்** - குன்றிலே என்னுதல்; குன்று போலே என்னுதல். கனக்க நீரை முகந்தால் ஓர் இடத்திலே தங்கியிறே வர்ஷிப்பது. **அதிர்** -

---

இறைவனைப்பற்றி நினைத்தலோ, நாம் நின்ற நிலை இஃது என்று ஆராய்தலோ செய்யாமல் இருந்தேன். இவ்இரண்டனுள் ஒன்றினை அறிந்தாலும் பிறர்க்கு இன்னா செய்தலில் உறுதியாக இழியான். **என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்து அறியேன்** - "பெண்டிர்பால் இன்பம் துய்த்தற்காகப் பொருள் திரட்டும் அந்நாளில் விளைவு அறியாமையாலே பிறரைத் துன்புறுத்திப் போந்தீராகில் பின்பு பொருள்களும் பெற்றுக் காமுற்றவையும் கைபுகுந்து[3] நீரும் அவளுமாய் இன்பம் துய்த்திருக்கும் அளவிலேனும் வருந்தி வந்தவரிடம் ஐயோ! என்றீரோ?" என்று வினவ, "என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்து அறியேன்" என்கிறார். கார்த்திகைத் திங்களில் புதுநெல் அறுக்கும் காலத்திலும் நாம் இரந்தார்க்கு இட வேண்டும் என்றோ, இரக்கத்தாலே இவன் வாழ வேண்டும் என்றோ, செல்வச்செருக்கால் புகழ் பெற வேண்டும் என்றோ ஒரு நாளும் இட்டது இல்லை. இட்டறியேன் என்று சொல்வது அது குறித்துப் பேச்சு எழுந்தாலன்றோ! **இனிதாக** - ஒருவன் பிச்சை கேட்டு வந்தால், "இரப்பாளனாய் வந்தவனுக்குக் குறைவில்லாமல் வேண்டும் அளவு தரப் பெற்றிலேன்" என்று தன்மையாகப் பேசினான் என்றால், "இவன்தான் என் செய்வான், தன்பால் இல்லாமையாலன்றோ தாராமல் விடுத்தான்" என்று அவனும் ஆறிப்[4] போவான்; அவ்வாறு அன்றி, "நாமும் நம் வறுமையுமாய்த் துன்புற்றது போதாமல் இவன் வாயில் பேச்சுக் கேட்பதற்கு என்று ஏன் இவனிடம் கையேந்தி நின்றோம்?" என்று உயிர் உள்ளவரையும் நெஞ்சு புண்படுமாறு இல்லை என்று சொன்னேன்.

**குன்று ஏய் மேகம் அதிர் குளிர் மாமலை வேங்கடவா!** - குன்று ஏய் என்பதற்குக் குன்றிலே என்றோ குன்று போலே என்றோ பொருள்கொள்க. கனக்க நீரை முகந்தால் ஓர் இடத்திலே தங்கியன்றோ பொழிவது. இரந்து கேளா

---

1. அய்யோ. 2. செய்வுது.
3. கைபுகுதல் - கிட்டுதல். 4. ஆறி - மனம் ஆறுதல் உற்று.

இரவாது இருக்கச் செய்தேயும் இனிதாகச் சொல்லுவாரைப் போலே ஆயிற்று முழக்கம் இருப்பது. **அன்றே வந்து அடைந்தேன்** - அநுதாபம் பிறந்தாதல் ப்ராயஶ்சித்தம் பண்ணியாதல் அன்றிக்கே கொன்ற கை கழுவாதே உதிரக்கை கழுவாதே வந்து சரணம் புகுந்தேன்; என் செயலைப் பாராதே ஸ்வரூபத்தைப் பார்த்து அடிமை கொள்ள வேணும். "பூர்வ வ்ருத்தத்தைப் பார்த்தால் பரஹிம்ஸை யாகில் பண்ணிற்று, இப்போது ஒரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணி வந்தாப் போலே இருக்கச் சொல்லுகிறது என்?" என்ன, அவனையே பார்த்துத் தம்மைப் பாராதே வார்த்தை சொல்லுகிறார். அவனைப் பார்த்தால், "**அரி:ப்ராணாந் பரித்யஜ்ய**" என்றிறே இருப்பது. "**ப்ராணாநபி பரித்யஜ்ய**" என்னாவிட்டது, அவற்றைக்[1] குவாலாக நினைத்து இராமை. காலிலே வந்து விழுந்தவனை முன்புத்தை சாத்ரவம் பாராதே ரக்ஷித்த இது ஓர் ஏற்றமோ என்று இருக்குமவர் ஆயிற்று.

---

*திருக்கச் செய்தேயும் இனிதாகச் சொல்லுவாரைப்போலே முழக்கம் இருக்கிறது.* **அன்றே வந்து அடைந்தேன்** - *கழிவிரக்கம் பிறந்தோ, கழுவாய் செய்தோ வாராமல் கொன்ற கையில் படிந்த குருதி கழுவாமலேயே வந்து தஞ்சம் புகுந்தேன்; என் செயலைப் பாராமல் தன்மையைப் பார்த்து அடிமை கொண்டருள வேண்டும். "முன்பு செய்து போந்ததைப் பார்த்தால் பிறர்க்குத் துன்பமன்றோ செய்து போந்துள்ளீர்; இப்போது நம்மை அடைவதற்கு உரிய நெறிகளுள் ஒன்றினை மேற்கொண்டு ஒழுகி வந்தாற்போலே சொல்லுவது என்?" என்ன, அவனையே பார்த்துத் தம்மைப் பாராமல் பேசுகிறார். அவனைப் பார்த்தால்,* "பகைவர்களுள் புகல் அடைந்த பகைவனானவன் அச்சமுற்றவனாகிலும், அச்சமற்றவனாகிலும் நல்ல நெஞ்சினனாலே உயிரைவிட்டுக் காத்தற்கு உரியவன்" *(ரா. யு. 18:28) என்றன்றோ இருக்கிறான்.* **"உயிரையும் விட்டு"** *என்று உம்மைச்சொல் இட்டுச் சொல்லாமல் விடுத்தது அதனைக் குவாலாக நினைத்திராமையாலே[2] ஆகும். காலிலே வந்து விழுந்தவனை அவனது முன்னைய பகைமையைக் கருதாமல் காத்த இச்செயல் அவனுக்கு ஓர் ஏற்றமோ என்று இருப்பவர் ஆவார் இவ்ஆழ்வார்* (83)

## 84

**குலந்தான் எத்தனையும் பிறந் தேஇறந் தெய்த்தொழிந்தேன்**
**நலந்தான் ஒன்றுமிலேன் நல்ல தோர்அறம் செய்துமிலேன்**
**நிலந்தோய் நீள்முகில்சேர் நெறி ஆர்திரு வேங்கடவா!**
**அலந்தேன் வந்தடைந்தேன் அடி யேனைஆட் கொண்டருளே.**

**ப. ரை :** நிலம் தோய் நீள் முகில் சேர் - *மண்ணில் படிந்த பெரிய முகிற் கூட்டங்கள் சேர்ந்திருக்கும்,* நெறி ஆர் திருவேங்கடவா - *வழிகள் நிறைந்த திருவேங்கட மலையில் எழுந்தருளியுள்ளவனே!* எத்தனை குலமும் - *எல்லாக்*

---

1. அவைத்தைக்.
8. குவாலாக நினைத்தல் - பெரிதாக நினைத்தல்.

84. 2 : 4 தோர் அரண். 3 : 2 நீர்முகில்சேர். 4 : 1 அலந்தே.

குலங்களிலும், பிறந்து இறந்து எய்த்தொழிந்தேன் - பிறந்தும் இறந்தும் இளைத்துக் கெட்டேன்; நலம் ஒன்றும் இலேன் - ஒருவகை நன்மையும் உடையேன் அல்லேன்; நல்லது ஓர் அறமும் செய்திலேன் - நற்செயல் ஒன்றுகூடச் செய்தேன் அல்லேன்; அலந்தேன் - பெரிதும் துன்புற்றவன் ஆயினேன்; வந்து அடைந்தேன் - அத்தகையேன் உன் திருவடியைக் கிட்டிப் பற்றினேன். அடியேனை ஆட்கொண்டு அருள்-.

சி. கு : குலந்தான், நலந்தான் ஆகியவற்றுள் 'தான்' என்பது அசை. எத்தனையும் என்பதில் உள்ள உம்மையைப் பிரித்துக் குலம் என்பதனொடு கூட்டுக. "நலம் ஒன்றும் இலேன்" என்பதற்கு அறியாமல் செய்த நன்மையாதல் (அஜ்ஞாத ஸுக்ருதம்), விழுக்காடாக நேரும் நன்மையாதல் (யாத்ருச்சிக ஸுக்ருதம்), இடைப்பிறவரலாக அமையும் நன்மையாதல் (ப்ராஸங்கிக ஸுக்ருதம்) உடையவன் அல்லேன் என்று வரையப்பட்டுள்ள திவ்யார்த்த தீபிகை உரை போற்றிக்கொள்ளத் தக்கது. அறியாமல் செய்யும் நன்மை - ஒரு நற்செயல் என்று தனக்கும் தெரியாமல் நேருவது. ஒருவன் ஒரு பசுவைக் கொல்வதற்காகத் துரத்திச் செல்ல, அஃது இறைவன் திருமுற்றத்தை வலம் செய்து போக, அவனும் அதனைப் பின்தொடர்ந்து வலம் செய்து செல்ல அவனுக்கு இறைவன் திருமுற்றத்தை வலம் வந்த புண்ணியம் அவன் அறியாமலே நேருவது போன்றது. விழுக்காடாக நேரும் நன்மை - தான் எதிர்பார்க்காமல் விளைவது. இறைவனையும் இறையடியார்களையும் காண வேண்டும் என்னும் எண்ணம் இல்லாமல் கொள்ளை அடிக்கப்போகும் இடத்தில் இறைவனையும் இறையடியார்களையும் காணும் பேறு கிட்டுவது போன்றது. இடைப்பிறவரலாக அமையும் நன்மை - வேறு ஒரு செயலைச் செய்யும்பொழுது பிறிது ஒரு நன்மையும் அடையுமாறு செய்வது. வாழைக் கொல்லைக்குத் தண்ணீர் இறைக்கும்போது விடாய்த்தவர்களும் பருகிக் களைப்பு ஆறட்டும் என்று எண்ணி இறைப்பது போன்றது.

வியா : நாலாம் பாட்டு : குலம்தான் இத்யாதி - குலங்கள் எங்கும் பிறந்து இறந்து திரிந்தேன். அநுலோம ப்ரதிலோம ரூபத்தாலே பிறந்த பிறவிக்கு ஓர் எல்லை இல்லை ஆயிற்று. எல்லா ஜந்மங்களிலும் புக்குப் பிறப்பது இறப்பதாய் இனிப் பிறக்கைக்கு ஈடான கர்ம விசேஷம் உண்டாகிலும் பிறக்கைக்கு க்ஷமன் அல்லாதபடி இளைத்தேன். நலம்தான் ஒன்றும் இலேன் - இப்படி அநேக ஜந்மங்கள் பிறந்து மரித்துப் போருகிற இடத்திலும் நடுவே ஒரு ஸுக்ருதமாதல் அதுக்கு பலமான ஜ்ஞாநமாதல் உடையேன் ஆயிற்றிலேன். நல்லது ஓர் அறம் செய்தும் இலேன் -

---

வி : நாலாம் பாட்டு : குலம்தான் எத்தனையும் பிறந்தே இறந்து எய்த்தொழிந்தேன் - குலங்கள் எங்கும் பிறந்து இறந்து திரிந்தேன். உயர்ந்த குலத்தவன் தாழ்ந்த குலத்துப் பெண்ணை மணக்க அவர்களுக்கு மகனாகவும், தாழ்ந்த குலத்தவன் உயர்ந்த குலத்துப் பெண்ணை மணக்க அவர்களுக்கு மகனாகவும், இப்படிப் பிறந்த பிறவிக்கு ஓர் எல்லை இல்லை. எல்லாப் பிறப்புகளிலும் புக்குப் பிறப்பது இறப்பதாய், இனிப் பிறக்க வேண்டும்படியான வினை இருந்தாலும் பிறத்தற்கு ஆற்றல் அற்றவனாய் இளைத்தேன். நலம்தான் ஒன்றும் இலேன் - இப்படிப் பல பிறப்புகள் பிறந்து மடிந்துபோகும் இடத்திலும் நடுவே ஒரு நல்வினையையோ அதன் பயனாகிய அறிவினையோ உடையவன் ஆயினேன் அல்லேன். நல்லது ஓர் அறம் செய்தும் இலேன் - இப்போது நன்மை பிறத்தற்கு

- இப்போது நன்மை பிறக்கைக்கு அடியாக முன்பு செய்தது ஒன்று இல்லையேயாகிலும், மேல் ஒரு நன்மை பிறக்கைக்கு ஈடாக இப்போது ஏதேனும் ஒரு ஸாதநா - நுஷ்ட்டாநம் பண்ணுகிறது உண்டோ என்னில், பலத்தோடே வ்யாப்தமாய் இருப்பது ஒரு ஸாதநாநுஷ்ட்டாநம் பண்ணப் பெற்றிலேன்.

**நிலம் இத்யாதி** - நிலத்திலே தோய்ந்த மஹா மேகங்களானவை போன அடிப்பாடு ஆர்ந்து இருக்கும் ஆயிற்று. கழுத்தே கட்டளையாக நீரைப் பருகி முகந்த நீர்க் கனத்தாலே கால்வாங்கிப் போக மாட்டாதே நகர்ந்து நகர்ந்து[1] துளித்துத் துளித்துக்கொண்டு ஸஞ்சரிக்கிற மேகங்கள் போன அடிப்பாடு தெரியும்படியாய் இருக்கும் ஆயிற்று. **அலந்தேன் வந்து அடைந்தேன்** - ஜந்ம பரம்பரைகளிலே அலந்து முசித்தேன். **அடியேனை** - இனி ஒரு ஜந்மம் வரும் என்று அஞ்சி ஏங்க வேண்டாதபடியான தாஸ்யத்திலே என்னை மூட்ட வேணும்.

---

*அடியாக முன்பு செய்தது ஒன்று இல்லையேயாகிலும் மேல் ஒரு நன்மை பிறக்கைக்கு ஈடாக இப்போது ஏதேனும் ஒரு நற்செயல் செய்வது உண்டோ என்னில், பயன் தப்பாது இருப்பது ஓர் அறச்செயலையும் செய்யப்பெற்றிலேன்.*

**நிலம் தோய் நீள் முகில்சேர் நெறி ஆர் திருவேங்கடவா** - *நிலத்திலே தோய்ந்த பெரு முகிற் கூட்டங்கள் போன அடிப்பாடு ஆர்ந்திருக்கும். கழுத்தே கட்டளையாக நீரைப் பருகி முகந்த நீர்ச் சுமையாலே கால்வாங்கிச் செல்ல[2] மாட்டாமல் நகர்ந்து நகர்ந்து துளித்துத் துளித்துக்கொண்டு திரியும் மேகங்கள் போன அடிப்பாடு[3] தெரியும்படியாய் இருக்கும் திருவேங்கடத்தில் உள்ளவனே!* **அலங்தேன் வந்து அடைந்தேன்** - *பிறவித் தொடர்ச்சிகளிலே அலந்து முசித்தேன்[4].* **அடியேனை ஆட்கொண்டு அருள்** - *இனி ஒரு பிறப்பு வரும் என்று அஞ்சி ஏங்க வேண்டாதவாறு அடிமைத் திறத்திலே என்னை மூட்ட வேண்டும்.* (84)

## 85

**எப்பா வம்பலவும் இவை யேசெய்தி ளைத்தொழிந்தேன்**
**துப்பா! நின்அடியே தொடர்ந் தேத்தவும் கிற்கின்றிலேன்**
**செப்பார் திண்வரைசூழ் திரு வேங்கட மாமலைஎன்**
**அப்பா! வந்தடைந்தேன் அடி யேனைஆட் கொண்டருளே.**

ப. ரை : செப்பு ஆர் திண் வரை சூழ் - *அரணாக அமைந்த திண்ணிய மலைகளாலே சூழப்பட்ட,* திருவேங்கட மாமலை - *திருவேங்கடம் ஆகிய பெரிய மலையிலே எழுந்தருளியுள்ள,* என் அப்பா - *எனக்குத் தந்தையானவனே!* துப்பா - *ஆற்றல் பொருந்தியவனே!* எப்பாவம் பலவும் இவ்வையே செய்து - *பல*

---

1. நகழ்ந்து நகழ்ந்து.
2. கால்வாங்கிச் செல்லல் - அடி பெயர்ந்து நகர்தல். 3. அடிப்பாடு - அடியானது பட்ட சுவடு.
4. முசித்தேன் - வருந்தினேன்.

**85.** 2 : 3 துடர்ங.

*வகைப்பட்ட தீவினைகளே புரிந்து,* **இளைத்தொழிந்தேன்** - *மெலிவுற்றேன்;* **நின் அடியே தொடர்ந்து ஏத்தவும்** - *நின்னுடைய திருவடிகளையே பின்சென்று பரவுவதற்கும்,* **கிற்கின்றிலேன்** - *ஆற்றல் உடையேன் அல்லேன்;* **வந்து அடைந்தேன்** - *அத்தகையேன் உன்னை நாடி வந்து சேர்ந்தேன்.* **அடியேனை ஆட்கொண்டு அருள்**-.

**சி. கு :** *துப்பன் - வலிமை உடையவன்; துப்பு - வலிமை. கிற்கிலேன் - இடைச் சொல்லடியாகப் பிறந்த தன்மை ஒருமை வினைமுற்று. கில் - ஆற்றல் உணர்த்துவது ஓர் இடைச்சொல்.*

வியா : **அஞ்சாம் பாட்டு : எப்பாவம் இத்யாதி** - அதிபாதகம், உபபாதகம், மஹாபாதகம் என்றாப் போலே சொல்லுகிற பஞ்ச விதமான பாபங்களை அநுஷ்டித்துப் பின்னை இவற்றுக்கு[1] வரக்கடவ பலங்களைக் கேட்டு க்லேசப்பட்டேன். இப்படி மஹா பாபங்களையே அநுஷ்டித்துக்கொடு போராநின்றால் நடுவே ஒரு ஸுக்ருதம் பிறந்து அத்தாலே என் பக்கலிலே ருசியும் உண்டாகப் பெற்றதாகில் **"நமே பக்தஃ ப்ரணஶ்யதி"** என்கிற வார்த்தையை விஶ்வஸித்திருக்கலாமிறே. மஹா பாபங்களைப் பண்ணினானாகிலும் புருஷோத்தம வித்யை உண்டாக அவனுக்குப் பாப விமோசநம் உண்டாகச் சொல்லாநின்றதிறே. **துப்பா** - இப்பாபங்களைப் போக்கி உன்னைப் பற்றினாரை ரக்ஷிக்கைக்கு ஈடான சக்தியோகத்தை உடையவனே! **நின் அடியே** - பக்தி பூர்வகமாக உன் திருவடிகளை வடிம்பிட்டு ஆஶ்ரயிக்க க்ஷமன் ஆயிற்றிலேன்.

**செப்பார் இத்யாதி** - அரணாகப் போரும்படியான திண்ணிய வரைகளாலே; சூழப்பட்ட திருமலையை வாஸ ஸ்தாநமாகவுடைய நிருபாதிக பந்துவானவனே!

---

வி : **அஞ்சாம் பாட்டு : எப்பாவம் பலவும் இவையே செய்து இளைத்தொழிந்தேன்** - *பெரும் குற்றம், குற்றம், மிகப் பெருங் குற்றம் என்றாற்போலே சொல்லும் ஐவகைக் குற்றங்களைச் செய்து, பின்னை இவற்றினால் வரக்கூடிய விளைவுகளைக் கேட்டுக் கலக்கமுற்றேன். "இப்படிப் பெருந் தீவினைகளையே புரிந்துகொண்டு போகும்போது நடுவே ஒரு நல்வினை பிறந்து, அதனால் என் பக்கலிலே விருப்பம் உண்டாகி இருக்குமானால்,* **"என்னுடைய அன்பன் அழிவது இல்லை"** *(கீதை. 9:31) என்பதனை மெய்ம்மைப் பெருவார்த்தையாகக் கொண்டிருக்கலாமே" என்றான். சிறிது விருப்பம் வந்துழித் தீவினைகள் கழியுமோ என்னில், பெருந்தீவினைகளைப் புரிந்தானாகிலும், இறைவனைப் பற்றிய மெய்யறிவு உண்டாயின் அவனுக்குத் தீவினையினின்றும் விடுதலை கிட்டும் என்று சொல்வாரன்றோ.* **துப்பா** - *இத்தீங்குகளைப் போக்கி, உன்னைப் பற்றினாரைக் காத்தற்கு ஏற்ற ஆற்றலோடு கூடியவனே!* **நின் அடியே தொடர்ந்து ஏத்தவும் கிற்கின்றிலேன்** - *இறையன்பு முற்பட்டு நிற்க உன் திருவடிகளை வடிம்பிட்டுப்[2] பற்றி நிற்கத் தகுந்தவனாக இருந்தேன் அல்லேன்.*

**செப்பு ஆர் திண் வரை சூழ் திருவேங்கட மாமலை என் அப்பா** - *அரணாக அமையும் திண்ணிய வரைகளாலே சூழப்பட்ட திருமலையை உறைவிடமாக*

---

1. இவைத்துக்கு; அவைத்துக்கு.
2. வடிம்பிட்டு - வற்புறுத்தி.

அடியேனை - என்னுடைய பாபாநுகூலமாக அன்றிக்கே உன்னோடு உண்டான நிருபாதிக பாந்தவாநுரூபமான கைங்கர்யத்தில் என்னை மூட்ட வேணும்.

---

வுடைய இயற்கையான உறவாக இருப்பவனே! அடியேனை ஆட்கொண்டருளே - என்னுடைய தீவினைக்கு ஏற்றாற்போல் அல்லாமல் உன்னோடு உண்டான இயற்கையான உறவுக்குச் சேர அடிமைத்திறத்தில் என்னை மூட்ட வேண்டும்.

**ஒப்புமைப் பகுதி**

**பாவம்**

" பாவம் - பரிக்ரஹித்த சரீரத்தாலே பண்ணின நிஷித்தாநுஷ்டாநம் "
மு. தி. 59 பெ. உரை.

[ பரிக்ரஹித்த - ஏற்றுக்கொண்ட. நிஷித்தாநுஷ்டாநம் - விலக்கப்பட்டவற்றைச் செய்தல்.] (85)

## 86

**மண்ணாய் நீர்எரிகால் மஞ்சு லாவுமா காசமுமாம்**
**புண்ணார் ஆக்கைதன்னுள் புலம் பித்தளர்ந் தெய்த்தொழிந்தேன்**
**விண்ணார் நீள்சிகர விரை ஆர்திரு வேங்கடவா!**
**அண்ணா! வந்தடைந்தேன் அடி யேனைஆட் கொண்டருளே.**

ப. ரை : விண் ஆர் நீள் சிகரம் - வானத்தை அளாவும் உயர்ந்த கொடுமுடிகளைக் கொண்ட, விரை ஆர் திருவேங்கடவா - மனம் நிறைந்த திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ளவனே! அண்ணா - தலைவனே! மண்ணாய் நீர் எரி கால் மஞ்சு உலாவும் ஆகாசமும் ஆம் - மண், நீர், நெருப்பு, காற்று, மேகங்கள் உலாவுகின்ற வானம் என்னும் பருப்பொருள்கள் ஐந்தினால் ஆகிய, புண் ஆர் - புண்கள் நிறைந்த, ஆக்கை தன்னுள் - உடம்பிலே அகப்பட்டு, புலம்பித் தளர்ந்து எய்த்தொழிந்தேன் - தனியே கதறி உடல் மெலிந்து மிகவும் இளைத்தேன்; வந்து அடைந்தேன் - நின் திருவடிகளைக் கிட்டித் தஞ்சம் புகுந்தேன்; அடியேனை ஆட்கொண்டு அருள்-.

சி. கு: எய்த்தல் - இளைத்தல். அண்ணா - அண்ணல் என்பது ஈறுகுறைந்து ஈற்றயல் நீண்டு விளியாயிற்று; அண்ணன் என்பதன் விளி எனலும் ஆம்.

வியா : **ஆறாம் பாட்டு : மண்ணாய்** இத்யாதி - ராஜ புத்ரன் வேடன் கையிலே அகப்பட்டுத் தன்னை வேடனாக பிரமிக்குமாப் போலே, நித்யமாய்

---

வி : ஆறாம் பாட்டு : மண்ணாய் நீர் எரி கால் மஞ்சு உலாவும் ஆகாசமும் ஆம் புண் ஆர் ஆக்கை தன்னுள் புலம்பித் தளர்ந்து எய்த்தொழிந்தேன் - மன்னன் மகன் வேடன் கையிலகப்பட்டுத் தன்னை வேடனாகக் கருதி மயங்குவது போலே,

---

86. 3 : 1 விண்ணோர்.

ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய் ஏகரூபமாய் ஈச்வரசேஷமான **ஆத்ம** வஸ்து கர்மாநுகுணமாக அசித்தோடே ஸம்ஸ்ருஷ்டம் ஆயிற்று. ஏகரூபமான வஸ்து உபசயாத்மகமான தேஹத்திலே அகப்பட்டது. **புண் ஆர் ஆக்கை** - புண்ணை மறைய வரிந்திறே உடம்பிலே வைத்தது. அறிவுடையார், **"சரீரம் வ்ரணவத் பச்யேத்"** என்று இதுதன்னையே வ்ரணமாகச் சொல்லாநின்றார்களிறே. தேஹத்திலே புக்கு அகப்பட்டு, பின்னை அங்கே கிடந்து கூப்பிட்டு, அதுதானும் மாட்டாதே தளர்ந்து, பின்னை இளைத்தேன்.

**விண் ஆர் இத்யாதி** - நித்யஸூரிகள் வைகுண்டத்திற் போலே வந்து ஏத்தும்படியாக ஆகாசாவகாசத்து அளவும் வளர்ந்த பெரிய கொடுமுடிகளையும் உடைத்தாய், பரிமள ப்ரசுரமான திருமலையை வாஸ ஸ்தாநமாகக் கொண்டு நிற்கிற. **அண்ணா** - கீழே 'அப்பா' என்றார்; இங்கே அண்ணா என்னாநின்றார். தாயே தந்தை என்றும் தாரமே கிளை மக்கள் என்றும் விட்ட உறவுமுறைக்கு எதிர்த்தட்டான எல்லா உறவு முறையும் எம்பெருமானே என்றாயிற்று இவர் இருப்பது. **அடியேனை** - வெளிறு கழிந்தால் ஸம்பந்தம் நித்யஸூரிகளோடு ஒத்து இருக்குமிறே எனக்கும்; ஆன பின்பு அவர்களைக் கொண்டருளும் அடிமையை என்னைக் கொண்டருள வேணும்.

---

*எஞ்ஞான்றும் இருப்பதாய், அறிவு இன்பமென்னும் இலக்கணம் பொருந்தியதாய், ஒருபடிப்பட்டதாய், இறைவனுக்கு அடிமைப்பட்டதாய் இருக்கும் உயிர் தான் செய்த வினைக்கு ஏற்ப அறிவற்ற பொருளோடே கட்டுண்டது. ஒருபடிப் பட்டிருக்கும் உயிர் அழியக்கூடிய யாக்கையிலே அகப்பட்டது.* **புண் ஆர் ஆக்கை** *- புண்ணை மறைய வரிந்தன்றோ உடம்பிலே வைத்தது. அறிவுடையார்,* **"யாக்கையைப் புண்ணைப் போலக் கருதுக"** *என்று இதனையே புண்ணாகச் சொல்வர். யாக்கையிலே புக்கு அகப்பட்டுப் பின்பு அங்கே கிடந்து கூப்பிட்டு, அதுவும் மாட்டாமல் தளர்ந்து இளைத்தேன்.*

**விண் ஆர் நீள் சிகரம் விரை ஆர் திருவேங்கடவா** *- அயர்வறும் அமரர்கள் வைகுந்தத்தில் வணங்குவது போலே வந்து ஏத்துவதற்கு ஏற்ப வானப்பரப்பு வரையிலும் வளர்ந்த பெரிய கொடுமுடிகளை உடையதாய் மணம் நிறைந்ததாய் இருக்கும் திருமலையை உறைவிடமாகக் கொண்டு நிற்கும் பெருமானே!* **அண்ணா** *- கீழே 'அப்பா' என்றார், இங்கே அண்ணா என்கிறார். தாயே தந்தை என்றும் தாரமே கிளை மக்கள் என்றும் விட்ட உறவுமுறைக்கு எதிர்த்தட்டான எல்லா உறவு முறையும் எம்பெருமானே என்று கருதியன்றோ இவர் இருப்பர்.* **அடியேனை ஆட்கொண்டு அருளே** *- வெளிறு[1] கழிந்தால் இறைவனோடு அயர்வறும் அமரர்களுக்கு இருக்கும் தொடர்பினை நிகர்த்த தொடர்பு இருக்குமன்றோ எனக்கும்; ஆன பின்பு அவர்களிடம் கொண்டருளும் அடிமையை என்னிடத்தும் கொண்டருள வேண்டும்.*

### ஒப்புமைப் பகுதி

1. **வேடனை நிகர்க்கும் உயிர்**

   *பாட்டு 1இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

---

1. வெளிறு - வெண்மை; ஈண்டு அறியாமையைக் குறித்தது.

2. விண்ணார் நீள்சிகர வேங்கடம்

*" சென்னியோங்கு தண்திருவேங்கடம் உடையாய் "*

*" சொன்னியோங்கு - திருமலையில் கொடுமுடிகள் ஆகாசத்திலே முட்டி நிற்குமிறே. இத்தால் உபயவிபூதிக்கும் முகங்காட்டுகைக்காக நிற்கிற நிலையிறே தோற்றுகிறது. உதயகிரியிலே ஆதித்யன் கிளம்பினால் எல்லார்க்கும் ப்ரகாசிக்குமாபோலே, திருமலையில் நிற்கிற நிலை உபயவிபூதியுங் கண்டு வாழுகைக்கிறே. 'வேங்கடம் கோயில் கொண்டதனோடும் - அருக்கன்மேனி நிற்பார்க்கு' என்னக்கடவதிறே. 'வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு'. மண்ணோர் விண்ணோர்க்கு - என்றும் - கண்ணாவான் - தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனிறே; அங்குள்ளார் திருமலையில் கொடுமுடியிலே வந்து இளைப்பாறுவர்கள்; இங்குள்ளார் மொய்த்த சோலையிலும் மொய்பூந்தடத்திலும் தாழ் வரையிலும் இளைப்பாறுவர்கள்; பூவியல் பொழிலும் தடமுமவன் கோயிலுங் கண்டிறே உள்ளுளாவி உலர்ந்து உலர்ந்து ஆவியுள் குளிருவது "*

*பெரி. தி. 5:4:1 பெ. உரை.*
*(86)*

## 87

**தெரியேன் பாலகனாய்ப் பல தீமைகள் செய்துமிட்டேன்**
**பெரியேன் ஆயினபின் பிறர்க் கேஉழைத் தேழையானேன்**
**கரிசேர் பூம்பொழில்சூழ் கன மாமலை வேங்கடவா!**
**அரியே! வந்தடைந்தேன் அடி யேனைஆட் கொண்டருளே.**

**ப. ரை :** **கரி சேர் பூம் பொழில் சூழ்** - யானைகள் சேர்ந்திருப்பதும் பூக்கள் நிறைந்த சோலையாலே சூழப்பட்டதுமான, **கன மாமலை வேங்கடவா** - உறுதி வாய்ந்த பெரிய மலையான திருமலையிலே எழுந்தருளியுள்ளவனே! **அரியே** - சிங்கமே! **பாலகனாய்** - சிறு பிள்ளையாக இருந்தபோது, **தெரியேன்** - அறிவில்லாதவனாய், **பல தீமைகள் செய்துமிட்டேன்** - பல கொடிய செயல்களைச் செய்தேன்; **பெரியேன் ஆயின பின்** - இளைஞனாக வளர்ந்த பின்னர், **பிறர்க்கே உழைத்து** - மற்றவர்களுக்காகப் பாடுபட்டு, **ஏழையானேன்** - நிலை கெட்டேன்; **வந்து அடைந்தேன்** - நின் திருவடிகளைக் கிட்டித் தஞ்சம் புகுந்தேன்; **அடியேனை ஆட்கொண்டருள்** -.

**சி. கு :** **தெரியேன்** - முற்றெச்சம். **கனம்** - திண்மை. **அரி** - சிங்கம். இதனை ஹரி என்னும் வடசொல்லின் திரிபாகக் கொள்வாரும் உண்டு.

---

**87.** 1 : 5 செய்தும் விட்டேன். 3 : 3 கனக.

வியா : **ஏழாம் பாட்டு : தெரியேன் இத்யாதி** - பாலகனாய் தெரியேன் - சில நாள் அதிசைசவமாய் யுக்தாயுக்தங்கள் அறியாதே கிடந்தேன். அல்பம் அறிவு பிறந்த பின்பு, தோன்றினபடி பல தீமைகள் செய்து திரிந்தேன். **பெரியேன் இத்யாதி** - அநந்தரம் யௌவநம் வந்து முகங்காட்டினவாறே[1], நல்லது ஒரு பூக் கண்டால் என் தலையிலே வையாதே ஸ்த்ரீ பரதந்த்ரனாய் அவர்களுக்கே ஆவன தேடி துஃக்கப்பட்டு சதிர்கேடனாய் இளிம்பன் ஆனேன்.

**கரி இத்யாதி** - லீலார்த்தமாக ஆனைகள் வந்து சேரப்பட்டு, பூத்த பொழிலாலே சூழ்ந்து திண்ணிதாய் இருக்கிற திருமலையை வாஸ ஸ்தாநமாக உடையவனே! **அரியே** - என்னுடைய ப்ரதிபந்தகத்தைப் போக்குகைக்கு ஈடான பராபிபவந ஸாமர்த்யத்தை உடையவனே! **ஆட்கொண்டருளே** - பிறர்க்கே உழையாமே ப்ராப்த விஷயத்திலே கைங்கர்யத்தைக் கொண்டருள வேணும்.

---

வி : ஏழாம் பாட்டு : **தெரியேன் பாலகனாய்ப் பல தீமைகள் செய்துமிட்டேன்** - *பாலகனாய்த் தெரியேன் - சின்னாள் சிறு பிள்ளையாய்த் தக்கன தகாதன அறியாமல் கிடந்தேன். சிறிது அறிவு பிறந்த பின்பு, தோன்றியவாறு பல தீமைகள் செய்து திரிந்தேன்.* **பெரியேன் ஆயின பின் பிறர்க்கே உழைத்து ஏழையானேன்** - *பிறகு இளமை வந்து முகங்காட்டியபோது நல்லது ஒரு பூக் கண்டால் என் தலையில் வைத்துக்கொள்ளாமல் பெண்கள் இட்ட வழக்கனாய்*[2] *அவர்களுக்கே ஆவன தேடித் துன்பப்பட்டுச் சதிர்கேடனாய்*[3] *இளிம்பன்*[4] *ஆனேன்.*

**கரி சேர் பூம் பொழில் சூழ் கன மாமலை வேங்கடவா** - *விளையாடுவதற்காக ஆனைகள் வந்து சேரப்பெற்றதும் பூத்த பொழிலாலே சூழ்ந்து திண்ணியதாய் இருப்பதும் ஆகிய திருமலையை உறைவிடமாக உடையவனே!* **அரியே** - *என்னுடைய இடைச்சுவர்களைப்*[5] *போக்குகைக்கு ஈடான பிறர் செருக்கடக்கும் மேனாணிப்பு*[6] *உடையவனே!* **ஆட்கொண்டருளே** - *பிறர்க்கே உழைக்காமல் வகுத்த இடமாகிய உனக்குப் பணிசெய்யுமாறு என்னைக் கொண்டருள வேண்டும்.*

**ஒப்புமைப் பகுதி**

**பாலகன்**

" *பாலகன் - தீம்புகள் செய்தாலும் பொடிய ஒண்ணாத பருவம்* "

*தி. மா. 3 பெ. உரை.*

*(87)*

## 88

**நோற்றேன் பல்பிறவி நுன்னைக் காண்பதோர் ஆசையினால்**
**ஏற்றேன் இப்பிறப்பே இடர் உற்றனன் எம்பெருமான்!**
**கோற்றேன் பாய்ந்தொழுகும் குளிர் சோலைசூழ் வேங்கடவா!**
**ஆற்றேன் வந்தடைந்தேன் அடி யேனைஆட் கொண்டருளே.**

---

1. யௌவநம் முகங்காட்டினவாறே.
2. இட்ட வழக்கன் - சொன்ன வண்ணம் ஒழுகுபவன். 3. சதிர் கேடன் - நிலையழிந்தவன்.
4. இளிம்பன் - திறமையற்றவன். 5. இடைச்சுவர் - தடைகள். 6. மேனாணிப்பு - தலைமைப்பாடு.

**88.** 1 : 3 உன்னைக். 3 : 4 மாமலை.

ப. ரை : **கோல் தேன் பாய்ந்து ஒழுகும்** - *மரக்கொம்புகளிலிருந்து தேன் பெருகி இழிகின்ற,* **குளிர் சோலை சூழ் வேங்கடவா** - *குளிர்ந்த பொழில்களாலே சூழப்பட்ட திருமலையை உறைவிடமாகக் கொண்டவனே!* **எம்பெருமான்** - *எங்களுக்குத் தலைவனே!* **பல் பிறவி நோற்றேன்** - *பல பிறவிகள் உண்டாகுமாறு வினைகளைச் செய்து வைத்தேன்;* **நுன்னைக் காண்பது ஓர் ஆசையினால்** - *உன்னைக் காண வேண்டும் என்னும் ஒப்பற்ற வேட்கையினால்,* **இப் பிறப்பே ஏற்றேன்** - *இப்பிறப்பில் உனக்குத் தக்கவன் ஆனேன்.* **இடர் உற்றனன்** - *பெரிதும் துன்புற்றேன்;* **ஆற்றேன்** - *துயரங்களைத் தாங்க மாட்டாதவன் ஆனேன்;* **வந்து அடைந்தேன்** - *நின் திருவடிகளைக் கிட்டித் தஞ்சம் புகுந்தேன்;* **அடியேனை ஆட்கொண்டருள்-.**

சி. கு : *நுன்னை* - *நீ என்பது வேற்றுமை ஏற்குங்கால் நுன் எனத் திரிந்தது; நின் ஆகும் என்பது தொல்காப்பியர் கூற்று.*

*நீயென் ஒரு பெயர் நெடுமுதல் குறுகும்.*
*ஆவயின் னகரம் ஒற்றா கும்மே" என்பது உருபியல் நூற்பா (7).*

வியா : **எட்டாம் பாட்டு** : **நோற்றேன் பல் பிறவி** - பல் பிறவி நோற்றேன். எனக்குப் பல ஜந்மங்கள் உண்டாகும்படியாகவாயிற்று நான் ஸாதநா நுஷ்ட்டாநம் பண்ணிற்று. இப்படி பிறந்து போராநிற்கச் செய்தே நடுவே யாத்ருச்சிக மாக ஒரு ஸுக்ருதம் பிறந்தது; அத்தாலே உன்னைக் காண வேணும் என்று ஆசை பிறந்து, தேவர்க்கு ஆம்படி யோக்யன் ஆனேன். "நீர் யோக்யர் என்னும் இடம் அறிந்தபடி எங்ஙனே?" என்ன, **இப் பிறப்பே இடர் உற்றனன்** - இஜ்ஜந்மம் தன்னிலே, நாம் நின்ற நிலை சாலப் பொல்லாது என்று என் நெஞ்சிலே பட்டது.

**கோல் தேன் இத்யாதி** - கோல்களிலே வைத்த தேனானது பாய்ந்து வெள்ளமிட்டுக் குளிர்ந்த[1] சோலையாலே சூழப்பட்ட திருமலையை வாஸ ஸ்தாநமாக உடையவனே! **ஆற்றேன்** - ஜந்ம பரம்பரைகளுக்கு ஆற்ற மாட்டாதே திருவடி

---

வி : **எட்டாம் பாட்டு** : **நோற்றேன் பல் பிறவி** - *பல் பிறவி நோற்றேன். எனக்குப் பல பிறவிகள் உண்டாதற்கு உரிய விரகுகளைச் செய்து போந்தேன்.* **நுன்னைக் காண்பது ஓர் ஆசையினால் ஏற்றேன்** - *இப்படிப் பிறந்து போந்து நிற்கச் செய்தே நடுவே விழுக்காட்டிலே ஒரு நன்மை பிறந்தது; அதனாலே உன்னைக் காண வேண்டும் என்று ஆசை பிறந்து, உனக்கு உரியவாறு தக்கவன் ஆனேன்.* **இப்பிறப்பே இடர் உற்றனன்** - *"நீர் தக்கவர் என்பது எப்படி அறிந்தீர்?" என்ன, "இப்பிறப்பே இடர் உற்றனன்" என்கிறார். இப்பிறப்பிலே நாம் நின்ற நிலை சாலப் பொல்லாதது என்பது என் நெஞ்சிலே பட்டது.* **எம்பெருமான்-.**

**கோல் தேன் பாய்ந்து ஒழுகும் குளிர் சோலை சூழ் வேங்கடவா** - *கோல்களிலே வைத்த தேனானது பாய்ந்து வெள்ளமிட்டுக் குளிர்ந்த சோலையாலே சூழப்பட்ட திருமலையை உறைவிடமாக உடையவனே!* **ஆற்றேன் வந்து அடைந்தேன்** - *பிறவித் தொடர்ச்சிக்கு ஆற்றமாட்டாது திருவடிகளிலே வந்து தஞ்சம் புகுந்தேன்.*

---

1. குளுந்த.

களிலே வந்து சரணம் புகுந்தேன். அடியேனை இத்யாதி - எனக்கு ஆற்றாமை உண்டானால் பிறப்பே ஆற்றாமையுடைய உன்னை, என் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைத் தர வேணும் என்று ப்ரார்த்திக்க வேண்டுகிறது என்? நான் ஆற்றாமை உடையேனாய் இருந்தேன்; ஆற்றாமை பிறப்பது எப்போதோ! என்று பார்த்து நிற்குமவனாய் இருந்தாய் நீ.

---

அடியேனை ஆட்கொண்டருளே - எனக்கு *ஆற்றாமை தோன்றுமானால், தொடக்கத்திலிருந்தே ஆற்றாமையுடைய உன்னை யான் என் இயல்புக்குச் சேர அடிமை செய்யும் நிலையினை எனக்குத் தர வேண்டும் என்று இறைஞ்சுவது எற்றுக்கு? நான் ஆற்றாமை உடையேனாய் இருந்தேன்; நீயோ ஆற்றாமை இவனுக்குப் பிறப்பது எப்போதோ! என்று பார்த்து நிற்பவனாய் இருந்தாய். இப்படி இருந்தபோதிலும் இறைஞ்சுகிறேன் என்கிறார்.* (88)

## 89

பற்றேல் ஒன்றுமிலேன் பாவ மேசெய்து பாவியானேன்
மற்றேல் ஒன்றறியேன் மாய னேஎங்கள் மாதவனே!
கற்றேன் பாய்ந்தொழுகும் கம லச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்தடைந்தேன் அடி யேனைஆட் கொண்டருளே.

ப. ரை : மாயனே - *வியத்தகு பண்புகளை உடையவனே!* எங்கள் மாதவனே! - *எங்கள் குற்றங்களைப் பொறுப்பிக்கும் பெரியபிராட்டிக்குக் கணவனாய் இருப்பவனே!* கல் தேன் பாய்ந்து ஒழுகும் கமலச் சுனை வேங்கடவா - *மலை முழைஞ்சுகளினின்றும் தேன் பெருகி ஒழுகுவதும், தாமரைகள் நிறைந்த நீர்நிலைகளையுடையதுமான திருமலையிலே வாழ்பவனே!* பற்று ஒன்றும் இலேன் - *பற்றுக்கோடு யாதும் இல்லாதேன்;* பாவமே செய்து பாவி ஆனேன் - *மறச்செயல்களையே புரிந்து தீவினையாளன் ஆயினேன்;* மற்று ஒன்றும் அறியேன்- *பிற வழிகளில் எதனையும் அறியாதேன்;* அற்றேன் வந்து அடைந்தேன் - *இப்படி இருந்தும் உனக்கே அற்றுத் தீர்ந்தவனாய் நின் திருவடிகளைக் கிட்டித் தஞ்சம் புகுந்தேன்;* அடியேனை ஆட்கொண்டருள்-.

சி. கு: *'பற்றேல்', 'மற்றேல்' இரண்டிலும் 'ஏல்' அசை. பாவமே - ஏகாரம் தேற்றேகாரம். மாதவன் - பிராட்டிக்குத் தலைவன்; மா - பிராட்டி; தவன் - தலைவன்.*

வியா : ஒன்பதாம் பாட்டு : பற்றேல் ஒன்றும் இலேன் - பகவத் ஸம்பந்தத்தை அறுத்துக்கொண்டு கைகழியப் போன வஸ்துவுக்கு பகவத் ப்ராப்திக்கு ஈடாகச் சொல்லலாவது ஒரு ஸுக்ருதம் இல்லை; அதில்லாமையாலே, பாபங்

---

வி : ஒன்பதாம் பாட்டு : பற்றேல் ஒன்றும் இலேன் - *இறைத் தொடர்பை அறுத்துக்கொண்டு கைகழியப் போன உயிருக்கு இறைவனைக் கிட்டுவதற்கு ஈடாகச் சொல்லக்கூடியது ஒரு நல்வினை இல்லை; அஃது இன்மையாலே,*

களையே பண்ணி, பின்னை நிரூபிக்கும் இடத்தில் ஜ்ஞாநாநந்தாதிகளை ஒழிய பாபங்களையிட்டு நிரூபிக்கும்படி ஆனேன். **மற்றேல் ஒன்று அறியேன்** - பிராப்திக்கு ஈடான உபாய விஷய ஜ்ஞாநம் இல்லை. **"அஹம் அஸ்ம்யபராதா நாம் ஆலயః".** **மாயனே** - இங்ஙனே இருந்துள்ளவர்களையும் ரக்ஷிக்கைக்கு ஈடான ஆஶ்சர்ய சக்தியுக்தனே! **எங்கள் மாதவனே** - இப்படி இருப்பாருடைய குற்றங்களையும் பொறுப்பித்து ரக்ஷிக்கைக்கு அடியான பிராட்டியை உடையையாய் அத்தாலே ஸர்வாபாஶ்ரய பூதனானவனே !

**கல் தேன் இத்யாதி** - முழைஞ்சுகளிலே வைத்த தேன்களானவை நிறைந்து வழிந்து வெள்ளமிட்டு ஒழுகி வந்து சுனைகளிலே புகுர அங்கே தாமரைகள் அலரும் ஆயிற்று. **அற்றேன்** - தேவர் திருவடிகளிலே வ்யவஸிதன் ஆனேன். **அடியேனை ஆட்கொண்டருளே** - எனக்குப் புறம்பு பற்று இல்லை என்றேனே, எனக்குப் பற்றான நீ லக்ஷ்மீபதியாய் இருந்தாயே, ஆன பின்பு, என்னுடைய ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டருள வேணும்.

---

*தீவினைகளையே பண்ணி, பின்னர் என்னை யார் என விளக்கும் இடத்தில் அறிவு இன்பம் தொடக்கமானவற்றை விடுத்துத் தீவினைகளையிட்டு விளக்க வேண்டும்படி ஆனேன்.* **மற்றேல் ஒன்று அறியேன்** - *இறைவனைப் பெறுவதற்கு ஈடான நெறிகள் பற்றிய அறிவு ஒன்றும் இல்லை.* **யான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாய் உள்ளேன்; என்னைக் காத்துக்கொள்ள ஒரு வழியும் அற்றவனாய் இருக்கிறேன்"** *(அஹி. ஸம். 37:30) என்று சொல்லத்தக்கவன் ஆயினேன்.* **மாயனே** - *இப்படி இருப்பவர்களையும் காத்தற்குத் தகுந்த வியத்தகு ஆற்றல் படைத்தவனே!* **எங்கள் மாதவனே** - *இப்படி இருப்பாருடைய குற்றங்களையும் பொறுப்பித்துக் காத்தற்கு அடியான பிராட்டியையுடையவனாய் அதனாலே எல்லார்க்கும் சார்பாக இருப்பவனே!*

**கல் தேன் பாய்ந்து ஒழுகும் கமலச் சுனை வேங்கடவா** - *முழைஞ்சுகளிலே வைத்த தேன்கூடுகள் நிறைந்து வழிந்து வெள்ளமிட்டு ஒழுகிவந்து சுனைகளிலே புக அங்கே தாமரைகள் அலரும்.* **அற்றேன்** - *உன் திருவடிகளே தஞ்சம் என்று துணிந்தேன்.* **அடியேனை ஆட்கொண்டருளே** - *எனக்குப் புறம்பு பற்று இல்லை என்றேன். அத்தகைய எனக்கு நீ பற்றானாய்; எனக்குப் பற்றான நீயோ திருமகள் கேள்வனாய் இருந்தாய். அவ்வாறு அமைந்த பின்பு, எனது அடிமைத் தன்மைக்குச் சேர்ந்த அடிமையினை என்பால் கொண்டருள வேண்டும்.*

**ஒப்புமைப் பகுதி**

1. மாயன்

*" மாயன் - ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களை உடையவன் "*
*தி. வா. மொ. 1:9:6-36*

*" மாயன் - ஸௌந்தர்ய சீலாதிகளால் ஆச்சர்யபூதன் "*
*தி. வா. மொ. 3:3:3-36*

*[ஸௌந்தர்யம் - அழகு. சீலம் - ஒழுக்கம்.]*

" மாயன் - ஆச்ரித பக்ஷபாதம் "
திவா. மொ. 3:3:3-36

[ஆச்ரித பக்ஷபாதம் - அடியார்பால் கோடிய அன்பு]

" மாயவனை -ஆஸ்சர்ய ரூபகுண சேஷ்டிதங்களை யுடையவனை "
பெரி. தி. 4:10:10 ம. மா. மு. உரை

[ரூபம் - உருவம். சேஷ்டிதம் - செயல்.]

2. மாதவன்

" மாதவனே - நம் பூர்வவ்ருத்தம் பாராதே விஷயீகரிப்பிக்கைக்கு அங்கே இருப்பாரும் உண்டு "
திவா. மொ. 10:5:7-36

[பூர்வ வ்ருத்தம் - முன்னைய நடத்தை]

" மாதவன் -......ஸௌலப்யத்துக்கு குருகுலவாஸம் பண்ணின இடம் "
பாவை. 9 பெ. உரை.

[ஸௌலப்யம் - எளிதில் அடையப்படும் தன்மை]

" மாதவனை - ஆச்ரயித்தார் குற்றத்தைப் பொறுப்பித்து அபேக்ஷிதங் களைச் செய்விப்பார் அருகே உண்டு என்கை "
பாவை. 30 நாயனார் உரை.

[ஆச்ரயித்தார் - பற்றினார். அபேக்ஷிதங்கள் - விருப்பங்கள்.]

(89)

## 90

**கண்ணாய் ஏழுலகுக் குயிர் ஆயஎம் கார்வண்ணனை**
**விண்ணோர் தாம்பரவும் பொழில் வேங்கட வேதியனைத்**
**திண்ணார் மாடங்கள்சூழ் திரு மங்கையர் கோன்கலியன்**
**பண்ணார் பாடல்பத்தும் பயில் வார்க்கில்லை பாவங்களே.**

**ப. ரை :** **ஏழ் உலகுக்கு** - ஏழு உலகங்களுக்கு, **கண் ஆய்** - கண் போலவும், **உயிர்ஆய** - உயிர் போலவும் அமைந்த, **எம் கார் வண்ணன்** - எங்கள் மேகம் போலும் நிறத்தை உடையவனும், **விண்ணோர் தாம் பரவும்** - அமரர்கள் வந்து வழிபடும், **பொழில் வேங்கட வேதியனை** - சோலை சூழ்ந்த திருமலையிலே உறையும் வேதத்தால் விளக்கப்படுபவனும் ஆகிய பெருமானைக் குறித்து, **திண் ஆர் மாடங்கள் சூழ்** - திண்ணிய மாடங்களாலே சூழப்பட்ட, **திருமங்கையர்கோன் கலியன்** - திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவனான கலியன் பாடிய, **பண் ஆர் பாடல் பத்தும்** - இசை நிறைந்த பாக்கள் பத்தினையும், **பயில்வார்க்குப் பாவங்கள் இல்லை** - ஓதுபவர்களுக்குத் தீவினைகள் இல்லாமற் போகும்.

**சி. கு :** வேதியன் - **வேதத்தால் விளக்கப்படுபவன்.**

வியா : **பத்தாம் பாட்டு : கண்ணாய் இத்யாதி** - ஸகல லோகங்களுக்கும் த்ருஷ்டிபூதனாய், ஸத்தாஹேதுவான ப்ராணனாய், அதுக்கு மேலே என்னை அநுபவிக்கைக்காக மேகம் போலே ஶ்ரமஹரமான வடிவை உடையனாய், ஏழ் உலகத்து உள்ளாரோபாதி நித்யஸூரிகளும் ஒரு மூலையிலே புகுந்து ஏத்துகிற திருமலையை வாஸஸ்தாநமாக உடைய வேதைகஸமதிகம்யனை ஆயிற்றுக் கவி பாடிற்று.

**திண்ணார்** - **"ஸர்வம் ஸகுசலம் க்ருஹே"** - என்னும்படி ஆயிற்று. **பண் ஆர் பாடல்** - பண் மிகுந்திருக்கும் ஆயிற்று; இவற்றை[1] அப்யஸிப்பார்க்கு ஒரு பாபங்களும் வந்து கிட்டாது. பகவத் ப்ராப்திக்கு ப்ரதிபந்தகங்கள் அடங்க ஓடிப் போம். "பாவமே செய்து பாவியானேன்" என்று இவரும் சொல்லி ஈஶ்வரனும் அத்தைப் பொறுத்த பின்பு இவருக்குப் பாபம் இல்லையே. ஸ்ரீவிபீஷணாழ்வானை **'வத்யதாம்'** என்ற போது அதுக்கு விஷயமானார் கூடவந்த நால்வரும்; பின்னை அவத்யர் ஆனார்கள். அப்படியே இவருடைய பரிகரமாய் இவருடைய ப்ரபந்தத்தை அதிகரிக்கவே, இவர்கள் பாபங்களை போக்கும் ஆயிற்று. ஈஶ்வரனுக்குத் தம் வ்ருத்த ஹாநியைச் சொல்லிவைத்து அநந்தரம் 'அடைந்தேன்' என்றதுக்குக்

---

வி : பத்தாம் பாட்டு : **கண்ணாய் ஏழுலகுக்கு உயிராய எம் கார் வண்ணனை விண்ணோர் தாம் பரவும் பொழில் வேங்கட வேதியனை** - *எல்லா உலகங்களுக்கும் கண்ணாய், வாழ்வதற்குக் காரணமான உயிராய், அதற்கு மேலே எனக்கு இன்பம் ஊட்டுவதற்காக மேகம் போலே அயர்வு அகற்றும் வடிவை உடையனாய், ஏழுலகத்தில் உள்ளாரைப்போலே அயர்வறும் அமரர்களும் ஒரு மூலையிலே புகுந்து ஏத்தும் திருமலையை உறைவிடமாக உடைய வேதத்தாலே விளக்கப்படுபவனாய் உள்ளவனைக் குறித்தன்றோ பாசுரம் பாடினார்.*

**திண்ணார்** - "இல்லத்தில் எல்லாம் இனியவாய் இருக்கின்றன" *(ரா. யு. 127:5)* என்பதனை இங்கும் சொல்லத்தக்க வகையில் இருந்தது. **பண் ஆர் பாடல்** - *பண் மிகுந்து இருக்கும் பாடல்; இவற்றை ஓதுவார்க்கு ஒரு தீவினையும் வந்து கிட்டாது. இறைவனைக் கிட்டுவதற்கு இடைச்சுவராய் உள்ளவை அடங்க ஓடிப் போம். "பாவமே செய்து பாவியானேன்" என்று இவரும் சொல்லி இறைவனும் அதனைப்பொறுத்த பின்பு இவருக்குத் தீவினை உண்டோ?* **'வீடண ஆழ்வானைக் 'கொல்க'** *(ரா. யு. 17:27) என்றபோது அவனோடு உடன்வந்த நால்வரும் அவ்வாறு கொல்லப்படுவதற்கு உரியவராய் அமைந்தனர்; பின்னர் அவன் கொல்லப்படாமல் தழுவிக் கொள்ளப்பட்டபோது அவனோடு சேர்ந்துநின்ற அவர்களும் கொல்லத்தகாதவர்களாய் ஏற்றுக்கொள்ளப்பட்டனர். அது போலே, இவ்ஆழ்வாருடைய கூட்டத்தைச் சேர்ந்தவராய் இப்பாடல்களைப் பயில்வார்க்கு இவ்ஆழ்வார்க்குக் கிட்டும் சிறப்பும் கிட்டும் அன்றோ! எனவே இப் பாசுரங்கள் ஆழ்வார்தம் தீவினைகளைப் போக்கியது போலவே பயில்வார்தம் தீவினைகளையும் போக்கும் என்று சொல்லப்பட்டது. இறைவனுக்குத் தம் தீயொழுக்கத்தைச் சொல்லிவைத்துப் பின்பு 'அடைந்தேன்' என்பதற்குக்*

---

1. இவைற்றை.

கருத்து என் என்னில், அது சொன்னால் அவன் இரக்கத்துக்கு அடியாமே; அவ் இரக்கம் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்துக்கு உடலாம்.

---

*கருத்து யாது என்னில், அஃது அவன் இரக்கத்திற்கு அடியாய் அமையும்; அவ் இரக்கம் தம் இயற்கைக்குச் சேர்ந்த அடிமையினைப் பெறுதற்கு உடலாகும் என்பதாம்.*

**ஒப்புமைப் பகுதி**

**ஏழுலகங்களுக்கும் பெருமான் கண்ணாய் இருத்தல்**

*" கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு "*

*" கண்ணாவான் - நிர்வாஹகனாவான் என்னுதல், கண்ணாகைக்காக என்னுதல், கண்ணாமவன் என்னுதல். 'சக்ஷுர்த் தேவாநாமுத மர்த்யாநாம்' என்கிற ச்ருத்யர்த்தத்தை அருளிச்செய்கிறார் "*

*தி. வா. மொ. 1:8:3-36*

*[நிர்வாஹகன் - தலைவன்]*

*[குறிப்பு : இதில் கண்ணாகைக்காக என்பது கண்ணாவான் என்பதனை வானீற்று வினையெச்சமாகக் கொண்டு உரைக்கப்பட்ட பொருள். அஃது ஈண்டு ஒப்புமை ஆகாது. மற்ற இருபொருளும் ஒப்புமை ஆகும்]*

*(90)*

---

1. தரியாதவனாம்.

## முதற்பத்து - பத்தாம் திருமொழி - கண்ணார்

பிர : தம்முடைய வெறுமையைச் சொல்லிக் கைங்கர்ய லாபத்துக்காகச் சரணம் புக்கார்; பாஷ்யகாரர் சரணம் புக்க அநந்தரம், "ஸ்த்தூல ஸூக்ஷ்ம ரூபையான ப்ரக்ருதியைக் கழித்துத் தர வேணும்; அஹங்கார மமகாரங்களை கழித்துத் தர வேணும்; விரோதியைப் போக்கித் தர வேணும்; பரபக்த்யாதிகளைப் பிறப்பிக்க வேணும்" என்று அபேக்ஷித்தாப் போலே, விரோதி நிரஸந சீலனாய், ஸர்வ ரக்ஷகனாய், ஆஶ்ரித ஸ்பர்சம் உள்ள த்ரவ்யத்தால் அல்லது தரியாதவனாய் ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைக ஸ்வபாவனாய், ஸர்வ ஸுலபனாய் உள்ள ஸர்வேஶ்வரனை, "என்னுடைய விரோதியைப் போக்கித் தர வேணும், உன்னால் அல்லது செல்லாமையைப் பிறப்பிக்க வேணும்" என்று அபேக்ஷிக்க, "உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் செய்கைக்கு அன்றோ நாம் இங்கே வந்து நிற்கிறது" என்று திருமலையில் நிலையைக் காட்டி, அநந்தரம் இவர் திருவுள்ளத்திலே வந்து இவர்க்கு பரபக்த்யாதிகளைப் பிறப்பித்தான் என்கிறது இத்திருமொழியில். ப்ரபந்நனுக்கும் உண்டு பக்தி; பக்திமான் ஆகிய அதிகாரிக்கும் உண்டு. "**நமஸ்யந்தஶ்ச மாம் பக்த்யா**" என்று இரண்டு இடத்திலும் சொல்லாநின்றதிறே.

---

தோ : *தம்முடைய வெறுமையைச் சொல்லித் திருத்தொண்டு செய்யும் பேற்றினைப் பெறுவதற்காகத் தஞ்சம் புக்கார்; பிரம்மசூத்திரத்திற்குப் பேருரை கண்ட இராமாநுசர் இறைவன்மாட்டுத் தஞ்சம் புகுந்த பின்னர், "நுண்ணுடல் பருவுடல்களைக் கழித்துத் தர வேண்டும்; யான் எனது என்னும் செருக்குகளைக் கழித்துத் தர வேண்டும்; பகையினைப் போக்கித் தர வேண்டும்; இறையன்பு முதலானவற்றைப் பிறப்பிக்க வேண்டும்" என்று வேண்டினாற் போலே, இவரது வேண்டுகோளும் அமைந்துள்ளது. பகை துடைக்கும் பண்பினனாய், எல்லாவற்றையும் காப்பாற்றுபவனாய், அடியார் கைப்பட்டனவற்றால் அன்றிப் பிறவற்றால் செல்லாதவனாய்[1], அடியாரோடு கலத்தலையே இயல்பாகக் கொண்டவனாய், எல்லார்க்கும் எளியனாய் உள்ள பெருமானை, "என்னுடைய பகையைப் போக்கித் தர வேண்டும், உன்னாலன்றி வாழமாட்டாத தன்மையைப் பிறப்பிக்க வேண்டும்" என்று வேண்டி நின்றார்; அவன், "உம்முடைய எல்லா விருப்பங்களையும் செய்கைக்கன்றோ நாம் இங்கே வந்து நிற்கிறது" என்று திருமலையில் நிலையைக் காட்டினான். அடுத்து, இவர் திருவுள்ளத்திலே வந்து இவர்க்கு இறையன்பு முதலானவற்றைப் பிறப்பித்தான் என்கிறது இத்திருமொழி. வழிபடுவானுக்கன்றோ இறையன்பு முதலானவை வேண்டும்; தஞ்சம் புகுவானுக்கும் வேண்டுமோ என்னில், இறையன்பு தஞ்சம் புகுவானுக்கும் உண்டு; வழிபடுவானுக்கும் உண்டு. "என்னை அன்புடன்-பக்தியுடன்-வணங்குகிறார்கள்" (கீதை. 9:14) என்று இரண்டு இடத்திலும் சொல்லப்படுகிறதன்றோ!*

---

1. செல்லாதவன் - வாழமாட்டாதவன்.

**கண்ணார் கடல்சூழ் இலங்கைக் கிறைவன்தன்**
**திண்ணாகம் பிளக்கச் சரம்செல உய்த்தாய்!**
**விண்ணோர் தொழும்வேங் கடமா மலைமேய**
**அண்ணா! அடியேன் இடரைக் களையாயே.**

ப. ரை : **கண் ஆர் கடல் சூழ்** - *இடம் அகன்ற கடலாலே சூழப்பட்ட*, **இலங்கைக்கு இறைவன்தன்** - *இலங்கைக்கு அரசன் ஆகிய* **இராவணனது, திண் ஆகம் பிளக்க** - *திண்ணிய உடல் பிளக்கும்படி*, **சரம் செல உய்த்தாய்** - *அம்புகள் செல்லுமாறு விடுத்தவனே!* **விண்ணோர் தொழும் வேங்கட மாமலை** - *அமரர்கள் வந்து வணங்குகின்ற திருமலையிலே*, **மேய அண்ணா** - *எழுந்தருளியுள்ள பெருமானே!* **அடியேன் இடரைக் களையாய்** - *என்னுடைய துன்பங்களைப் போக்கியருள்வாய்.*

**சி. கு :** *கண் ஆர் கடல் என்பதற்கு வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கத் தக்க கடல் என்றும் பொருள் கொள்ளலாம். ஆர்தல் - நிறைதல்.*

*இத் திருமொழி கலிவிருத்தம். இதில் ஒரு குறிப்பிட்ட வாய்பாடின்றி, மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர்கள் விரவி வருகின்றன. ஆயினும் அடிகள் நேரில் தொடங்கின் பன்னிரண்டு எழுத்துகளும், நிரையில் தொடங்கின் பதின்மூன்று எழுத்துகளும் பெற்றுக் கட்டளைகளாக அமைந்துள்ளன.*

வியா : **முதற் பாட்டு : கண் ஆர் கடல்** - கண் என்று இடம்; இடம் மிக்கு இருந்துள்ள கடல். பூமியில் வர்த்திக்கும் பதார்த்தங்களிலும் ஏற்றம் உண்டிறே கடலில் வர்த்திக்குமவை! அவற்றுக்கு[1] எல்லாம் வேண்டும் இடம் போந்திருக்கும். அன்றிக்கே, வைத்த கண் வாங்க ஒண்ணாதபடி தர்சநீயமான கடல் என்னவும் ஆம். அக்கடலை அகழாக உடைத்தாகையாலே அரண் உடைத்தாய் இருக்கிற லங்கைக்கு நிர்வாஹகனாய், அத்தாலே அபிமாநித்து இருக்கிற ராவணனுடைய. **திண் ஆகம் இத்யாதி** - ப்ரஹ்மாஸ்த்ராதிகள் வாய் மடியும்படி

---

வி : முதற் பாட்டு : **கண் ஆர் கடல் சூழ் இலங்கைக்கு இறைவன் தன்** - **கண்**-*இடம்; இடம் மிக்கிருக்கும் கடல். நிலத்தில் இருக்கும் பொருள்களைக் காட்டிலும் கடலில் இருப்பவை ஏற்றம்[2] அன்றோ! அவற்றுக்கு எல்லாம் வேண்டும் இடம் போந்திருக்கும்.* அல்லது, *வைத்தகண் வாங்க ஒண்ணாதபடி காட்சிக்கினிய கடல் என்றும் பொருள்படும்[3]. அக்கடலை அகழாக உடைத்தாகையாலே அரண் உடைத்தாய் இருக்கிறது இலங்கை; அவ் இலங்கைக்கு அரசனாய், அதனாலே செருக்கோடு இருக்கும் இராவணனுடைய.* **திண் ஆகம் பிளக்கச் சரம் செல உய்த்தாய்** - *அயன்கணை முதலானவை வாய்*

---

**91.** 2 : 4 உற்றாய்.

1 அவைத்துக்கு; அவைற்றுக்கு.

2. ஏற்றம் - மிகுதி. 3. கண் என்பதற்கு இடம் என்றும், பார்ப்பவர் கண்ணாகிய உறுப்பு என்றும் பொருள்கொண்டு இருவகை விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

தேவதைகள் வரத்தாலே திண்ணிதான உடலானது பிளக்கும்படியாக அம்பு செல்லும்படியாக நடத்தினாய். **விண்ணோர் இத்யாதி** - ராவணனாலே குடியிருப்பு இழந்த தேவதைகள் அவை பெற[1] வந்து ஆஶ்ரயிப்பர்கள் ஆயிற்று. ப்ரஹ்மாதிகள் ஆஶ்ரயிக்கும் ஸ்வபாவனாய் திருமலையை வாஸஸ்தாநமாகக் கொண்டு ஸந்நிதி பண்ணின நிருபாதிக பந்துவே! **அடியேன் இத்யாதி** - இங்குத்தைக்கு இருப்பு இடர் என்று என் நெஞ்சில் பட்ட பின்பு என் கைங்கர்ய விரோதியைப் போக்கியருள வேணும்.

---

*மடியும்படி[2] கடவுளரின் வரத்தாலே திண்ணிதான உடலானது பிளக்குமாறு அம்பு செல்லும்படி நடத்தினாய்.* **விண்ணோர் தொழும் வேங்கட மாமலை மேய அண்ணா** - *இராவணனாலே குடியிருப்பு இழந்த கடவுளர் தாம் இழந்தவற்றைப் பெற வந்து வணங்குகின்றனர். பிரமன் முதலானோர் வணங்கும் தன்மையனாய்த் திருமலையை உறைவிடமாய்க் கொண்டு எழுந்தருளியுள்ள இயற்கையான உறவாய் இருப்பவனே!* **அடியேன் இடரைக் களையாயே** - *இஞ்ஞாலத்தில் இருப்பு இடர் என்று என் நெஞ்சிற் பட்ட பின்பு என் திருத்தொண்டிற்குப் பகையாய் இருப்பதனைப் போக்கியருள வேண்டும்.*

**ஒப்புமைப் பகுதி**

**கடல்சூழ் இலங்கைக்கு இறைவன்**

> *" நீள்கடல்சூழ் இலங்கைக்கோன் - சதயோஜந விஸ்தீர்ணமான கடல் அகழ்; அது மிகை என்னும்படி அரண் மிக்க ஊர்; அவை மிகை என்னும்படி ராக்ஷஸனானவன் மிடுக்கு "*
>
> *தி. வா. மொ. 1:6:7-24*

**(91)**

## 92

**இலங்கைப் பதிக்கென் றிறையாய அரக்கர்**
**குலங்கெட் டவர்மாளக் கொடிப்புள் திரித்தாய்!**
**விலங்கற் குடுமித் திருவேங் கடம்மேய**
**அலங்கல் துளப முடியாய்! அருளாயே.**

**ப. ரை : இலங்கைப் பதிக்கு என்று இறையாய** - *இலங்கை நகரத்திற்கு எக்காலத்திலும் அரசர்களாய் இருந்த,* **அரக்கர் குலம் கெட்டு அவர் மாள** - *அரக்கர் இனம் அழிந்து அவர்கள் முடியும்படி,* **கொடிப்புள் திரித்தாய்** - *கொடியாகிய பெரிய திருவடியை நடத்தியவனே!* **குடுமி விலங்கல் திருவேங்கடம் மேய** - *குவட்டினையுடைய மலையாகிய திருவேங்கடத்தில் உறைகின்ற,* **துளப**

---

1. தேவதைகள் இப்போது.
2. வாய் மடிதல் - கூர் மழுங்குதல்.

**92.** 1 : 2 பதிக்கன். 4 : 1 அலங்கத்.

அலங்கல் முடியாய் - திருத்துழாய் ஆகிய மாலையாலே அழகு செய்யப்பட்ட முடியை உடையாய்! அருளாய் - அருள்புரிவாய்.

**சி. கு :** விலங்கல் குடுமித் திருவேங்கடம் என்பதனைக் குடுமி விலங்கல் திருவேங்கடம் என மாற்றிக் கூட்டுக. குடுமி - குவடு. விலங்கல் - மலை. பெரிய வாச்சான் பிள்ளை வேறுவகையாகப் பொருள் கூறுவர். திரித்தல் - நடத்துதல்.

வியா : **இரண்டாம் பாட்டு :** ஆக, கீழிற் பாட்டிலும் இப்பாட்டிலும் அவனுடைய விரோதி நிரஸந சீலதையைச் சொல்லி என் து:க்கத்தைப் போக்கித் தர வேணும் என்கிறார்.

**இலங்கைப் பதிக்கு இத்யாதி** - ராவணனுக்கு முன்பு குடியிருந்து போந்த மாலி ப்ரப்ருதிகளை நிரஸித்தபடியைச் சொல்லுகிறது. புற்றானது என்றும் துஷ்ட ஸர்ப்பங்கள் மாறாதே போருமாப் போலே, என்றும் ஒக்க ராக்ஷஸருக்குக் குடியிருப் பாயே ஆயிற்றுப் போருவது. **குலம் கெட்டு அவர் மாள** - பாதாளத்திலே புக்கு ஒளிப்பாரும் பட்டுப் போவாரும் ஆம்படி த்வஜமாந பெரியதிருவடியைச் சுழற்றிக் கொடு திரிந்தவனே! **"கீர்த்திபூதாம் பதாகாம் யோ லோகே ப்ராமயதி ப்ரபு:"**. **விலங்கல் இத்யாதி** - திருவேங்கடம் என்று திருமலைக்குப் பேர் உண்டாகையாலே, தன் மேலே ஸஞ்சரிக்கிற சந்த்ராதித்யர்களுக்கு நேர் கொடு நேர் போக ஒண்ணாதே[1] விலங்கிப் போக வேண்டும்படி ஓங்கின சிகரத்தையுடைய. **அலங்கல் இத்யாதி** - ரக்ஷணத்துக்கு மாலையிட்டு முடிசூடி இருக்கிற நீ இனி என் விரோதியைப் போக்குகை என்று ஒன்று இல்லை; என்பக்கலிலே க்ருபையைப் பண்ணியருள வேணும்.

---

வி : இரண்டாம் பாட்டு : இவ்வாறு கீழ்ப்பாட்டிலும் இப்பாட்டிலும் அவன் பகையைக்கிழங்கு எடுக்கும் பண்பினைச் சொல்லி என் துயரத்தைப் போக்கித் தரவேண்டும் என்கிறார்.

**இலங்கைப் பதிக்கு என்று இறை ஆய அரக்கர்** - இராவணனுக்கு முன்பு குடியிருந்து போந்த மாலி முதலானோர்களை அழித்ததனைச் சொல்லுகிறது. புற்று என்றும் கொடும் பாம்புகள் நீங்காமல் இருத்தலைப்போல, இலங்கை என்றும் ஒக்க அரக்கர்களுக்குக் குடியிருப்பாகவே இருப்பது. **குலம்கெட்டு அவர் மாள** - பாதாளத்திலே புக்கு ஒளிப்பாரும் பட்டுப் போவாருமாகக் கொடியான பெரிய திருவடியைச்[2] சுழற்றிக் கொடு திரிந்தவனே! **"புகழ் என்னும் வெற்றிக் கொடியை உலகில் எந்த இராமனாகிய தலைவன் சுழற்றித் திரிகிறானோ அந்தத் தலைவனுக்கு எதுதான் அடைவதற்கு அரியது?"** என்று கூறப்படுவது காண்க. **விலங்கல் குடுமித் திருவேங்கடம் மேய** - திருவேங்கடம் என்று திருமலைக்குப் பெயர் உண்டாகையாலே, தன் மேலே உலவுகின்ற திங்களுக்கும் ஞாயிற்றுக்கும் நேர் கொடு நேர் போக ஒண்ணாமல் விலங்கிப் போக வேண்டும்படி ஓங்கின முகடு களையுடைய. **அலங்கல் துளப முடியாய் அருளாயே** - உயிர்களைப் பாதுகாப் பதற்கு மாலையிட்டு முடிசூடி இருக்கும் நீ இனி என் பகையைப் போக்குகை என்று ஒன்று இல்லை; என்பக்கலிலே அருளைப் பண்ணியருள வேண்டும்.

---

1. உண்ணாதே.
2. பெரியதிருவடி - கருடன்.

## ஒப்புமைப் பகுதி

**1. அரக்கர் குலங்கெட்டு மாளுதல்**

" குலமெல்லாம் - ஒருவன் செய்த தப்பே ஜாதியாக முடிக்க வேண்டும்படி இருக்கையாலே, ஒருவரையும் தப்பாமல் கோலி முடித்தபடி "
திருவா. மொ. 6.10:2-36

" குலங் களைந்து - ராக்ஷஸ ஜாதியாக அழியச்செய்து......ஒருத்தன் அநுகூலனானால் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளும் அடங்க உஜ்ஜீவிக்குமா போலேயிறே ஒருவன் ப்ராதிகூல்யம் பண்ணினால் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளும் அடங்க நசிக்கும்படியும். ராவணன்பக்கல் சீற்றம் ராக்ஷஸ ஜாதியாக முடிந்தது. மஹாராஜர்பக்கல் ஸ்நேஹத்தாலே வாநரஜாதியாக வாழ்ந்தது "
தி. நெ. தா. 30 பெ. உரை.

[அநுகூலன் - நன்மை புரிபவன். ஸம்பந்தி ஸம்பந்திகள் - தொடர்புடையாரும் அவர்களோடு தொடர்புடையாரும். உஜ்ஜீவித்தல் - உய்வடைதல். ப்ராதிகூல்யம் - தீங்கு.]

**2. கொடிப் புள் திரித்தவன்**

" பாறிப் பாறி அசுரர்தம் பல்குழாங்கள் நீறெழப் பாய்பறவையொன்று ஏறி வீற்றிருந்தாய் "

" பாறி இத்யாதி - அஸுரவர்க்கத்தினுடைய பலவகைப்பட்ட குழாங்களானவை, பாறிப் பாறி நீறெழுந்து போம்படியாக ப்ரதிபக்ஷத்தின் மேலே பாயாநின்றுள்ள அத்விதீயமான பறவையை மேற்கொண்டு உன்னுடைய வ்யாவ்ருத்தி தோற்ற இருந்தவனே! அத்விதீயத்வம் - அவன் கருத்தறிந்து நடக்கையில் தலைவனாகை. அவன் ப்ரதிபக்ஷநிரஸநத்துக்குப் பண்ணின வ்யாபாரம் பெரிய திருவடி திருத்தோளிலே பேராதே இருந்த இத்தனை "
திருவா. மொ. 2:6:8-36

[ப்ரதிபக்ஷம் - பகைவர்கள்; எதிர்த்தலை. அத்விதீயம் - இணையற்றது.]

**3. துளப முடியான்**

" மதுவார் தண்ணந்துழாயான் - மதுவார் தண்ணந்துழாயான் என்கையாலே ஸர்வாதிகன் என்றதாயிற்று " திருவா. மொ. 1:6:2-36

" உலகளந்தான் எழிலார் தண்டுழாய் "

" இதுக்கெல்லாம் (இந்த உலகத்துக்கெல்லாம்) முதலியாராக விட்ட மாலை " தி. வி. 76 பெ. உரை.

" மட்டுலாவு தண்டுழாய் அலங்கலாய் - தேன் மாறாத செவ்வித் திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனானவனே! இத்தால் திருத்துழாயோட்டை ஸம்பந்தத்தாலே ஸர்வாதிகவஸ்து என்னும் இடமும், உபய விபூதி நிர்வஹணத்துக்கிட்ட தனிமாலை என்னும் இடமும், ஒப்பனையழகும் சொல்லிற்றாய்த்து " தி.வி. 73 பெ. உரை.

[நிர்வஹணம் - ஆட்சி நடத்துவது]

## 93

**நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு**
**ஏரால் இளந்தளிர் மேல்துயில் எந்தாய்!**
**சீரார் திருவேங் கடமா மலைமேய**
**ஆரா அமுதே! அடியேற் கருளாயே.**

**ப. ரை :** **நீர் ஆர் கடலும் நிலனும் முழுது உண்டு** - *நீர் நிறைந்த கடலையும் புவியையும் முழுவதும் உண்டு,* **ஏர் இளம் ஆல் தளிர்மேல்** - *அழகுபொருந்திய இளையதான ஆலந்தளிரிலே,* **துயில் எந்தாய்** - *கண்வளர்ந்தருளும் என் தந்தை போன்றவனே!* **சீர் ஆர் திருவேங்கட மாமலை மேய்** - *செல்வம் நிறைந்த திருவேங்கடமென்னும் பெருமை மிக்க மலையின்கண் பொருந்தி உறைபவனாகிய,* **ஆரா அமுதே** - *அமுதம் போலே இனிமையானவனே!* **அடியேற்கு அருளாய்** - *அடியவனாகிய எனக்கு அருள்புரிய வேண்டும்.*

**சி. கு :** *ஏர் ஆல் இளந்தளிர் என்பதனை ஏர் இளம் ஆல் தளிர் என்று பிரித்துக் கூட்டுக.*

**வியா :** **மூன்றாம் பாட்டு : நீர் ஆர் இத்யாதி** - ஸர்வ ரக்ஷகனாய் பூமிக்காக நிர்வாஹகனாய் இருந்தபடியைச் சொல்லுகிறது.

**நீர் ஆர் இத்யாதி** - ஜல ராசியையுடைய கடலும், அதுக்கு உட்பட்ட பூமியும், இத்தை அடைய வயிற்றிலே வைத்து. **ஏர் இத்யாதி** - கண்வளர்ந்தருளுகைக்கு ஈடான அழகையுடைய ஆலின் முகிழ் விரிந்த[1] அளவான தளிரிலே கண் வளர்ந்து, அந்த அகடித கடநா ஸாமர்த்யத்தைக் காட்டி என்னை அநந்யார்ஹன் ஆக்கினவனே! **சீர் ஆர் இத்யாதி** - பரமபதத்திற்காட்டிலும் ஐஶ்வர்யம் மிக்குப் போலே காணும் திருமலை இருப்பது. **ஆரா அமுதே** - இவ்அம்ருதம் ஸ்வர்க்கத்

---

**வி :** **மூன்றாம் பாட்டு :** *எப்பொருளையும் காப்பவனாய், உலகிற்கு எல்லாம் தலைவனாய் இருந்தபடியைச் சொல்லுகிறது.*

**நீர் ஆர் கடலும் நிலனும் முழுது உண்டு** - *நீர்ப் பெருக்கினையுடைய கடலும் அதற்கு உட்பட்ட பூமியும் ஆகிய இவற்றை அடைய வயிற்றிலே வைத்து.* **ஏர் ஆல் இளந் தளிர் மேல் துயில் எந்தாய்** - *கண்வளர்ந்தருளுகைக்கு ஈடான அழகையுடைய ஆலின் முகிழ் விரிந்த அளவான தளிரிலே கண்வளர்ந்து, அந்தச் செயற்கருஞ் செயல் புரியும் திறனைக்காட்டி என்னைத் தனக்கேயாக ஒடியெறிந்து கொண்டவனே!* **சீர் ஆர் திருவேங்கட மாமலை மேய** - *கலங்காப் பெருநகரைக்[2] காட்டிலும் செல்வம் மிக்குப் போலே காணும் திருமலை இருப்பது.* **ஆரா அமுதே** -

---

**93.** 2 : 1 ஏரார். ஏரா லம்இளந் தளிர்மேல் துயிலெந்தாய் - இவ்வாறும் இவ்அடி காணப்படுகிறது.

1. முகிழ் விரியாத.
2. கலங்காப் பெருநகர் - வைகுந்தம்.

தில் அல்ல போலே காணும் இருப்பது. அடியேற்கு - இதுவே போக்யம் என்று இருக்கிற என்னை இத்தை அநுபவிப்பித்தருள வேணும்.

---

இவ்அமுதம் இருப்பது துறக்கத்தில் அன்று. அடியேற்கு - இதுவே நுகரத்தக்க இன்பம் என்று இருக்கும் என்னை இதனை நுகர்ந்திடுமாறு செய்திட வேண்டும்.

**ஒப்புமைப் பகுதி**

1. **ஆலிலைத் துயில்**

   *பாட்டு 76இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **சீரார் வேங்கடம்**

   *பாட்டு 71இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

3. **ஆரா அமுதம்**

   *" ஆராவமுதே - எப்போதும் அநுபவியாநின்றாலும் த்ருப்தி பிறவாதபடி நிரதிசய போக்யமானவனே! "* *தி. வா. மொ. 5:8:1-24*

   *(93)*

## 94

**உண்டாய் உறிமேல் நறுநெய் அமுதாகக்**
**கொண்டாய் குறளாய் நிலம்ஈர் அடியாலே**
**விண்டோய் சிகரத் திருவேங் கடம்மேய**
**அண்டா! அடியே னுக்கருள் புரியாயே.**

**ப. ரை :** விண் தோய் சிகரத் திருவேங்கடம் மேய அண்டா - வானைத் தொடும் கொடுமுடியையுடைய திருமலையிலே பொருந்தியிருக்கும் தேவர் தலைவனே! உறிமேல் நறு நெய் அமுதாக உண்டாய் - நீ உறிகளில் வைத்த நல்ல வெண்ணெயை அமுதமாகக் கொண்டு உண்டாய்; குறளாய் நிலம் ஈர் அடியாலே கொண்டாய் - குறுகிய வடிவத்தனாய்த் தோன்றி மண்ணை இரண்டு அடியாலே அளந்து கொண்டாய்; அடியேனுக்கு அருள்புரியாய் - அடியவன் ஆகிய எனக்கு அருள்செய்திட வேண்டும்.

**சி. கு:** அண்டா - அண்மை விளி. அண்டன் - தேவன்; இடையனும் ஆம். உண்டாய், கொண்டாய் என்பன முன்னிலை வினைமுற்றுகள். அருள்புரியாய் - ஏவல் ஒருமை வினைமுற்று. இப்பாட்டிற்கு இவ்வாறு அன்றி உண்டாய், கொண்டாய் என்பதனை அண்டா என்பது போலவே விளியாகக் கொண்டு பொருள் உரைப்பாரும் உண்டு.

**வியா : நாலாம் பாட்டு : உண்டாய் இத்யாதி - ஆஶ்ரித ஸ்பர்சம் உள்ள த்ரவ்யத்தால் அல்லது தரியாதானாய், அவர்களுக்குத் தன்னைப் பேணாதே கார்யம் செய்யும்படி சொல்லுகிறது. உறிகளிலே சேமித்து வைத்த நறு நெய்யை அம்ருதமாகப் புஜித்தாய். கொண்டாய் இத்யாதி - ஸர்வாதிகனான நீ வாமந வேஷத்தைப் பரிக்ரஹித்துப் பரப்பு உடைத்தான பூமியை இரண்டு அடியாலே கொண்டாய். விண் தோய் இத்யாதி - பரமபதத்து அளவும் செல்ல ஓங்கின சிகரத்தையுடைய திருமலையிலே பொருந்தி நிற்கிறவனே! அண்டா - இடையனே! அன்றிக்கே, அண்டாந்தர்வர்த்திகளுக்கு நிர்வாஹகனானவனே! அடியேனுக்கு இத்யாதி - யசோதைப்பிராட்டியும் இந்த்ரனும் பெற்ற பேற்றின் அளவு அல்லாத என்னுடைய கைங்கர்யத்தைத் தந்தருள வேணும்.**

---

**வி : நாலாம் பாட்டு : உண்டாய் உறிமேல் நறு நெய் அமுதாக** - *அடியார் கைப்பட்ட பொருளாலன்றிப் பிறவற்றால் வாழாதவனாய் அவர்களுக்குத் தன்னைப் பேணாதே உதவி செய்தலைச் சொல்லுகிறது. உறிகளிலே சேமித்து வைத்த நறுநெய்யை அமுதமாக அயின்றாய்.* **கொண்டாய் குறளாய் நிலம் ஈரடியாலே** - *பரமனான நீ குறுகிய வடிவத்தை ஏற்று, பரப்புடைத்தான புவியை இரண்டடியாலே கொண்டாய்.* **விண் தோய் சிகரத் திருவேங்கடம் மேய அண்டா** - *திருநாட்டளவும் செல்ல ஓங்கிய கொடுமுடியையுடைய திருமலையிலே பொருந்தி நிற்பவனே!* **அண்டா** - *இடையனே! அண்டத்துள் உறைவோராகிய தேவர்களுக்கு தலைவனானவனே! என்னலும் ஆம்.* **அடியேனுக்கு அருள் புரியாயே** - *யசோதைப் பிராட்டியும் இந்திரனும் பெற்ற பேறுகள் அருமைப்பாடு உடையன; அத்தன்மைத் தன்று யான் விழையும் அடிமைத்தொண்டு; அதனை எனக்குத் தந்தருள வேண்டும்.*

**ஒப்புமைப் பகுதி**

**உறிமேல் நறுநெய் உண்டவன்**

*" உண்டாய் வெண்ணெய் - ஈச்வரனாய்ப்புக்கு வெண்ணெய் அமுதுசெய்ய ஒண்ணாதே; அதுக்காக ஸஜாதீயனாய்ப் புக்கு அமுதுசெய்தாய். மண்ணை அமுதுசெய்தது அதின் ஸத்தைக்காக; வெண்ணெய் அமுது செய்தது தன் ஸத்தைக்காக "* *தி. வா. மொ. 1:5:8-24*

*[ஸஜாதீயன் - இனத்துள் ஒருவன். ஸத்தை - உளதாம் தன்மை; இருப்பு.]*

*" தயிர் வெண்ணெய் உண்டானை - ஆச்ரிதர் உகந்த த்ரவ்யமே தாரகமாக உடையவனை. இத்தால் ஸர்வேச்வரனாய் வைத்து ஆச்ரிதஸுலப னானவனை என்கை* *தி. வா. மொ. 4:8:1-24*

*[தாரகம் - வாழ்முதற்பொருள். ஆச்ரிதஸுலபன் - அடியார்க்கு எளியன்.]*

*" உறிக்கொண்ட வெண்ணெய்பால் ஒளித்துண்ணும் அம்மான் - உறிகளிலே சேமித்துக் கள்ளக் கயிறு உருவிவைத்த வெண்ணெயையும் பாலையும் 'தெய்வங் கொண்டதோ' என்னும்படி மறைத்து அமுதுசெய்த அச் செயலாலே ஜகத்தை எழுதிக் கொண்டவன் "*

*தி. வா. மொ. 2:3:8-36*

*(94)*

## 95

**தூணாய் அதனூ டரியாய் வந்துதோன்றிப்**
**பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய்!**
**சேணார் திருவேங் கடமா மலைமேய**
**கோணா கணையாய்! குறிக்கொள் எனைநீயே.**

**ப. ரை :** **தூணாய்** - *வெறும் தூணாய் இருக்கிற,* **அதனூடு அரியாய் வந்து தோன்றி** - *அதனுள்ளே ஆளரியாய் வந்து காட்சி தந்து,* **பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய்** - *தன்னை மதியாத இரணியனுடைய யாக்கையைக் கிழித்துப் போகட்டவனே!* **சேண் ஆர்** - *மிக்க உயர்ச்சியையுடைய,* **திருவேங்கட மாமலை மேய** - *திருவேங்கடம் ஆகிய பெரிய மலையின்கண் பொருந்தி உறையும்,* **கோள் நாக அணையாய்** - *மிடுக்கை உடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையவனே!* **எனை நீ குறிக்கொள்** - *அடியேனை நீ திருவுள்ளத்தில் கொண்டருள வேண்டும்.*

**சி. கு:** *உடலம் - 'அம்' சாரியை. நாக அணை என்பது நாகணை என்று வந்தது; தொகுத்தல் விகாரம்; அகரம் தொக்கது.*

வியா : **அஞ்சாம் பாட்டு : தூணாய் இத்யாதி** - இனி இரண்டு[1] பாட்டாலே தமக்கு உபகரிக்க ஒருப்பட்டபடி சொல்லுகிறாராய், அதுக்கு உறுப்பாகத் திருமலையிலே வந்து நின்றபடியைச் சொல்லி அநந்தரம் திருவுள்ளத்தில் புகுந்த படியைச் சொல்லுகிறார்.

**தூணாய்** - முன்பே நரஸிம்ஹத்தை வைத்துப் பண்ணிற்று என்ன ஒண்ணாது ஆயிற்று. **"அளந்து இட்ட தூணை"** என்றாரிறே. **அதனூடு** - அதின் உள்ளே, நரஸிம்ஹமாய் வந்து தோற்றி. **பேணா அவுணன்** - ஸர்வேஶ்வரனைப் பேணாது ஒழிகையாவது ஆஶ்ரிதரை நலிகை ஆயிற்று. "மம

---

வி: அஞ்சாம் பாட்டு : *இனி இரண்டு பாட்டாலே தமக்கு உதவப் பெருமான் ஒருப்பட்டதனைச் சொல்கிறார். முதலில் அதற்கு உறுப்பாகத் திருமலையிலே வந்து நின்றபடியைச் சொல்லிப் பின்பு திருவுள்ளத்திலே புகுந்த படியைச் சொல்லுகிறார்.*

தூணாய் - *முன்பே ஆளரியை வைத்துப் பண்ணப்பெற்றது என்று சொல்ல ஒண்ணாததாய் அமைந்தது. இதனையே, இரணியனே அமைத்த தூண் என்னும் கருத்தில்,* "அளந்து இட்ட தூணை" *(பெரி. தி. 1:7:9)* என்று *பெரியாழ்வாரும் குறித்துள்ளார்.* அதனூடு அரியாய் வந்துதோன்றி - *அதன் உள்ளே, ஆளரியாய் வந்து தோற்றி.* பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய் - *முழுமுதற் பொருளைப் பேணாது ஒழிகையாவது, அடியாரை நலிகை[2]. அவனை அண்டை கொண்ட*

---

**95.** 4 : 4 என்னைநீயே.

1. ரெண்டு.
2. நலிகை - துன்புறுத்துதல்.

ப்ராணாஹ்'' என்றானே. ஓக்கம் மிக்கு இருக்கிற[1] திருமலையிலே நிற்கிற. கோள் இத்யாதி - மிடுக்கையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையவனே! "ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைகதாமநி". குறிக்கொள் இத்யாதி - ப்ராப்தி ஒத்திருந்த பின்பு அவன் பெற்ற பேறு நானும் பெறுவேனாகத் திருவுள்ளம் பற்ற வேணும்.

---

பாண்டவர்களைப் பற்றிக் குறிக்கும் போது, "எனக்கு உயிர் ஆவர்'' (பார. உத். 74:27) என்று குறித்தலின் அவன் அடியவர்களைத் தனக்கு உயிராகக் கருதுபவன் என்பது விளங்கும். உன் அடியவனாகிய பிரகலாதனைத் துன்புறுத்திய இரணியன் உடலம் பிளந்திட்டாய். சேண் ஆர் திருவேங்கட மாமலை மேய - ஓக்கம்[2] மிக்க திருமலையிலே நிற்கிற. கோள் நாகணையாய் - மிடுக்கையுடைய திருவனந் தாழ்வானைப் படுக்கையாக உடையவனே! திருவனந்தாழ்வானை, "மேலான அறிவுக்கும் மிடுக்கிற்கும் நிகரற்ற இருப்பிடமானவன்'' (ஸ்தோ. ர. 39) என்று தோத்திர ரத்தினம் குறித்தல் கருதத்தக்கது. குறிக்கொள் எனை நீயே - உரிமை ஒத்திருந்த பின்பு திருவனந்தாழ்வான் பெற்ற பேறு நானும் பெறுவேனாகத் திருவுள்ளம் பற்ற வேண்டும்.

### ஒப்புமைப் பகுதி

1. பேணா அவுணன்

   *" மிகுந்தானவன் - ப்ராதிகூல்யத்தில் ஓர் அளவில் நில்லாதவன். தன்னை இல்லை செய்கை அன்றிக்கே தன்னுயிர் நிலையிலே நலிந்தவன். 'ஜ்ஞாநீ த்வாத்மைவ' என்னக் கடவதிறே " தி. வா. மொ. 9:4:7-24*

2. கோள் நாகணையான்

   *" கோள் நாகணையான் - 'கோள்' என்று ஒளிக்கும், மிடுக்குக்கும் பேர் " மு. தி. 63. பெரி. உரை.*

   *" கோள்வாய் அரவணையான் "*

   *" கோள்வாய் - மிடுக்கையுடைய வாய் என்னுதல். ப்ரதிகூலர்க்கு ம்ருத்யு வான வாய் என்னுதல் " தி. வா. மொ. 10:5:4-36*

   *[ப்ரதிகூலர் - பகைவர். ம்ருத்யு - யமன்.]*

   *பாட்டு 16இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.* (95)

## 96

**மன்னா இம்மனி சப்பிற வியைநீக்கித்**
**தன்னாக்கித் தன்னின் அருள்செய் யும்தலைவன்**
**மின்னார் முகில்சேர் திருவேங் கடம்மேய**
**என்னானை என்னப்பன் என்நெஞ்சில் உளானே.**

---

1. இருந்துள்ள.
2. ஓக்கம் - உயர்ச்சி.

**96.** 1 : 4 வியும்நீக்கித். 4 : 3 என் நெஞ்சின். 4 : 4 உள்ளானே.

**ப. ரை :** **மன்னா இம்மனிசப் பிறவியை நீக்கி** - *நிலையற்ற இந்த மனிதப் பிறவியை விடுவித்து,* **தன் ஆக்கி** - *தனக்கு நிகராகச் செய்து,* **தன் இன் அருள் செய்யும் தலைவன்** - *தன்னுடைய அருளைப் புரியும் தலைமையை உடையவன்,* **மின் ஆர் முகில் சேர்** - *மின்னல் நிறைந்த மேகங்கள் சேர்ந்திருக்கும்,* **திருவேங்கடம் மேய** - *திருமலையிலே பொருந்தி உறையும்,* **என் ஆனை** - *எனது ஆனை போன்றவனும்,* **என் அப்பன்** - *எனக்குத் தந்தை போன்றவனும் ஆகிய பெருமான்,* **என் நெஞ்சில் உளான்** - *எனது நெஞ்சிலே எழுந்தருளியுள்ளான்.*

**சி. கு :** *என்னானை - என் ஆனை; எனது யானை போன்றவன். இதில் ஐகாரத்தைச் சாரியையாகக் கொண்டு என்னான் என்றும் கொள்ளலாம்; என்னான் - என்னுடையவன்.*

வியா : **ஆறாம் பாட்டு** : "உம்முடையபக்கல் விலக்காமைக்கு அவஸரம் பார்த்திருக்கிற நாம் உம்மை இரக்கவிட்டு வைப்புதோமோ?" என்று இசைவு பெற்ற வாறே, நெஞ்சிலே வந்து புகுந்தான்.

**மன்னா இத்யாதி** - அஸ்த்திரமான இம்மநுஷ்ய ஜந்மத்தில்நின்றும் என்னை நீக்கி, **தன் ஆக்கி** - தன்னோடு ஒக்கப் பண்ணி என்னுதல்; தனக்கு ஆக்கி என்னுதல். **"நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்யமுபைதி"**. **தன் இன் அருள் இத்யாதி** - இவ்வளவும் செய்து பின்னையும் ஒன்றும் செய்யாதானாய்த் தன் பேறான அருளைப் பண்ணும் தலைமையை உடையவன். **மின்னார் இத்யாதி** - மேகமும் மின்னும் சேர்ந்த இது, பிராட்டியும் அவனும் சேர்ந்தாப் போலேயாயிற்று இருப்பது. **என் ஆனை** - ஸதா தர்சநீயனாய் இருக்குமவன்[1]. **என் அப்பன்** - எனக்கு மஹோபகாரகன் ஆனவன். "உமக்குப் பண்ணின உபகாரம்தான் என்?"

---

**வி :** **ஆறாம் பாட்டு** : *"உம்பக்கல் விலக்காமை உண்டாகும் செவ்வி பார்த்திருக்கும் நாம் உம்மை இரக்கவிட்டு வைப்போமோ?" என்று சொல்லி ஆழ்வாரது இசைவு பெற்றவாறே, நெஞ்சிலே வந்து புகுந்தான்.*

**மன்னா இம்மனிசப் பிறவியை நீக்கி** - *நிலையாமையுடைய இம் மானிடப் பிறவியில்நின்றும் என்னை நீக்கி,* **தன் ஆக்கி** - *தன்னோடு ஒக்கப் பண்ணி என்னுதல்; தனக்கு உரியவன் ஆக்கி என்னுதல்.* **"முழுமுதற் பொருளைக் கண்ட பின்பு ஞானியானவன் நல்வினை தீவினைகளை விட்டு, உலகின் தொடர்பு அற்றவனாய் முழுமுதற் பொருளோடு மேலான ஒப்புமை அடைகிறான்"** *என்கிறது முண்டக உபநிடதம் (3: 1: 3). இதனால் உயிர் இறைவனோடு ஒத்த நிலையினை அடைதல் தேற்றம்.* **தன் இன் அருள் செய்யும் தலைவன்** - *இவ்வளவும் செய்து பின்னையும் ஒன்றும் செய்யாதானாய்த் தன் பேறான அருளைப் பண்ணும் தலைமையை உடையவன்.* **மின் ஆர் முகில் சேர் திருவேங்கடம் மேய** - *மேகமும் மின்னும் சேர்ந்த இது, பிராட்டியும் அவனும் சேர்ந்தாற் போலே இருக்கிறது.* **என் ஆனை** - *எக்காலமும் காட்சிக்கினியனாய் இருப்பவன்.* **என் அப்பா** - *எனக்குப் பேருதவி புரிபவனாய் இருப்பவன்.* **என் நெஞ்சில் உளானே** - *"உமக்குப் பண்ணின*

---

1. தர்சநீயமாய் இருக்கிற ஆனை; இருக்குமவன் ஆன.

என்ன, என் நெஞ்சில் உளானே - என் நெஞ்சிலே வந்து புகுந்து போக மாட்டு கிறிலன்.

---

உதவிதான் என்?" என்ன, என் நெஞ்சிலே வந்து புகுந்து போக முடியாதவனாய் இருக்கிறான்.

**ஒப்புமைப் பகுதி**

1. **என் ஆனை**

   *பாட்டு 82இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **என் நெஞ்சில் உளான்**

   *" என் நெஞ்சகலான் - என் நெஞ்சுக்குப் புறம்பு காட்டுத் தீயோடு ஒக்கும் "*
   *பெ. திருவந். 35 பெ. உரை.*

*(96)*

## 97

**மானேய் மடநோக்கி திறத்தெதிர் வந்த**
**ஆனேழ் விடைசெற்ற அணிவரைத் தோளா!**
**தேனே! திருவேங் கடமா மலைமேய**
**கோனே! என்மனம் குடிகொண் டிருந்தாயே.**

**ப. ரை :** **மான் ஏய் மட நோக்கிதிறத்து** - *மானின் விழியை நிகர்த்த மடப்பம் பொருந்திய கண்களையுடைய நப்பின்னைப்பிராட்டியின்பொருட்டு,* **எதிர் வந்த ஆன் விடை ஏழ் செற்ற** - *பகைத்து வந்த காளைகள் ஏழையும் கொன்ற,* **அணி வரைத் தோளா** - *அழகிய மலை போலும் தோள்களையுடையவனே!* **தேனே** - *தேன் போலும் இனியவனே!* **திருவேங்கட மாமலை மேய கோனே** - *திருவேங்கடம் ஆகிய பெருமை பொருந்திய மலையில் பொருந்தி உறைகின்ற தலைவனே!* **என் மனம் குடிகொண்டு இருந்தாய்** - *எனது நெஞ்சை இருப்பிடமாகக் கொண்டு நிலை பெற்று இருந்தாய்.*

**சி. கு :** *மானேய் - 'ஏய்' உவம உருபு. மடநோக்கி - இகரம் வினைமுதற் பொருள் விகுதி.*

**வியா :** **ஏழாம் பாட்டு : மான் ஏய் இத்யாதி** - மான் ஏய்ந்த நோக்கை உடையளாய் இருக்கிற நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்ப்ருஹாவிஷயமாய் இருக்கைக்காக. மானினுடைய நோக்குப் போலே முக்த்தமான நோக்கை உடையளாய்,

---

**வி :** ஏழாம் பாட்டு : **மான் ஏய் மட நோக்கிதிறத்து** - மான் ஏய்ந்த நோக்கை உடையளாய் இருக்கும் நப்பின்னைப்பிராட்டிக்கு விரும்பத்தக்கவனாய் இருப்பதற்காக. மானின் நோக்குப் போலே மடப்பமான நோக்கை உடையளாய், அதனினும்

அவவளவு அன்றிக்கே ம்ருதுவாய் இருக்கும் ஆயிற்று. **எதிர் வந்த** - பகைத்து வந்த ருஷபங்கள் ஏழையும் அழியச்செய்த. **அணி வரைத் தோளா** - நப்பின்னைப்பிராட்டிக்கு ஸ்ப்ருஹாவிஷயமாய் ருஷபங்களுக்கு இளகாத[1] திண்ணி தான தோளை உடையவனே! **தேனே** - நப்பின்னைப்பிராட்டிக்காகத் தன்னைப் பேணாதே ருஷபங்களின் மேலே விழுந்து பண்ணின வ்யாபாரம், அநுஸந்திக்கிற தம் நெஞ்சுக்கு இனிதாய் இருக்கிறபடி. **திரு இத்யாதி** - அத்தேன் குடிகொண்ட[2] இடம் ஆயிற்று. **கோனே** - என்னை அடிமை கொள்ளுகைக்காகத் திருமலையிலே வந்து ஸந்நிஹிதனாய், உன்னுடைய நிரதிசயபோக்யதையைக் காட்டி என்னை அநந்யார்ஹம் ஆக்கினவனே! **என் இத்யாதி** - ருஷபங்களை அழியச்செய்து நப்பின்னைப்பிராட்டியை லபித்து, அவளோடே கூட, **"அரவத்து அமளி யினோடும்"** என்கிறபடியே வந்து, இனி ஒருக்காலும் பேரான் என்று தோற்றும்படி இருந்தான் ஆயிற்று.

---

*மென்மை உடையளாய் இருக்கும்.* **எதிர் வந்த ஆன் ஏழ் விடை செற்ற** *- பகைத்து வந்த எருதுகள் ஏழையும் அழியச்செய்த.* **அணி வரைத் தோளா** *- நப்பின்னைப் பிராட்டிக்கு விரும்பத் தக்கதாய் ஏறுகளுக்கு இளகாமல்[3] திண்ணிதாய் இருக்கும் தோளை உடையவனே!* **தேனே** *- நப்பின்னைப்பிராட்டிக்காகத் தன்னைப் பேணாதே ஏறுகளின் மேலே விழுந்து அடர்த்த செயல், நினைக்கும் தம் நெஞ்சுக்கு இனிதாய் இருக்கிறபடி.* **திருவேங்கட மாமலை மேய** *- அத்தேன் குடிகொண்ட இடம்.* **கோனே** *- என்னை அடிமை கொள்ளுகைக்காகத் திருமலையிலே வந்து அணியனாய், உனது நுகரத்தக்க எல்லையற்ற இனிமையைக் காட்டி என்னைப் பிறர்க்கன்றி உனக்கேயாக ஒடியெறிந்து கொண்டவனே!* **என் மனம் குடிகொண்டு இருந்தாய்** *- ஏறுகளை அழியச்செய்து, நப்பின்னைப்பிராட்டியைப் பெற்று அவளோடே சேர்ந்து,* **"அரவத்தமளியினோடும்"** *(பெரி. தி. 5:2:10) என்று சொல் கிறபடியே வந்து, இனி ஒருகாலும் பெயர்ந்து செல்லான் என்று தோற்றும்படி இருந்தான்.*

**ஒப்புமைப் பகுதி**

1. *" மானைநோக்கி - மானானது நையும்படியான நோக்கை உடையவள். மான் தோற்று நாணும்படியாய்த்து நோக்கு இருப்பது "*

   *தி. வா. மொ. 9:10:4-36*

2. **ஆன் விடை ஏழ் செற்றவன்**

   *" மால்விடை ஏழும் அடர்த்த செம்பவளத் திரள்வாயன் "*

   *" அடர்த்த - அநந்தரம் அணையப் புகுகிறது அவள்தோளையாகையாலே க்ரமப்ராப்தி பற்றாமே ஒருகாலே ஊட்டியாக நெரித்தான் ஆயிற்று "*

   *தி. வா. மொ. 3:5:4-36*

   *[க்ரமப்ராப்தி - முறையாக அடைதல்; ஈண்டு ஒவ்வொன்றாகக் கொல்வது.]*

*(97)*

---

1. இளகாதே. 2. கூடு கொண்ட.
3. இளகாமல் - தளராமல்.

## 98

**சேயன் அணியன் எனசிந் தையுள்நின்ற**
**மாயன் மணிவாள் ஒளிவெண் தரளங்கள்**
**வேய்விண் டுதிர்வேங் கடமா மலைமேய**
**ஆயன் அடிஅல் லதுமற் றறியேனே.**

**ப. ரை : சேயன்** - *அன்பு இல்லாதவர்களுக்குக் கை கழிந்தவனும்,* **அணியன்** - *அன்புடையவர்களுக்குக் கை புகுந்தவனும்,* **என சிந்தையுள் நின்ற மாயன்** - *என் நெஞ்சினுள்ளே வந்து நின்ற வியப்புக்கு உரியவனும்,* **வேய் விண்டு** - *மூங்கில்கள் பிளவுபட்டு,* **ஒளி வெண் தரளங்கள்** - *விளக்கமுள்ள வெண்மையான முத்துக்களையும்,* **வாள் மணி உதிர்** - *ஒளி பொருந்திய மணிகளையும்,* **உதிர்** - *சிந்துகிற,* **வேங்கட மாமலை மேய ஆயன்** - *திருமலை என்னும் பெருமை மிக்க மலையிலே பொருந்தியவனும் ஆகிய கிருட்டிணனுடைய,* **அடி அல்லது மற்று அறியேன்** - *திருவடிகளை ஒழிய வேறு ஒன்றையும் அறிய மாட்டேன்.*

**சி. கு :** *என சிந்தை - என் சிந்தை; அகரம் சாரியை.*

**வியா : எட்டாம் பாட்டு :** ருஷபங்களை அழியச்செய்து நப்பின்னைப் பிராட்டியைக்[1] கைப்பிடித்துக்கொண்டு என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்த பின்பு, இனி இக்கார்ஹஸ்த்யத்துக்கு எடுத்துக் கை நீட்டுகை ஒழிய வேறு எனக்கு ஒன்று அறியேன் என்கிறார்.

**சேயன் அணியன்** - அநாஶ்ரிதர்க்கு அத்யந்த தூரஸ்த்தனாய் ஆஶ்ரிதர்க்கு அத்யந்தம் ஆஸந்நனாய் இருக்குமிறே. இரண்டும், பாண்டவர்கள் விஷயத்திலும் துர்யோதனாதிகள் விஷயத்திலும்[2] காணலாமிறே. "உகப்பார்க்கு அவன் கையா ளாய் இருக்கும் என்னும் இடம் நீர் எங்கே கண்டு சொல்லுகிறீர்?" என்ன, **என சிந்தையுள் நின்ற மாயன்** - நான் அபேக்ஷியாது இருக்க, என்னுடைய

---

**வி : எட்டாம் பாட்டு :** *ஆனேறுகளை அழியச்செய்து நப்பின்னைப் பிராட்டியைக் கைப்பிடித்துக்கொண்டு, என்னுடைய நெஞ்சகத்திலே வந்து புகுந்த பின்பு, இவ்இருவருடைய இல்லற வாழ்க்கைக்கு எடுத்துக் கை நீட்டுகை[3] ஒழிய வேறு எனக்குச் செய்வது ஒன்று அறியேன் என்கிறார்.*

**சேயன் அணியன்** - *உகவாதார்க்கு நெடுந்தொலைவினனாகவும் உகப் பார்க்கு மிக அருகிலிருப்பவனாகவும் இருப்பவன். அவனுடைய இவ்இரு தன்மை களையும், பாண்டவர்களிடத்தும் கௌரவர்களிடத்தும் நன்கு காணலாம்.* **என சிந்தையுள் நின்ற மாயன்** - *"உகப்பார்க்கு அவன் கையாளாய் இருக்கும் என்னும்*

---

**98.** 1 : 3 என்சிந்· 2 : 3 ஒளிவண்.

1. நப்பின்னைப்பிராட்டியையும். 2. இடத்திலும்.
3. எடுத்துக் கை நீட்டுகை - குற்றேவல் செய்தல்.

ஹ்ருதயத்திலே வந்து புகுந்து நித்யவாஸம் பண்ணுகிற ஆஶ்சர்யபூதன். **மணி இத்யாதி** - வாள் என்றும் ஒளி என்றும் ஒளி;[1] இவை இரண்டும் செய்வது என் என்றால், **மணி வாள் ஒளி வெண் தரளங்கள்** - ஒளியை உடைத்தான ரத்நம்; ஒளியை உடைத்தாய் நீர்மையை உடைத்தாய் இருக்கிற முத்துக்களை வேய் விண்டு உதிராநிற்கும் ஆயிற்று; மூங்கில்களானவை முற்றி வெடித்து முத்துக்களைச் சொரியநிற்கும் ஆயிற்று; இப்படிப் பட்ட திருமலையை வாஸஸ்தாநமாகவுடைய. **ஆயன்** - நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபன் என்னும் இடத்துக்கு ஸூசகமிறே இது. **அடி இத்யாதி** - இதர நிரபேக்ஷனானவன் அநந்ய கதியாய்க் கொண்டு என் பக்கலிலே வந்து புகுர, ஸாபேக்ஷனான நான் அவனை விட்டுப் போவேனோ?

---

*இடம் நீர் எங்கே கண்டு சொல்கிறீர்?" என்ன, "என சிந்தையுள் நின்ற மாயன்" என்கிறார். நான் விழையாது இருக்க, என் நெஞ்சகத்திலே வந்து புகுந்து நிலையாக உறையும் மாயம் உடையவன்.* **மணி வாள் ஒளி வெண் தரளங்கள் வேய் விண்டு உதிர் வேங்கட மாமலை மேய ஆயன்** - *வாள் என்றும், ஒளி என்றும் இரு சொற்களால் ஒளி குறிக்கப்படுகிறது. வாள், ஒளி என்னும் இரண்டனையும் செய்வன எவை என்றால், "மணி, வாள் ஒளி வெண் தரளங்கள்." அஃதாவது, ஒளியை உடைத்தான மாணிக்கம்; ஒளியையும் நீர்மையையும் உடைத்தான முத்துகள்; அம்முத்துகளை வேய் விண்டு உதிர்க்கும்; மூங்கில்களானவை முற்றி வெடித்து முத்துகளைச் சொரியும்; இப்படிப்பட்ட திருமலையை உறைவிடமாக உடைய.* **ஆயன்** - *நப்பின்னைப்பிராட்டிக்குக் கணவன் என்பதன் குறிப்பு இது.* **அடி அல்லது மற்று அறியேனே** - *மற்றவற்றில் விருப்பம் இல்லாதவனாகவும், என்னைத் தவிர வேறு புகல் இல்லாதவனாகவும் என்பக்கலிலே வந்து புக, அவன்பால் விருப்பினனான நான் அவனை விட்டுப் போவேனோ?*

**ஒப்புமைப் பகுதி**

**சேயன் அணியன்**

*" சேயன் அணியன் - அநாச்ரிதர்க்கு துாலபன் ஆச்ரிதர்க்கு ஸுலபன் "*
*தி. வா. மொ. 1:9:6-24*

*" சேயன் - ஸ்வயத்நத்தாலே காண்பார்க்கு தூரஸ்த்தனாய் இருக்கும். அணியன் - அவனாலே அவனைக் காண்பார்க்குக் கைபுகுந்து அணியனாய் இருக்கும் "*
*தி. வா. மொ. 1:9:6-36*
*[ஸ்வயத்நம் - தன் முயற்சி]* (98)

## 99

**வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னிநின்றாய்**
**நந்தாத கொழுஞ்சுடரே! எங்கள் நம்பீ!**
**சிந்தா மணியே! திருவேங் கடம்மேய**
**எந்தாய்! இனியான் உன்னைஎன் றும்விடேனே.**

---

1. வாள் என்றும் ஒளி, ஒளி என்றும் ஒளி.

**ப. ரை : நந்தாத கொழும் சுடரே** - அணையாத வளவிய ஒளியை உடையவனே! **எங்கள் நம்பீ** - எங்களுடைய குறைகளைத் தீர்க்கவல்ல நிறைவாளனே! **சிந்தாமணியே** - நினைத்த பொழுதே எல்லாவற்றையும் கொடுத் தருள வல்லவனே! **திருவேங்கடம் மேய எந்தாய்** - திருவேங்கடத்தில் பொருந்தி யிருக்கும் பெருமானே! **வந்தாய்** - என்பால் வந்தாய்; **என் மனம் புகுந்தாய்** - எனது நெஞ்சினுள்ளே நுழைந்தாய்; **மன்னி நின்றாய்** - உள்ளேயே பொருந்தி நின்றாய்; **இனி யான் உன்னை என்றும் விடேன்** - இனிமேல் அடியேன் உன்னை எப்பொழுதும் விடமாட்டேன்.

**சி. கு:** திருவேங்கடம் மேய - விரித்தல் விகாரம்.

வியா : **ஒன்பதாம் பாட்டு : வந்தாய்** - ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கை யாய் இருக்க, இவர் அபேக்ஷியாது இருக்கச்செய்தேயும் அவன் இருப்பிடம்[1] தேடி வந்து புகுந்தான் ஆயிற்று. வர வேண்டாம் என்று விலக்க மாட்டாதே இருந்தார். அதுவே பற்றாசாக ஹ்ருதயத்திலே வந்து புகுந்தான். **மன்னி நின்றாய்** - முன்பு புகுர மாட்டாதே நின்றது. உறவில்லாமை அன்றிறே; இத்தலையில் இசைவு கிடை யாமையிறே. இனிப் போகில் புகுர அரிதாம் என்று அதுவே நிலையாக நின்றான் ஆயிற்று. இப்படி இருக்கிற இடத்து, ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாக இருக்கக் கடவ நாம் இங்கே வந்து சிறைப்பட்டோம் என்னும் இன்னாப்போடு அன்றிக்கே, இவர்பக்கலிலே புகுந்து இருக்கப்பெற்ற இது பெறாப் பேறாய்த் தனக்குப் பண்டு இல்லாத ஐஶ்வர்யம் பெற்றானாய் உஜ்ஜ்வலன் ஆகாநின்றான் ஆயிற்று. **நந்தாத கொழுஞ் சுடரே** - விச்சேதம் இல்லாத ஔஜ்ஜ்வல்யத்தை உடையவனே! **எங்கள் நம்பீ** - இப்பாழ்ந்தாற்றை[2] ஒருபடி நிரப்புகை. **சிந்தாமணியே** - இவன் ஒன்றை எனக்கு என்று நினைப்பதுகாண், நாம் அத்தைக் கொடுக்கைக்கு[3] என்று

---

**வி : ஒன்பதாம் பாட்டு : வந்தாய்**-திருவைகுந்தம் கலவிருக்கையாய் இருக்க, இவர் விழையாது இருந்தபோதிலும் அதனை விடுத்து இவர் இருக்கும் இடம் தேடி வந்து புகுந்தான்; வர வேண்டாம் என்று விலக்கமாட்டாதே இருந்தார். அதுவே பற்றாசாக நெஞ்சகத்தே வந்து புகுந்தான். **மன்னி நின்றாய்** - முன்பு புகமாட்டாதே நின்றது உறவில்லாமையால் அன்று; இத்தலையில் இசைவு கிடையாமையாலேயே. இனி இங்கிருந்து போனால் மீண்டும் புகுவது அரிதாம் என்று அதுவே நிலையாக நின்றான். இப்படி இருக்கும் இடத்து, திருவைகுந்தம் கலவிருக்கையாக இருத்தற்கு உரிய நாம் இங்கே வந்து சிறைப்பட்டோம் என்னும் இன்னாப்போடு அல்லாமல், இவர் பக்கலிலே புகுந்திருக்கப் பெற்ற இது பெறாப்பேறாய்த் தனக்குப் பண்டு இல்லாத செல்வம் பெற்றதாய்க் கருதிப் புகர்[4] மிக்கவன் ஆயினான். **நந்தாத கொழுஞ் சுடரே** - அணையாத ஒளியை உடையவனே! **எங்கள் நம்பீ** - இப்பாழ்ந்தாற்றை[5] ஒருபடி நிரப்புகை. **சிந்தாமணியே** - இவன் ஒன்றை, எனக்கு என்று நினைக்கட்டும், நாம் அதனை அவனுக்குக் கொடுப்போம் என்று இருக்கிறான். வெளிச்செறிப்புப்[6] பிறந்தாலும்,

---

1. நான் இருந்த இடம். 2. பாழும் தாறை. 3. குடுக்கைக்கு.
4. புகர் - ஒளி. 5. பாழ்ந்தாறு - படுகுழி. 6. வெளிச்செறிப்பு - விளக்கம், தெளிவு.

இராநின்றான் ஆயிற்று. ஜ்ஞாநம் பிறந்தாலும், உபேக்ஷியாத ரத்நம். **திருவேங்கடம் மேய எந்தாய்** - திருமலையிலே வந்து புகுந்து உன்னுடைய ஸ்வாமித்வத்தைக் காட்டி என்னை அநங்யார்ஹன் ஆக்கினவனே! **இனி இத்யாதி** - எனக்காக வந்து நிற்கிற நிலையை விடாய். ஆன பின்பு நான் உனக்கு ஆம்படி பற்றின பற்று விடுவேனோ? **என்றும்** - இத்தால், பரபக்திபர்யந்தமாகப் பிறந்தது என்றபடி. அரை க்ஷணம் அவனை ஒழியச் செல்லாமை உண்டாகையிறே பரபக்தியாவது; வ்யதிரேகத்தில் ஜீவியாதபடி ஆனார்.

---

*காற்கடை கொள்ள[1] வேண்டாத மாணிக்கம்.* **திருவேங்கடம் மேய எந்தாய்** - *திருமலையிலே வந்து புகுந்து உனது உடையவனாந் தன்மையைக் காட்டி என்னைப் பிறர்க்கின்றித் தனக்கேயாக எழுதிக்கொண்டவனே!* **இனி யான் உன்னை என்றும் விடேனே** - *எனக்காக நிற்கிற நிலையை நீ விடமாட்டாய். அவ்வாறு ஆன பின்பு நான் உனக்கு உரியனாகுமாறு பற்றின பற்று விடுவேனோ?* **என்றும்** - *இதனால், பரபக்திவரை பிறந்தது என்றபடி[2]. அரை நொடியும் அவனையொழியச் செல்லாமை[3] உண்டாவதன்றோ பரபக்தி; பெருமானைப் பிரிந்தால் வாழாதபடியானார்.*

**ஒப்புமைப் பகுதி**

வந்தாய் என்மனம் புகுந்தாய்

*" வந்தருளி என் நெஞ்சிடம் கொண்ட வானவர் கொழுந்தே "*

*" வந்தருளி - நான் அபேக்ஷியாதிருக்க வந்தருளி. த்வீபாந்தர வஸ்துக்கள் இரண்டிறே ஸங்கதமாகிறது; பரமபதநிலயனானவனும், ஸம்ஸாரத்தை இருப்பிடமாக உடையவரும். இவ் இருவருமிறே கூடுகிறார்கள். உத்தேச்ய வஸ்து இருந்த இடத்து ஏற இவன் தான் போகக் கடவனாய் இருக்க, அது பெறாவிட்டால் இருவரும் பாதிபாதி வழிதான் வரப்பெற்றதோ. வந்தருளி என்று நெஞ்சுளுக்கிச் சொல்லுகிறாரிறே. ஆப்பான் திருவழுந்தூர் அறையர் கையிலே தாளத்தை வாங்கி 'வந்தருளி', 'வந்தருளி' என்று மேல்போகமாட்டாதே படுவராம் "*

*தி. வா. மொ. 5:7:7-36*

*[த்வீபாந்த வஸ்துக்கள் - வெவ்வேறு தீவுகளைச் சார்ந்த பொருள்கள். ஸங்கதம் - ஒன்று சேர்தல். உத்தேச்யவஸ்து - கருதும் பொருள்.]*

*(99)*

## 100

**வில்லார் மலிவேங் கடமா மலைமேய**
**மல்லார் திரள்தோள் மணிவண்ணன் அம்மானைக்**
**கல்லார் திரள்தோள் கலியன் சொன்னமாலை**
**வல்லார் அவர்வா னவர்ஆ குவர்தாமே.**

---

1. காற்கடை கொள்ளல் - வெறுத்து ஒதுக்குதல். 2. பரபக்தி (இறையன்பு) என்பதற்குப் பரமபக்தி (பேரன்பு) என்பது கருத்து. 3. செல்லாமை - வாழ மாட்டாமை.

**100.** 2 : 4 எம்மானைக்.

ப. ரை : வில்லார் மலி வேங்கட மாமலை மேய - வேடுவர் நிறைந்த திருவேங்கடமாகிய சிறந்த மலையின்கண்ணே பொருந்திய, மல் ஆர் திரள் தோள்-மிடுக்கு நிறைந்த திரண்ட தோள்களையுடைய, மணி வண்ணன் அம்மானை - நீலமணி போலும் நிறத்தையுடைய பெருமானைக் குறித்து, கல் ஆர் திரள் தோள் கலியன் - மலை போலும் திரண்ட தோள்களையுடைய திருமங்கை மன்னன், சொன்ன மாலை - பாடிய இச்சொல்மாலையை, வல்லார் அவர் வானவர் ஆகுவர் - ஓத வல்லவர் அமரர்களாகப் பெறுவர்.

சி. கு : வில்லார் - வேடுவர்; காரணப்பெயர்.

வியா : **பத்தாம் பாட்டு :** **வில்லார் இத்யாதி** - பரமபதத்திலே நித்ய ஸூரிகள் அஸ்த்தாநே பயசங்கை பண்ணிப் பரிய இருக்குமவனிறே ஸம்ஸாரத்திலே வந்து ஸந்நிதிபண்ணினான்; ஸம்ஸாரமாகையாலே ஸ்தாநே[1] பயமாய் இருக்குமிறே இங்கு! ஆகையாலே, அங்குத்தைத் திருவேடுவர் எப்போதும் ஏறிட்ட[2] வில்லும் தாங்களுமாய் உணர்ந்து நோக்குவர்கள் ஆயிற்று, ஸ்ரீகுஹப்பெருமாள் இராவெல்லாம் உணர்ந்து நோக்கினாப் போலே. **மல் ஆர் இத்யாதி** - ஸிம்ஹம் கிடந்த முழைஞ்சையாயிற்று[3] இப்படி உணர்ந்து நோக்குகிறது. மிடுக்கு மிக்க தோளையுடைய தர்சநீயமான வடிவை உடையவனான ஸர்வேஶ்வரனை. **கல் ஆர் இத்யாதி** - இருவர்க்கும் அரணாகப் போரும்படியாயிற்றுத் திருமங்கையாழ்வார் தோள்மிடுக்கு இருக்கும்படி. **வல்லார் இத்யாதி** - இவற்றை அப்யஸிக்க வல்லவர்கள், நித்யஸூரிகளுடைய நித்ய கைங்கர்யமே தங்களுக்கு யாத்ரையாகப் பெறுவர்கள்.

---

வி : பத்தாம் பாட்டு : வில்லார் மலி வேங்கட மாமலை மேய - திருநாட்டிலே அயர்வறும் அமரர்கள் அஞ்சவேண்டாத இடத்தில் அச்சங்கொண்டு பரிந்து நோக்கும்படி இருப்பவன் அன்றோ மண்ணுலகில் வந்து எழுந்தருளினான். மண்ணுலகமாகையாலே இவ்இடத்தில் அச்சங்கொள்ள வாய்ப்பு உண்டல்லவா! ஆகையாலே, அங்குள்ள திருவேடுவர் எப்போதும் ஏறிட்ட வில்லும் தாங்களுமாய் உணர்ந்து நோக்குவர், குகப்பெருமாள் இரவெல்லாம் உணர்ந்து நோக்கினாற்[4] போலே. மல் ஆர் திரள் தோள் மணி வண்ணன் அம்மானை - அரிமா கிடந்த முழைஞ்சையன்றோ இப்படி உணர்ந்து நோக்குகின்றனர். மிடுக்கு மிக்க தோளையுடைய காட்சிக்கினிய வடிவை உடையவனான பெருமானை. கல் ஆர் திரள் தோள் கலியன் சொன்ன மாலை - வேடுவர்க்கும் அவர்கள் உணர்ந்து நோக்கும் வேங்கடத்தானுக்கும் ஆகிய இருவருக்கும் அரணாக அமையும்படியாகவன்றோ திருமங்கையாழ்வார் தோள்மிடுக்கு இருக்கிறது. வல்லார் அவர் வானவர் ஆகுவர் தாமே - இவற்றைப் பயில வல்லவர் அயர்வறும் அமரர்களின் நிலைத்த அடிமைத்தொண்டே தங்களுக்குப் பணியாய் அமையப் பெறுவர்.

### ஒப்புமைப் பகுதி

1. மல்லார் திரள்தோள்

" *மல்லாண்ட திண்டோள் - மல்லவர்க்கத்தை ஸ்வாதீனமாகப் பண்ணின திண்ணிய தோள். பிற்பாடரான கம்ஸாதிகளை அநாயாஸேந*

---

1. அஸ்தாநே. 2. ஏறட்ட. 3. முழஞ்சையாயிற்று.
4. உணர்ந்து நோக்கல் - கவனமாகப் பாதுகாத்தல்.

கொல்லுகையாலே திண்ணிய தோள் என்கிறது. 'மல்' என்று மிடுக்காய், அத்தை அடிமை கொண்ட திண்ணிய தோள் என்கிறதாகவும் ஆம் "
திு. பல். 1 பெ. உரை.

[ஸ்வாதீனம் - தானிட்ட வழக்காய் இருப்பது. அநாயாஸேந - எளிதாக.]

2. **மணிவண்ணன்**

" மணிவண்ணா - நீலமணிபோலே இருக்கிற திருநிறத்தை உடையவனே "
தி. பல். 1 பெ. உரை

" மணிவண்ணன் - .........விட ஒண்ணாத அழகு "
தி. வா. மொ. 7:3:2-24

" 'மணிவண்ணா' என்று மணியினுடைய ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது. அதாவது 'உண்டு' என்ன உயிர்நிற்கையும், உடையவன்காலிலே ஸர்வரும் விழும்படி இருக்கையும், இழந்தார் பிழையாது ஒழிகையும், கைப்பட்டோர்க்குப் பூணலாய் இருக்கையும், பூணாதார்க்கு அழித்து உண்ணலாய் இருக்கையும், கிழிச்சீரையிலே அடங்கலாய் இருக்கையும், பிறர்க்கேயாய் இருக்கையும், அளவுபடாமல் உபகரிக்கையும், 'கொடுத்தோம்' என்று நினைத்திராது ஒழிகையும், வேறு ஒன்றில் கண்வைக்க ஒட்டாதொழிகையும் தொடக்கமான ஸ்வபாவங்கள் "
பாவை. 26 நாயனார் உரை.

[ஸ்வபாவம் - தன்மை. ஸர்வர் - எல்லாரும். உபகரிக்கை - உதவுதல்.]
(100)

## இரண்டாம் பத்து - முதல் திருமொழி - வானவர்

பிர : "அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டு அருளே" என்றும் "இனியான் உன்னை என்றும் விடேன்" என்றும், கைங்கர்ய லாபத்துக்காகத் திருவடிகளிலே வந்து சரணம் புக்கு, இக்கைங்கர்யந்தான் நித்யமாய்ச் செல்ல வேணும் என்னும்படி அதிலே பிரேமம் பிறந்ததாய் நின்றது; நமக்கு இப்படி இந்த ஸமாதிதான் பிறக்கைக்கு அடி என் என்று ஆராய்ந்து பார்த்தார், உபகாரஸ்ம்ருதிக்காக. அத்தை ஆராய்ந்தவாறே, "மநஏவ" என்கிறபடியே, நாட்டார் பாஹ்யராயும் குத்ருஷ்டிகளாயும் அநர்த்தப்பட்டுப் போராநிற்க[1], நமக்குக் கைங்கர்ய லாபத்துக்காகத் திருவடிகளிலே விழுந்து சரணம் புகுகையும், அதுதான் அவிச்சிந்நமாய்ச் செல்ல வேணும் என்னும்படியான ருசி பிறக்கையும், இஸ்ஸம்ருத்திக்கு அடி இந்நெஞ்சிறே என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து, "உன்னாலே இந்த ஸம்ருத்தி எல்லாம் உண்டாயிற்று" என்று திருவுள்ளத்தோடே கூட்டி இனியர் ஆகிறார்.

---

தோ : "அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டு அருளே" (பெ. தி. 1:9:2) என்றும், "இனி யான் உன்னை என்றும் விடேன்" (பெ. தி. 1:10:9) என்றும், இறைத்தொண்டு செய்யும் பேறு குறித்துத் திருவடிகளிலே வந்து தஞ்சம் புகுந்தார்; புக்கவாறே, இவ்இறைத்தொண்டுதான் காலம் எல்லாம் கிட்ட வேண்டும் என்னும்படி அதில் விழைவு பிறந்தது. "நமக்கு இப்படி இறைவன்திறத்து ஒன்றி இருக்கும் நிலை உண்டாவதற்கு அடி யாது?" என்று ஆராய்ந்து பார்த்தார், அக்காரணத்தைக் கண்டறிந்தால் நன்றியோடு போற்றலாமே என்னும் கருத்தினாலே. அதனை ஆராய்ந்தபோது, "மனிதர்களின் உலக வாழ்க்கைக்கும் வீடுபேற்றிற்கும் மனமே காரணம். புலன் இன்பங்களில் ஈடுபட்ட மனம் உலக வாழ்க்கைக்குக் காரணம் ஆகிறது. புலன் இன்பங்களில் பற்று அற்ற மனம் வீடு பேற்றுக்குக் காரணம் ஆகிறது" (வி. பு. 6:7:28) என்னும் ஆன்றோர் மொழிக்கு ஏற்ப நாட்டிலுள்ளார் வேதநெறிக்குப் புறம்பாகவும், வேதத்தை முறைமாறிக் காண்பவராகவும் இடர்ப்பட்டு நிற்க, நமக்கு இறைத்தொண்டு செய்யும் பேறு குறித்துப் பெருமான் திருவடிகளிலே விழுந்து தஞ்சம் புகுவதும், அவ்இறைத்தொண்டு புரியும் பேறும் உச்சி வீடும் விடாதே[2] செல்ல வேண்டும் என்னும் விருப்பம் பிறப்பதும் உண்டாயின. இந்நலனுக்குக் காரணம் இந்நெஞ்சமே என்று கண்டார்; தம் திருவுள்ளத்தைக் குறித்து, "உன்னாலேயே இந்த நன்மைகள் எல்லாம் உண்டாயின" என்று திருவுள்ளத்தோடே கூட்டி இனியர் ஆகிறார்.

---

1. போகாநிற்க.
2. உச்சிவீடும் விடாதே - இடையீடு இன்றி; தொடர்ந்து.

## 101

**வான வர்தங்கள் சிந்தை போலஎன் நெஞ்ச மேஇனி துவந்து மாதவ**
**மான வர்தங்கள் சிந்தைஅ மர்ந்துறை கின்றஎந்தை**
**கான வர்இடு கார்அ கில்புகை ஓங்கு வேங்கடம் மேவி மாண்குறள்**
**ஆன அந்தணற் கின்றடி மைத்தொழில் பூண்டாயே!**

**ப. ரை :** **என் நெஞ்சமே** - *எனக்குப் பாங்கான மனமே!* **மாதவ மானவர் தங்கள்** - *மிக்க தவத்தையுடைய மனிதர்களது,* **சிந்தை அமர்ந்து உறைகின்ற எந்தை** - *நெஞ்சில் பொருந்தி இருக்கும் என் தலைவனும்,* **கானவர் இடு கார் அகில் புகை ஓங்கு வேங்கடம் மேவி** - *வேடுவர் நெருப்பில் இடும் கறுத்த அகிலின் புகை சூழ்ந்துள்ள உயர்ந்த திருமலையிலே பொருந்தி இருக்கின்ற,* **மாண் குறள் ஆன-அந்தணற்கு** - *அழகிய வாமன வடிவம் கொண்ட அந்தணனும் ஆகிய பெருமானுக்கு,* **வானவர் தங்கள் சிந்தை போல** - *அமரர்களுடைய நெஞ்சம் போலே,* **இனிது உவந்து** - *நன்றாக மகிழ்ந்து,* **இன்று அடிமைத் தொழில் பூண்டாயே** - *இப்போது தொண்டு புரிவதனை ஏற்றுக்கொண்டாய் காண்.*

**சி. கு :** *வேங்கடம் மேவி என்பதில்* **'மேவி'** *என்னும் வினையெச்சம்* **'ஆன அந்தணற்கு'** *என்னும் பெயரெச்சம் கொண்டு முடிந்தது.* **இவ்வாறு** *அன்றி அதனை இகரவிகுதி பெற்ற பெயராகக்கொள்வாரும் உண்டு.*

*இத்திருமொழி முதல் அடியும் மூன்றாம் அடியும் மிக்குவந்த ஆசிரியத்துறை.*

வியா : **முதற் பாட்டு : வானவர் இத்யாதி** - நித்யஸூரிகள் ஹ்ருதயத்திற் போலே என் ஹ்ருதயத்திலான. **மாதவ மானவர்தங்கள் சிந்தை அமர்ந்து உறைகின்ற எந்தை** - மஹா தபஸ்ஸை உடையராய் இருக்கிற மநுஷ்யர்களுடைய ஹ்ருதயங்களிலே அநந்ய ப்ரயோஜநனாய்க் கொண்டு நித்ய வாஸம் பண்ணுகிற ஸ்வாமி. **கானவர் இத்யாதி** - கானவர் உண்டு அங்குத்தைத் திருவேடுவர்; அவர்கள் தங்கள் புனங்களில் உண்டான மரங்களை வெட்டித் திரளவிட்டு நெருப்பை இடுவர்கள். அதுதான் அகில் மரமாகையாலே அகிற்புகை

---

வி : *முதற் பாட்டு :* வானவர் தங்கள் சிந்தை போல என் நெஞ்சமே இனிது உவந்து - *அயர்வறும் அமரர்கள் நெஞ்சில் தங்கி இருப்பது போல என் நெஞ்சில் தங்கியுள்ள.* மாதவ மானவர்தங்கள் சிந்தை அமர்ந்து உறைகின்ற எந்தை - *பெருந்தவத்தையுடையராய் இருக்கும் மனிதர்களின் நெஞ்சகங்களிலே அங்கு இருத்தலைத் தவிரப் பிறிது ஒரு பயன் கருதாதவனாய் வந்து சேர்ந்து நிலைத்து உறைகின்ற தலைவன்.* கானவர் இடு கார் அகில் புகை ஓங்கு வேங்கடம் மேவி - *கானவர் - அங்குள்ள திருவேடுவர்; அவர்கள் தங்கள் புனங்களில்* வளர்ந்துள்ள *மரங்களை வெட்டித் திரளவிட்டு நெருப்பை இடுவர்.* அவை அகில்மரமாகையாலே *அகிற்புகையானது போய் வானவெளியை இடம் அடைக்கும்.*

---

**101.** 3 : 2 வர்அடு. 3 : 7 மேவிய. 3 : 8 மாண்குறளாய். 4 : 1 ஆய.

யானது போய் ஆகாசாவகாசத்தை இடம் அடைக்கும்படி ஓங்கின சிகரத்தையுடைய திருமலையிலே பொருந்தி வர்த்திக்கிற. **மாண் குறளான அந்தணற்கு** - தன் உடைமையைப்[1] பெறுகைக்குத் தன்னை இரப்பாளன் ஆக்கினவற்கு. அந்தணற்கு என்றது ப்ராஹ்மணற்கு என்றபடியிறே. மகாபலிக்குக் கொடுத்து[2] அல்லது நிற்க ஒண்ணாதபடி[3] விநீத வேஷத்தோடே சென்றான் ஆயிற்று. **மாண் குறள் ஆன அந்தணற்கு வானவர் தங்கள் சிந்தை போல என் நெஞ்சமே இனிது உவந்து அடிமைத் தொழில் பூண்டாயே** - நித்யஸூரிகளுடைய ஹ்ருதயம் பகவத்கைங்கர்யத்திலே ப்ரவணமாய் இருக்குமாப் போலே நீ அவன் திருவடிகளிலே உகப்போடே அந்வயித்தாயே! **மாண் இத்யாதி** - அவன் அடிமை கொள்வதாக வந்து இரந்து நிற்கிற பின்பு நீயும் அவன் நினைவின்படியே போகப்பெறுவதே!

---

*அத்தகைய ஓங்கிய முகடுகளையுடையது திருமலை. அதிலே பொருந்தி உறைகின்ற.* மாண்குறள் ஆன அந்தணற்கு - *தன் உடைமையைப் பெறுகைக்குத் தன்னை இரப்பாளன் ஆக்கினவற்கு. அந்தணற்கு என்பது மறையவனுக்கு என்றபடி. மாவலிக்குக் கொடுத்து அல்லது நிற்க ஒண்ணாதபடி பணிவார்ந்த கோலத்தோடே சென்றான்.* மாண் குறளான அந்தணற்கு வானவர் தங்கள் சிந்தை போல என் நெஞ்சமே இனிது உவந்து அடிமைத் தொழில் பூண்டாயே - *அயர்வறும் அமரர்களுடைய நெஞ்சம் இறைத் தொண்டிலே மூண்டு இருப்பது போலே நீ அவன் திருவடிகளிலே ஊழியம் புரிய உகப்போடே மூண்டனையே!* மாண் குறள் ஆன அந்தணற்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே - *அவன் அடிமை கொள்வதாக வந்து இரந்து நிற்கிற பின்பு நீயும் அவன் நினைவின்படியே போகப்பெற்றாய் அன்றோ!*

**ஒப்புமைப் பகுதி**

மாண் குறள்

*" மாண் குறள் கோலப்பிரான் - தன் உடைமை பெறுகைக்குத் தான் அர்த்தியாய், பெருவிலையனான வடிவைச் சிறுக விட்டு மிக்க அழகை உடையவனாய்...நிற்கிறவன் "* *தி. வா. மொ. 5:9:6-36*

*[அர்த்தி - இரப்பாளன்]*

*பாட்டு 75இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

*(1)*

## 102

**உறவு சுற்றமென் றொன்றி லாஒரு வன்னு கந்தவர் தம்மை மண்மிசைப்**
**பிறவி யேகெடுப் பானது கண்டென் நெஞ்சமென்பாய்!**
**குறவர் மாதர்க ளோடு வண்டுகு றிஞ்சி மருள்இசை பாடும் வேங்கடத்து**
**அறவ னாயகற் கின்றடி மைத்தொழில் பூண்டாயே!**

---

1. உடமையைப். 2. குடுத்து. 3. உண்ணாதபடி.

**102.** 1 : 3 றொன்றில். 2 : 5 நெஞ்சமன்பாய். 4 : 1 அறவர். 4 : 2 நாயகர்க்.

**ப. ரை : உறவு சுற்றம் என்று ஒன்று இலா ஒருவன்** - *உறவினர் என்றும் சுற்றத்தினர் என்றும் சொல்லப்படும் எவ்வகைத் தொடர்பும் இல்லாத ஒப்பற்றவனாகிய பெருமான்,* **உகந்தவர் தம்மை** - *தான் உகந்தவர்களுக்கு,* **மண்மிசை பிறவி கெடுப்பான் அது கண்டு** - *இவ்உலகில் பிறத்தலைப் போக்குவான் என்னும் அத்தன்மையைக் கண்டு,* **குறவர் மாதர்களோடு** - *குறப்பெண்டிரோடே,* **வண்டு** - *வண்டுகள்,* **குறிஞ்சி மருள் இசை பாடும் வேங்கடத்து** - *குறிஞ்சி இந்தளம் என்னும் பண்ணைப் பாடுகின்ற திருமலையில் உள்ள,* **அறவன் நாயகற்கு** - *அறவோனாகிய தலைவனுக்கு,* **என் நெஞ்சம் என்பாய்** - *என் நெஞ்சு என்னும் நீ,* **இன்று அடிமைத் தொழில் பூண்டாயே-.**

**சி. கு:** *என்று என்பதனைப் பிரித்து உறவு என்பதனோடும் கூட்டுக. ஒருவன் - ஒப்பற்றவன். ஒருவன்னுகந்தவர் - விரித்தல் விகாரம்.*

வியா : **இரண்டாம் பாட்டு** : **உறவு இத்யாதி** - பந்துக்கள் ஜ்ஞாதிகள் என்று இங்ஙனே கர்ம நிபந்தநமாகச் சொல்லலாவது ஒரு உறவுடையன் அல்லாத அத்விதீயன். **உகந்தவர் இத்யாதி** - தான் சிலரை உகந்து அவர்கள்பக்கல் உகப்பாலே அவர்களுக்குப் பாபத்தைப் போக்குதல், பலத்தைக் கொடுத்து[1] விடுதல் செய்கை அன்றிக்கே ஸம்ஸார ஜந்மத்தைப் போக்கி கொடுக்கிற[2] ஸ்வபாவத்தை அநுஸந்தித்து. **உகந்தவர்** - தன்னை உகந்தவர்க்கு என்றும் ஆம். **என் நெஞ்சம் என்பாய்** - அவனைச் சொல்லுவதோ? உன்னைச் சொல்லுவதோ? ஆர் என்று[3] சொல்லுவேன்? ஸம்பாவநாப்ரகாரம் இருக்கிறபடி. என் நெஞ்சமே! என்றபடி. **குறவர் இத்யாதி** - குறப்பெண்களோடே கூட வண்டுகளானவை குறிஞ்சி இந்தளம் என்கிற பண்களைப்[4] பாடாநிற்கிற. **வேங்கடத்து அறவ நாயகற்கு** -

---

வி : இரண்டாம் பாட்டு : **உறவு சுற்றம் என்று ஒன்று இலா ஒருவன்** - *உறவினர் தாயத்தார் என்று இங்ஙனே வினை அடியாகச் சொல்லலாவது ஓர் உறவு உடையன் அல்லாத ஒப்பற்றவன்.* **உகந்தவர் தம்மை மண் மிசைப் பிறவியே கெடுப்பான் அது கண்டு** - *தான் சிலரை உகந்து, அவர்கள் பக்கல் உகப்பாலே அவர்களுக்குப் பாவங்களைப் போக்குதல், இம்மை மறுமைப் பயன்களைக் கொடுத்துவிடுதல் செய்கையன்றி உலகத்தில் பிறப்பதனையே போக்கிக் கொடுக்கும் தன்மையை உடையவன்; அவனுடைய அத்தன்மையை எண்ணி.* **உகந்தவர்** - *தன்னை உகந்தவர்க்கு என்றும் ஆம்*[5]. **என் நெஞ்சம் என்பாய்** - *அவனைச் சொல்லுவதோ? உன்னைச் சொல்வதோ? யாரைச் சொல்லுவேன்?" நெஞ்சைக் கொண்டாடும் வகை இருக்கிறபடி. என் நெஞ்சமே! என்கிறார்.* **குறவர் மாதர்களோடு வண்டு குறிஞ்சி மருள் இசை பாடும்** - *குறப்பெண்களோடே கூட வண்டுகள் குறிஞ்சி, இந்தளம் என்னும் பண்களைப் பாடுகின்ற.* **வேங்கடத்து அறவ நாயகற்கு** - *தண்ணீர்ப் பந்தலை வைத்து*[6] *நாம் நம்முடைய அடிமைத் தொண்டினைப் பெறுவதற்குத்*

---

1. குடுத்து. 2. போக்கிக் குடுக்கிற. 3. உன்னை ஆர் என்று. 4. பண்ணைப்.

5. உகந்தவர் என்பதற்குத் தான் உகந்தவர் என்றும் தன்னை உகந்தவர் என்றும் இருவகையில் பொருள் கூறப்படுகிறது. 6. தண்ணீர்ப்பந்தல் வைப்பது ஓர் அருட்செயல். இங்கு நம் அடிமைத் தொண்டினைப் பெறுவதற்குப் பெருமான் முதலில் அருள்புரிகிறான். அவ்அருட்செயலையே தண்ணீர்ப் பந்தல் வைத்தான் என்று குறிக்கிறார்.

தண்ணீர்ப்பந்தலை வைத்து நம் அடிமை பெறுகைக்குத் தம்மை நமக்குத் தந்துகொடு நிற்கிற பரம தார்மிகன். நம்மை அடிமை கொள்வதாகத் திருமலையிலே வந்து ஸந்நிதிபண்ணின பரம தார்மிகனுக்கு. **அடிமைத்தொழில் பூண்டாயே** - அவன் திருமலையிலே வந்து நிற்கிற நிலையை நீ ஒருபடி ஸபலமாக்கினாயே[1].

---

*தன்னை நமக்குத் தந்துகொண்டு நிற்கும் மேலான அறவோன். அஃதாவது நம்மை அடிமை கொள்வதற்காகத் திருமலையிலே வந்து எழுந்தருளின மேலான அறவோனுக்கு.* அடிமைத்தொழில் பூண்டாயே - *அவன் திருமலையிலே வந்து நிற்கும் நிலையை நீ ஒருவாறு பயன் உடையது ஆக்கினாயே.*

**ஒப்புமைப் பகுதி**

**ஆழ்வார் நெஞ்சைக் கொண்டாடுதல்**

> *" நெஞ்சமே நல்லை நல்லை - சொன்ன காரியத்தைச் சடக்கெனச் செய்த ஸத்புத்ரர்களை மடியிலே வைத்துக் கொண்டாடும் மாதா பிதாக்களைப் போலே, இவரும் மார்விலே அணைத்துக் கொண்டாடுகிறார் நெஞ்சை "* *தி. வா. மொ. 1:10:4-36*
>
> *[ஸத்புத்ரர்கள் - நல்ல பிள்ளைகள்]*

(2)

## 103

**இண்டை ஆயின கொண்டு தொண்டர்கள் ஏத்து வார்உற வோடும் வானிடைக்**

**கொண்டு போய்இட வும்மது கண்டென் நெஞ்சமென்பாய்!**

**வண்டு வாழ்வட வேங்க டம்மலை கோயில் கொண்டத னோடும் மீமிசை**

**அண்டம் ஆண்டிருப் பாற்கடி மைத்தொழில் பூண்டாயே!**

**ப. ரை :** **என் நெஞ்சம் என்பாய்** - *எனக்குப் பாங்கான நெஞ்சே!* **இண்டை ஆயின கொண்டு** - *பூமாலைகளை ஏந்திக்கொண்டு,* **ஏத்துவார்** - *பரவுபவர்களாகிய,* **தொண்டர்கள்** - *அடியவர்களை,* **உறவோடும்** - *அவர்களோடு தொடர்புடையவர்களோடும்,* **வானிடைக் கொண்டுபோய் இடவும்** - *திருநாட்டிலே கொண்டுபோய் வைக்கவும்,* **அதுகண்டு** - *அந்நீர்மையைக் கண்டு,* **வண்டு வாழ் வட வேங்கடம் மலை** - *வண்டுகள் களித்து வாழும் திருமலையை,* **கோயில் கொண்டு** - *தனக்கு உறைவிடமாகக் கொண்டு,* **அதனோடும்** - *அந்தத் திருமலை இருக்கும் இவ்வையகத்தோடு,* **மீமிசை அண்டம் ஆண்டு இருப்பாற்கு** - *மேல் உலகம் ஆகிய திருநாட்டையும் ஆண்டு கொண்டு இருப்பவனுக்கு,* **அடிமைத்தொழில் பூண்டாயே.**

**சி. கு :** **இண்டை** - *பூமாலை. போயிடவும்மது, வேங்கடம்மலை இரண்டும் விகாரங்கள்.*

---

1. ஸபலமாக்கி அடிமை கொள்வதானாயே.

**103.** 2 : 3 வுமது. 2 : 5 நெஞ்சமன்பாய். 3 : 4 டமலை. 4 : 3 பார்க்கடி.

வியா : **மூன்றாம் பாட்டு : இண்டை இத்யாதி** - இண்டை என்று பூமாலைக்குப் பேர். ஆக, பூமாலை என்று பேர் பெற்றவற்றைக்[1] கொண்டு, **"எண் திசையும் உள்ள பூக்கொண்டு ஏத்தி"** என்கிறபடியே. **தொண்டர்கள் ஏத்துவார்** - பகவத் விஷயத்தில் அடிமை செய்யுமவர்கள் கையிலே பூமாலை களைக் கொண்டு வாயாலே ஏத்தாநின்றுகொண்டு, அடிமை செய்கிறவர்களுடைய. **உறவோடும் வானிடைக் கொண்டு போய் இடவும்** - அவர்களோடு, ஸம்பந்தி ஸம்பந்திகளோடு, ஒரு நாள் கார்யம் செய்தவர்களோடு வாசியற எல்லாரையுமாகக் கொண்டு போய் நித்ய விபூதியிலே வைக்கும் நீர்மையை அநுஸந்தித்து. **என் நெஞ்சம் என்பாய்** - இங்குத்தை[2] இருப்புத்தன்னையும் இழக்கிறோமோ? என்று அஞ்ச வேண்டி இருக்க அவ்வருகே போய் அடிமை செய்ய[3] ஆசையை உடையை ஆவாயே நீ. **வண்டு இத்யாதி** - வண்டுகளானவை மதுபாநத்தைப் பண்ணி மத்தமாய்க் கொண்டு வாழாநின்றுள்ள திருமலையைத் தனக்கு நித்ய வாஸத்துக்கு ஸ்தாநமாகக் கொண்டு. **அதனோடும் மீமிசை அண்டம் ஆண்டு இருப்பாற்கு** - உபய விபூதியுக்தனான ஸர்வேஶ்வரனுக்கு. அண்டம் என்று ஆகாசத்துக்குப் பேர். வெறும் அண்டம் என்னில், ஸ்வர்க்காதிகளிலும் ஏறும் என்று, "மீமிசை அண்டம்" என்று பரமபதத்தைச் சொல்லுகிறது. "மஹாகாஶம், பரமாகாஶம்" என்னக்கடவதிறே. உபயவிபூதியுக்தனான ஸர்வேஶ்வரனுக்கு. **அடிமைத்**

---

வி : **மூன்றாம் பாட்டு : இண்டை ஆயின கொண்டு** - **இண்டை** - பூமாலைக்குப் பேர். ஆக, பூமாலை என்று பெயர் பெற்றவற்றைக் கொண்டு, **"எண்திசையும் உள்ள பூக்கொண்டு ஏத்தி"**(*தி. வா. மொ. 4:7:8*) என்று சொல்வதற்கு ஒப்ப. **தொண்டர்கள் ஏத்துவார்** - இறைவனைக் குறித்து அடிமை செய்பவர்கள் கையிலே பூமாலை கொண்டு வாயாலே ஏத்திநின்று அடிமை செய்வார்கள்; அவர்களுடைய. **உறவோடும் வானிடைக் கொண்டு போய் இடவும்** - அவர்களோடு, அவர்தம் தொடர்புடையாரோடு, அத்தொடர்புடையார்க்குத் தொடர்புடையராய் இருப்பாரோடு, ஒருநாள் தொண்டு செய்தவரோடு வேற்றுமை இன்றி எல்லாரையுமாகக் கொண்டு போய்ப் பெருமான் திருநாட்டிலே வைக்கிறான். அவ்வாறு செய்யும் அவனது நீர்மையைச் சிந்தித்து. **என் நெஞ்சம் என்பாய்** - இம்மண்ணுலக வாழ்க்கையையும் இழக்கிறோமோ? என அஞ்சும் உலகத்தவர் போல் நீயும் அஞ்ச வேண்டி இருக்க, அஞ்சாது விண்ணாட்டருகே போய் அடிமை செய்ய வேட்கை உடையை ஆவாயோ நீ! **வண்டு வாழ் வட வேங்கடமலை கோயில் கொண்டு** - வண்டுகளானவை மது உண்டு களித்து வாழ்கின்ற திருமலையைத் தனக்கு நிலையாக உறைவதற்கு இடமாகக் கொண்டு. **அதனோடும் மீமிசை அண்டம் ஆண்டு இருப்பாற்கு** - விண்ணாடு, மண்ணாடு ஆகிய இருநாட்டையும் உடையவன் ஆன பெருமானுக்கு. அண்டம் - வானத்திற்குப் பெயர். அடைமொழி இன்றி அண்டம் என்று மட்டும் சொன்னால் துறக்கம் முதலானவற்றையும் சென்று சுட்டும் என்று கருதி, "மீமிசை அண்டம்" என்று வைகுந்தத்தைச் சொல்கிறார். "மகா ஆகாசம்"[4] "பரம ஆகாசம்"[5] என்று சொல்வரன்றோ? அதனையொட்டி ஆழ்வாரும், "மீமிசை அண்டம்" என்கிறார். இருநாடுகளை உடையவனான

---

1. பேர் பெற்றவைத்தைக். 2. இங்குற்றை. 3. அடிமை செய்ய வேண்டும் என்னும்.
4. பெரிய வான். 5. மேலான வான்.

**தொழில் பூண்டாயே** - அவாப்த ஸமஸ்த காமனுடைய குறையை ஒருபடி நிரப்பினாயே. திருமலையிலே வந்து புகுந்து இவரை அடிமை கொள்வதற்கு முன்பு உபய விபூதி யோகத்தால் வந்த ஐஶ்வர்யத்தை ஒன்றாக நினைத்திலன் காணும் அவன். தந லுப்தன் ஒரு காசு விழுந்த இடத்திலே[1] கை எல்லாம் புழுதியாகத் தேடாநிற்குமிறே.

---

*பெருமானுக்கு.* **அடிமைத்தொழில் பூண்டாயே** - *குறை ஒன்றும் இல்லா நிறைவினன் ஆன பெருமானது குறையை ஓரளவு நிரப்பினாயே. "இவர் அடிமை செய்யா விட்டால் அவனுக்குக் குறையோ?"* என்னில் திருமலையிலே வந்து புகுந்து இவரை *அடிமை கொள்வதற்கு முன்பு விண்ணாட்டையும் மண்ணாட்டையும் பெற்று இருப்பதால் வந்த செல்வத்தை ஒன்றாக நினைத்திலன் காணும் அவன். பொருள் மீது கடும்பற்றுக் கொண்டவன் ஒரு காசு விழுந்த இடத்தில் கை எல்லாம் புழுதியாகத் தேடிக்கொண்டிருப்பான் அன்றோ! அது போலப் பெருமான் ஆழ்வாரைத் தேடிக்கொண்டிருந்தான்.*

*(3)*

## 104

**பாவி யாதுசெய் தாய்என் நெஞ்சமே! பண்டு தொண்டுசெய்**
**தாரை மண்மிசை**
**மேவி ஆட்கொண்டு போய்விசும் பேற வைக்குமெந்தை**
**கோவி நாயகன் கொண்டல் உந்துயர் வேங்க டம்மலை ஆண்டு**
**வானவர்**
**ஆவி யாய்இருப் பாற்கடி மைத்தொழில் பூண்டாயே!**

**ப. ரை : என் நெஞ்சமே!** - *என்து மனமே!* **பாவியாது செய்தாய்** - *தடுமாறாமல் உறுதி கொண்டாய்;* **பண்டு தொண்டு செய்தாரை** - *முன்பு அடிமை செய்து போந்தவர்களை,* **மண்மிசை மேவி ஆட்கொண்டு போய்** - *உலகில் பிறந்து அடிமை கொண்டு அழைத்துச் சென்று,* **விசும்பு ஏற வைக்கும் எந்தை** - *திரு நாட்டிலே இருக்க வைக்கின்ற என் தலைவனும்,* **கோவி நாயகன்** - *ஆய்ச்சியர்க்கு அன்பனும்,* **கொண்டல் உந்து உயர் வேங்கடம் மலை ஆண்டு** - *மேகங்களைத் தள்ளும்படியான உயர்ந்த திருமலையை அரசாண்டு,* **வானவர் ஆவியாய் இருப்பாற்கு** - *ஞானிகளைத் தனக்கு உயிர்நிலையாக உடையவனும் ஆகிய பெருமானுக்கு,* **அடிமைத்தொழில் பூண்டாயே**-.

**சி. கு :** *வேங்கடம்மலை - விரித்தல் விகாரம்.*

---

1. விழுந்தடத்திலே.

**104.** 3 : 1 கோவல்; கோவில். 3 : 8 வானவர்க்கு; வானவற்கு. 4 : 3 பார்க்கடி.

வியா : **நாலாம் பாட்டு : பாவியாது இத்யாதி** - "அத்தைச் செய்வோமோ? இத்தைச் செய்வோமோ?" என்று இங்ஙனே அலமாவாக்கிடவாதே நிரூபியாதே இப்படியிலே அத்யவஸிப்பதே! என்ன அலப்ய லாபமோ! ஸம்ஸாரத்தில் அத்யவஸிப்பதே! "ஶப்தாதிகளை அநுபவித்து இருப்போமோ?[1] பகவத் கைங்கர்யம் பண்ணுவோமோ?" என்று இங்ஙனே விசாரியாதே நீ இதிலே துணிவதே! உன்னாலேயிறே இப்பேறு எல்லாம் பெற்றது. **பண்டு இத்யாதி** - முன்பு அடிமை செய்தவர்களைத் தான் ஸம்ஸாரத்திலே வந்து அவதரித்து, "இவன் என் தோழன்", "இவன் என் மைத்துனன்" என்று சொல்லலாம்படி அவர்களோடே பொருந்தி அவர்களுக்குக் கைங்கர்ய ருசியைப் பிறப்பித்து, அடிமையைக் கொண்டு, அதுதான் அவிச்சிந்நமாய்ச் செல்ல வேணும் என்று அதுக்கு உறுப்பாகப் பரமபதத்திலே கொடு போய் வைக்கும் ஸ்வாமி. **கோவி நாயகன்** - ஸ்ரீகோபிமாருடன் கலக்குமாப் போலே ஆஶ்ரிதரோடே பரிமாறுமவன். **கொண்டல் உந்து உயர் வேங்கடம்** - மேகங்களைச் சென்று தள்ளும்படி அவ்வளவும் வளர்ந்த[2] சிகரங்களையுடைய திருமலையை வாஸஸ்தாநமாகக் கொண்டு. **வானவர் இத்யாதி** - "**ஜ்ஞாநீத்வாத் மைவ மே மதம்**" என்கிறபடியே, ஜ்ஞாநிகளைத் தனக்கு ஆத்மபூதராக[3] உடையனாய் இருக்கிறவனுக்கு நீயும் ஆவி ஆனாயோ?

---

வி : நாலாம் பாட்டு : பாவியாது செய்தாய் என் நெஞ்சமே - *"அதைச் செய்யலாமா? இதைச் செய்யலாமா?" என்று அலைபாய்ந்து தடுமாறாமலும், ஆராய்ச்சி செய்து பார்க்காமலும் இப்படி அசையா உறுதி கொண்டாயே! என்ன பெறாப் பேறு! இவ் இருள் தரு மாஞாலத்தில் இருந்துகொண்டே இத்தகைய உறுதிகொள்வது வியப்புத்தான்! "சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் புலன் இன்பங்களைத் துய்க்கலாமா? இறைத்தொண்டு செய்யலாமா?" என்று இப்படி ஆராய்ச்சி செய்யாமல் நீ இதில் துணிவு கொண்டாய்! உன்னால் அல்லவா இப்பேறு எல்லாம் யான் பெற்றேன்.* பண்டு தொண்டு செய்தாரை மேவி ஆட்கொண்டு போய் விசும்பு ஏற வைக்கும் எந்தை - *முன்னைய ஊழிகளிலே அடிமை செய்தவர்களைத் தான் இவ் இருள் தரு மாஞாலத்தில் வந்து பிறந்து, "இவன் என் தோழன்", "இவன் என் மைத்துனன்" என்று சொல்லுமாறு அவர்களோடே பொருந்தினான்; அவர்களுக்கு அடிமைத் தொழிலில் நாட்டத்தைப் பிறப்பித்தான்; அவர்களிடம் அடிமையைக் கொண்டு, அதுதான் இடையறாமல் நிகழ வேண்டும் என்று அதற்கு உறுப்பாகத் திருநாட்டிலே கொண்டுபோய் வைத்தான். அப்படிச் செய்த எம் அண்ணல்.* கோவி நாயகன் - *ஆய்ச்சியருடன் கலக்குமாறு போல அடியாரோடே கலந்து பரிமாறுபவன்.* கொண்டல் உந்து உயர் வேங்கடம் மலை ஆண்டு - *மேகங்களைச் சென்று தள்ளும்படி அவ்வளவு உயரம் வளர்ந்த உச்சிகளையுடைய திருமலையை உறைவிடமாகக் கொண்டு.* வானவர் ஆவியாய் இருப்பாற்கு அடிமைத்தொழில் பூண்டாயே - "ஞானியானவன் எனக்கு உயிரே ஆவான்; இஃது என் கோட்பாடு" *(கீதை. 7:18) என்னும் அருள்மொழிக்கு இணங்க, இறைவன் ஞானிகளைத் தனக்கு உயிராக உடையவனாய் இருக்கிறவன். அவனுக்கு நீயும் ஆவியானாயோ?*

---

1. இருப்புதோமோ? 2. வளர்ந்து உயர்ந்த. 3. ஆத்மபூதர்களாக.

## 105

**பொங்கு போதியும் பிண்டி யும்முடை புத்தர் நோன்பியர் பள்ளி யுள்உறை**
**தங்கள் தேவரும் தாங்களு மேயாகளன் நெஞ்சமென்பாய்**
**எங்கும் வானவர் தான வர்நிறைந் தேத்தும் வேங்கடம் மேவி நின்றருள்**
**அங்கண் நாயகற் கின்றடி மைத்தொழில் பூண்டாயே!**

ப. ரை : **என்நெஞ்சம் என்பாய்** - *எனக்குப் பாங்கான நெஞ்சே!* **பொங்கு போதியும் பிண்டியுமுடை** - *தழைத்த அரச மரத்தையும், அசோக மரத்தையும் முதன்மையாகவுடைய,* **புத்தர் நோன்பியர்** - *பௌத்தரும் அமணரும்,* **பள்ளியுள் உறை தங்கள் தேவரும் தாங்களுமே ஆக** - *தங்கள் கோயில்களிலே இருக்கின்ற தங்களுடைய கடவுளரும் தாங்களுமேயாக உலகம் எங்கும் நிறைந்து கிடக்க, நீ அச்சமயங்களில் புகாமல்,* **எங்கும் வானவர் தானவர் நிறைந்து ஏத்தும்** - *எல்லாப் பக்கங்களிலும் தேவர்களும் அவுணர்களும் நெருங்கிப் பரவுகின்ற,* **வேங்கடம் மேவி நின்று** - *திருமலையிலே பொருந்தி இருந்து,* **அருள் அங்கண் நாயகற்கு** - *அருள் புரிகின்ற அழகிய கண்களையுடைய தலைவனுக்கு,* **இன்று அடிமைத் தொழில் பூண்டாயே**-.

**சி. கு :** *பிண்டியும்முடை, வேங்கடம் மேவி விரித்தல் விகாரங்கள்.*

வியா : **அஞ்சாம் பாட்டு :** "'பாவியாது' என்று 'நீ இப்படி விசாரி யாதே துணிவதே!' என்று, என்னைக் கொண்டாட வேண்டின ஹேது என்?" என்ன, "விசாரிக்க வேண்டும்படி எத்தனை விஷயம் புறம்பே கிடக்கிறது" என் கிறார். **பொங்கு போதியும்** - விஸ்த்ருதம் ஆகாநின்றுள்ள அரசும். **பிண்டியும்** - அசோக வ்ருக்ஷமும். இவை இரண்டையும் ஆயிற்றுத் தங்களுக்கு ப்ரதாநமாக நினைத்திருப்பது பௌத்த ஆர்ஹதர்கள். **புத்தர் நோன்பியர்** - பௌத்தரையும் அமணரையும் சொன்னபடி. **பள்ளியுள் உறை தங்கள் தேவரும் தாங் களுமே ஆக** - அவர்கள் தங்களுடைய தேவ ஸ்தாநங்களிலே[1] வர்த்தித்த தேவதை

---

வி : **அஞ்சாம் பாட்டு :** *ஆழ்வாரை நோக்கி அவரது நெஞ்சம்,* "'பாவியாது' என்று 'நீ இப்படி ஆராய்ந்து பார்க்காமல் இறைத்தொண்டில் மூள்வதற்குத் துணிந்தாயே!' என்று என்னைக் கொண்டாடுகின்றீர்; இப்படிக் கொண்டாடக் காரணம் என்ன?" *என்று வினவியது.* அதற்கு அவர் "ஆராய்ந்து கெட்டுப் போவதற்கு உரிய பொருள்கள் எண்ணற்றவை புறம்பே கிடக்கின்றன அன்றோ?" *என்கிறார்.* அஃதாவது நீ அவற்றுள் சிக்காமல் இருந்தது பாராட்டுக்கு உரியது என்பது கருத்து. **பொங்கு போதியும்** - *விரிந்து நிற்கும் அரச மரமும்.* **பிண்டியும்** - *அசோக மரமும். இவை இரண்டையுமே தங்களுக்கு முதன்மையாக நினைத்திருப்பர் பௌத்தரும் அமணரும்.* **புத்தர் நோன்பியர்** - *பௌத்தரும் அமணரும்.* **பள்ளியுள் உறை தங்கள் தேவரும் தாங்களுமே ஆக** - *அவர்கள் தங்களுடைய கோயில்களிலே உறையும் கடவுளர்களும் தாங்களுமாக*

---

**105.** 1 : 4 யுமுடை. 2 : 5 நெஞ்சமன்பாய். 4 : 2 நாயகர்க்.

1. தேவதாஸ்தாநங்களிலே.

**களும் தாங்களுமாக,** அல்லாதார் அடங்கலும் முக்தர் ஆம்படியாக ஆயிற்று. **என் நெஞ்சம் இத்யாதி** - இவருடைய திருவுள்ளம் அவற்றை[1] அநாதரித்து பகவத் விஷயத்திலே ப்ரவணம் ஆயிற்றது என்றால் பின்னை லோகமாக அவற்றை[2] அநாதரித்து இங்கே ப்ரவணமாம் போலே காணும்! **எங்கும் இத்யாதி** - எங்கும் ஒக்க தேவர்களும் அஸுரர்களும் நெருங்கிநின்று ஏத்தாநின்றுள்ள. அன்றிக்கே, 'தானவர்' என்கிறது ஸ்தாநத்தில் உள்ளார் ஆகவும் ஆம். **அங்கண் நாயகற்கு** - அக்கண்ணிற் குளிர்த்திக்கு[3] இலக்காவதே! அக்கண்ணழகிலே 'ஜிதம்' என்று எழுதிக்கொடுத்தாய் ஆகாதே! **அடிமை** - 'ஜிதம்' என்று எழுதிக்கொடுத்தாருடைய[4] வ்ருத்தியிலே அங்வயித்தாயோ?

---

*நிறைந்து கிடந்தனர். அவர்கள் செயல் அவர்கள் அல்லாத மற்றையார் எல்லாம் அறிவற்றார் என்று சொல்லத் தக்கவாறு இருந்தது.* **என் நெஞ்சம் என்பாய்** - *இவ்ஆழ்வாருடைய திருவுள்ளம் அத்தெய்வங்களைக் காற்கடை கொண்டு இறைவனிடத்தில் மூண்டது எனின் பின்னர் உலகமே அவற்றைக் காற்கடைகொண்டு இங்கே கால் தாழ்ந்து[1] கிடக்கிறது என்று இவர்க்கு நினைவு!* **எங்கும் வானவர் தானவர் நிறைந்து ஏத்தும் வேங்கடம் மேவி நின்று அருள்** - *எங்கும் ஒக்கத் தேவர்களும் அவுணர்களும் நெருங்கிநின்று ஏத்துகின்ற. அல்லது, 'தானவர்' என்பது அவ்இடத்தில் உள்ளவர்களைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.* **அங்கண் நாயகற்கு** - *அக்கண்ணினது குளிர்ச்சிக்கு இலக்காவதே! அக்கண்ணழகிலே "யான் வெற்றி கொள்ளப்பட்டேன்" (ஜி. ஸ்தோ. 1) என்று எழுதிக் கொடுத்தாய் அன்றோ!* **இன்று அடிமைத்தொழில் பூண்டாயே** - *'வெல்லப்பட்டேன்' என்று எழுதிக்கொடுத்தார் செய்யும் அடிமைத்தொண்டில் கைவைத்தனையோ?* (5)

## 106

**துவரி ஆடையர் மட்டை யர்சமண் தொண்டர் கள்மண்டி**
**உண்டு பின்னரும்**
**தமரும் தாங்களு மேத டிக்கஎன் நெஞ்சமென்பாய்!**
**கவரி மாக்கணம் சேரும் வேங்கடம் கோயில் கொண்டகண்**
**ணார்வி சும்பிடை,**
**அமர நாயகற் கின்றடி மைத்தொழில் பூண்டாயே!**

ப. ரை : **என் நெஞ்சம் என்பாய்** - *எனக்குப் பாங்கான நெஞ்சே!* **துவரி ஆடையர்** - *காவி ஆடை உடுத்தவர்களும்,* **மட்டையர்** - *மொட்டைத் தலையரும் ஆகிய,* **சமண் தொண்டர்கள்** - *சமண சமயத்தவர்கள்,* **மண்டி உண்டு** - *ஒருவர்க்கு ஒருவர் மேல்விழுந்து விருப்பப்படி உணவுகளை உட்கொண்டு,* **பின்னரும்** - *பின்னையும்,* **தமரும் தாங்களுமே தடிக்க** - *தங்கள் உறவினரும் தாங்களுமே உடல் தடித்துக்கிடக்க, நீயும் அவர்களைப் போலே உண்டு தடிக்க நினையாமல்,* **கவரி மாக்கணம் சேரும் வேங்கடம் கோயில் கொண்ட** - *கவரிமான்கள் கூட்டம்*

---

1,2. அவைத்தை. 3. குளிற்றிக்கு. 4. குடுத்தாருடைய.

1. கால் தாழ்தல் - மூண்டு கிடத்தல்; இறங்குதல்.

**106.** 1 : 7 உண்ட். 2 : 5 நெஞ்சமன்பாய். 4 : 1 அமரர். 4 : 2 நாயகர்க்கு.

கூட்டமாகச் சேர்ந்து இருக்கும் திருமலையைத் தனக்கு உறைவிடமாகக் கொண்ட, **கண் ஆர் விசும்பிடை அமர நாயகற்கு** - இடம் அகன்ற திருநாட்டிலே உள்ள அமரர்களுக்குத் தலைவன் ஆன பெருமானுக்கு, **இன்று அடிமைத் தொழில் பூண்டாயே**-.

**சி. கு:** துவரி - காவிநிறம். மட்டையர் - மொட்டைத்தலையர்.

வியா : **ஆறாம் பாட்டு : துவர் இத்யாதி** - துவர் ஊட்டி இருந்துள்ள சிவந்த ஆடையை உடையராய், தலைமயிரைப் பறித்துப் பொகட்டு இருக்கிற சமண் தொண்டர் உண்டு அமணர் ஆகிறவர். அவர்கள் தாங்கள் கண்டபடி மேல்விழுந்து புஜித்து, அதுக்கு மேலே, தங்களோடு ஒத்துத் தங்கள் தர்சநத்திலே ருசியை உடைய ராய் அந்த வேஷ தாரணத்தையும் பண்ணி இருக்கிறவர்களும் கடவராய் இருக்கிற தாங்களும் சரீரமானது தடிக்கும்படியாக. **என் நெஞ்சம் என்பாய்** - அவர்கள் செய்தபடி செய்ய, வ்யாவ்ருத்தமான படியையுடைய உன்னைத்தான் ஆர் என்பன்? **கவரி இத்யாதி** - கவரிகளை உடைத்தான ம்ருகங்களுடைய திரள் வந்து சேருகிற திருமலையை வாஸஸ்தாநமாக உடையவன். **கண் ஆர் இத்யாதி** - இடம் மிக்கு இருந்துள்ள விசும்பு உண்டு த்ரிபாத் விபூதி; அதிலே உண்டான அநந்த வைநதே யாதிகளுக்கு நிர்வாஹகனானவனுக்கு. **அடிமை இத்யாதி** - அமணருடைய வ்யாபாரத்தை அநாதரித்து நித்யஸூரிகளுடைய யாத்ரைகளிலே அந்வயித்தாயே!

---

**வி : ஆறாம் பாட்டு துவரி ஆடையர் மட்டையர் சமண் தொண்டர்கள் மண்டி உண்டு பின்னரும் தமரும் தாங்களுமே தடிக்க** - துவர் ஊட்டிய சிவந்த ஆடையை உடையராய், தலைமயிரைப் பறித்துப் போட்ட சமண் தொண்டர். சமண் தொண்டர் - அமணர். அவர்கள் தாங்கள் கண்டபடி மேல் விழுந்து உண்பர்; அதற்கு மேலே, தங்களோடு ஒத்துத் தங்கள் சமயத்திலே விருப்பம் உடையவராய் அதற்கு ஏற்ற கோலம் கொண்டிருப்பவர்களும், சமயத்துக்குத் தலைவரான தாங்களும் உடல் தடித்துக் கிடப்பர். **என் நெஞ்சம் என்பாய்** - அவர்கள் செய்தவற்றையே மீண்டும் செய்தபடி இருக்க, நீ அவ்வாறு செய்யாமல் வேறுபட்ட படியைக் கொண்டாய். அப் படியையுடைய[1] உன்னைத்தான் யார் என்று சொல்லிப் போற்றுவேன்? **கவரி மாக்கணம் சேரும் வேங்கடம் கோயில் கொண்ட** - கவரிகளையுடைய[2] மாக்களின் திரள் வந்து சேருகிற திருமலையை உறைவிடமாக உடையவன். **கண் ஆர் விசும்பிடை அமர நாயகற்கு** - இடம் மிக்க விசும்பு; அஃதாவது மண்ணுலகினும் மும்மடங்கு பெரிதான திருநாடு. அதிலே இருக்கும் திருவனந்தன், பெரிய திருவடி முதலானோர்களுக்குத் தலைவன் ஆகிய பெருமானுக்கு. **இன்று அடிமைத்தொழில் பூண்டாயே** - அமணருடைய செயல்களைக் காற்கடை கொண்டு, அயர்வறும் அமரர்களின் பணிகளிலே கைவைத்தாயே!

### ஒப்புமைப் பகுதி

**அமரர்கள் நாயகன்**

> "அமரர் முழு முதலாகிய - நித்யஸூரிகளுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் தன் அதீநமாம்படி இருக்கிறவனை" திவா. மொ. 1:7:9-36
> [ஸ்வரூபம் - இயற்கை. ஸ்த்திதி - நிலைப்பு.] (6)

---

1. படி - தன்மை. 2. கவரி - சாமரங்கள்; மயிர்கள்.

**தருக்கி னால்சமண் செய்து சோறுதண் தயிரி னால்திர ளைமி டற்றிடை**
**நெருக்கு வார்அலக் கணது கண்டென் நெஞ்சமென்பாய்!**
**மருட்கள் வண்டுகள் பாடும் வேங்கடம் கோயில் கொண்டத னோடும் வானிடை**
**அருக்கன் மேவிநிற் பாற்கடி மைத்தொழில் பூண்டாயே!**

ப. ரை : என் நெஞ்சம் என்பாய் - *எனக்குப் பாங்கான நெஞ்சே!* தருக்கினால் சமண் செய்து - *வெறும் நியாயவாதங்களைக் கொண்டு சொற்போர் புரிந்து தம் சமயத்தை நிலைநிறுத்தி,* தண் தயிரினால் சோறு திரளை - *நல்ல தயிரைச் சேர்த்துக் குழைத்த சோற்றுத் திரளையை,* மிடற்றிடை நெருக்குவார் - *தங்கள் கழுத்துக்குள்ளே இட்டுத் திணிப்பவர்கள் ஆன சமணர்களது,* அலக்கண் அது கண்டு - *துன்பத்தைப் பார்த்து அவர்களுடைய கூட்டத்தில் சேராமல்,* வண்டுகள் மருட்கள் பாடும் - *வண்டுகள் மருள் முதலிய இசைகளைப் பாடுகின்ற,* வேங்கடம் கோயில் கொண்டு - *திருமலையை உறைவிடமாகக் கொண்டு,* அதனோடு வானிடை - *அதனோடு கூட வானத்திலே திரியும்,* அருக்கன் மேவி நிற்பாற்கு - *ஞாயிற்றின் உயிர்க்கு உயிராய்ப் பொருந்தி இருப்பவன் ஆகிய பெருமானுக்கு,* அடிமைத்தொழில் பூண்டாயே-.

சி. கு: *சமண் செய்தல் - சமண சமயத்தை நிலைநாட்டுதல்.* இப்பாட்டால் *சமணர்கள் தயிரும் சோறுமாகத் திரட்டி மிகுதியாக உண்பதனை நோன்பாகக் கொண்டவர் என்பது புலனாகிறது.*

வியா : ஏழாம் பாட்டு : தருக்கினால் சமண் செய்து - கேவல தர்க்கத்தாலே தங்களுடைய ஸித்தாந்தத்தை ஸ்தாபித்து. "வேத சாஸ்த்ரா விரோதிநாயஸ் தர்க்கேணாநுஸந்தத்தே ஸ தர்மம் வேத நேதரஃ" என்கிறபடியே ப்ரமாணாநுகூல தர்க்கம் கொண்டு அர்த்தத்தை நிர்வஹிக்கை அன்றிக்கே, சுஷ்கமான கேவல தர்க்கம் கொண்டு அவைதிகமான ஸித்தாந்த ஸ்தாபநம் பண்ணி. சோறு இத்யாதி - பெருகு சோறு[1] என்று ஒன்று உண்டிறே

---

வி : ஏழாம் பாட்டு : தருக்கினால் சமண் செய்து - *வெறும் தருக்க அளவையாலே தங்கள் சமய முடிபுகளை நிலைநாட்டி.* "முனிவர்களால் அறியப்பட்ட வேதங்களையும் அறங்களை அறிவுறுத்தும் அற நூல்களையும் அந்த வேத நூல்களுக்கு மாறுபாடு இல்லாத தருக்கத்தால் தன் கொள்கையை நாட்டச் சொல்லப்படும் சான்றுகளால் எவன் ஒருவன் ஆராய்கிறானோ அவனே அறத்தை அறிகிறான்; மற்றவன் அறியமாட்டான்" *(மநு. 12:106) என்பதற்கு ஏற்ப மறை முதலான நூல்களுக்கு இணங்கிச் செல்லும் அளவையைக் கொண்டே பொருளை உறுதி செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாமல் வறண்ட வெறும் தருக்கத்தைக் கொண்டு வேதநெறிப்படாத முடிபுகளை நிலைநாட்டி.* சோறு தண் தயிரினால் திரளை

---

**107.** 2 : 5 நெஞ்சமன்பாய். 3 : 1 மருக்கள். 4 : 3 பார்க்கடி.

1 வேகுஞ் சோறு; போருஞ்சோறு.

அவர்கள் ஜீவித்துப் போருவது; தயிரும் சோறுமாகக் குழைத்துத் திரட்டி வ்ரதத்துக்கு உறுப்பாகக் கண் பிதுங்கும்படி மிடற்றிலே நெருக்குவர்கள்; அப்போது படும் அலக் கண் உண்டு துஃக்கம்; அத்தைக் கண்டு. **மருள்கள் இத்யாதி** - மருள் இந்தளம் என்கிற பண்ணை வண்டுகள் பாடாநின்றுள்ள[1] திருமலையை வாஸ ஸ்தாநமாகக் கொண்டு. **அருக்கன் மேவி நிற்பாற்கு** - வைதிகரானார் ஆஶ்ர யிக்கும்படியாக ஆதித்யாந்தராத்மாவாய்க் கொண்டு நிற்கிறவனுக்கு. **அடிமைத் தொழில் பூண்டாயே** - ஆதித்யாந்தராத்மாவாய் இருக்கும் என்று அநுஸந்தித்துப் போகை அன்றிக்கே கண்ணாலே கண்டு அடிமை செய்து அநுபவிக்கப்பெற்றாயே நீ!

---

**மிடற்றிடை நெருக்குவார் அலக்கண் அது கண்டு** - *சமணர்கள் மேற்கொண்டு வாழும் நோன்புக்கு உறுப்பாகப் பெருகு சோறு உண்பர்; அஃதாவது தயிருஞ் சோறுமாகக் குழைத்துத் திரட்டிக் கண் பிதுங்க மிடற்றிலே நெருக்குவார்கள்; அதுபோது அலக்கண் படுவர். அலக்கண் - துன்பம்; அத்துன்பத்தைக் கண்டு.* **என் நெஞ்சம் என்பாய்-. மருட்கள் வண்டுகள் பாடும் வேங்கடம் கோயில் கொண்டு** - *மருள் இந்தளம் என்னும் பண்ணை வண்டுகள் பாடுகின்ற திருமலையை உறைவிட மாகக் கொண்டு.* **அதனோடும் வானிடை** - *அதனோடும் வானத்தில் திரியும்,* **அலக் கண் மேவி நிற்பாற்கு** - *வேத நெறி நிற்போர் வணங்கும்படியாக ஞாயிற்றின் உயிர்க்கு உயிராய் நிற்போனுக்கு.* **அடிமைத்தொழில் பூண்டாயே** - *ஞாயிற்றின் உயிர்க்கு உயிராய் இருப்பவன் என்று நினைத்துக் கொண்டிருக்காமல் கண்ணாலே கண்டு அடிமை செய்து இன்பம் நுகரப் பெற்றாயே நீ!* (7)

## 108

**சேயன் அணியன் சிறியன் பெரியன் என்ப தும்சிலர் பேசக் கேட்டிருந்**
**தேஎன் நெஞ்சமென் பாய்எனக் கொன்று சொல்லாதே**
**வேய்கள் நின்றுவெண் முத்த மேசொரி வேங்க டம்மலை கோயில் மேவிய**
**ஆய நாயகற் கின்றடி மைத்தொழில் பூண்டாயே!**

**ப. ரை : சேயன் என்பதும் அணியன் என்பதும்** - *வைகுந்த நாதனைத் தொலை தூரத்தில் உள்ளவன் என்று குற்றம் சொல்லியும், கோயிலில் உள்ள பெருமானை அருகில் இருப்பவன் என்று தள்ளியும்,* **சிறியன் என்பதும் பெரியன் என்பதும்** - *திருத்தோற்றம் எடுத்துவந்த கண்ணனை எளிமையைக் காட்டிக் கைவாங்கியும், பாற்கடல் நாதனையும், உயிர்க்குயிராய் உறைபவனையும் எட்டாதவன் என்று பெருமை கூறி விடுத்தும்,* **சிலர் பேசக் கேட்டிருந்தே** - *இப்படி அறிவற்றார் சிலர் சொல்வதைக் கேட்டிருக்கச்செய்தேயும்,* **என் நெஞ்சம் என்பாய் எனக்கு ஒன்று சொல்லாதே** - *உன்னை உறுப்பாக உடைய எனக்கு ஒரு*

---

1. நின்ற.

**108.** 2 : 2 நெஞ்சமன். 4 : 1 ஆயர். 4 : 2 நாயகர்க்.

பேச்சும் சொல்லாதே, வேய்கள் நின்று வெண்முத்தம் சொரி - மூங்கில்களிலிருந்து வெள்ளிய முத்துக்கள் சொரியும், வேங்கடம் மலை கோயில் மேவிய - திருமலையை உறைவிடமாய்ப் பொருந்தி இருப்பவன் ஆகிய, ஆய நாயகற்கு - இடையர் தலைவனுக்கு, இன்று அடிமைத்தொழில் பூண்டாயே - .

**சி. கு :** வேங்கடம் மலை - விரித்தல் விகாரம்.

**வியா : எட்டாம் பாட்டு : சேயன் இத்யாதி** - சிறியன் என்பார் பெரியன் என்பாராய்க் கொண்டு நாட்டார் ஸம்சயாத்மாக்களாய்[1] அநர்த்தப்பட்டுப் போகாநின்றார்கள். நீ அவர்களோடே கூடாதே உன்னை உடையவனோடும் கூடாதே அவன் திருவடிகளில் அடிமையில் அந்வயிப்பதே! **சேயன்** - தூரஸ்தன் என்பர்கள் சிலர்; **அணியன்** - ஆஸந்நன் என்பர்கள் சிலர்; **சிறியன்** என்று அவன் எளிமையைச் சொல்லிக் கைவாங்காநிற்பர்கள் சிலர்; **பெரியன்** என்று எட்டான் என்று, அருமையைச்[2] சொல்லிக் கைவாங்குவர்கள் சிலர்; இப்படி தோற்றினார் தோற்றுகிறபடி சொல்லுகிறவற்றைக்[3] கேட்டுவைத்தேயும் என் நெஞ்சம் என்பாய் அடிமைத்தொழில் பூண்டாயே! **எனக்கு ஒன்று சொல்லாதே** - அவர்களோடும் கூடாதே, உன்னை உடையேனுக்கும் ஒன்றும் சொல்லாதே. **வேய் இத்யாதி** - வேய்களில் நின்றும் வெண்முத்தமே சொரிய, அவ்வொளி வழி காட்ட வந்து புகுந்த இத்தனை ஆயிற்று. **ஆய நாயகற்கு** - தன் நேர் ஆயிரம் பிள்ளைகளுக்குத் தலைவனானவனுக்கு[4]. **"இன ஆயர் தலைவன்"** என்னக் கடவதிறே. **அடிமை** - வரையாதே ரக்ஷகனானவனுக்கு அடிமைசெய்கையிலே ஒருப்பட்டாயே!

---

**வி : எட்டாம் பாட்டு : சேயன் அணியன் சிறியன் பெரியன் என்பதும் சிலர் பேசக்கேட்டிருந்தே** - இறைவனைச் சிறியன் என்று கருதுபவராகவும், பெரியன் என்று கருதுபவராகவும் நாட்டார் ஐயுற்ற மனத்தராய்க் கெட்டழிகின்றனர். நீ அவர்களோடும் கூடாமல் உன்னை உடையவனாகிய என்னோடும் கூடாமல் இறைவன் திருவடிகளில் அடிமைத்தொழில் புரிவதில் மூண்டனையே! என்று கொண்டாடுகிறார். **சேயன்** - கைகழிந்தவன் என்பர் சிலர்; **அணியன்** - கைபுகுந்தவன் என்பர் சிலர்; **சிறியன்** - அவன் எளிமை சொல்லிக் கை வாங்குவர் சிலர்; **பெரியன்** - எட்டாதவன், அஃதாவது கைக்கு அகப்படாதவன் என்று அருமை சொல்லிக் கைவாங்குவர் சிலர்; இப்படிக் கண்டவர் கண்டவாறு சொல்வதைக் கேட்டு வைத்தேயும். **என் நெஞ்சம் என்பாய்** - என் நெஞ்சே! **எனக்கு ஒன்று சொல்லாதே** - அவர்களோடும் கூடாமல், உன்னை உடையேனுக்கும் ஒன்று சொல்லாமல். **வேய்கள் நின்று வெண்முத்தமே சொரி** - வேய்களில் நின்றும் வெண்முத்தமே சொரிய அவ்வொளி வழிகாட்ட இவர் வந்து புகுந்து நிற்கலானார். **ஆய நாயகற்கு** - தன் நேர் ஆயிரம் பிள்ளைகளுக்குத் தலைவனானவனுக்கு. **"இன ஆயர் தலைவன்"** (தி. வா. மொ. 3:6:6) என்று சொல்வது உண்டு அன்றோ. **அடிமைத்தொழில் பூண்டாயே** - வரையாதே காப்பவனுக்கு அடிமை செய்கையிலே ஒருப்பட்டாயே![5]

---

1. ஸம்சயாத்மாவாய்க் கொண்டு. 2. பெருமையைச். 3. சொல்லுகிறவைத்தைக்.
4. நிர்வாஹகனானவனுக்கு.
5. ஒருப்படுதல் - முனைதல்.

**ஒப்புமைப் பகுதி**

1. **சேயன் அணியன்**

   *பாட்டு 98இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **ஆயர் நாயகன்**

   *" ஆயர்க்கதிபதி - கோப ஸஜாதீயனாய் வந்து அவதரித்து அவர்களில் தலைவனாவன் "* *தி. வா. மொ. 8:7:9-33*

   *[கோப ஸஜாதீயன் - ஆயர்களோடு ஓர் இனத்தவன்]*

   *" செங்கனிவாய் எங்கள் ஆயர்தேவு "*

   *" 'ஆயர்தேவு' என்கையாலே தன்பருவத்தில் உள்ளாரைத் தோற்பித்தபடி சொல்லிற்று. 'பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்' "*

   *தி. வா. மொ. 10:3:11-36*

   *" ஆயர் ஏற்றை - தன் பருவத்தில் பிள்ளைகளைக்காட்டில் தான் மேனாணிப்பு உடையவனை "* *பெரு. தி. 1: 4. பெ. உரை.*

(8)

## 109

**கூடி ஆடிஉ ரைத்த தேஉரைத் தாய்என் நெஞ்சமென் பாய்து ணிந்துகேள்**
**பாடி ஆடிப் பலரும் பணிந்தேத்திக் காண்கிலார்**
**ஆடுதாமரை யோனும் ஈசனும் அமரர் கோனுநின் றேத்தும் வேங்கடத்து**
**ஆடு கூத்தனுக் கின்றடி மைத்தொழில் பூண்டாயே!**

**ப. ரை :** **என் நெஞ்சம் என்பாய்!** - எனக்குப் பாங்கான மனமே! **கூடி ஆடி** - உலகத்தவரோடு சேர்ந்து அவர்கள் நுகர்ந்தவற்றையே நீயும் நுகர்ந்து, **உரைத்ததே உரைத்தாய்** - அவை குறித்து அவர்கள் சொல்வதனையே இதுகாறும் நீயும் சொல்லிக்கொண்டிருந்தாய், **துணிந்து கேள்** - இதுபோது நான் உனக்குச் சொல்வதனை ஊற்றமாய்க் கேள், **பலரும்** - பல பேர்கள், **பாடி ஆடிப் பணிந்து ஏத்தி** - இறைவன் புகழ் கூறிப் பாடியும் கூத்தாடியும் பணிந்து வணங்கிய போதிலும், **காண்கிலார்** - அவனை உள்ளபடி கண்டு அறியமாட்டார் ஆயினர்; **ஆடு தாமரையோனும்** - பெருமை பொருந்திய உந்தித் தாமரையில் பிறந்த நான்முகனும், **ஈசனும்** - உருத்திரனும், **அமரர்கோனும்** - இந்திரனும், **நின்று ஏத்தும் வேங்கடத்து** - நின்று போற்றுகின்ற திருமலையிலே உறையும், **ஆடு கூத்தனுக்கு** - ஆய்ச்சியரோடு குடக்கூத்தாடின பெருமானுக்கு, **இன்று அடிமைத் தொழில் பூண்டாயே** - .

**சி. கு :** ஆடு - பெருமை; உண்டாதல், நடையாடுதல், வெற்றி என்றும் பொருள் கொள்ளலாம்.

---

**109.** 1 : 6 நெஞ்சமன்.

வியா : ஒன்பதாம் பாட்டு : **கூடி இத்யாதி** - சப்தாதி விஷயங்களிலே ப்ரவணராய் இருப்பாரோடே கூடி, அவர்கள் புஜிக்கும் விஷயங்களிலே அவகாஹித்து, அவர்கள் விஷயங்களை புஜித்துச் சொல்லும் வார்த்தைகளையே[1] சொல்லிப் போந்தாய். **துணிந்து கேள்** - இப்போது அவற்றைவிட்டு[2] இவ்விஷயத்தில் ப்ராவண்யத்தை உடையையாய் இருக்கிற உனக்கு இன்னும்[3] ஒரு நல்வார்த்தை சொல்லுகிறேன்; அத்தை அத்யவஸித்துக் கேள். **பாடி இத்யாதி** - பாடுவது ஆடுவதாய்க் கொண்டு பலரும் ஆஶ்ரயித்துப் பின்னையும் காணப்பெறார்கள். அதுக்கு மேலே ப்ரஹ்மாதிகளும் தம்தாமுடைய அதிகாரார்த்தமாக வந்து ஆஶ்ரயியா நிற்பர்கள். **'காண்கிலா'** - என்றும் ஆம். இப்படி ஆஶ்ரயித்தவர்களும்கூடக் காணப் பெறாதபடியான ஏற்றத்தையுடைய ப்ரஹ்மாதிகளும் வந்து ஆஶ்ரயியா நின்றுள்ள என்னுதல். **ஆடு தாமரையோன்** - ஆடு என்று பெருமையாய் அலர்ந்த தாமரை என்னுதல்; அன்றிக்கே, ஆடுகை நடையாடுகையாய், அதிலே வர்த்திக்கிற என்னுதல்; அன்றிக்கே, ஆடுகை உண்டாகையாய்த் திருநாபி கமலத்தை உத்பத்தி ஸ்தாநமாக உடையவன் என்னுதல்; அன்றிக்கே, ஆடு வெற்றியாய், வெற்றியையுடைய என்றுமாம். **ஆடு கூத்தனுக்கு** - கூத்தாடி விட்ட சுவடு எல்லாம் தோற்றும் ஆயிற்று வடிவிலே.

---

வி : ஒன்பதாம் பாட்டு : **கூடி ஆடி உரைத்ததே உரைத்தாய் என் நெஞ்சம் என்பாய்** - *நெஞ்சமே! ஓசை முதலிய உலக இன்பங்களில் மண்டித் திரிவாரோடு கூடினாய்; அவர்கள் நுகரும் உலக இன்பங்களிலே கால் தாழ்ந்தாய்*[4]*; அவர்கள் அவ்இன்பங்களைத் துய்த்து அவை பற்றிச் சொல்வன வற்றையே சொல்லிப் போந்தாய்.* **துணிந்து கேள்** - *இப்போது அவற்றை விடுத்து இப்பரம்பொருளிடத்து ஈடுபாடு உடையை ஆயினாய்; இப்படி இருக்கும் உனக்கு இன்னும் ஒரு நன்மொழி சொல்வேன்; அதனைத் துணிந்து கேள்.* **பாடி ஆடிப் பலரும் பணிந்து ஏத்திக் காண்கிலார்** - *பாடுவது ஆடுவது ஆகியவற்றை மேற்கொண்டு பலரும் வணங்கினர்; அவ்வாறு வணங்கிய பின்னையும் அவனைக் காணப்பெறார்.* **ஆடு தாமரையோனும் ஈசனும் அமரர் கோனும் நின்று ஏத்தும்** - *அதற்கு மேலே பிரமன் முதலானோரும் தத்தம் பதவிகளுக்குச் சேர வந்து வணங்கி நிற்பர். "பாடி ஆடிப் பலரும் பணிந்தேத்திக் காண்கிலார்" என்பதில் காண்கிலார் என்பதற்கு மாறாகக்* **'காண்கிலா'** *என்றும் பாடம் உண்டு. அதனைப் பாடமாகக்கொள்ளின், இப்படிப் பரவியவர்களும் கூடக் காணப் பெறாத ஏற்றத்தையுடைய பெருமான்; பிரமன் முதலானோரும் வந்து வணங்கும் பெருமான் என்று பொருள்படும்.* **ஆடு தாமரையோன்** - *ஆடு என்பது பெருமை, நடையாடுதல், உண்டாதல், வெற்றி என்னும் நான்கு பொருள்களை உடையது. ஆடு என்பதற்குப் பெருமை என்று கொண்டு தாமரையிலே உறையும் பிரமன் என்று கொள்ளலாம்; அல்லது, ஆடுகை அஃதாவது உண்டாகை என்று பொருள்கொண்டு திருஉந்தித் தாமரையைப் பிறப்பிடமாக உடையவன் என்று உரைக்கலாம்; அல்லது, வெற்றி என்று பொருள்கொண்டு வெற்றியையுடைய பிரமன் என்னலாம்.* **வேங்கடத்து ஆடு கூத்தனுக்கு** - *கண்ணனாய்ப் பிறந்து கூத்தாடி விட்ட சுவடுகள் எல்லாம் தோற்றின, திருவேங்கடவன் வடிவிலே.*

---

1. சொல்லுமவைத்தையே. 2. அவைத்தைவிட்டு. 3. இன்னம்.

4. கால் தாழ்தல் - இழிதல், இரங்குதல்.

**" மன்ற மரக்கூத்தாடி மகிழ்ந்தாய்! என்றும்**
**வடதிருவேங் கடமேய மைந்தா! என்றும்"**

என்று சொல்லுகிறபடியே. **அடிமைத்தொழில் பூண்டாயே** - பலரும் அவனை ஆஶ்ரயித்துப் பின்னையும் காணப்பெறார்கள்; ப்ரஹ்மாதிகள் அநந்தரம் தம்தாம் அதிகாரார்த்தமாக ஆஶ்ரயியாநிற்பார்கள்; நீ இவ்இரண்டு கோடியிலும் அன்றிக்கே அவன்பக்கலிலே அடிமை புக்காயே!

---

" மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்தாய்! என்றும்
வடதிருவேங் கடமேய மைந்தா!" என்றும்" *(தி. நெ. தா. 16)*

*திருநெடுந்தாண்டகம் சொல்லுவதற்கு ஒப்ப இங்கே காட்சி தருகிறான்.* அடிமைத் தொழில் பூண்டாயே - *பலரும் அவனைப் பரவிப் பின்னரும் காணப்பெறார்; அதன்மேல், பிரமன் முதலானோர் தத்தம் பதவிகளுக்குச் சேர ஏத்திநிற்பர்; நீ இவ்இரண்டு பிரிவிலும் சேராமல் அவன்பக்கலிலே அடிமை புக்காயே!*

ஒப்புமைப் பகுதி

பிரமன் சிவன் இந்திரன் ஆகியோர் வணங்கும் பெருமான்

*" தெரிவரிய சிவன் பிரமன் அமரர்கோன் பணிந்தேத்தும்*
*விரிபுகழான் "*

*" தெரிவரிய இத்யாதி - தங்களை துர்ஜ்ஞேயராக நினைத்திருப்பாருமாய்ப் பூமியில் கால்பாவாமையால் வந்த துரபிமாநத்தை உடையருமான ருத்ரன் தொடக்கமானார் பக்நாபிமாநராய்க் கொண்டு வந்து விழுந்து ஏத்தும் படியான பரந்த புகழை உடையவன் "*

*தி. வா. மொ. 4:8:8-36*

*[துர்ஜ்ஞேயர் - அறிதற்கு அரியவர். பக்நாபிமாநர் - செருக்கழிந்தவர்.]*

*(9)*

## 110

**மின்னு மாமுகில் மேவு தண்திரு வேங்க டம்மலை கோயில் மேவிய**
**அன்ன மாய்நி கழ்ந்த அமரர் பெருமானைக்**
**கன்னி மாமதிள் மங்கை யர்கலி கன்றி இன்தமி ழால்உ ரைத்தஇம்**
**மன்னு பாடல்வல் லார்க்கிடம் ஆகும் வான்உலகே.**

ப. ரை : மின்னும் மாமுகில் - *மின்னுகின்ற பெரிய மேகங்கள்,* மேவு தண் திருவேங்கடம் மலை - *வந்து சேரும் குளிர்ந்த திருமலையை,* கோயில் மேவிய-

---

**110.** 1 : 6 டமலை. 3 : 2 மாமதில்.

கோயிலாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும், **அன்னமாய் நிகழ்ந்த அமரர் பெருமானை** - அன்ன வடிவில் பிறந்த அமரர்களுக்குத் தலைவன் ஆகிய பெருமானைக் குறித்து, **கன்னி மாமதிள் மங்கையர் கலிகன்றி** - பகைவரால் கைப்பற்றப்படாத பெரிய மதிளையுடைய திருமங்கை நாட்டில் உள்ளவர்களுக்குத் தலைவரான ஆழ்வார், **இன் தமிழால் உரைத்த** - இனிய தமிழாலே அருளிய, **மன்னு இப்பாடல் வல்லார்க்கு** - நிலைபேறுடைய இத்திருமொழியை ஓத வல்லார்க்கு, **வானுலகு இடம் ஆகும்** - திருநாடு இருப்பிடம் ஆகும்.

**சி. கு :** கன்னி மதிள் - பகைவரால் கைப்பற்றப்படாத மதிள். கலிகன்றி - ஆழ்வார் பெயர்; தீவினையைப் போக்குபவர் என்பது பொருள்; கலி - தீவினை; கன்றி - போக்குபவர். பெருமான் அன்னமாய்ப் பிறந்து பிரமனுக்கு வேதங்களை மீட்டுக் கொடுத்தான் என்பது மரபு.

வியா : **பத்தாம் பாட்டு : மின்னு மாமுகில் இத்யாதி** - கழுத்தே கட்டளையாக நீரைப் பருகித் தன் வடிவில் இருட்சிக்குத் தானே கைவிளக்குப்[1] பிடித்துக் காட்டினாப் போலே மின்னோடே வருகிற மஹா மேகங்கள் வந்து சேருகிற ப்ரம ஹரமான திருமலையை வாஸஸ்தாநமாகக் கொண்டு நித்ய வாஸம் பண்ணுகிற, ப்ரஹ்மாதிகள் வேத சக்ஷுஸ்ஸை மீட்டுக் கொடுக்கைக்காக அன்னமாய் வந்து அவதரித்துப் பின்னை அவர்களுக்கு அத்தை மீட்டுக் கொடுத்து[2] அவ்வழியாலே அவர்கள் ஆஶ்ரயிக்கும்படி ஸுலபனாய் நிற்கிற[3] ஸர்வேஶ்வரனை. **கன்னி இத்யாதி** - அரணாகப் போரும்படியாய் ஒருவரால் அழிக்க ஒண்ணாதபடி பெரிய மதிளை[4] உடைத்தான திருமங்கையிலுள்ளார்க்கு. ப்ரதாநரான ஆழ்வார் இன் தமிழாலே அருளிச்செய்த இப்பத்துப் பாட்டும் வல்லார்க்கு[5]; பாவ கர்ப்பமான

---

வி : பத்தாம் பாட்டு : **மின்னு மாமுகில் மேவு தண் திருவேங்கடம் மலை கோயில் மேவிய அன்னமாய் நிகழ்ந்த அமரர் பெருமானை** - கழுத்தே கட்டளையாக[6] நீரைப் பருகித் தம் வடிவில் உள்ள இருட்சிக்குத் தாமே கைவிளக்குப் பிடித்துக் காட்டினாற் போலே மின்னோடே வருகின்ற பெரிய மேகங்கள் வந்து சேரும் மலை திருமலை; அஃது அடைந்தார் அயர்வினை அகற்றுவது. அதனை இருப்பிடமாகக் கொண்டு உறையும் பெருமான், பிரமன் தொடக்கமானோர்க்கு வேதம் என்னும் கண்ணை மீட்டுக்கொடுப்பதற்காக அன்னப்பறவையாய்ப் பிறந்தான்; பின்பு அவர்களுக்கு அதனை மீட்டுக் கொடுத்தான்; அவ்வழியாலே அவர்கள் வணங்கும்படி எளியனானான்; அந்தப் பெருமானை. **கன்னி மாமதிள் மங்கையர் கலிகன்றி இன் தமிழால் உரைத்த இம் மன்னு பாடல் வல்லார்க்கு** - ஒருவரால் அழிக்க ஒண்ணாதவாறு அரணாக அமைந்த பெரிய மதிளைக் கொண்டிருப்பது திருமங்கை நாடு. அங்குள்ளார்க்கு முதலியாக இருப்பவர் இவ்ஆழ்வார். இவர் இன் தமிழாலே அருளிச்செய்த இப் பத்துப் பாசுரங்களையும் பாட வல்லார்க்கு. மன்னு பாடல் - கருத்துப் பொதிந்த பாக்களாகையாலே வேதம் போன்று என்றும் ஒக்க நிற்பன இப்பாசுரங்கள்.

---

1. விளக்கு. 2. குடுத்து. 3. இருக்கிற. 4. மதிலை. 5. இப்பத்தும் பாட வல்லார்க்கு.
6. கட்டளை - எல்லை; வரம்பு.

அர்த்தமாகையாலே வேதத்தோபாதி என்றும் ஒக்க நிற்கும் ஆயிற்று. வேத ப்ரபாவம் போலே ஆயிற்று. இடம் ஆகும் வானுலகே - பூண்ட அடிமை நித்ய மாய்ச் செல்லும் தேசத்தை இருப்பிடமாக உடையர் ஆவர்.

---

அஃதாவது இவையும் வேதம் போலே நிலைத்திருத்தல்] என்னும் பெருமை உடையன ஆயின. இடம் ஆகும் வானுலகே - பூண்ட அடிமை என்றும் ஒக்கச் செல்லும் நாட்டை இருப்பிடமாக உடையவர் ஆவர்.

**ஒப்புமைப் பகுதி**

**அன்னமாய் நிகழ்ந்த அமரர் பெருமான்**

> *" அன்னமும் மீனுருவும் ஆளரியும் குறளும்*
> *ஆமையும் ஆனவனே! "*

> *" வேதப்ரதமான ஹம்ஸமும், ப்ரளயாபத்ஸகமான மத்ஸ்யமும், ஹிரண்ய நிரஸநார்த்தமான நரஸிம்ஹமும், இந்த்ராபேக்ஷித ஸம்விதாநம் பண்ணும் வாமநனும், மந்த்ராதாரமான கூர்மமும் ஆனவனே! "*

பெரி. தி. 1:5:11 ம. மா. மு. உரை.

*[வேத ப்ரதம் - வேதத்தைத் தந்தது. ஹம்ஸம் - அன்னம். ப்ரளயா பத்ஸகம் - பெரு வெள்ளம் கோத்த துயரக் காலத்தின் துணை. மத்ஸ்யம்- மீன். ஸம்விதாநம் - தருதல். மந்த்ரம் - மலை. கூர்மம் - ஆமை.]*

(10)

## இரண்டாம் பத்து - இரண்டாம் திருமொழி - காசை ஆடை

பிர : ஆஶ்ரித விஷயத்தில், பிராட்டிமார்திறத்தில்[1] பண்ணும் ஓரத்தைப் பண்ணும் ஸ்வபாவனுமாய், அவர்கள் காலாலே காட்டுமத்தைத் தலையாலே செய்வானுமாய், அகடிதங்களை கடிப்பிக்க வல்லனுமாய், ப்ரஹ்மாதிகளுக்கு அவிஷயமாம்படி பெரியவனுமாய், ஸர்வ பூத ஸுஹ்ருத்துமாய் ஸர்வ விஸஜாதீயனுமான ஸர்வேஶ்வரன் தனக்கு ஆஶ்ரிதர்பக்கல் உண்டான இனிமையாலே, அவர்களுக்கு[2] சரீர ஸம்பந்தம் அற்றுப் பரமபதத்திலே போனால் செய்யும் அடிமையை, "**இண்டையாயின கொண்டு**" தமக்கு ஏத்தலாம்படியாகத் திருஎவ்வுளிலே வந்து சாய்ந்தருளினபடியை அநுஸந்தித்து இனியர் ஆகிறார்.

---

**தோ :** *பெருமான், தேவிமார்திறத்தில் தான் பண்ணும் ஓரத்தை அடியார்பக்கல் பண்ணும் இயல்பினன்; அவர்கள் காலாலே காட்டுவதனைத் தலையாலே செய்பவன்; செயற்கு அரிய செய்ய வல்லவன்; பிரமன் முதலான தேவர்களுக்கு அறிய ஒண்ணாப் பெரியவன்; எல்லார்க்கும் நண்பன்; எல்லாவற்றினின்றும் வேறுபட்டு இருப்பவன்; இத்தகையவன் தனக்கு அடியார்பக்கல் உண்டான இனிமையாலே, அவர்கள் தங்களது உடல்தொடக்கு[3] அற்றுத் திருநாட்டிற்குச் சென்றால் செய்யும் அடிமையை,* "**இண்டையாயின கொண்டு**" *(பெ. தி. 2:1:3) இவ்உலகிலேயே செய்யலாமாறு திருஎவ்வுளிலே வந்து சாய்ந்தருளினான். அவன் இப்படித் திருஎவ்வுளில் சாய்ந்தருளிய தன்மையை எண்ணி இனியர் ஆகிறார்.*

### 111

**காசை ஆடை மூடிஓடிக் காதல்செய் தானவன்ஊர்**
**நாச மாக நம்பவல்ல நம்பி நம்பெருமான்**
**வேயின் அன்ன தோள்மடவார் வெண்ணெயுண் டான்இவன்என்று**
**ஏச நின்ற எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.**

ப. ரை : காசை ஆடை மூடி ஓடி - *காவியாடையினால் உடம்பை மறைத்துப் பஞ்சவடிக்கு ஓடிவந்து*, காதல் செய் தானவன் ஊர் - *சீதையினிடத்துக் காமங்கொண்ட இராவணனுடைய ஊர் ஆகிய இலங்கை*, நாசமாக நம்ப வல்ல நம்பி - *பாழாக நினைத்து முடிக்கவல்ல வீரத்திரு நிறைந்தவனும்*, நம்பெருமான் - *நமக்குத் தலைவனும்*, வேயின் அன்ன தோள் மடவார் - *மூங்கிலைப் போலும் தோள்களையுடைய இடைச்சியர்*, இவன் வெண்ணெய் உண்டான் என்று - *இவன் வெண்ணெய் திருடி உண்டவன் என்று கூறி*, ஏச நின்ற எம்பெருமான் - *ஏசுமாறு நின்றவனும் ஆகிய எம்பெருமான்*, எவ்வுள் கிடந்தான் - *திருஎவ்வுளூரில் கண்வளர்ந்தருளினான்.*

---

1. பிராட்டி திறத்தில். 2. அவர்கள்.
3. உடல் தொடக்கு - உடல் தொடர்பு.

**சி. கு :** *காசை - காஷாயம் என்பதன் திரிபு. காதல் - ஈண்டு முறையற்ற காமத்தைச் சுட்டியது. திருஎவ்வுள் - தொண்டை நாட்டில் உள்ள கோயில். திருஎவ்வுளூர் என்னும் ஊர்ப்பெயர் திருவள்ளூர் என்று மருவி வழங்குகிறது. பெருமான் வீரராகவப்பெருமாள்; பெருமாட்டி கனகவல்லி.*

*இத்திருமொழி கலிநிலைத்துறை.*

வியா : முதற் பாட்டு : **காசை இத்யாதி** - காஷாய வஸ்த்ரத்தை இட்டு உடம்பு எங்கும் மறையும்படி மூடி ராம பயத்தாலே பதறி நடந்துபோய், ஜநநி என்று பாராதே வீதராகவேஷத்தைத் தரித்துவைத்து ராகத்தைப் பண்ணின பையலுடைய ஊரானது ஶ்மசாந ஸத்ருசம் ஆம்படியாகத் திருவுள்ளத்திலே கொண்டருளி அப்படி செய்து தலைக்கட்டுகைக்கு ஈடான வீரஸ்ரீயால் பூர்ணன் ஆனவன். **நம்பெருமான்** - அப்படி பிராட்டிதிறத்தில் பண்ணின ஓரத்தை நம்பக்கலிலே பண்ணினவன். **வேயின் இத்யாதி** - வேயோடு ஒத்த தோள்களை உடையராய் ஆத்மகுணோபேதைகளாய் இருக்கிற கோபிகளுடைய ஸ்பர்சம் உள்ளது ஒரு த்ரவ்யத்தால் அல்லது செல்லாமையை உடையனாய், அவர்களுடைய வெண்ணெயைக் களவு கண்டு அமுதுசெய்து, அவர்கள் அத்தைச் சொல்லி ஏசும்படி நிற்கிற ஸர்வேஶ்வரன். **எவ்வுள் கிடந்தானே** - அறிவுடையார், **"ராமோ ராமோ ராம:"** என்ன, தன்பக்கல் நசை உடையவர்கள் இப்படி ஏச, இவை இரண்டையும் கேட்டுத் திருஎவ்வுளிலே கண்வளர்ந்தான்[1] ஆயிற்று.

---

வி : முதற் பாட்டு : **காசை ஆடை மூடி ஓடிக் காதல் செய் தானவன் ஊர் நாசமாக நம்ப வல்ல நம்பி** - *இராவணன் காவியாடை இட்டுத் தன் உடம்பு எங்கும் மறையும்படி மூடி, இராமனைக் குறித்த நடுக்கத்தாலே பதறி நடந்து சென்று, பிராட்டியைத் தாய் என்றும் பாராமல் காமம் கொண்டான்; காமம் அற்ற துறவுக் கோலந் தாங்கிக் காமம் உற்றான்; அந்தப் பையலின்[2] ஊர் சுடுகாடு போல ஆகுமாறு திருவுள்ளம் கொண்டு அப்படிச் செய்து தலைக்கட்டுகைக்கு உரிய வீரத்திருவால் நிறைந்தவனாய் இருந்தவன்.* **நம்பெருமான்** - *அப்படிப் பிராட்டி திறத்தில் பண்ணின ஓரத்தை[3] நம்பக்கலிலே பண்ணினவன்.* **வேயின் அன்ன தோள் மடவார் வெண்ணெய் உண்டான் இவன் என்று ஏச நின்ற எம்பெருமான்** - *இடைச்சியர் வேயோடு ஒத்த தோள்களை உடையவராய்ப் பெருந்தகவு பொருந்தியவராய் இருப்பவர்; அவர்கள் கைப்பட்டது ஒரு பொருளால் அன்றிப் பிறிது ஒன்றால் வாழமாட்டாதவனாய் அவர்களுடைய வெண்ணெயைக் களவு கண்டு அமுதுசெய்து[4], அவர்கள் அதனைச் சொல்லி ஏசுமாறு நிற்கும் பெருமான்.* **எவ்வுள் கிடந்தானே** - *அறிவுடையார்,* **"இராம இராம இராம"** *(ரா. யு. 131:102) என்று பேச, நசையுடையார் வெண்ணெய் திருடி என்று ஏச, இவை இரண்டையும் கேட்டுத் திருஎவ்வுளிலே உறங்குகிறான்.*

---

1. கண்வளர்ந்தருளினான்.
2. பையல் - சிறுவன்; ஈண்டு இராவணன்மேல் உள்ள வெறுப்பாலே அவனைப் பையல் என்று குறிக்கிறார். 3. ஓரம் - ஒருபக்கம் சார்ந்த அன்பு. 4. அமுதுசெய்தல் - உண்ணுதல்.

ஒப்புமைப் பகுதி

1. **வேயின் அன்ன தோள்**

" *வேயிருந்தடந்தோளினார் - பசுமைக்கும் செவ்வைக்கும் மூங்கில் போலேயாய் நீண்டு சுற்றுடைத்தான தோளை உடையவர்கள்* "

*தி. வா. மொ. 6:2:3-36*

" *வேய்மரு தோளிணை - பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் வேயைப் போலியாகச் சொல்லலாம் தோள்கள் இரண்டும்* "

*தி. வா. மொ. 10:3:1-24*

" *வேய் போலும் எழில் தோளி - பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் ஒழுகு நீட்சிக்கும் வேய்போலே இருக்கிற அழகிய தோளை உடையள்......* "

*பெரு. தி. 9:4 பெ. உரை.*

*(11)*

## 112

**தைய லாள்மேல் காதல்செய்த தானவன் வாள்அரக்கன்**
**பொய்இ லாத பொன்முடிகள் ஒன்பதோ டொன்றுமன்று**
**செய்த வெம்போர் தன்னிலங்கோர் செஞ்சரத் தால்உருள**
**எய்த எந்தை எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.**

ப. ரை: தையலாள்மேல் காதல் செய்த - *கட்டழகியான பிராட்டியின்மீது காமம் கொண்ட,* தானவன் - *அசுரன் ஆகிய,* வாள் அரக்கன் - *வாளைத் தனக்குப் பாதுகாப்பாகக் கொண்ட இராவணனுடைய,* பொய் இலாத பொன் முடிகள் ஒன்பதோடு ஒன்றும் - *மெய்யான பொன்முடிகள் பத்தினையும்,* அன்று அங்கு செய்த வெம்போர் தன்னில் - *முன்பு இராமனாய்த் திருத்தோற்றம் செய்த காலத்தில் இலங்கையில் செய்த கொடிய பூசலில்,* ஓர் செஞ் சரத்தால் - *ஒப்பற்ற சிவந்த அம்பால்,* உருள எய்த எந்தை - *சிதறி விழுமாறு செலுத்தின என் தந்தையும்,* எம்பெருமான் - *என் தலைவனுமாக இருப்பவன்,* எவ்வுள் கிடந்தானே-.

சி. கு: *தையல் - கட்டழகு. தானவன் - அசுரன்; அரக்கனாகிய இராவணன் அசுர இயல்பினனாய் இருத்தலின் அங்ஙனம் கூறினார் என்க.*

வியா: **இரண்டாம் பாட்டு: தையல் இத்யாதி** - திரியட்டும் ராமாவதாரம் அநுவர்த்தித்தபடி. பட்டரோபாதியும் போரும் ஆயிற்று இவர்க்கு அவ் அவதாரத்தில் பக்ஷபாதம்.

---

வி: இரண்டாம் பாட்டு: *மீண்டும் இராமனாய் வந்த திருத்தோற்றம் பின் நாட்டியது[1]; அதனைப் பாடுகிறார். இவ்ஆழ்வாருக்கு மற்றத் திருத் தோற்றங்களைக் காட்டிலும் இராமனாய் வந்த திருத்தோற்றத்தில் தனி ஈடுபாடு உண்டு. இவருடைய ஈடுபாடு கூரத்தாழ்வான் திருமகனார் பட்டர் இத்திருத்தோற்றத்தில் கொண்டிருந்த ஈடுபாட்டினை நிகர்த்தது.*

---

1. பின் நாட்டல் - தொடர்தல்.

சிறியாத்தான்[1], பட்டர் ராமாவதாரத்திலே பக்ஷபதித்து இருப்பர் என்று அருளிச்செய்யும் வார்த்தை கேட்கைக்காகப்[2] "பெருமாளுக்கு எல்லா ஏற்றமும் உண்டாகிலும் ஆஶ்ரிதார்த்தமாகக் கழுத்திலே ஓலை கட்டித் தூதுபோன இவ்ஏற்றம் இல்லையே" என்ன, "அவர் போகாமை அல்ல, பிறப்பில் குற்றம் காணும்" என்று அருளிச்செய்தார். இக்ஷ்வாகு வம்ஶ்யர் கழுத்திலே ஓலை கட்டித் தூது போக விடுவாரைக் கிடையாதே. அவ்அவதாரத்திலே திருவடி அங்கே போவது இங்கே வருவதாய்க்கொண்டு வார்த்தை சொல்லித் திரிந்த ஏற்றத் தைக் கண்டு, "நாமும் இப்படி ஆஶ்ரிதர்க்காகத் தூது போகப் பெற்றிலோம்" என்று செவி சீப்பாய்ந்து இருந்து[3] அதுக்காகவிறே பின்னை வந்து அவதரித்து ஆஶ்ரிதர்க் காகத் தூது போயிற்றது. க்ஷத்ரியன் என்று நிஶ்சயிக்கில் தூது போக விடுவார் இல்லை என்று அத்தை மறைத்திறே வளர்ந்தது. அபிஷித்த க்ஷத்ரிய வம்சத்தில் பிறக்கில் தூதுபோக விடுவாரைக் கிடையாதே.

**தையலாள் இத்யாதி** - நிருபாதிக ஸ்த்ரீத்வத்தை உடையவள்பக்கலிலே ஜநநி என்று பாராதே அப்ராப்தமான ஸங்கத்தைப் பண்ணினான் ஆயிற்று. அதுக்கு அடி ஆஸுர ப்ருக்ருதியாகையாலே ஆயிற்று. **வாள் அரக்கன்** - தேவதை கொடுத்த[4] வாளை விஶ்வஸித்திருந்தான் ஆயிற்று, பெருமாள் மிடுக்கைப் பார்க்க

---

*சிறியாத்தான் என்பவர் பட்டர் இராமனாய் வந்த திருத்தோற்றத்தில் கோடிய அன்பினர் என்று பிறர் சொல்வதனைக் கேட்டிருந்தார்; அதனைத் தாமே நேரில் அறிந்துகொள்ள விழைந்து பட்டரை நோக்கி, "பெருமாளுக்கு எல்லா ஏற்றங்களும் உண்டு; எனினும் அடியார்பொருட்டுக் கழுத்திலே ஓலை கட்டித் தூது போன கண்ணனுக்கு உரிய இவ்ஏற்றம் மட்டும் இல்லையே" என்றார். இதனைக் கேட்ட பட்டர், "அவர் போகக் கூடாது என்று இருந்தார் அல்லர்; அவர் பிறந்த குலத்தால் வந்த குற்றங்காணும்" என்று அருளிச் செய்தார். இட்சுவாகு மரபில் வந்தவரது கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோக விடுவாரைப் பெற முடியாமையாலே இராமன் தூது போகப் பெற்றிலன்; அத்திருத்தோற்றத்தில் திருவடி அங்கே போவது இங்கே வருவதாய்க் கொண்டு தூது சொல்லித் திரிந்த ஏற்றத்தைக் கண்டார். நாமும் இப்படி அடியார் பொருட்டுத் தூது போகப் பெற்றிலோமே என்று செவி சீப்பாய்ந்து கிடந்தார்[5]. அக்குறை நீங்குவதற்காகவே பின்னர்க் கண்ணனாகப் பிறந்தருளிப் பாண்டவர்க்காகத் தூது போனார். மன்னர் குலத்தவன் என்று தெரிந்து கொண்டால் தூதுபோக விடமாட்டார்கள் என்று அதனை மறைத்துக் கொண்டே வளர்ந்தார். முடிசூடி நோக்கும் குடியில் பிறக்கில் தூதுபோக விடுவார் உண்டோ?*

**தையலாள்மேல் காதல் செய்த தானவன்** - *இயற்கையாக அமைந்த பெண்மை நலம் உடையவள்பக்கலிலே தாய் என்று பாராமல் தகாத காமத்தைச் செய்தான். அதற்கு அடி அவன் அசுரனாக இருத்தலே.* **வாள் அரக்கன்** - *பெருமாள் மிடுக்கைப் பார்க்க அறியாமல், சிவன் கொடுத்த வாளைப் பெரிதாக*

---

1. சிறியாய்த்தான். 2. கேழ்க்கைக்காகப். 3. செவி சீப்பாய்ந்தது. 4. குடுத்த.
5. செவி சீப்பாய்தல் - காதில் சீழ் பிடித்து வருந்துதல் என்பது நேரான பொருள். நோவுபடுதல், வருந்துதல் என்பவை குறிப்புப் பொருள்.

அறியாதே. **பொய் இலாத** - ஆஸுர ஸ்வபாவத்துக்குச் சேரும் இடத்தில் பொய் இன்றிக்கே இருக்கிற முடிகள் என்னுதல். அன்றிக்கே, திக்விஜயம் பண்ணி வீராபி ஷேகம் விஜயாபிஷேகம் என்று சில உண்டிறே பண்ணுவன. அவற்றுக்கு[1] உறுப் பான அத்புதங்களில் பொய் இன்றிக்கே இருக்கை என்னுதல். **செய்த வெம் போர் தன்னில்** - ப்ரஹ்மாதிகளைப் போலே இருந்த இடத்திலே இருந்து தபோபலத்தாலே ஸங்கல்பித்தல், அந்த ராவணனைப் போலே களவுபூசல் செய்தல் செய்கை அன்றிக்கே நேரே பொருத போரிலே. **ஓர் செஞ் சரத்தால்** - **"தீப்த பாவக ஸங்காசை:"** என்கிறபடியே நெருப்பு எரிந்து கொடு செல்லுகிறபடியாதல். திண்ணிய மார்விலே[2] பட்ட அம்பில்[3] ரக்த ஸ்பர்சத்தாலே வந்த சிவப்பைச் சொல்லு தல். வரபலத்தாலே பூண்கட்டின தலைகள் பனங்காய் போலே உருளும்படியாக எய்த. **எந்தை** - எனக்கு ஜநகனானவன்; **எம்பிரான்** - எனக்கு ஸ்வாமியான வன். **எவ்வுள் கிடந்தானே** - எழுப்பிக் கார்யம் கொள்வார் தாழ்வே உள்ளது; அவன் வந்து சாய்ந்தான்.

---

*நம்பி இருந்தான்.* **பொய் இலாத பொன்முடிகள் ஒன்பதோடு ஒன்றும்** - *அசுரர் களின் பொய்த்தன்மையோடு இணைத்து நோக்கும் இடத்துப் பொய் இன்றி இருக்கும் முடிகள் என்க. அல்லது, எண்திசையும் படை நடத்திச் சென்று பெரு வெற்றி கொண்டு வீர விழா என்றும் வெற்றி விழா என்றும் சில கொண்டாடு வார்கள் அன்றோ? அவற்றிற்கு உறுப்பான சிறப்புகளில் பொய் இன்றி இருத்தல் என்க.* **செய்த வெம் போர் தன்னில்** - *பிரமன் முதலாய தேவர்களைப் போலே இருந்த இடத்திலே இருந்து தவ வலிமையாலே அழியக்கடவன் என்று திருவுள்ளம் கொள்ளல், அந்த இராவணனைப் போலே களவுப்பூசல் செய்தல் ஆகியவற்றைச் செய்யாமல் நேரே செய்த போர்; அப்போரிலே.* **ஓர் செஞ் சரத்தால்** - **"கொழுந்து விட்டு எரியும் நெருப்புப் போன்ற அம்புகள்"** *(ரா. யு. 16:32) என்று சொல்வதற்கு ஏற்ப நெருப்பு எரிந்துகொண்டு செல்வதால் வந்த சிவப்பு என்க. அல்லது, அம்பு அவன் திண்ணிய மார்பிலே பட, அதில் செந்நீர் படிந்ததால் வந்த சிவப்பு என்க.* **உருள எய்த** - *கடவுளர் அருளால் பெற்ற பேறுகளின் வலிமையாலே பூண்கட்டின தலைகள் பனங்காய் போலே உருளும்படியாக எய்த.* **எந்தை எம்பெருமான்** - *எனக்குத் தந்தை ஆனவன்; எனக்குத் தலைவனாக இருப்பவன்.* **எவ்வுள் கிடந்தானே** - *எழுப்பிப் பயன் கொள்வார் செய்யும் காலத்தாழ்வே உள்ளது; அவன் வந்து சாய்ந்தான்.*

**ஒப்புமைப் பகுதி**

**வாள் அரக்கன்**

*பாட்டு 41-இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

(12)

---

1. அவைத்துக்கு. 2. மார்பிலே. 3. அம்பால்.

## 113

**முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்தரக்கன்**
**மன்னூர் தன்னை வாளியினால் மாள முனிந்தவனே**
**பின்னோர் தூதா திமன்னர்க் காகிப் பெருநிலத்தார்**
**இன்னார் தூதன் எனநின்றான் எவ்வுள் கிடந்தானே.**

ப. ரை : **முன் ஓர் தூது** - இராமனாய்த் தோன்றிய காலத்தில் ஒப்பற்ற தூது செய்தியினை, **வானரத்தின் வாயில் மொழிந்து** - அனுமன் வழியாகச் சொல்லி விடுத்து, **அரக்கன் மன் ஊர்தன்னை** - இராவணனது வலிய ஊர் ஆகிய இலங்கையை, **வாளியினால் மாள முனிந்து** - ஓர் அம்பினாலே அழியச் சீறி, **அவனே பின்** - அப்படிச் செய்த அவனே கிருட்டிணனாய்த் தோன்றிய காலத்தில், **ஆதிமன்னர்க்கு ஓர் தூதாகி** - பாண்டவர்களுக்கு ஓர் தூதனாய் அமைந்து, **பெரு நிலத்தார் இன்னார் தூதன் என நின்றான்** - பெரிய புவியில் உள்ளார் இவன் பாண்டவர் தூதன் எனனும்படி நிலைபெற்று நின்ற பெருமான், **எவ்வுள் கிடந்தான்** -.

சி. கு : வானரம் - ஈண்டு அனுமனைக் குறித்தது. முனிந்தவனே என்பதனை முனிந்து அவனே என்று இரு சொற்களாகக்கொள்க. ஒரு மொழி யாகவும் கொள்ளலாம். அப்போது அது விளி ஆகும்.

வியா : **மூன்றாம் பாட்டு** : **முன் இத்யாதி** - "ஏச நின்ற" என்றது அநுவர்த்திக்கிறது. உதிதாநுதித ஹோம நிந்தை போலே இருப்பது ஒன்றிறே இது. புக்க புக்க துறைதோறும் பகவத் விஷயத்திலே கால்தாழ வல்லர் ஆயிற்று. **முன்** - த்வாபரத்தினுடைய ஆதியிலே, பிராட்டியைப் பிரிந்த ஆற்றாமை மீதூர்ந்து கடலிலே

---

வி : மூன்றாம் பாட்டு : "ஏச நின்ற" (பெ. தி. 2:2:1) என்று குறிக்கப் பட்ட கிருட்டிணனாய் வந்த திருத்தோற்றம் பின் நாட்டியது. ஞாயிறு எழுந்த பின் செய்யும் வேள்வி, ஞாயிறு எழுவதற்கு முன்னே செய்யும் வேள்வி ஆகிய இரண்டனையும் இயற்றத் தக்கனவாக வேதம் சொல்லுகிறது. அவ்வேதப் பகுதியில் ஞாயிறு எழுவதற்கு முன்னே செய்யும் வேள்வி பழித்துரைக்கப்படுகிறது. அத்தொடரைப் பழிப்புரையாகக் கொள்ளாமல் புகழுரையாகவே மீமாம்சகர் கொள்வர். அதுபோல, "ஏச நின்ற" என்பதும் பழிப்பது போல் அமைந்த புகழுரை யாகும். கீழ்ப்பாட்டில் இராமாவதாரத்தில் கோடிய அன்பினராய் இருந்தார்; இப்பாட்டில் அது நீங்கிக் கிருட்டிணன்மாட்டு ஓரம் மிக்கவர் ஆனார்; இஃது எங்ஙன் நேர்ந்தது என்னில், இறைவன்திறத்தில் இவர் புக்க புக்க துறை தோறும் கால்தாழ வல்லவர் ஆவர். **முன் ஓர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து** - மூன்றாம் ஊழிக்கு (துவாபரயுகத்திற்கு) முற்பட்ட இரண்டாம் ஊழியில் (திரேதாயுகத்தில்) இராமபிரான் பிராட்டியைப் பிரிந்த ஆற்றாமை மீதூர்ந்து

---

**113.** 3: 4 காய்இப்.

புக்கு முடியும் அளவு ஆனவாறே ஒரு குரங்கின் வாயிலே வார்த்தை சொல்லி விட்டான். **அரக்கன் மன் ஊர்தன்னை** - அரக்கனுடைய வராதிகளாலே பூண் கட்டின ஊரை. **வாளியினால்** - ப்ரஹ்மாஸ்த்ராதிகளுக்குக் கேளாத ஊரை மனிசர்க்கு[1] ஏகாந்தமான அம்பாலே அழியும்படி சீறினான் ஆயிற்று. **அவனே இத்யாதி** - கடலில் நீரே நெய்யாகப் பற்றி எரிய வல்ல அம்புடையனாய் இருக்கச் செய்தே, ஓர் இயற்றி இல்லாதாரைப் போலே கழுத்திலே ஓலைகட்டித் தூது போனான் ஆயிற்று. **ஆதிமன்னர்க்கு ஆகி** - துர்யோதநாதிகள் ராஜ்யம் பண்ணாநிற்கச் செய்தேயும் பாண்டவர்களை, 'ஆதிமன்னர்' என்கிறார் ஆயிற்று, ராஜ்ய ப்ராப்தி இவர்களது, அவர்கள் கிடந்தானை கண்டு ஏறின இத்தனை என்று. பள்ளிகளும் கள்ளரும் க்ஷேத்ரம் ஆளாநிற்க ப்ராஹ்மணன் ப்ரமாணங்களைக் கட்டி வைக்குமாப்போலே[2] அவர்கள் ஆதிமன்னர் என்கிறார் ஆயிற்று இவர், ஈஶ்வராபிப் ராயத்தாலே. சிறியார் பெரியார் என்று வாசி இன்றிக்கே எல்லாரும் ஒக்க, **இன்னார் தூதன் என நின்றான்** - "பாண்டவ தூதன்" என்ற அத்தாலே தரித்தான் ஆயிற்று. ஒரு பிறப்பாதல், வ்ருத்தமாதல் இட்டுச்சொல்ல ஒண்ணா தாரைப் போலே தனக்கு என்ன இட்டுச் சொல்லலாவது ஒன்று இன்றிக்கே,

---

*கடலிலே புக்கு முடியும் அளவினன் ஆயினன்; அப்பொழுது ஒரு குரங்கினிடம் தூது உரைத்து அவளைக் கண்டு சொல்லி வர விடுத்தான்.* **அரக்கன் மன் ஊர்தன்னை** - *இராவணன் கடவுளரிடமிருந்து தான் பெற்றிருந்த அருட்பேறு களாலே பூண்கட்டின ஊர் இலங்கை; அதனை.* **வாளியினாலே மாள முனிந்து** - *அயன்படை முதலிய தெய்வப் படைகளுக்கு அடங்காத ஊரை மனிசர்க்கு உரிய அம்பாலே அழியுமாறு சீறினான்.* **அவனே பின் ஓர் தூது ஆதிமன்னர்க்கு ஆகிப் பெரு நிலத்தார் இன்னார் தூதன் என நின்றான்** - *பெருமான் கடலில் உள்ள நீரே நெய்யாகப் பற்றி எரியச் செய்ய வல்ல அம்பினை உடையவன்; அத்தகையவனாய் இருந்தபோதிலும், ஓர் இயற்றி[3] இல்லாதாரைப் போலே கழுத்திலே ஓலைக் கட்டித் தூது போனான்.* **ஆதிமன்னர்க்கு ஆகி** - *நூற்றுவர் ஆண்டபோதிலும் பாண்டவர்களை 'ஆதிமன்னர்' என்கிறார். ஏனெனில் ஆட்சியுரிமை முறைப்படி இப்பாண்டவர்களுக்கே உரியது; அந்நூற்றுவர் கிடந்தானை கண்டு ஏறியவர்கள்[4] ஆவர். மன்னர் ஆளுதற்கு உரிய புவியை ஆட்சிக்கு உரியர் அல்லாப் பள்ளிகளும் கள்ளரும் ஆட்சிபுரிய மறையவன் ஆட்சிக்கு உரியவர் மன்னர்களே என்பதனைச் சான்றுகளைக்கொண்டு எழுதிவைப்பது போலே, பாண்டவர் ஆளுதற்குரிய அரசினை நூற்றுவர் ஆட்சிபுரிய இவ் ஆழ்வார் இறைவன் திருவுள்ளத்தைக்கொண்டு பாண்டவர்களே ஆட்சிக்கு உரியவர் என்கிறார். அதனால் பாண்டவர்கள் ஆட்சியில் இல்லாவிட்டாலும் அவர்களை 'ஆதி மன்னர்' என்று குறிப்பிடுகிறார்.* **பெரு நிலத்தார் இன்னார் தூதன் என நின்றான்** - *சிறியார் பெரியார் என்று வேறுபாடு இன்றி எல்லாரும் ஒக்கப் "பாண்டவ தூதன்" என்று சொல்வதைக் கொண்டு உயிர் தாங்கி நின்றான். குலப்பிறப்போ செயல்மாட்சியோ இட்டுச் சொல்ல ஒண்ணாதாரைப் போலே தனக்கென இட்டுச் சொல்லல் ஆவது ஒன்று இல்லாமல், "பாண்டவர்களுக்குத்*

---

1. மனிச்சுக்கு; மனுஷ்யர்க்கு. 2. காட்டிவைக்குமாப் போலே.

3. இயற்றி - தகுதி. 4. கிடந்தானை கண்டேறுகை - யானை படுத்துக் கொண்டிருக்க, அப்போது அதன்மீது பாகனைக் கொண்டு அன்றி, ஒருவன் தானே ஏறிக்கொள்ளுதல் என்பது நேரான பொருள். வாய்ப்புக் கிடைத்த போது முறையின்றிப் பெறுதல் என்பது குறிப்பு.

**"பாண்டவர்களுக்குத் தூதன்" என்று அத்தாலே தரித்து நின்றான் ஆயிற்று. ஒரு ஜந்ம வ்ருத்தாதிகளாலே நிரூபியாதே அதுவே நிரூபகம் ஆயிற்று, "இன்னான் சோற்றாலே தரித்தான்", "சுவர் மண்ணாலே நின்றது" என்னுமாப் போலே. ஆஶ்ரித பாரதந்தர்யத்தை இட்டுச் சொல்லுவாரைப் பெறில் உண்ணாதே தடிக்கும் ஆயிற்று. எவ்வுள் கிடந்தானே - இவ்இடம் நல்ல நீர்வாய்ப்பாய் இருந்தது. பூமியிலே ஏவிக் கார்யம் கொள்வாரைப் பெற்றது. இனி இவ்இடம் விட்டுப் போவோம் அல்லோம் என்று சாய்ந்தான் ஆயிற்று.**

---

தூதன்" என்னும் அதனாலே உயிர் வாழ்ந்தான். குலம், செயல் முதலியவற்றை இட்டுச் சொல்ல வேண்டாதே பாண்டவர் தூதன் என்பதே அவனுக்குச் செப்பேடாய் அமைந்தது[1]. **"இன்னான் சோற்றாலே வாழ்ந்தான்", "சுவர் மண்ணாலே நின்றது"** என்று கூறுமாறு போலே பாண்டவர் தூதன் என்பதாலே நின்றான். அடியார்க்குக் கையாளாய் இருக்கும் தன்மையினை இட்டுத் தன்னைச் சொல்லுவாரைப் பெற்றால் உண்ணாமலேயே உடல் தடிப்பவனாய் இருந்தான். **எவ்வுள் கிடந்தானே** - இவ்இடம் நல்ல நீர்வாய்ப்பு உடையதாய் இருந்தது; இம்மண்ணுலகிலே நம்மை ஏவிப் பயன் கொள்ளுவாரைக் கொண்டது. இத்தகைய இடத்தை இனி விட்டுப் போவோம் அல்லோம் என்று எண்ணிச் சாய்ந்திருக்கிறான்.

**ஒப்புமைப் பகுதி**

**1. ஆதிமன்னர்க்குத் தூதாகி நின்றவன்**

*" நாடுடை மன்னர்க்குத் தூதுசெல் நம்பி "*

*" நாடுடை இத்யாதி - நாடுடைய ராஜாக்களான பாண்டவர்களுக்குத் தூதுபோய் அத்தாலே பூர்ணனானவனுக்கு. பகவத் அபிப்ராயத்தாலே, அவர்களை நாடுடை மன்னர் என்கிறார் காணும், 'இருக்கைக்கு ஒரு குறிச்சியும் கொடோம்' என்று ராஜ்யம் பண்ணுகிறார்கள் துர்யோதநாதிகளாய் இருக்க. 'அபிஷிச்ய ச லங்காயாம்' இத்யாதிவத் "*

திரு. வா. மொ. 6:6:4-36

*[அபிப்ராயம் - கருத்து]*

*" குருநாடுடை ஐவர்கட்காய் - நாடுடையவர்கள் ஐவருமே என்று இருக்கிறாள். துர்யோதநாதிகள் கிடந்தானை கண்டு ஏறின இத்தனை. ஐவர்கட்காய் - 'நாடுடை மன்னர்' என்கிறபடியே ராஜ்யம் உடையவர்கள் அவர்கள், 'நாம் அவர்களுக்குக் கையாளாய் வ்யாபரிக்கிறோம்' என்று ஆயிற்று அவன் நினைத்திருப்பது "*

திரு. வா. மொ. 6:8:3-24

*" குருநாடுடை ஐவர் - துர்யோதநாதிகள் கிடந்தானை கண்டு ஏறினவோ பாதியிறே. 'நாடுடை மன்னர்' என்கிறபடியே ராஜ்யம் அவர்களதே. 'துர்யோதநாதிகள் ராஜ்யம் பண்ணுகை வல்லடி' என்று இருக்கும் பகவத் அபிப்ராயத்தாலே சொல்லுகிறார். அவன் நினைவேயிறே இவர்க்கும் நினைவு "*

திரு. வா. மொ. 6:8:3-36

---

1. செப்பேடாய் அமைதல் - சான்றாய் இருத்தல்.

2. இன்னார் தூதன் என நின்றான்

*" பஞ்சவர் தூதனாய் - தர்மபுத்ராதிகள் ஐவர்க்குத் தூதனாய். இவர்கள் ஐவரிலும் இவனை ஏவ உரியர் அல்லாதார் இல்லை போலே காணும். தூதனாய் - ஸர்வாதிகனான தான் கழுத்திலே ஓலைகட்டித் தூது போகிற இடத்தில் புரையற்றிருந்தபடி. இதுதன்னைப் பெறாப்பேறாக விறே இவன்தான் நினைத்திருப்பது. 'இன்னார் தூதன்என நின்றான்' என்கிறபடியே - 'பாண்டவர் தூதன்' என்கிற ப்ரஸித்தி பெற்ற பின்பிறே பாரில் கால்பாவித் தரித்துநின்றது "*

*பெரி. தி. 3:9:5-ம. மா. மு. உரை.*

*(13)*

## 114

**பந்த ணைந்த மெல்விரலாள் பாவைதன் காரணத்தால்**
**வெந்தி றல்லே றேழும்வென்ற வேந்தன் விரிபுகழ்சேர்**
**நந்தன் மைந்தன் ஆகஆகும் நம்பி நம்பெருமான்**
**எந்தை தந்தை தம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.**

**ப. ரை :** பந்து அணைந்த மெல் விரலாள் - *பந்து பொருந்திய மென்மையான விரலை உடையவளான,* பாவை தன் காரணத்தால் - *நப்பின்னைப்பிராட்டியின் பொருட்டாக,* வெந் திறல் ஏறு ஏழும் வென்ற **வேந்தன்** - *கொடிய மிடுக்கையுடைய எருதுகள் ஏழினையும் அழித்த அரசனும்,* **விரி புகழ் சேர் நந்தன்** - *விரிந்த புகழுடைய நந்தகோபனுக்கு,* **மைந்தன் ஆக ஆகும் நம்பி** - *மகனாக விளங்கிய நிறைவாளனும்,* நம்பெருமான் - *நமக்குத் தலைவனும்,* **எந்தை தந்தை தம்பெருமான்** - *என் தந்தை, தந்தைக்குத் தந்தை முதலான என் குலத்திற்குத் தலைவனும் ஆனவன்,* எவ்வுள் கிடந்தான் -.

**சி. கு :** *பாவை - உவமவாகுபெயர்;* வெந்திறல்லேறு - *விரித்தல் விகாரம். நந்தன் - மகிழ்ச்சி உடையவன் என்பது பொருள்.*

**வியா : நாலாம் பாட்டு : பந்து** இத்யாதி - திரியவும் க்ருஷ்ணா வதாரமே பின் நாட்டிற்று[1]. க்ருஷ்ணனுக்கு ஆகர்ஷகமாகும்படி கையிலே பந்தைப் பிடித்து அதுதானும் பொறாத மார்த்தவத்தையுடைய விரலையுடையளாய்,

---

**வி :** நாலாம் பாட்டு : பந்து அணைந்த மெல் விரலாள் பாவைதன் **காரணத்தால்** - *திரியவும்[2], கிருட்டிணன் திருத்தோற்றமே பின் நாட்டியது[3]. கிருட்டிணனுக்குக் கவர்ச்சி உண்டாகுமாறு கையிலே பந்தைப் பிடிக்க, அவள் மென்மையான விரல்கள் அச்சிறு செயல்தன்னையும் பொறாத* ஆயின; அத்தகு

---

**114.** 3 : 3 னாகவாழ்ந்த, 3 : 5 நம்பெருமாள்.

1. பின்னாட்டுத்து.
2. திரியவும் - மறுபடியும்.
3. பின் நாட்டியது - தொடர்ந்தது.

நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடைய நப்பின்னைப்பிராட்டியை லபிக்கைக்காக. **வெந் திறல் இத்யாதி** - காரணத்தாலே[1] அம்பாலே பூசல் செய்யலாம் ஜந்மமன்றே. அஜ் ஜாதிக்கு அடைத்த வெற்றியைக் கொண்டான் ஆயிற்று. ருஷபங்களை அடர்த்து அஜ்ஜாதிக்கு ராஜாவானவன். **விரி புகழ் சேர் நந்தன்** - ஆரேனும் பிள்ளை பெற வேணும் என்று நோன்புநோற்க, "எடுத்த பேராளன்" என்று பலத்திலே அந்வயித்து நிற்கப்பெற்ற புகழை உடையன் ஆயிற்று. **ஆகும்** - ஒரு பிதா இன்றிக்கே தான்தோன்றியான எளிமை தீர ஸ்ரீநந்தகோபர் திருமகனான பின்பாயிற்று "ஸந்தமேநம்" என்னுமாப் போலே உளன் ஆயிற்று. **மைந்தன் ஆக ஆகும்** -

**உந்தம் அடிகள் முனிவர்** - யசோதைப் பிராட்டி அவனை அச்சம் உறுத்துகைக்காகச் சொல்லும் வார்த்தை ஆயிற்று. தான் தாயான எளிமையாலே பொடிய மாட்டாளே; அதுக்காக உங்கள் தமப்பனார்

---

*விரல்களைக் கொண்ட இயற்கையான பெண்மை நலம் கனிந்த நப்பின்னைப்பிராட்டியைக் கைப்பிடிப்பதற்காக.* **வெந் திறல் ஏறு ஏழும் வென்ற வேந்தன்** - *அம்பாலே பூசல் செய்து அப்படிக் கொள்ள ஒண்ணாது. இவன் பிறப்பு அப்படிச் செய்தற்கு உரிய பிறப்பு அன்று. ஆகையால் அக்குலத்திற்கு அடைத்த*[2] *வெற்றியைக் கொண்டான். காளைகளை அடர்த்து அக்குலத்திற்கு அரசனானவன்.* **விரி புகழ் சேர் நந்தன்** - *யாரோ*[3] *பிள்ளைப்பேறு வேண்டும் என்று நோன்பு நோற்றனர்; இவன், "எடுத்த பேராளன்" (தி. வா. மொ. 8:1:3) என்று அதன் பயனைத் துய்த்து நிற்கும் புகழை உடையவன் ஆனான்.* **மைந்தன் ஆக ஆகும்** - *தந்தை என்று ஒருவர் இல்லாமல் தான்தோன்றியாக இருந்த எளிமை தீர நந்தகோபர் திருமகன் ஆனான். "பரம்பொருள்அறிவு ஒருவனுக்கு இருந்ததாகில், அக்காரணத்தாலேயே பெரியோர்கள் அவனை இருப்பவன் என்கிறார்கள்", என்று சொல்வது போலே இவனும் நத்தகோபன் திருமகனாக ஆகிய பின்னரே "இருப்பவனாக" (தைத். ஆந. 6) ஆயினான்.*

*அவன் வசுதேவர் குமரனா? நந்தகோபன் குமரனா? என்னில்,*

"உந்தம் அடிகள் முனிவர்
உன்னைநான் என்கையிற் கோலால்
நொந்திட மோதவும் கில்லேன்" (பெ. தி. 10:4:8)

*என்று நந்தகோபனைக் கண்ணனுக்குத் தந்தையாகச் சொல்லி அவனை அவருக்குத் திருமகனாகவே அசோதையும் சொல்லுவாள்!*

**உந்தம் அடிகள் முனிவர்** - *அசோதைப்பிராட்டி அவனை அச்சம் உறுத்துதற்காகச் சொல்லும் பேச்சு இது. அவள் தாயான எளிமையாலே பொடியமாட்டாள்;*[4] *அதற்காக, "உங்கள் தமப்பனார்*

---

1. இவ்விடம் பொருள் பொருத்தமாக அமையவில்லை. மைத்துன முறைமையாலே என்று எழுதப்பட்டுள்ள அரும்பத உரை பொருந்துவதாக இல்லை. காரணத்தாலே என்பதனை அக்காரணத் தாலே என்று கொண்டு நப்பின்னையை மணத்தற்பொருட்டு என்று பொருள் கொள்வது பொருத்தமாக அமையலாம். பாட்டில் காரணத்தால் என்று வருவது காண்க.

2. அடைத்த - உரிய, பொருந்திய. 3. யாரோ என்பது வசுதேவரையும் தேவகியையும் குறிப்பது.

4. பொடிதல் - அடித்தல்.

பொடிவர்கிடீர். **உன்னை** - செய்தது எல்லாம் பொறுக்கும்படி அன்றிறே தீம்பிலே கைவளர்ந்து நிற்கிற நிலை. **நான் இத்யாதி** - கையில் கோலைக் காட்டி, "இதிருக்கிறபடி கண்டாயே, இது உன் பேர்" என்னும்; இத்தாலே உன்னை நோம்படி அடிக்கலாமிறே. அதுக்கு எனக்குக் கை எழுகிறது இல்லை.

**நம்பி** - ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸ்ரீவைகுண்டத்தில் இருந்த இருப்பிலும் இங்கே வந்து அவதரித்துத் தான் தாழநின்ற பின்பாயிற்றுப் பூர்ணன் ஆயிற்று. **நம்பெருமான்** - நமக்கு நாதன். நம் குலநாதனானவன். **எவ்வுள் கிடந்தானே** - ஸர்வ வித பந்துவானவனைக் காணலாவது பரமபதத்திலே என்று அவ்இடத்தில் போகப் பொதிசோறு கட்ட வேண்டாதே பந்துக்ருத்யம் பண்ணலாம் படி திருஎவ்வுளிலே வந்து சாய்ந்தான் ஆயிற்று.

---

*பொடிவர் கண்டீர்" என்கிறாள்.* **உன்னை** - *செய்த எல்லாம் பொறுக்க ஒண்ணாதபடியன்றோ தீம்பிலே கைவளர்ந்து[1] நிற்கும் நிலை.* **நான் என்கையிற் கோலால் நொந்திட மோதவும் கில்லேன்** - *கையில் கோலைக் காட்டி, "இது எப்படி இருக்கிறது என்று கண்டு கொண்டாயா? இது எங்கே கண்ணன்? எங்கே கண்ணன்?" என்று உன் பேரைக் கேட்டவாறு உள்ளது. இதனால் உன்னை நோகும்படி அடிக்கலாமல்லவா? அதைச் செய்வதற்கு எனக்குக் கை எழ மாட்டேன் என்கிறது.*

**நம்பி** - *எல்லா நற்குணங்களும் உடையவனாய் வைகுந்தத்தில் இருந்த இருப்பைக் காட்டிலும் இங்கே வந்து தோன்றித் தான் தாழநின்ற பின்பே நிறைவாளனாக ஆயினன்.* **நம்பெருமான்** - *நமக்கு நாதன். நம் குலநாதன் ஆனவன்.* **எவ்வுள் கிடந்தானே** - *எவ்வகை உறவும் ஆனவனைத் திருநாட்டில் தான் காணலாம் என்று அங்கே போவதற்குப் பொதிசோறு கட்டவேண்டா[2]; அவ்வாறு சென்று காண வேண்டாதே உற்றார் செய்யும் உதவியை நமக்குச் செய்வதற்குத் திருஎவ்வுளிலே வந்து சாய்ந்திருக்கிறான்.*

### ஒப்புமைப் பகுதி

**1 பாவை**

*" பாவை என்கிறது ஸ்த்ரீத்வத்துக்கு அவ்வருகு இல்லாமை "*

*பெ. ம. 56 பெ. உரை.*

*[ஸ்த்ரீத்வம் - பெண்மை. அவ்வருகு இல்லாமை - மேம்பட்டார் இன்மை.]*

**2. நந்தன்**

*" நந்தகோபன் - பிள்ளையைக் கண்ட ப்ரீதியாலே ஆநந்தத்தை உடையர் என்று சொல்லுதல்; நாமதேயமாதல் "* *பாவை. 1 பெ. உரை.*

*" நந்தன் காளாய் - பசும்புல்லுச் சாவ மிதியாத ஸ்ரீநந்தகோபர்... "*

*பெரி. தி. 3:8:8 ம. மா. மு. உரை.*

---

1. கைவளர்தல் - மேலோங்குதல். 2. பொதி சோறு கட்டல் - அக்காலத்தில் வெளியூர் செல்வோர் சோற்றினைக் கட்டி எடுத்துச் செல்வர். அதனை ஒட்டிப் பொதி சோறு கட்டல் என்பது பயணம் புறப்படுவதனைக் குறிக்கும். ஈண்டு அத்தொடர் திருநாட்டுக்குப் போவதற்கு ஏற்பாடுகள் செய்தல் என்று பொருள் தந்து நிற்கிறது.

## 115

**பாலன் ஆகி ஞாலம்ஏழும் உண்டுபண் டாலிலைமேல்**
**சால நாளும் பள்ளிகொள்ளும் தாமரைக் கண்ணன்எண்ணில்**
**நீல மார்வண் டுண்டுவாழும் நெய்தலந் தண்கழனி**
**ஏலம் நாறும் பைம்புறவில் எவ்வுள் கிடந்தானே.**

**ப. ரை :** **எண்ணில்** - *ஆராய்ந்து பார்த்தால்,* **பண்டு பாலன் ஆகி** - *முன்பு பெருவெள்ளங் கோத்துக் கிடக்கும் ஊழி இறுதியில் சிறு பிள்ளையாய்,* **ஞாலம் ஏழும் உண்டு** - *உலகங்கள் ஏழனையும் வயிற்றில் கொண்டு,* **ஆல் இலைமேல் சால நாளும் பள்ளிகொள்ளும்** - *ஓர் ஆலந்தளிரிலே நெடுங்காலம் கிடந்தருளும்,* **தாமரைக் கண்ணன்** - *தாமரை போலும் கண்களையுடைய பெருமான்,* **நீலம் ஆர் வண்டு** - *நீல நிறம் பொருந்திய வண்டுகள்,* **உண்டு வாழும்** - *மதுவினை மாந்தி வாழுகின்ற,* **நெய்தல் அம் தண் கழனி** - *நெய்தற் பூக்கள் நிறைந்த அழகிய குளிர்ந்த வயல்களையும்,* **ஏலம் நாறு பைம் புறவில்** - *மணம் வீசும் பசுமையான சோலைகளையுமுடைய,* **எவ்வுள் கிடந்தான்** -.

**சி. கு:** *எண்ணில் என்பதற்கு எண்ணற்ற என்று பொருள் கொள்ளலாம்; அது நெய்தற் பூவைக் குறிக்கும் நீலத்திற்கு அடையாக அமையும். நீலம் ஆர் என்பதனை வண்டு, நெய்தல், கழனி ஆகியவற்றோடு சேர்த்து வெவ்வேறு வகையாகப் பொருள் கூறலாம். நெய்தல் என்பது நெய்தல் நிலம் என்றும் பொருள் படும்.*

**வியா :** **அஞ்சாம் பாட்டு :** **பாலன் ஆகி** - அத்யந்தம் செம்பால் பாய்கிற பருவத்தையுடைய பாலனாய், அப்பருவத்திலே ஸகல லோகங்களையும் எடுத்து வயிற்றிலே வைத்து. **பண்டு** - தனக்கு ஒரு பரிவர் இல்லாத ப்ரளய காலத்திலே ஒரு பவனான ஆலந்தளிரிலே. **சால** - "பிள்ளை அகாலத்திலே உறங்காநின்றான், என் செய்தான்?" என்று எழுப்புகைக்கு ஒரு யசோதாதிகளும் இல்லையே. **எண்ணில்** - அகடிதங்களை கடிப்பிக்கும்படி. அது ஆராயப் புக்கால் இருக்கும்படி. **நீலம் இத்யாதி** - நெய்தற் பூவிலே படிந்த வண்டுகளானவை மதுபாநம் பண்ணி வாழா

---

**வி :** **அஞ்சாம் பாட்டு :** **பாலன் ஆகி ஞாலம் ஏழும் உண்டு** - *பெரிதும் செம்பால் பாயும் பருவத்தையுடைய[1] பிள்ளையாய், அப்பருவத்திலே எல்லா உலகங்களையும் எடுத்து வயிற்றிலே வைத்து.* **பண்டு ஓர் ஆல் இலைமேல்** - *தனக்கு ஒரு பரிவர் இல்லாத பெருவெள்ளம் கோத்துக்கிடந்த காலத்திலே ஒரு முகிழ் விரிந்த அளவான ஆலந்தளிரிலே.* **சால நாள் பள்ளிகொள்ளும் தாமரைக் கண்ணன்** - *"பிள்ளை காலம் அல்லாக் காலத்தில் உறங்கிக் கொண்டிருக்கிறானே, ஏன் இப்படி உறங்குகிறான்?" என்று எழுப்புகைக்கு அசோதை தொடக்கமானோரும் அங்கு இல்லை.* **எண்ணில்** - *ஆராய்ந்து பார்க்கத் தொடங்கினால், செயற்கு அரியவற்றைச் செய்து நிற்கிறான்.* **நீலம் ஆர் வண்டு உண்டு வாழும் நெய்தல் அம் தண் கழனி** - *நெய்தற் பூவிலே படிந்த வண்டுகள்*

---

1. செம்பால் பாயும் பருவம் - தொட்டால் செந்நீர் (இரத்தம்) பொசியும் பருவம்.

நின்றுள்ள நெய்தல் நிலம் என்னவும் ஆம். அன்றிக்கே, நெய்தல் என்று ஆம்பலாய், நீலப் பூவிலே படிந்த வண்டுகள் ஆம்பலிலே மதுபாநம் பண்ணாநின்றுள்ள என்னவும் ஆம். அன்றிக்கே, நீல நிறத்தையுடைய வண்டுகள் நெய்தற் பூவிலே மதுபாநம் பண்ணுகிற அழகிய குளிர்ந்த[1] கழனியை உடைத்தாய் இருக்கும் என்னவும் ஆம். **ஏலம் இத்யாதி** - பரிமள ப்ரசுரமான பர்யந்தத்தை உடைத்தான தேசத்திலே அரியது செய்ய வல்லவனாயிற்றுக் கண்வளர்ந்தரு கிறான்; எழுப்பிக் கார்யம் கொள்வார் குறையே.

---

*தேனை உண்டு வாழ்கின்ற நெய்தல் நிலம் என்னலாம்; அன்றேல், நெய்தல் என்பது ஆம்பலைக் குறிப்பதாகக் கொண்டு நீலப்பூவிலே படிந்த வண்டுகள் ஆம்பலிலே தேன் உண்ணுகின்ற நெய்தலம் தண் கழனி என்று கொள்ளலாம்; அஃது அன்றேல், நீல நிறத்தையுடைய வண்டுகள் நெய்தற் பூவிலே தேன் உண்ணுகிற அழகிய குளிர்ந்த கழனியை உடைத்தாய் இருக்கும் எவ்வுள் என்று கூறலாம்[2].* **ஏலம் நாறும் பைம் புறவில் எவ்வுள் கிடந்தானே** - *மணம் கமழும் சூழலை உடைத்தான இடத்திலே அரியது செய்ய வல்லவன் ஆன பெருமான் வந்து கண்வளர்ந்தருளுகிறான்; அவனை எழுப்பிப் பயன் கொள்வார் அவனை நோக்கிச் செல்லாத குறையே உள்ளது.*

### ஒப்புமைப் பகுதி

1. **பாலன்**

*" ஒரு பாலகனாய் - யசோதா ஸ்தநந்தயம் ப்ரௌடதயா என்னும்படி அத்விதீயனான பாலனாய். யசோதா ஸ்தநந்தயமான க்ருஷ்ணனும் முரணித்திருக்கும்படி இவனுடைய பால்யம் செம்பால் பாயாநிற்கும் "*

*அம. 9 நாயனார் உரை.*

*[ஸ்தநந்தயம் - முலையுண் குழவிப்பருவம். ப்ரௌட தயா - தேர்ந்தவனாய் இருக்கும் நிலை. அத்விதீயன் - இணையற்றவன். பால்யம் - பிள்ளைத் தன்மை.]*

*"பாலன் - ரக்ஷகாபேக்ஷமான வடிவு "* *மு. தி. 69 பெ. உரை.*

*[ரக்ஷகாபேக்ஷம் - பாதுகாப்பு வேண்டுவது]*

2. **ஞாலம் ஏழும் உண்டான்**

*பாட்டு 76 இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

3. **தாமரைக் கண்ணன்**

*" தாமரைக் கண்ணதோர் அஞ்சன நீலமே - சிவப்பாலும் விகாஸத்தாலும் மார்த்தவத்தாலும் தாமரையை ஒருவகை உபமை சொல்லலாம்படி இருக்கிற கண்ணழகை உடையவனே "* *தி. வா. மொ. 3:8:8-36*

*[விகாஸம் - மலர்ச்சி. மார்த்தவம் - மென்மை. உபமை - உவமை.]*

---

1. குளுந்த.

2. நீலம், நெய்தல் ஆகியவற்றிற்கு முறையே நெய்தற் பூ, நெய்தல் நிலம் என்று கொண்டு ஓர் உரையும், நீலப்பூ, ஆம்பல் என்று கொண்டு பிறிதோர் உரையும், நீலநிறம், நெய்தற்பூ என்று கொண்டு மற்றோர் உரையுமாக மூன்று உரை கூறப்படுகின்றன.

" தாமரை புரை கண்ணிணையும் - விகாஸம், செவ்வி, குளிர்த்தி, பரிமளம் இவற்றை உடைத்தாகை " தி. வா. மொ. 6:2:2-24

[பரிமளம் - நாற்றம்]

" தாமரைக் கண்ணன் - திருமேனிக்கு திவ்யாயுதங்கள் ப்ரகாசகமாய் இருக்குமாப் போலே ஆத்மகுணங்களுக்கு நோக்கு ப்ரகாசமாய் இருக்கிறபடியும். அகவாயில் தண்ணளியெல்லாம் கண் வழியேயிறே தோற்றுவது " தி. வா. மொ. 7:3:1-36

(15)

## 11

**சோத்தம் நம்பி என்றுதொண்டர் மிண்டித் தொடர்ந்தழைக்கும்**
**ஆத்தன் நம்பி செங்கண்நம்பி ஆகிலும் தேவர்க்கெல்லாம்**
**மூத்த நம்பி முக்கண்நம்பி என்று முனிவர்தொழுது**
**ஏத்து நம்பி எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.**

**ப. ரை :** **தொண்டர் மிண்டி** - வைணவர்கள் நெருக்கமாகத் திரண்டு, **நம்பி சோத்தம் என்று** - ''குணங்களால் நிறைந்தவனே! உனக்கு வணக்கம்'' **என்று** சொல்லி, **தொடர்ந்து அழைக்கும்** - இடைவிடாமல் பரவும், **ஆத்தன் நம்பி** - உற்ற தலைவனாய்க் குறைவற்றிருப்பவனும், **செங்கண் நம்பி ஆகிலும்** - சிவந்த கண்ணழகால் முழுமையுடன் திகழ்பவனுமாக இருந்த போதிலும், **தேவர்க்கு எல்லாம் மூத்த நம்பி** - தேவர்களுக்கு எல்லாம் முன்னே பிறந்த பிரமனுக்கும், **முக்கண் நம்பி** - மூன்று கண்களையுடைய உருத்திரனுக்கும் உள்ளுறைபவனாய் இருப்பவனே, **என்று முனிவர் தொழுது ஏத்தும் நம்பி** - என்று சனகர் முதலான முனிவர்கள் பரவும் நிறைவுடைய, **எம்பெருமான்** - என் தலைவன், **எவ்வுள் கிடந்தானே**-.

**சி. கு :** மூத்த நம்பி, முக்கண் நம்பி என்று முனிவர் தொழுது ஏத்தும் நம்பி என்பதற்கு நான்முகனே! சிவனே! என்று முனிவர்கள் ஏத்தும்படியாக (எப்பொருளின் உள்ளும் உறையும்) நம்பி என்றும் பொருள் கூறலாம். சோத்தம் ஆத்தன் என்பன முறையே ஸ்தோத்ரம், ஆப்தஃ என்னும் வடசொற்களின் திரிபுகள். சோத்தம் - வணங்குவோர் தம் தாழ்ச்சி தோற்றச் சொல்லும் மொழி. ''என்று முனிவர்'' என்பதனை ''என்றும் முனிவர்'' என்று பிரித்து உரை கூறுவாரும் உண்டு.

**வியா : ஆறாம் பாட்டு :** **சோத்தம் இத்யாதி** - அவன் நெஞ்சு இரங்கும்படி சரண வரணம் பண்ணுமாப் போலே தாழ்ந்தார் சொல்லுவது ஒரு

---

**வி : ஆறாம் பாட்டு :** **சோத்தம் நம்பி என்று தொண்டர் மிண்டித் தொடர்ந்து அழைக்கும் ஆத்தன் நம்பி** - சோத்தம் - அவன் நெஞ்சு இரங்கும்படி தஞ்சம் புகுவதுபோலே தாழ்ந்தார் சொல்லும் ஒரு பாசுரம்[1]. எல்லா நற்

---

1. பாசுரம் - பேச்சு.

பாசுரம். ஸமஸ்த கல்யாண குணாத்மகனே! சோத்தம் என்று கொண்டு வைஷ்ண வர்கள் ஒருவர்க்கு ஒருவர் முற்பட்டு மேல் விழுந்து மாறாதே அழைக்கும். **ஆத்தன் நம்பி** - பரமாப்தியால் குறைவற நிற்குமவன். இப்படி இருக்கிறவன்தான் ஆர் என்னில், **செங்கண் நம்பி** - "யஜ்ஞேசோ யஜ்ஞபுருஷ: புண்டரீகாக்ஷ ஸம்ஜ்ஞித:"என்று புண்டரீகாக்ஷனாக ப்ரமாண ப்ரஸித்தன் ஆனவன்[1]. **ஆகிலும்** - இப்படி இருந்தானே ஆகிலும். **தேவர் இத்யாதி** - தேவதைகளுக்கு எல்லாம் முன்னே பிறந்தானாய் இருக்கிற சதுர்முகனுக்கும் லலாட நேத்ரனான ருத்ரனுக்கும் அந்தர்யாமியாய் ஸ்ருஷ்ட்யாதிகள் நடத்துகிறவன் என்று கொண்டு ஸநகாதிகள் ஏத்தும்படி இருக்கிற பூர்ணனான என் நாதன். ஆக, இப்படி அஸாதாரண திவ்ய விக்ரஹயுக்தனாய் இதர விஸஜாதீயனாய் இருக்கச்செய்தேயும் ப்ரஹ்மாவுக்கு அந்த ராத்மாவாய் நின்று ஸ்ருஷ்ட்யாதிகளை நடத்துகிறான் என்று ஸநகாதிகள் ஏத்தும் படியாய் இருக்கிறவன் இங்கே சாய்ந்தான் என்றபடி.

---

*குணங்களுக்கும் உறைவிடமாய் இருப்பவனே! அடியேன் தொழுகிறேன் என்று சொல்லிக்கொண்டு வைணவர்கள் ஒருவர்க்கு ஒருவர் முற்பட்டு மேல்விழுந்து மாறாதே அழைக்கும் நம்பிக்கைக்கு உரியவன்.* **ஆத்தன் நம்பி** - *மேம்பட்ட நம்பிக்கைக்கு உரியவனாதலில் குறைவற நிற்பவன். இப்படி இருக்கிறவன்தான் யார் என்னில்,* **செங்கண் நம்பி** - "*தாமரைக்கண்ணன் என்னும் பெயரை உடையவன் ஆகிய நாராயணனே வேள்வியால் வழிபடப் பெறுபவனாகவும், வேள்வி யின் பயனைத் தருபவனாகவும் இருக்கிறான்" என்று தாமரைக் கண்ணனாக மேற்கோள்களாலே பெருவழக்காகக் குறிக்கப்பெற்றவன்.* **ஆகிலும்** - *இப்படி இருந்தானே ஆகிலும்.* **தேவர்க்கு எல்லாம் மூத்த நம்பி முக்கண் நம்பி என்று முனிவர் தொழுது ஏத்தும் நம்பி** - *கடவுளர்களுக்கு எல்லாம் முன்னே பிறந்தவனாய் இருக்கும் நான்முகனுக்கும், நெற்றிக் கண்ணனாகிய உருத்திரனுக்கும் உள்ளுறை பவனாய் ஆக்கல் தொடக்கமான தொழில்கள் நடத்துகிறவன் என்று கொண்டு சனகர் முதலான முனிவர்கள் ஏத்தும்படி இருக்கும் குறைவற்றவனாகத் திகழும் என் தலைவன்.* **எவ்வுள் கிடந்தானே** - *ஆக, இப்படிச் சிறந்த தெய்வத் திருமேனி யோடு கூடியவனாய்ப் பிறரைக்காட்டிலும் வேறுபட்டவனாய் இருந்தபோதிலும் நான்முகனுக்கு உயிர்க்குயிராய் நின்று படைத்தல் முதலிய தொழில்களை நடத்து கிறான் என்று சனகர் முதலானோர் ஏத்தும்படி இருக்கிறவன் இங்கே சாய்ந்தான்.*

*(16)*

## 117

**திங்கள் அப்பு வான்எரிகால் ஆகித் திசைமுகனார்**
**தங்கள் அப்பன் சாமிஅப்பன் பாகத் திருந்தவண்டுண்**
**தொங்கல் அப்பு நீள்முடியான் சூழ்கழல் சூடநின்ற**
**எங்கள் அப்பன் எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.**

---

1. ப்ரமாணஸித்தன்.

**117.** 2 : 5 திருந்துவண்டுண். 3 : 4 சூழ்கடல்.

**ப. ரை :** **திங்கள்** - *சந்திரனையும்,* **அப்பு வான் எரி கால் ஆகி** - *நீர், வானம், நெருப்பு, காற்று ஆகிய பருப்பொருள்கள் நான்கனையும் தனக்கு உடலாகக் கொண்டு,* **திசைமுகனார் தங்கள் அப்பன்** - *நான்முகனுக்குத் தந்தையாய்,* **சாமி அப்பன்** - *சாம வேதத்தால் விளக்கப்பெறும் முதல்வனாய்,* **பாகத்து இருந்த** - *தனது மேனியின் ஒரு பக்கத்தில் இருக்கும்,* **வண்டு உண் தொங்கல் அப்பு நீள் முடியான்** - *வண்டுகள் தேன் உண்ணும் கொன்றை மாலையையும் கங்கை நீரையும் நீண்ட சடையிலே கொண்டவனும் ஆகிய சிவபெருமான்,* **சூழ் கழல் சூட நின்ற** - *மூவுலகும் பரம்பின திருவடிகளைத் தன் தலையிலே சூடும்படி நின்ற,* **எங்கள் அப்பன்** - *எங்கள் தந்தையாய்,* **எம்பெருமான்** - *எங்கள் தலைவனாய் இருப்பவன்,* **எவ்வுள் கிடந்தான்-.**

**சி. கு:** *அப்பு - நீர்; ஈண்டுக் கங்கை நீரைக் குறித்தது.*

வியா : **ஏழாம் பாட்டு : திங்கள் இத்யாதி** - கார்ய வர்க்கத்துக்கு உபலக்ஷணமாக சந்த்ரனையும், காரணமான பூத பஞ்சகத்துக்கும் உபலக்ஷணமாக நாலையும் சொல்லி இவற்றுக்கு[1] அந்தராத்மாவாய் நிற்கிற என்றபடி. சதுர்முகனுக்கும் ஜநகனானவன். **சாமி அப்பன்** - ஸாம வேத ப்ரதிபாத்யன் ஆன காரணபூதன். **பாகத்து இத்யாதி** - வண்டுகள் மதுபாநம் பண்ணாநின்றுள்ள கொன்றை மாலையையும் கங்காஜலத்தையும் ஜடையிலே உடையனாய்த் திருமேனியில் ஏக தேசத்திலே இருக்கிற ருத்ரன், விஸ்த்ருதமான திருவடிகளைத் தலையாலே சுமக்கும்படி நிற்கிறவன். **எங்கள் இத்யாதி** - எங்களுக்கு ஜநகனுமாய் ஸ்வாமியும் ஆனவன்.

---

வி : ஏழாம் பாட்டு : **திங்கள் அப்பு வான் எரி கால் ஆகி** - *படைக்கப்பட்ட பொருள்களைக் குறிப்பதற்கு அடையாளமாகச் சந்திரனையும் உலகத் தோற்றத்திற்குக் காரணமான பருப்பொருள்கள் ஐந்தனையும் குறிப்பதற்கு அடையாளமாக நீர் முதலான நான்கனையும் சொல்லி இவற்றுக்கு உள்ளுறை உயிராய் நிற்கிற பெருமான் என்கிறார். அம்மட்டோ!* அவன், **திசைமுகனார் தங்கள் அப்பன்** - *நான்முகனுக்கும் தந்தை ஆனவன்.* **சாமி அப்பன்** - *சாமவேதத்தால் விளக்கப்பெறும் முதல்வன்.* **பாகத்து இருந்த வண்டு உண் தொங்கல் அப்பு நீள் முடியான்** - *வண்டுகள் தேன் உண்ணும் கொன்றை மாலையையும் கங்கை நீரையும் சடையிலே உடையவனாய்த் திருமேனியில் ஒரு பகுதியிலே இருக்கும் உருத்திரன்,* **சூழ் கழல் சூட நின்ற** - *உலகினை அளக்க விரிந்த திருவடிகளைத் தலையாலே சுமக்கும்படி நிற்கிறவன்.* **எங்கள் அப்பன் எம்பெருமான்** - *எங்களுக்குத் தந்தையாகவும் தலைவனாகவும் இருப்பவன்.* **எவ்வுள் கிடந்தானே-.**

### ஒப்புமைப் பகுதி

1. **திசைமுகனார் தங்கள் அப்பன்**

   *" போது தங்கு நான்முகன் மகன் - திருநாபீகமலத்திலே பிறக்கையாலே கமலாஸநனான சதுர்முகன் புத்ரன் "* — *தி. ச. வி. 72 பெ. உரை.*

   *" கமலத்தலர் அயன் - நேரே ஸர்வேஶ்வரன் பக்கலிலே பிறந்த ஜந்மத்தால் வந்த ப்ராப்தியை உடையவன் "* — *தி. வி. 86 பெ. உரை.*
   *[ஜந்மம் - பிறப்பு. ப்ராப்தி - உரிமை.]*

---

1. இவைத்துக்கு.

*" சந்தச் சதுமுகன் தன்னைப் படைத்தவன் - ஜகத்ஸ்ருஷ்டியில் வந்தால் தன்னோடொக்க விகல்பிக்கலாம்படி ஜ்ஞாந ஶக்திகளால் வந்த வைலக்ஷண்யத்தையுடைய சதுர்முகனை ஸ்ருஷ்டித்தவன் "*

*பெரி. தி. 2;5:8 ம. மா. மு. உரை.*

*[ஜகத் ஸ்ருஷ்டி - உலகு படைத்தல். விகல்பித்தல் - போலியாக ஒப்பக் கருதுதல். வைலக்ஷண்யம் - தன்னேற்றம்.]*

2. பாகத்து இருந்த வண்டு உண் தொங்கல் அப்பு நீள்முடியான்

*" வலத்தனன் திரிபுரம் எரித்தவன் இடம்பெறத் துந்தித்*
*தலத்து எழுதிசைமுகன் படைத்த நல்லுலகமும் தானும் "*

*" த்ரிபுரதஹநத்தாலே ஸஞ்ஜாதாபிமாநியான ருத்ரன் திருமேனியில் வல வருகைப்பற்றி லப்தஸ்வரூபனாய் இருக்கும்...ஸ்தநந்தய ப்ரஜை தாய் முலையை அகலில் நாக்கு ஒட்டுமா போலே, திருநாபிகமலத்தை விடில் (நான்முகன்) தன்ஸத்தை இல்லையாம்படி இருக்கை. இப்படி பின்னை ஸர்வ காலமும் இவர்கள் இருப்பார்களோ? என்னில், ஆபத்துக்களிலே திரு மேனியிலே இடங்கொடுக்கும். அது மஹாகுணமாகையாலே ஆழ்வார்கள் எப்போதும் ஒக்க அருளிச்செய்துகொண்டு போருவர்கள். ஸாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கநக்க உண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே; அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஒரு கலகங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கி இருந்து, காலம் தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார் பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமா போலே "*  *தி. வா. மொ. 1:3:9-36*

*[த்ரிபுரதஹநம் - முப்புரம் எரித்தல். ஸஞ்ஜாதாபிமாநி - செருக்குடைய வனாய் ஆகியவன். லப்த ஸ்வரூபன் - தன் இயற்கைத் தன்மையினைப் பெற்றவன். ஸ்தநந்தய ப்ரஜை - முலையுண் குழவி. ஸத்தை - உளதாம் தன்மை. ஸாமந்தர் - உயர் அரசு அதிகாரிகள்; குறுநில மன்னர்கள். ப்ராப்தி - உரிமை.]* (17)

## 118

**முனிவன் மூர்த்தி மூவராகி வேதம் விரித்துரைத்த**
**புனிதன் பூவை வண்ணன்அண்ணல் புண்ணியன் விண்ணவர்கோன்**
**தனியன் சேயன் தான்ஒருவன் ஆகிலும் தன்னடியார்க்கு**
**இனியன் எந்தை எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.**

ப. ரை : முனிவன் - உலகங்களை உளவாக்க மனத்தில் நேர்ந்து கொண்டவனும், மூர்த்தி மூவராகி - பிரமன், விட்டுணு, சிவன் என்று மும்

---

**118.** 2 : 3 வண்ணனெண்ணில்.

மூர்த்திகளாக நிற்பவனும், **வேதம் விரித்து உரைத்த புனிதன்** - வேதத்தின் விழுப் பொருளைத் தெளிவாக வெளியிட்ட தூயவனும், **பூவை வண்ணன்** - காயாம்பூப் போலும் நிறத்தையுடையவனும், **அண்ணல்** - எல்லார்க்கும் தலைவனும், **புண்ணியன்** - வடிவுகொண்ட புண்ணியமானவனும், **விண்ணவர் கோன்** - அமரர் களுக்குத் தலைவனும், **தனியன்** - ஒருவனும், **சேயன்** - தவம் புரிவோர்க்கும் அறியவொண்ணாதவனும் ஆக, **தான் ஒருவனாகிலும்** - இப்படித் தான் இணை யற்றவனாக இருந்தபோதிலும், **தன் அடியார்க்கு இனியன்** - தன்னை வணங்கு வோர்க்கு இனியனாய் இருப்பவனும், **எந்தை** - எனக்குத் தந்தையாய் இருப்பவனுமான, **எம்பெருமான்** - இறைவன், **எவ்வுள் கிடந்தான்**-.

**சி. கு:** *மூர்த்தி மூவராகி என்பது இகரவீற்று வினையெச்சமன்று;* இகர விகுதியோடு வந்த வினைமுதலாகிய பெயர், நெய்யுண்ணி என்பது போல.

வியா : **எட்டாம் பாட்டு : முனிவன்** - இதடையக் கரண களேபரங் களை இழந்து போக மோக்ஷ சூந்யமாய் கார்யாகாரம் அழிந்து கிடந்த அன்று **"பஹுஸ்யாம்"** என்று மநநம் பண்ணினவன், பின்பு ப்ரஹ்மாதிகளுக்கு அந்தராத் மாவாயும் ஸ்வேந ரூபேணவும் நின்று ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகிறவன். வேதார்த்தத்தை வ்யக்தம் ஆம்படி வெளியிட்டுச் சொன்னவன். அதாவது வேதோபப்ரும்ஹணமான ஸ்ரீகீதையை அருளிச்செய்தபடி. **புனிதன் - ஸுஹ்ருதம் ஸர்வ பூதாநாம்"** என்கிறபடியே ஸ்வப்ரயோஜந நிரபேக்ஷமாகப் பரஹிதமே சொல்லுகையால் வந்த சுத்தியைச் சொல்லுகிறது. **பூவை வண்ணன்** - உபதேசித்த ஹிதம் கிடக்க அஹிதத்தைச் சொல்லிலும் விட ஒண்ணாத[1] வடிவை உடையவன். **அண்ணல்** - ஸ்வாமி. **புண்ணியன்**- பரம தார்மிகன். **விண்ணவர் கோன்** - அயர்வறும் அமரர்கள் அதிபதி. **தனியன்** - அவர்களில் வ்யாவ்ருத்தன் ஆனவன். **சேயன்** - அவர்களில் நெடுவாசியை உடையவன். இப்படி தான்

---

வி : எட்டாம் பாட்டு : **முனிவன்** - இவ்உயிர்க் கூட்டம் அடைய உடல் உறுப்புகள் ஆகியவற்றை இழந்து இன்ப நுகர்ச்சியும் வீடுபேறும் இன்றி உரு மாய்ந்து கிடந்த அன்று, **"நானே பலவாகக் கடவேன்"** *(சாந். 6:2:3)* என்று திருவுள்ளம் கொண்டவன். **மூர்த்தி மூவராகி** - பின்பு நான்முகன் முதலானோர்க்கு உள்ளுறை உயிராக இருந்தும், தானான தன்மையிலும் நின்று ஆக்கல் முதலானவற்றைச் செய்கிறவன். வேதப் பொருளை வெளிப்படையாகத் தெரியும்படி வெளியிட்டுச் சொன்னவன். அஃதாவது வேத விளக்கமான சீரார் கீதையை அருளிச்செய்தவன். **புனிதன்** - இதனால், **"எல்லா உயிர்க்கும் நண்பன்"** *(கீதை 18:66)* என்பதற்கு ஏற்பத் தன்னலம் கணிசியாமல் பிறர் நலமே கருதிச் சொல்லுகையால் வந்த தூய்மை சொல்லப்படுகிறது. **பூவை வண்ணன்** - எடுத்துச் சொல்லிய நன்மை ஒருபுறம் கிடக்கத் தீமை சொன்னாலும் விட ஒண்ணாத வடிவை உடையவன். **அண்ணல்** - தலைவன். **புண்ணியன்** - மேலான அறவோன். **விண்ணவர் கோன்** - அயர்வறும் அமரர்கள் அதிபதி. **தனியன்** - அவர்களைக்காட்டிலும் தனித்து நிற்பவன். **சேயன்** - அவர்களைக் காட்டிலும் மிகவும் வேறுபாடு உடையவன். **தான் ஒருவன் ஆகிலும் தன் அடியார்க்கு இனியன்** - இப்படித் தான் இணையற்றவனாய் இருந்தானே ஆகிலும்

---

1. உண்ணாத.

**அத்விதீயனாய் இருந்தானே ஆகிலும் தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு இனியவன். எனக்கு ஜநகனுமாய் ஸ்வாமியும் ஆனவன்.**

---

*தன்னை நச்சினார்க்கு இனியன்.* **எந்தை எம்பெருமான்** *- எனக்குத் தந்தையுமாய்த் தலைவனுமாய் ஆனவன்.* **எவ்வுள் கிடந்தானே-.**

**ஒப்புமைப் பகுதி**

1. முனிவன்

*" முனிமாப் பிரமம் முதல் வித்தாய் - ஸங்கல்பிக்கிற பர ப்ரஹ்மம் ஆகிற பரம காரணமாய். முனி - துறந்தவன். தேசாந்தரம் போன ப்ரஜையைத் தாய் நினைக்குமா போலே 'இவை என் பட்டன!' என்று திருவுள்ளத்தாலே நினைத்து, பரப்ரஹ்மமான தானே த்ரிவித காரணமுமாய் "*
*தி. வா. மொ. 8:10:7-36*

*[பரப்ரஹ்மம் - பரம்பொருள். ஸங்கல்பித்தல் - மனத்தில் கருதுதல். தேசாந்தரம் - அயல்நாடு. த்ரிவிதகாரணம் - மூவகைக் காரணம்.]*

2. மூர்த்தி மூவர் ஆதல்

*" தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனிமுதலை - ப்ரஹ்ம ருத்ரர்கள் நடுவே அவதரித்த தானும். ப்ரஹ்மருத்ரர்கள் முதலான கார்யவர்க்கமுமாய்க் கொண்டு விஸ்த்ருதமான அத்விதீயகாரணமானவனை, சேதநாசேதநங்கள் அடங்க அழிந்தபோது தன் திருமேனியிலே சக்த்யவஸ்த்த ப்ரபை போலே ஸூக்ஷ்மரூபேண இவை கிடக்கும்படி ஏறிட்டுக்கொண்டு நோக்கி, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே தன் பக்கலினின்றும் விபக்தமாக்கி, அண்டஸ்ருஷ்டியளவும் தானே நடத்தி, அண்டாந்தர்வர்த்திகளில் ப்ரதாநரான ப்ரஹ்மாதிகளை உண்டாக்கி, ஸ்வேநரூபேண நின்று பாலந கர்மத்தைப் பண்ணியும், ப்ரஹ்மருத்ரர்களுடைய சரீரத்தையும் ஆத்மாவையும் அதிஷ்ட்டித்துக் கொண்டு நின்று ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ணியும், அவர்கள் செய்கிற கார்யங்களோடு தான் செய்கிற கார்யங்களோடு வாசியற எல்லாம் தானே நடத்துகிறவனை "* *தி. வா. மொ. 8:8:4-36*

*[கார்யவர்க்கம் - உண்டாக்கப்பட்ட தொகுதி. விஸ்த்ருதம் - மலர்ந்தது. அத்விதீய காரணம் - தனிமுதல். சேதந அசேதநங்கள் - அறிவுடைப் பொருள்களும் அறிவு இல் பொருள்களும். சக்த்யவஸ்த்த ப்ரபை - நீறு மூடிய நெருப்பு. ஸூக்ஷ்மரூபேண - நுண்ணிய வடிவமாக. விபக்தமாக்கி - பிரித்து. அண்டாந்தர்வர்த்திகள் - அண்டத்தின் உள்ளே இருப்பவர்கள். ப்ரதாநர் - முதன்மையானவர். ஸ்வேநரூபேண - தானானதன்மையில். பாலநம் - காத்தல். அதிஷ்ட்டித்து நிற்றல் - அடுத்து நிற்றல்.]*

3. புண்ணியன்

*" புண்ணியனை வரக்கூவாய் "*

*" புண்ணியன் - பிறர் நோவுபடப் பொறுக்கமாட்டாதவன்... "*
*நாச். தி. 5:4 பெ. உரை.*
*(18)*

**பந்தி ருக்கு மெல்விரலாள் பாவை பனிமலராள்**
**வந்தி ருக்கும் மார்வன்நீல மேனி மணிவண்ணன்**
**அந்த ரத்தில் வாழும்வானோர் நாயக னாய்அமைந்த**
**இந்தி ரற்கும் தம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.**

**ப. ரை :** பந்து இருக்கும் மெல் விரலாள் - *பந்து தங்கிய மெல்லிய விரல்களை உடையவளும்,* பனி மலராள் - *குளிர்ந்த தாமரை மலரில் இருப்பவளும் ஆகிய,* பாவை - *திருமகள்,* வந்து இருக்கும் மார்வன் - *வந்து உறையும் மார்பை உடையவனும்,* நீல மேனி மணிவண்ணன் - *நீலமான நிறத்தையுடைய மணி போலும் இயல்பு உடையவனும்,* அந்தரத்தில் வாழும் - *துறக்கத்தில் வாழ்கின்ற,* வானோர் நாயகனாய் அமைந்த - *தேவர்களுக்குத் தலைவனாய் உள்ள,* இந்திரற்கும் தம் பெருமான் - *இந்திரனுக்கும் தலைவனாக இருப்பவனும் ஆன பெருமான்,* எவ்வுள் கிடந்தான்-.

**சி. கு :** *அந்தரம் - துறக்கம். வானோர் நாயகன் - இந்திரன்.*

**வியா :** ஒன்பதாம் பாட்டு: **பந்து இருக்கும்** - ஒரு நாளும் பிரிவால் வரும் வ்யஸநம் இன்றிக்கே நித்ய ஸம்ஶ்லேஷத்தாலே கையும் பந்துமாய், அதுதான் பொறாமை சிவந்து ஸுகுமாரமான விரலை உடையவள்; நிருபாதிக ஸ்த்ரீத்வத்தை உடையவள்; குளிர்ந்த[1] தாமரைப் பூவைப் பிறந்தகமாக உடையவள். **வந்து இருக்கும்** - அப்பூ நெரிஞ்சி முள்ளாய் அடி கொதித்து வந்து, "அகல கில்லேன்" என்று இருக்கும்படி மார்வு படைத்தவன். நீலமான நிறத்தையுடைய மணி போன்ற வடிவை உடையவன். **அந்தரத்தில் இத்யாதி** - இது ஸர்வேஶ்வரனுக்கு விசேஷணமாதல்; அன்றிக்கே, தேவர்களுக்கு நாதனாய்ச் சமைந்த இந்த்ரனுக்கு

---

**வி :** ஒன்பதாம் பாட்டு : பந்து இருக்கும் மெல் விரலாள் பாவை பனி மலராள்- *திருமகள் ஒருநாளும் பிரிவால் வரும் வருத்தம் இன்றிப் பெருமானோடு நிலையாகக் கலந்து இருக்கிறாள்; அந்நிலைத்த சேர்க்கையினால் கவலை யின்றிக் கையும் பந்துமாய் உள்ளாள்; அப்பந்தினைப் பிடித்திருத்தலைப் பொறுக்கமாட்டாது அவள் விரல்கள் சிவந்தன; அத்தகைய மென்மையான விரலை உடையவள்; இயற்கையான பெண்மை உடையவள்; குளிர்ந்த தாமரைப் பூவைப் பிறந்தகமாக உடையவள்.* வந்து இருக்கும் மார்வன் - *அப்பூ நெரிஞ்சி முள்ளாய் அடிகொதித்து வந்து, "அகல கில்லேன்" (தி. வா. மொ. 6:10:10) என்று இருக்கும் மார்பு படைத்தவன்.* நீலமேனி மணி வண்ணன் - *நீலமான நிறத்தையுடைய மணி போன்ற வடிவை உடையவன்.* அந்தரத்தில் வாழும் வானோர் நாயகனாய் அமைந்த இந்திரற்கும் தம்பெருமான் - *"அந்தரத்தில் வாழும் வானோர் நாயகனாய்" என்பது இறைவனுக்கு அடைமொழி ஆகும்; அல்லது தேவர்களுக்குத் தலைவனாய்ச் சமைந்த இந்திரனுக்கு அடைமொழி என்றும்*

---

1. குளுந்த.

**என்னவும் ஆம். அவனும்கூடத் தன்னைப் பற்றித் தன் ஐஶ்வர்யத்தை நடத்தும்படி இருக்கிறவன்.**

---

**கொள்ளலாம். அவ்இந்திரனும்கூடத் தன்னைப் பற்றித் தன் உடைமையை நடத்தும்படி இருக்கிறவன்.**

**ஒப்புமைப் பகுதி**

**1. பனிமலராள் வந்திருக்கும் மார்வன்**

*" மலர்மகள் விரும்பும் - புஷ்பத்தில் பரிமளம்போலே புஷ்பத்தை இருப்பிடமாக உடையளாய், அதில் பரிமளந்தான் ஒரு வடிவு கொண்டாற்போலே இருப்பாளாய், நாட்டார் பரிமளத்தை விரும்புவர்களாகில், பரிமளந்தான் 'தண்ணீர் தண்ணீர்' என்னப் பிறந்தவன் " திரு. வா. மொ. 1:3:1-36*

*" மானேய்நோக்கி மடவாளை மார்பிற் கொண்டாய் மாதவா "*

*" மார்பிற்கொண்டாய் மாதவா - மாம்பழத்தோடு ஒரு ஸம்பந்தம் இன்றிக்கே இருக்கச்செய்தே அப்பேரை தரிக்குமாபோலேயிறே இவனை ஒழிய ஸ்ரீமான் என்னும் பேரை தரிக்கிறவர்கள். அங்ஙனன்றிக்கே, 'விஷ்ணு வக்ஷஸ்த் தல ஸ்த்தயா' என்கிறபடியே, அவள் திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகையாலே 'மாதவன்' என்னும் திருநாமத்தை உடையவனே! " திரு. வா. மொ. 1:5:5-36*

*" மைய கண்ணாள் மலர்மேல் உறைவாள் உறைமார்பினன் "*

*" உறைமார்பினன் - பூவிலும் கூசி அடியிடுமவள் பொருந்தி வர்த்திக்கும் மார்வு படைத்தவன். ஸ்ரீஜநகராஜன் திருமகள் பெருமாளைக் கைப்பிடித்த பின்பு ஸ்ரீமிதிலையை நினையாதாப்போலே, இவளும் இவன் மார்வில் சுவடறிந்த பின்பு தாமரையை நினையாதபடி; 'நோபஜநம் ஸ்மரந்நிதம் சரீரம்' என்று முக்தர் ஸம்ஸார யாத்ரையை ஸ்மரியாதாப்போலே, இவள் பூவை ஸ்மரியாதபடி " திரு. வா. மொ. 4:5:2-36*

*" அலர்மேல் மங்கை உறை மார்பா "*

*" உறை மார்பா - இவள் பூவைக் காணாதவோபாதி திருமார்வுக்கு அவ்வருகு அவயவங்களைக் காணாள். மற்றுள்ள அவயவங்கள் குமர் கிடந்து போம் அத்தனை " திரு. வா. மொ. 6:10:10-36*

**3. மணிவண்ணன்**

*பாட்டு 100இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.* (19)

## 120

**இண்டை கொண்டு தொண்டர்ஏத்த எவ்வுள் கிடந்தானை**
**வண்டு பாடும் பைம்புறவின் மங்கையர் கோன்கலியன்**
**கொண்ட சீரால் தண்டமிழ்செய் மாலைஈர் ஐந்தும்வல்லார்**
**அண்ட மாள்வ தாணைஅன்றேல் ஆள்வர் அமர்உலகே.**

ப. ரை : **இண்டை கொண்டு** - *பூமாலைகளை ஏந்திச் சென்று,* **தொண்டர் ஏத்த** - *அடியார்கள் வணங்கும்படியாக,* **எவ்வுள் கிடந்தானை** - *திருஎவ்வுளூரிலே சாய்ந்தருளியவனைக் குறித்து,* **வண்டு பாடும் பைம் புறவின் மங்கையர் கோன் கலியன்** - *வண்டுகள் களித்து முரலும் பரந்த சோலைகளை உடைய திருமங்கை நாட்டுக்குத் தலைவன் ஆன கலியன் என்னும் பெயருடைய ஆழ்வார்,* **கொண்ட சீரால்** - *நெஞ்சிலே கொண்ட இறைவன் திருக்குணங்களாலே,* **தண் தமிழ் செய் மாலை ஈர் ஐந்தும் வல்லார்** - *அழகிய தமிழில் செய்த சொல்மாலை ஆகிய இப் பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர்,* **அண்டம் ஆள்வது ஆணை** - *உலகங்களை எல்லாம் ஆட்சி புரிவது திண்ணம்;* **அன்றேல் அமர் உலகு ஆள்வர்** - *இவற்றை வேண்டா எனில் திருநாட்டை ஆளப் பெறுவர்.*

**சி. கு :** *அமர் உலகு - அமரர் உலகு என்பதன் தொகுத்தல் விகாரம்; 'அர்' தொக்கது.*

**வியா : பத்தாம் பாட்டு : இண்டை இத்யாதி** - பூமாலைகளைப் பணிமாறி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இங்கே அடிமை செய்து வாழலாம்படி திரு எவ்வுளிலே கிடந்தவனைக் கவி பாடிற்று. முக்தர் ஸாம காநம் பண்ணுமாப் போலே மதுபாந மத்தமாய் வண்டுகள் பாடாநின்றுள்ள பரந்த பர்யந்தத்தை உடைத்தான திருமங்கைக்கு ராஜாவான ஆழ்வார். **கொண்ட சீரால்** - சீர் என்று கவிக்கு அலங்காரமாய் இருப்பது ஒன்று உண்டு; அத்தைச் சொல்லிற்று ஆகவும் ஆம். அன்றிக்கே, இங்கே வந்து சாய்ந்தபடியாலே பகவத்குணங்கள் நெஞ்சிலே ஊற்று இருந்து சொல்லி அல்லது நிற்க ஒண்ணாதபடி அவை ப்ரேரிக்கப் பாடின மாலை என்னவும் ஆம். இது கற்றார் அண்டத்தை ஆளுகை நிஶ்சிதம். **அன்றேல்** - "அவனைப் பற்றியும் இத்தைப் பெறும் அத்தனையோ" என்று விரக்தரானார்கள் ஆகில், அவர்கள் ஆளுமது பரமபதம்.

---

வி : பத்தாம் பாட்டு : **இண்டை கொண்டு தொண்டர் ஏத்த எவ்வுள் கிடந்தானை** - *பூமாலைகளைப் பணிமாறிச்*[1] *சீரார் வைணவர்களுக்கு இங்கே அடிமை செய்து வாழலாம்படி திருஎவ்வுளிலே கிடந்தவனைக் குறித்துப் பாசுரம் பாடினார். யார் என்னில்,* **வண்டு பாடும் பைம் புறவில் மங்கையர் கோன் கலியன்** - *வீடுற்றார் சாம வேதத்தைப் பாடுவது போலே தேன் உண்டு களித்த வண்டுகள் பாடுகின்ற பரந்த புறப்பகுதிகளை உடைத்தான திருமங்கைக்கு அரசரான ஆழ்வார்.* **கொண்ட சீரால்** - *சீர் என்பது பாட்டுக்கு அழகு தரும் ஓர் உறுப்பு; அதனைச் சொல்கிறார் என்று கொள்ளலாம். அல்லது, இங்கே வந்து சாய்ந்தபடியாலே இறைப்பண்புகள் நெஞ்சிலே ஊற்று இருந்து சொல்லி அல்லது நிற்க ஒண்ணாதபடி வடிம்பிட்டன*[2]*; அப்படி வடிம்பிடுதலால் பாடின மாலை என்றும் கூறலாம்.* **தண் தமிழ் செய் மாலை ஈர் ஐந்தும் வல்லார் அண்டம் ஆள்வது ஆணை** - *இது கற்றார் அண்டத்தை ஆளுகை திண்ணம்.* **அன்றேல் ஆள்வர் அமர் உலகே** - *"அவனைப்பற்றியும் இதனைத்தான் பெறுவதோ" என்று எண்ணும் பற்றற்றவர்கள் ஆகில், அவர்கள் ஆள்வது திருநாடு.* *(20)*

---

1. பணிமாறல் - படைத்தல். 2. வடிம்பிடுதல் - தூண்டுதல்.

## இரண்டாம் பத்து - மூன்றாம் திருமொழி - விற்பெரு விழவும்

பிர : ஆஶ்ரித விரோதி நிரஸந சீலனாய், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷைக ஸ்வபாவனாய், ஆஶ்ரித ஸுலபனாய், இதர விஸஜாதீயனாய் இருக்கிற ஸர்வேஶ்வரன், இக்குணங்கள்தான் தர்மி அநுவர்த்திக்கிறவோபாதி எங்கும் அநுவர்த்திக்குமவையிறே. இப்படி இருக்கிறவன், மநுஷ்யராய் இருப்பார் புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு ஆஶ்ரயிக்கலாம்படி வந்து கிடந்த மாத்ரம் அன்றிக்கே, ஒரு திர்யக்கு இப்பூவின்செவ்வி அழியாதபடி திருவடிகளிலே பணிமாற வேணும் என்று இடர் பட, அவ்இடரைத் தீர்க்கைக்காக அதிடர் பட்ட மடுவின்கரையிலே அரை குலையத் தலை குலைய வந்து விழுந்து, அத்தை ஆற்றி இன்னமும் இப்படி இடர் படுவாருண்டோ? என்று சாய்ந்தருளினான், கண்டேன் என்கிறார்.

---

தோ : அடியார் பகையினைக் கிழங்கெடுப்பவனாய், அடியாரோடு கூடி இருத்தலையே இயற்கையாகக் கொண்டவனாய், அடியார்க்கு எளியவனாய், பிற இனங்களினின்றும் வேறுபட்டவனாய் இருப்பவன் எம்பெருமான். அவன் இத்தகு குணங்களோடு திகழும் தனது திருவல்லிக்கேணி இருப்பினைக் காட்டிக் கொடுத்தான். ஆழ்வார் இக்குணங்களைக் கீழ்த் திருமொழியில் துய்த்தாரே இங்கும் துய்க்க வேண்டுமோ என்னில், இக்குணங்கள்தாம் தங்களைக் கொண்டிருக்கும் பெருமான் தொடர்ந்து வருவது போலத் தாமும் இடங்கள்தோறும் தொடர்ந்து வருவன ஆகும். அதனாலே இங்கும் அவற்றில் ஈடுபடுகிறார். இப்படி இருப்பவன் மானிடராய் இருப்பார் மலர் முதலிய வழிபாட்டுப் பொருள்களைக் கொண்டு வணங்குவதற்கு ஏற்ப வந்து கிடக்கிறான்; அதுமட்டும் அல்லாமல், நீர்நிலையில் முதலையால் பற்றப்பட்ட ஒரு விலங்கு[1] இப்பூவில் உள்ள செவ்வி அழியாதபடி பெருமான் திருவடிகளிலே இதனைப் பணிமாற[2] வேண்டும் என்று கையிற் கொண்ட தாமரைப் பூவோடு இடர்ப்பட்டது; அவ்இடரைத் தீர்க்கைக்காக அஃது இடர்ப்பட்ட மடுவின் கரையிலே அரை குலையத் தலை குலைய வந்து[3] விழுந்தான்; அவ்யானையின் துயர் நீக்கி அதனை ஆற்றினான். அத்துடன் அமையாதே இன்னமும் இப்படி இடர்ப் படுவாருண்டோ? என்று சாய்ந்தருளினான். அவனைக் கண்டேன் என்கிறார்.

---

1. விலங்கு - ஈண்டுக் கயேந்திரன் என்னும் யானையைக் குறிக்கும். 2. பணி மாறல் - படைத்தல்.

3. அரைகுலையத் தலை குலைய வருதல் - அரையில் உடுத்திய ஆடையும், தலையில் கட்டிய முடியும் அவிழ்ந்து போகும்படி ஓடி வருதல் என்பது நேரான் பொருள். விரைந்து பதறி நடத்தல் என்பது குறிப்பு.

விற்பெரு விழவும் கஞ்சனும் மல்லும்
 வேழமும் பாகனும் வீழச்
செற்றவன் தன்னைப் புரம்எரி செய்த
 சிவன்உறு துயர்களை தேவைப்
பற்றலர் வீயக் கோல்கையிற் கொண்டு
 பார்த்தன்தன் தேர்முன்நின் றானைச்
சிற்றவை பணியால் முடிதுறந் தானைத்
 திருவல்லிக் கேணிக்கண் டேனே.

ப. ரை : வில் பெரு விழவும் - வில் வேள்வி என்னும் கொண்டாட்டமும், கஞ்சனும் - கம்சனும், மல்லும் - சாணூரன், முட்டிகன் என்னும் மல்லர்களும், வேழமும் பாகனும் - குவலயாபீடம் என்னும் யானையும் அதன் பாகனும் ஆகிய எல்லாம், வீழ - விழும்படி, செற்றவன் தன்னை - அழித்தவனை, புரம் எரி செய்த சிவன் உறுதுயர் - திரிபுரம் எரித்த உருத்திரன் அடைந்த வசைத்துன்பத்தை, களை தேவை - களைந்தொழித்த தலைவனை, பற்றலர் வீயக் கோல் கையில் கொண்டு - பகைவர் மாளும்படி முட்கோலைக் கையிலே பிடித்துக்கொண்டு, பார்த்தன் தன் தேர்முன் நின்றானை - அருச்சுனனது தேர்முன்னே தேரோட்டியாய் நின்றவனை, சிற்றவை பணியால் முடி துறந்தானை - சிறிய தாய் ஆகிய கைகேயிதன் சொல்லாலே முடியினைத் துறந்த பெருமானை, திருவல்லிக்கேணிக் கண்டேன் - திருவல்லிக்கேணியிலே காணப்பெற்றேன்.

சி. கு : களை தேவு - வினைத் தொகை. சிற்றவை - சிறிய தாய்; அவ்வை - தாய். திருவல்லிக்கேணி - இது சென்னை நகரத்துள் இலங்கும் விண்ணகரம். பெருமான் பார்த்தசாரதி; பிராட்டி உருக்குமணி.

இத்திருமொழி விளம் மா விளம் மா விளம் விளம் மா என்னும் வாய்பாட்டில் அமைந்த எழுசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

வியா : முதற் பாட்டு : விற் பெரு விழவு ஆயிற்று; சத்ரு நிரஸநம் பண்ண நினைக்கிறான் ஆகையாலே பெருக்கக் கோலினான் ஆயிற்று; அத்தைக் கோலின கம்ஸனும், அவனுக்கு பலமாய் மலை துள்ளினாப் போலே பெரிய கிளர்த்தி யோடே[1] கூடின மல்லவர்க்கமும், அவர்கள் கண்பார்க்கிலும்[2] கண்பாராதே இடையற

---

வி : முதற்பாட்டு : விற் பெரு விழவும் கஞ்சனும் மல்லரும் வேழமும் பாகனும் - சிறு விழா அன்று; விற் பெரு விழா. பகைவனை அழிக்க நினைக்கிறான் ஆகையாலே பெருக்கக் கோலினான்; அதனைக் கோலிய கம்சனும், அவனுக்கு வலிமையாய் அமைந்த மலை துள்ளினாற் போலே பெரிய கிளர்த்தியோடு[3] கூடின மல்லர்கூட்டமும், அம்மல்லர்கள் இரக்கம் கொள்ளினும் கண்பாராதே

---

**121.** 1 : 4 வில்லும்.

1. கிளற்றியோடே. கிளத்தியோடே. 2. பார்க்கிலும்.
3. கிளர்த்தி - கிளர்ச்சி.

வீசும்படி மதிப்பித்து வழியிலே நிறுத்தின ஆனையும், அத்தைத் தள்ளினாலும் அது தன்னை உயிர்ப்பு உள்ளது போலே நடத்த வல்ல பாகனும். **வீழச் செற்றவன் தன்னை** - ஏகோத்யோகத்திலே நிரஸித்தாப் போலே வினை செய்த சடக்கு. **புரம் இத்யாதி** - த்ரிபுர தஹநாபதாநத்தாலே ஸஞ்ஜாதாபிமாநன்[1] ஆன ருத்ரன் பிதாவுமாய் லோக குருவுமாய் இருக்கிறவன் தலையை அறுத்துப் பாதகியாய் இருக்கும்; "மதிப்பனாய் இருக்கிறவன் எளிவரவுபட ஒண்ணாது"[2] என்று அத்தைப் போக்கி, அத்தாலே லோகத்துக்கு எல்லாம் தானே ஆஶ்ரயணீயன் என்னும் இடத்தை வெளியிட்டவன். **"தத்ர நாராயண: ஶ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித: விஷ்ணு ப்ரஸாதாத்"** ஸர்வேஶ்வரன் ப்ரஸாதத்தாலே. **"ஸுஶ்ரோணி"** அவனைக் கிட்டுகையாலே உன் வடிவழகு ஸபலமாகப் பெற்றதிறே என்கிறான். **பற்றலர் இத்யாதி** - பற்றலர் உண்டு சத்ருக்கள், அவர்கள் முடிந்து போம்படி. "ஆயுதம் எடுக்க ஒட்டோம்" என்றவாறே குதிரைகளை நடத்தும் கோலைக் கையாலே கொண்டு. **பார்த்தன்தன் தேர் முன் நின்றானை** - ரதியைச் சீறினால் ஸாரதியையிறே அழியச்செய்வது. அவனைப் பின்னே இட்டுத் தன்னை அம்புக்கு இலக்காக்கி நின்றவனை. **சிற்றவை பணியால் முடி துறந்தானை** - மாற்றுத்தாய் சொன்ன வார்த்தைக்காக, ப்ராப்தமாய் வருகிற முடியை ஸந்யஸித்தவனை.

---

*இடையற வீசும்படி மதிப்பித்து*[3] *வழியிலே நிறுத்திய ஆனையும், அதனைத் தள்ளினாலும்*[4] *அது தன்னை உயிர்ப்பு உள்ளது போலே நடத்தவல்ல பாகனும்.* **வீழச் செற்றவன் தன்னை** - *வீழும்படி செற்றான். அவற்றை எல்லாம் ஒரே முயற்சியில் அழித்தாற்போலே தோற்றியது, அவ்வினை செய்த சடக்கு*[5]. **புரம் எரிசெய்த சிவன் உறுதுயர் களை தேவை** - *முப்புரம் எரிசெய்த அப்பெருஞ் செயலால் மதிப்பனாய் விளங்கினான் உருத்திரன்; அவன் தனக்குத் தந்தையாகவும், உலகிற்கு ஆசானாகவும் இருக்கும் பிரமன் தலையை அறுத்துத் தீவினை புரிந்தான். பெருமான், "மதிப்பனாய் இருப்பவன் எளிவரவுபட ஒண்ணாது" என்று அத்தீவினையைப் போக்கினான்; அதனாலே உலகிற்கு எல்லாம் தானே வணங்கத்தக்கவன் என்னும் இடத்தை வெளியிட்டான்.* **"அங்குத் திருமகள் கேள்வனாகிய நாராயணன் என்னால் இரக்கப்பட்டான். அழகிற் சிறந்தவளே! விட்டுணுவின் அருளால் அம்மண்டை ஓடு ஆயிரக்கணக்கான துண்டுகளாக வெடித்துக் கனவில் கிடைத்த பணம் போலப் போயிற்று"** *(மா. பு. 182) என்பது சிவன் கூற்று. தேவி என்னாமல், "அழகிற் சிறந்தவளே" (மா. பு. 182) என்று விளிப்பதால், அவனைக் கிட்டுகையாலே உன் வடிவழகு பயன் உடையது ஆயிற்று என்கிறான்; அஃதாவது உனக்கு ஏற்ற கணவனாக ஆனேன் என்கிறான் என்பது போதரும்.* **பற்றலர் வீய** - *பற்றலர் - பகைவர்கள்; அப்பகைவர்கள் முடிந்து போகுமாறு.* **கோல் கைக்கொண்டு** *"படைக்கலம் எடுக்க ஒட்டோம்" என்றவாறே குதிரைகளை நடத்தும் கோலைக் கையாலே கொண்டு.* **பார்த்தன்தன் தேர் முன் நின்றானை** - *தேரூரும் வீரனைச் சீறினால் தேரோட்டியையே அழியச் செய்வர். அதனை அறிந்தும் அருச்சுனனைப் பின்னே இட்டுத் தன்னை அம்புக்கு இலக்காக்கி நின்றான்; அப்படி நின்றவனை.* **சிற்றவை பணியால் முடி துறந்தானை** - *மாற்றுத்தாய் சொன்ன சொற்களுக்காக உரிமையாய் வருகிற முடியை வேண்டா என்று விடுத்தான்; அப்படி விடுத்தவனை.*

---

1. ஸஜ்ஞாதாபிமாநி. 2. உண்ணாது.
3. மதிப்பித்தல் - மதம் ஊட்டுதல். 4. தள்ளுதல் - வீழ்த்துதல். 5. சடக்கு - விரைவு.

**"ந நூ நம் மம கைகேயி".** "சக்ரவர்த்தி வார்த்தை சொல்லமாட்டாமை இருக்கிறார் அத்தனை; உம்முடைய தம்பிக்கு ராஜ்யத்தைக் கொடுத்தார்[1]; உம்மைக்காட்டேறப் போகக் காணும் அவர் நினைத்து இருப்பது" என்று சக்ரவர்த்தி கருத்தைச் சொல்ல; அத்தைக் கேட்டு, "நடுவில் ஆச்சி![2] திருவடிகளிலே அழகிதாக சுஶ்ரூஷித்தோம் என்று இருந்தோம். நம்பக்கல் ஒரு குணம் உண்டாக நினைத்து இராமையிறே தாம் போகச் சொல்லாதே[3] அய்யர்[4] கருத்தாக அருளிச்செய்தது" என்று "அய்யரோபாதியாகவோ[5] உம்மை நினைத்து இருப்பது" அவரை ஈஶ்வரராகவும் உம்மை ஈஶ்வரதரையாகவுமிறே நினைத்திருப்பது" என்றாரிறே.

**விற் பெரு விழவு இத்யாதி** - விரோதி வர்க்கத்தைக் கிழங்கு எடுக்குமவனாய், ஈஶ்வராபிமாநிகளுக்கும் இடர் வந்தால் போக்குமவனுமாய், தனக்கு ஸ்நேஹிதர்[6] ஆனார்க்காகத் தன்னை அழிய மாறுமவனாய்ப் போலியான ஸ்நேஹிகளுக்கும் ஏவிற்றுச்[7] செய்யுமவனும் ஆனவனைத் திருவல்லிக்கேணியிலே காணப்பெற்றேன் என்கிறார்.

---

"கேகயமன்னன் திருமகளாரே, எனக்குக் கட்டளையிட உரிமை மிக்கவராய் விளங்கும் தாங்கள் என்னிடம் பெருந்தன்மை உண்டு என்பதைச் சிறிதும் எதிர்பாராது இருந்துவிட்டீர். இக்காரணத்தால் சக்கரவர்த்தியாரைத் தாங்கள் வேண்டியருளினீர்" (*ரா. அ. 19:24*) என்பது இராமன் கூற்று. இராமபிரானை நோக்கி, "மாமன்னன் பேசமாட்டாதே இருக்கிறார்; உம்முடைய தம்பிக்கு அரசைக் கொடுத்தார்; உம்மைக் காடுநோக்கிப் போகப் பணிக்கவேண்டும் என்று நினைத்திருக்கிறார்" என்று தயரதன் கருத்தைச் சொன்னாள் கைகேயி. அதனைக் கேட்டு, "நடுவிலாச்சி![8] நாம் தங்கள் திருவடிகளிலே அழகிய முறையில் பணிவிடை செய்தோம் என்று இருந்தோம். நம்பக்கல் ஒரு குணம் இருப்பதாக நினையாமையன்றோ தாங்கள் எம்மைப் போகச் சொல்லாமல் அஃது அய்யர்[9] கருத்து என்று சொல்கிறீர்கள்" என்றார். மேலும், "நாம் அய்யர் ஆகிய தயரதனைப் போலவோ உம்மை நினைந்திருக்கிறோம். அவரைத் தெய்வமாகவும், உம்மைப் பெருந் தெய்வமாகவும் அன்றோ நினைத்திருக்கிறோம்" என்றாரன்றோ.

**திருவல்லிக்கேணிக் கண்டேனே** - பகைக் கூட்டத்தைக் கிழங்கு எடுப்பவனாய், தம்மை இறைவனாக நினைத்துக் கொண்டிருப்பார்க்கும் இடர் வந்தால் போக்குபவனாய், தனக்கு நெருக்கமானவர்க்காகத் தன்னை அழியமாறி உதவுபவனாய், பொய் அன்பினர்க்கும் அவர்கள் ஏவியது செய்பவனாய் அமைந்தவனைத் திருவல்லிக்கேணியிலே காணப்பெற்றேன் என்கிறார்.

---

1 குடுத்தார். 2. ஆய்ச்சி. 3. சொல்லமாட்டாதே; சொல்லாமே. 4. ஐயர். 5. ஐயரோபாதியாகவோ. 6. ஸ்நேஹிகள். 7. ஏவுத்துச்.
8. நடுவில் ஆச்சி - கைகேயி. 9. அய்யர் - தந்தையார்; ஈண்டுத் தயரதன்.

## ஒப்புமைப் பகுதி

1. கம்சனையும் அவன் கூட்டத்தையும் அழித்தவன்

" கஞ்சனை வஞ்சித்து - கம்ஸன் மாதுலனாய், ப்ரமாதத்தாலே புகுந்த தாகத் தானும் து:க்கியாய்க் கண்ணநீர் பாய்த்துவானாக வாசலிலே குவலயாபீடத்தையும் மல்லரையும் நிறுத்திவைக்க, அத்தை அடைய நிரஸித்து, கம்ஸன் கோலின வஞ்சநத்தை அவன்தன்னோடே போக்கினவனே! " தி. வா. மொ 3:8:9-36

[மாதுலன் - மாமன். ப்ரமாதம் - கவனக்குறை. நிரஸித்தல் - அழித்தல்.]

" கஞ்சனைத் தகர்த்த - அவன் இருக்கிற இடத்தளவும் எழப்பாய்ந்து. 'கஞ்சன் குஞ்சி பிடித்து அடித்த பிரான்' என்கிறபடியே மயிரைப்பிடித்துக் கீழே விழவிட்டு மேலே பாய்ந்து பசளை(லை)க்கலம் போலே உடைத்தான்... 'ராஜ த்ரோஹிகளைக் கொல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக் கொல்லுமா போல, தான் கொடுத்த முடியை வாங்கிக் காண் கொன்றது' என்று அம்மங்கியம்மாள் பணிப்பர் "

தி. வா. மொ. 8:4:1-36

" கஞ்சன்தன் ஒருவாரணம் உயிர் உண்டவன் - 'தீயபுந்திக்கஞ்சன்' என்கிறபடியே துர்ப்புத்தியான கம்ஸன், ஆஸுர ப்ரக்ருதிகளை ப்ரச்சந்நரூபராக்கி வரவிட்டு பஹுமுகமாக நலியப்பார்த்த அளவில், வந்தவர்கள் ஒருவரும் விசேஷம் சொல்ல மீண்டு செல்வர் ஒருவரைக் காணாமையாலே, 'இனி இதுகொண்டு இவனை வெல்லப் போகாது' என்று 'வில் விழவுக்கு என்று அழைத்து நலியக் கடவோம்' என்று, தன்னுடைய மந்த்ரிகளில் அநுகூலரான அக்ரூரரை வரவிட அவரும் வந்து அழைத்துக்கொண்டு போகாநிற்கச்செய்தே, வழியிலே நலிவதாக மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப் பிச்சேற்றி, 'புகுவாய் நின்ற போதகம் வீழ' என்கிறபடியே புகுகிற வாசலிலே நிறுத்திவைத்த தோர் ஆனையை மதியாமல் சென்று அடர்த்து அதினுடைய கொம்பு களைப் பிடுங்கி ப்ராணனை முடித்தவன் "

பெரி. தி. 4:2:5 ம. மா. மு. உரை.

[ப்ரச்சந்நரூபர் - மறைந்துகொண்ட வடிவத்தர்]

" நிகரில் மல்லரைச் செற்றதும் - மிடுக்கு ஸத்ருஸமின்றிக்கே இருக்கும் மல்லரைச் செற்றதும். கவ்ய ஸேவையாலே ம்ருதுஸ்வபாவராய் இருப்பார் இரண்டு பிள்ளைகளிறே, அபக்ஷ்ய பக்ஷணங்களாலும் சஸ்த்ராஸ்த்ர சிக்ஷைகளாலும் மலைபோலே திண்ணிதான தோளையுடைய மல்லரைப் பொடி படுத்தினார்கள் " தி. வா. மொ. 6:4:3-36

[ஸத்ருஸம் - ஒப்பு. கவ்ய ஸேவை - ஆவினிடமிருந்து பெறும் பால், தயிர் வெண்ணெய் ஆகியவற்றை உண்ணல். ம்ருதுஸ்வபாவம் - மென்மை. அபக்ஷ்ய பக்ஷணங்கள் - உண்ணத்தகாத பொருள்களை உண்ணல். சஸ்த்ர அஸ்த்ர சிக்ஷைகள் - வாள் வில் பயிற்சிகள்.]

" வென்றிசூழ் களிற்றை - ஊன்றிப்
பொருதுடைவு கண்டானும் "

*" பொருதுடைவு கண்டானும் - பசலைக்கலம் போலே உடையும்படி கண்டவன். உடைவு - கருவிப்பை போலே ஆக்கினபடி "*
*மு. தி. 18. பெ. உரை.*

*[கருவிப்பை - ஆயுதம் இருக்கிற உறை]*

*" ஊர்கொள் திண்பாகன் உயிர் செகுத்து - திண்ணியனாய் ஆனையை நடத்துகிற பாகனுடைய ப்ராணனைப் போக்கி. திண்மையாகிறது ஆனைக்கொம்பை முறித்தாலும் உயிர் பெறுத்தி நடத்த வல்ல சிக்ஷாபலம். ஆனையின் கொம்பை முறித்தாலும் இவனை அழியாவிடில் ப்ரயோஜநம் இல்லை. ஆனையின்கொம்பை முறிக்கைக்குள்ள அருமை போரும் ஆயிற்று, இவன் உயிரைப் போக்குகைக்கு "*
*தி. வா. மொ. 8:4:1-24*

2. **சிவன் உறுதுயர் களை தேவு**

*பாட்டு 38இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

3. **கோல் கையிற் கொண்டு பார்த்தன் தேர்முன் நின்றான்**

*" தேர் கடாவிய பெருமான் - ஸேநாதூளியும் உழவுகோலும் சிறுவாய்க் கயிறும் தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளும் அதிலே சாத்தின சிறுச் சதங்கையுமாய் ஸாரத்ய வேஷத்தோடே நின்ற... "*
*தி. வா. மொ. 3:6:10-36*

*[ஸாரத்ய வேஷம் - தேரோட்டியின் கோலம்]*

*(21)*

## 122

**வேதத்தை வேதத் தின்சுவைப் பயனை**
**விழுமிய முனிவரர் விழுங்கும்**
**கோதில்இன் கனியை நந்தனார் களிற்றைக்**
**குவலயத் தோர்தொழு தேத்தும்**
**ஆதியை அமுதை என்னைஆ ளுடைய**
**அப்பனை ஒப்பவர் இல்லா**
**மாதர்கள் வாழும் மாடமா மயிலைத்**
**திருவல்லிக் கேணிக்கண் டேனே.**

ப. ரை : **வேதத்தை** - வேத வடிவமாய் இருப்பவனை, **வேதத்தின் சுவைப் பயனை** - வேதத்தினால் பெறப்படும் இனிய பயனாய் இருப்பவனை, **விழுமிய முனிவரர் விழுங்கும் கோது இல் இன் கனியை** - சனகர் முதலிய முனிவர்கள்

**122.** 1 : 6. முனிவர்கள்.

**உண்ணும் குற்றம்** *அற்ற பழம் போன்றவனை,* **நந்தனார் களிற்றை** - *நந்தகோபருக்கு ஆனை போலே இனியனாய் இருப்பவனை,* **குவலயத்தோர் தொழுது ஏத்தும் ஆதியை** - *உலகத்தார் பணிந்து பரவும் முதல்வனை,* **அமுதை** - *அமுதம் போலே இனிமை தருபவனை,* **என்னை ஆளுடைய அப்பனை** - *என்னை அடிமை கொண்ட தலைவனை,* **ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும்** - *ஒப்பற்ற பெண்டிர் வாழ்கிற,* **மாட மாமயிலை** - *மாடங்களையுடைய சிறந்த மயிலைக்கு அடுத்த,* **திருவல்லிக்கேணிக் கண்டேன்-.**

**சி. கு** : *கனி, களிறு, அமுது என்பன உவம ஆகுபெயர்கள்.*

வியா : **இரண்டாம் பாட்டு** : **வேதத்தை** - "**த்ரைகுண்ய விஷயா வேதாः**" என்கிறபடியே எல்லார்க்கும் ஹிதம் சொல்லப் போந்த வேதத்தை தனக்கு விபூதியாக உடையவன். **வேதத்தின் சுவைப் பயனை** - வேதோக்தமான கர்மங்களை அநுஷ்டித்து ராஜஸராயும் தாமஸராயும் ஸாத்விகராயும் உள்ளார்க்கு அவ்அவருடைய ருச்யநுகூலமாக பலப்ரதாநம் பண்ணுமவன். கர்ம பாவனையாதல் உபயபாவனையாதல் அன்றிக்கே கேவலம் ப்ரஹ்ம பாவனையேயாய் இருக்கும் ஸநகாதிகளுக்கு நிரதிசய போக்யனாய் உள்ளவனை. **நந்தனார் களிற்றை** - ஸ்ரீநந்தகோபர்க்குத் தன்னுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களாலே எப்போதும் ஒக்க இனியன் ஆனவனை[1]. **குவலயத்தோர் இத்யாதி** - பூமியில் உள்ளார் "**காரணந்துத்யேயः**" என்கிறபடியே தன்னையே ஆஶ்ரயிக்கும்படி ஜகத்

---

வி : **இரண்டாம் பாட்டு** : **வேதத்தை** - "**முக்குணவயப்பட்டவர்களுக்காக எழுந்தவை வேதங்கள்**" *(கீதை. 2:45) என்பதற்கு இசைய எல்லார்க்கும் நன்மை சொல்லப்போந்த வேதத்தைத் தனக்குச் செல்வமாக உடையவன்.* **வேதத்தின் சுவைப் பயனை** - *வேதத்திற் சொல்லப்பட்ட செயல்களைக் கடைப்பிடித்துச் செம்மையராய், கருமையராய், வெண்மையராய் உள்ளார்க்கு அவரவர் சுவைக்குச் சேரப் பயன் அளிப்பவன்[2]. இறைவனை அடைவதற்குச் செயல் நெறியையோ, செயலும் இறையும் ஆகிய இருநெறிகளையோ எண்ணாமல் இறைவன் ஆகிய அவனையே ஓயாமல் சிந்தித்து இறைநெறியில் ஊன்றி நிற்கும் சனகர் முதலான முனிவர்களுக்கு எல்லையற்ற இன்பம் தருபவனாய் உள்ளவனை.* **நந்தனார் களிற்றை** - *சீர்மிகு நந்தகோபர்க்குத் தன்னுடைய ஆனைத்தொழில் களாலே[3] எப்போதும் ஒக்க இனியனானவனை.* **குவலயத்தோர் தொழுது ஏத்தும் ஆதியை** - *புவியிலுள்ளார்,* "**காரணப் பொருளே இடையறாது நினைக்கத் தக்கது**" *(அதர்வசிகை) என்பதற்கு இசையத் தன்னையே பற்றுமாறு உலகிற்கு வித்தாய்*

---

1. இனியனாய் உள்ளவனை.
2. " உத்தமம் வெளுப்பு செம்மை
   உரைத்திடு கறுப்பு மாகும்
   சத்துவ குணத்தி னோடு
   ரசோகுணம் தமோகு ணந்தான்"

என்பது கைவல்ய நவநீதம். இதனையொட்டிச் சத்துவ குணத்தர், ரஜோகுணத்தர், தமோகுணத்தர் ஆகிய சொற்களுக்கு முறையே வெண்மையர், செம்மையர், கருமையர் என்னும் சொற்கள் படைத்துக் கொள்ளப் பட்டுள்ளன. 3. ஆனைத் தொழில்கள் - மனிதனால் செய்தற்கு அரிய செயல்கள்.

**காரணபூதனாய் உள்ளவனை. அமுதை - அவர்களுக்கு ப்ராப்யனாய் உள்ள வனை. அவர்களுக்கு எல்லாம் புறம்பாய இருக்கிற என்னை அடிமை கொண்ட உபகாரகனை. ஒப்பவர் இல்லா இத்யாதி - "ஒருவல்லித் தாமரை யாள் ஒன்றியசீர் மார்பன்" என்று பிராட்டி ப்ராதாந்யமே ஆன ஊராகையாலே பிராட்டி பரிகரமே ஆயிற்று. "நாநயோர் வித்யதே பரம்" என்று அவள் விபூதியும் ஈஶ்வர விபூதியுமாய் இரண்டு கூறாயிறே இருப்பது. 'மயிலாப்பூர்' என்று படை வீட்டுக்குப் பேர்.**

---

*உள்ளவனை. அமுதை - அவர்களுக்கு அடையத்தக்கவனாய் உள்ளவனை.* **என்னை ஆளுடைய அப்பனை** *- அவர்களுக்கு எல்லாம் புறம்பாய் இருக்கிற என்னை அடிமைகொண்ட வள்ளலை.* **ஒப்பவர் இல்லா மாதர்கள் வாழும் மாட மாமயிலை -**

> *"வந்துதைத்த வெண்டிரைகள் செம்பவள வெண்முத்தம்*
> *அந்தி விளக்கு மணிவிளக்காம்—எந்தை*
> **ஒருவல்லித் தாமரையாள் ஒன்றியசீர் மார்வன்**
> *திருவல்லிக் கேணியான் சென்று"* *(மூ. தி. 16*

*என்று பிராட்டிக்கு முதன்மையுள்ள ஊராகையாலே எங்கும் பிராட்டியின் பரிவாரம் ஆகிய பெண்களே பெருமையோடு இருக்கின்றனர். பெண்கள் பிராட்டியின் உடைமையோ என்னில், உடைமையே ஆவர்.* **"தெய்வம் விலங்கு, மனிதர் ஆகியவர்களுள் ஆண் இனம் அனைத்தும் அரியின் செல்வம்; பெண் இனம் அனைத்தும் பெரியபிராட்டியார் செல்வம். இவ் இருவர்க்கும் மேலானவர் இல்லை"** *என்பது விட்டுணு புராணம் (1:8:35). இப்படி உலகம் அவள் உடைமையும் அவன் உடைமையுமாய் இரண்டு கூறாயன்றோ இருப்பது. மயிலாப்பூர் என்பது படைவீட்டுக்குப்[1] பெயர்.*

**ஒப்புமைப் பகுதி**

1. **கனி**

   *" கன்னலங்கட்டிதன்னைக் கனியை இன்னமுதம் தன்னை "*
   *" கனியை - கண்டபோதே நுகரலாம்படி இருக்கை "*

   *தி. வா. மொ. 5:9:5-36*

2. **மாட மாமயிலைத் திருவல்லிக்கேணி**

   *" திருங்செங்குன்றூரில் திருச்சிற்றாறு - 'மாட மாமயிலைத் திருவல்லிக் கேணி' என்னுமாபோலே "*

   *தி. வா. மொ. 8:4:5-36*
   *(22)*

---

1. படைவீடு - நகரம்.

## 123

**வஞ்சனை செய்யத் தாய்உரு வாகி**
**வந்தபேய் அலறிமண் சேர**
**நஞ்சமர் முலையூ டுயிர்செக உண்ட**
**நாதனைத் தானவர் கூற்றை**
**விஞ்சைவா னவர்சா ரணர்சித்தர் வியந்து**
**துதிசெயப் பெண்ணுரு வாகி**
**அஞ்சுவை அமுதம் அன்றளித் தானைத்**
**திருவல்லிக் கேணிக்கண் டேனே.**

**ப. ரை :** வஞ்சனை செய்ய - *கண்ணனைக் கொலை செய்வதற்காக,* **தாய் உருவாகி வந்த** - *தாயின் வடிவத்தைக் கொண்டு வந்த,* **பேய் அலறி மண் சேர** - *பூதனை என்னும் பேய்ச்சி கதறிக்கொண்டு தரையிலே விழுமாறு,* **நஞ்சு அமர் முலை ஊடு உயிர் செக** - *விடம் பொருந்திய முலை வழியாக அவள் உயிர் போகும்படி,* **உண்ட நாதனை** - *பால் உண்ட தலைவனை,* **தானவர் கூற்றை** - *அவுணர்களுக்குக் காலனாய் இருப்பவனை,* **விஞ்சை வானவர் சாரணர் சித்தர் வியந்து துதி செய** - *விச்சாதரர், சாரணர், சித்தர் ஆகிய தேவர் கூட்டத்தினர் வியந்து பரவும்படி,* **பெண் உரு ஆகி** - *மோகினி வடிவங் கொண்டு,* **அன்று அஞ் சுவை அமுதம் அளித்தானை** - *முன்பு இனிய சுவை பொருந்திய அமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தவனை,* **திருவல்லிக்கேணிக் கண்டேன்-.**

**சி. கு :** *விஞ்சை வானவர் - வித்யாதரர். சாரணர், சித்தர் - தேவர்* **களின்** *வகுப்பினைச் சேர்ந்தவர்கள்.*

**வியா : மூன்றும் பாட்டு :** **வஞ்சனை இத்யாதி** - தாய்வடிவு கொண்டு வஞ்சிக்க வந்த பூதனை கதறிக்கொண்டு போய் பூமியிலே விழும்படியாக, விஷம் நிரம்பின முலைவழியே அவளுடைய பிராணன்கள் போம்படி அமுதுசெய்த. **நாதனை** - தனக்குச் சேராத வடிவு கொண்டு ஜகத்துக்கு ப்ராணனான தன்னை நலிய வந்தவளை முடித்துத் தன்னைத் தந்தவன். "ஸ்தந்யம் தத்". தானவர்

---

**வி :** மூன்றாம் பாட்டு : வஞ்சனை செய்யத் தாய் உருவாகி வந்த பேய் அலறி மண் சேர நஞ்சு அமர் முலை ஊடு உயிர் செக உண்ட - *தாய் வடிவு கொண்டு வஞ்சிக்க வந்தாள் பூதனை. அவள் கதறிக்கொண்டு போய் மண்ணிலே விழுந்திட நஞ்சு நிரம்பிய முலைவழியே அவளுடைய உயிர் போகுமாறு அமுது செய்தான்; அவ்வாறு செய்த.* நாதனை - *தனக்குச் சேராத வடிவுகொண்டு உலகுக்கு உயிரான தன்னை நலிய வந்தவளை முடித்துத் தன்னைத் தந்தவன்.* **"நஞ்சு கலந்த அந்த முலைப்பால் சுவையுடையது ஆயிற்று" (வி. பு. 5:6)** என்று சொல்வதற்கு ஏற்ப அதனை அமுது செய்து[1] முடியாமல்[2] **இருந்தவன்; அவ்வாறு**

---

**123.** 3 : 5 துதிசெய்ய.

1. அமுதுசெய்தல் - உண்ணல். 2. முடிதல் - இறத்தல்.

கூற்றை - ஆஸுர வர்க்கத்துக்கு ம்ருத்யுவானவனை. வித்யாதரர் சாரணர் ஸித்தர் உள்ளிட்ட தேவ வர்க்கம் அடைய விஸ்மிதராய் ஸ்தோத்ரம் பண்ணும்படி புருஷோத்தமனான தனக்குச் சேராத வடிவைக் கொண்டு அம்ருதத்தை அநுகூலரை புஜிக்கும்படி[1] பண்ணினவனை.

---

இருந்தவனை. தானவர் கூற்றை - *அசுரர்களுக்குக் காலன் ஆனவனை.* விஞ்சை வானவர் சாரணர் சித்தர் வியந்து துதி செயப் பெண் உருவாகி அஞ் சுவை அமுதம் அன்று அளித்தானை - *விச்சாதரர், சாரணர்,* சித்தர் உள்ளிட்ட தேவர் கூட்டம் *அடைய வியந்தவராய்ப் பரவும்படி ஆடவர்* திலகமான *தனக்குச் சேராத வடிவைக் கொண்டு அமுதத்தை உகந்தவர் உண்ணும்படி பண்ணின்வன்; அவனை.* திருவல்லிக்கேணிக் கண்டேனே-.

### ஒப்புமைப் பகுதி

1. உயிர்செக உண்ட நாதன்

   *" அவள்பால் உயிர் செக உண்ட பெருமான் "*

   *" செக - முடியும்படியாக...உண்ட பெருமான் - அவள் முலையுண்டு அவளை முடித்து, ஜகத்துக்கு ஒரு சேஷியைத் தந்தவன். "ஸ்தந்யந்தத் விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீஜ் ஜகத் குரோ: " தி. வா. மொ. 1:9:5-36*

   *பாட்டு 21, 46, 72 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. பெண்ணுருவாகி அமுதம் தேவர்க்கு அளித்தவன்

   *" அமுதந்தேவருண்ண இத்யாதி - பலவேளையிலே வந்தவாறே ப்ரயோஜந ரூபமான அம்ருதத்தை அநுகூலவர்க்கமான தேவஜாதியே புஜித்து, ஆஸுர ப்ரக்ருதிகள், 'அம்ருதத்தை நாய்க்கிடு' என்று அத்தைவிட்டு அவர்கள் பின்தொடரும்படிக்கு ஈடாக தர்சநீயமான ஸ்த்ரீவடிவைக் கொண்டுபோன விஸ்மயநீயமான செயலும். 'மாயயா மோஹயித்வாதாந் விஷ்ணுஸ் ஸ்த்ரீரூபமாஸ்ததி :' வானவரைப் பெண்ணாகி அமுதூட்டும் பெருமானார் " தி. வா. மொ. 5:10:10-36*

*(23)*

## 124

இந்திர னுக்கென் றாயர்கள் எடுத்த
எழில்விழ விற்பழ நடைசெய்
மந்திர விதியிற் பூசனை பெறாது
மழைபொழிந் திடத்தளர்ந் தாயர்
எந்தம்மோ டினஆ நிரைதள ராமல்
எம்பெரு மான்அருள் என்ன
அந்தமில் வரையால் மழைதடுத் தானைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே.

---

1. உபஜீவிக்கும்படி.

**ப. ரை :** **இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த** - இந்திரனைக் குறித்து இடையர்கள் கொண்டாடிய, **எழில் விழவில்** - அழகிய விழாவில், **பழ நடை செய்** - தொன்று தொட்டுச் செய்து வருகிற, **மந்திர விதியில் பூசனை பெறாது** - மந்திர முறைமைப்படி நடைபெறும் வழிபாட்டினைப் பெறாமல் ஆத்திரங் கொண்டு, **மழை பொழிந்திட** - இந்திரன் மழை பெய்விக்க, **ஆயர் தளர்ந்து** - இடையர் மிகவும் நொந்து, **எம்பெருமான்** - எங்களுக்குத் தலைவனே! **எம் தம்மோடு இன ஆநிரை** - எங்களுடன் இனமான பசுக்களின் திரளும், **தளராமல் அருள் என்ன** - மழையினால் நோவுபடாத வண்ணம் காத்தருள்வாய் என்று வேண்ட, **அந்தம் இல் வரையால்** - அளவிட முடியாத கோவர்த்தன மலையைக் கொண்டு, **மழை தடுத்தானை** - அந்த மழையைத் தடுத்தருளினவனை, **திருவல்லிக்கேணிக் கண்டேனே-.**

**சி. கு:** வரை - மலை; ஈண்டுக் கோவர்த்தன மலை.

வியா : **நாலாம் பாட்டு : இந்திரன் இத்யாதி** - திருவாய்ப்பாடியில் உள்ளார், த்ரைலோக்யேஶ்வரனான இந்த்ரனுக்கு வர்ஷார்த்தமாக ஆட்டைக்கு ஒரு விருந்திடக் கடவர்களாய், “நாம் பிறந்து வளருகிற ஊரிலே புரோடாசத்தை நாய் தின்றாப்போலே ஒரு தேவதை வந்து புஜிக்கையாவது[1] என்?” என்று, “நீங்கள் செய்யப் புகுகிறதுதான் என்?” என்று கேட்டான்; “நாங்கள் இந்திரனுக்கு வர்ஷார்த்தமாக விருந்திடப் புகுகிறோம்” என்றார்கள்; “இந்த மலையன்றோ நமக்கும் பசுக்களுக்கும் ஒதுங்க இடமும் தந்து புல்லும் தருகிறது. ஆரேனுக்குமோ ப்ரத்யுபகாரம் பண்ணுவது? இம் மலைக்கு இடுங்கோள்” என்றான்; முகத்தைப் பார்த்து ஒன்றைச் சொன்னால் மறுக்கலாம்படியன்றே[2] இருப்பது; ஒன்றாகக் கொடுவந்து குவித்தார்கள். **இந்திரன் இத்யாதி** - இந்த்ரனுக்கு என்று இடையர்

---

வி : நாலாம் பாட்டு : இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த எழில் விழவில் பழநடை செய் மந்திர விதியில் பூசனை பெறாது மழை பொழிந்திடத் தளர்ந்து ஆயர் எந்தம்மோடு இன ஆநிரை தளராமல் எம்பெருமான் அருள் என்ன அந்தம் இல் வரையால் மழை தடுத்தானை - திருவாய்ப்பாடியில் உள்ளார், மூவுலக நாதனான இந்திரனுக்கு மழையின் பொருட்டு ஆட்டைக்கு[3] ஒரு விருந்து இடுதற்கு உரியவர்; எனவே, அதனைச் செய்ய முற்பட்டனர். கண்ண பெருமான், “நாம் பிறந்து வளரும் ஊரிலே வேள்விக்கு வகுத்த அவியை[4] நாய் தின்றாற் போலே ஒரு தெய்வம் வந்து உண்பது என்ன முறைமை?” என்று மனத்துள் நினைந்தான். ஆயர்களை நோக்கி, “நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?” என்று கேட்டான். அவர்கள் நாங்கள் இந்திரனுக்கு மழையின் பொருட்டு விருந்திடப் புகுகிறோம்” என்றார்கள். “இந்த மலைதானே நமக்கும் பசுக்களுக்கும் ஒதுங்க இடமும் தந்து புல்லும் தருகிறது. அப்படி இருக்க, இதனை விடுத்து வேறு யாரோ ஒருவருக்கா கைம்மாறு பண்ணுவது? இம் மலைக்கு விருந்து இடுங்கோள்” என்றான். முகத்தைப் பார்த்து ஒன்றைச் சொன்னால் மறுக்க முடியுமா? அவர்கள் ஒவ்வொன்றாகக் கொண்டு வந்து குவித்தார்கள். இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த எழில் விழவில் - இந்திர

---

1. புஜிக்கையாவுது. 2. மறுக்கும்படியன்றே.
3. ஆட்டைக்கு - ஆண்டுக்கு; ஆட்டை - ஆண்டு. 4. அவி - புரோடாசம். புரோடாசமாவது வேள்விகளில் இடம்பெறும் அரிசிமாவால் ஆகிய பொருள்.

எடுத்த எழில் உடைத்தான விழவில் முன்பு செய்து போரும்படியிலே மந்த்ரோக்த மானபடியே பண்ணுகிற அநுஷ்ட்டாநரூபமான பூஜையைப் பெறாமையாலே அவன் பசிக்ராஹத்தாலே கோபித்து மஹாவர்ஷமாக வர்ஷிப்பிக்க, அத்தாலே இடைய ரானவர்கள் தளர்ந்து, "ரக்ஷகரான எங்களோடே எங்களுடைய ரக்ஷ்யமான பசுக்களும் தளராதபடி நோக்கியருள வேணும்" என்ன. இத்தால் புறம்பு உண்டான ரக்ஷ்ய ரக்ஷக பாவமும் அப்ரயோஜகம் என்றபடி. அந்தம் இல் - அந்த மழையின் அளவு அல்லாத பெரிய மலையாலே மழையைத் தடுத்து. அப்படியே, "ஸந்தத து:க்க வர்ஷிணி" என்கிற என்னுடைய ஸம்ஸாரமாகிற வர்ஷத்தைப் பரிஹரிக்க வந்தவன்.

---

னுக்கு என்று இடையர் எடுத்த எழில் உடைத்தான விழவில். பழ நடை செய் மந்திர விதியில் பூசனை பெறாது மழை பொழிந்திட - முன்பு தொடங்கிச் செய்து வரும்படியிலே, அஃதாவது மந்திரம் கிளந்தபடியே பண்ணுகிற முறையான வழிபாட்டினைப் பெறாமையாலே அவன் பசி தின்னுவதாலே சீறிப் பெருமழை யாகப் பெய்திட, தளர்ந்து ஆயர் எந்தம்மோடு இன ஆநிரை தளராமல் எம் பெருமான் அருள் என்ன - அதனாலே இடையர்கள் தளர்ந்து, நோக்குபவர் களான[1] எங்களோடே எங்களால் நோக்கக்கடவ பசுக்களும் தளரா வண்ணம் நோக்கியருள வேண்டும்" என்று சொல்ல. இதனால் நோக்குவானும் நோக்கப்படுவதுமாய் இருக்கும் உறவுமுறை இறைவனைத் தவிர்ந்த இடங்களில் பயனற்றது என்பது தெரிவிக்கப்பட்டது. அந்தம் இல் வரையால் மழை தடுத்தானை - அந்த மழையினைத் தடுத்தற்கு வேண்டும் அளவினும் விஞ்சிய பெரிய மலையாலே மழையைத் தடுத்து. அது போலே, "எந்நாளும் பொழிகின்ற துன்பப் புயல்வெள்ளம்" (ஸ்தோ. ர. 49) என்று சொல்லப்படும் உலக வாழ்க்கை யாகிய மழையை மாற்ற வந்தவன்; அவனை. திருவல்லிக்கேணிக் கண்டேனே.

**ஒப்புமைப் பகுதி**

**வரையால் மழை தடுத்தவன்**

*பாட்டு 24, 45 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.* (24)

## 125

**இன்துணைப் பதுமத் தலர்மகள் தனக்கும்**
**இன்பனற் புவிதனக் கிறைவன்**
**தன்துணை ஆயர் பாவைநப் பின்னை**
**தனக்கிறை மற்றையோர்க் கெல்லாம்**
**வன்துணை பஞ்ச பாண்டவர்க் காகி**
**வாயுரை தூதுசென் றியங்கும்**
**என்துணை எந்தை தந்தைதம் மானைத்**
**திருவல்லிக் கேணிக்கண் டேனே.**

---

**125.** 4 : 1 இன்துணை

1. நோக்குபவர் - காப்பவர்; நோக்குதல் - காத்தல்.

**ப. ரை :** **இன் துணை** - *தனக்கு இனிய துணையான,* **பதுமத்து அலர் மகள் தனக்கும் இன்பன்** - *தாமரைமலரைப் பிறந்தகமாகவுடைய திருமகளுக்கு இன்பனும்,* **நல் புவி தனக்கு இறைவன்** - *நிலமகளுக்குத் தலைவனும்,* **தன் துணை**- *தன்னையே துணையாகக் கொண்ட,* **ஆயர் பாவை நப்பின்னைதனக்கு இறை** - *ஆயர் மகள் ஆன நப்பின்னைக்கு நாயகனும்,* **மற்றையோர்க்கு எல்லாம் வன் துணை** - *அல்லாதவர்க்கு எல்லாம் வலிய துணை ஆனவனும்,* **பஞ்ச பாண்டவர்க்கு ஆகி** - *பஞ்ச பாண்டவர்களுக்கு எல்லா உறவு முறையும் தானேயாய்,* **வாய் உரை சென்று தூது இயங்கும் என் துணை** - *அவர்கள் கூறியவற்றைத் துரியோதனன் முதலியோரிடம் அறிவித்துத் தூது செல்லும் எனக்குத் துணையானவனும்,* **எந்தை தந்தை தம்மானை** - *என் குலநாதனும் ஆனவனை,* **திருவல்லிக்கேணிக் கண்டேனே**-.

**சி. கு :** *பதுமம் - பத்மம் என்னும் வடசொல் திரிபு; தாமரை என்பது பொருள்.*

வியா : **அஞ்சாம் பாட்டு : இன் துணை இத்யாதி** - நெஞ்சுக்கு இனிய துணையாய் இருக்கிற பதுமத்து அலர் மகள் உண்டு தாமரைப்பூவை உத்பத்தி ஸ்தாநமாக உடைய பெரியபிராட்டியார்; அவளுக்கு இன்பன் ஆனவன். **தனக்கும்** - எல்லார்க்கும்[1] ஸ்ப்ருஹணீயையாய் இருக்கிற பெரியபிராட்டியார்தான் **"அகல கில்லேன்"** என்று விரும்பி வர்த்திக்கும்படி அவளுக்கு ஸ்ப்ருஹணீயன் ஆனவன். ஸர்வேஶ்வரனான தனக்கும் கூடப் பொறைக்கு உவாத்தாய் இருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டியார்க்கு வல்லபன் ஆனவன். **தன் துணை இத்யாதி** - தன்னையே துணையாக உடையளான ஆயர் பாவை உண்டு நப்பின்னைப் பிராட்டி; அவளுக்கு ஸ்வாமி ஆனவன். **மற்றையோர் இத்யாதி** - இப்படி இருக்கையாலே அல்லாதார் எல்லார்க்கும் வலிய துணை ஆனவன். **பஞ்ச** - ஆஶ்ரிதரான பாண்டவர்களுக்காக அவர்கள் வாயிற் சொல்லி விட்ட வார்த்தையை

---

வி : அஞ்சாம் பாட்டு : **இன் துணைப் பதுமத்து அலர் மகள் தனக்கும் இன்பன்** - *நெஞ்சுக்கு இனிய துணையாய் இருப்பவள் பதுமத்து அலர் மகள்.* *பதுமத்து அலர் மகள் - தாமரைப்பூவைப் பிறப்பிடமாக உடைய பெரிய பிராட்டியார்; அவளுக்கு இன்பன் ஆனவன்.* **தனக்கும்** - எல்லார்க்கும் விரும்பத் தக்கவளாய் இருக்கும் பெரியபிராட்டியார்தான், **"அகல கில்லேன்"** *(தி. வா. மொ. 6:10:10)* என்று விரும்பி உறையும்படி அவளுக்கு விரும்பத் தக்கவன் ஆனவன். **நல் புவி தனக்கு இறைவன்** - *முழுமுதல்வன் ஆன தனக்கும் கூடப் பொறை என்னும் தன்மையைக் கற்பிக்கும் மண்மகளார்க்குக் கணவன் ஆனவன்.* **தன் துணை ஆயர் பாவை நப்பின்னை தனக்கு இறை** - *தன்னையே துணையாக உடையவள் ஆயர் பாவை. ஆயர் பாவை - நப்பின்னைப் பிராட்டி; அவளுக்குத் தலைவன் ஆனவன்.* **மற்றையோர்க்கு எல்லாம் வன் துணை**- *இப்படி இருக்கையாலே அல்லாதார் எல்லார்க்கும் வலிய துணை ஆனவன்.* **பஞ்ச பாண்டவர்க்கு ஆகி வாய் உரை தூது சென்று இயங்கும் என் துணை** - *தன்னைச் சார்ந்தவர்கள் ஆன பாண்டவர்களுக்காக, அவர்கள் வாயாற் சொல்லி*

---

1. ஸ்ப்ருஹணீயனாய் இருக்குற தனக்கு.

அங்கே சென்று சொல்லுவது, இங்கே வந்து அறிவிப்பதாய், இப்படி ஆஶ்ரித விஷயத்தில் தாழநின்ற நிலையாலே தானே துணை என்னும் இடத்தை எனக்கு அறி வித்தவனை. எந்தை - எனக்கு ஸ்வாமியாய் என் குலத்துக்கு நாதன் ஆனவனை

---

விட்ட செய்தியை அங்கே சென்று சொல்வது, இங்கே வந்து அறிவிப்பதாய் இருந்தான்; இப்படி அடியாரிடத்தில் தாழநின்ற நிலையாலே தானே துணை என்னும் இடத்தை எனக்கு அறிவித்தவன். எந்தை - எனக்குத் தலைவனாய் என் குலத்துக்கு நாதன் ஆனவன்; அவனை. திருவல்லிக்கேணிக் கண்டேனே -.

**ஒப்புமைப் பகுதி**

**தேவியர் மூவர்**

*" உடனமர் காதல்மகளிர் திருமகள் மண்மகள் ஆயர்*
*மடமகள் என்றிவர் மூவர் ஆளும் உலகமும் மூன்றே "*

*" திருமகள் - ஸர்வேச்வரனுக்கு ப்ரதாநமஹிஷியாய்ப் பட்டத்துக்கு உரிய ளாய் 'ந கச்சிந் நாபராத்ய்தி' என்று இருக்கும் பெரிய பிராட்டியார். மண் மகள் - முதலிலே 'குற்றம் பார்க்கக் கடவதோ' என்று அவனுக்குப் பொறைக்கு உவாத்தாய்ப் பொறை விளையும்படியான ஸ்ரீபூமிப்பிராட்டி. ஆயர்மடமகள் - அநுபவஸுகம் தானாய்த் தன் வடிவழகாலே துவக்கித் திருவுள்ளத்தில் குற்றம்படாதபடி இருக்கும் நப்பின்னைப்பிராட்டி. திருமகள் அவன் ஐச்வர்யம். மண்மகள் அது விளையும் பூமி. ஆயர் மட மகள் அத்தை புஜிக்கிற போக்தாவானவள் என்றும் ஆம் "*

*தி. வா. மொ. 1:9:4-36*

*[ப்ரதாந மஹிஷி - முதன்மையான பெருமாட்டி. உவாத்து - ஆசிரியர்.]*

(25)

## 126

அந்தகன் சிறுவன் அரசர்தம் அரசற்
கிளையவன் அணியிழை யைச்சென்று
எந்தமக் குரிமை செய்யெனத் தரியா
தெம்பெரு மான்அருள் என்னச்
சந்தமல் குழலாள் அலக்கணுூற் றுவர்தம்
பெண்டிரும் எய்திநூல் இழப்ப
இந்திரன் சிறுவன் தேர்முன்நின் றானைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே.

**ப. ரை :** அந்தகன் சிறுவன் - குருடன் ஆன திருதராட்டிரனுக்குப் பிள்ளையாய், அரசர்தம் அரசற்கு இளையவன் - அரசர்க்கு அரசனாகத் தன்னைக்

---

126. 3:1 சந்தமர்.

கருதிக் கொண்டிருக்கும் துரியோதனனுக்குத் தம்பியாய் இருக்கும் துச்சாதனன், **அணி இழையைச் சென்று** - அழகிய அணிகலன்களைப் பூண்ட திரௌபதியிடம் போய், **எம் தமக்கு உரிமை செய் என** - எங்களுக்கு அடிமை செய்வாய் என்று கூற, **தரியாது** - அது கேட்டுப் பொறாமல், **எம்பெருமான் அருள் என்ன** - இறைவா! காத்தருள்வாய் என்று வேண்ட, **சந்தம் அல் குழலாள் அலக்கண்** - நிறம் இருண்ட கூந்தலை உடையளான அந்தத் திரௌபதியின் மன வருத்தத்தை, **நூற்றுவர் தம் பெண்டிரும் எய்தி** - துரியோதனன் உள்ளிட்ட நூறு பேர்களின் மனைவியரும் அடைந்து, **நூல் இழப்ப** - மங்கல நாண் இழக்குமாறு, **இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானை** - இந்திரன் மகனான அருச்சுனனது தேர் முன் நின்ற பெருமானை, **திருவல்லிக்கேணிக் கண்டேனே-**.

**சி. கு :** சந்தம் அல் குழலாள் என்பதற்கு அழகிய இருண்ட கூந்தலை உடையவள் என்றும் நேராகப் பொருள்கொள்ளலாம். சந்தம் - அழகு. அல் - இருள்.

வியா : ஆறாம் பாட்டு : **அந்தகன் சிறுவன்** - குருடன் பெற்ற பிள்ளை ஆயிற்று. இத்தால் அறிவுகேடு வழிவழி வருகிறது என்கை. பிதா வானவன் கண் அஞ்ச வளர்க்க வளருகை அன்றிக்கே தான் கண்டபடி மூலையடியே திரிந்தவன். **அரசர் இத்யாதி** - ராஜ ராஜனான துர்யோதநனுக்குப் பின் பிறந்தவன்; துஶ்ஶாஸநன் என்றபடி. அவன் கொண்டாடி வளர்க்கச் செருக்காலே வளர்ந்தவன் என்று தீம்புக்கு உறுப்பாகச் சொல்லுகிறது. **அணி இழையை** - மஹோத்ஸவம் ஆகையாலே ஆபரணங்களாலே அலங்க்ருதையாய் நின்றவள் பக்கலிலே கிட்டி. **எம் தமக்கு உரிமை செய் என** - சூதிலே உன்னையும் தோற்றார்கள்; நீ போந்து எங்களுக்கு இழிதொழில் செய் என்ன. **தரியாது** - அவள் அந்ய சேஷத்வத்தைப் பொறுத்திலள் ஆயிற்று. **எம்பெருமான் அருள் என்ன** - இவ் அளவிலே ஸ்வாமியான நீ என் பக்கலிலே க்ருபை பண்ண வேணும் என்ன.

---

வி : ஆறாம் பாட்டு : **அந்தகன் சிறுவன்** - குருடன் பெற்ற பிள்ளை. இதனால் அறிவுகேடு வழிவழி வருகிறது என்பது சொல்லப்பட்டது. தந்தை கண்ணஞ்ச[1] வளர்க்க வளர்தல் அன்றித் தான் கண்டபடி மூலையடியே திரிந்தவன்[2]. **அரசர்தம் அரசற்கு இளையவன்** - அரசர்க்கு அரசன் ஆன துரியோதனனுக்குப் பின் பிறந்தவன்; துச்சாதனன். துரியோதனன் கொண்டாடி வளர்க்கச் செருக்காலே வளர்ந்தான் என்று தீம்புக்கு உறுப்பாக அமைந்ததனைக் காட்ட இப்படித் துரியோதனன் தம்பி என்று சொல்கிறார். **அணியிழையைச் சென்று** - பெருவிழாவாகையாலே அணிகலன்களாலே தன்னை அழகு செய்து கொண்டு நின்றவள்பக்கலிலே கிட்டி. **எம் தமக்கு உரிமை செய் என** - சூதிலே உன்னையும் தோற்றார்கள்; நீ போந்து எங்களுக்கு இழிதொழில் செய் என்று சொல்ல. **தரியாது** - அவள் பிறர்க்கு அடிமைப்பட்டிருத்தலைப் பொறுக்க மாட்டாதவள் ஆயினாள். **எம்பெருமான் அருள் என்ன** - இவ் அளவிலே, உடையவனான நீ என்பக்கலிலே அருள் புரிய வேண்டும் என்ன.

---

1. கண்ணஞ்ச - கண்ணால் அஞ்சும்படி பார்த்து. 2. மூலையடியே திரிதல் - முறையின்றித் திரிதல்.

**"ஆண்பிள்ளைகளான பர்த்தாக்கள் ஸந்நிஹிதராய் இருக்க தூரஸ்த்தனான க்ருஷ்ணன் பேரைச் சொல்லுவான் என்?" என்று எம்பாரைக் கேட்க[1], "அறிந்தோமே![2] முன்பே சில ஸுருஸுருகேட்டு[3] வைத்தாள்போலே காணும், 'மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி:' என்று".**

**இதுதன்னை பட்டரைக் கேட்க, "பர்த்தாவின் கையைப் பிடித்துப் போகாநின்றாலும் இடறினால் 'அம்மே' என்னக்கடவது காண்" என்று அருளிச்செய்தார். அதாய் இருக்கச்செய்தே விசைப்புக் கிடந்தபடி காணும். சந்தம் அல் குழலாள் - 'சந்தம்' என்று நிறம், 'அல்' என்கிற இத்தாலே இருளை லக்ஷித்து, நிறம் இருண்ட குழலை உடையவள் என்னுதல்; அன்றிக்கே, சந்தநப்பூ மாறாத குழலை உடையவள் என்னுதல். அவள்பட்ட அலக்கண் உண்டு துஃக்கம், அத்தை துர்யோதநாதிகளுடைய ஸ்த்ரீகள்பட்டு, அதில் தன்னேற்றமாக நூலும் இழந்தார்கள் ஆயிற்று. அவர்களுக்கு துஃக்கம் நிலைநிற்கும்படி பண்ணினான் ஆயிற்று. இந்திரன் இத்யாதி - வலியார் சிலரை அபாஸ்ரயமாகப் பற்றினாலும் தானே தாழநின்று ரக்ஷகனாக வல்லன் என்னும் இடத்தைச் சொல்லுகிறது. த்ரௌபதிக்கு பர்த்தாக்கள் உதவிற்றிலர்; அர்ஜுநனுக்கு இந்திரன் உதவிற்றிலன்.**

---

*"ஆண்பிள்ளைகள் ஆன கணவன்மார் அருகிருக்க எதற்காகத் தொலைவினன் ஆன கிருட்டிணன் பேரைச் சொல்கிறாள்?" என்று எம்பாரைக் கேட்டனர். அதற்கு அவர், "இவள் முன்பே, 'பேரிடர் வந்தபோது இறைவன் ஆகிய அரி நினைக்கப்பட வேண்டியவன்' என்பது போன்ற சில அறிவுரைகள் கேட்டுள்ளாள் போலும்" என்று விடை இறுத்தார்.*

*இதே வினாவினைப் பட்டரிடம் கேட்டபோது, அவர், "பெண்ணொருத்தி கணவன் கையைப் பிடித்துக் கொண்டு நடந்து சென்றாலும் கால் இடறினால் 'அம்மே!' என்றுதானே சொல்வாள்!" என்று அருளிச்செய்தார். சந்தம் அல் குழலாள் அலக்கண் நூற்றுவர்தம் பெண்டிரும் எய்தி நூல் இழப்ப - என் பக்கலிலே அருள் புரிய வேண்டும் என்பதே அவள் வேண்டுகோள். அஃது அப்படி இருக்க, இப்படிச் செய்வதோ என்னில், அவள்மாட்டு அவன் கொண்ட விசைப்பு[4] இப்படிச் செய்யச் செய்தது என்க. 'சந்தம்' என்பது நிறத்தைக் குறிக்கும். 'அல்' என்பது இருளைக் குறிப்பதாகக் கொண்டு, நிறம் இருண்ட குழலை உடையவள் என்னலாம். அல்லது, சந்தனப்பூ மாறாத குழலை உடையவள் என்று கூறலாம். அவள் அலக்கண் உற்றாள். அலக்கண் - துன்பம். அதனைத் துரியோதனன் முதலியோர்தம் மனைவியர் பட்டு. அவள் பட்ட துன்பத்திலும் மேலான பெருந்துன்பத்தை அவர்கள் பட்டார்கள். அவள் மங்கல நாண் பெற்றாள்; அவர்கள் மங்கலநாண் அற்றார்கள்; அவர்களுக்குத் துன்பம் நிலைநிற்குமாறு பண்ணினான். இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானை - ஒருவர் வலியார் சிலரைத் தமக்குச் சார்பாகப் பற்றினாலும் தானே தாழநின்று பாதுகாக்க வல்லவன் என்னும் இடத்தை இத்தொடர் விளக்குகிறது. திரௌபதி துச்சாதனனால் எளிவரவு பட்டபோது கணவன்மார் உதவி செய்தார் அல்லர்; அருச்சுனனுக்கு அரவக்கணையால் பேரிடர் வந்தபோது இந்திரன் உதவி செய்தான் அல்லன். இவ்விரிடத்தும் இறைவனே முறையே புடைவை சுரந்தும், தலையைக் காத்தும் உதவி செய்தான்.*

---

1. கேழ்க்க. 2. அறிந்தோமோ. 3. ஸுருஸுருப்புக் கேட்டு.
4. விசைப்பு - மிடுக்கு; நட்புரிமை.

**ஒப்புமைப் பகுதி**

**பாஞ்சாலியின் துயரத்தை நூற்றுவர் பெண்டிர் எய்துதல்**

*" பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்கமெல்லாம்
ஆண்டங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்தஅப்பன் "*

*" மறுக்கம் எல்லாம் என்றது 'அந்தகன் சிறுவன் அரசர்தம் அரசர்க்கு இளையவன் அணியிழையைச் சென்று எந்தமக்கு உரிமைசெய் என' என்கிறபடியே குருடன் பெற்ற பிள்ளையாகையாலே அறிவுகேடு வழிவழியாய், பிதாவானவன் கண்ணஞ்ச வளர்க்க வளருகை அன்றிக்கே, தான் கண்டபடி மூலையடியே திரிந்தவனாய், அதுக்கு மேலே, ராஜராஜனான துர்யோதநனுக்குப் பின்பிறந்தவனாய், அவன் கொண்டாடி வளர்த்த செருக்காலே தீம்பிலே தகண் ஏறின துஶ்ஶாஸநன் ஆகிற முரட்டுப்பையல், மஹோத்ஸவமாகையாலே ஆபரணங்களாலே அலங்க்ருதையாய் ஆர்த்தவ தோஷயுக்தையாய் இருக்கிறவள் பக்கலிலே கிட்டி, 'சூதிலேஉன்னையும் தோற்றார்கள், நீ போந்து எங்களுக்கு இழிதொழில் செய்' என்று சொல்ல, அவள்*

*'ரஜஸ்வலைக வஸ்த்ராஹம் நது மாம் நேதும் அர்ஹஸி
குருணாஞ்ச புரஸ் ஸ்த்தாதும் ஸபாயாம் நாஹம் உத்ஸஹே' என்ற அளவிலும், விடாதே மயிரைப் பிடித்து இழுத்துக்கொண்டு போந்து, மஹாஸபையிலே நிறுத்தி, பரிபவோக்திகளைப் பேசி வஸ்த்ரத்தை அபஹரித்துச் செய்கிறபோது அவள்பட்ட மறுக்கங்கள் அநேகமாகையாலே. ஆண்டு - அவை எல்லாவற்றையும் ஒன்று ஒழியாமல் திருவுள்ளத்திலே வைத்துக் கொண்டிருந்து. அங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்த - அவள் பரிபவப்பட்ட அத்தசையிலே அவளைப் பரிபவித்த துர்யோதநாதிகள் நூற்றுவருடையவும் ஸ்த்ரீகள் பக்கலிலேயாம்படி பண்ணின. 'சந்தமல் குழலாள் அலக்கண் நூற்றுவர்தம் பெண்டிரும் எய்தி' என்றாரிறே திருமங்கையாழ்வாரும். இனி நூல் இழந்ததிறே இவளில் அவர்களுக்கு ஏற்றம். பெரி. தி. 4:3:6 ம. மா. மு. உரை.*

*[மஹோத்ஸவம் - பெருவிழா. ஆர்த்தவ - மாதவிடாய். பரிபவோக்தி - இழிவுரை.]*

(26)

## 127

**பரதனும் தம்பி சத்துருக் கனனும்
இலக்கும னோடுமை திலியும்
இரவுநன் பகலும் துதிசெய நின்ற
இராவணாந் தகனைஎம் மானைக்
குரவமே கமழும் குளிர்பொழில் ஊடு
குயிலொடு மயில்கணின் றால
இரவியின் கதிர்கள் நுழைதல்செய் தறியாத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே.**

---

**127.** 3 : 7 ராட.

**ப. ரை : பரதனும் தம்பி சத்துருக்கனனும்** - *பரதாழ்வானும் அவனுக்குத் தம்பியான சத்ருக்னாழ்வானும்,* **இலக்குமனோடு மைதிலியும்** - *இலக்குவனோடு சீதையும்,* **இரவும் நன் பகலும் துதி செய நின்ற** - *இடைவிடாது வணங்கும்படி எழுந்தருளியிருக்கிற,* **இராவண அந்தகனை எம்மானை** - *இராவணனைக் கொன்றவனான எம்பெருமானை,* **குரவமே கமழும் குளிர் பொழிலூடு** - *குரவ மலர்களே மணக்கும் குளிர்ந்த சோலைக்குள்ளே,* **குயிலொடு மயில்கள் நின்று ஆல** - *பாடும் குயில்களோடு மயில்கள் ஒத்துநின்று ஆட,* **இரவியின் கதிர்கள் நுழைதல் செய்து அறியா** - *ஞாயிற்றின் கதிர்கள் ஒருகாலும் உள்ளே நுழைந்து அறியாத,* **திருவல்லிக் கேணிக் கண்டேனே**-.

**சி. கு :** *இராவணன் அந்தகன் - இராவணாந்தகன். நிலைமொழியீற்று னகரமெய் கெட்டு அகர ஈறாய் நிற்க வருமொழி முதலில் நிற்கும் அகரத்தோடு சேர்ந்து ஆகாரமாயிற்று; வடமொழிப் புணர்ச்சி; தீர்க்கசந்தி.*

**வியா : ஏழாம் பாட்டு : பரதனும் தம்பி சத்துருக்கனனும்** - ஸ்ரீபரதாழ்வானும் அவனோடு கையடைப்பான ஸ்ரீசத்ருக்நாழ்வானும். **இலக்குமனோடு மைதிலியும்** - இதுவும் இங்ஙனே ஒரு சேர்த்தி[1]. **இரவு நன் பகலும்** - ஸமர காலத்திலே கண்டு அநுபவித்தவர்களோடு கேட்டார் வாய் கேட்டாரோடு வாசியற ஏத்தாநிற்பர்கள் ஆயிற்று. தேசிகர் அடங்கலும் திரள்திரளாக நின்றாயிற்று ஏத்துவது. **இரவும் நன் பகலும்** - நமக்கும் ஓரோ காலம்[2] நெஞ்சு ஒழிந்தபோது ஏத்துவது ஒன்று உண்டன்றோ. அங்ஙன் அன்றிக்கே திவா ராத்ர விபாகம் அறக் கிட்டினதனையும் ஆழங்கால்படுகைக்கு உடலான இத்தனை. **இராவணாந்தகனை** - இப்படி ஏத்துவதுதான் ராவண வதம் பண்ணின அபதாநம் ஒன்றுமே ஆயிற்று. அவர்களோபாதி நானும் தோற்று

---

**வி : ஏழாம் பாட்டு : பரதனும் தம்பி சத்துருக்கனனும்** - *சீர்மிகு பரதாழ்வானும் அவனோடு கையடைப்பான[3] சீர்மிகு சத்துருக்கன ஆழ்வானும். இவ்இருவரும் ஒரு சேர்த்தி[4].* **இலக்குமனோடு மைதிலியும்** - *இதுவும் பெருமாளைப் பிரியில் உயிர் வாழாதபடி இருக்கும் ஒரு சேர்த்தி.* **இரவும் நன் பகலும்** - *இலக்குவனும் மைதிலியும் பூசல்தலையில் இராமன் வீரச்செயல்களை நேரில் கண்டு மகிழ்ந்தவர்கள்; பரதனும் சத்துருக்கனனும் அவற்றைக் கேட்டு அறிந்தவர்கள். பூசற் காலத்திலே கண்டு மகிழ்ந்தவர்களோடு கேட்டார் வாய் கேட்டாரோடு வேற்றுமை இன்றி எல்லாரும் ஏத்திக்கொண்டு இருப்பார்கள். நிலவர்[5] அடங்கலும் திரள் திரளாக நின்றன்றோ ஏத்துவர்.* **இரவும் நன் பகலும் துதி செய நின்ற** - *நெஞ்சம் பிறவற்றில் ஈடுபடாமல் ஒழிந்திருக்கும் ஒவ்வொரு காலத்தில் நாமும் இறைவனை வழிபடுவது உண்டல்லவா? அப்படி அல்லாமல் இரவு என்றும் பகல் என்றும் பாராமல் ஏத்தினர்; கிட்டின வாய்ப்பு எல்லாம் அவன்பால் ஆழங்காற்படுகைக்கு உடலாய் அமைந்தன.* **இராவணாந்தகனை எம்மானை** - *இப்படி ஏத்துவதுதான் இராவணனைக் கொன்ற அந்த வீரச்செயல் ஒன்றனைக் குறித்தே அமைந்தது. அவர்களைப் போல நானும் தோற்று ஏத்தும்படி பண்ணினவன்; அவனை.*

---

1. சேர்த்தி. 2. நமக்குமோர் காலம்.
3. கையடைப்பான - அடக்கமான. 4. சேர்த்தி - இணை. 5. நிலவர் - தேசிகர்; மேலோர்.

ஏத்தும்படி பண்ணினவனை. குரவம் இத்யாதி - குரவம் கமழாநிற்பதால் ஶ்ரமஹரமான பொழிலின் ஊடே குயில்களோடேகூட மயில்கள் ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ண. இரவி இத்யாதி - ஈஶ்வராஜ்ஞை நடையாடாத தேசம் ஆயிற்று. "பீஷோதேதி" என்றது அவ்இடத்தே ஒழிய ஆயிற்று.

---

குரவமே கமழும் குளிர் பொழிலூடு குயிலொடு மயில்கள் நின்று ஆல - *குரவம் கமழ்ந்து கொண்டிருப்பதாய் அயர்வு அகற்றுவதாய் இருக்கும் பொழிலின் ஊடே குயில் களோடே கூட மயில்கள் உள்ளக்கிளர்ச்சியுற்று நடனமாட.* இரவியின் கதிர்கள் நுழைதல் செய்து அறியா - *இறைவன் ஆணை நடையாடாத இடமாய் இருந்தது.* "இம் முதல்வனிடத்தில் உள்ள அச்சத்தாலேயே பகலவன் தோன்றுகிறான்" *(தைத். ஆந. 8 : 1) என்கிறது உபநிடதம். இப்படிப் பகலவன் முதல்வனுக்கு அஞ்சித் தோன்றுவதும் அவ்இடத்தில் அல்லாமல் பிற இடங்களிலேயே ஆகும். (27)*

## 128

பள்ளியில் ஓதி வந்ததன் சிறுவன்
வாயிலோர் ஆயிர நாமம்
ஒள்ளிய வாகிப் போதவாங் கதனுக்
கொன்றுமோர் பொறுப்பில னாகிப்
பிள்ளையைச் சீறி வெகுண்டுதூண் புடைப்பப்
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்த்
தெள்ளிய சிங்க மாகிய தேவைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே.

ப. ரை : பள்ளியில் ஓதி வந்த - *பள்ளிக்கூடத்தில் படித்துவிட்டுத் தன்பால் வந்த,* தன் சிறுவன் வாயில் - *தனக்கு மகன் ஆன பிரகலாதனுடைய வாயிலிருந்து,* ஓர் ஆயிரம் நாமம் ஒள்ளிய ஆகிப் போத - *இறைவனுடைய ஓர் ஆயிரம் திருப்பெயர் கள் அழகாகப் புறப்பட்டு வர,* ஆங்கு - *அவ்இடத்திலே,* அதனுக்கு ஒன்றும் ஓர் பொறுப்பு இலன் ஆகி - *அதுகண்டு சற்றும் பொறுமை இல்லாதவனாய்,* பிள்ளையைச் சீறி வெகுண்டு - *மகனை மிகவும் சினந்து,* தூண் புடைப்ப - *வழக்குப் பேசி முடிந்தபின், இரணியன் தான் நட்ட தூணைத் தானே தட்ட,* பிறை எயிற்று அனல் விழிப் பேழ் வாய் - *பிறை போலும் பற்களையும், நெருப்புப் பொறி கிளர்கின்ற கண்களையும் பெரிய வாயையுமுடைய,* தெள்ளிய சிங்கம் ஆகிய தேவை - *தெளிந் திருக்கும் ஆளரியாய்த் தோற்றம் கொண்ட தேவனை,* திருவல்லிக்கேணிக் கண்டேனே -.

சி. கு : *சிறுவன் - பிரகலாதன். பொறுப்பு - பொறுமை. சீறி வெகுண்டு - ஒருபொருட் பன்மொழி; மிகவும் கோபம் கொண்டு என்பது பொருள். தெள்ளிய சிங்கம் - இதன் அடியாகவே திருவல்லிக்கேணி அழகிய சிங்கப் பெருமாளுக்குத் தெளி சிங்கப் பெருமாள் என்னும் திருப்பெயர் வழங்கலாயிற்று.*

---

128. 2 : 6 குறிப்பிலன். 4 : 3 மதாகிய.

**வியா : எட்டாம் பாட்டு : பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன் -** பள்ளி ஓதும் பருவத்தில் சொன்னவை அடங்கலும் சிரஸாவஹிக்கவேண்டும்படி இருக்கும். இதாயிற்றுப் பருவம் இருந்தபடி. அதுக்கு மேலே தன் வயிற்றில் பிறந்த ப்ரஜை சொன்னவை அடையப் பொறுக்க வேணும். **வாயில் இத்யாதி -** அவன் அப்போது சொல்லிற்று நால் இரண்டாகிலும்[1] பருவத்துக்குத் தக்க அளவு அல்லாதபடி இருக்கையாலே குவாலாகச் சொல்லுகிறார். **ஒள்ளிய ஆகிப் போத -** வயிற்றில் பிறந்தவன் சொல்லுகையாலே இனிதாய் இருக்குமிறே. **ஆங்கு -** அவ்விடத்தில். **அதனுக்கு ஒன்றும் ஓர் பொறுப்பு இலன் ஆகி -** பள்ளி ஓதும் பருவத்தில் சொல்லுவது எல்லாம் பிரியமாய் இருக்கும்; தன் வயிற்றில் பிறந்தவன் சொல்லிற்று எல்லாம் இனிதாய் இருக்கும்; சத்ருவே சொல்லினும் சிரஸாவஹிக்க வேண்டும் அத்தைச் சொல்லிற்று. அஸஹ்யாபசார ப்ராசுர்யத்தாலே திருநாமம் கேட்டுப் பொறுக்க மாட்டாமையாலே முனிந்தான் ஆயிற்று. **பிள்ளையை -** திருநாமம் சொன்னதுவே ஹேதுவாக வயிற்றில் பிறந்தவனைக் கைவிட்டான் அவன். திருநாமம் சொன்னாரோடே தமக்கு ஸம்பந்தமாக நினைத் திருந்தபடியாலே 'பிள்ளை' என்கிறார். **வெகுண்டு தூண் புடைப்ப -** கோபத்தாலே செய்வது[2] அறியாதே தூணைத் தட்ட. **பிறை இத்யாதி -** பிறை போலே இருந்த எயிற்றையும் அக்நி போலே இருந்த கண்களையும் புறப்படவிடா நின்றுள்ள பெரிய வாயையுமுடைய. **தெள்ளிய சிங்கம் -** ஹிரண்யனுடைய

---

வி : எட்டாம் பாட்டு : பள்ளியில் ஓதி வந்த சிறுவன் - *பள்ளியோதும் பருவத்தில் சொல்லிய அடங்கலும் தலைமேற் கொள்ள வேண்டும்படி இருக்கும். இஃது அவன் பருவம் இருந்த நிலை. அதற்கு மேல் தன் வயிற்றில் பிறந்த பிள்ளை அவன். எனவே அவன் சொல்லிய எல்லாம் பொறுத்துக்கொள்ள வேண்டும்.* **வாயில் ஓர் ஆயிர நாமம் -** *அவன் அப்போது சொல்லிய நாலிரண்டு ஆகிலும் பருவத்துக்கு ஏற்றனவாய் அமைவன அல்ல; அவன் பருவத்தை நோக்கின் அவன் பேச்சு மேலான தரமுடையது; எனவே அதனைக் குவலாகச்*[3] *சொல்கிறார்.* **ஒள்ளிய ஆகிப் போத -** *தன் வயிற்றில் பிறந்தவன் சொல்வதனாலே அவை இனிய வாய் இருக்குமன்றோ!* **ஆங்கு -** *அவ்இடத்தில்.* **அதனுக்கு ஒன்றும் ஓர் பொறுப்பு இலன் ஆகி -** *பள்ளியில் ஓதும் பருவத்தில் சொல்லுவன எல்லாம் விரும்பத்தக்கன வாய் இருக்கும்; தன் வயிற்றில் பிறந்தவன் சொல்லிய எல்லாம் இனியவாய் இருக் கும். அவனோ பகைவனே சொன்னாலும் தலையாலே கொள்ள வேண்டு வதனைச் சொன்னான். இரணியனோ, பொறுக்க ஒண்ணாத தகாத செயல் களை மிகுதியாகச் செய்தவனாகையாலே திருப்பெயர் கேட்டுப் பொறுக்க மாட்டாது முனிந்தான்.* **பிள்ளையை -** *திருப்பெயர் சொல்லியதே காரணமாக வயிற்றில் பிறந்தவனைக் கைவிட்டான் அவன். இவ்ஆழ்வார் திருப்பெயர் சொன்னாரோடே தமக்கு உறவு இருப்பதாக நினைந்திருந்த படியாலே 'பிள்ளை' என்கிறார்.* **வெகுண்டு தூண் புடைப்ப -** *சீற்றத்தாலே செய்வதறியாதே தூணைத் தட்ட.* **பிறை எயிற்று அனல் விழிப் பேழ் வாய் -** *பிறை போலே இருந்த எயிற்றை யும், தீப்போலே இருந்த கண்களையும், நாக்கைப் புறப்பட விட்ட பெரிய வாயையு முடைய,* **தெள்ளிய சிங்கம் -** *இரணியனுடைய முருட்டு வடிவைக் கண்டு பிற்*

---

1. நால் இரண்டே யாகிலும். 2. செய்வுது.
3. குவாலாக - பெரிதாக; அதிகமாக.

முருட்டு[1] வடிவைக் கண்டு பிற்காலியாதே நரஸிம்ஹமாய் அவ்வழியாலே தானே ஆஶ்ரயணீயன் என்னும் இடத்தை[2] வெளியிட்டவன்.

---

காலியாதே[3] ஆளரியாய்த் தோன்றியவன்; அவ்வழியாலே தானே வணங்கத் தக்கவன் என்பதனை வெளியிட்டவன்; அவனை. திருவல்லிக்கேணிக் கண்டேனே-.

**ஒப்புமைப் பகுதி**

*1. இப்பாட்டின் முதற்பகுதி 'எங்கும் உளன் கண்ணன்' என்னும் திருவாய்மொழி உரையிலும், 'மடநெஞ்சம் என்றும்' என்னும் திருவிருத்த உரையிலும் மேற்கோளாகக் காட்டப்பட்டு விளக்கப்பட்டுள்ளது. அவ் விளக்கங்கள் வருமாறு :*

*" பள்ளியில் ஓதி வந்த - பள்ளியோதும் பருவத்தில் உள்ளவை அடையக் கொண்டாட்டமாய் இருக்கும். அதுக்கு மேலே, தன் சிறுவன் - தன் வயிற்றில் பிறந்தவன் வார்த்தை மிகவும் ப்ரியமாய் இருக்கும். வாயிலோர் ஆயிர நாமம் - அதுக்கு மேலே திருநாமத்தைச் சொல்லிற்று. ஒள்ளிய வாகிப் போத - இவை ஒன்றும் இல்லையாகிலும் சொன்ன போதை இனிமைதான் கொண்டாட வேணும். ஆங்கு அதனுக்கு ஒன்றும் ஓர் பொறுப்பிலன் ஆகி - அஸஹ்யாபசாரமிறே. பிள்ளையைச் சீறி - திருநாமம் சொன்னதுவே ஹேதுவாக 'புத்ரன் அன்று' என்று விட்டான் அவன்; திருநாமம் சொன்னவர்களோடே தமக்கு எல்லா உறவும் உண்டாக நினைத்திருக்கையாலே இவர் 'பிள்ளை' என்கிறார் "*

*தி. வா. மொ. 2:8:9-36*

*" பள்ளியில் ஓதிவந்த - பள்ளியோதும் பருவத்தில் ஏதேனும் சொல்லிலும் கொதுகுலமாயிறே இருப்பது. தன் சிறுவன் - ஆரேனும் பிள்ளைகள் சொல்லினும் இனிதாய் இருக்கும் பருவத்திலே தன் வயிற்றிலே பிறந்த வனுமிறே. வாயிலோர் ஆயிர நாமம் ஒள்ளியவாகிப் போத - சத்ருவே சொல்லிலும் காலிலே விழ வேண்டும்படி வார்த்தையை ஆயிற்றுச் சொல்லிற்று. அப் பருவத்தில் அவன் சொன்ன வார்த்தையாகையாலே ஒன்றையே குவாலாகச் சொல்லுகிறார். ஒன்றும் ஓர் பொறுப்பிலனாகி - அஸஹ்யாபசாரம் ஆயிற்று. நிருபாதிக பந்தம் உண்டாய் இருக்க அவற்றை யும் காற்கடை கொண்டு சத்ருக்கள் செய்யுமத்தைச் செய்தான். பிள்ளை யைச் சீறி - திருநாமம் சொன்னதுவே ஹேதுவாக இவனைப் 'புத்ரன் அன்று' என்று கைவிட்டான். இவர் அவனோடு தமக்கு ஒரு ஸம்பந்தம் சொல்லுகிறார் "* *தி. வி. 46 பெ. உரை.*

2. **தெள்ளிய சிங்கத்தின் தோற்றம்**

*பாட்டு 14இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

*(28)*

---

1. முரட்டு. 2. என்னுமத்தை.
3. பிற்காலித்தல் - பின்வாங்குதல்.

**மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான்**
**வேட்கையி னோடுசென் றிழிந்த**
**கானமர் வேழம் கையெடுத் தலறக்**
**கராஅதன் காலினைக் கதுவ**
**ஆனையின் துயரம் தீரப்புள் ளூர்ந்து**
**சென்றுநின் றாழிதொட் டானைத்**
**தேனமர் சோலை மாடமா மயிலைத்**
**திருவல்லிக் கேணிக்கண் டேனே.**

**ப. ரை :** **மீன் அமர் பொய்கை** - *மீன்கள் பொருந்திய தடாகத்திலே,* **நாள் மலர் கொய்வான்** - *அன்றலர்ந்த புதிய மலரினைப் பறிப்பதற்கு,* **வேட்கையினோடு சென்று இழிந்த** - *விருப்பத்தோடு சென்று இறங்கிய,* **கான் அமர் வேழம் கையெடுத்து அலற** - *காட்டில் திரியும் கயேந்திரன் தனது துதிக்கையை உயரத் தூக்கிப் பிளிறும் படி,* **கரா அதன் காலினைக் கதுவ** - *முதலை ஒன்று அதன் காலைப் பற்றிக் கொள்ள,* **ஆனையின் துயரம் தீர** - *அந்த யானையின் நோவுபாடு தீரும்படி,* **புள் ஊர்ந்து சென்று** - *பெரிய திருவடியின் மீது அமர்ந்து கடுநடை இட்டு வந்து,* **நின்று** - *அப்பொய்கைக்கரையிலே நின்று,* **ஆழி தொட்டானை** - *திருவாழியை முதலையின் மீது நடத்திய பெருமானை,* **தேன் அமர் சோலை** - *தேன் மாறாத சோலைகளைக் கொண்ட,* **மாட மாமயிலை** - *மாடங்களையுடைய பெரிய மயிலாப்பூரை அடுத்த,* **திருவல்லிக்கேணிக் கண்டேனே** -.

**சி. கு :** *கொய்வான் - 'வான்' ஈற்று எதிர்கால வினையெச்சம்.*

**வியா : ஒன்பதாம் பாட்டு : மீன் அமர் இத்யாதி** - நெடுநாள் பூத் தேடிப் பெறாமையாலே இடர்பட்டுத் திரிந்த இது பூத்த தடாகத்தைக் கண்டு, க்ஷுத்ர மத்ஸ்யத்துக்கு மேற்பட துஷ்ட ஸத்வம் உண்டு என்று மதியாதே வந்து செவ்விப் பூவைப் பறிக்கைக்காகப் பெரிய அபிநிவேசத்தோடே வந்து இழிந்த. **கான் அமர் வேழம்** - காட்டிலே ஸ்வைர ஸஞ்சாரம் பண்ணக்கடவ யானையானது கையெடுத்துக் கூப்பிடும்படியாக முதலையானது இதின் காலைக் கதுவ. முதலைக்குத் தன் நிலமாய் இதுக்கு வேற்று நிலம் ஆயிற்று. ஆனை

---

வி : ஒன்பதாம் பாட்டு : **மீன் அமர் பொய்கை நாண் மலர் கொய்வான் வேட்கையினோடு சென்று இழிந்த** - *யானை நெடுநாளாகப் பூத் தேடியது; ஆயினும் பூப் பெறாமையாலே இடர்ப்பட்டுத் திரிந்தது; பூத்த தடாகத்தைக் கண்டது; அதில் புல்லிய மீன்களுக்கு மேற்படக் கொடிய விலங்கு உண்டு என்று எண்ணாமல் செவ்விப் பூவைப் பறிப்பதற்காகப் பெரிய விழைவோடே இழிந்தது; அப்படி இழிந்த.* **கான் அமர் வேழம் கை எடுத்து அலறக் கரா அதன் காலினைக் கதுவ** - *காட்டிலே தன்னடையே கட்டற்றுத் திரியக் கூடிய யானை கையெடுத்துக் கூப்பிடும்படியாக முதலையானது இதன் காலைக் கதுவ. பொய்கை முதலைக்குத் தன் நிலமாய் இதற்கு வேற்று நிலமாய் அமைந்தது.* **ஆனையின் துயரம் தீரப் புள்**

நெடுநாள் பட்ட இடர் எல்லாம் போம்படியாகப் பெரிய திருவடியை மேற்கொண்டு வந்து, ஆனைக்கு இடர்இன்றிக்கே முதலைக்கே இடராம்படி திருவாழியை ஏவினான் ஆயிற்று. வண்டுகள் அமர்ந்த சோலையையும் மாடங்களையும் உடைத்தான மயிலாப்பூரில் திருவல்லிக்கேணிக் கண்டேனே.

---

**ஊர்ந்து சென்று நின்று ஆழி தொட்டானை** - *ஆனை நெடுநாள் பட்ட இடர் எல்லாம் போகும்படி பெரிய திருவடியை மேற்கொண்டு வந்தான். ஆனைக்கு இடர் இல்லாமல் முதலைக்கே இடர் ஆகும்படி திருவாழியை ஏவினான்; அவனை.* **தேன் அமர் சோலை மாட மாமயிலைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே** - *வண்டுகள் அமர்ந்த சோலைகளையும் மாடங்களையும் உடைத்தான மயிலாப்பூரில் உள்ள திருவல்லிக்கேணியில் கண்டேனே.*

**ஒப்புமைப் பகுதி**

புள்ளூர்ந்து சென்றமை

*" உதவப் புள்ளூர்ந்து அங்கு உறுதுயர் தீர்த்த அதகன் "*

*" உதவப் புள்ளூர்ந்து - இந்த ஆர்த்த த்வநி திருச்செவிப்பட்டபோதே திருப் படுக்கையில் நின்றும் பதறி எழுந்திருந்து, 'அதந்த்ரித சமூபதிப்ரஹித ஹஸ்தம்' இத்யாதிப்படியே ஸேநைமுதலியார் திருக்கை கொடுக்கவும் பற்றாதே, திருவடிநிலை கோத்து எழுந்தருளுகையுமின்றிக்கே, வெறும் தரையிலே பத்து எட்டு அடியிட்ட பதற்றத்தைக் கண்டு 'இதுக்கு அடி என்?' என்று பயப்பட்டு திவ்யாந்த:புரம் கைநெரிக்க, பெரிய திருவடியைப் பண்செய்யப் பெறாமல், வெறும்புறத்திலே மேற்கொண்டு, 'அந்த ஆர்த்திக்கு உதவ வேணும்' என்னுமத்தைப் பற்ற அவனை ப்ரேரித்து விரைய நடத்திக்கொண்டு சென்று " பெரி. தி. 2:1:9 ம. மா. மு. உரை.*

*பாட்டு 75இன் ஒப்புமைப் பகுதி பார்க்க* *(29)*

## 130

மன்னுதண் பொழிலும் வாவியும் மதிளும்
மாடமா ளிகையுமண் டபமும்
தென்னன்தொண் டையர்கோன் செய்தநன் மயிலைத்
திருவல்லிக் கேணிநின் றானைக்
கன்னிநன் மாட மங்கையர் தலைவன்
காமரு சீர்க்கலி கன்றி
சொன்னசொல் மாலை பத்துடன் வல்லார்
சுகம்இனி தாள்வர்வான் உலகே.

---

130. 1 : 4 மதிலும்.

**ப. ரை :** **மன்னு** - நிலைபெற்ற, **தண் பொழிலும்** - குளிர்ந்த சோலைகளும், **வாவியும்** - குளமும், **மதிளும்** - மதில்களும், **மாடம்** - மாடங்களும், **மாளிகையும்** - மேல்மாடி உள்ள வீடுகளும், **மண்டபமும்** - மண்டபங்களும் உடைத்தாம்படி, **தென்னன் தொண்டையர் கோன் செய்த** – தென்னாட்டவன் ஆன தொண்டைமான் என்னும் அரசன் அமைத்த, **நன் மயிலைத் திருவல்லிக்கேணி நின்றானை** - அழகிய மயிலைக்கு அடுத்த திருவல்லிக்கேணியிலே நின்றருளும் பெருமானைக் குறித்து, **கன்னி நன் மாட மங்கையர் தலைவன்** - பாதுகாப்பு அமைந்த நல்ல மாடங்களையுடைய திருமங்கை நாட்டில் உள்ளார்க்குத் தலைவனும், **காமரு சீர்க் கலிகன்றி** – விரும்பப்படும் சிறப்பை உடைய கலிகன்றியும் ஆகிய ஆழ்வார், **சொன்ன** - அருளிச்செய்த, **சொல் மாலை பத்துடன் வல்லார்** – சொல்மாலையாகிய இப்பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர்கள், **சுகம் இனிது** - மிகவும் இன்பமாக, **வான் உலகு ஆள்வர்** - திருநாட்டை ஆளப்பெறுவர்.

**சி. கு:** இதில் சுட்டப்பெறும் தொண்டையர்கோன் தந்திவர்மன் தந்தை ஆகிய பல்லவ மல்லன் ஆகலாம் என்பது திரு மு. ராகவையங்கார் கருத்து. தந்திவர்மன் கல்வெட்டுத் திருவல்லிக்கேணியில் உள்ளது. தென்னன் - தென் (தமிழ்) நாட்டவன்.

வியா : **பத்தாம் பாட்டு : மன்னு தண் பொழிலும் இத்யாதி** - நித்யமாய்க் குளிர்ந்து[1] இருந்துள்ள பொழிலும், நல்ல நீர்நிலங்களும், அரணாகப் போரும்படியான மதிள்களும், மாடங்களும், மாளிகைகளும், மண்டபங்களும், இன்னமும்[2] சொல்லிச் சொல்லாத நன்மைகளும் எல்லாம் உண்டாம்படியாயிற்றுத் தொண்டைமான் சக்கரவர்த்தி ஏற்றிற்று. **கன்னி** - அரணாக போரும்படியாய் நன்றாய் இருக்கிற மாடங்களையுடைய திருமங்கைக்கு ப்ரதாநர். **காமரு சீர்க் கலிகன்றி** - ஸ்ப்ருஹணீயமான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையுடைய ஆழ்வார் அருளிச் செய்த பத்தையும் அப்யஸிக்க வல்லார்கள். **சுகம் இனிது ஆள்வர் வான் உலகே** - நித்யாநுபவம் பண்ணலாம்படியான நித்ய விபூதியை ப்ராபிக்கப் பெறுவர்.

---

வி : பத்தாம் பாட்டு : **மன்னு தண் பொழிலும் வாவியும் மதிளும் மாட மாளிகையும் மண்டபமும் தென்னன் தொண்டையர் கோன் செய்த நன் மயிலைத் திருவல்லிக்கேணி நின்றானை** - எந்நாளும் குளிர்ந்திருக்கும் பொழிலும், நல்ல நீர் நிலங்களும், அரணாக அமையும்படியான மதிள்களும், மாடங்களும், மாளிகைகளும், மண்டபங்களும், இன்னமும் சொல்லிச் சொல்லாத நன்மைகளும் எல்லாம் உண்டாம்படி அரசன் தொண்டைமான் ஏற்றினான்[3]. **கன்னி நன் மாட மங்கையர் தலைவன்** - அரணாக அமையுமாறு நன்றாய் இருக்கும் மாடங்களையுடைய திருமங்கைக்கு முதலியாய்[4] இருப்பவர். **காமரு சீர்க் கலிகன்றி சொன்ன சொல் மாலை பத்துடன் வல்லார்** - விரும்பத்தக்க சீர்மிகு வைணவத் திருவையுடைய ஆழ்வார் அருளிச்செய்த பத்தையும் பயில வல்லார்கள். **சுகம் இனிது ஆள்வர் வான் உலகே** - நிலையாகத் துய்க்கத் தக்க வகையில் திருநாட்டை அடையப் பெறுவர். *(30)*

---

1. குளுந்து. 2. இன்னம்.
3. ஏற்றுதல் - அமைத்தல். 4. முதலி - முதன்மையானவர்.

## இரண்டாம் பத்து - நான்காம் திருமொழி - அன்றாயர்

பிர : பிராட்டிமாரோடுகூட வந்து விரோதி நிரஸந சீலனாய், ப்ரபல விரோதி பாபங்களை அநாயாஸேந போக்க வல்லனாய், ஸர்வ ஸ்வாமியான ஸர்வேச்வரன், உகந்தருளின நிலங்கள் எங்கும் பண்ணும் விருப்பத்தைத் திருநீர்மலையிலே பண்ணிக்கொடு வந்து ஸந்நிஹிதன் ஆனான். அநவஹிதராய் இருப்பார் வார்த்தையைக் கேட்டு அநர்த்தப்பட்டுப் போகாதே அவனை ஆச்ரயித்து க்ருதார்த்தராய்ப் போங்கோள் என்று பரோபதேச ப்ரவ்ருத்தர் ஆகிறார்.

---

தோ : *எப்பொருட்கும் உடையவனாய்த் திகழுபவன் முழுமுதல்வன்; அவன் பிராட்டிமாரோடுகூட வந்து பகைவர்களை அழிப்பவனாகவும் வலிமை மிக்க பகையாகிய தீவினைகளை விளையாட்டாகப் போக்க வல்லனாகவும் காட்சி யளித்தான்; அத்துடன், உகந்தருளின நிலங்கள் எங்கும் பண்ணும் விருப்பத்தைத் திருநீர்மலையிலே பண்ணிக்கொடு வந்து நிற்பவன் ஆனான். மனிதர்காள், பொறுப்பற்றார் சொற்கேட்டுத் துயரப்பட்டுப் போகாதே அவனைப்பற்றிப் பயன் பெற்றாராய் ஆகுங்கள் என்று பிறர்க்கு அறிவுரை வழங்குவதில் இழிகிறார்.*

### 1 31

அன்றா யர்குலக் கொடியோ டணிமா
மலர்மங் கையொடன் பளவி அவுணர்க்கு
என்றா னுமிரக் கமிலா தவனுக்
குறையும் மிடமா வதிரும் பொழில்சூழ்
நன்றா யபுனல் நறையூர் திருவா
லிகுடந் தைதடந் திகழ்கோ வனகர்
நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தாற்கு
இடமா மலையா வதுநீர் மலையே.

ப. ரை : அன்று - *கிருட்டிணனாய்ப் பிறந்த அக்காலத்தில்,* ஆயர் குலக் கொடியோடு - *இடைக்குலத்திற் பிறந்த கொடி போலும் நப்பின்னைப்பிராட்டி யோடும்,* அணி மா மலர் மங்கையோடு - *அழகிய சிறந்த தாமரைமலரிற் பிறந்த திருமகளோடும்,* அன்பு அளாவி - *அன்புடன் கலந்து,* என்றானும் - *எக்காலத் திலும்,* அவுணர்க்கு இரக்கம் இல்லாதவனுக்கு - *அசுரர்களிடத்தில் இரக்கம் இன்றி இருப்பவனுக்கு,* உறையும் இடம் ஆவது - *என்றும் இருக்கும் இடமாக இருப்பது,* நீர்மலையே - *திருநீர்மலையாகும்;* இரும் பொழில் சூழ் - *பெரிய சோலைகளாலே சூழப்பட்ட,* நன்று ஆய புனல் - *நல்ல நீர்வளமுடைய,* நறையூர் திருவாலி குடந்தை தடம் திகழ் கோவல்நகர் - *திருநறையூர், திருவாலி, திருக்குடந்தை, தடாகங்களாலே விளங்குகின்ற திருக்கோவலூர் ஆகிய இடங்களில்,* நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தாற்கு - *முறையே நின்றவனும் அமர்ந்தவனும் படுத்த வனும் நடந்தவனுமாகிய பெருமானுக்கு,* இடம் ஆம் மலையாவது - *இடமாகிய மலையாக இருப்பது,* நீர்மலையே - *திருநீர்மலையாகும்.*

**சி.கு :** அணிமா மலர்மங்கை - திருநீர்மலைத் தனிக்கோயில் நாச்சியார் திருப்பெயர். நீர்மலையே என்பதனை, 'உறையும் இடமாவது நீர்மலையே' என்றும் இடம் ஆம் மலையாவது நீர்மலையே என்றும் இரண்டு இடத்தும் கூட்டுக. அல்லது, உறையும் இடமாவதும், இடம் ஆம் மலையாவதும் நீர் மலையே என்று எண்ணும்மை விரித்துக்கொள்க. இடமா மலையாவது என்பதனை இடம் மாமலையாவது என்றும் பிரிக்கலாம். உரையிலும் அவ்வாறே பிரிக்கப்பட்டுள்ளது. திருநீர் மலை - இது தொண்டைநாட்டில் உள்ள திருக் கோயில். சென்னைக்கு அண்மையில் உள்ளது. நீர்வண்ணன் என்பது பெருமாள் திருப்பெயர்.

இத்திருமொழி எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

வியா : முதற் பாட்டு : **அன்று ஆயர்** - முன்பு பண்டு ஒருநாள், நப்பின்னைப்பிராட்டியாரோடும், அழகிய தாமரைப் பூவை இருப்பிடமாகவுடைய பெரியபிராட்டியாரோடும் விரும்பிக் கலந்து. **அவுணர்க்கு இத்யாதி** - அவர் களுடன்கூட இருந்தபோதும் அகப்பட அஸுரவர்க்கத்துக்கு ஒருக்காலும் இரக்கம் இல்லாதவனுக்கு நித்யவாஸம் பண்ணுகைக்கு ஸ்தாநமாவது: பரந்த பொழிலாலே சூழப்பட்ட நல்ல ஜலஸம்ருத்தியை உடைத்தான திருநறையூர், இப்படிப்பட்ட நன்மைகளையுடைய திருவாலி, திருக்குடந்தை, தடாகங்கள் திகழாநின்றுள்ள திருக்கோவலூர் இவை துடக்கமானவற்றில்[1]. **நின்றான் இத்யாதி** - திருநறை யூரிலே நின்றான்; திருவாலியிலே இருந்தான்; திருக்குடந்தையிலே சாய்ந்தான்; திருக்கோவலூரிலே நடந்தான். **இடமா மலையாவது** - மலையாய் இருக்கச் செய்தே அல்லாதவை வாஸஸ்தாநம் ஆகிறது இல்லையிறே. உகந்தருளின

---

வி : முதற்பாட்டு : **அன்று ஆயர் குலக் கொடியோடு அணி மா மலர் மங்கையொடு அன்பு அளவி** - பண்டு ஒருநாள், நப்பின்னைப்பிராட்டியோடும், அழகிய தாமரைப்பூவை இருப்பிடமாகவுடைய பெரியபிராட்டியாரோடும் விரும்பிக் கலந்து. **அவுணர்க்கு என்றானும் இரக்கம் இலாதவனுக்கு உறையும் இடம் ஆவது** - அம்மங்கையரோடுகூட இருந்தபோதும், அகப்பட அசுரர் கூட்டத்திற்கு ஒருகாலும் இரக்கமில்லாதவனுக்கு நிச்சலும் உறைவதற்கு இடமாய் இருப்பது: **இரும் பொழில் சூழ் நன்று ஆய புனல் நறையூர் திருவாலி குடந்தை தடம் திகழ் கோவல் நகர்** - பரந்த பொழிலாலே சூழப்பட்ட நல்ல நீர் வளத்தை உடைத்தான திருநறையூர், இப்படிப்பட்ட நன்மைகளையுடைய திருவாலி, திருக்குடந்தை, தடாகங்கள் திகழும் திருக்கோவலூர் இவை தொடக்க மானவற்றில். **நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தாற்கு** - திருநறையூரிலே நின்றான்; திருவாலியிலே இருந்தான்; திருக்குடந்தையிலே சாய்ந்தான்; திருக் கோவலூரிலே நடந்தான்; அப் பெருமானுக்கு. **இடமா மலை ஆவது** - மலையாக இருந்தபோதிலும் அல்லாதவை எல்லாம் உறையும் இடமாக அமையவில்லை. இதுவே மலையாக இருத்தலோடு உறைவிடமாகவும் அமைந்தது. ஆதலின், உகந்தருளின நிலங்கள் எங்கும் பண்ணற்கு உரிய

---

1. துடக்கமான இவைத்திலே.

நிலங்கள் எங்கும் பண்ணக்கடவ விருப்பத்தைப் பண்ணிக்கொடு வந்து ஸந்நிஹிதனான தேசம் திருநீர்மலை.

---

*விருப்பத்தை இதன்பால் பண்ணிக்கொடு வந்து உறைபவன் ஆனான். அப்படிப் பெருமான் வந்து தங்கியுள்ள இடம் திருநீர் மலை ஆகும்.* (31)

## 132

காண்டா வனமென் பதோர்கா டமரர்க்
கரையன் னதுகண் டவனிற் கமுனே
மூண்டா ரழல்உண் ணமுனிந் ததுவும்
மதுவன் றியுமுன் னுலகம் பொறைதீர்த்து
ஆண்டான் அவுணன் னவன்மார் வகலம்
முகிரால் வகிரா கமுனிந் தரியாய்
நீண்டான் குறளா கிநிமிர்ந் தவனுக்
கிடமா மலையா வதுநீர் மலையே.

**ப. ரை :** **அமரர்க்கு அரையன்அது** - *தேவேந்திரனுடைய,* **காண்டாவனம் என்பது ஓர் காடு** - *காண்டவ வனம் என்னும் வலிய காட்டை,* **அவன் கண்டு நிற்க** - *அந்த இந்திரன்தானே பார்த்துக்கொண்டு நிற்க,* **முனே** - *அவன் முன்பே,* **ஆர் அழல் மூண்டு உண்ண முனிந்ததுவும்** - *நிறைந்த நெருப்பு மேல்விழுந்து உட்கொள்ளும்படி சீறியருளியும்,* **அதுவன்றியும்** - *அதுவும் தவிர,* **முன் உலகம் பொறை தீர்த்து** - *முன்பு பாரதப் போரில் உலகத்தின் பாரத்தைப் போக்கியும்,* **ஆண்டான்** - *உலகத்தைக் காத்தவனும்,* **அவுணன்அவன் அகலம் மார்வு** - *இரணியனது பரந்த மார்பை,* **உகிரால் வகிர் ஆக முனிந்து** - *நகங்களாலே இரு பிளவாகச் சீறி,* **அரியாய் நீண்டான்** - *ஆளரியாய் வளர்ந்தவனும்,* **குறள் ஆகி நிமிர்ந்தவனுக்கு** - *மாவலிபால் குறுகிய வடிவங்கொண்டு சென்று நீர் ஏற்ற பின்னர்த் திரிவிக்கிரமனாய் ஓங்கி நின்றவனும் ஆகிய பெருமானுக்கு,* **இடம் ஆம் மலை யாவது** - *உறையும் இடம் ஆகும் மலையாவது,* **நீர்மலையே**-.

**சி. கு :** *காண்டாவனம் - காண்டவ வனம். முனே - முன்னே; தொகுத்தல் விகாரம். அரையன்னது, முனிந்ததுவும்மது, அவுணன்னவன், அகலம் முகிரால் - விரித்தல் விகாரங்கள்.*

**வியா : இரண்டாம் பாட்டு : காண்டாவனம் - காண்டவ வநம்** என்று இந்த்ரனுடைய காவற்காடாய், அதுதான் ஒருவர்க்கும்[1] அழிக்க ஒண்ணாதபடி

---

வி : இரண்டாம் பாட்டு : காண்டாவனம் என்பது ஓர் காடு அமரர்க்கு அரையன் அது கண்டு அவன் நிற்க முனே - *காண்டவ வனம் என்பது இந்திரனுடைய காவற்காடு; அதுதான் ஒருவர்க்கும் அழிக்க ஒண்ணாததாக*

---

**132.** 3 : 4 பகலம்.
1. ஒருவற்கும்.

இருக்கும் ஆயிற்று. அர்ஜுநனும் க்ருஷ்ணனும் பூம்பந்து ஏறட்டு விளையாடா நிற்கச் செய்தே அக்நிபகவான், "எனக்கு விருந்திட வேணும்" என்று அபேக்ஷிக்க, "நீ இந்த்ரனுடைய காவற்காட்டை புஜி" என்று விட்டான் ஆயிற்று, அங்கே ஆஸுர ப்ரக்ருதிகள் புக்கு ஒதுங்கினவாறே அவர்களை நிரஸிக்க வேணும் என்று; அத்தைச் சொல்லுகிறது. அமரர்க்கு அரையன் உண்டு இந்த்ரன்; அவன் கண்டு நிற்க அவன் முன்பே[1]. **மூண்டு ஆர் அழல் உண்ண முனிந்ததுவும் அது அன்றியும்** - பேகணித்துப் பிற்காலித்துப் போகக்கடவ அக்நியானது மேல்விழுந்து புஜிக்கும்படியாகச் சீறி, அதுக்கு மேலே. அன்றிக்கே, மூண்டார் என்று எதிரிட்டவர்களாய், சத்ருக்களைச் சொல்லவும் ஆம். **முன் உலகம் இத்யாதி** - முன்பு பூபாரத்தைப் போக்கி நிர்வஹித்துப் போந்தவன். ஆஸுர ப்ரக்ருதியான ஹிரண்யனுடைய பரந்த மார்வைத் திருவுகிராலே இரண்டு கூறாம்படி சீறியருளி. **அரியாய் நீண்டான்** - அவனுடைய ப்ரதிஜ்ஞா காலத்திலே வந்து உதவிற்றிலன் ஆகில் குணங்கள் ஸாவதி ஆம் போலே[2]. **குறள் இத்யாதி** - ஸர்வாதிகனான தான் வாமந வேஷத்தைப் பரிக்ரஹித்து நிற்கச்செய்தே மஹாபலிபக்கலிலே சென்று இரந்து, திருக்கையிலே நீர் விழுந்தவாறே ஆகாஶாவகாஶம் இடம் அடையும்படி வளர்ந்து அளந்து கொண்டவனுக்கு வாஸஸ்தாநம்.

---

இருந்தது. அருச்சுனனும் கிருட்டிணனும் பூம்பந்து ஏறட்டு[3] விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களிடம் சென்று தீக்கடவுள், "எனக்கு விருந்திட வேண்டும்" என்று வேண்டினான். இந்திரனது காவற்காட்டில் அசுரத்தன்மையுடையவர்கள் புக்கு ஒதுங்கி இருந்தனர்; கிருட்டிணன் அவர்களை அழிக்க வேண்டும் என்று எண்ணம் கொண்டிருந்தான்; எனவே, "நீ இந்திரனது காவற்காட்டை உண்பாய்" என்று தீக்கடவுளை ஏவிவிட்டான். அதனை இத்தொடர் தெரிவிக்கிறது. அமரர்க்கு அரையன் - இந்திரன்; அவன் அதுகண்டு நிற்க அவன் முன்பே. **மூண்டு ஆர் அழல் உண்ண முனிந்ததுவும் அது அன்றியும்** - பேகணித்துப்[4] பிற்காலித்துப்[5] போதற்கு உரிய தீயானது மேல்விழுந்து உண்ணுமாறு சீறி அதற்கு மேலே. அல்லது, மூண்டார் என்று ஒரு சொல்லாகக் கொண்டு எதிரிட்டவர்களைக் குறிப்பதாய்ப் பொருள்கொண்டு பகைவர்களைச் சொல்வதாகவும் கருதலாம். **முன் உலகம் பொறை தீர்த்து ஆண்டான்** - முன்பு புவியின் சுமையைப் போக்கி ஆட்சி நடத்திப் போந்தவன். **அவுணன் அவன் மார்வு அகலம் உகிரால் வகிராக முனிந்து** - அசுரனான இரணியனுடைய பரந்த மார்வைத் திருவுகிராலே இரண்டு கூறாம்படி சீறியருளி. **அரியாய் நீண்டான்** - பிரகலாதன் சூள் உரைத்த காலத்திலே வந்து உதவவில்லை எனில் அவனுடைய குணங்கள் அளவுபட்டனவாகும் போலும். அவ்வாறு எண்ண இடங்கொடாமல் வந்தான். **குறள் ஆகி நிமிர்ந்தவனுக்கு இடமா மலை ஆவது** - எப்பொருளினும் பெரியவன் ஆகிய தான் குறுகிய வடிவம் கொண்டு மாவலிபக்கலிலே சென்று இரந்து, திருக்கையிலே நீர் விழுந்தவாறே வானப்பரப்பு இடம் அடையுமாறு வளர்ந்து அளந்து கொண்டவனுக்கு உறைவிடம். நீர்மலையே-. (32)

---

1. முன்னே. 2. போலே காணும்.

3. ஏறடுதல் - மேலே போடுதல். 4. பேகணித்தல் - அச்சத்தால் நிறம் வெளுத்தல். 5. பிற்காலித்தல் - பின்வாங்கிச் செல்லுதல், தயங்கி நிற்றல்.

## 133

அலமன் னுமடற் சுரிசங் கமெடுத்
 தடலா ழியினால் அணியார் உருவில்
புலமன் னுவடம் புனைகொங் கையினாள்
 பொறைதீ ரமுனாள் அடுவாள் அமரில்
பலமன் னர்படச் சுடரா ழியினைப்
 பகலோன் மறையப் பணிகொண் டணிசேர்
நிலமன் னனுமாய் உலகாண் டவனுக்
 கிடமா மலையா வதுநீர் மலையே.

ப. ரை : அணி ஆர் உருவில் - *அழகு பொருந்திய திருமேனியிலே,* அடல் ஆழியினால் - *வெற்றி பொருந்திய திருவாழியோடு,* அலம் - *கலப்பையை யும்,* மன்னும் அடல் சுரி சங்கம் எடுத்து - *நிலைத்த வெற்றியையுடைய சுரிகளைக் கொண்ட சங்கினையும் ஏந்தி,* முன் - *துரியோதனன் உள்ளிட்டார் பொருந்தாத அன்று,* புலம் மன்னு வடம் புனை கொங்கையினாள் - *பெருமானுடைய பொறிகள் எப்பொழுதும் ஈடுபட்டுக் கிடக்கும்படி ஆரம் முதலிய அணிகலன்களாலே கோலம் கொண்ட முலையை உடைய மண்மகளுடைய,* பொறை தீர - *சுமை யானது தொலையுமாறு,* ஆள் அடு வாள் அமரில் பல மன்னர் பட - *வீரர்களை எல்லாம் அழிக்கும் போரில் பல அரசர்கள் இறந்திட,* பகலோன் மறையச் சுடர் ஆழியினைப் பணி கொண்டு - *ஞாயிறு மறையுமாறு ஒளி பொருந்திய சக்கரத்தினை நடத்தி,* அணி சேர் நில மன்னனுமாய் - *அழகு பொருந்திய அரசனுமாய்,* உலகு ஆண்டவனுக்கு இடம் ஆம் மலையாவது - *உலகினைக் காத்தவனுக்கு உறையும் இடம் ஆகும் மலை ஆவது,* நீர்மலையே-.

சி. கு : *அலம் - 'ஹலம்' என்னும் வடசொல் திரிபு. பெருமாள் பலராமனாகத் திருத்தோற்றம் கொண்டபோது கலப்பையைப் படையாகக் கொண்டருளினான் என்க. முனாளடு என்பதனை முன் ஆள் அடு என்று பிரித்து உரை கூறியுள்ளனர்; முன் நாள் அடு என்றும் பிரிக்கலாம்.*

வியா : **மூன்றாம் பாட்டு : அலம்** - ஹலம், நித்யமாய் யுத்தோந்முக மாய்ச் சுரியை உடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யம் இவற்றைத்[1] தரித்து. **அடல் ஆழி யினால் அணியார் உருவில்** - யுத்தோந்முகமான திருவாழியோடே, நன்றாய்

---

வி.: மூன்றாம் பாட்டு : அலம் மன்னும் அடல் சுரி சங்கம் எடுத்து - *கலப்பை, எப்பொழுதும் போரினை எதிர்நோக்கும் சுரியையுடைய சீர்மிகு பாஞ்ச சன்யம் ஆகியவற்றை ஏற்று.* அடல் ஆழியினால் அணியார் உருவில் - *போர் நோக்கி நிற்கும் திருவாழியோடே காண்பதற்கு நன்றாய் இருக்கும் திருமேனியிலே*

---

**133.** 1 : 4 கமடுத். 1 : 8 உருவின்.

1. இவைத்தைத்.

இருக்கிற திருமேனியிலே, கலப்பை, ஸ்ரீபாஞ்சஜந்யம் என்கிற இவற்றைத் தரித்து என்னுதல். 'அடுத்து' என்று பாடமாகில், அழகிய வடிவோடே திருவாழியோடே மற்றை திவ்யாயுதங்களையும் சேர்த்து. அதாவது, **"உபஸம்ஹர"** என்ன மறைத்தபடி. **ஆக,** வெளியிடினும் மறைக்கிலும் ஆஶ்ரிதார்த்தமாய் இருந்தபடி. **புலம் மன்னு இத்யாதி** - ஸர்வேஶ்வரனுடைய ஸர்வ கரணங்களும் தன் பக்கலிலே ப்ரவணமாம்படி ஸர்வாபரணங்களாலும் அலங்க்ருதமான திருமுலைத் தடத்தையுடைய ஸ்ரீபூமிப்பிராட்டியாருடைய பாரமானது போம்படியாக. முன்பு ஆள்களை முடிக்கிற ஒளியை உடைத்தான பூசலிலே என்னுதல். ஆண்பிள்ளைகளாய் இருப்பாரை முடியக்கடவ[1] மதிப்பு உடைத்தான பூசலிலே. **பல மன்னர் பட** - நாள் ஒன்றுக்குப் பதினாயிரம் ராஜாக்கள் படும்படியாக, நிரவதிக தேஜோரூபமான திருவாழியை ஆதித்யன் மறையும்படியாகக் கார்யம்கொண்டு. "அணி சேர் நிலம்" என்னுதல், "அணி சேர் நிலமன்னனுமாய்" என்னுதல். **நிலமன்னனுமாய் உலகு ஆண்டவனுக்கு** - சக்ரவர்த்தித் திருமகனைச் சொல்லுதல்; அன்றிக்கே, பூபார நிர்ஹரணம் பண்ணினபடியைச் சொல்லுகையாலே க்ருஷ்ணனைச் சொல்லுதல்.

---

*கலப்பை, சீர்மிகு பாஞ்சசன்யம் என்னும் இவற்றை ஏற்று என்றுகொள்க*[2]. *'எடுத்து' என்பதற்கு மாறாக 'அடுத்து' என்பது பாடமாகில், அழகிய வடிவோடு திருவாழியோடு மற்றைய தெய்வப்படைகளையும் சேர்த்து என்று கொள்க*[3]. *அஃதாவது,* "மறைத்துக்கொள்" *(வி. பு. 5:3:10) என்று சொல்ல உடனே மறைத்து நின்றான் அன்றோ! அதனைக் குறிக்கிறது. ஆக, வெளியிடிலும் மறைக்கிலும் அடியார்பொருட்டாய் இருக்கும்.* புலம் மன்னு வடம் புனை கொங்கையினாள் பொறை தீர - *பெருமானுடைய எல்லாப்பொறிகளும் தன்பக்கலிலே படியும் வண்ணம் எல்லா அணிகலன்களாலும் கோலம் செய்யப்பட்ட திருமுலைத் தடத்தை உடைய மண்மகளின் சுமை போகுமாறு.* முன் ஆள் அடு வாள் அமரில் - *முன்பு ஆள்களை முடிக்கும் ஒளியையுடைய பூசலிலே என்றாதல் ஆண்பிள்ளைகளாய் இருப்பாரை முடிக்கத்தக்க மதிப்புடைய பூசலிலே என்றாதல் கொள்க.* பல மன்னர் பட - *நாள் ஒன்றுக்குப் பதினாயிரம் அரசர்கள் படும்படியாக.* சுடர் ஆழியினைப் பகலோன் மறையப் பணிகொண்டு - *எல்லையற்ற ஒளிமயமான திருவாழியைக் கதிரவன் மறையும்படி பயன்படுத்தி.* அணி சேர் நில மன்னனுமாய் உலகு ஆண்டவனுக்கு - *"அணி சேர்" என்னும் அடையினை நிலத்திற்கு உரியதாக்கி, "அணி சேர் நிலம்" என்றோ, மன்னனுக்கு உரியதாக்கி "அணிசேர் நில மன்னனுமாய்" என்றோ கொள்ளலாம்.* நில மன்னனுமாய் உலகு ஆண்டவனுக்கு - *இது சக்கரவர்த்தித் திருமகனைச்*[4] *சொல்கிறது. அன்று எனில், மண்ணின் பாரத்தைப் போக்கியபடியைச் சொல்வதனாலே கிருட்டிணனைச் சொல்கிறது;* அவனுக்கு. இடமா மலை ஆவது நீர்மலையே-.

---

1. முடிக்கக்கடவ.

2. உருவில்' என்பதில் 'இல்' என்பதனை ஏழாம் வேற்றுமை உருபாகக் கொண்டு, "அணியார் உருவில் அட்லாழியினால் அலம் மன்னும் அடல் சுரி சங்கம் எடுத்து" என்று கூட்டி இப்படிப் பொருள் கொள்கிறார். 3. உருவில் என்பதனை மூன்றாம் வேற்றுமையாகக் கொண்டு தரும் விளக்கம் இது. உருவோடே என்பதற்கு மாறாக உருவில் என்று வருவது உருபுமயக்கம். அடல் ஆழியினால் - ஆல் உருபு உடன் நிகழ்ச்சிப் பொருளில் வருகிறது. 4. சக்கரவர்த்தித்திருமகன் - இராமன்.

**ஒப்புமைப் பகுதி**

**புவியின் பாரம் தீரப் பாரதப் போர் விளைத்தவன்**

*" மண்மிசைப் பெரும்பாரம் நீங்க -'விச்வம்பரை' என்றும், 'க்ஷமை', 'பொறை' என்றும் பேரை உடைத்தாய்ப் பரிக்கக் கடவதான பூமியாலும் பொறுக்க ஒண்ணாதபடியிரே துர்வர்க்கம் திரண்டபடி "*
*தி. வா. மொ. 6:4:10-36*

*" இப்பூமிப் பொறை தீர்ப்பான் - இதுதான் செய்தது, அதார்மிகராய் ஆஸுரப்ரக்ருதிகளாய் இருப்பார் எல்லாரையும் யுத்த பூமியிலே கொன்று, இந்த பூமியினுடைய பாரத்தைப் போக்குகைக்காக வாய்த்து. 'மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்' என்கையாலே அவதார ப்ரயோஜநமும் இதுவேயிரே "* *பெரி. தி. 1:8:6 ம. மா. மு. உரை.*

*(33)*

## 134

**தாங்கா ததோர்ஆ ளரியாய் அவுணன்**
**தனைவீ டமுனிந் தவனால் அமரும்**
**பூங்கோ தையர்பொங் கெரிமூழ் கவிளைத்**
**ததுவன் றியும்வென் றிகொள்வாள் அமரில்**
**பாங்கா கமுனை வரோடன் பளவிப்**
**பதிற்றைந் திரட்டிப் படைவேந் தர்பட**
**நீங்காச் செருவில் நிறைகாத் தவனுக்**
**கிடமா மலையா வதுநீர் மலையே.**

**ப. ரை :** **தாங்காதது ஓர் ஆளரியாய்** - *பகைவர்களால் தாங்கிக்கொள்ள முடியாத ஒப்பற்ற நரசிங்கமாய்த் தோன்றி,* **அவுணன்தனை வீட முனிந்து** - *இரணியனை முடியுமாறு சீறி,* **அவனால் அமரும் பூங்கோதையர்** - *அவ் இரணியனால் நிலைபெற்றிருந்த பெண்டிர்,* **பொங்கு எரி மூழ்க விளைத்து** - *எரியும் நெருப்பிலே புகும்படி செய்தவனாய்,* **அது அன்றியும்** - *அதுவும் அல்லாமல்,* **முன்** - *முன்னே,* **வென்றி கொள் வாள் அமரில்** - *வெற்றியையுடைய மதிப்புப் பொருந்திய போர்க்களத்திலே,* **ஐவரோடு பாங்காக அன்பு அளவி** - *பாண்டவர் ஐவரோடு அவர்களுக்குத் தக்கவாறு அன்பு தோன்றக் கலந்து,* **படை பதிற்று ஐந்து இரட்டி வேந்தர் பட** - *நூற்றுவரான படையோடு கூடிய துரியோதனன் உள்ளிட்ட வேந்தர்கள் முடிந்து போகும்படி,* **நீங்காச் செருவில்** - *மாளாத அப்பெரும் பூசலிலே,* **நிறை காத்தவனுக்கு** - *திரௌபதியின் நலத்தைக் காத்த பெருமானுக்கு,* **இடம் ஆம் மலை ஆவது நீர்மலையே-.**

**சி. கு :** *நிறை - நலம்; ஈண்டுத் திரௌபதியின் நலத்தைக் குறித்தது. "அர்ஜுநனுக்கு தாத்ய ஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்தி யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக" என்னும் ஸ்ரீவசநபூஷண நூற்பா (23) ஈண்டுக் கருதத் தக்கது.*

வியா : நான்காம் பாட்டு : தாங்காதது இத்யாதி - எதிரிகளால் தாங்க ஒண்ணாத நரஸிம்ஹமாய், ஹிரண்யன் முடியும்படியாகச் சீறி, அவனாலே தரிக்கிற, பூங்கோதையர் உண்டு ஸ்த்ரீகள், அவர்கள் கிளர்ந்து எரிகிற நெருப்பிலே புக்கு முடிந்து போம்படி பண்ணி. அதுவே அன்றிக்கே, வென்றி இத்யாதி - வெற்றிகொண்டு அல்லது மீளக் கடவது அல்லாத மதிப்பையுடைய பூசலிலே. பாங்காக - தான் ஸ்வாமியான முறை தோற்ற இருக்கும் ஆகில் அவர்களோடு பொருந்த ஒண்ணாதிறே. அதுக்காகத் தன்னைத் தாழவிட்டு அவர்களோடே உறவு பண்ணிக் கலந்து, அற்றைக்கு நூறு ராஜாக்களை வெற்றி கொண்டு அல்லது மீளாத பூசலிலே, த்ரௌபதியுடைய ஸ்த்ரீத்வத்தைப் பரிஹரித்தவனுக்கு.

---

வி : நான்காம் பாட்டு : தாங்காதது ஓர் ஆளரியாய் அவுணன்தனை வீட முனிந்தவனால் அமரும் பூங்கோதையர் பொங்கு எரி மூழ்க விளைத்து - பகைவர்களால் தாங்க ஒண்ணாத நரசிங்கமாய் இரணியன் முடியும்படி சீறி, அவ்விரணியனாலே உயிர்வாழும் பூங்கோதையர் கிளர்ந்து எரியும் நெருப்பிலே புக்கு முடிந்து போகுமாறு பண்ணி. பூங்கோதையர் - பெண்டிர். அதுஅன்றியும் - அதுவும் அல்லாமல், வென்றி கொள் வாள் அமரில் பாங்காக முன் ஐவரோடு அன்பு அளவிப் பதிற்று ஐந்து இரட்டிப் படை வேந்தர்பட நீங்காச் செருவில் நிறை காத்தவனுக்கு - வெற்றி கொண்டு அல்லது மீளத்தக்கது அல்லாத மதிப்பையுடைய பெரிய பூசல்; அப்பூசலிலே. பாங்காக - தான் உடையவன் என்னும் முறை தோற்ற இருப்பான் எனில் அவர்களோடும் பொருந்த ஒண்ணுமோ? அதற்காகத் தன்னைத் தாழவிட்டு அவர்களோடு உறவு பண்ணிக் கலந்தான்; கலந்து, அன்றைக்கு நூறு அரசர்களை வெற்றி கொண்டல்லது மீளாத போரிலே திரௌபதியினுடைய பெண்மைக் குணமாகிய அச்சத்தைப் போக்கினான்; போக்கியவனுக்கு. இடமா மலை ஆவது நீர் மலையே-.

**ஒப்புமைப் பகுதி**

**ஓர் ஆளரியாய்**

*பாட்டு 61இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.* (34)

## 135

மாலும் கடலா ரமலைக் குவடிட்
டணைகட் டிவரம் புருவ மதிசேர்
கோல மதிளா யிலங் கைகெடப்
படைதொட் டொருகால் அமரில் அதிரக்
காலம் இதுவென் றயன்வா ளியினால்
கதிர்நீண் முடிபத் துமறுத் தமரும்
நீல முகில்வண் ணனெமக் கிறைவற்
கிடமா மலையா வதுநீர் மலையே.

---

**135.** 4 : 3 ணரெமக்.

ப. ரை : ஒருகால் - முன்னொரு காலத்தில், மாலும் கடல் ஆர மலைக் குவடு இட்டு - திரைக் கிளர்ச்சியையுடைய கடலானது நிறையும்படி மலைக் கொடுமுடிகளைப் போட்டு, வரம்பு உருவ அணை கட்டி - அக்கரையிலே சென்று சேரும்படி அணையை அமைத்து, மதி சேர் கோல மதிள் ஆய இலங்கை கெட - நிலாவைத் தீண்டும் அழகிய மதிள்களையுடைய இலங்கைநகர் அழியும்படி, படை தொட்டு - படைக்கலன்களை நடத்தி, அமரில் அதிர - போரில் அதிரும்படி செய்து, இது காலம் என்று - இவனை முடிப்பதற்கு இதுவே தக்க காலம் என்று கருதி, அயன் வாளியினால் கதிர் நீள் முடி பத்தும் அறுத்து - நான்முகன் படையால் ஒளி பொருந்திய முடிகள் சூடிய தலைகள் பத்தினையும் வெட்டி, அமரும் - திரு அயோத்தியில் எழுந்தருளியுள்ள, நீல முகில் வண்ணன் எமக்கு இறைவற்கு - கருமேகம் போலும் நிறத்தையுடையவன் ஆகிய நமக்குத் தலைவனாக இருக்கும் பெருமானுக்கு, இடம் ஆம் மலை ஆவது நீர் மலையே -.

சி. கு : மாலும் கடல் - மயங்கும் கடல்; அஃதாவது அலைகள் ஒன்றோடு ஒன்று மோதிக் கலங்கும் கடல். வரம்பு - கரை, ஈண்டு இலங்கையின் கரையைக் குறித்தது. அயன் வாளி, பிரமாத்திரம் என்பதன் தமிழாக்கம்.

வியா : அஞ்சாம் பாட்டு : மாலும் கடல் - ஜல ஸம்ருத்தியாலே பிச்சு ஏறின கடலானது; திரைக் கிளர்த்தியை[1] உடைத்தான கடல் என்றபடி. ஆர - நீரில் ஆழக்கடவ மலையினுடைய சிகரங்களை முறித்து அணை கட்டி. வரம்பு உருவ - அக்கரையிலே சென்று தட்டும்படி. மதி இத்யாதி - சந்த்ர பதத்து அளவும் செல்ல ஓங்கி தர்சநீயமாய் இருக்கிற மதிளை உடைத்தான லங்கையானது அழியும்படியாக திவ்யாயுதங்களைப் பிடித்து யுத்தத்திலே அதிரும்படியாக. அதாவது கடலை அணைசெய்து எடுத்துவிட்டு அடைமதிட்படுத்தி முதல் நாளைப் பூசலிலே கெடும்படியாகப் பண்ணி, "பையல் தானே இனி அநுதாபம்பண்ணி இளைத்து வருகிறான்" என்று விட்டிருந்த இடத்துப்[2] பின்னையும் மிகைக்கையாலே,

வி : அஞ்சாம் பாட்டு : மாலும் கடல் - நீர் மிகுதியினாலே பிச்சேறிய கடல்; திரைக் கிளர்ச்சியையுடைய கடல். ஆர மலைக் குவடு இட்டு அணை கட்டி - நீரில் ஆழக்கூடிய மலையினுடைய மேற்பகுதிகளை முறித்து அணைகட்டி. வரம்பு உருவ - அக்கரையிலே சென்று தட்டும்படி. மதிசேர் கோல மதிள் ஆய இலங்கை கெடப் படை தொட்டு ஒருகால் அமரில் அதிரக் காலம் இது என்று அயன் வாளியினால் கதிர் நீள் முடி பத்தும் அறுத்து - சந்திர மண்டலத்து அளவும் செல்ல ஓங்கிய அழகிய மதிளை உடையது இலங்கை; அந்நகரம் அழியுமாறு தெய்வப் படைகளைப் பிடித்துப் போரிலே அதிரும்படி. அஃதாவது, பெருமாள் கடலை அணைசெய்து எடுத்து விட்டு[3] அடைமதிட் படுத்தினான்[4]; இராவணனை முதல் நாளைப் பூசலிலே கெடும்படி பண்ணினான். அவ்வாறு செய்தபின், "பையல்[5] தானே இனி வருந்தி இளைத்து வருவான்" என்று எண்ணிப் போர்புரிவதைவிடுத்து இருந்தான். ஆனால், இராவணன் பின்னும் மிகைத்தான்[6]. பெருமாள், "இனி

1. திரைக்கிளற்றி. 2. இடத்தும்.
3. எடுத்துவிடுதல் - படையோடு முன்னேறிச் செல்லுதல். 4. அடைமதிட்படுத்தல் - முற்றுகை யிடுதல். 5. பையல் - சிறுவன்; இராவணன் மீது கொண்ட வெறுப்பால் இப்படிக் குறிப்பிடுகிறார். 6. மிகைத்தல் - கிளர்ந்து வருதல்.

**"இனி இவனை வைத்துக் கொண்டு நின்று லீலா ரஸம் அநுபவிக்கையாவது தேவஜாதியை அச்சம் உறுத்துகை; இனி இவனை வைப்போம் அல்லோம் நல்ல காலம்'' என்று ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே ஒளியை உடைத்தாய் இருக்கிற பெரிய முடிகள் பத்தையும் அறுத்து. அமரும் நீல முகில் வண்ணன் -** ராவண வதம் பண்ணின அநந்தரம் திருமேனியில் பிறந்த பௌஷ்கல்யம் இருக்கிறபடி. நீலமானது அமர்ந்து இருக்கிற முகில் போலே ப்ரமஹரமான வடிவை உடையவன். **எமக்கு இறைவற்கு -** அவ்வடிவழகாலே என்னை அநந்யார்ஹன் ஆக்கினவனுக்கு.

---

*இவனை வைத்துக் கொண்டு விளையாடி மகிழ்ந்து நிற்பது தேவர்களை அச்சம் உறுத்துவது ஆகும்; இனி இவனை வைப்போம் அல்லோம்; இதுவே இவனைக் கொல்ல நல்ல காலம்"* என்று *அயன் படையினாலே ஒளி பொருந்திய பெரிய முடிகள் பத்தையும் அறுத்தான். ஆவ்வாறு அறுத்து,* **அமரும் நீல வண்ணன் -** *இராவணனைக் கொன்ற பின்பு திருமேனியில் பிறந்த நிறைவு இருக்கிறபடி. நீல மானது அமர்ந்திருக்கும் முகில் போலே அயர்வு அகற்றும் வடிவை உடையவன்.* **எமக்கு இறைவற்கு -** *அவ்வடிவழகாலே என்னைப் பிறர்க்கு அன்றித் தனக்கே யாக ஒடியெறிந்து கொண்டவனுக்கு.* **இடமா மலை ஆவது நீர் மலையே -.**

**ஒப்புமைப் பகுதி**

**மலைக்குவடு இட்டு அணை கட்டியமை**

*பாட்டு 41இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

(35)

## 136

**பார்ஆர் உலகும் பனிமால் வரையும்**
**கடலும் சுடரும் இவையுண் டுமெனக்கு**
**ஆரா தெனநின் றவன்எம் பெருமான்**
**அலைநீர் உலகுக் கரசா கியஅப்**
**பேரா னைமுனிந் தமுனிக் கரையன்**
**பிறர்இல் லைநுனக் கெனும்எல் லையினான்**
**நீர்ஆர் பெயரான் நெடுமால் அவனுக்**
**கிடமா மலையா வதுநீர் மலையே.**

ப. ரை : **பார் ஆர் உலகும் பனிமால் வரையும் கடலும் சுடரும் இவை உண்டும் -** *மண் நிறைந்த உலகமும் குளிர்ந்த பெரிய மலையும், கடலும் ஞாயிறு திங்கள் என்னும் சுடர்களும் ஆகிய இவற்றை அயின்றும்,* **எனக்கு ஆராது என நின்றவன் -** *எனக்கு வயிறு நிரம்பவில்லை என்று சொல்லியவனும்,* **எம்பெருமான் -** *எனக்குத் தலைவனும்,* **அலை நீர் உலகுக்கு அரசு ஆகிய அப்பேரானை முனிந்த முனிக்கு அரையன் -** *கடல் சூழ்ந்த உலகத்திற்கு அரசர் என்னும் பெயருடைய மன்னர்குலத்தைச் சீறிய முனிவருள் சிறந்தவனான பரசுராமனும்,* **நுனக்கு பிறர் இல்லை எனும் எல்லையினான் -** *உனக்குப் புறம்பானார் ஒருவரும் இல்லை*

---

136 : 4 : 2 பேரான்.

என்னும்படி பெருமையின் எல்லையில் நிற்பவனும், **நீர் ஆர் பெயரான்** - நீர் வண்ணன் என்னும் திருப்பெயரை உடையவனும் ஆகிய, **நெடுமாலவனுக்கு** - பெருமானுக்கு, **இடம் ஆம் மலை ஆவது நீர்மலையே**-.

**சி. கு :** நீ என்னும் முன்னிலை ஒருமை இடப்பெயர் வேற்றுமை ஏற்குங்கால் நுன் எனத் திரிந்தது. உம் எனத் திரிதலே வழக்கம்.

**வியா : ஆறாம் பாட்டு : பார் ஆர் உலகும்** - மண் மிக்க பூமியும். **பனி மால் வரையும்** - அந்த பூமிக்கு ஆணியடித்தாப் போலே இருப்பதுமாய், மேகங்கள் படிந்து வர்த்திக்கிற குல பர்வதங்களும், ஸமுத்ரங்களும், தேஜஃபதார்த்தங்களும், இவற்றை[1] அடங்க வயிற்றிலே எடுத்து வைத்துப் பின்னையும், இவை எனக்குப் போராது என்று தான் கொண்ட கோட்பாடு மாறாதே ரக்ஷ்யம் அளவுபட்டு ரக்ஷகத்வமே விஞ்சி இருக்கிறவன்[2]. அதாவது ப்ரஜைகள் விஷயமாக எல்லாம் செய்து பின்னையும் ஒன்றும் செய்யாதானாய் இருக்கிறபடி. பின்பு ப்ரளயத்தில் நின்றும் எடுத்து வயிற்றிலே வைத்து நோக்கினத்தை நினையாதே, முன்பு ப்ரளயத்தில் நோவுபடவிட்டத்தையே நினைக்கை. **எம்பெருமான்** - இப்படி தான் ஸர்வ ரக்ஷகனாய் இருக்கிற இருப்பைக் காட்டி என்னை எழுதிக்கொண்டவன். **அலை இத்யாதி** - இவ்இடத்துக்குப் பொருள் அழகப்பெருமாள் அரையர் பலரையும் கேட்டுக்கொடு திரிந்தாராய், நம்முடையவர்களிலே சிலர், ''ஸர்வேஶ்வரனைச் சொல்லுகிறது காணும்'' என்று விட்டார்கள். கடல் சூழ்ந்த பூமிக்கு ராஜாக்களாய்ப் போருகிறவர்களை அப்பேரும் கூட நடையாடாதபடியாக அழியச்செய்த. **முனிக்கு**

---

**வி : ஆறாம் பாட்டு : பார் ஆர் உலகும்** - மண் மிக்க புவியும். **பனிமால் வரையும்** - அந்தப் புவிக்கு ஆணி அடித்தாற் போலே இருப்பதாய், மேகங்கள் படிந்து உறையும் குலமலைகளும். **கடலும் சுடரும்** - கடல்களும், ஒளியுடைய கதிரவன், சந்திரன் ஆகியனவும். **இவை உண்டு எனக்கு ஆராது என நின்றவன்** - இவற்றை அடங்க வயிற்றிலே எடுத்துவைத்துப் பின்னையும் இவை எனக்குப் பற்றா என்று தான் கொண்ட கோட்பாடு[3] மாறாமல் இருப்பவன். தன்னால் நோக்கப்படுவன அளவுபட்டு நிற்க நோக்குந்தன்மை விஞ்சி இருக்கிறவன். அஃதாவது மக்களைக் குறித்து எல்லாம் செய்து பின்னையும் ஒன்றும் செய்யாதவனாய்க் கருதி இருப்பவன். பின்பு பெருவெள்ளத்தில் நின்றும் எடுத்து வயிற்றிலே வைத்து நோக்கியதை நினையாமல், முன்பு பெருவெள்ளத்தில் நோவுபட விட்டதையே நினைக்கை. **எம்பெருமான்** - இப்படித் தான் எப்பொருட்கும் காவலனாய் இருக்கும் இருப்பைக்காட்டி என்னை எழுதிக்கொண்டவன்[4]. **அலை நீர் உலகுக்கு அரசர் ஆகிய அப்பேரானை முனிந்த** - அழகப்பெருமாள் அரையர் என்பவர் இவ் இடத்துக்குப் பொருள் யாது?'' என்று பலரைக் கேட்டுத் திரிந்தார். நம் கூட்டத்தவர்களுள் சிலர், '''அப்பேரானை' என்பது இறைவனைச் சொல்லுகிறது கண்டீர்'' என்று விடையிறுத்தனர். அஃதாவது பரசுராமனால் எதிர்க்கப்பட்ட இராமனைச் சொல்கிறது என்றனர். ஆனால் அது சரியன்று. 'அப்பேரான்' என்பது 'அவ் அரசரை' என்று பொருள்படும். கடல்

---

1. இவைத்தை; இவைற்றை. 2. இருக்குமவன்.
3. கோட்பாடு - முயற்சி. 4. எழுதிக்கொள்ளல் - அடிமையாக்கிக்கொள்ளல்.

**அரையன்** - ஸ்ரீபரசுராமாழ்வான் இருபத்தொருபடிகால் க்ஷத்ரிய வம்சங்களைப் பேரும் நடையாடாதபடி அறுத்துப் பொகட்டானிறே. **பிறர் இல்லை நுனக்கு எனும் எல்லையினான்** - உனக்குப் புறம்பாய் உன்னோடு ஒக்கச் சொல்லல் ஆவது ஒரு ப்ரபு இல்லை என்னும்படி, தன்னை ஒழிந்தது அடைய ப்ரகாரமாய்த் தான் ப்ரகாரியாய்க் கொண்டு எல்லையிலே நிற்கிறவன். **நீர் ஆர் பெயரான்** - **"ஆபோ நாரா இதி ப்ரோக்தா:"** என்கிறபடியே ஜலத்திலே கண்வளர்ந்தருளுகை யாலே நாராயணன் என்னும் திருநாமத்தை உடையவன் என்னுதல்; அன்றிக்கே, 'நீர்' என்று நீர்மையாய் அத்தால் ஸ்வபாவமாய், அதாகிறது சேஷித்வமாய், ஆக ஸ்வ வ்யதிரிக்த ஸமஸ்த வஸ்துவும் தனக்கு ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியாய் இருக்கை யாலே நாராயணன் என்னும் திருநாமத்தை உடையவன் என்னுதல். ஆக ஸர்வாதிக னான ஸர்வேஶ்வரனுக்கு நீர்வண்ணன் என்று திருநாமம்.

---

*சூழ்ந்த புவிக்கு அரசர்களாய் இருப்பவர்களை அப்பேரும்கூட நடையாடாதபடி அழியச்செய்த.* **முனிக்கு அரையன்** - *சீர்மிகு பரசுராமாழ்வான் இருபத்தொரு படிகால் அரசமரபினரைப் பேரும் நடையாடாதவாறு அறுத்துப் போட்டான் அல்லவா!* **பிறர் இல்லை நுனக்கு எனும் எல்லையினான்** - *உனக்குப் புறம்பாய் உன்னோடு ஒக்கச் சொல்லக் கூடிய வல்லான் ஒருவன் இல்லை என்னும்வண்ணம் நிற்கிறவன்; அஃதாவது தன்னை ஒழிந்த மற்றையவை அடையத் தனக்குப் படியாய்த் தான் படிகொளியாய் அமைந்து எல்லையிலே நிற்கிறவன்.* **நீர் ஆர் பேரான்** - "நீர் நாரம் எனப்படும்" *(மநு. 1:10) என்று சொல்வதற்கு ஏற்ப நீரிலே கண்வளர்ந்தருளுகையாலே நாராயணன் என்னும் திருப்பெயரை உடையவன் என்க. அன்றெனில், 'நீர்' என்பதற்கு நீர்மை என்று பொருள் கூறி, அதனால் தன்மையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அப்போது தலைமைத்தன்மையைக் கூறுவதாய் ஆகும். ஆகத் தன்னைத் தவிர்ந்த பிற எல்லாம் தனக்குப் படியாகத் தான் படிகொளியாக இருக்கையாலே நாராயணன் என்னும் திருப்பெயரை உடையவன் என்க. எனவே, எப்பொருட்கும் மேலானவன் ஆகிய பெருமானுக்கு நீர்வண்ணன் என்பது திருப்பெயர். அத்தகைய,* **நெடு மாலவனுக்கு இடமா மலை ஆவது நீர்மலையே-.**

**ஒப்புமைப் பகுதி**

1. **உலகனைத்தும் உண்டு ஆராது என நின்றவன்**

   *பாட்டு 39, 76 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **பரசுராமன்**

   *"அரசு களைகட்ட அருந்தவத்தோன் - இருபத்தொரு படிகால் துஷ்ட க்ஷத்ரியரான ராஜாக்களாகிற களையை நிரஸித்தவனாய், ஒருவரால் செய்ய ஒண்ணாத தபஸ்ஸை உடையனாய் இருந்துள்ள பரசுராமன்..."*

   *பெரி. தி. 3:10:1 ம. மா. மு. உரை.*

   *[நிரஸித்தவன் - அழித்தவன்]*

(36)

புகர்ஆர் உருவா கிமுனிந் தவனைப்
புகழ்வீ டமுனிந் துயிர்உண் டசுரன்
நகர்ஆ யினபாழ் படநா மமெறிந்
தனுவன் றியும்வென் றிகொள்வாள் அவுணன்
பகரா தவன்ஆ யிரம்நா மமடிப்
பணியா தவனைப் பணியால் அமரில்
நிகர்ஆ யவன்நெஞ் சிடந்தான் அவனுக்
கிடமா மலையா வதுநீர் மலையே.

ப. ரை : புகர் ஆர் உருவாகி முனிந்தவனை - *ஒளி மிகுந்த வடிவை உடையவனாய்ச் சீறி வந்த இரணியாக்கனை*, **புகழ் வீட முனிந்து உயிர் உண்டு** - *அவனது புகழ் அழியும்படி சீறி அவன் உயிரை முடித்து*, **அசுரன் நகராயின** - *அசுரன் ஆகிய அவனுடைய நகரங்களை*, **நாமம் பாழ்பட எறிந்து** - *அவன் பெயரும்கூடப் போகுமாறு அழித்து*, **அது அன்றியும்** - *அது தவிரவும்*, **வென்றி கொள் வாள் அவுணன்** - *வெற்றி பொருந்திய வாளையுடைய அசுரனும்*, **ஆயிரம் நாமம் பகராதவன்** - *இறைவன் திருப்பெயர்கள் ஆயிரத்துள் ஒன்றனையும் சொல்லாதவனும்*, **அடிப்பணியாதவன்** - *திருவடிகளிலே வணங்காதவனும்*, **அமரில் நிகர் ஆயவனை** - *போரில் எதிராக வந்தவனுமாகிய இரணியனை*, **பணியால்** - *பிரகலாதன் சொன்ன சொல்லின் காரணமாக*, **நெஞ்சு இடந்தான் அவனுக்கு** - *மார்பைப் பிளந்து போட்டவனாகிய பெருமானுக்கு*, **இடம் ஆம் மலை ஆவது நீர்மலையே-.**

சி. கு : *"நாமம் பாழ்பட எறிந்து"* என்று பிரித்துக்கூட்டுக. *'பணியாதவனை'* என்பதில் உள்ள இரண்டன் உருபு ஐகாரத்தைப் பிரித்து *அமரில் நிகர் ஆயவன்* என்பதனோடு கூட்டுக. அடிப்பணியாதவனை என்று ஒற்று மிக்கு வந்தது பாட்டின் இன்னோசை கருதி என்க; அஃது ஏழாம் வேற்றுமைத் தொகை.

**வியா : ஏழாம் பாட்டு : புகர்** இத்யாதி பௌண்ட்ரகன் தன்னைச் சொல்லிற்றாதல்; ஹிரண்யாக்ஷனைச் சொல்லிற்றாதல். சுத்த ஸத்வமயமாய் நிரவதிக தேஜோரூபமான திவ்ய விக்ரஹத்தோடு போலியாகத் தன் வடிவைப் பண்ணிக்கொடு திரிந்தான் என்று சொல்லக்கடவது. ஹிரண்யாக்ஷன் ஆன போது

---

வி : ஏழாம் பாட்டு : புகர் ஆர் உருவாகி முனிந்தவனை - இது பௌண்டரகன் தன்னைச் சொல்வதாகவோ இரணியாக்கனைச் சொல்வதாகவோ கொள்ளலாம். பௌண்டரகனைக் குறிக்கும் இடத்து, கலப்பில்லாத தூய பொருளால் அமைந்ததாய், எல்லையற்ற ஒளிமயமாய்த் திகழும் தெய்வ வடிவத்தினை ஒத்ததாகத் தன் வடிவைப் பண்ணிக்கொண்டு திரிந்தவன் என்று சொல்க.

தானே சொல்லலாமிறே. புகர்த்த வடிவை உடையவனாய் இருக்கிறவனை, இன்னான் என்று சொல்லுகிற ப்ரமம் போம்படியாகச் சீறி. பல நகரங்களையும் பண்ணிவைத்தான் ஆயிற்று; அந்நகரங்களும் தானும்[1] பாழ்பட்டுப் போம்படியாக, இன்னான் என்கிற வார்த்தைப்பாடும் போம்படியாக அழியச்செய்து, அதுக்குமேலே. **வென்றி இத்யாதி** - வெற்றியுடன் அல்லது மீளானாய்[2], தைவங்கள் கொடுத்த[3] வரங்களையே தனக்கு பலமாக நினைத்திருப்பானாய். பகருகை - சொல்லுகையாய், ஆயிரம் திருநாமங்களில் ஒன்றையும் சொல்லாதவன் என்றது என்? சொல்லப் பெறாதவன் என்றபடி. அதுக்கு மேலே திருவடிகளிலே விழுந்து ஆஶ்ரயியாதே இருக்கிறவனை. **பணியால்** - ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுடைய வார்த்தையாலே **"ஸுக்ரீவ வசநாத்"** என்னுமாப் போலே பணிந்து பகர்ந்தவனுடைய வார்த்தை யாலே. **"மத்பிதுஸ் தத் க்ருதம் பாபம் தேவ தஸ்ய ப்ரணஶ்யது"**. முன்பு அவன் பண்ணின ப்ராதிகூல்யத்தை எல்லாம் பொறுக்க வேணும் என்னப் பொறுத்துப் போந்தான். இனி இவன் இருக்கில் இவனுக்கு அநர்த்தம் என்னும் அளவில் பின்னை அழியச்செய்து விட்டான் ஆயிற்று. அமரிலே - யுத்தத்திலே,

---

இரணியாக்கனைச் சுட்டும் இடத்து, இப்படி வடிவைப் பண்ணிக்கொண்டு திரிந்தவன் எனல் வேண்டா. அவன் ஒளிபடைத்த மேனியன். எனவே, இயல்பாகவே புகர் ஆர்ந்த உரு உடையவனாகி என்றே சொல்லலாம். **புகழ் வீட முனிந்து** - புகர்த்த வடிவை உடையவனாய் இருப்பானை இத்தன்மையன் என்று புகழ்ந்து சொல்லும் மயக்கம் போகும்படி சீறி. **உயிர் உண்டு அசுரன் நகராயின பாழ்பட நாமம் எறிந்து** - பல நகரங்களையும் பண்ணி வைத்திருந்தான் பௌண்டரகன். அந்நகரங்களும் தானும் பாழ்பட்டுப் போகும்படியும் இத் தன்மையன் என்னும் வார்த்தைப்பாடும்[4] போகும்படியும் அழியச்செய்து. **அது அன்றியும்** - அதற்கு மேலே. **வென்றி கொள் வாள் அவுணன்** - வெற்றி கிட்டினால் அன்றி மீளாதவன்; தெய்வங்கள் கொடுத்த வரங்களையே தனக்கு வலிமையாய் நினைத்திருப்பவன். **பகராதவன் ஆயிரம் நாமம்** - பகருகை சொல்லுதல்; ஆயிரம் திருப்பெயர்களில் ஒன்றையும் சொல்லாதவன். அஃதாவது சொல்லப்பெறாதவன் என்கிறார். **அடிப்பணியாதவனை** - அதற்கு மேலே திருவடிகளிலே விழுந்து வணங்காமல் இருப்பவன்; அவனை. **பணியால்** - சீர்மிகு பிரகலாதாழ்வானுடைய சொல்லாலே. **"சுக்கிரீவன் சொல்லாலே இராமன் வாலியைச் சண்டையில் கொன்று சுக்கிரீவனையே அவனது நாட்டில் நிலை நிறுத்தினான்"** *(ரா. பா. 1:70)* என்பர். "சுக்கிரீவன் சொல்லாலே" இராமன் செயற்பட்டான் என்பது போலே இங்குப் பணிந்து பகர்ந்தவன் ஆகிய பிரகலாதாழ்வான் சொல்லாலே நரசிங்கப்பிரான் செயற்பட்டான் என்கிறார். **"உன்னைப் பரவுவதில் ஈடுபட்ட என்னிடத்தில் உண்டான வெறுப்பாலே என் தந்தைக்கு ஏற்பட்ட தீவினை போகட்டும்"** (வி. பு. 1:20:21) என்பதே அவன் பணிந்து பகர்ந்த சொற்களாம். முன்பு அவன் பண்ணிய பொல்லாங்கை எல்லாம் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று வேண்டப் பொறுத்துப் போந்தான். பின்பு, இவ்இரணியன் இனிமேல் இருக்கில் இவனுக்குப் பெருங்கேடாகும் என்னும் அளவில் அழிந்துபோகுமாறு செய்தான். **அமரில் நிகர் ஆயவன் நெஞ்சு இடந்தான் அவனுக்கு** - அமரில் - போரில், நான்

---

1. அவனுதான நகரங்களான அவை. 2. வெற்றி உண்டானால் அல்லது மீளாதானாய். 3. குடுத்த.
4. வார்த்தைப்பாடு - புகழ்; பெருமை.

நான் எதிரி என்று தோற்றினவனுடைய மார்வை இரண்டு கூறாம்படி பிளந்து பொகட்டவனுக்கு.

---

*பகைவன் என்று தோற்றியவனது மார்பை இரண்டு கூறாகப் பிளந்துபோட்டவன்; அவனுக்கு.* இடமா மலை ஆவது - *நீர்மலையே-.* (37)

## 138

பிச்சச் சிறுபீ லிபிடித் துலகில்
பிணம்தின் மடவார் அவர்போல் அங்ஙனே
அச்சம் இலர்நாண் இலர்ஆ தன்மையால்
அவர்செய் கைவெறுத் தணிமா மலர்தூய்
நச்சி நமனார் அடையா மைநமக்
கருள்செய் எனவுள் குழைந்தார் வமொடு
நிச்சம் நினைவார்க் கருள்செய் யுமவற்
கிடமா மலையா வதுநீர் மலையே.

ப. ரை : பிச்சச் சிறு பீலி பிடித்து - *இறகுகளையுடைய சிறிய மயில் தோகையைக் கையில் பிடித்துக்கொண்டு*, உலகில் - *இவ்வுலகிலே*, பிணம் தின் மடவார் அவர் போல் - *பிணங்களைத் தின்னும் பேய்ப்பெண்களைப் போலே*, அங்ஙனே - *அப்படியே*, அச்சம் இலர் - *நடுக்கமில்லாதவர்களாகவும்*, நாண் இலர் - *வெட்கமில்லாதவர்களாகவும்*, ஆ தன்மையால் - *இருக்கும் தன்மையால்*, அவர் செய்கை வெறுத்து - *அந்தச் சமணர்களுடைய செயல்களை வெறுத்து ஒதுக்கி விட்டு*, அணி மாமலர் தூய் நச்சி - *அழகிய சிறந்த மலர்களைப் பணிமாறி இறைவனை விரும்பி*, நமனார் அடையாமை - *கூற்றுவன் கிட்டாதவாறு*, நமக்கு அருள் செய் என - *எங்களுக்கு அருள்புரிதல் வேண்டும் என்று*, உள் குழைந்து ஆர்வமொடு நிச்சம் நினைவார்க்கு - *நெஞ்சு நெகிழ்ந்து அன்புடன் நாடோறும் சிந்திக்கும் அடியார்க்கு*, அருள் செய்யும் அவற்கு - *அருள் புரியும் எம் பெருமானுக்கு*, இடம் ஆம் மலையாவது நீர்மலையே-.

சி. கு : *ஆதல் தன்மை ஆதன்மை என்று ஆயிற்று; காதல் தன்மை காதன்மை என்று வருவது போல. 'காதன்மை கந்தா' என்பது* குறள் *(507)*.

வியா : **எட்டாம் பாட்டு : பிச்சச் சிறு பீலி பிடித்து** - பிச்சமாய் இருக்கிற சிறுபீலித்தழையைக் கையிலே பிடித்து, லோகத்திலே பிணந்தின்னிகளைப்

---

வி : எட்டாம் பாட்டு : பிச்சச் சிறு பீலி பிடித்து உலகில் பிணம் தின் மடவார்அவர் போல் - *சமணர்கள் பிச்சமாய் இருக்கும் சிறு பீலித்தழையைக்*

---

138. 3 : 4 மல்நமக்.

**போலே வஸ்த்ரத்தைப் பொகட்டுத் திரியாநிற்பர்கள் ஆயிற்று. அவர்களைப் போலே, அப்படியே "பிறர் முன்னே நாம் இங்ஙனே நிற்கும்படி எங்ஙனே?" என்னும் அச்சமாதல் "இத்தைப் பிறர் காணில் செய்வது என்?" என்கிற லஜ்ஜையாதல் இன்றிக்கே திரியா நிற்பர்கள்; இப்படி இருக்கையாலே, அவர் செய்கை வெறுத்து - வைதிக மர்யாதையும் பகவத் உபாஸநமும் வேதோக்தமான அநுஷ்டாநமும் இன்றிக்கே தாங்கள் செய்து திரியுமவற்றை[1] அநுஸந்தித்து வெறுத்து. அழகிய புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு அவனை நச்சி - ஆசைப்பட்டு, யமாதிகள் கிட்டாதபடி நிச்சம் நினைவார் என்னுதல்; நச்சி நமனார் என்னுதல்; "இவர்கள் பாப கர்மாக்களாய் இருந்தார்கள், நாம் நினைத்தபடி கார்யம் கொள்ளலாம்" என்று யமாதிகள் கிட்டாதபடியாக என்னுதல். நமக்கு - எங்கள்பக்கலிலே அருளைப் பண்ண வேணும் என்று நெஞ்சு நெகிழ்ந்து ப்ரேம யுக்தராய்க்கொண்டு நாள்தோறும் அநுஸந்திக்குமவர்கள் என்னுதல்; நிச்சம் அருள் செய்யுமவற்கு என்னுதல்.**

---

கையிலே பிடித்துக்கொண்டு இருப்பர்; உலகத்தில் பிணந்தின்னிகளைப்போலே ஆடையின்றித் திரிந்துகொண்டு இருப்பர். **அங்ஙனே அச்சம் இலர் நாண் இலர்** - அப்பிணந்தின்னிகளைப் போலே, "பிறர் முன்னர் நாம் இப்படி நிற்றல் எங்ஙனம் முறையாகும்?" என்னும் அச்சமோ "இதனைப் பிறர் காணில் என்னவாகும்?" என்னும் வெட்கமோ இன்றித் திரிந்துகொண்டு இருப்பர். **ஆதன்மையால் அவர் செய்கை வெறுத்து** - இப்படி இருக்கையாலே, வேத முறைமையும், இறைவனை இடையறாது நினைத்தலும், வேத வழிப்பட்ட செய்கையும் இல்லாமல் தாங்கள் நினைத்தபடி செய்து திரியும் செயல்களை நினைந்து வெறுத்து. **அணி மாமலர் தூய் நச்சி நமனார் அடையாமை** - அழகிய மலர் முதலிய வழிபாட்டுக்கு உறுப்பு ஆகிய பொருள்களைக் கொண்டு இறைவனை நச்சிக் காலன் முதலானோர் கிட்டாதவாறு நிச்சம் நினைவார் என்க. **நச்சி** - ஆசைப்பட்டு. இவ்வாறு அன்றி, நச்சி என்பதனை நமனாரோடு கூட்டி, "இவர்கள் தீவினை புரிந்தவர்களாய் இருந்தார்கள், நாம் நினைத்தபடி ஆட்டி வைக்கலாம்" என்று காலன் முதலானோர் கிட்டாதவாறு என்றும் பொருள் கூறலாம். **நமக்கு அருள் செய் என உள் குழைந்து ஆர்வமொடு நிச்சம் நினைவார்க்கு அருள் செய்யுமவற்கு** - எங்கள்பக்கலிலே அருளைப் பண்ண வேண்டும் என்று நெஞ்சு நெகிழ்ந்து அன்புடையராய் நாள்தோறும் நினைப்பவர்களுக்கு என்க. நிச்சம் என்பதனை இவ்வாறு நினைவார்க்கு அடையாக்காமல் அருள்செய்யுமவற்கு அடையாக்கி, நிச்சம் அருள் செய்பவனுக்கு என்றும் பொருள் கூறலாம். **இடமா மலையாவது நீர்மலையே-.** *(38)*

---

1. திரியுமவைத்தை.

# 139

பேசும் அளவன் றிதுவம் மினமர்!
பிறர்கேட் பதன்முன் பணிவார் வினைகள்
நாசம் மதுசெய் திடுமா தன்மையால்
அதுவே நமதுய் விடம்நாண் மலர்மேல்
வாசம் மணிவண் டறைபைம் புறவில்
மனம்ஐந் தொடுநைந் துழல்வார் மதிஇல்
நீசர் அவர்சென் றடையா தவனுக்
கிடமா மலையா வதுநீர் மலையே.

**ப. ரை :** **நமர்** - நம்முடையவர்களே! **இது பேசும் அளவு அன்று** - இந்த இடத்தின் சீர்மை நம்மால் சொல்லி முடிக்கும் தரம் அன்று. **பிறர் கேட்பதன் முன்** - இதனை இறை நம்பிக்கை இல்லாதவர்கள் கேட்பதற்கு முன்பே, **வம்மின்** - வாருங்கள். **பணிவார் வினைகள் நாசம்அது செய்திடும்** - தன்னை வணங்கியவர் தீவினைகளை அழிக்கும்; **ஆதன்மையால்** - அப்படி இருக்கும் தன்மையால், **அதுவே நமது உய்வு இடம்** - அந்த இடமே நாம் உய்வடைவதற்குத் தக்க இடம். அஃது எவ்இடம் என்றால், **மனம் ஐந்தொடு நைந்து உழல்வார்** - நெஞ்சம் ஐந்து புலன் இன்பங்களிலும் செல்ல மிகவும் குலைந்து கரையேற எண்ணாமல் அதிலேயே கிடந்து வருந்துவோர் ஆகிய, **மதி இல் நீசர் அவர்** - அறிவு இல்லாத இழிந்தோர், **சென்று அடையாதவனுக்கு** - சென்று கிட்ட முடியாதவன் ஆகிய பெருமானுக்கு, **இடம் ஆம் மலை ஆவது** - உறையும் இடமாக உள்ள மலைஆவது, **நாள் மலர் மேல் வாசம் மணி வண்டு அறை** - அப்போது அலர்ந்த பூவில் உள்ள மணத்தில் படிந்து மணக்கின்ற அழகிய வண்டுகள் ஒலிக்கின்ற, **பைம் புறவில்** - பசிய சுற்றுப்புறங்களுக்கு இடையில் உள்ள, **நீர்மலையே**-.

**சி. கு :** நாசம் அது என்பது ஒருசொல் நீர்மைத்து. இரு சொற்களாகக் கொண்டு நாசமாகிய அதனைச் செய்திடும் எனலும் ஆம். இப்பொருளில் அது என்பது சுட்டுப்பொருளின் கண்ணது. நீசர்அவர் என்பதும் முற்குறித்த சொற் போன்றதே.

**வியா : ஒன்பதாம் பாட்டு : பேசும் அளவு அன்று இது** - பகவத் வ்யதிரிக்த விஷயங்களில் சொல்லல் ஆவது[1] ஒன்று இல்லாமையாலே சொல்லப் போகர்து; பகவத் விஷயத்தில் இயத்தாராஹித்யத்தாலே பேசப் போகாது. **வம்மின் நமர்** - நம்மோடு ஒரு குடல்துடக்கு உடையார் அடங்கலும் வாருங்கோள். **பிறர்**

---

**வி : ஒன்பதாம் பாட்டு : பேசும் அளவு அன்று இது** - இறைவனைத் தவிர்ந்த பிற பொருள்களைப் பொறுத்தமட்டில் சொல்வதற்கு ஒன்று இல்லாமை யாலே அவற்றைக் குறித்துச் சொல்வதற்கு இயலாது; இறைவனைப் பொறுத்த மட்டில் எல்லையின்றி விரிந்திருத்தலாலே பேசி முடித்தற்கு இயலாது. ஆகவே அதுவும் சொல்ல இயலாது. **வம்மின் நமர்** - நம்முடன் ஒரு குடல்துடக்கு[2]

---

**139.** 3: 2 அணிவண். 3 : 4 புறவின்.

1. ஆவுது.
2. குடல் தொடக்கு - உடல் தொடர்பு.

**கேட்பதன் முன்** - இதுக்குப் புறம்பானார் செவிப்படுவதற்கு[1] முன்பே. "**இதம் பரமம் குஹ்யம்**" என்றும், "**இதம் தே நாதபஸ்காய**" என்றும் அநதிகாரிகள் கேட்கவும் ஆகாது, அதிகாரிகளுக்குச் சொல்லாது ஒழியவும் ஆகாது என்று இரண்டு உண்டிறே. **பணிவார்** - திருவடிகளிலே விழுந்து ஆஶ்ரயிப்பாருடைய பாபங்களை வாஸனையோடே நஶிப்பிக்கும். **அது** - அவ் அரியத்தையும் செய்யும், "**துர்வ்யாதிர் இவ நஶ்யதி**" என்கிறபடியே. இப்படி இருக்கையால் அதுவே நமக்கு உஜ்ஜீவிக்கைக்கு ஸ்தாநம். "**நாண் மலர் தூய்**" என்று பாடம் ஆகில் செவ்விப் பூக்களைத் தூவிப் பணிவார் என்கிறது. "**நாண் மலர்மேல்**" என்றதாகில் செவ்விப் பூக்களின்மேல் படிந்து பரிமளிதமான வண்டுகள் த்வநியாநின்றுள்ள பர்யந்தத்தை உடைத்தான மாமலையாவது. **மனம் இத்யாதி** - ஐந்தொடு மனம் நைந்து உழல்வார் - சப்தாதிகளிலே நெஞ்சு ப்ரவணமாய் நைந்து க்லேசப் படுமவர்கள்; அறிவுகேடரான நீசர் சென்று அடையாதவனுக்கு.

---

*உடையார் அடங்கலும் வாருங்கள்.* **பிறர் கேட்பதன் முன்** - *இறைநெறிக்குப் புறம்பானார் செவிப்படுவதற்கு*[2] *முன்பே.* "எவன் மிக ஆழ்ந்த இத்தத்துவத்தை என் நண்பர்களிடத்துக் கற்பிக்கிறானோ அவன் என்னிடம் மேலான அன்பு செய்து ஐயம் இன்றி என்னையே அடைவான்" *(கீதை. 18:68) என்றும்,* "என்னால் உனக்குச் சொல்லப்பட்ட இந்நூல் தவம் செய்யாதவனுக்கும் பக்தியற்றவனுக்கும் கேட்பதில் விருப்பம் அற்றவனுக்கும் என்னை எவனொருவன் தூற்றுகிறானோ அவனுக்கும், ஒருபோதும் சொல்லத் தக்கது அன்று" *என்றும் புகல்கிறது கீதை (18:67). இதனால் கேட்கத் தகாதவர் கேட்கவும் கூடாது; கேட்கத் தக்காருக்குச் சொல்லாமல் இருத்தலும் கூடாது என்னும் இரு நிலைகளும் உண்டு.* **பணிவார் வினைகள் நாசமது செய்திடும்** - *திருவடிகளிலே விழுந்து வணங்குவாருடைய தீவினைகளை வேர்ப்பற்றோடே போக்குவிக்கும். நாசம் என்று இருந்தாலே போதும். அதன் மேலும்* '**அது**' *என்னும் விகுதி அமைந்திருப்பது அவ்அரிய செயலையும் செய்யும் என்பதனைக் காட்டுகிறது.* "மேரு மந்திர மலை போன்ற தீவினைக் குவியல்களும், கேசவனை அடைந்தவுடன் நல்ல மருத்துவனை அடைந்த கொடுநோய் விலகுவது போல விட்டு நீங்குகின்றன" *(வி. தர்.) என்பதற்கு ஏற்பக் கழியுமாறு செய்திடும்.* **ஆதன்மையால் அதுவே நமது உய்வு இடம்** - *இப்படி இருக்கையால் அதுவே நமக்கு உய்வடைவதற்குத் தகுந்த இடம்.* **மனம் ஐந்தொடு நைந்து உழல்வார் மதிஇல் நீசரவர் சென்று அடையாதவனுக்கு** *ஐந்தொடு மனம் நைந்து உழல்வார் எனக் கூட்டுக. அதற்கு இத்தகைய ஓசை முதலிய உலக இன்பங்களில் நெஞ்சு இழிந்து நைந்து வருந்துபவர்கள் என்பது பொருள். அறிவு கேடரான தண்ணியர்*[3] *சென்று அடையாதவனுக்கு.* **இடம் ஆவது** - *இடமாக இருப்பது.* **நாண் மலர் மேல் வாசம் மணி வண்டு அறை பைம் புறவில் மாமலை ஆவது** - '**நாண் மலர் தூய்**' *என்பது பாடமாக இருப்பின் செவ்விப் பூக்களைத் தூவிப் பணிவார் என்று பொருள்தரும்.* '**நாண் மலர் மேல்**' *என்பது பாடமாயின் செவ்விப் பூக்களின்மேலே படிந்து என்று பொருள்படும். அப்படிச் செவ்விப் பூக்களில் படிந்து மணம் பெற்றிலங்கும் வண்டுகள் ஆளத்தி வைக்கும் பக்கங்களையுடைய மாமலை ஆவது.* **நீர்மலையே**-.

---

1. செவிப்படுவதுக்கு.
2. செவிப்படுதல் - காதில் விழுதல். 3. தண்ணியர் - தாழ்ந்தவர்.

**ஒப்புமைப் பகுதி**

**மனம் ஐந்தொடு நைந்து உழலுதல்**

*பாட்டு 58இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.* (39)

## 140

நெடுமா லவன்மே வியநீர் மலைமேல்
நிலவும் புகழ்மங் கையர்கோன் அமரில்
கடமா களியா னைவலான் கலியன்
னொலிசெய் தமிழ்மா லைவலார்க் குடனே
விடுமால் வினைவேண் டிடில்மேல் உலகும்
எளிதா யிடும்அன் றிஇலங் கொலிசேர்
கொடுமா கடல்வை யகமாண் டுமதிக்
குடைமன் னவராய் அடிகூ டுவரே.

ப. ரை : நெடுமாலவன் மேவிய நீர்மலைமேல் - *பெருமான் என்றும் பொருந்தியுள்ள நீர்மலையைக் குறித்து,* நிலவும் புகழ் மங்கையர் கோன் - *நிலைத்திருக்கும் புகழையுடைய திருமங்கையிலுள்ளார்க்குத் தலைவனும்,* அமரில் கடமா களி யானை வலான் - *போர்க்களத்தில் மதத்தாலே மிகவும் களித்த யானையை நடத்த வல்லவனும் ஆகிய,* கலியன் - *கலியன் என்னும் பெயரையுடைய திருமங்கைமன்னன்,* ஒலி செய் தமிழ் மாலை வல்லார்க்கு - *ஒலிநயம் கொண்டதாகச் செய்த இத் தமிழ்ப் பாக்களை ஓதவல்லார்க்கு,* உடனே வினைவிடும் - *அப்பொழுதே தீவினைகள் அகன்றொழியும்,* வேண்டிடில் - *விரும்பினால்,* மேல் உலகும் எளிது ஆயிடும் - *துறக்கம் முதலான மேல் உலகங்களும் எளிதாகக் கிடைக்கும்.* அன்றி - *அதுவும் அல்லாமல்,* இலங்கு ஒலி சேர் கொடு மா கடல் வையகம் - *விளங்கும் ஆரவாரம் பொருந்திய வளைந்த பெரிய கடலால் சூழப்பட்ட மண்ணுலகை,* மதிக்குடை மன்னவராய் ஆண்டு - *திங்கள் போலும் குடையை உடைய அரசர்களாய் ஆட்சிபுரிந்து,* அடி கூடுவர் - *பின்பு அவன் திருவடிகளைக் கிட்டுவர்.*

சி. கு : *"விடுமால் வினை" என்பதில் 'ஆல்' அசை. "வினை விடும்" என்று கூட்டுக. இதனை விடும் மால் வினை என்று பிரித்து மால் என்பதற்குப் பெரிய என்று உரை கூறுவாரும் உண்டு.*

வியா : **பத்தாம் பாட்டு :** நெடுமால் இத்யாதி - ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரன் வந்து நித்ய வாஸம் பண்ணுகிற திருநீர்மலைமேலே, நித்யமான

---

வி : பத்தாம் பாட்டு : நெடுமாலவன் மேவிய நீர்மலைமேல் நிலவும் புகழ் மங்கையர் கோன் அமரில் கட மா களி யானை வலான் கலியன் ஒலி செய் தமிழ்

---

**140.** 3 : 3 டிடின்மேல். 3 : 4 உலகம். 3 : 8 கொளிசேர்.

புகழை உடையருமாய் திருமங்கையில் உள்ளார்க்கு ப்ரதாநராய் இருப்பாருமாய், யுத்தத்திலே மத்தகஜத்தை நடத்த வல்லருமான ஆழ்வார் ஒலி உடைத்தாம்படி செய்த தமிழ்த்தொடை வல்லார்க்கு. உடனே - ஆஶ்ரயண காலத்திலே கர்மங்கள் அடைய விட்டு ஓடிப்போம். அதுக்கு மேலே ப்ராப்தியும் வேண்டி இருக்கில் அதுவும் அவர்க்கு ஸுலபம் ஆம். அன்றிக்கே ஐஹிகமான ஸம்பத்து வேண்டி இருப்பர்கள் ஆகில், விளங்காநிற்பதாய் த்வநியை உடைத்தாய், வளைந்து இருந்துள்ள கடல் சூழ்ந்த பூமிக்கு எல்லாம் தாங்களே நிர்வாஹகராய், சந்த்ரனைப் போலே இருக்கிற வெண்கொற்றக்குடைக் கீழே இருந்து ஐஶ்வர்யத்தை அநுபவித்துப் பின்னையும் திருவடிகளிலே[1] கூடப் பெறுவர்.

---

மாலை வலார்க்கு - எப்பொருட்கும் மேலானவனான முழுமுதல்வன் வந்து என்றும் தங்கியுள்ள மலை திருநீர்மலை. அதன்மேலே, நிலைத்த புகழ் உடையவரும், திருமங்கையில் உள்ளார்க்குத் தலைவரும், போரிலே மதம் பொருந்திய யானையை நடத்த வல்லவரும் ஆகிய ஆழ்வார் ஒலி உடைத்தாம்படி செய்த தமிழ்மாலை இது. இத்தமிழ்த் தொடையினைக் கற்று வல்லவரா னார்க்கு. உடனே விடுமால் வினை - பெருமானைப் பற்றும் அக்காலத்திலேயே தாம் செய்த தீவினைகள் அடைய[2] விட்டு ஓடிப்போகும். வேண்டிடில் மேல் உலகும் எளிது ஆயிடும்; அன்றி இலங்கு ஒலி சேர் கொடு மா கடல் வையகம் ஆண்டு மதிக் குடை மன்னவராய் அடி கூடுவரே - அதற்கு மேலே, பேறு வேண்டினால் அதுவும் அவர்க்கு எளிதாகும். அன்றிக்கே இம்மையில் நுகரும் செல்வம் வேண்டி இருப்பார்களாகில் அதுவும் கிட்டும். அவர்கள் விளங்குவதும் ஓசை உடையதுமாய் வளைந்திருக்கும் கடலால் சூழப்பட்ட புவிக்கு எல்லாம் தாங்களே அரசர் ஆவர்; திங்களைப் போலும் வெண்கொற்றக்குடைக் கீழே இருந்து செல்வம் துய்ப்பர்; அதன் பின்னர் இறைவன் திருவடிகளிலே கூடப் பெறுவர். (40)

1. திருவடிகளோடே.
2. அடைய - முழுதும்.

## இரண்டாம் பத்து - ஐந்தாம் திருமொழி - பாராயது

பிர : ஆஶ்ரித விரோதி நிரஸநசீலனாய், ஆஶ்ரித வத்ஸலனாய், ஆஶ்ரித ஸுலபனாய், ஸ்வ ப்ராப்திக்கு உபாயமும் தானேயாய் இருக்கிற ஸர்வேஶ்வரனைத் திருக்கடல் மல்லையிலே நான் அகப்படக் காணப் பெற்றேன். அவன் அரியன் என்று கைவாங்காதே அவனை ஒழிந்தது அடங்கலும் படுகுழி, அவற்றில்[1] புக்கு அநர்த்தப்பட்டுப் போகாதே அவனை ஆஶ்ரயித்து உஜ்ஜீவித்துப் போகப் பாருங் கோள் என்கிறார்.

---

தோ : *பெருமான் அடியாருடைய பகையினைக் கிழங்கெடுப்பவன்[2]; அடியாரிடத்தில் பரிவுடையவன்; அடியார்க்கு எளியவன்; தன்னை அடைவதற்கு வழியும் தானேயாய் இருப்பவன்; அவனைத் திருக்கடல் மல்லையிலே நான் அகப்படக் காணப்[3] பெற்றேன்; அவனை ஒழிந்தன அடங்கலும் படுகுழிகள்; அவற்றில் புக்கு இடர்ப்பட்டு நிற்காதீர்கள். அவன் அரியன் என்று கைவாங்காமல் அவனைச் சார்ந்து கரைசேரப் பாருங்கள் என்கிறார்.*

### 141

பாராய துண்டுமிழ்ந்த பவளத் தூணைப்
படுகடலில் அமுதத்தைப் பரிவாய் கீண்ட
சீரானை எம்மானைத் தொண்டர் தங்கள்
சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்க ரும்பினைப்
போரானைக் கொம்பொசித்த போரேற் றினைப்
புணர்மருதம் இறநடந்த பொற்குன் றினைக்
காரானை இடர்கடிந்த கற்ப கத்தைக்
கண்டதுநான் கடல்மல்லைத் தலச யனத்தே.

ப. ரை : பாராயது உண்டு உமிழ்ந்த பவளத் தூணை - *உலகத்தை எல்லாம் வயிற்றிற் கொண்டு பின்பு வெளிப்படுத்திய பவளம் போலே விரும்பத் தக்கவனும்,* படுகடலில் அமுதத்தை - *ஆழ்ந்த கடலில் தோன்றிய அமுதம் போலே இனியனாக உள்ளவனும்,* பரிவாய்க் கீண்ட சீரானை - *குதிரை வடிவில் வந்த கேசி என்னும் அசுரனது வாயைக் கிழித்தெறிந்த வீரத்திரு உடையவனும்,* எம்மானை - *எனக்குத் தலைவனாக இருப்பவனும்,* தொண்டர் தங்கள் சிந்தை உள்ளே முளைத்து எழுந்த தீங் கரும்பினை - *தன் அடியாரது உள்ளத்தில் தோன்றி வளரும் கரும்பு போலே இனியனானவனும்,* போர் ஆனைக் கொம்பு ஒசித்த போர் ஏற்றினை - *போர் செய்ய வந்த குவலயாபீடம் என்னும் யானையின் கொம்பை முறித்த போரிட வல்ல சிங்கம் போலே தலைமைத் தன்மை உடையவனும்,*

---

1. அவைத்திலே; அவைற்றிலே.
2. கிழங்கெடுத்தல் - முற்றும் களைதல். 3. அகப்படக் காணல் - நெஞ்சில் நிற்குமாறு பார்த்தல்.

**141.** 1 : 4 தானைப். 2 : 2 பெம்மானை. 3 : 8 பொன்ன்.

புணர் மருதம் இற நடந்த பொற் குன்றினை - இரட்டை மருதமரங்கள் முறிந்து வீழும்படி அவற்றின் நடுவே நடந்த பொன்மலை போலே அழகியவனும், கார் ஆனை இடர் கடிந்த கற்பகத்தை - பெரிய கயேந்திராழ்வானுடைய துன்பத்தைப் போக்கிய கற்பக மரத்தைப் போலே வேண்டுவனவற்றைத் தரும் வள்ளன்மை யுடையவனும் ஆகிய பெருமானை, நான் கண்டது - அடியேன் காணப்பெற்றது எங்கே என்றால், கடல் மல்லைத் தலசயனத்து - திருக்கடல் மல்லையில் உள்ள தலசயனத்தில் ஆகும்.

**சி. கு :** பார்ஆயது என்பது ஒருசொல் நீர்மைத்து. சீர் - செல்வம்; ஈண்டு வீரத்திருவைக் குறித்தது. திருக்கடல் மல்லை - இன்று மாமல்லபுரம் என்றும் மகாபலிபுரம் என்றும் வழங்கும் திருத்தலம். சென்னைக்கு முப்பத்தேழு கல் தொலைவில் கடற்கரையில் உள்ளது. பெருமான் பெயர் தலசயனத்து உறைவார்; பிராட்டி பெயர் நிலமங்கை.

இத்திருமொழி எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

வியா : **முதற் பாட்டு : பாராயது** - பார் என்று பேர் பெற்றது எல்லாம். பூமி என்று பேர் பெற்றது எல்லாவற்றையும்[1] ப்ரளயத்திலே எடுத்து வயிற்றிலே வைத்துப் பின்னை உள்ளே கிடந்து தளராதபடி வெளிநாடு காண உமிழ்ந்து. இப்படி ஸர்வ வித ரக்ஷணம் பண்ணுமவன்தான் ஆர் என்னில், **பவளத் தூணை** - ஸர்வர்க்கும் ஸ்ப்ருஹணீயமாய் தானே தாரகமுமாய் இருக்கும் ஆயிற்று. **படுகடலில் அமுதத்தை** - ரத்நாதிகள் படுகிற கடல் என்னுதல்; ஆழத்தை உடைத்தான கடல் என்னுதல். 'மடுப்பட்டது'[2] என்றாப் போலே ஆழத்தைச் சொல்லக்கடவதிறே! இவ்விசேஷணத்தின் கருத்து என் என்னில், நல்லது எல்லாம் படுகிற இடத்திலே போக்யன் ஆனவனும் என்கை. ஆழமான போது பெறுதற்கு அரிய வஸ்து என்கை. **பரிவாய் கீண்ட** - ப்ரபல ப்ரதிபந்தங்களைக் கேசி வாயைக் கிழித்தாப் போலே அநாயாஸேந போக்க வல்லவனை. பரியுண்டு குதிரை, அதின் வாயைக் கிழித்த

---

வி : முதற் பாட்டு : **பார் ஆயது உண்டு உமிழ்ந்த** - பார் என்று பெயர் பெற்றவை எல்லாம். உலகு என்று பெயர் பெற்ற எல்லாவற்றையும் பெரு வெள்ளம் கோத்த காலத்திலே எடுத்து வயிற்றிலே வைத்துப் பின்னை உள்ளே கிடந்து தளராதபடி வெளிநாடு காண உமிழ்ந்து[3] இப்படி எல்லாவகைப் பாதுகாப்பினையும் செய்பவன் யார் என்றால், **பவளத் தூணை** - எல்லார்க்கும் விரும்பத்தக்கவனாய்த் தானே எல்லாவற்றையும் தாங்குபவனாய் இருப்பவன். **படு கடலில் அமுதத்தை** - மணி முதலானவை படுகிற கடல்; அல்லது, ஆழத்தையுடைய கடல். 'மடுப்பட்டது' என்றாற்போலே ஆழத்தைச் சொல்வது உண்டன்றோ! இவ் அடைமொழியின் கருத்து யாது என்னில், மணி முத்து முதலான நல்லவை எல்லாம் உண்டாகும் இடத்திலே இனியனாய் இருப்பவனும் உள்ளான் என்பதனைக் காட்டுவது. ஆழமான கடல் என்று பொருள்படும் போது அவன் பெறுதற்கு அரிய பொருள் என்பதனைக் காட்டும். **பரிவாய் கீண்ட சீரானை** - பெரிய இடைச்சுவர்களைக் கேசி வாயைக் கிழித்தாற் போலே எளிதாகப் போக்க வல்லவனை. பரி - குதிரை; அதன் வாயைக் கிழித்த வீரத்திரு உடையவனை.

---

1. எல்லாத்தையும். 2. மடுப்படும் துறை.
3. வெளிநாடு காண உமிழ்தல் - புறத்தே காட்சியாகும்படி வெளிப்படுத்தல்.

வீரஸ்ரீயை உடையவனை. **எம்மானை** - ஸப்ரமாதமான செயலையிறே செய்தது. அதின் கையிலே அகப்பட்டுத் தன்னைத் தப்புவித்த செயலாலே என்னை அநந்யார்ஹன் ஆக்கினவனை. **தொண்டர் இத்யாதி** - பரிணாமாதிகள் இல்லை என்ன ஒண்ணாது[1] இவ்வஸ்துவுக்கு; நித்ய வஸ்து என்ன ஒண்ணாது[2]. **"ஸந்தமேநம்"** என்னுமாப் போலே ஆயிற்று. வஸ்து நித்யமாய் இருக்கச்செய்தேயிறே, **"அஸந்நேவ"** என்கிறதும், **"ஸந்தமேநம்"** என்கிறதும். அவனை அறியாத அன்று தான் இலனாய் அறிந்த அன்று உளனாய் இருக்குமாப் போலே, அவனும் தன்னை இவன் அறிந்த அன்று தான் உளனாய், அறியாத அன்று இலனாய் இருக்கும் ஆயிற்று. இவன் அவனுக்கு இத்தனை ஸ்ப்ருஹணீயனும் ஆயிற்றிலனாகில் இவன் சேஷபூதனாய் அவன் சேஷியாய், இவன் அத்தலைக்கு அதிசயத்தைப் பண்ண அவன் உகக்கக் கடவனாய், இது பின்னை இவனுக்குப் புருஷார்த்தம் ஆகிற இந்த ப்ராப்திகள் எல்லாம் குலையுமிறே! உத்பத்தி வ்ருத்திகள் எல்லாம் அங்கே ஆயிற்று. அதுக்கு அடி என் என்னில், **கரும்பினை** - கட்டி ஸ்தாநத்திலே 'கரும்பு' என்னில் மிகுமிறே. பெருக்க இனிதாய் இருக்கை. **தொண்டர்** - நிலமிதியாலே

---

**எம்மானை** - *தனக்கு இடரை விளைவிக்கக்கூடிய செயலையன்றோ அவன் செய்தான். அக்குதிரையினிடத்து அகப்பட்டுத் தன்னைத் தப்புவித்த செயலாலே என்னைப் பிறர்க்கன்றித் தனக்கேயாக ஒடியெறிந்தவனை.* **தொண்டர் தங்கள் சிந்தையுள்ளே முளைத்து எழுந்த தீங் கரும்பினை** - *இப்பொருளுக்கு வளர்ச்சி தொடக்கமான உருவ மாற்றங்கள் இல்லை என்று சொல்ல ஒண்ணாது; மாறாத நிலை நின்ற பொருள் என்று கூற இயலாது.* **"பரம்பொருளை அறிகிறான் என்னும் புகழ் ஒருவனுக்கு இல்லையாகில் அவன் இல்லாதவனாகவே ஆகிறான்; பரம்பொருளை அறிகிறான் என்னும் புகழ் ஒருவனுக்கு இருந்ததாகில், அக்காரணத்தாலேயே பெரியோர்கள் அவனை என்றும் இருப்பவன் என்கிறார்கள்"** *(தைத். ஆந. 6) என்பது போன்ற நிலையை உடையவனே இறைவனும் ஆவான். மனிதன் இறைவனை அறியாத அன்று தான் இல்லாதவனாய், அறிந்த அன்று உள்ளவனாய் இருக்கிறான். அது போலே இறைவனும் தன்னை இம்மனிதன் அறிந்த அன்று தான் உளனாகவும், அறியாத அன்று இலனாகவும் இருக்கிறான். மனிதன் இறைவனுக்கு இவ்வளவு விரும்பத் தக்கவனாய் அமைந்திலன் என்றால் மனிதன் அடிமையாகவும் இறைவன் ஆண்டானாகவும் இருத்தல், இம்மனிதன் அவ்இறைவனுக்குத் தன் தொண்டினால் மேன்மையைச் செய்தல், அவ்இறைவன் அதனால் உகத்தற்கு உரியனாய் அமைதல், இப்படிச் செய்யும் தொண்டு பின்பு இம்மனிதனுக்கு அடையத் தக்க உறுதிப்பொருளாய் இருத்தல் ஆகிய இப்பேறுகள் எல்லாம் குலைந்துபோகும் அன்றோ! முளைத்தல், வளர்தல் ஆகியவை எல்லாம் தொண்டர் நெஞ்சகத்திலே நிகழ்வனவாகும். அந்த முளைத்தல், வளர்தல் ஆகியவற்றிற்கு அடிப்படையாய் இருப்பது யாது என்னில், கரும்பாக இருத்தல் ஆகும்.* **கரும்பினை** - *கட்டி என்று சொல்வதற்கு உரிய இடத்தில் 'கரும்பு' என்று சொல்லின், அதனால் சுவைப் பயன் மிகும் அன்றோ! தீங் கரும்பு என்று சிறப்பித்துக் கூறுவதனால் பெருக்க இனிதாக இருக்கை விளங்கும். தொண்டர்தம் நெஞ்சகம் ஆகிய நிலத்தைச் சேர்வதனாலே ஒரு நன்மை உண்டல்லவா! அந்நன்மையே பெருக்க இனிதாக இருத்தல் ஆகும்.*

---

1, 2. உண்ணாது.

யும் ஒரு தன்மை உண்டிறே. **போரானை** - யுத்தோந்முகமாய் இருந்துள்ள குவலயாபீடத்தினுடைய கொம்பை அநாயாஸேந முறித்துப் பொகட்டு யுத்தத்திலே ஸிம்ஹம் போலே இருக்கிறவனை. 'ஏறு' என்றால் ஸிம்ஹத்தையும் ருஷபத்தை யும் காட்டும். இங்குக் கீழே ஆனையைச்[1] சொல்லுகையாலே ஸிம்ஹத்தைச் சொல்லிற்றாக அமையுமிறே. யுத்தத்தில் சௌர்யம் இருக்கிறபடி. **புணர் இத்யாதி** - பருவம் நிரம்பின பின்பு செய்தத்தையோ சொல்லுவது! இரண்டும் ஒன்றே என்னலாம்படி தன்னிலே பொருந்தி நின்ற மருது முறிந்து விழும்படிக்கு ஈடாக நடை கற்றான் ஆயிற்று. நலிவதாகக் கோலி வந்த அபிஸந்தியும் குலையாதே இருக்கச்செய்தே நடுவே போனான் ஆயிற்று. **பொன் குன்றினை** - அந்த ஸிம்ஹம் வர்த்திக்கும் மேரு என்று சொல்லலாம்படி இருக்கை. தன்னிலே பொருந்தி நிற்கும் மருதுகள் முறிந்து விழுகிற போதை த்வநியைக் கேட்டுப் புரிந்து பார்த்த போது இருந்தபடி சொல்லுகிறது. **"தகஃகடகடா சப்த ஸமாகர்ணந தத் பரஃ".** **கார் இத்யாதி** - ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய ஆபந் நிவாரணத்தைப் பண்ணி அவனுக்குத் தன்னை முற்றூட்டு ஆக்கிக் கொண்டு நின்றவனை. கார் என்று பெருமை. **கண்டது இத்யாதி** - இடர் பட்டு வரவும், பிற்பாடாகை அன்றிக்கே இவன் இடர் பட்ட மடுவின் கரையிலே வந்து உதவினாப்போலே, நான் நோவுபடுகிற ஸம்ஸாரத்திலே ஸமகாலத்தில் காணப்பெற்றேன் என்கிறார்.

---

**போர் ஆனைக் கொம்பு ஒசித்த போர் ஏற்றினை** - போரை எதிர்நோக்கி இருந்த குவலயாபீடத்தினுடைய கொம்பை ஓசழக்காக[2] முறித்துப் போட்டுப் போரிலே சிங்கம் போலே இருப்பவனை. 'ஏறு' என்பது சிங்கத்தையும் காளையையும் குறிக்கும். இங்குக் கீழே யானையைச் சொல்லுகையாலே சிங்கத்தைச் சொல்வ தாகக் கொள்வது பொருத்தம். போரில் அவனது வீரம் இருக்கும் தன்மை இது. **புணர் மருதம் இற நடந்த பொற் குன்றினை** - பருவம் நிரம்பிய பின்பு செய்த தனையோ சொல்கிறது இத்தொடர்? இல்லையே! பிள்ளைப் பருவச் செயலையே சொல்கிறது. இரண்டும் ஒன்றே என்று சொல்லத்தக்க வகையில் தம்மிலே பொருந்தி நின்ற மருத மரங்கள் முறிந்து விழும்படிக்கு ஈடாக நடை கற்க லானான். நலிவதாகக் கோலிவந்த திட்டமும் குலையாமல் இருக்கும் போதே நடுவே போகலானான். **பொற் குன்றினை** - அந்தச் சிங்கம் உறையும் மேரு என்று சொல்லத் தக்க வகையில் இருக்கை. தம்மிலே பொருந்தி நிற்கும் மருதுகள் விழும் போது எழுந்த ஒலியைக் கேட்டுப் புரிந்து பார்த்த போது இருந்த தன்மை யைச் சொல்கிறது இத்தொடர். **"அப்பொழுது கடகட என்னும் ஒலியைக் கேட்பதில் தன்னை மறந்து தாமரைக் கண்ணனான அந்தக் கண்ணபிரான் சென்றான்"** என்பது விட்டுணு புராணம் (5:6). **கார் ஆனை இடர் கடிந்த கற்பகத்தை** - சீரார் கயேந்திராழ்வானுடைய இடையூற்றைத் துடைத்து அவனுக்குத் தன்னை முற்றூட்டாக்கிக்கொண்டு[3] நின்றவனை. கார் - பெருமை. **கண்டது நான் கடல் மல்லைத் தலசயனத்தே** - கயேந்திராழ்வான் முதலையால் கொள்ளப்பட்டு இடர்ப்பட்டுவரவும் பெருமான் காலத்தாழ்வு இன்றி அவன் இடர்ப்பட்ட மடுவின் கரைக்கே வந்து உதவினான். அது போலே நான் நோவுபடும் இவ்வுலகத்திலே நோவுபட்டுக் கொண்டிருக்கும் காலத்திலேயே காணப்பெற்றேன் என்கிறார்.

---

1. யானையைச்.
2. ஓசழக்காக - எளிதாக; விளையாட்டாக. 3. முற்றூட்டாக்கல் - முழுதும் நுகருமாறு தருதல்.

## ஒப்புமைப் பகுதி

### 1. பாரினை உண்டு உமிழ்ந்தவன்

*" உலகேழும் உண்டு உமிழ்ந்தான் தன்னை - இப்படி புஷ்கலனாய் இருந் தானே யாகிலும், விபூத்யேக தேசமான ஸம்ஸாரத்தை ப்ரளயங் கொண்டது என்றால் இங்கே வந்து வயிற்றிலே எடுத்துவைத்துநோக்கி, 'இத்தனைபோதும் காணப் பெறாமையாலே இவை என்படுகிறனவோ?' என்று உமிழ்ந்து பார்க்குமவனை; வழிபறிக்கும் நிலத்தில் போவார் சீரிய தநங்களை விழுங்கிப் பின்னை அமர்ந்த நிலத்திலே புக்கால் புறப்பட விட்டுப் பார்க்குமாபோலே "*

*தி. வா. மொ. 3:6:8-36*

*[புஷ்கலன் - நிறைந்தவன். விபூத்யேக தேசம் - உடைமையுள் ஒரு கூறு.]*

*" மண்ணை உண்டு உமிழ்ந்து - ப்ரளயாபத்தில் அபேக்ஷியாது இருக்க ஆபத்தே முதலாக வரையாதே இஜ்ஜகத்தைத் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்து, உள்ளிருந்து நோவுபடாதபடி ஸ்ருஷ்டி காலத்திலே உமிழ்ந்து "*

*தி. வி. 105 பெ. உரை.*

*[அபேக்ஷியாது - விழையாது. ஜகத் - உலகம். ஸ்ருஷ்டிகாலம் - படைப்புக் காலம்.]*

### 2. படுகடல்

*" பரந்திட்டு நின்ற படுகடல் தன்னை "*

*படுகடல் - 'அப்ரமேயோ மஹோததி:' என்கிறபடியே ஒருவராலும் எல்லைகாண ஒண்ணாதபடி விஸ்தீர்ணமாய் நின்ற ஆழ்ந்த கடலானது. 'படு' என்று ஆழம். அன்றிக்கே ரத்நாதிகள் படுகிற கடல் என்றும் ஆம் "*

*பெரி. தி. 1:6:7 ம. மா. மு. உரை.*

### 3. பரிவாய் கீண்டவன்

*" வெம்மா பிளந்தான் - கேசி வாயை அங்காந்து கொண்டு வந்தபோது, சிறு ப்ரஜைகள் த்வாரம் கண்ட இடங்களிலே கையை நீட்டுமாபோலே, இவன் மௌக்த்யத்தாலே அதின் வாயிலே கையை நீட்டினான்; அபூர்வ தர்சநத்தாலே கை பூரித்துக் கொடுத்தது, கையைப் புரிந்து வாங்கி னான். அவன் இரு பிளவாய் விழுந்தான் "*

*தி. வா. மொ. 4:5:1-36*

*[ப்ரஜைகள் - பிள்ளைகள். த்வாரம் - பொந்து; ஓட்டை. மௌக்த்யம் - சிறு பிள்ளைத்தனம், பயலைத்தனம். அபூர்வ தர்சநம் - காணாதது கண்ணுறுதல். பூரித்தல் - பெருத்தல்.]*

*" மாவாய் பிளந்து - நாரதாதிகள் கூப்பிடும்படி வந்த கேசியை நெடிக் கோரை கீண்டாற்போலே கீண்டு "*

*மு. தி. 27 பெ. உரை.*

*[நாரதாதிகள் - நாரதர் முதலானோர். கூப்பிடும்படி - அஞ்சும்படி.]*

*" மா கீண்ட கைத்தலத்து என் மைந்தா என்னும் - பஞ்சலக்ஷம் குடியிற் பெண் களுக்கும் தன்னை அநுபவிக்க வருகிற வழியில் உண்டான வன்னியம்*

அறுத்துக் கொடுத்தபடியைச் சொல்லுகிறது. கம்ஸ ப்ரேரிதனாய் வந்த கேசி இவனுடைய பருவத்தையும் ஸௌகுமார்யத்தையும் கண்டு, 'இவன் ஒரு பொருளோ? எடுத்து விழுங்குகிறோம்' என்று வாயைத் திறந்து கொண்டு வரச் சிறு பிள்ளைகள் த்வாரங் கண்ட இடத்திலே கையை நீட்டக் கடவர்களாயிறே இருப்பது, அத்தாலே கையை நீட்டினான்; ரக்ஷகனுடைய கையாகையாலே ரக்ஷண தர்மம் பெற்றவாறே வளர்ந்து கொடுத்தது; வெள்ளரிப்பழம் விரித்தாற்போலே விரிந்து கிடந்தான் இத்தனை என்கை '' தி. நெ. தா. 13 பெ. உரை.

[பஞ்சலக்ஷம்குடி - ஐந்நூறாயிரம்குடி. வன்னியம் - இடையூறு. கம்ஸ ப்ரேரிதன் - கம்சனால் தூண்டி விடப்பட்டவன். ஸௌகுமார்யம் - மென்மை. ரக்ஷகன் - காப்பவன். ரக்ஷண தர்மம் - காக்கும் தன்மை. விரிதல் - பிளத்தல்.]

4. இறைவனாகிய கரும்பு

'' கரும்பினைக் கண்டு கொண்டென்
கண்ணிணை களிக்குமாறே ''

'' கரும்பினை - 'கரும்பு' என்றது கை தொட்டால் பிசுகுநாறாதே இருக்கும் போக்யமான வஸ்துவை. ப்ராப்தமுமாய் ஸுலபமுமாய் இருக்கச் செய்தேயும் போக்யதை ஆய்த்து மிக்கு இருப்பது; 'கன்னல்' என்னாது ஒழிந்தது பாகவிஶேஷத்தாலே ஆக்கனாய்வந்த ஸாரஸ்யம் அல்ல; ஸத்தா ப்ரயுக்தமான ஸாரஸ்யம் என்கைக்காக '' தி. மா. 17 பெ. உரை.

பிசுகுநாறுதல் - பிசுகு ஒட்டிக் கொள்ளுதல். பிசுகு - பசை. போக்யம் - இனிமையானது. வஸ்து - பொருள். பாகவிஶேஷம் - ஒருவகைப் பக்குவ நிலை. ஆக்கன் - உண்டாக்கப்பட்டது. ஸாரஸ்யம் - சுவை. ஸத்தா ப்ரயுக்தம் - பொருளோடு ஒன்றியது; இயற்கையானது.]

5. ஆனைக் கொம்பு ஒடித்தவன்

பாட்டு 121இன் ஒப்புமைப் பகுதி பார்க்க

6. மருதினை இறுத்தவன்

பாட்டு 73இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

7. ஆனையின் இடர் கடிந்தவன்

பாட்டு 75இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

8. கடல் மல்லை

'' மன்னும் கடல்மல்லை மாயவன் - ஆஶ்ரிதர்க்காகத் தரையிலே கண் வளர்ந்தருளுகிறவன் '' பெ. ம. 120 பெ. உரை.

[ஆஶ்ரிதர் - அடியார்]

'' முந்நீர் மல்லையாய் - மஹார்க்கமான த்வீபாந்தரச் சரக்கு த்வீபாந்தரத்திலே வந்து விலையுண்ணாதே போகச் சோம்பாதே கடற்கரையிலே

*கிடக்கிறபடி. அநந்தசாயிகிடீர், அவனைவிட்டு ஆஶ்ரிதனுக்காகக் கடற்கரையிலே தரைக்கிடை கிடக்கிறான் "*

*தி. நெ. தா. 9 பெ. உரை.*

*[மஹார்க்கமான - பெருமதிப்புடையதான; பெருவிலையனான. த்வீபாந்தரச் சரக்கு - பிறிதொரு தீவில் இருக்கும் பொருள். அநந்தசாயி - ஆதிசேடனாகிய படுக்கையைக் கொண்டவன்.]*

*(41)*

## 142

**பூண்டவத்தம் பிறர்க்கடைந்து தொண்டு பட்டுப்**
**பொய்ந்நூலை மெய்ந்நூல்என் றென்றும் ஓதி**
**மாண்டவத்தம் போகாதே வம்மின் எந்தை**
**என்வணங்கப் படுவானைக் கணங்கள் ஏத்தும்**
**நீண்டவத்தைக் கருமுகிலை எம்மான் தன்னை**
**நின்றவூர் நித்திலத்தைத் தொத்தார் சோலைக்**
**காண்டவத்தைக் கனல்எரிவாய் பெய்வித் தானைக்**
**கண்டதுநான் கடல்மல்லைத் தலச யனத்தே.**

**ப. ரை :** **அவத்தம் பூண்டு** - *வீணான செயல்களை மேற்கொண்டு,* **பிறர்க்கு அடைந்து தொண்டு பட்டு** - *பிறரைச் சார்ந்து, அவர்களுக்கு அடிமைத் தொழில் செய்தும்,* **பொய்ந் நூலை மெய்ந் நூல் என்று** - *உண்மைக்கு மாறான பிற சமய நூல்களை உண்மையான நூல்கள் என்று கருதி,* **என்றும் ஓதி மாண்டு** - *எப்போதும் படித்து அழிந்தும்,* **அவத்தம் போகாதே வம்மின்** - *பாழாகப் போய் விடாமல் உய்வடைய வாருங்கள்;* **எந்தை** - *எனக்குத் தந்தையானவனும்,* **என் வணங்கப்படுவானை** - *என்னைப் போன்றோர்க்கும் வணங்கலாம்படி எளியனாய் இருப்பவனும்,* **கணங்கள் ஏத்தும் நீண்ட அத்தை** - *அறிவுடையாரின் கூட்டங்கள் பரவுகின்ற அளவுக்குட்படாமல் விரிந்த பொருளாக உள்ளவனும்,* **கரு முகிலை** - *காளமேகம் போலும் நிறத்தை உடையவனும்,* **எம்மான் தன்னை** - *எங்களுக்குத் தலைவனாக இருப்பவனும்,* **நின்றவூர் நித்திலத்தை** - *திருநின்றவூரில் முத்துத்திரள் போலே குளிர்ச்சி பொருந்திய வடிவோடு இருப்பவனும்,* **தொத்து ஆர் சோலைக் காண்டவத்தைக் கனல் எரிவாய் பெய்வித்தானை** - *பூங்கொத்துகள் நிறைந்த சோலைகளையுடைய காண்டவ வனத்தை முருகி எழுந்த தீயின் வாயில் புகுமாறு செய்தவனும் ஆகிய பெருமானை,* **நான் கண்டது கடல்மல்லைத் தலசயனத்தே-.**

**சி. கு :** *அவத்தம் - அவத்யம் என்னும் வடசொல் திரிபு; பொல்லாங்கு என்பது பொருள். நித்திலம் - முத்து.*

---

**142.** 3 : 1 நீண்டவத்தக்; நீண்ட அத்தக்.

வியா : இரண்டாம் பாட்டு : **பூண்டு அவத்தம்** - அவ்த்தம் பூண்டு - வ்யர்த்தமான கார்யங்களை ஏறட்டுக்கொண்டு. ஸாத்விகரோட்டை ஸஹவாஸமும் வைதிக புருஷார்த்தங்களைப் பெற வேணும் என்னும் அதுவும் தவிர்ந்து வ்யர்த்த மானவற்றை[1] ஏறட்டுக்கொண்டு. **பிறர்க்கு அடைந்து தொண்டு பட்டு** - அப்ராப்த விஷயங்களிலே ப்ராப்த விஷயத்தில் போலே இருக்கத் தாழ்வுசெய்து. அஸேவ்யரை ஸேவித்து. **பொய்ந் நூலை இத்யாதி** - விப்ரலம்பகராயும் ப்ராந்தராயும் உள்ளவர்கள் தந்தாமுடைய புத்தியாலே வரைந்த சாஸ்த்தரங்களை வைதிக சாஸ்த்ரம் போலே இருக்க ஆதரித்து அப்யஸித்து, பின்னை அவற்றினு டைய[2] ஸ்வரூபம் இருந்தபடியை ஆராய்ந்து மீளுகைக்கு அவகாசம் இல்லாதபடி முடிந்து. **அவத்தம் போகாதே** - இஹலோக பரலோகங்கள் இரண்டிலும் வ்யர்த்தமே போகாதே. **வம்மின்** - கெடுவிகாள்! கடுக வந்து நில்லுங்கோள். **எந்தை என் வணங்கப்படுவானை** - எனக்கு ஜநகனாய் எனக்குச் சென்று ஆஶ்ரயிக்க லாம்படி சீலவானாய் உள்ளவனை. **கணங்கள் இத்யாதி** - அறிவுடையார் திரள நின்று ஏத்துகிற அபரிச்சேத்யமான அந்த வஸ்துவை. அன்றிக்கே, **''நீண்ட அத்தக் கருமுகிலை''** என்றாய், நீண்ட ஹஸ்தத்தையுடைய என்னுதல். **எம்மான் தன்னை** - திருவடி தோற்ற துறையிலே ஆயிற்று இவரும் தோற்றது. **''கிமர்த்தம் ந விபூஷிதா''**. **நின்றவூர் இத்யாதி** - திருநின்றவூரிலே நிற்கிற

---

வி : இரண்டாம் பாட்டு : **பூண்டு அவத்தம்** - *அவத்தம் பூண்டு - வீணான செயல்களை ஏறட்டுக்கொண்டு*[3] *நல்லார் இணக்கமும் வேதம் சொல்லும் உறுதிப் பொருள்களைப் பெற வேண்டும் என்னும் நாட்டமும் தவிர்ந்து பயனற்றவற்றை ஏறட்டுக்கொண்டு.* **பிறர்க்கு அடைந்து தொண்டு பட்டு** - *தகுதியற்ற இடங்களில் தகுதியான இடத்தில் இருப்பது போன்று இருக்கத் தாழ்வுசெய்து*[4] *பணிய வேண்டாதவர்களைப் பணிந்து.* **பொய்ந் நூலை மெய்ந் நூல் என்று என்றும் ஓதி மாண்டு** - *வஞ்சகராயும் மயக்கம் உடையராயும் உள்ளவர்கள் தத்தம் அறிவாலே வரைந்த நூல்களை வேதநூல்களைப் போலே மிகவும் போற்றிப் பயின்று, பின்னர் அவற்றின் தன்மையை ஆராய்ந்து மீளுகைக்கு இடம் இல்லாதபடி முடிந்து.* **அவத்தம் போகாதே** - *இம்மை மறுமை ஆகிய இரண்டிலும் பாழ்பட்டுப் போகாமல்.* **வம்மின்** - *கெட்டழிபவர்களே! கடுக*[5] *வந்து நில்லுங்கள்.* **எந்தை என் வணங்கப்படுவானை** - *எனக்குத் தந்தையாய் எனக்குச் சென்று பற்றலாம்படி பண்பாளனாய் உள்ளவனை;* **கணங்கள் ஏத்தும் நீண்ட அத்தை** - *அறிவுடையார் திரள நின்று ஏத்தும் அளவிட முடியாத அந்தப் பொருளை. அல்லது,* **''நீண்ட அத்தக் கருமுகிலை'** *என்பது பாடமாக அமைய, நீண்ட கையை உடைய என்று பொருள்படும். அத்தம் - கை.* **எம்மான் தன்னை** - *திருவடி*[6] *தோற்ற துறையிலேயே இவரும் தோற்றார்.* **''திருத்தோள்கள் எதன்பொருட்டு ஒப்பனை செய்யப் படாதவைகளாக இருக்கின்றன?''** *(ரா. கி. 3:14) என்று தோள் அழகிலே துவக்குண்டு உரைத்தார் திருவடி. இவரும் அப்படியே நீண்ட அத்தமாகிய தோளின் அழகிலே தோற்று எம்மான் என்று தம்மை எழுதிக் கொடுக்கிறார்.* **நின்றவூர் நித்திலத்தை** - *திருநின்றவூரிலே நிற்கும் அயர்வு அகற்றும் முத்துத்திரள்*

---

1. வ்யர்த்தமானவைத்தை. 2. அவைத்தினுடைய.
3. ஏறட்டுக்கொள்ளல் - செய்து கொள்ளல்; தேடிக்கொள்ளல். 4. தாழ்வுசெய்தல் - அடிமைத் தொழில் செய்தல். 5. கடுக - விரைவாக. 6. திருவடி - அநுமனைத் திருவடி என்று குறித்தல் வைணவ மரபு.

ப்ரமஹரமான முத்துத் திரள் போலே இருக்கிறவனை. **தொத்தார் இத்யாதி** - தொத்து ஆர்ந்து இருந்துள்ள சோலையை உடைத்தான காண்டவவநத்தைக் கனன்றுகொடு வருகிற அக்நியின் வாயிலே ப்ரவேஶிப்பித்தவனை. அர்ஜுநனும் க்ருஷ்ணனுமாய்ப் பூம்பந்து ஏறட்டு விளையாடாநிற்க, அக்நிபகவான் 'பசித்தேன்' என்னப் பின்னை அக்காட்டை அவனுக்கு விருந்தாக இட்டுக் கூட நின்று புஜிப்பித்தானிறே. இந்த்ரன் கோபத்தாலே வர்ஷிப்பிக்க, அர்ஜுநன் சரக்கூடமாகக் கட்ட மேலே வழிந்து போயிற்றிறே. **கண்டது** - காட்டுத் தீயிலே வர்ஷித்தாப் போலே நோவுபடுகிற ஸம்ஸாரத்திலே காணப்பெற்றேன்.

---

போலே இருப்பவனை. **தொத்து ஆர் சோலைக் காண்டவத்தைக் கனல் எரிவாய்ப் பெய்வித்தானை** - *தொத்து*[1] *ஆர்ந்திருக்கும்*[2] *சோலையை உடைய காண்டவ வனத்தைக் கனன்றுகொண்டு வரும் தீயின் வாயிலே நுழைவித்தவனை. அருச்சுனனும் கிருட்டிணனுமாய்ப் பூப்பந்து வீசி விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களிடம் சென்று தீக்கடவுள் 'பசித்தேன்' என்றான். அதனைக் கேட்ட பின்பு அக்காட்டை அவனுக்கு விருந்தாக விட்டுக் கூடநின்று உண்ணுவித்தான். இந்திரன் சீற்றத்தாலே மழை பொழிய, அருச்சுனன் சரக்கூடமாகக் கட்டினான்; மழை அதன்மேல் விழுந்து வழிந்து போயிற்று. அவ்வாறு காண்டவவனத்தை அழித்தவனை.* **கண்டது நான்** - *காட்டுத் தீயிலே மழை பொழிந்தாற் போலே நோவுபடும் உலக வாழ்க்கையில் அவனைக் காணப்பெற்றேன்.* **கடல்மல்லைத் தலசயனத்தே-.**

**ஒப்புமைப் பகுதி**

1. கருமுகில்

*" கருமுகிலை - ...கடலில் மணலே ஶேஷமாகப் பருகின காளமேகத்தினுடைய வடிவை...உடைவனை " பெரு. தி. 10:1 பெ. உரை.*
*[ஶேஷமாக - மீதம் இருக்கும்படியாக]*

*" கருமுகில்போல் உருவா - இருட்சியாலும் குளிர்த்தியாலும் காளமேகம் போல் இருக்கிற வடிவை உடையவனே "*
*பெரி. தி. 1:5:6 ம. மா. மு. உரை.*

*" கருமுகில் - கண்டபோதே ஸகலதாபங்களும் கெடும்படியாயிற்று வடிவு இருப்பது " தி. வா. மொ. 5:8:7-24*
*[ஸகல தாபங்கள் - எல்லா விடாயும்]*

2. நித்திலம்

*" மைய வண்ணா மணியே முத்தமே என்றன் மாணிக்கமே "*

*" முத்தமே - உடம்பிலே ஏறிட்டுக்கொண்டால் விடாய் எல்லாம் தீரும்படி இருக்கை " தி. வி. 84 பெ. உரை*
*(42)*

---

1. தொத்து - பூங்கொத்து. 2. ஆர்ந்திருத்தல் - நிறைந்திருத்தல்.

143

**உடம்புருவில் மூன்றொன்றாய் மூர்த்தி வேறாய்**
**உலகுய்ய நின்றானை அன்று பேய்ச்சி**
**விடம்பருகு வித்தகனைக் கன்று மேய்த்து**
**விளையாட வல்லானை வரைமீ கானில்**
**தடம்பருகு கருமுகிலைத் தஞ்சைக் கோயில்**
**தவநெறிக்கோர் பெருநெறியை வையங் காக்கும்**
**கடும்பரிமேல் கற்கியைநான் கண்டு கொண்டேன்**
**கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலச யனத்தே.**

ப. ரை : **உலகு உய்ய** - *உலகம் உய்யும்பொருட்டு*, **உடம்பு உருவில் மூன்று ஒன்றாய்** - *உடம்பின் வடிவில் மூன்று வகையாக இருப்பவை ஒன்றாகவும்*, **மூர்த்தி வேறாய்** - *உண்மையில் வடிவம் வேறாகவும் அமைந்து*, **நின்றானை** - *நிற்பவனும்*, **அன்று** - *கண்ணனாகப் பிறந்த அன்று*, **பேய்ச்சி விடம் பருகு வித்தகனை** - *பூதனையினுடைய விடங் கலந்த பாலைக் குடித்த வியத்தற்கு உரியவனும்*, **கன்று மேய்த்து விளையாட வல்லானை** - *கன்றுகளை மேய்த்து விளையாட வல்ல திறமைசாலியும்*, **வரை மீ கானில்** - *மலைமேல் உள்ள காடு களிலே*, **தடம் பருகு கரு முகிலை** - *குளங்களிலே கன்றுகள் நீர் குடித்தற்காகத் தான் முன்னே இறங்கிக் கையை முதுகிலே கட்டிக்கொண்டு தண்ணீர் குடிக்கும் காளமேகம் போன்றவனும்*, **தஞ்சைக் கோயில் தவ நெறிக்கு ஓர் பெருநெறியை** - *தஞ்சை மாமணிக்கோயிலில் தன்னை அடையும் வழிகளில் சிறந்த வழியாகத் தானே இருப்பவனும்*, **வையம் காக்கும் கடும் பரிமேல் கற்கியை** - *உலகங்களைக் காப்பாற்றுதற்காகக் கடுநடையுடைய குதிரையின்மேல் கற்கியாகத் திருத் தோற்றம் செய்ய இருப்பவனும் ஆகிய பெருமானை*, **கடிபொழில் சூழ்** - *மணம் நிறைந்த சோலைகள் சூழ்ந்த*, **கடல்மல்லைத் தலசயனத்து நான் கண்டு கொண்டேன்** -.

சி. கு : *மீ - மேல்.* **கடும்பரிமேல் கற்கி** - *இது பெருமான் இனி எடுக்க இருக்கும் திருத்தோற்றம்.*

வியா : **மூன்றாம் பாட்டு : உடம்பு உருவில் மூன்று ஒன்றாய்** - உடம்பினுடைய படியில், உடம்பினுடைய ப்ரகாரத்தில், மூன்று ஒன்றாம் படியை உடைத்தாய். ஸ்வேந ரூபேண நின்றும் ப்ரஹ்மாதிகளுக்கு அந்தராத்மாவாய் நின்றும்

---

வி : மூன்றாம் பாட்டு : **உடம்பு உருவில் மூன்று ஒன்றாய்** - *உடம்பினுடைய படியில், உடம்பினுடைய வகையில், மூன்றும் ஒன்றாம்படியை உடைத்தாய். அஃதாவது பிரமன், விட்டுணு, சிவன் என்று மூன்று படிகளாய் இருப்பன உண்மையில் ஒருபடியாய். எவ்வாறு என்னில், பெருமான் தன் வடிவத் தால் விட்டுணுவாகவும், பிரமன் முதலானோர்க்கு உள்ளிருக்கும் உயிராகவும் நிற்கிறான்; உள்ளிருப்பவன் ஒருவனே ஆதலின் இம்மூன்றும் உடலாகும் இடத்தில் ஒன்றே என்னும்படி இருக்கும்; அஃதாவது பெருமானுக்குத் தன் மேனி தனக்கு*

இப்படிகளால் இதுவே சரீரமாம் இடத்தில் ஒருபடிப்பட்டு இருக்கும். **மூர்த்தி வேறாய் -** ஆனால் மூன்றும் ஒக்குமிறே. **"யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மந:"**. முன்பே ஐக்யம்[1] சொல்லிவைத்துப் பின்னை ஸாம்யம் சொன்னானிறே. இப்படி நிற்கிறதுதான் எதுக்காக என்னில், ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களாலே ஜகத் ரக்ஷணத்துக்காக ஆயிற்று இப்படி நிற்கிறது. **அன்று பேய்ச்சி விடம் பருகு வித்தகனை -** ஸ்ருஷ்டமான ஜகத்திலே க்ருஷ்ணனாய் வந்து அவதரித்துப் பூதனையுடைய விஷத்தைப் பருகின விஸ்மயநீயன் ஆனவனை. இங்கு விஸ்மயம் என் என்றால், முலைவழியே ப்ராணனும் மாளும்படியாக விஷத்தையும் பருகின படியைச் சொல்லுதல்; அன்றிக்கே, அவள் தாய் வடிவுகொண்டு வரச்செய்தேயும் முலைப்பால் விசேஷத்தாலே வேற்றுமுலை என்று அறிந்து புஜித்தபடியைச் சொல்லுதல். **கன்று இத்யாதி - "ஸர்வஸ்ய ஜகத: பாலெள வத்ஸபாலெள பபூவது:". வரை இத்யாதி -** இவ்விடத்துக்கு பட்டர் அருளிச்செய்தார் என்று ப்ரஸித்தமிறே. இவ்விடத்துக்கு ஜீயர் அருளிச்செய்யாநிற்க, பிள்ளை அழகிய மணவாள அரையர்[2] ஸ்மரிப்பித்தருளின வார்த்தை ஆயிற்று: "மலைமேல்

---

*அடங்கி இருப்பது போலப் பிரமனும் உருத்திரனும் அவனுக்கு அடங்கி நிற்பர்கள் என்க.* **மூர்த்தி வேறாய் -** *எனினும் மேனி மூன்று என்று சொல்வது ஒக்கும். இவ்வாறு வெவ்வேறானவை ஒன்றாய் இருத்தலைச் சொல்லி, பின்பு அவை ஒத்திருக்கும் என்று சொல்லுதல் தகுமோ என்னில், தகும். கீதையிலும் இப்படிச் சொல்லப்பட்டிருத்தல் காணலாம். அதில் முன்னர்,* **"கல்வியறிவு அடக்கம் ஆகியன நிறைந்தவனிடத்தும், மறையவனிடத்தும், பசுக்களிடத்தும், யானையினிடத்தும், நாயினிடத்தும், புலையனிடத்தும் மெய்யறிவு பெற்றவர்கள் பரம்பொருள் ஒன்றையே காண்பார்கள்"** *(கீதை. 5:18) என்று ஒன்றாய் இருத்தல் கூறப் பட்டுள்ளது. அதனை அடுத்துவரும் செய்யுளில், எவர்களுடைய மனம் இம்மாதிரி யான ஒத்த நிலையில் இருக்குமோ அவர்களால் இங்கேயே இவ்உலக வாழ்க்கை வெற்றி கொள்ளப்பட்டது என்று ஒத்திருக்கும் நிலை கூறப்பட்டுள்ளது. ஒன்றிய நிலையில் வேறுபாட்டுக்கு இடமில்லை; ஒத்த நிலையில் வேறுபாட்டுக்கு இடம் உண்டு. இவ்இரு நிலைகளும் கீதையில் முன்னும் பின்னுமாகச் சொல்லப் பட்டிருத்தலைப் போலே இங்கும் ஆழ்வார் முன்னர் ஒன்றியிருத்தலைச் சொல்லிப் பின்பு ஒத்திருத்தலைச் சொல்கிறார். இப்படி ஒத்த நிலையில் நிற்பதுதான் எதற்காக என்றால், ஆக்கலும் நிலை பெறுத்தலும், நீக்கலும் ஆகியவற்றாலே உலகினைக் காத்தற்காக என்க.* **அன்று பேய்ச்சி விடம் பருகு வித்தகனை -** *படைக்கப்பட்ட உலகிலே கண்ணனாய் வந்து பிறந்து பூதனையின் நஞ்சைப் பருகிய வியத்தற்குரியவனை. இங்கு வியப்பு யாது எனில் முலைவழியே உயிரும் மாளும்படி நஞ்சைப் பருகியது ஆகும். அல்லது, அவள் தாய் வடிவுகொண்டு வரச்செய்தேயும் முலைப்பால் வேற்றுமையாலே வேற்றுமுலை என்று அறிந்து அமுதுசெய்தமை ஆகும்.* **கன்று மேய்த்து விளையாட வல்லானை வரை மீ கானில் தடம் பருகு கரு முகிலை - "எல்லா உலகங்களையும் காக்கும் அந்தக் கிருட்டிண பலராமர்கள் கன்று களை மேய்ப்பவர்கள் ஆனார்கள்"** *(வி. பு. 5:6:35) என்பது ஆன்றோர் மொழி. இவ் இடத்திற்குப் பட்டர் ஒரு விளக்கம் தந்தார் என்று பரவலாகக் கூறுவர். இதற்கு நஞ்சீயர் உரை சொல்லிக் கொண்டிருந்த பொழுது பிள்ளை அழகிய மணவாளப் பெருமாள் அரையர் நினைவுபடுத்திய அவ்விளக்கம் வருமாறு :*

---

1. ஐக்யத்தைச். 2. பிள்ளை அழகிய மணவாளப் பெருமாள் அரையர்.

காட்டிலே உண்டான தடாகங்களிலே கன்றுகள் பின்னே போய் இளைத்து வந்து தண்ணீர் குடிக்கப் புக்கால் இளங்கன்றுகள் ஆகையாலே நீரிலே முன்னே இறங்கிக் குடிக்க பயப்படுமே, அத்தை நீரூட்டுகைக்குத் தான் பின்னே கையைக் கட்டிக் கவிழ்ந்துநின்று தண்ணீர் அமுதுசெய்யும் ஆயிற்று''. ஜாதி ப்ரயுக்தமான ஸ்வபாவத்தைச் சொன்னபடி. **தஞ்சை இத்யாதி** - ஜகத்தை அடைய நோக்குகைக்காகப் பெரிய ஏற்றத்தையுடைய தஞ்சை மாமணிக் கோயிலிலே நிற்கிற. **தவ நெறிக்கு ஓர் பெரு நெறியை** - ஸ்வ ப்ராப்த்யுபாயங்களில் பெரு நெறியாய் உள்ளவனை. வழி தப்பிச் சிறுகானெறியே போனாலும் தன்பக்கலிலே கூட ப்ரவேசிக்கும்படி இருக்கை. வ்யபிசரியாத ஸ்தாநம் என்றபடி. **வையம் இத்யாதி** - ஜகத்தை அடைய நோக்குகைக்காகப் பெரிய வேகத்தையுடைய குதிரையின் மேலே ஏறி அக் குதிரைக்காலிலே ப்ரதிபக்ஷத்தைத் துகைத்துப் போகடும் வடிவை உடையவனை. பரி - செலவு. கடிதான செலவை உடைத்தாய் மேலான பரியை. **கடி இத்யாதி** - ஜகத்தை அடைய ரக்ஷிக்கக்கடவனாய் இருக்கிறவனுடைய ரக்ஷணத்துக்கு நான் இப்போது விஷயபூதன் ஆனேன் என்கிறார்.

---

''மலைமேல் காட்டிலே உள்ள தடாகங்களிலே கன்றுகள் பசுக்களின் பின்னே போய் இளைத்து வந்து தண்ணீர் குடிக்கப் புகுந்தால், இளங்கன்றுகளாகையாலே நீரிலே முன்னே இறங்கிக் குடிக்க அஞ்சும்; அதனை நீரூட்டுவதற்காகத் தான் பின்னே கையைக் கட்டிக் கவிழ்ந்துநின்று தண்ணீர் பருகுவானாம்''. இடைச் சாதிக்கு அடைத்த இயல்பு சொல்லப்பட்டது. **தஞ்சைக் கோயில் தவ நெறிக்கு ஓர் பெரு நெறியை** - உலகம் முழுவதனையும் நோக்குகைக்காகப் பெரிய ஏற்றத்தையுடைய தஞ்சைமாமணிக் கோயிலிலே நிற்கும் தன்னை அடையும் நெறிகளில் பெருநெறியாய் உள்ளவனை. இறைவனை அடையும் வழி தப்பி, பிறவழிகள் ஆகிய சிறுகான் நெறியே போனாலும் தன் பக்கலிலே வந்து சேரும்படி இருக்கை. இதனால் தப்பாத வழி எனப்பட்டது. **வையம் காக்கும் கடும் பரிமேல் கற்கியை** - உலகினை அடைய நோக்குகைக்காகப் பெரிய வேகத்தையுடைய குதிரையின் மேலே ஏறி அக்குதிரையின் காலிலே எதிர்த்தலையைத்[1] துகைத்துப் போடும் வடிவை உடையவனை. பரி - செலவு. கடிதான செலவையுடைய மேலான குதிரை வடிவை உடையவனை. **கடிபொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே நான் கண்டு கொண்டேன்** - உலகம் முழுதும் நோக்குதற்கு உரியவனாய் இருப்பவனது நோக்கிற்கு நான் இப்போது உரியவன் ஆனேன் என்கிறார்.

### ஒப்புமைப் பகுதி

1. **பேய்ச்சி விடம் பருகு வித்தகன்**

   *பாட்டு 21, 46, 72, 123 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க*

2. **கன்று மேய்த்தவன்**

   *'' கன்று மேய்த்து இனிது உகந்த - நித்ய ஸூரிகளை ரக்ஷிக்கை தட்டியில் இருப்பாய், கன்று மேய்த்த பின்பு காணும் ஸார்வபௌமன் ஆயிற்று. ஸர்வரக்ஷகத்வம் புஷ்கலம் ஆயிற்றது கன்று மேய்த்தபின்பிறே. இனிது*

---

1. எதிர்த்தலை - எதிர்ப்பக்கம்; ஈண்டு எதிராக உள்ள பகைவர்களைக் குறித்தது.

உகந்த - 'திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி' என்கிறபடியே பசுக்களை மேய்த்து உகக்கும்; கன்று மேய்த்து இனிது உகக்கும். அவற்றுக்கு ரக்ஷகன்பக்கல் 'ரக்ஷகன்' என்கிற ஜ்ஞாநம் உண்டு; இவற்றுக்கு அதுவும் இல்லையிறே " தி. நெ. தா. 16 பெ. உரை.

[தட்டி - சிறை. ஸார்வபௌமன் - அரசர்க்கு அரசன். ஸர்வரக்ஷகத்வம் - எல்லாவற்றையும் காக்கும் தன்மை. புஷ்கலம் - நிறைவு.]

3. தடம்பருகு கருமுகில்

" இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டி
விட்டுக்கொண்டு விளையாட விருந்தாவனத்தே கண்டோமே "

" நீரூட்டி - அவற்றுக்குத் தண்ணீர் பருகுகை அபேக்ஷிதமானால் தான் அரைமட்டு நீரிலே இழிந்து பின்னே கையைக் கட்டிக் குனிந்து நின்று தண்ணீர் பருகக் காட்டும் ஆய்த்து இவன், பின்னை அவையும் கூடக் குடிக்கும்; 'தடம் பருகு' கருமுகிலிறே. 'ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ் தத் அநுவர்த்ததே' காரயித்ருத்வம் இருக்கிறபடி. 'கன்று மேய்த்து' இத்யாதி. தடாகத்திலே ஒரு மேகம்படிந்தாப் போலேயாய்த்து இருப்பது " நாச். தி. 14:1 பெ. உரை.

[அபேக்ஷிதம் - விருப்பம். காரயித்ருத்வம் - செய்விக்கும் தன்மை.]

4. கடும்பரிமேற் கற்கி

" கற்கியாய் - கலிகல்கதூஷிதரான துஷ்டரை நிரஸிக்கைக்காக கல்க்யவதாரமாய் " பெரி. தி. 4:9:9 ம. மா. மு. உரை.

[கலிகல்கதூஷிதர் - கலிகாலத்தில் பாவஞ்செய்த குற்றவாளிகள். நிரஸிக்கை - அழித்தல்.]

(43)

## 144

பேய்த்தாயை முலையுண்ட பிள்ளை தன்னைப்
பிணைமருப்பிற் கருங்களிற்றைப் பிணைமான் நோக்கின்
ஆய்த்தாயர் தயிர்வெண்ணெய் அமர்ந்த கோவை
அந்தணர்தம் அமுதத்தைக் குரவை முன்னே
கோத்தானைக் குடமாடு கூத்தன் தன்னைக்
கோகுலங்கள் தளராமற் குன்றம் ஏந்திக்
காத்தானை எம்மானைக் கண்டு கொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே.

144. 1 : 8 நோக்கில்.

**ப. ரை :** **பேய்த் தாயை முலை உண்ட பிள்ளைதன்னை** - உண்மையில் பேயாய்த் தாய்வடிவு கொண்டு வந்த பூதனையின் முலைப்பால் உண்ட பிள்ளையும், **பிணை மருப்பின் கருங் களிற்றை** - பிணைந்த கொம்புகளையுடைய கறுத்த யானையை ஒத்தவனும், **பிணை மான் நோக்கின் ஆய்த்தாயர் வெண்ணெய் அமர்ந்த கோவை** - மான் பேடையின் விழிபோலும் விழிகொண்ட இடைத்தாயரான அசோதையினுடைய தயிரிலும் வெண்ணெயிலும் விருப்புற்றிருந்த தலைவனும், **அந்தணர்தம் அமுதத்தை** - வேதியர்களுக்கு அமுதம் போலே இனியவனும், **முன்னே குரவை கோத்தானை** - முன்பு ஒருகால் இடைப்பெண்களோடே குரவைக்கூத்து விளையாடியவனும், **குடம் ஆடு கூத்தன்தன்னை** - குடக்கூத்தாடியவனும், **கோ குலங்கள் தளராமல் குன்றம் ஏந்திக் காத்தானை** - கல்மழையால் ஆனிரைகள் வருந்தாவண்ணம் கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்துக் காத்தவனும், **எம்மானை** - என்னை அடிமை கொண்டவனும் ஆகிய பெருமானை, **கடிபொழில் சூழ்** - மணம் மிக்க சோலையாலே சூழப்பட்ட, **கடல் மல்லைத் தலசயனத்துக் கண்டு கொண்டேன்**-.

**சி. கு :** களிறு, அமுதம் முதலியன ஆகுபெயராய்ப் பெருமானை உணர்த்தின. கோ - பசு. குரவை - ஒவ்வோர் இடைப்பெண்ணின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாகப் பல வடிவு எடுத்துக் கைகோத்துக் கண்ணபிரான் ஆடிய கூத்து. இதனை 'ராஸக்ரீடை' என்பர். குடக்கூத்து - தலைமேல் வரிசையாகக் குடங்களை வைத்தும் தோள்களிலும் கைத்தலங்களிலும் கூடவே குடங்களை வைத்தும் ஒன்றும் விழாதபடி திருமேனியை அசைத்து ஆடும் கூத்து.

**வியா :** நாலாம் பாட்டு **பேய்த் தாயை முலை உண்ட பிள்ளை தன்னை** - பேயானவள் தாய்வடிவு கொண்டு வரத் தாய்பக்கல் பண்ணக்கடவ விருப்பத்தை அவள்பக்கலிலே பண்ணி, அவள் முலையை உண்ட மௌக்த்யத்தை உடையவனை. **பிணை இத்யாதி** - பிணைந்த மருப்பையுடைய கருங்களிறு போலே இனிய சேஷ்டிதங்களை உடையவனை. ''பிணை மருப்பு'' என்கிற இத்தால் செருக்காலே மிகைத்துத் திரியும்படியைச் சொல்லுகிறது. **பிணை இத்யாதி** - மான்பேடை போலே இருக்கிற நோக்கையுடைய. ஆய்த் தாயர் உண்டு இடைத் தாயர், யசோதைப் பிராட்டி; அவள் ஸ்பர்சித்த வெண்ணெயையும்[1] தயிரையும் அமுது செய்து ஆஶ்ரித ஸ்பர்சமுடைய த்ரவ்யமே தனக்கு தாரகமாக இருந்து செயலாலே

---

**வி :** நாலாம் பாட்டு : **பேய்த் தாயை முலை உண்ட பிள்ளைதன்னை** - பேயானவள் தாய்வடிவு கொண்டு வரத் தாய்பக்கல் பண்ணற்கு உரிய விருப்பத்தை அவள்பக்கலிலே பண்ணி, அவள் முலையை உண்ட பிள்ளைத்தன்மை உடையவனை. **பிணை மருப்பின் கருங்களிற்றை** - பிணைந்த மருப்பையுடைய, கருங்களிறு போலே இனிய செயல்களை உடையவனை. ''பிணை மருப்பு'' என்னும் இதனால் செருக்காலே மிகைத்துத் திரிதல் சொல்லப்படுகிறது. **பிணை மான் நோக்கில் ஆய்த்தாயர் தயிர் வெண்ணெய் அமர்ந்த கோவை** - மான் பேடை போலே இருக்கும் நோக்கையுடைய அசோதைப்பிராட்டி; ஆய்த்தாயர் - இடைத்தாயர். அவள் தொட்ட வெண்ணெயையும் தயிரையும் அயின்று அடியார் தொட்ட பொருளே தனக்கு வாழ்முதலாகக் கொண்டான்; அவ்வாறு கொண்டதனாலே

---

1. வெண்ணையையும்.

**லோகத்தை அடைய எழுதிக்கொண்டவனை. அந்தணர்தம் அமுதத்தை - அச் செயலாலே ப்ராஹ்மண ஜாதிக்குத் தாரகனானவனை. குரவை இத்யாதி - சிலர் காணக்கடவது அன்றிக்கே இருக்கிற இத்தை எல்லார் கண்முகப்பே திருக் குரவை கோத்தவனை. குடமாடி இத்யாதி - இப்படி சிலர் கண்டு போகை அன்றிக்கே பண்டு காணாதாரும் காணும்படியாகக் காட்டினவனை. பசுத்திரள் களானவை வர்ஷத்திலே நோவுபடாதபடி தோற்றிற்று ஒரு மலையைப் பிடுங்கி நோக்கினவனை. எம்மானை - தன்னுடைய ரக்ஷணத்தைக் காட்டி என்னை அநங்யார்ஹனாக எழுதிக்கொண்டவனை. கண்டு இத்யாதி - அவன் ரக்ஷகன் என்று அறியப்பெற்றேன். இனி[1] ஒரு குறை உண்டோ என்கிறார்.**

---

*உலகு அடையத் தனக்கு அடிமையாக்கிக் கொண்டவனை.* **அந்தணர்தம் அமுதத்தை -** *அச்செயலாலே மறையவர் சாதிக்கு வாழ்முதலானவனை.* **குரவை முன்னே கோத்தானை -** *சிலரும் காணத்தகாததாய் இருக்கும் திருக்குரவைக் கூத்தினை எல்லார் கண்ணெதிரிலும் கோத்தவனை.* **குடமாடு கூத்தன் தன்னை-** *இப்படிச் சிலர் கண்டுபோகையன்றிக்கே பண்டு காணாதாரும் காணும்படியாகக் காட்டியவனை.* **கோ குலங்கள் தளராமல் குன்றம் ஏந்திக் காத்தானை -** *பசுத் திரள்கள் மழையிலே நோவுபடாதவாறு தோற்றியது ஒரு மலையைப் பிடுங்கி நோக்கினவனை.* **எம்மானை -** *தன்னுடைய நோக்குந்தன்மை காட்டி என்னைப் பிறர்க்கன்றித் தனக்கே உரியவனாக எழுதிக்கொண்டவனை.* **கண்டு கொண்டேன் கடிபொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே -** *அவன் காப்பவன் என்று அறியப்பெற்றேன். இனி எனக்கு ஒரு குறை உண்டோ? என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

**1. ஆய்த்தாயர் தயிர் வெண்ணெய் அமர்ந்த கோ**

*பாட்டு 94 இன் ஒப்புமைப் பகுதி பார்க்க*

**2. அமுதம்**

*" இன்ப*
*ஆற்றினை அமுதம் தன்னை "*

*" அமுதம் தன்னை - போன உயிரை மீட்கவற்றாய் போக்யமுமாய் இருக்கை "* *தி. கு. தா. 2 பெ. உரை.*

*" அமுதே - என்னைச் சாவாமல் ஜீவிப்பித்துக்கொண்டு போருகிறவனே! "* *தி. வா. மொ. 2:3:7-36*

*" அமுதே - தாரகமாத்ரமாய் இருக்கையன்றிக்கே நிரதிசய போக்ய பூதனானவனே! "* *தி. வா. மொ. 8:1:1-36*

*[தாரகம் - வாழ்முதல். நிரதிசய - எல்லையற்ற. போக்யபூதன் - இன்பன்.]*

(44)

---

1. எனக்கு.

பாய்ந்தானைத் திரிசகடம் பாறி வீழப்
பாலகனாய் ஆலிலையிற் பள்ளி இன்பம்
ஏய்ந்தானை இலங்கொளிசேர் மணிக்குன் றன்ன
ஈரிரண்டு மால்வரைத்தோள் எம்மான் தன்னைத்
தோய்ந்தானை நிலமகள்தோள் தூதிற் சென்றப்
பொய்அறைவாய்ப் புகப்பெய்த மல்லர் மங்கக்
காய்ந்தானை அம்மானைக் கண்டு கொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலச யனத்தே.

ப. ரை : திரிசகடம் பாறி வீழப் பாய்ந்தானை - *உருளும் சகடமானது சின்னபின்னமாக விழும்படி திருவடிகளாலே உதைத்தவனும்,* ஆல் இலையில் பாலகனாய்ப் பள்ளி இன்பம் ஏய்ந்தானை - *ஆலந்தளிரிலே சிறுபிள்ளையாய் உறங்கும்* இன்பத்தைப் *பொருந்தியவனும்,* இலங்கு ஒளி சேர் மணிக் குன்று அன்ன - *விளங்குகின்ற ஒளி பொருந்திய மணியால் ஆகிய குன்றுபோலும் வடிவழகையும்,* மால் வரை ஈர் இரண்டு தோள் எம்மான்தன்னை - *பெரிய மலை போலும் உறுதி படைத்த நான்கு திருத்தோள்களையும் உடைய தலைவனும்,* நில மகள் தோள் தோய்ந்தானை - *மண்மகளின் தோளோடு அணைந்தவனும்,* தூதின் சென்று - *துரியோதனனிடம் பாண்டவர் தூதனாகச் சென்று,* அப்பொய் அறை வாய்ப் புகப் பெய்த - *அத்துரியோதனன் செய்து வைத்த அந்த வஞ்சனையான நிலவறையின் உள்ளே நிறுத்தப்பட்டிருந்த,* மல்லர் மங்கக் காய்ந்தானை - *மல்லர் கூட்டம் அழியும்படி சீறியவனும்,* அம்மானை - *எனக்குத் தலைவனும் ஆகிய பெருமானை,* கடிபொழில் சூழ் கடல் மல்லைத் தலசயனத்தே கண்டுகொண் டேன்-.

சி. கு : *திரிசகடம் - வினைத் தொகை. ஏய்தல் - பொருந்தியிருத்தல்.*

வியா : **அஞ்சாம் பாட்டு : பாய்ந்தானை இத்யாதி** - பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்திச்[1] சகடத்தை வர இழுத்துவைத்துப் போனார்கள். அதிலே அஸுரர்கள் ஆவேசித்து வந்து நலியப்புக, **"ஸ்தந்யார்த்தீ ப்ரருரோதஹ"** என்கிறபடியே முலைவரவு தாழ்த்துச் சீறித் திருவடிகளாலே பாய்ந்தான். அதுக்கு

---

வி : அஞ்சாம்பாட்டு : திரிசகடம் பாறி வீழப் பாய்ந்தானை - *பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்தி[2] வண்டியை அருகில் இழுத்துவைத்துப் போனார்கள். அதிலே அசுரர்கள் உட்கிடையாய் ஏறி நின்று நலியப் புக்கனர்;* "முலைப்பால் விரும்பினவனாய் அழுதான்" *(வி. பு. 5:6:1) என்று சொல்வதற்கு ஏற்ப முலைவரவு தாழ்த்துச்[3] சீறித்[4]* திருவடிகளாலே *பாய்ந்தான்.*

---

**145.** 2 : 7 அம்மான்.

1. வளத்திச்.

2. வளர்த்தி - உறங்கவைத்து. 3. முலைவரவு தாழ்த்தல் - உரிய நேரத்தில் பால் கொடுக்காது காலங் கடத்தல். 4. சீறுதல் - வெகுளுதல்.

**இலக்காய் முடிந்து போனார்கள். உருளுகிற[1] ஶகடமானது பாறிப் போம்படியாகப் பாய்ந்தவனை. பாலகன் இத்யாதி - அத்யந்த முக்த்தனாய் ஒரு பவனான ஆலிலையிலே விழுக்காடு பாராதே நித்ராஸுகம் அனுபவித்தவனை. இலங்கு ஒளி இத்யாதி - மிக்க ஒளியை உடைய நீலகிரி போலே இருக்கிற திருத்தோள்கள் நாலையும் உடையவனை. அந்த சதுர்ப்புஜனிறே ஸர்வேஶ்வரன் ஆவான். தோய்ந்தானை நிலமகள் தோள் - ஸ்ரீபூமிப்பிராட்டி திருத்தோள்களிலே அவகாஹித்தவனை. தூதில் இத்யாதி - பாண்டவர்களுக்குத் தூதனாய்ச் சென்று, "நிலவறையிலே ப்ரவேசிப்பித்து நலிய வேணும்" என்று பதிபடை கிடந்த மல்லர் முடிந்துபோம்படி சீறினவனை. அம்மானை இத்யாதி - அந்த க்ருத்ரிமத்தைத் தப்பி என்னை எழுதிக்கொண்டவனை.**

---

*அதற்கு இலக்காய் முடிந்து போனார்கள். ஓடும் வண்டி பாறிப் போம்படி பாய்ந்தவனை.* **பாலகனாய் ஆல் இலையில் பள்ளி இன்பம் ஏய்ந்தானை -** *செம்பால் பாயும் பிள்ளையாய்[2] முகிழ் விரிந்த அளவான ஆலிலையிலே விழுக்காடு[3] பார்க்காமல் உறங்கும் இன்பத்தினைத் துய்த்தவனை.* **இலங்கு- ஒளி சேர் மணிக் குன்று அன்ன ஈர் இரண்டு மால் வரைத்தோள் -** *மிக்க ஒளியையுடைய நீலமலை போலே இருக்கும் திருத்தோள்கள் நான்கனையும் உடையவனை.* **எம்மான்தன்னை -** *அந்த நான்கு தோளானன்றோ முழுமுதல்வன் ஆனான்.* **நிலமகள் தோள் தோய்ந்தானை -** *மண்மடந்தை திருத் தோள்களிலே மண்டியவனை.* **தூதில் சென்று அப்பொய் அறைவாய்ப் புகப் பெய்த மல்லர் மங்கக் காய்ந்தானை -** *பாண்டவர்களுக்குத் தூதனாய்ச் சென்று, "கண்ணபிரானை நிலவறையிலே நுழைவித்து நலிய[4] வேண்டும்" என்று பதிபடை கிடந்த[5] மல்லர் முடிந்து போகும்படி சீறியவனை.* **அம்மானை -** *அந்த வஞ்சனையினின்றும் தப்பி என்னை எழுதிக்கொண்டவனை[6].* **கடி பொழில் சூழ் கடல் மல்லைத் தலசயனத்தே கண்டு கொண்டேன்-.**

### ஒப்புமைப் பகுதி

1. திரிசகடம் பாறி விழப் பாய்ந்தவன்

*" ஊர்ந்த சகடம் உதைத்த பாதத்தன் "*

*" ஊர்ந்த சகடம் - ஊருகிற சகடமல்ல; அது செய்வது எல்லாம் செய்தற்றது. இவன் ஜீவநாத்ருஷ்டத்தாலே தப்பின இத்தனை. இரண்டு சகடத்தை இரண்டு அருகும் இழுத்து நடுவே தொட்டிலையிட்டு வளர்த்திப் போனாள் தாயார்; பாடி காப்பாரே களவு காணுமாபோலே, காவலாக வைத்த சகடமே அஸுராவேசத்தாலே ஊர்ந்து வந்தது ஆயிற்று. அசேதநமான சகடத்திலே அஸுரர்கள் ஆவேசித்து நலிவதாக ஊர்ந்து வந்த இத்தனையிறே. உதைத்த பாதத்தன் அதுவும் செய்தது எல்லாம் செய்து, இவனும் அகப்படுவது எல்லாம் அகப்பட்டு நின்றான்; திருவடிகளினுடைய அவதாநத்தாலே தப்பின இத்தனை. இவனை அடிகாத்துத்*

---

1. ஊருகிற.
2. செம்பால் பாயும் பிள்ளை - சுண்டினால் குருதி வரும் சிறு குழந்தை; செம்பால் - குருதி.
3. விழுக்காடு - விளைவு. 4. நலிய - துன்புறுத்த. 5. பதி படை கிடத்தல் - பதுங்கிக் கிடத்தல்.
6. எழுதிக்கொள்ளல் - அடிமையாக்கிக் கொள்ளல்.

திரிந்த இத்தனையிறே. உதைத்த பாதத்தன் - முலைவரவுதாழ்த்துச் சீறி நிமிர்த்த திருவடிகளுக்கு இலக்காய்த் துகளாய்ப் போன இத்தனை ஆயிற்று. 'ஸ்தந்யார்த்தி ப்ரருரோதஹ'. நமக்குப் புகலான திருவடிகள் தானே நம் அநிஷ்டங்களையும் போக்கித் தரும் ஆயிற்று.

திரு. வா. மொ. 5:3:3-36

[ஜீவநாத்ருஷ்டம் - வாழவேண்டும் என்னும் நற்பேறு. அஸுராவேசம் - அசுரர் ஏறியிருத்தல். அசேதநம் - உணர்வு அற்றது. அவதாநம் - செயல். அநிஷ்டங்கள் - வேண்டாதவை; விழையாதவை.]

" ஊர் சகடம் இறச் சாடியதும் - ப்ரேரகர் வேண்டாதபடி தானே வந்து நலிந்தபடி. ஒரு மநுஷ்ய வடிவுகொண்டு வந்து நலியிலிறே பரிஹரிக்க லாவது. இத்தால் சொல்லிற்றாயிற்று ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக பாதகத்வத்தில் உறைப்புச் சொன்னபடி " திரு. வா. மொ. 6:4:4-36

[ப்ரேரகர் - தூண்டுபவர். பரிஹரித்தல் - களைதல். ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக - வேறு துணை வேண்டாமல். பாதகத்வம் - தீங்கு புரியும் தன்மை.]

" தளர்ந்தும் முறிந்தும் சகட அசுரர் உடல் வேறா,
பிளந்து வீயத் திருக்காலாண்ட பெருமானே "

" திருக்காலாண்ட - அடியாரை ஆண்டால் ஆபத்துக்கு உதவுவர்களிறே. இவன் மௌக்த்யத்தாலே ஒன்றும் அறியாதே கிடக்க, திருவடிகள் கிடீர் நம்மை நோக்கிற்று! என்கிறார். 'ஸ்தந்யார்த்தீ ப்ரருரோதஹ' என்கிற படியே முலைவரவு தாழ்த்தவாறே அனந்தலிலே திருவடிகளை நிமிர்த் தான். அவ்வளவிலே பொடிபட்ட இத்தனை. 'உருளச் சகடமது றக்கில் நிமிர்த்தீர்' என்று இவனும் அறிந்து செய்தான் அல்லன். தன்னை உணர்ந்து பரிமாறும்போது திவ்யாயுதமும், அவை உதவாதபோது கையும், அதுவும் உதவாதபோது திருவடிகளுமாய் இருக்கிறபடி. நம்முடைய ஆபத்துக்களுக்கே அன்றிக்கே, அவனுடைய ஆபத்துக்கும் திருவடிகளே காணும் உதவுவது! திருமேனிதான் ஆச்ரிதார்த்தமாகையாலே, அவர்கள் விரோதி போகைக்கும் அதுதானே உறுப்பாய் இருக்கை "

திரு. வா. மொ. 6:9:4-36

[மௌக்த்யம் - பிள்ளைத்தனம். ஆச்ரிதார்த்தமாய் - அடியார் பொருட்டாய்.]

## 2. ஆலிலைப் பள்ளி கொண்ட பாலகன்

" ஓர்முற்றா உருவாகி
ஆலம்பேரிலை அன்னவசம் செய்யும் அம்மானே "

" ஓர் முற்றா உருவாகி - ஒரு கொறுட்டிலே தெறித்தால் மற்றைக் கொறுட்டாலே பால் பாயும் பருவமாயிற்றுப் பருவம். யசோதாஸ்தநந்தயத் தும் கீழாயிறே இருப்பது இந்த மௌக்த்யம் "

திரு. வா. மொ. 8:3:4-36

[யசோதாஸ்தநந்தயம் - அசோதை முலையுண் குழவி]
பாட்டு 76இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

3. ஈர் இரண்டு மால் வரைத் தோள் எம்மான்

*" ஈர் இரண்டு மால்வரைத் தோள்,*
*செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால் "*

*" ஈர் இரண்டு - உகவாதார்க்கிறே தோள் இரண்டாய்த் தோற்றுவது; ஆசைப்பட்ட பெண்களுக்கு நாலாய்த் தோற்றுமிறே. வங்கக்கடல் கடைந்த தோள்கள் நான்கும் கண்டிடப்பெற்றார்கள். மால்வரைத் தோள் - 'மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளாய் இராதே' காத்து ஊட்டவல்ல திண்மையைச் சொல்லுகிறது "*

*பாவை. 30 நாயனார் உரை.*

(45)

## 146

கிடந்தானைத் தடங்கடலுள் பணங்கள் மேவிக்
கிளர்பொறிய மறிதிரிய அதனின் பின்னே
படர்ந்தானைப் படுமதத்த களிற்றின் கொம்பு
பறித்தானைப் பாரிடத்தை எயிறு கீற
இடந்தானை வளைமருப்பின் ஏன மாகி
இருநிலனும் பெருவிசும்பும் எய்தா வண்ணம்
கடந்தானை எம்மானைக் கண்டு கொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலச யனத்தே.

ப. ரை : தடம் கடலுள் பணங்கள் மேவிக் கிடந்தானை - *பரந்த திருப்பாற் கடலில் திருவனந்தாழ்வான் படங்களின் கீழே பொருந்திக் கிடந்தவனும்,* கிளர் பொறிய மறி திரிய - *கிளர்ந்த பல்வகைப் புள்ளிகளையுடைய மாரீசன் என்னும் பொய்ம்மான் எதிரே வந்து உலவ,* அதனின் பின்னே படர்ந்தானை - *அதன் பின்னே தொடர்ந்து சென்றவனும்,* படு மதத்த களிற்றின் கொம்பு பறித்தானை - *ஒழுகும் மதநீரையுடைய குவலயாபீடம் என்னும் யானையின் கொம்புகளை முறித்து அதனை அழித்தவனும்,* வளை மருப்பின் ஏனம் ஆகி - *வளைந்த கொம்பினையுடைய பன்றியாக உருவம் கொண்டு,* பார் இடத்தை எயிறு கீற இடந்தானை - *உலகினைப் பற்களாலே கிழித்து ஒட்டுவிடுவித்தவனும்,* இரு நிலமும் பெரு விசும்பும் - *அகன்ற நிலவுலகும் பெரிய வானுலகும்,* எய்தாவண்ணம் கடந்தானை - *போதாதவாறு மிக வளர்ந்து உலகளந்தவனும் ஆகிய,* எம் மானை - *எமக்குத் தலைவனானவனை,* கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே கண்டு கொண்டேன்-.

சி. கு : *மறி - மான் குட்டி; ஈண்டு மான் வடிவில் வந்த மாரீசனைக் குறித்தது.*

---

146. 1 : 6 மருதிரிய.

வியா : **ஆறாம் பாட்டு** : **கிடந்தானை** - கண்வளர்ந்தருளுகைக்கு ஈடான பரப்பை உடைத்தான கடலிலே திருவனந்தாழ்வான் மேலே. **மேவி** - பிராட்டிமார் திருமுலைத் தடத்தாலும் கிளப்ப ஒண்ணாதபடி கண்வளர்ந்தருளின வனை. **கிளர் இத்யாதி** - கிளர்ந்து நாநா வர்ணமான பொறியை உடைத்தான மான் குட்டியைப் பிராட்டி, "பிடித்துத் தர வேணும்" என்ன, துஷ்ட ம்ருகமாகையாலே அது அங்கே இங்கே ஸஞ்சரிக்க அதின் பின்னே அடி தீயப் போனவனை. பிராட்டி பிரிவு விளையும்படியாகவிறே கைகழியப் போனபடி. பெரிய மத்தகஜத்தினுடைய கொம்பைக் குப்பைக்கீரை போலே அநாயாஸேந பிடுங்கினவனை. **பார் இடத்தை இத்யாதி** - வளைந்த கொம்பையுடைய மஹா வராஹமாய், பரப்பை உடைத்தான பூமியைத் திருவெயிற்றாலே கிழியும்படி இடந்தவனை. உடம்பு நோவ வ்யாபரித்த படி சொல்லுகிறது. **இருநிலன் இத்யாதி** - பூம்யந்தரிக்ஷாதிகள் போராதபடியாக வளர்ந்து லோகத்தை அளந்து கொண்டவனை. **எம்மானை** - எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்த நீர்மையாலே என்னை எழுதிக்கொண்டவனை. **கண்டு கொண்டேன்** - அவன் தானே திருவடிகளைக் கொண்டு வந்து வைத்த அன்று தப்பின நான் இன்று இங்கே காணப்பெற்றேன் என்கிறார்.

---

வி : **ஆறாம் பாட்டு** : **தடம் கடலுள் பணங்கள் மேவிக் கிடந்தானை** - *கண்வளர்ந்தருளுவதற்கு ஈடான*[1] *பரப்பையுடைய கடலிலே திருவனந்தாழ்வான் மேலே பிராட்டிமார் திருமுலைத் தடத்தாலும் கிளப்ப ஒண்ணாதபடி கண்வளர்ந் தருளியவனை.* **கிளர் பொறிய மறி திரிய அதனின் பின்னே படர்ந்தானை** - *கிளர்ந்து பல்வண்ணப் பொறியை உடைத்தாய் இருந்த மான் குட்டி அது. அதனைப் பிராட்டி, "பிடித்துத் தர வேண்டும்" என்று வேண்டினாள். அது கொடிய மானாகையாலே, அங்கும் இங்கும் அலைய அதன் பின்னே இராமபிரான் தன் திருவடி தீயுமாறு போனான். அப்படிச் சென்றவனை. பின்னே என்பதில் உள்ள ஏகாரம் பிராட்டி பிரிவு விளையும்படி கைகழியப் போயினான் என்பதனைக் காட்டுகிறது.* **படு மதத்த களிற்றின் கொம்பு பறித்தானை** - *பெரிய யானையினுடைய கொம்பைக் குப்பைக்கீரை போலே எளிதாகப் பிடுங்கினவனை.* **வளை மருப்பு ஏனமாகி - பார் இடத்தை எயிறு கீற இடந்தானை** - *வளைந்த கொம்பையுடைய பெரும்பன்றியாய்,பரப்பையுடைய உலகினைத் திருவெயிற்றாலே கிழியும்படி இடந்தவனை. உடம்பு நோவ வினையாற்றிய தன்மையினைச் சொல்லுகிறது.* **இரு நிலனும் பெரு விசும்பும் எய்தாவண்ணம் கடந்தானை** - *மண்ணும் இடை விண்ணும் முதலான இடங்கள் போதாதவாறு வளர்ந்து உலகத்தை அளந்து கொண்டவனை.* **எம்மானை** - *எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்த நீர்மையாலே என்னை எழுதிக்கொண்டவனை.* **கண்டு கொண்டேன் கடிபொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே** - *அவன் தானே திருவடிகளைக் கொண்டு வந்து வைத்த அன்று தப்பிய நான் இன்று இங்கே காணப்பெற்றேன் என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

1. **தடங்கடலுள் பணங்கள் மேவிக் கிடந்தான்**

   *" வெள்ளத்தரவில் துயில் அமர்ந்த வித்து "*

---

1. ஈடான - தேவையான.

*" வெள்ளத்தரவில் - நீர் உறுத்தாதபடி நாற்றம், மென்மை, குளிர்த்தி தொடக்கமான ஸ்வபாவங்களையுடைய திருவநந்தாழ்வான் மேலே. துயில் அமர்ந்த - பிராட்டிமார் திருமுலைத்தடத்தாலும் நெருக்கி எழுப்பினாலும் கிளம்பாதபடியாய் இருக்கை " பாவை. 6 நாயனார் உரை.*

*" பைகொள் பாம்பேறி உறை பரனே - ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வான் மேலே நித்யவாஸம் பண்ணுகை யாலே தகட்டில் அழுத்தின மாணிக்கம்போலே ஸ்ப்ருஹணீயமா யிருக்கை " தி. வா. மொ. 3:8:4-24*

*[ஸ்வஸ்பர்சம் - தன்மேல் படுவது. விகஸிதமான - மலர்ந்த. ஸ்ப்ருஹணீயம் - ஆசைப்படத்தக்கது.]*

*" படமுடை அரவிற் பள்ளி பயின்றவன் "*

*" படமுடை அரவில் - ஸர்வேச்வரன் சாய்ந்தருளினால் அவனுக்குப் பிறக்கும் விகாஸம் சொல்லுகிறது - படமுடை அரவு என்று. பள்ளி பயின்றவன் - ஸ்வதஸ் ஸர்வஜ்ஞமான வஸ்துவும் உணர்த்தியறும்படி யாய்த்துப் படுக்கை வாய்ப்பு " தி. வா. மொ. 10:2:8-36*

*[ஸ்வதஸ் ஸர்வஜ்ஞம் - இயல்பிலேயே முற்றறிவுடையது]*

*பாட்டு 16, 95 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. மானின் பின் படர்ந்தவன்

*" மாயமான் - பொல்லா இராவணன் என்றதுக்கு அடியான ஐந்து விசேஷமிறே "*

*தி. கு. தா. 16 பெ. உரை.*

*[ஐந்துவிசேஷம் - விலங்குகளுள் ஒருவகை]*

*[46]*

## 147

**பேணாத வலியரக்கர் மெலிய அன்று**
**பெருவரைத்தோள் இறநெரித்தன் றவுணர் கோனைப்**
**பூணாகம் பிளவெடுத்த போர்வல் லோனைப்**
**பொருகடலுள் துயிலமர்ந்த புள்ளூர் தியை**
**ஊணாகப் பேய்முலைநஞ் சுண்டான் தன்னை**
**உள்ளுவார் உள்ளத்தே உறைகின் றானைக்**
**காணாது திரிதருவேன் கண்டு கொண்டேன்**
**கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலச யனத்தே.**

---

147. 2 : 5 பொருகடலில்.

**ப. ரை :** **அன்று** - இராவணன் கொடுமை மிகுந்த அந்நாளில், **பேணாத வலி அரக்கர் மெலிய** - *தன்னை இறைவன் என்று போற்றாத ஆற்றல் பொருந்திய அரக்கர்கள் மெலியுமாறு,* **பெரு வரைத் தோள் இற நெரித்து** - *அவர்களுடைய பெரிய மலை போலும் தோள்கள் இற்றுப் போகும்படி இறுகக்கட்டி,* **அன்று** - *பிரகலாதனைத் துன்புறுத்திய அந்நாளில்,* **அவுணர் கோனைப் பூண் ஆகம் பிளவு எடுத்த** - *அசுரர்களின் தலைவனான இரணியனுடைய அணிகள் பூண்ட மார்பைப் போரில் பிளந்துபோட்ட* , **போர் வல்லோனை** - *போரில் வல்லவனும்,* **பொரு கடலுள் துயில் அமர்ந்த புள் ஊர்தியை** - *அலையும் கடலில் கண்வளர்ந்தருளிய கருடப் பறவைபினை ஊர்தியாகக் கொண்டவனும்,* **ஊண் ஆகப் பேய் முலை நஞ்சு உண்டான்தன்னை** - *உணவாகப் பூதனையின் முலையில் தடவிய விடத்தை உண்டவனும்,* **உள்ளுவார் உள்ளத்தே உறைகின்றானை** *தன்னைக் கருதுவார் உள்ளத்தில் நிலைத்து இருக்கிறவனும்* ஆகிய பெருமானை, **காணாது திரிதருவேன்** - *நெடுங்காலமாகக் காணாமல் தேடித் திரியும் அடியேன்,* **கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே கண்டு கொண்டேன்**-.

**வியா :** **ஏழாம் பாட்டு :** **பேணாத இத்யாதி** - ஸர்வேஶ்வரன் என்று கொண்டு பேண அறியாதே முன்கை மிடுக்காலே தோற்றினபடி நடந்து திரிகிற ராக்ஷஸ ஜாதியானது மெலியும்படியாக. **“எங்ஙனே உய்வர் தானவர் நினைந்தால்”** என்கிறபடியே அச்சிறுக்கனைப் போலே சீற்றம் இன்றிக்கே இருப்பார் பிழைக்கும் இத்தனை அல்லது ஆஸுர ப்ரக்ருதிகள் எங்ஙனே உஜ்ஜீவிக்கும்படி என்னக்கடவதிறே; அப்படியே ராக்ஷஸ ஜாதியானது மெலியும்படியாகப் பண்ணி; அன்று பெரிய வரை போலே இருக்கிற தோள்களானவை இறும்படியாகக் கட்டிக் கொண்டு; ஆஸுர வர்க்கத்துக்கு நிர்வாஹகன் ஆனவனை, ஆபரணங்களாலே அலங்க்ருதமான சரீரம் இரு பிளவாம்படி கிழித்துப் பொகட்டு யுத்தத்திலே ஸமர்த்த னானவனை. **பொரு** - அதுக்கு உறுப்பாகத்[1] திருப்பாற்கடலிலே வந்து கண் வளர்ந்தவனை. **புள் ஊர்தியை** - ப்ரஹ்மாதிகள் கூக்குரல் கேட்டு அங்கு நின்றும்

---

**வி :** ஏழாம் பாட்டு : **பேணாத வலி அரக்கர் மெலிய** - *யாவர்க்கும் முதல்வன் என்று உணர்ந்து பேண*[2] *அறியாமல் முன்கை மிடுக்காலே*[3] *தோற்றின வாறு நடந்து திரியும் அரக்கர் கூட்டம் மெலியும்படி.* **“எங்ஙனே உய்வர் தானவர் நினைந்தால்”** *(பெ. தி. 5:7:5)* என்பதற்கேற்ப *அச்சிறுவனைப் போலே சீற்றத்திற்கு இலக்காகாமல் இருப்பவர்களே பிழைப்பர்; ஏனைய அசுரர்கள் எங்ஙனே பிழைப்பர் என்று சொல்வர் அன்றோ. அப்படியே அரக்கர் இனமானது மெலியும்படி பண்ணி;* **அன்று பெரு வரைத் தோள் இற நெரித்து** - *அன்று பெரிய வரை போலே இருக்கும் தோள்கள் இறும்படி கட்டிக்கொண்டு.* **அன்று அவுணர் கோனைப் பூண் ஆகம் பிளவு எடுத்த போர் வல்லோனை** - *அசுரர் இனத்துக்குத் தலைவனானவனை, அணிகலன்களாலே ஒப்பனை செய்யப் பட்ட ஆகம் இரு பிளவாம்படி கிழித்துப் போட்டுப் போரிலே வல்லவனானவனை.* **பொரு கடலுள் துயில் அமர்ந்த புள் ஊர்தியை** - *அதற்கு உறுப்பாகத் திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தவனை. பிரமன் முதலானோர் கூக்குரல் கேட்டு அங்கு*

---

1. உடலாகத்.
2. பேண - போற்ற. 3. மிடுக்கு - வலிமை.

பெரிய திருவடி திருத்தோளிலே ஏறி அவர்களுக்குக் காட்சி கொடுக்கும்படி[1] சொல்லு கிறது. **ஊண் ஆக இத்யாதி** - பூதனை தாய்வடிவு கொண்டு வந்து முலை கொடுக்க[2] அவள் முலை கொடாவிடில் தரியாதாளாய்க் கொடுத்தாப் போலே[3], தானும் முலை உண்ணாவிடில் தரியாதானாய் முலை உண்டபடி சொல்லுகிறது. **உள்ளுவார் இத்யாதி** - செவ்வியார்க்குத் தானும்[4] செவ்வியனாய்ப் பரிமாறும்படி யும் துஷ்டர்க்குத் தானும் அப்படி[5] இருக்கும்படியும் சொல்லுகிறது. பருவம் நிரம்பாது இருக்கச்செய்தேயும் பூதனை கையிலே அகப்பட்டு அத்தைத் தப்பிப் போகப்பெற்ற அதொன்றுமே ஆயிற்று இவர்கள் நெஞ்சில் கிடப்பது. **காணாது இத்யாதி** - யாதநா சரீரம் போலே காண வேணும் என்று ஆசைப்பட்டுத் தட்டித் திரிகிற நான், பசித்தவன் ஜீவிக்கப்பெற்றாப் போலே காணப்பெற்றேன். **கடி இத்யாதி** - சாஸ்த் ரங்களிலே கேட்டு ஒரு தேச விசேஷத்திலே சென்றால் காண இருக்கை அன்றிக்கே விடாய்த்த இங்நிலத்திலே காணப்பெற்றேன் என்கிறார்.

---

*நின்றும் பெரிய திருவடி[6] தோளில் ஏறி அவர்களுக்குக் காட்சி கொடுக்கும்படியை இது சொல்கிறது.* **ஊண் ஆகப் பேய் முலை நஞ்சு உண்டான்தன்னை** - *பூதனை தாய் வடிவு கொண்டு வந்து முலை கொடுத்தாள்; அவள் முலை கொடாவிடின் உயிர்வாழ முடியாதவள் போலக் கொடுத்தாள். அது போல, தானும் முலை உண்ணாவிடின் உயிர்வாழ மாட்டாதவனாக முலையுண்டான் என்பதனைச் சொல்லுகிறது.* **உள்ளுவார் உள்ளத்தே உறைகின்றானை** - *இது செவ்வியார்க்குத் தானும் செவ்வியனாய்ப் பரிமாறும்படியும், பொல்லார்க்குத் தானும் அப்படி இருக்கும்படியும் சொல்லுகிறது. பருவம் நிரம்பாதிருந்தபோதிலும் பூதனை கையிலே அகப்பட்டு அவள் புரிந்த தீமைக்கு ஆளாகாமல் தப்பிப் போகப் பெற்றான்; அவ்வாறு தப்பிப் பிழைத்த அச்செயல் ஒன்று மட்டுமே இவர் நெஞ்சில் கிடக்கிறது.* **காணாது திரிதருவேன் கண்டு கொண்டேன்** - *நரகத்தில் துன்பம் நுகர்தற்கே எடுத்த உடல் இன்பம் நுகர வேண்டும் என்று விழையுமாறு போலே பெருமானைக் காண வேண்டும் என்று ஆசைப்பட்டுத் தட்டித்திரியும்[7] நான், பசித்தவன் சோறு பெற்று வாழப்பெற்றாற் போலே காணப்பெற்றேன்.* **கடிபொழில் சூழ் கடல் மல்லைத் தலசயனத்தே** - *ஓலைப்புறத்திலே[8] கேட்டறிந்து திருநாட்டுக்குச் சென்றால் அங்கே காண்பது என்று இல்லாமல் விடாய்த்த[9] இந் நிலத்திலே காணப்பெற்றேன் என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

**புள்ளூர்தி**

" *புட்பாகன் - ...பெரிய திருவடியைக் கருத்தறிந்து நடத்துமவன்* "
*தி. வா. மொ. 8 : 10 : 6 - 24*

*(47)*

---

1. குடுக்கும்படி. 2. குடுக்க. 3. குடுத்தாப்போல. 4. தான். 5. துஷ்டனாய்.
6. பெரிய திருவடி - கருடன் என்னும் பறவை. 7. தட்டித்திரிதல் - தடுமாறித்திரிதல்.
8. ஓலைப்புறம் - நூல்கள்; சாத்திரங்கள். 9. விடாய்த்த - ஆசைப்பட்ட.

பெண்ணாகி இன்னமுதம் வஞ்சித் தானைப்
பிறைஎயிற்றன் றடல்அரியாய்ப் பெருகி னானைத்
தண்ணார்ந்த வார்புனல்சூழ் மெய்யம் என்னும்
தடவரைமேல் கிடந்தானைப் பணங்கள் மேவி
எண்ணானை எண்ணிறந்த புகழி னானை
இலங்கொளிசேர் அரவிந்தம் போன்று நீண்ட
கண்ணானைக் கண்ஆரக் கண்டு கொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலச யனத்தே.

**ப. ரை :** பெண் ஆகி இன் அமுதம் வஞ்சித்தானை - *மோகினி வடிவங் கொண்டு இனிய அமுதத்தை அவுணர்கள் உண்ணாதவாறு கெடுத்தவனும்,* அன்று - *முன்பு இரணியனாலே பிரகலாதன் துன்புற்ற அந்நாளில்,* பிறை எயிற்று அடல் அரியாய்ப் பெருகினானை - *பிறைபோலும் பற்களையுடைய வலிமை பொருந்திய ஆளரியாய் வளர்ந்தவனும்,* தண் ஆர்ந்த வார் புனல் சூழ் - *குளிர்ச்சி நிறைந்த பெருகுகின்ற நீராலே சூழப்பட்ட,* மெய்யம் என்னும் தட வரைமேல் பணங்கள் மேவிக் கிடந்தானை - *திருமெய்யம் என்னும் பெரிய மலைமேலே திருவனந்தாழ்வான் படங்களின் கீழே பொருந்திப் பள்ளி கொண்டிருப்பவனும்,* எண்ணானை - *எல்லாராலும் எண்ணப்படுபவனும்,* எண் இறந்த புகழானை - *அளவற்ற சிறப்புகளை உடையவனும்,* இலங்கு ஒளி சேர் அரவிந்தம் போன்று நீண்ட கண்ணானை - *மிக்க ஒளி பொருந்திய தாமரை இதழ் போலே நீண்ட கண்களை உடையவனும் ஆகிய பெருமானை,* கடி பொழில் சூழ் கடல் மல்லைத் தலசயனத்தே கண் ஆரக் கண்டு கொண்டேன்-.

**சி. கு :** *மெய்யம் - திருமெய்யம் என்னும் இத் திருமால் தலம் புதுக்கோட்டைக்கு அண்மையில் உள்ளது. எண்ணானை என்பதற்கு மக்களைக் காத்தருளும் வகையினை எண்ணுபவன் என்றும், அவனுடைய எளிவந்த தன்மை குறித்து அடியார்களால் எண்ணப்படுபவன் என்றும், அடைந்தவர் குற்றங்குறை களை ஒரு பொருளாக எண்ணாதவன் என்றும் பொருள் கொள்ளலாம் என்னும் திவ்யார்த்த தீபிகைக் குறிப்புக் கருதத்தக்கது.*

வியா : எட்டாம் பாட்டு : "ஸர்வேஶ்வரன் ஆகிறான் தன்னை ஆஶ்ர யித்தார்க்குத் தன்னோடு ஒத்த வரிசையைக் கொடுப்பான்[1] ஒருவன் என்று கொண்டு அவனுடைய நீர்மையைச் சொல்லுகைக்காக, அல்லாதார்க்கு உத்கர்ஷத்தைச்

---

வி : எட்டாம்பாட்டு : *"இறைவன் தன்னை அடைந்தார்க்குத் தன்னோடு ஒத்த வரிசையைக் கொடுப்பவன் என்பதனைக் கருத்திற்கொண்டு மேற்கோள் நூல்கள் அவனது நீர்மையினைத் தெரிவித்தற்காகப் பிற கடவுளர்க்கும்*

---

1. குடுப்பான்.

சொல்லாநிற்கும் ப்ரமாணங்கள்; அவர்கள் தாங்களும் புழுக் குறித்தது எழுத்தானாப் போலே சிலவற்றைத்[1] தோற்றச் செய்யும்; அவற்றைக்[2] கண்டு இவர்கள் பக்கலிலேயும் குவால் உண்டு என்று நாட்டார் ப்ரமிக்கைக்கு உடலாய் இருக்கும். ஆக, ப்ரமாணகதி இருந்தபடியாலும் சேதநர் மந்தமதிகளாய் இருந்தபடியாலும் இவற்றின்[3] தாத்பர்யம் அறியாதே, '**ஸம்ஸார ஸாகரம்**' என்று சொல்லுகிற கடலிலே புக்குப் போம் இத்தனையிறே, அவற்றை[4] அநுஸந்தித்துச் சொன்ன இவ் ஆழ்வார்கள் ஈரச்சொல் இன்றாகில்'' என்று பட்டர் அருளிச்செய்தார்.

**பெண் ஆகி இத்யாதி** - தனக்குச் சேராத செயலைச் செய்தும் ஆஸ்ரித கார்யம் செய்யுமவனை. புருஷ சப்தத்தாலும் புருஷோத்தம சப்தத்தாலும் சொல்லப் படுகிறவனிறே! தன் படிக்குச் சேராத ஸ்த்ரீ வேஷத்தைக் கொண்டு, ''இனிய வஸ்து ஆஸுர ப்ரக்ருதிகள்பக்கல் சேர ஒண்ணாது''[5] என்று வஞ்சித்தவனை. **பிறை இத்யாதி** - முருட்டு[6] ஹிரண்யனாலே சிறுக்கன் நோவுபடுகிற அன்று, பிறை போலே இருக்கிற எயிற்றையுடைய. **அடல் அரியாய்** - யுத்தம் என்றால் பணைக்கும் படியான நரஸிம்ஹமாய்க் கொண்டு. **பெருகினானை** - அவனுடைய ப்ரதிஜ்ஞா ஸம காலத்திலே அவ்வடிவைக்கொண்டு தோற்றிலனாகில் சுருங்கிக் கையற்றான்

---

*உயர்வினைச் சொல்லும். அப்பிற கடவுளரும் புழுக் குறித்தது எழுத்தாமாறு போலே[7] சில ஆற்றல்களைத் தோற்றச் செய்வர்; அவற்றைக் கண்டு இவர் களிடத்தும் குவால்[8] உண்டு என்று நாட்டார் மயங்குவதற்கு அவை உடலாய் இருக்கும். ஆக, மேற்கோள்களின் போக்கு இப்படிச் சிக்கலாய் இருத்தலானும் மக்கள் அறிவு விளக்கம் இல்லாதவர்களாய் இருத்தலானும் அம்மேற்கோள் களைக் குறித்துச் சிந்தித்துத் தெளிவாகப் பாசுரம் இட்டுள்ளனர், இவ் ஆழ்வார்கள். இவர்கள் ஈரச்சொல் இல்லையெனில், மக்கள் மேற்கோள்களின் உட்கருத்தினை அறியாமல், 'பிறவிப் பெருங்கடல்' (ஜி. ஸ்தோ. 4) என்று சொல்லப்படும் கடலிலே புக்கு ஆழ்ந்தே போவர்'' என்று பட்டர் கூறினார்.*

**பெண் ஆகி இன்அமுதம் வஞ்சித்தானை** - *தனக்குச் சேராத செயலைச் செய்தும் அடியார்க்கு வேண்டுவது செய்பவனை. ஆடவனைச் சுட்டும் சொல்லாலும் ஆடவர் திலகத்தைச் சுட்டும் சொல்லாலும் சொல்லப்படுபவனன்றோ பெருமான்! தன்படிக்குச் சேராத பெண்ணுருக் கொண்டு, ''இனிய பொருள் அவுணர்பக்கல் சேர்தல் கூடாது'' என்று வஞ்சித்தவனை.* **அன்று பிறை எயிற்று அடல் அரியாய்ப் பெருகினானை** - *முருட்டு இரணியனாலே பிரகலாதன் ஆகிய சிறுவன் நோவுபடும் அன்று, பிறை போலே இருக்கும் எயிற்றையுடையதும், போர் என்றால் பணைக்கும்படி இருப்பதும் ஆகிய ஆளரியாய் வடிவுகொண்டு.* **பெருகினானை** - *அப்பிரகலாதன் இத்தூணில் இறைவன் 'உண்டு' என்று சூளுரைத்த அக் காலத்திலே அவ்வடிவைக் கொண்டு தோன்றவில்லை என்றால் பெருகுவது இல்லாமற் போவதோடு கையற்றவன் ஆவான். அஃதாவது காவல் தன்மை*

---

1. சிலவைத்தைத். 2. அவைத்தைக். 3. இவைத்தின்; இவைற்றின். 4. அவைத்தை.
5. உண்ணாது. 6. முரட்டு.
7. புழு மண்ணில் ஊருங்கால் எதிர்பாராமல் சில எழுத்துகள் அதன் இயக்கத்தால் அமைதல் உண்டு. அவற்றைப் புழுவானது கருதிச் செய்வதில்லை; எதிர்பாராமல் அமைவன அவ் எழுத்துகள். இது போல எதிர்பாராமல் நிகழ்வதனைக் குறிக்க இவ் உவமையினைப் பயன்படுத்துவர். இதனை ஏரல் எழுத்துப் போல என்பர் பரிமேலழகர். 8. குவால் - மிகுதியான ஆற்றல்.

ஆயிற்று. தன்னுடைய ரக்ஷகத்வம் இழந்து கையிலான். **தண் ஆர்ந்த இத்யாதி** - பித்ராதிகள் ரக்ஷகராகை தவிர்ந்து பாதகராகப் புக்க பின்பு, "இனி இவர்கள் கையில் காட்டிக் கொடுப்போம்[1] அல்லோம்" என்று ரக்ஷகன் தான் வந்து சாய்ந்தான் ஆயிற்று. "வத்ஸலராய் உபகாரகராய் நோக்குகைக்குப் பித்ராதிகள் என்று சிலரைச் சொல்லி விட்டோம். அவர்கள் பாதகராய்த் தாங்களேயாய் நின்ற பின்பு நாம் அஸந்நிஹிதர் ஆவோம் அல்லோம்" என்று நேரே பிதாவானவன் வந்து சாய்ந்தருளினான் ஆயிற்று. ஶ்ரமஹரதை மிக்கு ஒழுகாநின்றுள்ள புனலை உடைத்தான திருமெய்யத்திலே திருவனந்தாழ்வான்மேலே வந்து சாய்ந்தருளினவனை. **எண்ணானை** - அப்படுக்கையில் சாய்ந்தருளினால் பண்ணும் ஜகத் ரக்ஷண சிந்தையைச் சொல்லுதல்; அன்றிக்கே ஸ்ரீவைகுண்டத்திலே நித்ய ஸூரிகள் பரிய இருக்கிறவன் இங்கே வந்து சாய்ந்தருளுவதே! இதென்ன நீர்மை! என்று எப்போதும் எண்ணப்படுமவன் என்னுதல். **எண் இறந்த புகழினானை** - ஜகத் ரக்ஷண சிந்தை பண்ணுகையால் வந்த புகழுக்கு எல்லை இல்லை என்னுதல்; குணாநுஸந்தாநம் பண்ணுவார்க்கு அநுஸந்தித்துத் தலைக்கட்ட ஒண்ணாத[2] குண ப்ராசுர்யத்தைச் சொல்லுதல். **இலங்கு இத்யாதி** - அக்குணங்களை ஒழியவே விட ஒண்ணாத படியாய் இருக்கும் ஆயிற்று, வடிவழகு; மிக்க ஒளியை உடைத்தாய் விகாஸாதிகளுக்குத் தாமரையை ஒப்பாகச் சொல்லலாய், அது வட்டணித்து இருக்குமிறே அங்ஙன் அன்றிக்கே, ஒழுகு நீண்டு இருக்கும் ஆயிற்று. அன்றிக்கே, போக்யதை

---

*இழந்து ஆற்றல் அற்றவன் ஆவான்.* **தண் ஆர்ந்த வார்புனல் சூழ் மெய்யம் என்னும் தடவரை மேல் கிடந்தானை** - *தந்தை முதலானோர் காப்பாளராக இருப்பது தவிர்ந்து கேடு இழைப்பாராக அமைந்தபின்பு, "இனி இவர்கள் கையில் காட்டிக் கொடுப்போம் அல்லோம்" என்று காப்பாளனே வந்து சாய்ந்தான் ஆயிற்று. பரிவுடையவராய் உதவி புரிபவராய் நோக்குவதற்குத் தந்தை தாய் என்று சிலரைச் சொல்லி விட்டோம்; அவர்களே தீங்கு இழைப்பவர்களாய் மாறினர். அவ்வாறு ஆகிய பின்பு நாம் தோன்றாமல் இருப்போம் அல்லோம்" என்று நேரே தந்தையானவன் வந்து சாய்ந்தருளினான். அயர்வு அகற்றும் தன்மை மிக்குப் பாய்கின்ற புனலை உடைத்தான திருமெய்யத்திலே திருவனந்தாழ்வான் மேலே வந்து சாய்ந்தருளியவனை.* **எண்ணானை** - *பெருமான் அப்படுக்கையில் சாய்ந்தால் உலகை நோக்கும் வகை குறித்துச் சிந்தனை செய்வான். அவ்வாறு அவன் பண்ணும் சிந்தனையைச் சொல்லுகிறது. அன்று எனில், திருநாட்டிலே அயர்வறும் அமரர்கள் பரிய இருப்பவன் இங்கே வந்து சாய்ந்தருளுவதே! இஃது என்ன நீர்மை! என்று எப்போதும் எண்ணப்படுபவன் என்பதைச் சொல்கிறது என்க.* **எண் இறந்த புகழினானை** - *உலகம் காத்தலைக் குறித்துச் சிந்தனை செய்கையில் வந்த புகழுக்கு எல்லை இல்லை என்பதனைச் சொல்கிறது. அல்லது, பண்பு குறித்துச் சிந்திப்பார்க்கு எண்ணித் தலைக்கட்ட ஒண்ணா அவன் பண்புகளின் மிகுதியைச் சொல்வதாகவும் கொள்ளலாம்.* **இலங்கு ஒளி சேர் அரவிந்தம் போன்று நீண்ட கண்ணானை** - *அப்பண்புகள் ஒழிந்தாலும் விட ஒண்ணாதபடி இருக்கும் வடிவழகு. மிக்க ஒளியை உடைத்தாய், மலர்ச்சி முதலானவற்றிற்குத் தாமரையை ஒப்பாகச் சொல்லலாம்படி இருக்கும் திருக்கண். தாமரை வட்டணித்திருக்குமல்லவா![3] அது போன்று வட்டணித்திருக்காமல் திருக்கண் ஒழுகு நீண்டிருக்கும்.*

---

1. குடுப்போம். 2. உண்ணாத.
3. வட்டணித்திருத்தல் - வட்டவடிவில் இருத்தல்.

அளவு இறந்து இருக்கும் என்னுதல். கண் ஆர - படபாமுகாக்நி நிறைந்தாப் போலே, "காண வேணும்" என்று உறாவிப் பட்டினி விட்ட கண்களினுடைய உறாவு தல் தீரக் காணப்பெற்றேன். விலக்ஷண சரீரத்தைப் பரிக்ரஹித்து ஒரு தேச விசேஷத்தே போய்க் காண்கை ஆகிறது, ஆரேனும் பசிக்க ஆரேனும் ஜீவித்தாப் போலே இருப்பது ஒன்றிறே; காண வேணும் என்று உறாவின கண்களோடே காணப்பெற்றேன். **"காத்ரைச் சோகாபிகர்சிதை:"**.

---

*அல்லது, இன்பம் நல்கும் இயல்பு அளவிறந்து இருக்கும் என்க.* **கண் ஆரக் கண்டு கொண்டேன்** *- என் கண்கள், "அவனைக் காண வேண்டும்" என்று உறாவி[1] வடவைக்கனல் நிறைந்தாற் போலே பசி நெருப்பு மிகுந்து பட்டினி விட்டிருந்தன. அக்கண்களின் உறாவுதல் தீரக் காணப்பெற்றேன். பிறிதொரு தன்மை கொண்ட உடலை ஏற்றுப் பிறிதொரு நாட்டிற்குப்[2] போய்ப் பெருமானைக் காண்பதாவது யாருக்கோ பசிக்க யாரோ உண்டாற் போலே இருப்பது ஒன்று. காண வேண்டும் என்று உறாவிய கண்களோடே காணப் பெற்றேன். "இராமபிரானிடம் பேரன்பு மிகுந்த யான், ஆடவருள் உயர்ந்தவ ரான அவரைத் துயரத்தால் இளைத்த இந்த என் உடல் உறுப்புகளாலேயே தொடத்தக்கவளாகும்படி என்னிடத்தில் நீ கருணை புரிவாயாக" (ரா. ஸு. 40:3) என்றாள் பிராட்டி. அவளைப் போன்று விரும்பிய யானும் என் ஏங்கிய கண்களாலே காணப்பெற்றேன்.*

ஒப்புமைப் பகுதி

1. பெண்ணுருவாகி இன்னமுதம் வஞ்சித்தவன்

   *பாட்டு 123இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. அரவிந்தம் போன்ற கண்ணினன்

   *பாட்டு 115இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

3. கண்ணாரக் காணுதல்

   *" கண்ணார - காண்கையிலே விடாய்ப்பட்ட கண், ஆர - வயிறு நிறைய "*
   *தி. வா. மொ. 9:8:5-36* (48)

## 149

தொண்டாயார் தாம்பரவும் அடியி னானைப்
படிகடந்த தாளாளற் காளாய் உய்தல்
விண்டானைத் தென்னிலங்கை அரக்கர் வேந்தை
விலங்குண்ண வலங்கைவாய்ச் சரங்கள் ஆண்டு
பண்டாய வேதங்கள் நான்கும் ஐந்து
வேள்விகளும் கேள்வியோ டங்கம் ஆறும்
கண்டானைத் தொண்டனேன் கண்டு கொண்டேன்
கடிபொழில்சூழ் கடல்மல்லைத் தலச யனத்தே.

---

1. உறாவி - வருந்தி; ஏங்கி. 2. பிறிது ஒரு நாடு - ஈண்டுத் திருநாடு.

**ப. ரை :** **தொண்டு ஆயார் தாம் பரவும் அடியினானை** - *தொண்டரானார் வழிபடும் திருவடிகளை உடையவனும்,* **படி கடந்த தாளாளற்கு** - *மண்ணை அளந்த திருவடிகளை உடையவனுக்கு,* **ஆளாய் உய்தல் விண்டானை** - *அடிமை செய்து பிழைக்கும் நெறியினின்றும் வேறுபட்டவனாய்,* **தென் இலங்கை அரக்கர் வேந்தை** - *தெற்குத் திசையில் உள்ள இலங்கையில் வாழ்ந்த அரக்கர்க்குத் தலைவனாய் இருந்த இராவணனை,* **விலங்கு உண்ண** - *விலங்குகள் தின்னும்படி,* **வலங் கை வாய்ச் சரங்கள் ஆண்டு** - *வலத்திருக்கையாலே அம்புகளைச் செலுத்தி,* **பண்டு ஆய நான்கு வேதங்களும்** - *நிலைத்த நான்கு வேதங்களையும்,* **ஐந்து வேள்விகளும்** - *ஐந்து வேள்விகளையும்,* **கேள்வியோடு** - *ஆசிரியன் அறிவுரையோடு,* **அங்கம் ஆறும்** - *ஆறு அங்கங்களையும்,* **கண்டானை** - *சொன்னவனும் ஆகிய பெருமானை,* **தொண்டனேன்** - *அடியேன்,* **கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்துக் கண்டுகொண்டேன்-.**

**சி. கு :** *படி - மண்ணுலகு. பண்டாய வேதங்கள் - நிலைபேறுடைய மறைகள்.*

**வியா :** **ஒன்பதாம் பாட்டு : தொண்டு ஆயார் - "வழுவிலா அடிமை செய்ய வேண்டும்"** என்று இருப்பாரைச் சொன்னபடி. **ஆயார்** என்றது **ஆனார்** என்றபடி. அவர்கள், **"ஜாமதக்ந்யஸ்ய ஜல்பதஃ"** என்கிறபடியே அடைவு[1] கெட்டு ஏத்தும்படியான திருவடிகளை உடையவனை. **படி இத்யாதி** - நம்முடைய ஒன்றும் தவற ஒண்ணாது என்று தான் கொடுவந்து திருவடிகளைத் தலையிலே வைத்த ஸ்வபாவத்தை உடையவனுடைய நீர்மையிலே தோற்று, "இனி நாமும் அவன் உகந்த அடிமை செய்து உளோம் ஆவோம்" என்கிற இவ்அர்த்தத்திலே விண்டவன் உண்டு **"ந நமேயம்"** என்று இருக்குமவனை. **ஆளாய் உய்தல் விண்டார்க்கு** எல்லாம் ப்ரபுவாய் இருக்கிறவனை. **விலங்கு உண்ண** - அவனை நாயும் நரியும் கழுகும்[2] பற்றி இசிக்கும்படியாக. **வலங் கை வாய்ச்**

---

**வி :** ஒன்பதாம் பாட்டு : **தொண்டு ஆயார் தாம் பரவும் அடியினானை - "வழுவிலா அடிமை செய்ய வேண்டும்"** (*தி. வா. மொ. 3:3:1*) *என்று இருப்பாரைச் சொல்கிறார்.* **ஆயார்** - *ஆனார். அவர்கள்,* **"சமதக்னியின் பிள்ளையும் அடைவு கெடப் பேசுபவருமான பரசுராமர்"** (*பார. மோ.*) *என்று சொல்லும்படியே அடைவு கெட்டு ஏத்துமாறு அமைந்த திருவடிகளை உடையவனை.* **படி கடந்த தாளாளற்கு ஆளாய் உய்தல் விண்டானை** - *நம் உடைமை ஒன்றும் தவற ஒண்ணாது என்று தான் கொண்டுவந்து திருவடிகளைத் தலையிலே வைத்த தன்மையன் பெருமான். அவனது நீர்மையிலே தோற்று,* **"இனி நாமும் அவன் உகந்த அடிமை செய்து உளோம் ஆவோம்"** *என்னும் இக்கோட்பாட்டிலிருந்து வேறுபட்டு நின்றவன் உண்டு. அவன் இராவணன்.* **"நான் வணங்கேன்"** (*ரா. யு. 36:11*) *என்று இருப்பவனை.* **தென் இலங்கை அரக்கர் வேந்தை** - *இறைவனுக்கு ஆளாகி உய்தல் விண்ட அரக்கர்களுக்கு எல்லாம் தலைவனாய் இருப்பவனை.* **விலங்கு உண்ண** - *அவனை நாயும் நரியும் கழுகும் பற்றி இசிக்கும்படியான*[3]. **வலங் கை**

---

1. அடைவு. 2. கழுகும் பருந்தும்.
3. இசித்தல் - இழுத்தல்.

**சரங்கள் ஆண்டு** - ப்ரதிகூல நிரஸநத்துக்கும் அநுகூலர்க்கு தர்சநீயமாய் இருக்கைக்கும் கையும் வில்லுமான இருப்பே அமையும். **பண்டு இத்யாதி** - அபௌருஷேயமாகையாலே நித்யமாய், நிர்த்தோஷமாய், பூர்வ பூர்வோச்சாரண க்ரமத்தைப் பற்ற உத்தரோத்தரோச்சார்யமாணமான வேதாக்ஷர ராசியும் தன்னுடைய ஸமாராதந ரூபமான வைதிக கர்மங்களுக்கு உபலக்ஷணமான[1] பஞ்ச மஹா யஜ்ஞங்களும், இந்த வைதிக க்ரியைகள்தன்னை ஸமாராதந ரூபம் என்னும் இடத்தைச் சொல்லுகிற அங்கங்கள் ஆறும், கேள்வியாலே அநுஸந்திக்கப்படுவதான. **கண்டானை** - சாஸ்த்ரீய ஜ்ஞாநத்தாலே தன்னை ப்ராபிக்கைக்கு ஈடான வழியைக் கண்டு வைத்தவனை. **தொண்டனேன் இத்யாதி** - அப்பெருவழியான சாஸ்த்ரீய ஜ்ஞாநத்தாலே அன்றிக்கே இக்கண்ணாலே காணப்பெற்றேன்.

---

**வாய்ச் சரங்கள் ஆண்டு** - *செற்றாரை அழிப்பதற்கும் உற்றார்க்குக் காண அழகாய் இருப்பதற்கும் கையும் வில்லுமான இருப்பே அமையும்.* **பண்டு ஆய வேதங்கள் நான்கும் ஐந்து வேள்விகளும் கேள்வியோடு அங்கம் ஆறும்** - *மனிதரால் ஆக்கப்படாமையாலே நிலைத்திருப்பனவாய்க் குற்றமற்றனவாய் ஓதி வரும் அடைவை ஒட்டிப் பண்டுதொட்டு வழிவழி ஓதப்பெறுவனவாய் இருக்கும் வேதங்களையும் தனக்கு உளநிறைவளிக்கும் வேத வழிப்பட்ட செயல்கள் அனைத்தையும் குறிக்கும் வகையில் சொல்லப்பட்ட ஐம்பெரும் வேள்விகளும், இந்த வேத வழிபட்ட செயல்கள் உள நிறைவளிப்பவை என்று சொல்லும் மறைக்கு உறுப்புகள் ஆறும்*[2]. **கேள்வி** - *கேள்வியாலே உணரப்படுவனவும்; அஃதாவது ஒருவர் சொல்லப் பிறிதொருவர் கேட்டு மரபாக வருவன ஆகும்.* **கண்டானை** - *சாத்திர அறிவினாலே தன்னை அடைவதற்கு ஏற்ற வழியினைக் கண்டு வைத்தவனை.* **தொண்டனேன் கண்டு கொண்டேன்** - *அப்பெருவழியான நூலறிவாலே அல்லாமல் இக்கண்ணாலே காணப்பெற்றேன்.* **கடி பொழில் சூழ் கடல்மல்லைத் தலசயனத்தே-.**

## ஒப்புமைப் பகுதி

**1. வேதங்கள் நான்கு**

> *" நான்மறை - ருக் யஜுஸ் ஸாம அதர்வணங்கள்..."*
>
> *தி. எ. கூ. இ. அடி 14 பெ. உரை.*

> *" சுடர்மிகு சுருதி - அபௌருஷேயமாய் நிர்த்தோஷமாய் இருக்கிற வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கும். ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் போலே*

---

1. உபலக்ஷணங்களான.

2. நான்கு வேதங்கள் - இருக்கு, யசுர், சாம, அதர்வண வேதங்கள். ஐந்து வேள்விகள் - பிரம யஜ்ஞம் (மறைஓதல்), தேவ யஜ்ஞம் (உண்ணப்புகும் சோற்றில் ஒரு பகுதியைத் தேவர்களுக்காகத் தீயில் இடுதல்), பூத யஜ்ஞம் (உண்ணப்புகும் சோற்றில் ஒரு பகுதியை நாய், பூனை, காக்கை முதலியவற்றிற்கு இடுதல்), பித்ரு யஜ்ஞம் (உண்ணப் புகும் சோற்றில் ஒரு பகுதியைத் தென்புலத்தார்க்காகத் தருதல்) மநுஷ்ய யஜ்ஞம் (உண்ணப்புகும் சோற்றின் ஒரு பகுதியை விருந்தினருக்காக ஒதுக்கி வைத்தல்) என்பன. ஆறு அங்கங்கள் - சிக்கை (மறைகளை எடுத்தல் படுத்தல் முதலிய இசைவேறுபாட்டால் ஒலிக்குமாறு உணர்த்துவது), வியாகரணம் (மறைகளின் எழுத்துச் சொற்பொருள் இயல்பு உணர்த்துவது), சந்தம் (வேத மந்திரங்களில் காயத்திரி முதலிய சந்தங்களின் பெயரும் அவற்றிற்கு எழுத்து இனைத்து என்றலும் உணர்த்துவது), நிருத்தம் (மறைகளின் சொற்பொருள் உணர்விப்பது), சோதிடம் (கோள்களின் இயக்கத்தைக் கொண்டு மறைகளில் சொல்லப்படும் சடங்குகளைச் செய்யும் காலத்தை அறுதியிடுவது), கற்பம் (மறைகளில் கூறும் சடங்குகளைக் கடைப்பிடிக்கும் முறைமை உணர்த்துவது).

ஹேத்வந்தரத்தாற் கழிக்க ஒண்ணாத ஒளியையுடைத்தாய் இருக்கை. சுருதி - பூர்வ பூர்வோச்சாரண க்ரமத்தைப் பற்றி உத்தரோத்தரோச்சார்யமாணத்வத்தைப் பற்றச் சொல்லுகிறது "

தி. வா. மொ. 1:1:7-36

[அபௌருஷேயம் - மனிதரால் ஆக்கப்படாதது. நிர்த்தோஷம் - குற்றம் அற்றது. ப்ரதிபாதிக்கப்படுதல் - சொல்லப்படுதல். ப்ரத்யக்ஷம் - காண்டல் அளவை. ஹேத்வந்தரம் - பிற காரணம். உச்சாரண க்ரமம் - சொல்லும் முறை.]

**2. ஐந்து வேள்வி**

" ஐவகை வேள்வி -தேவ யஜ்ஞ: பித்ரு யஜ்ஞோ பூத யஜ்ஞோ மநுஷ்ய யஜ்ஞோ ப்ரஹ்ம யஜ்ஞ: என்னும் பஞ்ச மஹா யஜ்ஞங்கள் "

தி. எ. கூ. இ. 14 அடி. பெ. உரை.

**3. ஆறு அங்கம்**

" அமர வோர் அங்கம் ஆறும் - சீக்ஷாயாம் வர்ணசிக்ஷா இத்யாதி "

தி. மா. 43 பெ. உரை.

[சீக்ஷாயாம் - எழுத்துகளின் ஒலிக்கும் முறைகளுள். வர்ணசிக்ஷா - எழுத்துகளின் (ஒலிவடிவம்) பிறப்புப் பற்றிய இயல்.]

(49)

## 150

**படநாகத் தணைக்கிடந்தன் றவுணர் கோனைப்**
**படவெகுண்டு மருதிடைபோய்ப் பழன வேலித்**
**தடமார்ந்த கடல்மல்லைத் தலச யனத்துத்**
**தாமரைக்கண் துயில்அமர்ந்த தலைவன் தன்னைக்**
**கடமாருங் கருங்களிறு வல்லான் வெல்போர்க்**
**கலிகன்றி ஒலிசெய்த இன்பப் பாடல்**
**திடமாக இவைஐந்தும் ஐந்தும் வல்லார்**
**தீவினையை முதல்அரிய வல்லார் தாமே.**

**ப. ரை :** **பட நாகத்து அணைக் கிடந்து** - படங்களையுடைய ஆதிசேடன் ஆகிய படுக்கையில் சாய்ந்து, **அன்று** - பிரகலாதன் வஞ்சினம் உரைத்த அந் நாள், **அவுணர்கோன் பட வெகுண்டு** - அசுரர் தலைவனான இரணியன் முடியும்படி சீறியும், **மருது இடை போய்** - இரு மருத மரங்களின் நடுவே தவழ்ந்து சென்றும்

150. 2 : 7 தலைவர். 2 : 8 தம்மைக் 3 : 1 கட்மார்ந்த. 4 : 6 முதலிரிய.

ஆடல் நிகழ்த்தி, **பழன வேலி** - நீர் நிலங்களை வேலியாகக் கொண்ட, **தடம் ஆர்ந்த** - தடாகங்களாலே நிறைந்த, **கடல்மல்லைத் தலசயனத்து** - திருக்கடல் மல்லையிலே நிலத்தைப் படுக்கையாகக் கொண்டு, **தாமரைக் கண் துயில் அமர்ந்த** - தாமரை போலும் கண்கள் உறக்கம் கொண்ட, **தலைவன் தன்னை** - இறைவனைப் பற்றி, **கடம் ஆரும் கருங் களிறு வல்லான்** - மதம் நிறைந்த பெரிய யானையை நடத்த வல்லவனும், **போர் வெல் கலிகன்றி** - போரில் பகைவர்களை வெல்லும் கலிகன்றி என்னும் பெயரை உடையவனுமான திருமங்கை மன்னன், **ஒலி செய்த** - உரைத்த, **இன்பப் பாடல் இவை ஐந்தும் ஐந்தும்** - இனிமையை விளைவிப்பதான இப்பத்துப் பாக்களையும், **வல்லார் தாம்** - ஓத வல்லவர்கள், **தீவினையைத் தாமே** - தீவினைகளைத் தாங்களே, **திடமாக முதல் அரிய வல்லார்** - உறுதியாகக் கிழங் கோடே போக்க வல்லவர் ஆவர்.

**சி. கு :** பழனம் - வயல். தாமரைக்கண் - உவமத்தொகை.

வியா : **பத்தாம் பாட்டு : பட இத்யாதி** - தன்னோட்டைச் சேர்த்தி யாலே விகஸிதமான பணங்களையுடைய திருவனந்தாழ்வான்மேலே சாய்ந்தருளி. அப்படுக்கையும் விட்டுப்போய் அழியச் செய்யும், ஆச்ரித விரோதிகள் உண்டானால். **மருது இடை போய்** - ஒன்று என்னலாம்படி பொருந்தி நின்ற மருது முறிந்து விழும்படி நடை கற்று. நீர் நிலங்களாலே சூழப்பட்டு அழகிய தடாகங்களை உடைத் தான திருக்கடல் மல்லை ஸ்தல[1] சயநத்திலே, **"யஜ்ஞேசோ யஜ்ஞ புருஷ:"** என் கிறபடியே ஸர்வாதிகனான புண்டரீகாக்ஷன் என்று தோற்றும்படி கண்வளர்ந்தருளின வனையாயிற்றுக் கவி பாடிற்று. **கடம் இத்யாதி** - மத்தகஜத்தைத் தம் நினைவிலே நடத்த வல்லவர்[2]; யுத்தத்தில் வெற்றிகொண்டல்லது மீளாத ஆழ்வார் ஒலி உடைத் தாக அருளிச்செய்த இப்பத்தையும் அப்யஸிக்க வல்லவர்கள். **தீவினையை**

---

வி : பத்தாம் பாட்டு : **பட நாகத்து அணைக் கிடந்து அன்று அவுணர் கோனைப் பட வெகுண்டு** - தன்னுடைய சேர்த்தியாலே[3] விரிந்த பணங்களை யுடைய திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்தருளி. அடியார்க்குப் பகைவர்கள் தோன்றினால் அப்படுக்கையையும் விட்டுப் போய் அழியச் செய்வான். **மருது இடை போய்** - ஒன்று என்னல் ஆம்படி பொருந்தி நின்ற மருது முறிந்து விழும்படி நடை கற்று. **பழன வேலித் தடம் ஆர்ந்த கடல்மல்லைத் தலசயனத்துத் தாமரைக் கண் துயில் அமர்ந்த தலைவன்தன்னை** - நீர் நிலங்களாலே சூழப்பட்டு, அழகிய தடாங்களையுடைத்தான திருக்கடல்மல்லைத் தலசயனத்திலே, **"வேள்வியால் வழிபடப் பெறுவோனும் வேள்விக்குப் பயன் தருபவனும் தாமரைக்கண்ணன் என்னும் பெயரை உடையவன் ஆவான்"** என்னும் முன்னோர் மொழிக்கு ஒப்ப எப்பொருட் கும் மேம்பட்டவன் தாமரைக்கண்ணன் என்று தோற்றும்படி கண்வளர்ந்தருளின வனைக் குறித்தன்றோ பாசுரம் இட்டார். **கடம் ஆரும் கருங் களிறு வல்லான் வெல் போர்க் கலிகன்றி ஒலி. செய்த இன்பப்பாடல் திடமாக இவை ஐந்தும் ஐந்தும் வல்லார்** - மதம் பொழியும் யானையைத் தம் நினைவிலே நடத்த வல்லவரும் போரிலே வெற்றி கொண்டுஅல்லது மீளாதவருமான ஆழ்வார் ஒலி உடைத்தாக அருளிச் செய்த இப்பத்தையும் பயில வல்லவர்கள். **தீவினையை முதல் அரிய**

---

1. தல. 2. வல்லவன்.
3. சேர்த்தி - சேர்க்கை.

**முதல் அரிய வல்லார் தாமே** - ப்ராக் தநமான கர்மங்களைத் தாங்களே வாஸநை யோடே போக்க வல்லர் ஆவர்கள். பாபங்களைக் கூடுபூரித்துக் கொள்ளும் இத்தனை போக்கி எலி எலும்பன் ஆன இவனால் இது போக்கிக் கொள்ளலாம் என்றால் இது கூடுமோ என்னில், அதில் ஒரு தட்டு இல்லை; இது த்ருடம்.

---

**வல்லார் தாமே** - கடந்த காலச் சேமிப்பான தீவினைகளைத் தாங்களே வேர்ப்பற்றோடே போக்கவல்லர் ஆவர். தீவினைகளை நிறைத்துக் கொள்ளுவது அன்றி எலிஎலும்பனான[1] இவனால் இதனைப் போக்கிக் கொள்ளலாம் என்பது கூடுமோ என்னில், அதில் ஒரு தட்டு இல்லை; அஃது உறுதி என்கிறார்.

(50)

---

1. எலி எலும்பன் - ஆற்றல் அற்றவன்; வலிமையற்றவன்.

பிர : **"அஹம் அஸ்ம்யபராதாநாம்"** இத்யாதி **"ஸாதேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்"** என்று சரணாகதிக்கு லக்ஷணம் சொல்லிற்று. அதுதன்னை, **'வாணிலா முறுவலி'லும் 'தாயே தந்தை'**யிலுமாக அநுஸந்தித்தார். **"காணாது திரிதருவேன் கண்டுகொண்டேன்"** என்றும், **"தொண்டனேன் கண்டுகொண்டேன்"** என்றும் அதுதன்னை அநுபாஷித்தார். **"ஆநுகூல்யஸ்ய ஸங்கல்பஃ ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்"** என்று அவனுக்கு ஸம்பாவிதமாய் அநந்தரம் வரும் ஸ்வபாவங்களைச் சொல்லுகிறதாய்[1] அவை தமக்குப் பிறந்தபடி சொல்லுகிறது ஆயிற்று இதில். அவைதான் இரண்டும் லக்ஷணமாக வேண்டிற்று இல்லை, பரஸ்பர விரோதத்தாலே. **"த்வமேவ"** என்று உபாய நைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகையாலும், இதில் அங்கங்களோடே கூடி இருப்பதாகச் சொல்லுகையாலும். ஆகையால் அது லக்ஷணமாய் இது அவனுக்கு ஸம்பாவித ஸ்வபாவமாம் இத்தனை. **"பசுர்மநுஷ்யஃ பக்ஷீ வாயே ச வைஷ்ணவ ஸம்ஶ்ரயாஃ தேநைவ தே ப்ர யாஸ்யந்தி த்த் விஷ்ணோஃ பரமம் பதம்"** என்று பாகவத ஸமாஶ்ரயணத்தை,

---

தோ : "யான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாக இருப்பவன்; என்னைக் காத்துக் கொள்ளக் கைம்முதல் அற்றவன்; உன்னை ஒழிய வேறு புகல் இல்லாதவன்; நீயே எனக்கு வழியாக ஆவாயாக என்று இறைஞ்சும் அறிவே அடைக்கலம் எனப் படுகிறது" *(அஹி. ஸம். 37:30)* என்றும், "அவ் அடைக்கலம் இறைவன் திறத்துச் செய்யப்படட்டும்" *(அஹி. ஸம். 37:30)* என்றும் அடைக்கல நெறிக்கு இலக்கணம் சொல்லப்பட்டது. அதனை, 'வாணிலா முறுவலி'லும், *(பெ. தி. 1:6)* 'தாயே தந்தையிலும்' *(பெ. தி. 1:9)* நினைவுகூர்ந்தார். "காணாது திரிதருவேன் கண்டு கொண்டேன்" *(பெ. தி. 2:5:7)* என்றும் "தொண்டனேன் கண்டுகொண்டேன்" *(பெ. தி. 2:5:9)* என்றும் திரியவும் பேசினார். "தன்னால் அடையப்பெற்றவனுக்குப் பாங்கானவற்றை நேர்தல் தீங்கானவற்றைத் தீர்தல்" *(அஹி. ஸம். 37:27)* என்னும் பண்புகள் அடைக்கலம் புகுந்தவனுக்குப் பின்னர் உண்டாகி வருவன என்பதனைச் சொல்லக் கருதி, அத்தன்மைகள் தமக்குப் பிறந்தவாற்றைச் சொல்லுகிறார் இத் திருமொழியில். முதலில் இலக்கணமாகச் சொல்லப்பட்டதும், இங்குச் சொல்லப் படும் தன்மைகளும் ஆகிய இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை. முன்னர்ச் சொல்லப்பட்டதில், "நீயே எனக்கு வழி" *(அஹி. ஸம். 37:30)* என்று இறைவனை ஒழிந்த மற்றொரு சார்பும் வேண்டாத பண்பு கூறப்படுவதனாலும், பின்னர்ச் சொல்லப்பட்டதில், சார்புகளோடு கூடி இருப்பதாகக் கூறப்படுவதனாலும் அவை தம்முள் முரண்பட்டன ஆகின்றன. ஆதலின், அவ் இரண்டனையும் அடைக்கல நெறியின் இலக்கணமாகக் கொள்ள வேண்டுவது இல்லை. முன்னது இலக்கணம் கூறுவதாகவும் பின்னது அந்நெறியைப் பற்றுவானுக்குத் தன்னடையே பிறக்கும் தன்மைகளைக் கூறுவதாகவும் அமைகின்றன. "விலங்கோ மனிதனோ பறவையோ எவராய் இருந்தாலும் வைணவன் ஒருவனைப் பற்றிநின்றாராயின் அந்த வைண வனோடுகூட அவர் விட்டுணுவின் அந்த உயர்ந்த இடமாகிய திருநாட்டை அடைவார்" *(சாண். 1:15)* என்று, அறிவும் அறிவுக்குத் தகுந்த செய்கையும் இல்லா விடினும் இறையடியார்களைப் பற்றிநிற்றலையே இறைவனை அடைதற்குக்

---

1. சொல்லுகிறது.

ஜ்ஞாநமும் ஜ்ஞாநாநுரூபமான வ்ருத்தமும் ஒழியவேயும் பகவத்ப்ராப்திக்கு ஸாதநமாகச் சொல்லாநின்றதிறே. ம்ருகபக்ஷ்யாதிகளையும் எடுக்கிறதிறே!

இவைதான் பின்னை இரண்டோ? பாகவத ஸமாஶ்ரயணமாவது, பகவத் ஸமாஶ்ரயணத்தினுடைய காஷ்ட்டையன்றோ என்னில், அவ்யவதாநேந பகவத் ஸமாஶ்ரயணம் பண்ணுகிறோம் என்று இருப்பது ஒன்று உண்டு. பாகவத ஸமாஶ்ரயணத்தாலே பகவத் ஸமாஶ்ரயணம் பண்ணுவதும் ஒன்று உண்டு. இந்த முக பேதத்தைப் பற்றிச் சொல்லுகிறது. பாகவத ஸமாஶ்ரயணம் ஒழிய பகவத் விஷயத்தில் இழியும் துறை இல்லை.

> **மாறாய இத்யாதி** - வேறாக ஏத்தி இருப்பார் ஆகிறார் ஆர்? மற்றவரைச் சாத்தி இருப்பார் ஆகிறார் ஆர்? இத்தை ஓர் உதாஹரண நிஷ்ட்டமாகக் காட்டலாமோ என்னில், வேறாக ஏத்தி இருப்பார் ஆகிறார் ஸர்வேஶ்வரனைக் கண்ட அநந்தரம் தம்மைப் பேணாதே பகவத் ஸம்ருத்திக்கு மங்களாசாஸநம் பண்ணும் பெரியாழ்வார் போல்வார்; மற்றவரைச் சாத்தி இருப்பார் ஆகிறார், **"வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே"** என்று இருக்கும் ஆண்டாள் போல்வார்.

---

*கருவியாகச் சொல்வர். விலங்குகளும், பறவைகளும் கூட அப்படி இறைவனை அடைந்தனவாகக் காட்டுவர் அன்றோ!*

*இறைவனைச் சார்வது, இறையடியார்களைச் சார்வது என்று சார்பு இரண்டு ஆகுமோ? இறைவனைச் சார்வதன் எல்லைநிலமன்றோ இறையடியார்களைச் சார்வது என்னில், நேரே இறைவனைப் பற்றுகிறோம் என்று கருதி இருக்கும் ஒரு நிலையும் உண்டு. இறையடியார்களைப் பற்றுவதன் வாயிலாக இறைவனைப் பற்றும் ஒரு நிலையும் உண்டு. இந்த முறை வேற்றுமையினைக் கருதி இவ்வாறு சொல்கிறார். இறையடியாரது சார்பு இல்லாமல் இறைவன்மாட்டு இழியும் துறையில்லை.*

**" மாறாய தானவனை வள்ளுகிரால் மார்விரண்டு**
**கூறாகக் கீறிய கோளரியை - வேறாக**
**ஏத்தி இருப்பாரை வெல்லுமே மற்றவரைச்**
**சாத்தி இருப்பார் தவம் "**

என்பது *திருமழிசைப்பிரான் பாசுரம்.* (நான். தி. 18)

*வேறாக ஏத்தி இருப்பார் யார்? மற்று அவரைச் சாத்தி இருப்பார் யார்? என்பதனை ஓர் எடுத்துக்காட்டால் விளக்கமுடியுமோ என்னில், வேறாக ஏத்தியிருப்பவர் இறைவனைக் கண்ட அளவில் தம்மைப் பேணாதே இறைவன் நலங்குறித்துப் பல்லாண்டு பாடும் பெரியாழ்வார் போல்வார்; மற்று அவரைச் சாத்தி இருப்பவர்,* **"வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே"** *(நாச். தி. 10:10) என்று இருக்கும் ஆண்டாள் போல்வார்.*

இனி இவர்தாம் பாகவதர்களாக[1] நினைத்திருப்பது உகந்தருளின நிலங்களில் நீர்மையிலே ஈடுபட்டு இருக்கும் அவர்களை. அபாகவதர்களாக[2] நினைத்திருப்பது அங்குத்தை வாசி அறியாதவர்களை. **"ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:"** என்கிறது ஒன்று செய்து தலைக்கட்டிற்றாய் ஓர் அளவில் மீளுமது அல்லாமையாலே ப்ராப்தி தசையிலும் அநுவர்த்திக்குமது இங்கோர் அளவில் மீளாதிறே. **"ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்"** ப்ராப்தியளவுமிறே நிற்பது. ப்ராதிகூல்ய நிவ்ருத்தி பிறந்தால் உண்டாமதாகையாலே ஆநுகூல்யம் பிற்பட்டதிறே. அந்த ப்ராதிகூல்ய நிவ்ருத்தி தமக்கு உண்டான படியைச் சொல்லுகிறார் முதற் பாட்டில். இதுதான் உண்டாக அமையுமிறே; ஸம்பந்தம் இன்றாக உண்டாக்க வேண்டாவே. தானே ஏறட்டுக் கொண்டத்தைத் தவிரும் இத்தனை வேண்டுவது.

இரண்டாவது பிர : அநாதி காலம் ஸம்ஸரித்துப் போருகிற இச்சேதநர் விஷயமாக ஸர்வேச்வரன் திருவுள்ளத்தாலே, **"ஸுஹ்ருதம் ஸர்வ பூதாநாம்"** என்கிறபடியே பண்ணுவித்தது[3] ஒரு ஸௌஹார்த்தம் உண்டிறே. இவனுடைய ஸத்க்ரியைக்கு பல வ்யாப்தி உண்டாகாநின்றால் அவனுடைய அநுக்ரஹத்திற்கு பல வ்யாப்தி இன்றிக்கே இராதிறே; ஆகையாலே, அதுதான் ஒருநாள் வரையிலே ஓர் அவகாசத்திலே பலிக்கவும் கடவதாய் இருக்குமிறே. அத்தாலே இவனுக்கு ஈச்வரன்

---

*இனி இவர்தாம் இறையடியார்களாக நினைத்திருப்பது உகந்தருளிய நிலங்களில் நீர்மையிலே ஈடுபட்டிருப்பவர்களை. அடியர் அல்லராக நினைத்திருப்பது அவ்இடத்தின் சிறப்பினை அறியாதவர்களை.* **"பாங்கானவற்றை நேர்தல்"** *(அஹி. ஸம். 37:27) என்பது ஒன்று செய்து முடித்தால் அவ்வளவில் மீளுவதன்று; அஃது இறைவனை அடையும் நிலையிலும் பின் நாட்டுவது[4]; அஃது இங்கு ஓரளவில் மீளாதே தொடர்கிறது.* **"தீங்கானவற்றைத் தீர்தல்"** *(அஹி. ஸம். 37:27) என்பது இறைவனை அடையும் நிலை வரையிலேயே நிற்பது; தீங்கு நீங்குமானால் உண்டாவது பாங்கு ஆதலின் பாங்கு, தீங்கு நீக்கத்திற்குப் பின் நிகழ்வது. அந்தத் தீங்கு நீக்கம் தமக்கு உண்டான தன்மையைச் சொல்லுகிறார் முதற் பாட்டில். தீங்கு நீக்கம் உண்டானால் அதுவே போதும். இறைவனோடு தொடர்பு இன்று புதிதாக உண்டாக்கிக்கொள்ள வேண்டுவது ஒன்று அன்று; அஃது என்றும் இருப்பது. இவன் தான் ஏறட்டுக்கொண்டதனைத்[5] தவிர்தலே வேண்டுவது.*

**இரண்டாவது தோ :** *நெடுங்காலம் உலக வாழ்க்கையில் உழன்று திரியும் மக்களைக் குறித்து இறைவன் திருவுள்ளம் இரங்கி,* **"எல்லா உயிரினங்களுக்கும் நண்பன்"** *(கீதை 5:21) என்பதற்கு ஏற்பச் செய்வித்தது ஒரு நட்பு உண்டு. இம்மனிதனுக்குக் கோல்விழுக்காட்டிலே வந்த ஒரு நல்வினைக்குப் பயன் கிட்டும் என்றால் இறைவன் செய்யும் அருளுக்குப் பயன் கிட்டாமல் போகாது அன்றோ? ஆகையால், இறைவன் செய்யும் அருள் ஒருநாளில் ஓர் இடத்தில் தனது பயனைத் தரும். அதனால் இம்மனிதனுக்கு இறைவனிடம் விழைவு உண்டாகும்; அதன்*

---

1. பாகவதராக. 2. அபாகவதராக. 3. பண்ணிவைத்தது.
4. பின்நாட்டுவது - தொடர்வது. 5. ஏறட்டுக் கொண்டது - ஈட்டிக் கொண்டது.

பக்கலிலே ஆபிமுக்யம் பிறந்து அதடியாக அவன் விசேஷ கடாக்ஷம் பண்ண, அநந்தரம் இவனுக்கு அவன்பக்கலிலே ருசி விஶ்வாஸங்கள் பிறந்து ப்ராபகனும் ப்ராப்யனும் அவனே என்று அத்யவஸித்தால் பின்பு இவன் இருக்கக்கடவ படியைச் சொல்லு கிறது.

இனி உபாயத்திலே வந்தால், ஸர்வஜ்ஞனாய் ஸர்வ சக்தியாய் உபய விபூதியுக்தனாய் அவாப்த ஸமஸ்த காமனாய் இருக்கிற ஸர்வேஶ்வரனை இஸ் ஸம்ஸாரி சேதநன் உபாயமாக வரித்தால், பின்னை அவன் இவனுடைய ஸர்வ பரங் களையும் தானே ஏறட்டுக்கொண்டு நிர்வஹிப்பானானால், அவன் செய்யுமதுக்கு இவன்தானும் ஒருதலை பற்றவேண்டும்படியாய் இராமையாலே பின்னை ஹிதசேஷத்தில் தனக்குச் செய்ய வேண்டுவது ஒன்று இல்லை. உபேயமாகிறது கர்மநிபந்தநமாகப் பரிக்ரஹித்த இத்தேஹ ஸம்பந்தம் அற்று ஒரு கதி விசேஷத் தாலே போய் ஒரு தேச விசேஷத்திலே புக்கால் பண்ணுவது ஒரு வ்ருத்தி விசேஷ மாகையாலே, அது இதுவாகக் கூடாது. ப்ராபகாம்ஶத்தில்[1] கர்தவ்யாம்சம் இல்லை யாகில், ப்ராப்யாம்ஶத்தில் இது அந்வயியாதாகில், பின்னை இதுவாவது பழைய விஷய ப்ராவண்யமே ஸித்தித்துவிடுகிறதோ என்னில், கூடாதிறே, ப்ராப்யம்

---

*காரணமாக இறைவன் இவன்பால் குளிர நோக்குவான்; அதனால் பின்பு இம்மனிதனுக்கு அவ்இறைவன்திறத்து நாட்டமும் நம்பிக்கையும் பிறந்து அவனே ஆறாகவும் பேறாகவும் இருப்பவன் என்னும் உறுதி பிறக்கும். அவ்உறுதி பிறந்தால் இம்மனிதன் அடியார் அல்லாதார் கூட்டுறவு தக்கதன்று என்றும் அடியார் கூட்டுறவு தக்கது என்றும் கருதி இருப்பான். அவ்வாறு இருக்கும் தன்மை யைச் சொல்கிறார், இத்திருமொழியில்.*

*இனி இறைவனை அடையும் நெறியினை எடுத்துக் கொண்டால், பெருமான் முற்றறிவினனாய், பேராற்றல் உடையவனாய், விண்ணும் மண்ணும் ஆகிய இருநாட்டினைப் பொருந்தியவனாய், குறை ஒன்றும் இல்லாத நிறைவாளனாய் இருக்கிறான். அப்பெருமானை இம்மனிதன் நெறியாக ஏற்றுக்கொள்ளின், பின்பு அவன் இவனுடைய எல்லாச் சுமைகளையும் தானே ஏற்றுக்கொண்டு இவனைக் காப்பாற்றுவான். அவன் செய்யும் செயல்களுக்குப் பாங்காக இம்மனிதன் பங்கேற்க வேண்டுவது இல்லை. எனவே அவனை நெறியாகக் கொண்ட பின்பு எஞ்சிய நன்மைகளில் இவனுக்குச் செய்ய வேண்டுவது ஒன்றும் இல்லை. ஆதலின் இறையடியார்தம் கூட்டுறவு தக்கது என்று இருத்தலாகிய இத்தன்மை பேறு ஆகுமோ எனில், பேறாவது வினை அடியாக ஏற்றுக்கொண்ட இவ்உடலின் தொடர்பு அற்று ஒளி வழியின்கண்ணே (அர்ச்சிராதி கதியின்கண்ணே) சென்று திருநாட்டை அடைந்தால் செய்யும் அடிமைத்தொண்டு ஆகும்; ஆகவே பேறும் ஆகாது. இவ்வாறு இது நெறியின்கண்ணே செய்யவேண்டுவதாகவோ பேற்றினோடு தொடர்பு உடையதாகவோ ஆதல் இல்லை. அங்ஙனமாயின், இது பழைய சிற்றின்ப ஈடுபாடாகவே முடிந்து விடுமோ என்னில், பேறு இன்னது என்று அறுதியிட்டு அதனை அடைவதற்குரிய நெறியினைப் பற்றுகையாலே அவ்வாறு*

---

1. ப்ராபகாந்வயத்தில்.

இன்னது என்று நிஷ்கர்ஷித்து ப்ராபக ஸ்வீகாரம் பண்ணுகையாலே. அதாவது ப்ராப் யாபாஸங்களில் ருசி நிவ்ருத்தி பூர்வகமாகவிறே ப்ராப்ய ப்ரதிபத்தி. ஆகையாலே தூரதோ நிரஸ்தமிறே அது.

**"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய"** என்கிற இடத்தில் விஹித கர்மங் களும் நிஷித்த பரிஹாரார்த்தமாகச் செய்யுமவையும் எல்லாம், தர்மசப்த வாச்யமாகையாலே, இவையும் த்யாக விஷயமாய் அந்வயிக்கும் என்று அர்த்த ப்ராப்தமாய் பழைய பாபங்களையே சொல்லிற்றாய் வாராதோ? என்னில், வாராதிறே. உபாய ஸ்வரூபத்தாலும் அதிகாரி ஸ்வரூபத்தாலும், அப்படியே இருக்கிறது இதுவும். சரீர ஸமநந்தரத்திலே ப்ராப்ய ஸித்தியாய் இருக்கையாலும், இனி ஸமஸ்த கல்யாண குணாத்மகனை உபாயமாக வரிக்கையாலும், இவன்தான் விதி பரதந்த்ரனாய் ஸாதந புத்யா இங்கே அநுஷ்டிப்பது ஒன்று இல்லாமையாலும். ஜ்ஞாநம் பிறந்த பின்பு செய்யுமவை எல்லாம் தான் ஸ்வீகரித்த ப்ராப்யத்தோடும் ப்ராபகத்தோடும் சேர்ந்து அல்லது இராது. நினைத்தார் நினைத்தபடி மூலையடியே திரிகிற அஜ்ஞரிற் காட்டில் இவனுக்கொரு வ்யாவ்ருத்தி வேணுமிறே.

---

ஆகாது. அஃதாவது அடையத் தகுதி அல்லாதவற்றின்கண் விருப்பம் தவிர்தல் உண்டாகப் பின்பு உண்டாவது அன்றோ பேற்றினைப் பற்றிய அறிவு. ஆகையாலே மிகவும் முன்னரே அழிந்தது அச்சிற்றின்ப ஈடுபாடு.

இனி, "எல்லாத் தருமங்களையும் (நெறிகளையும்) விடுத்து என்னைப் பற்று" (கீதை 18:66) என்பது பெருமான் வாக்கு. 'எல்லாத் தருமங்களையும் விடுத்து' என்பதில் விதித்தன செய்தலும் கழுவாய் தேடுதலும் ஆகிய அனைத்தும் தருமம் என்னும் சொல்லின் பொருளாகையாலே, இவ்விதித்தன செய்தலும் கழுவாய் தேடு தலும் விடுதற்குரியனவாய் அமையும் என்று பொருள்பயந்து பழைய தீவினைக ளோடு சேர்ந்திருத்தலையே சொல்லியதாக வாராதோ? என்னில், வாராது. நெறி யாக இருக்கும் இறைவன் இயல்பையும், அந்நெறியினைக் கைக்கொள்ளும் இவன் இயல்பையும் நோக்கின் வாராது என்பது விளங்கும். அதற்குக் காரணம் உடல் கழிந்த அளவிலேயே இவனுக்குப் பேறு கிட்டுகிறது; பற்றும் இவன் அத்தகைய இயல்பினன். பற்றப்படும் ஆறாய் இருப்பவனோ என்னில், எல்லா நற்குணங் களுக்கும் இருப்பிடமானவன். அவனை இவன் பற்றியுள்ளான். மேலும் இவன் விதித்தன செய்தலையும், கழுவாய் தேடுதலையும் ஒரு விதிக்குக் கட்டுப்பட்ட வனாய் நின்று பேற்றினை அடைவிக்கும் ஆறு இவை என்னும் எண்ணத்துடன் செய்யவில்லை. அத்துடன், வெளிச்செறிப்பு[1] பிறந்ததும் இவன் செய்வது அடங்கலும் இவன் பற்றிய பேறாகிய தொண்டோடும் ஆறாகிய இறைவனோடும் பொருந்தியல்லது இராது. அங்ஙனமாயின், பாங்கானவற்றை நேர்தல் தீங்கான வற்றைத் தீர்தல் ஆகியவை எதற்காக வேண்டும் எனில், நினைத்தபடி மூலையடியே திரியும்[2] அறிவு கேடர்களைக் காட்டிலும் இறைவனையே ஆறாகவும் பேறாகவும் பற்றியுள்ள இவனுக்கு வேறுபாடு வேண்டுமன்றோ! அதற்காக அவ்வேறுபாடு தோற்ற இருக்கிறான்.

---

1. வெளிச்செறிப்பு - மெய்யறிவு; ஞானம். 2. மூலையடியே திரிதல் - முறையின்றித் திரிதல்.

இன்று நாளை நீர் வரும் ஆறு அங்கே இங்கே சினையாறுபட்டுக் காட்டுமாப் போலே மேல்தான் "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:" என்றும் "அந்தமில் பேரின்பத்து அடியரோடு இருந்தமை" என்றும் அவர்களோடு கூடி அநுபவிக்கும் அத்தைப் பேறாகச் சொல்லுகையாலே இவனுக்கு இது சரம சரீர மான பின்பு இவை இங்கே பிறக்கக் காண வேணுமிறே. அவையாகிறவைதான் எவை என்னில், அபாகவதர்களோடு பொருந்தாமையும் பாகவதர்களை ஒழியச் செல்லாமையுமிறே. அவை இரண்டும் தமக்கு உண்டானபடியை அருளிச்செய் கிறார். பார்யைக்கு அறிவு பிறக்கப் பிறக்க பர்த்தாவின்பக்கல் பாவபந்தம் உண்டாம். பர்த்ரந்தர பரிக்ரஹம் பண்ணுமதிறே இவள் அவனுக்கு ஆகாது ஒழிகையாகிறது. "திருவடி தன்நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்னா நின்றதிறே, ப்ரபந்நருடைய லக்ஷணம் சொல்லுகிற போது. இப்படி ஸர்வேஶ்வரன் உத்தேஶ்யன் என்னும் ஜ்ஞாநம் பிறக்கப் பிறக்க பாகவதர்பக்கல் பாவபந்தம் உண்டாகலாம். இந்த

---

இன்றைக்கோ நாளைக்கோ நீர் வருகின்ற ஆறு அங்கும் இங்கும் சினையாறு பட்டுக் காட்டுவது[1] போலத் தமக்குத் திருநாட்டில் கிடைக்க இருக்கும் பேற்றினை இங்கே சினையாறுபட்டுக் காட்டுகிறார். "எத்திருநாட்டில் பழையவர்களாய் விளங்கும் அமரர்கள் உள்ளனரோ" (பு. ஸூ.) என்றும், "அந்தமில் பேரின்பத்து அடியரோடு இருந்தமை" (தி. வா. மொ. 10:9:11) என்றும் இறையடி யார்களோடு கூடிப் பழகுவதனைப் பேறாகச் சொல்லுவர்; இவருக்கு இஃது இறுதி யாக எடுத்த உடம்பு ஆகையாலே அவற்றை இவ்வுலகில் பிறக்கக் காண வேண்டும் அல்லவா! எவற்றை என்னில், அடியார் அல்லாதவரோடு பொருந்தாமையும் அடியவர்களை ஒழியச் செல்லாமையும்[2] ஆகிய அத்தன்மைகளை என்க. அவை இரண்டும் தமக்கு உண்டானபடியைச் சொல்லுகிறார். அவ்இரண்டனுள் அடியவர் அல்லாதவரோடு பொருந்தாமையை முந்துறச் சொல்வது எதனாலே என்னில் அதன் இன்றியமையாமை கருதி ஆகும். தன் கணவனைச் சரியாக அறிந்து கொள்ளாத மனைவிக்கு அவனைப் பற்றிய அறிவு பிறக்கப் பிறக்க அவனிடத்தில் அன்புப் பிணைப்புத் தோன்றும். ஆனால் அவள் பிறிது ஒருவனைச் சார்பாக ஏற்றுக் கொண்டாள் எனில் பின்பு தன் கணவனுக்குத் தகுந்தவள் ஆகாள். அது போல அடியார்களை அறிந்து கொள்ளாவிட்டாலும் அடியார் அல்லாதாரைத் தமக்குச் சார்பாகக் கொள்ளாதிருப்பின் பின்பு அடியார்பால் அன்பு பெருக வாய்ப்பு உண்டு. இக்காரணம் கருதி அதனை முதலில் கூறினார்.

> " திறம்பேன்மின் கண்டீர்; திருவடிதன் நாமம்
> மறந்தும் புறந்தொழா மாந்தர் - இறைஞ்சியும்
> சாதுவராய்ப் போதுமின்கள் என்றான் நமனும்தன்
> தூதுவரைக் கூவிச் செவிக்கு" (நான். தி. 68)

என்று திருமழிசைப்பிரானும் இறையடியைத் தஞ்சமாகப் பற்றினார் இயல்பு சொல்லும்போது புறந்தொழாத தன்மையைக் குறித்துச்செல்வது கருதத்தக்கது. மேலும், பெருமான் நமக்குக் கொள்ளத்தக்கவன் என்னும் தெளிவு பிறக்கப் பிறக்க அடியாரிடத்து ஈடுபாடு உண்டாகும். இந்தத் தெளிவு பிறப்பதற்கு விட

---

1. சினையாறுபட்டுக் காட்டுதல் - ஆற்றில் வெள்ளம் வருவதற்கு முன்னே நீர் பொசிந்து வெள்ளம் வரப்போவதனைக் காட்டுதல். 2. செல்லாமை - வாழ மாட்டாமை.

ஜ்ஞாநார்த்தமாக விட வேணுமிறே அபாகவத ஸம்பந்தம். இனி, பாகவதர் ஆகிறார் ப்ரதமதசையில் ஈஶ்வரனுடைய உபாய பாவத்தை அறிவித்து, அவ்வழியாலே புருஷகாரபூதராமவர்கள். இவன்தான் சேதநனாய் உபகாரம் கொண்டவன்[1]. ஆகையாலே க்ருதஜ்ஞனாய் இருக்கக்கடவன். இனி, சரம தசையில் வந்தால் ப்ராப்யத்தில் எல்லை இவர்களாகையாலே, அவன் தன்னோபாதியும் உத்தேஶ்யமாய்[2] இருக்கக் கடவர். இனி நடுவுபட்ட நாள் இவனுக்கு, "**போதயந்த: பரஸ்பரம்**" பண்ணுகைக்கு உடலாய் இருப்பார்கள். ஆகையாலே, ஸர்வாவஸ்த்தைகளிலும் இவர்கள் உத்தேஶ்யம் என்னும் இடம் சொல்லிற்று.

"**ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப:**" இத்யாதிகளாலே ஆறுவகையாய் இருக்கும் சரணாகதி என்று சொல்லாநின்றது. "**அஹம் அஸ்ம்யபராதாநாம் ஆலயோ அகிஞ்சநோகதி: த்வமேவோபாயபூதோ மே பவ**" என்று தன் ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டு நீயே உபாயமாக வேணும் என்று அபேக்ஷிக்குமத்தைச் சரணாகதியாகச் சொல்லாநின்றது. இனி இதில் ஒன்றைவிட்டு ஒன்றை ஸ்வீகரிக்கும் அன்று மற்றையதுக்கு அப்ராமாண்யம் ஸித்திக்குமாய் இருந்தது. ஆனால் இவை இரண்டும்[3] அவிருத்தமாக நயிக்கும்படி எங்ஙனே என்னில், "**த்வமேவ**" என்கிற

---

*வேண்டுவது அடியார் அல்லாதார் இணக்கம். இனி, இறை அடியார்கள் முதல் நிலையில் இறைவனது நெறியாய் இருக்கும் தன்மையை அறிவித்து அவ்வழியாலே இறைவனோடு இவனைச் சேர்த்துவைப்பவர்களாக இருக்கின்றனர். அவர்களிடம் இவன் உதவி பெற்றவனாகையாலே நன்றி உடையவனாய் இருத்தற்கு உரியவன். இனி, முடிந்த நிலையில் வந்தால் பேற்றின் எல்லை நிலமாக இருப்பர்; ஆகையால் அவ்இறைவனைப் போலக் கொள்ளத்தக்கவர் ஆவர். இனி இடைப்பட்ட காலத்தில் இவனுக்கு,* "**இறைவனைப்பற்றி உசாவித் தமக்குள் ஒருவரை ஒருவர் உணர்த்திக்கொள்ள**" *(கீதை. 10:9) உடலாய்[4] இருப்பர். ஆகையால், இவ்அடியார்கள் எல்லா நிலைகளிலும் கொள்ளத்தக்கவர்கள் என்னும் இடம் சொல்லப்பட்டது.*

*"பாங்கானவற்றை நேர்தல் தீங்கானவற்றைத் தீர்தல்" (அஹி. ஸம். 37:27) முதலிய ஆறு உறுப்புகளை உடையதாய் இருப்பது அடைக்கலநெறி என்பர்.* "**யான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாக உள்ளேன்; என்னைக் காத்துக்கொள்ளக் கைம்முதல் அற்றவனாக இருக்கிறேன்; உன்னை ஒழிய வேறு புகல் இல்லாதவனாக இருக்கிறேன்; நீயே எனக்கு வழியாக அமைந்திடு**" *(அஹி. ஸம். 37:30) என்று தன் வெறுமையை முன்னிட்டு நீயே ஆறாக வேண்டும் என்று விரும்புவதனையே அடைக்கல நெறியாகச் சொல்வர். இனி இவ்இரண்டனுள் ஒன்றை விடுத்து மற்றொன்றை ஏற்கும்போது விடப்பட்ட ஒன்று தவறாகப் போதல் வேண்டும். ஆனால் இவை இரண்டும் முரண்பாடு இன்றிச் செல்கின்றன. அஃது எவ்வாறு என்றால், 'நீயே' என்று சொல்வதனாலேயே வேறு வழிகளை வேண்டாமை தோற்றுகிறது; ஆகையால், 'யான் குற்றங்களுக்கு' என்று*

---

1. இதன் பின்னர், "இவ் எடத்தில் கொடவர், பரகாலதாஸர் துடிக்க மண்கொடு வர என்று போகவிட அவர் பட்டபாடு கண்டாயே என்று உருத்தோறும் அருளிச்செய்வர்" என்னும் தொடர் ஒரு சுவடியில் மிகுதியாகக் காணப்படுகிறது. 2. உத்தேஶ்யராய். 3. இந்த ரெண்டும்.
4. உடல் - கருவி.

இடத்தாலே உபாயாந்தர நைரபேக்ஷ்யம் தோற்றி இருக்கையாலே சரணாகதி யினுடைய ஸ்வரூபம் சொல்லுகிறது அந்த ஶ்லோகத்தாலே. அச்சரணாகதி புக்க இடத்தே புகக்கடவதாய், சரணாகதனானவனுக்கு ஸம்பாவித ஸ்வபாவங்களைச் சொல்லுகிறது இந்த ஶ்லோகத்தாலே. சரணாகதியினுடைய ஸ்வரூபத்தைப் பார்த் தால் வேறு ஒன்றைப் பொறாதபடியாய் இருக்கும்; இனி ஒதுங்கின ஆஶ்ரயத்தைப் பார்த்தால் இஸ்ஸ்வபாவங்களோடு கூடியல்லது இராது. "ஷட்விதா சரணாகதி:" என்று கொண்டு இக்குணங்களைச் சரணாகதிக்கு அங்கமாகச் சொல்லாநிற்க இவனுக்கு ஸம்பாவித ஸ்வபாவம் என்னும்படி எங்ஙனே என்னில், "ப்ரார்த்த நாமதி: சரணாகதி:" என்கிற இடத்திலே ப்ரார்த்தநாபுத்தி இச்சேதநன் கையிலே கிடக்கச்செய்தே எங்ஙனே சரணாகதி லக்ஷண விஷயமாய்க் கிடக்கிறபடி.

"ஆநுகூல்யஸ்ய" என்கிற ஶ்லோகம் விதிபரதந்த்ரமாய்ச் செய்யும் அன்று பலாபேக்ஷை இல்லாதபோது தவிரலுமாய் இருக்கும். ஸ்வரூப நிவேஶியாம் அன்று செய்யாதபோது ஸ்வரூபஹாநியே ஸித்திக்குமிறே. ஸ்வர்க்ககாமனை இல்லாதபோது

---

தொடங்கும் செய்யுள் அடைக்கல நெறியின் இயல்பு சொல்கிறது. அடைக்கலம் புகுந்த இறைவனிடத்தில் சென்று சேர்வதாய்த் தஞ்சம் புகுந்தவனுக்கு உண்டான இயல்புகளைச் சொல்லுகிறது, "பாங்கானவற்றை நேர்தல்" என்று தொடங்கும் செய்யுள். அடைக்கல நெறியின் இயல்பைப் பார்த்தால் வேறு ஒன்றை வழியாகக் கொள்வதனைப் பொறாததாய் இருக்கும்; இனி ஒதுங்கின இறைவனாகிய இடத்தைப் பார்த்தால் பாங்கானவற்றை நேர்தல் தீங்கானவற்றைத் தீர்தல் என்பது தொடக்கமான இத்தன்மைகளோடு கூடி அன்றி இருத்தற்கு இயலாது. "அடைக்கலநெறி ஆறு உறுப்புகளைக் கொண்டது" (அஹி. ஸம். 37:27, 28) என்று இப்பண்புகளை அடைக்கல நெறிக்கு உறுப்புகளாகச் சொல்லும் நிலையில் இவனுக்கு உண்டாகக் கூடிய தன்மைகள் என்று அதற்கு விளக்கம் சொல்வது தகுமோ என்னில், தகும். " 'நீயே எனக்கு வழியாக அமைந்திடு' என்று இறைஞ்சும் அறிவே அடைக்கலம் புகுவது ஆகும்" (அஹி. ஸம். 37:30) என்று அடைக்கல நெறியின் இலக்கணம் சொல்லப்படுகிறது. இதில் இறைவனை இறைஞ்சும் அறிவு என்பது இம்மனிதனிடம் உண்டாகும் தன்மை. இம்மனிதனிடம் உண்டாகும் தன்மையே அடைக்கல நெறியின் இலக்கணமாய்ச் சொல்லப்பெறுதல் காணலாம். இப்படி அடைக்கல நெறியையே மனிதனிடம் உண்டாகும் தன்மை என்று சொல்லும்போது, அடைக்கல நெறியின் உறுப்பாகச் சொல்லப்பெறும் பாங்கான வற்றை நேர்தல் தீங்கானவற்றைத் தீர்தல் என்பவற்றை உண்டாகக் கூடிய தன்மைகளாகச் சொல்வது பிழையாகாது.

விதிக்கப்பட்டது வழி (ஆறு) என்பது தருக்க நூலார் கொள்கை. "பாங்கான வற்றை நேர்தல்" என்று தொடங்கும் செய்யுளில் விதிக்கப்பட்ட இத்தஞ்சம் புகுதல் ஆறு ஆகாதோ என்னில், ஆகாது. ஏனெனில், இதனை விதிவழிநின்று செய்தானா கில் இதன் பயனில் விருப்பம் இல்லாதபோது இதனைத் தவிரலுமாய் இருக்கும். எனவே, இதனை விதிக்கப்பட்டது என்று கருதிக் கைக்கொள்ளாமல் உயிர்க்கு அடுத்த பண்பு என்று கருதியே கைக்கொள்ள வேண்டும். அங்ஙனம் கொள்ளும் போது, இதனைச் செய்யாவிடில் உயிர் இயற்கைக்கு நிறக்கேடே ஆகும்.

ஜ்யோதிஷ்டோமம் தவிரலாய் இருக்கும். அங்ஙனே செய்ய ஒண்ணாதபடியாய்[1] இருக்குமிறே இத்தலையால் ஒரு பலம் சொல்லாத நித்யாநுஷ்ட்டாந விதிக்கும்.

---

துறக்கப் பேறு கருதி இயற்றுவது சோதிட்டோம வேள்வி. துறக்கத்தில் விழைவு இல்லாவிட்டால் அவ்வேள்வி செய்தலைத் தவிரலாம். அதனால் உயிர் இயற்கைக்கு நிறக்கேடு இல்லை. இச்சோதிட்டோம வேள்வி போன்றது அன்று தஞ்சம் புகுதல். இது நாள் ஒழுக்கம் (அன்றாடம் செய்யவேண்டிய சந்தி வழிபாடு முதலாய கடமைகள்) போன்றது. இந்நாள் ஒழுக்கம் இயற்றுவதால் பயன் உண்டாவதில்லை. ஆனால் செய்யாவழி நிறக்கேடாம். அதுபோலத் தஞ்சம் புகுதலும் செய்யாவழி உயிர் இயற்கைக்கு நிறக்கேடாகும்.

## 151

**நண்ணாத வாள்அவுணர் இடைப்புக்கு வானவரைப்**
**பெண்ணாகி அமுதூட்டும் பெருமானார் மருவினிய**
**தண்ணார்ந்த கடல்மல்லைத் தலசயனத் துறைவாரை**
**எண்ணாதே இருப்பாரை இறைப்பொழுதும் எண்ணோமே.**

**ப. ரை :** **நண்ணாத வாள் அவுணர்இடை** - பொருந்தாத வாளையுடைய அசுரர்கள் நடுவில், **பெண் ஆகிப் புக்கு** - மோகினி என்னும் பெண்வடிவம் கொண்டு நுழைந்து, **வானவரை அமுது ஊட்டும் பெருமானாரை** - தேவர்களுக்கு அமுதத்தை உண்பிக்கும் பெருமை உடையவரை, **மருவ இனிய** - பொருந்தி உறைவதற்குப் பாங்கான, **தண் ஆர்ந்த** - குளிர்ச்சி நிறைந்த, **கடல்மல்லைத் தலசயனத்து உறைவாரை** - கடலைச் சார்ந்த மாமல்லபுரத்தில் தலசயனம் என்னும் இடத்தில் பள்ளி கொண்டிருப்பவரை, **எண்ணாது இருப்பாரை** - நினையாமல் இருப்பவர்களை, **இறைப் பொழுதும் எண்ணோம்** - சிறிது போதும் நினைக்க மாட்டோம்.

**சி. கு :** வானவரை என்பது வேற்றுமை மயக்கம்; நான்காம் வேற்றுமையில் இரண்டன் உருபு மயங்கியது. உறைவாரை என்பதில் உள்ள ஐகாரத்தைப் பெருமானார் என்பதனோடுங் கூட்டுக. மருவினிய - மருவ இனிய; விகாரத்தால் தொகுத்தல்; அகரம் தொக்கது.

இத்திருமொழி தரவு கொச்சகக் கலிப்பா.

**வியா : முதற் பாட்டு : நண்ணாத இத்யாதி** - ப்ரயோஜநாந்தரபரராய்த் தன்னை உகவாதே இருப்பார்க்குங்கூட அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணு

---

**வி :** முதற் பாட்டு : பிறபயன் உகந்து தன்னை உகவாதே இருப்பார்க்கும்கூட அவர் விழைந்தனவற்றை வழங்கும் பெருமான், "நம்மை

---

1. உண்ணாதபடியாய்.

**151.** 3 : 1 கண்ணார்ந்த. 4 : 4 எண்ணாமே.

மவன், "நம்மை உகப்பாரையும் கிடைக்கவற்றோ" என்று அவஸர ப்ரதீக்ஷனாய் இங்கே வந்து கிடக்கிற இந்நீர்மையை அநுஸந்தியாதே புறம்பே உண்டு உடுத்துப் போது போக்குவாரை ஒரு வஸ்துவாக நினைத்திரோம் என்கிறார்.

**நண்ணாத** - ஸ்ரீவிதுரர் பட்டது படுகிறார் ஆயிற்று நடுவே இவர். "ஸம்ஸ்ப்ருசந் நாஸநம் சௌரேர் மஹாமதிர் உபாவிசத்" என்றறிறே. கடல் கலங்கினாப் போலே கலங்கும் போலே காணும் மஹாமதிகள் என்று. துர்யோதந க்ருஹத்திலே எழுந்தருளினபோது பொய்யாஸநமும் வஞ்சநமுமாய்ப் புகுந்த ப்ரமா தத்தை நினைத்து அஞ்சினபடியாலே, "நாமும் ஒரு குலையில் காய் அன்றோ" நாமும் ஸம்ஸாரிகளிலே ஒருவரான பின்பு நம்மைத்தான் விஶ்வஸிக்க ஒண்ணுமோ"[1] என்று தம்மை அதிசங்கை பண்ணினபடியாலே தாம் படுத்த படுக்கையையும் தடவிப் பார்த்தாரிறே. பிள்ளை உறங்காவில்லிதாஸர், பெருமாள் எழுந்தருளப் புக்கால் சொட்டைமுட்டிலே[2] கையை வைத்துக்கொண்டு ஸேவிப்பராம், ஒருவர் இடறுதல் பேர்தல் செய்தது ஆகில் தம்மை முடித்துக் கொள்வராக. அத்தை அநுஸந்தித்து நம் முதலிகள் இவரை மஹாமதிகள் என்றாம் அழைப்பது. கலங்குகை போலே காணும் மஹாமதிகள் ஆவது. அஸ்த்தாநே பயசங்கை பண்ணுவார்க்கு எல்லாம் பேராய்க்

---

உகப்பாரும் கிட்டுவது உண்டோ?" என்று செவ்வி பார்த்திருப்பவனாய் இங்கே வந்து கிடக்கிறான். அவனுடைய இந்நீர்மையை எண்ணாமல் புறம்பே உண்டு உடுத்துப் போது போக்குவாரை ஒரு பொருளாக நினைத்திரோம் என்கிறார்.

**நண்ணாத** - சீர்மிகு விதுரர் பட்ட கலக்கத்தை நடுவே படுகிறார் இவ் ஆழ்வார். "அந்தப் பேரறிவாளரான விதுரர் கண்ணனுக்கு இடப்பட்ட இருக்கையைத் தொட்டுப் பார்த்தார்" (*பாரத. உத். 29:367*) என்கிறது பாரதம். பேரறிவாளர் என்போர் கடல் கலங்கினாற் போலே கலங்குவர் போலும். துரியோதனன் அரண்மனையில் எழுந்தருளினபோது பொய்யாசனமும் வஞ்சகமுமாய்ப் புகுந்த கேட்டை நினைத்து அஞ்சினார் விதுரர்; அவ் அச்சத்தினால், "நாமும் ஒரு குலையில் இருக்கும் காய்தானே? நாமும் நாட்டவருள் ஒருவரான பின்பு நம்மையே நம்ப முடியுமோ?" என்று தம்மைக் குறித்துத் தாமே ஐயங் கொண்டார்; அதனாலே அவர், தாம் இட்ட படுக்கையையும் தடவிப் பார்ப்பார் ஆயினார். பிள்ளை உறங்காவில்லிதாசர் திருவரங்கத்தில் பெருமான் உலா வர எழுந்தருளப் புகுந்தால் சொட்டை முட்டிலே[3] கையை வைத்துக் கொண்டு வணங்குவாராம். இறைவனை எழுந்தருளப்பண்ணி வரும் பணியாளர் கொத்தில் ஒருவர் இடறி விழுந்தாலும், அங்கிருந்து பெயர்ந்தாலும் தம் உயிரைத் தாமே போக்கிக்கொள்வதற்காக அப்படிச் செய்வாராம். அதனைக் கருதி நம் முதலிகள்[4] அவரைப் பேரறிவாளர் என்றே அழைப்பார்களாம். இப்படி இறைவனுக்கு என் வருகிறதோ என்று கலங்குவதுதான் பேரறிவு போலும்! அஞ்ச வேண்டாத இடத்தில் என் வருகிறதோ என்று கலங்குவார்க்கு எல்லாம் பேரறிவாளர்

---

1. வேணுமோ. 2. முட்டியிலே.
3. சொட்டை முட்டு - வாளின் கைப்பிடி. 4. முதலிகள் - தலைவர்கள்; பெருமக்கள்.

கொள்ளீர் மஹாமதிகள் என்று. **நண்ணாத** - பகவத் விஷயத்திலே த்வேஷம் ப்ரக்ருதியாய் ஆயிற்று இருப்பது. மநுஷ்ய ஜந்மமாய் இருக்கச்செய்தே அஸுராவேசத்தாலே பொருந்தாதே இருப்பார் உண்டு. அங்ஙன் அன்றிக்கே பிறப்பே ஆஸுர ப்ரக்ருதிகளாய் இருக்குமவர்கள். அதுக்கு மேலே ஸாயுதருமாய் இருக்குமவர்கள் நடுவே போய்ப் புக்கு. இப்படி போய்ப் புகுகிறது ஒரு ப்ரஹ்லாதன் போல்வார்க்கோ என்னில், **வானவரை** - அம்ருதம் கொண்ட அநந்தரம், "உன்னோபாதி நாங்களும் நித்யர்" என்று ஒக்க அபிமாநித்து இருக்கும்படியான தேவர்களுக்காக ஆயிற்று. **பெண் ஆகி** - புருஷோத்தமனான தன்படிக்குச்[1] சேராத ஸ்த்ரீவேஷத்தை ஏறட்டுக்கொண்டு. **அமுது ஊட்டும்** - அவன்தன்னை உகந்து, "நீ எங்களுக்கு வேணும்" என்கை அன்றிக்கே, "உப்புச்சாறு அமையும்" என்று இருப்பார்க்கும் அத்தைக் கொடுக்குமவன் ஆயிற்று. அம்ருத பாநத்திலே ஆயிற்று அவர்களுக்கு அந்வயம். கடல் கடைகை துடக்கமான வ்யாபாரங்களை அடையத் தன்தலையிலே ஏறட்டுக்கொண்டு. **பெருமானார்** - உறங்குகிற ப்ரஜையை எழுப்பி ஊட்டும் தாயைப் போலே. இதென்ன நிருபாதிக ஸம்பந்தந்தான்! **மருவினிய** - ரஸ வஸ்துவை ஆதரிப்பாரைப் பெற்றது. **"ஸர்வ ரஸ:"** என்கிற நம்மையும் ஆதரிப்பாரைக் கிடைக்குமோ என்று படுகாடு கிடந்தான் ஆயிற்று. **மருவினிய இத்யாதி** - மருவ இனிய தேசமாய் ஶ்ரமஹரதை விஞ்சி இருப்பதாய்ச் சிறு திவலை திருமேனியிலே வந்து ஸ்பர்சிக்கும்படியாய் இருக்கிற திருக்

---

என்பது பெயராகக் கொள்க. **நண்ணாத வாள் அவுணர்இடைப் புக்கு** - இறைவனிடத்தே வெறுப்பு இடையில் வந்தது அல்லாமல் பிறவித் தன்மையாகவே இருக்கிறது. மனிதப் பிறப்பாய், அவுணர் ஏறி நிற்பதாலே இறைவனோடு பொருந்தாமல் இருப்பார் உண்டு. அவ்வாறு அல்லாமல் பிறப்பே அவுணப் பிறப்பாய் இருப்பவர்கள். அதற்கு மேலே, படையினைக் கைக்கொண்டவராய் இருப்பவர்கள். அவர்கள் நடுவே போய்ப் புக்கு. இப்படிப் போய்ப் புகுவது பிரகலாதன் போன்ற ஒருவர் பொருட்டோ என்னில், **வானவரை** - அமுதம் கொண்ட பின்பு, "உன்னைப் போல நாங்களும் உலப்பிலாதவர்" என்று ஒக்க இறுமாந்திருக்கும் தேவர்களுக்காக. **பெண் ஆகி** - ஆடவர் திலகமான தன் இயல்புக்குச் சேராத பெண் வேடத்தை ஏறட்டுக்கொண்டு. **அமுது ஊட்டும் பெருமானார்** - அவன்தன்னை உகந்து, "நீ எங்களுக்கு வேண்டும்" என்று சொல்லாமல், "உப்புச்சாறு"[2] அமையும்"[3] என்று இருப்பார்க்கும் அதனைக் கொடுப்பவன். அமுதம் மாந்துவதிலேயே அவர்கள் பங்கேற்பது. கடல் கடைதல் தொடக்கமான செயல்களை எல்லாம் தன்தலையிலே ஏறட்டுக்கொண்டு. உறங்குகின்ற பிள்ளையை எழுப்பி ஊட்டும் தாயைப் போலே உதவுபவன். என்னே இயற்கையான உறவு இது! **மருவினிய தண்ணார்ந்த கடல் மல்லைத் தலசயனத்து உறைவாரை** - சுவைப் பொருளைப் போற்றுவார் கிடைக்கப் பெற்றனர் என்பது இத்தொடரின் கருத்து. "எல்லாச் சுவைகளாகவும் இருப்பவன்" *(சாந். 3:14:2)* என்னும் நம்மையும் விரும்பி ஏற்றுக்கொள்பவர் கிடைப்பரோ? என்று படுகாடு கிடந்தான்[4]. மருவ இனிய இடமாய் அயர்வு அகற்றும் தன்மை விஞ்சி இருப்பதாய்ச் சிறு திவலை திருமேனியிலே வந்து

---

1. தன் வடிவுக்குச்.
2. உப்புச்சாறு - கடலில் தோன்றும் அமுதம். 3. அமையும் - போதும். 4. மருவினிய என்பது தலசயனத்து உறைவாரைச் சேர்வதாகக்கொண்டு இவ்உரை வரையப்பட்டுள்ளது.

கடல்மல்லையிலே ஆஶ்ரிதனை உகந்து ஸ்தலசயநத்திலே நித்ய வாஸம் பண்ணுகிற வனை. **எண்ணாதே** - நித்ய ஸூரிகள் நடுவே இருக்கக்கடவ வஸ்து இப்படி ஸம்ஸாரத்திலே புகுந்து தரைக்கிடை கிடப்பதே! இதொரு[1] நீர்மை இருக்கும்படியே!'' என்று அநவரதம் பாவித்தல் சொல்லுதல் செய்கை ஆயிற்றுச் சேதநர்க்குச் செய்ய அடுப்பது; இது செய்யாதே இருப்பாரை. அவனிடையாட்டம்கொண்டு கார்யம் அற்று கேவல தேஹ போஷண பரராய் இருப்பாரை. **இறைப் பொழுதும் எண்ணோமே** - "எண்ணப் பெற்றிலோம்'' என்ற அநுதாபமும் இன்றிக்கே இருப் பாரை அவஸ்துக்களை எண்ணும்போது ஒரு கால விசேஷம் உண்டிறே, வஸ்து ப்ரதியோகியாக எண்ணுமது உண்டிறே, அவ்வளவிலும் எண்ணோம் என்கிறார்.

**இரண்டாவது வியா :** இதில், முதற்பாட்டில் அபாகவதரோடு பொருந்தாமை சொல்லுகிறது. இவை இரண்டும்[2] உத்தேஶ்யமானால் க்ரமவிவக்ஷைக்குக் கருத்து என் என்னில், ஆநுகூல்யத்துக்கு அவதி இல்லாமையாலே ஸங்கல்பமே அமைந்தது; இதில் முதலடி இட்டான் ஆவதும் இஸ்ஸ்வபாவம் உண்டானால் ஆகையாலே

---

*விழுவதாய் இருக்கும் திருக்கடல் மல்லையிலே புண்டரீகன்[3] என்னும் அடியவனைப் பெற்று உகந்து நிலப்பாயலில் நிலையாக உறைகிறான்; அவனை.* **எண்ணாதே இருப்பாரை** - *"அயர்வறும் அமரர்கள் நடுவே இருத்தற்கு உரிய பொருள் இப்படி நில உலகிலே புகுந்து தரைக்கிடை கிடப்பதே! என்னே, இந் நீர்மை இருக்கும் தன்மை!'' என்று இடையறாது நினைத்தலும் சொல்லுதலுமே மானிடர்க்குச் செய்ய அடுப்பன; இவற்றைச் செய்யாது இருப்பாரை. அவனைக் கொண்டு பயன்பெறுதல் அற்று உடலையே வளர்ப்பதில் கருத்துடையராய் இருப்பாரை.* **இறைப்பொழுதும் எண்ணோமே** - *"பெருமானைப்பற்றி எண்ணாமல் இருக்கிறோமே'' என்னும் கழிவிரக்கமும் இல்லாமல் இருப்பாரைப் பொருள்களைக் கணக்கிடும்போது, இவை இவை வைத்துக்கொள்ளத்தக்க பொருள்கள் இவை இவை கழிக்கத்தக்க பொருள்கள் என்று எண்ணிப்பார்க்கும் வழக்கம் உண்டு. அப்படி எண்ணுங்கால் கொள்ளத்தக்க பொருள்களுக்கு மறுதலையாகத் தள்ளத்தக்க பொருள்களையும் சேர்த்து நினைத்தல் நிகழும் அன்றோ? அப்படிக் கூட அவர்களை எண்ணோம் என்கிறார்.*

**இரண்டாவது வி : முதற் பாட்டு :** *இதில் அடியவர் அல்லாதவரோடு பொருந் தாமை சொல்லுகிறது. அடியவர் அல்லாதவரோடு பொருந்தாமையும், அடிய வரோடு பொருந்துகையும் ஆகிய இவை இரண்டும் கொள்ளத்தக்கன என்றால் அடியவர் அல்லாதவரோடு பொருந்தாமையை முற்படக் கூறுவதன் கருத்து யாது என்னில், பாங்கான செயல்களுக்கு எல்லை இல்லாமையாலே நினைவே அமைந் தது; இவ்இறைவன்திறத்தில் முதலடி எடுத்துவைத்தானாக ஆவதும் அடியவர் அல்லாதவரோடு பொருந்தாமை ஆகிய இத்தன்மை உண்டானாலேயே ஆகும்.*

---

1. இதென்ன். 2. ரெண்டும்.

3. புண்டரீகன் என்பவர் பெரும் இறை ஆர்வலர்; கடலின் இக்கரையில் ஒரு பெரிய தோட்டம் அமைத்து அதில் சிறந்த மலர்களை உண்டாக்கி அவற்றைத் தொடுத்து எடுத்துக்கொண்டு போய்ப் பெருமானுக்குப் பணிமாற விழைந்தார். கடலைக் கடக்க வேண்டி இருந்தமையால் அதனைக் கையால் இறைத்து வெறும் தரையாக்கி நடந்தே செல்லத் துணிந்தார். கடலை இறைக்கத் தொடங்கினார். பெருமான் அவரது வெள்ளமிடும் அன்பைக் கண்டு வியந்து உவந்து தானே கடுநடையிட்டுவந்து கடற்கரையில் அவரது தோப்பில் தரைக்கிடை கிடந்து அவர் செய்த வழிபாடுகளை ஏற்றருளினான் என்பது புராண வரலாறு.

இத்தை முந்துறச் சொல்லுகிறது. விரோதி த்யாக பூர்வமாகவிறே உபாய ஸ்வீகாரத்தை விதிக்கிறது. **"பரித்யக்தா மயா லங்கா"** என்றும், **"த்யக்த்வா புத்ராம்ச தாராம்ச"** என்றுமிறே **"ராகவம் சரணம் கத:"** என்கிறது. தன்னைப் பேணாதே ப்ரயோஜநாந்தரபரருக்காக உடம்பு நோவக் கடல்கடைந்து அமுதத்தைக் கொடுத்த[1] ஸர்வேஸ்வரன், "அந்த அம்ருதத்தோபாதியாகிலும் நம்மை விரும்புவார் சிலரைக் கிடைக்கவற்றோ?" என்று அவஸர ப்ரதீக்ஷனாய்க்கொண்டு சாய்ந்தருள, அவனை விட்டுப் புறம்பே போதுபோக்குகிறவர்களை நான் ஒருவராக[2] புத்தி பண்ணி இரேன் என்கிறார்.

**நண்ணாத வாள் அவுணர்இடைப் புக்கு** - ஆஸுர ப்ரக்ருதிகள் நடுவே ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்காகப் போய்ப்புக்கு. ஸர்வேஸ்வரன் தேவாஸுர விபாகம் பண்ணுகிற இடத்தில் இவ்இரண்டு ஆகாரமும் எங்கும் ஒக்க உண்டாம்படி பண்ணினான் ஆயிற்று. அப்போது அர்ஜுநன், "நான் எக்கோடி யிலே ஆகிறேனோ" என்று சோகிக்க, **"மாஸுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ"** என்று "உனக்கு என்? நீ ஸத் ப்ரக்ருதி அல்லையோ?" என்றானிறே. மநுஷ்யராய் இருந்துவைத்து ஆஸுர ப்ரக்ருதிகளாய் இருப்பார் கோடியில் அன்றிக்கே இவர்களுடைய ஆஸுரத்வம் ஜந்ம ப்ரப்ருதி உண்டாயிருக்கை. க்ஷத்ரிய ஜந்மத்திலே பிறந்துவைத்து உக்ரஸேநன் நிலையல்லவாம்படியிறே

---

*ஆதலின் இதனை முந்துறச் சொல்லுகிறது. பகையானவற்றை விலக்கிய பின்பே நெறியினைப் பற்றுவது வேண்டும் என்பது முறைமை.* **"என்னால் இலங்கை அரசு கைவிடப்பட்டது"** *(ரா. யு. 19:6) என்றும்,* **"நான் பிள்ளைகளையும் மனைவியை யும் விட்டு"** *(ரா. யு. 17:4) என்றும் சொல்லிப் பின்பு அன்றோ,* **"இராமனைத் தஞ்சம் புகுந்தேன்"** *(ரா. யு. 17:4) என்கிறான் வீடணன். தன்னை விரும்பாமல் பிறிது ஒரு பயன் விரும்பியவர்களுக்காக உடம்பு நோவக் கடல் கடைந்து அமுதத்தைக் கொடுத்த பெருமான், "அந்த அமுதத்தை விரும்புவது போலவேனும் நம்மை விரும்புவார் சிலர் கிட்டுவார்களோ?" என்று அக்காலத்தை எதிர்நோக்கிக் கொண்டு சாய்ந்தருள, அவனை விட்டுப் புறம்பே போதுபோக்குகிறவர்களை நான் ஒருவராக மதிப்பேன் அல்லேன் என்கிறார்.*

**நண்ணாத வாள் அவுணர்இடைப் புக்கு** - *அவுணர்கள் நடுவே பிற பயனில் கருத்து உடையரான தேவர்களுக்காகப் போய்ப் புக்கு. பெருமான் தேவர்கள் அவுணர்கள் ஆகிய இரு பிரிவினரையும் படைக்கும் இடத்தில் இவ்இரு திறத்தாரும் எங்கும் ஒக்க இருக்குமாறு பண்ணினான். தேவர், மனிதர் முதலான எல்லாப் பிறவிகளிலும் தேவரும் அவுணரும் இருக்கும்படி செய்தான். இதைக் கீதையில் கண்ணன் சொல்லும்போது அருச்சுனன், "நான் எப்பிரிவில் அடங்குவேன்?" என்று வருந்தினான். அவனை நோக்கி,* **"பாண்டவனே, வருந்தாதே நீ தேவர் செல்வத்தைப் பெற்று மேலானவனாய் இருக்கிறாய்"** *(கீதை. 16:5) என்று சொல்லி, நீ ஏன் வருந்துகிறாய்; நீ நல்லியற்கை உடையை அல்லையோ? என்றான் கண்ண பெருமான். மனிதராய் இருந்தபோதிலும் அவுணர் இயல்பினை உடையராய் இருப்பவர் உண்டு. அவர்கள் கூட்டத்தில் அல்லாது இவர்கள் பிறப்பே தொடங்கி அவுணத்தன்மை உள்ளவராய் இருப்பவர்கள். அரசகுலத்திலே பிறந்தவன்*

---

1. குடுத்த. 2. ஒருவனாக.

கம்ஸனுக்கு உண்டான ஆஸுரத்வம் ஜந்ம ப்ரப்ருதி உண்டாயிருக்கை. க்ஷத்ரிய ஜந்மத்திலே பிறந்துவைத்து உக்ரஸேநன் நிலையல்ல கம்ஸனுக்கு உண்டான ஆஸுரத்வம். ஈஶ்வரனோடு பொருந்தாமை ஸ்வபாவமாக உடையராய்த் தாங்கள் அதுக்கு மேலே ஸாயுதருமாய் இருப்பார்கள். **வாள் அவுணர்இடைப் புக்கு** - தொடை ஒத்த துளபமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் கண்டு புகுகிறதோ? பரஹிம்ஸை பண்ணுகைக்காகப் பரிகரம் கொண்டு இருக்கிறவர்கள் நடுவேயிறே போய்ப் புக்கது.

இப்படிப் போய்ப் புக்காலும் ஆமிறே, தன் வாசி அறிவார் சிலர்க்குச் செய்யப் பெற்றதாகில்[1]. **வானவரை** - கார்ய காலத்தில் பற்காட்டி அநந்தரம் அவனைத் தள்ளி, "ஈஶ்வரோஹம்" என்று இருப்பார்க்காக ஆயிற்று. இவனைத் தங்களோடு ஸஜாதீயனாக புத்திபண்ணுதல் அன்றிக்கே, இவன் ஒரு மூங்கில்வளைத்த போதாக நம்மில் அதிகன் என்று இருத்தல் செய்யுமவர்களிறே. இதில் இன்னம்[2] அந்த ஸஜாதீய புத்திதானே நன்றிறே. அவ்அவுணரில் இவர்களுக்கு வ்யாவ்ருத்தி பெரிது அல்ல ஆயிற்று. அவர்கள் இவனுடைய ரக்ஷ்ய வர்க்கத்தை அழியச் செய்து கொடு திரியப் புக்கார்கள்; இவர்கள் அவன்பக்கலிலே அபேக்ஷித்தார்கள். இத்தனை ஆயிற்று வாசி. இவர்களுக்குக் கார்யம் செய்தாலும் ஆமிறே, தன் ஸ்வரூபம் அழியாதபடி கார்யம் செய்யப் பெற்றோமாகில். **பெண்ணாகி** - தன்னை அழியமாறி

---

*கம்சன். அவனுக்குத் தந்தை உக்கிரசேனன். அவ்உக்கிரசேனன் நல்லியல்பினன். ஆனால் கம்சனோ அவனைப் போன்று அல்லாமல் மிகுந்த அவுணத்தன்மை உடையனாய் இருந்தான் அன்றோ. இறைவனோடு பொருந்தாமையை இயல்பாக உடையராய் அதற்கு மேலே படையினைக் கைக்கொண்டவராய் இருப்பர்கள்.* **வாள் அவுணர்இடைப் புக்கு** - *தொடை ஒத்த துளபமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் கண்டு புகுகிறானோ? பிறர்க்குத் துன்பம் இழைப்பதற்காகப் படை ஏந்தி இருப்பவர்கள் நடுவே அன்றோ போய்ப் புக்கது!*

*இப்படிப் போய்ப் புகுந்ததும் தன் சிறப்பினை அறியும் சிலர் பொருட்டுச் செய்யப் பெற்றதாகில் தகும்.* **வானவரை** - *பயன் அடையும் காலத்தில் பற்காட்டிப் பிறகு அவனைத் தள்ளி, "யானே இறைவன்" (கீதை. 16:14) என்று இருப்பார்க்காகச் செய்தான். அவர்கள் இவனைத் தங்களோடு ஒத்த பிறப்பினனாக நினைப்பவர்கள்; அத்துடன் அமையாமல், இவன் ஒரு வில்லை வளைக்கக் கண்ட காலத்து நம்மினும் ஆற்றல் மிக்கவன் என்று இருப்பவர்கள். இப்படித் தங்களைக் காட்டிலும் ஆற்றல் மிக்கவன் என்று கருதுவதனைவிடத் தங்கள் இனத்துள் ஒருவனாக எண்ணுவதே நன்றாய் அமையும்! அந்த அவுணர்களைக் காட்டிலும் இவர்கள் மிகுந்த வேறுபாடு உடையவர்கள் அல்லர். அவர்கள் இவனால் நோக்கப்படுவனவற்றை அழித்துத் திரியப்புக்கனர். இவர்கள் அவனிடம் தங்கள் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டினர். இத்துணையே இருவரிடையேயும் உள்ள வேறுபாடு. பெருமான் இவர்களுக்காகப் பணிபுரிதலும், தன் இயற்கை அழியாவண்ணம் செய்தானாகில் தக்கது ஆகும்.* **பெண்ணாகி** - *அடியவர்களுக்*

---

1. போவதாகில். 2. இன்னும்.

நிற்கச்செய்தேயும் தூது போவது ஸாரத்யம் பண்ணுவது ஆனானிறே. அவ்வளவு அல்ல ஆயிற்று இது. "அஹமஸ்மி மஹாபாஹோ" என்றும் "இமௌஸ்ம முநிசார்த்தூல கிங்கரௌ ஸமுபஸ்திதௌ" என்றும் ருஷிகள் ஏவிற்றுச்[1] செய்வானாகத் தன்னைத் தாழவிட்டுத் திரிந்தவன் ஆயிற்று. புருஷோத்தமன் ஆன தன்னையிறே தன் ஸ்வரூபத்துக்குப் போராதபடி அழிய மாறிற்று.

"கிழக்கே ஐயாற்றிலே[2] யாதவராயர் வந்திருக்க ஜீயர் என்னை இறையிலிக்காரியத்துக்காக அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களோடே கூடப் போகவிட்டார். நான் அவன் கூடத்திலே வந்து அவஸரம் பார்த்து இருக்கச்செய்தே பலரும் வந்து என்னை அநுவர்த்திக்கக் கண்டவாறே, அங்கே மஹாமஹேஶ்வரனாய் இருப்பான் ஒரு பையல்,[3] 'பிள்ளாய்! நீர் பொருளுக்குக் கடவீர்' என்று கேட்டோம், 'எங்களுடைய வற்றிலே அரி அல்லால் தேவி இல்லை என்று உண்டாய் இருந்தது. அதுக்குப் பொருள் சொல்ல வேணும்' என்ன, 'நான் இதுக்கு அதிகரித்தேன் ஒருவன் அல்லேன்' என்ன, 'ஆகிலும் எல்லாம் தெரிந்து இராதோ, உமக்கு' என்ன, 'நீ தான் தேவர்க்கு ஒரு உத்கர்ஷத்தையும் ஈஶ்வரனுக்கு ஒரு அபகர்ஷத்தையும் நினைத்துக்

---

*காகத் தன்னை அழிய மாறுகை அவனுக்கு இயற்கையாய் இருக்க இதற்கு ஈடுபட[4] வேண்டுமோ என்னில் தன் இயற்கையை முற்றிலும் அழித்துக்கொண்டு தொண்டு செய்யும் காலத்திலும் தூது போவதும் தேரோட்டுவதுமே செய்வதானான். அத் தன்மையான செயல் அன்று இது.* "தோளாற்றல் உடையவனே! யான் இருக்கிறேன்" என்றும், "விசுவாமித்திரமுனிவரே! உம்மைச் சேர்ந்து தஞ்சம் அடைந்தவர்களாய் இருக்கிறோம், நாங்கள் இருவரும்; ஆணையிட்ட செயல்களைச் செய்தோம்; இனிச் செய்ய வேண்டுவன யாவை? விரும்பும் செயலைச் செய்யக் கட்டளை இடுங்கள்" *(ரா. பா. 34:4) என்றும் இருடிகள் ஏவியவற்றைச் செய்வானாகத் தன்னைத் தாழவிட்டுத் திரிந்தான் அன்றோ! அத்தன்மையான செயலும் அன்று இது. ஆடவருள் சிறந்த தன்னையன்றோ தன் இயற்கைக்குப் பொருந்தாதவாறு முற்றிலும் அழித்துக் கொண்டு நின்றான்.*

*இப்படி அழிய மாறினால் அவனுடைய ஆண்தகைமைக்கு அழிவு வாராதோ என்றால் வாராது.* "கிழக்கே திருவையாற்றிற்கு யாதவராயன் வந்திருந்தான். *நஞ்சீயர் என்னை இறையிலி நிலம்[5] பெறுதல் தொடர்பாக அவனைக் கண்டு பேசுவதற்கு வைணவர்கள் பலரோடு போக விட்டார். நான், அவன் தங்கி இருந்த மாளிகையின் கூடத்திலே வந்து அவனைக் காணும் செவ்வி நோக்கி இருந்தேன்; என்னைப் பலரும் வந்து வணங்கிச் சென்றனர். அதனைக் கண்டவாறே, அங்கே இருந்த மகாமகேச்வரன் ஆன ஒரு பையல், 'பிள்ளாய்! நீர் பாடல்களுக்கு நன்கு விளக்கம் சொல்வீர் என்று கேள்விப் பட்டோம். எங்கள் திருமுறையில் அரி அல்லால் தேவி இல்லை என்று இருக்கிறதே, அதற்குப் பொருள் சொல்ல வேண்டும்' என்றான். 'நான் இதற்குத் தகுந்தவன் அல்லேன்' என்றேன். 'இருந்தாலும் உமக்கு எல்லாம் தெரிந்திருக்குமே' என்றான். அதன் பிறகு யான், 'நீ சிவனுக்கு ஓர் உயர்வையும், எம்பெருமானுக்கு ஒரு தாழ்வையும் நினைத்துக்*

---

1. ஏவுத்துச். 2. அய்யாத்திலே. 3. பயல்.
4. ஈடுபட - வருந்த. 5. இறையிலி நிலம் - வரி தருவதனின்றும் நீக்கப்பட்ட நிலம்.

கேட்கிறாயாகில்[1] புருஷோத்தமன் என்று புராணங்களில் சொல்லாநிற்க, ஆச்ரிதார்த்தமாக அவன் தன்னை அழிய மாறினான் என்றால் இது அவனுக்கு குணாயவாம் இத்தனை அல்லது தோஷாய ஆகாது. இனி ஆண்பிள்ளைச் சோறாள்வியை ஸ்த்ரீ என்று துடர்ந்து திரிவாரைப் போலே துடர்ந்து திரியாநின்றார்' என்று தேவரை அஜ்ஞர் ஆக்குவதிற்காட்டில் இது சொன்னவன் அநாப்தன் அஜ்ஞன் என்று இருக்க அமையாதோ?' என்று சொன்னேன்'' என்று அருளிச்செய்தார். **அமுது ஊட்டும்** - இப்படி அழியமாறினாலும் ஆமிறே, தன்னையே விரும்பப் பெற்றதாகில். சரீரத்தைப் பூண்கட்டிக் கொடுப்பதானத்தையிறே விரும்புகிறது. **ஊட்டும்** - கடல் கடைகையும் யத்நிக்கையும் எல்லாம் தனக்குப் பணியாய் இவர்களுக்கு அந்வயம் புஜிக்கையிலேயாய், இவர்கள் மிடற்றுக்குக் கீழ் இழிச்சுமது தனக்கு உபகரித்தார்களாய் இருக்கும். "எங்களுக்கு அம்ருதம் வேணும்'' என்றால் அத்தை உத்பாதித்துக் கொடுத்துவிடும் அத்தனையிறே; அதுக்கு ஈடாய் இருப்பது ஒரு வடிவைக் கொண்டுநின்று புஜிப்பிக்கிறதுதான் நீர்மையிறே. உறங்குகிற பிரஜையை எழுப்பி ஊட்டும் தாயைப் போலே இதுதான் தன்பேறாக ஆயிற்றுச் செய்தது. இப்படி செய்கைக்கு நிபந்தம்[2] என் என்னில், **பெருமானார்** - சேஷித்வ ப்ரயுக்தமான ஸம்பந்தம் ஆயிற்று.

**மருவினிய இத்யாதி** - மருவ இனிய தேசம் ஆயிற்று. **தண் ஆர்ந்த** - ச்ரமஹரதை விஞ்சி இருக்கை. அதாகிறது ஸ்ரீவைகுண்டத்திற் போலே ரக்ஷ்யம்[3]

---

*கேட்பாய் எனில், அவனை ஆடவர் திலகம் என்று புராணங்கள் சொல்லுகின்றன. அவன் அடியார்பொருட்டுத் தன்னை அழிய மாறினான் என்றால் அச் செயல் அவனுக்கு உயர்வே அன்றிக் கொத்தை[4]யாகாது. இனி, ஆண்பிள்ளையான சோறாள்வியைப்[5] பெண் என்று தொடர்ந்து திரிவாரைப் போலே சிவன் தொடர்ந்து திரிந்தார் என்று சிவனை மடவோனாக்குவதைக் காட்டில் இதனைச் சொன்னவன் உற்றவன் அல்லன் என்றும் அறியாதவன் என்றும் இருத்தலே தக்கது என்று சொன்னேன்'' என்று நம்பிள்ளை அருளிச்செய்தார்.* **அமுது ஊட்டும்** - *தன்னையே விரும்பினார்கள் என்றால் இப்படி அழிய மாறலும் ஏற்புடைத்து; ஆனால் அவர்களோ உடம்பைப் பூண்கட்டிக் கொடுப்பதனை அன்றோ விரும்புகிறார்கள்.* **ஊட்டும்** - *கடல் கடைவதும், அதற்கு வேண்டுவன முயலுவதும் ஆகிய எல்லாம் தனக்குப் பணியாய் இவர்களுக்குத் தொடர்பு உண்பதிலேயாய் இவர்கள் உண்பது தனக்கு உதவி புரிந்ததாய் இருப்பான். "எங்களுக்கு அமுதம் வேண்டும்'' என்றால் அதனைக் கடைந்தெடுத்துக் கொடுத்துவிடுக்காமல் அவர்களுக்கு ஊட்டுவதுதான் நீர்மை ஆகும். உறங்கும் குழந்தையை எழுப்பி ஊட்டும் தாயைப் போலே இதனைத் தன்பேறாக அன்றோ செய்தான். இப்படிச் செய்வதற்கு அடி[6] என் என்னில்,* **பெருமானார்** - *உடையவனாய் இருக்கும் உறவாகும்.*

**மருவினிய தண் ஆர்ந்த கடல் மல்லை** - *மருவ இனிய இடம்.* **தண் ஆர்ந்த** - *இளைப்பாற்றும் தன்மை விஞ்சியிருக்கை. அஃதாவது திருநாட்டில் உள்ளது*

---

1. கேழ்க்கிறாயாகில். 2. நிபந்தநம். 3. ரக்ஷ்யவர்கம்.
4. கொத்தை - குறை. 5. சோறாள்வி - சோறு சமைப்பவன்; இக்காலத்தில் பேச்சு வழக்கில் 'தவசிப் பிள்ளை' என்று குறிப்பர். 6. அடி - காரணம்.

பெற்றிலோம் என்னும் குறை தீரும்படியாய் இருக்கை. **கடல் மல்லைத் தல சயனம்** - ஆஸ்ரிதன் வேர்க்கப்[1] பணி செய்தான் என்று அவனுக்காக வந்து காற்கடை தலைமாடாக வந்து தரையிலே[2] சாய்ந்தருளின இடமிறே. **உறைவாரை** - ஆஸ்ரிதர் விரும்பின இடம் என்று விட்டுப் போக மாட்டாதே நித்ய வாஸம் பண்ணுகிற இடம். அவ் ஆஸுர ப்ரக்ருதிகளில் குறையாதார் நடுவேயிறே வந்து கிடக்கிறது. **எண்ணாதே இருப்பாரை** - திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தருளினவன், ஸ்ரீவைகுண்டத்திலே குறைவற இருக்கக்கடவன், ஸம்ஸாரிகள் நடுவே தன்னைப் பேணாதே சாய்ந்தருளின இது நமக்காகச் செய்தான். **"நின்றிருந்து வெஃகணைக்கிடந்த தென்ன நீர்மையே"** என்று இத்தை அநுஸந்திக்க வேண்டியிருக்க, அதில் நினைவின்றிக்கே புறம்பே உண்டு உடுத்து காலக்ஷேபம் பண்ணித் திரியுமவர்களை. **இருப்பாரை** - எண்ணாதே இருக்கலாவதும்[3] ஒழியலாவதும் அதுக்கு அடியான கர்ம க்ஷயம் பிறவாமையாலே; சைதந்ய கார்யமிறே, "இப்படி[4] செய்திலோம்" என்னும் அநுதாபம் பிறக்குமது. அதுவும் அன்றிக்கே இருக்குமவர்களை. **இறைப்பொழுதும் எண்ணோமே** - சேதநராய் இருந்துவைத்து அஜ்ஞராய் இருப்பாரை எண்ணுவது ஒரு போது உண்டிறே; அப்போதும் எண்ணக்கடவோம் அல்லோம். அவஸ்துக்களை பரிகணிப்பதும் ஒரு போது உண்டிறே; அப்போதும் எண்ணோம். அவர்கள் தாங்கள் தங்களைக் கனக்க நினைத்திருந்தார்களாகிலும் அவர்களை ஒன்றாக நினைத்திரோம். இவர்தாம் நினைக்கிற் போலே அவர்களுக்கு வஸ்துத்வம் உண்டாவது. **" மானிடவர் அல்லர் என்று என் மனத்தே**

---

போலே காத்தற்கு உரியது பெற்றிலோம் என்னும் குறைதீரும்படி இருக்கை. **கடல் மல்லைத் தலசயனம்** - அடியவன் வேர்க்கப் பணி செய்தான் என்று அவனுக்காக வந்து காற்கடை[5] தலைமாடாக வந்து தரையிலே சாய்ந்தருளிய இடம். **உறைவாரை** - அடியவர் விரும்பிய இடம் என்று விட்டுப்போக முடியாமல் என்றும் உறையும் இடம். அவ் அவுணர்களின் இயற்கையில் சற்றும் குறைவற்றவர் நடுவே அன்றோ வந்து கிடக்கிறான். **எண்ணாதே இருப்பாரை** - திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தருளியவன், திருநாட்டிலே குறைவின்றி இருத்தற்கு உரியவன், உலகத்தவர் நடுவே தன்னைப் பேணாமல் சாய்ந்தருளிய இச்செயல் நமக்காகச் செய்தான். **"நின்றிருந்து வெஃகணைக்கிடந்த தென்ன நீர்மையே" (தி. ச. வி. 63)** என்று இதனை எண்ண வேண்டியிருக்க, இதில் நினைவே இல்லாமல் புறம்பே உண்டு உடுத்துப் போதுபோக்கித் திரிபவர்களை. **இருப்பாரை** - எண்ணாமல் இருப்பதும் ஒழிவதும் அவற்றிற்கு அடியான வினை அழியாமையாலே. "இப்படிச் செய்திலோம்" என்று கழிவிரக்கம் கொள்வது அறிவினால் ஆகும் செயல். அதுவும் இன்றிக்கே இருப்பவர்களை. **இறைப்பொழுதும் எண்ணோமே** - அறிவுடையராய் இருந்தும் இப்படி மடவோராய் இருப்பாரை எண்ணுவது ஒரு போது உண்டு. அப்போதும் எண்ணுவோம் அல்லோம். பொருள் அல்லாதவற்றைக் கணக்கெடுக்கும் ஒருபோது உண்டு; அப்போதும் எண்ணோம். அவர்கள் தாங்கள் தங்களைக் கனக்க நினைத்திருந்தார்கள்[6] என்றாலும் அவர்களை ஒரு பொருளாக நினைத்திரோம். இவர் இப்படிச் சொல்வதற்குக் கருத்து, இவர் நினைத்தால்தான் அவர்களுக்குப் பொருளாய் இருக்கும் தன்மை உண்டாகும் என்னும் நினைவு போலும்!

---

1. ஒக்கப். 2. தறையிலே. 3. இருக்கையாவதும். 4. இப்படி இப்படி.
5. காற்கடை - கால் பக்கம். 6. கனக்க நினைத்தல் - பெரிதாகக் கருதுதல்.

**வைத்தேன்" என்னக் கடவதிறே. "கல்லிலும் செம்பிலும் வெட்டிற்று" என்னு மாப் போலே. "அடிகள் அடியே நினையும் அடியவர்கள் தம் அடியான்" என்றிறே தம்மைச் சொல்லுகிறது. ஜ்ஞாநாநந்தங்கள் அன்று காணும் இவர்க்கு நிருபகம்; பாகவதசேஷத்வம் ஆயிற்று.**

---

"மானிடவர் அல்லர் என்று என்மனத்தே வைத்தேனே" (பெ. தி. *11:7:9*) என்பர். *"கல்லிலும் செம்பிலும் வெட்டப்பட்டது" என்பது போலே உறுதியாகச் சொல்வர்.* "அடிகள் அடியே நினையும் அடியவர்கள் தம் அடியான்" (பெ. தி. *2:6:10*) என்று *அன்றோ தம்மைச் சொல்லிக்கொள்வார். அறிவும் உகப்பும் அல்ல இவருக்கு அறிகுறி; அடியார்க்கு அடிமையாய் இருத்தலே.*

**ஒப்புமைப் பகுதி**

1. **பெண்ணாகி அமுதூட்டும் பெருமான்**

   *பாட்டு 123இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **விதுரர், பிள்ளை உறங்காவில்லிதாசர் ஆகிய பேரறிவாளர்கள்**

   *" ஆழிஎழ - துர்யோதநகோஷ்டியிலே க்ருஷ்ணன் எழுந்தருளினபோது அவர்கள் பண்ணின வஞ்சநத்தைக் கண்டு அதிசங்கை பண்ணித் தம்முடைய திருமாளிகையில் படுக்கையையும் தடவிப்பார்த்தாரிறே, 'ஸம்ஸ்ப்ருசந் நாஸநம் சௌரேர் விதுரஸ் ஸ மஹாமதி:' என்கிறபடியே. கடல் கலங்குவது தன்னளவிலேயிறே. பிள்ளை யுறங்காவில்லி தாஸர் 'மஹாமதி:' என்றது 'மதிகேடர் என்றபடியோ?' என்றார். பிள்ளைதாம் பெருமாள் எழுந்தருளும்போது 'எங்கேனும் ஒரு சலநம் பிறக்கில் நம் ப்ராணனை விடும் அத்தனை' என்று சொட்டையை உருவிப் பிடித்துக் கொண்டு சேவிப்பராம். நம் முதலிகள் அத்தைக் கண்டு இவரை மஹாமதிகள் என்று அழைப்பர்கள். அறிவு உண்டாகையாவது பகவத் விஷயத்திலே மதிகெடுகையிறே " தி. வா. மொ. 7:4:1-36*
   *[வஞ்சநம் - தீமை. அதிசங்கை - பொருளற்ற ஐயுறவு. சலநம் - அசைவு; ஈண்டுக் கேட்டைக் குறித்தது.]*

(51)

## 152

**பார்வண்ண மடமங்கை பனிநன்மா மலர்க்கிழத்தி**
**நீர்வண்ணன் மார்வகத்தில் இருக்கையைமுன் நினைந்தவன்ஊர்**
**கார்வண்ண முதுமுந்நீர்க் கடல்மல்லைத் தலசயனம்**
**ஆர்எண்ணும் நெஞ்சுடையார் அவர்எம்மை ஆள்வாரே.**

---

**152.** 4 : 4 ஆள்பவரே.

**ப. ரை :** **நீர்வண்ணன் மார்வகத்தில்** - *கடல்வண்ணன் ஆகிய பெருமானுடைய திருமார்பிலும் இடப்பக்கத்திலும்*, **பனி நன் மா மலர்க் கிழத்தி** - *குளிர்ந்த நல்ல சிறந்த தாமரை மலரில் தோன்றிய திருமகளும்*, **பார் வண்ண மட மங்கை** - *நிலத்தைத் தனக்கு வடிவமாகக் கொண்ட மடப்பம் நிறைந்த நிலமகளும்*, **இருக்கையை முன் நினைந்து** - *எழுந்தருளியிருக்கும் தன்மையை முதலிலே எண்ணிப் பார்த்து*, **அவன் ஊர்** - *பிறகு அவனுக்கு ஊராய் உள்ள*, **கார் வண்ண முது முந்நீர்க் கடல்மல்லைத் தலசயனம்** - *கரிய பழைமையான கடலின் கரையிலே உள்ள திருக்கடல் மல்லைத் தலசயனத்தை*, **எண்ணும் நெஞ்சு உடையார் ஆர் அவர்** - *சிந்திக்க வல்ல மனம் உடையவர்கள் எவரோ அவர்*, **எம்மை ஆள்வார்** - *எங்களை அடிமை கொள்ளத் தக்கவர்.*

**சி. கு :** *மார்வகம் - மார்வும் அகமும் என்று பொருள்படுதலின் உம்மைத் தொகை. மார்வில் மலர்க்கிழத்தியும், வலப்புறத்தில் பார்மங்கையும் உள்ளனர் எனக் கொள்க.*

**வியா : இரண்டாம் பாட்டு : பார் இத்யாதி** - முதல்தன்னிலே நம் குற்றம் அவன் திருவுள்ளத்தில் படாதபடி பண்ணும் ஸ்ரீபூமிப்பிராட்டியும், அவன் தன் ஸர்வஜ்ஞத்வத்தாலே நம் குற்றத்தைக் கண்டானே ஆகிலும் அவன்தன்னை **"நகச்சிந்நாபராத்யதி"** என்று பொறுப்பிக்கும் பெரியபிராட்டியாரும், அவன் பக்கலிலே கிட்ட இருக்கையாலே நமக்கு இனி இழக்க வேண்டாதபடி ஸுலபன் என்று அவன் நித்ய வாஸம் பண்ணுகிற தேசத்தை ஹ்ருதயத்தாலே அநுஸந்திக்குமவர்கள் என்னை அடிமை கொள்ளுமவர்கள் என்கிறார்.

பாரை வண்ணமாக உடையளாய், பூமியைத் தனக்கு ப்ரகாரமாக உடையளாய் ஆத்மகுணத்தை உடையளாய் இருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டி, பூமிக்கு அபிமாநியாய் இருக்குமவளிறே. அவன்தனக்கும்கூடப் பொறைக்கு உவாத்தாயிறே இவள் இருப்பது. தன் பக்கலிலே எல்லாப் ப்ராதிகூல்யத்தையும் பண்ணிக் காலிட்டுத்

---

**வி : இரண்டாம் பாட்டு :** *முதலிலே நம் குற்றம் அவன் திருவுள்ளத்தில் படாதவாறு செய்யும் மண்மகளும் அவன் தன் முற்றறிவினாலே நம் குற்றத்தைக் கண்டானேயாகிலும் அவனை,* **"குற்றம் செய்யாதவன் ஒருவனும் இல்லை"** *(ரா. யு. 116:44) என்று சொல்லிப் பொறுப்பிக்கும் திருமகளும் அவன்பக்கலிலே அருகில் இருக்கின்றனர்; ஆகையால், அவன் நமக்கு இனி இழக்க வேண்டாதபடி எளிதில் அடையக் கூடியவன் என்று கொண்டு அவன் நிலையாகத் தங்கும் இடத்தை நெஞ்சாலே நினைப்பவர்கள் என்னை அடிமை கொள்ளுபவர்கள் என்கிறார்.*

**பார் வண்ண மட மங்கை** - *பாரை வண்ணமாக உடையவளாய், அஃதாவது நிலவுலகைத் தனக்குப் படியாக உடையவளாய்ப் பெண்மைக்கு உரிய உயர்ந்த பண்புகளை உடையளாய் இருப்பவள் மண்மகள். அவள் மண்ணுலகிற்குப் படிகொளியாய் இருப்பவள். பெருமானுக்கும்கூடப் பொறுமையைப் பயிற்றுவிப்பவளாய் இருப்பவள். தன் பக்கலிலே எல்லாத் தீங்குகளையும் செய்து தன்மேல் கால் வைத்துத் துகைத்தாலும்*[1] **துகைப்பார், "துகைத்துக் கொண்**

---

1. துகைத்தல் - மிதித்தல்.

துகையாநின்றாலும், "துகையாநின்றோம்" என்று கூசவேண்டாதேயிறே இருப்பது. க்ஷமை என்றேயிறே பேர். **பனி நன் மாமலர்க் கிழத்தி** - பிறர் குற்றம் நெஞ்சில் படாதபடியான மார்த்தவத்தையுடைய தலைவி. "ஸர்வ கந்தஃ" என்கிற வஸ்து வையும் தன்னுடைய போக்யதையாலே துவக்கி ஆஶ்ரிதர் குற்றம் நெஞ்சில் படாத படி பண்ணுமவள்; அழகிய தாமரைப் பூவில் பரிமளம் உபாதாநமாகப் பிறந்தவள். இத்தால் ஸர்வேஶ்வரனுக்குத் தன்னோடே பணி போரும்படியான போக்யதையை உடையவள் என்கை. இவர்கள், **நீர்வண்ணன் மார்வகத்தில் இருக்கையை முன் நினைந்து** - கடல் போலே இருக்கிற குளிர்ந்த[1] வடிவில் இடவருகிலும் திருமார்விலும் எழுந்தருளியிருக்கிற இருப்பை அநுஸந்தித்து, "நமக்குப் புருஷகார பூதைகளான நாச்சிமார் அங்கே சேர இருந்தார்கள்" என்று அநுஸந்தித்தால் பின்னை நமக்குக் கிட்டுகைக்கு ஒரு குறை இல்லையிறே. மாதாபிதாக்கள் சேர இருந்த இடத்தில்[2] ப்ரஜைகளுக்குச் சென்று கிட்டுகையில் ஓர் அருமை இல்லை.

> **"யத்ர க்ருஷ்ணௌ ச க்ருஷ்ணா ச ஸத்யபாமா ச பாமிநீ -**
> க்ருஷ்ணனும் ஸ்ரீஸத்யபாமைப்பிராட்டியும் அர்ஜுனனும் த்ரௌபதியுமாகக்

---

*டிருக்கிறோம்" என்று கூச வேண்டாதவாறு அமைந்திருக்கும் தன்மை* **உடையவள்.** *இத்தன்மையினால் பொறை என்றே பெயர் பெற்றவள்.* **பனி நன் மாமலர்க் கிழத்தி** - *பிறர் குற்றம் நெஞ்சில் படாதவாறு அமைந்த மென்மையை யுடைய தலைவி.* "எல்லா மணங்களும் உடையவன்" *(சாந். 3:16) என்னும் பரம் பொருளையும் தன்பால் உள்ள இனிமையாலே துவக்கி[3] அடியார் குற்றம் நெஞ்சில் படாதபடி செய்பவள்; அழகிய தாமரைப்பூவில் மணத்தால் ஆகிய வடிவம் கொண்டு பிறந்தவள்; இதனால், பெருமானுக்குத் தன்னோடே பணி போரும்படி யான[4] இனிமை நிறைந்தவள்.* **நீர் வண்ணன் மார்வகத்தில் இருக்கையை முன் நினைந்து** - *இவர்கள் கடல் போலே இருக்கும் குளிர்ந்த வடிவில் இடவருகிலும்[5] திருமார்பிலும் எழுந்தருளியிருக்கும் இருப்பை எண்ணி, "நமக்குப் பேறு கிடைக்கச் செய்பவர்களான நாச்சிமார்கள் அங்கே சேர இருந்தார்கள்" என்று நினைத்தால் பின்னர் நாம் கிட்டுவதற்கு ஒரு குறையும் இல்லை. தாயும் தந்தையும் சேர இருந்த[6] இடத்தில் பிள்ளைகள் சென்று கிட்டுவதற்கு ஓர் அருமை இல்லை. "இப்படிப் பெருமானும் நாச்சிமாருமாகச் சேர்ந்திருந்த இடத்தில் சென்று கிட்டிய வர் உண்டோ?" என்னில், 'உண்டு' என்று சஞ்சயனைச் சான்றாகக் காட்டுகிறார்.*

> **"எந்த இடத்தில் கிருட்டிணனும், அருச்சுனனும், திரௌபதியும் அழகிய சத்தியபாமையும் இருக்கிறார்களோ அந்த இடத்தின் உள்ளே அபிமன்யுவும் போனான் அல்லன்; இரட்டைப் பிள்ளைகளான நகுல சகாதேவர்களும் போனார்கள் அல்லர்;** *என்பது பாரதம் (உத். 49).* **எந்த இடத்தில் கிருட் டிணனும் அருச்சுனனும் திரௌபதியும் அழகிய சத்தியபாமையும் இருக்கிறார் களோ** - *கிருட்டிணனும் சத்தியபாமைப்பிராட்டியும் அருச்சுனனும்*

---

1. குளுந்த. 2. இருந்தடத்தில்.
3. துவக்குதல் - மயக்குதல். 4. பணி போரும்படியான - காலங்கழிக்க வேண்டும்படியான.
5. இடவருகு - இடப்பக்கம்; அருகு - பக்கம். 6. சேர இருத்தல் - ஒன்றாக இருத்தல்.

கால்மேல் கால் ஏறிட்டு ஒருவர்க்கும் சென்று கிட்ட ஒண்ணாதபடி ஏகாந்த மாக இருக்கிற இடத்திலே "ஸஞ்ஜயன் வந்தான்" என்று அறிவிக்க, "இவ் இருப்புக் காண உகப்பான் ஒருத்தன், இதுதன்னையும் உகவாதார் மண்ணுண்ணும்படி சொல்ல வல்லான் ஒருவன், புகுர விடு" என்றானிறே. **"நசாபிமந்யுர் நயமௌ தம் தேசம் அபிஜக்மது:"** - மாதாபிதாக் கள் இருந்த இடத்தில் ப்ரஜைகள் சென்று கிட்டுகையில் ஒரு அருமை இல்லையிறே. ஆயிருக்கச்செய்தே அந்த ப்ரஜைகளும் கிட்ட ஒண்ணாதபடி[1] இருக்கிற இடத்திலே ஆயிற்று இவனை அழைத்துக் காட்சிகொடுத்தது[2].

இரண்டாவது வியா : இரண்டாம் பாட்டு : **பார்வண்ணம் இத்யாதி** - "நீர் பொருந்தாதாரை இன்னார் என்று அறிந்தோம்; நீர் பொருந்துவாரும் சிலர் உண்டே?" என்ன, அவர்கள் ஜந்மவ்ருத்தாதிகள் கொண்டு கார்யம் இல்லை. அவர் கள் தாங்கள் ஆரேனுமாக அமையும். இதுண்டாம் இத்தனையே அவர்கள் நம்மை நிர்வஹிக்கைக்கு என்கிறார். "நீர் ப்ரதிகூலர் விஷயத்தில் இருக்கும்படி அறிந்தோம்; அநுகூலர் விஷயத்தில் இருக்கும்படி என்?" என்ன, அங்கு நமக்கு எண்ணுகைக்கும் எண்ணாமைக்கும் ப்ராப்தி இல்லை. இதுக்கு எல்லாம் கடவார் அவர்கள் என்கிறார்.

**பார்வண்ண மட மங்கை** - பூமியைத் தனக்கு ப்ரகாரமாக உடையளாய் க்ஷமாதி குணங்களாலே குறைவற்று இருந்துள்ள ஸ்ரீபூமிப்பிராட்டி. **பனி நன்**

---

திரௌபதியுமாகக் கால்மேல் கால் ஏறிட்டுக் கொண்டு ஒருவர்க்கும் சென்று கிட்ட ஒண்ணாதபடி தனிமையில் இருக்கும் இடத்திலே "சஞ்சயன் வந்தான்" என்று அறிவிக்கக் கிருட்டிணன், "இப்படி இருத்தலைக் கண்டால் மகிழ்பவன்; மேலும் இதனை உகவாதார் மண்ணுண்ணும்படி சொல்ல வல்லவன்; ஆதலால் உள்ளே வர விடு" என்றான். அந்த இடத்தின் உள்ளே அபிமன்யுவும் போனான் அல்லன்; இரட்டைப் பிள்ளை களான நகுலசகாதேவர்களும் போனார்கள் அல்லர் - தாயும் தந்தையும் இருந்த இடத்தில் பிள்ளைகள் சென்று கிட்டுவதில் ஓர் அருமை இல்லை அல்லவா? எனினும் அந்தப் பிள்ளைகளும் கிட்ட ஒண்ணாதபடி இருக்கும் இடத்திலே அன்றோ இச்சஞ்சயனை அழைத்துக் காட்சி கொடுத்தான்.

இரண்டாவது வி : இரண்டாம் பாட்டு : "நீர் பொருந்தாதவர்கள் யார் என்று அறிந்தோம்; நீர் பொருந்துவார் யாரேனும் உண்டோ?" என்று வினவ, உண்டு. அவர்கள் பிறப்பு ஒழுகலாறுகளால் அமைபவர் அல்லர். அவற்றால் எவ்வகை யினராகவேனும் இருக்கலாம். தலசயனப் பெருமானை எண்ணும் நெஞ்சு உடைய ராய் இருத்தலே வேண்டுவது அவர்கள் நம்மை ஆளுவதற்கு என்கிறார். நீர் பொருந்தாதவர்களிடத்து இருக்கும் தன்மை அறிந்தோம். பொருந்துவார் இடத்தில் இருக்கும் தன்மை யாது?" என்று வினவ, அவர்களை எண்ணுவ தற்கோ எண்ணாது இருப்பதற்கோ நமக்கு உரிமை இல்லை. இவற்றைச் செய்வதற்கு உரியவர்கள் அவர்கள் என்கிறார். அஃதாவது அவர்கள் எண்ணி னால், நாம் உளர் ஆவோம்; எண்ணாவிட்டால் இலர் ஆவோம் என்கிறார்.

பார்வண்ண மடமங்கை - பாரைத் தனக்கு வண்ணமாக உடையவளாய்ப் பொறுமை முதலான பண்புகளாலே குறைவற்று இருக்கும் நிலமடந்தை. பனி நன்

---

1. உண்ணாதபடி. 2. குடுத்தது.

**மாமலர்க் கிழத்தி** ப்ரம ஹரமாய் விகஸிதமாய் அழகிதாய் இருந்துள்ள தாமரைப் பூவை ஜந்மமாக உடையவள். **இவர்கள், நீர்வண்ணன் மார்வகத்தில் இருக்கையை முன் நினைந்து** - ப்ரமஹரமான திருமேனியிலே இட அருகைப் பற்றியும் அத்திருமார்வைப் பற்றவும் இருக்கிற இருப்பையும் அநுஸந்தித்து. "நீர் வண்ணன் மார்வகத்தில் பனி நன் மாமலர்க் கிழத்தி" என்று அந்வயமாகவும் ஆம். மாதாபிதாக்கள் சேர இருந்தால் ப்ரஜைகளுக்குக் கடுகச் சென்று கிட்டலாய் இருக்கு மிறே. **அவன் ஊர் இத்யாதி** - அவன் பரமபதத்தை விட்டு நித்ய வாஸம் பண்ணுகிற ப்ரமஹரமான திருக்கடல் மல்லையை. கறுத்த நிறத்தை உடைத் தாய்ப் பழையதாய் இருந்துள்ள மூத்து முதிர்ந்து உள்ள முந்நீர் உண்டு கடல், அதன் அருகேயிறே. **ஆர் எண்ணும் நெஞ்சு உடையார்** - ஏதேனும் ஜந்மம் ஆகவும் ஆம்; ஏதேனும் வ்ருத்தம் ஆகவும் ஆம்; ஏதேனும் ஜ்ஞாநம் ஆகவும் ஆம்; இவ் இடத்தை எண்ணும் நெஞ்சு உடையார் ஆம் இத்தனையே வேண்டுவது. **அவர் இத்யாதி** - அவர்கள் நின்ற நிலைகளிலே, ப்ரமாணம் காட்டாதே நம்மைக் கார்யம் கொள்ள உரியார்.

---

**மாமலர்க்கிழத்தி** - *வருத்தம் அகற்றுவதாய், மலர்ந்ததாய், அழகியதாய், இருக்கும் தாமரைப்பூவைப் பிறப்பிடமாக உடையவள்.* **இவர்கள், நீர்வண்ணன் மார்வகத்தில் இருக்கையை முன் நினைந்து** - *இளைப்பு ஆற்றும் திருமேனியில் இடப்பக்கத் தும், திருமார்பின்கண்ணும் இருக்கும் இருப்பை எண்ணி. "நீர் வண்ணன் மார்வகத்தில் பனி மாமலர்க் கிழத்தி" என்று கூட்டியும் பொருள் உரைக்கலாம். தாயும் தந்தையும் ஒன்று சேர்ந்து இருந்தால் பிள்ளைகளுக்கு விரைந்து சென்று சேரத் தக்கதாய் இருக்கும் அன்றோ.* **அவன் ஊர் கார் வண்ண முது முந்நீர்க் கடல் மல்லைத் தலசயனம்** - *அவன் திருநாட்டை விட்டு வந்து என்றும் உறையும் அயர்வு அகற்றும் திருக்கடல் மல்லையை. கறுத்த நிறத்தை உடையதாய்ப் பழையதாய் இருக்கும் மூத்து முதிர்ந்த முந்நீராகிய கடலினது அருகே உள்ளது அன்றோ!* **ஆர் என்னும் நெஞ்சு உடையார்** - *எப்பிறப்பினராகவும் இருக்கலாம்; எவ் ஒழுகலாறு உடையராகவும் ஆகலாம்; எத்தகைய அறிவுடையராகவும் அமைய லாம். இவ்இடத்தை எண்ணும் நெஞ்சு உடையராக இருத்தலே வேண்டுவது.* **அவர் எம்மை ஆள்வாரே** - *அவர்கள் நின்ற நிலைகளிலே, செப்பேடு காட்ட[1] வேண்டாமல் நம்மைப் பணிகொள்வதற்கு உரியார்.*

**ஒப்புமைப் பகுதி**

**சஞ்சயனைத் தனியிடத்தில் நுழைய விடுத்த நிகழ்ச்சி**

> *" ஓர் ஐவர்க்காய் - 'அர்ஜ்ஜுநாங்ககதௌ' இத்யாதி. ஒருவர்க்கு ஒருவர் கால்மேல் கால் ஏறட்டு ஒரு நாளாக இருந்த ஸமயத்திலே, ஸஞ்சயன் வாசலிலே வந்தான் என்று சொல்ல, 'அவனைப் புகுர விடுங்கோள்; இவ் இருப்புக்காண உகப்பான் ஒருவன்; உகவாதார் நெஞ்சுளுக்கச் சொல்லவல்லான் ஒருவன்; ஆன பின்பு அவனை அழையுங்கள்' என்றான். உகவாதார் கண்படல் ஆகாதாப்போலே, உகந்தார் கண்பட்டால் உள்ள நன்மையும் "*
> *தி. வா. மொ. 7:5:9-36*

(52)

---

1. செப்பேடு காட்டல் - சான்று காட்டல்.

## 153

**ஏனத்தின் உருவாகி நிலமங்கை எழில்கொண்டான்**
**வானத்தி லவர்முறையால் மகிழ்ந்தேத்தி வலங்கொள்ளக்**
**கானத்தின் கடல்மல்லைத் தலசயனத் துறைகின்ற**
**ஞானத்தின் ஒளியுருவை நினைவார்என் நாயகரே.**

ப. ரை : **ஏனத்தின் உருவாகி** - பன்றிவடிவத்தைக் கொண்டு, **நிலமங்கை எழில் கொண்டான்** - நிலமகளின் அழகு கெடாதவாறு அண்டச் சுவரினின்றும் ஒட்டு விடுவித்து மீட்டுக் கொணர்ந்தவனும், **வானத்தில் அவர் முறையால் மகிழ்ந்து ஏத்தி வலம் கொள்ள** - அமரர்கள் தங்கள்தங்கள் நிலைக்குத் தகுதியாக மகிழ்ச்சி கொண்டு பரவிச் சுற்றிவருவதற்கு ஏற்ப, **கானத்தின் கடல் மல்லைத் தல சயனத்து உறைகின்ற** - காட்டின் நடுவே உள்ள கடல்சார்ந்த திருக்கடல் மல்லையிலே நிலப் பாயலில் துயில்கின்ற, **ஞானத்தின் ஒளி உருவை** - ஞான ஒளி பொருந்திய வடிவத்தை உடையவனை, **நினைவார் என் நாயகர்** - நினைப்பவர் எனக்குத் தலைவர் ஆவர்.

**சி. கு :** வானத்திலவர் - வானத்தில் உள்ளவர். திருநாட்டில் உள்ள அமரர்களையாதல் துறக்கம் முதலாம் உலகங்களில் உள்ள தேவர்களையாதல் குறிக்கும்.

வியா : **மூன்றாம் பாட்டு : ஏனம் இத்யாதி** - அப்போது ஏறட்டுக் கொண்ட வடிவைக் காட்டிப் பழைய வடிவை அழித்தான், அபிமத விஷயத்தோடே கலக்கைக்காக அவர்கள் உகக்கும் படியே ஒப்பிப்பாரைப் போலே. படுக்கைப் பற்றை நோக்கி ப்ரதாந மஹிஷிகள்பக்கல் முகம் பெறுவாரைப் போலே மஹா வராஹமான வடிவில் எழிலைக் காட்டி இவள் எழிலைக் கொன்டான். ஸ்ரீபூமிப்பிராட்டியுடைய விபூதியை ப்ரளயம் கொள்ள, அத்தை எடுக்கைக்காக நீருக்கும் சேற்றுக்கும்[1]

---

வி : மூன்றாம் பாட்டு : ஏனத்தின் உருவாகி நிலமங்கை எழில் கொண்டான் - காதலியரோடு கலக்கைக்காக அவர்கள் உகக்கும்படியே ஒப்பிப்பாரைப்[2] போலே அப்போது தான் ஏற்றுக்கொண்ட வடிவைக் காட்டிப் பழைய வடிவை அழித்தான். படுக்கைப் பற்றை[3] நோக்கி முதன்மைத் தேவியர்பக்கல் முகம் பெறு வாரைப்[4] போலே பெரிய பன்றி வடிவத்தின் எழிலைக் காட்டி இவள் எழிலைக் கொண்டான். நிலமகள் உடைமையைப் பெருவெள்ளம் கொண்டது; பெருமான் அதனை எடுப்பதற்காக நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத[5] வடிவை ஏற்று வந்து

---

**153.** 2 : 1 வானத்தில். 2 : 2 வர முறையான்; வரன் முறையால். 2 : 4 வரங்கொள்ளக்.

1. சேத்துக்கும்.
2. ஒப்பித்தல் - ஒப்பனை செய்து கொள்ளல். 3. படுக்கைப்பற்று - மனைவியரது நிலம். படுக்கை என்பது இட்வாகுபெயராய் மனைவியைக் குறிக்கும். அரசர்தம் மனைவியர் தங்களுக்கு என்று நிலங்களை உடைமையாகப் பெற்றிருந்தனர் என்பதனையும் அவற்றைக் கொண்டு பல்வேறு அறச்செயல்கள் புரிந்தனர் என்பதனையும் கல்வெட்டுகளால் அறியலாம். பற்று - வயல்; 4. முகம் பெறுதல் - முகமலர்ச்சியைக் காணுதல். 5. இறாய்த்தல் - தளர்தல்; பின்வாங்குதல்.

இறாயாத[1] வடிவைக் கொண்டு வந்து எடுத்து நோக்கி, "நித்ய ஸூரிகள் நடுவே ஓலக்கம் இருக்கக் கடவ அவன் இவ்வடிவைக் கொண்டது நமக்காகவிறே'' என்று அந் நீர்மையிலே தோற்று எழில் இழந்தாள் ஆயிற்று. **வானத்திலவர்** - பரமபதத்தில் நித்ய ஸூரிகள். **முறையால் மகிழ்ந்து ஏத்தி** - "இது நன்று'' என்னும் புத்தியாலே யிறே இங்குள்ளோர் ஏத்துவது; ப்ரீதி பூர்வமாக ஏத்துவார் அவர்களிறே. **முறையால்** - எங்கேனும் புகுரினும்[2] முறை தப்பாமல் ஏத்துமவர்களிறே அவர்கள்! பரம பதத்தில் அடிமை செய்யும் க்ரமத்திலே ஏத்தி அநுகூல வ்ருத்தி பண்ண. **கானத்து இத்யாதி** - ஸ்ரீபூமிப்பிராட்டி எழில் இழக்க, நித்ய ஸூரிகள் ஏத்தாநிற்க, இவற்றை[3] அடையக் காற்கடைகொண்டு தன் ஜாதிக்கு அநுரூபமாகக் காட்டை விரும்பினான் ஆயிற்று. ஏனமானதுக்கு அநுரூபமாகக் காட்டை விரும்பினான். **கடல் மல்லைத் தல சயனத்து** - "ப்ரளயம் வந்தால் உதவப் பார்த்து இருக்க ஒண்ணாது''[4] என்று ஒக்கவே[5] இவற்றை[6] ரக்ஷிக்கும்படியை அநுஸந்தித்துக் கொண்டிருக்கிறவனை. **ஞானத்தின் ஒளி உருவை** - ஜ்ஞாந ஸ்வரூபனாய் உள்ளவனை. **நினைவார் என் நாயகரே** - ஒருதலைக் காமமாய்ப் போகாமே, "இவன் வந்து கிடக்கிறது நமக்காக'' என்று தாங்களும் நினைக்குமவர்கள் எனக்கு ஸ்வாமிகள். அவர்கள் ஆளாத போதும் வேறு சிலர்க்கு சேஷபூதர் அல்லோம்.

---

அதனை எடுத்துக் காத்தான்; அதனைக் கண்டு, "அயர்வறும் அமரர்கள் நடுவே ஓலக்கம் இருத்தற்கு உரியவன் இவ்வடிவைக் கொண்டது நமக்காக அல்லவா!'' என்று அந்நீர்மையிலே தோற்று எழில் இழந்தாள். **வானத்திலவர் முறையால் மகிழ்ந்து ஏத்தி வலம் கொள்ள** - **வானத்திலவர்** - திருநாட்டில் உள்ள அமரர்கள். "இது நன்று'' என்னும் நினைப்பாலேயே இங்கு உள்ளவர்கள் இறைவனை ஏத்துவார்கள்; அப்படி அல்லாமல் பரிவு முந்துற ஏத்துவார்கள் அவர்கள். எங்கேனும் புகுந்தாலும் முறை தப்பாமல் ஏத்துபவர்களன்றோ அவர்கள்! திருநாட்டில் அடிமை செய்யும் அடைவிலே ஏத்தி நற்செயல் புரிய. **கானத்தின் கடல் மல்லைத் தலசயனத்து உறைகின்ற** - நிலமடந்தை எழில் இழக்க, அமரர்கள் வணங்க, இவற்றை அடையக்[7] காற்கடைகொண்டு[8] தன் குலத்திற்குச் சேர்ந்த காட்டை விரும்புவான் ஆயினான். அஃதாவது ஏனமாய் வடிவு கொண்டதற்கு ஏற்பக் காட்டை விரும்பினான். **கடல் மல்லைத் தலசயனத்து** - "பெரு வெள்ளம் வந்தால் உதவலாம் என்று பார்த்துக் கொண்டிருத்தல் பொருந்தாது'' என்று ஒருசேர இவற்றை நோக்கும் வகையினைச் சிந்தித்துக்கொண்டு இருப்பவனை. **ஞானத்தின் ஒளி உருவை** - அறிவு வடிவாய் இருப்பவனை. **நினைவார் என் நாயகரே** - அவன் விருப்பம் ஒருதலைக் காமமாய்ப் போகாவண்ணம், "இவன் வந்து கிடப்பது நமக்காக'' என்று தாங்களும் நினைப்பவர்கள் எனக்குத் தலைவர்கள். அவர்கள் ஆட்சிபுரியாத போதும் யானும் என்னைச் சார்ந்தவர்களும் வேறு சிலருக்கு அடிமை ஆவோம் அல்லோம்.

---

1. இளையாத. 2. புகிலும். 3. இவைத்தை. 4. உண்ணாது. 5. ஏற்கவே. 6. இவைத்தை.

7. அடைய - எல்லாம். 8. காற்கடைகொள்ளல் - காலின்கீழ்ப் போடுதல்; அஃதாவது புறக்கணித்தல்.

**ஒப்புமைப் பகுதி**

1. **ஏனத்தின் உருவாகி**

*" ஏனத்துருவாய் - நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத வராஹ வேஷத்தை உடையனாய் "* *பெரி. தி. 2:10:9 ம. மா. மு. உரை, பாட்டு 4, 31 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **வானவர் முறையாய் மகிழ்ந்தேத்தி வலம் வருதல்**

*" வானவர் முறைமுறை வழிபட நெறீஇ - தேவர்கள் நெறிப்பட்டு பகவத் ஸமாஶ்ரயணம் பண்ணும்படியைச் சொல்லுகிற சாஸ்த்ரங்களின் வழியே திரளாக ஆஶ்ரயிக்க; திருவணுக்கன் திருவாசலில் திரள் திரளாகப் புக்குத் திருவடி தொழுமாபோலே ஸமாராதந விதியின்படியே வழிபட்டு ஆஶ்ரயிக்க "* *திருவா. 5 அடி 4 பெ. உரை.*

*[ஸமாஶ்ரயணம் - சார்தல். ஆஶ்ரயித்தல் - பற்றுதல்; சார்தல்.]* (53)

## 154

**விண்டாரை வென்றாவி விலங்குண்ண மெல்லியலார்**
**கொண்டாடும் மல்அகலம் அழல்ஏற வெஞ்சமத்துக்**
**கண்டாரைக் கடல்மல்லைத் தலசயனத் துறைவாரைக்**
**கொண்டாடும் நெஞ்சுடையார் அவர்எங்கள் குலதெய்வமே.**

**ப. ரை :** **விண்டாரை வென்று** - பகைவர்களைத் தோற்கச் செய்து, **ஆவி விலங்கு உண்ண** - அவர்களுடைய உடலை விலங்குகள் தின்னுமாறும், **மெல்லியலார் கொண்டாடும் மல் அகலம்** - பெண்டிர் புகழ்ந்து போற்றும் அவர்களுடைய திண்மை பொருந்திய மார்பை, **அழல் ஏற** - நெருப்புப் பிடித்து உண்ணுமாறும், **வெஞ் சமத்துக் கண்டாரை** - கொடிய போர்க்களத்திலே செய்தவர் ஆகிய, **கடல் மல்லைத் தலசயனத்து உறைவாரை** - திருக்கடல் மல்லையின்கண் நிலப்பாயலிலே பள்ளிகொண்டு இருப்பாரை, **கொண்டாடும் நெஞ்சுடையார்** - போற்றுகின்ற நெஞ்சகத்தை உடையவர் எவரோ, **அவர் எங்கள் குலதெய்வம்** - அவர் எங்கள் குலத்திற்குக் கடவுள் ஆவர்.

**சி. கு :** விண்டார் - பகைவர்; ஈண்டு இராவணன் முதலிய அரக்கர்.

**வியா :** **நாலாம் பாட்டு : விண்டாரை வென்று** - அவன் ப்ரதிபக்ஷ நிரஸந ஸமர்த்தனாய் இருக்கச்செய்தே ஆநுகூல்யத்தாலே கார்யம் கொள்வானாக

---

வி : நாலாம் பாட்டு : பெருமான் எதிரம்பு கோப்பவர்களை[1] அழிக்கும் வீறு உடையவனாயினும், நல்வழியால் திருத்திப் பயன் கொள்ள வேண்டும் என்று

---

**154.** 1 : 4 மெல்லியலாள், 3 : 1 கண்டானைக்.

1. எதிரம்பு கோப்பவர்கள் - பகைவர்கள்.

நினைத்து வந்து கிடக்கிறபடியை அநுஸந்தித்து ஈடுபடுமவர்கள் என் ஒருவன் அளவு அன்றிக்கே என்குலத்துக்காக நாதரானவர்கள் என்கிறார்.

**விண்டாரை வென்று** - நல்ல வார்த்தை சொல்லச்செய்தேயும், "**ந நமேயம்**" என்று இருப்பாரையாயிற்று வெல்லுவது. வாலியை நிரஸித்து, கடலை அணைசெய்து ஊரைச் சூழப்போந்து, லங்கையை அடைமதிட்படுத்தி, "இனித்தான் அநுகூலிக்குமோ?" என்று அங்கதப்பெருமாளைப் போகவிட்டு, நல்வார்த்தை சொல்லுவித்து, அதுவும் கேளாது ஒழியப் பையல் கண்முகப்பே பரிகரத்தை அடைய நிரஸித்து, அதுக்குப் பொருந்தாதே வந்து எதிரிட, நிராயுதனாக மிடுக்கு அறுத்துப் பண்ணி விடச்செய்தேயும் பிற்றை[1] நாளும் வந்து, "என்னைக் கொல்ல அமையும்" என்ன, பின்னையிறே கொன்றது. விண்டாரையாயிற்று வெல்ல வல்லது. அநுகூல சங்கை உள்ள இடங்களில்[2] "**ஸுக்ரீவம் சரணம் கத:**" "**ஸுக்ரீவம் நாதம் இச்சதி**" என்று தான் சரணம் புகாநிற்கும். "பெருமாள், '**ந த்யஜேயம் கதஞ்சந**' '**ஏதத் வ்ரதம் மம**' என்று நின்றார்; மஹாராஜர், '**வத்யதாம்**' என்றே நின்றார்" என்று இவ்விடத்துக்கு பட்டர் அருளிச்செய்யும்படி. இருவரும் சரணாகத

---

*நினைத்து இங்கு வந்து கிடக்கிறான். அத்தன்மையினை எண்ணி ஈடுபடுபவர்கள் என் ஒருவனுக்கு மட்டும் அல்லாமல் என் குலத்துக்கும் தலைவர்கள் என்கிறார்.*

விண்டாரை வென்று - *நல்லுரை சொன்ன போதிலும்,* "நான் வணங்கேன்" *(ரா. யு. 36:11) என்று இருப்பாரையே அவன் வெல்வான். அவன் சீதையைக் கவர்ந்த இராவணனை உடனேயே கொன்றான் அல்லன். முதலில் வாலியை முடித்துக் கடலை அணை செய்து ஊரைச் சூழ்ந்து இலங்கையை அடைமதிள்படுத்தினான்[3]; "இனியேனும் திருந்தி நன்மை புரிவானோ?" என்று நினைத்து அங்கதப் பெருமாளைத் தூது செல்ல விடுத்து நல்லுரை சொல்லுவித்தான்; இராவணன் அதனையும் கேளாதொழிந்தான்; அதன் பின்னர்ப் பையல் கண் முகப்பே அவன் சுற்றத்தை அடைய[4] அழித்தான்; அது கண்டு, அவன் மனந் தாங்காமல் வந்து எதிரிட்டான்; பெருமான் அவனைப் படைக்கலங்கள் அற்றவன் ஆக்கி மிடுக்கு அறுத்து அரண்மனைக்குத் திரும்பிச் செல்ல விடுத்தான்; இப்படிச் செய்தபோதிலும் பிற்றை நாளும் வந்து, "என்னைக் கொல்ல அமையும்" என்று இருக்க, பின்னரே கொன்றான். விண்டாரையே வெல்ல வல்லான். நன்மை செய்பவர் ஆகலாம் என்று கருதப் பெறுவோரிடத்தில்,* "இராமபிரான் சுக்கிரீவனைத் தஞ்சம் புகுந்தார்" *(ரா. கி. 4:19) என்றும்* "சுக்கிரீவனைத் தலைவனாக விரும்புகிறார்" *(ரா. கி. 4 : 19) என்றும் சொல்வதற்கு ஏற்பத் தான் தஞ்சம் புகுவான்.* "பெருமாள், 'யான் ஒரு போதும் கைவிட மாட்டேன்' *(ரா. யு. 18 : 3) என்றும்* 'இப்படிச் சார்ந்தாரைக் கைவிடாது இருப்பது எனது கொள்கை' *(ரா. யு. 18 : 34) என்றும் தம் கருத்தில் ஊற்றமாய் நின்றார்; பேரரசர்[5],* 'கொல்லப் படட்டும்' *(ரா. யு. 17 : 27) என்றே நின்றார்" என்று இவ்விடத்துக்குப் பட்டர் உரை அருளிச்செய்வார். இருவரும் தங்கள் தங்களைப் புகலடைந்தாரைக்*

---

1. மற்றை. 2. உள்ளடங்களில்.
3. அடைமதிள்படுத்தல் - முற்றுகையிடுதல். 4. அடைய - ஒன்றொழியாமல் எல்லாவற்றையும்.
5. பேரரசர் - சுக்கிரீவன்; இவரை மகாராசர் என்று குறித்தல் வைணவ மரபு.

ரக்ஷணத்துக்குப் பிணங்குகிறார்கள். **ஆவி விலங்கு உண்ண** - அவர்கள் பேணிப் போந்த ப்ராணன்களைக் கழுகும் பருந்தும் பற்றி முடிக்க. அதாவது என் என்னில், குற்றுயிராகக் கிடக்கிற ஸமயத்திலே இவை வந்து மேலிட்டபடியாலே சேஷித்த ப்ராணங்கள் அவற்றோடே[1] போகையைச் சொல்லுகிறது. **மெல்லியலார் இத்யாதி** - ஸ்த்ரீகள் ஆதரிக்க அத்தாலே பேணி வளர்ந்து போந்த மார்விலே, துஷ்ட ஸத்வங்களைக் கண்ட நாய்கள் மேல்விழப் பிற்காலிக்குமாப் போலே பிற்காலித்துப் போந்த அக்நிதத்வமானது வந்து ப்ரவேசிக்க. **வெஞ் சமத்து மல் அகலம் அழல் ஏறக் கண்டாரை** - தனி இடத்திலே அநுகூல வேஷத்தோடே வந்து தோற்றி வஞ்சகரான பையல்களைக் கூட்டிக்கொடு வந்து ராஜபுத்ரர்களை அகற்றிக் களவிலே பிடித்துக்கொண்டு போன பையல்களைப் போல் அன்றிக்கே நேரே செவ்வைப் பூசலிலே. பிராட்டிதானும், ''உடோ, வாராய்! வீரர்கள் வர்த்திக்கும் வழியல்ல காண் நீ செய்தது'' என்றாள். **அழல் ஏறக் கண்டாரை** - ''**அத்ய வை நிர்ப்பயா லங்காம் ப்ரவிஷ்ட்டாஸ் ஸூர்ய ரஶ்மய:**'' என்கிறபடியே அவன் பட்டுக் கிடக்கத் ''துணுக்கு என்று எழுந்திருக்கும்'' என்று பார்த்து, 'உன் எல்லைக்கு உள்ளே ஆதித்ய கிரணங்கள் வந்து புகுராநின்றன கிடாய்'' என்றாளிறே. அப்படி மதிப்பனாய் இருக்கிற அவனுடைய மார்விலே அக்நியை ப்ரவேசிப்பித்து. **கடல் மல்லைத் தலசயனத்து உறைவாரை** - ஸாமத்துக்குச் செல்லாதாகில் அன்றோ தண்டத்துக்கு இழிய வேண்டுவது'' என்று வளைப்புக் கிடக்கிறவரை

---

*காப்பதற்குப் பிணங்குகிறார்கள் என்பது பட்டர் கருத்து.* **ஆவி விலங்கு உண்ண** *- அவர்கள் பேணிப் போந்த உயிர்களைக் கழுகும் பருந்தும் பற்றி முடிக்க. உயிர் களைக் கழுகும் பருந்தும் பற்றிக் கொல்வது எப்படி என்றால், குற்றுயிராகக் கிடக்கும் நேரத்திலே இவைவந்து மேலிட்ட படியாலே எஞ்சிநின்ற உயிர் அவற் றோடு நீங்குகிறது. அதனைச் சொல்கிறார்.* **மெல்லியலார் கொண்டாடும் மல் அகலம் அழல் ஏற** *- மகளிர் போற்றியதனாலே பேணி வளர்ந்து போந்த மார்பு; அதன் மேல் புலி முதலிய கொடிய விலங்குகளைக் கண்ட நாய்கள் மேல் விழு வதற்குப் பிற்காலித்தல்[2] போலே பிற்காலித்துப் போந்த நெருப்பானது வந்து சேர.* **வெஞ் சமத்து** *- தனி இடத்திலே நல்லவர் வடிவத்திலே வந்து தோற்றி வஞ்ச கரான பையல்களைக் கூட்டிக் கொண்டு வந்து அரசகுமரர்களை அகற்றிக் களவிலே பிடித்துக்கொண்டு போன பையல்கள் ஆகிய இராவணன் முதலான அரக்கர்களைப் போன்று செய்யாமல் நேரே செவ்வைப் பூசலிலே[3]. பெருமாட்டி சீதையும் இராவணனை நோக்கி, ''அடேய், வாராய்! வீரர்கள் வாழும் வழி அன்று காண் நீ செய்தது'' என்றாள்.* **அழல் ஏறக் கண்டாரை** - **''பகலவனின் கதிர்கள் இன்றே அச்சம் அற்று இலங்கையில் நுழைந்தன''** *(ரா. யு. 114 : 82) என்பது மண்டோதரியின் துயரப் பேச்சு. அவன் பட்டுக் கிடக்கத் ''துணுக்கென்று எழுந் திருக்கும்'' என்று பார்த்து, ''உன் எல்லைக்குள்ளே பகலவன் கதிர்கள் வந்து புகுதல் காணாய்'' என்கிறாள், மண்டோதரி. அப்படி மதிப்பனாய் இருக்கும் இராவணன் மார்பிலே நெருப்பைச் செலுத்தி.* **கடல் மல்லைத் தலசயனத்து உறை வாரை** *- ''நயவுரைக்குச் செல்லாதாகில்[4] அன்றோ நலிவித்தற்கு இழிய வேண்டும்''*

---

1. அவைத்தோடே.
2. பிற்காலித்தல் - பின்வாங்குதல். 3. செவ்வைப் பூசல் - அறப்போர். 4. செல்லுதல் - பயனளித்தல்.

**கொண்டாடும் நெஞ்சு உடையார் - "இவர் என்ன அபேக்ஷையாலே வந்து கிடக்கிறார், நமக்காகவிறே?" என்று, "நின்றி ருந்து வெஃக ணைக்கி டந்த தென்ன நீர்மையே" என்று இதிலே ஈடுபடுமவர்கள். எங்கள் குல தெய்வம் - "குலதைவதம் தத் பாதாரவிந்தம்" என்னும் அளவில் அல்ல எங்களது.**

---

*என்று எண்ணி வளைப்புக் கிடப்பாரை*[1]. கொண்டாடும் நெஞ்சு உடையார் - "*இவர் எதனை விரும்பி இங்கு வந்து கிடக்கிறார், நமக்காகத் தானே?*" *என்று எண்ணி*, "நின்றி ருந்து வெஃக ணைக்கி டந்த தென்ன நீர்மையே" (*தி. ச. வி. 63*) என்று *அவன் நீர்மையிலே ஈடுபடுவர்கள்.* அவர் எங்கள் குல தெய்வம் - "நம் குலத்துக்குத் தெய்வமாக இருக்கும் கமலக் கண்ணனுடைய அந்தத் திருவடித் தாமரைகளைப் பராவுவேன்" (*ஸ்தோ. ர. 6*) என்பது *ஆளவந்தார் அருளிச்செயல்.* எங்கள் *அன்பு இறைவன் திருவடியை வணங்கும் அவ் அளவோடு அமைவது அன்று; அதற்கும் மேலாக இறையடியார்களை வணங்கும் அளவினது என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

இராவணனை வெஞ்சமத்துக் கொன்றவன்

> " *கொடுவினைப் படைகள் வல்லையாய் - நீரிலே நெருப்பு எழுந்தாற் போலே, உனக்கு சேஷமாய் வைத்து ப்ரதிகூலித்தவர்கள் பக்கல் சீறி, ஆயுதம் எடுக்க வல்லையாய். அவன் மாட்டாதது சிலரை அழியச் செய்கையாயிற்று; 'யதி வா ராவணஸ் ஸ்வயம்' என்னுமவனிறே. கடலை அணை செய்து, ஊரைச் சூழப் போந்து, பின்னை அங்கதப் பெருமாளைப் புகவிட்டு, கையிலே வந்து அகப்பட்டவனை 'கச்சாநுஜாநாமி' என்று தப்பவிட்டது, 'இன்னம் ஒருகால் அநுகூலிக்குமோ?' என்று; 'நான் முடிந்தே போமித்தனை' என்று அவன் அதிலே முதிர நின்ற பின்பு, கண்ணுங் கண்ணீருமாயிறே நின்று கொன்றது. இவர்கள் பண்ணும் ப்ராதிகூல்யத்தாலே அழியச் செய்யும் இத்தனை போக்கி, தானாக அழியச் செய்யமாட்டான் ஆயிற்று* " *தி. வா. மொ. 9:2:10-36*

*(54)*

## 155

**பிச்சச் சிறுபீலிச் சமண்குண்டர் முதலாயோர்**
**விச்சைக் கிறைஎன்னும் அவ்இறையைப் பணியாதே**
**கச்சிக் கிடந்தவன்ஊர் கடல்மல்லைத் தலசயனம்**
**நச்சித் தொழுவாரை நச்சென்றன் நன்னெஞ்சே!**

**ப. ரை :** என்றன் நன் நெஞ்சே - *எனது சிறந்த மனமே!* பிச்சச் சிறுபீலி - *குடையையும் சிறிய மயில்தோகையையுமுடைய,* சமண் குண்டர் முதலாயோர் -

---

1. வளைப்புக் கிடப்பார் - சூழ்ந்து கிடப்பார். இக்காலத்தில் 'கேரா செய்தல்' என்று இதழ்கள் குறிப்பிடுவதற்கு நேரான நேரிய தமிழ்த்தொடர் இது.

அமணர் முதலியவர்கள், **விச்சைக்கு இறை என்னும் அவ் இறையை பணியாது** - எல்லாக் கலைகளுக்கும் தலைவன் என்று சொல்லும் அந்தத் தெய்வத்தை வணங்காமல், **கச்சிக் கிடந்தவன் ஊர் கடல் மல்லைத் தலசயனம்** - திருவெஃகாவிலே கண்வளர்ந்தருளுபவன் ஊரான திருக்கடல்மல்லையில் உள்ள தலசயனத்தை, **நச்சுத் தொழுவாரை நச்சு** - விரும்பி வணங்குபவர்களை நீயும் விரும்பித் தொழுவாய்.

**சி. கு :** சமண்குண்டர் முதலாயோர் என்பதனால் புத்த சமயத்தினரையும், உலகாயத சமயத்தினரையும் கொள்க. விச்சை - வித்தை. கச்சிக் கிடந்தான் - காஞ்சிபுரத்தில் திருவெஃகாவிலே கிடப்பவன்; அப்பெருமானுக்குச் சொன்ன வண்ணம் செய்த பெருமாள் என்பது பெயர்.

வியா : **அஞ்சாம் பாட்டு : பிச்சச் சிறு பீலிச் சமண் குண்டர்** - நிழலுக்கு ஈடாகக் கையிலே பிச்சத்தைப் பிடித்து ஒருகையிலே பீலித்தழையைப் பிடித்துக் கண்டார்க்கு, "இவர்களும் சில தார்மிகரோ" என்று தோற்றும்படி அநுகூல வேஷத்தைப் பரிக்ரஹித்து. **சமண் குண்டர்** - அமண தர்சநத்தைத் தரித்துக் கொண்டு நிற்கிற நீசர். குண்டு என்று ஆழமாய், அத்தால் தாழ்ச்சியைச் சொல்லிற்றாய், நீசர் என்றபடி. வேதபாஹ்யரான நீசர். **முதலாயோர்** - முதலானவர் என்றபடி. அவர்கள் துடக்கமான பௌத்தரையும், லோகாயதிகரையும் நினைக்கிறது. **விச்சைக்கு இறை என்னும்** - வேதைகஸமதிகம்யனான ஈஶ்வரனை இல்லை என்று ஸர்வஜ்ஞன் என்று ஒருவனைக் கல்பிப்பர்கள்; பின்னை அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்துக்கு ப்ரமாணம் தேட வேண்டி வரும்; அதுதன்னைத் தந்தாமுடைய உக்திகளாலே ஸாதிக்கப் பார்ப்பார்கள்; அது பின்னை அப்ரமாணமாய் அது இல்லையாய்க் காட்டும்; வித்யைக்கு நிர்வாஹகன் என்று ஒருவனைக் கொள்வர்கள். **அவ் இறையைப் பணியாதே** - அவ் இறை என்று முகத்தைத் திரியவைத்துச் சொல்

---

வி : **அஞ்சாம் பாட்டு : பிச்சச் சிறு பீலிச் சமண் குண்டர்** - அமணர்கள் நிழலுக்கு ஈடாக[1] ஒரு கையிலே பிச்சத்தைப் பிடித்திருப்பர்; பிறிதொரு கையிலே பீலித் தழையைப் பிடித்திருப்பர்; கண்டார்க்கு, "இவர்களும் அறவோர் சிலர் போலும்" என்று காட்சியளிப்பர். இத்தகைய செவ்விய கோலத்தை ஏற்று: **சமண் குண்டர்** - அமண சமயத்தை மேற்கொண்டிருக்கும் தண்ணியர். குண்டு - ஆழம்; அதனால் தாழ்ச்சியைச் சொல்வதாய்க் கொண்டு தண்ணியர் என்கிறார். **முதலாயோர்** - முதலானோர்; அமணர் தொடக்கமான புத்தரையும் உலகாயதரையும் நினைக்கிறார். **விச்சைக்கு இறை என்னும்** - மறைகளாலே தெளியத்தக்கவனான இறைவனை இல்லை என்று சொல்லி, முற்றறிவினன் என்று ஒருவனைப் படைத்துக் கொள்வர். பின்னை அவனுடைய முற்றறிவுடைமைக்கு மேற்கோள் தேட வேண்டி வரும்; அதனைத் தத்தம் உரைகளாலே நிலைநாட்டப் பார்ப்பர்; அவர்கள் உரைப்பவை தக்க மேற்கோள்களாக ஆகாமல் அப்படி ஒரு முற்றறிவினன் இல்லை என்பதனைக் காட்டும்; இப்படிச் சமணர்கள் கலைக்குத் தலைவன் என்று ஒருவனைக் கொள்வர்கள். **அவ்இறையைப் பணியாதே** - வெறுப்பாலே

---

1. நிழலுக்கு ஈடாக - நிழலுக்காக.

**கிறார். பணியாதே** - ஆப்தன் என்று கொண்டு அவர்கள் சொல்லுகிறவற்றை[1] ஆஶ்ரயித்து வர்த்தியாதே. **கச்சி இத்யாதி** - ஆஶ்ரிதர்க்காகத் திருவெஃகாவிலே படுக்கை மாறிக் கைமாறிக் கிடக்கிறவனை. ஓர் ஆஶ்ரிதனுக்காகத் தரைக்கிடை[2] கிடக்கிற தேசம். அவன் தனக்குப் பரம ப்ராப்யமாகக் கொண்டுவந்து நிற்கிற[3] தேசத்தை. **நச்சித் தொழுவாரை** - கர்த்தவ்யம் என்று தொழாநிற்கச் செய்தே புறம்பே நெஞ்சு அந்யபரமாய் இருக்கை அன்றிக்கே, ஆசையின் கார்யம் தொழுகை என்று தோற்றும்படி இருக்கை. திருக்கடல் மல்லையைத் தொழுகிற வர்களுடைய அவ்ஏற்றம் எல்லாம் நமக்கு உடலாக அவர்களை ஸ்நேஹி. **என்தன் நெஞ்சே** - இது சொல்லுகிறது என் சாபலமிறே. என்னுடைய உபதேச நிரபேக்ஷமாக முன்னே ப்ராவண்யத்தை உடையையாய் இருக்கிற உனக்குச் சொல்ல வேண்டாவிறே. எனக்கும்கூட வழி காட்டுகிற உனக்கு நான் வழி காட்டுகிறேனோ? **"மநஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:"** என்னக் கடவதிறே.

---

*முகத்தைத் திருப்பிக்கொண்டு, 'அவ்இறை' என்று சுட்டுகிறார். நம்பற்குரியவன் என்று கருதி அவர்கள் சொல்லும் நெறிகளைச் சார்ந்து நில்லாமல்.* **கச்சிக் கிடந்த வன் ஊர் கடல்மல்லைத் தலசயனம்** - *அடியார்க்காகத் திருவெஃகாவிலே படுக்கை மாறிக் கைமாறிக் கிடந்தவனை. பிறிதோர் அடியவர்க்காகத் தரைக்கிடை கிடக்கும் இடம்[4]. அத்திருவெஃகாவில் கிடந்தவன் தனக்கு மிகவும் அடையத் தக்கதாகக் கருதி வந்து நிற்கும் இடம்.* **நச்சித் தொழுவாரை** - *நெஞ்சம் புறம்பே பிறவற்றைச் சார்ந்து நிற்கத் தேவைக்குத்[5] தொழுதுகொண்டு நிற்காமல், விருப்பத்தின் விளைவு தொழுகை என்று தோற்றும்படி இருத்தல் நச்சித் தொழுவது ஆகும். அப்படித் திருக்கடல்மல்லையைத் தொழுவாருடைய அவ் ஏற்றமெல்லாம் நமக்கு உடலாக அவர்களை விரும்புவாய்.* **என்தன் நன் நெஞ்சே** - *யான் இதனைச் சொல்வது என் ஆசையாலேயே. என் அறிவுரையை வேண்டாமல் எனக்கு முன்னே அன்பு கொண்டிருக்கும் உனக்குச் சொல்ல வேண்டா அன்றோ! எனக்கும்கூட வழிகாட்டும் உனக்கு நான் வழிகாட்ட முடியுமா?* **"மனிதர்களின் உலக வாழ்க்கைக்கும் வீடுபேற்றிற்கும் மனமே காரணம்"** *(வி. பு. 6) என்பர் அன்றோ ஆன்றோர்.*

(55)

## 156

**புலங்கொள்நிதிக் குவையோடு புழைக்கைமா களிற்றினமும்**
**நலங்கொள்நவ மணிக்குவையும் சுமந்தெங்கும் நான்றொசிந்து**
**கலங்கள்இயங் கும்மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்**
**வலங்கொள்மனத் தார்அவரை வலங்கொள்என் மடநெஞ்சே!**

---

1. சொல்லுகிறவைத்தை. 2. தறைக்கிடை. 3. வந்துகிடக்கிற.
4. தரைக்கிடை கிடக்கும் இடம் - கடல்மல்லை. அடியவர் - புண்டரீகாட்சர். 5. தேவை - கடமை; முறைமை.

**156.** 1 : 1 புலன்கொள்நிதிக். 1 : 3 புழைக்கைம்மா.

**ப. ரை :** என் மட நெஞ்சே! - எனக்குக் கீழ்ப்படிந்திருக்கும் மனமே! **புலங்கொள் நிதிக் குவையோடு** - பொறிகளைக் கவருகின்ற பொற் குவியல்களோடு **புழைக்கை மா களிற்றினமும்** - துளைபொருந்திய கையையுடைய பெரிய யானைக் கூட்டத்தையும், **நலங்கொள் நவமணிக் குவையும்** - நல்ல நவமணிக் குவியல்களையும், **சுமந்து** - தாங்கிக்கொண்டு, **எங்கும்** - பாரித்த இடமெங்கும், **நான்று ஒசிந்து** - தாழ்ந்து அசைந்து, **கலங்கள் இயங்கும்** - கப்பல்கள் சுற்றிக்கொண்டிருக்கும், **மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்** - வளம் நிறைந்த கடலின் கரையில் உள்ள மல்லையில் அமைந்த தலசயனத்தை. **வலங்கொள் மனத்தார்அவரை** - சுற்றிவர வேண்டும் என்னும் எண்ணம் உடையவர்களை, **வலங் கொள்** - வலமாகச் சுற்றி வருவாய்.

**சி. கு :** நான்று - 'நால்' என்னும் வினையடியாய்ப் பிறந்த செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம். நாலுதல் - தொங்குதல்; ஈண்டுத் தாழ்ந்து அசைதல்.

வியா : **ஆறாம் பாட்டு : புலங்கொள் நிதிக் குவையோடு** - கண்டார்க்கு, "மமேதம்" என்னவேண்டும்படி இருக்கிற பொற்குவையோடே. **புழைக் கை மா களிற்றினமும்** - துளையை உடைத்தான கையையுடைய பெரிய மத்தகஜங்களினுடைய திரளும். **நலம் இத்யாதி** - நவ ரத்நத் திரளும். நலங் கொள் என்கிறது இக்கரையிலே கொடுவந்து ஒருவர் கையிலே இட்டு நன்மை பார்க்க வேண்டாதபடியாய் இருக்கை. **சுமந்து** - நற்சரக்காகையாலே, "பொறுக்கும் பொறாது" என்று பாராதே ஏறடுவர்கள் ஆயிற்று. **சுமந்து எங்கும் நான்று ஒசிந்து** - ஏறின சரக்கின் பெருமையாலே எங்கும் தாழ்ந்து ஓசிந்து, "அங்கே இற்றது, இங்கே முறிந்தது" என்னும்படி பயத்தோடே மரக்கலங்களானவை ஸஞ்சரியாநின்றுள்ள பெருமையை உடைத்தான கடல்மல்லைத் தலசயனம். இது கொண்டு தாம் விநியோகம் கொள்ளுகைக்காகச் சொல்லுகிறார் அன்றிறே. அச்சோலையோபாதி

---

வி : **ஆறாம் பாட்டு :** புலங்கொள் நிதிக் குவையோடு - கண்டார்க்கு "இஃது எனக்கு" என்று சொல்லவேண்டும்படி இருக்கும் பொற்குவையோடே. **புழைக் கை மா களிற்றினமும்** - துளை பொருந்திய கையையுடைய பெரிய களிறுகளின் திரளும். **நலங்கொள் நவமணிக் குவையும்** - ஒன்பது வகை மணித் திரளும். நலங் கொள் என்பது இக்கரையிலே கொண்டுவந்து ஒருவர் கையிலே இட்டு நன்மை பார்க்க வேண்டாதவாறு இருக்கை. **சுமந்து** - நற்சரக்காகையாலே[1], "கப்பல் இவ்வளவு தாங்கும், இவ்வளவு தாங்காது" என்று பாராமல் நிறைய ஏற்றி வைத்தனர். **எங்கும் நான்று ஒசிந்து - கலங்கள் இயங்கும் கடல்மல்லைத் தலசயனம்** - ஏறின சரக்கின் பெருமையாலே எங்கும் தாழ்ந்து ஒசிந்து, "அங்கே இற்றது, இங்கே முறிந்தது" என்னும்படி அச்சத்தோடே மரக்கலங்கள் இயங்கும். இத்தகைய பெருமையை உடையது கடல்மல்லைத் தலசயனம். இப்படி மரக் கலத்தைப் போரப் பொலியச் சொல்வது எதற்காக என்றால், இப்பொருள் களைக் கொண்டு தாம் பயன்பெறுவதற்காகச் சொல்கிறார் அல்லர். அச்சோலை

---

1. நற்சரக்கு - நல்லபொருள்.

**அங்குத்தைக்கு அலங்காரம் என்று இவர் ஆதரிக்கிறது. வலங்கொள் மனத்தார்அவரை - திருக்கடல் மல்லையிலே சுழிக்கும் நெஞ்சு உடையவர்களை. "பிள்ளை திருநறையூர் அரையரும் பட்டருமாக ப்ரதக்ஷிணம் பண்ணும்போது நான் பின்னே போவேன்[1]; நம்மைப் போலே தேவைக்குப் பரகு பரகு என்று வருகை அன்றிக்கே திருமாளிகைகளையும் திருக்கோபுரங்களையும் கண்ணாலே பருகுவாரைப் போலே பார்த்துக்கொடு போகும்படி காண்" என்று நஞ்சீயர் அருளிச்செய்வர். அவரை வலங்கொள் - நமக்கு அவர்கள் நின்ற நிலை போராது, அவர்கள் பக்கல் அநுவர்த்தத்திலே அந்வயிக்க வேணும். என் மட நெஞ்சே - என்னோடு ஒரு மிடறாய் எனக்கு பவ்யமான நெஞ்சு என்கிறார்.**

---

*யைப் போலே அவ் இடத்திற்கு அவையும் அழகுசேர்ப்பனவாய் இருக்கின்றன என்பதனாலே ஆதரிக்கிறார் என்க. வலங்கொள் மனத்தார்அவரை - திருக்கடல் மல்லையிலே சுழிக்கும் நெஞ்சு உடையவர்களை. "பிள்ளை திருநறையூர் அரையரும் பட்டருமாகக் கோயிலை வலம் வருவார்கள்; அதுபோது நான் பின்னே போவேன்; அவர்கள் நம்மைப் போலே தேவைக்குப்[2] பரகு பரகென்று[3] வாராமல் திருமாளிகைகளையும் திருக்கோபுரங்களையும் கண்ணாலே பருகுவாரைப் போலே பார்த்துக்கொண்டு போவார்கள் கண்டாய்" என்று நஞ்சீயர் அருளிச்செய்வர். இதுவன்றோ நெஞ்சு சுழிக்கும் முறை. மனத்தார்அவரை வலங்கொள் - நமக்கு அவர்கள் நின்ற நிலை போதாது; அஃதாவது அவர்களைப் போலக் கடல் மல்லையை வலமாக வருதல் போதாது. அவர்கள்பக்கல் பணிந்து ஒழுகுவதிலே ஈடுபட வேண்டும். என் மட நெஞ்சே - என்னோடு ஒருமிடறாய்[4] எனக்குக் கீழ்ப் படிந்துள்ள நெஞ்சே என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

**வலங்கொள்ளல்**

> *" வலஞ்செய்து - பிள்ளை திருநறையூர் அரையரும் பட்டரும் ப்ரதக்ஷிணம் பண்ணாநிற்கப் பின்னே ஸேவித்துக்கொண்டு போனேன்; அல்லாதார் கடுங்குதிரை போலே வாராநிற்க, இவர்கள் திருக்கோபுரங்களையும் திருமாளிகைகளையும் கண்ணாலே பருகுவாரைப் போலே பார்த்துக் கொண்டுவந்தார்கள்" என்று நஞ்சீயர் அருளிச்செய்வர் "*
>
> *தி. வா. மொ. 2:10:8-36*
>
> *(56)*

## 157

**பஞ்சிச் சிறுகூழை உருவாகி மருவாத**
**வஞ்சப்பெண் நஞ்சுண்ட அண்ணல்முன் நண்ணாத**
**கஞ்சைக் கடந்தவன்ஊர் கடல்மல்லைத் தலசயனம்**
**நெஞ்சில் தொழுவாரைத் தொழுவாய்என் தூய்நெஞ்சே!**

---

1. போனேன்.
2. தேவை - கடமை. 3. பரகு பரகு என்று வருதல் - விரைந்து வருதல். 4. ஒரு மிடறாய் - ஒன்றுகூடி.

**ப. ரை :** **என் தூய் நெஞ்சே!** - எனது தூய்மையான மனமே! **பஞ்சிச் சிறு கூழை உரு ஆகி** - பஞ்சு போலும் மென்மையான சிறிய மயிர்முடியை உடைய குழந்தையாகத் தோன்றி, **மருவாத வஞ்சப் பெண் நஞ்சு உண்ட அண்ணல்** - பொருந்தாத வஞ்சனையை உடையவளான பூதனையின் மார்பில் இருந்த விடத்தை உண்ட தலைவனும், **முன்** - முன் ஒரு காலத்தில், **நண்ணாத கஞ்சைக் கடந்தவன்** - தன்னோடு பொருந்தாத கம்சனை வென்று முடித்தவனும் ஆகிய பெருமானுடைய, **ஊர்** - ஊரான, **கடல்மல்லைத் தலசயனம் நெஞ்சில் தொழுவாரை** - திருக்கடல்மல்லையை நெஞ்சாரத் தொழுகின்ற அடியார்களை, **தொழுவாய்** - நீ தொழுதிடுவாய்.

**சி. கு :** கூழை - மயிர்முடி. கஞ்சு - கஞ்சன்; விகுதியின்றி வந்தது. பஞ்சிச் சிறு கூழை உரு ஆகி என்பது பூதனையைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

வியா : **ஏழாம் பாட்டு :** **பஞ்சிச் சிறு கூழை உருவாகி** - பஞ்சு போலே ம்ருதுவாய்க் குழன்று[1] பிடித்துக் கட்ட ஒண்ணாதபடியான[2] மயிர்முடியையுடைய பாலருடைய வடிவை உடையனாய். **"பெய்யும் பூங்குழல் பிள்ளை"** என்னக் கடவதிறே. அன்றிக்கே, கூழை என்றால் ஸ்த்ரீகளுடைய குழலுக்குப் பேராகையாலே ம்ருதுவாய்க் குழன்று கூட்டிப் பிடித்துக் கட்ட[3] ஒண்ணாதபடியான[4] மயிர்முடியையுடைய பூதனையுடைய மயிர் முடிதன்னைச் சொல்லிற்றாகவும் ஆம். யசோதைப்பிராட்டி வடிவழகைக்கொடு வருகிறாளாகையாலே தன்னைப் பேணிக் கொண்டு வருமிறே. சிறு கூழை என்றதுக்குச் செய்வது என் என்றால், எல்லாம் செய்தாலும் பின்னையும் பாறிப் பரந்து கிடக்குமிறே. **மருவாத வஞ்சப் பெண்** - ஹ்ருதயத்தில் ப்ராதிகூல்யத்தை உடையளாய், அதுதன்னை ஆநுகூல்ய

---

வி : ஏழாம் பாட்டு : **பஞ்சிச் சிறு கூழை உரு ஆகி**- பஞ்சு போலே மென்மையாய்க் குழன்று பிடித்துக் கட்ட ஒண்ணாதவாறு உள்ள மயிர்முடியை யுடைய குழந்தையின் வடிவை உடையவனாய்.

> "பெய்யும் பூங்குழல் பேய் முலை உண்
> பிள்ளைத் தேற்றமும்" (தி. வா. மொ. 5:10:3)

என்று நம்மாழ்வாரும் குறிப்பர். அல்லது, கூழை என்பது மகளிர் கூந்தலுக்குப் பெயராகும்; ஆகையால் மென்மையாய்க் குழன்று பிடித்துக் கட்ட ஒண்ணாதபடி அமைந்த பூதனையின் மயிர்முடியைச் சொன்னதாகவும் கொள்ளலாம். ஏனெனில் பூதனை அசோதைப் பிராட்டியின் வடிவழகைத் தான் ஏறிட்டுக் கொண்டு வருகிறாள்; அதனால் தன்னைப் பேணிக்கொண்டு[5] வருவாளன்றோ! 'சிறு கூழை' என்று குறித்தது எதற்காக என்றால், எண்ணெய் பூசி முடித்தல் முதலிய எல்லாம் செய்தாலும் பின்னையும் பாறிப் பரந்து[6] கிடக்கும் என்பதனைத் தெரிவித்தற்காகவாம். **மருவாத வஞ்சப் பெண்** - அகவாயில் தீம்பு உடையவளாய், அதனை

---

1. ம்ருதுவாய்ச் சுழன்று. 2. உண்ணாதபடியான. 3. சுழன்று பிடித்துக் கட்ட. 4. உண்ணாதபடியான.
5. பேணிக்கொண்டு - ஒப்பனை செய்து கொண்டு. 6. பாறி - கண்டபடி கலைந்து.

பாவத்தாலே தன்னைப் பேணிக்கொடு வருமிறே. சமைந்து வந்த பூதனையுடைய **நஞ்சு உண்ட அண்ணல்** - அவளுடைய விஷத்தை அமுதுசெய்த ஸ்வாமி. **"ஸ்தந்யந் தத் விஷ ஸம்மிஶ்ரம் ரஸ்யம் ஆஸீஜ் ஜகத் குரோ:"** என்னக் கடவதிறே. ஜகத் சேஷியான தன்னையிறே நோக்கித் தந்தது. **முன் நண்ணாத இத்யாதி** - முன்பு கம்ஸன் வரவிட்ட[1] விரோதிகளை நிரஸித்தபடியைச் சொல்லிற்று. விரோதி வர்க்கத்துக்கு வேர்ப்பற்றான இப்பையல்தன்னைக் கிழங்கு எடுத்தபடியைச் சொல்லுகிறது. "ஒரு படியாலும் கிட்டோம்" என்று இருந்த கம்ஸனை நிரஸித்து அநுகூலர்க்குத் துணையாக வேணும் என்று வந்து கிடக்கிறவனுடைய திருக்கடல்மல்லையை. **நெஞ்சில் தொழுவாரை** - வாய்விட க்ஷமர் அன்றிக்கே இருக்குமவர்களை. **தொழுவாய்** - அந்தத் திருக்கடல்மல்லையையும் அங்குக் கிடக்கிற நாயனாரையும் தேடி இராதே தொழுவார்கள் உத்தேஶ்யராய்த் தொழு. **என் தூய் நெஞ்சே** - ததீய சேஷத்வத்தளவிலே நிற்கும்படியான சுத்தியை உடையையிறே நீ.

---

*நன்மை புரியும் எண்ணத்தாலே புறத்தே தெரியாமல் பேணிக்கொண்டு வருகிறாள். அஃதாவது சமைந்து வந்த[2] பூதனை.* **நஞ்சு உண்ட அண்ணல்** - *அவளுடைய நஞ்சினை அமுதுசெய்த[3] தலைவன்.* **"உலகின் தலைவன் ஆகிய விட்டுணுவுக்கு நஞ்சு கலந்த பால் சுவைக்கத் தக்கதாய் இருந்தது"** *என்கிறது விட்டுணுபுராணம் (5:6). உலகின் தலைவன் ஆகிய தன்னையன்றோ அவன் தீங்கினின்றும் பாதுகாத்துத் தந்தது.* **முன் நண்ணாத கஞ்சைக் கடந்தவன் ஊர் கடல்மல்லைத் தலசயனம்** - *முன்பு கம்சன் வரவிட்ட பகைவர்களை முடித்த திறத்தைச் சொல்லிற்று. இதுபோது பகைக் கூட்டத்திற்கு வேர்ப்பற்றான[4] கம்சனாகிய இப்பையலைக் கிழங்கு எடுத்த[5] தன்மையைச் சொல்லுகிறது. "ஒரு படியாலும் கண்ணனைக் கிட்டோம்" என்று இருந்த கம்சனை அழித்துப் பாங்கானார்க்குத் துணையாக வேண்டும் என்று வந்து கிடப்பவனது திருக்கடல்மல்லையை.* **நெஞ்சில் தொழுவாரை** - *நெஞ்சால் தொழுது தங்கள் வணக்கத்தை வாய்விட்டுச்[6] சொல்ல ஒண்ணாதவர்களாய் இருப்பவர்களை.* **தொழுவாய்** - *அந்தத் திருக்கடல் மல்லையையும் அங்குக் கிடக்கும் நாயனாரையும் தேடிக்கொண்டு இருக்காமல் தொழுவார்களைத் தொழத்தக்கவராய்க்கொண்டு தொழு.* **என் தூய் நெஞ்சே** - *இறை அடியார்க்குப் பணிசெய்யும் வகையில் நிற்கும் தூய்மையை உடையையன்றோ நீ.*

## ஒப்புமைப் பகுதி

### பஞ்சிச் சிறுகூழை உருவாகி வஞ்சப்பெண் நஞ்சுண்டவன்

> *" பெய்யும் பூங்குழல் பேய்முலை உண்ட - பெய்யும் பூங்குழல் பிள்ளை என்று அங்கே சொல்லுதல்; அன்றிக்கே, பெய்யும் பூங்குழல் பேய் என்று பூதனையோடே கூட்டுதல். பிணக்கோலமாக ஒப்பித்து வந்தாள் காணும் 'பிள்ளை அனுங்க ஒண்ணாது' என்று தாய்மார் எப்போதும் ஒப்பித்த*

---

1. விட்ட.
2. சமைந்துவருதல் - ஒப்பனை செய்து பக்குவமாக வருதல். 3. அமுது செய்தல் - உண்ணல்.
4. வேர்ப்பற்று - வேர்ப்பகுதி. ஈண்டு வேர்ப்பகுதி போல முதன்மையான என்று பொருள்படும்.
5. கிழங்கு எடுத்தல் - முற்றிலும் அழித்தல். 6. வாய் விடுதல் - வாய் திறத்தல்.

படியே இருப்பர்கள் ஆயிற்று, இவளும் அப்படியே வந்தாள் ஆயிற்று. பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சியிறே " தி.வா. மொ. 5:10:3-36

" கஞ்சனை வலை வைத்த அன்று - விபூதி அழிந்தால் அவன் உளனாக உண்டாக்கிக் கொள்ளலாம். அவனுக்கு ஒரு நலிவு பிறந்தால் பின்னை ஒன்றும் இல்லையிறே. 'ஸ்தந்யம் தத் விஷ ஸம்மிஸ்ரம் ரஸ்யமாஸீஜ் ஜகத் குரோ:' விஷந்தானே தாரகமான பின்பாய்த்து ஜகத்துக்கு ஒரு ஶேஷி உண்டாய்த்து. விஷம் பாதகமாவது அம்ருதம் தாரகமாவது என்னும் மர்யாதைகள் கட்டினவன் பக்கல் அது காரியம் செய்யமாட்டாதே "

நாச். தி. 3:9 பெ. உரை.

(57)

## 158

**செழுநீர் மலர்க்கமலம் திரைஉந்து வன்பகட்டால்**
**உழுநீர் வயல்உழவர் உழப்பின்முன் பிழைத்தெழுந்த**
**கழுநீர் கடிகமழும் கடல்மல்லைத் தலசயனம்**
**தொழுநீர் மனத்தவரைத் தொழுவாய்என் தூய்நெஞ்சே!**

**ப. ரை :** **என் தூய் நெஞ்சே** - எனது தூய்மையான மனமே! **உழுநீர் உழவர்** - உழுவதனையே இயல்பாக உடைய உழவர்கள், **செழுநீர்த் திரை மலர்க் கமலம்** - அழகிய நீர் அலைகளையும் தாமரை மலர்களையும், **உந்து வன் பகட்டால்** தள்ளுகின்ற வலிய எருதுகளைப் பூட்டி, **வயல் உழ** - வயலை உழுதிட, **பின் முன் பிழைத்து எழுந்த கழுநீர்** - அவ்உழவுக்குப் பின்னும் முன்னும் தப்பி வளர்ந்த செங் கழுநீர் மலர்கள், **கடிகமழும் கடல்மல்லைத் தலசயனம்** - மணம் வீசுகின்ற திருக்கடல்மல்லையில் உள்ள தலசயனத்தை, **தொழுநீர் மனத்தவரை** - வணங்கு வதனையே இயற்கையாக உடைய நெஞ்சு உடையவர்களை, **தொழுவாய்** - வணங்குவாய்.

**சி. கு :** 'செழுநீர்த் திரை' என்றும் 'உழுநீர் உழவர்' என்றும் 'வயல்உழ' என்றும் மாற்றிக் கூட்டுக. மலர்க் கமலம் - கமலமலர் என்பது முன்பின்னாக மாறிவந்தது; மலர் ஆகிய தாமரை என்று பொருள்படும். பெரியவாச்சான் பிள்ளை மலர்ந்த தாமரை என்று உரை வரைந்துள்ளார். 'மலர் கமலம்' என்பது அவர் கொண்ட பாடம் போலும்! உழப்பின்முன் என்பதனை, உழப்பின் முன் என்று கொண்டு உழுது முடிப்பதற்கு முன்னே என்று பொருள் கூறி, செழுநீரில் மலர்ந்த கமலமும் உழவர் உழுது முடிப்பதற்கு முன்னே மீண்டும் உயிர்பெற்று எழுந்த கழுநீரும் மணக்கும் கடல்மல்லை என்று ஆற்றொழுக்காகப் பொருள் கொள்வது பொருந்தும். உழப்பு - உழவு; அதனோடு இன் சாரியை வந்து உழப்பின் என்று ஆயிற்று. மலர்க்கமலமும் கழுநீரும் கடிகமழும் கடல்மல்லை என்று வினைமுடிபு செய்க. அன்றேல், உழப்பின்முன் என்பதனை உழப் பின் முன்

---

**158.** 1 : 3 திரை உந்த; திரை உந்தி.

என்று கொண்டு, மலர்க்கமலமும், உழவர் உழுதுகொண்டிருக்க அவ்இடத்திற்கு முன்னும் பின்னும் உயிர்த்தெழுந்த கழுநீரும் கடிகமழும் என்க.

வியா : **எட்டாம் பாட்டு : செழுநீர் இத்யாதி** - மலர்ந்த தாமரைகளையும் ஜல ஸம்ருத்திகளையும் உடைத்தாய் ஆயிற்று வயல் இருக்கும்படி. இவ் வயலைத் தரைகண்டு[1] உழுகைக்காக அத்திரைகளையும் தாமரைகளையும் காலாலே தள்ளுவர்கள். **வன் பகட்டால்** - ப்ரளயத்திலேயும் உழவற்றாய் ஆயிற்று அவ்எருதுகள் இருப்பது. **உழுநீர் வயல் உழவர் உழ** - எப்போதும் நடுவது உழுவதாய்ப் போருகையாலே உழுவதே ஸ்வபாவமாக உடைத்தான வயலைக் கர்ஷகரானவர்கள் உழ. **பின் முன் பிழைத்து எழுந்த கழுநீர் கடி கமழும்** - இவர்கள் உழாநிற்கப் பின்னும் முன்னும் தப்பிநின்ற செங்கழுநீரானது இவர்கள் ஶ்ரமத்தை ஆற்றுகைக்கு உறுப்பாகப் பரிமளத்தை ப்ரவஹியாநிற்கும். அன்றிக்கே, இவர்கள் முன்னே உழுதுகொண்டு போகாநிற்கப் பின்னே தப்பிநின்ற கழுநீர்[2] கடி கமழும் என்றும் ஆம். அங்ஙன் அன்றிக்கே, **வயல் உழவர் உழப் பின் முன் பிழைத்து எழுந்த** - முன்பே ஒருக்கால் உழுது வைப்பர்களிறே! அப்போது தப்பி நின்ற செங்கழுநீர் அலருகைக்கு ஒரு ஸஞ்சாரம் பண்ணினாப் போலே இருக்கும். **கடல்மல்லை இத்யாதி** - திருக்கடல்மல்லையைத் தொழுகை காதாசித்கமாகை தவிர்ந்து ஸ்வபாவமாம்படியான நெஞ்சை உடையாரை. **தொழுவாய் என் தூய் நெஞ்சே** - அவர்களுக்கு ஊரைத் தொழுகை யாத்ரையானவோபாதி அவர்கள் தங்களைத் தொழுகை கிடாய் உனக்கு யாத்ரை. பாகவத சேஷத்வம் நன்று என்று உபதேசிக்கலாம்படியிறே உன் சுத்தி இருக்கிறது.

---

வி : எட்டாம் பாட்டு : **மலர்(க்) கமலம் செழுநீர் திரை உந்து** - *மலர்ந்த தாமரைகளையும் நீர் வளத்தையும் உடையதாய் இருக்கிறது வயல். இவ்வயலைத் தரைகண்டு உழுவதற்காக அத்திரைகளையும் தாமரைகளையும் உழவர்கள் காலாலே தள்ளுவர்கள்.* **வன் பகட்டால்** - *பெரு வெள்ளத்திலும் உழவல்ல ஆற்றல் உடையவை அவ்எருதுகள்.* **உழுநீர் உழவர் வயல் உழ** - *எப்போதும் நடுவது, உழுவதாய்ச் செல்வதனாலே உழவே இயற்கைத்தன்மையாக அமையப் பெற்ற வயலை உழவர்கள் உழ.* **பின் முன் பிழைத்து எழுந்த கழுநீர் கடி கமழும்** - *இவர்கள் உழுதுகொண்டிருக்கப் பின்னும் முன்னும் தப்பிநின்ற செங்கழுநீர்ப் பூக்கள் இவர்கள் களைப்பினை ஆற்றுவதற்கு உறுப்பாக மணத்தைப் பெருக்கும். அல்லது, இவர்கள் முன்னே உழுதுகொண்டு செல்லப் பின்னே தப்பிநின்ற கழுநீர்ப் பூக்கள் கடிகமழும் என்றும் சொல்லலாம். அவ்வாறன்றி,* **"முன் வயல் உழவர் உழப் பின் பிழைத்து எழுந்த"** *என்று கொண்டு முன்பே ஒருகால் உழுது வைப்பர் களன்றோ! அப்போது தப்பிநின்ற செங்கழுநீர் அலருவதற்கு ஒருமுறை களைபறித்து விட்டாற் போலே இருக்கும்.* **கடல்மல்லைத் தலசயனம் தொழுநீர் மனத்தவரை** - *திருக்கடல் மல்லையைத் தொழுவது எப்பொழுதோ ஒரு பொழுதாக இருத்தல் தவிர்ந்து இயற்கையாக ஆகும்படி அமைந்த நெஞ்சு உடையாரை.* **தொழுவாய் என் தூய் நெஞ்சே** - *அவர்களுக்கு ஊரைத் தொழுகை பணியாய் அமைந்தது போலே அவர்களைத் தொழுகை உனக்குப் பணி ஆகும். அடியவர்க்கு அடியராய் இருக்கும் தன்மை நன்று என்று பிறர்க்கு அறிவுரை வழங்கும் வகையிலன்றோ உன் தூய்மை இருக்கிறது.* *(58)*

---

1. தறை கண்டு. 2. செங்கழுநீர்.

## 159

பிணங்கள்இடு காடதனுள் நடமாடு பிஞ்ஞகனோடு
இணங்குதிருச் சக்கரத்தெம் பெருமானார்க் கிடம்விசும்பில்
கணங்கள்இயங் கும்மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்
வணங்குமனத் தாரவரை வணங்கென்றன் மடநெஞ்சே!

ப. ரை : என்றன் மட நெஞ்சே! - பிணங்கள் இடு காடதனுள் - பிணங்களை வைக்கின்ற சுடுகாட்டிலே, நடம் ஆடு பிஞ்ஞகனோடு - கூத்தாடும் உருத்திரனோடு இணங்கு திருச்சக்கரத்து எம்பெருமானார்க்கு இடம் - பொருந்திய திருவாழியாழ் வானையுடைய எம் தலைவனுக்கு இடமாக இருப்பதும், விசும்பில் கணங்கள் இயங்கும் மல்லை - வானவர்கள் உலவுகின்ற பெருமை உடையதும் ஆகிய, கடல் மல்லைத் தலசயனம் - திருக்கடல்மல்லைத் தலசயனத்தை, வணங்கு மனத்தார் அவரை வணங்கு - வணங்கும் நெஞ்சுடையவர்களை வணங்குவாய்.

சி. கு: பிஞ்ஞகன் - தலைக்கோலம் உடையவன்; ஈண்டு அதனையுடைய சிவனை உணர்த்திற்று.

வியா : ஒன்பதாம் பாட்டு : பிணங்கள் இத்யாதி - மனிச்சுக் கலவாத நெஞ்சை உடைய ருத்ரனோடேகூட; ஶ்மசாந பூமியிலே ஆடாநின்றுள்ள ருத்ரனோடேகூட. அபிமாநோபஹததரானவர்களுக்கும் நித்ய ஸூரிகளுக்கும் ஒக்கத் திருமேனியிலே இடம் கொடுத்து[1] நிற்கும் நீர்மையைச் சொல்லுகிறது. திருவாழி யாழ்வானைச் சொல்லுகிற இடம் நித்ய ஸூரிகளுக்கும் உபலக்ஷணம். விசும்பில் கணங்கள் இயங்கும் மல்லை - இங்கே வந்து சாய்ந்தருளின நீர்மையை அநுஸந் தித்து நித்ய ஸூரிகள் ஸஞ்சரிக்கிற படியைச் சொல்லிற்றாகவும் ஆம். அன்றிக்கே, ஆகாசத்தில் போக ப்ரதாநரான யக்ஷ கந்தர்வர்கள் சஞ்சரியாநின்றுள்ள பெருமை யையுடைய திருக்கடல்மல்லையை. வணங்கும் மனத்தார்அவரை - தொழும்

---

வி : ஒன்பதாம் பாட்டு : பிணங்கள் இடு காடதனுள் நடம் ஆடு பிஞ்ஞக னோடு இணங்கு திருச்சக்கரத்து எம்பெருமானார்க்கு இடம் - மனிச்சுக்[2] கலவாத நெஞ்சையுடைய உருத்திரனோடு; சுடுகாட்டிலே ஆடுகின்ற உருத்திரனோடு. செருக்கராய் மயங்கி இருப்பார்க்கும் அயர்வறும் அமரர்களுக்கும் ஒக்கத் திருமேனி யிலே இடங்கொடுத்து நிற்கும் நீர்மையைச் சொல்லுகிறது. திருவாழியாழ் வானைச்[3] சொல்வது ஏனைய அமரர்களையும் குறிக்கும் இனக் குறிப்பு ஆகும். விசும்பில் கணங்கள் இயங்கும் மல்லைக் கடல்மல்லைத் தலசயனம் - இங்கே வந்து சாய்ந்தருளிய நீர்மையை எண்ணி அமரர்கள் உலவுவதனைச் சொல்கிறது எனலாம். அல்லது, இன்ப நுகர்ச்சியையே தலைமையாகக் கொண்டவரான இயக்கர், கந்தருவர் ஆகியோர் விண்ணில் திரிகின்ற பெருமையையுடைய திருக் கடல்மல்லையை. வணங்கும் மனத்தார்அவரை - தொழும் நெஞ்சுடையாரை.

---

**159.** 1 : 2 காடுதன்னுள்; காடதனில்.

1. குடுத்து.

2. மனிச்சு - மனிதத்தன்மை. 3. திருவாழியாழ்வான் - பெருமான் கையில் உள்ள சக்கரம். அதனை ஆழ்வானாகச் சொல்வது வைணவ மரபு.

**நெஞ்சு உடையாரை. வணங்கு மட நெஞ்சே - அவர்கள் தொழும் விஷயத்தைத் தேடி இராதே உனக்குத் தொழுகைக்கு விஷயம் அவர்கள்தாங்கள் கிடாய்.**

---

வணங்கு என்றன் மடநெஞ்சே - *அவர்கள் தொழும் இறைவனைத் தேடிக்கொண்டு இருக்காமல் உனக்குத் தொழுதற்கு உரியவர்கள் அவர்களே என்பதனைக் காண்பாய்.*

*(59)*

## 160

**கடிகமழும் நெடுமறுகில் கடல்மல்லைத் தலசயனத்து**
**அடிகள்அடி யேநினையும் அடியவர்கள் தம்அடியான்**
**வடிகொள்நெடு வேல்வலவன் கலிகன்றி ஒலிவல்லார்**
**முடிகொள்நெடு மன்னவர்தம் முதல்வர்முதல் ஆவாரே.**

ப. ரை : கடி கமழும் நெடு மறுகில் - *மணம் வீசுகின்ற நீண்ட தெருக்களையுடைய,* கடல்மல்லைத் தலசயனத்து - *திருக்கடல் மல்லையில் எழுந்தருளியிருக்கும்,* அடிகள் அடியே நினையும் - *பெருமானுடைய திருவடிகளையே இடைவிடாமல் எண்ணும்,* அடியவர்கள்தம் அடியான் - *அடியார்க்கு அடியவனும்,* வடிகொள் நெடு வேல்வலவன் - *கூர்மையுடைய நெடிய வேலைக்கொண்டு போரிடுவதில் வல்லவனும்,* கலி கன்றி - *கலிகன்றி என்னும் பெயரை உடையவனுமான திருமங்கைமன்னனுடைய,* ஒலி வல்லார் - *இத்திருமொழியைக் கற்க வல்லவர்கள்,* முடிகொள் நெடு மன்னவர்தம் முதல்வர் ஆவார் - *முடி சூடிய அரசர்களுக்குத் தலைவராகப் பெறுவர்கள்.*

வியா : **பத்தாம் பாட்டு : கடி கமழும் இத்யாதி** - பரிமளம் ப்ரவஹியா நின்றுள்ள பெரிய வீதிகளை உடைத்தான திருக்கடல்மல்லையிலே வந்து கண் வளர்ந்தருளுகிற[1] ஸர்வ ஸ்வாமியுடைய திருவடிகளையே அநுஸந்திக்கும் சேஷபூதர் சேஷத்வத்திலே நின்றவன். ஜ்ஞாநாநந்தங்கள் அல்ல நிரூபகம்; பாகவத சேஷத்வம் என்கிறார். **வடிகொள் நெடு வேல் வலவன்** - காக்கைக்குக் கையிலே வேல்

---

வி : பத்தாம் பாட்டு : கடி கமழும் நெடு மறுகில் கடல்மல்லைத் தல சயனத்து அடிகள் அடியே நினையும் அடியவர்கள்தம் அடியான் - *மணம் வெள்ள மிடும் பெரிய தெருக்களையுடையது திருக்கடல்மல்லை.* அங்கே வந்து கண்வளர்ந் தருளும் எப்பொருட்கும் உடையவனாய் இருப்பவன் திருவடிகளையே சிந்திக்கும் *அடியவர்க்கு அடிமைப்பணி செய்வதிலே நின்றவன்.* ஒருவனுக்கு அறிவும் இன்பமும் *அல்ல* இனங்காட்டும் *அடையாளங்கள்; அடியார்க்கு அடிமையாய்* இருத்தலே என்கிறார். வடிகொள் நெடுவேல் வலவன் - *காப்பதற்குக் கையிலே*

---

**160.** 1 : 2 நெடு மறுகின்.
1. வளருகிற.

பிடித்தாப் போலே ஆயிற்று சேஷத்வத்திலும் பாகவத சேஷத்வத்திலே நின்றபடி. கூர்மையையும் ஒழுகு நீட்சியையும் உடைத்தான வேலை உடையராய் ப்ரதிபக்ஷ நிரஸந ஸமர்த்தராய் இருந்துள்ள ஆழ்வாருடைய இத்திருமொழியை அப்யஸிக்க வல்லார். **முடிகொள் இத்யாதி** - முடியை உடையராய் நாட்டுக்கு அநந்ய ப்ரதாநராய் இருந்துள்ள க்ஷத்ரியர்க்கு ப்ரதாநரான ப்ரஹ்மாதிகளுக்கும் நிர்வாஹகரான நித்ய ஸூரிகளோடு ஸத்ருசராகப் பெறுவர்.

---

*வேல் பிடித்து முனைந்து நின்றாற் போலே, அடிமையாய் இருப்பதிலும் அடியார்க்கு அடிமையாய் இருப்பதிலே முனைந்து நிற்கிறார். கூர்மையையும் ஒழுகு நீட்சியையும்[1] உடைய வேலை உடையராய்ப் பகைவர் கூட்டத்தை முடிக்கும் திறன் உடையராய் இருக்கும் ஆழ்வாருடைய இத்திருமொழியைப் பயில வல்லார். **முடிகொள் நெடு மன்னவர்தம் முதல்வர் முதல் ஆவாரே** - முடியை உடையராய் நாட்டுக்குப் பிறரின்றித் தாமே தலைமையானவராய் இருப்பவர்கள் அரசர்கள்; அவ் அரசர்களுக்குத் தலைவராய் இருப்பவர்கள் பிரமன் தொடக்கமானவர்கள்; அப்பிரமன் முதலானோர்க்கும் தலைவராய் இருப்பவர்கள் அயர்வறும் அமரர்கள்; அவ் அமரர்களோடு ஒரு கோவையாகப் பெறுவர்.*

(60)

---

1. ஒழுகுநீட்சி - நீளம்.

## இரண்டாம் பத்து - ஏழாம் திருமொழி - திவளும்

பிர : ததீய சேஷத்வ பர்யந்தமாக பகவத் அநுபவம் பண்ணுகையாலே தம்முடைய அநந்யார்ஹ சேஷத்வத்தை அநுஸந்தித்தாராய் நின்றார்; அநந்யார்ஹ சேஷத்வத்துக்கு லக்ஷணம் சொல்லுகிற இடத்திலே, **"நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை"** என்றாரிறே. தம்முடைய சேஷத்வத்துக்கு எதிர்த்தலையான அவனுடைய சேஷித்வத்தை அநுஸந்தித்த இடத்திலே, அது தமக்கு ரஸித்திருக்கும்படியாலே, அவனை அநுபவிப்பதாகப்[1] பாரித்தார்; அப்போதே நினைத்தபடி அநுபவிக்கப் பெற்றிலர்; அவ்இழவாலே தாமான தன்மைபோய்ப் பிரிவாற்றாமையாலே நோவுபடுகிறாள் ஒரு பிராட்டி தசையை ப்ராப்தராய் அந்நிலைதானும் போய்க் குலைந்தது. அதாவது, தன் ஆற்றாமையைத் தானே வாய் விட்டு ஆற்றுகை அன்றியே, பிறர் வாயாலே சொல்லுகையிறே. ஆக, நாயகனோடு நினைத்த படிகளைப் பரிமாறாமையாலே நம்முடைய கோவில் திருவாய் மொழிப்படியாலே ஸ்திதி கமந சயநாதிகளிலே ஒருநிலை இன்றிக்கே அரதியாய் நோவுபடுகிற பெண்பிள்ளையுடைய தசையை அநுஸந்தித்த திருத்தாயார்,

---

தோ : இறைவனுக்கு மட்டும் அன்றி அவன் அடியார்க்கும் அடியராதல் வரையான இறை இன்ப நுகர்ச்சி பண்ணுகிறார் ஆழ்வார்; அப்படிச் செய்வதனாலே இறைவனுக்கே அன்றி மற்று எவருக்கும் அடிமையாய் இராத தம்முடைய தன்மையினை எண்ணுகிறார். அடியார்க்கு அடியராய் இருத்தல் இறைவனுக்கு அடியராய் இருத்தல் ஆவது எங்ஙனம்? என்னும் ஐயம் தோன்றும். இறைவனுக்கே அன்றி மற்று எவருக்கும் அடிமையாய் இராத தன்மைக்கு இலக்கணம் சொல்லும் இடத்தில், **"நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை"** (பெ. தி. 8:10:3) என்று விளக்கி உள்ளமை காண்க. தம்முடைய அடிமைத் தன்மைக்கு எதிர்த்தலையாய்[2] இருப்பது இறைவனுடைய தலைமைத்தன்மை; அத்தலைமைத்தன்மையினை நினைந்தபோது அது தமக்குச் சுவைத்திருக்கக் கண்டார்; அதனாலே அதில் திளைக்கப் பெருவிருப்பம் கொண்டார்; அவ்வாறு விருப்பு உற்ற காலத்திலேயே தாம் நினைத்தவாறு நுகரப் பெற்றிலர்; அவ்இழவாலே[3] ஆழ்வாருக்குத் தாமான தன்மை போயிற்று; பிரிவாற்றாமையால் நோவுபடும் தலைமகள் ஒருத்தியின் நிலையினை அடைந்தார்; அத்தலைமகள் நிலையும் குலைந்து போயிற்று; அஃதாவது, தன் ஆற்றாமையைத் தானே வாய்விட்டுச் சொல்ல மாட்டாமல் பிறர் வாயாலே சொல்லும் நிலை நேர்ந்தது. ஆக, தலைமகனோடு நினைத்த வகைகளில் பரிமாறாமையாலே நோவுபட்டாள். நம்முடைய கோயில் திருவாய்மொழி[4] ஆகிய **"கங்குலும் பகலும்"** (தி. வா. மொ. 7:2) என்பதில் உள்ளது போலவே இருப்பது, நடப்பது, கிடப்பது ஆகியவற்றில் ஒருநிலை இல்லாமல் ஆற்றாமை மீதூர்ந்தாள். இப்பெண்பிள்ளையின் நிலை குறித்து இவள் திருத்தாயார் சிந்திக்க

---

1. அநுஸந்திப்பதாகப்.

2. எதிர்த்தலை - எதிர்ப்பக்கம். 3. இழவு - வருத்தம். 4. கோயில் திருவாய்மொழி - கோயில் என்பது திருவரங்கத்தைக் குறிக்கும். அதுபற்றி நம்மாழ்வார் பாடியுள்ள அகப்பொருட் பாசுரங்களைக்கொண்டது 'கங்குலும் பகலும்' என்னும் திருவாய்மொழி. அதனைக் கோயில் திருவாய்மொழி என்று குறிக்கிறார்.

இவளுக்கு உண்டான செல்லாமையையும் அவன் இவ்வளவில் வந்து முகங் காட்டாதே இருக்கிற இருப்பையும், இவளுடைய தசைக்குத் தன்னால் ஒரு பரிஹாரம் இன்றிக்கே இருக்கிற படியையும், அவனை இட்டே பரிஹரித்துக் கொள்ள வேண்டும்படியாய் இருக்கிற இருப்பையும் அநுஸந்தித்து, "இதுக்கு நேரே நிதான பூதராய் இருக்கிற அவர் இருக்க வழியே போவாரோபாதியான நமக்கு இது தெரியுமோ? ஆன பின்பு, அவர்தம்மையே இதுக்கு ஒரு போக்கடி கேட்போம்" என்று அத்யவஸித்துத் திருஇடவெந்தை நாயனார் திருவடிகளிலே இவளைக் கொடு போய்ப் பொகட்டு, "எங்களைக் காற்கடை கொண்டு உம்முடை ஸௌந்தர்ய சீலாதி களிலே துவக்குண்ட இவள் உம்மை நினைத்தபடி அநுபவிக்கப் பெறாமையாலே மிகவும் நோவுபடாநின்றாள்; நீர் இவளுடைய திறத்துச் செய்ய நினைத்திருக்கிறது என்?" என்று கேட்கிற திருத்தாயார் பாசுரத்தாலே தமக்குப் பிறந்த தசையைப் பேசு கிறார் ஆயிற்று.

---

லானாள். இவளுக்கு அவனைக் காணாமையால் தோன்றியுள்ள செல்லாமை யையும்[1], இந்நிலையிலும் அவன் வந்து முகம் காட்டாமல் இருக்கும் இருப்பையும், இவளுக்குத் தன்னால் போக்கடி[2] ஒன்றும் செய்யமுடியாமல் இருக்கும் நிலையை யும், அவனைக் கொண்டே மாற்றுத் தேடிக் கொள்ள வேண்டும்படியாய் இருக்கும் இருப்பையும் எண்ணினாள். "இந்நிலைக்கு நேரே முதற்காரணராய் இருக்கும் அவர் இருக்கும்போது தெருவோடு செல்வாரைப் போன்றவரான நமக்கு ஒரு மாற்றுத் தெரிய முடியுமோ? ஆகவே, அவர்தம்மையே இதற்கு ஒரு போக்கடி கேட்போம்" என்று முடிவு செய்தாள்; திருஇடவெந்தை நாயனார் திருவடிகளிலே இவளைக் கொடுபோய்ப் போட்டாள்; அந்நாயனாரை நோக்கி, "இவள் எங்களைக் காற்கடை கொண்டு[3] உம்முடைய வடிவழகு நீர்மை ஆகிய வற்றில் துவக்குண்டாள்[4]; இவள் உம்மைத் தான் நினைத்தபடி கூடி மகிழப் பெறாமையாலே மிகவும் நோவுபட்டுக் கொண்டிருக்கிறாள்; நீர் இவள்பால் என் செய்வதாக எண்ணியுள்ளீர்?" என்று வினவுகிறாள் திருத்தாயார். அத் திருத்தாயார் பாசுரத்தால்[5] தமக்குப் பிறந்த நிலையினைப் பேசுவார் ஆனார்.

## 161

திவளும்வெண் மதிபோல் திருமுகத் தரிவை
செழுங்கடல் அமுதினில் பிறந்த
அவளும்நின் ஆகத் திருப்பதும் அறிந்தும்
ஆகிலும் ஆசைவி டாளால்
குவளைஅம் கண்ணி கொல்லிஅம் பாவை
சொல்லுநின் தாள்நயந் திருந்த
இவளைஉன் மனத்தால் என்நினைந் திருந்தாய்
இடவெந்தை எந்தைபி ரானே!

---

1. செல்லாமை - வாழமாட்டாத தன்மை. 2. போக்கடி - மாற்றம்; பரிகாரம். 3. காற்கடை கொள்ளல் - புறக்கணித்தல். 4. துவக்குண்டாள் - மயங்கினாள். 5. பாசுரம் - பேச்சு; கூற்று.

**ப. ரை :** **இடவெந்தை எந்தை பிரானே** - திருஇடவெந்தையில் உறையும் எம்பெருமானே! **திவளும் வெண்மதி போல் திருமுகத்து அரிவை** - ஒளிவீசும் வெள்ளிய திங்களைப் போலும் அழகிய முகத்தையுடைய அரிவைப் பருவத்தினள் ஆகிய, **செழுங் கடல் அமுதினில் பிறந்த அவளும்** - சிறந்த கடலில் பிறந்த அமுதத்தோடு உடன் பிறந்த அத்திருமகளும், **நின் ஆகத்து இருப்பதும்** - உனது திருமார்பிலே எழுந்தருளியிருப்பதனையும், **அறிந்தும் ஆகிலும்** - அறிந்திருந்த போதிலும், **ஆசை விடாள்** - உன் இடத்தில் கொண்ட காதலை விட்டாள் அல்லள்; **நின்தாள் நயந்திருந்த** - உன் திருவடிகளை விழைந்திருக்கும், **குவளை அம் கண்ணி** - கருநெய்தல் போலும் அழகிய கண்களை உடையவளும், **கொல்லி அம் பாவை இவளை** - கொல்லி மலையில் உள்ள அழகிய பதுமை போல்பவளும் ஆகிய இப்பெண்பிள்ளை **திறத்தில், உன் மனத்தால் என் நினைந்திருந்தாய்** - என்ன செய்வதாக உன் மனத்தில் நினைத்திருக்கிறாய். **சொல்லு** - சொல்வாய்.

**சி. கு :** "ஆசைவிடாள் நின்தாள் நயந்திருந்த குவளை அம் கண்ணி கொல்லி அம் பாவை இவளை" என்று கூட்டுக. அரிவை - இருபது முதல் இருபத்தைந்து வயதுவரை உள்ள பெண்ணைக் குறிக்காமல் பொதுநிலையில் பெண்ணைக் குறித்தது.

**வியா :** **முதற் பாட்டு :** **திவளும் இத்யாதி** - இவளுடைய ஆசைக்கு அளவு இல்லாமை சொல்லுகிறது. தன்னில் அளவு உடையார் ஆழங்கால்படக் கண்டால் கரையிலே நின்றார்க்குத் தப்பவிறே அடுப்பது. **திவளும் வெண்மதி போல்** - ஆழங்காலேயாகிலும் முழுகி மண் கொள்ளுகைக்கு ஈடான அளவு உடைமையைச் சொல்லுகிறது. **திவளும்** - ஒளிவிடுகையாதல், ஔியின் மிகுதியாலே பளபளத்திருக்கிறபடியைச் சொல்லுதல். **வெண்மதி போல்** - யௌவநத்தாலே பாண்டரமாய் இருக்கை. நித்யாநுபவம் பண்ணாநிற்கச் செய்தேயும் அத்ருப்தி மாறாதே இருக்கையைச் சொன்னபடி. **திருமுகத்து** - முக காந்திக்கு நேர் கொடு நேர் சந்த்ரன் ஒப்பாகப் போராமையாலே திருமுகம் என்று அதுதன்னையே சொல்லு

---

வி : முதற் பாட்டு : திவளும் வெண்மதி போல் திருமுகத்து அரிவை செழுங் கடல் அமுதினில் பிறந்த அவளும் - இப்பெண்பிள்ளையினுடைய ஆசைக்கு அளவு இல்லாமை சொல்லுகிறது, இத்தொடர். தன்னைக் காட்டிலும் அளவு உடையார்[1] பள்ளத்தில் மூழ்கக்கண்டால் கரையிலே நின்றவர்கள் தப்பிச் செல்வதுதானே முறை. ஆனால் இதற்கு மாறாக அன்றோ இப்பெண்ணின் நிலை உள்ளது. திவளும் வெண்மதி போல் - இஃது ஆழங்காலேயானாலும்[2] முழுகி மண் கொள்கைக்கு ஏற்ற திருமகளின் திறன் உடைமையைச் சொல்லுகிறது. திவளும் என்பது ஒளிவிடுகை என்றோ ஒளியின் மிகுதியாலே பளபளத்திருக்கும் தன்மை என்றோ பொருள்படும். வெண்மதி போல் என்பது இளமையால் வெளுத்திருத்தலைக் குறிக்கிறது. காலம் எல்லாம் கூடி மகிழ்ந்திருந்தபோதிலும் நிறைவு இன்மை மாறாமல் இருத்தலைக் காட்டுகிறது. திருமுகத்து - முகத்தின் ஒளிக்கு நேர் கொடு நேர் திங்கள் ஒப்பாக மாட்டாமையால் அதனையே மேலும் திருமுகம் என்று சிறப்பித்துச் சொல்கிறார். "ஒரு

---

1. அளவு உடையார் - ஆற்றல் உடையார்; பெரியவர்; ஈண்டுத் திருமகளைக் குறித்தது. 2. ஆழங்கால் - பள்ளம்.

கிறது. "சந்த்ர காந்தாநநம் ராம மதீவ ப்ரிய தர்சநம்'' என்னக் கடவதிறே. மறுவும் குறைகையும் இன்றிக்கே இருக்கை. எப்போதும் ஏகரூபனாய்த் தன்பக்கல் உள்ளது எல்லாம் அநுபாவ்யமாய் இருப்பான் ஒரு சந்த்ரன் போலே இருக்கை. அரிவை - முகத்தில் காந்தி ஒழியவேயும் துவக்கவற்றாய் ஆயிற்றுப் பருவம் இருப்பது. இது பருவம் இருந்தபடி. மேல் பிறப்பு இருக்கிறபடி சொல்லுகிறது. செழுங் கடல் அமுதினில் பிறந்த - முதலிலே பாற்கடலாய், அதுதன்னைக் கோதாக்கி, அம்ருதமாய், அவ்அம்ருதம்தானே கோதாம்படி பிறந்தவள் ஆயிற்று. "விண்ணவர் அமுது உண அமுதில் வரும் பெண் அமுது" என்னக் கடவதிறே. பரார்த்தமாகக் கடல் கடைந்தான் என்று ஔதார்யம் கொண்டாடினது அடையப் போய், தனக்கு நல்லது பெற வ்யாபரித்தான் இத்தனை. அவளும் - வடிவழகாலும் பருவத்தாலும் பிறப்பாலும் வந்த ஏற்றத்தை உடையளான அவளும்.

நின் ஆகத்து - அவளுக்கும்கூட ஸ்ப்ருஹணீயமான மார்பு ஆயிற்று. "அகலகில்லேன் இறையும்" என்கிறபடியே இம்மார்வில் இருப்புக்கு ஏதேனும் இழவு வரில் செய்வது என் என்று துணுக்குத் துணுக்கு என்று ஆயிற்று வர்த்திப்பது.

---

பொருளுக்கு உவமை சொல்லி அத்துடன் அமையாமல் பின்னும் சிறப்பித்தல் உண்டோ?" என்னில், உண்டு. "திங்களைப் போன்ற அழகிய முகத்தை உடையவனாய், அத்திங்களைக்காட்டிலும் மிகவும் இனியனாகக் காட்சியளிப்பவனாய், வடிவழகு, வண்மை ஆகிய குணங்களால் ஆண்களின் கண்களையும், நெஞ்சையும் கவருபவனாய் இருக்கும் இராமனைத் தசரதன் கண்டான்" (ரா. அ. 3 : 29) என்னும் வான்மீகி முனிவர் வாக்கில் சந்திரனை உவமை சொல்லிப் பின்னர் அதனைக் காட்டிலும் முகத்தைச் சிறப்பித்துக் கூறுதல் காண்க. இவள் முகம் நிலவைப் போலே மறுவும் குறைகையும் இல்லாமல் இருக்கிறது. எப்போதும் ஒரு படியாய், தன்பக்கல் உள்ளது எல்லாம் நுகர்ந்து இன்புறத்தக்கதாய் இருப்பது ஒரு திங்கள் போலே இருக்கை. அரிவை - முகத்தில் ஒளி இல்லாது போனாலும், துவக்கவல்லதாய் இருக்கிறது அவள் பருவம். இது பருவம் இருக்கும் நிலை. இனி, பிறப்பு இருக்கும் நிலை சொல்லப்படுகிறது. செழுங் கடல் அமுதினில் பிறந்த - முதலிலே சிறப்புடன் இருந்தது பாற்கடல்; அதனைக் கோதாக்கித் தோன்றியது அமுதம்; பின்பு அவ்அமுதம் கோதாகுமாறு பிறந்தவள் அவள். "விண்ணவர் அமுது உண அமுதில் வரும் பெண் அமுது" (பெ. தி. 6:1:2) என்று சொல்லப் பெறுபவள் அன்றோ! பிறருக்காகக் கடல் கடைந்தான் என்று அவன் வண்மையைப் போற்றியது முற்றிலும் போய் அவன் தனக்கு நல்லது பெறப் பாடுபட்டான் என்று சொல்லும்படி நேர்ந்தது. அவளும் - வடிவழகாலும் பருவத்தாலும் பிறப்பாலும் வந்த ஏற்றத்தை உடையவளான அவளும்.

நின் ஆகத்து - அவளுக்கும்கூட ஆசைப்படத்தக்கதாய் இருக்கும் மார்பு. "அகலகில்லேன் இறையும்" (தி. வா. மொ. 6:10:10) என்று சொல்வதற்கு இணங்க இம்மார்பில் இருப்புக்கு ஏதேனும் இழவு வந்தால் என்ன செய்வது என்று துணுக்குத் துணுக்கு என்று இருக்கிறாள்[1]. இருப்பதும் - அவன் மார்பில்

---

1. துணுக்கு துணுக்கு என்று இருத்தல் - அஞ்சிக் கொண்டிருத்தல்.

**இருப்பதும்** - இருந்ததால் கலந்தாளாய்ப் பின்னைப் பிரிவும் பொறுக்க மாட்டாள். **அறிந்தும்** - அவள் மார்பிலே இருக்கிறது அறியாமை பற்றினாள் என்ன ஒண்ணாதே. அவள் இருக்கிற இருப்பு தனக்குப் பற்றுகைக்குப் பற்றாசு என்று பற்றினவளை. **ஆகிலும் ஆசை விடாளால்** - "அவளும் அங்கே இருக்கச்செய்தே எனக்கு இழக்க வேண்டுகிறது என்?" என்று அதுதானே இவளுக்கு ஆசைக்கு உடல் ஆயிற்று; அதுவாயிற்று இவளுக்கு ஆசைப்படுகைக்கு ஆலம்பநம். **குவளை அம் கண்ணி** - அவளில் இவ்ளுக்கு உண்டான ஏற்றம் சொல்லு கிறது. திருமுகம் என்று ஸமுதாய சோபையிறே அவளுக்குச் சொல்லுகிறது. "குவளை அம் கண்ணி" என்று அவயவ சோபையில் உண்டான ஏற்றம் சொல்லு கிறது இவளுக்கு. அவன்தன்னிற்காட்டில், "அஸிதேக்ஷணை" என்று அவள் கண்ணுக்கு உண்டான ஏற்றத்தோபாதியும் போரும் ஆயிற்று, அவளிற்காட்டில் இவள் கண்ணுக்கு உண்டான ஏற்றமும். **கொல்லி அம் பாவை** - கொல்லி மலையிலே ஒரு பாவை உண்டு. எல்லாரும் உரு வகுப்புக்குத் தமிழர் சொல்லுவது ஒன்று. பிறப்பால்[1] ஒப்புச் சொல்ல ஒண்ணாது; ஒன்றிலே எழுதிக் காணில் காணும் இத்தனை. **சொல்லு** - இதுக்கு ஒரு போக்கடி நீர் நினைத்திராமை இல்லையிறே, அவ்அளவும் போராது; எங்களுக்கு பயம் தீரும்படி, "மாசுச:" என்றாப் போலே ஒரு வார்த்தை அருளிச்செய்ய வேணும்.

---

*இருந்ததனால் அவனோடு கலந்திருப்பவள் ஆனாள். கலவியைத் தொடர்வது பிரிவுதானே! அக்கலவியைத் தொடர்ந்து வரும் பிரிவினையும் பொறுக்க மாட்டாள்.* **அறிந்தும்** - *இப்பெண்பிள்ளை அவன் மார்பிலே திருமகள் இருப்பது அறியாமல் பற்றினாள் என்று சொல்ல ஒண்ணாது. அவள் இருக்கும் இருப்புத் தான் பற்றுவதற்குப் பற்றாசு என்று பற்றினவள்.* **ஆகிலும் ஆசை விடாளால்** - *"அவளும் அங்கே இருக்கும்போது எனக்கு என்ன இழப்பு வரும்" என்று எண்ணினாள்; அவள் அங்கிருக்கும் அதுவே இவள் ஆசைக்கு உடலாய்[2] அமைந்தது. அதுவே இவள் ஆசைப்படுவதற்குப் பற்றுக்கோடு.* **குவளை அம் கண்ணி** - *அவளைக் காட்டிலும் இவளுக்கு உள்ள ஏற்றம் சொல்லுகிறது. 'திருமுகம்' என்று அவளுக்கு முகத்தின் திரண்ட அழகே சொல்லப்படுகிறது. "குவளை அம் கண்ணி" என்று உறுப்பழகில் உள்ள ஏற்றம் சொல்லப்படுகிறது இவளுக்கு. அவனைக்காட்டிலும்,* **"கறுத்த கண்ணாள்"** *(ரா. அ. 16 : 21) என்று அவள் கண்ணுக்குள்ள ஏற்றம் சொல்லப்பெறுவது போலவே அவளைக் காட்டிலும் இவள் கண்ணுக்கு உள்ள ஏற்றம் சொல்லப்பெறுகிறது.* **கொல்லி அம் பாவை** - *கொல்லிமலையில் இருக்கும் ஒரு பாவை. இதனைத் தமிழர் எல்லாரும் உருவகுப்புக்கு[3] உவமையாகச் சொல்வர். இப்பெண்பிள்ளைக்கு உலகில் பிறந்துள்ள பிறிதொரு பெண்ணை உவமையாகச் சொல்ல ஒண்ணாது; ஓவியமாக எழுதப்பட்டுள்ள உருவத்தை வேண்டுமானால் ஒப்புமையாகக் காட்டலாம்.* **சொல்லு** - *இதற்கு ஒரு போக்கடி நீர் நினைத்திருப்பீரே, அது போதாது; எங்களுக்கு அச்சம் தீரும் வகையில்,* **"வருந்தாதே"** *(கீதை. 18:66) என்பது போலே ஒரு சொல் அருளிச்செய்ய வேண்டும்.*

---

1. பிறர்பால்.
2. உடல் - காரணம். 3. உரு வகுப்பு - உடல் அமைப்பு.

**நின் தாள் நயந்திருந்த** - இதுவும் அவளிற்காட்டில் இவளுக்கு உண்டான ஏற்றம்; அவள் மார்வை ஆசைப்பட்டாள்; இவள் திருவடிகளை ஆசைப்பட்டாள். அவன் வாசி அறிந்தார் அவன் மார்வை ஆசைப்படுவர்கள்; அவளோடே கூடினவன் வாசி அறிந்தார் அவன் திருவடிகளைப் பற்றும்[1] இத்தனையிறே. **இவளை** - சொன்ன சொன்ன ஏற்றம் எல்லாம் போராதபடி இருக்கையாலே கையாலே காட்டி இவளை என்கிறார். **உன் மனத்தால்** - கைகழிந்தவற்றுக்கும்[2] ஒரு போக்கடி பார்த்திருக்கடவ உன் திருவுள்ளத்தாலே நினைத்திருந்தது என்? **உன் மனத்தால்** - என் நெஞ்சால் இதுக்கொரு போக்கடி தேடுமது உண்டு என்கை விட்டேன். இனி உன் நெஞ்சால் நினைத்திருந்தது என்? **இடவெந்தை எந்தை பிரானே** - கலங்காப் பெருநகரத்தில் புகப் பெறாதே கைகழியப் போனாரும் பிழைக்கைக்காகத் திரு இடவெந்தையிலே வந்து நிற்கிற என் குலநாதனானவனே! "**பின்னானார் வணங்கும்**" என்கிறபடியே. **சொல்லு** என்று க்ரியை.

---

**நின் தாள் நயந்திருந்த** - இதுவும் அவளைக்காட்டிலும் இவளுக்கு உள்ள ஏற்றம்; அவள் மார்பை ஆசைப்பட்டாள்; இவள் திருவடிகளை ஆசைப்பட்டாள். அவனது சிறப்பு அறிந்தார் அவன் மார்பை ஆசைப்படுவர்; அவளோடு கூடி இருப்பவனது சிறப்பு அறிந்தார் அவன் திருவடிகளையே பற்றுவர். **இவளை** - சொன்ன சொன்ன ஏற்றம் எல்லாம் போதாமல் இருக்கையாலே கையாலே காட்டி, இவளை என்கிறார். **உன் மனத்தால்** - கைகழிந்தவற்றிற்கும்[3] ஒரு போக்கடி பார்த்திருக்கக்கூடிய உன் திருவுள்ளத்தாலே என் நினைத்திருக்கிறாய்? **உன் மனத்தால்** - என் நெஞ்சால் இதற்கு ஒரு போக்கடி தேடி விடலாம் என்பதனை விட்டேன். இனி நீ உன் நெஞ்சால் நினைத்திருப்பது யாது? **இடவெந்தை எந்தை பிரானே** - கலங்காப் பெருநகரத்தில்[4] புக முடியாமல் கைகழியப்[5] போனவர்களும் பிழைப்பதற்காகத் திருஇடவெந்தையிலே வந்து நிற்கும் என் குலத் தலைவன் ஆனவனே! "**பின்னானார் வணங்கும் சோதி**" (*தி. நெ. தா. 10*) என்பதற்கு ஏற்ப நிற்பவனே! **சொல்லு** - சொல்வாய்; இது ஏவல் வினை.

### ஒப்புமைப் பகுதி

1. அரிவை

*" அரிவையர் - தங்கள் பருவத்தாலே துவக்க வல்லவர்கள் "*

*தி. வா. மொ. 10:3:6-36*

2. செழுங்கடல் அமுதினில் பிறந்த திருமகள்

*" வங்கக் கடல் கடைந்த மாதவனை - 'விண்ணவர் அமுதுண அமுதில் வரும் பெண்ணமுது உண்ட எம்பெருமானே' என்று தேவ கார்யம் என்று ஒரு வ்யாஜத்தை இட்டுப் பெரியபிராட்டியாகிற பெண்ணமுதத்தைப் பெறுகைக்காகக் கடல் கடைந்தபடி "*

*பாவை. 30 பெ. உரை.*

**(61)**

---

1. ஆசைப்படும். 2. கைகழிந்தவைத்துக்கு.
3. கைகழிந்தவை - எல்லை கடந்தவை. 4. கலங்காப் பெருநகர் - வைகுந்தம். 5. கை கழிதல் - விலகுதல்; அகலுதல்.

துளம்படு முறுவல் தோழியர்க் கருளாள்
துணைமுலை சாந்துகொண் டணியாள்
குளம்படு குவளைக் கண்ணிணை எழுதாள்
கோலநன் மலர்குழற் கணியாள்
வளம்படு முந்நீர் வையமுன் அளந்த
மாலெனும் மாலின மொழியாள்
இளம்படி இவளுக் கென்நினைந் திருந்தாய்
இடவெந்தை எந்தைபி ரானே!

ப. ரை: துளம் படு முறுவல் - *மாதுள விதையை வென்ற பற்களினின்றும் தோன்றும் நகைப்பினை,* தோழியர்க்கு அருளாள் - *தன் தோழியர்க்கு வழங்கு கிறாள் அல்லள்;* துணை முலை - *சேர்த்தியழகையுடைய நகில்களை,* சாந்து கொண்டு அணியாள் - *சந்தனத்தாலே ஒப்பனை செய்கிறாள் அல்லள்;* குளம் படு குவளைக் கண்இணை - *நீர்நிலையில் தோன்றிய குவளைமலர் போலும் இரு கண்களை,* எழுதாள் - *மை கொண்டு தீட்டுகிறாள் அல்லள்;* கோல நன் மலர் - *அழகிய நல்ல மலர்களை,* குழற்கு அணியாள் - *கூந்தலில் அணிந்துகொள்கிறாள் அல்லள்;* வளம்படு முந்நீர் வையம் - *முத்து முதலான நற்சரக்குகளுக்கு இடமான கடலால் சூழப்பட்ட உலகினை,* முன் அளந்த மால் எனும் - *முன் ஒருகால் அளந்த பெருமான் என்று சொல்லும்,* மாலின மொழியாள் - *காதல் மயக்கம் பொருந்திய பேச்சை உடையாள்;* இளம்படி - *இளமைத்தன்மை உடையவள்;* இவளுக்கு - *இவள் திறத்தில்,* என் நினைந்திருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே சொல்லு -.

சி. கு : *மாலின மொழியாள் என்பதனை மால் இனம் ஒழியாள் என்று பிரிக்காமல் மாலின மொழியாள் என்று கொள்ளலாம். மால் என்னும் பெயரடியாகப் பிறந்த பெயரெச்சத் தொடர்.* இளம்படி - *இளமைத் தன்மை யுடைய பெண்.* படி - *தன்மை; ஈண்டு அதனையுடைய பெண்ணுக்கு ஆகுபெயர் ஆயிற்று.*

வியா : இரண்டாம் பாட்டு : துளம் படு முறுவல் - துளம் என்று மாதுளமாய், அத்தை தந்த பங்க்திக்கு ஒப்பாகச் சொல்லக்கடவதிறே, அத்தைச் சொல்லிற்றாதல்; "'துளம் என்று பீலிக்காம்பைச் சொல்லுகிறது' என்று ஒரு தமிழன் சொன்னானாக ஜீயர் அருளிச்செய்வர்" என்று அருளிச்செய்வர். வெண்மையைப்

---

வி : இரண்டாம் பாட்டு : துளம் படு முறுவல் - *துளம் - மாதுளம்; ஈண்டு மாதுள விதையைக் குறிக்கும். அதனைப் பல்வரிசைக்கு ஒப்பாகச் சொல்வர். அம் மாதுள விதையை நிகர்த்த பல்வரிசை என்க. "'துளம்' என்பது பீலிக் காம்பைக்[1] குறிக்கும்' என்று தமிழ்ப் புலவன் ஒருவன் சொன்னான் என்று நஞ்சீயர் அருளிச்செய்தார்" என்பர் நம்பிள்ளை. பல்லின் வெண்மையைப் பற்றப் பீலிக்*

---

**162.** 3 : 5 மால் என்னும்.

1. பீலிக்காம்பு - மயிலிறகின் அடிப்பகுதி.

பற்றச் சொல்லலாமிறே. படுகையாவது உண்டாகையாய், துளம் தோற்றும் முறுவல் இத்தைக் கண்டவாறே அது ஸ்ம்ருதி விஷயமாகை. அன்றிக்கே, படுகையாவது அழிகையாய், இம்முறுவலுக்குத் தோற்கும்படியைச் சொல்லிற்றாதல். இரண்டு வகையாலும் உபமாநம் சொல்லுவர்களிறே. **தோழியர்க்கு அருளாள்** - தாய் மார் முன்பு தன் வெறுப்பாலே ஸ்மிதம் பண்ணாளே. இனி நாயகனுக்கு ஸர்வ ஸ்வம்மாய் இருப்பதும் இதுதானேயிறே. "**காந்தஸ்மிதா**" என்று அவன் ஈடுபடு மதிறே. இதுவேயிறே தோழிமார்க்கு ஜீவநம். ஆக, தன் கைபார்த்திருக்கிற தோழி மாரைப் பட்டினி கொள்ளாநின்றாள். இவள் நாயகனோட்டை ஸம்ஶ்லேஷத்தால் வந்த ஹர்ஷம் தோற்ற ஸ்மிதம் பண்ணினால் அதுவே தாரகமாக ஆயிற்று அவர்கள் இருப்பது. **துணை முலை இத்யாதி** - நாயகனையும் பட்டினி கொள்ளாநின்றாள். **துணை முலை** - புறம்பு உபமாநம் இன்றிக்கே தன்னில் தான் ஒப்பாகச் சொல்ல வேண்டும்படி இருக்கிற முலைகள். **சாந்து கொண்டு அணியாள்** - இவள் அவன் வரவை உத்தேசித்து முலைகளைச் சாந்துகொண்டு அலங்கரிக்கப் புக்காலிறே, "இவளுக்கு இது அபேக்ஷிதமாகாதே" என்று அவனுக்குக் கிஞ்சித்கரிக் கைக்கு அவகாசம் உள்ளது. ஆகையாலே அவனுக்கு அவகாச ப்ரதாநம் பண்ணுகி றிலள். **குளம் படு இத்யாதி** - அறாக் கயத்திலே நின்று அலர்ந்த குவளை போன்ற கண்களை மங்களார்த்தமாக அஞ்ஜநம் கொண்டு அலங்கரிக்கிறிலள்; ரத்நாகரம்

---

*காம்பை உவமையாகச் சொல்வது தகும். படுகை என்பதற்கு இருவகையாகப் பொருள் கொள்ளலாம். ஒன்று, உண்டாதல் என்பது. இப்பொருளில் துளம் தோற்றும் முறுவல் என்று பொருள் ஆகும்; அஃதாவது இப்பல்வரிசையைக் கண்ட வுடனே மாதுள விதை நினைவுக்கு வரும் என்பதாம். மற்றொன்று அழிதல் என்பது. இப்பொருளில், இம்முறுவலுக்கு மாதுள விதை தோற்கும்படியைச் சொல்கிறது என்பதாம். இருவகையாலும் உவமை சொல்லுவது உண்டல்லவா!* **தோழியர்க்கு அருளாள்** - *தாய்மார் முன்பு தன் வெறுப்பாலே நகை புரியாள். இனித் தலைமகனுக்குச் செல்வம் அனைத்துமாய் இருப்பது இப்புன்னகைதானே!* **"இனிய புன்சிரிப்பை உடையவள்"** *(ரா. ஆ. 63:12) என்று அவன் ஈடுபடுவது இச் சிரிப்பில்தானே! அதுவன்றோ தோழிமார்க்குப் பிழைப்பு! ஆகத் தன் கைபார்த் திருந்த[1] தோழிமாரைப் பட்டினி கொள்கிறாள்[2]. இவள் தலைமகனது கலவியால் வந்த களிப்புத் தோற்றப் புன்னகை புரிந்தால் அதுவே தங்கட்கு வாழ்முதலாகக் கொண்டிருப்பவர்கள் அவர்கள்.* **துணை முலை சாந்து கொண்டு அணியாள்** - *தலை மகனையும் பட்டினி கொள்கிறாள்.* **துணை முலை** - *புறம்பு உவமையாகச் சொல் வதற்கு உரிய பொருள்கள் இல்லாமல் தமக்குள் ஒன்றுக்கொன்று ஒப்பாகச் சொல்ல வேண்டுமாறு இருக்கும் முலைகள்.* **சாந்து கொண்டு அணியாள்** - *இவள் அவன் வரவு நோக்கி முலைகளைச் சாந்துகொண்டு ஒப்பனை செய்யப் புகுந்தால் தானே, "இவளுக்கு இது வேண்டுவது அன்று" என்று அவன் அழிப்பதற்கு இடம் உள்ளது. அவ்வாறு செய்யாமையாலே அவனுக்கு இடம் கொடுத்தாள் அல்லள்.* **குளம் படு குவளைக் கண் இணை எழுதாள்** - *நீர் வற்றாத கயத்திலே[3] நின்று அலர்ந்த குவளை போன்ற கண்கள் அவளுக்கு. அவற்றை மங்கலம் கருதி மைதீட்டி அழகு செய்கிறாள் அல்லள்; மணிகளுக்கு இருப்பிடமான கடல் போலே*

---

1. கைபார்த்திருத்தல் - நம்பிக்கொண்டிருத்தல். 2. பட்டினி கொள்ளல் - உணவின்றி இருக்கச் செய்தல்; ஈண்டுத் தோழியர்க்குரிய புன்முறுவலைத் தலைமகள் நல்காமல் வருத்துதல். 3. கயம் - குளம்.

போலே குணாகரமான வஸ்துவை அநுபவிக்கிற கண்ணாகையாலே ஒன்றுகொண்டு அலங்கரிக்க வேண்டாவிறே. இனி அஞ்ஜநம் கொண்டு அலங்கரிப்பது மங்களார்த்த மாகவிறே. இவள் அஞ்ஜநத்தாலே அலங்கரிக்கப் புகும் அன்றிறே அவனுக்கு கிஞ்சித்கரித்தானாக அவகாசம் உள்ளது; அது செய்கிறிலள்.

**கோலம் இத்யாதி** - கலம்பகன் அல்லது தனிப்பூச் சூட்டப்[1] பொறாத குழலைப் புஷ்பம் கொண்டு அலங்கரிக்கிறிலள். "வாசஞ் செய் பூங்குழலாள்" ஆகை யாலே புஷ்பம் கொண்டு அலங்கரிக்க வேண்டாவிறே. மங்களார்த்தமாகப் புஷ்பம் கொண்டு அலங்கரிக்கிறிலள். நாயகன் விரும்பி இருக்கும் இடங்களை இவள் அலங் கரியாது ஒழிகையாவது, அவனுடைய தாரக த்ரவ்யத்தை விலக்குகையிறே. **வளம் இத்யாதி** - ஸர்வ ஸாதாரணமான ரக்ஷணத்தைப் பண்ணுமவன் என் அளவிலே நெகிழ இராநின்றான். **வளம் படு முந்நீர்** - ரத்நாகரம் என்னுதல். **வளம் படு வையம்** என்று வஸுமதி என்னுதல். **மால் எனும்** - தன்னுடைய ரக்ஷ்ய வர்க்கத்தினுடைய ரக்ஷணத்தில் பிச்சேறி இருக்குமவன். இவ் வ்யக்தி ஒன்றையும் உபேக்ஷித்து இராநின்றான். **மாலின மொழியாள்** - தன்னுடைய வ்யாமோஹத்துக்குச் சேர்ந்த பேச்சை உடையவள். வ்யாமோஹம் வழிந்து புறப் பட்டு அது சொல்லானாப் போலே இருக்கை.

---

குணங்களுக்கு உறைவிடமான பெருமானைக் கண்டறியும் கண்ணாகையாலே அதனை ஒன்றுகொண்டு அழகுசெய்ய வேண்டுவது இல்லை. இனி மை கொண்டு அழகுபடுத்துவது மங்கலத்தின் பொருட்டேயாகும். இவள் கண்ணை மைதீட்டி ஒப்பனை செய்யத் தொடங்கும் காலத்திலன்றோ அவனுக்கு அதனைத் திருத்தித் தீட்டுதற்கு இடம் உள்ளது; அது செய்கிறாள் அல்லள்.

**கோல நன் மலர் குழற்கு அணியாள்** - கலம்பகன் அல்லது தனிப்பூச் சூட்டப் பொறாத குழல் அவளுக்கு; அதனை மலர்கள் கொண்டு அழகுற முடிக்கிறாள் அல்லள். "வாசஞ் செய் பூங்குழலாள்" (தி. வா. மொ. 10:10:2) ஆகையாலே மலர் கொண்டு அழகுசெய்ய வேண்டா அன்றோ! தலைமகன் விரும்பியிருக்கும் உறுப்பு களை இவள் ஒப்பனை செய்து கொள்ளாமல் ஒழிந்திருப்பது அவனுடைய வாழ் முதற்பொருளை விலக்குவது ஆகும் அல்லவா! **வளம் படு முந்நீர் வையம் முன் அளந்த மால் எனும் மாலின மொழியாள்** - எல்லாரையும் பொதுவாக நோக்கிக் காப்பவன் என்னைப் பொறுத்தவரையில் மட்டும் அதனைச் சரியாகச் செய்யாமல் நெகிழவிட்டு நின்றான். **வளம்படு முந்நீர்** - மணிகள் உண்டாகும் இடம் என்க. வளம்படு என்பதனை வையத்திற்கு அடைமொழியாகக் கொண்டு செல்வம் நிறைந்த மண்மகள் எனலும் ஆம். **மால் என்னும்** - தன்னால் நோக்கப்படுவன வற்றின் பாதுகாப்பில் பிச்சேறி இருப்பவன் இந்த என் ஒருத்தியை மட்டுமே வெறுத் திருக்கிறான். **மாலின மொழியாள்** - தன்னுடைய பிச்சுக்குச் சேர்ந்த பேச்சை உடையவள். காதற்பித்தம் வழிந்து புறப்பட்டு அது சொல்லானாற் போலே இருக்கிறது.

---

1. சூடப்.

**இளம்படி இவளுக்கு** - இளைதான படியையுடைய இவளுக்கு. ம்ருது ஸ்வபாவையான இவளுக்கு. உம்முடைய பக்கல்நின்றும் பிரித்துப் பத்து மாஸம் அசோக வநிகையிலே வைத்த இடத்திலும் பின்னையும், "**தத்தஸ்ய**" என்று இருந்த அவள் படி அல்லாத மார்த்தவத்தையுடைய இவளுக்கு. பட்டர் அருளிச்செய்தாராக ப்ரஸித்தமிறே, "உண்ணவும் பொறாதே பட்டினி விடவும் பொறாதே இருக்கும் ஸுகுமாரரைப் போலே, அதிகமான ஸம்ஶ்லேஷ விஶ்லேஷம் பொறுக்க மாட்டாத படியான திருமங்கையாழ்வார் மார்த்தவம் இருக்கும்படி" என்று. **இவளுக்கு இத்யாதி** - இவளுடைய் ப்ரக்ருதி அறிந்து கலக்கைக்காகத் திருஇடவெந்தையிலே வந்து எழுந்தருளியிருக்கிற நீ உன்னுடைய திருவுள்ளத்தாலே நினைத்திருக்கிறது என்?

---

இளம்படி இவளுக்கு - இளைதான தன்மையையுடைய இவளுக்கு. மென்மைத்தன்மை உடையவளான இவளுக்கு. உமது பக்கத்திலிருந்து பிரித்துப் பத்துத் திங்கள் அசோகவனத்தில் வைத்தபோதும் பின்னை, "**அவர் வந்து என்னை மீட்டுச் செல்வராகில் அச்செயல் அவ்இராமபிரான் செய்யத்தக்கதாம்**" (ரா. ஸு. 9:30) என்று இருந்த சீதையின் தன்மையினை உடையவள் அல்லாத மென்மையையுடைய இவளுக்கு. "உண்ணவும் பொறாதே[1] பட்டினிவிடவும் பொறாதே இருக்கும் மென்மையர் சிலர் உண்டு. அவரைப் போல அதிகமான கலவியையும் பிரிவையும் பொறுக்கமாட்டாத தன்மைத்துத் திருமங்கையாழ்வார் மென்மை" என்று பட்டர் அருளிச்செய்தார் என்பது பெருவழக்கு. இவளுக்கு என் நினைந்திருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே - இவளுடைய இயற்கை அறிந்து கலப்பதற்காகத் திருஇடவெந்தையிலே வந்து எழுந்தருளியிருக்கும் நீ உன் திருவுள்ளத்தாலே நினைத்திருப்பது என்?

### ஒப்புமைப் பகுதி

1. துணை முலை

" துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே "

" துணைமுலை - போக்தாவுக்கு போகோபகரணமிறே துணை முலை யாவது. அங்ஙன் அன்றிக்கே, ஒரு முலைக்கு ஒரு முலை துணையாம் இத்தனை ஒழிய வேறு ஒப்பு இன்றிக்கே இருக்கை. அவனுடைய திருவடி களைப் போலே ஆயிற்று இவளுடைய முலையும் இருப்பது "

திரு. நெ. தா. 13 பெ. உரை.

" துணைமுலை - நீ சேர்த்தியழகு சொல்லிக் கொண்டாடும் முலைகள் "

தி. வா. மொ. 10:3:6-36

" இணை முலை - அவன் சேர்த்தியழகு கொண்டாடும் முலை "

தி. வா. மொ. 9:9:3-24

2. முந்நீர்

பாட்டு 40இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

---

1. பொறாது - முடியாமல்.

3. மால்

" மால் என்கோ - ஆச்ரித விஷயத்தில் வ்யாமுக்தன் என்பேனோ? "

தி. வா. மொ. 3:4:6-24

[ வ்யாமுக்தன் - பெரும்பித்தன் ]

" மால் - ஆச்ரிதர் பக்கல் வ்யாமோஹமே வடிவாக உடையவன் "

தி. வா. மொ. 8:2:7-36

4. திருமங்கையாழ்வாரின் மென்மை

" துணை முலை - ......அல்லாத ஆழ்வார்களைப் போலன்றியே ஸுகுமாரரா யிறே திருமங்கையாழ்வார் இருப்பது. மலையாளர் ஒரு மாஸத்துக்கு ஒரு காலே உண்ணவும் வல்லர்களாய் ஒரு மாஸம் பட்டினி விடவும் வல்லர் களாய் இருக்குமாபோலே, ஸம்ஶ்லேஷதசையில் நெடுநாள் தரித்திருந்து அநுபவிக்கவும் வல்லர்களாய் விஶ்லேஷத்தில் நெடுநாள் தரிக்கவும் வல்லர்களாயிறே மற்றை ஆழ்வார்கள் இருப்பது; ஸம்ஶ்லேஷிக்கவும் மாட்டாதே விஶ்லேஷிக்கவும் மாட்டாதபடியாய் ஆயிற்று இவருடைய ஸௌகுமார்யம் இருப்பது. இவர் உண்ணவும் மாட்டார், பட்டினி விடவும் மாட்டார். 'நும் அடியார் எல்லாரோடும் ஒக்க எண்ணி இருந்தீர் அடியேனை' என்னக் கடவதிறே "

தி. நெ. தா. 13 பெ. உரை.

[ஸுகுமாரர் - மென்மையானவர். ஸம்ஶ்லேஷம் - கூட்டம். விஶ்லேஷம் - பிரிவு.]

## 163

**சாந்தமும் பூணும் சந்தனக் குழம்பும்**
**தடமுலைக் கணியிலும் தழலாம்**
**போந்தவெண் திங்கள் கதிர்சுட மெலியும்**
**பொருகடல் புலம்பிலும் புலம்பும்**
**மாந்தளிர் மேனி வண்ணமும் பொன்னாம்**
**வளைகளும் இறைநில்லா என்றன்**
**ஏந்திழை இவளுக் கென்நினைந் திருந்தாய்**
**இடவெந்தை எந்தைபி ரானே!**

**ப. ரை :** **சாந்தும் பூணும் சந்தனக் குழம்பும்** - கலவைச் சந்தனத்தையும் முத்து வடத்தையும் சந்தனக் குழம்பையும், **தட முலைக்கு அணியிலும் தழலாம்** - பருத்த முலைகளுக்குப் பூசினாலும் அவை நெருப்புப் போலே ஆகின்றன; **போந்த வெண் திங்கள் கதிர் சுட** - தோன்றிய வெண்ணிலவின் கதிர்கள் சுடுவதனால், **மெலியும்** - வருந்துகிறாள்; **பொரு கடல் புலம்பிலும்** - அலை வீசும் கடல் ஒலிக்கத் தொடங்கினாலும், **புலம்பும்** - இவளும் கூக்குரல் இடுகிறாள்; **மாந்தளிர் மேனி வண்ணமும்** - மாந்தளிர் போலும் இவளுடைய உடம்பின் நிறமும், **பொன் ஆம்** - பசலை நோயால் பொன்போலே ஆகிறது; **வளைகளும் இறை நில்லா** - வளைகளும்

சிறிதுபோதுகூடத் தங்குவது இல்லை; என்தன் ஏந்து இழை - என் மகள் ஆகிய அணிகள் பூண்ட, இவளுக்கு என் நினைந்திருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே -.

**சி. கு :** சாந்து - கலவைச் சந்தனம். சந்தனக் குழம்பு - வெறும் சந்தனக் குழம்பு.

**வியா : மூன்றாம் பாட்டு : சாந்தமும் இத்யாதி** - எங்களால் நோக்கலாம் எல்லை கழிந்தது. பழகப் புதைத்து ஆறிக் குளிர்ந்த[1] சாந்தும், முத்தாரமும், சந்தநக் குழம்பும். தட முலைக்கு அணியிலும் - "நிதாநம் அறியாதே நாம் இருந்து ஒரு பரிஹாரம் பண்ணுகையாவது என்?" என்று முன்பு எல்லாரும் கைவாங்கி இருப்பர்கள்; பின்னையும், இவள்பக்கல் ஒரு வாசி இன்றிக்கே நோவுபடக் காண்கையாலே, "இனி நாட்டார் செய்யுமவற்றை[2] ஆகிலும் செய்து பார்ப்போம்" என்று இவற்றைக்[3] கொண்டு சிசிரோபசாரம் பண்ணப் புகுவர்கள்; புக்கால், அவைதானே இந்தநமாக வேவாநிற்கும். 'பூண்' என்ன முத்தாரம் என்று தோற்றுமோ என்னில், ஆஶ்வாஸகரமாகப் பண்ணுகிறதாகையாலே முத்தாரமாய் இருக்குமிறே. சாந்து வெவ்விய பதார்த்தம் அன்றோ என்னில், அதுக்காகவிறே ஆறிக் குளிர்ந்த[4] என்றது. சாந்து என்னுங்காட்டில் இஸ்ஸம்ஸ்காரங்களோடே[5] கூடினது என்று தோற்றுமோ? என்னில், சிசிரோபசாரத்துக்கு உறுப்பாகச் சொல்லுகிறதாகையாலே வரும், பூண் என்ற இடத்தில் முத்தாரம் என்றாப் போலே. **சாந்தமும் இத்யாதி** - வயிரமும் வயிரத்தோலும் ஒன்றாக வேமாப் போலே ஆயிற்று இவை எல்லாம் ஒன்றாக

---

**வி : மூன்றாம் பாட்டு : சாந்தமும் பூணும் சந்தனக் குழம்பும்** - எங்களால் நோக்கலாம் எல்லை[6] கழிந்தது. பயன்படுத்துவதற்கு ஏற்றவாறு குங்குமம், கத்தூரி முதலிய பொருள்களோடு கலந்து மூடிவைத்து வெப்பம் இன்றி ஆறிக் குளிர்ந்த சாந்தும், முத்தாரமும், சந்தனக் குழம்பும். **தட முலைக்கு அணியிலும்** - "நோய் முதல் அறியாமல் இருக்கும் நாம் இதற்கு எவ்வாறு போக்கடி தேட இயலும்" என்று முன்பு எல்லாரும் கைவாங்கி இருப்பர்[7]. பிறகு, இவளிடத்தில் ஒரு வேறுபாடும் இல்லாமல் இருக்கவும் இவள் நோவுபடுவது கண்டனர்; எனவே இனி நாட்டார் செய்பவற்றையேனும் செய்து பார்ப்போம்" என்று இவற்றைக் கொண்டு குளிர்ச்சி நல்கும் பணிவிடைகள் செய்யப் புகுவர்; புக்கால், அவை தணல் போலே வேகும். 'பூண்' என்றால் முத்தாரம் என்று தோற்றுமோ? என்று வினவில், வெப்பத்தைத் தணிப்பதற்காகச் செய்வதாகையாலே முத்தாரமாய் இருக்கும் என்க. சாந்து வெவ்விய[8] பொருள் அன்றோ என்னில், அதற்காக வன்றோ ஆறிக் குளிர்ந்த சந்தனம் என்று சொல்லப்பட்டது. சாந்து என்பது கலவை செய்யப்பட்ட சாந்து என்பதனைக் குறிக்குமோ என்னில் குளிர்ச்சி தரும் பொருட்டுச் செய்யும் பணியாகச் சொல்வதனாலே குறிக்கும், பூண் என்பது முத்தாரத்தைக் குறித்தது போலே. **சாந்தமும் பூணும் சந்தனக் குழம்பும் தட முலைக்கு அணியிலும் தழலாம்** - இவை எல்லாம் ஒன்றாக வேவது பாய்ந்த மரத்தின் உட்பகுதியோடு அதன் ஈரம் மாறாத பட்டையும் ஒன்றாக வேமாறு போலே

---

1. குளுந்த. 2. செய்யுமவைத்தை. 3. இவைத்தைக். 4. குளுந்தது. 5. இஸ்ஸம்ஸாரங்களோடே.

6. நோக்கலாம் எல்லை - பாதுகாக்கும் நிலை. 7. கை வாங்கி இருத்தல் - முடியாமல் ஒதுங்கி இருத்தல். 8. வெவ்விய - வெப்பமான.

வேகிறபடி. உலர்ந்த விறகிலே நெருப்பைக் கொளுத்தினாப் போலே விரஹ க்ருஶ மான சரீரத்திலே இவை பட்டவாறே பற்றி எரியாநின்றது ஆயிற்று.

**போந்த இத்யாதி** - அப்போது தோற்றின சந்த்ரனுடைய இளநிலாவானது பட, அத்தாலே மெலியாநின்றாள். நிலாச் சுடப் புக்கால் விலக்கலாவது ஒன்று இல்லையே. இனித் தான் கூடி இருந்தபோது, **"முன்னம் முகிழ்த்த முகிழ் நிலா"** என்று அநுகூலமாமிறே. **பொரு கடல்** - திரையோடு திரை பொராநின்றுள்ள கடல் கோஷிக்கப் புக்கவாறே எதிரே ஒரு கடல் ஸ்பர்த்தித்துக் கூப்பிடுமாப் போலே தானும் ஒக்கக் கூப்பிடாநிற்கும். **மாந்தளிர் இத்யாதி** - மாந்தளிரினுடைய நிறம் போலே இருக்கிற நிறமும் விவர்ணம் ஆகாநின்றது. **வளைகளும் இறை நில்லா** - ஆகாசத்திலே நிற்பது ஒரு வளையில்லையே. **"சைதில்யமுபயாந்த்யாசு கரேஷு வலயாந்யபி"**. கிருஷ்ணனே அன்றிக்கே, இன்னம் இவற்றில்[1] அவனுக்கு வாசி உண்டு; அவன் 'பிரியேன்' என்று பிரிவை உணர்த்தியாகிலும் போமிறே. இவை சடக்கெனப் போய்க்கொடுநின்றது.

**என்தன் ஏந்து இழை** - என்னுடைய, தரிக்கப்பட்ட ஆபரணத்தை உடையவள். இவள் ஆபரணங்களாலே அலங்க்ருதையாய் இருக்கும் இருப்பைக் கண்டு கொண்டு இருக்கும் இதுவே தாரகமாகக் காணும் இவள்தான் நினைத்திருப்பது.

---

*அமைந்தது. உலர்ந்த விறகிலே நெருப்பைக் கொளுத்தினாற் போலே பிரிவாற்றா மையாலே இளைத்துப் போன உடலிலே இவைபட்ட அப்பொழுதே உடம்பு எரியத் தொடங்கிற்று.*

**போந்த வெண் திங்கள் கதிர் சுட மெலியும்** - *அப்போது தோன்றிய திங்களின் இளநிலவு பட, அதனாலே மெலியத் தொடங்கினாள். நிலாச் சுடப் புக்கால், விலக்கலாவது ஒன்று உண்டோ? இனிக் கூடி இருந்தபோது,* **"முன்னம் முகிழ்த்த முகிழ் நிலா"** *(பெ. ம. 23) என்று நன்மையாய் இருந்தது அன்றோ!* **பொரு கடல் புலம்பிலும் புலம்பும்** - *திரையோடு திரை மோதும் கடல் ஒலிக்கத் தொடங்கியவுடனே எதிரே ஒரு கடல் மாறுபட்டுக் கூப்பிடுவது போலே தானும் ஒக்கக் கூப்பிடுகிறாள்.* **மாந்தளிர் மேனி வண்ணமும் பொன் ஆம்** - *மாந்தளிரின் நிறம் போலே இருக்கும் நிறமும் விளர்த்தது.* **வளைகளும் இறை[2] நில்லா** - *இவை வானத்தில் நிற்கும் வளையல்கள் அல்லவே, முன்கையில் நிற்பவை அன்றோ!* **"கையில் உள்ள வளையல்களும் கூடச் சடக்கெனக் கழல்கின்றன"** *(வி. பு. 5:18:29) என்னும் முன்னோர் மொழி வளையல்கள் சிறிது நில்லா என்பதனை உணர்த்தல் காண்க. இவை கண்ணனைப் போல்வன அல்ல; இவற்றிற்கும் அவனுக்கும் வேறுபாடு உண்டு. அவனாவது 'பிரியேன்' என்று பிரிவை உணர்த்திப் பின் போவான்; இவை சடக்கெனப் போயின.*

**என்தன் ஏந்து இழை** - *என்னுடையவள்; அணிகலன்களைத் தாங்கி இருப்பவள். இவள் அணிகலன்களாலே அழகுபடுத்திக்கொண்டு இருக்கும் இருப்பைக் கண்டுகொண்டு இருப்பதுவே தனக்கு வாழ்முதலாகக் கருதி இவள்*

---

1. இவத்தில்.

2. இறை என்பதற்கு முன்கை என்றும் சிறிது என்றும் பொருள் உண்டு. முன்கை என்று கொண்டு 'இவை வானத்தில்....' என்று தொடங்கி ஓர் உரையும் சிறிது போது என்று கொண்டு 'கையில் உள்ள....' என்று தொடங்கிப் பிறிதோர் உரையும் வரைகிறார்.

இவள் ஆபரணம் பூண்டிருக்கும் இருப்பைக் கண்டு அநுபவிக்கை எனக்கு இவ்வளவோடே பர்யவஸிக்குமாப் போலே இருந்தது. இடவெந்தை - "நைவார்த்தைர் ந ச பூஷணை:" என்னும்படி பண்ணுகைக்கோ நீ இங்கே வந்திருக்கிறது? ராமாவதாரத்தில் இழவு தீர்க்கைக்காக அன்றோ இங்கு வந்திருக்கிறது.

---

இருக்கிறாள்[1]. இப்பெண் அணிகலன்களைப் பூண்டிருக்கும் இருப்பைக் கண்டு மகிழ்வது எனக்கு இவ்வளவோடு முடிந்துவிடும் போலே இருந்தது. இடவெந்தை - "மாரதராகிய இராமபிரானைப் பிரிந்து அரக்கியர் நடுவில் இருக்கும் எனக்கு உயிரினால் பயன் இல்லை, பொருளாலும் பயன் இல்லை, அணிகலன்களாலும் ஒரு பயன் இல்லை''. என்று பிராட்டி உற்ற நிலையை என் பெண்ணுக்கும் உண்டாக்குவதற்கோ நீ இங்கு வந்திருக்கிறது? அஃதாவது இறைவனை நினைந்து கண்ணும் கண்ணீருமாய் இருத்தலும், மயிர்க் கூச்செறிதலுமே அணிகலன்கள் என்பதனைத் தெரிவிப்பதற்கோ நீ இங்கே வந்திருப்பது. இராமாவதாரத்தில் உண்டான இழவு[2] தீர்த்தற்காக அன்றோ இங்கு வந்திருப்பது! அஃதாவது இராமனாய்த் திருத்தோற்றம் எடுத்த காலத்து உன்னைப் பிரிந்து பட்ட துன்பம் தீர்ந்து கூடி மகிழ்வதற்காக அன்றோ நீ பாங்காக இங்கு வந்து தங்கி உள்ளாய்!

**ஒப்புமைப் பகுதி**

1. தட முலை

*" தடமுலை - போக்தாவால் உண்டறுக்க ஒண்ணாத பரப்பையுடைத் தாகை "* *தி. வா. மொ. 8:2:1-24*

2. மேனிவண்ணம் பொன்னாதல்

*" பொன்னிறமாய் - விவர்ணமாய். ஸுக்ஷேத்ரம் மணலீடாய்ப் போமா போலே "* *தி. வா. மொ. 8:2:1-36*

*[விவர்ணம் - வேறுபட்ட நிறம் உடையது. ஸுக்ஷேத்ரம் - நன்செய் நிலம்.]*

## 164

ஊழியிற் பெரிதால் நாழிகை என்னும்
ஒண்சுடர் துயின்றதால் என்னும்
ஆழியும் புலம்பும் அன்றிலும் உறங்கா
தென்றலும் தீயினில் கொடிதாம்
தோழியோ என்னும் துணைமுலை அரக்கும்
சொல்லுமின் என்செய்கேன் என்னும்
ஏழைஎன் பொன்னுக் கென்நினைந் திருந்தாய்
இடவெந்தை எந்தைபி ரானே!

---

1. இத்தொடரில் வரும் இவள் என்பதில் முன்னது தலைமகளையும் பின்னது தலைமகளின் தாயையும் குறிக்கும். 2. இழவு - வருத்தம்.

**ப. ரை :** **நாழிகை ஊழியின் பெரிது என்னும்** - ஒரு நாழிகைப் பொழுது ஒரு கற்பத்தைக்காட்டிலும் நெடிது என்கிறாள்; **ஒண்சுடர் துயின்றது என்னும்** - ஒள்ளிய ஞாயிறு மறைந்தது என்கிறாள்; **ஆழியும் புலம்பும்** - கடலும் முழங்குகிறது; **அன்றிலும் உறங்கா** - அன்றிற் பறவைகளும் உறங்கவில்லை; **தென்றலும் தீயினில் கொடிது ஆம்** - தென்றற் காற்றும் நெருப்பைக்காட்டிலும் கொடியதாக வீசுகிறது; **தோழியோ என்னும்** - "அடி தோழி! ஐயோ! என் செய்வேன்!" என்கிறாள். **துணை முலை அரக்கும்** - இரு முலைகளையும் தேய்த்துக் கொள்கிறாள்; **என் செய்கேன் சொல்லும் என்னும்** - "என்ன செய்வேன் சொல்வீர்" என்பாள். **ஏழை என் பொன்னுக்கு** - திறன் அற்ற என் அழகிய பெண்பிள்ளைதிறத்தில், **இடவெந்தை எந்தை பிரானே! என் நினைந்திருந்தாய்!-.**

**சி. கு :** அன்றில் - ஒருவகைப் பறவை. ஆணும் பெண்ணும் ஆகிய அன்றிற் பறவைகள் மூக்கோடு மூக்குச் சேர்த்துக் கொண்டு உறக்கத்திலும் விட்டுப் பிரியாமல் இருக்கும் என்பர். பொன் - அழகு; ஈண்டு அதனையுடைய பெண்ணுக்கு ஆகுபெயர் ஆயிற்று.

வியா : நாலாம் பாட்டு : **ஊழியில் பெரிதால் நாழிகை என்னும்** - ஒரு கல்பமாகிலும் ஸம்ஹ்ருதமாய்க் கிடக்கிறது பாடு ஆற்றலாம், அந்நாழிகைகளைக் காணலாய் இருக்கிறது இல்லை. "நேதி நேதி" என்கை ஒழிய இன்னத்தோடு ஒக்கும் என்று சொல்ல ஒண்ணாது. ஊழி பெருத்து நாழிகை சிறுத்து இருக்கக் கடவ தான மர்யாதை குலைந்தது. **ஒண்சுடர் துயின்றதால் என்னும்** - நாழிகையை அளந்து தருகிற ஆதித்யனும்போய் முடிந்தான் என்னாநின்றாள். கல்பத்தில் உபஸம் ஹ்ருதமாம் பதார்த்தங்களோடே ஸம்ஹார்யனாம் அவனிறே ஆதித்யன்; இப்போது அங்ஙன் அன்றிக்கே, உளனாய் ஸஞ்சரியாநிற்கச் செய்தேயும் கார்யம் பிறக்கக் காண்கிறிலோம். தன்னுடைய ஸந்நிதியாலே ராத்ரி வ்யஸநத்தை அடையப் போக்கிக் கொடு வந்து தோற்றக் கடவ ஆதித்யனும் வந்து தோற்றுகிறிலன். "பீஷோதேதி

---

வி : நாலாம் பாட்டு : **ஊழியில் பெரிதால் நாழிகை என்னும்** - பெருவெள்ளம் கோத்து எல்லாம் அழிக்கப்பட்டுக் கிடக்கும் காலமாய் இருந்தால்கூடத் துன்பத்தை ஆற்றிக் கொள்ளலாம். ஏனெனில், தலைமகனைப் பிரிந்திருக்கும் நேரம் பற்றி அறியும் தகுதி அதுபோது இருப்பதில்லை. இந்நாழிகையை, "இத்தன்மைத்து அன்று, இத்தன்மைத்து அன்று" (ப்ரு. 4:3:6) என்று எதிர்மறையிட்டு விளக்கலாமே ஒழிய இன்னதனோடு ஒக்கும் என்று ஒப்புக்காட்டிச் சொல்ல ஒண்ணாது. ஊழி பெருத்து நாழிகை சிறுத்து இருக்கும் வரம்பு குலைந்தது. ஆஃதாவது தலை மகளுக்கு நாழிகை ஊழியினும் பெரிதாக உள்ளது. **ஒண்சுடர் துயின்றதால் என்னும்** - காலத்தை அளந்து தரும் கதிரவனும் போய் முடிந்தான் என்கிறாள். ஊழி முடிவிலே அழியும் பொருள்களோடே அழிபவன்தானே கதிரவன்! இப்போது அவ்வாறு அன்றி, உள்ளவனாய்த் திரிந்த போதிலும் அவனது வேலை நடைபெறக் கண்டோம் அல்லோம். தன் தோற்றத்தாலே இரவுத் துன்பத்தை அடையப் போக்கிக் கொண்டுவந்து தோற்றக் கூடிய கதிரவன் வந்து தோன்றினான் அல்லன். "முதல்வனிடத்தில் உள்ள அச்சத்தாலேயே பகலவன் தோன்றுகிறான்"

ஸூர்ய:'' என்கிற ஈஶ்வராஜ்ஞை குலைந்தது போலே. நித்ரையை நினைத்தல், தீர்க்க நித்ரையை நினைத்தல்.

**ஆழியும் புலம்பும்** - ''நம்மில் சிறியவன் பாதகம் ஆகாநிற்க, நாம்தான்[1] பேசாது இருக்கிறது என்?'' என்று கடலானது பாதகம் ஆகப் புக்கது. பேரளவுடைய கடலானது தைர்ய பங்கம் பிறந்து புலம்புகிறபடி, பேரளவு உடையவன் தன் அளவிலே தைர்ய பங்கம் பிறந்து பேசும் பேச்சுக்கு ஸ்மாரகமாய் நலியாநின்றது ஆயிற்று. **அன்றிலும் உறங்கா** - அன்றிலினுடைய உறங்காமை ஸம்ஶ்லேஷ ஸமயத்தில் நாயகனுடைய நித்ராவிரஹத்துக்கு ஸ்மாரகம் ஆகாநின்றது ஆயிற்று. **தென்றலும் தீயினில் கொடிதாம்** - தென்றலினுடைய குளிர்த்தியானது[2], காந்தனுடைய கர ஸ்பர்சத்துக்கு ஸ்மாரகமாய் பாதகம் ஆகாநின்றது. தென்றலினுடைய வெம்மை ஆற்ற வேண்டில் கேவலாக்நியிலே பொகட்டு ஆற்ற வேண்டும்படி இராநின்றது.

**தோழியோ என்னும்** - தனக்கு ஒன்று பாதகமானால் 'அம்மே!' என்கைக்கு நான் பாக்யம் பண்ணிற்றிலேன். ''அவனோடே சேரவே ஸகல பதார்த்தங்களும் அநுகூலமாய்க் குடநீர் வார்க்கும் காண்'' என்று சொன்னாயே பாவி நீ, ஊர் பகையாம்படி பண்ணினாயே. இவள், 'தோழியோ' என்னப் பார்த்திராதே பருவம். **துணை முலை அரக்கும்** - முலைகளானவை, ''எனக்கு[3] அடைத்த

---

*(தைத். ஆந. 8:1) என்னும் இறைவன் கட்டளை குலைந்தது போலும். 'துயின்றதால்' என்பதில் துயில் என்பது உறக்கத்தையாதல் நெடிய உறக்கம் ஆகிய சாக்காட்டையாதல் குறித்ததாகக் கொள்க.*

**ஆழியும் புலம்பும்** - *''நம்மில் சிறியவன் ஆன கதிரவன் நலிவு செய்துகொண்டிருக்க, நாம் பேசாது இருக்கலாமா?'' என்று கடலானது வருத்தப் புக்கது. பெரிய கடல் தன் துணிவு குலைந்து புலம்புவது, பேரளவுடையவன்[4] தன் அளவிலே மனத்திண்மை குலைந்து பேசும் பேச்சினை நினைவூட்டி வருத்தியது.* **அன்றிலும் உறங்கா** - *அன்றிலின் உறங்காமை கலவிக் காலத்தில் தலைமகனுடைய உறங்காமையை நினைவூட்டித் துன்புறுத்தியது[5].* **தென்றலும் தீயினில் கொடிதாம்** - *தென்றலின் குளிர்ச்சி, காதலன் கை தன்மேல் படுவதனை நினைவுபடுத்தி நலிவுசெய்தது. தென்றலின் வெம்மையினைத் தணிக்க வேண்டின் நெருப்பிலேயே இட்டுத் தணிக்க வேண்டும் என்னுமாறு மிக்கு இருந்தது.*

**தோழியோ என்னும்** - *ஒருவர்க்குத் துன்பம் வந்தால் 'அம்மே' என்பர்; ஆனால் இவளோ, 'தோழி' என்கிறாளே, ஏனெனில், அப்படிச் சொல்லும் பேற்றினை யான் செய்யவில்லை என்கிறாள், திருத்தாயார். மேலும் தோழியை நோக்கி, ''அவனோடு கூடினால் எல்லாப் பொருள்களும் பாங்காய்க் குடநீர் வார்க்கும்''[6] என்று சொன்னாயே, பாவிப் பெண்ணே! இப்பொழுது இவளுக்கு ஊர் பகை ஆகுமாறு பண்ணினாயே! என்கிறாள்.* **துணை முலை அரக்கும்** - *தோழியோடு துயரத்தைப்*

---

1. நான்தான். 2. குளிர்ச்சி. 3. இனக்கு.
4. பேரளவுடையவன் - பேரறிவுடையவன். ஈண்டு இறைவன். 5. அன்றில் என்னும் பறவை ஆணும் பெண்ணுமாக இணை பிரியாது இருக்கும். கணப்பொழுது பிரிந்தாலும் துயர் ஆற்றாது மெலிந்து கத்தும். ஈண்டு உறங்காமை என்பது அவ்வாறு அன்றில் எழுப்பும் ஒலியைக் குறித்தல். 6. குடநீர் வார்த்தல் - ஊழியம் செய்தல்.

விஷயத்தை நீ காட்டு" என்று நலியப் புக்கவாறே, க்ஷாம காலத்தில் ப்ரஜைகள் "சோறு சோறு" என்றால், "வாய் வாய்" என்பாரைப் போலே, முலைகளை அரக்கா நிற்கும் ஆயிற்று. முன்னிருந்து மூக்கின்று - காணக் காணப் பருவம் கழியா நின்றது ஆயிற்று. பருவம் கழிவதானால் பின்னை இவை முதுகிலேயானால் ஆகாதோ? சொல்லுமின் என் செய்கேன் என்னும் - தென்றல் துடக்கமான பதார்த்தங்கள் போலும் அன்றிறே முலைகள் நெருக்கப் புக்கால் உண்டான நலிவு. அவை பாதகம் ஆகிறபோது 'தோழியோ' என்றாள்; இவை பாதகமாகப் புக்கவாறே தோழிமாரோடு தாய்மாரோடு வாசியற எல்லாரையும் சேர்த்துச் சொல்லுங்கோள் என்கிறாள். ஏழை - "கிடையாது காண்" என்றால் கிடைக்குமதிற் போலே சாபலத்தைப்[1] பண்ணுமவள் ஆயிற்று.

என் பொன்னுக்கு - "இவளும் தன் சாபலமும் பட்டது படுகிறாள்" என்று கைவாங்கி இருக்க ஒண்ணாதபடி[2] ஶ்லாக்யையாய் இருக்குமவள். இடவெந்தை - உக்தியாலே தன் சாபலம் தோற்ற இருக்கிற இவளைப் போல் அன்றிக்கே க்ரியையாலே சாபலம் தோற்ற இருக்கிற நீ, நினைத்திருக்கிறது என்?

---

பேசுவதனைப் பார்த்துக்கொண்டு கழியாமல் இருக்குமோ இவள் பருவம்! முலைகள், "எனக்கு அடைத்த[3] ஆளை நீ காட்டு" என்று நலியப்புக்கன; நலியப்புக்கவாறே, பஞ்சகாலத்தில் சிறுபிள்ளைகள், "சோறு, சோறு" என்றால் "வாயை மூடு, வாயை மூடு" என்று கன்னத்தில் அறைந்து அதட்டி வைப்பாரைப் போலே, முலைகளை அரக்குவாள் ஆயினாள். இம்முலைகள், "முன் இருந்து மூக்கின்று" (பெ. ம. 92) அஃதாவது காணக் காணப் பருவம் கழிந்து கொண்டிருக்கிறது. பருவம் கழியுமானால் பின்னர் மூப்பு வந்து இம் முன்பக்கத்திரட்சி முதுகிலே உண்டாதலும் கூடும் அல்லவா? அஃதாவது கூன்விழுதலும் நிகழும் அல்லவா? சொல்லுமின் என் செய்கேன் என்னும் - தென்றல் தொடக்கமான பொருள்கள் தரும் நலிவைப் போன்றது அன்று முலைகள் நெருக்கப் புக்கால் உண்டாகும் நலிவு. அவை நலிவு செய்தபோது, 'தோழியோ' என்கிறாள்; இவை நலியப் புக்கவாறே தோழியர், தாய்மார் என்று வேறுபாடு இன்றி, எல்லாரையும் சேர்த்துச் சொல்லுவீர் என்கிறாள். ஏழை - "அப்பொருள் உனக்குக் கிடைக்காது" என்றால், கிடைக்கக் கூடியதில் காட்டும் விருப்பத்தை அதில் செய்பவள்.

என் பொன்னுக்கு - "இவளும் இவள் வீணான ஆசையும் எப்படியாவது ஆகட்டும்" என்று கைவாங்கி இருக்க ஒண்ணாதபடி ஏற்றமுடையளாய் இருப்பவள். இடவெந்தை - பேச்சாலே தன் விருப்பம் தோற்ற இருப்பவள் இப்பெண் பிள்ளை; செயலாலே விருப்பம் தோற்ற இருப்பவன் நீ[4]. இவளைக் குறித்து நீ யாது முடிவு செய்திருக்கிறாய்?

**ஒப்புமைப் பகுதி**

1. ஊழியிற் பெரிதால் நாழிகை

" நீள் இரவும், ஒயும் பொழுதின்றி ஊழியாய் நீண்டதால் "

---

1. கிடையாதொழியக் கிடையா தொழிய சாபலத்தைப். 2. உண்ணாதபடி.
3. அடைத்த - உரிய. 4. திருஇடவெந்தையில் எழுந்தருளியுள்ள சீரார் வராகப் பெருமான் தன் தேவியை இடப்பக்கத்தில் கொண்டிருத்தலை நோக்கி இவ்வாறு தாயார் கூறுகிறார்.

" ஊழியாய் - 'சாத்தன்' 'கூத்தன்' என்றாப்போலே சில பேராய், அவர்கள் தாங்கள் ஜீவிக்கப்புக்கவாறே சிறுபேர் தவிர்ந்து, 'சோழக்கோனார்', 'தொண்டமானார்' என்று பட்டப்பேர் பெற்று வாழுமாபோலே, ராத்ரி யானது போய் 'கல்பம்' என்னும் பேரையுடைத்தாகா நின்றது"

திருவாய்மொழி 5:4:3-36

2. ஒண்சுடர் துயின்றது

" ஒண்சுடரோன் - தோற்றத்திலே துஃக்க நிவ்ருத்தியைப் பண்ணுமவன் "

திருவாய்மொழி 5:4:4-24

3. தென்றலும் கொடிது

" மல்லிகை கமழ் தென்றல் - இராப்படை ஏறுவாரைப் போலே உடம்பிலே படக்காணும் இத்தனைபோக்கி, கண்ணுக்குத் தோற்றாது ஆய்த்து; கண்டு தப்ப ஒண்ணாது, இத் தென்றலுக்குக் கண்ட இடம் எங்கும் வாயாய் இரா நின்றது "

திருவாய்மொழி 9:9:1-36

4. துணைமுலை அரக்கும்

" புல்லிய முலைகளும் தோளும்கொண்டு - க்ஷாம காலத்தில் ப்ரஜைகள் 'சோறு சோறு' என்னுமா போலே படுத்தாநின்றன "

திருவாய்மொழி 9:9:1-36

[க்ஷாம காலம் - பஞ்சம் நிலவும் காலம். ப்ரஜைகள் - பிள்ளைகள்.]

" கொம்மை முலைகள் - சமைய வளர்ந்து க்ஷாம காலத்திலே ப்ரஜைகள் 'சோறு சோறு' என்று அலைக்குமாப்போலே, 'எனக்கு அடைத்த விஷயத்தைக் காட்டு காட்டு' என்று நெருக்குகிற இவற்றின் இடரானது தீரும்படி "

நாச். தி. 13:9 பெ. உரை.

5. ஏழை

" ஏழை - 'கிடையாது' என்று ப்ரமாண ப்ரஸித்தமானத்திலே, கிடைக்கு மதில் பண்ணும் சாபலத்தைப் பண்ணுகை "

திருவாய்மொழி 2:4:10-36

[கிடையாது - கிடைக்காது. ப்ரமாண ப்ரஸித்தம் - சான்றுகளால் நன்கு அறியப்பட்டது.]

" ஏழை - நல்லது கண்டால் விடமாட்டாத சபலை "

பெரி. தி. 3:7:4 ம. மா. மு. உரை.

[சபலை - ஆசையுடையவள்]

((64))

ஓதிலும் உன்பேர் அன்றிமற் றோதாள்
உருகும்நின் திருவுரு நினைந்து
காதன்மை பெரிது கையற வுடையாள்
கயல்நெடுங் கண்துயில் மறந்தாள்
பேதையேன் பேதை பிள்ளைமை பெரிது
தெள்ளியள் வள்ளிநுண் மருங்குல்
ஏதலர் முன்னா என்நினைந் திருந்தாய்
இடவெந்தை எந்தைபி ரானே!

ப. ரை : இடவெந்தை எந்தை பிரானே! -, ஓதிலும் - *பேசத் தொடங்கினாலும்,* **உன் பேர்** அன்றி மற்று ஓதாள் - *உனது பெயர் அன்றி வேறு ஒன்றையும் சொல்லமாட்டாள்;* நின் திரு உரு நினைந்து உருகும் - *உனது திருமேனியைச் சிந்தித்து உருகுவாள்;* **காதன்மை** பெரிது - *உன்னிடத்தில் இவள் கொண்டுள்ள ஆசை மிக அதிகமானது;* கையறவு உடையாள் - *அதனாலே ஒன்று செய்ய மாட்டாத துன்பநிலை உடையவள் ஆனாள்;* கயல் நெடுங் கண் துயில் மறந்தாள் - *கயல் போலும் நெடிய கண்களில் உறக்கம் மறந்து விட்டாள்;* பேதையேன் பேதை - *அறிவற்ற என் இப்பெண்பிள்ளையின்,* பிள்ளைமை பெரிது - *அறியாமை பெரியது ஆகும்;* தெள்ளியள் - *உன்னைப் பொறுத்த வரையில் மிகவும் தெளிவுடையவளாய் இருக்கிறாள்;* வள்ளி நுண் மருங்குல் - *கொடி போலும் நுண்ணிய இடையையுடைய இவளைப்பற்றி,* ஏதலர் முன்னா - *பகைவர் முன்பாக,* என் நினைந்து இருந்தாய் - *யாது செய்வதாகக் கருதியுள்ளாய்?*

**சி. கு:** *காதன்மை - காதல் தன்மை என்பது காதன்மை என்று மருவியது.*

வியா : **அஞ்சாம் பாட்டு :** ஓதிலும் - முதல்தன்னிலே வார்த்தை சொல்லாதே இருக்கும் போதே பெரியது; சொன்னாலோ, **உன் பேர் அன்றி மற்று ஓதாள்** - "ஐயர், ஆச்சி" என்னத் தவிர்ந்தாள். **உருகும் நின் திரு உரு நினைந்து** - நாமத்வாரா தர்மியை அநுஸந்தியா, நீர்ப்பண்டம் போலே மங்கி இருக்

---

வி : அஞ்சாம் பாட்டு : ஓதிலும் உன் பேர் அன்றி மற்று ஓதாள் - *முதலில் அவள் பேசாமல் இருக்கும் காலமே மிகுதி*[1]. *அப்படிப் பேசினாலோ உன் பேர்* **அன்றி** *மற்று ஓதாள். அஃதாவது, "ஐயர்*[2], *ஆச்சி*[3]*" என்று பேசுவது தவிர்ந்தாள்.* **உருகும்** நின் திரு உரு நினைந்து - *பெயர்வழியாகப் பெயருக்கு உரிய உன் வடிவை நினைப்பாள்; நினைத்து, நீர்ப்பண்டம் போலே மங்கி இருப்பாள்*[4]. **காதன்மை**

---

**165.** 1 : 1 ஓதினும். 1 : 5 உருகிநின்.

1. ஓதிலும் என்பதில் உள்ள உம்மைக்குப் பொருள் இது. 2. ஐயர் - அப்பா. 3. ஆச்சி - அம்மா. 4. மங்குதல் - குலைதல்.

கும். **காதன்மை பெரிது** - வடிவழகின் அளவு அல்லவாயிற்று ஆசையின் பெருமை. **கையறவு உடையள்** - ஆசையின் அளவு அல்லவாயிற்று இழவின் கனம். இழவுக்கு அவதி என் என்னில், **கயல் இத்யாதி** - கயல் போலே முக்த்தமாய்ப் பரப்பு உடைத்தாய் இருக்கிற கண்; பெரிய ஊர்கள் குடிவாங்கினாப் போலே கண்ணிற் பரப்பு அடங்கலும் நித்ரா தத்வம் குடிவாங்கிற்று.

**பேதையேன் பேதை** - அறிவுகேடியான என்பிள்ளை[1]; விளைவது அறியாதே இவளைப் பெற நோன்பு நோற்கும்படியான அறிவு கேட்டையுடைய. **"நெடுங்காலமும் கண்ணன் நீண் மலர்ப் பாதம்"** என்கிறபடியே. **பிள்ளைமை பெரிது** - பருவத்தின் அளவு அல்லவாயிற்று மௌக்த்யத்தின் பெருமை. லோக யாத்ரையில் வந்தால் தன் பருவத்தில் உள்ளார்க்குள்ள அறிவு போராது. **தெள்ளியள்** - உம் அளவில் வந்தால் ஶ்ருதோபநிஷத்கர் அளவிலும் அல்லள். **வள்ளி நுண் மருங்குல்** - இவள் ஸ்வபாவத்தை அநுஸந்தித்துக் கை விட ஒண்ணாதபடி ஆயிற்று வடிவிற் பசை. பிள்ளைத்தனமும் தெள்ளிமையும் அப்ரயோஜகம்[2]; வடிவுபோரும் ஆயிற்று உமக்குக் கைவிட ஒண்ணாமைக்கு[3]. **ஏதலர் முன்னா** - "ஆசைப்பட்டாயிறே! அழகிதாக உண்டாயிறே!" என்று ஏசுகிற சத்ருக்கள் முன்பே. **என் நினைந்திருந்தாய்** - "த்வதக்ரே சரணாகதாநாம்

---

**பெரிது** - *உன் வடிவழகின் அளவு அன்று இவள் ஆசையின் பெருக்கம்; அதனினும் விஞ்சியது.* **கையறவு உடையவள்** - *ஆசையின் அளவு அன்று இழவின் கனம்; அதனினும் மிக்கது. இவள் இழவுக்கு[4] எல்லை யாது என்னில்,* **கயல் நெடுங் கண் துயில் மறந்தாள்** - *கயல் போலே அழகுடையதாய்ப் பரப்பு உடையதாய் இருக்கும் கண். பெரிய ஊர்கள் குடிவாங்கினாற் போலே[5] கண்ணில் பரப்பு அடங்கலும் உறக்கம் குடிவாங்கிற்று.*

**பேதையேன் பேதை** - *அறிவு கேடியான யான்பெற்ற பெண். விளைவு அறியாமல் இவளைப் பெற நோன்பு நோற்ற அறிவு கேட்டை உடையேன்.* **"நெடுங்காலமும் கண்ணன் நீண் மலர்ப் பாதம் பரவிப் பெற்ற தொடுங்கால் ஒசியும் இடை இளமான்"** *(தி. வி. 37) என்று சொல்வது போலே நெடுங்காலம் நோன்பு நோற்ற அறிவு கேட்டை உடையேன்.* **பிள்ளைமை பெரிது** - *பருவத்திற்கு ஏற்ற அளவில் அமைந்தது அன்று இவள் பேதைமையின் பெருமை. உலகியலைப் பொறுத்தவரையில் தன் பருவத்தில் உள்ளார்க்கு உள்ள அறிவு இவளுக்கு அமையவில்லை.* **தெள்ளியள்** - *உம்மைப் பற்றிய அறிவினை எடுத்துக் கொண்டால், மறைமுடிபுகளைக் கேட்டறிந்தாரைக்காட்டிலும் மேலான அறிவு படைத்தவள்.* **வள்ளி நுண் மருங்குல்** - *இவள் தன்மையை நினைந்து கைவிட நினைத்தாலும் ஒண்ணாதவாறு இருக்கிறது இவள் வடிவிற் பசை[6]. பிள்ளைத் தனமும் தெள்ளிமையும் கிடக்கட்டும்; இவள் வடிவே போதும்; அதனைக் கருதினால் உமக்கு இவளைக் கைவிட ஒண்ணாது.* **ஏதலர் முன்னா** - *"ஆசைப் பட்டாயே! அழகிய முறையில் ஆசைப்பட்டது கிடைக்கப் பெற்றாயே!" என்று இகழும் உகவாதார் முன்பே.* **என் நினைந்திருந்தாய்** - "தேவரீர் கண்முகப்பே,

---

1. என் பெண்பிள்ளை. 2. அப்ரயோஜநம். 3. உண்ணாமைக்கு.
4. இழவு - துன்பம். 5. குடிவாங்குதல் - குடிகள் வெளியேறிப்போதல்; 6. பசை - வடிவத்தின் செழுமை.

பராபவ:" உகவாதார் முன்பே நம்முடையார் நோவுபடவிட்டுப் பார்த்து இருக்குமது நமக்குப் போராது" என்று இருக்கக்கடவ நீர், இவளிடையாட்டத்தில் நினைந்து இருந்தது என்? "நதேநுரூப:" ஸ்ரீவைகுண்டநாதனுக்காகில் போரும் என்னவும் ஆம். இப்படி கைவிட்டிருக்குமது உமக்குப் போராது.

---

உம்மை நாடித் தஞ்சம் அடைந்தவருக்கு ஏற்படும் மானக்குறைவு (ஸ்தோ. ர. 25) - "உகவாதார் முன்னிலையில் நம்முடையார் நோவுபடுமாறு விட்டுப் பார்த்திருப்பது நமக்குத் தகாது" என்று இருக்கும் நீர் இவளிடையாட்டத்தில்[1] யாது செய்ய நினைத்திருக்கிறீர்? உமக்குத் தகுந்தது அன்று (ஸ்தோ. ர. 25) - திருநாட்டில் இருக்கும் பெருமானுக்கு வேண்டுமானால் இவளைக் கருதாமல் இருத்தல் தகும் எனலாம்; அடியார்கள் நலனுக்காக இடவெந்தையில் உகந்தருளி யுள்ள உமக்கு இவளை இப்படிக் கைவிட்டு இருப்பது தகுதி ஆகாது.

**ஒப்புமைப் பகுதி**

**பேதை**

" *பேதை - 'கிடையாது' என்று அறிந்து மீளும் பருவம் அல்ல, நான் ஹிதம் சொன்னாலும் கேளாத பருவம்* "

*தி. வா. மொ. 2:4:10-36*

*[ஹிதம் - நன்மை]*

" *பேதை - மேல் வருவது நிரூபிக்கத்தக்க அறிவு இல்லாதவள்* "

*பெரி. தி. 3:7:4 ம. மா. மு. உரை*

*[நிரூபித்தல் - ஆய்ந்து அறிதல்]* *(65)*

## 166

**தன்குடிக் கேதும் தக்கவா நினையாள்**
**தடங்கடல் நுடங்கெயில் இலங்கை**
**வன்குடி மடங்க வாள்அமர் தொலைத்த**
**வார்த்தைகேட் டின்புறும் மயுங்கும்**
**மின்கொடி மருங்குல் சுருங்கமேல் நெருங்கி**
**மென்முலை பொன்பயந் திருந்த**
**என்கொடி இவளுக் கென்நினைந் திருந்தாய்**
**இடவெந்தை எந்தைபி ரானே!**

---

1. இவளிடையாட்டம் - இவள்பால்; இவள்மாட்டு.

**166.** 3 : 4 நெருங்கும்.

**ப. ரை :** இடவெந்தை எந்தை பிரானே! -, **தன் குடிக்குத் தக்கவா ஏதும் நினையாள்** - *தன்குடிப் பெருமைக்குத் தகுந்த வழி ஒன்றினையும் ஆராய மாட்டாள்;* **தடங்கடல் நுடங்கு எயில் இலங்கை வன்குடி மடங்க** - *பெரிய கடலையும் வளைந்த மதிளையுமுடைய இலங்கையில் இருந்த வலிய அரக்கர்குலம் அழியுமாறு,* **வாள் அமர் தொலைத்த வார்த்தை கேட்டு** - *வாள் கொண்டு மோதும் போர்க்களத்திலே கொன்ற செய்தியைக் கேட்டு,* **இன்புறும்** - *மகிழ்வாள்,* **மயங்கும்** - *பின்பு மயங்குவாள்.* **மின் கொடி மருங்குல் சுருங்க மேல் நெருங்கி** - *மின்னற் கொடி போலும் இடை சிறுக்குமாறு மேலே அடர்ந்து,* **பொன் பயந்திருந்த** - *பொன் நிறப் பசலை பூத்துக்கிடந்த,* **மென் முலை** - *மெல்லிய நகில்களையுடைய,* **என் கொடி இவளுக்கு** - *என் பெண்ணான இவள்திறத்தில்,* **என் நினைந் திருந்தாய்** - *யாது செய்வதாக எண்ணியுள்ளாய்?*

**சி. கு :** *'சுருங்க, நெருங்கி, பொன் பயந்திருந்த மென்முலை' என்று கூட்டுக.* **பொன்** - *பொன் போலும் நிறமுடைய பசலைக்கு ஆகிவந்தது.*

**வியா : ஆறாம் பாட்டு : தன் குடிக்கு ஏதும்** - நம் குடி என்னாதே[1], தன் குடி என்கிறாள் ஆயிற்று, "எம்பெருமானார் தர்சநம்" என்னுமாப் போலே. குலமர்யாதை நம் ப்ரதிபத்தியாலே சொன்னோமாகை அன்றிக்கே பெருமாள் இராமா நுசனை உடையார் என்றே அருளிச்செய்வர். "பெருவிலையனான ரத்நத்தை நடுவே இட்டுக் கோத்தால் முன்னும் பின்னும் ஒக்க விலைபோமாப் போலே காண்" என்று பிள்ளான். **தன் குடிக்கு ஏதும் தக்கவா நினையாள்** - இவள் நிலை இருந்த படி இது, நீர் இனி உம்முடைய மர்யாதை நோக்கிக் கொள்ளப் பார்த்தீரோ? இல்லையோ? என்கிறாள். இவளைத் தொடங்கிக்[2] காணும் இக்குலமர்யாதை

---

**வி : ஆறாம் பாட்டு : தன் குடிக்கு ஏதும் தக்கவா நினையாள்** - *திருத் தாயார் நம் குடி என்று சொல்லாமல் தன் (மகள்) குடி என்கிறாள். திருமால் நெறியினை நம் நெறி என்று கூறாமல், "எம்பெருமானார் நெறி"[3] என்று நாம் வழங்குவது போன்றது அவள் பேச்சு. அவர்பால் நாம் கொண்ட பெருமதிப்பாலே இவ்வாறு சொன்னோம் என்று ஆகாதவண்ணம், பெருமாள்[4] தம்முடைய அடியார்களை இராமானுசன் உடையார்[5] என்றே அருளிச்செய்வர். "பெரு விலையன் ஆன ஒளிமணியை நடுவே இட்டுக் கோத்தால் முன்னும் பின்னும் ஒக்க விலை போவது போலே[6] முன்னோரும் பின்னோரும் இருக்க இராமானுசரை இட்டுத் திருமால் நெறியினைக் குறிப்பது எல்லார்க்கும் சிறப்பு அளிக்கும்" என்பர் பிள்ளான்.* **தன் குடிக்கு ஏதும் தக்கவா நினையாள்** - *இவள் நிலை இருந்த தன்மை இது. நீர் இனி உம்முடைய நிலை நோக்கி இவளை ஏற்றுக் கொள்ள முடிவு செய்தீரோ? இல்லையோ? அறியேன் என்கிறாள். இப்பெண்ணைத் தொடக்கமாகக் கொண்டே இக்குலப் பெருமை தொடங்கிச் செல்வதாக நினைத் திருந்தேன். தன்னைத் தொடங்கிக் குலப்பெருமை நடத்துவதாக நினைத்*

---

1. தன்குடி நம்குடி என்னாதே. 2. துடங்கி.
3. எம்பெருமானார் நெறி - எம்பெருமானார் என்பது இராமாநுசருக்குப் பெயர். தரிசனம் - நெறி; சமயம். 4. பெருமாள் - திருவரங்கநாதன். 5. இராமானுசன் உடையார் - இராமாநுசனுடைய அடியவர்கள். திருவரங்கத்தில் துளபநீர் வழங்க வைணவ அடியார்களை அழைக்குங்கால், 'இராமானுச னுடையார்' என்றே அருளப்பாடிட்டு அழைத்தல் மரபு. 6. ஒக்க விலை போதல் - ஒருசேர மதிப்பு உடையதாக ஆதல்.

நடத்துவதாக நினைத்திருந்தது. தன்னைத் தொடங்கிக் குலமர்யாதை நடத்துவதாக நினைத்திருக்கத் தான் இத்தைக் கடலிலே கவிழ்க்கப் பார்க்கிறாள். **தன் குடிக்கு** - "ஜநகாநாம் குலே" என்கிறபடியே இவள் பிறந்த பின்பாயிற்று இக் குடியில் முன்பு இல்லாத ஏற்றம் எல்லாம் உண்டாயிற்று. ஒரு நாள் பட்டர் இனிதாக வாசித்தபடியைக் கேட்டருளி எம்பார் எழுந்திருந்து நின்று கண்ணநீரை விழ விட்டு சிதிலாந்தஃகரணராய் பட்டரைக் காட்டி, "ஜநகாநாம் குலே கீர்த்தி மாஹரிஷ்யதி மே ஸுதா" என்று அருளிச்செய்தாராம். "தத் தஸ்ய" என்கிறபடியே நம்முடைய பேற்றுக்கு நமக்கு வருந்துகைக்கு ப்ராப்தி இல்லை; "அவனாலே பேறு" என்று இருக்கும்படி ஆயிற்று. "பெறுவது அவனையாகில் இக் க்ரமம் கொண்டு கார்யம் என்" என்று இராநின்றாள் அவள்; "முகத்திலே விழித்துக்கொண்டு நின்று க்ரமம் பார்க்க அமையாதோ? என்று இராநின்றாள் இவள். **ஏதும் தக்கவா நினையாள்** - மடலைக் கடைக்கணிப்பது, வேண்யுத்க்ரதநத்தில் ஒருப்படுவது ஆகாநின்றாள். **நினையாள்** - திருத்தாயார்தான் இவள் நினைவையும் அடியொற்றுகிறாள் காணும் இவளை இழக்கமாட்டாமையாலே.

**தடங் கடல் இத்யாதி** - வேண்யுத்க்ரதநத்தில் ஒருப்பட வேண்டாதபடி வந்து உதவும்படியை அநுஸந்தித்து இனியள் ஆகாநிற்கும்; அதிலே ஒருப்பட்ட

---

திருக்கத் தான் இதனைக் கடலிலே கவிழ்க்கப் பார்க்கிறாள். **தன் குடிக்கு** - **"சனகனது குலத்திலே"** (*ரா. பா.*) என்பது போலே இவள் பிறந்த பின்பன்றோ இக்குடியிலே முன்பு இல்லாத ஏற்றம் எல்லாம் உண்டாயின. இப்படித் தன்வழி வந்தவரைப் போற்றிக் கூறுவது உண்டோ என்னில், உண்டு. ஒருநாள் எம்பார், பட்டர் இனிய முறையில் படித்தது கேட்டு நெகிழ்ந்து போனார்; அவர் கண்களினின்றும் மகிழ்ச்சியினால் கண்ணீர் பெருக்கெடுத்து ஓட எழுந்து நின்றார்; நெஞ்சம் உடைகுலைப்பட்ட நிலையினராய்ப் பட்டரைக் காட்டி, **"சனக குலத்திலே என் பெண் புகழ் சேர்க்கப் போகிறாள்"** என்று அருளிச்செய்தார் என்பர். இதனால் சனக குலத்திற்குச் சீதை புகழ் சேர்த்தது போலே இராமானுச நெறிக்குப் பட்டர் புகழ் சேர்க்கப் போகிறார் என்பதனைத் தெரிவித்தார். **"என்னை மீட்டுச் செல்வது ஆகிய அச்செயல் இராமபிரான் ஆகிய அவருக்குச் செய்யத்தக்கது"** (*ரா. ஸு. 9:30*) என்று பெருமாட்டி சீதை ஆறி இருந்தது போலே நாமும் நம்முடைய பேறு குறித்து, நமக்கு வருந்துவதற்கு உரிமை இல்லை; **"அவனாலே பேறு"** என்று இருத்தல் வேண்டும். நாம் பெறுவது அப்பெருமானை என்றால் இம்முறைகளைக் கொண்டு என்ன பயன்? என்று ஆறி இருக்கிறாள் திருத்தாயார். "முகத்திலே விழித்துக்கொண்டு நின்று முறைமை பற்றி எண்ணி ஆறியிருக்கலாகாதோ?" என்று இருக்கிறாள் தலைமகள். **ஏதும் தக்கவா நினையாள்** - இப்பெண்பிள்ளை மடலைக் கடைக்கணிப்பது, கூந்தலால் சுருக்கிட்டுக் கொள்வது ஆகியவற்றில் ஒருப்படுவது[1] ஆனாள். **நினையாள்** - திருத்தாயார்தான் இவள் நினைவு யாது என்று அதனையும் அடியொற்றுகிறாள்[2] இவளை இழக்க மாட்டாமையாலே.

**தடங் கடல் நுடங்கு எயில் இலங்கை வன் குடி மடங்க வாள் அமர் தொலைத்த வார்த்தை கேட்டு இன்புறும்** - கூந்தலால் சுருக்கிட்டுக் கொள்வதில் ஒருப்பட

---

1. ஒருப்படுவது - முயல்வது. 2. அடியொற்றல் - தொடர்ந்து சென்று அறிதல்.

அளவிலே வந்து உதவினவனிறே. பரப்பு உடைத்தான கடலை அகழாக உடைத்தாய், சத்ருக்கள் கேட்ட போதே நுடங்கும்படியான மதிளை உடைத்தாய். அன்றிக்கே, புரிப்பு உடைத்தான மதிள் என்னுதல். **இலங்கை வன்குடி மடங்க** - ஊரில் அரணே அன்றிக்கே வரபலத்தாலே பல்கிப் பரந்து இருந்துள்ள குடியானது திரியட்டும்[1] முடிந்து போம்படியாக ராக்ஷஸரைப் போலே மாயையால் அன்றிக்கே, நிறம் உடைத்தான பூசலிலே வன்குடி மடங்கத் துலைத்த[2] வார்த்தை உண்டு ஸ்ரீராமாயண வ்ருத்தாந்தம்; அத்தைக் கேட்டு. **இன்புறும்** - "நம் அவஸ்தை உடையளாய் இருப்பாள் ஒருத்திக்கு உதவின போதே எனக்கும்[3] உதவினவன் அன்றோ" என்று அத்தாலே இனியளாம். **மயங்கும்** - "உதவாது ஒழிவதே" என்று மோஹிக்கும். "நம் தசையை உடையாள் ஒருத்திக்கு உதவினவன் அன்றோ" என்று அந்த அண்ணிமையை[4] அநுஸந்தித்து இனியளாம்; "அணித்தாக உதவினவன் நமக்கு உதவ வாராது ஒழிவதே!" என்று மயங்கும்.

**மின்கொடி இத்யாதி** - மயங்கினால் இழக்கலாமவளோ இவள்? மின் கொடி போலே இருக்கும் இடையானது சுருங்கும்படியாக மேலே நெருங்காநிற்கும் ஆயிற்று. மேலே இருந்து கீழே வெட்டுவாரைப் போலே தன் குடியிருப்பை அழியா நின்றது[5] ஆயிற்று. **மென் முலை** - முலைக்குக் காடிந்யம் ஸ்வபாவமாய் இருக்கச்

---

வேண்டாதவாறு வந்து உதவும் தன்மையை நினைத்து இனியள் ஆகிறாள். அவ்வாறு சுருக்கிட்டுச் சாவதற்கு முயன்ற அளவில் வந்து உதவினவன் அல்லவா! **தடங்கடல்** - பரப்புடைய கடலை அகழாக உடையதாய். **நுடங்கு எயில்** - பகைவர் கேட்ட போதே நடுங்கும்படியான மதிள். அல்லது, புரிப்பு[6] உடைத்தான மதிள் என்க. **இலங்கை வன்குடி மலங்க** - ஊரின் அரண் மட்டும் அல்லாமல், வரத்தால் வந்த மிடுக்காலே பல்கிப் பரந்திருந்த குடியானது பின்னையும் முடிந்து போகும்படி அரக்கர்களைப் போலே மாயத்தால் அன்றி நிறம் உடைத்தான பூசலிலே[7] வன்குடி மடங்கத் தொலைத்த வரலாறு உண்டு; அஃதாவது இராமாயணத்தில் சொல்லப்படும் நிகழ்ச்சி; அதனைக் கேட்டு. **இன்புறும்** - நம் நிலையில் இருக்கும் ஒருத்திக்கு உதவிய போதே நமக்கும் உறுதியாக உதவி செய்பவன் ஆயினன் அன்றோ" என்று எண்ணி இனியளாம். **மயங்கும்** - உதவாதவன் உதவாமல் இருப்பது உண்டு. அதுபோல் அன்றி உதவும் தன்மையனாய் இருந்தும் நம் நிலை இதுவாய் இருக்க உதவாமல் இருக்கிறானே!" என்று மயங்கும். நம் நிலையை உடையாள் ஒருத்திக்கு உதவியவனன்றோ" என்ற அந்த அண்ணிமையை[8] எண்ணி இனியளாம். அப்படி அணித்தாக உதவியவன் நமக்கு உதவ வாராமல் இருக்கிறானே! என்று மயங்கும்.

**மின் கொடி மருங்குல் சுருங்க மேல் நெருங்கி** - மூர்ச்சை அடைந்தால் அடையட்டும் என்று கருதி இழத்தற்கு உரியவளோ இவள்? மின்கொடி போலே இருக்கும் இடை சுருங்கும்வண்ணம் மேலே நெருங்கிய முலைகள். அவை மேலே இருந்து கீழே வெட்டுவாரைப் போலே தம் குடியிருப்பு ஆகிய இடையை அழித்துக்கொண்டிருந்தன. **மென் முலை** - முலைக்கு வன்மையே இயல்பு.

---

1. திரியிட்டு. 2. தொலைத்த. 3. இனக்கும். 4. அண்ணுமை. 5. பறியாநின்றது.
6. புரிப்பு - கோணமான வளைப்பு. 7. நிறம் உடைத்தான பூசல் - செவ்வைப்பூசல்; தரமான நேரிய போர் 8. அண்ணிமை - நெருக்கம்.

**செய்தே மென்முலை என்கிறது, விரஹஸஹம் அல்லாமையாலே. பொன் பயந்து இருந்த - இதடைய மண்ணீடாய்க் கழிந்தது ஆயிற்று. என் கொடி - இவளுடைய வைவர்ண்யத்துக்கு[1] உதவாது ஒழியிலும் தன் வயிற்றில் பிறப்புக்கு உதவாது ஒழிய ஒண்ணாது என்று இருக்கிறாள். இவளுக்கு என் நினைந்திருந்தாய் - இவளுடைய வைவர்ணமும்[2], அத்யவஸாயமும், செல்லாமையும், வடிவழகும், பிறப் பிருந்தபடியாலும் உமக்கு உதவாது ஒழியப் போமோ? இடவெந்தை எந்தை பிரானே - இவளிற்காட்டில்[3] உமக்கு உண்டான வைவர்ண்ய த்யோதகமிறே திரு இடவெந்தையில் இருப்பு. உடம்பு வெளுப்பு அன்றாகில்[4] ஸ்ரீவைகுண்டத்தில் இருக்க அமையுமிறே. உம்முடை வைவர்ண்யந் தோற்றத் திருஇடவெந்தையிலே வந்து எழுந்தருளியிருக்கிற நீர் இவளிடையாட்டத்தில் நினைந்திருந்தது என்?**

---

எனினும் மென்முலை எனல் பிரிவு ஆற்ற ஒண்ணாதவை என்பதனால் என்க. **பொன் பயந்து இருந்த** - இது முழுவதும் மண்ணிடாய்க்[5] கழிந்தது. **என் கொடி** - இவளுடைய பசலைநிறம் நீங்குவதற்கு உதவாவிட்டாலும், தன் வயிற்றில் பிறந்தவள் என்பதற்காகவாவது உதவாமல் இருக்க ஒண்ணாது என்று இருக் கிறாள் தாயார். **இவளுக்கு என் நினைந்திருந்தாய்** - இவளுடைய பசலை நிறமும், மனத்திண்மையும், செல்லாமையும், வடிவழகும், பிறப்பு இருக்கும் வகையாலும் நமக்கு உதவாது இருக்க ஒண்ணுமோ? **இடவெந்தை எந்தை பிரானே** - இவளைக்காட்டிலும் உமக்கு மிகுதியாக உள்ள பசலை நிறத்தைக் கோள் சொல்லி தருவதன்றோ[6] திருஇடவெந்தையில் இருப்பு! உடம்பு வெளுக்க வில்லை என்றால் திருநாட்டிலேயே இருத்தல் அமையும். உம்முடைய நிறவேறுபாடு[7] தோற்றத் திருஇடவெந்தையிலே வந்து எழுந்தருளியுள்ள நீர் இவளிடையாட்டத்தில் யாது நினைத்திருக்கிறீர்?

### ஒப்புமைப் பகுதி

1. **தன் குடிக்குத் தக்கது நினையாள்**

*" நிறைந்த வன்பழி நம் குடிக்கு இவள் என்று அன்னை காணக்கொடாள்"*
*" நிறைந்த இத்யாதி - ஆண்டாள் ஒருநாள் பட்டரையும் சீராமப்பிள்ளையை யும் காட்டி, 'இவர்கள் விவாஹ ப்ராப்தர் ஆனார்கள், பேசாதே இருக் கிறது என்?' என்ன, ஆகில், நாளைப் பெருமாள்பாடே போனவாறே வரக்காட்டு' என்ன, அவர்களையும் கொண்டு திருமுன்பே நிற்கச் செய்தே, பெருமாள் அருளப்பாடிட்டு, 'ஒன்று சொல்வாய் போலே இருந்தாயீ!' என்று திருவுள்ளமாக, 'இவர்கள் விவாஹ ப்ராப்தர் ஆனார்கள் என்று சொல்லாநின்றார்கள்' என்ன, 'நாமே ஸத்ருசமான இடத்திலே ஸம்பந்தித்துத் தருகிறோம்' என்று அருளிச்செய்ய பிற்றைநாள் மன்னியைக் கொண்டு வந்து நீர்வார்த்தார்கள். ஆக*

---

1. வைலக்ஷண்யத்துக்கு. 2. வைவர்ண்யமும். 3. இவளைக்காட்டிலும். 4. என்றாகில், 5. மண்ணீடாய்க் கழிதல் - மண்ணுக்குச் சமமாய் ஆதல்; அஃதாவது மண்ணாய்ப் போதல்; ஈடாக - நிகராக. 6. கோள் சொல்லித் தருதல் - உணர்த்திவிடுதல். 7. நிறவேறுபாடு - உயிர்களைப் பிரிந்திருப்பதால் பெருமானுக்கு உண்டாகிய வெண்மை நிறம்.

'அத்தலையாலே வருமது ஒழிய, தாம்தாம் ஒன்றை ஆசைப்படுகையும் கூடப் பழி' என்று இருக்கும் குடி காணும்."

திவா. மொ. 5:5:7-36

[விவாஹ ப்ராப்தர் - திருமணத்திற்கு உரியவர். ஸத்ருசமான - தகுந்த தான. ஸம்பந்தித்து - மணத் தொடர்பு உண்டாக்கி.]

2. மென் முலை

" மென் கொங்கை - முலைக்குக் காடிந்யம் ஸ்வபாவமாய் இருக்க மென்முலை என்கிறது விரஹ ஸஹம் அல்லாத முலை என்கைக்காக"

தி. நெ. தா. 17 பெ. உரை.

[காடிந்யம் - வன்மை] (66)

## 167

**உளங்கனிந் திருக்கும் உன்னையே பிதற்றும்**
**உனக்கன்றி எனக்கன்பொன் றிலளால்**
**வளங்கனி பொழில்சூழ் மாலிருஞ் சோலை**
**மாயனே! என்றுவாய் வெருவும்**
**களங்கனி முறுவற் காரிகை பெரிது**
**கவலையோ டவலம்சேர்ந் திருந்த**
**இளங்கனி இவளுக் கென்நினைந் திருந்தாய்**
**இடவெந்தை எந்தைபி ரானே!**

**ப. ரை :** **இடவெந்தை எந்தை பிரானே!-, உளம் கனிந்து இருக்கும் -** இவள் எக்காலத்தும் உன்னையே நினைந்திருக்கையாலே, நெஞ்சு கனிந்து இருக்கிறாள்; **உன்னையே பிதற்றும் -** உன்னைப் பற்றியே அடைவுகெடப் பேசுகிறாள்; **உனக்கு அன்றி எனக்கு ஒன்று அன்பு இலள் -** உன்னிடத்தில் தவிர என்னிடத்தில் சிறிதும் அன்பு இல்லாதவளாய் இருக்கிறாள்; **வளம் கனி பொழில் சூழ் மாலிருஞ்சோலை மாயனே என்று வாய்வெருவும் -** செழுமையான கனிகளையுடைய சோலைகளாலே சூழப்பட்ட திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியுள்ள வியப்புக்கு உரியவனே! என்று பிதற்றுகிறாள்; **களங்கனி முறுவல் காரிகை -** களங்கனி போலும் இனிய புன் சிரிப்பையுடைய அழகியாய், **பெரிதும் கவலையோடு அவலம் சேர்ந்திருந்த -** மிக்க மனவருத்தத்தையும் இளைப்பையும் உடையளாய் இருக்கும், **இளம் கனி இவளுக்கு -** இளங்கன்னி ஆகிய இப்பெண்பிள்ளைதிறத்திலே, **என் நினைந்திருந்தாய்?-.**

**சி. கு :** 'அன்பு ஒன்று இலள்' என்பதில் ஒன்று என்பது எண்ணைக் குறிக்காமல் சிறிது என்று அளவைக் குறித்தது. இளங்கனி - இதில் கனி என்பது கன்னி என்பதன் இடைக்குறை.

**வியா : ஏழாம் பாட்டு : உளம் கனிந்திருக்கும்** - **உள்ளமானது** இங்ஙனே பக்வமாய், அகவாயில் ஓடுகிறது வாய்விட மாட்டாதே இருக்கும். ஹ்ருதயம் பரிபக்வமாகை ஆவது என் என்னில், புஜிக்கக்கடவ அவன் புஜித்தல் இல்லையாகில் ஆஶ்ரயம் இல்லையாய் இருக்கை. **உன்னையே பிதற்றும்** - "இதுதான் பாவ பந்தத்தாலேயோ'' என்று இருந்தாள் இவள் வாய்விடும் அளவும் திருத்தாயார். உம்முடையபக்கலிலும் ஒரு அபிஸந்தி இன்றிக்கே, **"ஜாமதக்ந்யஸ்ய ஜல்பத:"** என்கிறபடியே அடைவு கேடாகச் சொல்லாநின்றாள்; ஒரு அபிஸந்தி பூர்வகமாக[1] வந்ததாகில் அடைவுபட்டிருக்குமிறே. **உனக்கு இத்யாதி** - "நம்மையும் ஒருக்கால் சொல்லாளோ" என்னும் நசை அறுத்தாள். அவனுக்கு ஆகும்படி இவ்வளவு ஆக்கினார் பக்கலிலேயாதல், அவன்பக்கலிலேயாதலிறே பாவ பந்தம் இவளுக்கு.

**வளம் இத்யாதி** - இவ்வளவு ஆன ப்ரேமத்துக்கு அவன் க்ருஷி பண்ணின படியைச் சொல்லி வாய்வெருவும். ஸம்ருத்தமான பலங்களை உடைத்தான பொழிலாலே சூழப்பட்ட திருமலையிலே ஆர்யர்கள் இகழ்ந்த[2] ம்லேச்ச பூமியில் உள்ளார்க்கு முகங்கொடுத்து நிற்கிற ஆச்சர்ய குண சேஷ்டிதங்களை அநுஸந்தித்துப் பின்னை

---

**வி : ஏழாம் பாட்டு : உளம் கனிந்திருக்கும்** - *உள்ளம் மிகவும் பக்குவமாய் நெஞ்சில் ஓடும் நினைவினை வாய்விட மாட்டாமல் இருக்கும். அகவாய் கனிகை யாவது யாது எனில், பழமானது தின்னற்கு உரியவன் தின்னாதபோது அழிந்து போவது போலே இறைவன் கூடி மகிழாத போது சார்பு இன்றி அழியும்படி இருக்கை என்பதாம்.* **உன்னையே பிதற்றும்** - *இவள் வாய்திறந்து பேசும்வரையில், இப்படி உளங்கனிந்திருப்பதுதான் இருவயின் ஒத்த காதலினாலோ என்று கருதிக் கொண்டிருந்தாள் திருத்தாயார். இவள் பிதற்றுவதைப் பார்த்த பின்பு இவளைக் குறித்து உமக்குக் காதலில்லை என்றும் இவள்கொண்ட காதல் ஒருதலைக் காதல் என்றும் புரிந்து கொண்டேன் என்கிறாள். இருதலையும் ஒத்த காதலாக இருக்குமானால் பேச்சுப் பிதற்றலாக இன்றி அடைவுபட்டிருக்கும் அன்றோ! "சமதக்நியின் பிள்ளையும் அடைவுகெடப் பேசுபவருமான பரசுராமர்" (பார. மோ.) என்பது போல இவளும் அடைவு கெடப் பேசுகிறாள்.* **உனக்கு அன்றி எனக்கு அன்பு ஒன்று இலாள்** - *"நம்மையும் நோக்கி ஒருகால் அன்புமொழி சொல்ல மாட்டாளோ?" என்று யான் கருதும் நசையை அறுத்தாள். தாய் இவ்வாறு சொல்வதற்குக் கருத்து அவனுக்கே ஆகும்படி ஆக்கிவைத்த தோழியிடமோ அன்றி அவனிடமோதான் இவளுக்கு அன்பு இருக்கிறது. தாயாகிய தன்பக்கல் அன்பு சிறிதும் இல்லை என்பதாம்.*

**வளம் கனி பொழில் சூழ் மாலிருஞ்சோலை மாயனே என்று வாய் வெருவும்** - *இத்தகைய காதல் விளைவதற்கு அவன் முயற்சி பண்ணியவாற்றைச் சொல்லி வாய் வெருவும். செழுமையான பழங்களையுடைய பொழிலாலே சூழப்பட்டது திருமலை[3]. அம்மலையிலே மேலோர்கள் இகழ்ந்த வேடர்கள் உறையும் இடத்தில் உள்ளார்க்கு முகங்கொடுத்து நிற்கிறான் பெருமான்; அவனுடைய இந்த வியத்தகு*

---

1. பூர்வமாக. 2. இழந்த.
3. திருமலை - திருமாலிருஞ்சோலைமலை. திருவேங்கடத்தையே அன்றித் திருமாலிருஞ்சோலை மலையையும் திருமலை என்று குறித்தல் வைணவ மரபு.

வாஸநையே உபாத்யாயராகச் சொல்லுமது ஒழிய உணர்த்தியுடன்[1] சொல்லுவது ஒரு வார்த்தை இல்லை. **வாய் வெருவும் - "விசிந்த்ய வாசா ப்ருவதீதமேவ"** முற்பட அநுஸந்தியா, பின்னை அதுதானும் மாட்டாதே வாஸநையாலே சில சொல் லும் அத்தனை.

**களங்கனி முறுவல்** - பிள்ளாய்! ஆர் வாய்வெருவக் கடவத்தை யார்[2] வாய் வெருவுகிறார். **"புரேவ மே சாருததீம்"** என்று அவனிறே வாய்வெருவுவான்[3]. "எதிர்த்தலையைத் தோற்பித்தோமாக வேணும்" என்று இருக்கிறவர்கள் அகவாய் இப்படி விலக்ஷணமாய் பக்வமாய்த் தோற்றினது போல **ஆ**யிற்று முறுவல் இருப்பது.

**அஸ்மிந்** - முன்பு தாமும் பிராட்டியுமாய் ஜலக்ரீடாதிகள் பண்ணி ஸரஸமாகப் பரிமாறிற்று ஓர் இடத்திலே, பிராட்டியைப் பிரிந்து தாமும்

---

*பண்பையும் செயலையும் சிந்தித்தாள்; பின்னர் அப்பயிற்சியே சொல்லுவிக்கச் சொல்லுபவள் ஆனாள்; அஃது ஒழியத் தன் உணர்ச்சியோடு சொல்லுவது ஒரு சொல் இல்லை;* வாய் வெருவும் - **"சீதையானவள் இராம இராம என்று எப்போதும் எண்ணத்தில் அவரையே இடையறாது நினைந்து வாயாலேயும் வெருவிக்கொண்டு இருந்தாள்"** *(ரா. ஸு. 32:11) என்பர். அஃதாவது முதலில் சிந்திப்பாள்; பின்னர் அதனையும் செய்யமாட்டாமல் பழைய பயிற்சியாலே சில சொல்லுவாள். இவளும் அச்சீதை போலே இருக்கிறாள்.*

களங்கனி முறுவல் - *பிள்ளாய்[4]! யார் வாய் வெருவிச் சொல்வதற்கு உரியதனை யார் வாய் வெருவுகிறார்? அவனன்றோ உனது களங்கனி முறுவலை நினைந்து வாய் வெருவ வேண்டும்.* **"அழகிய முறுவலை உடைய குற்றமற்ற மிதிலைச் செல்வியை முன்போலவே என்னிடம் அளிக்கவில்லையானால் உலகை நான் தலை கீழாக்கி விடுவேன்"** *(ரா. ஆ. 64 : 78) என்பதன்றோ இராமபிரான் பேச்சு. எதிர்த் தலையைத்[5] தோற்பிக்க வேண்டும் என்று கருதிய சீதையின் அகவாய், அழகும் கனிவும் உடைய புன்முறுவலாய்த் தோற்றியது போலே என்னுடைய பெண் பிள்ளையின் முறுவலும் தோற்றுகிறது. (ரா. ஆ. 64 : 78) என்று அவன் பிராட்டி சிரிப்புக்குத் தோற்றதனைக் காட்டுவதற்கு மேலும் ஒரு சான்று தருகிறார்.* **"இலக்குவனே! இந்தப் பாறையின்மேல், என்னோடுகூட உடம்பு கொடுப்பதில் தாராளமான தன்மை உடையவளாய் இனிய புன்சிரிப்பை உடையவளாய் ஆன சீதை முன்னதாகவே, நாலாபுறமும் மாறி மாறி அமர்ந்தவளாய் இனிய புன்சிரிப்பை உடைய வளாகி உன்னை நோக்கிப் பலவிதமான பேச்சுகளைச் சொன்னாள்".** *(ரா. ஆ. 63 : 12) என்பது இராமபிரான் கூற்று.*

*முன்பு தாமும் பிராட்டியுமாய்ப் புனல்விளையாட்டுத் தொடக்க மானவை நிகழ்த்தி இன்பமாகப் பரிமாறிக் கொண்டிருந்தது ஓர் இடத்*

---

1. உணற்றியுடன். 2. ஆர். 3. என்றவனிறே வாய்வெருவான்.
4. பிள்ளாய் - அன்பு தோன்ற அழைக்கும் விளி. 5. எதிர்த்தலை - எதிர்ப்பக்கத்தில் இருப் பவர்கள்; ஈண்டுப் பெருமான்.

இளையபெருமாளுமாய்த் தேடிக்கொடு வாராநிற்கச் செய்தே அவ்இடத்தைக் கண்டு இளையபெருமாளைப் பார்த்து அருளிச்செய்கிறார். அஸ்மிந் - இப்படி வெறுந்தரையாய்[1] இருக்கிற இடத்திலே காண் அன்று நாம் எடுப் பெடுத்தது.

"மயாகலார்த்தம் - ப்ரணய தாரையில் தம்மைத் தாம் சால மதித்திறே இருப்பது. நாமும் கூடக் காண வந்த சோழரோபாதியாகக் கடக்க நிற்கும்படி அவளுடைய அளவுடைமையும் விதக்த்தமாகப் பரிமாறின படியும் காண். உதாரசீலா - படைவீட்டில் இருந்த நாள் மாமனார் மாமி யார்க்குக் கூசிப் படிவிடுவாரோபாதி அளவுபட ஆயிற்று போகம் செல்லு வது; இப்போது அவ்வளவு அன்றிக்கே ஏகாந்த ஸ்தலமாகையாலே தன்னை முற்றூட்டாக ஸர்வ ஸ்வதாநம் பண்ணிக் கொண்டிருந்தாள் ஆயிற்று. சிலாதலே பூர்வம் - ஜலக்ரீடை பண்ணுகிறது ஓர் இடத்திலே சிலாதல மாய், இளைத்த இடத்திலே[2] அதில் ஏறுவதாகப் பெருமான் முற்கோலிக் கணிசிக்க, "ப்ரேக்ஷிதஜ்ஞாஸ் து கௌஸலா:" என்கிற அதிலேயும்

---

திலே, பிராட்டியைப் பிரிந்து தாமும் இளையபெருமாளுமாய்த்[3] தேடிக் கொண்டு வருங்காலத்தில் அவ்இடத்தைக் கண்டு இளையபெருமாளைப் பார்த்து இப்பாசுரம் அருளிச்செய்கிறார்.

இந்தப் பாறையின் மேல் - இப்படி வெறுந்தரையாய் இருக்கும் இடத் திலே அன்றோ அன்று நாம் எடுப்பு எடுத்தது[4]. என்னோடு கூட - கலவித் துறை படிதலில் தம்மை வல்லவராகச் சால மதித்திருப்பர் இராமபிரான். அப்படிப்பட்டவர், "நாமும்கூட, நாடகத்திலே காதல் விளையாட்டு களைக் காண வந்த சோழ அரசர்களைப் போலே கடக்க நிற்கும்படி[5] அன்று இன்பத்துறையில் அறிவுடையளாய்த் திறமையோடு பரிமாறினாள் கண்டாய்" என்றார். உடம்பு கொடுப்பதில் தாராளமான தன்மை உடைய வளாய் - அயோத்தி ஆகிய படைவீட்டில்[6] இருந்த நாள் மாமனார் மாமியார்க்குக் கூசி உணவினை அளந்து கொடுப்பாரைப் போலே இன்பத்தை அளவாகக் கொடுத்தாள். இப்போது அவ்வாறு அன்றித் தனி இருப்பாகையாலே தன்னை முற்றூட்டாக நுகர வழங்குவாள் ஆனாள். பாறையிலே எனக்கு முன்பு அமர்ந்தாள் - புனல் விளையாட்டு அயரும் நீர் நிலையில் ஓரிடத்திலே ஒரு கற்பாறை இருந்தது பெருமாள்[7] நீர் விளை யாட்டு அயர்ந்து இளைத்தார்; அப்போது அப்பாறையிலே இளைப்பாற லாம் என்று முற்கோலிக்[8] கணிசித்தார்[9]. "பார்வையைக் கொண்டே நினைவை அறிபவர்கள் கோசல நாட்டார்" என்னும் கோசலத்தில் புகுந்து அதனோடு உறவு பெற்றவள் அன்றோ பிராட்டி! ஆதலால், இவர்

---

1. வெறுந்தரையாய். 2. இளைத்தடத்திலே.
3. இளையபெருமாள் - இலக்குவன். 4. எடுப்பு எடுத்தல் - பேரின்பம் காணல். 5. கடக்க நிற்றல் - ஒதுங்கி நிற்றல். 6. படைவீடு - தலைநகரம். 7. பெருமாள் - இராமபிரான். 8. முற்கோலி - முதலில் முடிவு செய்து. 9. கணிசித்தார் - பார்த்தார்.

ஒரு ஸம்பந்தம் உண்டிறே இவளுக்கு! அத்தை இவருடைய இங்கிதாதி களைக் கொண்டு அறிந்து இவரை இளைப்பிக்க வேணும் என்று பார்த்து, பெருமாள் ஏறுவதாகக் கணிசித்த துறையை அடைத்துக் கொண்டிருந்தாள். **உபோபவிஷ்டா** - அப்படியாய் இருக்குமிறே எங்கும். **காந்தஸ்மிதா** - வெறும்புறத்திலே தானே துவக்க வல்லவள்; முறுவலைச் சேர்த்தாப் போலேயாயிற்று முகந்தான் இருப்பது. அதுக்கு மேலே அப்போது பிறந்த வெற்றியாலே ஜாதஹாஸை ஆனாள் ஆயிற்று. **த்வாமாஹ** - இதுக்கு முன்பு துடங்கின கார்யத்தின்[1] தலைக்கட்டாதே மீளுமது இல்லையிறே பெருமாள்; இதொன்றும் தலைக்கட்டப் பெற்றது இல்லை; அத்தாலே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டார் பெருமாள்; அவரை விடா, இவரைப் போரப் பொலியக்[2] கொண்டாடுகிற இளையபெருமாள் முகத்தைப் பார்த்தாள்; "பாரீரோ தம்பியார்! நீங்கள் நினைத்தது எல்லாம் தலைக்கட்டினி கோளிறே! நீங்கள் வல்ல வலிய ஆண்பிள்ளைகள்; நாங்கள் பெண்பெண்டுகள்; நீங்கள் வேட்டைக்கும் வினைக்கும் போய் வ்யாபரிக்குமவர்கள்; நாங்கள் வீடு விட்டுப் புறப்பட்டு அறியோம். உங்களுக்கு நினைத்த வகைகள் எல்லாம் தலைக்கட்டலாமிறே! உங்கள் தமையனார் வென்றாரிறே!" என்று பஹு முகமாகக் கொண்டு இவ்வார்த்தை அருளிச்செய்தாள் ஆயிற்று.

---

*நினைவை இவருடைய குறிப்பு முதலானவற்றைக்கொண்டு அறிந்து இவரை இளைப்பிக்க வேண்டும் என்று கருதினாள்; கருதி, பெருமாள் ஏறுவதாகக் கணிசித்த துறையை அடைத்துக்கொண்டு நின்றாள்.* **மாறி மாறி அமர்ந்தாள்** - *அவ்வாறே பெருமாள் ஏறி இளைப்பாற நினைத்த அப் பாறையின் எல்லாப் புறத்தும் தான் மாறி மாறி அமர்ந்து அடைத்துக் கொண்டாள்.* **இனிய புன்சிரிப்பை உடையவள்** - *வெறும் முகத்தாலேயே என்னை மயக்க வல்லவள்; இந்நிலையில் அவள் முகமோ முறுவலோடு சேர்த்துப் படைக்கப்பெற்றது போலே அமைந்து உள்ளது. அதற்கு மேலாக, அப்போது பிறந்த வெற்றியாலே பெருஞ் சிரிப்பை உடையள் ஆனாள்.* **உன்னை நோக்கிச் சொன்னாள்** - *இதற்கு முன்பு தொடங்கின செயலைத் தலைக்கட்டாமல்[3] மீளுவது இல்லை, பெருமாள்; இஃது ஒரு செயலை மட்டும் அவரால் தலைக்கட்ட முடியவில்லை; அதனாலே நாணிக் கவிழ்தலையிட்டார்[4] பெருமாள்; பிராட்டி பெருமாளை விடுத்து இவரைப் போரப் பொலியக் கொண்டாடும்[5] இளையபெருமாள் முகத்தைப் பார்த்தாள்; "தம்பியாரே, பாரீர்! நினைத்தவற்றை எல்லாம் முடித்தவர்கள் அன்றோ நீங்கள்! நீங்கள் வல்ல வலிய[6] ஆண்பிள்ளைகள்; நாங்கள் பெண் பெண்டுகள்; நீங்கள் வேட்டைக்கும் வினைக்கும்[7] போய் அருஞ்செயல் புரிபவர்கள்; நாங்கள் வீடு விட்டுப் புறப்பட்டு அறியோம். உங்களுக்கு நீங்கள் நினைத்த வகைகளில் எல்லாம் செய்து முடிக்கலாம் அல்லவா! அதனால் உங்கள் தமையனாரே இதுபோதும் வெற்றி பெற்றார்!" என்று பலவாறாக நகையாடினாள்.*

---

1. துடங்கினவைத்தில். 2. போரப் பொலியச் சொல்லிக். 3. தலைக்கட்டுதல் - முடித்தல். 4. கவிழ்தலை இடுதல் - நாணுதல். 5. போரப் பொலியக் கொண்டாடுதல் - மிகவும் புகழ்ந்து போற்றுதல். 6. வல்ல வலிய - மிக வலிய. 7. வினை - போர்.

காரிகை - நிருபாதிக ஸ்த்ரீத்வத்தை உடையவள். **பெரிது இத்யாதி** - கவலையும் அவலமும் ஆகிறது மாநஸமாயும் சாரீரமாயும் வரும் வ்யதை. கவலை ஆகிறது நெஞ்சில் தடுமாற்றம்; அவலம் ஆகிறது வடிவைப் பேணாமை. **இளங் கனி** - நீர் வில்லை முறித்துச் சென்று கைப்பிடித்த ஸ்ரீஜநகராஜன் திருமகளிலும் இளையவள் இவள்; உம்மைப் பிரிந்தால் அவளைப் போலே, **"ஸமாத்வாதஶ தத்ராஹம்"** என்று ஆசையிட்டுத் தரிக்க வல்லவள் அன்று. இப்படி பருவம் இளையவளாகில் முன்பே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாகிலன்றோ இப்படி படக்கடவது என்னில், இயற்கையிலே அவள் கலந்து வைக்குமே, அத்தைத் தாயார் அறியாளே. **என் இத்யாதி** - ஸ்ரீஜநகராஜன் திருமகளைக் கைப்பிடிக்கைக்காக ஸ்ரீமிதிலையில் புறச்சோலையிலே விட்டுக்கொடு இருந்தாப் போலே, இவளைப் பெறுகைக்காகத் திருஇடவெந்தையிலே விட்டுக்கொடு இருக்கிற நீர் இவளிடையாட்டத்தில் என்ன நினைத்திருந்தீர்.

---

காரிகை - *இயற்கையான பெண்மை உடையவள்.* **பெரிது கவலையோடு அவலம் சேர்ந்திருந்த இளங்கனி** - *கவலையும் அவலமும் மனத்திலும் மெய்யிலும் வரும் துன்பம். கவலை - நெஞ்சில் தடுமாற்றம்; அவலம் - வடிவைப் பேணாமை.* **இளங்கனி** - *நீர் வில்லை முறித்துச் சென்று கைப்பிடித்த சீர்மிகு சனகராசன் திருமகளினும் இளையவள் இவள். உம்மைப் பிரிந்தால் அவளைப் போலே,* **"இராமனுடைய திருமாளிகையில் நான் பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்தேன்"** *(ரா. ஸு. 36:11)* **என்று** *ஆசைகொண்டு உயிர் தாங்கி வாழ வல்லவள் அல்லள். இத்தகைய இளம் பருவத்தள் என்றால் இப்படிப்பட்ட துன்பம் எப்படிப் பட முடியும்? முன்பே புணர்ச்சியில் இறங்கி இருந்தால் அன்றோ இப்படிப் படுவதற்கு உரியவள் என்னில், இயற்கைப் புணர்ச்சியில் அவள் தலைமகனோடு கலந்திருந்தாள். அதனைத் தாய் அறியாள் என்க.* **என் நினைந்திருந்தாய்** - *சீர்மிகு சனகராசன் திருமகளைக் கைப்பிடித்தற்காகச் சீரார் மிதிலையில் புறச்சோலையிலே வந்து தங்கி இருந்தாற் போலே இவளைப் பெறுகைக்காகத் திருஇடவெந்தையிலே விட்டுக் கொண்டிருக்கும்[1] நீர் இவளைக் குறித்து என்ன நினைத்துள்ளீர்?*

### ஒப்புமைப் பகுதி

மாலிருஞ்சோலை மலை

> *" சீராரும் மாலிருஞ்சோலை - ஆர்யர்கள் இகழ்ந்த தெற்குத் திக்கிலே அங்குத்தை ஸ்த்தாவரங்களோடும் தன்னோடும் வாசியற நின்று ம்லேச்சர்க்கு அகப்பட முகங்கொடுக்கும் நீர்மையையுடையனாய் இருக்கிறானிறே; அங்கே சென்று என் வடிவைக் காட்டி எனக்கு முகங் கொடுக்கும்படி எல்லாம் நிலை நிறுத்துகிறேன் "*
>
> *சி. ம. 73 பெ. உரை.*

*[ஆர்யர்கள் - மேலோர்கள்]* (67)

---

1. விட்டுக் கொண்டிருத்தல் - வந்து தங்கியிருத்தல்.

அலங்கெழு தடக்கை ஆயன்வாய் ஆம்பற்
கழியுமால் என்உள்ளம் என்னும்
புலங்கெழு பொருநீர்ப் புட்குழி பாடும்
போதுமோ நீர்மலைக் கென்னும்
குலங்கெழு கொல்லிக் கோமள வல்லி
கொடியிடை நெடுமழைக் கண்ணி
இலங்கெழில் தோளிக் கென்நினைந் திருந்தாய்
இடவெந்தை எந்தைபி ரானே!

ப. ரை : இடவெந்தை எந்தை பிரானே! -, அலம்கெழு தடக்கை ஆயன் வாய் ஆம்பற்கு என் உள்ளம் அழியும் என்னும் - கலப்பை பொருந்திய பெரிய கையினை யுடைய இடையனான கிருட்டிணனுடைய வாயில் வைத்து ஊதும் குழலோசைக்கு என் நெஞ்சம் அழிகிறது என்கிறாள்; புலம்கெழு பொரு நீர்ப் புட்குழி பாடும் - பொறி களைக் கவரும் அலை பொருந்திய நீரையுடைய திருப்புட்குழியைக் குறித்துப் பாடு கிறாள்; நீர்மலைக்குப் போதுமோ என்னும் - திருநீர்மலைக்குப் போவோமா என்கிறாள்; குலம் கெழு கொல்லிக் கோமள வல்லி - சிறப்புப் பொருந்திய கொல்லி மலையில் உள்ள பாவை போன்றவளும், கொடி இடை - வஞ்சிக்கொடி போலும் இடையை உடையவளும், நெடு மழைக் கண்ணி - பெருமழை போலே நீர் சிந்தும் கண்களையுடையவளும், இலங்கு எழில் தோளிக்கு - விளங்குகின்ற அழகிய தோள்களையுடையவளுமான இப்பெண்பிள்ளையைக் குறித்து, என் நினைந்திருந்தாய்? -.

சி. கு : அலம் - ஹலம் என்னும் வடசொல் திரிபு; கலப்பை என்பது பொருள். திருப்புட்குழி - இது காஞ்சிக்கு மேற்கே ஏழு கல் தொலைவில் இருக்கும் திருக்கோயில். மழைக்கண்ணி - இகரம் வினைமுதல் விகுதி. திருநீர் மலை சென்னையை அடுத்து உள்ள விண்ணகரம்.

வியா : எட்டாம் பாட்டு : அலம் இத்யாதி - நெஞ்சில் அழிவை மறைக்க ப்ராப்தமாய் இருக்க, நெஞ்சில் அழிவைத் தாயான என் முன்னே சொல்லா நின்றாள்; 'அலம்' என்று ஹலம். கலப்பை சேர்ந்திருந்துள்ள சுற்று உடைத்தான கையையுடைய க்ருஷ்ணனுடைய வாயில் குழலோசையிலே, ஒன்றுக்கு அழியாத

---

வி : எட்டாம் பாட்டு : அலம் கெழு தடக்கை ஆயன் வாய் ஆம்பற்கு அழியு மால் என் உள்ளம் என்னும் - நெஞ்சில் அழிவை மறைத்துக் கொள்ள வேண்டி யிருக்க, நெஞ்சில் அழிவைத் தாயான என் முன்னே சொல்லுகிறாள். அலம் - கலப்பை. கலப்பை சேர்ந்திருக்கும் பருத்த கையையுடைய கிருட்டிணனுடைய

---

168. 1 : 6 என் உளம்.

**என் நெஞ்சு அழியாநின்றது என்னாநின்றாள். வயிரமும் உருக்கும் காணும் வாயில்** குழலோசை[1]. இலைக்குழல் என்று நிர்ப்பந்திக்கிறாரும் **உண்டு. ஹலத்தை** யுடைய என்கிற இதுக்குக் கருத்து என் என்னில், கையில் ஆயுதத்துக்கு எதிரிகள் அழியுமாப் போலே குழலோசைக்கு இவள் அழியாநின்றாள் என்கை. "தாய் தமப்பனுக்குப் பரதந்த்ரனாகையாலே குறித்த காலத்திலே வரப் பெற்றிலேன்" என்றாப் போலே சிலவற்றைக்[2] குழலோசையிலே தோற்றவைத்திறே **ஊதுவது.** **"ஜகௌ கலபதம் சௌரிஸ் தாரமந்த்ர பதக்ரமம் ரம்யம் கீத த்வநிம்** **ஶ்ருத்வா ஸந்த்யஜ்யாவஸதாம்ஸ்ததா"** என்று சொல்லுகிறபடியே. அன்றிக்கே, ஆறு நீர்வர முன்னே சினையாறுபடுமாப் போலே க்ருஷ்ணன் வரவுக்கு உறுப்பாக முன்னே வரும் நம்பி மூத்தபிரான் குழலோசையாகவும் **ஆம்.**

அதிற்காட்டிலும் அழிக்கும் போலே காணும் அதுக்கு இவ்வருகில் உகந் தருளின நிலத்தில் நிலை. 'புலம்' என்று விளைநிலத்தைச் சொல்லிற்றாகவுமாம். அன்றிக்கே, கண்டாருடைய இந்த்ரியங்கள் பிணிப்பு உண்ணும்படியாய்த் தன்னில் தான் பொராநின்றுள்ள ஜல ஸ்ம்ருத்தியையுடைய திருப்புட்குழியிலே நிற்கிற நிலையை அநுஸந்தித்தவாறே நான் தாய் என்று பாராதே வாய் விட்டுப் பாடா நின்றாள். **போதுமோ நீர்மலைக்கு என்னும்** - "நம் தசை[3] இருந்தபடியால்

---

**வாயிலிருந்து** வரும் குழலோசையிலே ஒன்றுக்கும் அழியாத என் நெஞ்சம் அழிகிறது **என்கிறாள்.** வலிய வேரூன்றிய பகைமையும் உருக்கக் கூடியது **ஆவன்** வாயில் குழலோசை. இவ்வாறு ஆம்பல் என்பதற்கு மூங்கிற் **குழல் என்று** கூறாமல், இலைக்குழல் என்று வற்புறுத்திக் கூறுவாரும் உண்டு. கலப்பையை யுடைய **என்னும்** இதற்குக் கருத்து யாது என்னில், கையில் உள்ள படைக்கு எதிரிகள் அழிவது போலே குழலோசைக்கு இவள் அழிகிறாள் **என்பது** ஆகும். "தாய் தமப்பனுக்கு[4] அடங்கி நடப்பவனாகையாலே குறித்த காலத்தில் வர முடியா மற் போயிற்று" என்பது போலே சிலவற்றைக் குழலோசையிலே தோன்றும்படி செய்தல்லவா அவன் குழல் ஊதுவது. "மகாவிட்டுணு ஏற்ற இறக்கங்களோடு கூடிய இனிய இசையில் பாடினார். அந்த இனிய பாசுரத்தைக் கேட்டு உடனே அவரவர் களுடைய இருப்பிடத்தை விட்டு எழுந்தார்கள்" (வி. பு. 5) என்று சொல்வதுபோலே அவர்களும் குழலோசையில் ஈடுபட்டிருப்பார்கள். அன்றேல், ஆறு நீர்வர முன்னே சினையாறு படுவது போலே[5] கிருட்டிணன் வரவுக்கு உறுப்பாக முன்னே வரும் நம்பி மூத்தபிரான்[6] குழலோசையாகவும் ஆம்.

புலம் கெழு பொருநீர்ப் புட்குழி பாடும் - அதனைக்காட்டிலும் அழிக்கும் போலும் இங்குள்ள உகந்தருளின நிலத்தின் நிலை. 'புலம்' என்பது விளைநிலத் தைக் குறித்ததாகவும் ஆம். அல்லது, கண்டாருடைய பொறிகள் பிணிப்பு உண்ணும்படியாய், அலைகள் ஒன்றோடு ஒன்று மோதும் நீர்வளத்தையுடைய திருப்புட்குழியிலே நிற்கும் நிலையை எண்ணியவாறே நான் தாய் என்று பார்க்கா மல் வாய்விட்டுப் பாடுகிறாள். போதுமோ நீர்மலைக்கு என்னும் - "நம் நிலை

---

1. குழலின் ஓசை. 2. சிலவைத்தைக். 3. நசை.
4. தமப்பன் - தந்தை. 5. சினையாறு படுவது - ஆற்றில் வெள்ளம் வருவதற்கு முன்னர் நீர் பொசிந்து அதனைக் காட்டுவது. 6. நம்பி மூத்தபிரான் - பலராமன்.

திருநீர்மலையிலே போய்ப் புக்கே விடுவோம் போலே இருந்ததீ!'' என்று விலக்க நினைக்கிற தாயாரோடே தோழிமார்க்குச் சொல்லுமாப் போலே சொல்லாநின்றாள்.

**குலம் இத்யாதி** - கொல்லிமலையிலே ஒரு பாவை உண்டு; வகுப்பு அழகிதாய் இருப்பது; அதுபோலேயாயிற்று இவளுக்கு உண்டான ஏற்றமும், பிறப்பும், அநுகூலமும், அடுத்துப் பார்க்க ஒண்ணாத[1] ஸௌகுமார்யமும். **''என்னுடைக் கோமளக் கொழுந்து''** என்னக் கடவதிறே. **கொடி இத்யாதி** - கொடி போலே இருந்துள்ள இடையை உடையளாய், ஒருக்கால் கண்ணாலே நோக்கில் ஒரு பாட்டம் மழை விழுந்தாப் போலே இலக்கானார் திமிர்க்கும்படியான நோக்கை உடையளாய், உஜ்ஜ்வலம் ஆகாநிற்பதாய்க் கீழ்ச் சொன்னதுக்கு எல்லாம் மேலே அழகிதான தோள்களை உடையளான இவளுக்கு. **என் இத்யாதி** - **''ராகவோர்ஹதி வைதேஹீம்''** என்னும்படியே உமக்குத் தகுதியாய்[2] இருக்கிற இவளிடையாட்டத்தில் நீர் நினைத்து இருக்கிறது என்?

---

*இருந்த தன்மையைப் பார்த்தால் திருநீர்மலையிலே போய்ப் புகுந்தே விடுவோம் போல் இருக்கிறதே!'' என்று விலக்க நினைக்கும் தாயாரோடு தோழிமார்க்குச் சொல்வது போலே சொல்லுகிறாள்.*

**குலம் கெழு கொல்லிக் கோமள வல்லி** - *கொல்லிமலையிலே ஒரு பாவை உண்டு; அது வகுப்பு அழகு[3] பொருந்தியதாய் இருப்பது; அதனைப் போலும் ஏற்றமும், பிறப்பும், பாங்கும், தன்னை அடுத்துப் பார்க்க ஒண்ணாத மென்மையும் உடையவள். ''என்னுடைக் கோமளக் கொழுந்து'' (தி. வா. மொ.7:2:7) என்று சொல்வர் அன்றோ!* **கொடி இடை நெடுமழைக் கண்ணி இலங்கு எழில் தோளிக்கு** - *கொடி போலே இருக்கும் இடையை உடையளாய், ஒருகால் கண்ணாலே நோக்கில் ஒரு பாட்டம் மழை விழுந்தாற் போலே இலக்கானார் திமிர்க்கும்படி அமைந்த நோக்கை உடையளாய், ஒளிவீசுவதாய், கீழ்ச் சொன்னவற்றிற்கு எல்லாம் மேலே அழகிதான தோள்களை உடையளான இவளுக்கு.* **என் நினைந்திருந்தாய்** - *''ஒரே வகையான பண்பு, வயது, நடத்தை இவற்றை உடையவளும், நிகரான குலப்பிறப்பையும் சிறப்பையும் உடையவளும் ஆகிய வைதேகியை அடைய இராகவனே தகுந்தவர்; கறுத்த கண்களையுடைய இவளும் அவரை அடையத் தகுந்தவள்'' (ரா. ஸு. 16:5) என்று சொல்வதற்கு ஒப்ப உமக்குத் தகுதியாய் இருக்கும் இவளிடையாட்டத்தில் நீர் நினைத்திருப்பது யாது?*

### ஒப்புமைப் பகுதி

1. **ஆயன்வாய் ஆம்பற்கு அழியுமால்**

*'' அவனுடைத் தீங்குழல் ஈருமாலோ - அவனுடைய இனிய குழலோசை, 'அவன் நெஞ்சு கல்' என்று கைவாங்க ஒட்டுகிறது இல்லை. 'நான் பகல் எல்லாம் பிரிந்தேன், வரவு தாழ்த்தேன், ஆற்றேன், பரதந்த்ரனாய்க் கெட்டேன்' என்கிற புடைகளிலே சில பாசுரங்களை வைத்திறே*

---

1. பொறாத; பெறாத. 2. தகுதி ஆம்படியாய்.
3. வகுப்பு அழகு - உடல் உறுப்புகளின் அமைப்பு அழகு.

*குழலூதுவது. 'அது கல்லென்று கை வாங்காதே கிடாய், நீர் கிடாய்' என்னா நின்றது"*

*தி. வா. மொ. 9:9:5-36*

2. **மழைக் கண்ணி**

*" மழைக்கண் மடந்தை - ஒரு பாட்டம் மழை விழுந்தாற் போலே ஆயிற்று குளிர நோக்கினால் நோக்கு இருப்பது "*

*தி. வி. 52 பெ. உரை.*

*" மழைக்கண்ணார் - அடுத்து ஒருகால் பார்க்க, கால தத்வம் உள்ள தனையும் வவ்வலிடும்படி பண்ணும் "*

*பெ. ம. கண்ணி 29 பெ. உரை.*

*[கால தத்வம் - காலம் என்னும் பொருள்]* *(68)*

## 169

**பொன்குலாம் பயலை பூத்தன மென்தோள்**
**பொருகயல் கண்துயில் மறந்தாள்**
**அன்பினால் உன்மேல் ஆதரம் பெரிதிவ்**
**அணங்கினுக் குற்றநோய் அறியேன்**
**மின்குலாம் மருங்குல் சுருங்கமேல் நெருங்கி**
**வீங்கிய வனமுலை யாளுக்கு**
**என்கொலாம் குறிப்பில் என்நினைந் திருந்தாய்**
**இடவெந்தை எந்தைபி ரானே!**

ப. ரை : **இடவெந்தை எந்தை பிரானே! - ,** **மென்தோள்** - மென்மை பொருந்திய தோள்கள், **பொன் குலாம் பயலை பூத்தன** - பொன் போலே விளங்கு கின்ற பசலை நிறத்தைக் கொண்டன; **பொருகயல் கண் துயில் மறந்தாள்** - தம்முள் போரிடுகின்ற கயல்மீன்களைப் போலும் கண்களிலே உறக்கத்தை மறந்துவிட்டாள்; **உன்மேல் அன்பினால்** - உன்னிடத்தில் கொண்ட ஆசையினால், **ஆதரம் பெரிது** - இவளுக்கு உண்டாகி உள்ள காதல் பெரிது ஆகும்; **இவ்அணங்கினுக்கு உற்ற நோய் அறியேன்** - இப்பெண்ணுக்கு வந்துள்ள நோயை அறிகின்றேன் இல்லை. **மின் குலாம் மருங்குல் சுருங்க** - மின்னல் போலும் கொண்டாடத்தக்க இடை ஒசியுமாறு, **மேல் நெருங்கி** - மேலே ஒன்றோடு ஒன்று பொருந்தி, **வீங்கிய வன முலையாளுக்கு**- பருத்த அழகிய முலைகளையுடைய இம்மகளுக்கு, **என் ஆம்கொல்** - என்ன ஆகுமோ? **குறிப்பில் என் நினைந்திருந்தாய்** - இவளைப் பற்றித் திருவுள்ளத்தில் யாது நினைந்திருக்கிறாய்?

சி. கு : பயலை - பசலை; தலைமகன் பிரிவால் தலைமகள் மேனியில் உண்டாகும் ஒருவகை நிற மாற்றம். அணங்கு - பெண்.

---

**169.** 2 : 4 பெரிதென். 2 : 6 உற்றநோ.

**வியா : ஒன்பதாம் பாட்டு : பொன் குலாம் இத்யாதி** - பொன்னைக் குலாவா நின்றுள்ள, கொண்டாடா நின்றுள்ள, வைவர்ண்யத்தை பஜித்தன விரஹஸஹம் அல்லாத தோள். **பொரு கயல் இத்யாதி** - பொராநின்றுள்ள கயல் போலே முக்த்தமாய் இருந்துள்ள கண்ணில் நித்ராதத்வம் அடியே பிடித்து வ்யுத்பத்தி பண்ணவேண்டும்படியாக வாஸநையோடே மறந்தாள். **அன்பினால் இத்யாதி** - ஸங்கம் அடியாக உம்முடைய பக்கல் பிறந்த காமமானது அறப் பெரிது. **இவ் அணங்கினுக்கு** - பிறர்க்கு இப்படி தன் பக்கலிலே ஆதரம் பிறக்கும்படி அழகை யுடைய விலக்ஷணையான இவளுக்கு. **உற்ற நோய் அறியேன்** - இவளுக்கு முருடு கொளுந்தும்படி பிறந்த நோய் இன்னது என்று அறிகிலேன்[1], பயலை பூத்தாள், கண் துயில் மறந்தாள், அன்பினால் உன்மேல் ஆதரம் பெரிது என்று நோவும் சொல்லி நோவுக்கு நிதாநமும் சொல்லாநிற்க, அறியேன் என்கிறது, இவ் விஷயம் தன்னில் நிதாந விசேஷத்தைப் பற்ற. அதாகிறது முறுவலிலேயோ? நோக்கி லேயோ? வடிவிலேயோ சீலத்திலேயோ? அகப்பட்ட துறை விசேஷம் அறிகிறிலேன்.

**மின் குலாம் இத்யாதி** - மின் போலே வளையாநின்றுள்ள இடையானது சுருங்கும் படியாக மேலே நெருங்கி வளராநின்றுள்ள. முன்பே, "இற்றது, முறிந்தது" என்னும்படி ஆயிற்று இடை இருப்பது; அதுக்கு மேலே ஆஶ்ரயத்தைப் பாராதே நெருங்கி வளராநின்றுள்ள அழகிய முலையையுடைய இவளுக்கு. **என் கொலாம்** -

---

வி : ஒன்பதாம் பாட்டு : **பொன் குலாம் பயலை பூத்தன மென் தோள்** - *பொன்னைக் குலவுகின்ற பசலை நிறத்தைப் பெற்றன பிரிவுத் துயரினை ஆற்ற ஒண்ணாத தோள்கள்.* **குலவுகின்ற** - *கொண்டாடுகின்ற.* **பொரு கயல் கண் துயில் மறந்தாள்** - *போரிடும் கயல் போலே இருக்கும் அழகுடைய கண்கள்; அவை உறக்கத்தை அடியே பிடித்துப் புதியது உண்ண*[2] *வேண்டும்படியாக அடியோடு மறந்தாள்.* **அன்பினால் உன்மேல் ஆதரம் பெரிது** - *அன்பு அடியாக உம்மிடம் பிறந்த காமம் அறப்*[3] *பெரிது.* **இவ் அணங்கினுக்கு** - *பிறர்க்கு இப்படித் தன் பக்கலிலே ஆதரம் பிறக்கத் தக்க அழகையுடைய நங்கையான இவளுக்கு.* **உற்ற நோய் அறியேன்** - *இவளுக்கு முருடு கொளுந்தும்படி*[4] *பிறந்த நோய் இன்னது என்று அறியேன். பயலை பூத்தாள், கண் துயில் மறந்தாள், அன்பினால் உன்மேல் ஆதரம் பெரிது என்று நோவும் சொல்லி நோவுக்குக் காரணமும் சொன்னாள். அதன்பின்னர் நோயினை அறியேன் என்கிறாள். இஃது என்ன முரண்பாடு என்னில், அவள் நோய்க்குக் காரணமாய் அமைந்த பலவற்றுள் இதுதான் காரணம் என்று அறுதியிட முடியாமையினால் இப்படிக் கூறுகிறாள் என்க. அஃதாவது, அவள் அகப்பட்டது எத்துறையில்?*[5] *இறைவன் முறுவலிலேயோ? நோக்கிலேயோ? வடிவிலேயோ? நீர்மையிலேயோ? என்று அறியேன்.*

**மின் குலாம் மருங்குல் சுருங்க மேல் நெருங்கி வீங்கிய வன முலையாளுக்கு** - *மின்னலைப் போலே வளைந்துள்ள இடை சுருங்கும்படியாக மேலே நெருங்கி வளர்ந்துள்ள. முன்பே, "இற்றது, முறிந்தது" என்று சொல்லத் தக்க வகையில் இடை அமைந்திருந்தது. அதற்கு மேலே பற்றுக்கோடான இடை தாங்குமா என்று பாராமல் நெருங்கி வளர்ந்துள்ள அழகிய முலைகளையுடைய இவளுக்கு.*

---

1. அறிகிறிலேன்.
2. புதியது உண்ணல் - புதிதாக அறிந்துகொள்ளல். 3. அற - மிகவும். 4. முருகு கொளுந் தும்படி - முரட்டுத்தனம் உண்டாகும்படி. 5. துறை - இடம்.

தான் கைவிட்டமை தோற்றச் சொல்லுகிற வார்த்தை. இவளுக்கு எவ்வளவாய்த் தலைக்கட்டக் கடவதோ? குறிப்பில் இத்யாதி - தாய் கைவிடுதல் தான் கைவிடுதல் செய்தால் கைக்கொண்டு[1] நோக்குகைக்கு ஈடாகத் திருஇடவெந்தையிலே வந்திருக் கிற நீர் உம்முடைய திருவுள்ளத்தால் நினைத்திருக்கிறது என்? வாலி பக்கலிலே கண்டோமிறே ப்ராதாக்கள் உதவாதபடி; ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே கண்டோமிறே தமப்பன் உதவாதபடி; தான் தன்னை அநுஸந்தித்து அஞ்சின அர்ஜுநனுக்கு, "மாமேகம் சரணம் வ்ரஜ" என்னக்கண்டோமிறே அவன் உதவும் படி.

---

என் கொலாம் - *தான் கைவிட்டமை தோற்றச் சொல்லும் சொல்.* இவள் நிலை *எங்கே சென்று முடியப் போகிறதோ?* குறிப்பில் என் நினைந்திருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே - *தாய் கைவிடுதல், தானே தன் முயற்சியைக் கைவிடுதல் செய்தால் அதை அறிந்து நோக்குவதற்கு[2] ஏற்றவாறு நீர் திருஇடவெந்தையிலே வந்திருக் கின்றீர். அத்தகைய நீர் உம்முடைய திருவுள்ளத்தால் நினைத்திருப்பது யாது? உடன்பிறந்தவன் உதவாத தன்மையை வாலியிடத்தில் கண்டோம். தந்தை உதவாத தன்மையைச் சீர்மிகு பிரகலாதனிடத்தில் கண்டோம்.* தான் தன்னைக் *குறித்து எண்ணிப் பார்த்து அஞ்சின அருச்சுனனுக்கு,* "என் ஒருவனையே தஞ்ச மாகப் பற்று" *(கீதை. 18:66)* என்று சொல்லி அவன் உதவும் தன்மையைக் கண்டோம் அன்றோ!

## ஒப்புமைப் பகுதி

1. **பொன் போலும் பயலை பூத்த தோள்**

" *பொன்னே பூப்ப - ஸுக்ஷேத்ரம் மணல்மேடு ஆனாற்போலே அவனுக்கு போகோபகரணமான முலையை வைவர்ண்யம் கொண்டுபோயிற்று என்கிறாள். பொன்னே பூப்ப - ஒரு கற்பகக் கன்று கோட்புக்காப்போலே இருக்கிறது ஆயிற்று, தனக்கு இவளுடைய வைவர்ண்யம்* "

*தி. நெ. தா. 17 பெ. உரை.*

*[ஸுக்ஷேத்ரம் - நன்செய் நிலம். போகோபகரணம் - இன்பநுகர்ச்சிக்குக் கருவி. வைவர்ண்யம் - நிற வேறுபாடு.]*

2. **பொருகயல் கண்**

" *பொருகயல் கண் - அவனைப் பொருகிற கண் எண்ணுதல்; தன்னிலே பொருகிற கண் எண்ணுதல். கயல்கண் - கயல்போலே மிளிரா நின்றுள்ள கண்* "

*தி. நெ. தா. 17 பெ. உரை.*

3. **அணங்கு**

" *அணங்குக்கு... - அணங்கென்று தெய்வப்பெண். 'சூரும் அணங்கும் தெய்வப்பெண் பெயர்' என்னக்கடவதிறே. அப்ராக்ருத ஸ்வபாவையான இவளுக்கு* "

*தி. வா. மொ. 4:6:7-36*

*[அப்ராக்ருத ஸ்வபாவை - இயற்கைக்கு மாறான இயல்புடையவள் செயற்கை கடந்த தெய்வ நலமுடையவள்.]*

---

1. தாய் கைவிடுதல் தான் கைவிடுதல் செய்தால் அதைக் கொண்டு.
2. நோக்குதல் - பாதுகாத்தல்.

4. நோய்

" நோய் - இப் ப்ரேமந்தான் அவஸ்த்தாநுகுணமாகப் புருஷார்த்தமாய் இருக்கும். போகோபகரணமாய் இருக்கும், நோவுமாய் இருக்கும்; ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தார்க்குப் புருஷார்த்தமாய் இருக்கும், போக்தா வுக்கு போகோபகரணமாய் இருக்கும்; விஶ்லேஷித்தார்க்கு வ்யாதியாய் இருக்கும்" தி. நெ. தா. 23 பெ. உரை.

[ப்ரேமம் - அன்பு. அவஸ்த்தாநுகுணமாக - நிலைக்கு ஏற்ப. போகோப கரணம் - இன்ப நுகர்ச்சிக்குக் கருவி. புருஷார்த்தம் - பேறு. போக்தா - நுகர்வோன். விஶ்லேஷித்தார் - பிரிந்தார்.]

5. மின் குலாம் மருங்குல் சுருங்க மேல் நெருங்கி வீங்கிய வனமுலை

" கொம்மை முலையும் இடையும் கொழும்பணைத் தோள்களும் கண்டிட்டு "

" இடையும் - முலையினுடைய வளர்த்தியாலே நெருங்கி நொந்திருக்கிற இடையும் "

பெரி தி 3:8:5 ம. மா. மு. உரை.

(69)

## 170

அன்னமும் மீனும் ஆமையும் அரியும்
ஆயஎம் மாயனே அருளாய்
என்னுமின் தொண்டர்க் கின்னருள் புரியும்
இடவெந்தை எந்தைபி ரானை
மன்னுமா மாட மங்கையர் தலைவன்
மானவேல் கலியன்வாய் ஒலிகள்
பன்னிய பனுவல் பாடுவார் நாளும்
பழவினை பற்றறுப் பாரே.

ப. ரை: அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆய - அன்னப் பறவையாக வும், மீன் வடிவாகவும், ஆமை வடிவாகவும் தோன்றிய, எம் மாயனே - வியப் புக்கு உரிய எங்கள் தலைவனே! அருளாய் என்னும் - 'அருள் புரிய வேண்டும்' என்று இறைஞ்சும், இன் தொண்டர்க்கு - சிறந்த அடியார்க்கு, இன் அருள் புரியும் - மேலான அருளினைச் செய்யும், இடவெந்தை எந்தை பிரானை - திருஇடவெந்தைப் பெருமானைக் குறித்து, மன்னு மாமாடம் மங்கையர் தலைவன் - நிலைத்த பெரிய மாடங்களையுடைய திருமங்கையில் உள்ளார்க்குத் தலைவன் ஆகிய, மான வேல் கலியன் - சிறந்த வேலைத் தாங்கிய கலியன் என்னும் ஆழ்வாருடைய, வாய் ஒலிகள் பன்னிய பனுவல் - வாயால் சொன்ன இப்பாசுரங்களை, பாடுவார் - பாடு பவர்கள், நாளும் - என்றும், பழவினை பற்று அறுப்பார் - தங்கள் முன்னை வினையை முற்றிலும் போக்கிக் கொள்வார்.

---

170. 2 : 4 செய்யும்.

**சி. கு :** *அன்னமும் மீனும் ஆமையும் அரியும் என்பவற்றுள் உம்மை எண்ணும்மை. மங்கையர் - திருமங்கை என்னும் ஊரில் உள்ளவர்கள்.*

வியா : **பத்தாம் பாட்டு : அன்னமும் இத்யாதி** - அறிவு குடிபோய் நோவுபட்ட[1] தமக்கு அறிவு கொடுத்த[2] அவதாரங்களை நினைக்கிறார். **இன் தொண்டர்க்கு இன் அருள் புரியும்** - இப்படிப்பட்ட ருசி உடையராய், அவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களுடைய இழவு தீர்க்கைக்காகத் திருஇடவெந்தையிலே வந்து நிற்கிற உபகாரகனை ஆயிற்றுக் கவி பாடிற்று. மன்னு மாமாட மங்கையர் தலைவன் ஆயிற்றுக் கவிபாடினார்[3]; ப்ரளயத்துக்கும் கூட அழியாத மாடங்களையுடைய திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார். **மான வேல் கலியன்** - வேலைப் பிடித்தவர்களுக்குத் தம்மோடு ஒக்க ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை உண்டாக்கும் வேல் என்னுதல்; இலை அகலிய வேல் என்னுதல்; ஆழ்வார் ஒலியை உடைத்தாகச் செய்தவை. **பன்னிய பனுவல்** - லக்ஷணங்களில் ஒன்றும் குறையாதபடி விஸ்த்ருதமாகப் பாடின இப்பத்தையும் அப்யஸிக்க வல்லவர்கள். **நாளும் பழவினை பற்று அறுப்பாரே** - ப்ராக்தந[4] கர்மங்களை வாஸனையோடே போக்கப் பெறுவார்கள். தாம் மோஹிப்பது உணர்வதாகத் திருத்தாயார் கூப்பிடுவதாக வேண்டாதபடி பகவத் அநுபவமே யாத்ரையான தேசத்திலே புக்கு அநுபவிக்கப்பெறுவார்கள்.

---

வி : பத்தாம் பாட்டு : அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆய எம்மாயனே அருளாய் என்னும் - *அறிவு குடிபோய்[5] நோவுபட்ட தமக்கு அறிவு கொடுத்த இறைவன் திருத்தோற்றங்களை நினைக்கிறார்.* இன் தொண்டர்க்கு இன் அருள் புரியும் இடவெந்தை எந்தை பிரானே - *இப்படிப்பட்ட விருப்பத்தினை உடையவராய், தான் உலகில் தோன்றிய காலத்தில் பிறவாமல் பிற்பட்டவர்களாய் இருப்பாரின் இன்னாப்புத் தீர்ப்பதற்காகத் திருஇடவெந்தையிலே வந்து நிற்கும் வள்ளலைப் பற்றியன்றோ பாசுரம் புனைந்துள்ளார்.* மன்னு மாமாட மங்கையர் தலைவன் - *மன்னு மாமாட மங்கையர் தலைவன் அன்றோ பாசுரம் பாடினார்; ஊழிப் பெருவெள்ளத்திற்குக் கூட அழியாத மாடங்களையுடைய திருமங்கைக்குத் தலைவரான ஆழ்வார்.* மான வேல் கலியன் - *வேலைப் பிடித்தவர்களுக்கு ஆழ்வாரோடு ஒக்கச் சீரார் வைணவத் திருவை உண்டாக்கும் வேல் என்றோ இலை அகலிய வேல்[6] என்றோ பொருள் கொள்க.* வாய் ஒலிகள் - *ஆழ்வார் ஒலியை உடையதாகச் செய்தவை.* பன்னிய பனுவல் - *பாட்டு இலக்கணங்களில் ஒன்றும் குறையாதவண்ணம் பரக்கப் பாடிய இப்பத்தையும் பயில வல்லவர்கள்.* நாளும் பழவினை பற்று அறுப்பாரே - *முன்னை வினைகளை வேர்ப்பற்றோடு போக்கப் பெறுவர்கள். தாம் மயங்குவது தெளிவது ஆகியவற்றை அடைய, திருத்தாயார் கூப்பிடுவதாக வேண்டாமல் இறை நுகர்ச்சியே பணியாய் இருக்கும் திருநாட்டிலே புக்கு இன்பம் துய்க்கப்பெறுவர்கள்.*

### ஒப்புமைப் பகுதி

1. **அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆய பெருமான்**

   *" அன்னமும் மீனுருவும் ஆளரியும் குறளும்ஆமையுமானவனே!"*

---

1. நோவுபட. 2. குடுத்த. 3. கவி பாடினான். 4. ப்ராக்தநமான.
5. குடிபோதல் - நீங்குதல். 6. அகலிய வேல் - அகன்ற வேல்.

" *அன்னமும் இத்யாதி - வேத ப்ரதமான ஹம்ஸமும், ப்ரளயாபத்ஸகமான மத்ஸ்யமும், ஹிரண்ய நிரஸநார்த்தமான நரஸிம்ஹமும், இந்த்ராபேக்ஷித ஸம்விதாநம் பண்ணும் வாமநனும், மந்த்ராதாரமான கூர்மமுமானவனே! இத்தால் - ஆஶ்ரித ஸம்ரக்ஷணார்த்தமாக அஸாதாரண திவ்ய விக்ரஹத்தை அழியமாறிக் கொண்டு அவ்வவ தசானுகுணமாக ரக்ஷிக்குமவன் என்கை* "

*பெரி. தி. 1:5:11 ம. மா. மு. உரை.*

*[வேதப்ரதம் - வேதத்தைத் தருவது. ஹம்ஸம் - அன்னம். ப்ரளயாபத்ஸகம் - பெருவெள்ளம் கோத்த துயரக் காலத்தின் துணை. மத்ஸ்யம் - மீன். நிரஸநார்த்தமாக - அழித்தலின் பொருட்டு. ஸம்விதாநம் - செய்து தருதல். மந்த்ராதாரம் - மந்தரமலையைத் தாங்குவது. கூர்மம் - ஆமை. ஸம்ரக்ஷணம் - காத்தல். அஸாதாரணம் - தனக்கே உரியது. விக்ரஹம் - உருவம். தசை - நிலை.]*

" *மாவாகி ஆமையாய் மீனாகி மானிடமாம்*
*தேவாதி தேவ பெருமான்* "

" *ஆமையாய் மீனாகி - வித்யா ப்ரகாசகமான அவதாரங்கள். மானிடமாம் - ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள். அநுஷ்டேயார்த்த ப்ரகாசகமான அவதாரங்கள்* "

*தி. வா. மொ. 2:8:5-36*

*[வித்யா ப்ரகாசம் - அறிவுநூல்களை வெளிப்படுத்துவது. அநுஷ்டேயார்த்த ப்ரகாசகம் - செய்யவேண்டும் செயல்களைத் தெரிவிப்பது.]*

**2. மானவேல்**

*தனியன் 2இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.* (70)

பிர : "ஹ்ரீரேஷாஹி மமாதுலா" என்னவும் மாட்டாதே நிற்கிற இடமிறே இவ்இடம்; அவன் அப்படி இரானாகில் ஆஶ்ரயணீயனாக மாட்டானே. தான் யுக்தாயுக்தங்கள் அறியாதே நிற்பது இருப்பது விழுவது எழுவதாய்க்கொண்டு மோஹித்துக்[1] கிடந்த தசையை அநுஸந்தித்த திருத்தாயார் அவன் படிகளைச் சொல்லிக் கூப்பிடக் கேட்டும் தான் வாய்வெரூவியும் அவ்வழியாலே அல்பம் தெளிவு பிறந்தது; அவன் குணங்கள் நெஞ்சிலே ஊற்றிருந்தது. அறிவு கலங்கும் ஆபத்திலே வந்து உதவும் ஸ்வபாவன் என்று அவன் படிகளை அநுஸந்தித்து ஆஶ்வஸ்தையாய், பின்பு திருவட்டபுயகரத்து நாயனாரை அநுஸந்தித்து அவரையே பாவித்து, அந்த பாவநா ப்ரகர்ஷத்தாலே, ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாய் உருவு வெளிப்பாடு போலேயாய் அவர்க்குச் சில வார்த்தைகள் தான் சொல்லுகிறாளாகவும் அவர் அதுக்குச் சில மறு மாற்றங்கள் சொல்லுகிறாராகவும் சிலவற்றைச்[2] சொல்ல, இதைக் கேட்ட பந்து வர்க்கம் எல்லாம், "நீ ப்ரமித்தாயோ? சொல்லுகிறது என் என்பது?"[3] என்ன, திருவட்ட புயகரத்து நாயனாரை நான் இங்ஙனே சில வார்த்தைகளைக் கேட்டேன், அவர்

---

தோ : இராமபிரான் தண்டகவனத்தில் இருந்தபோது அங்குள்ள முனி புங்கவர் எல்லாம் அவனிடம் சென்று அரக்கரால் நலிந்த தங்கள் உடம்பைக் காட்டினர். அதுபோது பெருமாள், "முனிவர்களே, அடியேனை மிகவும் பொறுத்தருள வேண்டும். இஃது எனக்கு எல்லையற்ற நாணத்தைத் தருவதாக உள்ளது" (ரா. ஆ. 10:9) உங்களுக்கு ஒருவகை நோவும் வாராதவண்ணம் நோக்க வேண்டியவன் யான்; என் கடமை தவறி உங்களை நோவுபட விட்டிருந்தேன்; இஃது எனக்குப் பெரிய குற்றம். அதற்குமேல் நானாகவே உங்கள் உறைவிடம் வந்து உங்களை உசாவாமல் நீங்கள் பட்ட நோயை நீங்களே வந்து என்னிடம் சொல்லும்படியாய்ப் பிற்பட்டேன்" என்றார். அது போலச் சொல்லவும் மாட்டாதே நிற்கும் இடம் இத் திருவட்டபுயகரம். அவன் அப்படி முற்பட்டு வந்து நிற்பவனாய் இருக்காவிட்டால் எங்ஙனம் பற்றத் தகுந்தவன் ஆவான்? தலைமகள் இவை தகும், இவை தக்கன ஆகா என்று அறியாமல் நிற்பது, இருப்பது, விழுவது, எழுவதாய் மயங்கிக் கிடந்தாள்; அவள் நிலையைக் குறித்துச் சிந்தித்த திருத்தாயார் அவள் தன்மைகளைச் சொல்லிக் கூப்பிட்டாள். அவ்வாறு திருத்தாயார் சொல்வதைக் கேட்டும் தான் வாய் பிதற்றியும் அவ்வழிகளாலே தலைமகளுக்குச் சிறிது தெளிவு பிறந்தது. அவன் குணங்கள் நெஞ்சிலே ஊறிக்கொண்டு இருந்தன. அறிவு கலங்கும் நெருக்கடியில் வந்து உதவும் இயல்பினன் என்று அவன் தன்மைகளை எண்ணி ஆறினாள்; பின்பு திருவட்டபுயகரத்து நாயனாரை நினைந்து, அவரையே நெஞ்சில் நிறுத்தி அந்த நினைவு முதிர்ச்சியாலே, கண்முகப்பே காண்பது போல உருவு வெளிப்பாடு தோன்றியது. அந்நிலையில், அவர்க்குச் சில சொற்கள் தான் சொல்வது போலவும், அவர் அவற்றிற்குச் சில மாற்றங்கள் சொல்வது போலவும் சிலவற்றைச் சொல்லத் தொடங்கினாள். இவள் பேசுவது கேட்ட சுற்றத்தினர் எல்லாரும், "நீ அறிவு கலங்கினாயோ? நீ சொல்வது யாது?" என்று வினவினர். அதற்கு அவள் திருவட்டபுயகரத்து நாயனாரிடம் நான் இப்படிச் சில வார்த்தைகளைக்

---

1. மோஹித்துக்கொண்டு. 2. சில வைத்தைச்.
3. என் என்புது; என்னம்புது.

எனக்குச் சில மறுமாற்றங்கள் அருளிச்செய்தார் என்று, அவ்வார்த்தையைத் தாய் மார் தோழிமார்க்குச் சொல்லுகிறாளாய்ச் செல்லுகிறது.

---

*கேட்டேன், அவர் எனக்குச் சில மறுமாற்றங்கள் அருளிச்செய்தார் என்று அவ் உரையினைத் தாய்மார்க்கும் தோழிமார்க்கும் சொல்லுபவளாய்ச் செல்லு கிறாள்.*

*(70)*

## 171

திரிபுர மூன்றெரித் தானுமற்றை
 மலர்மிசை மேல்அய னும்வியப்ப
முரிதிரை மாகடல் போல்முழங்கி
 மூவுல கும்முறை யால்வணங்க
எரியன கேசர வாள்எயிற்றோடு
 இரணியன் ஆகம் இரண்டுகூறா
அரியுரு வாம்இவர் ஆர்கொலென்ன
 அட்ட புயகரத் தேன்என்றாரே.

ப. ரை : திரிபுரம் மூன்று எரித்தானும் - *வானத்தில் திரிந்த நகரங்கள் மூன்றனையும் எரித்தவனும்,* மற்றை மலர்மிசை மேல் அயனும் வியப்ப - *இன்னும் தாமரைமலரில் பிறந்த பிரமனும் வியப்படையும்படியாக,* முரி திரை மாகடல் போல் முழங்கி - *அலை எறியும் பெரிய கடல்போலே ஆரவாரம் புரிந்து,* மூவுலகும் முறையால் வணங்க - *மூன்று உலகத்தவர்களும் முறையோடு வழிபடவும்,* இரணியன் ஆகம் இரண்டு கூறா - *இரணியனுடைய உடல் இரண்டு பிளவாம்படி,* எரி அன கேசரம் - *நெருப்புப் போலும் உளைமயிரையும்,* வாள் எயிற்றோடு - *ஒளி பொருந்திய பற்களையும் உடைய,* அரி உரு ஆம் இவர் ஆர்கொல் என்ன - *நரசிங்க உருக்கொண்ட இவர் யார்? என்று யான் வினவ,* அட்ட புயகரத்தேன் என்றார் - *நான் திருஅட்ட புயகரத்து நாயனார் என்றார்.*

சி. கு : *எரியன* - இதில் அன்ன என்னும் குறிப்புப் பெயரெச்சம் னகரம் *தொக்கு வந்தது. அட்ட புயகரம் - காஞ்சியில் உள்ள திருக்கோயில்.* இங்கு உள்ள *பெருமாளுக்கு ஆதிகேசவப் பெருமாள் என்றும் தாயாருக்கு அலர்மேல் மங்கை* என்றும் திருப்பெயர். *நின்ற திருக்கோலம்.*

இத்திருமொழி விளம் *விளம் காய்,* விளம் *விளம் காய்* என்னும் வாய் *பாட்டில் அமைந்த அறுசீர் ஆசிரிய விருத்தம். இதனை விளம் விளம் மா மா, விளம் விளம் மா* மா என்னும் *வாய்பாட்டில் அமைந்த எண்சீர் ஆசிரிய விருத்த மாகவும் கொள்ளலாம்.*

---

171. 3 : 1 எரியென. 3 : 6 இரண்டு கூறாய்.

வியா : **முதற் பாட்டு : திரிபுரம் இத்யாதி** - அவர் வந்து தோற்றின போது இருந்தபடி.

**திரிபுரம் மூன்று எரித்தானும்** - திரிபுரம் ஸஞ்சரிக்கிற புரம்; அதாவது ஆகாசத்திலே ஸஞ்சரிப்பனவுமாய், ஒரோ இடங்களிலே[1] போய் இருந்தவாறே கீழ்ப் பட்டவை[2] அடைய நசிக்கக்கடவதாய் இருப்பது மூன்று படைவீடு உண்டிறே; அப்படியாகவுமாம். அன்றிக்கே, த்ரிபுரம் என்று, **''பஞ்ச பஞ்சஜநாঃ'' ''ஸப்த ஸப்தர்ஷயঃ''** என்று தனித்தனியே நாமதேயம் ஆகவும் ஆம். த்ரிபுர தஹநத்தாலே ஸஞ்ஜாத வீர்யனான[3] ருத்ரனும். **மற்றை இத்யாதி** - ஸம்ஹாரத்துக்கு இவன் கடவனானால் தான் ஸ்ருஷ்டிக்கக் கடவனாய், இவனுக்கும் ஜநகனாய், திருநாபீ கமலத்திலே அவ்யவதாநேந பிறந்து இதர விஸஜாதீயமான ஜந்மத்தை உடையனாகையாலே அஜன் என்று சொல்லப்படுகிற ப்ரஹ்மாவும். **வியப்ப** - தாம் தாம் சில அத்புதங்களைப்[4] பண்ணிப் பிறர் விஸ்மயப்பட இருக்கிற தாங்கள், கொக்குக் கடலைக் கண்டாப் போலே விஸ்மயப்பட.

**முரி இத்யாதி** - ப்ரஹ்மாதிகளை ஒழிந்தார் அடைய, உலாவாநின்றுள்ள திரைகளையுடைய பெருங்கடல் போலே கோஷித்துக் கொண்டு. **மூவுலகும்**

---

வி : **முதற் பாட்டு : திரிபுரம் மூன்று எரித்தானும் மற்றை மலர்மிசை மேல் அயனும் வியப்ப** - *பெருமான் தூணிலே வந்து தோற்றியபோது இருந்த தன்மை இது!*

**திரிபுரம் மூன்று எரித்தானும்** - *திரிபுரம் - திரிகின்ற புரம்; அஃதாவது வானத்திலே திரிவனவாய், ஒவ்வோர் இடத்திலே போய் இருந்தவாறே தம் கீழ்ப் பட்டவை எல்லாம் அழியக்கூடியனவாய் இருக்கும் மூன்று படைவீடு உண்டு. அவற்றைக் குறிக்கிறது. அல்லது, திரிபுரம் என்பது இயற்பெயராய், ''ஐவர் என்று குறிக்கப்பெறும் ஐவர்'' ''ஏழிருடி என்று சுட்டப்படும் ஏழிருடி'' என்பவை போலத் தனித்தனியே திரிபுரம் என்று குறிக்கப்படும் மூன்று நகரங்கள் (திரிபுரங்கள்) என்றும் ஆகலாம். முப்புரம் எரித்ததனாலே, உண்டான வீரத்தை உடைய உருத்திரனும்,* **மற்றை மலர்மிசை மேல் அயனும் வியப்ப** - *அழிப்பதற்கு இச்சிவன் உரியவன் என்றால் தான் படைத்தற்கு உரியவனாய் இச்சிவனுக்கும் தகப்பனாய்ப் பெருமான் திருவுந்திக்கமலத்திலேயே நேரடியாகப் பிறந்தவன் பிரமன். மற்றப் பிறப்புகளினின்றும் வேறுபட்ட பிறப்பினை உடையவனாகையாலே அயன்[5] என்று சொல்லப்படுகிறான்; இந்தப் பிரமனும்.* **வியப்ப** - *இவர்கள் தாம்தாம் சில வியத்தற்கு உரிய செயல்களைச் செய்து பிறர் வியக்க இருப்பவர்கள்; இத்தகைய இவர்கள் கொக்குக் கடலைக் கண்டாற் போலே வியப்பு அடைய.*

**முரி திரை மாகடல் போல் முழங்கி** - *பிரமன் முதலானோர் தவிரப் பிறர் எல்லாம் உலவும் திரைகளையுடைய பெருங்கடல் போலே ஆரவாரித்துக்கொண்டு.*

---

1. விரோதித்த இடங்களிலே. 2. கீட்பட்டவை. 3. வீரரான. 4. அத்புத கர்மங்களைப்.
5. அயன் - பிறவாதவன்: ஈண்டுப் பிற உயிர்களைப் போலப் பிறவாதவன் என்னும் பொருளில் வந்துள்ளது.

**வணங்க** - ''மஞ்சா: க்ரோசந்தி'' போலே. **முறையால்** - ஹிரண்யனுடைய அநீதியாலே முறைகெட்டு அவன் காலிலே விழுந்து திரிந்தவர்கள், அவன் பட்டுப் போகையாலே அவன் சேஷியான ஸ்வபாவத்திலே வணங்க என்னுதல்; பர்யாயேண என்னுதல்.

**எரி இத்யாதி** - அக்நிகல்பமான உளைமயிரையும், ஒளியை உடைத்தான எயிற்றையும் உடையனாய், சில பதார்த்தங்களினுடைய தோற்றரவிலே ஸஹஜ ஶாத்ரவத்தாலே முடிந்து போம் பதார்த்தங்கள் போலே, ஹிரண்யனுடைய சரீர மானது இரண்டு கூறு ஆம்படியான நரஸிம்ஹமான. **இவர் ஆர்கொல் என்ன** - ஒரு சிறுக்கனுக்குத் தமப்பன் பகையாக, அவனிலும் அணியனாய்[1] உதவி நோக்கினவனைப் போலே இராநின்றார்; இவர் ஆர்தான் என்கிறாள். அடையாளம் சொல்லாநிற்கச்செய்தே நிச்சயிக்க ஒண்ணாதபடியிறே விஷய ஸ்வபாவம்! **அட்ட புயகரத்தேன் என்றாரே** - ஒரு சிறுக்கனுக்காக வந்து உதவின அவ்வளவோ? உனக்கு உதவுகைக்காக இங்கே வந்து அவஸர ப்ரதீக்ஷனாய் நிற்கிறவன் அன்றோ நான்! என்கிறார்.

---

மூவுலகும் முறையால் வணங்க - *மூவுலகும் என்பது மூவுலகத்திலும் உள்ள மக்களைக் குறிக்கும், ''கட்டில் கத்துகிறது'' என்றால் கட்டிலில் உள்ள குழந்தை கத்துகிறது என்பது போலே.* முறையால் - *இரணியனுடைய நேர்மை அற்ற செயல்களால் முறைகெட்டு அவன் காலிலே விழுந்து திரிந்தவர்கள், அவ்இரணியன் வீழ்ந்துபட்டதனால் அவனை வீழ்த்திய பெருமான் ஆண்டவன் ஆனான். ஆண்டவனை வணங்கவேண்டும் என்னும் அத்தன்மையாலே வணங் கினர் என்க; அல்லது, வரிசையாக வணங்கினர் என்க.*

எரி அன கேசரி வாள் எயிற்றோடு இரணியன் ஆகம் இரண்டு கூறா அரி உரு ஆம் - *நெருப்பை நிகர்த்த உளைமயிரையும், ஒளியையுடைய எயிற்றையும் உடையவனாய், சில விலங்குகளின்[2] தோற்றரவில், இயற்கையான பகைமை யினால் அழிந்துபோகும் விலங்குகள்[3] போலே, இரணியனுடைய உடல் இரண்டு கூறாகும்படி ஆளரி ஆகிய;* இவர் ஆர்கொல் என்ன - *ஒரு சிறுவனுக்குத் தந்தை பகையாக, அவனைக் காட்டிலும் நெருங்கிய உறவினனாய் வந்து உதவி செய்து நோக்கினவனைப் போலே இருக்கிறார்; இவர்தாம் யார்? என்கிறாள். அடையாளம் சொன்னபோதிலும் உறுதிசெய்ய ஒண்ணாதபடியன்றோ உள்ளது இவரது தன்மை!* அட்ட புயகரத்தேன் என்றாரே - *ஒரு சிறுவனுக்காக வந்து உதவிய அம்மட்டோ? உனக்கு உதவுவதற்காக இங்கே வந்து செவ்வி நோக்கிக் காத்திருப் பவன் அன்றோ நான்! என்கிறார்.*

## ஒப்புமைப் பகுதி

1. திரிபுரம் மூன்று எரித்தவன்

*'' திரிபுரம் செற்றவனும் - த்ரிபுர தஹநமாகிற அபதாநத்தாலே ஸஞ்ஜாதாபிமாநனாகையாலே. த்ரிபுர தஹந ஸமயத்தில் வில்லுக்கு*

---

1. அண்ணியனாய்.

2. சில விலங்குகள் என்பது ஈண்டுச் சிங்கம், புலி முதலிய விலங்குகளைக் குறித்தது. 3. விலங்குகள் என்பது யானை, மான், ஆடு முதலிய விலங்குகளைக் குறித்தது.

மிடுக்காய் நாணிக்குத் திண்மையாய் அம்புக்குக் கூர்மையாய்த் தனக்கு அந்தராத்மாவாய் எதிரிகளைத் தலைசாயும்படி பண்ணினபடியை மறந்து தானே செய்தானாக ப்ரமித்தவன் என்க"

திரு. வா. மொ. 3:10:6-36

[அபதாநம் - செயல். ஸஞ்ஜாதாபிமாநன் - செருக்கு அடைந்தவன்.]

" மாமதிள் மூன்று எய்த இறையான் - ஊரைச் சுட்டுப் பேரைப் படைத்தான்; கோட்சொல்லி ப்ரஸித்தராமாப் போலே"

மு. தி. 28 பெ. உரை.

[ப்ரஸித்தர் - நாடறிந்தவர்]

## 2. மலர்மிசை மேல் அயன்

" கமலத்து அயன்.........திருநாபிகமலத்திலே அவ்யவதாநேந பிறந்து, எல்லாரிலும் விஸஜாதீயமான ஜந்மத்தை உடையனாய், தனக்கு இவ்வருகு உள்ளவற்றை உண்டாக்கும் இடத்தில் ஸர்வேச்வரனைக் கேள்வி கொள்ள வேண்டாதபடி நிரபேக்ஷனான சதுர்முகன்......"

தி. வா. மொ. 1:9:9-36

[அவ்யவதாநேந - இடையீடின்றி. விஸஜாதீயம் - வேறுபட்ட இனம்.]

## 3. இடவாகுபெயரை எடுத்துக்காட்டால் விளக்குதல்

" அந்தாமத்து அன்பு செய்து-......தாமம் என்று ஸ்த்தாநமாய், 'மஞ்சா: க்ரோசந்தி' போலே, பரமபதத்தில் உள்ளார்பக்கலிலே பண்ணக்கடவ ஸ்நேஹத்தை என் பக்கலிலே பண்ணி"

தி. வா. மொ. 2:5:1-36

[மஞ்சா: க்ரோசந்தி - கட்டில் கத்துகிறது]

" வானேயேத்தும் எம் வானவர் ஏறே"

" 'மஞ்சா: க்ரோசந்தி' என்கிறபடியே வானே ஏத்தும் என்கிறது"

தி. வா. மொ. 2:9:9-36

" இவ்வுலகு உன்னைப் புகழ்வு எல்லாம் பெரும்பாலும்,
பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால்"

" இவ்வுலகு - 'மஞ்சா: க்ரோசந்தி' என்கிற ந்யாயத்தாலே லோகத்தில் உள்ளார்"

தி. வா. மொ. 3:1:2-36

" திருச்சிற்றாறு,
அறிய மெய்ம்மையே நின்ற எம்பெருமான்"

" திருச்சிற்றாறு அறிய - திருச்சிற்றாற்றில் உள்ளார் 'ஸர்வேச்வரன்' என்று அறியும்படியாக. 'மஞ்சா: க்ரோசந்திவத்'"

தி. வா. மொ. 8:4:4:-36

[க்ரோசந்தி வத் - கத்துகிறது என்பது போல.]

## 4. இரணியனை அழித்த அரி உருவன்

பாட்டு 14இன் ஒப்புமைப் பகுதி பார்க்க. (71)

வெந்திறல் வீரரில் வீரரொப்பார்
வேதமு ரைத்திமை யோர்வணங்கும்
செந்தமிழ் பாடுவார் தாம்வணங்கும்
தேவர் இவர்கொல் தெரிக்கமாட்டேன்
வந்து குறளுரு வாய்நிமிர்ந்து
மாவலி வேள்வியில் மண்அளந்த
அந்தணர் போன்றிவர் ஆர்கொலென்ன
அட்ட புயகரத் தேன்என்றாரே.

ப. ரை : இமையோர் - *தேவர்கள்,* வேதம் உரைத்து வணங்கும் - *மறை மொழிகளைச் சொல்லி* வணங்குகின்ற, வெந் திறல் வீரரில் - *மிக்க வலிமை படைத்த வீரர்களுள்,* வீரர் ஒப்பார் - *பெருவீரரான இராமபிரானைப் போன்ற இவர்,* செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர்கொல் - *அழகிய தமிழ்ப் பாசுரங் களைப் பாடும் முதலாழ்வார்கள் பரவுகின்ற திருவேங்கடம் உடையவனோ?* தெரிக்கமாட்டேன் - *அறிகிலேன்;* மாவலி வேள்வியில் - *மாவலியின் வேள்விச்சாலை யிலே,* குறள் உருவாய் வந்து - *குறுகிய வடிவத்தனாய் வந்து,* நிமிர்ந்து மண்அளந்த - *திருக்கையில் நீர்விழுந்தவுடனே வளர்ந்து உலகத்தை அளந்திட்ட,* அந்தணர் போன்ற இவர் ஆர்கொல் என்ன - *அறவோனைப் போன்று இருந்த இப்பெரியவர் யார்?* என்று வினவ, அட்ட புயகரத்தேன் என்றார் -.

சி. கு : *செந்தமிழ் பாடுவார் - பொய்கை, பேய், பூதம் எனப் பெயரிய முதல் ஆழ்வார்கள் மூவர். இவர்கள் வேங்கடம் உடையானையே பாடியுள்ளனர் என்பதனை இவர்தம் நூல்கள் கொண்டு அறியலாம். அந்தணர் - அறவோர்.*

வியா : இரண்டாம் பாட்டு : வெந்திறல் இத்யாதி - வெவ்விய திறல் உண்டு, பராபிபவந ஸாமர்த்யம்; அத்தை உடையரான வீரர்கள் தாங்கள் மடல் எடுக்கும்படியான ஆண்பிள்ளைத்தனம் உடையவர், சக்ரவர்த்தித்திருமகனார்.

---

வி : இரண்டாம் பாட்டு : வெந்திறல் வீரரில் வீரர் ஒப்பார் - வெவ்விய *திறல்* என்பது *பிறரை வெல்லும் ஆற்றல். அத்தகைய ஆற்றல் படைத்த வீரர் களும் மடல் எடுக்கும்படியான*[1] *ஆண்பிள்ளைத்தனம்*[2] *உடையவர்,* சக்கரவர்த்தித் *திருமகனார்.* "இராமபிரான் பகைவர்களிடையே அறியப்பட்ட ஆண்பிள்ளைத் தனத்தை உடையவனும் வீரச்செயல்களாலே எதிரிகளும் தன்னை விரும்ப வேண்டும்படி செய்கிறவனும் ஆவான்" என்பது *இராவணன் கூற்று (ரா. யு. 106:6).*

---

1. மடல் எடுக்கும்படியான - தாங்கள் பெறுவதற்குத் துடிக்கும்படியான. மடல் எடுத்தல் என்பது தமிழ்நெறிப்படி தலைமகளைப் பெறுவதற்குத் தலைமகன் மேற்கொள்ளும் அரிய முயற்சி. அதனைப் போன்று வீரர்கள் முயன்று பெற வேண்டும்படியான ஆண்பிள்ளைத்தனம் மிக்கவர். 2. ஆண்பிள்ளைத் தனம் - வீரம்.

**சத்ரோ:** கெடுவாய்! என்னுடைய சத்ருவை ஆர்[1] என்று நினைத்துத் தேரை மீட்டுக்கொடு போந்தாய். **ப்ரக்யாத வீர்யஸ்ய** - எதிரிகளான நம் படைவீட்டிலும் பிரஸித்தமாய் அன்றோ அவருடைய ஆண் பிள்ளைத்தனம் இருப்பது! நீ கேட்டறியாயோ? அது ஏறிப் பாயாத மேடு இல்லை காண். **ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:**-கண்டு பராக்ரமிக்க ஒண்ணாத படி அளவுஅற எதிரி முடுகினால் அது நிலமாக்கிக்கொண்டு பராக்ரமிக்கும் படியைப் பார்த்தால், காமினி காந்தனை விரும்புமாப் போலே எதிரிகளுக்கு விரும்ப வேண்டும்படி காண் அவர் ஆண்பிள்ளைத்தனம் இருப்பது.

**வேதம் இத்யாதி** - ராவண வத ஸமநந்தரம் ப்ரஹ்மாதிகள் நாராயணாநுவாக ஸித்தமான பதங்களைக்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணும். **வெந்திறல் வீரரில் வீரர் ஒப்பார்** - இது மேன்மை இருக்கும்படி. **செந்தமிழ் இத்யாதி** - சீலத்தைப் பார்த்தால் அநுகூலராய் இருப்பார் எல்லாரும் ஏத்தும்படி இருப்பர். "**பெருகு மத வேழம்**" என்கிறபடியே கலப்பற்ற பசுந்தமிழ் பாடும் முதலாழ்வார்கள். அவர்களுக்கு ஆஶ்ரயணீயனான திருவேங்கடம் உடையானைப்போலேயும் இராநின்றார். தெரிக்க

---

பகைவர்களிடையே - கெடுவாய்! என்னுடைய பகைவனை யாரென்று நினைத்துத் தேரை மீட்டுக்கொண்டு வந்தாய். **அறியப்பட்ட ஆண்பிள்ளைத்தனத்தை உடையவனும்** - எதிரிகளான நம் நகரத்திலும் பரவியதாக அன்றோ அவர் ஆண்பிள்ளைத்தனம் இருப்பது! நீ கேட்டறியாயோ? அவ்வீரம் ஏறிப்பாயாத மேடு[2] இல்லை அன்றோ? **வீரச்செயல்களாலே எதிரிகளும் தன்னை விரும்பவேண்டும்படி செய்கிறவனும்** - கண்டு வெல்ல ஒண்ணாதபடி அளவு கடந்து எதிரி முடுகினால்[3] அதனையே போரிடுவதற்குத் தகுந்த களமாக்கிக் கொண்டு வெல்லுகிறான். இதனைப் பார்த்தால், காதலி காதலனை விரும்புவது போலே எதிரிகளுக்கு அவரை விரும்பும்படியன்றோ அவரது ஆண்பிள்ளைத்தனம் இருப்பது.

**வேதம் உரைத்து இமையோர் வணங்கும்** - இராவணனைக் கொன்ற பின்பு பிரமன் தொடக்கமானோர் நாராயண அநுவாகத்தில் சொல்லப்பட்ட பதங்களைக் கொண்டு பரவும். **வெந்திறல் வீரரில் வீரர் ஒப்பார்** - இது மேன்மை இருக்கும் நிலை. **செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர் இவர்கொல்** - நீர்மையைப் பார்த்தால் பாங்காய் இருப்பார் எல்லாரும் ஏத்தும்படி இருப்பர்.

> " பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
> இருகண் இளமூங்கில் வாங்கி - அருகிருந்த
> தேன்கலந்து நீட்டும் திருவேங் கடம்கண்டீர்
> வான்கலந்த வண்ணன் வரை " (இ. தி. 75)

என்பது போலும் கலப்பற்ற பசுந்தமிழ் பாடும் முதலாழ்வார்கள். அவர்களுக்குப் பற்றத் தகுந்தவன் ஆகிய திருவேங்கடம் உடையானைப் போல இருக்கிறார்.

---

1. யார்.
2. ஏறிப் பாயாத மேடு என்பது பரவாத இடம் என்று பொருள்படும். 3. முடுகுதல் - விரைதல்.

**மாட்டேன்** - வீரத்தைப் பார்த்தவாறே சத்ருக்களும் ஏத்தும்படியாய் இருந்தது; மேன்மையைப் பார்த்தவாறே ப்ரஹ்மாதிகள் ஏத்தும்படியாய் இருந்தது; சீலத்தைப் பார்த்தவாறே அநுகூலர் அடைய ஏத்தும்படியாய் இருந்தது; இவரை இன்னார் என்று நிச்சயிக்கப் போகிறது இல்லையிறே. ஆக, மேன்மையும் தரை காண ஒண்ணாதாய் இருந்தது. சீலமும் தரை காணலாய் இருந்தது இல்லை.

**வந்து இத்யாதி** - மஹாபலி யஜ்ஞ வாடத்திலே வாமந வேஷத்தைக் கொண்டு வந்து திருக்கையிலே நீர் விழுந்தவாறே வளர்ந்து பூமியை அளந்து கொண்ட விநீத[1] வேஷத்தையுடைய ஸ்ரீவாமநனைப் போலேயும் இராநின்றார். சுக்ராதிகள், "ஈஶ்வரன் கிடாய், உன்னை வஞ்சிக்க வருகிறான்" என்னச் செய்தேயும், "விநீத வேஷத்தைக் கண்டுவைத்து எங்ஙனே கொடாது[2] ஒழியும்படி" என்றானிறே. **இவர் ஆர்கொல் என்ன அட்ட புயகரத்தேன் என்றாரே** - கழஞ்சு மண் இரந்து வந்தவன் அல்லேன்; உன்னை இரந்து வந்தவன் நான் என்கிறார். பிறர்க்காக இரந்தவன் அல்லேன்; எனக்காக[3] இரந்தவன் என்கிறார்.

---

தெரிக்க மாட்டேன் - *வீரத்தைப் பார்த்தபோது எதிரிகளும் ஏத்துமாறு இருந்தது; மேன்மையைப் பார்த்தபோது பிரமன் முதலான தேவர்களும் ஏத்துமாறு இருந்தது; நீர்மையைப் பார்த்தபோது பாங்கானோர் எல்லாம் ஏத்துமாறு இருந்தது; இவரை இன்னார் என்று முடிவுசெய்ய இயலவில்லை. ஆக, மேன்மையும் தரை காண[4] ஒண்ணாததாய் இருந்தது. நீர்மையும் தரை காணுமாறு அமையவில்லை.*

வந்து குறள் உருவாய் நிமிர்ந்து மாவலி வேள்வியில் மண் அளந்த அந்தணர் போன்ற - *மாவலி வேள்விச்சாலையிலே குறளனாய் வடிவங்கொண்டு வந்து திருக்கையிலே நீர் விழுந்தவாறே வளர்ந்து மண்ணை அளந்துகொண்ட பணிவார்ந்த கோலங்கொண்ட திருக்குறளப்பனைப்[5] போலேயும் இருக்கிறார். வெள்ளி முதலானோர், "இறைவன் கண்டாய், உன்னை வஞ்சிக்க வருகிறான்" என்று சொன்ன போதிலும், "இந்தப் பணிவார்ந்த கோலங் கண்ட பின்பு எப்படிக் கொடுக்காமல் இருக்கமுடியும்" என்றான் அன்றோ.* இவர் ஆர்கொல் என்ன அட்ட புயகரத்தேன் என்றாரே - *கழஞ்சு மண்ணை இரந்து வந்தவன் அல்லேன்; உன்னை இரந்து வந்தவன் நான் என்கிறார். பிறர்க்காக இரந்தவன் அல்லேன்; எனக்காக இரந்தவன் என்கிறார்.*

## ஒப்புமைப் பகுதி

1. செந்தமிழ் பாடுவார்

*" இன்கவி பாடும் பரம கவிகளால் - தன்னைக் கவிபாடுவித்துக் கொள்ள நினைத்தால், பராசர வ்யாஸ வால்மீகிகளாதல், 'செந்தமிழ் பாடுவார்' என்னும் முதலாழ்வார்களாதல் அன்றோ பாத்ரபூதர் "*

*தி. வா. மொ. 7:9:6-24*

*[பாத்ரபூதர் - ஏற்றவர்]*

---

1. இந்த. 2. குடாது. 3. இனக்காக.
4. தரை காணுதல் - எல்லை காணுதல்; முழுதும் காணுதல். 5. திருக்குறளப்பன் - வாமனன்.

**2. தேவர் இவர்கொல் தெரிக்கமாட்டேன்**

"தேவர் என்று - அதஸ்மிந் தத்புத்தி பண்ணி நாம் பரதேவதை என்று ப்ரமித்தோம் இத்தனையொழிய, 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்றுகாண் அவர் நினைத்திருந்தபடி. நாம் ஸஜாதீயவிஷயத்தே விஜாதீய புத்தி பண்ணினோம் இத்தனை காண். 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்னும் அவர் நினைவைவிட்டு, 'பவாந் நாராயணோ தேவ:' என்று வழிப்போக்கர் வார்த்தையைப் பற்றினோம் இத்தனை காண்"

தி. நெ. தா. 21 பெ. உரை.

[அதஸ்மிந் - அல்லாதவற்றில். தத்புத்தி பண்ணல் - (இறைவன்) அஃது என்று கருதுதல்.]

**3. குறளுருவாய் மாவலி வேள்வியில் மண் அளந்தவன்**

பாட்டு 46இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

**4. அந்தணன்**

அந்தணனை - சுத்தனை. ஆழ்வார்கள் எல்லாரும் இச் ஶப்தத்தாலே சுத்தியைச் சொல்லக் கடவதாய் இருப்பது ஒரு ஏற்றம் உண்டு. 'அறவனை ஆழிப்படை அந்தணனை' என்றாரிறே நம்மாழ்வார்"

[ஶப்தம் - சொல்] தி. நெ. தா. 4 பெ. உரை.

"அந்தணனை - தன் வடிவழகைக் காட்டி அஹங்காரமும் விஷயாந்தர ப்ராவண்யமுமாகிற அசுத்தியைப் போக்கும்படியான சுத்தியை உடையவனை" தி. நெ. தா. 14 பெ. உரை.

[விஷயாந்தர ப்ராவண்யம் - (இறைவனைத் தவிர்ந்த) பிற பொருள்களில் ஈடுபடுதல்]

"ஆழிப்படை அந்தணனை - கையும் திருவாழியுங்கண்டு அதில் கால்தாழாதே, ஆத்மாநுபவ விரோதியைப் போக்குகைக்கு உறுப்பான சுத்திமாத்ரத்தையே உபஜீவிப்பதே! என்கிறார். அழுக்கு அறுக்கும் கூரிய உவளைப் போலேயும் சாணிச் சாற்றை போலேயுமிறே அவனை நினைத்திருப்பது" தி. வா. மொ. 1:7:1-24

[ஆத்மாநுபவ விரோதி - கைவல்யத்திற்குத் தடையாய் இருப்பது. உபஜீவிப்பது - சார்ந்திருப்பது.] (72)

## 173

**செம்பொன் இலங்குவ லங்கைவாளி**
**திண்சிலை தண்டொடு சங்கமொள்வாள்**
**உம்பர் இருசுடர் ஆழியோடு**
**கேடகம் ஒண்மலர் பற்றிஎற்றே!**
**வெம்பு சினத்தடல் வேழம்வீழ**
**வெண்மருப் பொன்றுப றித்திருண்ட**
**அம்புதம் போன்றிவர் ஆர்கொலென்ன**
**அட்ட புயகரத் தேன்என்றாரே.**

**ப. ரை :** **வலங் கை** - வலத் திருக்கையில், **இலங்கு செம் பொன்** - விளங்கும் பசும்பொன்னாற் செய்யப்பட்ட, **வாளி** - அம்புகளையும், **திண் சிலை** - திண்ணிய சார்ங்கம் என்னும் வில்லையும், **தண்டொடு** - கௌமோதகி என்னும் கதையையும், **சங்கம்** - பாஞ்ச சன்னியம் என்னும் சங்கினையும், **ஒள் வாள்** - விளங்குகின்ற நாந்தகம் என்னும் வாளையும், **உம்பர் இரு சுடர் ஆழியோடு** - படைக்கலன்கள் எல்லாவற்றினும் மேலான மிக்க ஒளியுடைய சக்கரத்தினையும், **கேடகம்** - கேடயத்தையும், **ஒண் மலர்** - அழகிய மலரையும், **பற்றி** - தாங்கிக்கொண்டு, **எற்றே** - என்னே! **வெம்பு சினம் அடல் வேழம் வீழ** - மிக்க சீற்றத்தையும் மிடுக்கையுமுடைய குவலயாபீடம் என்னும் யானை முடியும்படி, **வெண் மருப்பு ஒன்று பறித்து** - வெளுத்த கொம்பு ஒன்றினைப் பிடுங்கி, **இருண்ட அம்புதம் போன்ற** - கருத்த மேகம் போலே இருக்கின்ற, **இவர் ஆர்கொல் என்ன** - இவர் யார்? என்று யான் வினவ, **அட்ட புயகரத்தேன் என்றார்** -.

**சி. கு :** எற்றே - எத்தன்மைத்து. 'எற்றென் கிளவி இறந்த பொருட்டே' என்பது தொல்காப்பியம் (உரியியல். 15) அம்புதம் - வடசொல்; நீரைக் கொடுப்பது; மேகம் என்பது பொருள்.

வியா : **மூன்றாம் பாட்டு :** **செம் பொன் இத்யாதி** - எதிரிகள் மேலே சினந்து எழும்போதைக்கும் அபலைகளை வசீகரிக்கைக்கும் இவை இரண்டுக்கும் பரிகரம் ஆயிற்று திவ்யாயுதங்கள். **செம் பொன் இலங்கு வலங் கை வாளி** -

> **தீப்த பாவக ஸங்காசை:** - கையில் இருக்கும்போது இருக்குமாப் போல் அன்று கிடாய் விட்டால் இருக்கும்படி. எரித்துக்கொண்டாயிற்று வருவது. **சிதை:** - அல்லாத அம்புகளோபாதியாக நினைத்து இராதே, பட்டால் எரித்தல் பொறுக்க ஒண்ணாதபடியாய்க் கிடாய் இருப்பது. **காஞ்ச பூஷணை:** - அநுகூலரான என்போல்வாரையும் தோற்பிக்கும் துறை

---

வி : மூன்றாம் பாட்டு : செம் பொன் இலங்கு வலங் கை திண் சிலை **தண்டொடு சச்கரம் ஒள் வாள் உம்பர் இரு சுடர் ஆழியோடு கேடகம் ஒண் மலர் பற்றி** - எதிரிகள்மேலே சினம்உற்று எழுவதற்கும் ஏழையர்களைக் கவர்வதற்கும் ஆகிய இரண்டுக்கும் துணைபுரிவன திருப்படைகள். செம் பொன் இலங்கு வலங் கை வாளி -

> "எரியும் நெருப்புப் போன்ற கூர்மையான பொன்னால் ஒப்பனை செய்யப்பட்ட இராமனால் விடப்பட்ட அம்புகளால் நீ கொல்லப்படுவதனை யான் காண விரும்பவில்லை" (ரா. யு. 16:32) என்று அம்புகளின் தன்மை விளக்கப்பட்டிருத்தல் கருதத்தக்கது.

எரியும் நெருப்புப் போன்ற - கையில் இருக்கும்போது இருப்பது போல் அன்று கண்டாய் எய்தால் இருக்கும் நிலை. எரித்துக் கொண்டாயிற்று வருவது. கூர்மையான - அல்லாத அம்புகளைப் போல் நினைக்காதே, பட்டால் எரிப்பது பொறுக்க ஒண்ணாதவாறு இருப்பன. பொன்னால் ஒப்பனை செய்யப்பட்ட - உற்றவரான என்போல்வாரையும் தோற்பிக்கும் துறை உண்டு கண்டாய்.

**உண்டு கிடாய். ந த்வாம் இச்சாம் யஹம் த்ரஷ்டும்** - ஸௌப்ராத்ரம் பின்னாட்டுகையாலே சொல்லுகிறேன். **ராமேண நிஹதம் சரை:** - புக்கு முடிகைக்கும் விடாய் தீருகைக்கும் உடலாய் இருக்குமிறே மடு. அது போலே இருக்கிற அவ்அழகை அநுபவிக்குமது ஒழிய அவ்அம்புக்கு இலக்காய் நீ முடிந்து போக நான் இச்சிக்கிறிலேன்.

**செம் பொன் இத்யாதி** - வெறும்புறத்திலே ஆகர்ஷகமாய் ஆயிற்று திருக்கைதான் இருப்பது; அதுக்குமேலே பொற்பகழியையுடைய அம்புகளையும் உடைத்தாய் ஆயிற்று இருப்பது. ஸ்வத: ஸ்ப்ருஹணீயமுமாய்ப் பிடியாலும் ஆகர்ஷகமுமாய் ஆயிற்று அம்புகள்தான் இருப்பது! **திண் சிலை** - எதிரிகளின்மேலே நாலிரண்டு பண்ணை வலித்தாலும் மெல்காத வில்[1]. **தண்டு** - அப்படி இருக்கிற தண்டு. **சங்கம்**-. **ஒள் வாள்** - பிடித்த பிடியாலே அழகிதாய் இருக்கிற வாள். **உம்பர் இத்யாதி** - ஆயுதங்களுக்கு எல்லாம் ப்ரதாநமாய் இருக்கையாலே மிக்க புகரை உடைத்தாய் இருக்கிற திருவாழியோடே. **கேடகம்** - கடகு. **ஒண் மலர்** - காமனைப் போலே அபலைகளை அழிக்கைக்கு பரிகரமான[2] மலர். **எற்றே** - என்னே!

**வெம்பு இத்யாதி** - மிக்க சினத்தை உடைத்தாய் யுத்தோந்முகமாய் இருக்கிற குவலயாபீடத்தை முடியும்படியாக, நிறத்துக்குப் பரபாகமான வெண்மையை

---

*இராமனாலே விடப்பட்ட அம்புகளால் - புகுந்து இறப்பதற்கும் விடாய் தீர்த்துக்கொள்வதற்கும் இடம் அளிப்பது மடு. அதுபோலே இருக்கும் அவ்அழகைக் கண்டு மகிழ்வதனை விடுத்து அவ்அம்புக்கு இலக்காய் நீ முடிந்துபோக நான் விழையவில்லை.* **நீ கொல்லப்படுவதனைக் காண யான் விரும்பவில்லை** - *உனக்குப் பின்னவனாய் இருக்கும் பாசம் தொடர்வதால் சொல்லுகிறேன்.*

**செம் பொன் இலங்கு வலங் கை வாளி** - *வெறும்புறத்திலேயே துவக்கவல்லதாய் இருப்பது திருக்கை; அதற்குமேலே பொற்பகழியை உடையதாய் இருக்கிறது. இயற்கையாகவே விரும்பத்தக்கனவாகவும் கைப்பிடியால் மேலும் கவர்ச்சி உடையனவாகவும் அன்றோ அம்புகள் இருக்கின்றன!* **திண் சிலை** - *எதிரிகள் மேலே நாலிரண்டு பண்ணை[3] வலித்தாலும் மெல்காத[4] வில்.* **தண்டு** - *அப்படி இருக்கும் தண்டு.* **சங்கம்**-. **ஒள் வாள்** - *பிடித்த பிடியாலே அழகிதாய் இருக்கும் வாள்.* **உம்பர் இருசுடர் ஆழியோடு** - *படைக் கருவிகளுக்கு எல்லாம் தலைமையாய் இருப்பதனாலே மிக்க புகரையுடைய திருவாழியோடே.* **கேடகம்** - *கடகு[5].* **ஒண் மலர்** - *காமனைப் போலே மெல்லியலாரை அழிப்பதற்கு உறுப்பான மலர்.* **எற்றே** - *என்னே!*

**வெம்பு சினத்து அடல் வேழம் வீழ வெண் மருப்பு ஒன்று பறித்து இருண்ட அம்புதம் போன்ற** - *மிக்க சினத்தை உடைத்தாய்ப் போரை எதிர்நோக்கி இருக்கும் குவலயாபீடம் முடியும்படி அதன் கருமை நிறத்துக்குப் பகைத்*

---

1. வில்லு. 2. உபகரணமான.
3. பண்ணை - முறை; தட்வை. நாலிரண்டு பண்ணை என்பது ஈண்டுப் பலமுறை என்பதனைக் குறிக்கும். 4. மெல்காத - தளராத. 5. கட்கு - பாதுகாப்புத் தருவது; கிடுகு என்பது பழந்தமிழ் இலக்கிய வழக்கு.

யுடைய கொம்பைப் பறித்து, இருண்ட மேகம் போலே இருக்கிற இவர் ஆர்தான் என்ன, மேல்வார்த்தை: **அட்ட புயகரத்தேன்** - கம்ஸ ப்ரேரிதமான குவலயா பீடத்தை நிரஸித்து கம்ஸன் படைவீட்டில் பெண்கள் பயத்தைப் போக்கின அவ் அளவே அல்ல; உன் பயம் தீர்க்கைக்காக வந்து நிற்கிறவன் நான் என்கிறார்.

---

தொடையான வெண்மையையுடைய கொம்பைப் பறித்துப் போகட்டு இருண்ட மேகம் போலே இருக்கும் இவர் யார்? என்ன, அடுத்துச் சொல்வது : **அட்ட புயகரத்தேன்** - கம்சனால் தூண்டப்பட்ட குவலயாபீடத்தை முடித்துக் கம்சன் படைவீட்டில் பெண்கள் அச்சத்தைப் போக்கின அவ்வளவே அன்று; உன் அச்சம் தீர்ப்பதற்காக நிற்கிறவன் நான் என்கிறார்.

## ஒப்புமைப் பகுதி

1. பெருமான் படைக்கருவிகளைத் தாங்கி நிற்றல்

*" வெய்யவாள் தண்டு சங்கு சக்கரம் வில் ஏந்தும் விண்ணோர் முதல் என்னும் "*

*" வெய்யவாள் இத்யாதி - திவ்யாயுதங்கள் எதிரிகளை அழிக்கைக்கு உடலாய் இருக்குமாப்போலே காமிநிகளை அழிக்கைக்கும் உடலாய் இருக்குமிறே. உகப்பாரையும் உகவாதாரையும் ஒக்கத் தோற்பிக்கு மவை. முன்னே கைகண்டு வைக்கிறவையிறே. காணவே எதிரிகள் மண்ணுண்ணும்படியான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீ என் விரோதிகளைப் போக்கி முகங்காட்டாது ஒழிவதே "*

திவா. மொ. 7:2:6-36

*" சங்கு சக்கரம் தண்டு வாள் வில்லும் அல்லது இழைக்கலுறாள் "*

*" சங்கும் - மடுத்தூதிய சங்கும். சக்கரம் - அருளார் திருச்சக்கரமும். தண்டு - அருள் என்னும் தண்டும். வாள் - நாந்தகம் என்னும் ஒள்வாள். வில் - நாணொலிச் சார்ங்கம் என்னும் வில் "*

பெரி. தி. 3:7:3 திருவாய்மொழிப்பிள்ளை உரை.

2. வாளி

*" வெங்கணை - விடும்போது அம்பாய், படும்போது காலாக்நி போலே யிருக்கை "*

அம. 2 பெ. உரை.

*[காலாக்நி - ஊழித்தீ]*

3. திண்சிலை

*" திணரார் சார்ங்கம் - தன் வளைவிலே விரோதிகளைத் தப்பாமல் அகப்படுத்திக் கொள்ளுகை "*

தி. வா. மொ. 6:10:5-36

4 தண்டு

*" தண்டு - கைவிடாமல் இருந்து எதிரிகளை நெரிய அடிக்கும் ஸ்ரீகதை "*

பெரி. தி. 4:1: 2 ம. மா. மு. உரை.

5. **சங்கம்**

" சுரிசங்கம் - ஒரு கார்யம் செய்ய வேண்டாதே ஸந்நிவேசந்தானே தர்சநீயமாய் இருக்கும் ஸ்ரீபாஞ்ச ஜந்யம்" தி. வா. மொ. 9:4:1-24

[ஸந்நிவேசம் - அமைப்பு இருக்கும் நிலை. தர்சநீயம் - காட்சிக்கு இனிது.]

6. **ஒள்வாள்**

" நாந்தகம் - திருக்கையைப் பிரியாதே இருந்து எதிரிகளை அறச் செய்யும் திருக்குற்றுடைவாள் " பெரி. தி. 4:1:2 ம. மா. மு. உரை.

7. **உம்பர் இருசுடர் ஆழி**

" ஆழியங்கையனை ஏத்த வல்லார் - அல்லாத அழகுகள் ஒருபடியும் இது ஒருபடியுமாய் இருக்கை; இது கைமேலே அநுபவித்துக் காணலாமே "
தி. வா. மொ. 7:3:11-36

8. **குவலயாபீடத்தை அழித்தவன்**

பாட்டு 121 இன் ஒப்புமைப் பகுதி பார்க்க. (73)

## 174

**மஞ்சுயர் மாமணிக் குன்றமேந்தி**
**மாமழை காத்தொரு மாயவானை**
**அஞ்ச அதன்மருப் பன்றுவாங்கும்**
**ஆயர்கொல் மாயம் அறியமாட்டேன்**
**வெஞ்சுடர் ஆழியும் சங்குமேந்தி**
**வேதமுன் ஓதுவர் நீதிவானத்து**
**அஞ்சுடர் போன்றிவர் ஆர்கொலென்ன**
**அட்ட புயகரத் தேன்என்றாரே.**

ப. ரை : மாமழை காத்து - பெருமழையைத் தடுத்து, ஒரு மாய ஆனை அஞ்ச - ஒப்பற்ற மாயச் செயல்களையுடைய குவலயாபீடம் என்னும் யானை யானது நடுங்க, அதன் மருப்பு ஒன்று வாங்கும் - அதன் கொம்பு ஒன்றினைப் பறிக்கும், ஆயர் கொல் - கிருட்டிணனோ! மாயம் அறிய மாட்டேன் - வியப்பினை அறிகிலேன்; வெஞ் சுடர் ஆழியும் - வெவ்விய ஒளியையுடைய சக்கரத்தையும், சங்கு - பாஞ்சசன்னியம் என்னும் சங்கினையும், ஏந்தி - தாங்கிக்கொண்டு, முன் வேதம் ஓதுவர் - எதிரே வேதங்களை ஓதிக் கொண்டிருக்கிறார்; நீதி வானத்து அஞ் சுடர் போன்ற இவர் - முறை பிறழாத திருநாட்டிலே அழகிய சுடர்போலே இருக்கும் இவர், ஆர்கொல் என்ன அட்ட புயகரத்தேன் என்றார் -.

சி. கு : மஞ்சு - மேகம். நீதி வானம் - காலத்தால் மாற்றம் நிகழாத திருநாடு.

---

**174.** 2 : 3 பொன்றுவாங்கும்.

வியா : **நாலாம் பாட்டு : மஞ்சு உயர் இத்யாதி** - க்ருஷ்ணாவதாரம் பின் நாட்டுகிறபடி. மேகபதத்து அளவும் செல்ல ஓங்கி ரத்நங்களை உடைத்தாய் இருக்கிற கோவர்த்தந கிரியைத் தரித்து.

**" கடுவாய்ச் சினவெங்கண் களிற்றினுக்குக்**
**கவளம் எடுத்துக் கொடுப்பானவன்போல் "**

மத்தகஜங்கள் போலே ஆயிற்று மேகங்கள்; அவற்றுக்குக்[1]கவளம் கொடுப்பாரைப்[2] போலே ஆயிற்று மலையை எடுத்துக்கொடு நின்றபோது இருந்தபடி.

**மாமழை காத்து** - விநாசத்தைப் பண்ணுவதாய், பரிஹரிக்க அரிதான மழையைப் பரிஹரித்து. **ஒரு மாய ஆனை** - அகப்படிலும் அகப்பட்டுத் தப்பிலும் தப்பலாம்படி இருக்கும் கேவலம் ஆனை அன்றிக்கே, புத்தி பூர்வமாக நலிய வேணும் என்று நிறுத்தினது ஆயிற்று. **அஞ்ச** - இதுக்கு முன் பயம் வ்யுத்பத்தி பண்ணி அறியாதது பயப்பட. **அதன் மருப்பு ஒன்று வாங்கும்** - அதினுடைய கொம்பைக் குப்பைக்கீரை பிடுங்குமாப் போலே அநாயாஸேந வாங்கும். **ஆயர்கொல்** - ஆனை வாசி அறியாமையாலே பலித்துக்கொண்டு நின்றது இத்தனை. **மாயம்**

---

வி : நாலாம் பாட்டு : மஞ்சு உயர் மாமணிக் குன்றம் ஏந்தி - *கிருட்டிணாவதாரம் பின் நாட்டுகிறது*[3]*. மேக மண்டலத்து அளவும் செல்ல ஓங்கியிருக்கிறது கோவர்த்தனமலை; மேலும் ஒளிமணிகளை உடைத்தாய் இருக்கிறது அது. அந்தக் கோவர்த்தன மலையைத் தாங்கி.*

" கடுவாய்ச்சின வெங்கண் களிற்றினுக்குக்
கவளம் எடுத்துக் கொடுப்பானவன்போல் " (பெரி. தி. *3:5:4*)

*என வருவதும் காண்க.*

*மதயானைகளைப் போலே இருக்கின்றன, மேகங்கள். அவற்றிற்குக் கவளம் கொடுப்பாரைப் போலே இருக்கிறது மலையை எடுத்துக் கொண்டு நின்ற போது இருந்த நிலை.*

மாமழை காத்து - *கெடுப்பதாய்த் தடுக்க அரிதாய் இருந்த மழையைத் தடுத்து.* ஒரு மாய ஆனை - *இந்த யானையிடம் அகப்பட்டாலும் அகப்பட்டுக் கொள்ளலாம்; தப்பினாலும் தப்பலாம் என்று சொல்லத்தக்கதாய் இருக்கும் எளிய யானை அன்று இது; துன்புறுத்த வேண்டும் என்னும் கருத்தோடு நிறுத்தப்பட்டது இது.* அஞ்ச - *இதற்கு முன்பு அச்சம் என்பது யாது என்று உணர்ந்தறியாத யானை அச்சம்கொள்ள.* அதன் மருப்பு ஒன்று வாங்கும் - *அதனுடைய கொம்பைக் குப்பைக்கீரையைப் பிடுங்குவது போலே விளையாட்டாக வாங்கும்.* ஆயர்கொல் - *இடையனாகையாலே ஆனையின் வேற்றுமை அறியான்; அதனாலே யானை முன்னே சிறிது தோற்றிக்கொண்டு*

---

1. அவைத்துக்குக். 2. குடுப்பாரைப்.
3. பின் நாட்டுதல் - தொடர்தல்.

**அறிய மாட்டேன்** - அவனுடைய ஆஸ்சர்யமான செயல்கள் எனக்கு[1] ஒன்றும் தெரிகிறது இல்லை.

**வெஞ் சுடர் ஆழியும் சங்கும் ஏந்தி** - திவ்யாயுதங்களைத் தரித்து. **வேதம் முன் ஓதுவர்** - அருளிச்செய்கிற வார்த்தை அடைய வேதம் போலே இரா நின்றது. **நீதி வானத்து** - முறைகெடாதபடி பரிமாறக்கடவ பரமபதத்திலே. **அஞ் சுடர் போன்று** - "அத யததஃ பரோதிவோ ஜ்யோதிர் தீப்யதே" **அட்ட புயகரத்தேன்** - அத்தனை தூரஸ்தன் என்று கைவாங்க வேண்டா, உனக்காகக் கிட்ட வந்து நிற்கிறவன்[2] காண் என்றார்.

---

நின்றான். **மாயம் அறியமாட்டேன்** - அவனுடைய வியத்தகு செயல்கள் எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

**வெஞ் சுடர் ஆழியும் சங்கும் ஏந்தி** - திருப்படைகளைப் பூண்டு. **வேதம் முன் ஓதுவர்** - அருளிச்செய்யும் சொற்கள் அடைய வேதம் போலே இருக்கின்றன. **நீதி வானத்து** - முறை கெடாதபடி பரிமாறுவதற்கு உரிய திருநாட்டிலே. **அஞ் சுடர் போன்று** - "விண்ணுக்கும் அவ்வருகில் (திருநாட்டில்) (இறைவனாகிய) ஒளி விளங்குகிறது" என்பது சாந்தோக்கிய உபநிடதம் (3:17:7). இதனால் திருநாட்டில் உள்ள பெருமானை ஒளியாகச் சொல்வது உண்டு என்பது போதரும். **அட்ட புயகரத்தேன்** - அவ்வளவு சேய்மையில் உள்ளவன் என்று கைவாங்க வேண்டா[3]. உனக்காகக் கிட்ட வந்து நிற்பவன் கண்டாய் என்கிறார்.

**ஒப்புமைப் பகுதி**

1. **குன்றம் ஏந்தி மழை காத்தவன்**

   *பாட்டு 24, 45 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **யானையின் மருப்பு வாங்கியவன்**

   *பாட்டு 121இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

3. **சங்கு சக்கரங்கள் ஏந்தியவன்**

   *" சுடர் ஆழி சங்கு ஏந்தி - பரமபதத்தில் ஆபரணமாய்க் காட்சி தரும். இங்கு ஆயுதமாயிறே இருப்பது "* *தி. வா. மொ. 2:3:10-36*

   *" வினையுண்டானால் திருவாழியாழ்வான் திருக்கையை விட்டுப்போய் வ்யாபரிக்கும்; இவன் வினை முடுக முடுகத் திருப்பவளத்திலே அணையும் இத்தனை "*

   *நாச். தி. 7 ஆம் திருமொழி ப்ரவேசம். பெ. உரை.*

**(74)**

---

1. இனக்கு. 2. இருக்கிறவன்.
3. கைவாங்குதல் - பின்னிடுதல்.

**கலைகளும் வேதமும் நீதிநூலும்**
**கற்பமும் சொற்பொருள் தானுமற்றை**
**நிலைகளும் வானவர்க் கும்பிறர்க்கும்**
**நீர்மையி னால்அருள் செய்துநீண்ட**
**மலைகளும் மாமணி யும்மலர்மேல்**
**மங்கையும் சங்கமும் தங்குகின்ற**
**அலைகடல் போன்றிவர் ஆர்கொலென்ன**
**அட்ட புயகரத் தேன்என்றாரே.**

**ப. ரை :** **கலைகளும்** - *வேதத்தின் பிற்பகுதியான உபநிடதங்களையும்,* **வேதமும்** - *முற்பகுதியான வேதங்களையும்,* **நீதி நூலும்** - *இதிகாசங்களையும்,* **கற்பமும்** - *கற்ப சூத்திரங்களையும்,* **சொல்** - *இலக்கண நூல்களையும்,* **பொருள் தானும்** - *மீமாம்சை நூல்களையும்,* **மற்றை நிலைகளும்** - *இன்னமும் இவற்றை மேற்கொண்டு ஒழுகுவார் அடையும் இடங்களையும்,* **வானவர்க்கும் பிறர்க்கும்** - *தேவர்களுக்கும் மற்றுள்ள மனிதர்களுக்கும்,* **நீர்மையினால் அருள்செய்து** - *தன் தன்மையினாலே தந்து,* **நீண்ட மலைகளும் மாமணியும் மலர்மேல் மங்கையும் சங்கமும்** - *உயர்ந்த மலை போலும் தோள்களும், கௌத்துவமணியும், திருமகளும், பாஞ்சசன்னியமும்,* **தங்குகின்ற அலை கடல் போன்ற** - *எப்போதும் நிலைபெற்று நிற்கும் அலையெறியும் கடல் போன்றவருமான,* **இவர் ஆர்கொல் என்ன, அட்ட புயகரத்தேன் என்றார்-.**

**சி. கு:** *கற்பம்* - *வேதங்களில் விதிக்கப்பட்ட செயல்களைச் செய்யும் முறைகளை உணர்த்தும் நூல். சொல்* - *இலக்கணம். மீமாம்சை* - *வேதங்களின் உண்மைப் பொருளை நன்கு ஆய்ந்து உணர்த்தும் நூல்.*

வியா : **அஞ்சாம் பாட்டு : கலைகளும்** - வேதத்தில் உபரிதந பாகத்தையும், வேதாந்த ஸூத்ரங்களையும். **வேதமும்** - பூர்வ பாகமும். **நீதி நூலும்** - அவற்றை[1] உபப்ரும்ஹிக்கக்கடவ இதிஹாஸாதிகளும். **கற்பமும்** - கல்ப ஸூத்ரமும். **சொல்** - பதங்களை நிர்வஹித்துக் கொடுக்கக்கடவ[2] வ்யாகரணமும். **பொருளும்** - அர்த்த விசாரம் பண்ணக்கடவ மீமாம்சையும். **நிலைகளும்** - இவற்றில்[3] சொல்லு

---

வி : அஞ்சாம் பாட்டு : **கலைகளும்** - *வேதத்தின் மேற்பகுதியையும், வேதாந்த சூத்திரங்களையும்.* **வேதமும்** - *வேதத்தின் முற்பகுதியும்.* **நீதி நூலும்** - *அவற்றை விளக்கக்கூடிய இதிகாசம் முதலியவைகளும்.* **கற்பமும்** - *கற்பசூத்திரமும்[4]* **சொல்** - *சொற்களுக்குப் பொருள்காட்டிக் கொடுத்தற்கு உரிய இலக்கணமும்.* **பொருளும்** - *வேதத்தின் உண்மைப் பொருளை ஆராய்ந்து விளக்குதற்கு உரிய மீமாம்சைகளும்.* **நிலைகளும்** - *இவற்றில் சொல்லும் முறைமைகளைக் கடைப்*

---

1. அவைத்தை. 2. குடுக்கக்கடவ. 3. இவைத்தில்.
4. கற்பசூத்திரம் - வேள்விகளைப் பண்ணும் முறைகளை விளக்கும் நூல்.

கிற ஸாதநங்களை அநுஷ்டித்தார்க்கு ப்ராப்யமாகச் சொல்லுகிற பூமிகளும். **வானவர்க்கும் பிறர்க்கும்** - ப்ரஹ்மாதிகளுக்கும் மநுஷ்யர்களுக்கும். **நீர்மையினால் அருள்செய்து** - சேஷித்வ ஸ்வபாவத்தாலே கொடுத்து[1].

**நீண்ட இத்யாதி** - மேரு போலே இருக்கிற தோள்களும் ரத்நங்களுக்குத் தானே கௌஸ்துபம் உண்டாய் இருக்குமே; பெரியபிராட்டியாரும் ஸ்ரீபாஞ்சஜந்யமும். **தங்குகின்ற இத்யாதி** - இவை ஒருக்கால் உண்டாய் ஒருக்கால் இல்லையாம் கடல் போல் அன்றிக்கே, தங்குகின்ற கடல் போலே இருக்கிற இவர் ஆர்தான்? **அட்ட புயகரத்தேன்** - கடல் போலே இழிய ஒண்ணாதபடி[2] அபரிச்சிந்நன் என்று இருக்க வேண்டா, உனக்கு நெஞ்சால் பரிச்சேதிக்கலாம்படி வந்து நிற்கிறவன் என்றார்.

---

*பிடித்தார்க்கு அடைதற்கு உரியனவாகச் சொல்லும் இடங்களும்.* **வானவர்க்கும் பிறர்க்கும்** - *பிரமன் முதலானோர்க்கும், மனிதர்களுக்கும்.* **நீர்மையினால் அருள் செய்து** - *தான் உடையவனாய் இருக்கும் தன்மையாலே கொடுத்து.*

**நீண்ட மலைகளும் மாமணிகளும் மலர்மேல் மங்கையும் சங்கமும் தங்குகின்ற அலை கடல் போன்றிவர் ஆர்கொல் என்ன** - *மலைகளையும் மணிகளையும், திருமகளையும் சங்கினையும் கொண்டிருக்கும் கடல் போலே இருக்கும் பெருமான். பெருமானாகிய கடலில் காணப்படும் மலைகள் யாவை? மணிகள் யாவை? என்னில், பெருமான் தோள்களே மலைகள்; அவன் மார்பில் கிடக்கும் கௌத்துவ மணியே மணி. மேருவைப் போன்று இருக்கும் அவன் தோள்கள் ஆகிய மலைகளும் இரத்தினங்களைப் போன்று இருக்கும் கௌத்துவத்தின் மணிகளும் பெரிய பிராட்டியாரும் சீரார் பாஞ்சசன்னியமும்.* **தங்குகின்ற அலை கடல் போன்று இவர் ஆர்கொல் என்ன** - *இவை ஒருகால் இருந்து பிறிதொருகால் இல்லாமற் போகும் கடல் போல் அல்லாமல், தங்குகின்ற கடல் போலே இருக்கும் இவர் யாரோ? என்ன.* **அட்ட புயகரத்தேன்** - *கடல்போலே இழிய ஒண்ணாதபடி வரம்பற்றவன் என்று இருக்க வேண்டா; உனக்கு நெஞ்சால் அளந்து அறியத்தக்கவாறு வந்து நிற்கிறவன் என்கிறார்.* *(75)*

## 176

எங்ஙனும் நாம்இவர் வண்ணமெண்ணில்
ஏதும் அறிகிலம் ஏந்திழையார்
சங்கும் மனமும் நிறைவுமெல்லாம்
தம்மன வாகப் புகுந்துதாமும்
பொங்கு கருங்கடல் பூவைகாயா
போதவிழ் நீலம் புனைந்தமேகம்
அங்ஙனம் போன்றிவர் ஆர்கொலென்ன
அட்ட புயகரத் தேன்என்றாரே.

---

1. குடுத்து. 2. உண்ணாதபடி.

176. 1 : 1 எங்ஙனம். 2 : 3 நிறையுமெல்லாம்.

ப. ரை: **நாம் இவர் வண்ணம் எங்ஙன் எண்ணிலும்** - *நாம் இவருடைய படிகளை எப்படி அறியப் புகுந்தாலும்,* **ஏதும் அறிகிலம்** - *ஒன்றும் அறிந்தோம் இல்லை;* **ஏந்து இழையார்** - *அணிகலன்களைப் பூண்டிருக்கும் பெண்டிர்,* **சங்கும் மனமும் நிறைவும் எல்லாம்** - *வளையல்களும் நெஞ்சமும் அடக்கமும் ஆகிய இவற்றை எல்லாம்,* **தம்மனவாக** - *தம்முடையனவாக ஆக்கிக்கொண்டு,* **புகுந்து** - *இவ் இடம் வந்து சேர்ந்து,* **பொங்கு கருங் கடல்** - *முழங்குகின்ற கரிய கடல்,* **பூவை** - *பூவைப்பூ,* **காயா** - *காயாம்பூ,* **நீலம்** - *கருநெய்தல்,* **புனைந்த மேகம்** - *அழகிய மேகம்,* **அங்ஙனம் போன்ற இவர்தாம்** - *இவற்றைப் போலே இருக்கும் இவர்,* **ஆர்கொல் என்ன, அட்ட புயகரத்தேன் என்றார்**-.

சி. கு : *எங்ஙனும் என்பதில் உள்ள உம்மையைப் பிரித்து எண்ணில் என்பதோடு கூட்டுக. தம்மன - தம்முடையன; தாம் என்னும் இடப்பெயர் தம் என்று குறுகி நின்று அன் சாரியையும் பலவின்பால் அகர விகுதியும் பெற்று வந்தது.*

வியா : **ஆறாம் பாட்டு : எங்ஙனும் இத்யாதி** - ஆபாத ப்ரதீதி மாத்ரம் அன்றிக்கே இயற்றிஎல்லாம் கொண்டு இவரை உள்ள அளவு எல்லாம் அறிய வேணும் என்று பார்த்தால் ஒன்றும் அறியப் போகிறது இல்லை. **ஏந்து இழை இத்யாதி** - ''பிறருடைய பாஹ்ய பரிகரங்களோடு ஆந்தர பரிகரங்களோடு வாசி அறத் தம்முடையது ஆக்க வேணும்'' என்று அதுக்காக ஆபரணம் பூண்டு இருக்கக்கடவ அபலைகள் உண்டு. அவர்களுடைய வளையும், மநஸ்ஸும், அகவாயில் அடக்கமும், இவை எல்லாம். **தம்மன ஆகப் புகுந்து** - நம்மது[1] என்று இருந்தவை எல்லாம் கண்ட போதே தம்மது[2] ஆம்படியாக[3] ஆயிற்று வந்தது.

**தாமும் இத்யாதி** - தம்மது[4] ஆக்கின பரிகரத்தைச் சொல்லுகிறது. ஒன்று உபமானமாகப் போராமையாலே அங்கும் இங்குமாகக் கதிர் பொறுக்குகிறார். பெரிய

---

வி : **ஆறாம் பாட்டு : எங்ஙனும் நாம் இவர் வண்ணம் எண்ணில் ஏதும் அறிகிலம்** - *மேலெழுந்தவாரியாகப் பார்த்தல் அன்றி, நம் இயற்றிகளை[5] எல்லாம் கொண்டு இவரை முழுதும் அறிய வேண்டும் என்று பார்த்தால் ஒன்றும் அறிய முடியவில்லை.* **ஏந்து இழையார் சங்கும் மனமும் நிறைவும் எல்லாம்** - *பிறருடைய புறக் கருவிகளை மட்டும் அன்றி அகக் கருவிகளையும் தம்முடையன ஆக்க வேண்டும் என்று கருதி அதற்காக அணிகலன்களைப் பூண்டிருக்கக்கூடிய மெல்லியலார் உண்டு. அவர்களுடைய வளையும், மனமும், நெஞ்சின் அடக்கமும் இவற்றை எல்லாம்.* **தம்மன ஆகப் புகுந்து** - *நம்முடையவை என்றிருந்தவை எல்லாம் தாம் கண்ட போது தம்முடையவை ஆகுமாறு அன்றோ அவர் வந்தது.*

**தாமும் பொங்கு கருங் கடல் பூவை காயா போது அவிழ் நீலம் புனைந்த மேகம்** - *தலைமகளின் வளை முதலானவற்றைப் பெருமான் தன்னுடையன ஆக்கிக் கொண்டான். அப்படி ஆக்கிக்கொண்ட கருவியைச் சொல்லுகிறது. அவன் மேனியழகுக்கு எந்த ஒரு பொருளும் உவமையாக அமையாமையால் அங்கும் இங்குமாகக் கதிர்*

---

1. நம்முது. 2. தம்முது. 3. ஆக ஆகும்படி. 4. தம்முது.
5. இயற்றி - ஆற்றல்.

கிளர்த்தியை[1] உடைத்தாய் இருக்கிற கருங்கடல். பூவை, காயா, செவ்வியிலே அலர்ந்த நீலம், இவற்றோடு[2] ஒக்கத் தொடுத்த மேகம். **அங்ஙனம் போன்று** - சொன்ன உபமாநம்தான் உபமேயத்துக்குப் போராமையாலே அங்ஙனம் போன்று இவர் ஆர்கொல் என்ன, **அட்ட புயகரம்** - உனக்கு அறியாமைக்கு உடலாகச் சொல்லாநின்றாய், நீ அறிகைக்காக வந்து நிற்கிறவன் அன்றோ நான் என்றார்.

---

*பொறுக்குகிறார்[3]. பெரிய கிளர்ச்சியையுடைய கருங்கடல், பூவை, காயா, செவ்வியிலே[4] அலர்ந்த நீலம், இவற்றோடு ஒக்கத் தொடுத்த மேகம்.* **அங்ஙனம் போன்று** - *உரைத்த உவமைகள் அவன் திருமேனியை விளக்கப் போதாமையினால் அவற்றைப் போன்ற இவர் ஆர்கொல்? என்ன,* **அட்ட புயகரம்** - *உனக்கு அறிய முடியாவண்ணம் இருப்பதாகச் சொல்கிறாய், நீ அறிவதற்காக வந்து நிற்கிறவன் அன்றோ நான் என்கிறார்.*

### ஒப்புமைப் பகுதி

**1. சங்கினை இழத்தல்**

*" சரிவளை கழல்கின்றதே "*

*" வளையிழக்கையாவது ஸ்த்ரீத்வம் இழக்கையிறே "*

*பெரி. தி. 3:4:8 ம. மா. மு. உரை.*

**2. நிறைவும் கொண்டான்**

*" நிறை கொண்டான் - நிறையாகிறது அடக்கம். அகவாயில் ஒடுகிற இது பிறர்க்குத் தெரியாதபடி மறைத்துக் கொண்டிருக்கையிறே "*

*தி. வா. மொ. 5:3:2-36*

**3. பெருமானது எழில்தோற்றத்தை விளக்க உவமை தேடுதல்**

*" கார்த்தண் முகிலும் கருவிளையும் காயாமலரும் கமலப்பூவும் ஈர்த்திடுகின்றன......"*

*" கார்காலத்தில் குளிர்ந்த முகிலும், கருவிளைப் பூவும், காயா மலரும். மேகத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லப் புக்கவள், ஒன்றும் போராமையாலே பலவற்றிலேயும் கதிர்பொறுக்குகிறாள் " நாச். 12:6 பெ. உரை. [த்ருஷ்டாந்தம் - எடுத்துக்காட்டு; உவமை.]*

*" குன்றாடு கொழுமுகில்போல் குவளைகள்போல் குரைகடல்போல்*
*நின்றாடு கணமயில்போல் நிறமுடைய நெடுமால் "*

*" குன்றாடு கொழுமுகில்போல் - கழுத்தே கட்டளையாக நீரைமுகந்து போகமாட்டாதே மலையின் உச்சியிலே சார்ந்த மேகம்போலேயும், குவளைகள் போல் - கண்ணாலே கண்டநுபவிக்கும் குவளைகள் போலேயும். குரைகடல்போல் - அநுபவித்து முடிக்க ஒண்ணாமைக்கு*

---

1. கிளற்றியை. 2. இவைத்தோடு.

3. கதிர் பொறுக்குதல் - தேடித் தொகுத்தல். அறுவடைக்குப் பின் வயலில் சிந்திக் கிடக்கும் கதிர்களை ஏழைகள் பொறுக்கித் திரட்டுவர். இங்கு அவர்களைப் போல இவர் உவமைகளைத் தேடித் திரட்டுகிறார். 4. செவ்வி - உரிய காலம், சரியான நேரம்.

*கோஷிக்கிற கடல்போலேயும், நின்றாடு கணமயில்போல் - வைத்தகண் வாங்க ஒண்ணாமைக்கு ஹர்ஷத்தாலே நின்று ஆடாநின்றுள்ள மயில் திரள் போலேயும், நிறமுடைய வடிவழகையுடைய. நிறம் - அழகு. அன்றிக்கே, திருமேனியில் நிறம் தன்னையே சொல்லிற்றானபோது, கண்ட கண் மயிர்குச்சியிடும்படியான குளிர்த்திக்கு நீர்கொண்டெழுந்த காளமேகத்தின் நிறத்தையும், நெய்ப்புக்குக் குவளைப்பூவின் நிறத்தையும் இருட்சிக்குக் கடலின் நிறத்தையும், புகர்ப்புக்கு மயில் கழுத்தின் நிறத்தையும் த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகிறது என்று நியமித்துக் கொள்ள வேணும். ஒன்றே உபமானமாகப் போருவது அல்லாமையாலே அங்கும் இங்கும் கதிர் பொறுக்கிச் சொல்லுகிறார்"*

*பெரி. தி. 4:8:9 ம. மா. மு. உரை.*
(76)

## 177

**முழுசிவண் டாடிய தண்டுழாயின்**
**மொய்ம்மலர்க் கண்ணியும் மேனியம்சாந்து**
**இழுசிய கோலம் இருந்தவாறும்**
**எங்ஙனம் சொல்லுகேன்? ஓவிநல்லார்**
**எழுதிய தாமரை அன்னகண்ணும்**
**ஏந்தெழில் ஆகமும் தோளும்வாயும்**
**அழகிய தாம்இவர் ஆர்கொலென்ன**
**அட்ட புயகரத் தேன்என்றாரே.**

ப. ரை : **வண்டு முழுசி ஆடிய** - *வண்டுகள் மூழ்கிக் கூத்தாடிய,* **தண் துழாயின் மொய்ம் மலர்க்கண்ணியும்** - *குளிர்ந்த திருத்துழாய் மலரினால் செறியத் தொடுக்கப்பட்ட மாலையும்,* **மேனி அம் சாந்து இழுசிய கோலமும்** - *திருமேனியிலே அழகிய சந்தனம் பூசப்பெற்ற அழகும்,* **இருந்தவாறு எங்ஙனம் சொல்லுகேன்** - *இருந்த தன்மையினை எப்படிச் சொல்லிக்காட்டுவேன்.* **ஓவி நல்லார் எழுதிய** - *ஓவியத்தில் வல்லார் தீட்டிய,* **தாமரை அன்ன கண்ணும் அழகியது ஆம்** - *தாமரை போன்ற திருக்கண்களும் அழகியனவாய் இருக்கின்றன;* **ஏந்து எழில் ஆகமும் அழகியது ஆம்** - *மிகுந்த அழகையுடைய திருமார்பும் அழகியதாய் இருக்கிறது;* **தோளும் அழகியது ஆம்** - *திருத்தோள்களும் அழகியவாய் இருக்கின்றன;* **வாயும் அழகியது ஆம்** - *திருவாயும் அழகியதாக இருக்கிறது;* **இவர் ஆர்கொல் என்ன, அட்ட புயகரத்தேன் என்றாரே -;**

சி. கு : *"மேனியம் சாந்து இழுசிய கோலமும்"* என்று உம்மையை இங்குக் கூட்டுக. அழகியது ஆம் என்பதனை ஒவ்வோர் உறுப்போடும் தனித்தனிக் கூட்டுக. கண்ணும் ஆகமும் தோளும் வாயும் என்று எண்ணிக் கூட்டினால் அழகியது என்பது ஒருமையாய் இருப்பதால் ஒருமை பன்மை மயக்கமாகும்.

---

**177.** 1 : 6 மேனியும்சாந்து.

**வியா : ஏழாம் பாட்டு : முழுசி இத்யாதி** - கிண்ணகத்தில் இழிவாரைப் போலே வண்டுகளானவை மதுபாந மத்தமாய்க் களித்து ஆடாநின்றுள்ள திருத் துழாயினுடைய செறியத் தொடுத்த மாலையும். **மேனி இத்யாதி** - **"ஆவயோர் காத்ரஸத்ருசம்"** என்கிறபடியே ஸ்வதஃ நன்றான திருமேனியிலே பழகப் புதைத்து ஆறின சாந்தை அங்கே இங்கே இளிம்பாகப் பூசுகை அன்றிக்கே வேண்டும் இடங் களிலே சாத்தின, பூசின கோலம் இருந்தபடியும். **எங்ஙனம் சொல்லுகேன்** - வாசக சப்தம் இல்லாததுக்கு என்னால் வாசகம் இட்டுச் சொல்லப் போமோ?

**ஓவி இத்யாதி** - சித்ரம் எழுதுகையில் குசலராய் இருக்குமவர்கள் எழுதின தாமரைப்பூப் போலே இருக்கிற கண்களும், அதாகிறது கண்ட பின்பு இமையாதே இருந்தபடி. **ஏந்து எழில் இத்யாதி** - மிக்க எழிலை உடைத்தாய் இருக்கிற திருமார்பும், தோள்களும், வாயும் அழகியராய் இருந்தார்[1]; அவர்[2] **ஆர்கொல் என்ன, அட்ட புயகரம்** - இவ்வொப்பனை அழகைக்கொண்டு பரமபதத்திலே இருக்கிறவன் என்று கூச வேண்டா, உனக்காக வந்து நிற்கிறவன் நான் என்றார்.

---

வி : ஏழாம் பாட்டு : முழுசி வண்டு ஆடிய தண் துழாயின் மொய்ம் மலர்க் கண்ணியும் - *கிண்ணகத்தில்[3] இழிவாரைப் போலே ஒன்றுக்கு ஒன்று துணைதேடி இழிந்த வண்டுகள் மது உண்டு செருக்குற்றுத் தண் துழாய் மலர்களில் களித்து ஆடு கின்றன. அத்தகைய துழாய்மலர்களால் ஆகிய செறியத் தொடுத்த மாலையும்.* **மேனி அம் சாந்து இழுசிய கோலம் இருந்தவாறு - "அழகிய முகத்தை உடையவளே! எங்கள் உடம்புக்குத் தகுந்த சந்தனத்தைத் தருவாயாக"** *(வி. பு. 5:20:6) என்று கண்ணன் கம்சனுக்குச் சந்தனம் எடுத்துச்செல்வாளை நோக்கிக் கூறியதற்கு ஒப்ப, இயல்பாகவே நன்றாக இருக்கும் திருமேனியிலே பழகப் புதைத்து ஆறிய சாந்தை அங்கும் இங்கும் இளிம்பாகப்[4] பூசாமல் வேண்டும் இடங்களில் பூசிய கோலம் இருந்தபடியும்.* **எங்ஙனம் சொல்லுகேன்** - *சொல்வதற்குச் சொற்கள் இல்லாத ஒன்றைக் குறித்து என்னால் சொற்கள் கண்டு சொல்ல இயலுமோ?*

**ஓவி நல்லார் எழுதிய தாமரை அன்ன கண்ணும்** - *ஓவியம் தீட்டுவதில் வல்லவராய் இருப்பார் எழுதிய தாமரைப்பூப் போலே இருக்கின்ற கண்களும், அஃதாவது கண்ட பின்பு இமைக்காமல் இருந்தன.* **ஏந்து எழில் ஆகமும் தோளும் வாயும் அழகியது ஆம் இவர் ஆர்கொல் என்ன** - *மிக்க எழிலை உடைத்தாய் இருக்கும் திருமார்வும், தோள்களும், வாயும் அழகியராய் இருந்தார். இவர்* **ஆர்கொல் என்ன, அட்ட புயகரம்** - *இவ் ஒப்பனை அழகைக்கொண்டு திருநாட் டிலே இருப்பவன் என்று கூச வேண்டா; உனக்காக வந்து நிற்பவன் நான் என் கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

**அம் சாந்து**

*" குளிர் சாந்தம் - பழகப் புதைத்து ஆறின சாந்து "*

நாச். தி. 6:10 பெ. உரை.

**(77)**

---

1. இருந்தார். 2. இவர்.
3. கிண்ணகம் - வெள்ளம். 4. இளிம்பாக - கண்டபடி.

மேவிஎப் பாலும்விண் ணோர்வணங்க
வேதமு ரைப்பர்முந் நீர்மடந்தை
தேவிஅப் பால்அதிர் சங்கமிப்பால்
சக்கரம் மற்றிவர் வண்ணமெண்ணில்
காவிஒப் பார்கட லேயுமொப்பார்
கண்ணும் வடிவும் நெடியராய்என்
ஆவிஒப் பார்இவர் ஆர்கொலென்ன
அட்ட புயகரத் தேன்என்றாரே.

ப. ரை : விண்ணோர் எப்பாலும் மேவி வணங்க - *வானவர்கள் எல்லாத் திசைகளிலும் பொருந்திநின்று வணங்கிநிற்க,* வேதம் உரைப்பர் - *இவர் வேதங்களைச் சொல்லுகிறார்;* முந்நீர் மடந்தை தேவி - *கடலிற் பிறந்த திருமகள் இவருக்குப் பட்டத்தரசி ஆவாள்.* அதிர் சங்கம் அப்பால் - *முழங்குகின்ற பாஞ்சசன்னியம் அங்கே இடக்கையில் உள்ளது;* சக்கரம் இப்பால் - *திருவாழி வலப்பக்கத்தே உள்ளது;* மற்று இவர் வண்ணம் எண்ணில் - *அதற்குமேல் இவரது நிறத்தை ஆராய்ந்தால்,* காவி ஒப்பார் - *கருநெய்தல் நிறத்தை ஒத்திருக்கிறார்;* கடலும் ஒப்பார் - *கடலையும் ஒத்திருக்கிறார்;* கண்ணும் வடிவும் நெடியராய் - *கண்ணழகிலும் வடிவழகிலும் எல்லை யற்றவராய்,* என் ஆவி ஒப்பார் - *எனக்கு உயிரை நிகர்த்தவராய் இருக்கிறார்;* இவர் ஆர்கொல் என்ன, அட்ட புயகரத்தேன் என்றாரே -.

சி. கு : *மடந்தை - பத்தொன்பது வயது நிறைந்த பெண்ணைச் சுட்டாமல் பொதுநிலையில் பெண்ணைக் குறித்தது. காவி - கருநெய்தற் பூ.*

வியா : எட்டாம் பாட்டு : மேவி இத்யாதி - ப்ரஹ்மாதிகள் தரையில்[1] கால் பாவாதேயிறே இருப்பது. அவர்கள் கந்தத்தையும் அருவருத்து இருக்கக்கடவ நித்யஸூரிகள் பார்த்த பார்த்த இடம்[2] எங்கும் அங்குப் போலே பரிமாற. வேதம் உரைப்பர் - இவர் வாயால் சொல்லுகிறது வேதமாய் இராநின்றது. முந்நீர் மடந்தை தேவி - முந்நீர் மடந்தை என்று பெரியபிராட்டியார் ஆகவும் ஆம்; ஸ்ரீபூமிப் பிராட்டியார் ஆகவும் ஆம். அப்பால் அதிர் சங்கம் - ஸ்ரீபூமிப்பிராட்டியார் ஆன

---

வி : எட்டாம் பாட்டு : மேவி எப்பாலும் விண்ணோர் வணங்க - *பிரமன் முதலான தேவர்கள் தரையில் கால் பாவாமல்[3] இருப்பர் என்று கூறுவர். அவர்கள் வாடையையும் அருவருத்திருப்பவர்கள் அயர்வறும் அமரர்கள். அவ் அமரர்கள் பார்த்தபார்த்த இடம் எங்கும் திருநாட்டில் உள்ளது போலே பரிமாற.* வேதம் உரைப்பர் - *இவர் வாயால் சொல்லுவது வேதமாக இருந்தது.* முந்நீர் மடந்தை தேவி - *முந்நீர் மடந்தை என்பது பெரியபிராட்டியாரைக்[4] குறிப்பதாகவோ, நிலமடந்தையைக் குறிப்பதாகவோ கொள்ளலாம்.* அப்பால் அதிர் சங்கம் - *நிலமடந்தையைக் குறித்தது என்றால், அப்பால் என்பது அவள் இருக்கும்*

---

1. தறையில். 2. பார்த்தடம்.
3. பாவுதல் - படிதல். 4. பெரியபிராட்டியார் - திருமகளார்.

போது அவ் இடத்திலே அதிருகிற சங்கம் என்று ஆகிறது; பெரியபிராட்டியார் ஆன போது, அவர் இருக்கிற இடத்துக்கு மற்றை இடத்திலே அதிருகிற சங்கம். **இப்பால் சக்கரம்** - ஓர் இடத்திலே நின்றால் மற்றை இடத்தை இப்பால் என்னக் கடவதிறே.

**மற்று இத்யாதி** - இவருடைய நிறத்தைப் பார்க்கில் காவி போலேயும் கடல் போலேயும் இராநின்றார். **கண் இத்யாதி** - கண்ணுக்கும் வடிவுக்கும் உபமாநம் இல்லை. கண்ணுக்கு எல்லை உண்டாகிலாயிற்று வடிவுக்கு எல்லை உள்ளது. **என் ஆவி இத்யாதி** - வ்யதிரேகத்தில் ஜீவிக்க அரிதாம்படி இராநின்றார். இவர் ஆர்தான் என்ன, **அட்ட புயகரம்** - சொன்னபடி பொல்லாது. "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" கேட்டு அறியாயோ? என்றார். உன்னை ஒழிய ஜீவியாதவன் காண் நான் என்கிறார்.

---

*அந்தப் பக்கத்திலே அதிரும் சங்கம் என்று பொருள்படும். திருமகளைக் குறித்த தென்றால் அவர் இருக்கும் இடத்துக்கு எதிரான இடப்பக்கத்திலே அதிரும் சங்கம் என்று ஆகும். இப்பால் சக்கரம் - ஓர் இடத்திலே நின்றால், மற்றை இடத்தை இப்பால் என்று குறித்தல் வேண்டும் அல்லவா?*

மற்று இவர் வண்ணம் எண்ணில் காவி ஒப்பார் கடலேயும் ஒப்பார் - *இவரது நிறத்தைப் பார்த்தால் காவி போலேயும் கடல் போலேயும் நிறம் உடையவராய் இருக்கிறார்.* கண்ணும் வடிவும் நெடியராய் - *கண்ணுக்கும் வடிவுக்கும் உவமை இல்லை. கண்ணுக்கு எல்லை உளது ஆகில் அன்றோ வடிவுக்கு எல்லை உளது ஆகும்.* என் ஆவி ஒப்பார் இவர் ஆர்கொல் என்ன - *பிரிவில் யான் வாழ்தல் அரிதாம்படி இருந்தார். இவர் யாரோ என்ன,* அட்ட புயகரத்தேன் என்றார் - *நீ சொல்லிய தன்மை கொடிது. அஃதாவது நீ எனக்கு உயிராய் இருக்க, நம்மை உனக்கு உயிராய்ச் சொன்னாய் அல்லவா? அது கொடிது.* ஞானியோ என்னில் எனக்கு உயிரே என்பது என் முடிபு" *(கீதை. 7:18) என்னும் என் உரை கேட்டு அறியாயோ? என்றார். உன்னை ஒழிய வாழாதவன் கண்டாய் நான் என்கிறார்.*

**ஒப்புமைப் பகுதி**

1. **விண்ணோர் வணங்க நின்றவன்**

   *பாட்டு 153இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **காவி ஒப்பார்**

   *" காவிசேர் வண்ணன் - 'ப்புல்லேந்தீவர பத்ராபம்' என்கிற நிறத்தையுடையவன். இருளோடு ஒரு கோவையான நிறம். இருளன்ன மாமேனியிறே "* திரு. வா. மொ. 5:4:2-36

3. **கடலை ஒப்பார்**

   *" கடல் வண்ணன் என்னும் - ஒரு கருங் கடல் வடிவுகொண்டு செவ்வே இருந்தாற்போலே அங்கு இருக்கும் இருப்பைச் சொல்லும் "*

   திரு. வா. மொ. 4:4:1-36

" கடல்நிறக் கடவுள் - கடல்போலே கண்டார்க்கு ச்ரமஹரமாயாய்த்து வடிவு இருப்பது. கடல் வர்ணத்துக்குப் போலியாம் இத்தனைபோக்கி, அப்ராக்ருத வஸ்துவுக்கு ஒப்பாகமாட்டாதிறே என்கை "

[அப்ராக்ருத வஸ்து - உலகியல் கடந்த பொருள்; ஈண்டுத் தெய்வத்தைக் குறித்தது.] தி. மா. 19 பெ. உரை

(78)

## 179

தஞ்சம் இவர்க்கென் வளையும்நில்லா
நெஞ்சமும் தம்மதே சிந்தித்தேற்கு
வஞ்சி மருங்குல் நெருங்கநோக்கி
வாய்திறந் தொன்று பணித்ததுண்டு
நஞ்சம் உடைத்திவர் நோக்குநோக்கம்
நான்இவர் தம்மை அறியமாட்டேன்
அஞ்சுவன் மற்றிவர் ஆர்கொலென்ன
அட்ட புயகரத் தேன்என்றாரே.

ப. ரை : தஞ்சம் - உறுதியாக, என் வளையும் - என்னுடைய கை வளையல்களும், இவர்க்கு நில்லா - இவர்க்கு உரியனவாகி என்பால் நிற்க மாட்டாவாயின; சிந்தித்தேற்கு - ஆராய்ந்து பார்த்த எனக்கு, நெஞ்சமும் தம்மதே - எனது மனமும் அவருடையதாய் இருந்தது; வஞ்சி மருங்குல் நெருங்க நோக்கி - வஞ்சிக்கொடி போன்ற என்னுடைய இடையானது துவளும்படி ஆழமாகப் பார்த்து, வாய் திறந்து - தமது வாயினைத் திறந்து, பணித்தது ஒன்று உண்டு - கூறியது ஒரு சொல் உண்டு; நோக்கும் நோக்கம் - இவர் பார்க்கும் பார்வையானது, நஞ்சம் உடைத்து - நஞ்சோடு கலந்ததுபோலே இருந்தது; நான் இவர் தம்மை அறியமாட்டேன் - நான் இவரை ஒன்றும் அறிகின்றிலேன்; அஞ்சுவன் - அஞ்சுகின்றேன்; இவர் ஆர்கொல் என்ன, அட்ட புயகரத்தேன் என்றாரே -.

சி. கு : தம்மது என்பது விரித்தல் விகாரம். தாம் என்பதோடு அது என்பது சேரும்போது தமது என்றே ஒற்று இரட்டாமல் வருதல் வேண்டும் என்பது இலக்கணம் (தொல்காப்பியம், தொகை மரபு நூற்பா 19). நோக்கம் - ஊன்றிப் பார்த்தல்.

வியா : ஒன்பதாம் பாட்டு : தஞ்சம் இத்யாதி - நிஸ்சிதமாக இவர்க்கு என் வளை நிற்கிறது இல்லை. இங்கே குடி இருப்பாய் அவர்க்காக

---

வி : ஒன்பதாம் பாட்டு : தஞ்சம் இவர்க்கு என் வளையும் நில்லா - ஒருதலையாக இவர்க்கு உரியனவாய் என் வளையல்கள் என் கையில் நிற்றல்

---

179. 3 : 3 நோக்கு நோக்கும்; நோக்கும் நோக்கம்.

வர்த்திக்கிறனவாய் இருந்தன. **"சைதில்யம்"** இத்யாதி. அவரைப் போலே வளையும் நிற்கிறன இல்லை. இவருடைய பூர்வ வ்ருத்தத்தோடு ஸாம்யம் உண்டா யிற்று இவற்றுக்கும்[1] இருப்பது. **என் வளையும்** - 'என்னுடையவை' என்று ப்ரமித்த அளவேயாய்க் கிட்டினவாறே அவரதாய்[2] இராநின்றது. பாஹ்ய பரிகரங்கள் இப்படியேயானாலும் உள் உண்டானவை தானும் நமக்குத் தொங்குமோ? என்று இருந்தேன். **நெஞ்சமும் தம்மதே சிந்தித்தேற்கு** - **"உற்று எண்ணில் அதுவும் மற்று ஆங்கு அவன் தன்னதே."** ஆபாத ப்ரதீதியில் நம்மது[3] என்று இருந்த இத்தனையாய் **ஆராய்ந்தவாறே** அகவாயில் ஆபரணமும் அவரதாய் இருந்தது. **வஞ்சி இத்யாதி** - பண்டே தொட்டார் மேலே தோஷமாய், "இற்றது, முறிந்தது" என்னும்படியாயிற்று இடைதான் இருப்பது; இதிலே தயை பண்ணாதே இது துவளும்படி நோக்கினான் ஆயிற்று. **வாய் இத்யாதி** - உருவு வெளிப்பாட்டில் சொன்ன வார்த்தை இப்போது என்னால் உங்களுக்குச் சொல்லப் போகாது. அப் போது சொன்ன பாசுரம் கிடக்கச் செய்தேயும் அதர ஸ்புரணத்தில் துவக்கு உண்டமை தோற்ற, "வாய் திறந்து" என்கிறாள். **ஒன்று** - இன்னமும் அவன் சொல்லில் சொல் லும் இத்தனை; என்னால் அது அநுபாஷிக்கப் போகாது. அதுக்குக் கருத்து, இடை

---

*இல்லை. அவற்றிற்கு குடியிருப்பு மட்டும்தான் இங்கே; அவை இருத்தலோ அவர்க்காகவே ஆகும்.* **கையில் உள்ள வளையல்களும் கூட விரைவாகக் கழல்கின் றன"** *(வி. பு. 5:18:29) என்று கூறினார் அன்றோ பிறரும். அந்த நிலையை உற்றன வளையல்கள். அவரைப் போலே வளையல்களும் ஆயின; அஃதாவது இங்கே நிற்பதில்லை. இப்போது அவர் தாம் பிரியமாட்டேன் என்றிருக்கிறாரே, அவரைப் போலே வளையல்கள் இருக்கின்றன என்பது எவ்வாறு பொருந்தும்? என்னில் அவர் முன்னைய நடவடிக்கைகளை ஒத்தனவாய் வளையல்கள் இருக்கின்றன; அஃதாவது தங்காமல் செல்கின்றன என்க*[4]. **என் வளையும்** - *'என்னுடை யவை' என்று யான் கருதியது வெறும் மயக்கமே. அவர் கிட்டியவுடனே அவருடையவை ஆயின. புறத்தே இருந்த பொருள்கள்தாம் இப்படி அவ ருடையவை ஆயின; உள்ளே இருப்பவையேனும் நமக்கு உரியனவாய்த் தொங்குமோ*[5]*? என்று இருந்தேன்.* **நெஞ்சமும் தம்மதே சிந்தித்தேற்கு - "உற்று எண்ணில், அதுவும் மற்று ஆங்கு அவன் தன்னதே"** *(தி. வா. மொ. 7:9:10) மேலெழுந்தவாரியாகப் பார்த்தபோது, நம்முடையதாய் இருந்தது; அம்மட்டே. ஆராய்ந்து பார்த்தபோது, அகவாயில் அணிகலனும் அவருடையதாய் இருந்தது.* **வஞ்சி மருங்குல் நெருங்க நோக்கி** - *முன்பே தொட்டார் மேலே குற்றம் ஆகுமாறு, "இற்றது, முறிந்தது" என்று சொல்லுமாறு இடைதான் இருந்தது. இதன்மீது இரக்கம் கொள்ளாமல் இது துவளும்படி நோக்கினான்.* **வாய் திறந்து ஒன்று பணித்தது உண்டு** - *உருவு வெளிப்பாட்டில் சொன்ன சொல்லை இப்போது என்னால் உங்களுக்குச் சொல்ல இயலாது. அப்போது சொன்ன சொல் ஒரு புறம் இருக்க, அவர் தம் உதடுகளின் துடிப்பில் துவக்குண்டமை தோற்ற, "வாய் திறந்து" என்கிறாள்.* **ஒன்று** - *அச் சொல்லை இன்னமும் அவன் சொன்னால் சொல்லல் ஆகும்; என்னால் அதனைத் திரியவும்*[6] *சொல்ல இயலாது; இப்படிச் சொல்*

---

1. இவைத்துக்கும். 2. அவருதாய். 3. நம்முது.

4. இதற்கு இவ்வாறன்றி ஆழ்வாருடைய முன்னைய நடவடிக்கைகள் கழல்வது போல வளையல்களும் கழல்கின்றன என்றும் பொருள் கூறலாம். 5. தொங்குதல் - இருத்தல். 6. திரியவும் - மறுபடியும்.

ஓடிவது போலே இராநின்றது, ஓடியாதபடி என் தோளாலே அணைப்பேனோ? என்று போலே.

**நஞ்சம் இத்யாதி** - இவர் பார்க்கிற பார்வை, விபாகத்தில் நம்மை முடிக்கும் போலே இராநின்றது. சொன்ன வார்த்தையை க்ரயம் செலுத்துவாரைப் போலே இராநின்றார். அதொரு உக்தி மாத்ரம் ஆகாமே அத்தை அர்த்த க்ரியாகாரி ஆக்க[1] நினைக்கிறாப் போலே இராநின்றது. **நான் இத்யாதி** - இவர் ரக்ஷகராய் இருக்கிறாரோ? நம்மை முடித்தே விட இருக்கிறாரோ? அறிகிலேன். **அஞ்சுவன்** - இவர் சொல்லுகிற வார்த்தைதான் பொல்லாது அல்லவிறே; ஆகிலும் அவரையும் நம்மையும் பார்த்தவாறே அஞ்சாநின்றேன். அப் பெரியவனுக்கு இவ்ஆற்றாமை உண்டாகக் கூடுமோ? என்று அஞ்சாநின்றேன்; இவர் ஆர்தான்? என்ன, **அட்ட புயகரம்** - ஒரு வசநம் கொண்டு ஈஶ்வரன் என்று அஞ்ச வேண்டா; நீ அஞ்சாமைக்கு உன்னோடு ஸஜாதீயனாய் வந்து நிற்கிறவன் அன்றோ நான் என்றார்.

---

*வதற்குக் கருத்து, "இடை ஓடிவதுபோலே இருக்கிறது, அவ்இடை ஓடியாதபடி என் தோளாலே அணைக்கட்டுமா?" என்று சொன்னார் போலும்!*

நஞ்சம் உடைத்து இவர் நோக்கும் நோக்கம் - *இவர் பார்க்கும் பார்வை இறுதியில் நம்மை முடிப்பது போலே இருந்தது. சொன்ன சொல்லை நிறைவேற்றுவாரைப் போலே இருந்தார். அஃதாவது முன்பு தாம் சொன்ன சொல்லை வெறும் பேச்சளவில் இருப்பதாக ஆக்காமல் செயற்படுத்திப் பொருள் உடையதாக ஆக்க நினைப்பாரைப் போலே இருந்தார்.* நான் இவர் தம்மை அறிய மாட்டேன் - *இவர் நம்மைக் காப்பாற்றக் கருதியுள்ளாரா? நம்மை முடித்துவிடுவதற்கே கருதியிருக்கிறாரா? அறிகிலேன்.* அஞ்சுவன் - *இவர் சொல்லும் வார்த்தையும் பொல்லாதது அன்று; ஆனாலும் அவரையும் நம்மையும் பார்த்தவுடன் அஞ்சுகிறேன். அப்பெரியவருக்கு இவ் ஆற்றாமை உண்டாகக் கூடுமோ? என்று அஞ்சினேன்; இவர் யாரோ? என்ன,* அட்ட புயகரத்தேன் - *ஒரு சொல்லைக் கொண்டு இறைவன் என்று அஞ்ச வேண்டா; நீ அஞ்சாது இருப்பதற்கு உன்னோடு உன் இனத்தில் ஒருவனாய் நிற்பவன் அன்றோ நான் என்கிறார்.*

### ஒப்புமைப் பகுதி

**வளைகள் நில்லா**

> *" வெள்வளை மேகலை கழன்று வீழ - சங்குவளை. விரஹகார்ச்யத்தாலே வெள்வளைகளும் மேகலைகளும் கழன்று விடும்படியாகவும், பிறர் அறியாதபடி பலகாலும் எடுத்திடுவது பேணுவது ஆனாலும், அவை நிராச்ரயமாக நில்லாவிறே; ஆகாசத்திலே தொங்காதே; அப்படிகாணும் உடம்பு க்ருசமானபடி "* *தி. வா. மொ. 10:3:7-36*
>
> *[விரஹ கார்ச்யம் - பிரிவால் நேர்ந்த இளைப்பு. நிராச்ரயம் - பற்றுக்கோடு இன்மை. க்ருசம் - மெலிவு.]* *(79)*

---

1. ஆக்கி.

**மன்னவன் தொண்டையர் கோன்வணங்கும்**
**நீண்முடி மாலை வயிரமேகன்**
**தன்வலி தன்புகழ் சூழ்ந்தகச்சி**
**அட்ட புயகரத் தாதிதன்னைக்**
**கன்னிநன் மாமதிள் மங்கைவேந்தன்**
**காமரு சீர்க்கலி கன்றிகுன்றா**
**இன்னிசை யால்சொன்ன செஞ்சொல்மாலை**
**ஏத்தவல் லார்க்கிடம் வைகுந்தமே!**

ப. ரை : **மன்னன் தொண்டையர் கோன் வயிரமேகன்** - *அரசனும் தொண்டைநாட்டுத் தலைவனும் ஆன* **வயிரமேகன்** என்பவனாலே, **வணங்கும்** - வணங்கப்படும், **நீண் முடி மாலை** - *நீண்ட மகுடத்தையுடைய பெருமானாகவும்,* **தன் வலி தன் புகழ் சூழ்ந்த கச்சி** - *அம்மன்னனுடைய மிடுக்காலும் புகழாலும் சூழப்பட்ட கச்சிநகரில்,* **அட்ட புயகரத்து** - திருவட்ட புயகரத்திலே எழுந்தருளி யிருக்கும், **ஆதிதன்னை** - *முதல்வனாகவும் உள்ளவனைக் குறித்து,* **கன்னி நன் மாமதிள் மங்கை வேந்தன்** - ஒருவராலும் கைப்பற்றப்படாத நல்ல பெரிய மதிளாலே சூழப்பட்ட திருமங்கைக்கு அரசன் ஆகிய, **காமரு சீர்க் கலிகன்றி** - விரும்பத்தக்க குணங்களையுடைய கலிகன்றி ஆகிய ஆழ்வார், **சொன்ன செஞ்சொல் மாலை** - *அருளிய அழகிய இச்சொல் மாலையைக் கொண்டு,* **ஏத்த வல்லார்க்கு** - *பெருமானை வணங்க வல்லவர்க்கு,* **இடம் வைகுந்தம்** - இருப்பிடம் வைகுந்தம் ஆகும்.

சி. கு : *'மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும் நீள் முடி மாலை வயிரமேகன்* **என்பதனோடு** *பேரா. மு. இராகவையங்கார் காட்டியுள்ள,* **"***ப்ரணா தாவநிபதி மகுட மாலிகாலீட சரணாரவிந்தः***"** **(***"வணங்கும் மன்னர்தம் முடிமாலை களால் தழுவப்பெற்ற பாத தாமரைகளை உடையவன்"***) என்னும் சாசனக் குறிப்பு ஒப்புநோக்கத்தக்கது. கன்னி** *மாமதிள்* **-** *மதிளுக்குக் கன்னித்தன்மையாவது பகைவர் கைப்படாமை. தொண்டையர் கோன் - பொதுப்பெயர்; வயிரமேகன் - சிறப்புப்பெயர்.*

வியா : **பத்தாம் பாட்டு : மன்னவன் இத்யாதி** - ராஜா தொண்டை மான் சக்ரவர்த்தி; அவன் பக்நாபிமாநியாய் வணங்கின பின்பு **ஆயிற்று** ஈஶ்வரன் முடி நல்தரித்ததும் ஸர்வேஶ்வரத்வம் நிலை நின்றதும். முன்பு எல்லாம் ஈரரசுபட்டிறே போந்தது. **வயிரமேகன்** - வயிரமேகன் என்று அவற்குப் பேர். **தன்வலி** -

---

வி : பத்தாம் பாட்டு : **மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும் நீண் முடி மாலை** - *அரசன் தொண்டைமான்; அவன் செருக்குக் குலைந்தவனாய் வணங்கிய பின்பே இறைவனுக்குத் திருமுடி தலையில் நன்கு தங்கியது; அத்துடன் யாவர்க்கும் தலைவனாய் இருக்கும் அவனது தன்மையும் நிலைநின்றது. முன்பு எல்லாம் வணக்கம் ஈரரசுபட்டுப் போந்தது*[1]. **வயிரமேகன்** - *வயிரமேகன் என்பது*

---

1. ஈரரசுபட்டுப் போதல் - இரண்டு மன்னர்களுக்கு உரியதாய்ப் போதல். அஃதாவது தொண்டை மான் வயிரமேகனுக்கும், பெருமாளுக்குமாக இருவர்க்கும் உரியதாய் இருந்தது. இப்போது வயிரமேகனே பெருமானை வணங்கியதால் மக்களும் பெருமானையே வணங்கினர். ஆகவே வணக்கம் ஒருவனுக்கு உரிய தாயிற்று.

எதிரிகளை அழியச் செய்கைக்கு ஈடான அவன் மிடுக்கும், ரக்ஷணத்தால் வந்த புகழும் விஞ்சி ஆயிற்று இருப்பது. திருஅட்ட புயகரத்தில் நிற்கிற ஜகத் காரண பூதனைக் கவி பாடிற்று. **கன்னி இத்யாதி** - அரணாகப் போரும்படியாய், புதிசாய்[1] இருக்கிற மதிளையுடைய[2] திருமங்கையில் உள்ளார்க்கு ப்ரதாநராய் எல்லார்க்கும் ஸ்ப்ருஹை பண்ண வேண்டும்படியான ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியையுடைய ஆழ்வார். **குன்றா** - தான் குறையக் கடவது அன்றிக்கே, கேட்டார் செவிக்கும் ஆகர்ஷகம் ஆம்படியான இசையை உடைத்தாய், ஆஶ்ரயந்தான் செவ்விதாய் இருக்கிற இவற்றைக்[3] கொண்டு. **ஏத்த வல்லார்க்கு இடம் வைகுந்தமே** - உருவு வெளிப் பாட்டாலே அநுபவித்துப் பிறர்க்கு இருந்து சொல்ல வேண்டாதே, "**தேவைஸ் ஸத மாதம் மதேம**" என்கிறபடியே நித்யாநுபவம் பண்ணிக் களிக்கலாம் தேசத்திலே புகப்பெறுவர்.

---

*அவனுக்குப் பேர்.* **தன்வலி தன்புகழ் சூழ்ந்த கச்சி அட்ட புயகரத்து ஆதிதன்னை** - *எதிரிகளை அழியச் செய்வதற்கு உரிய அவன் மிடுக்கும், மக்களைக் காக்கும் தன்மையால் வந்த புகழும் விஞ்சி இருந்தன. அக்கச்சியில் திருஅட்ட புயகரத்தில் நிற்கும் உலகத்திற்கு வேர்ப்பற்றாக இருப்பவனைப் பாடியுள்ளார்.* **கன்னி நன் மாமதிள் மங்கை வேந்தன் காமரு சீர்க் கலிகன்றி** - *அரணாக அமையும் படியாய்ப் புதிதாய் இருக்கும் மதிளை உடையது திருமங்கை. அங்கு உள்ளார்க்குத் தலைவராய் இருப்பவர் ஆழ்வார். மேலும் எல்லாராலும் விரும்பத்தக்க சீரார் வைணவத் திரு நிறைந்தவர்.* **குன்றா இன்னிசையால் சொன்ன செஞ் சொல் மாலை** - *தான் குறையாமல் இருப்பதோடு கேட்டார் செவியையும் துவக்கவல்ல இசையினை உடையதாய், இசைக்கு இடமான பாட்டும் செவ்விதாய் இருக்கும் இவற்றைக் கொண்டு.* **ஏத்த வல்லார்க்கு இடம் வைகுந்தமே** - *உருவெளிப்பாட்டாலே நுகர்ந்து பிறர்க்கு இருந்து சொல்ல வேண்டாதவண்ணம்,* "**தேவர்களோடு ஒருகோவையாகிக் களிப்புறுவோம்**" *(யஜுர் வேதம்) என்று சொல்லும் வகையில் என்றும் திளைத்துக் களிக்கலாம் திருநாட்டிலே புகப்பெறுவர்.*

**ஒப்புமைப் பகுதி**

நீண்முடி மால்

"*நீள்முடி - ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகம்*"

*தி. வா. மொ. 2:5:4-36*

*[ஆதிராஜ்ய ஸூசகம் - பெருவேந்து என்பதற்கு அடையாளம். அபிஷேகம் - முடி.]*

"*பெருநீண்முடி - நித்யஸித்தமான உபயவிபூதிக்கும் கவித்த முடி*"

*தி. வா. மொ. 6:9:8-36*

*[நித்யஸித்தம் - என்றும் உள்ளது. உபயவிபூதி - விண்ணும் மண்ணும் ஆகிய நாடுகள்.]*

"*நீண்முடியன் - உபயவிபூதிக்கும் நிர்வாஹகன் என்று தோற்றும்படி இருக்கிற திருவபிஷேகத்தை உடையவன். ரக்ஷ்யவர்க்கத்தை நோக்கி னாலிறே ரக்ஷகன் முடி தரிப்பது*" *அம. 2 பெ. உரை.*

*[ரக்ஷ்யவர்க்கம் - காக்கப்படும் தொகுதி. ரக்ஷகன் - காப்பவன்.]* (80)

---

1. புதிகாய். 2. மதிலையுடைய. 3. இவைத்தை.

## இரண்டாம் பத்து - ஒன்பதாம் திருமொழி - சொல்லு

பிர : "மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும் நீண் முடி மாலை" என்று தொண்டைமான் சக்ரவர்த்தி திருஅட்ட புயகரத்திலே அநுகூலித்த படியை அநுஸந்தித்தார். அந்த ப்ரஸங்கத்தாலே 'பல்லவன்' என்பான் ஒருத்தன் பரமேஶ்வர விண்ணகரத்திலே அதிமாத்ரமான ஆநுகூல்யங்களைப் பண்ணி ஒரோ ஒன்றை எடுத்து அது ஆயிரம் ஆம்படி பண்ணினான் ஆயிற்று. பின்பு சோழன் கண்டு அது தான் பொறுக்க மாட்டாமையாலே அவைதன்னை அமைத்த இத்தனை. இனித் தான் பகவத் விஷயத்தில் ஓர் அடி வர நின்றார் தமக்கு உத்தேஶ்யராகவிறே இவர் நினைத்திருப்பது; அத்தாலே அவன் படிகள் எல்லாம் தமக்கு இனிதாய் இருக்கையாலே அவற்றை[1] அநுபவித்துப் பேசுகிறார்.

---

தோ : "மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும் நீண் முடி மாலை" என்று தொண்டையர் பெருவேந்தன் திருஅட்ட புயகரத்திலே உகந்து செய்த திருப்பணிகளை எண்ணினார். அதன் அடியாக எழுந்த நினைவாலே, 'பல்லவன்' என்பான் ஒருவனை நினைவு கூர்ந்தார்; அவன் பரமேச்சுர விண்ணகரத்திலே பெரும் நற்பணிகளைச் செய்தான்; அணிகலன்களை எல்லாம் ஒன்றை ஆயிரமாகப் பெருக்கினான். பின்பு சோழன் அவற்றைக் கண்டு பொறுக்க மாட்டாமல் அவற்றைச் சேமத்திலே வைத்தான். இறைவனைக் குறித்து ஓர் அடி எடுத்து வைத்து முன் நின்றாரைத் தமக்குக் கருதத்தக்காராக நினைத்திருப்பவர் இவர்; அதனாலே, அவன் தன்மைகள் எல்லாம் தமக்கு இனியவாய் இருத்தலால் அவற்றை நினைந்து மகிழ்ந்து பேசுகிறார்.

### 181

சொல்லுவன் சொற்பொருள் தான்அவை யாய்ச்சுவை
ஊறொலி நாற்றமும் தோற்றமுமாய்
நல்லரன் நாரணன் நான்முக னுக்கிடம்
தான்தடம் சூழ்ந்தழ காயகச்சிப்
பல்லவன் வில்லவன் என்றுல கில்பல
ராய்ப்பல வேந்தர்வ ணங்குகழல்
பல்லவன் மல்லையர் கோன்பணிந் தபர
மேச்சுர விண்ணக ரம்மதுவே.

ப. ரை : சொல்லு - சொற்கள், வன் சொல் - யாண்டும் நிற்பவையான வலிய வேதங்கள், பொருள் - வேதம் உரைக்கும் பொருள், அவை தானாய் - ஆகிய அவற்றுக்குத் தலைவனாய், சுவை ஊறு ஒலி நாற்றமும் தோற்றமுமாய் - சுவை, ஊறு, ஒலி, மணம், வடிவம் ஆகிய ஐம்புல இன்பங்களும் தானாய், நல் அரன் நாரணன் நான்முகனுக்கு - நல்ல உருத்திரனுக்கு உள்ளுறைபவனாய் இருந்தும்,

---

1. அவைத்தை.

181. 2 : 2 - 4 நான்முகன் நாரண னுக்கிடம்.

தானான தன்மையாலும், பிரமனுக்கு உள்ளுறைபவனாய் இருந்தும் உலகினை நடத்துபவன் ஆகிய பெருமானுக்கு, **இடம்தான்** - உறைவிடமாய் இருப்பது, **தடம் சூழ்ந்து அழகாய கச்சி** - தடாகங்களாலே சூழப் பெற்று அழகு பொலிந்த காஞ்சி நகரிலே, **பல்லவன் வில்லவன் என்று பலராய்ப் பல வேந்தர்** - பல்லவன் என்றும் வில்லவன் என்றும் பல பெயர்களாலே சொல்லக் கூடிய அரசர் பலராலே, **வணங்கு கழல்** - வணங்கப்படும் வீரக் கழல்களை உடையவனும், **மல்லையர் கோன்** - திருக்கடல் மல்லையில் உள்ளவர்களுக்கு அரசனும் ஆகிய, **பல்லவன் பணிந்த** - பல்லவ மன்னன் வணங்கிய, **பரமேச்சுர விண்ணகரம் அது** - பரமேச்சுர விண்ணகரம் ஆகும்.

**சி. கு :** சொல்லு - சொல்; உகரம் சாரியை; சொல்லுவன் என்று ஒரு சொல்லாகக் கொள்வதும் தகும்; சொல்லுவேன் என்பது பொருளாம். பரமேச்சுர விண்ணகரம் - இத்திருக்கோயில் காஞ்சியில் உள்ளது. இன்று வைகுண்டப் பெருமாள் கோயில் என்று குறிக்கப்பெறுகிறது. பெருமான் பரமபதநாதன்; பெருமாட்டி வைகுந்தவல்லி.

இத்திருமொழி முதலில் ஆறு விளமும், ஈற்றில் ஒரு காயும் பெற்றுவரும் எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

வியா : **முதற் பாட்டு** : **சொல்லு** - ப்ரத்யக்ஷாதிகளுக்கு அவிஷயமான அர்த்தத்தையும் சொல்லக்கடவதான சப்தம். **வன் சொல்** - இது தன்னிலும் நித்ய மான வேதம். **பொருள்** - துர்அவகாஹமான வேதார்த்தம். **தான் அவையாய்** - அவற்றுக்கு[1] நிர்வாஹகனாய். **சுவை இத்யாதி** - அதில் சொல்லுகிற புருஷார்த் தங்களில் ஐஶ்வர்யத்தை அபேக்ஷித்து இருப்பார்க்கு உபாதேயமான சப்தாதிகளுக்கு நிர்வாஹகனாய். **சுவை இத்யாதி** - ரஸம், ஸ்பர்சம், சப்தம், கந்தம், சக்ஷுர் விஷய மான ரூபம்.

**நல் அரன் இத்யாதி** - முமுக்ஷுக்களுக்கு உபாஸ்ய வஸ்துவான ஜகஜ் ஜந்மாதி ஹேதுவும் தானே என்கிறது. **நல் அரன்** - தாம் தாம் கர்மத்தாலே

---

வி : முதற்பாட்டு : **சொல்லு** - காட்சி முதலானவற்றிற்குப் புலப்படாத பொருள்களையும் சொல்லக்கூடிய அறநூல்கள், இதிகாசங்கள், புராணங்கள் ஆகிய சொற்கள். **வன் சொல்** - இவற்றைக் காட்டிலும் நிலைத்த வேதம். **பொருள்** தரைகாண ஒண்ணாத[2] வேதப் பொருள். **தான் அவை ஆய்** - ஆகியவற்றிற்குத் தலைவனாய். **சுவை ஊறு ஒலி நாற்றமும் தோற்றமுமாய்** - அவ்வேதத்தில் சொல் லப்படும் உறுதிப்பொருள்களில் இம்மைச் செல்வத்தை விழைந்திருப்பார்க்குக் கொள்ளத்தக்க சுவை முதலான ஐம்புலன்களையும் நடத்துபவனாய். **சுவை ஊறு ஒலி நாற்றமும் தோற்றமுமாய்** - சுவை, ஊறு, ஓசை, மணம், கண்ணால் காணக் கூடிய வடிவம் என்பன.

**நல் அரன் நாரணன் நான்முகனுக்கு இடம்தான்** - வீடுபேறு விழை வார்க்கு இடையறாது நினைத்தற்கு உரியவனும் உலகத்தோற்றம் முதலிய

---

1. அவைத்துக்கு.
2. தரை காண ஒண்ணாமை - ஆழம்காண முடியாமை.

க்லேசப்படுகிற ப்ராணிகளை, தீம்பிலே கைவளர்ந்த ப்ரஜையைக் காலிலும் கழுத்திலும் விலங்கிட்டு வைக்கும் பித்ராதிகளைப் போலே, இவற்றுக்கு[1] ஹித ரூபமாக உபஸம்ஹாரத்தைப் பண்ணும் ருத்ரனுக்கு அந்தர்யாமியாயும், ஸ்வேந ரூபேண நின்று பாலநத்தைப் பண்ணியும், "த்வாம் ஆவிஶ்ய ப்ரஜாபதே" என்கிறபடியே ப்ரஹ்மாவுக்கு[2] அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டித்தும் போருகிற ஸர்வேஶ்வரனுக்கு வாஸ ஸ்தாநம் ஆகிறது.

**தடம் இத்யாதி** - நல்ல நீர்நிலம் சூழ்ந்து அழகிதாய் இருக்கிற கச்சியில். **பல்லவன்** - பல்லவன் என்றும் வில்லவன் என்றும் சில ராஜாக்கள் உண்டு ஆயிற்று அக்காலத்திலே; அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் அடைய வணங்கும் கழலை உடையனாய் இருக்கும் ஆயிற்று அவன். **மல்லையர் இத்யாதி** - திருக்கடல் மல்லை ஆயிற்றுப் படைவீடு; அவன் ஆஶ்ரயிக்கிற பரமேஶ்வர விண்ணகரம்.

---

*வற்றிற்கு அடியாய் இருப்பவனும் அவனே என்று சொல்லப்படுகிறது.* **நல் அரன்** - *தீம்பிலே கைவளர்ந்த[3] குழந்தையைக் காலிலும் கழுத்திலும் விலங்கிட்டு வைக்கும் பெற்றோர்களைப் போலே தத்தம் போக்கிலே நோவுபடுபவர்களை, இந் நோவுபாடுகள் நீங்கும்வண்ணம் அழிக்கிறான் உருத்திரன்; அவ் உருத்திரனுக்கு உள்ளுறைபவன் ஆகியும், தானான தன்மையில் நின்று காத்தும்,* **"ஏ பிரமனே உன்னை அடைந்து"** *என்பதற்கு ஏற்ப, நான்முகனுக்கு உள்ளுறைபவனாய் நின்று படைத்தும் வருகின்றான் பெருமான். அவனுக்கு உறையும் இடமாவது:*

**தடம் சூழ்ந்து அழகாய கச்சி** - *நல்ல நீர்நிலம் சூழ்ந்து அழகியதாய் இருக்கும் கச்சியில்.* **பல்லவன் வில்லவன் என்று உலகில் பலராய்ப் பல வேந்தர் வணங்கு கழல் பல்லவன்** - *பல்லவன் என்றும், வில்லவன் என்றும் அரசர் சிலர் இருந்தனர் அக் காலத்திலே; அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் அடைய[4] வணங்கும் கழலை உடையவனாய் இருந்தான் அவன்.* **மல்லையர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே** - *அவனுக்குத் திருக்கடல் மல்லை படைவீடு[5] ஆகும். அவன் வணங்கும் பரமேச்சுர விண்ணகரம்.*

## ஒப்புமைப் பகுதி

1. **நல்லரன்**

> *" முக்கண்ணப்பா - ஸ்ருஷ்டியிலும் உபகாரமிறே ஸம்ஹாரம். நாலு நாள் கழித்து ஸ்ருஷ்டிக்கிலும் ஸத்தை கிடக்கும். சடக்கென ஸம்ஹரியாவிடில் ஸத்தை இழக்கவேண்டும்படி தீம்பிலேயாய்த்துக் கைவளர்வது. எங்ஙனே? என்னில், தந்தாம் கையைக் கொண்டு கண்ணைக் கலக்கிக் கொள்வாரைப் போலே, ஸ்ருஷ்டித்த ஸ்ருஷ்டி பேற்றுக்கு உடலன்றியே தீம்புக்கு உடலானவாறே, சிறு ப்ரஜைகளைக் கையிலும் காலிலும் விலங்கிட்டு ரக்ஷிக்கும் மாதா பிதாக்களைப் போலே, கரணகளேபர*

---

1. இவைத்துக்கு. 2. ப்ரஜாபதிக்கு.
3. கைவளர்தல் - விஞ்சியிருத்தல். 4. அடைய - முற்றிலும். 5. படைவீடு - நகரம்.

விதுரமாக்கி ஸம்ஹரித்திட்டுவைக்கையும் உபகாரமாய் இருக்கிறபடி, 'ததா - ஸம்ஹாரக:' என்கிறபடியே "

தி. வா. மொ. 10:10:1-36

[ஸத்தை - உளதாம் தன்மை. கரணகளேபர விதுரமாக்குதல் - உடலுறுப்புகள், உடல் ஆகியவற்றைக் கழித்தல்.]

**2. நான்முகன்**

" நான்முகனே - அண்ட ஸ்ருஷ்டியளவும் தானே பண்ணி இவ்வருகுண்டான தேவாதி ஸ்ருஷ்டிகளைப் பண்ணுகைக்காக ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டித்தவனே! 'நான்முகனே' என்கிற இது விசேஷணமான சதுர்முகன் அளவிலே பர்யவஸிக்கிறது அன்று; அவனுக்கு அந்தர்யாமியான அவன் அளவும் சொல்லுகிறது, மனுஷ்ய சப்தம் தச்சரீரியளவும் சொல்லுகிறாப் போலே. சேதனன் ஸ்வசரீரத்தைக் கொண்டு தன் நினைவாலே கமநாகமநாதி சேஷ்டிதங்களைப் பண்ணுமா போலே பண்ணுகிறான் ஸர்வேச்வரனே "

தி. வா. மொ. 10:10:1-36

[விசேஷணம் - (இறைவனுக்குப்) படியான, அடையான. பர்யவஸித்தல் - தலைக்கட்டுதல், முடிதல். சப்தம் - சொல். தச்சரீரி - அதன் உயிர். கமநாகமநாதி சேஷ்டிதங்கள் - நடத்தல், நடவாமை முதலான செயல்கள்.] (81)

## 182

**கார்மன்னு நீள்விசும் பும்கட லும்சுட**
**ரும்நில னும்மலை யுந்தனுந்தித்**
**தார்மன்னு தாமரைக் கண்ணனி டம்தட**
**மாமதிள் சூழ்ந்தழ காயகச்சித்**
**தேர்மன்னு தென்னவ னைம்முனை யிற்செரு**
**வில்திறல் வாட்டிய திண்சிலையோன்**
**பார்மன்னு பல்லவர் கோன்பணிந் தபர**
**மேச்சுர விண்ணக ரம்மதுவே.**

ப. ரை: **கார் மன்னு நீள் விசும்பும்** - மேகங்கள் பொருந்திய பெரிய வானமும், **கடலும்** - கடல்களும், **சுடரும்** - ஞாயிறு, திங்கள் என்னும் சுடர்களும், **நிலனும்** - மண்ணுலகமும், **மலையும்** - குலமலைகளும், **தன் உந்தித்தார் மன்னு** - தனது கொப்பூழ் ஆகிய தாமரையிலிருந்து உண்டாகப்பெற்ற, **தாமரைக் கண்ணன் இடம்** - தாமரை போலும் கண்ணை உடையவனுக்கு இருப்பிடமாவது, **தட மாமதிள் சூழ்ந்து அழகாய கச்சி** - தடாகங்களாலும், பெரிய மதிள்களாலும் சூழப்பட்டு அழகுபெற்ற காஞ்சிநகரிலே, **தேர் மன்னு தென்னவனை** - தேரில் பொருந்தி நின்ற பாண்டியனை, **செருவில் முனையில்** - போர் முகத்தில், **திறல் வாட்டிய திண் சிலையோன்** - மிடுக்கை அழித்த வலிய வில்லை உடையவன் ஆகிய, **பார் மன்னு பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே**-.

**சி. கு :** *முனையில் செருவில் என்பதனைச் செருமுனையில் '*என்று கூட்டுக*. தார் - மலர்.*

**வியா : இரண்டாம் பாட்டு : கார் இத்யாதி - சக்ரவர்த்தித்திருமகன்[1]** ராவணவதம் பண்ணினதோடு இவன் சத்ரு வதம் பண்ணினத்தோடு வாசி அற்று இருக்கிறது ஆயிற்று இவருடைய ஆதரம்.

**கார் இத்யாதி** - மேகங்கள் ஸஞ்சரிக்கிற ஆகாசமும், அவ்ஆகாசவர்த்தி களான சந்த்ர ஸூர்யர்களும், பூமியைச் சூழ்ந்த கடலும், அதுக்கு உட்பட்ட பூமியும், அதுக்கு ஆணி அடித்தாப் போலே இருக்கிற மலையும், இவை அடையத் திருநாபீ கமலத்திலே உண்டாம்படி இருக்கிற புண்டரீகாக்ஷனுக்கு வாஸ ஸ்தாநம். தடாகங் களாலும் மதிள்களாலும் சூழ்ந்து[2] தர்சநீயமான கச்சியில். **தேர் இத்யாதி** - மஹா ரதனாய்த் தேரிலே ஏறிப்போகக் கடவனாய் இருக்கிற பாண்ட்யனை[3]. **செருவில்** - யுத்தத்தில். **முனையில்** - தூசித்தலையிலே. **திறல் வாட்டிய திண் சிலை யோன்** - மிடுக்கை அழித்த திண்ணிய வில் வலியை உடையவன். **பார் இத்யாதி** - தான் இல்லையானாலும் தன்னுடைய ஸ்ரீ[4] நிற்கும்படி வாழ்ந்தவன்.

---

**வி :** இரண்டாம் பாட்டு : **கார் மன்னு நீள் விசும்பும் கடலும் சுடரும் நிலனும் மலையும் தன் உந்தித் தார் மன்னு தாமரைக் கண்ணன் இடம்** - சக்கரவர்த்தித் திருமகன் இராவணனை வீழ்த்தியதும், இப்பல்லவன் பகைவனை வீழ்த்தியதும் இவருக்கு அன்பு மிகுதியால் வேற்றுமை அற்று ஒன்றாக இருக்கின்றன.

*மேகங்கள் திரியும் வானமும், அவ்வானில் இயங்கும் ஞாயிறு திங்களும், நிலத்தைச் சூழ்ந்த கடலும், அதற்கு உட்பட்ட மண்ணுலகும், அதற்கு ஆணி அடித்தாற் போலே இருக்கும் மலையும், இவை அடையத் திருவுந்தித் தாமரையிலே உண்டாகுமாறு இருக்கும் செந்தாமரைக் கண்ணனுக்கு இருப்பிடம்.* **தட மாமதிள் சூழ்ந்து அழகாய கச்சி** - *நீர்நிலைகளாலும் மதிள்களாலும் சூழ்ந்து காட்சிக்கு இனிதாய் இருக்கும் கச்சியில்.* **தேர் மன்னு தென்னவனை** - *மாரதவீரனாய்த்*[5] தேரிலே *ஏறிப் போகக்கூடிய பாண்டியனை.* **செருவில்** - *போரில்.* **முனையில் திறல் வாட்டிய திண் சிலையோன்** - *தூசித் தலையிலே*[6], *மிடுக்கை அழித்த திண்ணிய* வில்வலியை *உடையவன்.* **பார் மன்னு பல்லவர் கோன்** - *தான் இல்லையானாலும் தன்னுடைய வீரத்திரு நிற்கும்படி வாழ்ந்தவன்.* **பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே**-.

### ஒப்புமைப் பகுதி

**விசும்பு, கடல், சுடர், நிலம், மலை ஆகியவற்றைச் சொற்பெய்து விளக்குதல்**

> *" அகல்விசும்பு - ஸ்வேதர ஸமஸ்தத்துக்கும் அவகாச ப்ரதாநம் பண்ணும் ஆகாசம் "*
> *தி. வா. மொ. 3:6:5-24*
>
> *[ஸ்வேதர ஸமஸ்தம் - தன்னொழிந்த எல்லாப் பொருள்கள். அவகாச ப்ரதாநம் - இடம் அளித்தல்.]*

---

1. சக்கரவர்த்தி திருமகன். 2. சூழ்ந்த. 3. பாண்டியனை. 4. வீரஸ்ரீ.

5. மாரதவீரர்-தேர்வீரர்கள் அதிரதர், மாரதர், சமரதர், அர்த்தரதர் என்று நால்வகையினர். அவர்களுள் தமக்குத் துணையின்றித் தேரில் நின்று தம் படைகளுக்கு அழிவு வாராமல் காத்துக்கொண்டு பதினோராயிரம் தேர் வீரர்களோடு பொருபவர் மாரதர் எனப்படுவர். 6. தூசித் தலை - போர்முகப்பு.

கடல்

*" கடலும் - பூமிக்கு ரக்ஷகமான ஸமுத்திரங்களும் "*
*பெரி. தி. 1:2:18 ம. மா. மு. உரை.*

சுடர்

*" இருசுடர் - ப்ரகாசகரான சந்த்ர ஸூர்யர்கள் " தி. வா. மொ. 3:6:5-24*

நிலம்

*" மண்ணும் - ஸர்வாதாரமான பூமியும் "*
*பெரி. தி. 1:2:18 ம. மா. மு. உரை.*
*" மண்ணும் - ஸர்வாதாரையான பூமியும் "*
*பெரி. தி. 4:1:9 ம. மா மு. உரை.*

மலை

*" மலையும் - பூமிக்கு ஆதாரமான பர்வதங்களும் "*
*பெரி. தி. 1:2:18 ம. மா. மு. உரை.*
*(82)*

## 183

**உரம்தரு மெல்அணைப் பள்ளிகொண் டான்ஒரு**
**கால்முன்னம் மாஉரு வாய்க்கடலுள்**
**வரம்தரு மாமணி வண்ணனி டம்மணி**
**மாடங்கள் சூழ்ந்தழ காயகச்சி**
**நிரந்தவர் மண்ணையில் புண்நுகர் வேல்நெடு**
**வாயிலு கச்செரு வில்முனநாள்**
**பரந்தவன் பல்லவர் கோன்பணிந் தபர**
**மேச்சுர விண்ணக ரம்மதுவே.**

ப. ரை : முன்னம் ஒரு கால் - *முன்பு ஒரு நாளிலே,* மா உருவாய் - *அழகிய வடிவை உடையவனாய்,* கடலுள் - *திருப்பாற்கடலிலே,* உரம் தரு மெல் அணைப் பள்ளிகொண்டான் - *வலிமையையுடைய மென்மையான பாம்பு அணையிலே கண் வளர்ந்தருளியவனும்,* வரம் தரு - *எல்லாருடைய விழைவுகளையும் நிறைவு செய்யும்,* மாமணி வண்ணன் - *சிந்தாமணி போலும் தன்மையை உடையவனுமான பெருமானுக்கு,* இடம் - *இருப்பிடமாவது,* மணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி - *ஒளி மணிகள் பொருந்திய மாடங்களாலே சூழப்பட்டு அழகு பெற்ற காஞ்சிநகரிலே,* மண்ணையில் நிரந்தவர் - *மண்ணை என்னும் நகரத்தில் உள்ள பகைவர்கள்,* புண் நுகர் வேல் - *தசையை உண்ணும் வேலின்,* நெடு வாயில் உக - *நெடிய வாயிலே விழுந்து முடியும்படியாக,* முன நாள் - *முன்பு,* செருவில் பரந்தவன் - *போர்க்களத்தில் நிறைந்திருந்தவன் ஆகிய,* பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே-.

சி. கு : *உரம் - வலிமை. முன நாள் - முன் நாள்.*

வியா : மூன்றாம் பாட்டு : **உரம் இத்யாதி** - **"ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைக தாமநி"** என்கிறபடியே பிராட்டிமாரும் தானும் கூட ஏறித் துகையா நின்றால் பொறுக்கைக்கு ஈடான தாரண ஸாமர்த்யத்தையும், வேண்டிய இடங்களிலே திருவுள்ளக் கருத்தறிந்து குழைந்து கொடுக்கைக்கு[1] ஈடான மென்மையையுமுடைய திருவநந்தாழ்வான்மேலே, முன்பு ஒரு நாளிலே ஶ்லாக்யமான வடிவை உடையனாய்க்கொண்டு கடலிலே கண்வளர்ந்தருளினான். **வரம் இத்யாதி** - அருளாளப் பெருமாளாய் நின்று ஸர்வாபேக்ஷிதங்களையும் தருகிறவனுக்கு வாஸ ஸ்தாநம்.

ரத்ந மயமான மாடங்கள் சூழ்ந்த தர்சநீயமாய் இருக்கிற கச்சியில். **நிரந்தவர் இத்யாதி** - மண்ணை என்று ஆற்றுக்கும் படைவீட்டுக்கும் பேர், திருச்சிற்றாறு என்று ஆற்றுக்கும் திருப்பதிக்கும் பேராகிறாப் போலே. அப்படைவீட்டில் உண்டான, நிரந்தவர் உண்டு சத்ருக்கள், அவர்களுடைய புண் உண்டு மாம்ஸம், அத்தை நுகரக்கடவதாய், புஜிக்கக்கடவதாய் இருக்கிற வேலினுடைய பெரிய வாயிலே அந்த சத்ருக்கள். **உக** - அவர்கள் முடிய. திருமங்கையாழ்வார் மதிக்கும்படியான ஆண்பிள்ளைத்தனமிறே அவரதும். **"கட மா களியானை வல்லான்"** என்றும், **"ஆடல் மா வலவன்"** என்றும், **"மருவலர்தம் உடல் துணிய வாள் வீசும் பரகாலன்"** என்றும் துறைதொறும் தலையாய் இருக்கிற திருமங்கையாழ்வாரிறே மதிக்கிறார். **"ரஞ்ஜநீயஸ்ய"** போலே இருக்கிறதிறே

---

வி : மூன்றாம் பாட்டு : உரம் தரு மெல்அணைப் பள்ளிகொண்டான் ஒரு கால் முன்னம் மா உருவாய்க் கடலுள் - "மேலான அறிவுக்கும் ஆற்றலுக்கும் நிகரற்ற இருப்பிடமானவன்" *(ஸ்தோ. ர. 39)* *என்று சொல்வதற்கு ஏற்பப் பிராட்டிமாரும் தானும் கூட ஏறித் துகைத்தால் பொறுத்துக்கொள்வதற்கு ஏற்ற தாங்கும் ஆற்றலை உடையவன்;* மேலும் வேண்டும் இடங்களிலே திருவுள்ளக் *கருத்தறிந்து குழைந்து கொடுப்பதற்கு ஏற்ற மென்மையையும் உடையவன் திருவனந்தாழ்வான். அவன்மேலே முன்பு ஒரு நாளிலே மேலான வடிவை ஏற்றுக் கடலிலே கண்வளர்ந்தருளினான்.* வரம் தரு மாமணி வண்ணன் இடம் - *அருளாளப் பெருமாளாய் நின்று விரும்பியவற்றை எல்லாம் தருபவனுக்கு இருப்பிடம்.*

**மணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி** - *ஒளிமணி மயமான மாடங்கள் சூழ்ந்த அழகிய கச்சியில்,* நிரந்தவர் மண்ணையில் புண் நுகர் வேல் நெடுவாயில் உக - *மண்ணை என்பது ஆற்றுக்கும் நகரத்துக்கும் பெயர், திருச்சிற்றாறு என்று ஆற்றுக்கும் திருப்பதிக்கும் பெயராய் இருத்தலைப் போலே. அந்நகரத்தில் பகைவர்கள் இருந்தனர்; அவர்களது தசையை உண்ணக் கூடியதாய் இருக்கும் வேலின் பெரிய வாயிலே அப்பகைவர்கள் முடிய.* உக - முடிய. *திருமங்கையாழ்வார் மதிக்கும்படி இருக்கும் ஆண்பிள்ளைத்தனம் அன்றோ அப் பல்லவருடைய ஆண்பிள்ளைத்தனமும்.* **"கட மா களியானை வல்லான்"** *(பெ. தி. 2:4:10) என்றும்,* **"ஆடல் மா வலவன்"** *(பெ. தி. 5:8:10) என்றும்,* **"மருவலர்தம் உடல் துணிய வாள் வீசும் பரகாலன்"** *(பெ. தி. 3:9:10) என்றும், போர்த் துறைகள் ஒவ்வொன்றிலும் தலைமைச் சிறப்பு உடையராய் இருக்கும் திருமங்கையாழ்வார் அன்றோ மதிக்கிறார். பெருவீரராக இருக்கும் ஆழ்வார் பல்லவன் வீரத்தைப் பாராட்டக் கூடுமோ என்னில்,* **"எதிராளியையும் மகிழ்விக்கும்"** *(ரா. யு. 106:6)* இராமபிரான்

---

1. குடுக்கைக்கு.

செருவில் இத்யாதி - இவன் யுத்தத்திலே சத்ருக்கள் அடங்கலும் அழிந்து தானே ஆம்படி விஸ்த்ருதன் ஆனவன்.

---

வீரம்போலே இருக்கிறது அவனது வீரமும் என்க. செருவில் முன நாள் பரந்தவன் - பூசலிலே பகைவர்கள் அடங்கலும் அழிந்து தானே ஆகும்படி எங்கும் சுற்றித் திரிந்தவன். அந்தப் பல்லவர்கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே-.

**ஒப்புமைப் பகுதி**

1. **உரம் தரு மெல்அணைப் பள்ளிகொண்டவன்**

*" அரவு - படுக்கைக்கு ஸம்பாத்யமான லக்ஷணங்கள் ஸ்வதஸ்ஸித்தமாகப் பெற்றோமே. மென்மை, குளிர்த்தி, நாற்றம் என்கிற இவை ஜாதி ப்ரயுக்தமாயிறே ஸர்ப்பத்துக்கு இருப்பது. சேதநமான படுக்கையுமாகப் பெற்றோமே. 'ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைக தாமநி' என்கிறபடியே அவஸ்த்தாநுகுணமாகக் குழைய வேண்டும் இடத்திலே குழைந்து உறைய வேண்டும் இடத்திலே உறைந்து கொடுக்கும் படுக்கையாகப் பெற்றோமே " தி. நெ. தா. 12 பெ. உரை.*

*[ஸம்பாத்யம் - ஈட்டவேண்டுவது. ஸ்வதஸ்ஸித்தம் - இயற்கையிலேயே அமைந்தது. அவஸ்த்தாநுகுணமாக - நிலைக்கு ஏற்ப.]*

*" அரவு - கட்டிப் பொன் போலே எல்லா வடிவையும் ஆக்கிக் கொள்ளலாம்படி இருக்கிறபடி " மு. தி. 53 பெ. உரை:*

**மணிவண்ணன்**

*பாட்டு 100இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

(83)

## 184

**அண்டமும் எண்திசை யும்நில னும்மலை**
**நீரொடு வான்எரி கால்முதலா**
**உண்டவன் எந்தைபி ரானதி டம்ஒளி**
**மாடங்கள் சூழ்ந்தழ காயகச்சி**
**விண்டவர் இண்டைக் குழாமுட னேவிரைந்**
**தார்இரி யச்செரு வில்முனிந்து**
**பண்டொரு கால்வளைத் தான்பணிந் தபர**
**மேச்சுர விண்ணக ரம்மதுவே.**

**ப. ரை :** **அண்டமும்** - அண்டங்களையும், **எண் திசையும்** - எட்டுத்திசைகளையும், **நிலனும்** - உலகையும், **அலை நீரொடு** - அலையெறியும் கடல்களையும், **வான்** - வானத்தையும், **எரி** - நெருப்பையும், **கால்** - காற்றையும், **முதலா உண்டவன்** இவை முதலான மற்றும் பல பொருள்களையும் உண்டவன் ஆகிய, **எந்தை பிரானது**

இடம் - என் குலத் தலைவனுடைய இருப்பிடம், ஒளி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி - ஒளி பொருந்திய மாடங்களால் சூழப்பட்டு அழகு பெற்ற காஞ்சிநகரிலே, செருவில் - போர்க்களத்தில், விரைந்தாருடனே - போரிட விரைந்தவர்களோடு, விண்டவர் இண்டைக் குழாம் இரிய - பகைவர்களுடைய நெருங்கிய கூட்டமானது சிதறியோடுமாறு, முனிந்து - சீறி, பண்டு ஒரு கால் வளைத்தான் - முன் ஒரு காலத்திலே வில்லை வளைத்தவன் ஆகிய பல்லவ மன்னன், பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே-.

சி. கு : செருவில் விரைந்தாருடனே விண்டவர் இண்டைக் குழாம் இரிய முனிந்து, வில் வளைத்தான் பணிந்த விண்ணகரம் என்று கூட்டுக. விண்டவர் - பகைவர். இண்டை - நெருக்கம்.

வியா : **நாலாம் பாட்டு : அண்டமும் இத்யாதி** - அண்டமும், எட்டுத்[1] திக்குக்களும், பூமியும், காரணமாயும் கார்யமாயும் உள்ளவை அடையத் திரு வயிற்றிலே வைத்து நோக்கினவன். **எந்தை பிரான் இடம்** - எனக்கு ஜநகனான வனுக்கு ஸ்வாமி. என் குலநாதன் என்றபடி.

ஒளி - ரத்நங்களினுடைய ஒளியை உடைத்தான மாடங்கள் சூழ்ந்து தர்சநீய மான கச்சியில். **விண்டவர் இத்யாதி** - செருவிலே - யுத்தத்திலே, விரைந்தவர் உண்டு பெரிய கிளர்த்தியோடே[2], "காட்டு, காட்டு" என்று தூசி ஏறிவருகிறவர் களோடே[3]. **விண்டவர் இண்டைக் குழாம் இரிய** - சத்ருக்களுடைய செறிந்த குழாமானது சிதறியோட. **முனிந்து** - சீறி. **பண்டு இத்யாதி** - முன்பு ஒரு நாளிலே கையில் வில் வளைத்தவன் பணிந்த.

---

வி : நாலாம் பாட்டு : **அண்டமும் எண் திசையும் நிலனும் அலை நீரொடு வான் எரி கால் முதலா உண்டவன்** - அண்டமும், எட்டுத் திக்குகளும், மண்ணுல கும், வித்தாகவும் விளைவாகவும் உள்ளவையும் ஆகிய எல்லாவற்றையும் திரு வயிற்றிலே வைத்து நோக்கியவன். **எந்தை பிரானது இடம்** - எனக்குத் தந்தை யாய் இருப்பவனுக்குத் தலைவன். அஃதாவது என் குலநாதன் என்கிறார்.

**ஒளி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி** - மணிகளின் ஒளியையுடைய மாடங் கள் சூழ்ந்து அழகாக உள்ள கச்சியில், **செருவில் விரைந்தாருடனே** - போர்க்களத் திலே, விரைந்தவர் உண்டு; அஃதாவது பெரிய கிளர்ச்சியோடே, "காட்டு, காட்டு" என்று தூசி[4] ஏறி வருபவர்கள்; அவர்களோடே. செரு - போர்க்களம். **விண்டவர் இண்டைக் குழாம் இரிய** - பகைவர்களுடைய செறிந்த குழாமானது சிதறியோட; **முனிந்து** - சீறி. **பண்டு ஒரு கால் வளைத்தான் பணிந்த** - முன்பு ஒரு நாளிலே கையில் இருந்த வில்லை வளைத்தவன் பணிந்த. **பரமேச்சுர விண்ணகரம் அதுவே-.**

### ஒப்புமைப் பகுதி

1. **உலகனைத்தையும் உண்டவன்**

   பாட்டு 39, 76 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.

---

1. அஷ்ட. 2. கிளற்றியோடே. 3. ஏறி வருகிறவர்கள்; அவர்களோடே.
4. தூசி - முன்னணிப்படை; செரு முனை.

2. இண்டைக்குழாம்

*" இண்டைக் குலத்தை - மிகவும் நெருங்கின திரளை. 'இண்டர்' என்று சண்டாளர் "* *தி. பல். 5 பெ. உரை.*

*(84)*

## 185

தூம்புடைத் திண்கைவன் தாள்களிற் றின்துயர்
தீர்த்தர வம்வெரு வமுனநாள்
பூம்புனல் பொய்கைபுக் கான்அவ னுக்கிடம்
தான்தடம் சூழ்ந்தழ காயகச்சித்
தேம்பொழில் குன்றெயில் தென்னவ னைத்திசைப்
பச்செரு மேல்வியந் தன்றுசென்ற
பாம்புடைப் பல்லவர் கோன்பணிந் தபர
மேச்சுர விண்ணக ரம்மதுவே.

ப. ரை: தூம்புடைத் திண் கை வன் தாள் களிற்றின் - *துளையை உடைய வலிய துதிக்கையையும், உறுதியான காலையும் உடைய கயேந்திரன் என்னும் யானையினது,* துயர் தீர்த்து - *துன்பத்தைப் போக்கி,* அரவம் வெருவ - *காளியன் என்னும் பாம்பு அஞ்சும்படி,* முன நாள் - *முன்பு,* பூம் புனல் பொய்கை புக்கான் அவனுக்கு - *அழகிய நீரையுடைய பொய்கையிலே பாய்ந்தவனுக்கு,* இடம் - *இருப்பிடமாவது,* தடம் சூழ்ந்து அழகாய கச்சி - *தடாகங்களாலே சூழப்பட்டு அழகு பெற்ற காஞ்சிநகரிலே,* தேன் பொழில் குன்று எயில் தென்னவன் திசைப்ப - *தேன் நிறைந்த சோலையையும், மலை போலும் மதிளையும் உடைய பாண்டிய மன்னன் அறிவு கெடுமாறு,* அன்று செருமேல் வியந்து சென்ற - *முன்பு போர்க்களத்திலே மிக்க விருப்பத்தோடு போய்ச் சேர்ந்த,* பாம்புடை - *பாம்பைக் கொடியாக உடைய,* பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே-.

சி. கு: *தென்னவனை என்பதில் ஐகாரம் வேண்டாவழி வந்த சாரியை.*

வியா : அஞ்சாம் பாட்டு : தூம்புடை இத்யாதி - துளையுடைய திண்ணிய கையையும் உடைத்தாய்[1], வலிதான தாளையுமுடைய ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு ஜல சர ஸத்வத்தால் வந்த துஃக்கத்தைப் போக்கி. அரவம் இத்யாதி -

---

வி : அஞ்சாம் பாட்டு : தூம்புடைத் திண் கை வன் தாள் களிற்றின் துயர் தீர்த்து - *துளையையுடைய திண்ணிய கையை உடைத்தாய், வலிதான தாளையும் உடைத்தாய் இருக்கும் சீரார் கயேந்திராழ்வானுக்கு நீர் உறை விலங்கு ஆகிய முதலையால் துன்பம் வந்தது; அதனைப்போக்கி.* அரவம் வெருவ - *காளியனானவன்*

---

185. 1 : 7 வமுன்நாள். 3 : 4 னைத்திகைப்.

1. கையை உடைத்தாய், கையையும் உடையனாய்.

காளியனானவன் ஒரு தடாகத்தை விஷத்தாலே தூஷிக்க, அவன் அஞ்சி ஓடும்படியாகத் தான் அதிலே போய்ப் புக்கான் ஆயிற்று.

**தேம் பொழில் இத்யாதி** - தேனை உடைத்தான சுற்றில் சோலையையும், மலை போலே இருக்கிற மதிளையும்[1] உடைய தென்னவனானவன் அறிவு கெடும்படியாக யுத்தத்திலே பெரிய ஆதரத்தோடே சென்று கிட்டின. **பாம்புடை** - நாக லோகத்தை வென்று ஸர்ப்பத்தை த்வஜமாக எடுத்தானாகச் சொல்லக்கடவது; அவன் பணிந்த.

---

ஒரு நீர்நிலையை நஞ்சாலே பாழ்படுத்த அதுகண்டு அவன் அஞ்சி ஓடுமாறு தான் அதிலே போய்ப் புக்கான்.

**தேம் பொழில் குன்று எயில் தென்னவனைத் திசைப்பச் செருமேல் வியந்து அன்று சென்ற** - தேனை உடைத்தான சுற்றுச் சோலையையும், மலை போலே இருக்கும் மதிளையுமுடைய தென்னவனானவன் அறிவுகெடுமாறு போரிலே பெரிய விருப்பத்தோடு சென்று கிட்டிய. **பாம்புடைப் பல்லவர் கோன் பணிந்த** - நாக லோகத்தை வென்று பாம்பைக் கொடியாக எடுத்தவன் என்று சொல்வர்; அப் பல்லவன் பணிந்த. **பரமேச்சுர விண்ணகரம் அதுவே**-.

**ஒப்புமைப் பகுதி**

1. **கயேந்திரன் துயர் தீர்த்தவன்**

   *பாட்டு 75இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **காளியன் அஞ்சப் பொய்கை புக்கவன்**

   *" ஐந்தலைய பைந் நாகத்தலைப் பாய்ந்தவனே - கடிக்கைக்கு அஞ்சு வாயை உடைத்தாய், க்ரோதத்தாலே விஸ்த்ருதமான பணத்தை உடைத்தான ஸர்ப்பாஸ்யத்திலேயன்றோ புக்கது. 'ஏகதாது வீநாராமம் க்ருஷ்ணோ ப்ருந்தாவநம் யயௌ'. தமையன் ஒருநாள் பேரநிற்க, பாம்பின் வாயிலே புகும்படியிறே தீம்பு "*

   *தி. பல். 10 பெ. உரை*

   *[க்ரோதம் - கடுஞ்சினம். விஸ்த்ருதம் - விரிந்தது. ஸர்ப்பாஸ்யம் - பாம்பின் வாய்.]*

   *" காளியன் தீய பணத்தில் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி - காளியனுடைய விஷாஶ்ரயமாகையாலே க்ரூரமான பணத்திலே திருவடிகளில் திருச்சிலம்பு த்வநிக்கும்படி சென்று குதித்து, அவன் பணங்கள் நெரிந்து வாய்களாலே ரக்தம் சொரியும்படி இளைத்துச் சரணம் புகுருமளவும் அதின்மேலே நின்று ந்ருத்தம் செய்து "*

   *[விஷாஶ்ரயம் - நஞ்சு இருக்குமிடம். க்ரூரம் - கொடுமையானது. ந்ருத்தம் - ஆடல்.]*

   *(85)*

---

1. மதிலையும்.

**திண்படைக் கோளரி யின்உரு வாய்த்திற**
**லோன்அக லம்செரு வில்முனநாள்**
**புண்படப் போழ்ந்தபி ரானதி டம்பொரு**
**மாடங்கள் சூழ்ந்தழ காயகச்சி**
**வெண்குடை நீழல்செங் கோல்நடப் பவிடை**
**வெல்கொடி வேல்படை முன்உயர்த்த**
**பண்புடைப் பல்லவர் கோன்பணிந் தபர**
**மேச்சுர விண்ணக ரம்மதுவே.**

**ப. ரை :** **திண் படைக் கோள் அரியின் உருவாய்** - *திண்ணிய நகங்களாகிய படையையுடைய வலிய ஆளரியின் வடிவங்கொண்டு,* **திறலோன் அகலம்** - *பெருமிடுக்கன் ஆகிய இரணியன் மார்பை,* **முன நாள் செருவில்** - *முன் நாளில் போர்க்களத்தில்,* **புண்படப் போழ்ந்த பிரானது இடம்** - *புண்படும்படி பிளந்த பெருமானது இருப்பிடமாவது,* **பொரு மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி** - *ஒன்றோடு ஒன்று சேர்ந்திருக்கும் மாடங்களால் சூழப்பட்டு அழகுபெற்ற காஞ்சிநகரிலே,* **வெண் குடை நீழல்** - *வெண் கொற்றக் குடையின் நிழலின் கீழே,* **செங்கோல் நடப்ப** - *தன் கட்டளை செல்லும்படி,* **வெல் விடைக்கொடி** - *வெற்றி பொருந்திய பாம்புக் கொடியையும்,* **வேல்** *வேற்படையையும்,* **படைமுன் உயர்த்த** - *படைகளின் முன்னே ஏந்திய,* **பண்புடை** - *பண்பு கொண்ட,* **பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே**-.

**சி. கு :** *திண் படை என்பது நரசிங்கத்தின் நகங்களைக் குறித்தது.* *பல்லவர் கொடி பற்றி, "பல்லவனுக்கு ஆதிகாலமாக விருஷபக்கொடி இருந்தது என்றும் பின்பு நாகலோகத்தளவும் சென்று வென்று வந்தது காரணமாக நாகக் கொடி உண்டாயிற்று என்றும் வரலாறு உள்ளதாகச் சொல்லக் கேள்வி உண்டு" என வரும் திவ்யார்த்த தீபிகை உரைக்குறிப்பு ஈண்டுக் கருதத்தக்கது.*

**வியா : ஆறாம் பாட்டு : திண் படை இத்யாதி** - ஹிரண்யன் உடலுக்கு வளையாத திருவுகிரை ஆயுதமாகவுடைய நரஸிம்ஹமாய், பெருமிடுக்கனான ஹிரண்யனுடைய மார்வை யுத்தத்திலே புண்படும்படி போழ்ந்த பிரானது இடம்.

பொரு என்று ஒப்பு. ஒன்றோடு ஒன்று சேர்ந்து இருக்கிற. **வெண்குடை இத்யாதி** - தன் வெண்கொற்றக்குடை ஒன்றுமேயாகத் தன்னுடைய ஆஜ்ஞையை

---

வி : **ஆறாம் பாட்டு :** **திண் படைக் கோள் அரியின் உருவாய்** - *இரணியன் உடலுக்கு வளையாத திருவுகிரைப் படையாக உடைய நரசிங்கமாய்,* **திறலோன் அகலம் செருவில் முன நாள் புண்பட** - *பெருமிடுக்கனான இரணியனுடைய மார்பு போரிலே புண்படும்படி.* **போழ்ந்த பிரானது இடம்** -.

**பொரு மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி** - *பொரு - ஒப்பு; ஒன்றோடு ஒன்று சேர்ந்திருக்கும் அழகாய கச்சியில்.* **வெண்குடை நீழல் செங்கோல் நடப்ப விடை**

---

**166.** 3 : 4 பவிடை; பவிறல். 3 : 7 முன் உவந்த.

நாட்டிலே நடத்தும்படி மிடுக்கை உடையவன் என்னுதல். விடையாதல், விடமாதல் விறல் என்னுதல். 'விடை' என்றபோது இளம்பாம்பாகிறது. 'விடம்' என்றபோது விஷத்தை என்றாய், ஸர்ப்பம் என்றபடி. 'விறல்' என்றபோது மிடுக்கை உடைத்தாய் வெற்றிக்குப் பரிகரமான கொடியையும் வேல் ஆகிய ஆயுதத்தையும் முன்பே எடுத்தவன். **பண்புடை இத்யாதி** - அழகிய ஸ்வபாவத்தையுடைய பல்லவர் கோன் பணிந்த.

---

**வெல் கொடி வேல் படை முன் உயர்த்த** - *தன் வெண்கொற்றக்குடை ஒன்று மட்டுமே விளங்கும் வண்ணம் தன்னுடைய ஆணையை நாட்டிலே நடத்தும் மிடுக்கை உடையவன் என்க. விடை என்றும் விடம் என்றும் விறல் என்றும் பாட வேறுபாடுகள் உண்டு. 'விடை' என்பதனைப் பாடமாகக் கொண்டால் இளம் பாம்பு என்பது பொருள்*[1]*; 'விடம்' என்பதனைப் பாடமாகக் கொண்டால் நஞ்சு என்று பொருள் பயந்து பாம்பினைக் குறிக்கும்; 'விறல்' என்பது பாடமாயின் மிடுக்கையுடைத்தாய் என்று பொருள் தந்து வெற்றிக்குக் கருவியான கொடியையும் வேலாகிய படைக்கலத்தையும் முன்பே எடுத்தவன் என்று ஆகும்.* **பண்புடைப் பல்லவர் கோன் பணிந்த** - *அழகிய இயல்பினையுடைய பல்லவர்கோன் பணிந்த,* பரமேச்சுர விண்ணகரம் அதுவே -.

**ஒப்புமைப் பகுதி**

1. **கோளரியாய் அவுணன் அகலம் போழ்ந்தவன்**

   *பாட்டு 14, 61 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **செங்கோல் ஆட்சி**

   *" செங்கோல் நடாவு - மநுமாந்தாதாக்களைப் போலே "*

   *தி. வி. 13 பெ. உரை.*

   *(86)*

## 187

**இலகிய நீள்முடி மாவலி தன்பெரு**
**வேள்வியில் மாண்உரு வாய்முனநாள்**
**சலமொடு மாநிலம் கொண்டவ னுக்கிடம்**
**தான்தடம் சூழ்ந்தழ காயகச்சி**
**உலகுடை மன்னவன் தென்னவ னைக்கன்னி**
**மாமதிள் சூழ்கரு வூர்வெருவப்**
**பலபடை சாயவென் றான்பணிந் தபர**
**மேச்சுர விண்ணக ரம்மதுவே.**

---

1. விடை என்பது இளம்பாம்பு என்னும் பொருளில் தமிழ் நூல்களில் எங்கும் ஆளப் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை.

**187.** 3 : 5 மாமதில்.

**ப. ரை :** இலகிய நீள்முடி மாவலிதன் - *ஒளி உமிழும் நீண்ட மகுடத்தை யுடைய மாவலியினது*, பெரு வேள்வியில் - *பெரிய யாகத்திலே*, மாண் உருவாய் - *குறளனாக வடிவம் கொண்டு சென்று*, சலமொடு மாநிலம் கொண்டவனுக்கு - *வஞ்சனையால் உலகினை அளந்து கொண்ட பெருமானுக்கு*, இடம்தான் - *இருப்பிடமாவது*, தடம் சூழ்ந்து அழகாய கச்சி - *நீர்நிலைகளால் சூழப்பட்டு அழகு பெற்ற காஞ்சிநகரிலே உள்ள*, உலகுடை மன்னவன் தென்னவனை - *உலகங்களைத் தன்னதாக உடைய அரசன் ஆகிய பாண்டியனை*, கன்னி மாமதிள் சூழ் கருவூர் வெருவ - *பிறரால் கைப்பற்றப்படாத பெரிய மதிளாலே சூழப்பட்ட கருவூர் என்னும் நகரம் கலங்குமாறும்*, பல படை சாய - *பல்வகையான படைகள் அழியுமாறும்*, வென்றான் - *வென்றவனாகிய பல்லவமன்னன்*, பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே -.

**சி. கு :** *சலமொடு கொண்டவன் என்பதற்கு வஞ்சனையால் கொண்டவன் என்பதே அன்றி, நீர்த் தாரையோடு கொண்டவன் என்றும் பொருள் கூறுவர்.*

வியா : **ஏழாம் பாட்டு :** இலகிய இத்யாதி - உஜ்ஜ்வலமாய் ஆதி ராஜ்யஸூசகமான முடியையுடைய மஹாபலியுடைய யஜ்ஞ வாடத்திலே, இரப்பிலே தகண் ஏறின வடிவை உடையனாய், முன்பு ஒரு நாளிலே கையிலே நீர் விழுந்த போதே, பரப்பை உடைத்தான பூமியைக் கைக்கொண்டு அளந்தவனுக்கு.

உலகுடை - லோகத்துக்கு எல்லாம் தானே நியந்தாவான பாண்ட்யனை[1] அரண் உடைத்தான பெரிய மதிளாலே சூழப்பட்ட கருவூர் அஞ்சும்படியாக ஸேநா ஸமூஹமானது சாய வென்றவன் பணிந்த.

---

வி : ஏழாம் பாட்டு : இலகிய நீள் முடி மாவலிதன் பெரு வேள்வியில் மாண் உருவாய் முன நாள் சலமொடு மாநிலம் கொண்டவனுக்கு - *புகர் மிக்கதாய், பெருவேந்தன் என்பதற்கு அடையாளமாய் இருக்கும் முடியினையுடையவன் மாவலி. அவனது வேள்விச் சாலையிலே, இரப்பிலே தகண் ஏறின*[2] *வடிவை உடையனாய்ச் சென்று முன்பு ஒரு நாள் கையில் நீர் விழுந்தபோதே, பரப்பை உடைத்தான நிலவுலகைக் கைக்கொண்டு அளந்தான்; அப்படி அளந்தவனுக்கு*. இடம் தான் -.

உலகுடை மன்னவன் தென்னவனைக் கன்னி மாமதிள் சூழ் கருவூர் வெருவப் பலபடை சாய வென்றான் பணிந்த - *உலகத்துக்கு எல்லாம் தானே அரசனாக இருந்த பாண்டியனை அரண் உடைத்தான பெரிய மதிளாலே சூழப்பட்ட கருவூர் அஞ்சும்படி படைத்திரளானது சாயுமாறு வென்றவன் பணிந்த*; தடம் சூழ்ந்து அழகாய கச்சிப் பரமேச்சுர விண்ணகரம் அதுவே -.

**ஒப்புமைப் பகுதி**

இலகிய நீள்முடி மாவலி

*" கோவாகிய மாவலியை நிலங்கொண்டான் - ஸர்வேச்வரன் இந்த்ரனை த்ரைலோக்யாதிபதியாக்கி வைத்தான்; அவனைத் தள்ளி, அந்தப்*

1. பாண்டியனை.
2. தகண் ஏறுதல்-தழும்பு ஏறுதல்.

*பதத்தைத் தான் ஏறட்டுக்கொண்டு 'நானே அரசு' என்று இருந்தான் ஆய்த்து. நீ கொடுக்கக் கொள்கையன்றிக்கே, அதுக்கு எல்லாம் தானே நியாமகன் என்று அபிமாநித்திருந்தான் ஆய்த்து; 'வெறும்புறத்திலே, தன்னது அல்லாதத்தை 'தன்னது' என்று ஏறட்டுக் கொண்டிருக்கக் கடவ அவன் கையிலே இவ் விஷயமும் கிடக்குமாகில் நாடு குடிக்கிடவாது' என்று பார்த்தருளி, இந்த்ரனதான விபூதியை அவன் பக்கலில் நின்றும் வாங்கினான்''* 
திரு. வா. மொ. 9:8:7-36

*[த்ரைலோக்யாதிபதி - மூவுலகத்தலைவன். பதம் - நிலை. நியாமகன் - ஆட்சியாளன். விபூதி - உடைமை.]*

*'கொடுங்கோளால் - வெட்டிய கோளாலே என்றபடி. அதாவது வடிவழகைக்காட்டி அவனை வாய்மாளப் பண்ணினபடி. அன்றிக்கே, கோடு என்றத்தைக் குறுக்கி, அத்தை 'கொடு' என்றதாய், அதாவது விலங்குகையாய், செவ்வைக் கேட்டை நினைத்து, மூன்றடியை அபேக்ஷித்து, இரண்டடியால் அளப்பது, சிறுகாலைக் காட்டிப் பெரிய காலாலே அளப்பதாகக் கொண்டு அவனை வஞ்சித்தபடியைச் சொல்லிற்றாதல். துஷ்ட ஸாதந ப்ரயோகம் பண்ணினவர்களுக்கு அதுக்கு ஈடாக உத்தரம் சொல்லுவாரைப் போலே. அவன் செவ்வைக் கேட்டுக்கு ஈடாகத் தானும் செவ்வைக்கேடனாய்க் கொண்டபடி''* 
திரு. வா. மொ. 4:8:6-36

*[துஷ்ட ஸாதந ப்ரயோகம் பண்ணினவர் - தீய வழியைக் கையாண்டவர். உத்தரம் - விடை.]*

*பாட்டு 46, 75இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

*(87)*

## 188

**குடைத்திறல் மன்னவ னாய்ஒரு கால்குரங்**
**கைப்படை யாமலை யால்கடல்**
**அடைத்தவன் எந்தைபி ரானதி டம்மணி**
**மாடங்கள் சூழ்ந்தழ காயகச்சி**
**விடைத்திறல் வில்லவன் நென்மெலி யில்வெரு**
**வச்செரு வேல்வலங் கைப்பிடித்த**
**படைத்திறல் பல்லவர் கோன்பணிந் தபர**
**மேச்சுர விண்ணக ரம்மதுவே.**

**ப. ரை :** குடைத் திறல் மன்னவனாய் - வெண்கொற்றக்குடையை உடைய மிடுக்குப் பொருந்திய அரசனாய்த் தோன்றி, ஒரு கால் - இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற அந்நாளில், குரங்கைப் படையா - குரங்குகளைப் படையாகக் கொண்டு, மலையால் கடலை அடைத்தவன் - மலைகளாலே அணைகட்டிக் கடலை

---

**188.** 3 : 2 வல்லவன். 3 : 3 ஏழ்மெலி.

அடைத்தவனான, **எந்தைபிரானது இடம்** - என் குலத் தலைவனானவனுக்கு இடமாவது, **அணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி** - அழகிய மாடங்களால் சூழப் பெற்று அழகு பெற்ற காஞ்சி நகரிலே, **விடைத் திறல் வில்லவன்** - காளை போலும் மிடுக்குடைய வில்லவன் என்னும் அரசன், **நென்மெலியில் வெருவ** - நென்மெலி என்னும் நகரத்தில் அஞ்சி ஓடும்படி, **செருவேல் வலங்கைப் பிடித்த** - போர்க்கு உரிய வேலினை வலக்கையிலே பிடித்த, **படைத் திறல் பல்லவர் கோன்** - படையினை ஆளும் வலிமை மிக்க பல்லவ மன்னன், **பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே** -.

சி. கு : மன்னவன் என்பது ஈண்டு இராமனைக் குறித்தது.

வியா : **எட்டாம் பாட்டு** : '**குடைத் திறல் இத்யாதி** - வெண்கொற்றக் குடையையும், பெருமிடுக்கையுமுடைய சக்ரவர்த்தித் திருமகனாய்[1]. **குரங்கைப் படையா** - பூசல் என்றால் அஞ்சக்கடவ குரங்குகளைப் படையாகக்கொண்டு, நீரிலே ஆழக்கடவ மலையாலே கடலை அடைத்தவன். **எந்தை இத்யாதி** - எனக்கு ஜநகனாய் உபகாரகனானவனுக்கு இடம் அழகிய மாடங்களாலே சூழப்பட்ட அழகிய கச்சி[2]. **விடை இத்யாதி** - ருஷபம் போலே இருக்கிற மிடுக்கையுடைய வில்லவன், நென்மெலி என்கிற படைவீட்டிலே அஞ்ச, யுத்தத்துக்குப் பரிகரமான வேலைக் கையிலே பிடித்த. **படைத் திறல்** - ஆயுத தாரண ஸாமர்த்யத்தை யுடைய பல்லவர்கோன்.

---

வி : எட்டாம் பாட்டு : **குடைத் திறல் மன்னவனாய் ஒரு கால்** - வெண் கொற்றக்குடையையும், பெருமிடுக்கையுமுடைய சக்கரவர்த்தித் திருமகனாய். **குரங்கைப் படையா** - பூசல் என்றால் அஞ்சக் கூடிய குரங்குகளைப் படையாகக் கொண்டு. **மலையால் கடலை அடைத்தவன்** - நீரிலே ஆழக்கூடிய மலையாலே கடலை அடைத்தவன். **எந்தை பிரானது இடம்** - எனக்குத் தந்தையாய் உதவு பவனாய் அமைந்தவனுக்கு இடம். **அணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி** - அழகிய மாடங்களாலே சூழப்பட்டு அழகோடு விளங்கும் கச்சியில் உள்ள. **விடைத் திறல் வில்லவன் நென்மெலியில் வெருவச் செருவேல் வலங்கைப் பிடித்த** - காளை போலே இருக்கும் மிடுக்கையுடைய வில்லவன் நென்மெலி என்னும் படை வீட்டிலே[3] அஞ்சப் போர்க்கு உரிய படையான வேலைக் கையிலே பிடித்த. **படைத் திறல் பல்லவர் கோன்** - படைக்கருவிகளை ஏந்திப் போரிடும் திறமையை உடைய பல்லவர்கோன். **பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே**-.

ஒப்புமைப் பகுதி

குரக்குப்படையால் அணை கட்டியவன்

பாட்டு 12இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

(88)

---

1. சக்ரவர்த்தி திருமகனாய். 2. கச்சியில்.
3. படைவீடு-நகரம்.

## 189

**பிறையுடை வாள்நுதல் பின்னைதி றத்துமுன்**
**னேஒரு கால்செரு வில்உருமின்**
**மறையுடை மால்விடை ஏழ்அடர்த் தாற்கிடம்**
**தான்தடம் சூழ்ந்தழ காயகச்சிக்**
**கறையுடை வாள்மற மன்னர்கெ டக்கடல்**
**போல்முழங் கும்குரல் கடுவாய்ப்**
**பறையுடைப் பல்லவர் கோன்பணிந் தபர**
**மேச்சுர விண்ணக ரம்மதுவே.**

**ப. ரை :** **பிறையுடை வாள் நுதல்** - *பிறை போலே இருக்கும் ஒளி பொருந்திய நெற்றியை உடைய,* **பின்னை திறத்து** - *நப்பின்னைப் பிராட்டியின்பொருட்டு,* **முன்னே ஒரு கால்** - *முன் ஒரு நாளிலே,* **செருவில்** - *போர்க்களத்தில்,* **உருமின்** - *இடி போன்ற குரலையும்,* **மறையுடை** - *வஞ்சனை யையும் உடைய,* **மால் விடை ஏழ் அடர்த்தாற்கு** - *பெரிய காளைகள் ஏழினை வலி அடக்கின பெருமானுக்கு,* **இடம்தான்** - *இருப்பிடமாவது,* **தடம் சூழ்ந்து அழகாய கச்சி** - *தடாகங்களால் சூழப்பட்டு அழகுபெற்ற காஞ்சிநகரிலே உள்ள,* **கறையுடை வாள் மற மன்னர் கெட** - *குருதிக் கறை பொருந்திய வாளையுடைய மிக்க சீற்றம் கொண்ட அரசர் அழிய,* **கடல் போல் முழங்கும்** - *கடல் போலே ஒலிக்கும்,* **குரல் கடுவாய்ப் பறை உடை** - *ஓசையையும் கடிய வாயையும் உடைய ஒருவகைப் பறையினை வைத்திருந்த,* **பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே** -.

**சி. கு :** *மறை - வஞ்சனை. கடுவாய்ப்பறை - பல்லவனிடம் இருந்த ஒருவகைப் பறை; அதனைச் சமுத்திர கோஷம் என்று கல்வெட்டுக் குறிக்கும். அப்பெயரின் தமிழாக்கமே 'கடல் போல் முழங்கும் குரல் கடுவாய்' என்பது.*

**வியா : ஒன்பதாம் பாட்டு : பிறை இத்யாதி** - பிறை போலே இருப்ப தாய் ஒளியை உடைத்தான நுதலையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக. முன்பு ஒரு நாளிலே, யுத்தத்திலே உருமு போலேயாய், உருமு - இடி. நெஞ்சிலே க்ருத்ரிமத்தை

---

**வி : ஒன்பதாம் பாட்டு : பிறையுடை வாள் நுதல் பின்னை திறத்து முன்னே ஒருகால் செருவில் உருமின் மறையுடை மால் விடை ஏழ் அடர்த்தாற்கு** - *பிறை போலேயும் ஒளியை உடைத்தாயும் இருக்கும் நுதலையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக. முன்பு ஒரு நாள் போரிலே உருமு போலே முழங்கி, நெஞ்சிலே கள்ளத்தனம் உடையவாய் இருக்கும் பெரிய காளைகளை அடர்த்தவனுக்கு.*

---

**189.** 1 : 7 வில் உருமும்.

உடைத்தான; மாறாய் வரும் என்னவும் ஆம். பெரிய வ்ருஷபங்களை அடர்த்த வனுக்கு.

**கறை இத்யாதி** - சத்ரு சரீரங்களிலே தைச்சுக் கறை கழுவாதே இருக்கிற வாளை உடையராய்ப் பெரிய சினத்தையுடைய ராஜாக்கள் கெடக் கடல் போலே கோஷியாநின்றுள்ள த்வநியை உடைத்தாய், அந்த த்வநியைக் கேட்ட போதே எதிரிகள் கெட்டோடும்படியான கடிய வாயையுடைய. **"கன்றப் பறை கறங்க"** என்று திருவரையிலே கோத்துக் கட்டின பறையோபாதியாய்த் தோற்றுகிறது ஆயிற்று இவர்க்கு இது.

---

*உருமு - இடி. 'மறை உடை' என்பதற்கு மாறாய் வரும் என்றும் பொருள் கொள்ளலாம். அஃதாவது பகையாய் வரும் என்க.*

**கறையுடை வாள் மற மன்னர் கெடக் கடல் போல் முழங்கும் குரல் கடு வாய்** - பகைவர் உடலிலே தைச்சுக்[1] கறைகழுவாமல் இருக்கும் வாளை உடையவர்களாய்ப் பெரிய சினத்தை உடையவர்களாய் இருக்கும் அரசர்கள் கெடக் கடல் போலே முழங்குகின்ற குரலை உடைத்தாய், அக்குரலைக் கேட்ட போதே எதிரிகள் கெட்டோடும்படியான கடிய வாயை உடையதாய் இருக்கும். **"கன்றப் பறை கறங்க"** (பெ. தி. *11:5:6*) என்று திருவரையிலே[2] கோத்துக் கட்டின பறையைப் போலே தோற்றுகிறது இவர்க்கு இது. அதனாலே இப்படிப் புனைந்து கூறுகிறார். அத்தகைய வாயை உடைத்தாய் இருக்கும், பறையுடைப் பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம் அதுவே -.

### ஒப்புமைப் பகுதி

**மால்விடை ஏழ் அடர்த்தவன்**

*" மால்விடை ஏழும் அடர்த்த செம்பவளத் திரள்வாயன் "*

*" மால்விடை - பெரிய ருஷபங்கள். வடிவில் பெருமைதன்னைக் கண்ட போதே பிற்காலிக்கும்படியாயிற்று இருப்பது. ஏழும் - 'ச்ரேயாம்ஸி பஹு விக்நாநி' என்று சொல்லுகிறபடியே, ஒன்று இரண்டு அன்றிக்கே, ஏழு விரோதிகளிறே. அடர்த்த - அநந்தரம் அணையப் புகுகிறது அவள் தோளையாகையாலே க்ரமப்ராப்தி பற்றாமே ஒருகாலே ஊட்டியாக நெரித்தான் ஆயிற்று "*

*தி. வா. மொ. 3:5:4-36*

*[அநந்தரம் - பிறகு. க்ரமப்ராப்தி - முறையாகக் கிட்டுதல்; அஃதாவது ஒவ்வொன்றாக நெரித்தல்.]*

*(89)*

---

1. தைச்சு - தைத்து. 2. திருவரையிலே - இடுப்பிலே.

**பார்மன்னு தொல்புகழ் பல்லவர் கோன்பணிந்**
**தபர மேச்சுர விண்ணகர்மேல்**
**கார்மன்னு நீள்வயல் மங்கையர் தம்தலை**
**வன்கலி கன்றிகுன் றாதுரைத்த**
**சீர்மன்னு செந்தமிழ் மாலைவல் லார்திரு**
**மாமகள் தன்னரு ளால்உலகில்**
**தேர்மன்ன ராய்ஒலி மாகடல் சூழ்செழு**
**நீர்உல காண்டுதி கழ்வர்களே.**

ப. ரை : பார் மன்னு தொல் புகழ் - *உலகில் நிலைத்துநின்ற பழமையான புகழையுடைய,* பல்லவர் கோன் பணிந்த - *பல்லவ மன்னன் வணங்கிய,* பரமேச்சுர விண்ணகர்மேல் - *பரமேச்சுர விண்ணகரத்தைக் குறித்து,* கார் மன்னு நீள் வயல் - *செழிப்புப் பொருந்திய பெரிய வயலையுடைய,* மங்கையர்தம் தலைவன் கலிகன்றி - *திருமங்கையில் உள்ளார்க்கு அரசன் ஆகிய கலியன்,* குன்றாது உரைத்த - *இலக்கணம் குன்றாமல் அருளிச்செய்த,* சீர் மன்னு செந் தமிழ் மாலை - *சிறப்புப் பொருந்திய அழகிய தமிழ்ப் பாமாலையை,* வல்லார் - *ஓத வல்லவர்கள்,* திருமாமகள்தன் அருளால் - *திருமகளுடைய அருளினால்,* உலகில் தேர்மன்னராய் - *இவ்உலகிலே தேரை நடத்தவல்ல அரசர்களாகி,* ஒலி மா கடல் சூழ் - *முழங்குகின்ற பெரிய கடலால் சூழப்பட்ட,* செழு நீர் உலகு ஆண்டு திகழ்வர்கள் - *அழகிய நீரையுடைய உலகினை ஆட்சிபுரிந்து விளங்குவர்கள்.*

சி. கு : *இதில் குறிக்கப்பெறும் பல்லவமன்னன் நந்திவர்ம பல்லவன் என்பது அறிஞர் துணிபு.*

வியா : **பத்தாம் பாட்டு : பார் இத்யாதி** - பூமியிலே நிலைநின்ற பழைதான புகழையுடைய பல்லவர்கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகர்மேல். **கார் இத்யாதி** - சினை கொண்ட வயலை உடைத்தாய் இருக்கும் ஆயிற்று. முக்தர் பஞ்ச விம்சதி வார்ஷிகராய் இருக்குமாப் போலே. "கருநெல்சூழ் கண்ண

---

வி : பத்தாம் பாட்டு : பார் மன்னு தொல் புகழ் பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகர்மேல் - *உலகில் நிலைநின்ற பழைதான புகழையுடைய பல்லவர்கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகர்மேல்.* கார் மன்னு நீள்வயல் மங்கையர்தம் தலைவன் கலிகன்றி - *சினை கொண்ட*[1] *வயலை உடைத்தாய் இருக்கும் திருமங்கை நாடு. வீடுபேறு பெற்றார் எப்பொழுதும் இருபத்தைந்து அகவையினராய் இருப்பது போலே வயல் எப்பொழுதும் செழிப்பு உடையதாய் இருக்கிறது.* கருநெல்சூழ் கண்ண மங்கை" *(பெ. தி. 10:1:1)*

---

**190.** 4 : 7 திகழ்வார்களே.

1. சினை கொண்ட - கதிர் வாங்கிய; செழித்த.

**மங்கை"** என்னக் கடவதிறே. **குன்றாது இத்யாதி** - கவிக்குச் சொல்லுகிற லக்ஷணங்கள் ஒன்றும் குறையாதபடி அருளிச்செய்த, பக்வத் குணங்கள் நெருங்கத் தொடுத்த செவ்விய தமிழ்த்தொடை வல்லார் பெரியபிராட்டியாருடைய கடாக்ஷத்தாலே லோகத்திலே மஹாரதராய்க் கடல் சூழ்ந்த பூமியை அடைய **ஆண்டு, திகழ்வர்களே** - உஜ்ஜ்வலராவர்கள். இந்த ஐஶ்வர்யம் அடைய மலடாய்ப் போகாமே இவரைப் போலே பாகவத சேஷம் ஆக்கப் பெறுவர்.

ஆக, இத்திருமொழியால், ஸர்வேஶ்வரன் விரும்பும் நிலம் ஆகையாலே இத்தேசம் ஆஶ்ரயணீயம் என்றும், அது தான் ஸர்வ ஸமாஶ்ரயணீயம் என்றும் சொல்லிற்று ஆயிற்று. அதாகிறது சமதமாத்யுபேதர்க்கிறே ஆஶ்ரயணத்தில் அதிகாரம் உள்ளது; அவை இல்லாதவனும் தாந்தனாய் ஆஶ்ரயிக்கும்படியான தேசமிறே.

---

என்று சொல்வர் அன்றோ. **குன்றாது** உரைத்த சீர் மன்னு செந் தமிழ் மாலை வல்லார் திருமாமகள்தன் அருளால் உலகில் தேர் மன்னராய் ஒலி மாகடல் சூழ் செழு நீர் உலகு **ஆண்டு** - பாட்டுக்குச் சொல்லும் இலக்கணங்கள் ஒன்றும் குறையாதவாறு அருளிச்செய்த செந்தமிழ்மாலை; இறைக் குணங்கள் நெருங்கத் தொடுத்த செவ்விய தமிழ்த்தொடை. இதனைக் கற்று வல்லவராய் இருப்போர், பெரியபிராட்டியாரின் கடைக்கண் நோக்கினாலே உலகத்தில் பெருந்தேர் மன்னராய்க் கடல் சூழ்ந்த மண்ணுலகை முற்றிலும் ஆள்வர். **ஆண்டு, திகழ்வர்களே** - புகர் உடையவர் ஆவர். இந்த இம்மைச் செல்வம் அடைய[1] மலடாய்ப் போகாமல்[2] இவரைப் போலே அடியார்க்கு உரியதாகச் செய்வர்.

ஆக இத்திருமொழியால் இவ் இடம் பெருமான் விரும்பும் நிலமாகையாலே பற்றத் தகுந்தது என்றும், இதுதான் எல்லார்க்கும் பற்றத்தகுந்தது என்றும் சொல்லப்பட்டன. அஃதாவது மனவடக்கம், பொறியடக்கம் ஆகியன கூடப்பெற்றார்க்கே பற்றுதற்கு உரிமை உள்ளது; அவை இல்லாதவனாயினும் பணிவுடையனாய் வணங்கத் தக்க இடம் என்க. (90)

---

1. அடைய-முழுவதும். 2. மடலாய்ப் போதல்-பயனின்றிக் கழிதல்.

## இரண்டாம் பத்து - பத்தாம் திருமொழி - மஞ்சாடு

பிர : "யுத்தேசாப்யபலாயநம்" என்றும் "ஈஸ்வரபாவஸ்ச" என்றும் சொல்லும்படியானவனும் கூட ஆஸ்ரயித்தபடியை அநுஸந்தித்தார். ஸ்வ வர்ணத்துக்கும் ஸ்வாஸ்ரமத்துக்கும் உசிதமான கர்மங்களை பலாபிஸந்தி ரஹிதமாக பகவத் ஸமாராதந புத்யா அநுஷ்டித்து சமதமாத்யுபேதராய் இருக்கும்[1] ப்ராஹ்மணருக்கு ஆஸ்ரயணீயனாய்க் கொண்டு பிராட்டிமாரும் தானுமாகத் திருக்கோவலூரிலே வந்து நின்றான். அவை ஒன்றும் இல்லாத நான் அவனை அங்கே கண்டு அநுபவிக்கப் பெற்றேன் என்கிறார்.

---

தோ : "போரில் புறங் கொடாதவன்" என்றும் "இறைவனாம் தன்மையன்" என்றும் சொல்லும்படி இருப்பவனும்கூட இறைவனைப் பற்றிய திறத்தை எண்ணினார். தம் சாதிக்கும் நிலைக்கும் சேர்ந்த கடன்களைப் பயனில் கருத்தின்றி இறைவழிபாடு என்னும் நினைப்போடு கடைப்பிடித்துப் பொறியடக்கம் மனவடக்கம் வாய்க்கப் பெற்றவராய் இருக்கும் மறையவர்களுக்குச் சாரத்தக்கவனாய்ப் பிராட்டிமாரும் தானுமாகத் திருக்கோவலூரிலே வந்து நின்றான். அம் மறையவர்க்கு உரிய தகுதிகள் ஒன்றும் இல்லாத நான் அவனை அங்கே கண்டு இன்புற்றேன் என்கிறார்.

### 191

மஞ்சாடு வரைஏழும் கடல்கள் ஏழும்
வானகமும் மண்ணகமும் மற்றும் எல்லாம்
எஞ்சாமல் வயிற்றடக்கி ஆலின் மேல்ஓர்
இளந்தளிரில் கண்வளர்ந்த ஈசன் தன்னைத்
துஞ்சாநீர் வளம்சுரக்கும் பெண்ணைத் தென்பால்
தூயநான் மறையாளர் சோமுச் செய்யச்
செஞ்சாலி விளைவயலுள் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.

ப. ரை : மஞ்சு ஆடு வரை ஏழும் - மேகங்கள் உலவுகின்ற குலமலைகள் ஏழும், கடல்கள் ஏழும்-, வானகமும் மண்ணகமும் - துறக்கம் முதலிய மேலுலகங்களும் நிலவுலகமும், மற்றும் எல்லாம் - மற்றும் உள்ள எல்லாப் பொருள்களும், எஞ்சாமல் வயிறு அடக்கி - அழிந்து போகாவண்ணம் திருவயிற்றிலே வைத்து, ஓர் ஆலின் இளந் தளிரின்மேலே - ஒப்பற்ற ஆலமரத்தினது பால்மாறாத இளந்தளிரிலே, கண்வளர்ந்த ஈசன்தன்னை - அறிதுயில் கொண்டருளிய முழுமுதற் கடவுளை, துஞ்சா வளம் - மாறாமல் மணி முதலிய வளத்தை, நீர் சுரக்கும் - நீரானது கொழிக்கின்ற, பெண்ணைத் தென்பால் - பெண்ணையாற்றுத்

---

1. இருக்கிற.

**191.** 2 : 1 எஞ்சாமை. 2 : 7 வீரன்.

தென்கரையிலே, தூய நான்மறையாளர் சோமுச் செய்ய - மனத் தூய்மையுடைய நான்கு மறைகள் கற்ற வேதியர்கள் சோமவேள்விகளைச் செய்ய, அதனால், செஞ் சாலி - செந்நெற் பயிர்களானவை, விளை வயலுள் திகழ்ந்து தோன்றும் - விளைநிலமான வயல்களிலே செழித்துத் தோன்றுகின்ற, திருக்கோவலூர்அதனுள் நான் கண்டேன் ..

**சி. கு :** துஞ்சாநீர் வளஞ் சுரக்கும் என்பதனைத் 'துஞ்சா வளம் நீர் சுரக்கும்' என்று மாற்றிக் கூட்டுக. சோமு - ஸோமம் என்னும் வடசொல் திரிபு. திருக்கோவலூர் - நடு நாட்டில் உள்ள இரு விண்ணகரங்களுள் ஒன்று. பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ளது. முதலாழ்வார் மூவரும் ஓர் இரவு சந்தித்து மூன்று திருவந்தாதிகளும் பாடிய இடம். பெருமான் திரிவிக்கிரமன் (உலகளந்த பெருமாள்); பெருமாட்டி பூங்கோவல் நாச்சியார்.

இத் திருமொழி காய் காய் மா மா, காய் காய் மா மா என்னும் வாய்பாட்டில் வந்த எண்சீர் ஆசிரிய விருத்தம்.

**வியா : முதற் பாட்டு :** ஆபத்ஸகன் என்கிறது. **மஞ்சாடு இத்யாதி** - மேகங்கள் ஸஞ்சரியாநிற்பதாய், பூமிக்கு ஆணியடித்தாப் போலே இருக்கிற மலைகள் ஏழும், இதுக்கு அடைய அகழ் போலே சூழ்ந்துகொடு நிற்கிற கடல்கள் ஏழும், இவற்றுக்கு[1] அடைய அவகாச ப்ரதாநம் பண்ணுகிற ஆகாசமும், இவற்றுக்கு[2] ஆதார மான பூமியும், இவற்றுக்கு[3] உட்பட்ட அநுக்தமான ஸர்வ பதார்த்தங்களும். **எஞ்சாமல்** - இவை சுருங்கி அழிந்து போகாதபடியாகத் திருவயிற்றிலே எடுத்து வைத்து, ப்ரளயத்துக்கு அஞ்சவும் அறியாதே, ஓர் ஆலின்மேலே, அது தன்னிலும் ஒரு பவனான இளந்தளிரிலே யோக நித்ரை கொண்டருளின, ஆதார ஆதேய பாவம்

---

**வி : முதற்பாட்டு :** மஞ்சாடு வரை ஏழும் வானகமும் மண்ணகமும் மற்றும் எல்லாம் எஞ்சாமல் வயிற்றடக்கி ஆலின்மேல் ஓர் இளந்தளிரில் கண்வளர்ந்த ஈசன்தன்னை - இறைவன் தளர்ந்தார் தாவளம்[4] என்பது சொல்லப்படுகிறது. மேகங்கள் உலவுவதாய் நிலவுலகிற்கு ஆணியடித்தாற் போலே இருக்கும் மலைகள் ஏழு, இவற்றை முற்றிலும் அகழ் போலே சூழ்ந்துகொண்டு நிற்கும் கடல்கள் ஏழு, இவற்றிற்கு எல்லாம் இடம் கொடுக்கும் வானம், இவற்றிற்கு அடித்தள மாய் அமைந்துள்ள நிலவுலகு, இவற்றுக்குட்பட்டனவாய் இருக்கும் சொல்லப் படாத அனைத்துப் பொருள்கள் ஆகிய அடங்கலும். **எஞ்சாமல்** - இவை சுருங்கி அழிந்து போகாதவாறு திருவயிற்றிலே எடுத்து வைத்தான்; வைத்து, ஊழி வெள்ளங்கண்டு அஞ்சவும் அறியாத குழவியாய் இருந்தான்; ஓர் ஆலின்மேலே, அது தன்னிலும், அவ்ஆலின் முகிழ்விரிந்த அளவான இளந் தளிரிலே அறிதுயில் கொண்டருளினான். இப்படி இடமும் இடத்தியல் பொருளுமாய் இருக்கும் தன்மை[5] தான் இட்ட வழக்காய் இருக்கும் முழுமுதற் பொருளை. அஃதாவது

---

1, 2, 3. இவைத்துக்கு.

4. தளர்ந்தார் தாவளம் - துன்புற்றார்க்குத் துணையாக இருப்பவன். தளர்ந்தார் - சோர்வுற்றார்; தாவளம் - தங்குமிடம். 5. ஆதாரம் என்பதற்கு நிலைக்களம் என்றும், ஆதேயம் என்பதற்குத் தாங்கப் படுவது என்றும் பொருள் இருத்தலால் அவற்றையொட்டி ஆதார ஆதேய பாவம் என்பதற்கு, 'இடனும் இடத்தியல் பொருளுமாய் இருக்கும் தன்மை' என்று தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது.

தன் புத்த்யதீந மாம்படி இருக்கிற ஸர்வேஶ்வரனை. **"ஆல் அன்று வேலை நீர் உள்ளதோ"** என்கிறபடியே.

**துஞ்சா நீர் இத்யாதி** - நீர்வரவு மாறாதே இருப்பதாய், பொன், முத்து, மாணிக்கங்களை அடையக் கொழித்து ஏறடாநின்றுள்ள பெண்ணைத் தென்கரையிலே. **தூய இத்யாதி** - அநந்ய ப்ரயோஜநரானார் ஸோம யாகங்களைப் பண்ண. **செஞ் சாலி இத்யாதி** - அவர்கள் பலாபிஸந்தி ரஹிதமாகச் செய்தாலும், கிழக்கு நோக்கிப் போமவனுக்கு அங்கு ஒரு தேச ப்ராப்தியும், மேற்கு நோக்கிப் போமவனுக்கு அங்கே ஒரு தேச ப்ராப்தியும் தவிராதாப் போலே செய்தவற்றுக்கு[1] பகவத் அபிப்ராயத்திலே ஒரு பலம் வரத் தவிராதிறே; ஆகையாலே த்ருஷ்ட பலங்கள் ஸம்ருத்தமாய்ச் செல்லாநிற்கும் ஆயிற்று. செஞ்சாலி உண்டு செந்நெல், அது விளைகிற வயலிலே திகழ்ந்து தோன்றாநின்றுள்ள திருக்கோவலூரிலே நான் காணப்பெற்றேன் என்கிறார்.

---

வரை தொடக்கமான பாரமான பொருள்களை மிக மென்மையான தன் வயிற்றில் பெருமான் வைத்ததும், தன்னைக்காட்டிலும் இளமையான ஆலந்தளிரில் தான் வளர்ந்தருளியதும் எவ்வாறு முடிந்தன என்னில், இவற்றுக்குத் தன் திருமேனி இடமாதலும் தன் திருமேனிக்கு ஆலிலை இடமாதலும் தான் இட்ட வழக்காய்க் கொண்டவன் ஆதலின் முடிந்தது என்க. இவை இப்படி அவன் நினைவின் வழி இருக்குமோ என்னில்,

" பாலன் தனதுருவாய் ஏழுலகுண் டாலிலையின்
மேல்அன்று நீவளர்ந்த மெய்என்பர் - **ஆல்அன்று
வேலைநீர் உள்ளதோ?** விண்ணதோ? மண்ணதோ?
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு " (மு. தி. 69)

என்று சொல்லப்படுவதற்கு ஒப்ப அவன் இட்ட வழக்காய் இருக்கும் என்க.

**துஞ்சா நீர் வளம் சுரக்கும் பெண்ணைத் தென்பால்** - நீர்வரவு மாறாமல் இருப்பது; பொன், முத்து, மாணிக்கங்களை அடையக் கொழித்துக்கொண்டு வந்து கரைகளில் ஏற்றுவது; இத்தகு பெண்ணையாற்றின் தென்கரையிலே. **தூய நான்மறையாளர் சோமுச் செய்ய** - இறைவனைத் தவிர மற்றொன்றும் வேண்டா மனத்தினர் சோம வேள்விகளைச்[2] செய்ய. **செஞ் சாலி விளை வயலுள் திகழ்ந்து தோன்றும் திருக்கோவலூர் அதனுள் கண்டேன் நானே** - அவர்கள் பயனைப்பற்றிக் கருத்தின்றிச் செய்தனர்; எனினும், கிழக்கு நோக்கிப் போவான் அங்கே ஒரு நாட்டினை அடைவதும் மேற்கு நோக்கிப் போவான் அங்கே ஒரு நாட்டினை அடைவதும் தவிராதது போலே செய்தவற்றிற்கு இறைவன் கருத்தாலே ஒரு பயன் தவிராது அல்லவா! ஆகையாலே இம்மைப் பயன்கள் நிறையக் கிட்டின. செஞ்சாலி - செந்நெல். அந்நெல் விளையும் வயலாலே திகழ்ந்து தோன்றுகின்ற திருக்கோவலூரிலே நான் காணப்பெற்றேன் என்கிறார்.

---

1. செய்தவைத்துக்கு.

2. சோமவேள்வி - சோமம் என்னும் ஒருவகைக் கொடியைக் கொண்டுவந்து அதன் சாற்றை எடுத்துத் தேவர்களுக்கு அளிப்பதாகச் செய்யும் ஒரு வேள்வி.

**ஒப்புமைப் பகுதி**

1. **வரை, கடல், வானகம், மண்ணகம் ஆகியவற்றைச் சொற்பெய்து விளக்குதல்**

   *பாட்டு 182இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **உலகனைத்தும் உண்ட வயிறு உடையவன்**

   *பாட்டு 39, 76 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

3. **பெண்ணையாறு**

   *" நிலம் பரந்து வரும் கலுழிப் பெண்ணை "*

   *" நிலம் பரந்து வரும் - புருஷோத்தமனை ஒரு ஸ்த்ரீ அநுபவிக்கப் போகிறாளாகையாலே அத்யாதரத்தோடேயாயிற்றுப் போகிறது. திருக்கோவலூரை அநுபவிக்கப்போகிற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே கரைக்கும் மீதே வழிந்து குடியிருப்புக்களை அழித்து, கரையில் நிற்கிற வேய்களை பீட்கன்றாக வேர்ப்பற்றிலே குத்தி எடுத்துக்கொண்டு வருவதாய்க் கொண்டு பெரிய கிளர்த்தியோடே வருகிறபடி "*

   *தி. நெ. தா. 6 பெ. உரை.*

   *[அத்யாதரம் - மிக்க காதல். ப்ரீதி ப்ரகர்ஷம் - இன்பப் பெருக்கு.]*

4. **நான்மறையாளர்**

   *" நிற்கும் நான்மறை - அபௌருஷேயமாய் நித்யமான வேதங்கள். வாணர்- வேதங்கள் தாங்கள் இட்ட வழக்காய்ச் செல்லுகையாலே வ்யாஸபதம் செலுத்த வல்லவர்கள் "* *தி. வா. மொ. 6:5:4-24*

   *[வ்யாஸபதம் - வியாசருடைய பதவி. அபௌருஷேயம் - மனிதனால் செய்யப்படாதது.]*

5. **திருக்கோவலூர்**

   *"பூங்கோவலூர் தொழுதும் - அவனையொழிய அத்தேசமே போக்யமாம் படியிறே இவர் திருப்பதிகளிலே மண்டினபடி " தி. நெ. தா. 7 பெ.உரை.*

   *(91)*

## 192

**கொந்தலர்ந்த நறுந்துழாய் சாந்தம் தூபம்**
**தீபம்கொண் டமரர்தொழப் பணம்கொள் பாம்பில்**
**சந்தணிமென் முலைமலராள் தரணி மங்கை**
**தாம்இருவர் அடிவருடும் தன்மை யானை**
**வந்தனைசெய் திசையேழா றங்கம் ஐந்து**
**வளர்வேள்வி நான்மறைகள் மூன்று தீயும்**
**சிந்தனைசெய் திருபொழுதும் ஒன்றும் செல்வத்**
**திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.**

**ப. ரை :** **கொந்து அலர்ந்த நறுந் துழாய்** - கொத்தாக மலர்ந்துள்ள மணம் மிக்க திருத்துழாய் மலர்களையும், **சாந்தம் தூபம் தீபம் கொண்டு** - சந்தனத்தையும், நறும்புகையையும், விளக்கையும் கையில் எடுத்துக்கொண்டு, **அமரர் தொழ** - தேவர்கள் வணங்க, **பணம் கொள் பாம்பில்** - படத்தைக் கொண்ட திருவனந்தாழ்வான் மேலே, **சந்து அணி மென் முலை மலராள்** - சந்தனத்தாலே ஒப்பனை செய்யப்பட்ட மெல்லிய முலைகளையுடைய திருமகளும், **தரணிமங்கை** - நிலமகளும் ஆகிய, **இருவர்தாம் அடி வருடும் தன்மையானை** - இருவரும் திருவடிகளைப் பிடித்து விடும்படி உள்ள பெருமானை, **ஏழு இசை** - ஏழு இசைகளையும், **ஆறு அங்கம்** - ஆறு அங்கங்களையும், **ஐந்து வளர் வேள்வி** - ஐம்பெரும் வேள்விகளையும், **மூன்று தீயும்** - மூன்று நெருப்புகளையும்கொண்டு, **வந்தனை செய்து** - அவனை வணங்கி, **நான்மறைகள் இரு பொழுதும் சிந்தனை செய்து** - நான்கு வேதங்களை இரவு பகல் என்னும் இருபோதும் எண்ணிக்கொண்டு, **ஒன்றும்** - பொருந்தி வாழும், **செல்வம்** - செல்வத்தையுடைய, **திருக்கோவலூர் அதனுள் நான் கண்டேன்** -.

**சி. கு :** **கொந்து** - கொத்து. தாம் இருவர் என்பதனை இருவர்தாம் என்று மாற்றிக் கூட்டுக. நான்மறைகள் என்பதனோடு இருபோதும் சிந்தனை செய்து என்பதனைக் கூட்டுக.

**வியா : இரண்டாம் பாட்டு : கொந்து அலர்ந்த இத்யாதி** - கொந்து அலராநின்றுள்ள செவ்வித் திருத்துழாய் மாலையையும், கந்த தூப தீபங்களையும்கொண்டு ப்ரஹ்மாதிகள் இக்கரையிலே நின்று ஆஶ்ரயியாநிற்பர்கள் ஆயிற்று. **பணம் இத்யாதி** - தன்னோட்டை ஸ்பர்சத்தாலே விகஸிதம் ஆகா நின்றுள்ள திருவநந்தாழ்வான் மேலே, போகயோக்யம் ஆம்படி ஒப்பித்திருக்கிற பெரியபிராட்டியாரும் ஸ்ரீபூமிப்பிராட்டியாரும் ஆகிற இருவரும், ஆஶ்ரயிக்கிற ப்ரஹ்மாதிகளுடைய குற்றம் இல்லாமை ஏற்றுவாரும்[1] குற்றம் காணாமைக்கு உவாத்தாய் இருப்பாரும் ஆயிற்று. **அடி வருடும்** - ஸர்வஜ்ஞனாகையாலே அவன் அறியப் புக்காலும் தங்களுடைய திருக்கை ஸ்பர்சத்தாலே அவன் மயங்கி உறங்கும்படி பண்ணுவார்கள் ஆயிற்று.

---

**வி : இரண்டாம் பாட்டு : கொந்து அலர்ந்த நறுந் துழாய் சாந்தம் தூபம் தீபம் கொண்டு அமரர் தொழ** - கொத்து அலர்ந்த செவ்வித் திருத்துழாய் மாலை, நறும்புகை, விளக்கு ஆகியவற்றைக் கைக்கொண்டு பிரமன் முதலானோர் திருபாற்கடலுக்கு இக்கரையிலே நின்று பணிந்து நிற்பர். **பணம் கொள் பாம்பில் சந்து அணி மென் முலை மலராள் தரணி மங்கை தாம் இருவர் அடி வருடும் தன்மையானை** - தன் திருமேனிச் சேர்த்தியாலே மலர்ந்த திருவனந்தாழ்வான் மேலே பள்ளிகொண்டுள்ளான். அங்கு நுகரும் இன்பத்திற்குத் தகுந்தவாறு தம்மை ஒப்பனை செய்திருக்கும் திருமகளும் நிலமகளும் ஆகிய இருவரும் உடனிருக்கின்றனர்; அவ்இருவரும், தொழுகின்ற பிரமன் முதலானோரது குற்றம் காணாதவாறு பெருமானை ஏற்றுவாரும், குற்றம் காணாமை கற்பிப்பாரும் ஆவர். **அடி வருடும்** - முற்றறிவினன் ஆகிய அவன் அறியத் தொடங்கினாலும் முடியாதவாறு தங்கள் திருக்கை ஊற்றின்பத்தாலே மயங்கி உறங்கும்படி பண்ணுவர்.

---

1. ஏத்துவாரும்.

**வந்தனை இத்யாதி** - க்ருத ப்ரணாமராய், ஏழிசையாலும், ஆறு அங்கங்களாலும், பஞ்ச மஹா யஜ்ஞங்களாலும், மூன்று அக்நிகளாலும், வந்தனை செய்து அவனை ஆச்ரயித்து, நான்மறைகளைக்கொண்டு. **சிந்தனை செய்து** - **"ஆத்மேத்யேவது க்ருஹ்ணீயாத்" "ஆத்மேதிதூ பகச்சந்திக்ராஹயந்திச"** என்கிறபடியே அவனை ப்ரகாரியாகவும் தங்களை ப்ரகாரமாகவும் காலங்கள் தோறும் ஒருபடிப்பட அநுஸந்தித்துச் சொல்லுகிற அந்த ப்ராஹ்மியான லக்ஷ்மி மாறாதே செல்லும் ஆயிற்று.

---

வந்தனை செய்து இசை ஏழு ஆறு அங்கம் ஐந்து வளர் வேள்வி மூன்று தீயும் - *வணங்கியவர்களாய் ஏழிசையாலும், மறைகளை அறியத் துணைபுரியும் ஆறு கருவிகளாலும், ஐம்பெரும் வேள்விகளாலும், மூன்று தீயினாலும் வந்தனை செய்து, அஃதாவது அவனை வணங்கி.* நான்மறை - *நான்கு மறைகளைக் கொண்டு.* சிந்தனை செய்து இரு பொழுதும் ஒன்றும் - "தன் உயிர் என்றே ஏற்றுக்கொள்ளத்தக்கது" *(டங்கபாஷ்யம்) என்றும்,* "பரம்பொருளைத் தன் உயிராகவே (உள்ளுறை உயிராகவே) இடையறாது நினைக்க வேண்டும்; அவ்வாறே எண்ணுகின்றனர்; வேதத் தொடர்களும் இப்படியே தெரிவிக்கின்றன" *(பிரம்ம சூத்திரம் 4:1:3) என்றும் தெரிவித்தற்கு ஏற்ப அவனைப் படிகொளியாகவும், தங்களைப் படியாகவும் காலங்கள் தோறும் ஒருபடிப்பட எண்ணிச் சொல்லும் அந்த இறைவழிபாடு ஆகிய திரு மாறாமல் செல்லுகிறது, அவ்இடத்தில். அத்தகைய,* திருக்கோவலூர் அதனுள் நான் கண்டேன் -.

## ஒப்புமைப் பகுதி

### திருமகளும் தரணிமங்கையும்

> *" தேவியராவர் திருமகள் பூமி - 'நகச்சிந் நாபராத்யதி' என்று பொறைக்கு உவாத்தாய் இருக்கும் ஒருத்தி, 'பொறுப்பது எத்தை? குற்றந்தான் உண்டோ?' என்று அந்தப் பொறை விளையும் பூமியாய் இருக்கும் ஒருத்தி "*
> *தி. வா. மொ. 8:1:1-36*

> *" மணாளன் மலர் மங்கைக்கும் மண் மடந்தைக்கும் - பிராட்டிக்கும், ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும் வல்லபன், புருஷகாரமாவாரும் பொறைக்கு உவாத்தாவாரும் உண்டாய் இருக்க இழக்கக் கடவேனோ? "*
> *தி. வா. மொ. 9:8:5-24*

*[புருஷகாரமாவார் - பெருமானை உயிர்கள் அடைவதற்கு இருவருக்கும் இடைநின்று செயற்படுபவள்; பேறு தருவிக்குமவள்.]*

*(92)*

193

கொழுந்தலரும் மலர்ச்சோலைக் குழாங்கொள் பொய்கைக்
கோள்முதலை வாள்எயிற்றுக் கொண்டற் கெள்கி
அழுந்தியமா களிற்றினுக்கன் றாழி ஏந்தி
அந்தரமே வரத்தோன்றி அருள்செய் தானை
எழுந்தமலர்க் கருநீலம் இருந்தில் காட்ட
இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன் காட்டச்
செழுந்தடநீர்க் கமலம்தீ விகைபோல் காட்டும்
திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.

ப. ரை : கொழுந்து அலரும் மலர்ச் சோலைக் குழாம் கொள் பொய்கை - தளிர்களையும் மலர்கின்ற பூக்களையுமுடைய சோலைகளின் கூட்டங்கள் சூழ்ந்த தடாகத்திலே, கோள் முதலை வாள் எயிற்றுக் கொண்டற்கு - வலிமை பொருந்திய முதலை தன்னுடைய வாள் போலும் பற்களினாலே காலைக் கவ்வியதற்கு, எள்கி - மெலிந்து, அழுந்திய - வருந்திய, மாகளிற்றினுக்கு - கயேந்திராழ்வானுக்கு, அன்று - ஆதி மூலமே என்று கூப்பிட்ட அப்பொழுதில், ஆழி ஏந்தி - சக்கரப்படையைக் கையில் எடுத்துக்கொண்டு, அந்தரமே வரத் தோன்றி - வானத்திலே வந்து தோன்றி, அருள் செய்தானை - அவ்யானைக்கு அருள் புரிந்தவனை, எழுந்த கருநீல மலர் - நீரிலிருந்து வெளிப்பட்ட கருநெய்தற்பூவானது, இருந்தில் காட்ட - கரியைக் காட்டவும், இரும் புன்னை - பெரிய புன்னைமரங்கள் மொட்டாலே, முத்துக் காட்ட - முத்துகளைக் காட்டவும், அரும்பி - மலர்ந்து, செம் பொன் காட்ட - பசும் பொன்னைக் காட்டவும், செழு நீர்த் தடம் கமலம் - செழித்த நீரையுடைய தடாகங்களில் உள்ள தாமரைகள், தீவிகை போல் காட்டும் - விளக்குப் போலே தோற்றம் அளிக்கும், திருக்கோவலூர்அதனுள் நான் கண்டேன்-.

சி. கு : கொண்டதற்கு என்பது கொண்டற்கு என வந்தது; தொகுத்தல் விகாரம்; தகரம் தொக்கது. அந்தரமே வரத்தோன்றி என்பதனை அந்தரம் மேவரத் தோன்றி என்று கொண்டு வானம் இடம் அடையும்படி வந்து தோன்றி என்று உரை கூறுவாரும் உண்டு. அந்தரம் ஏவர என்று கொண்டு, ஏவர என்பதற்கு 'வெளியடைய' என்று உரை கண்டுள்ளார் பெரியவாச்சான்பிள்ளை. ஏவர என்பதற்கு இப்பொருள் யாண்டும் இல்லை; இது புதுமையாக உள்ளது; 'அந்தரமே வரத்தோன்றி' என்று கொள்வதே பொருத்தமாகும்.

வியா : மூன்றாம் பாட்டு : கொழுந்து இத்யாதி - கொழுந்தையும் அலருகிற மலரையுமுடைய சோலை சூழ்ந்த பொய்கையிலே. கோள் முதலை -

---

வி : மூன்றாம் பாட்டு : கொழுந்து அலரும் மலர்ச்சோலைக் குழாம்கொள் பொய்கை - கொழுந்தையும் அலருகிற மலரையுமுடைய சோலை சூழ்ந்த பொய்கையிலே. கோள் முதலை வாள் எயிற்றுக் கொண்டற்கு எள்கி - காலனைப் போலே

ம்ருத்யு போலே இத்தை அடைய முடிக்க வந்த முதலை, வாள் போலே இருக்கிற எயிற்றாலே இத்தைக் க்ரஹித்தது ஆயிற்று. அதுக்கு, **எள்கி** - ஈடுபட்டு. **அழுந்திய இத்யாதி** - வாயிலே அகப்பட[1] நீர்புகும்படி அழுந்தின மத்த கஜத்துக்காக. **அன்று** - தன் மிடுக்கு அற்ற அன்று. **ஆழி ஏந்தி** - கையில் திருவாழியையும் விட அறியாதே ஆகாசாவகாசத்தை இடம் அடைத்துக் கொண்டு தோற்றி. **அருள் செய்தானை** - ஏவர - வெளி அடைய, அதினுடைய புண் ஆறும்படியாகத் திருக்கையாலே ஸ்பர்சித்துத் திருப்பரியட்டத் தலையாலே ஒற்றிப் பண்ணின சிசிரோபசாரங்களை நினைக்கிறது.

**எழுந்த இத்யாதி** - எழுந்த மலரை உடைத்தான கறுத்த நீலமானது. **இருந்தில்** - கரியைக் காட்ட. பெரிய புன்னைகளானவை மொட்டாலும் அலர்ந்த பூவாலும் ஆகப் பொன்னையும் முத்தையும் காட்ட. மிக்க ஜலத்தை உடைத்தான தடாகங்களில் தாமரைகளானவை தீபிகைகளைக் காட்டாநிற்கும் ஆயிற்று. ஆக, கரியும் முத்தும் நெருப்பும் பொன்னுமாய்ப் பொற்களரி போலே ஆயிற்று வயல் அடைய இருப்பது.

---

*இவ்யானையின் காலை மட்டும் துண்டித்துக்கொண்டு போகாமல் முற்றிலும் முடிக்க வந்த முதலை; அது தன் வாள் போலே இருக்கும் எயிற்றாலே இதனைக் கவ்விற்று.* எள்கி - *அதற்கு ஈடுபட்டு; அஃதாவது இரங்கி.* அழுந்திய மாகளிற்றினுக்கு - *வாயிலே அகப்பட[2] நீர்புகும்படி அழுந்திய யானைக்காக.* அன்று - *தன் மிடுக்கு அற்ற அன்று.* ஆழி ஏந்தி - *கையில் திருவாழியையும் விட அறியாமல் வானவெளியை இடம் அடைத்துக் கொண்டு தோற்றி.* ஏவர - வெளியடைய[3]. அருள் செய்தானை - *அதனுடைய புண் ஆறும்படி திருக்கையாலே தொட்டுத் திருப்பரியட்டத் தலையாலே[4] ஒற்றிப் பண்ணிய இனிய உதவிகளை நினைக்கிறார்.*

எழுந்த மலர்க் கருநீலம் - *எழுந்த மலரையுடைய கறுத்த நீலமானது.* இருந்தில் காட்ட - *கரியைக் காட்ட.* இரும் புன்னை முத்து அரும்பிச் செம் பொன் காட்ட - *பெரிய புன்னைகள் மொட்டாலும் அலர்ந்த பூவாலும் பொன்னையும் முத்தையும் காட்ட.* செழுந் தட நீர்க் கமலம் தீவிகை போல் காட்டும் - *மிக்க நீரையுடைய தடாகங்களில் தாமரைகள் விளக்குகளைக் காட்டி நிற்கின்றன. ஆக, கரியும் முத்தும் நெருப்பும் பொன்னுமாய்ப் பொற்களரி போலே வயல்கள் அடைய இருக்கின்றன. அத்தகைய,* திருக்கோவலூர்அதனுள் கண்டேன் நானே -.

**ஒப்புமைப் பகுதி**

**1. களிற்றினுக்கு அருள் செய்தவன்**

*பாட்டு 75இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

---

1. அகப்பட்ட.
2. அகப்பட - உள்ளே இடமின்றி. 3. ஏவர என்பது புதுமையான வடிவமாகத் தோற்றுகிறது. 'வெளியடைய' என்று பொருள் கொள்ளப்பட்டிருப்பதால் மேவர என்பதனைப் பிழையாக ஏவர என்று ஏடெழுதுவோர் எழுதினர் போலும் என்று எண்ண வேண்டியுள்ளது. 4. திருப்பரியட்டத் தலை - மேலாடைத் தலைப்பு.

2. கோள் முதலை வாள் எயிறு

*" வெள்ளெயிறு உற - அங்கு ஆமிஷம் இல்லாமையாலே மணலையிறே பக்ஷிப்பது; ஆகையாலே சாணையில் இட்ட ஶஸ்த்ரம் போலே காணும் இருப்பது " தி. ப. எ. 2 பெ உரை.*

*[பக்ஷிப்பது - உண்பது]* *(93)*

## 194

**தாங்கரும்போர் மாலிபடப் பறவை ஊர்ந்து**
**தராதலத்தோர் குறைமுடித்த தன்மை யானை**
**ஆங்கரும்பிக் கண்ணீர்சோர்ந் தன்பு கூரும்**
**அடியவர்கட் காரமுதம் ஆனான் தன்னைக்**
**கோங்கரும்பு சுரபுன்னை குரவார் சோலைக்**
**குழாம்வரிவண் டிசைபாடும் பாடல் கேட்டுத்**
**தீங்கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த**
**திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.**

**ப. ரை:** தாங்கு அரும் போர் மாலி பட - *ஒருவராலும் தாங்கமுடியாதபடி போர்புரியும் மாலி என்னும் அரக்கன் முடியுமாறு,* பறவை **ஊர்ந்து** - *பெரிய திருவடியை நடத்தி,* தராதலத்தோர் குறை முடித்த தன்மையானை - *உலகில் உள்ளோர் குறைகளைப் போக்கிய இயல்பு உடையவனும்,* ஆங்கு - *பகைவர் களைப் போக்கிய அச்சமயத்தில்,* கண்ணீர் அரும்பிச் சோர்ந்து - *கண்ணீர் தோன்றிப் பெருகி வழிய,* அன்பு கூரும் அடியவர்கட்கு - *அன்பு மிகும் அடியவர் களுக்கு,* **ஆர்** அமுதம் **ஆனான்**தன்னை - *அமுதம் போலே இருப்பவனுமான பெருமானை,* கோங்கு அரும்பு - *கோங்கம் பூக்களும்,* சுரபுன்னை - *சுரபுன்னை களும்,* குரவு - *குரவு மரங்களும்,* ஆர் சோலை - *செறிந்த பொழில்களிலே,* குழாம் வரி வண்டு - *கூட்டங் கூட்டமாக உள்ள அழகிய வண்டுகள்,* இசை பாடும் பாடல் கேட்டு - *இசைக்கின்ற பாட்டைக் கேட்டு,* தீம் கரும்பு கண்வளரும் - *இனிய கரும்புகளானவை கணு ஏறிவளர்கின்ற,* கழனி சூழ்ந்த - *வயல்களால் சூழப்பெற்ற,* திருக்கோவலூர்அதனுள் நான் கண்டேன் -.

**சி. கு :** *சோர்ந்து என்னும் செய்தென் எச்சத்தைச் செயவென் எச்சமாக்குக.*

**வியா :** **நாலாம் பாட்டு :** தாங்கு அரும் இத்யாதி - பழம்புற்று பாம்பு அறாதாப் போலே ராவணனுக்கு முன்பு மாலி உள்ளிட்ட துர்வர்க்கம்

---

**வி :** நாலாம் பாட்டு : தாங்கு அரும் போர் மாலி படப் பறவை **ஊர்ந்து** - *பழம் புற்றுப் பாம்பு அற்றுப்போகாமல் இருப்பது போலே இராவணனுக்கு முன்பு*

---

**194.** 3 : 5 குழாவரிவண்.

மாறாதே ஆயிற்று லங்கை இருப்பது; அவர்களை நிரஸித்தபடி. ஒருவரால் தாங்க அரிதாம்படி யுத்தத்தில் வ்யாபாரத்தையுடைய மாலி படும்படியாகப் பெரிய திருவடியை நடத்தி. **தராதலம்** - அரைக்ஷணம் பின்னையும் மாலி இருந்தானாகில் ஜகத்தாக[1] அழியும் ஆயிற்று. **ஆங்கு இத்யாதி** - ஸ்வ விஷயத்தில் ப்ரேமத்தாலே கண்ணநீர் அரும்பி, அது தான் கண்ணைவிட்டுச் சோர, ப்ரேமபரவசராய் இருக்கும்[2] சேஷபூதர்க்கு நிரதிசய போக்யன் ஆனவனை.

**கோங்கு இத்யாதி** - கோங்கம்பூக்களும், ஸுரபுன்னைகளும்[3], குரவுகளும் மிக்கு இருந்துள்ள சோலையிலே திரண்ட[4] வண்டுகளானவை மதுபாந மத்தமாய்ப் பாடுகிற பாட்டைக் கேட்டு, அத்தாலே நீர் பாய்ந்தாப் போலே இருக்கிற இனிய கரும்பானது ஒரு கண் ஏறி வாராநிற்கும் ஆயிற்று.

---

*மாலி உள்ளிட்ட தீயோர் கூட்டம் மாறாததாய் இருந்தது இலங்கை. அவர்களை முடித்த திறம் கூறப்படுகிறது. ஒருவரால் தாங்குவதற்கு அரிதாய்ப் போரில் மோதும் மாலி படும்படி பெரிய திருவடியை நடத்தி.* **தராதலத்தோர் குறை முடித்த தன்மையானை** - *அரைக்கணம் பின்னும் மாலி இருந்தான் என்றால் உலகம் எல்லாம் அழிந்து போய்விடும். அப்போது அம்மாலியை அழித்து உலகத்தார் குறைகளைப் போக்கியவனை.* **ஆங்கு அரும்பிக் கண்ணீர் சோர்ந்து அன்பு கூரும் அடியவர்கட்கு ஆரமுதம் ஆனான் தன்னை** - *தன்னிடத்திலே காதலாலே கண்ணநீர் அரும்பி, அது கண்ணைவிட்டுச் சோரக் காதல்வயப்பட்டவராய் இருக்கும் அடியவர்கட்கு எல்லையற்ற இன்பப் பொருளாய் இருப்பவனை.*

**கோங்கு அரும்பு சுரபுன்னை குரவு ஆர் சோலை குழாம் வரி வண்டு இசை பாடும் பாடல் கேட்டு** - *கோங்கம்பூக்களும், சுரபுன்னைகளும் குரவுமரங்களும் மிக்குள்ள சோலையிலே திரண்ட வண்டுகள் மது உண்டு களித்தனவாய்ப் பாடும் பாட்டைக் கேட்டு,* **தீங் கரும்பு கண்வளரும்** - *அதனாலே நீர் பாய்ந்தாற் போலே இருக்கும் இனிய கரும்பானது ஒரு கணு மேல் எழுந்து நிற்கும் என்க.* **அத்தகைய, கழனி சூழ்ந்த திருக்கோவலூர் அதனுள் கண்டேன் நானே -.**

**ஒப்புமைப் பகுதி**

1. மாலிபடப் பறவை ஊர்ந்தவன்

*" அன்று இலங்கை கடந்து பிலம்புக்கு ஒளிப்ப,*
*மீளியம்புள்ளைக் கடாய் விறல் மாலியைக் கொன்று... "*

*" அன்றித்யாதி - தூசித் தலையில் நேர்நின்று வ்யாபரிக்க க்ஷமர் அல்லாமையாலே லங்கையைவிட்டுப் போய்ப் பாதாளத்திலே புக்கு ஒளிப்ப. புற்றுக்கள் எப்போதும் ஒக்கப் பாம்பு பற்று அறாதாப்போலே, என்றும் ஒக்க ராக்ஷஸர் மாறாதே, மாலி, ஸுமாலி, மால்யவான், என்றாப்போலே சொல்லுகிறவர்கள் வர்த்தித்துப் போந்தார்களாய்,*

---

1. ஜகத்தடைய. 2. பரவசர் ஆம்படியாய் இருக்கும். 3. சுரபுன்னைகளும். 4. திரண்டு.

*பெரிய திருவடி முதுகிலே வந்து தோற்றி அவர்களை நிரஸித்தானாகச் சொல்லக்கடவதிறே; அத்தை இங்கே ப்ரஸங்கிக்கிறார் "*

*தி. வா. மொ. 7:6:8-36*

*[வ்யாபரித்தல் - செயற்படல். க்ஷமர் - தகுந்தவர். வர்த்தித்தல் - வாழ்தல். நிரஸித்தல் - அழித்தல்.]*

**2. இறைவன் என்னும் அமுதம்**

*" அமுதம் உண்ணா - ஸ்வரூப ப்ராப்தமுமாய், நித்யாநுபாவ்யமுமாய் இருக்கும் அம்ருதமாய்த்து இது "*

*[ஸ்வரூப ப்ராப்தம் முயற்சியின்றிக்கே தனக்கு இயற்கையாய் அடையத் தக்கதாய் இருப்பது. நித்யாநுபாவ்யம் - என்றும் நுகரத்தக்கது.]*

*" ஆராஅமுதே இத்யாதி - நாட் செல்ல நாட்செல்ல விடாயைப் பிறப்பிக்கும் விஷயம் என்கை "* *தி. வா. மொ. 5:8:1-24*

*பாட்டு 144இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

*(94)*

## 195

**கறைவளர்வேல் கரன்முதலாக் கவந்தன் வாலி**
**கணைஒன்றி னால்மடிய இலங்கை தன்னுள்**
**பிறைஎயிற்று வாள்அரக்கர் சேனை எல்லாம்**
**பெருந்தகையோ டுடன்துணித்த பெம்மான் தன்னை**
**மறைவளரப் புகழ்வளர மாடம் தோறும்**
**மண்டபம்ஒண் டொளிஅனைத்தும் வாரம் ஓதச்**
**சிறைஅணைந்த பொழில்அணைந்த தென்றல் வீசும்**
**திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.**

ப. ரை : **கறை வளர் வேல்** - *குருதிக் கறை ஏறப்பெற்ற வேலையுடைய,* **கரன் முதலா** - *கரன் தொடக்கமான,* **கவந்தன் வாலி** - *கவந்தன் வாலி என்னும் தீயோர்,* **கணை ஒன்றினால் மடிய** - *ஓர் அம்பாலே அழியும்படி,* **இலங்கை தன்னுள்** - *இலங்கை மாநகரில்,* **பிறை எயிற்று வாள் அரக்கர் சேனை எல்லாம்** - *பிறை போலும் பற்களையுடைய வாள் ஏந்திய அரக்கர் படைகள் முழுவதனையும்,* **பெருந்தகையோடு உடன் துணித்த** - *அவற்றுக்குத் தலைவனான இராவணனோடு கொன்ற,* **பெருமான் தன்னை** - *பெருமானை,* **மாடம் தோறும் மறை வளரப் 'புகழ் வளர** - *ஒவ்வொரு வீட்டிலும் வேத ஒலி மிக்கு வரவும், புகழ் ஓங்கவும்,* **மண்டபம் ஒண் தொளி அனைத்தும்** - *மண்டபங்கள் அழகிய நாற்சந்திகள் ஆகிய இடங்களில் எல்லாம்.* **வாரம் ஓத** - *வாரம் ஓதுகை என்னும் பயிற்சியைச் செய்யவும்,* **சிறை**

---

**195.** 4 : 2 பொழில் அணைந்து.

**அணைந்த பொழில் அணைந்த தென்றல் வீசும்** - *நீர் அரணையுடைய சோலையில் சேர்ந்த தென்றல் காற்றுத் தவழ்கின்ற,* **திருக்கோவலூர் அதனுள் நான் கண்டேன்**-.

**சி. கு :** *வாரம் - வேதம் ஓதும் முறைகளுள் ஒன்று. அஃது ஒருவர் தொடக்கத்தை எடுத்துத் தர அப்பகுதியினை மயங்காமல் சொல்வதாகும். ஓதின இடத்தைச் சொல்லுதல் என்றும் சொல்வர்.*

வியா : **அஞ்சாம் பாட்டு : கறை இத்யாதி** - பர ஹிம்ஸையில் த்வரையாலும், எப்போதும் ஒக்க சத்ரு நிரஸநம் பண்ணுகையாலும், கறை கழுவுகைக்கு அவகாசம் இன்றிக்கே இருக்கையாலே மிக்க கறையை உடைத்தாய் இருக்கிற வேலையுடைய கரன் துடக்கமான கபந்தன், வாலி என்கிற இவர்கள். கரன் விராதன் இவர்கள் வந்து தோற்றுகிற போது, ஸிம்ஹங்கள் புலிகள் இவற்றைச்[1] சூலத்திலே கோத்துக்கொண்டு வந்திறே தோற்றுவது. **கணை ஒன்றினால் மடிய** - கைக்கு எட்டிற்று[2] ஓர் அம்பாலே முடித்தானிறே. தலைக்காவல் இருந்தவர்கள் பட்டது இது. **இலங்கை இத்யாதி** - இலங்கையில் பிறை போலே இருக்கிற எயிற்றை உடையருமாய், ஸாயுதருமாய் இருக்கிற ராக்ஷஸ ஸேனை எல்லாம். **பெருந்தகை இத்யாதி** - 'பெருந்தகை' என்றது பெரியான்[3] என்றபடி; பெருந்தகை - நிர்வாஹகன்; ராக்ஷஸ ராஜனிறே. இவர்களுக்கு அடைய ப்ரபுவாய், அஞ்சினான் புகல் இடமாய், அநீதி செய்த பையல்களுக்குப் புக்கு ஒதுங்குகைக்கு நிழலாய் இருக்கிற ராவணனோடே கூட அழியச்செய்த ஸ்வாமிதன்னை. உடையவனிறே க்ஷேத்ரத்தில் களை பிடுங்குவான்.

---

வி : அஞ்சாம் பாட்டு : **கறை வளர் வேல் கரன் முதலாக் கவந்தன் வாலி** - *பிறரைத் துன்புறுத்துவதில் உள்ள துடிப்பாலும், எப்போதும் ஒக்கப் பகைவர்களை முடிக்கையாலும், கறை கழுவுவதற்குக் காலம் இல்லை. ஆகையாலே மிக்க கறையை உடைத்தாய் இருக்கிறது வேல். அத்தகைய வேலையுடைய கரன் தொடக்கமாகக் கவந்தன், வாலி என்னும் இவர்கள். கரன் விராதன் என்னும் இவர்கள் வந்து தோற்றும்போது சிங்கங்கள் புலிகள் இவற்றைச் சூலத்திலே கோத்துக்கொண்டு வந்தன்றோ தோற்றுவர்.* **கணை ஒன்றினால் மடிய** - *கைக்கு எட்டியதோர் அம்பாலேயே முடித்தான். தலைக் காவல் இருந்தவர்கள் பட்டது இது. இனித் தலைவன் பட்டது தெரிவிக்கிறார்.* **இலங்கைதன்னுள் பிறை எயிற்று வாள் அரக்கர் சேனை எல்லாம்** - *இலங்கையில் பிறை போலே இருக்கும் எயிற்றை உடையவருமாய்ப் படையோடு கூடியவருமாய் இருக்கும் அரக்கர் படைகளை எல்லாம்.* **பெருந்தகையோடு உடன் துணித்த பெம்மான்தன்னை** - *பெருந்தகை - பெரியோன்; பெருந்தகை - ஆட்சி நடத்துபவன்; அரசன். இவர்களுக்கு எல்லாம் முதலாளியாய், அஞ்சினான் புகலிடமாய், முறை தவறி நடக்கும் பையல்களுக்குப் புக்கு ஒதுங்குகைக்கு நிழலாய் இருப்பவன். அவ் இராவணனோடேகூட அழியச்செய்த தலைவன்தன்னை; வயலுக்கு உரியவன் தானே வயலில் களை பிடுங்குவான்.*

---

1. இவைத்தை. 2. எட்டித்து. 3. பெரியோன்.

ராவண வதாநந்தரத்தில் ஸ்ரீதண்டகாரண்யத்தில் அத்யயந அநுவாகங்கள் மாறாதாப் போலே ஆயிற்று அவன் பட்ட பின்பு திருக்கோவலூரும். **மாடம் தோறும்** - க்ருஹங்கள் தோறும் வேத கோஷமானது மிக்கு வர. அந்த வேத கோஷத்தினுடைய அவிச்சேதத்தால் வந்த கீர்த்தி மிக்கு வர. இது ஆயிற்று க்ருஹங்கள் இருக்கும்படி. **மண்டபங்கள்** -. **ஒண் தொளி** - அழகிய தோளி. 'தோளி' என்கிறத்தைக் குறைத்துத் தொளியாய், ப்ரதோளி என்றபடி. மண்டபங்களிலும், நாற் சந்திகளிலும், வட்டக்கிடை ஓதாநிற்பர்கள். **சிறை இத்யாதி** - காவல்பட்டிருக்கும்படி. காற்றுப்புகுதல், "**காற்றில் கடியவன்**" புகுதல் செய்யும் இத்தனை என்றும் ஆம். ஊர் அரணான அகழை அணைந்து இருந்துள்ள சோலையிலே புக்கு அணைந்த தென்றலானது அந்நீர்நிலத்தில் திவலைகளையும் சோலையில் பரிமளத்தையும் கொண்டுவந்து இவ்வோ இடங்களில் அத்யயநம் பண்ணுகிறவர்களுடைய ஶ்ரமம் மாறும்படி சிசிரோபசாரம் பண்ணும் ஆயிற்று. ஒளி - ஒழுங்கை. ஊர் அருகு அணைந்திருக்கை என்னுதல். நீர்ச்சிறை.

---

**மறை வளரப் புகழ் வளர மாடம் தோறும் மண்டபம் ஒண் தொளி அனைத்தும் வாரம் ஓத** - *இராவணன் கொலையுண்ட பின்னர்த் தண்டகவனத்தில் முனிவர்களிடையே மறை ஓதுவதும், மறையின் சிறு உட்பகுதிகள் சொல்லுவதும் மாறாமல் நடந்தாற் போலே அவன் பட்ட பின்பு திருக்கோவலூரிலும் நடைபெறலாயிற்று.* **மாடம் தோறும் மறை வளரப் புகழ் வளர** - *வீடுதோறும் மறை முழக்கம் மிக்குவர, அந்த மறை முழக்கம் முட்டின்றிச் செல்வதால் வந்த சீர்த்தி மிக்குவர. இஃது இல்லங்கள் இருக்கும்படி.* **மண்டபம் ஒண் தொளி அனைத்தும் வாரம் ஓத** - *மண்டபம் - மண்டபங்கள்; ஒண்தொளி - அழகிய தொளி; 'தொளி' என்பது தோளி என்பதன் குறுக்கல் விகாரம்; நாற்சந்தி என்பது பொருள். மண்டபங்களிலும், நாற்சந்திகளிலும் வட்டக்கிடை ஓதுவர்*[1]. **சிறை அணைந்த பொழில் அணைந்த தென்றல் வீசும்** - *காவல் பொருந்தி இருக்கும்படி. காவல் உடையதாய் இருந்ததாகில் அங்குக் காற்றுப் புகுமோ என்னில், அவ்வூருள் காற்றுப் புகுதல்,* "**காற்றில் கடியவன்**" *(பெரி. தி. 2:10:1) புகுதல் செய்யலாமே அன்றிப் பிறரால் முடியாது என்க*[2]. *ஊருக்கு அரணான அகழை அணைந்திருக்கும் சோலையிலே புக்கு அணைந்த தென்றல், அந்நீர்நிலத்தின் திவலைகளையும் சோலையின் மணத்தையும் கொண்டுவந்து இவ்இடங்களில் எல்லாம் மறை ஓதுவாருடைய இளைப்பு மாறும்படி குளிர்ச்சியூட்டிற்று. ஒண்டொளி என்பதனை ஒண்டு ஒளி என்று கொண்டு, ஒளி - ஒழுங்கை; ஒண்டு - ஊர் அருகு அணைந்திருத்தல். அஃதாவது ஊர் அருகு அணைந்திருக்கும் சாவடி என்றும் பொருள் கொள்ளலாம். சிறை - நீர்ச்சிறை; அஃதாவது அகழ். இப்படித் தென்றல் குளிர்ச்சி ஊட்டும்,* **திருக்கோவலூர்அதனுள் கண்டேன் நானே** -.

### ஒப்புமைப் பகுதி

**அரக்கர் சேனை எல்லாம் பெருந்தகையோடு அழித்தவன்**

*" அரக்கர் கோனை - நான் ராக்ஷஸராஜன் என்று தன் பரிகரத்தைப் பார்த்து அபிமானித்திருந்தவனை. தானே அதிக்ரமம் பண்ணும் அளவு*

---

1. வட்டக்கிடை ஓதல் - வட்டமாக இருந்து மறை ஓதுதல், கிடை - கிடத்தல்; ஈண்டு இருத்தல் என்று பொருள்படும். 2. இது சுவைக் கூற்று. காற்று நுழையலாம் என்பதற்கேற்பக் காற்றில் கடியவன் என்று இறைவனைக் குறித்தல் நயம்.

அன்றிக்கே துர்வர்க்கத்துக்கு அடைய ஒதுங்க நிழலாய் இருந்தவனை. செற்ற - அவன் கண்முகப்பே பரிகரபூதரை அழித்து, ப்ரஜைகளை அழித்து, தன் தலை தரையிலே புரளக் கண்ணாலே காண்பாரில்லையாம் படி இருக்க, தான் காணும்படி ஒரோதலையாக அறுத்திறே அவனை அழியச் செய்தது "

திரு. மா. 11 பெ. உரை.

[அபிமானித்தல் - செருக்குடன் இருத்தல். அதிக்ரமம் - வரம்பு மீறல். பரிகரபூதர் - துணையானவர்கள். ப்ரஜைகள் - பிள்ளைகள்.]

(95)

## 196

உறிஆர்ந்த நறுவெண்ணெய் ஒளியால் சென்றங்கு
உண்டானைக் கண்டாய்ச்சி உரலோ டார்க்கத்
தறிஆர்ந்த கருங்களிறே போல நின்று
தடங்கண்கள் பனிமல்கும் தன்மை யானை
வெறிஆர்ந்த மலர்மகள்நா மங்கை யோடு
வியன்கலைஎண் தோளினாள் விளங்கு செல்வச்
செறிஆர்ந்த மணிமாடம் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.

ப. ரை: **உறி ஆர்ந்த நறு வெண்ணெய்** - உறிகளிலே நிறைந்திருந்த செவ்வி மாறாத வெண்ணெயை, **ஒளியால் சென்று** - புன்னகை புரியும்போது உண்டாகும் ஒளியாலே இருக்கும் இடம் அறிந்து சென்று, **அங்கு உண்டானை** - அவ்இடத்தில் உண்டவனை, **ஆய்ச்சி கண்டு** - அசோதை கையும் களவுமாய்க் கண்டு, **உரலோடு ஆர்க்க** - உரலோடு கட்ட, **தறி ஆர்ந்த கருங் களிறே போல நின்று** - கட்டுத்தறியில் சேர்த்துக் கட்டப்பட்ட கரிய யானை போலே கட்டுண்டிருந்து, **தடங்கண்கள் பனி மல்கும் தன்மையானை** - பெரிய கண்களில் நீர் நிறையப்பெற்ற தன்மையுடைய பெருமானை, **வெறி ஆர்ந்த மலர்மகள்** - மணம் நிறைந்த தாமரைப்பூவில் பிறந்த திருமகளோடும், **நாமங்கையோடு** - கலைமகளோடும், **வியன்கலை எண் தோளினாள்** - அழகிய மானை ஊர்தியாக உடைய எட்டுத்தோள்களை உடைய துர்க்கையோடும், **விளங்கு செல்வச் செறி ஆர்ந்த** - விளங்குகின்ற செல்வ மிகுதி பொருந்திய, **மணி மாடம் திகழ்ந்து தோன்றும்** - மணிகள் பதிக்கப்பெற்ற மாடங்கள் விளங்கித் தோன்றுகின்ற, **திருக்கோவலூர்அதனுள் நான் கண்டேன்** -.

**சி. கு :** மணி மாடம் என்பதற்கு அழகிய மாடம் என்றும் ஒளியால் என்பதற்குக் களவால் என்றும் பொருள் கொள்ளலாம். ஒளி - ஒளித்தல், களவு செய்தல்.

வியா : **ஆறாம் பாட்டு : உறி இத்யாதி** - உறியிலே வைத்துச் சிக்கெனக் கள்ளக் கயிறும் உருவி, சேமித்துக் கடைந்த போதைச் செவ்வி மாறாத வெண்ணெயைக்[1] கடைகிற போதே துடங்கி இது கொடுபோய் சேமிக்கும் இடம் அடி ஒற்றா நிற்கும்[2] ஆயிற்று. **ஒளியால் சென்று அங்கு உண்டானை** - களவாலே; அன்றியே, **"நாள் இளந் திங்கள்"** இத்யாதிப்படியே, "மநுஷ்யரால் அபஹ்ருதமாய் ஆயிற்று ஒன்று அல்ல, இது தெய்வம் கொண்டது" என்னும்படியாக ஆயிற்று அமுதுசெய்தது. **கண்டு** - அநுகூல ஸ்பர்சமுள்ள த்ரவ்யம் தனக்கு தாரகமாய், அது பெறாத போது அவன் முடியும் அளவாய் இருக்குமாப் போலே, அவன் வ்யாபாரம் தங்களுக்கு ப்ராணநகரமாய் இருக்கும்படியாலே அத்தைத் தேடாநிற்பர்களிறே இவர்கள்; ஆகையாலே கொண்டியோடே பிடித்துக்கொண்டு. **ஆய்ச்சி** - பரிவு உடையளாகையாலே விழுக்காடு அறியாளிறே[3]. **உரலோடு ஆர்க்க** - இவன் அகப்பட்ட போதாக ஒன்றைத் தேடிப்போகில் இவன் தப்பும் என்று ஸங்நிஹித

---

வி : **ஆறாம் பாட்டு : உறி ஆர்ந்த நறு வெண்ணெய்** - *உறியிலே வைத்துச் சிக்கெனக்[4] கள்ளக் கயிறும் உருவிச் சேமித்து வைக்கப்பட்ட வெண்ணெய்; கடைந்தபோது இருந்த செவ்வி மாறாத வெண்ணெய்; இதனைக் கடையும்போது தொடங்கி இது கொண்டுபோய்ச் சேர்க்கும் இடம் அடியொற்றி நின்றான்[5].* **ஒளியால் சென்று அங்கு உண்டானை** - *களவாலே[6]; அல்லது,*

" நாள்இளந் திங்களைக் கோள்விடுத்து,
வேயகம் பால்வெண்ணெய் தொடுவுண்ட ஆனாயர்
தாயவனே!" *(தி. வா. மொ. 3:8:3)*

*என்று சொல்வதற்கு ஒப்ப இளந் திங்களைப் போலும் பற்களின் ஒளியால் சென்று அங்கு உண்டான் என்று கொள்க. "மனிதரால் கவரப்பட்டதன்று; இது தெய்வம் கொண்டது" என்று சொல்லும்வண்ணம் அமைந்தது, அவன் உண்ட திறமை.* **கண்டு** - *பாங்கானார் கைப்பட்ட பொருள் தனக்கு வாழ்முதற்பொருளாய், அது பெறாதபோது அவன் முடியும் அளவாய் இருத்தலைப் போலே அவன் செயல் தங்களுக்கு வாழ்வளிப்பதாய் இருத்தலாலே அதனைத் தேடி நிற்பவர்கள் அன்றோ இவர்கள்; ஆகையாலே கொண்டியோடே[7] பிடித்துக் கொண்டு.* **ஆய்ச்சி** - *பரிவுடையவளாய் இருக்கையாலே விளைவு அறியாள்; அஃதாவது இவன் கண்கள் பனி மல்க நிற்பான் என்பதனை அறியாள். ஆகையாலே,* **உரலோடு ஆர்க்க** - *இவன் அகப்பட்டபோது, கட்டுவதற்கு ஒன்றைத் தேடிக்கொண்டு போனால்*

---

1. வெண்ணையை. 2. ஒத்தாநிற்கும். 3. அறியாமையாலே.

4. சிக்கென - பாதுகாப்பாக. 5. அடியொற்றிநிற்றல் - பின்தொடர்ந்து கவனித்தல். 6. இப்பகுதி முன்னைய பதிப்பில் 'களவாலே யன்றியே;' என்று தவறான நிறுத்தக் குறியோடு அச்சிடப்பட்டுள்ளது. இதனை, "களவாலே; அன்றியே...," என்று பிரித்தல் வேண்டும் என்கிறார் உயர்திரு அண்ணங்கராசாரிய சுவாமிகள். இதுவே சரி. ஆனால் அவர் கூறுவதுபோலக் களவாலே என்பதற்கு 'ஒளியா' என்று பாடங் கொள்ளத் தேவை இல்லை. அப்படி ஒரு பாடம் இருந்திருப்பின் அதனைப் பெரியவாச்சான்பிள்ளை குறித்திருப்பார். ஒளியால் என்பதற்கே களவால் என்றும், பற்களின் வெளிச்சத்தால் என்றும் இரு பொருள் கொள்ளலாம். ஒளி - களவு; ஒளித்தல் என்பதன் முதனிலை; இது முதனிலைத் தொழிற் பெயராகும். ஒளியால் - பற்களின் வெளிச்சத்தால்; ஒளி - வெளிச்சம்; பெயர்ச்சொல். எனவே "ஒளியா என்ற பாடத்தைத் திருவுள்ளம் பற்றி, 'களவாலே' என்று பொருளுரைத்தார். 'ஒளியால்' என்ற பாடத்தைத் திருவுள்ளம் பற்றி 'அன்றியே' என்று பக்ஷாந்தரமாக வேறொரு பொருளை ஸூசிப்பித்தார் என்றுணர்க" என்னும் திவ்யார்த்த தீபிகையில் வரும் குறிப்புப் பொருந்துமாறு இல்லை. 7. கொண்டி - திருடிய பொருள்; ஈண்டு வெண்ணெய்.

மாய்க் கிடந்தது ஒரு உரலைக் காலாலே வர உருட்டி அத்தோடு பந்திக்க[1]. **தறி இத்யாதி** - மதித்து ஊரிலே மூலையடியே உழற்றிக்கொண்டு திரிகிற ஆனையானது யாத்ருச்சிகமாகப் பிடிபட்டு ஒரு கம்பத்திலே சேர்த்துக் கட்டுண்டு நிற்குமாப் போலே, தான் கண்டபடி திரிந்தவன் கட்டுண்டு, கண்ணில் பரப்பு அடையப் பரப்புமாறும்படி கண்ணநீர் மல்கி ப்ரதிக்ரியை அற்று நின்றவனை. **தன்மையானை** - மேன்மை இடுசிவப்பு; இதுவே ஆயிற்று இவனுக்கு ஸ்வபாவம்[2]. **"யதிசக்நோஷி"** என்றாளிறே. **கருங் களிறே போல** - தன்னை உணராதே நின்ற நிலை. ப்ரதிகூலரான துர்யோதநாதிகள் கட்டின கட்டாகிலிறே அவிழ்த்துக்கொண்டு போக வல்லது. அநுகூலர் கட்டினால் அவிழ்த்துக்கொடு போக மாட்டானிறே.

**வெறி ஆர்ந்த மலர்மகள்** - இவ்ஆனைதன்னை உணரா உழற்றாமை நோக்குவாரைச் சொல்லுகிறது. தன் ஸந்நிதியாலே பிறர் குற்றம் நெஞ்சில் படாதபடி துவக்கும் ஆயிற்று. ஆஶ்ரயிப்பார்க்குப் புருஷகாரபூதையான பெரியபிராட்டியார்; ப்ராஹ்மணருடைய நாவிலே நிற்கக்கடவளாய் பெரியபிராட்டியார்க்கு சேஷபூதை யான ஸரஸ்வதி; அவள், விளைநீராம்படி ஏத்துகைக்குப் பரிகரம் ஆம். **வியன்கலை**

---

*இவன் தப்பிச் சென்று விடுவான் என்று அருகில் கிடந்த ஓர் உரலைக் காலாலே வர உருட்டி அதனோடு கட்டினாள்; கட்ட.* **தறி ஆர்ந்த கருங் களிறே போல நின்று தடங்கண்கள் பனி மல்கும் தன்மையானை** - *செருக்குற்று ஊரிலே மூலையடியே உழற்றிக்கொண்டு[3] திரியும் ஆனையானது எதிர்பாராமல் பிடிபட்டு ஒரு கட்டுத் தறியிலே சேர்த்துக் கட்டுண்டு நிற்பதுபோலே, கண்டபடி திரிந்தவன் கட்டுண்டு, கண்ணில் பரப்பு அடையப் பரப்புமாறும்படி கண்ணநீர் மல்கி எதிர்ச் செயல் அற்று நின்றவனை.* **தன்மையானை** - *மேன்மை இடுசிவப்பு[4]; இதுவேயன்றோ இவனுக்கு இயற்கை.* **"துருதுருக்கைத்தனம் அடித்துத் திரிந்த நீ வல்லையாகில் போய்க் காணாய்"** *(வி. பு. 5:6:14, 15) என்று அசோதை சொன்னாள் அல்லவா! அப்படிச் செயல் அற்று நின்ற தன்மையானை.* **கருங்களிறே போல** - *தன்னை உணராமல் நின்ற நிலை. பகைவரான நூற்றுவர் கட்டிய கட்டாக இருந்தால் அன்றோ அவனால் அவிழ்த்துக்கொண்டு போக முடியும். பாங்கானார் கட்டினால் அவிழ்த்துக் கொடு போக மாட்டான் அன்றோ.*

**வெறி ஆர்ந்த மலர்மகள்** - *இவ் ஆனைதன்னை உணர்ந்து, கண்டவாறு உழற்றித் திரியாமல் நோக்குவாரைச் சொல்லுகிறது, இத் தொடர். தன் இருப்பினாலே பிறர் குற்றம் அவன் நெஞ்சில் படாதபடி துவக்குபவள் அவள். பெருமானைச் சார்பவர்களுக்கு இடைநின்று கூட்டுவிப்பவளான திருமகள்;* **நாமங்கையோடு** - *மறையவர் நாவிலே நிற்றற்கு உரியவளாய்த் திருமகளுக்குத் தொண்டச்சியாய் இருக்கும் கலைமகள்; அவள், விளைநீராம்படி[5] நாம் ஏத்துவதற்குக் கருவியாய் இருப்பவள்.* **வியன்கலை எண் தோளினாள்** - *வியத்தகு*

---

1. அநுபந்திக்க. 2. ஸ்வபாவிகம்.

3. மூலையடியே உழற்றல் - கண்டபடி திரிதல். 4. இடு சிவப்பு - கையில் மருத்தோன்றி முதலியவை இட்டுக்கொண்ட சிவப்பு; ஈண்டு அதுபோலச் செயற்கையால் வரும் தன்மையைக் குறித்தது.

5. விளை நீராம்படி - விளைச்சலுக்குத் தேவையான நீராகும்படி. ஈண்டுத் (திருமகள்) துணையாக அமையும்படி என்பது பொருள்.

விஸ்மயநீயமான கலையை, வாஹநமாக உடையளாய் எட்டுத் தோளையுடைய துர்க்கை; அவள் ஆயிற்று அவ்வூருக்குக் காவல். "பிறந்த அன்று காட்டிக் கொடுத்துப்[1] போனோம்" என்னும் இழவு தீர அவள் உணர்ந்து நோக்குகிற தேசம் ஆயிற்று. **செறி இத்யாதி** - மிகவும் செறிந்து இருப்பதாய் ரத்ந மயமான மாடங்கள் உஜ்ஜ்வலமாய்த் தோற்றுகிற திருக்கோவலூரிலே காணப் பெற்றேன். **நான்** - இதுக்கு முன்பு இங்ஙனே இருப்பது ஒரு லாபம் வ்யுத்பத்தி பண்ணி அறியாத நான், ஸு⁻ரக்ஷிதமான தேசத்திலே காணப் பெற்றேன்.

---

*கலையை ஊர்தியாக உடையவளாய், எட்டுத் தோளையுடையவளாய் இருக்கும் துர்க்கை. அவளே அவ் ஊருக்குக் காவலாய் இருப்பவள். "பிறந்த அன்று காட்டிக் கொடுத்துப் போனோம்" என்னும் அவ் வருத்தம் தீர அவள் உணர்ந்து நோக்கும்[2] இடமாகும்.* **விளங்கு செல்வச் செறி ஆர்ந்த மணி மாடம் திகழ்ந்து தோன்றும் திருக்கோவலூர்அதனுள் கண்டேன்** - *மிகவும் செறிந்திருப்பதாய், மணி மயமான மாடங்கள் விளங்குவதாய்த் தோற்றும் திருக்கோவலூரிலே காணப் பெற்றேன்.* **நான்** - *இதற்கு முன்பு இப்படி இருப்பது ஒரு பேற்றினைக் கருதி அறியாத நான், நல்ல பாதுகாப்பான இடத்திலே காணப் பெற்றேன்.*

## ஒப்புமைப் பகுதி

1. **உறியார்ந்த வெண்ணெய் திருடி உண்டவன்**

*" உறியமர் வெண்ணெய் உண்டவன் - உறிகளிலே சேமித்துக் கள்ளக் கயிறு உருவி வைத்த வெண்ணெயை, 'தெய்வம் கொண்டதோ' என்னலாம்படி களவுகண்டு அமுதுசெய்தவன் "* *தி. வா. மொ. 2:2:6-36*

*" நாரார் உறி ஏற்றி - விரலை நுழைக்க ஒண்ணாத உறியிறே. ஏற்றி - முகவணைக்கல் ஏற்றுவாரைப் போலே அருமைப்பட்டு ஏற்றினபடி "*
*சி. ம. 30 பெ. உரை.*

2. **அசோதையால் உரலோடு ஆர்க்கக் கண்பனித்து நின்றவன்**

*" ஆய்ச்சி உரலோடு ஆர்க்க - 'தறியார்ந்த கருங்களிறே போலே நின்று தடங்கண்கள் பனி மல்கும் தன்மை யானை'. ஒரு மத்த கஜத்தைத் தறியோடே சேர்த்தாப்போலே காணும் இவன் கட்டுண்டு நின்ற நிலை! ஓர் அபலை கட்டின கட்டு அவிழ்த்துக்கொண்டு போக மாட்டாதே, நின்று அழுகையே ஸ்வபாவமாய் இருந்தபடி. 'யதி சக்நோஷி' என்றாளிறே. உரலோடு ஆர்க்க இரங்கிற்றும் - உரலோடே கட்ட இரங்கிற்றும்; துர்யோதநாதிகளுடைய பந்தமாகிலிறே அறுக்க விரகு சிந்திப்பது "* *தி. வா. மொ. 6:4:4-36*

*[அபலை - மெல்லியலாள். பந்தம் - கட்டு.]*

*" ஆய்ச்சி உரலோடு ஆர்க்க இரங்கிற்றும் - ஆச்ரித கர்ம பந்தமும் ப்ரதிகூலர் பந்தித்த பந்தமுமிறே அறுக்கலாவது "*
*தி. வா. மொ. 6:4:4*

---

1. குடுத்துப்.
2. உணர்ந்து நோக்குதல் - கருத்தாய்ப் பாதுகாத்தல்.

தி. வா. மொ. 8:1:3இல் 'அசோதைக்கு அடுத்த பேரின்பக் குல இளங் களிறே' என்னும் தொடரை விளக்குமிடத்து, 'தறியார்ந்த......தன்மை யானை' என்னும் இப்பாசுரத்தொடர் மேற்கோளாக எடுக்கப்பட்டு விரித்துரைக்கப்பட்டுள்ளது. அது வருமாறு:

" குல இளங்களிறே - இடைக்குலத்துக்கு ஆனைக்கன்று போலே ச்லாக்யமானவனே! அபிஜாதமாய், பருவத்தாலே ஆகர்ஷகமாய் இருப்பதொரு மத்த கஜம் போலே, யசோதைப்பிராட்டிக்குப் பிடி கொடாதே திரியும்படி என்னவுமாம். அகப்பட்டாலும் ஆனைக்கன்று போலேயாயிற்று இருப்பது; 'தறியார்ந்த கருங்களிறே போல நின்று' என்கிறபடியே ஒரு கம்பத்தோடே சேர்ந்த களியானை போலேயாயிற்றுக் கட்டுண்டு நிற்கும்போதும் இருக்கும்படி. 'தடங்கண்கள் பனிமல்கும்' - இவள் 'யதிசக்நோஷி' என்றால் பின்னை அவனுக்குக் கண்ணனீர் பாய்கைக்கு மேற்படவில்லை; ஸர்வசக்தி அசக்தன் என்று தோற்ற இருக்கையிறே இவள் நியமிக்க வல்லவள் ஆகிறது.

" தன்மையானை - ஆச்ரிதர் இட்ட வழக்காகையே ஸ்வபாவமாக உடையவனை " தி. வா. மொ. 8:1:3-36

[ச்லாக்யம் - பெருவிலையன், மேன்மை. அபிஜாதம் - உயர்குலப்பிறப்பு. ஆகர்ஷகம் - துவக்குவது. அசக்தன் - ஆற்றல் அற்றவன். ஆச்ரிதர் - அடியார்.]

" செவ்வே
நெஞ்சால் நினைப்பரி தால்வெண்ணெய் ஊண்என்னும் ஈனச்சொல்லே"

" ஸர்வேஶ்வரனாய், ப்ரஹ்மாதிகளுக்கும்கூட ஆஶ்ரயணீயனாய், அவாப்த ஸமஸ்த காமனாய் இருக்கிறவன், ஆஶ்ரித ஸ்பர்சமுள்ள த்ரவ்யமே தனக்கு தாரகமாய், அதுதான் நேர்கொடுநேர் கிட்டப் பெறாதே இப்படி களவு கண்டாகிலும் புஜிக்கவேண்டி, அதுதான் தலைக்கட்டப் பெறாதே வாய்து கையதாக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு ப்ரதிக்ரியை அற்று உடம்பு வெளுத்துப் பேகணித்து நின்ற நிலை சிலர்க்கு நிலமோ? 'அரையனுக்குப் போகிற பாலை ஒர் இடையன் களவு கண்டான்' என்று கட்டி அடியாநிற்கப் பிள்ளை உறங்காவில்லிதாசர் கண்டு பரவசராய் இருந்து 'இத்தால் வந்ததுக்கு எல்லாம் நான்கடவன்' என்று விடுவித்துக் கொண்டாராம் " தி. வி. 98 பெ. உரை.

[ஆஶ்ரயணீயன் - பற்றத்தக்கவன். அவாப்த ஸமஸ்தகாமன் - குறை யொன்றும் இல்லாத நிறைவாளன். ப்ரதிக்ரியை - மாற்றுச் செயல்.]

3. துர்க்கை காக்கும் திருக்கோவலூர்

" விந்தம் மேய,
கற்புடைய மடக்கன்னி காவல் பூண்ட
கடி பொழில் சூழ்.........பூங்கோவலூர் "

" விந்தம் மேய - விந்த்யாடவியிலே வர்த்தித்தவள்.........கற்புடைய - கற்பு - ஜ்ஞாநம். கட்டும் கழற்றும் அறிந்து காக்கவல்ல ஞாநாதிக்யத்தை உடையவள்......கன்னி - அநந்யபரை என்கை. காவல் பூண்ட - பிறர்

நியமிக்கக் காக்கையன்றிக்கே தன் ஆதரத்தாலே காக்கை. காவல் பூண்ட - பரிவின் மிகுதியாலே ரக்ஷண தர்மத்திலே அந்வயித்தாள் என்கை. காவலுக்கு அழிவுவருமிறே இவள் போகப்ரவணையாகில். கன்னி என்று அழிவில்லாததுக்குப் பேராகையாலே, இவளுக்கு அழிவில்லாமையாலே ஊருக்கு அழிவில்லை என்றபடி. பிறந்த அன்றே நடைபோந்தவளாகையாலே என்றும் ஒக்கப் பரிவையாய் இருக்குமிறே. 'தம்பி வளைக்காரியன்றோ' என்று நஞ்சீயர் அருளிச்செய்வர் ''

திெ. நெ. தா. 7 பெ. உரை.

[விந்த்யாடவி - விந்தியமலைப்பகுதியைச் சார்ந்த காடு. அநந்யபரை - பிறர்க்கு உரியவள் அல்லள். ஆதரம் - அன்பு. ரக்ஷண தர்மம் - காத்தலாகிய செயல். அந்வயித்தல் - ஈடுபடுதல். போகப்ரவணை - இன்பத்தில் ஊற்றம் கொண்டவள்.] (96)

## 197

**இருங்கைமா கரிமுனிந்து பரியைக் கீறி**
**இனவிடைகள் ஏழ்அடர்த்து மருதம் சாய்த்து**
**வரும்சகடம் இறஉதைத்து, மல்லை அட்டு**
**வஞ்சம்செய் கஞ்சனுக்கு நஞ்சா னானைக்**
**கருங்கமுகு பசும்பாளை வெண்முத் தீன்று**
**காய்எல்லாம் மரகதமாய்ப் பவளம் காட்டச்**
**செருந்திமிக மொட்டலர்த்தும் தேன்கொள் சோலைத்**
**திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.**

**ப. ரை:** **இருங்கை மா கரி முனிந்து** - நீண்ட கையையுடைய பெரிய குவலயாபீடம் என்னும் யானையைச் சீறி அழித்து, **பரியைக் கீறி** - கேசி என்னும் குதிரையின் வாயைப் பிளந்து, **இன விடைகள் ஏழ் அடர்த்து** - ஒன்றோடு ஒன்று ஒத்த காளைகள் ஏழினைக் கொன்று, **மருதம் சாய்த்து** - இரட்டை மருதமரத்தை வீழ்த்தி, **வரும் சகடம் இற உதைத்து** - தன்னைக் கொல்ல வரும் சகடம் முறியும்படி திருவடிகளாலே உதைத்து, **மல்லை அட்டு** - மல்லர்களைக் கொன்று, **வஞ்சம் செய் கஞ்சனுக்கு நஞ்சு ஆனானை** - வஞ்சனையாலே தன்னை அழிக்க நினைத்த கம்சனுக்கு விடமாகி அவனை முடித்த பெருமானை, **கருங் கமுகு பசும் பாளை வெண் முத்து ஈன்று** - கறுத்த பாக்குமரத்தின் பசுமையான பாளையானது வெளுத்த முத்துகளைத் தந்து, **காய் எல்லாம் மரகதமாய்** - அதன் காய்கள் மரகதம் போலே விளங்கவும், **பவளம் காட்ட** - அதன் பழங்கள் பவளம் போலே காட்சி அளிக்கவும், **செருந்தி மொட்டு மிக அலர்த்தும்** - சுரபுன்னை மரம் மொக்குகளைச் சிறப்பாக அலரச் செய்யும், **தேன் கொள் சோலை** - தேன் நிறைந்த சோலைகளையுடைய, **திருக்கோவலூர்அதனுள் நான்கண்டேன்** -.

**சி. கு:** 'பவளம் காட்ட' என்பதற்குக் கமுக மரத்தின் பழங்கள் என்று எழுவாய் தோற்றுவித்துக் கொள்க.

வியா : **ஏழாம் பாட்டு : இருங்கை இத்யாதி** - ஆனையை வழியிலே நிறுத்தினான் ஆயிற்று ப்ரமாதம் புகுந்தது என்கைக்காக; எங்கேனும்[1] போகிலும் நீட்டிப் பிடிக்கைக்கு ஈடான பெரிய துதிக்கையை உடைத்தான குவலயாபீடத்தை வேண்டோம் என்று. **பரி இத்யாதி** - "**வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ர:**" என்கிறபடியே, பெரிய சினத்தோடே வாயை அங்காந்துகொண்டு வந்தது ஆயிற்றுக் குதிரை; அதின் வாயிலே கையையிட்டுப்[2] புரித்தான்; இரண்டு கூறாய் விழுந்தது ஆயிற்று; விரோதியாயே தோற்றின கேசி வாயைக் கிழித்து. **இனம் இத்யாதி** - ஒன்று இரண்டு அன்றிக்கே ஏழாய் ம்ருத்யு போலே இருக்கிற வ்ருஷபங்களை முடித்து, வழி போகாநிற்கச்செய்தே மருது முறிந்து விழும்படி தவழ்ந்து, காவலாக வைத்த சகடமே அஸுராவேசத்தாலே ஊர, அது துகளாய்ப் போம்படி திருவடிகளாலே பாய்ந்து; "**பிளந்து வீய.**" **மல்லை அட்டு** - குவலயாபீடம் போன பின்பு மலை துள்ளினாப் போலே துள்ளிக்கொடு வந்த மல்ல வர்க்கத்தை முடித்து. **வஞ்சம் இத்யாதி** - வில்விழவு என்றொரு வ்யாஜத்தை இட்டு அழைத்து க்ருத்ரிமத்தாலே நலிய நினைத்த கம்ஸனை அவன் நினைவை அவன் தன்னோடே போக்கி அவனுக்கு ம்ருத்யு ஆனவனை.

---

வி : **ஏழாம் பாட்டு : இருங்கை மா கரி முனிந்து** - *ஆனையை வழியிலே நிறுத்தினான் இடர் எதிர்பாராமல் நேர்ந்தது என்று காட்டுவதற்காக; எங்கே போகிலும் நீட்டிப் பிடிப்பதற்குத் தகுந்த பெரிய துதிக்கையையுடைய குவலயா பீடத்தை வேண்டோம் என்று முனிந்து.* **பரியைக் கீறி** - "நன்றாகத் திறந்த வாயை உடையவனும் பேரச்சம் விளைவிப்பவனுமான அந்தக் கேசி என்னும் அசுரன் இடியேறு உண்ட மரம் போன்று கிருட்டிணனுடைய திருக்கையால் இரண்டாகச் செய்யப்பட்டவனாய்க் கீழே விழுந்தான்" *(வி. பு. 5:6:14) என்று சொல்வதற்கொப்ப, பெரிய சினத்தோடே வாயை அங்காந்து கொண்டு வந்தது குதிரை; அதன் வாயிலே கையை இட்டுப் புரித்தான்[3]; அக்குதிரை இரண்டு கூறாய் விழுந்தது. பகைவனாகவே தோற்றிய கேசி வாயைக் கிழித்து.* **இன விடைகள் ஏழ் அடர்த்து** - *ஒன்று இரண்டு அல்லாமல் ஏழாய்க் காலனைப் போலே இருக்கும் காளைகளை முடித்து.* **மருதம் சாய்த்து** - *வழியில் போகும்போதே மருது முறிந்து விழும்படி தவழ்ந்து.* **வரும் சகடம் இற உதைத்து** - *காவலாக வைத்த சகடமே அசுரன் ஏறியிருந்தமையாலே ஊர, அது துகளாய்ப் போம்படி திருவடிகளாலே பாய்ந்து.* நம்மாழ்வாரும்,

> " தளர்ந்தும் முறிந்தும் சகட அசுரர் உடல்வேறாப்
> பிளந்து வீயத் திருக்கால் ஆண்ட பெருமானே " *(தி. வா. மொ. 6:9:4)*

*என்று குறித்தல் காண்க.* **மல்லை அட்டு** - *குவலயாபீடம் போன பின்பு மலை துள்ளினாற் போலே துள்ளிக்கொடு வந்த மல்லர் கூட்டத்தை முடித்து.* **வஞ்சம் செய் கஞ்சனுக்கு நஞ்சு ஆனானை** - *வில்விழவு என்று ஒரு காரணத்தை இட்டு அழைத்துத் தீம்பாலே நலிய நினைத்த கம்சனை அவன் நினைவை அவனோடேயே போக்கி அவனுக்குக் காலனாய் ஆகியவனை.*

---

1. எங்கனும். 2. கையைவிட்டுப்.
3. புரித்தல் - திருப்புதல்.

**கருங் கமுகு இத்யாதி** - யௌவநத்தாலே கறுத்த நிறத்தை உடைத்தான கமுகினுடைய பசுமையை உடைத்தான பாளையானது வெண்முத்தை ஈன்று, அது காய்த்தவாறே மரகதமாய், அது பக்வமானவாறே பவளத்தைக் காட்ட. **செருந்தி மிக மொட்டு அலர்த்தும்** - "இதோர் ஆஶ்சர்யம் இருந்தபடி என்! ஒன்றே எல்லாவற்றையும்[1] காட்டுவதே" என்று ஸ்மிதம் பண்ணினாப் போலேயிருக்க[2]. **செருந்தி மிக மொட்டு அலர்த்தும்** - "கார்ய காரணங்களினுடைய ஐக லக்ஷண்ய நியமம் இன்றிக்கே இருந்தபடியே!" என்று ஸ்மிதம் பண்ணுவாரைப் போலே இருக்கை. **தேன் கொள் சோலை** - வண்டுகளை உடைத்தான சோலை என்னுதல்; தேனை உடைத்தான சோலை என்னுதல்.

---

**கருங் கமுகு பசும் பாளை வெண் முத்து ஈன்று காய் எல்லாம் மரகதமாய்ப் பவளம் காட்ட** - *இளம்பருவத்தாலே கறுத்த நிறத்தை உடையதாய் இருக்கும் கமுகு; அதன் பசுமையை உடைய பாளையானது வெண்முத்தை ஈன்று, அது காய்த்தவாறே மரகதமாய் அது கனிந்தவாறே பவளமாய்க் காட்ட.* **செருந்தி மிக மொட்டு அலர்த்தும்** - *"இஃது ஒரு புதுமை இருந்தபடி என்னே! ஒன்றே எல்லாவற்றையும் காட்டுகிறதே!" என்று நகைத்தாற் போலே இருக்கை.* **செருந்தி மிக மொட்டு அலர்த்தும்.** - *காரிய காரணங்களின் பொருத்தம் முறை இல்லாமல் இருந்தவாறு என்னே! என்று நகைப்பாரைப் போலே இருக்கை.* **தேன் கொள் சோலை** - *வண்டுகளையுடைய சோலை; தேனையுடைய சோலை என்க. அத்தகைய சோலையையுடைய,* **திருக்கோவலூர்அதனுள் நான் கண்டேன்-.**

### ஒப்புமைப் பகுதி

1. **குவலயாபீடத்தை முனிந்தவன்**

   *பாட்டு 121இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. **பரியைக் கீறியவன்**

   *பாட்டு 141இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

3. **இனவிடைகள் அடர்த்தவன்**

   *பாட்டு 12, 189 ஆகியவற்றின் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

4. **மருதம் சாய்த்தவன்**

   *பாட்டு 73இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

5. **சகடம் உதைத்தவன்**

   *பாட்டு 145இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

6. **மல்லர்களை அட்டவன்**

   *பாட்டு 121இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

7. **கஞ்சனுக்கு நஞ்சானவன்**

   *பாட்டு 121இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.* (97)

---

1. எல்லாவைத்தையும். 2. போலேயிருக்கை.

# 198

பார்ஏறு பெரும்பாரம் தீரப் பண்டு
　　பாரதத்துத் தூதியங்கிப் பார்த்தன் செல்வத்
தேர்ஏறு சாரதியாய் எதிர்ந்தார் சேனை
　　செருக்களத்துத் திறல்அழியச் செற்றான் தன்னைப்
போர்ஏறொன் றுடையானும் அளகைக் கோனும்
　　புரந்தரனும் நான்முகனும் பொருந்தும் ஊர்போல்
சீர்ஏறு மறையாளர் நிறைந்த செல்வத்
　　திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.

ப. ரை : பார் ஏறு பெரும் பாரம் தீர - *நிலத்தின் மேல் ஏறின பெரிய சுமை தொலைவதற்காக,* பண்டு - *முன்பு,* பாரதத்துத் தூது இயங்கி - *பாரதப் போரிலே தூது நடந்து,* பார்த்தன் செல்வத் தேர் ஏறு சாரதியாய் - *அருச்சுனனுடைய அழகிய தேரில் உயர்ந்த தேரோட்டியாய் இருந்து,* எதிர்ந்தார் சேனை செருக்களத்துத் திறல் அழிய - *எதிரிட்ட பகைவர்களுடைய படையானது போர்க்களத்திலே வலி கெடுமாறு,* செற்றான் தன்னை - *ஒழித்தவன் ஆகிய பெருமானை,* போர் ஏறு ஒன்று உடையானும் - *பொருகின்ற விடை ஒன்றை ஊர்தியாக உடைய உருத்திரனும்,* அளகைக் கோனும் - *குபேரனும்,* புரந்தரனும் - *இந்திரனும்,* நான்முகனும் - *பிரமனும்,* பொருந்தும் ஊர் போல் - *உறைகின்ற ஊரைப் போலே,* ஏறு சீர் மறையாளர் நிறைந்த - *சிறப்புகளையுடைய வேதியர்கள் திரண்ட,* செல்வம் - *செல்வம் பொருந்திய,* திருக்கோவலூர்அதனுள் நான் கண்டேன் -.

சி. கு : *ஏறு என்னும் சொல் ஏறிய, உயர்ந்த, விடை, நிறைந்த என்னும் பொருள்களில் முறையே வந்துள்ளது.*

வியா : **எட்டாம் பாட்டு : பார் ஏறு பெரும் பாரம் தீர** - க்ஷமை என்றும் பொறை என்றும் பேரிறே பூமிக்கு. பொறை என்று பேரை உடைத்தான பூமியானது பொறுக்க மாட்டாதபடி ஏறின பெரிய பாரமானது போம்படியாக. பொறுக்கைக்குப் பேர் கொண்டிருக்கிற அதுதான் பொறுக்கமாட்டாதபடி ஆயிற்று. அஸுரா வேசத்தாலே கனத்தபடி. **பண்டு** - அவன் தூத க்ருத்யம் பண்ணின அன்றும் ஒரு நாளே! என்கிறார். **பாரதத்துத் தூது இயங்கி** - எங்கள் பந்துக்களும் ஜீவிக்க

---

வி : எட்டாம் பாட்டு : பார் ஏறு பெரும் பாரம் தீர - *கமை என்றும், பொறை என்றும் நிலத்திற்குப் பெயர் உண்டு அல்லவா? இப்படிப் பொறை என்று பேரையுடைய நிலவுலகத்தால் பொறுக்கமாட்டாதபடி பெரிய பாரம் ஏறியது; அப்பாரம் போகுமாறு. பொறுத்துக்கொள்வதில் பெயர் பெற்றிருக்கும் அதுதான் பொறுக்கமுடியாதபடி அசுரர் சேர்ந்திருந்தமையால் சுமை கனத்தது.* பண்டு - *அவன் தூது நடந்த அந்நாளும் ஒரு நாளே! என்று வியக்கிறார்.* பாரதத்துத் தூது இயங்கி - *எங்கள் உற்றாரும் வாழ வேண்டும் என்றனர்*

---

**198.** 1 : 6 தூதியங்கப்.

வேணும் என்றார் இவர்கள்; பந்துக்கள் ஜீவிக்கில் நாங்கள் ஜீவியோம் என்றார்கள் துர்யோதநாதிகள். இரண்டு தலையையும் பொருந்த விடுகைக்காக தூதக்ருத்யத்திலே அதிகரித்துப் போவது வருவதாய்ப், பின்பு அவர்கள் ஒருபடியாலும், "நீ சொல்லுகிற வார்த்தைக்கு இணங்கோம்" என்னப் பூசலை விளைத்துத் தன்னை, "ஆயுதம் எடுக்க ஒட்டோம்" என்று அவர்கள் சொல்லத் தேர்க்காலாலே முடித்துப் பொகட்டான் ஆயிற்று. **பார்த்தன் செல்வத் தேர்** - இவனைத் தோழனாகவும், மைத்துனனாகவும், தூதனாகவும், ஸாரதியாகவுமுடைய அர்ஜுநனுடைய தேரிறே. "**மஹதி ஸ்யந்தநே**" என்னக்கடவதிறே. **சாரதியாய்** - ரதியானான் ஆகில் வெற்றி தன் தலையிலே கிடக்குமே; அதுக்காகத் தான் ஸாரதியாய் வெற்றியும் அவன் தலையிலே கிடக்கும்படி பண்ணினான் ஆயிற்று. **எதிர்ந்தார் இத்யாதி** - அவன் தலையிலே வெற்றி கிடக்கும்படி தன்னைத் தாழவிட்டாலும் அடி அறியுமவர் விடாரே. அர்ஜுநன் ஒரு நிமித்த மாத்ரம், அவனை அப்பராகச் சேமம் சாத்திவைத்து வென்றான் இவனே கிடீர் என்கிறார். எதிரிட்டவர்கள்[1] ஸேநையானது செருக்களத்திலே. கங்கையிலே கொடுபோய் மடுவிலே தள்ளுதல், அரக்கு மாளிகையிலே ஏறவிட்டு நெருப்பிலே தள்ளுதல், சூதிலே தோற்பிப்பதாய்[2], வஞ்சனையாலே நலியவிறே அவர்கள் பார்ப்பது. அங்ஙன் அன்றிக்கே, நேர் கொடு நேரே யுத்த பூமியிலே மிடுக்கு அழியும்படி செற்றவனை.

---

*பாண்டவர்கள்; எங்கள் உற்றார் வாழ்ந்தால் நாங்கள் வாழோம் என்றனர் நூற்றுவர். இரு திறத்தாரையும் பொருந்த விடுவதற்காகத் தூது செல்வதில் முனைந்து, போவது வருவது ஆனான். பின்பு அவர்கள் ஒருபடியாலும், "நீ சொல்வதற்கு இணங்கோம்" என்றார்கள். அதனால் பூசலை விளைத்தான்; "நீ படைக்கலன் எடுத்தற்கு நாங்கள் இசையமாட்டோம்" என்று அந்நூற்றுவர் சொல்லத் தேர்க்காலாலே முடித்துப் போட்டான்*[3]. **பார்த்தன் செல்வத் தேர்** - *இவனைத் தோழனாகவும், மைத்துனனாகவும், தூதனாகவும், தேரோட்டியாகவும் உடைய அருச்சுனனது தேரல்லவா அது! "சிறந்த தேர்" (கீதை 1:14) எனப்படுவது அன்றோ அது!* **சாரதியாய்** - *தேர் ஊரும் வீரனாக அமைந்தால் வெற்றி தன்பால் சேரும். அதற்காகத் தான் தேரோட்டியாய் இருந்து வெற்றியையும் அவன்பால் சேரும்படி செய்தான்.* **எதிர்ந்தார் சேனை செருக்களத்துத் திறல் அழியச் செற்றான் தன்னை** - *அருச்சுனன்பால் வெற்றி கிடக்கும்படி தன்னைத் தாழ்த்திக் கொண்டாலும், அடி அறிவோர் தாழ்வாகக் கருதமாட்டார்களே! அருச்சுனன் ஒரு கருவி மட்டுமே, அவனை அப்பராகச்*[4] *சேமம் சாத்தி வைத்து*[5] *வென்றவன் இவனே கண்டீர் என்கிறார். எதிரிட்டவர் படையானது செருக்களத்திலே அழியும்படி செற்றவன். அஃதாவது கங்கையிலே கொண்டுபோய் மடுவிலே தள்ளுதல், அரக்கு மாளிகையிலே ஏறவிட்டு நெருப்பிலே தள்ளுதல், சூதிலே தோற்பித்து வஞ்சனையாலே நலிவு செய்யப் பார்த்தல் ஆகிய இம்முறைகளினால் அன்றி, நேர் கொடு நேரே பூசற்களத்திலே மிடுக்கு அழியும்படி செற்றவனை.*

---

1. எதிரட்டவர்கள். 2. தோற்பித்தலாய்.
3. 'தேர்க்காலாலே முடித்துப் போட்டான்' என்பது சுவைக்கூற்று. தேர்க்கால் என்பது தேரினாலே என்றும் சக்கரப்படை என்றும் இருபொருள் தருதல் காண்க. 4. அப்பர் - மேலோர். 5. சேமம் சாத்தி வைத்தல் - பாதுகாப்போடு வைத்தல்.

**போர் இத்யாதி** - அஸுர வர்க்கம் முதல் அற்ற பின்பு தேவ ஜாதியை அடைய ஓர் இடத்திலே நெருங்கக் குடியேற்றினாப் போலே ஆயிற்று அவ்ஊரில் ப்ராஹ்மணர். ருஷபவாஹநனான ருத்ரனும், வைஶ்ரவணனும், இந்த்ரனும், சதுர் முகனும், பொருந்தும் ஊர் போலே. நினைத்தாரை பஸ்மம் ஆக்க வல்லராகைக்கும், ஸ்வ ஸ்த்ரீ பக்கலிலே ஸங்கத்தை விளைவித்தவனையிறே நேத்ராக்நியாலே தஹித்தது; குறைவு அறக் கொடுக்கைக்கும்[1], கொடுக்கக் கொடுக்க[2] இரட்டிக்கைக் கும்; ஸ்வ விஷயத்தில் உள்ளாரை ஸுகப்ரதாநர் ஆக்குகைக்கும். **நான்முகனும்** - சாந்திக்கும் ஸர்வத்தையும் உத்பாதிக்கைக்கும். **சீர் இத்யாதி** - இவ்வோ குணங் களால் பூர்ணரான ப்ராஹ்மணர் திரண்ட ஐஶ்வர்யத்தாலே குறைவு அற்ற.

---

போர் ஏறு ஒன்று உடையானும் அளகைக் கோனும் புரந்தரனும் நான்முகனும் பொருந்தும் ஊர்போல் - *அசுரர் கூட்டம் முதல் அற்ற பின்பு, தேவர் கூட்டத்தை எல்லாம் ஓர் இடத்திலே நெருங்கக் குடியேற்றினாற் போலே இருந்தது அவ் ஊரில் மறைவர்கள் இருக்கும் நிலை. விடை ஏறும் உருத்திரனும், குபேரனும், இந்திரனும், நான்முகனும் பொருந்தும் ஊர்போலே இருக்கிறது அது! இறைவனை யன்றி மற்றொன்று வேண்டா மனத்தரான மறையவர்களுக்கு இறைவனைத் தவிர்ந்த பிற பயன்களில் விருப்பினராய தேவர்களை உவமையாகக் கூறுவது ஏன் என்னில், ஒவ்வோர் இயல்பில் இத்தேவர்கள் மேம்பட்டவராய் இருந்தனர். தான் நினைத்தவரை நீறாக்கும் ஆற்றல் படைத்தவன் உருத்திரன். அச் சிறப்பினைப் பெறுவதற்குத் தன் மணாட்டி பக்கலிலே தனக்குக் காதலை விளைத்தவன் ஆகிய மன்மதனையே நெற்றிக்கண் நெருப்பாலே எரித்தவன் அன்றோ! குறைவறக் கொடுத்தற்கும், கொடுக்கக் கொடுக்க இரட்டிகைக்கும், தன்பால் உள்ளாரை நலம் மிக்கவர் ஆக்குவதற்கும் உரியவன் குபேரன்; அமைதிக்கும் அனைத்தையும் ஆக்குவதற்கும் உரியவன் நான்முகன்.* சீர் ஏறு மறையாளர் நிறைந்த செல்வம் - *இத்தேவர்கள்பால் உள்ள இவ்வகைக் குணங்களால்[3] நிறைந்தவரான வேதியர் திரண்ட செல்வத்தாலே குறைவற்ற.* திருக்கோவலூர்அதனுள் கண்டேன் நானே -.

### ஒப்புமைப் பகுதி

1. பூமிப் பெரும்பாரம் தீர்த்தவன்
   *பாட்டு 133இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

2. பாரதத்துத் தூது இயங்கியவன்
   *பாட்டு 113இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.*

3. பார்த்தசாரதி
   *தேர்ப்பாகனார்க்கு - அர்ஜ்ஜுநனை அழியச் செய்ய நினைத்தவர் களுடைய அஸ்த்ர சஸ்த்ரங்கள் முகப்பிலே தன்மேலேயாம்படி உடம்புக்கு ஈடு இடாதே நின்று தேரை நடத்தினவனுக்கு" தி. வா. மொ. 4:6:1-24*
   *[அஸ்த்ர சஸ்த்ரங்கள் - எறிபடையும் வாளும்.]*

---

1. குடுக்கைக்கும். 2. குடுக்கக் குடுக்க.
3. காமனை வென்ற உருத்திரனது புலனடக்கம், குபேரனது செல்வச் செழிப்பு, நான்முகனது அமைதி ஆகிய குணங்களால் என்க.

" சித்திரத் தேர் வலவா - விசித்ரமாகத் தேரை நடத்ினவனே! துரோணன் கையும் அணியும் வகுத்து அர்ஜ்ஜுநனுக்குப் புறப்பாடு அற வாசலைப் பற்றி நிற்க, அதுக்குப் புறம்பாம்படி தேரைக் கழியக் கொண்டு போயும், பீஷ்மன் கையில் அம்பு அர்ஜுநன்மேல் தையாதபடி தேரைத் தூரக் கொண்டுபோய் அர்ஜ்ஜுநன் கையில் அம்பு பீஷ்மன் மேலே தைக்கைக்குக் கிட்ட நிறுத்தியும், இப்படி விசித்ரமாகத் தேரை நடத்த வல்லவனே " தி. வா. மொ. 7:8:3-24

[விசித்ரம் - வியப்புக்குரியது.]

" நல்தேர் - இவனை ஸாரதியாக உடைத்தாகையாலே அதிச்லாக்யமான தேர். தனிப்பாகா - தனியே நிர்வாஹகனானவனே! ரதியைக் காண்கிறிலர். 'நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண' என்றவனைச் சேமம் சாத்தி வ்யாபரிக்கையாலே, ஸாரதியாயிற்று இவர் காண்கிறது "

தி. வா. மொ. 8:5:8-24

[அதி ச்லாக்யம் - மிக உயர்ந்தது. ரதி - தேர் உடையவன். வ்யாபரித்தல் - செயற்படுதல்.]

4. நூற்றுவர் இழைத்த கொடுமைகள்

" அடியோங்கு நூற்றுவர் வீய - பாண்டவர்களை அரக்கு மாடத்திலே அகப்படுத்தியும், சூதிலே தோற்பித்தும், வநவாஸாதிகளைப் பண்ணு வித்தும், தங்கள் புத்ரமித்ராதிகளாலே பல்கி ராஜ்யத்திலே வேர்விழுந்த துர்யோதனாதிகள் நூற்றுவரும் முடியும்படி " தி. வா. மொ. 3:7:11-36

[மித்ரர் - நண்பர்]

5. சிவனும் அளகைக்கோனும் இந்திரனும் நான்முகனும் போலும் மறையாளர்

" மனக்கொள்சீர் மூவாயிரவர் வண்சிவனும் அயனும்தானும் ஒப்பார்வாழ் கனக்கொள் திண் மாடத் திருச் செங்குன்றூர் "

" வண்சிவனும் அயனும் தானும் ஒப்பார்வாழ் - ஜகத்துக்கு ஸ்ருஷ்ட்யாதிகளுக்குக் கடவராய் ப்ரதாநரான மூவரும் செய்யக்கடவ கார்யத்தை ஓர் ஒருத்தரே செய்யவல்லராம்படி ஆயிற்று இவர்கள் சக்தி இருக்கும்படி "

தி. வா. மொ. 8:4:6-36

[ப்ரதாநர் - முதன்மையானவர்] (98)

## 199

தூவடிவின் பார்மகள்பூ மங்கை யோடு
சுடர்ஆழி சங்கிருபால் பொலிந்து தோன்றக்
காவடிவின் கற்பகமே போல நின்று
கலந்தவர்கட் கருள்புரியும் கருத்தி னானைச்
சேவடிகை திருவாய்கண் சிவந்த ஆடை
செம்பொன்செய் திருஉருவம் ஆனான் தன்னைத்
தீவடிவின் சிவன்அயனே போல்வார் மன்னு
திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.

**ப. ரை :** **தூவடிவின் பார்மகளோடு** - *அழகிய வடிவையுடைய நிலமடந்தை யோடும்,* **பூமங்கையோடு** - *திருமடந்தையோடும்,* **சுடர் ஆழி சங்கு இருபால் பொலிந்து தோன்ற** - *ஒளி பொருந்திய சக்கரமும் சங்கமும் இரு மருங்கும் விளங்கித் தோன்ற,* **காவடிவின் கற்பகமே போல நின்று** - *சோலையாக உள்ள கற்பக மரம் போலே நின்று,* **கலந்தவர்கட்கு அருள் புரியும் கருத்தினானை** - *தன்னை அண்டியவர் களுக்கு அருள் செய்யும் உள்ளம் உடையவனும்,* **சேவடி கை திருவாய் கண் சிவந்த ஆடை** - *சிவந்த திருவடிகள், திருக்கைகள், திருவாய், திருக்கண்கள், சிவந்த ஆடை இவற்றைக்கொண்டு,* **செம் பொன் செய் திருஉருவம் ஆனான்தன்னை** - *செம் பொன் போலும் வடிவழகை உடையவனுமான பெருமானை,* **தீ வடிவின் சிவன் அயன் போல்வார்** - *தீ வண்ணனாம் சிவனையும் பிரமனையும் போலே இருப்பார்,* **மன்னு** - *நிலைபெற்றிருக்கும்,* **திருக்கோவலூர்அதனுள் நான் கண்டேன்**-.

**சி. கு :** *பூமங்கையோடு என்பதில் உள்ள 'ஓடு' என்பதனைப் பார் மகளோடும் சேர்த்துக் கூட்டுக.*

**வியா :** **ஒன்பதாம் பாட்டு : தூவடி இத்யாதி** - ஹேய ப்ரத்யநீக மான விக்ரஹத்தை உடையளாய், பூமியைத் தனக்கு ப்ரகாரமாக உடையளாய், அதுக்கு அபிமாநிநியான ஸ்ரீபூமிப்பிராட்டி, தாமரைப் பூவை இருப்பிடமாக[1] உடைய பெரிய பிராட்டியாரோடேகூட; இச் சேர்த்திக்கு[2] ரக்ஷகமாகப் போரும்படியான திவ்யாயுதங்கள் சந்த்ராதித்யர்கள் சேர உதித்தாப் போலே விளங்கித் தோற்ற. **சுடர் இத்யாதி** - ஒரு கல்பதரு பணைத்துப் பூத்தாப் போலே ஆயிற்று பிராட்டிமாரோடே திவ்யாயுதத்தை தரித்தால் இருக்கும்படி. **காவடிவில் கற்பகமே போல நின்று** - தனிக்கற்பகம் அன்றிக்கே சோலை செய்து இருப்பது ஒரு கல்பகம் போலே நின்று. அதாகிறது ஸர்வாபேக்ஷித ப்ரதனாய் இருக்கும்படி. **கலந்தவர் இத்யாதி** - "நாங் கள் எங்களுடைய ரக்ஷணத்துக்கு கடவோம் அல்லோம், நீயே கடவாய்" என்று தன் கை பார்த்து இருக்குமவர்கள் பக்கலிலே மிக்க ப்ரஸாதத்தைப் பண்ணும்படியை மநோரதிக்குமவனை.

---

**வி :** ஒன்பதாம் பாட்டு : **தூவடிவின் பார்மகள் பூமங்கையோடு** - *குற்றங் களுக்கு எதிர்த்தட்டான திருமேனியை உடையவள்; நிலத்தைத் தனக்குப் படியாக உடையவள்; அந்நிலத்தைத் தனதாகக் கொண்டிருப்பவள் நில மடந்தை. இம் மடந்தையோடு தாமரைப்பூவை இருப்பிடமாக உடைய திருமடந்தையோடு கூட;* **சுடர் ஆழி சங்கு இருபால் பொலிந்து தோன்ற** - *இச்சேர்த்திக்கு அரணாக அமையும்படியான திருப்படைகள், திங்களும் கதிரவனும் ஒரு சேரத் தோன்றினாற் போலே விளங்கித் தோன்ற ஒரு கற்பகமரம் பணைத்துப் பூத்தாற் போலே இருக்கிறது, நாச்சியாரோடு திருப்படையை அணிந்து கொண்டால் இருக்கும்படி.* **காவடிவின் கற்பகமே போல நின்று** - *தனிக் கற்பகமாக இல்லாமல் சோலை செய் திருப்பது ஒரு கற்பகம் போலே நின்று. அஃதாவது விரும்பிய எல்லாவற்றையும் கொடுப்பவனாய் இருக்கும்படி.* **கலந்தவர்கட்கு அருள் புரியும் கருத்தினானை** - *"நாங்கள் எங்களைக் காத்துக்கொள்ளும் திறன் உடையோம் அல்லோம்; நீயே காத்தற்கு உரியன் ஆவாய்" என்று தன் கை பார்த்திருப்பவர்கள் பக்கலிலே மிக்க அருள்புரியும் வகையினைச் சிந்தித்திருப்பவனை.*

---

1. பிறப்பிடமாக. 2. சேற்றிக்கு.

**சேவடி இத்யாதி** - அருள் பண்ணாவிட்டால்தான் விடலாமோ? இவ் வடிவைக் கண்டால், **தீ வடிவில் இத்யாதி** - அக்நி, கண்ணுக்குத் தோற்ற வடிவு கொண்டாப் போலே ஆயிற்று அவர்கள் இருப்பது. அங்கு உள்ளார் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களையும் தாங்களே பண்ண வல்லர் என்கை.

---

**சேவடி கை திருவாய் கண் சிவந்த ஆடை செம் பொன் செய் திருஉருவம் ஆனான் தன்னை** - *இவன் அழகிய வடிவைக் கண்டுவிட்டால், பின்பு அருள் செய்யாதவன் ஆயினும் விட்டுவிட முடியுமோ?* **தீ வடிவின் சிவன் அயனே போல்வார்** - *தீ கண்ணுக்குத் தோற்றும்வகையில் வடிவு கொண்டாற் போலே அன்றோ உள்ளது அவர்கள் இருப்பது! அங்குள்ளார் ஆக்கல் அழித்தல் செயல்களையும் தாங்களே பண்ண வல்லவர் என்று சொல்லுகிறார். அத்தகையோர் மன்னு,* **திருக்கோவலூர் அதனுள் கண்டேன் நானே**-.

## ஒப்புமைப் பகுதி

1. பெருமான்தன் அடி கை வாய் கண் முதலிய உறுப்புகள்

*" செய்யவாய் செய்யகண் செய்ய கை செய்ய கால் "*

*" செய்ய வாய் - 'நான் உனக்கு' என்றாப்போலே சொல்லப் புக்கு விக்கின திருப்பவளம். செய்யகண் - 'அது உக்திமாத்ரம் அன்று' அகவாயிலும் உண்டு என்று தோற்றுகிற திருக்கண்கள். அகவாயில் உள்ளதுக்கு எல்லாம் ஆனைத்தாளிறே திருக்கண்கள். அத்தை க்ரியாபர்யந்தமாக அநுஷ்ட்டிக்கிற திருக்கைகள். அவை அத்தனைக்கும் தோற்று விழும் துறை திருவடிகள் "* திரு. வா. மொ. 6:1:7-36

*[க்ரியாபர்யந்தமாக - செயல் அளவுமாக]*

*" திருமார்வு கால் கண் கை செவ்வாய் உந்தியானே "*

*" திருமார்வு - புருஷகாரமான பிராட்டி எழுந்தருளியிருக்கிற மார்வு. கால் - அச் சேர்த்திக்குத் தோற்று விழும் திருவடிகள். கண் இத்யாதி - திருவடி களிலே விழுந்தாரைக் குளிர நோக்கும் கண், அவர்களை எடுத்தணைக் கும் கை, இன்சொல்லுச் சொல்லும் திருவதரம். அவர்களுக்கு அநுபாவ்ய மான திருவுந்தி "* தி. வா. மொ. 8:7:6-36

*" மன்னன் திருமார்பும் வாயும் அடியிணையும்*
*பன்னு கரதலமும் கண்களும் "*

*" வாயும் - அகப்படுத்தும் முறுவல். அடியிணையும் - அம் முறுவலுக்குத் தோற்று விழும் திருவடிகள். பன்னு கரதலமும் - திருவடிகளிலே விழுந் தாரைத் திருக்கையாலே ஸ்பர்சித்தால், 'ஒரு கையே!' என்று வாய் புலத்தும் கை. கண்கள் - நோக்கும் கண்கள். நின்ற இடத்தே நின்று ஸ்பர்சிக்கும் கண், ஒருகால் நோக்கினால் ஆலங்கட்டி விட்டெறிந்தாற் போலே இருக்கை "* பெ. ம. 74

*[ஸ்பர்சிக்கும் - தீண்டும்]*

*` கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயும்*
*கைத்தலமும் அடியிணையும் கமல வண்ணம் "*

" முதல் உறவுபண்ணும் கண்ணும், அத்தை ஸ்த்திரமாக்கும் முறுவலும், முறை உணர்ந்தாரை மேல் விழுந்து அணைக்கும் கையும், அந்த ஸ்பர்சத்துக்குத் தோற்று விழும் திருவடிகளும் இருக்கிறபடி "

திரு. நெ. தா. 18. பெ. உரை.

[ஸ்த்திரம் - உறுதி. ஸ்பர்சம் - தொடுதல்; ஈண்டு அணைப்பு.]

2. **சிவன் அயனே போலும் அந்தணர்கள்**

*பாட்டு 198இன் ஒப்புமைப் பகுதி பார்க்க* (99)

## 200

**வாரணம்கொள் இடர்கடிந்த மாலை நீல**
**மரகதத்தை மழைமுகிலே போல்வான் தன்னைச்**
**சீர்அணங்கு மறையாளர் நிறைந்த செல்வத்**
**திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் என்று**
**வார்அணங்கு முலைமடவார் மங்கை வேந்தன்**
**வாட்கலியன் ஒலிஐந்தும் ஐந்தும் வல்லார்**
**காரணங்க ளால்உலகம் கலந்தங் கேத்த**
**கரந்தெங்கும் பரந்தானைக் காண்பர் தாமே.**

**ப. ரை :** **வாரணம் கொள் இடர் கடிந்த மாலை** - கயேந்திரன் உற்ற துன்பத்தைப் போக்கிய திருமாலும், **நீல மரகதம் மழை முகில் போல்வான் தன்னை** - கரு நெய்தலையும், மரகத மணியையும், குளிர்ந்த மேகத்தையும் போலும் வடிவுடையவனும் ஆகிய பெருமானை, **சீர் அணங்கு மறையாளர் நிறைந்த** - நற்பண்புகளாலே அனைவரும் வியக்கத்தக்க வேதியர் நிறைந்திருக்கும், **செல்வத் திருக்கோவலூர்அதனுள்** - திருவுடைய திருக்கோவலூரில், **கண்டேன் என்று** - காணப்பெற்றேன் என்று, **வார் அணங்கு முலை மடவார்** - கச்சு அணிந்த அழகிய நகில்களையுடைய பெண்கள் நிறைந்த, **மங்கை வேந்தன்** - திருமங்கைக்கு அரசனாய், **வாள்கலியன் ஒலி** - வாளையுடைய கலியன் என்னும் பெயர் கொண்ட ஆழ்வார் அருளிய, **ஐந்தும் ஐந்தும் வல்லார்தாம்** - இப்பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர்கள், **உலகம்** - உலகத்தவர், **காரணங்களால் கலந்து ஏத்த** - இம்மைச் செல்வம் தொடக்கமான பேறுகளைப் பெறுவதற்காகத் திரண்டுவந்து பரவ, **கரந்து எங்கும் பரந்தானை** - ஒருவருக்கும் காண ஒண்ணாதவனாய் எங்கும் நிறைந்து இருப்பவனை, **காண்பர்** - காணப் பெறுவர்.

**சி. கு :** உலகம் - இடவாகுபெயர்; உலகத்தில் உள்ளாருக்கு ஆகிவந்தது.

**வியா : பத்தாம் பாட்டு : வாரணம் இத்யாதி** - பிறர்க்கு இடரை விளைக்கக் கடவதான அது கொண்ட இடரைப் போக்கி அதின் பக்கலிலே வ்யாமுக்

---

வி : பத்தாம் பாட்டு : வாரணம் கொள் இடர் கடிந்த மாலை - பிறர்க்கு இடரை விளைக்கக் கூடியது யானை; அது கொண்ட இடரைப் போக்கி அதன்

தனானவனை. நீல மரகதத்தை - அதினுடைய விடாய் அடங்கலும் போம்படி குளிர வர்ஷித்துக்கொடு நின்றபடி. சீர் இத்யாதி - ஆத்ம குணங்களாலே தங்களை விரும்பும்படி இருக்கிற ப்ராஹ்மணர் திரண்ட ஐஶ்வர்யத்தை உடைத்தாய் இருக்கிற. திருக்கோவலூர் அதனுள் கண்டேன் என்று - அறுகாதப் பயணம்[1] போய் அன்றிக்கே. வார் அணங்கு இத்யாதி - முலைக்கு ஆபரணமான கச்சுத்தான் நிறம் பெறும்படி முலை படைத்தவர்கள். அணங்கு என்று விருப்பத்துக்கும் பேர், அழகுக்கும் பேர். தன் அழகே அன்றிக்கே முலைக் கச்சால் வந்த அழகையுடைய. வாள் கலியன் - ப்ரதிபக்ஷ நிரஸந ஸ்வபாவமான வாளையுடைய ஆழ்வார் அருளிச்செய்த இப்பத்தையும் அப்யஸிக்க வல்லவர்கள். காரணங்களால் - ஐஶ்வர்யத்துத்காகவும், ஆத்ம ப்ராப்திக்காகவும், பகவத் ப்ராப்திக்காகவும், லோகத்தில் உள்ளார் திரண்டு ஆஶ்ரயிக்க. கரந்து இத்யாதி - ஆஶ்ரயித்த போது, ஆஶ்ரிதர்க்கு அபேக்ஷிதத்தைக் கொடுக்கைக்காக[2] எங்கும் புக்கு வ்யாபித்து அங்யைரத்ருஷ்டனாய், “நம்மை ஆஶ்ரயிப்பார் ஆரோ” என்று அவஸர ப்ரதீக்ஷனாய் நிற்கிறவனைக் காணப்பெறுவர்.

---

பக்கல் பெரும் பித்தன் ஆனான்; அவனை. நீல மரகதத்தை மழை முகிலே போல் வான்தன்னை - அவ் யானையினுடைய விடாய் முழுவதும் போம்படி குளிரப் பொழிந்து கொண்டு நின்ற தன்மையைச் சொல்லுகிறது. சீர் அணங்கு மறை யாளர் நிறைந்த செல்வத் திருக்கோவலூர்அதனுள் கண்டேன் - உயர்பண்புகளாலே தங்களை மற்றவர் விரும்பும்படி உள்ள மறையவர் ஆகிய திரண்ட செல்வத்தை உடையதாய் இருக்கும் ஊரில் கண்டேன். திருக்கோவலூர்அதனுள் கண்டேன் என்று - அறுகாதப் பயணம் போய்க்[3] காண்பது அன்றி அடுத்துள்ள திருக்கோவலூருள் கண்டேன் என்று. வார் அணங்கு முலை மடவார் - முலைக்கு அணிகலனான கச்சுத்தான் நிறம்பெறும்படி முலை படைத்தவர்கள். அணங்கு - விருப்பத்துக்கும் பேர்; அழகுக்கும் பேர். தன் அழகோடு மட்டும் அன்றி முலைக் கச்சால் வந்த அழகையுடைய மகளிர். மங்கைவேந்தன் வாள் கலியன்ஒலி ஐந்தும் ஐந்தும் வல்லார் - எதிரிகளை முடிக்கும் இயல்பு பொருந்திய வாளையுடைய ஆழ்வார் அருளிச்செய்த இப்பத்தையும் பயில வல்லவர்கள். காரணங்களால் உலகம் கலந்து அங்கு ஏத்த - இம்மைச் செல்வத்திற்காகவும், உயிரைக் கிட்டி இன்பம் அடைவதற்காகவும், இறைவனை அடைவதற்காகவும் உலகத்தவர் திரண்டு வணங்க. கரந்து எங்கும் பரந்தானைக் காண்பர் தாமே - தன்னடி அடைந்த போதே அடியார்க்கு அவர் நாடியது கொடுத்தற்காக எங்கும் புக்குப் பரவிப் பிறரால் காண முடியாதவன் ஆயினான்; ஆகி, “நம்மை யாரேனும் பற்றுவாரோ” என்று செவ்வி பார்ப்பவனாய் நிற்கிறான்; அப்படி நிற்பவனைக் காணப்பெறுவர்.

### ஒப்புமைப் பகுதி

1. வாரணத்தின் இடர் கடிந்தவன்

   பாட்டு 75இன் ஒப்புமைப் பகுதி பார்க்க.

---

1. அறுகாதம் பயணம். 2. குடுக்கைக்காக.
3. அறுகாதப் பயணம் போதல் - நெடுந்தொலைவு செல்லுதல்.

2. **நீலம் போல்வான்**

*" காயமலர் நிறவா - 'காயா' என்கிற இத்தை, 'காய' என்று குறுக்கிக் கிடக்கிறது. நெய்ப்பாலும் நைல்யத்தாலும் காயாம்பூப் போலே இருக்கிற நிறத்தை உடையவனே "*

*பெரி. தி. 1:5:6 ம. மா. மு. உரை.*

*[நைல்யம் - நீலம்]*

3. **மரகதம் போல்வான்**

*" மரகத உருவும் - கண்டார் கண்குளிரும்படி நீர் வெள்ளத்தைத் திறந்து விட்டாப்போலேயாய்த்து வடிவு இருப்பது "*

*தி. மா. 20 பெ. உரை.*

*" என் மரகத மலையே - ச்ரமஹரமாய் அபரிச்சேத்யமான வடிவு "*

*தி. வா. மொ. 2:6:4-24*

4. **மழைமுகில் போல்வான்**

*"முகில் வண்ணன் - 'நீலதோயதமத்யஸ்த்தா' என்று வர்ஷுகவலாஹக மாகச் சொல்லப்படுகிற என்னுதல்......கழுத்தே கட்டளையாக நீரை முகந்து, மின்னி, முழங்கி, வில்லிட்டு வருவதொரு மேகம் போலே வடிவழகையுடைய ஸர்வேச்வரன்... "*

*தி. வா. மொ. 5:6:8-36*

*[வர்ஷுகவலாஹகம் - நீர் சுமந்த மேகம்]*

*"முகில் வண்ணன் - ...விட ஒண்ணாத வடிவழகு "*

*தி. வா. மொ. 6:8:1-24*

5. **கரந்தெங்கும் பரந்தவன்**

*" கரந்தெங்கும் பரந்துளன் "*

*" கரந்து - அந்யைரத்ருஷ்டனாய் இருக்கை. எங்கும் பரந்துளன் - இப்படி ஸமஸ்த வஸ்துக்களிலும் வ்யாபித்திருக்கும் "*

*[அந்யை ரத்ருஷ்டன் - பிறரால் காணப்படாதவன். ஸமஸ்த - எல்லா. வ்யாபித்தல் - நிறைந்திருத்தல்.]*

*(100)*

# வடமொழி மேற்கோள் திரட்டு

## தனியன் 1

1. யத் கோ ஸஹஸ்ரம் அபஹந்தி தமாம்ஸி பும்ஸாம் நாராயணோ வஸதி
 யத்ர ஸ சங்க சக்ர: ।
 யந் மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா: தஸ்மை நமோ வகுல
 பூஷண பாஸ்கராய ॥ *பராங்குசாஷ்டகம். 4*

*கதிரவனுடைய ஆயிரம் ஒளிக்கதிர்கள் வெளிஇருளைப் போக்குவதுபோல எந்த ஆழ்வாருடைய ஆயிரம் பாசுரங்கள் எல்லா உயிர்களின் அகஇருளைத் தொலைக்கின்றனவோ, கதிரவனிடத்தில் நாராயணன் சங்கு சக்கரங்களோடு கூடி விளங்குவதுபோல எந்த ஆழ்வாரிடத்தில் அவன் உறைகிறானோ, வேத விளக்கமான ஞாயிற்று மண்டலத்தை அந்தணர்கள் வணங்குவதுபோல எந்த ஆழ்வாருடைய திருத்தலம் செவிப்பட்டவுடனே மேலான அடியார்கள் கையெடுத்துக் கும்பிடுகிறார்களோ அந்த நம்மாழ்வார் ஆகிய கதிரவனுக்கு வணக்கம் உரித்தாகுக.*

## தனியன் 2

2. ப்ரத்யக்ஷே குரவஸ் ஸ்துத்யா:

*அருளாசிரியர்கள் நேரிலேயே பரவப்படுதற்கு உரியவர்கள்.*

## தனியன் 4

3. நசேத் ராமாநுஜேதி ஏஷா சதுரா சதுரக்ஷரீ ।
 காமவஸ்த்தாம் ப்ரபத்யந்தே ஜந்தவோ ஹந்த மாத்ருஸ: ॥

*ஆழ்வான் முக்தகம்.*

*விழையும் பயன்களைத் தருவதில் மிக உயர்ந்த 'ராமானுச' என்னும் இந்த நான்கு எழுத்துகளைக் கொண்டதாகிய மந்திரமானது இல்லையாயின் என்னைப் போன்ற உயிர்கள் எத்தகைய கொடிய நிலையை அடைவார்களோ அறியேன்; என்ன வியப்பு.*

4. ஏதந்மே ஸம்சயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்ய சேஷத: ।
 த்வதந்யஸ் ஸம்சயஸ்யாஸ்ய ச்சேத்தாநஹ்யுப பத்யதே ॥ *கீதை. 6:39*

*கிருட்டிணா! என்னுடைய இவ் ஐயத்தை முற்றும் அகற்றத் தக்கவர் உம்மைத் தவிர வேறு எவரும் இலர்.*

பெரிய திருமொழி உரைப் பாயிரம்

5. வாஸுதேவ தருச் சாயா நாதிசீதா நகர்மதா ।
 நரகாங்கார சமநீ ஸாகிமர்த்தம் நஸேவ்யதே ॥ *க. பு. 222*

வாசுதேவன் என்னும் மரத்தின் நிழல் அதிகக் குளிரும் அற்றது; மிகுந்த வெப்பமும் அற்றது. நரகத் தீக்கொழுந்தின் வெம்மையை ஆற்றுவது. அஃது எக்காரணத்தினால் எல்லா மனிதர்களாலும் அடையப்படுவது இல்லை?

பாட்டு 1

6. அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா ரா. ஸு. 21:16

கதிரவனை விட்டு எப்படி ஒளி பிரியாதோ அப்படி இராமனோடு பிரிக்க ஒண்ணாதவாறு ஒன்றியவள்.

7. யச்ச ராமம் நபச்யேத் து யஞ்ச ராமோ ந பச்யதி |
நிந்திதஸ்ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே ||
ரா. அ. 17:24

எவன் ஒருவன் இராமனைக் காணாமல் இருக்கிறானோ அவனும், மற்றும் எவனை இராமன் காணாமல் இருக்கிறாரோ அவனும் உலகில் இகழப்பட்டவராய் இருக்கின்றனர்; அவர்கள் தம்மையே தாம் இகழ்ந்துகொள்வர்.

8. நோபஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம் சாந். 8:12:3

மக்களுக்கு அருகில் இருக்கும் தன் பழைய உடலை முத்தன் நினைப்பதும் இல்லை.

9. தத் யதா தருண வத்ஸா வத்ஸம் வத்ஸோ வா |
மாதரம் சாயா வா ஸத்வமநுகச்சேத் ததாப்ரகாரம் || பர. ஸம்.

எப்படி இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று தாய்ப்பசுவையும், நிழல் விலங்கினையும் பின் தொடர்கின்றனவோ அப்படி முத்தன் பரம் பொருளைப் பின்தொடர்கிறான்.

10. யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸஹ கச்சதி பர. ஸம்.

எப்படி எப்படிப் பரமபுருடன் செல்கிறானோ அப்படி அப்படியே முத்தனும்கூடப் போகிறான்.

11. நிரஸ்தாதி யாஹ்லாத ஸுகபாவைகலக்ஷணா |
பேஷஜம் பஹுவத் ப்ராப்தி ரேகாந்தாத்யந்திகிமதா || வி. பு. 6:5:57

அழிக்கப்பட்ட நான்முகன் உலகம் முதலானவற்றில் இருந்த பிற இன்பங்களின் அளவைக்காட்டிலும் மிகுந்ததாகவும், மகிழ்ச்சி நல்கும் நலம் ஒன்றையே வடிவாகக் கொண்டதாகவும், துக்கங்களோடு சேராததாகவும் நிலைத்ததாகவும் உள்ள இறை நுகர்ச்சியே பிறவித் துன்பத்துக்கு மருந்தாகும் என்பதால் விரும்பப் படுவதாய் உள்ளது.

12. அஸந்நேவ ஸ பவதி அஸத் ப்ரஹ்மேதி வேத சேத் |
அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத ஸந்தமேநம் ததோ விதுః ||

தைத். ஆந. 6

*பரம்பொருளை அறிகிறான் என்னும் புகழ் ஒருவனுக்கு இல்லையாகில் அவன் இல்லாதவனாகவே ஆகிறான்; பரம்பொருளை அறிகிறான் என்னும் புகழ் ஒருவனுக்கு இருந்ததாகில் அக்காரணத்தாலேயே பெரியோர்கள் அவனை என்றும் இருப்பவன் என்கிறுர்கள்.*

13. விஜ்ஞாநம் யதிதம் ப்ராப்தம் யதிதம் ஸ்தாநமார்ஜிதம் ।
ஜந்மாந்தரே அபி மே தேவ மாபூத் தஸ்ய பரிக்ஷயஃ ‖ *ஜி. ஸ்தோ. 1:11*

*எம்பிரானே! அடியேனுக்கு (நீயே ஆறும் பேறும் ஆவாய் என்னும்) யாதோர் அறிவு கிட்டியுள்ளதோ அவ் அறிவுக்கும், (இந்த அறிவுக்குச் சேர்ந்த உறுதி என்னும்) யாதொரு நிலை அடியேனால் ஈட்டப்பட்டுள்ளதோ அந்நிலைக்கும் எப்பிறப்பிலும் குறைவு ஏற்பட வேண்டா.*

14. ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்தும் அர்ஹதி *ரா. யு. 19:30*

*அரசராகிய இராகவன் கடலைத் தஞ்சம் புகுவதற்கு உரியவர்.*

## பாட்டு 2

15. த்வம் ஜீவிதம் த்வமஸி மே ஹ்ருதயம் மதீயம்

*நீ எனக்கு உயிராகவும் என்னுடைய இதயமாகவும் என் செல்வமாகவும் இருக்கிறாய்.*

16. ஹ்ரீரேஷாஹி மமாதுலா *ரா. ஆ. 10:9*

*எனக்கு இஃது எல்லையற்ற நாணத்தைத் தருவதாக உள்ளது.*

17. மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந *ரா. யு. 18:3*

*நட்புள்ளத்தோடு வந்தடைந்தவனை யான் ஒருபோதும் கைவிட மாட்டேன்.*

18. நமே துஃக்கம் ப்ரியா தூரே நமே துஃக்கம் ஹ்ருதேதி வா ।
ஏததேவாநுஶோசாமி வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே ॥ *ரா. யு. 5:5*

*இனிய சீதை தொலைவில் இருக்கிறாள் என்று எனக்குத் துன்பம் இல்லை; இராவணனால் கவரப்பட்டாள் என்றும் துன்பம் இல்லை; இவளுடைய வயது கழிகிறதே என்றே துன்பப்படுகிறேன்.*

19. த்ருஷ்ட்வா க்ருஷ்ணம் ததாயாந்தம் ப்ரதிபந்தமிவௌஜஸா ।
யதார்ஹம் கேஶவே வ்ருத்திம் அவஶாஃ ப்ரதிபேதிரே ‖

*தன்னுடைய ஆற்றலினால் பிறரைக் கொளுத்துபவன்போல் எழுந்தருளும் கண்ணனைப் பார்த்துத் தம்வயம் இழந்தவர்களாய்க் கேசவனாகிய அவன் திறத்தில் வணக்கம் முதலிய செயல்களைத் தகும்படி செய்தார்கள்.*

## பாட்டு 3

20. நமே து:க்கம் ப்ரியா தூரே நமே து:க்கம் ஹ்ருதேதிவா |
ஏததேவாநு ஶோசாமி வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே || *ரா. யு. 5:5*

*மேற்கோள் 18 பார்க்க.*

21. ஸாக்ஷாந் மந்மத மந்மத: *பாகவதம் 10:32:2*

*மன்மதனுக்கு மன்மதனாகக் காட்சியளிக்கிறான்.*

22. அஸந்நேவ *தைத். ஆந. 6*

*மேற்கோள் 12 பார்க்க.*

23. தஸ்மாதேவம்வித் ஶாந்தோ தாந்த உபரதஸ் திதிக்ஷுஸ் |
ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத்மாநம் பஶ்யேத் || *ப்ரு. 6:4:23*

*ஆகையால் இப்படி அறிபவன் உள்ளும் புறமும் இருக்கும் பொறிகளை அடக்கியவனாகவும் (பயன்கருதிச் செய்யும் கடன்களில்) விருப்பம் அற்றவனாக வும், பொறுமையுடன் கூடியவனாகவும், கலங்காத மனத்தை உடையவனாகவும் இருந்து தன் உயிரில் உள்ளுறைபவனாய் இருக்கும் பரம்பொருளைப் பார்க்கக் கடவன்.*

## பாட்டு 4

24. சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் |
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் || *கீதை. 6:34*

*கிருட்டிணா! மனம் நிலையற்றதாகவும், நிலைகலங்கச் செய்வதாகவும், வலிமை உள்ளதாகவும், (கீழானவற்றில்) ஊற்றமுள்ளதாகவும் இருக்கிறது அன்றோ. காற்றை அடக்குவதுபோல அதை அடக்குவதும் செய்தற்கு அரியது என்றே கருதுகிறேன்.*

25. ஆத்மாநம் மாநுஷம் மந்யே *ரா. யு. 120:11*

*என்னை மனிதனாக நினைக்கிறேன்.*

## பாட்டு 5

26. துரந்தஸ்யாநாதே ரபரிஹரணீயஸ்ய மஹதோ
நிஹீநாசாரோ அஹம் ந்ருபஶுர் அஶுபஸ்யாஸ்பதமபி |
தயாஸிந்தோ! பந்தோ! நிரவதிக வாத்ஸல்ய ஜலதே!
தவ ஸ்மாரம் ஸ்மாரம் குணகணமிதீச்சாமி கதபீ: || *ஸ்தோ. ர. 58*

*அருட்கடலான பிரானே! எல்லாவித உறவுமாக இருப்பவனே! எல்லையற்ற பரிவுக்கடல் போன்றவனே! முடிவற்றதும் தொடக்கமற்றதும் போக்கடிக்க முடியாததுமான பெரிய தீவினைக்கு உறைவிடமாகவும், கீழான நடத்தையை உடையவனாகவும், மனித விலங்காகவும் இருந்தபோதிலும், உன்னுடைய குணக்குவியல்களை நினைத்து நினைத்து அச்சமற்றவனாய் யான் இப்படி ஆசைப்படுகிறேன்.*

27. ஆஹ்லாத சீத நேத்ராம்புః புலகீக்ருத காத்ரவாந் |
ஸதா பரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ் ஸர்வதேஹிபிః || வி. த.

மெய்யறிவுடையான் (ஞானி) இறை நுகர்ச்சியால் விளைந்த மகிழ்ச்சியால் ஏற்படும் குளிர்ந்த கண்ணீரை உடையவனாய், மயிர்க் கூச்செறியும் உடம்பை உடையவனாய், எப்போதும் இறைவனின் குணங்களையே நினைப்பவனாய் எல்லாராலும் பார்க்கப்படுபவனாய் இருக்கிறான்.

## பாட்டு 6

28. மாதாபிதா ப்ராதா நிவாஸஶ் ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயணః
ஸுபா. 16

தாயும், தந்தையும், உடன்பிறந்தவனும், உறைவிடமும், உய்வுக்கு வழியும், நண்பனும், பேறும் நாராயணனே.

## பாட்டு 7

29. யத் வேதாதௌ ஸ்வரః ப்ரோக்தோ வேதாந்தே ச ப்ரதிஷ்டிதః |
தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய யః பரஸ் ஸ மஹேஶ்வரః ||
தைத். நாரா. 10:24

வேதத்தின் தொடக்கத்திலும் முடிவிலும் யாதொரு ஓசையானது (ஸ்வரம்) சொல்லப்படுகிறதோ, யாதொரு ஓசையானது தனக்குக் காரணமான அகாரத்தில் ஒடுங்கியுள்ளதோ அந்த ஓங்காரமாகிய ஒலிக்குப் பொருளாய் இருப்பவனே பரம்பொருள்.

## பாட்டு 8

30. கச்சதாம் தூரமத்வாநம் த்ருஷ்ணாமூர்ச்சித சேதஸாம் |
பாதேயம் புண்டரீகாக்ஷ நாம ஸங்கீர்த்தநாம்ருதம் || க. பு. 220:16

நெடுவழி நடப்பவர்களும், நீர் வேட்கையால் மயங்கிய உணர்வினர் களுமான அவர்களுக்குத் தாமரைக் கண்ணனின் திருப்பெயர் ஓதுவதாகிய அமுதமே கட்டுச்சோறு ஆகும்.

31. நயாமி பரமாம் கதிம் வராஹசரமம்

மேலான நிலைக்கு அழைத்துச் செல்கிறேன்.

## பாட்டு 9

32. ஸ ஶ்லாக்யః ஸகுணீ தந்யః ஸகுலீநః ஸபுத்திமான்

அவனே புகழ்க்குரியவன்; அவனே பண்பாளன்; அவனே பேறு பெற்றவன்; அவனே நற்குலத்தில் பிறந்தவன்; அவனே அறிவில் சிறந்தவன்.

33. த்வாந் து திக் குலபாம்ஸநம் ரா. யு. 16:15

குலத்தைக் கெடுக்கும் கோடரிக்காம்பாகிய நீ ஒழிந்துபோ.

34. நிஶாசர ரா. யு. 16:28

இரவில் திரிபவன் (அரக்கன்).

35. ஆக்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம் ரா. யு. 19:7

எனக்கு அரக்கர்களுடைய வலியையும் வலியின்மையையும் உள்ளவாறு உரைப்பாய்.

36. அந்தரிக்ஷகதஃ ஸ்ரீமாந் ரா. யு. 16:17

விண்வெளியை அடைந்த திருவாளன்.

37. பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச தநாநி ச |
பவத்கதம் மே ராஜ்யஞ்ச ஜீவிதஞ்ச ஸுகாநி வை || ரா. யு. 19:5

என்னால் இலங்கை அரசும் கைவிடப்பட்டது; நண்பர்களும் செல்வங்களும் கைவிடப்பட்டன; என்னுடைய அரசும் உயிரும் நலன்களும் தங்களிடம் அடங்கியுள்ளன.

38. அவச்யம் அநுபோக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபா ஶுபம் |
நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடி ஶதைரபி ||
ப்ரஹ்மவைவர்த்தம் ப்ரக்ருதி கண்டம் 26:70

மனிதனால் செய்யப்பட்ட நல்வினை தீவினைகளின் பயன் கட்டாயம் நுகரப்படவேண்டுவன. நூறு கோடி கற்பங்களானாலும் வினை நுகர்தலின்றிக் கழியாது.

39. யத்ராஷ்டாக்ஷர ஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே |
நதத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்ப்பிக்ஷ தஸ்கராஃ || நாரதீயம் 1:20

எங்குத் திருஎட்டெழுத்துக் கைபுகுந்த பெரியவர் கொண்டாடப்படுகிறாரோ அங்கு நோயும் பஞ்சமும் திருடர்களும் இருப்பதில்லை.

40. ய ஆத்மதா பலதா கி. யஜு. 7:5:36

தன்னையும் கொடுத்துத் தன்னை நுகரத்தக்க வலிமையையும் கொடுக்கிறவன்.

41. ஶரீரம் ஏவ மாதா பிதரௌ ஜநயதஃ |
ஸஹி வித்யாதஸ்தம் ஜநயதி தச் ச்ரேஷ்டம் ஜந்ம || ஆப. ஸூ. 1:1:6

தாய் தந்தையர் உடம்பையே உண்டு பண்ணுகிறார்கள். அருளாசானே கல்வியினால் உயிரை உண்டுபண்ணுகிறான். உயிர்க்குக் கல்வியால் ஆகிய அதுவே மேலான பிறப்பு.

42. நமோ நாராயணா யேதி மந்த்ரஸ் ஸர்வார்த்த ஸாதகஃ

நமோ நாராயணாய என்னும் மந்திரம் எல்லாப் பேறுகளையும் கொடுக்க வல்லது.

இரண்டாம் திருமொழித் தோற்றுவாய் :

43. யஸ்ய ப்ரஸாத꞉ ஸததம் ப்ரஸீதேயு꞉ இமா꞉ ப்ரஜா꞉ ।
ஸ ராமோ வாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதம் அபிகாங்க்ஷதே ॥ *ரா. கி. 4:21*

*எந்த இராமனுடைய அருள் எப்பொழுதும் இந்த மக்களுக்கு நன்மை செய்யுமோ அந்த இராமன் குரக்குத் தலைவனாகிய சுக்கிரீவனுடைய அருளை எதிர் நோக்குகிறான்.*

பாட்டு 11

44. சக்ரசாபநிபே சாபே க்ருஹீத்வா சத்ருநாசநே ।
ச்ரீமந்தௌ ரூபஸம்பந்நௌ வ்ருஷப ச்ரேஷ்ட விக்ரமௌ ॥
*ரா. கி. 3:9*

*இந்திரன் வில்லுக்கு ஒப்பான விற்களைப் பிடித்துக்கொண்டு, பகைவர்களை அழிப்பதில் வீரத்திரு பொருந்தியவர்களும், அழகியவர்களும், ஆனேறு போன்றவர் களுமாக இருப்பவர்கள்.*

45. தீப்தபாவகஸங்காசை꞉ சிதை꞉ காஞ்சந பூஷணை꞉ ।
ந த்வாமிச்சாம்யஹம் த்ரஷ்டும் ராமேண நிஹிதம் சரை꞉ ॥
*ரா. யு. 16:32*

*கொழுந்துவிட்டெரியும் நெருப்புப் போன்றவையும், கூர்மையானவையும், பொன்னால் ஒப்பனை செய்யப்பட்டவையுமான அம்புகளைக்கொண்டு இராம னாலே நீ கொல்லப்படுவதை யான் காண விரும்பவில்லை.*

46. நநமேயம் கஸ்யசித் *ரா. யு. 36:11*

*நான் ஒருவருக்கும் வணங்கேன்.*

47. முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்வேதத்வீப வாஸிநாம் ।
நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந꞉ ॥ *பார. ஸா. 344:45*

*சுவேதத் தீவில் உறைவோர்க்கு யாது இலக்கணமோ அதுவே வீட்டுலகத் தவர்க்கும் இலக்கணமாகும். அஃதாவது, எப்போதும் வணங்கிக்கொண்டிருப்பார் கள்; அதனால் மகிழ்வார்கள்; வாயால் நம꞉ (எனக்கு உரியேன் அல்லேன்) என்றே சொல்லும் தன்மையராய் இருப்பார்கள்.*

48. தர்சநம் சித்ர கூடஸ்ய மந்தாகிந்யாச்ச சோபநே
அதிகம் புரவாஸாச்ச மந்யே தவ ச தர்சநாத் *ரா. அ. 95:13*

*புண்ணியம் நிறைந்தவளே! சித்திரகூடத்தையும் கங்கையாற்றையும் கண்டு மகிழும் இன்பம், உன்னையும் காண்பதனால் (நீ அருகில் இருப்பதனால்) படை வீட்டில் பெறும் இன்பத்தைக் காட்டிலும் சிறந்ததாகக் கருதுகிறேன்.*

49. ஸுரம்யம் ஆஸாத்ய து சித்ரகூடம் நதீம் ச தாம் மால்யவதீம் ஸுதீர்த்தாம் ।
நநந்த ராமோ ம்ருகபக்ஷிஜுஷ்டாம் ஜஹௌச து꞉க்கம் புரவிப்ரவாஸாத் ॥
*ரா. அ. 56:38*

இராமபிரான் மனத்தைக் கவரும் சித்திரகூடத்தையும், நல்ல நீரையுடையதும் விலங்குகளாலும் பறவைகளாலும் சூழப்பட்டதுமான மால்யவதியாற்றையும் கண்டு நிறைவடைந்தார். நகரை விட்டுக் காட்டிற்கு வந்ததால் நேரும் மனக்குறை என்பதே அணுகவில்லை.

50. ஏதத் ஸாம காயந் நாஸ்தே ஹா வுஹா வுஹா வு
அஹம் அந்நம் அஹம் அந்நம் அஹம் அந்நம்
அஹமந்நாதோ அஹமந்நாதோ அஹமந்நாதঃ ॥ தைத். ப்ரு. 10:6

வீடு பெற்றவன், "ஹா வுஹா வுஹா வு" என்னும் இந்தச் சாம கானத்தைப் பாடிக் கொண்டிருக்கிறான். நான் (இறைவனுக்குச்) சோறு போலச் சுவையாக இருப்பவன்; நான் (இறைவனுக்குச்) சோறு; நான் இறைவனுக்குச் சோறு; நான் இறைவனுடைய உகப்பாகிய சோற்றை உண்பவன்; நான் சோற்றை உண்பவன்; நான் சோற்றை உண்பவன்.

## பாட்டு 12

51. கானிதஸ் ஸகரேணாயம் அப்ரமேயோ மஹோததிঃ ।
கர்த்தும் அர்ஹதி ராமஸ்ய ஜ்ஞாத்வா கார்யம் மஹாமதி ॥
ரா: யு. 19:31

அளவிட ஒண்ணாததான இக்கடல் (இராமபிரானுடைய மூதாதையான) சகரனால் வெட்டுவிக்கப்பட்டது; பேரறிஞனான இக்கடலரசன் இராமபிரானுக்குச் செய்ய வேண்டுவதனை அறிந்து செய்தற்கு உரியவன்.

52. ப்ராப்தே பரிபவே நவே
அத்யவை நிர்ப்பயா லங்காம் ப்ரவிஷ்டாঃ ஸூர்ய ரஶ்மயঃ ॥
ரா. யு. 114:82

இதற்கு முன்பு இல்லாத இழிவு வந்துற்றது. பகலவனின் கதிர்கள் இன்றே அச்சமற்று இலங்கையில் நுழைந்தன.

53. யதா ராகவநிர்முக்தঃ ஶரঃ ச்வஸநவிக்ரமঃ ।
கச்சேத் தத்வத் கமிஷ்யாமி லங்காம் ராவண பாலிதாம் ॥
ரா. ஸு. 1:39

இராமனால் விடப்பட்டதும் மூச்சுக் காற்றுப் போல (ஒருவரும் அறியாமல்) பரவி ஓடுவதுமான அம்பானது எப்படிச் செல்லுமோ அப்படியே இராவணனால் காக்கப்படும் இலங்கையை அடைவேன்.

## பாட்டு 13

54. பதிஸம்யோக ஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா ।
சிந்தார்ணவ கதঃ பாரம் நாஸஸாதாப்லவோயதா ॥ ரா. அ. 118:34

என் தந்தை (சனகராசன்) தலைமகனோடு சேர்த்தற்குத் தக்க என்னுடைய இளமையைப் பார்த்துத் துயரம் என்னும் கடலை அடைந்து புணையற்றவன் போலக் கரையேறவில்லை.

## பாட்டு 14

55. 'பீஷணம்'. 'ம்ருத்யும்ருத்யும்' ந்ருஸிம்ஹாநுஷ்ட்டுப்

*அச்சம் விளைவிப்பது; காலனுக்குக் காலன்.*

## பாட்டு 16

56. தயா ஸஹாஸீநமநந்த போகிநி ப்ரக்ருஷ்ட விஜ்ஞாநபலைக தாமநி ।
பணாமணி வ்ராத மயூக மண்டல ப்ரகாஶ மாநோதர திவ்ய தாமநி ॥

*ஸ்தோ. ர. 39*

*மேலான அறிவுக்கும் ஆற்றலுக்கும் நிகரற்ற இருப்பிடமானவனும், தன் படங்களில் இருக்கும் மணிகளின் ஒளிக்கதிர்களாலே ஒளிவிடும் நடுப்பகுதியாகிய (இறைவனுடைய) அந்தப்புரத்தையுடையவனும் ஆகிய திருவனந்தாழ்வானுடைய திருமேனியில் அந்தப் பெரியபிராட்டியாருடன்கூட எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை.*

57. பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந ச லக்ஷ்மண ।
த்வயாபுத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்தஃ பிதா மம ॥

*ரா. ஆ. 16:29*

*இலக்குவ! நினைவறிந்து அடிமை செய்பவனும், (தசரத மன்னர் எனக்குச்) செய்பவற்றை அறிபவனும், (அடிமைத் தன்மை என்னும்) அறத்தை அறிந்தவனுமான உன்னைப் பிள்ளையாகப் பெற்ற அறவோனான் தந்தை என்னைப் பொறுத்தவரை இறந்தவன் அல்லன்.*

58. ஸ்வயம் து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம் வத *ரா. ஆ. 15:7*

*தேவரீரே, "அழகியதோர் இடத்தில் இலைவீடு கட்டப்படட்டும்" என்று என்னைப் பணித்திட வேண்டும்.*

59. பாவம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே ।
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஃ ஸ்வபதச்ச தே ॥

*ரா. அ. 31:25*

*இராமபிரானே! தாங்களோ சீதையோடுகூட மலைத்தாழ்வரைகளில் விளையாடுவீர்; யான் விழித்துக்கொண்டும் தூங்கிக்கொண்டும் உங்களுக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்.*

## பாட்டு 18

60. ஸர்வ கந்தஃ *சாந். 3:14:2*

*எல்லா மணங்களையும் உடையவன்.*

## பாட்டு 19

61. அவச்யம் அநுபோக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபா ஶுபம் ।
நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடி ஶதைரபி ॥
*ப்ரஹ்மவைவர்த்தம் ப்ரக்ருதி கண்டம் 26:70*

*மேற்கோள் 38 பார்க்க.*

62. நரகாரே ஜகந்நாத நாராயண பராயண

*நரகத்திற்குப் பகைவனே! உலகிற்குத் தலைவனே! நாராயணனே! எல்லாவற்றிற்கும் முடிவான இடமாக இருப்பவனே!*

63. ஆத்மாநம் வாஸுதேவாக்யம் சிந்தயந் வி. பு. *6:4:6*

*வாசுதேவன் என்னும் தன் இயல்பை நினைத்துக்கொண்டு.*

64. கஸ்ய முக்தி: கரேஸ்த்திதா

*எவன் கையில் வீடுபேறு இருக்கிறது.*

65. மம நாத! யதஸ்தி ய: அஸ்ம்யஹம்
ஸகலம் தத்தி தவைவ மாதவ! ।
நியதஸ்வமிதி ப்ரபுத்ததீ:
அதவா கிந்து ஸமர்ப்பயாமி தே ॥ ஸ்தோ. ர. *53*

*எல்லார்க்கும் தலைவனாய், இலக்குமிநாதனான பெருமானே! எனக்குச் சொந்தமாக இருப்பதும், யானும் உனக்கே எப்பொழுதும் சொந்தம் என்று தெரிந்துகொண்ட அடியனேன் உனக்கு எதைத்தான் படையலாக்க ஒல்லும்?*

66. அத ஸ: அபயம் கதோ பவதி தை: ஆந. *6*

*(வீடுபேறு பெற்ற) பிறகு அவன் அச்சமற்றவன் ஆகிறான்.*

மூன்றாம் திருமொழித் தோற்றுவாய் :

67. மநஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ: ।
பந்தாய விஷயாஸங்கி முக்த்யை நிர்விஷயம் மந: ॥ வி. பு. *6:7:28*

*மனிதர்களின் உலக வாழ்க்கைக்கும் வீடுபேற்றிற்கும் மனமே காரணம். புலனின்பங்களில் ஈடுபட்ட மனம் உலக வாழ்க்கைக்குக் காரணம் ஆகிறது. புலனின்பங்களில் பற்றற்ற மனம் வீடுபேற்றுக்குக் காரணம் ஆகிறது.*

68. ஏஷ ஹ்யேஆநந்தயாதி தைத். ஆந. 7

*இந்தப் பரமான்மாவே மகிழ்ச்சி உண்டாக்குகிறது.*

69. பால்யே க்ரீடநகா ஸக்தா: யௌவநே விஷயோந்முகா: ।
அஜ்ஞாநயந்த் யஶக்தாஶ்ச வார்த்தகம் ஸமுபஸ்திதம் ॥
வி. பு. *1:17:15*

*சிறுவயதில் விளையாட்டுக் கருவிகளிலும் இளமையில் புலன் இன்பங்களிலும் ஈடுபடுகிறார்கள்; மூப்பு வந்தவுடன் அறிவு மழுங்கியவர்களாகவும் வலிமையற்றவர்களாகவும் காலத்தைக் கழிக்கிறார்கள்.*

பாட்டு 21

70. த்விதா பஜ்யேயமப் யேவம் ந நமேயம் *ரா. யு. 36 : 11*

*இரண்டாகப் பிளக்கப்பட்டாலும் படுவேனே ஒழிய ஒருவனுக்கு வணங்க மாட்டேன்.*

பாட்டு 27

71. சரண்யம் சரணம் சத்வாம் ஆஹுர் திவ்யாமஹர்ஷய:
அம்ருதம் ஸாதநம் ஸாத்யம் சம்பஶ்யந்தி மநீஷிண:

*தெய்வத்தன்மை பொருந்திய மாமுனிவர்கள், உன்னைக் காப்பாற்றுபவனாகவும் புகலாகவும் சொல்கிறார்கள்; அறிஞர்கள் நிலைநின்ற ஆறாகவு பேறாகவும் பார்க்கிறார்கள்.*

பாட்டு 31

72. ஸுகவி கட ஸடாஸங்கடை:

*நற்புலவர்க்குப் புனைந்துரைத்தற்கு உரியதாய் அமைந்த உளைமயிர்களிலே நெருங்கி இருக்கிறவர்கள்.*

73. ஸ ததர்ஶ ததோ ராமம் திஷ்டந்தம் அபராஜிதம் I
ஆலிகந்தம் இவ ஆகாஶம் அவஷ்டப்ய மஹத்தநு: II *ரா. யு. 100:12*

*வெல்லப்படாதவனும் வானத்தை அளாவிநிற்கும் பெருவில்லை அழுத்திப் பிடித்துக்கொண்டிருப்பவனுமான இராமனைத் தன் அருகில் பார்த்தான்.*

பாட்டு 33

74. இக்ஷ்வாகூணாம் இயம் பூமிஸ் ஸசைல வந காநநா *ரா. கி. 18:6*

*மலைகள், சிறுகாடுகள், பெருங்காடுகள் ஆகிய இவற்றுடன் கூடிய இந்நாடு இட்சுவாகு குலத்தவருடையது.*

பாட்டு 38

75. கபாலீத்வம் பவிஷ்யஸி *மா. பு. 182*

*மண்டையோட்டோடு கூடியவனாக ஆவாய்.*

பாட்டு 41

76. தே வநேந வநம் கத்வா நதீஸ்தீர்த்வா பஹூதகா: *ரா. பா. 1:30*

*அந்தச் சீதையும் இராமனும் இலக்குவனும் ஒரு காட்டிலிருந்து மற்றொரு காட்டிற்கு நடந்துபோய், நீர் நிறைந்த ஆறுகளைக் கடந்துபோய் (சித்திர கூடத்தை அடைந்தனர்.)*

77. ராம லக்ஷ்மண குப்தா ஸா ஸுக்ரீவேண ச வாஹிநீ ।
பபூவ துர்த்தர்ஷதரா ஸர்வைரபி ஸுராஸுரை: ॥ ரா. யு: 25:33

சுக்கிரீவனுடன் கூடிய அந்தக் குரக்குப்படை இராமலக்ஷுவர்களால் காவலிடப்பட்டதாய், எல்லாத் தேவர்களாலும் அரக்கர்களாலும் கலக்க ஒண்ணாததாய் இருந்தது.

## பாட்டு 42

78. சிதாதூமாகுல பதா க்ருத்ரமண்டல ஸங்குலா ।
அசிரேண து லங்கேயம் ஶ்மஶாந ஸத்ருஶீ பவேத் ॥ ரா. ஸு. 26:24

சிதைகளின் புகையினால் கலங்கிய வழிகளை உடையதும், கழுகுக் கூட்டங்களினால் கலங்கியதுமான இந்த இலங்கை மிக விரைவில் சுடுகாட்டைப் போல ஆகும்.

## பாட்டு 46

79. கோ ஸஹஸ்ர ப்ரதாதாரம் ரா. யு. 21:8

ஆயிரக்கணக்கான பசுக்களைக் கொடுத்த கை.

80. தத்யாந்நப்ரதி க்ருஹ்ணீயாத் சத்யம் ப்ரூயாந் ந ச அந்ருதம் ।
அபி ஜீவிதஹேதோர்ஹி ராம: ஸத்யபராக்ரம: ॥ ரா. ஸு. 33:26

உண்மையைக் காப்பதனையே தம்முடைய வீரமாகக் கொண்ட இராமன் கொடுப்பவரே; ஏற்பவர் அல்லர். உயிர் போவதாக இருந்தாலும் உண்மையே பேசுவார்; பொய் சொல்லார்.

## பாட்டு 49

81. வித்யா விநய ஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி ।
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டிதாஸ் ஸமதர்ஶிந: ॥ கீதை. 5:18

கல்வி அடக்கம் முதலியவைகளுடன் கூடிய மறையவனிடமும் பசுவிடமும் யானையிடமும் நாயிடமும் புலையனிடமும் மெய்யறிவு பெற்றவர்கள் ஒரே வகையான நோக்குடையவர்களாக இருப்பார்கள்.

## பாட்டு 50

82. ஸங்கீர்த்தயேஜ் ஜகந்நாதம் வேதம் வாபி ஸமீரயேத்

உலகத் தலைவனைப் புகழ வேண்டும். அல்லது வேதத்தையாவது ஓத வேண்டும்.

## ஆறாம் திருமொழித் தோற்றுவாய்

83. ராவணோ நாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வர: ।
தஸ்யாஹம் அநுஜோ ப்ராதா விபீஷண இதிஶ்ருத: ॥
ரா. யு. 17:12

தீயொழுக்கம் உடையவனும் அரக்கர்களுக்கு அரசனுமான இராவணனுக்குத் தம்பியும் வீடணன் என்னும் பெயருடையவனும் ஆவேன்.

## பாட்டு 51

84. கஸ்த்த ஏவ வ்யதிஷ்ட்டத — *ரா. யு. 17:8*

*வீடணன் வானத்திலேயே நின்றான்.*

## பாட்டு 53

85. ந்ருபசுஃ — *ஸ்தோ. ர. 53*

*மேற்கோள் 26 பார்க்க.*

## பாட்டு 57

86. சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகதஃ ஶாஶ்வதே மதே — *கீதை. 8:26*

உலகத்தினுடைய ஒளியும் இருளும் ஆகிய இவ்இரு வழிகளும் என்றும் நிலையானவை என்று கருதப்படுகின்றன.

## பாட்டு 59

87. நவ த்வாரே புரே

*ஒன்பது வாயிலையுடைய உடலில்.*

## பாட்டு 61

88. இதம் முங்க்ஷ்வ மஹாராஜ ப்ரீதோ யதஶநா வயம் ।
யதந்நம் புருஷோ பவதி ததந்நாஸ் தஸ்ய தேவதாஃ ॥ — *ரா. அ. 103:30*

பெருவேந்தே! ஒருவனுக்கு எது உணவோ அதனையே அவன் தெய்வங்களும் உணவாகக் கொள்கின்றன. (எனவே) நாங்கள் உண்ணும் இதனையே மன நிறைவுடையவராய் உண்ணும்.

## பாட்டு 64

89. ஹ்ருதயஸ்தஃ ததஃ தஸ்ய தம் வாயும் அதிஶோஷணம் ।
பபௌ ஜநார்த்தநஃ க்ருத்தஃ ஸ யயௌ பவநஃ க்ஷயம் ॥

*வி. பு. 1:19:24*

இறைவன் சீற்றம் உடையவராய்ச் சூறை என்னும் அந்தக் காற்றினை விழுங்கிவிட்டார்; அந்தக் காற்று அழிவுற்றது.

## பாட்டு 70

90. லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்நஃ — *ரா. பா. 18:29*

*அடிமைத் திறமாகிய திருவை உடையவன் இலக்குவன்.*

## பாட்டு 74

91. ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் க்ருத க்ருத்யஃ — *ரா. யு. 1:85*

வீடணனை இலங்கைக்கு அரசனாக முடிசூட்டித் தான் செய்ய வேண்டுவதைச் செய்தவனாக இராமன் நெஞ்சாறல் நீங்கிக் களிப்புற்றான்.

முதற்பத்து ஒன்பதாம் திருமொழித் தோற்றுவாய்

92. மாம் அக்ரூரேதி வக்ஷ்யதி — *வி. பு. 5:17:12*

*என்னை அக்ரூரா! என்று விளிப்பார்.*

93. க்ரியதாம் — *ரா. ஆ. 15:7*

*மேற்கோள் 58 பார்க்க.*

94. ஸது ராமஸ்ய தர்மாத்மா நிபபாத வீபீஷணஃ ।
பாதயோஃ ஶரணாந்வேஷீ சதுர்பிஃ ஸஹ ராக்ஷஸைஃ ॥ — *ரா. யு. 19:2*

*அப்படிப்பட்ட அறவழி நெஞ்சினனாகிய வீடணன் புகலிடத்தைத் தேடிய வனாய், துணைவரான நான்கு அரக்கர்களோடுகூட இராமபிரானுடைய திருவடி களில் விழுந்தான்.*

## பாட்டு 81

95. மாதா பிதா ப்ராதா — *ஸுபா. 16*

*மேற்கோள் 28 பார்க்க.*

96. ப்ராதா பர்த்தாச பந்துஶ்ச பிதா ச மம ராகவஃ — *ரா. அ. 58:31*

*எனக்கு இராகவனே தமையனும், ஆண்டானும், உறவினனும் தந்தையும் ஆவார்.*

97. ஏகைக பலலாபாய — *அஹி. ஸம்.*

*ஒவ்வொரு பேற்றினை அடைவதன் பொருட்டு.*

98. ஸர்வ கந்தஃ — *சாந். 3:14:2*

*எல்லா நறுமணங்களையும் உடையவன்.*

99. அஹம் ஸர்வம் கரிஷ்யாமி — *ரா. அ. 31:25*

*மேற்கோள் 59 பார்க்க.*

## பாட்டு 82

100. சித்ரகூடம் அநுப்ராப்ய பரத்வாஜஸ்ய ஶாஸநாத் ।
ரம்யமாவஸதம் க்ருத்வா ரமமாணா வநே த்ரயஃ ॥ — *ரா. பா. 1:39*

*பரத்துவாசரது கட்டளைப்படி சித்திர கூடத்தை அடைந்து அங்கு அழகிய பர்ண சாலையைக் கட்டிக்கொண்டு அம்மூவரும் காட்டில் களித்தார்கள்.*

## பாட்டு 83

101. ஆர்த்தோ வா யதி வா த்ருப்தஃ பரேஷாம் ஶரணாகதஃ ।
அரிஃ ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்யஃ க்ருதாத்மநா ॥ — *ரா. யு. 18:28*

